உ

சிவமயம்.

திரிசிரபுரம்

திரு. மா. சாம்பசிவபிள்ளை

இயற்றிய

# திருநான்மறைவிளக்க ஆராய்ச்சி.

## ஆராய்ச்சி இலக்கம் VII.

இஃது

சென்னைச் சட்ட கலாசாலை,

திருவாளர்

கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள், M.A., M.L.

செந்தமிழ்ச்செல்வி என்னும் பத்திரிகை வாயிலாக

வெளியிட்ட

"திருநான்மறைவிளக்கம்"

என்னும் வியாசத்தில் காணப்படும்

திரிபுணர்ச்சியைநீக்குமாறுஇயற்றப்பட்டது.

திரிசிரபுரம்

S.I.Ry. ஜனரல் டிராபிக் மானேஜர் ஆபீசு ஹெட் கிளார்க்கு

A. குழந்தைவேலுப்பிள்ளையவர்கள்

பெரு முயற்சியால் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது.

PRINTED BY :
JEGAM & CO., DODSON PRESS,
TRICHINOPOLY.

அக்ஷய-௵ ஆனி-௴.

1926.

விலை: ரூ. 1.

உ

சிவமயம்.

# இப்புத்தகத்திலடங்கியவைகள்.

---



---

உ

சிவமயம்.

# இப்புத்தகத்திலடங்கியவைகள்.

---



---

உ

சிவமயம்.

# முகவுரை



தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை யெமையிகழார்—தம்மை
உணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

"திருநான்மறை விளக்கம்" எனப் பெயரியதோர் கட்டுரை "செந்தமிழ்ச் செல்வி" என்னும் மாசிக சஞ்சிகையில் வெளிவருகின்றதே அதனை நீங்கள் பார்த்தீர்களா? என்று என் நண்பரொருவர் என்னை வினவினர். "திருநான்மறை விளக்கம்" என்னும் பெயர் கேட்டதுணையே பெருமகிழ் சிறந்து அச் சஞ்சிகையைத் தருவித்து அக்கட்டுரையின் ஆக்கியோன் பெயரை நோக்கினேன். என் அரும்பெறல் நண்பரும், விரும்புநல்லுறவரும், தம் இயற்பெயர்க்குத் தகவே எவற்றையும் உள்ளவாறே ஓர்ந்துணரும் நுண்மா ணுழைபுலமும் உணர்ந்தவாறே யுணர்த்தும் வித்தகமுமுடையவரும், "ஒழுக்க மன்பருளாசார முபசார முறவு சீலம், வழுக்கிலாத் தவந்தானங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை, அழுக்கிலாத் துறவடக்க மறிவொடர்ச்சித்தலாதி, இழுக்கிலா வறங்க" ளெல்லாம் இயல்பானே யமையப்பெற்றவரும், ஆங்கில மொழியைப் பாங்குறக் கற்றுப் பல்கலை கழகத்தாரால் B. A. (பீ. ஏ.) பட்டம் பெற்று, பீ. ஏ. பிள்ளையெனவே நெல்லைவாழ் மாந்தரெல்லோராலும் அழைக்கப்பெற்றிருப்பினும், தவத்தான் மனந்தூயராய்ச் சிவனருட் பெற்ற பெரியோர் தம் மெய்ந்நெறியைக் குருட்டு நம்பிக்கையென்று இகழும் மேலைநாட்டு இருட்டு நம்பிக்கையில் மருளாதவரும், "படிக்கு நூல்கள் சிவாகமம் பசுபாசமோடு பதித்திறம், எடுத்தியம்புவ தீசன் வார்கழலைத் திடுந் தொழிலென்றுமே, விடுத்திடும் பொருள் காமமாதிகள் வேண்டிடும் பொருளீண்டருள், முடித்து மும்மலம்விட்டு நின்மலனோடு நின்றிடல் முத்தியே." என்ற அருளுரைவழி வழுவாது நின்ற சித்தாந்த சைவத்துத் தமருமாகிய, திருவாளர், காந்திமதிநாத பிள்ளையவர்களுக்கு முதற் புதல்வராகிய கா. சுப்பிரமணியபிள்ளை அவர்களே அக்கட்டுரையின் ஆக்கியோன் என்பது உணர்ந்தேன். 'மகனறிவு தந்தையறிவு' எனும் முதுரை பற்றிப் பெயர்த்தும் பெருமகிழ்வுற்று அம்மாசிக சஞ்சிகைக்கு ஒரு சந்தாதாரனாகி அதனைத் தருவித்துப் பார்த்

க அவ்வுரையின் நோக்கும் பொருட்
பிரமாணங்கட்கும் பொய்தீரொழுக்க
கொள்கைக்கும் முற்றிலும் முரணுக
டனும் குருத்துக்கெதிர்செலக் கரும்

ண் பற்பல பண்டை நூன்மேற்கோள்
மையின் அந்நூல்களையும் அவற்றின்
நோக்கினேன். நோக்குதலும் பெரிய
வுண்டாயின. அவற்றை யெல்லாம்
ரு சம்பிரதாய தபோதனர்களாகிய
ரு மொழியினும் வல்ல கல்விவாணர்
ளிந்தேன். உலக சிருட்டி முதற்
விடையூறுகளாலுந் தன் தன்மை
ளங்கும் நமது வைதிக சைவ சமயத்
சமயமென வொரு நவீனக் கொள்
யினுல் வகுக்கப் புகுந்து, தெய்வத்
ண்டைய அருணூல்களின் மூலபாடங்
க்கு உரை வகுக்கவே அவதரித்தவர்க
ரையாசிரியர்களின் உரையையும் தமிழ்
வரம்புகளையுந் தழுவாது அவ்வுரை
க அறிந்தேன். சிவஞானபோதத்
ரடியமியற்றிச் சித்தாந்த சைவத் திரு
துறைசைமாதவச் சிவஞானயோகிகள்
து முன்னரே தீர்க்கதரிசனமாயருளிய
பில்லை நல்லற, மில்லை நால்வருணமாச்
மாணுக்கர்களில்லையாரிய, ரில்லைநல்
னன்பவே' என்னுங் காஞ்சிப்புராணச்
நான்மறை விளக்கம் ஒரு மேற்கோளா
ற்பல பண்டைய அருணூல்களினின்
காட்டப் பட்டிருந்தமையின் முதன்
நவீனக் கோளுமுண்மையாமோ வென
பார்க்க, அரசுரிமை பூண்ட நியாயத்
— வழக்கை யெடுத்து உண்மை போல
திகளின் போலிக்கடமைப்பாடு போன்
ருவருள் உணர்த்த வுணர்ந்தேன். அ
யெழுதி வைத்தல் உண்மை நோக்கு
மேலும் ஆராயப் புகுவோர்க்கும் நம்பி
சைவ நெறியினின்று பிறழாதிருத்த
ன விவ்வாராய்ச்சியை யெழுதி முடி
ல்களின் கருத்துக்கும் நம் முன்னோ

கள் ஆட்சிக்கும் இந் நவீனக் கொள்கை உடன்பாடல்லவெனக் காட்டுவதே எனது முழு நோக்கம். ஒருவர் பேரிலுங் குறை கூறப்புகுந்தேனல்லேன்.

மேனாட்டு ஆராய்ச்சி முறையைக் கைக்கொண்டோ ருக்கு நானெடுத்துக் கூறும் ஆரியர் விடயமுங் காலவரையறை நிர்ணயமும் ஏளனமாகத் தோன்றலாம். எனது ஆராய்ச்சி முற்றும் நமது பண்டைய நூல்களைப் பிரமாணமாகக் கொண் டுள்ளதே யொழிய எனது கற்பனை யொன்றுமில்லையென்பதை அவர்கள் திண்ணமாயோர்வார்களாக.

இவ்வாராய்ச்சி யெழுதும்போது நேரிட்ட ஐயப்பாடு களை நீக்கி உண்மை காணச் செய்தவர்களாகிய சைவப் பெருந் தகையார்களுக்குங் கல்விவாணர்களுக்கும் நான் என்றுங் கடமைப் பட்டுள்ளேன்.

இவ்வாராய்ச்சியை அச்சிடுவதற்குத் திருத்தமான வெழுத்திலெழுதிக் கொடுத்தும் மனமிளைத்த காலத்தில் ஊக்க முறுவித்தும் அச்சிடுங் காலத்தில், ஒப்பு நோக்குதல், பிழை திருத்தஞ் செய்தல் ஆதிய பலவித உதவிபுரிந்த நண்பர் S. I. Ry ஜனரல் டிராபிக் மானேஜர் ஆபீசு ஹெட் கிளார்க்கு திருவாள A. குழந்தைவேலுப்பிள்ளை யவர்கட்கு நான் மிகவுமுரிமை யுடையனா யிருக்கின்றேன்.

இவ்வாராய்ச்சியிற் காணப்படும் எழுத்துப்பிழை சொற்பிழை ஆதிய பிழைகளை அறிஞர்கள் பொறுத்தருளிச்

“சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க்கணி”

“உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லாமுளன்”

என்னுஞ் செந்தமிழ் அருண்மொழிகட்கு இலக்கியமாவார் ளென நம்புகிறேன். விஷயங்களிற் பிழை காணப்படின், காரண காரியங்களுடன் எனக் கறிவிப்பார்களாயின், மறுபதிப்பி அவைகள் திருத்தப்பட்டுத் தோன்றும்.

இவ்வாராய்ச்சியை அச்சிடுவதற்கு உதவிபுரிந்த செ வச் சிரஞ்சீவி பெரியகுளம் உமை சுப்பையா பிள்ளை யவர்க கும் உத்தம பாளையம் சிவராம மங்கையர்க்கரசி யம்மாளுக்கு இச்சைவ பரிபாலனத்தாலாய சிவபுண்ணியப்பயனை இம் யிலும் மறுமையிலுஞ் சிவபிரான் அருளுவாராக.

குரோதன ஆண்டு
தைத்திங்கள்,
திருச்சிராப்பள்ளி
கி. பி. ௧௯௨௬.

திரு. மா. சாம்பசிவன்.



# தக்ஷிணாமூர்த்தி

நன்றாக நால்வர்க்கு நான்மறையினுட் பொருளை
அன்றாலின் கீழிருந்தங்கற முரைத்தான் காணேடீ
அன்றாலின் கீழிருந்தங்கற முரைத்தானாயிடினுங்
கொன்றான்காண் புரமூன்றுங் கூட்டோடே சாழலோ



# தக்ஷிணாமூர்த்தி

நன்றாக நால்வர்க்கு நான்மறையினுட் பொருளை
அன்றாலின் கீழிருந்தங்கற முரைத்தான் காணேடீ
அன்றாலின் கீழிருந்தங்கற முரைத்தானாயிடினுங்
கொன்றான்காண் புரமூன்றுங் கூட்டோடே சாழலோ

உ

சிவமயம்.

# ஓம்படை

ஓ
ரானீழ
லொண்கழ
லிரண்டுமுப்பொ
ழுதேத்திய நால்வர்க்
கொளி நெறி காட்
டினை, எனவும், அறங்
காட்டியந்தணர்க்கன்
றாலநீழ லறமருளிச்
செய்தவாறோர், என
வும், பண்டிருக்கொரு நால்வர்க்கு நீருரை செய்ததே,
எனவும், தொடுத்தமைத்த, நாண்மாலை கொண்டணிந்த
நால்வர்க் கன்றுணிழற்கீழ், வாண்பாலையாகும் வகையருளித்
தோண்மாலை, விட்டிலங்கத் தெக்கணமே நோக்கி வியந்த
குண மெட்டிலங்க வைத்த விறல் போற்றி, எனவும்,
கல்லாலந் தண்ணிழற்கீழ்க் கவிந்துறை யது
பயந்த காமர் காட்சி, நல்லாளை நல் லா
ளொரு பாகமாகிய ஞானத் ※
தாளை, எல்லாரு மேத்தத்
தகுவாளை யெந் ஞான்
றுஞ், சொல்லாடாருக்கெல்லாந்
துயரல்லதில்லை தொழுமின் கண்டீர்,
எனவும், நம் பெருமக்களாற் றுதிக்கப்
பெற்றவரும், சநகாதி முனிவோர்க்கும், நந்தி
யெம்பெருமானுக்கும், கண்ணுவாதி யோர்க்கும்,
வேத சிவாகமப் பொருளை யுரைத்த பரமாசாரியரு
மாகிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக் கடவுளின் றிருவடித் தாமரை
❀ கட்கு இவ் வாராய்ச்சியை அணிபெற அணிகுவாம் ❀

---

ரு-ஜு-ய [illegible] தக்ஷிணம் [illegible]

ருத்ரயத்தே தக்ஷிணம் முகம் தேநபாம் பாஹிநித்யம்.

எனச் சுவேதாஸ்வதர உபநிடதம் சிவபிரானை நோக்கி உம் முடைய எந்த முகம் தெற்குநோக்கி யிருக்கின்றதோ அம்முகத் தினால் என்னை யெப்பொழுதும் ரட்சியுமெனக் கூறுகின்றது.

உ

சிவமயம்.

# ஓம்படை

ஓ
ரானீழ
லொண்கழ
லிரண்டுமுப்பொ
ழுதேத்திய நால்வர்க்
கொளி நெறி காட்
டினை, எனவும், அறங்
காட்டியந்தணர்க்கன்
றானீழ லறமருளிச்
செய்தவாறார், என
வும், பண்டிருக்கொரு நால்வர்க்கு நீருரை செய்ததே,
எனவும், தொடுத்தமைத்த, நாண்மாலை கொண்டணிந்த
நால்வர்க் கன்றுனிழற்கீழ், வாண்மாலையாகும் வகையருளித்
தோண்மாலை, விட்டிலங்கத் தெக்கணமே நோக்கி வியந்த
குண மெட்டிலங்க வைத்த விறல் போற்றி, எனவும்,
கல்லாலந் தண்ணிழற்கீழ்க் கவித்துறை யது
பயந்த காமர் காட்சி, நல்லாளை நல் லா
ளொரு பாகமாகிய ஞானத் ✻
தானை, எல்லாருமேத்தத்
தருவானை யெந் ஞான்
றாஞ், சொல்லாடாருக்கெல்லாந்
துயரல்லதில்லை தொழுமின் கண்டீர்,
எனவும், நம் பெருமக்களாற் றுதிக்கப்
பெற்றவரும், சநகாதி முனிவோர்க்கும், நந்தி
யெம்பெருமானுக்கும், கண்ணுவராதி யோர்க்கும்,
வேத சிவாகமப் பொருளை யுரைத்த பரமாசாரியரு
மாகிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக் கடவுளின் திருவடித் தாமரை
✿ கட்கு இவ் வாராய்ச்சியை அணிபெற அணிகுவாம் ✿

---

ஸ்ரீ தக்ஷிணா ... தெரு ... பொன்னி...

ருத்ரயத்தே தக்ஷிணம் முகம் தேநமாம் பாஹிநித்தியம்.

எனச் சுவேதாஸ்வதர உபநிடதம் சிவபிரானை நோக்கி உம்முடைய எந்த முகம் தெற்குநோக்கியிருக்கின்றதோ அம்முகத்தினால் என்னை யெப்பொழுதும் ரட்சியுமெனக் கூறுகின்றது.

அபிப்பிராயங்கொடுத்த வித்துவப்பெரியார்

# பெயர் அட்டவணை.

பிரமஸ்ரீ. P. T. சீனிவாசையங்காரவர்கள் M.A. L.T. *Vide* Wrapper

# அபிப்பிராயங்கொடுத்த வித்துவப்பெரியார்
## பெயர் அட்டவணை.

நான்முக மருவினை மேன்முகத் தெழீஇ
நாவின் கிழத்தி நவின்றுறு நவின்று
பாவி னல்லது பண்பறி யாமே
யோத்தவை யாவு மோதினை யன்றியு
மொருமொழிப் பொருளைத் திருவினோ டுறையாய்
மயங்கினை யோர்கால் வயங்குமெந் தோன்ற
லொருமுக மருவித் திருமுகத் தெழூதி
மலையின் கிழத்தி மகிழ்தொறு முரைத்துச்
சொல்லொடும் பொருளைத் துரிசறக் காட்டி
நல்லகம் படுத்தலி னுமுணர்ந் தனமே.

பாடாண்டிணை, இயன்மொழி.

---

யாழ்ப்பாணத்து நல்லூர்க் கைலாசநாத சுவாமி தேவஸ்தானத் தருமகர்த்தரும், "முப்போதுந் திருமேனி தீண்டும்" உத்தமோத்தம அந்தணர் குலதிலகரும், சிவாகம விற்பன்னரும், சோதிடத்தலைவரும், யந்திரவித்துவ சிரோமணியும், கிரியாகாண்டக் கண்ணாடியுமாகிய,

**பிரமஸ்ரீ ந. வே. கார்த்திகேயக் குருக்களவர்கள் இவ்வுரை கண்டார்.**

சைவசமயிகளுட் சிலர் ஏறக்குறையப் பதினைந்து வருட காலமாகச் சைவசித்தாந்த நூல்களுக்கும், பரம்பரையாக அந் நூல்வழி யொழுகிவந்த வருகின்ற ஆன்றோர் கொள்கைகளுக் கும் மாறாகத் தாம் வெவ்வேறு புதிய கொள்கைகளை மேற் கொண்டு எழுதியும் இயம்பியும் வருகின்றார்கள். அவருள் முன்வைத் தெண்ணப்படுவோர் ஸ்ரீவேதாசலப் பிள்ளை, ஸ்ரீ. கா. சுப்பிரமணிய பிள்ளை என்னுமிரு பெருமக்களுமேயாவர்.

ஈண்டு ஏனையோரை விடுத்து அவ்விருவரையும் எடுத்துக் கொண்டது எற்றுக்கெனின், உண்மைச் சைவாபிமானமும், ஓவாத தமிழ் சமஸ்கிருதாபிமானமும், "துலைநாவன்ன சமநிலை யுள்ள"மும், நூல்வரம்பிகவாத மேல்வரம் புடைமையும், ஆன் றோராசாரம் என்று போற்றலும், சிவபூசைப்பத்தி சிவனடியார் பத்தியும், விபூதி உருத்திராக்கமாகிய சிவசின்ன தாரணமும், "உண்பது நாழி யுடுப்பது நான்குமுழம்" என்னும் ஔவை யார் திருவாக்கை அனுதினமும் அறிஞர் நினைவு கூரச்செய்த லும், "எல்லார்க்கு நன்றாம் பணிதல் அவருள்ளும்— செல்வர்க்கே செல்வந் தகைத்து" என்னுந் திருக்குறளுக்கு இலக்கியமும், இன்னன நன்மைகள் பிறவும் மன்னித்தறுமும் மாண்பார் வித்துவதிலகராகிய ஸ்ரீமத். திரு. மா. சாம்பசிவம்

# வித்துவப் பெரியாரபிப்பிராயம்

பிள்ளையவர்கள் எமது அபிப்பிராயங் கேட்டற் பொருட்டு
அனுப்பிய "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" என்னுந்
திருத்தகு நூலில் அவ்விருவரையுமே சுட்டிப் பேசப்பட்
டிருத்தலினு லென்றுணர்க.

வேதாசலப் பிள்ளை என்பாரது நவீனக் கொள்கையை
ஆராய்ச்சி ஆசிரியர் பத்திரிகை மூலமாகவும், சிறு புத்தக மூல
மாகவும் மறுத்தொழித்தமையை அப்பத்திரிகை முதலிய
வற்றைப் பார்த்தறிந்திருக்கின்றேம். அவற்றிற்கு மறுப்பு
இன்னும் வந்திலது. வருதற்கு வழியில்லை. ஆகலான், இனி
மேலும் வாராது. வாராது. ஒருகால் மானமேலிட்டால் வரின்
பிழையுறவரும்; அழிபட்டொழியும்.

சைவசாத்திர விரோதக் கொள்கையராகிய வேதாசலப்
பிள்ளை என்பார் யாழ்ப்பாணம் வந்தபோது உண்மைச் சைவ
வித்துவான்கள் அவரது புதுக்கொள்கையை அங்கீகரித்
திலராய் வித்துவ சபையில் அதனைத் தாபிக்குமாறு அழைத்
தார்கள். அவர் வரவில்லை. வாராமையால் ஸ்ரீமத் கைலாச
பிள்ளையவர்கள் இந்து சாதன பத்திரிகை மூலமாகவும் சிறு
புத்தக மூலமாகவும் அவரது சைவ விரோதக் கொள்கையைப்
பிரமாண சகிதம் மறுத்து விட்டார்கள். அவற்றிற்கும் இன்று
வரை மறுப்பெழுத வலியிலராயினர். என் செய்வார்!
பாவம்! பாவம்!! பிரமாணமின்மையிற் பேசாதொழிந்தார்.
"கல்லாத மேற்கொண் டொழுகுவான் கசடற—வல்லதூஉ
மையந் தரும்" என்பதற்கிலக்கியராகாது மோன முற்றிடல்
மாமதியேயாம்.

இங்ஙனமிருத்தலால் அவரைப்பற்றித் "திருநான்மறை
விளக்க ஆராய்ச்சி நூலுடையார் அந்நூலுள் தொட்டுக்காட்டி
விட்டொழிந்தனர். அம்முறைபற்றி யாமும் அவர் கொள்
கையை விடுத்து, கா. சுப்பிரமணிய பிள்ளை என்பார் கொள்
கையைத் தொட்டுப்பார்த்து எமது அபிப்பிராயத்தைத்
தெரிப்பாம்.

கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பூர்வ பக்கமாகத் "திரு
நான்மறை விளக்கம்" எனத்தீட்டிய பத்திரிகையில், கல்லா
னீழலில் இறைவன், நால்வர் தமிழ் மக்களுக்கு ஞானத்தைக்
கொடுக்க அவர்கள் தமிழ் நான்மறை செய்தார்கள் என்றும்,
சிவபிரான் வேதஞ் செய்திலர் என்றும், வடமொழி வேதம்
தமிழ் வேதத்தைப் பார்த்து ஆரியர் கட்டின கட்டு வார்த்தை
என்றும், தமிழ் வேதத்தைக் கடல் கொண்டுபோயிற்றென்றும்,
ஆறங்கங்களும் தமிழிலுள்ளன, அவையுங் கடல்கோட்பட்டன
என்றும், பிறவாறும் பிரமாணமின்றி "வாயில் வந்தன வந்தன

உ

சிவமயம்.

திரிசிரபுரம்

திரு. மா. சாம்பசிவபிள்ளை

இயற்றிய

# திருநான்மறைவிளக்க ஆராய்ச்சி.

## ஆராய்ச்சி இலக்கம் VII.

இஃது

சென்னைச் சட்ட கலாசாலை,

திருவாளர்

கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள், M.A., M.L.

செந்தமிழ்ச்செல்வி என்னும் பத்திரிகை வாயிலாக

வெளியிட்ட

"திருநான்மறைவிளக்கம்"

என்னும் வியாசத்தில் காணப்படும்

திரிபுணர்ச்சியைநீக்குமாறுஇயற்றப்பட்டது.

திரிசிரபுரம்

S. I. Ry. ஜனரல் டிராபிக் மானேஜர் ஆபீசு ஹெட் கிளார்க்கு

A. குழந்தைவேலுப்பிள்ளையவர்கள்

பெருமுயற்சியால் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது.

PRINTED BY:
JEGAM & CO., DODSON PRESS,
TRICHINOPOLY.

அக்ஷய-ஹூ ஆனி-மீ.

1926.

விலை: ரூ. 1.

உ

சிவமயம்.

திரிசிரபுரம்

திரு. மா. சாம்பசிவபிள்ளை

இயற்றிய

# திருநான்மறைவிளக்க ஆராய்ச்சி.

## ஆராய்ச்சி இலக்கம் VII.

இஃது

சென்னைச் சட்ட கலாசாலை,

திருவாளர்

கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள், M.A., M.L.

செந்தமிழ்ச்செல்வி என்னும் பத்திரிகை வாயிலாக

வெளியிட்ட

"திருநான்மறைவிளக்கம்"

என்னும் வியாசத்தில் காணப்படும்

திரிபுணர்ச்சியைநீக்குமாறுஇயற்றப்பட்டது.

திரிசிரபுரம்

S. I. Ry. ஜனரல் டிராபிக் மானேஜர் ஆபீசு ஹெட் கிளார்க்கு

A. குழந்தைவேலுப்பிள்ளையவர்கள்

பெருமுயற்சியால் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது.

PRINTED BY:
JEGAM & CO., DODSON PRESS,
TRICHINOPOLY.

அக்ஷய-ஹு ஆனி-மீ.

1926.

விலை: ரூ. 1.

உ

சிவமயம்.

# இப்புத்தகத்திலடங்கியவைகள்.

---



---

சிவமயம்.

# இப்புத்தகத்திலடங்கியவைகள்.

உ

சிவமயம்.

# முகவுரை



தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை யெமையிகழார்—தம்மை
உணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

---

"திருநான்மறை விளக்கம்" எனப் பெயரியதோர் கட்டுரை "செந்தமிழ்ச் செல்வி" என்னும் மாசிக சஞ்சிகையில் வெளிவருகின்றதே அதனை நீங்கள் பார்த்தீர்களா? என்று என் நண்பரொருவர் என்னை வினவினர். "திருநான்மறை விளக்கம்" என்னும் பெயர் கேட்டதுணையே பெருமகிழ் சிறந்து அச் சஞ்சிகையைத் தருவித்து அக்கட்டுரையின் ஆக்கியோன் பெயரை நோக்கினேன். என் அரும்பெறல் நண்பரும், விரும்புநல் லுறவரும், தம் இயற்பெயர்க்குத் தகவே எவற்றையும் உள்ளவாறே ஓர்ந்துணரும் நுண்மா ணுழைபுலமும் உணர்ந்தவாறே யுணர்த்தும் வித்தகமுமுடையவரும், "ஒழுக்க மன்பருளாசார முபசார முறவு சீலம், வழுக்கிலாத் தவந்தானங் கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை, அழுக்கிலாத் துறவடக்க மறிவொடர்ச்சித்தலாதி, இழுக்கிலா வறங்க" ளெல்லாம் இயல்பாகவே யமையப்பெற்றவரும், ஆங்கில மொழியைப் பாங்குறக் கற்றுப் பல்கலை கழகத்தாரால் B. A. (பி. ஏ.) பட்டம் பெற்று, பி. ஏ. பிள்ளையெனவே நெல்லைவாழ் மாந்தரெல்லோராலும் அழைக்கப்பெற்றிருப்பினும், தவத்தான் மனந்தூயராய்ச் சிவனருட் பெற்ற பெரியோர் தம் மெய்ந்நெறியைக் குருட்டு நம்பிக்கையென்று இகழும் மேலைநாட்டு இருட்டு நம்பிக்கையில் மருளாதவரும், "படிக்கு நூல்கள் சிவாகமம் பசுபாசமோடு பதித்திறம், எடுத்தியம்புவ தீசன் வார்கழலேத்திடுந் தொழிலென்றுமே, விடுத்திடும் பொருள் காமமாதிகள் வேண்டிடும் பொருளீண்டருள், முடித்து மும்மலம்விட்டு சிவமதோடு நின்றிடன் முத்தியே." என்ற அருளுரைவழி வழுவாது நின்ற சித்தாந்த சைவத்துத் தமருமாகிய, திருவாளர், காந்திமதிநாத பிள்ளையவர்களுக்கு முதற் புதல்வராகிய கா. சுப்பிரமணியபிள்ளை அவர்களே அக்கட்டுரையின் ஆக்கியோன் என்பது உணர்ந்தேன். 'மகனறிவு தந்தையறிவு' எனும் முதுமொழி பற்றிப் பெயர்த்தும் பெருமகிழ்வுற்று அம்மாசிக சஞ்சிகைக்கு ஒரு சந்தாதாரனாகி அதனைத் தருவித்துப் பார்த்

சிவமயம்.

# முகவுரை



> ஏற்றமை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
> எம்மை யுடைமை யெமையிகழார்—தம்மை
> உணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
> புணராமை கேளாம் புறன்.

---

"திருநான்மறை விளக்கம்" எனப் பெயரியதோர் கட்டுரை "செந்தமிழ்ச் செல்வி" என்னும் மாசிக சஞ்சிகையில் வெளிவருகின்றதே அதனை நீங்கள் பார்த்தீர்களா? என்று என் நண்பரொருவர் என்னை வினவினர். "திருநான்மறை விளக்கம்" என்னும் பெயர் கேட்டதுணையே பெருமகிழ் சிறந்து அச் சஞ்சிகையைத் தருவித்து அக்கட்டுரையின் ஆக்கியோன் பெயரை நோக்கினேன். என் அரும்பெறல் நண்பரும், விரும்புநல் லுறவரும், தம் இயற்பெயர்க்குத் தகவே எவற்றையும் உள்ளவாறே ஓர்ந்துணரும் நுண்மா ணுழைபுலமும் உணர்ந்தவாறே யுணர்த்தும் வித்தகமுமுடையவரும், "ஒழுக்க மன்பருளாசார முபசார முறவு சீலம், வழுக்கிலாத் தவந்தானங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை, அழுக்கிலாத் துறவடக்க மறிவொடர்ச்சித்தலாதி, இழுக்கிலா வறங்க" ளெல்லாம் இயல்பாகவே யமையப்பெற்றவரும், ஆங்கில மொழியைப் பாங்குறக் கற்றுப் பல்கலை கழகத்தாரால் B. A. (பீ. ஏ.) பட்டம் பெற்று, பீ. ஏ. பிள்ளையெனவே நெல்லைவாழ் மாந்தரெல்லோராலும் அழைக்கப்பெற்றிருப்பினும், தவத்தான் மனந்தூயராய்ச் சிவனருட் பெற்ற பெரியோர் தம் மெய்ந்நெறியைக் குருட்டு நம்பிக்கையென்று இகழும் மேலைநாட்டு இருட்டு நம்பிக்கையில் மருளாதவரும், "படிக்கு நூல்கள் சிவாகமம் பசுபாசமோடு பதித்திறம், எடுத்தியம்புவ தீசன் வார்கழலேத்திடுந் தொழிலென்றுமே, விடுத்திடும் பொருள் காமமாதிகள் வேண்டிடும் பொருளீண்டருள், முடித்து மும்மலம்விட்டு சிவ்மலமேதொடு நின்றிடன் முத்தியே." என்ற அருளுரைவழி வழுவாது நின்ற சித்தாந்த சைவத்துத் தமருமாகிய, திருவாளர், காந்திமதிநாத பிள்ளையவர்களுக்கு முதற் புதல்வராகிய கா. சுப்பிரமணியபிள்ளை அவர்களே அக்கட்டுரையின் ஆக்கியோன் என்பது உணர்ந்தேன். 'மகனறிவு தந்தையறிவு' எனும் முதுமொழி பற்றிப் பெயர்த்தும் பெருமகிழ்வுற்று அம்மாசிக சஞ்சிகைக்கு ஒரு சந்தாதாரனாகி அதனைத் தருவித்துப் பார்த்

தேன். பார்க்கப் பார்க்க அவ்வுரையின் நோக்கும் பொருட் போக்கும் இறைவ னூற்பிரமாணங்கட்கும் பொய்தீரொழுக்க நெறி நின்ற பெரியோர் கொள்கைக்கும் முற்றிலும் முரணுக விருந்தவாற்றைக் கண்டதும் குருத்துக்கெதிர்செலக் கரும் பருந்தியவனுனேன்.

அக்கட்டுரைக்கண் பற்பல பண்டை நூன்மேற்கோள் கள் காட்டப்பட்டிருந்தமையின் அந்நூல்களையும் அவற்றின் உரைகளையுங் கூர்ந்து நோக்கினேன். நோக்குதலும் பெரிய ஆசங்கைகள் பலப்பல வுண்டாயின. அவற்றை யெல்லாம் சைவ சித்தாந்த சற்குரு சம்பிரதாய தபோதனர்களாகிய பெரியோர்களையும் இரு மொழியினும் வல்ல கல்விவாணர் களையும் உசாவித் தெளிந்தேன். உலக சிருட்டி முதற் றொன்றி யெத்தகைய விடையூறுகளாலுந் தன் தன்மை குன்றாது நிலைபெற்று விளங்கும் நமது வைதிக சைவ சமயத் துக்கு மாறாகத் தமிழர் சமயமென வொரு நவீனக் கொள் கையைக், கலிமுதிர்ச்சியினால் வகுக்கப் புகுந்து, தெய்வத் தன்மை பொருந்திய பண்டைய அருணூல்களின் மூலபாடங் களையும், அந்நூல்களுக்கு உரை வகுக்கவே அவதரித்தவர்க ளெனக் கருதப்படும் உரையாசிரியர்களின் உரையையும் தமிழ் இலக்கிய இலக்கண வரம்புகளையுந் தழுவாது அவ்வுரை யெழுதப்பட்டிருப்பதாக அறிந்தேன். சிவஞானபோதத் திற்குத் திராவிடமா பாடியமியற்றிச் சித்தாந்த சைவத் திரு நெறியை விளக்கிய துறைசைமாதவச் சிவஞானயோகிகள் சுமார் ௧௪௦-ஆண்டுகட்கு முன்னரே தீர்க்கதரிசனமாயருளிய 'இல்லை வைதிக நெறியில்லை நல்லற, மில்லை நா… சிரமில்லையா, மில்லை மாணுக்கர்களில்லையாசி… லொழுக்கமுங் கலியினென்பவே' என்னுங் கா… செய்யுளுக்கு இத்திருநான்மறை விளக்கம் ஒ… மெனக் கண்டேன். பற்பல பண்டைய அருணூல்களின் றாம் மேற்கோள்கள் காட்டப் பட்டிருந்தமையின் முதன் முறை படித்ததில் இந் நவீனக் கோளுமுண்மையாமோ வென மயங்கினேன். ஆய்ந்துபார்க்க, அரசுரிமை பூண்ட நியாயத் தலங்களிற் பொய்பட்ட வழக்கை யெடுத்து உண்மை போல விவகரிக்கும் நியாயவாதிகளின் போலிக்கடமைப்பாடு போன் றெழுதியிருத்தலைத் திருவருள் உணர்த்த வுணர்ந்தேன். அவ் வுணர்ச்சியின் பயனை யெழுதி வைத்தல் உண்மை நோக்கு வோர்க்கும் மேலும் மேலும் ஆராயப் புகுவோர்க்கும் நம்பிற் சந்ததியார் உண்மைச் சைவ நெறியினின்று பிறழா திருத்தற் கும் ஒரு சாதனமாமென விவ்வாராய்ச்சியை யெழுதி முடித் தேன், பண்டைய நூல்களின் கருத்துக்கும் நம் முன்னோர்

கள் ஆட்சிக்கும் இந் நவீனக் கொள்கை உடன்பாடல்லவெனக் காட்டுவதே எனது முழு நோக்கம். ஒருவர் பேரிலுங் குறை கூறப்புகுந்தேனல்லேன்.

மேனாட்டு ஆராய்ச்சி முறையைக் கைக்கொண்டோருக்கு நானெடுத்துக் கூறும் ஆரியர் விடயமுங் காலவரையறை நிர்ணயமும் ஏளனமாகத் தோன்றலாம். எனது ஆராய்ச்சி முற்றும் நமது பண்டைய நூல்களைப் பிரமாணமாகக் கொண்டுள்ளதே யொழிய எனது கற்பனை யொன்றுமில்லை யென்பதை அவர்கள் திண்ணமாயோர்வார்களாக.

இவ்வாராய்ச்சி யெழுதும்போது நேரிட்ட ஐயப்பாடுகளை நீக்கி உண்மை காணச் செய்தவர்களாகிய சைவப் பெருந்தகையார்களுக்குங் கல்விவாணர்களுக்கும் நான் என்றுங் கடமைப் பட்டுள்ளேன்.

இவ்வாராய்ச்சியை அச்சிடுவதற்குத் திருத்தமான வெழுத்திலெழுதிக் கொடுத்தும் மனமிளைத்த காலத்தில் ஊக்கமுறுவித்தும் அச்சிடுங் காலத்தில், ஒப்பு நோக்குதல், பிழை திருத்தஞ் செய்தல் ஆகிய பலவித உதவிபுரிந்த நண்பர் S. I. Ry. ஜனரல் டிராபிக் மானேஜர் ஆபீசு ஹெட் கிளார்க்கு திருவாளர் A. குழந்தைவேலுப்பிள்ளை யவர்கட்கு நான் மிகவுமுரிமை யுடையனா யிருக்கின்றேன்.

இவ்வாராய்ச்சியிற் காணப்படும் எழுத்துப்பிழை, சொற்பிழை ஆகிய பிழைகளை அறிஞர்கள் பொறுத்தருளிச்,

"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க்கணி"

"உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லாமுளன்"

என்னுஞ் செந்தமிழ் அருண்மொழிகட்கு இலக்கியமாவார்களென நம்புகிறேன். விஷயங்களிற் பிழை காணப்படின், காரண காரியங்களுடன் எனக் கறிவிப்பார்களாயின், மறுபதிப்பில் அவைகள் திருத்தப்பட்டுத் தோன்றும்.

இவ்வாராய்ச்சியை அச்சிடுவதற்கு உதவிபுரிந்த செல்வச் சிரஞ்சீவி பெரிய குளம் உமை சுப்பையா பிள்ளை யவர்கட்கும் உத்தம பாளையம் சிவராம மங்கையர்க்கரசி யம்மாளுக்கும் இச்சைவ பரிபாலனத்தாலாய சிவபுண்ணியப்பயனை இம்மையிலும் மறுமையிலுஞ் சிவபிரான் அருளுவாராக.

குரோதன ஆண்டு
தைத் திங்கள்,
திருச்சிராப்பள்ளி
கி. பி. ௧௯௨௫.

திரு. மா. சாம்பசிவன்.

தேன். பார்க்கப் பார்க்க அவ்வுரையின் நோக்கும் பொருட் போக்கும் இறைவ னூற்பிரமாணங்கட்கும் பொய்தீரொழுக்க நெறி நின்ற பெரியோர் கொள்கைக்கும் முற்றிலும் மாறாக விருந்தவாற்றைக் கண்டலும் குருத்துக்கெதிர்செலக் கரும் பருந்தியவனானேன்.

அக்கட்டுரைக்கண் பற்பல பண்டை நூன்மேற்கோள்கள் காட்டப்பட்டிருந்தமையின் அந்நூல்களையும் அவற்றின் உரைகளையுங் கூர்ந்து நோக்கினேன். நோக்குதலும் பெரிய ஆசங்கைகள் பலப்பல வுண்டாயின. அவற்றை யெல்லாம் சைவ சித்தாந்த சற்குரு சம்பிரதாய தபோதனர்களாகிய பெரியோர்களையும் இரு மொழியினும் வல்ல கல்விவாணர்களையும் உசாவித் தெளிந்தேன். உலக சிருட்டி முதற்றோன்றி யெத்தகைய விடையூறுகளாலுந் தன் தன்மை குன்றாது நிலைபெற்று விளங்கும் நமது வைதிக சைவ சமயத்துக்கு மாறாகத் தமிழர் சமயமெனவொரு நவீனக் கொள்கையைக், கலிமுதிர்ச்சியினால் வகுக்கப் புகுந்து, தெய்வத்தன்மை பொருந்திய பண்டைய அருணூல்களின் மூலபாடங்களையும், அந்நூல்களுக்கு உரை வகுக்கவே அவதரித்தவர்களெனக் கருதப்படும் உரையாசிரியர்களின் உரையையும் தமிழ் இலக்கிய இலக்கண வரம்புகளையுந் தழுவாது அவ்வுரையெழுதப்பட்டிருப்பதாக அறிந்தேன். சிவஞானபோதத்திற்குத் திராவிடமா பாடியமியற்றிச் சித்தாந்த சைவத் திருநெறியை விளக்கிய துறைசைமாதவச் சிவஞானயோகிகள் சுமார் கச0-ஆண்டுகட்கு முன்னரே தீர்க்கதரிசனமாயருளிய 'இல்லை வைதிக நெறியில்லை நல்லற, மில்லை நால்வருணமாச் சிரமில்லையா, மில்லை மாணாக்கர்களில்லையாரிய, ரில்லைநல் லொழுக்கமுங் கலியினென்பவே' என்னுங் காஞ்சிப்புராணச் செய்யுளுக்கு இத்திருநான்மறை விளக்கம் ஒரு மேற்கோளாமெனக் கண்டேன். பற்பல பண்டைய அருணூல்களினின்றும் மேற்கோள்கள் காட்டப் பட்டிருந்தமையின் முதன்முறை படித்ததில் இந் நவீனக் கோளுமுண்மையாமோ வென மயங்கினேன். ஆய்ந்துபார்க்க, அரசுரிமை பூண்ட நியாயத்தலங்களிற் பொய்பட்ட வழக்கை யெடுத்து உண்மை போல விவகரிக்கும் நியாயவாதிகளின் போலிக்கடமைப்பாடு போன்றெழுதியிருத்தலைத் திருவருள் உணர்த்த வுணர்ந்தேன். அவ்வுணர்ச்சியின் பயனை யெழுதி வைத்தல் உண்மை நோக்குவோர்க்கும் மேலும் மேலும் ஆராயப் புகுவோர்க்கும் நம்பிற்சந்ததியார் உண்மைச் சைவ நெறியினின்று பிறழாதிருத்தற்கும் ஒரு சாதனமாமென விவ்வாராய்ச்சியை யெழுதி முடித்தேன், பண்டைய நூல்களின் கருத்துக்கும் நம் முன்னோர்

கள் ஆட்சிக்கும் இந் நவீனக் கொள்கை உடன்பாடல்லவெனக் காட்டுவதே எனது முழு நோக்கம். ஒருவர் பேரிலுங் குறை கூறப்புகுந்தேனல்லேன்.

மேனாட்டு ஆராய்ச்சி முறையைக் கைக்கொண்டோ ருக்கு நானெடுத்துக் கூறும் ஆரியர் விடயமுங் காலவரையறை நிர்ணயமும் ஏளனமாகத் தோன்றலாம். எனது ஆராய்ச்சி முற்றும் நமது பண்டைய நூல்களைப் பிரமாணமாகக் கொண் டுள்ளதே யொழிய எனது கற்பனை யொன்றுமில்லை யென்பதை அவர்கள் திண்ணமாயோர்வார்களாக.

இவ்வாராய்ச்சி யெழுதும்போது நேரிட்ட ஐயப்பாடு களை நீக்கி உண்மை காணச் செய்தவர்களாகிய சைவப் பெருந் தகையார்களுக்குங் கல்விவாணர்களுக்கும் நான் என்றுங் கடமைப் பட்டுள்ளேன்.

இவ்வாராய்ச்சியை அச்சிடுவதற்குத் திருத்தமான வெழுத்திலெழுதிக் கொடுத்தும் மனமிளைத்த காலத்தில் ஊக்க மூட்டியும் அச்சிடுங் காலத்தில், ஒப்பு நோக்குதல், பிழை திருத்தஞ் செய்தல் ஆதிய பலவித உதவிபுரிந்த நண்பர் S. I. Ry. ஜனரல் டிராபிக் மானேஜர் ஆபீசு ஹெட் கிளர்க்கு திருவாளர் A. குழந்தைவேலுப்பிள்ளை யவர்கட்கு நான் மிகவுமுரிமை யுடையனா யிருக்கின்றேன்.

இவ்வாராய்ச்சியிற் காணப்படும் எழுத்துப்பிழை, சொற்பிழை ஆதிய பிழைகளை அறிஞர்கள் பொறுத்தருளிச்,

"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க்கணி"

"உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லாமுளன்"

என்னுஞ் செந்தமிழ் அருண்மொழிகட்கு இலக்கியமாவார்க ளென நம்புகிறேன். விஷயங்களிற் பிழை காணப்படின், காரண காரியங்களுடன் எனக் கறிவிப்பார்களாயின், மறுபதிப்பில் அவைகள் திருத்தப்பட்டுத் தோன்றும்.

இவ்வாராய்ச்சியை அச்சிடுவதற்கு உதவிபுரிந்த செல் வச் சிரஞ்சீவி பெரிய குளம் உமை சுப்பையா பிள்ளை யவர்கட் கும் உத்தம பாளையம் சிவராம மங்கையர்க்கரசி யம்மாளுக்கும் இச்சைவ பரிபாலனத்தாலாய சிவபுண்ணியப்பயனை இம்மை யிலும் மறுமையிலுஞ் சிவபிரான் அருளுவாராக.

குரோதன ஆண்டு
தைத் திங்கள்,
திருச்சிராப்பள்ளி
கி. பி. ௧௯௨௬.

திரு. மா. சாம்பசிவன்.



## தக்ஷிணாமூர்த்தி

நன்றாக நால்வர்க்கு நான்மறையினுட் பொருளை
அன்றாலின் கீழிருந்தங்கற முரைத்தான் காணேடீ
அன்றாலின் கீழிருந்தங்கற முரைத்தானாயிடினும்
கொன்றான்காண் புரமூன்றுங் கூட்டோடே சாழலோ



# தக்ஷிணாமூர்த்தி

நன்றாக நால்வர்க்கு நான்மறையினுட் பொருளை
அன்றாலின் கீழிருந்தங்கற முரைத்தான் காணேடீ
அன்றாலின் கீழிருந்தங்கற முரைத்தானாயிடினுங்
கொன்றான்காண் புரமூன்றுங் கூட்டோடே சாழலோ

உ

சிவமயம்.

# ஓம்படை

ஓ

ரானீழ
லொண்கழ
லிரண்டுமுப்பொ
ழுதேத்திய நால்வர்க்
கொளி நெறி காட்
டினை, எனவும், அறங்
காட்டியந்தணர்க்கன்
றாலநீழ லறமருளிச்
செய்தவாறூர், என
வும், பண்டிருக்கொரு நால்வர்க்கு நீருரை செய்ததே,
எனவும், தொடுத்தமைத்த, நாண்மாலை கொண்டணிந்த
நால்வர்க் கன்றானிழற்கீழ், வாண்மாலையாகும் வகையருளித்
தோண்மாலை, விட்டிலங்கத் தெக்கணமே நோக்கிவியந்த
குணை மெட்டிலங்க வைத்த விறல் போற்றி, எனவும்,
கல்லாலந் தண்ணிழற்கீழ்க் கலித்துறை யது
பயந்த காமர் காட்சி, நல்லானை நல் லா
ளொரு பாகமாகிய ஞானத் *
தானை, எல்லாருமேத்தத்
தகுவானை யெஞ் ஞான்
றாஞ், சொல்லாடாருக்கெல்லாந்
தூயாலதில்லை தொழுமின் கண்டீர்,
எனவும், நம் பெருமக்களாற் றுதிக்கப்
பெற்றவரும், சநகாதி முனிவோர்க்கும், நந்தி
யெம்பெருமானுக்கும், கண்ணுவராதி யோர்க்கும்,
வேத சிவாகமப் பொருளை யுரைத்த பரமாசாரியரு
மாகிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக் கடவுளின் திருவடித் தாமரை
கட்கு இவ் வாராய்ச்சியை அணிபெற அணிகுவாம்.

---

(ருத்ரயதெ க்ஷிணம் 3-வது தெந ஊம வாஹிநீகம்।

ருத்ரயத்தே தக்ஷிணம் முகம் தேநபாம் பாஹிநித்தியம்.

எனச் சுவேதாஸ்வதர உபநிடதம் சிவபிரானை நோக்கி உம்முடைய சாந்த முகம் தெற்குநோக்கி யிருக்கின்றதோ அம்முகத்தினால் என்னை யெப்பொழுதும் ரட்சியுமெனக் கூறுகின்றது.

உ

சிவமயம்.

# ஓம்படை

ஓ
ராணீழ
லொண்கழ
லிரண்டுமுப்பொ
ழுதேத்திய நால்வர்க்
கொளி நெறி காட்
டினை, எனவும், அறங்
காட்டியந் தணர்க்கன்
றாலநீழ லறமருளிச்
செய்தவாறூர், என
வும், பண்டிருக்கொரு நால்வர்க்கு நீருரை செய்ததே,
எனவும், தொடுத்தமைத்த, நாண்மாலை கொண்டணிந்த
நால்வர்க் கன்றாணிழற்கீழ், வாண்பாலையாகும் வகையருளித்
தோண்மாலை, விட்டிலங்கத் தெக்கணமே நோக்கி வியந்த
ருணா மெட்டிலங்க வைத்த விறல் போற்றி, எனவும்,
கல்லாலந் தண்ணிழற்கீழ்க் கலித்துறை யது
பயந்த காமர் காட்சி, நல்லானை நல் லா
*
ளொரு பாகமாகிய ஞானத்
தானை, எல்லாரு மேத்தத்
தகுவானை யெஞ் ஞான
றாஞ், சொல்லாடாருக்கெல்லாந்
தாயல்லதில்லை தொழுமின் கண்டீர்,
எனவும், நம் பெருமக்களாற் றுதிக்கப்
பெற்றவரும், சநகாதி முனிவோர்க்கும், நந்தி
யெம்பெருமானுக்கும், கண்ணுவராதி யோர்க்கும்,
வேத சிவாகமப் பொருளை யுரைத்த பரமாசாரியரு
மாகிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக் கடவுளின் றிருவடித் தாமரை
கட்கு இவ் வாராய்ச்சியை அணிபெற அணிகுவாம்

---

ரு[illegible]யதெ தக்ஷிணம் முவம் தெந மாம் பாஹி நிதும்।

ருத்ரயத்தே தக்ஷிணம் முகம் தேநமாம் பாஹிநித்தியம்.

எனச் சுவேதாஸ்வதர உபநிடதம் சிவபிரானை நோக்கி உம் முடைய எந்த முகம் தெற்குநோக்கி யிருக்கின்றதோ அம்முகத் தினால் என்னை யெப்பொழுதும் ரட்சியுமெனக் கூறுகின்றது.

# அபிப்பிராயங்கொடுத்த வித்துவப்பெரியார் பெயர் அட்டவணை.

சிவமயம்.

# வித்துவப் பெரியாரபிப்பிராயம்

சிதம்பரம் ஸ்ரீ மீனாட்சி தமிழ்க் கலாசாலைத் தலைமையாசிரியர்
பிரமஸ்ரீ மஹாமஹோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி
வே. சாமிநாதையரவர்கள் எழுதியது.

சிவபத்திச் செல்வர்களாகிய மகா-ள-ள-ஸ்ரீ திரு. மா. சாம்பசிவம் பிள்ளையவர்கள் ஆராய்ந்து எழுதி அச்சிற் பதிப்பித்து வெளிப்படுத்திய திருநான்மறை விளக்க ஆராய்ச்சி என்னும் புத்தகத்தைப் படித்துப் பார்த்து மிக்க இன்பமுற்றேன். இதிலுள்ள ஒவ்வொன்றும் தக்க ஆதாரங்களைக் காட்டி முன்னோர் கொள்கையினின்றும் சிறிதும் வேறுபடாமல், முன்னோர் மொழி பொருளேயன்றி யவர்மொழியும் பொன்னே போற் போற்றுவமென்பதற்குத் தக்க உதாரணம் என்று கல்விமான்கள் நன்கு மதிக்கும்படி விளங்குகின்றது. தேவார முதலியவற்றில் ஷை பிள்ளையவர்களுக்குள்ள சிறந்த பயிற்சியையும் அவற்றின் பொருளை முறையாக அறிந்திருக்கும் ஆற்றலையும் உண்மைப் பொருளையும் ஆன்றோரொழுக்கத்தையும் தமிழ் நாட்டினர்க்கு எப்படியாவது அறிவித்துப் பயன்படச் செய்ய வேண்டுமென்றுள்ள அவாவையும் இதிலுள்ள வாக்கியங்கள் நன்கு புலப்படுத்துகின்றன.

---

சீர்காழி இலக்கண இலக்கிய மகா வித்துவானவர்களும் 'காழித் தேவாரச்சிறப்பு' என ஓர் அரிய விரிவான ஆராய்ச்சியைச் 'செந்தமிழ்ச்செல்வியில்' பிரசுரஞ் செய்திருப்பவர்களுமாகிய
திருவாளர், ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்கள்
இயற்றியது.

இளம்பிறை கெழீஇய விளங்கவிர் செஞ்சடை
யாலம ரிறைவன் வாலறி வதனு
ஞன்மறை யிவையென நற்றமி ழருளிய
மூவாப் புகலின் முனைவன் றுவாத்
திரிசிர புரத்துச் செய்மல் கரிசறு
மாசி லாமணி தேசுறுங் கான்முளை
சாம்ப சிவமா லோம்பிய சைவன்
றன்னை யெவ்வயிற் றகுதியி ஞைத்தி
யம்மதி காணலுஞ் செவ்விதழ் சுருக்கும்
பங்கயத் தமருஞ் செங்கரத் தந்தண

சிவமயம்.

# வித்துவப் பெரியாரபிப்பிராயம்

சிதம்பரம் ஸ்ரீ மீனாட்சி தமிழ்க் கலாசாலைத் தலைமையாசிரியர்
பிரமஸ்ரீ மஹாமஹோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி
வே. சாமிநாதையரவர்கள் எழுதியது.

சிவபத்திச் செல்வர்களாகிய மகா-ள-ள-ஸ்ரீ திரு. மா. சாம்பசிவம் பிள்ளையவர்கள் ஆராய்ந்து எழுதி அச்சிற் பதிப்பித்து வெளிப்படுத்திய திருநான்மறை விளக்க ஆராய்ச்சி என்னும் புத்தகத்தைப் படித்துப் பார்த்து மிக்க இன்பமுற்றேன். இதிலுள்ள ஒவ்வொன்றும் தக்க ஆதாரங்களைக் காட்டி முன்னோர் கொள்கையினின்றும் சிறிதும் வேறுபடாமல், முன்னோர் மொழி பொருளேயன்றி யவர்மொழியும் பொன்னே போற் போற்றுவமென்பதற்குத் தக்க உதாரணம் என்று கல்விமான்கள் நன்கு மதிக்கும்படி விளங்குகின்றது. தேவார முதலியவற்றில் ஷை பிள்ளையவர்களுக்குள்ள சிறந்த பயிற்சியையும் அவற்றின் பொருளை முறையாக அறிந்திருக்கும் ஆற்றலையும் உண்மைப் பொருளையும் ஆன்றோரொழுக்கத்தையும் தமிழ்நாட்டினர்க்கு எப்படியாவது அறிவித்துப் பயன்படச் செய்ய வேண்டுமென்றுள்ள அவாவையும் இதிலுள்ள வாக்கியங்கள் நன்கு புலப்படுத்துகின்றன.

---

சீர்காழி இலக்கண இலக்கிய மகா வித்துவானவர்களும் 'காழித் தேவாரச்சிறப்பு' என ஓர் அரிய விரிவான ஆராய்ச்சியைச் 'செந்தமிழ்ச்செல்வியில்' பிரசுரஞ் செய்திருப்பவர்களுமாகிய

திருவாளர், ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்கள்
இயற்றியது.

இளம்பிறை கெழீஇய விளங்கவிர் செஞ்சடை
யாலம ரிறைவன் வாலறி வதனா
னான்மறை யிவையென நற்றமி ழருளிய
மூவாப் புகலின் முனைவன் றாவாத்
திரிசிர புரத்துச் செம்மல் கரிசறு
மாசி லாமணி தேசுறுங் கான்முளை
சாம்ப சிவமா ணோம்பிய சைவன்
றன்னை யெவ்வயிற் றகுதியி னொத்தி
யம்மதி காணலுஞ் செவ்விதழ் சுருக்கும்
பங்கயத் தமருஞ் செங்கரத் தந்தண

நான்முக மருவினை மேன்முகத் தெழீஇ
நாவின் கிழத்தி நவிறொறு நவின்று
பாவி னல்லது பண்பறி யாமே
யோத்தவை யாவு மோதினை யன்றியு
மொருமொழிப் பொருளைத் திருவினோ டறையாய்
மயங்கினை யோர்கால் வயங்குமெந் தோன்ற
லொருமுக மருவித் திருமுகத் தெழுதி
மலையின் கிழத்தி மகிழ்தொறு முறைத்துச்
சொல்லொடும் பொருளைத் துரிசறக் காட்டி
நல்லகம் படுத்தலி னுமுணர்ந் தனமே.

பாடாண்டிணை, இயன்மொழி.

---

யாழ்ப்பாணத்து நல்லூர்க் கைலாசநாத சுவாமி தேவஸ்தானத்
தருமகர்த்தரும், "முப்போதுந் திருமேனி தீண்டும்"
உத்தமோத்தம அந்தணர் குலதிலகரும், சிவாகம விற்பன்னரும்,
சோதிடத்தலைவரும், யந்திரவித்துவ சிரோமணியும்,
கிரியாகாண்டக் கண்ணாடியுமாகிய,

## பிரமஸ்ரீ ந. வே. கார்த்திகேயக் குருக்களவர்கள் இவ்வுரை கண்டார்.

சைவசமயிகளுட் சிலர் ஏறக்குறையப் பதினைந்து வருட காலமாகச் சைவசித்தாந்த நூல்களுக்கும், பரம்பரையாக அந் நூல்வழி யொழுகிவந்த வருகின்ற ஆன்றோர் கொள்கைகளுக் கும் மாறாகத் தாம் வெவ்வேறு புதிய கொள்கைகளை மேற் கொண்டு எழுதியும் இயம்பியும் வருகின்றார்கள். அவருள் முன்வைத் தெண்ணப்படுவோர் ஸ்ரீ வேதாசலப் பிள்ளை, ஸ்ரீ. கா. சுப்பிரமணிய பிள்ளை என்னுமிரு பெருமக்களுமேயாவர்.

ஈண்டு ஏனையோரை விடுத்து அவ்விருவரையும் எடுத்துக் கொண்டது எற்றுக்கெனின், உண்மைச் சைவாபிமானமும், ஓவாத தமிழ் சமஸ்கிருதாபிமானமும், "துலைநாவன்ன சமநிலை யுள்ள"மும், நூல்வரம்பிகவாத மேல்வரம் புடைமையும், ஆன் றோராசாரம் என்று போற்றலும், சிவபூசைப்பத்தி சிவனடியார் பத்தியும், விபூதி உருத்திராக்கமாகிய சிவசின்ன தாரணமும், "உண்பது நாழி யுடுப்பது நான்குமுழம்" என்னும் ஔவை யார் திருவாக்கை அநுதினமும் அறிஞர் நினைவு கூரச்செய்த லும், "எல்லார்க்கு நன்றாம் பணிதல் அவருள்ளும்— செல்வர்க்கே செல்வந் தகைத்து" என்னுந் திருக்குறளுக்கு இலக்கியமும், இன்னன நன்மைகள் பிறவும் மன்னித்தூறுமும் மாண்பார் வித்துவதிலகராகிய ஸ்ரீமத். திரு. மா. சாம்பசிவம்

பிள்ளையவர்கள் எமது அபிப்பிராயங் கேட்டற் பொருட்டு அனுப்பிய "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" என்னுந் திருத்தகு நூலில் அவ்விருவரையுமே சுட்டிப் பேசப்பட்டிருத்தலினு லென்றுணர்க.

வேதாசலப் பிள்ளை என்பாரது நவீனக் கொள்கையை ஆராய்ச்சி ஆசிரியர் பத்திரிகை மூலமாகவும், சிறு புத்தக மூலமாகவும் மறுத்தொழித்தமையை அப்பத்திரிகை முதலியவற்றைப் பார்த்தறிந்திருக்கின்றேம். அவற்றிற்கு மறுப்பு இன்னும் வந்திலது. வருதற்கு வழியில்லை. ஆகலான், இனிமேலும் வாராது. வாராது. ஒருகால் மானமேலிட்டால் வரின் பிழையுறவரும்; அழிபட்டொழியும்.

சைவசாத்திர விரோதக் கொள்கையராகிய வேதாசலப் பிள்ளை என்பார் யாழ்ப்பாணம் வந்தபோது உண்மைச் சைவ வித்துவான்கள் அவரது புதுக்கொள்கையை அங்கீகரித்திலராய் வித்துவ சபையில் அதனைத் தாபிக்குமாறு அழைத்தார்கள். அவர் வரவில்லை. வாராமையால் ஸ்ரீமத் கைலாச பிள்ளையவர்கள் இந்து சாதன பத்திரிகை மூலமாகவும் சிறு புத்தக மூலமாகவும் அவரது சைவ விரோதக் கொள்கையைப் பிரமாண சகிதம் மறுத்து விட்டார்கள். அவற்றிற்கும் இன்று வரை மறுப்பெழுத வலியிலராயினர். என் செய்வார்! பாவம்! பாவம்!! பிரமாணமின்மையிற் பேசாதொழிந்தார். "கல்லாத மேற்கொண் டொழுகுவான் கசடற—வல்லதூஉ மையந் தரும்" என்பதற்கிலக்கியராகாது மோன முற்றிடல் மாமதியேயாம்.

இங்ஙனமிருத்தலால் அவரைப்பற்றித் "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி நூலுடையார் அந்நூலுள் தொட்டுக்காட்டி விட்டொழிந்தனர். அம்முறைபற்றி யாமும் அவர் கொள்கையை விடுத்து, கா. சுப்பிரமணிய பிள்ளை என்பார் கொள்கையைத் தொட்டுப்பார்த்து எமது அபிப்பிராயத்தைத் தெரிப்பாம்.

கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பூர்வ பக்கமாகத் "திருநான்மறை விளக்கம்" எனத்தீட்டிய பத்திரிகையில், கல்லாநீழலில் இறைவன், நால்வர் தமிழ் மக்களுக்கு ஞானத்தைக் கொடுக்க அவர்கள் தமிழ் நான்மறை செய்தார்கள் என்றும், சிவபிரான் வேதஞ் செய்திலர் என்றும், வடமொழி வேதம் தமிழ் வேதத்தைப் பார்த்து ஆரியர் கட்டின கட்டு வார்த்தை என்றும், தமிழ் வேதத்தைக் கடல் கொண்டுபோயிற்றென்றும், ஆறங்கங்களும் தமிழிலுள்ளன, அவையுங் கடல் கோட்பட்டன என்றும், பிறவாறும் பிரமாணமின்றி "வாயில் வந்தன வந்தன

போற்றினர்" என்ற வண்ணம் மனத்திற்றோன்றிய தோன்றிய படி எழுதி யிருக்கின்றார்கள். "அறிஞர்க ளுடியே யவற்றைக் காண்கவே."

"திருநான்மறை விளக்கத்"திற் காணப்படுவனவெல்லாம் சைவ சாத்திரங்களுக்கு முற்றும் மாறுபட்டனவேயாம். இவைக முக்கியமான சிலவற்றை ஈண்டெடுத்துக் காட்டினும். ளெல்லாம், சைவ சமயம் இல்லை; சைவ சாத்திரம் இல்லை; சாதி இல்லை; ஆச்சிரமம் இல்லை; சிவன் இல்லை; சீவன் இல்லை; புண்ணியம் இல்லை; பாவம் இல்லை; அவற்றின் பயன்களாகிய இன்பம் இல்லை; துன்பம் இல்லை; அவ்வின்பத் துன்பங்களை அனுபவிக்கும் சுவர்க்கம் இல்லை; நரகம் இல்லை; "கொலை யொடு களவு காமங் குறித்திடு வஞ்ச மெல்லா—நிலையெனப் புரிதியற்று னினக்குமேல் வருந்தீ தொன்றா" இல்லை; எனவும் இன்னன பிறவும் கூறும் நாத்திகர்க்கும் உடன்பாடாகாதே னின், இவைகளெல்லாம் உண்டெனக் கூறும் ஆத்திக சைவசற் சனசங்கத்தனுத்துணை தானு மனுகாதழிந்துபடும் என்ப தறை யவும் வேண்டுங் கொல்லோ!

உண்மைச் சைவ சற்சன சபையில் அவையனுத்துணையு மேருவென்பது "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" என்னு நூலைப்படிப்பவர் நன்கறிவர். "ஆராய்ச்சி" ஆசிரியர், கா. சு. என்பார் கொள்கைகளெல்லாவற்றையும் தக்க பிரமாணங் கொண்டு மறுத்திருத்தலின் யாம் மறுப்பான் புகவில்லை. அம் மறுப்புக்கு மதிப்புரை கொடுப்பான் புகுந்தேம். எமதபிப் பிராய மதிப்புரை இதுவேயாம்.

நல்லாசிரியரை வழிபடு முறையில் வழிபட்டுக் கேட்கு முறையிற் கேட்டுச் சைவ சித்தாந்த நூல்களைக் கற்று உள்ளவா றுணர்ந்த நல்லோர்கள் "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" ஆசிரியர் அறிவின் மதுகையை அறிந்து வியந்து மகிழா நிற்பர். ஏனையோர் வியந்தென்? ஒழிந்தென்?

சைவவுலகந் தடுமாறிப் பிறவிப்பயனை இழவாதவண்ணம் "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" என்னும் சிறந்த நூலியற்றி ஈடேறச் செய்த புலவர் திலகராகிய ஸ்ரீமத் சாம்ப சிவம் பிள்ளையவர்கள் இன்னும் இதுபோலும் பெருநூல்கள் செய்து உபகரித்துப் பூரணாயுசுப் பெற்றுப் புண்ணியராய் ஆனந்த வாழ்வுறும்படி "சிற்சபை பொலியத் திருநடம்புரியு, மற்புதக் கூத்தர்" அருள்புரியுமாறு அனுதினமும் வேண்டு கின்றும்:

---

மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பரீக்ஷகரும், யாழ்ப்பாணத்து
ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்தின் நிர்வாக சபை
வித்தியா சபைகளின் அங்கத்தவரும் உதவிக் காரியதரிசியும்,
பரீக்ஷகரும், "உலகியல் விளக்க நூல்" ஆசிரியரும்,
சங்கநூல் ஆராய்ச்சி விநோதருமாகிய

**பிரமஸ்ரீ நவநீதகிருஷ்ணபாரதியவர்கள் இவ்வுரை கண்டார்.**

தென்னிந்தியாவிலேயுள்ள பார்ப்பன மக்களுட் பெரும்பாலார் அரசாங்க உத்தியோக வேணவா மேலீட்டானே தத்தமக்குரிய வைதிக சன்மார்க்க நெறியை மறந்து ஆங்கிலங் கற்றுத் தாம் பெரும் பதம் பெற்றுப் பாங்கிலரொன்னும் பான்மையாராயினர். ஆங்குள்ள ஏனையோரும் அப்பதங்களைத் தாங்களும் பெறுதற்குத் தடையாயிருப்பவர் பார்ப்பாரெனத் தாமே கருதிக்கொண்டு அவரை வெறுத்து அடக்குவான் முயல்கின்றனர்

அவர் தம் முயற்சி, அப்பார்ப்பார்க் குரியதென்று அவர்தாமே எண்ணிக்கொண்ட வடமொழியின் மீதும், அம்மொழியினூர்ந்த வேதாகமங்கண் மீதும், அப்பார்ப்பார் மரபுடையரெனக் கருதப்படும் திருஞானசம்பந்த சுவாமிகள் போன்றார் மீதும், சகத்தியல் கடந்த அகத்தியர் முதலாய முனிவர்கண் மீதும் வெறுப்புக் கொள்ளச் செய்து விட்டதெனின், வேறினி விளம்புதற் கியாதுள தவர்தம் முயற்சி விசேடம்.!

இன்னும் அவர்கள் தமது வெறுப்புவிசேட மொன்றையே நிலைக்களனாக வைத்துக்கொண்டு உண்மையை அறவே மறைத்துத் தொன்னூல் வரம்பிகந்து வேண்டிய மாறுபாடுகளை அச்சநாண மனுத்துணையுமின்றி உளுற்றி வருகின்றனர். அவற்றுட் சிலவற்றை அறியவெஃகும் வேட்கையாளர் பொருட்டு ஈண்டு வரைகின்றாம்.

திருக்குறளில் "அறுதொழிலோர்" என்றதனை "அறிதொழிலோர்" என்றும், தேவாரத்தில் "சைவவேடந் தானினைத்து" என்றதனைச் "சைவவேடந் தானினைத்து" என்றும், பாடங்கொண்டும், தேவார முதலியவற்றில் "மறை" என்பது தமிழ்வேதம் என்றும், "அந்தணர்" என்பது "தமிழராகிய முனிவர்" என்றும், "சிவன்" என்பதற்குச் சிவந்த நிறம் உடையவன் என்றும் ஓராதாரமுமின்றி வாளா பொருள் கூறியும், தம்முடைய கொள்கைக்கு மாறுபட்ட பிரபலமான பிரமாணங்களை இடைச்செருகல் என்றும் எழுதியும் இயம்பியும், இன்னன பிறவா றுளுற்றியும் வருகின்றனர். இவ்வருவோருட்டலையாயார் ஸ்ரீ வேதாசலம் பிள்ளை என்பாரும் ஸ்ரீ கா. சுப்பிரமணிய பிள்ளை என்பாருமாவர்.

கா. சு. என்பார் வடமரநிழற்கண் நால்வர்க்கருளிய மறை என்பது இருக்கு முதலியவற்றைக் குறியாது தமிழ் மொழிக் குரிய ஓம் என்பதனையே குறிக்கும் என்றும், ஆண்டுக் கேட்ட நால்வரும் சநகாதியர் ஆகார்; தமிழ் மக்களே ஆவார் என்றும், பிறவாறும் மேலே குறித்த தம்மத மேலீட்டானே "திருநான் மறை விளக்கம்" என்னும் பொதுமொழி தலைப் பெய்தவொரு பொருளில் உரையைச் "செந்தமிழ்ச்செல்வி" என்னும் பொருத்தமில் பத்திரத்தில் வெளியிட்டிருக்கின்றார்.

இத்தகாத செயலுக்கஞ்சி உண்மை வெளியிடற் கஞ்சாது முன் வந்து தோன்றியோர் பல சைவத் தமிழ்ப் பெரியாராவர்; அவர் தம்முள்ளும் தலை சிறந்த பெரியாராகிய ஸ்ரீமத். திரு. மா. சாம்பசிவம் பிள்ளையவர்கள் "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" எனப் பெயரியதோரரிய நூலொன்றியற்றி அதன் மாதிரிப் பிரதி யொன்றை எமக்கனுப்பி வைத்தனர்.

அந்நூல் கா. சு. என்பார் காட்டிய போலிக் கொள்கை களை வேரறுத்தில்லையாக்கிச் 'சைவப் பயிர் தழைத்தோங்க வைத்துச் சிவானந்தப் பேற்றினைச் சைவ வுலகந் துய்க்குமாறு செய்து விளக்கமுறுகின்றது என்பது எமது உள்ளக்கிடக்கை.

அந்நூலாசிரியருக்கும், மாரிக்குப்போலச் சைவ வுலகம் என்ன கைமாறு செய்ய வல்லது! நூலும், ஆசிரியரும், சைவமும், தமிழும், வடமொழியும், அம்மொழி வேதாகமங்களும், அன்ன பிறவும் தழைத்து வளர்ந்தோங்கி நிலைபெறும்வண்ணம் அருள் புரிவான் கலியுகவரத! கந்த! முருக! எந்தை செவ்வேள்! கமலச்சேவடி! விமல! வேண்டுதும் பெரிதே.

---

யாழ்ப்பாணத்து மாவைக் கந்தவேள் ஆலய ஆதீன குரவருள் ஒருவரும், பௌராணிகரும், சைவப்பிரசாரகரும், கவிப்புலவரும், ஆகிய

## பிரமஸ்ரீ ஸா. குமாரசாமிக் குருக்களவர்கள் கண்ட வுரை.

செந்தமிழ்ப்புலவரும், நந்தலில் அன்பரும், உந்திய ஒழுக்கரும், சந்தத மியற்றும் அந்தமில் பூசையும், நிந்தையில் அடியவர் சுந்தரத்தொண்டும் பந்தம தகற்றும் பான்மையிற் செய்யும் பத்த சிரேட்டரும், வித்தகநூல் விநோதரும் சத்துரு கண்டனம் பத்தோ மேலும் பற்பல படைத்திந்து பாரிற் சைவம் பரப்பினரும் பரப்புகின்றவரும் பரப்புவாருமாகிய ஸ்ரீமத் சாம்பசிவம் பிள்ளையவர்கள் எமது பார்வைக்கு அனுப்பிய "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" வரப்பெற்றுப் பார்வையிட்டு அவ்வுத்தம சிரோமணி சைவர்கட்குச் செய்த

பேருபகாரத்தைக் கருதிக் கருதிக் கருங்கல்லினும் வலிதாய எமதுள்ளம் நெக்குநெக் குருகிற்று. ஆராய்ச்சி நூலின்கண் உள்ள பூர்வபட்சிகள் கொள்கைகளையும் சித்தாந்தியார் மறுப்புக்களையும் உற்று நோக்கும்போதெல்லாம் முறையே துக்கானந்தவெள்ளம் பொழியும் துணை விழிகள்.

இந்நூலில் வடமொழிக்கண்ணே வேதசிவாகமங்கள் ஈசனால் செய்தருளப்பட்டு அன்றும் இன்றும் என்றும் நின்று நிலவுதலும் இன்னோரன்ன பிறவும் காண்டல் கருதல் உரை என்னும் மூன்றினாலும் நிறுவப்பட்டிருத்தல் கரதலாமலகம் போலக் காணப்படுகின்றது. அது, ஆராய்ச்சி நூலைப் படிப்பவர் தாமே அறிந்துகொள்வர். யாம் கூறியது மிகைபோலும்.

வடமொழி தென்மொழிகளை ஒருங்கே தந்த ஈசன் கல்லாலின்கண் நால்வர்க்குபதேசித்த தமிழ்மறைகள் கடல்கோட்பட வடமொழி வேத சிவாகமங்களையே இத்தமிழுலகு கொள்ளத் திருவுளம்பற்றினராயின் அதனை மாற்றவல்ல சிருட்டிகர்த்தர் யாவரோ! ஆயினும் ஸ்ரீ. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் அவனருள் வயத்தராய்ச் சாகரத் தாழ்ந்து தமிழ் மறைகளைக் கொணர்ந்து தமிழுலகுக்கீவரேல் அதனை விலக்கவல்லார் யாவரோ!!

"அந்தமின் மறையெல்லா மடிதலை தடுமாறிச்—சிந்திட முனிவோருந் தேவரு மருளுற்ற" காலத்தில் ஈசன் விண்டுவை நோக்கி விண்டுவே! நீ ஒருகலையுடன் புவியிற் போந்து அம்மறைகளை முறை நிறுவி வருகவென்றருளிச்செய்ய அவர் வியாசராய்ப் போந்த சரிதம் இப்பொழுது ஞாபகத்துக்கு வருகின்றது.

ஐயிரு புராணநூலமலற் கோதியுஞ்—செய்யபன் மறைகளும் தெரிந்து மாயையால்—மெய்யறு சூனியவாதர் புகல்வராயின், நான்மறையுள் ஒருமறையில் ஒரு பகுதியைத்தானும் நல்லாசிரியரிடத்துக் கற்று அதன் உண்மைப் பொருளறிந்து அதன் வழியைத் தாற்றாது போற்றி உய்தற்குத் தவஞ்சிறிதுங் கழிபிறப்பிற் செய்து வையாதவர்கள் மயங்கி மாறுகொளக் கூறிமறை நிந்தகராதல் ஆச்சரியமன்று.

எங்ஙனமாயினும் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் கூறும் தமிழ்மறைகள் உலகறிய வெளிவரும் வரையும் சிவஞானச் செல்வர் சாம்பசிவம் பிள்ளையவர்கள் எழுதிய "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" நின்று நிலவுதல் ஒருதலை என்பது கடைப்பிடிக்க உலகு.

"ஆராய்ச்சி" நூல் ஆக்கியோர் "உப்புமுலகு முள்ளளவும் வாழ்ந்து திப்பிய நூல் பல இன்னும் இதுபோற்செய்து

இப்புவிக்கீந்து செப்பஞ்செய்து உவந்தினிதிருக்க வரந்தருக
வென மன்றவன் மதலை தன்றிருவடியிணை புந்திகொண்டிறைஞ்
சுதும் புவியி லென்றுமே.

---

யாழ்ப்பாணத்துத் திருநெல்வேலிச் சிவன் கோயில் அர்ச்சகரும், மானேசரும், பற்பல சிவாலய குகாலய முதலிய சைவாலயங்களில் துசாரோகணஞ் செய்து உற்சவநடாத்தும் வித்தகரும், "முப்போதுந்திருமேனிதீண்டு"ம் உத்தமோத்தம வருணத் தண்ணளிமிக்காரும், வித்துவான்கள் எனப்படுவார் யாவரே யாயினும் அவர்பாற் பத்திமை பழுத்தொழுகும் மெய்த்தகு பண்பினரும், கல்வி விநோதரும், ஈகையாளரும், சைவப்பிரசாரகரும், ஞானப்பிரகாச சபையின் நிரந்தர அக்கிராசனரும், பௌராணிகரும், கர்ஷணாதிப் பிரதிஷ்டாந்தம் பிரதிட்டாதி உற்சவாந்தம் உற்சவாதிப் பிராயச்சித்தாந்தம் என்னும் பரார்த்தக் கிரியைகளில் மிகப்பயின்றவரும், பொது நலப்பிரியரும் ஆகிய,

பிரமஸ்ரீ சி. சபாபதிக்குருக்களவர்கள் இவ்வுரை கண்டாராவர்.

மகா-ள-ள-ஸ்ரீ கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் "செந்தமிழ்ச்செல்வி" என்னும் பத்திரிகையில் "திருநான்மறை விளக்கம்" எனத் தலைக்கட் பெயர் பொறித்து எழுதிய விடயமெல்லாம் சைவ சாத்திர முரண்களெனக் கண்டு கண்டனங் கண்டு அச்சிட்டு அதில் ஒரு பிரதி எமதபிப்பிராயம் அறிதற் பொருட்டு எமக்கனுப்பி வைத்தார் ஒரு பெரியார்.

அவர் தாம் யாரெனின் சைவ சாத்திரமுரணினர் எனப்படும் யானைகட்கொப்பற்ற சிங்கேறும், நாத்திகர்களாகிய வனத்திற்கோ ராத்திகக் கோடரியும், கற்றவர்காமுறும் பொற்பார் புலவரும், நெற்றிநேத்திரத்தனைப் பற்றொடு பூசை நித்தலும் புரியும் பளகறு தவத்தரும், மூவொருபாஷை மேவரப் பயின்று தாவிலதாகத் தமதுளங் கொண்டவரும், சைவசித்தாந்த மெய்வரக்கற்றுப் பன்னிருதிருமுறை நன்னருற்றோர்ந்து வாதிக ளேங்கி மனமயலகலப் போதனை செய்யும் புண்ணிய கண்ணியரும், நீதி நூல்கள் பேதியா துணர்ந்து இலக்கியம் பயின்று இலக்கணந் தேர்ந்து தருக்கம் படித்துத் தாம்பெரி தோங்குநரும், திருப்புகழ்ப் பெருமான் "சேவடி படருஞ் செம்மலுள்ள"த்தரும் ஆகிய ஸ்ரீமத் திரு. மா. சாம்பசிவம் பிள்ளையவர்களே!

இப் பெரியார் அனுப்பிய "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" என்னும் பெரு நூலை யாம் அரைப்பாகம் வரை

பார்வை யிட்டேம். எமது சிவாலய பூசை முதலாய கைங்கரியங்கள் முழுப்பாகமும் இப்பொழுது பார்க்க இடந்தந்தில. ஆயினும் எமது கருத்துப் பழுதுறுவண்ணம் பின்னர் எஞ்சிய பாகத்தையும் பார்வையிட்டுப் பூர்த்தி செய்தின்புறலாமென் றெண்ணி ஒருவாறு மனந்தேறினேம். அது நிற்க.

ஒரு பானை சோற்றிற் கோரவிழ் பதம் பார்த்தல் என்னும் பொருளையுடைய "தாலீபுலாகநியாயத்"தானே பார்த்த பாகத்தைக் கொண்டு பாராத பாகமும் இத்தன்மைத்தென்பது இனிது விளங்கிற்று

அவ்"வாராய்ச்சி"தான், சைவ நூற் பிரமாணங்களையும் யுத்தி அநுபவங்களையும் தன்னக முழுதுங் கொண்டு, "திருநான்மறைவிளக்க" முடையார் புதுக்கொள்கைகள் முற்றும் சுருதி முதலிய மூன்றற்கும் சிறிதும் ஒவ்வாமையை வெள்ளிடை மலை போற் றெள்ளிதிற் காட்டித் திகழ்கின்ற சிறப்பு, "விளக்க" முடையார் உளக்கமலமு நெகிழ்த்தின்புறுத்தி உண்மை கடைப்பிடிக்கச் செய்யுமென்ப தொருதலை.

அவ்"வாராய்ச்சி"யாம் அரும்பெரு நூற்கு இலக்காக்கப் பட்ட ம-ள-ள-ஸ்ரீ வேதாசலம் பிள்ளையவர்களும் ம-ள-ள-ஸ்ரீ கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களும் தாங்கள் மேற்கொண்ட புதுக்கொள்கைகளைச் சைவநூற் கொள்கைகள் என்று ஆராய்ச்சியில்லார் கருதும்படி வெளியிட்டு வருகிறார்கள். அவற்றைப் பார்க்க விரும்புவோர் முறையே "திருவாசகவிரிவுரை"யிலும், "திருநான்மறைவிளக்கம்" அச்சிடப்பட்ட "செந்தமிழ்ச்செல்வி" என்னும் மாசிக பத்திரிகையிலும், அன்ன பிறவற்றிலும் பரக்கக் காணலாம்

இவ்விருவருக்கும் ஒருவருக்குமில்லாத ஒரு சூக்கும அறிவு தலைப்பட்டிருத்தலை எப்பாலர் அறியினும் தப்பாமல் ஆற்றவும் ஆச்சரியமடைவர். அதுதான் மற்றெவ்விலக்கணத்த தெனிற் கூறுதும்:—

க. தாங்கள் பிரமாணமாகக் கொண்டதொன்றைப் பிறர் பிரமாணமாகக் காட்டினால், பதில் சொல்லமுட்டுற்று, அது இடைச்செருகல் என்று கூறி விடுதல்.

உ. பலபொருளொரு சொல் ஓரிடத்திற் பிரயோகித்திருந்தால் அதற்கு அவ்விடத்திற்கு ஏற்பதொரு பொருளை விடுத்துத் தாம் மேற்கொண்ட கொள்கைக்கேற்ப வலிந்திழுத்துப் பொருந்தாப் பொருள் கோடல்.

ங. ஒரு நூலில் ஒரு விடயத்தைப் பற்றி முன்பின்னுள்ள தொடர்புபடச் சொல்லி வரும் பொருத்தப் பொருட் சம்பந்த

நோக்காது தாங்கொண்ட நவீனக் கொள்கைக்கேற்பப் புதுப் பொருள் கோடல்.

ச. தாம் காட்டும் பிரமாணம் எதிரி கொள்கையைத் தாபித்துத் தமக்குப் பிரதிகூலமாய்த் தம்மைத் தோல்வித் தானத்துட்படுத்திவிடுதலை எள்ளத்தனையுங் கருதாதொழிதல்.

ரு. தங்கள் புதுக்கொள்கைக்குப் பிரமாணமின்மை செவ்விதிற் றெரிந்துவைத்தும் தெரியாதார் போல, தேவார முதலியதற்றைத் தங்கள் கொள்கைக்கு ஏற்பத் திரித்துப் பாடங்கோடல்.

சா. "சித்திரம் பேசேல்" என்ற ஔவையார் திரு வாக்கைச் சிறிதுஞ் சிந்தியாது அறவே மறந்து அதுவே பேசுதல்.

எ. தாங்கள் தங்கள் கொள்கையைத் தாபித்தற்கு நூல் வரம்பிகந்து புதிதொன்று கூறின், ஏனையரும் வரம்பிகந்து அதற்குமேற் புதிதொன்று கூறின் அப்போது தாம் செய்யக் கிடந்த தொன்றுமின்றென வுணராது களித்தல்.

அ. தங்கள் புதுக்கொள்கை, அதனையறியு மறிவாற்ற லில்லாத சைவசமயிகளுக்குத் தெய்வபத்தியைக் கெடுத்து மனம் போனவாறு ஒழுகச்செய்து நரகத்திற்காளாக்கிவிடும் என்பது கருதி யிரங்காதுவிடுதல்.

கூ. இந்நவீனக் கொள்கையுடைய இவ்விருவரில் முன் வைத் தெண்ணப்பட்ட ஒருவர் நான்மறை சிவஞான சித்தி, தேவாரம், திருக்குறள், இறையனாரகப்பொருள், தொல்காப்பி யம் என்று கூறப் பின்வைத் தெண்ணப்பட்ட மற்றொருவர் இவை யன்று; அது வேறு; அது கடலாற் கொள்ளப் பட்டதென்றல்.

இங்ஙனம் இவ்விரு பெருமர் சூக்குமவறிவும் நவமாகப் பிரிந்து, அவற்றுள்ளும் ஒவ்வொன்று பலவேறுவகைப்படப் பிரிந்து செல்லுஞ் செலவினையுடைய விலக்கணத்தன.

இவ்வறிவு இருந்துழி யிருந்து தீட்டாத் தீட்டும் பயனில் பல முரண் விடயங்கட்குட் புதைந்து கிடக்குமன்றி அறிஞர் அவைக்களத் தணுகி அரை மாத்திரைதானும் நின்று பயன் றருவதொன் றன்று என்பதஃதறியவல்ல அவர்பாற் றோன்று மைக்குக் காரணம் என்னைகொல்லோ! வினையென்பேமா! வினையன்று; கலிவலி என்பேமா! அஃதன்று; கண்ணுதற் பரமன் பிரேரகமென்பேமா! அதுவுமன்று; சார்ந்த இனத் தியல் பென்பேமா; என்னென்பேம்! என்னென்பேம், சிவதா! சிவதா! அது கிடக்க

திரிபுரத்தசுரர்கள் தேவர்க்குச் செய்த சகித்தற்கரிய இடுக்கண்ணை அவர் முறையீட்டால் அறிந்து கருணைமீக்கூர்ந்து அதனை ஒழிக்கத் திருவுளங்கொண்ட செகதீசனாகிய சிவபெருமான், அவ்வசுரர்கள் சிவபூசா துரந்தரர்களாயிருத்தலின், அப்பெரும்பேறுடையாரைப் பரமபதியாகிய தம்மாலும் கோறல் முடியாதென்றுணர்த்து முகத்தால் சிவபூசைவிசிட்டஞ் செகத்தினர்க்குத் தெரிக்க திருவுளங்கொண்டு தமது "நால் வகைப்பட நண்ணிய சத்தியுள்—மாலு மாதலின்," அம்மாலாகிய விண்டு தேவரைக் கூவி இதனைச் செவியறிவுறுப்பாராயினார். அது வருமாறு:—

விண்டுவே! நீ பௌத்தகுரவனாயும் நாரதன் உனது சீடனாகவும் கோலங்கொண்டு திரிபுரஞ்சென்று அப்புரவாசிகட்குப் பௌத்த சமய போதனைசெய்து சிவபத்தியையும் சிவ பூசையையும் விடுவித்து, பௌத்த பத்தியையும் பௌத்த பூசையையுந் தொடுவித்துவரக்கடவீர் என்று அறிவுறுத்தினார். சமணசமயத்தையும் போதிக்கும்படி தெரித்தார் எனக் கூறும் புராணமும் உண்டு.

சிவபிரான் தெரித்தருளியவாறு விண்டுதேவரும் நாரதரும் கோலங்கொண்டு திரிபுரஞ் சென்று பௌத்த சமண போதனைசெய்து அவ்வசுரர் சிவபத்தி சிவபூசைகளைக் கெடுத்துப் பௌத்தபத்தி பௌத்தபூசைகளைக் கொடுத்து மீண்டனர்.

அதன்பின் சிவபிரான் திரிபுரதகனஞ் செய்து தேவர்களை இரக்ஷித்தார். அக்காலத்து விண்டுதேவர் போதனையைக் கேட்டும் அதில் மனம்பற்றாத மூவர் சிவபத்தி சிவபூசைகளை விடாதிருந்தனர். அவர் அவ்விசேடத்தால் தகிக்கப்படாது உய்ந்தார். இதனால் சிவபத்தி சிவபூசைகளின் விசிட்டம் எத்துணை சிறந்ததென்பது யாவரும எளிதிலறிந்து யாவரும் கடைப்பிடியாக மேற்கொண்டு உய்யக்கடவர்கள்.

"வேண்டுவார் வேண்டுவதே யீயும்" பெருங்கருணைப் பெருவள்ளல் எங்கள் சிவபெருமானேயாதலால், தேவர் வேண்டுகோளை முடித்தற்கு அதற்குரியவாயிலை யுண்டாக்கி முடித்தருளினார். அதுபோல, கலியுக தருமம் இவையென விதித்த சிவபிரான், சைவசமயிகளிடத்து அவை காணப்படாமையால், அவற்றைச் சைவரைக்கொண்டு செய்வித்தற்குரிய வாயில் இஃதெனத் திருவுளங்கொண்டு வேதாசலம் சுப்பிரமணியம் என்னும் தமது தலப்பெயர் சுயப்பெயரோடு மானுட வடிவங்கள் எடுத்துக்கொண்டுவந்து சைவசமயிகளுடைய உறுதியான சிவபத்தி, வேதாகமபத்தி, வடமொழிப் பத்தி, பிராமணபத்தி, சைவசமய குரவர்பத்தி, சைவசமய

சந்தான குரவர்பத்தி, சித்தாந்த சாத்திரப்பத்தி, பன்னிரு திருமுறைப்பத்தி, முதலியவற்றைக் கெடுத்து நவீன சைவமதத்தில் விடுத்து இருபத்தெட்டுக்கோடி நரகங்களிலும் மடுத்து வருந்தத் திருவுளங்கொண்டிருந்தாலு மிருக்கலாம்; அப்படியாயா யின் அவ்விருவர்மீதும் குற்றமேற்ற இடமில்லை யென்றாங் கருதுகின்றாம்.

"திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" என்னும் பெருநூலில் மிகக் கவனிக்கற்பால சிலவற்றை ஈண்டு எடுத்துக் காட்டுகின்றாம்.

வடமொழி வேதம் ஆரியர் கட்டியது; சிவபிரான் திருவாய் மலர்ந்தருளப்பட்டதன்று என்றும், சனகாதி முனிவர்கள் பிரமபுத்திரர்களன்று தமிழ் மக்கள் நால்வர் என்றும், அவர்கள் சிவபிரானிடத்து ஞானம் பெற்றுத் தமிழ் நான்மறை செய்தார்கள் என்றும், அவற்றைக் கடல் கொண்டுபோயிற்று என்றும், மறை, வேதம் என்று தேவார முதலியவற்றிலே கூறியிருத்தல் தமிழ் நான்மறையைச் சுட்டியது என்றும் கூறியிருத்தலும் இன்ன பிறவுமாம். இவையெல்லாம் "அறையுமாடரங் கும்மடப் பிள்ளைகள்—தறையிற் கீறிடிற் றச்சருங் காய்வரோ" என்னுங் கல்வியிற் பெரிய கம்பர் அருமைப் பாட்டிற் கிலங்காவனவன்றிப் பிறிதன்றெனத் தெளிவோர் தெளிவர், தெளியார் என்றுந் தெளியார். அவர் கன்மத்திற்கு நல்லோர் இரங்கா நிற்பர்.

வித்துவரத்தினமாகிய "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" நூல் ஆக்கியோர் சுருதி யுத்தி அநுபவம் என்னு மூன்றினானும் ஷெ விளக்கத்தை மறுத்துத் தமது பட்சத்தைச் செவ்வனே சித்தாந்தஞ் செய்திருத்தலின், நாம் அதனை மறுவலும் மறுக்கப்புகின் "பிட்டவேடணநியாய" மாய் முடியுமாகலான் அதிற் றலையிட்டிலம்.

"ஆராய்ச்சி" நூலுடையார் உண்மைச் சிவபத்தியும், உண்மைச் சைவாபிமானமும், சைவ சாத்திரத்தின் உண்மைப் பொருளைப் புடைபடவொற்றி ஆராய்ந்தறியும் அறிவின் மதுகையும், மற்றைய பன்னூற் பயிற்சியும், நூல்வரம்பினின்று நுண்ணிதாக வாதஞ்செய்தலும், பிற பிற பற்பல நன்னலங்களும் ஒருங்குடையரென்பது அவர் "ஆராய்ச்சி" நூலால் நன்கு விளங்கும்.

இத்தகைய பெரியார் இதுபோலும் நன்மை பயக்கும் பெருநூல்கள் இன்னும் இன்னும் பல பல செய்துகொண்டு பலர்க்குப்பயன்படச்செய்து பூரணாயுசுடன் நித்தியசுகமுடைய

ராய் எம்போல்வாரை மகிழ்வித்துக்கொண்டிருக்கும் வண்ணம் பேரருள் பாலித்தருளும்படி எமது முழுமுதற் கடவுளாகிய சிவபிரான் றிருவடிமலரை எமதொருமுடி மலராகச் சூடித் தினந்தினம் சிந்திக்கின்றும்.

---

திருநெல்வேலி ஜில்லா தச்சநல்லூர், இருமொழிகளிலும்
சிறப்புற்றவர்களும்
தமிழ் வளர்ச்சியில் முழுதும் ஈடுபட்டவர்களுமாகிய
ஸ்ரீலஸ்ரீ ஐயா இலக்குமணப்போற்றி ஐயா
அவர்களது அபிப்பிராயம்

இத்திருநான்மறை விளக்க ஆராய்ச்சி யெனும் நூலைப் படித்தேன். இதிற் காணப்பெற்ற பொருளைப்பற்றி யென் கருத்தை வெளியிடல் வேண்டுமென இந்நூலாசிரியர் விரும்பிக் கொண்டார்கள். ஆதலால், என் சொற்ப அறிவிற்குப் புலப்பட்டதை இதில் எழுதுகின்றேன்.

திருநான்மறை விளக்க ஆசிரியரும், திருநான்மறைவிளக்க ஆராய்ச்சி ஆசிரியரும் கல்வியிற் சிறந்த உண்மைச் சைவ ஒழுக்கமுடையோராவர். இவர்கள் சைவ நூல்களையே தாங்கள் பாராட்டுதற்குரியனவாகக் கொண்டவர்கள். ஆனல், அவற்றில் திருநான்மறை யெனும் பதப் பொருள்பற்றி வேறுபட்ட கருத்துடையராயிருக்கின்றனர். திருநான்மறை யென்பது வடமொழி வேதமா, தென்மொழி வேதமா என்பது அவர்கள் ஆராய்ச்சிக் குறிப்பு. கருத்தின் வேறுபாடு ஆன்மாக்களின் பக்குவத்தைப் பொறுத்ததே. வியாசசூத்திரம் ஒன்றினுக்கு நால்வர் பெரியார் ஒன்றிற்கொன்று முற்றும் மாறுபட்ட கருத்துள்ள நான்கு பாஷியங்களை வகுத்துள்ளார். ஒவ்வொருவரும் துர் அபிமானங்கொள்ளாமல் தங்கள் தங்கள் புத்தியிற் புலப்பட்டதை உள்ளவாறே வெளியிடுவது பெருமையேயாம். நிற்க

இத்திருநான்மறை பற்றிய ஆராய்ச்சிக்கு விஷயமாயுள்ள நூல்கள் முக்கியமாகத் தமிழ்த் தேவாரத் திருவாசகங்களேயாம். இவற்றை யருளிச் செய்த மகான்கள் கருத்தில் வடமொழி வேதங்களின்றி வேறு தமிழ் வேதங்கள் உண்டெனுங் கொள்கை ஒரு சிறிதுங் காணப்படவில்லை. வடமொழிப் புராண இதிகாசங்களின் கதாசாரங்களின் தொடர் பின்றி அப்பா சுரங்களை ஆராயப்புகின் சிவபிரானுக்கு இட்டுள்ள திருநாமங்களில் ஒன்றுகூடக் காணக்கிடையாது. இங்ஙனம்

இருப்ப, அப்பாசுரங்களில் பிரயோகமாகிய பதங்களுக்கு வடமொழி வேதங்களுக்குப் புறம்பாகப் பொருள் கூறுதல் இயைபுறுமெனத் தோற்றவில்லை. அன்றியும் தமிழிலுள்ள தேவார திருவாசகங்கள் திருவள்ளுவர் திருக்குறள் ஸ்ரீவைஷ்ணவ நூலாகிய நாலாயிரப் பிரபந்தம் இவை அனைத்தும் தமிழ் வேதங்களாகப் பாராட்டப்பட்டு வருகின்றன.

"மறையளித்த திருவாக்கால்" தமிழில் அடியெடுத்தளிக்கப் பெற்ற திருத்தொண்டத் தொகை, பொல்லாப்பிள்ளையார் திருவாய்மலர்ந்த நம்பியாண்டார் நம்பி அந்தாதி, 'உலகெலாம்' என அடியெடுத் தருளப்பெற்ற பெரியபுராணம், இவை சுயம்பாகத்தமிழில் உண்டாயவை; மொழி பெயர்க்கப்பட்டன வல்ல. இவைகளாவது வடமொழி வேதங்களை யெடுத்தாளாதிருக்கவில்லை. சிவாகமங்கள் தமிழிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டவை யெனக்கொள்வாமெனின், சமய தீக்ஷையில் பிரயோகமாகும் மந்திரங்கள் கூடத் தமிழில் இல்லை. வடமொழியிலே உள்ளன. இதனால் தமிழ் மொழி உயர் தனிச் செம்மொழி யென்பதை மறுக்கவில்லை. இந்நூலின் ஆராய்ச்சி அளவில், இந்நூல் திருநான்மறை யென்பதை வடமொழி வேதமென நிலையுறுத்துகின்றது. இந்நூலாசிரியர் சைவத் திருவாளர் சாம்பசிவம் பிள்ளையவர்கள் தக்கமேற்கோள்களை ஆராய்ந்து திருநான்மறை விளக்கத்திற்கண்ட ஒவ்வொரு விஷயத்துக்கும் தக்க விடை பகர்ந்துள்ளார். இவர்களது பெருமுயற்சி மிகவும் நன்கு மதிக்கற்பாலதாம்.

---

யாழ்ப்பாணத்து விக்டோரியாக் காலேஜ் பிரின்சிப்பலும், சைவப்பிரசாரகரும், ஞானதான வள்ளலும், பரம்பரையாக வருகின்ற வித்துவ சந்ததித் தோன்றலும், விழுமிய குணனெலாந் துறமிய மேன்மையாளரும், வடமொழி தென்மொழி சாத்திரங்களும் இவற்றின் ஆங்கில மொழி பெயர்ப்பு நூல்களும் ஒப்ப நோக்கி மொழிபெயர்ப்பின் மாறுபாடுகளை மிக நுணுகியறிந்து பிறர்க்குப் போதிக்கும் வன்மையுமுடைய மகா வித்துவ சூளாமணியாகிய ஸ்ரீமத் S. சிவபாத சுந்தரம் பிள்ளை B.A., யவர்கள் எழுதியது.

---

ஒவ்வொரு சமயத்தவருந் தத்தம் முதனூல்களிவை யென்பதைப் பற்றிய ஐயம் எக்காலத்தும் நிகழாமல் அவற்றை யறிந்து நிலையான வாய்மையெனக் கொண்டு வருவது சமயத்துக்கும் சமய நூலுக்கும் உள்ள ஒற்றுமையை இனிது விளக்கும். இன்று வரையும் வைணவர் தமது முதனூல், வேத பாஞ்சராத்திரங்களென்றும், பௌத்தர் பிடக நூலென்றும், கிறிஸ்தவர் பைபிளென்றும், முகமதியர் கொறுனென்றும், கனவிலும் ஐயுறாது கருதுகின்றனர். அநாதியானதும அநாதியான முதனூல்களை யுடையதும் எனக் கொள்ளப்படும் சைவ

சமயத்தின் பிரமாண நூல்களே சில ஆண்டுகளாகச் சில நவீன விவேகிகளுக்குச் சந்தேகத்துக்கும் திரிபுணர்ச்சிக்கும் இடமாயின. கோடானு கோடி யாண்டுகளாகச் சைவக் கல்விமான்களாலும் சிவபத்த சிரோமணிகளாலும் சிவஞானிகளாலும் முதனூலெனக் கொள்ளப்பட்ட வேதங்களையும் ஆகமங்களையும், மேனாட்டு நாகரிகத்தையும் வேண்டிய அளவு பருகாத இப்புத்தறிவினர் பசு நூல்களெனத் தள்ளுகின்றனர். மேலைத்தேசங்களிலே சுயாதீனமென்றொன்று தோன்றி வரம்பு கடந்து யாண்டும் பரவி ஆண் பெண்ணென்னுமிரு பாலாரது சிந்தையைத்திருக்கி எண்ணுதற் கரிய இழிவான செயல்களையும் மாபாதகங்களையும் செய்வித்து வருகின்றது. ஒரு குழந்தையானது பிறந்த பதினைந்தா நாள் அழுது தாய்க்குரிய சுயாதீனமாகிய மனவமைதியைக் கெடுத்ததனாலே இச் சுயாதீனமானது அதனுடைய கழுத்தை அவளைக் கொண்டறுப்பித்தது. இக் கொடிய பூதம் வேறெக் கொடுமையைத்தான் செய்யமாட்டாது! பிற வூர் நாகரிகம் வரமுன்னர் பார்ப்பாரும் மற்றையோரும் ஓர் உடலின் வெவ்வேறு பகுதிகள் போலவும, ஆரியமுந் தமிழும் உடன் பிறந்தார் போலவும், வாழ்ந்து வந்ததை யறியாதவர் யாவர்! நான்கு வருணத்தவரும் ஒருவருக்கொருவர் துணை செய்து தத்தந் தொழில்களை யாற்றி வருவதே தக்கதாதலால் அவர்கள் மக்கட் சாதியாகிய புருடனின் தலை கை உடல் காலாகிய பகுதிகளென வேதம் கூறிற்று. புது நாகரிகத்தின் பயனாக இவர்கள் ஒருவரை யொருவர் கெடுக்குந் தன்மையராய், அந்தணர் ஏனையோர்க் கிடர் செய்ய, அவர்கள் அந்தணரிற் கொண்ட அழலானது அவர்களோடு சிறிதுந் தொடர்பில்லாத தாகிய ஆரியத்தை அவர்களது மொழியென மயங்க வைத்து அதிற்றாவி அதிலுள்ள எமது பிரமாண நூல்களாகிய வேதாகமங்களிலும் பற்றியது. அன்றியும் தக்க குருவின்றித் தன்னைக் கற்போரை எக்காலமும் மயங்க வைத்துப் பலபுறச் சமயங்கள் தோன்றுதற்கிடனாய் நின்ற வேதங்களைப் பிற நாட்டுப் பிற சார்பிப் பிற சமயத்தவரது மொழி பெயர்புகளிலும் ஆகம விரோதமான பாடியங்களின் துணை கொண்டுங் கற்றதன் பயனாய், அவை இந்திரன் முதலிய சிறு தேவர்களைப் பற்றிக் கூறுகின்றன வென்றும், அவர் பாற் செய்யப்படுங் கொலை குடி முதலிய பயிலும் வேள்விகள் பல பல வென்றும் திரிபுணர்ச்சியுற்று, இவற்றாற் சைவ சமயத்திற்கு இழுக்குண்டாகுமெனக் கருதியும் வேதத்தை யிகழ்பவருண்டு. இவ்விகழ்ச்சிக் கொரு காரணமாகிய சைவாபிமானப் பெருங் குணத்தை நாமென்றும் பாராட்ட வேண்டுமாயினும் இது அதி பாதகமாகிய சிவ நூனிந்தையாகவும் சிவனடியார் நிந்தையாகவும் முடிதலால்

எம்மனம் புழுங்கி வருந்திப் புற்றில் வாழரவம் முதலியவற்றி லுங் கொடிதென இதற்கஞ்சி யொதுங்குவதே கடனென்றது.

2. "வேதமொடாகமம் மெய்யாமிறைவனுரை"லாதலாலும் "ஆகமமாகி நின்றண்ணிப்பான்றாள் வாழ்க" என்ற திருவாதவூரடிகளது திருவாக்கிருத்தலாலும் வேதத்தைக் கற்கத் தொடங்குமுன் ஆகமப் பொருளோடு வேதப்பொருள் முரணு தென்பதையும் ஆகமத்தைக்கொண்டே வேதப்பொருளைக் காணவேண்டுமென்பதையும் நாமுணர்தல் வேண்டும். ஆகமத்திலே பரமபதி சிவபெருமானெனப்படலாலும் கொலை புலால் கள் முதலிய விலக்கப்பட்டிருத்தலாலும், இவற்றுக்கு மாறுன கொள்கைகள் வேதத்திலே தோன்றுமென்ற திடநம்பிக்கை யெமக்கிருத்தல் வேண்டும். இவை யுளவாயின் சாயனர் மாக்ஸ் மூல்லர் முதலியோரது கருத்தே வேதப்பொருளென்ற துணிபு வரமாட்டாது.

3. வேதத்திலே காணப்படும் இந்திரன் வருணன் முதலிய பெயர்கள் பரமபதியைக் குறிப்பவை யன்றி அவாது பெயரைத் தாங்குந் தேவப் பிறப்பினரைக் கருதாவென்பதைக் காட்டுதற்கே "இந்திரன் மித்திரன் வருணன் அக்கினி திவ்வியன் சுபர்ணன் கருத்மான் முதலிய பல பெயர்களால் அறிவாளிகள் கடவுளைச் சொல்லுகிறார்கள். ஆயினுங் "கடவுள் ஒருவரே" என்னும் மந்திரமும் (இருக்குவேதம், க-கசச-சச), "ஒருவர்தாம் பலபேருளர் காண்மினே" என்னும் தேவாரமும் எழுந்தன. வேதத்திலே கடவுளைக் குறிக்கும் பெயர்களுள் நூற்றுக்கு மேற்பட்டவைகளை ஸ்ரீமத் தயானந்த சரசுவதி எடுத்து அவைகள் யௌகிகமாகப் பரமபதியையே குறிக்கலைத் தமது சத்தியார்த்தப் பிரகாசமென்னும் நூலிற் காட்டியருளினர். இந்திரன் என்னுஞ் சொல் பரமபதியையே குறிக்கலை "பரமபதியின் பெயர் இதந்த்ர (இதம் பச்யதி = இதைக் காண்கிறது.) ஆயினும் ஞானிகள் மெய்க்கருத்தைக் காட்டாத இந்திரனென்னும் பதத்தையே உபயோகிக்கிறார்கள்" என்னும் (இருக்குவேத) ஐதரேய பிராமணத்திற் காண்க. (க-ந.-கச.)

4. வேதத்தி லோரிடத்துங் கொலை விதிக்கப்பட்டில தென்பதே யதன் மெய்க்கருத்தை யறிந்தோரது கருத்தாம். வேதமொழிகளுக்குப் பெரும்பாலும் யௌகிகார்த்தமன்றி (இயற்கைப் பொருள்), ரூடார்த்தம் (ஆட்சிப் பொருள்) பொருந்தாது. வேத பாடியகாரர் பிற்காலத்ததாகிய காவிய சம்ஸ்கிருத முறைப்படி பொருள் கொண்டமையாலும் சிலர் அசுத்த வாமச்சார்புடைமையாலும் வேதங்களுக்குத் தகாத பொருளைக் கண்டனர். வேதங்கள் கொலையை விலக்குவனவன்றி

விதிப்பனவல்ல *. அன்றியும் வேதத்திலே கொலையை விதிப்ப தெனத் தோன்றுமெம் மந்திரத்தைக்காட்டினும் அது கொலையை விதிப்பதன்றெனப் பிராமணத்தோடு காட்டத்தக்க வேத வித்துவான்களிருக்கிறார்கள். † சர் கர்னல் கோல்புறாக் (Sir Col Colebrooke) என்னும் ஐரோப்பிய பண்டிதர்தாமும் அசுவமேதத்திலே ஒருயிருங் கொல்லப் படுவதில்லை யென்றெழுதி யிருக்கிறார். ‡ வேதத்தின் வழிநூல்களாகிய பிராமணங்களுட் சிலவற்றிற் கொலை விதிக்கப்பட்டதெனின் அவைகள் வேதமல்லாமையால் அக்குற்றம் வேதத்தை யடையாதாதலும் அவைகள் சிற்றறிவினராகிய மனிதராற் செய்யப்பட்டமையால் பிராமண நூல்களாகாமையாலும் அது சைவ சமயத்தைத் தாக்காதென வறிக.

5. வேதங்களில் விதிக்கப்பட்ட குடியெனப்படுவது சோமரச மென்பர். இவ்விபரீதமும் சாயனர் முதலியோரது ஞானக் குறைவினாலுண்டாயது. சோமஎன்பது மதியென்றும், சோமரசமாவது மதியினால்வரும் சிற்றறிவென்றும், அதை இந்திரனுக்கு நிவேதித்தலாவது இச்சிற்றறிவைக் கடவுள் பாற் செலுத்தலென்றும், இந்திரன் அதற்குப் பிரதியாகத்தரும் பசுவெனப்படுவது பேரறிவென்றும், சாயனர் சோமரசமானது ஒரு பூண்டின் சாரமெனப்பொருள் கொண்டது நிருத்தம் நிகண்டு வியாகரணம் முதலியவற்றிற்கு மாறானதென்றும், ஸ்ரீ அரவிந்தகோசர் "ஆரிய" என்னும் இங்லிஷ் பத்திரிகையி லநேக வருஷங்களுக்கு முன்னெழுதினர். இதுவே யுண்மையான பொருளென்பதற்கு அருணகிரிநாதருடைய இக்கருத்தமைந்த பாடல்கள் சான்றாகும்:—

---

* (இருக்கு வேதம் க-கசுஉ-கஉ; அ-க-க.)—"மாமிசத்தை விலக்கி மற்றைய பதார்த்தங்களைச் சுத்திசெய்து சமைத்துச் சாப்பிடுகிறவர்களுக்கு நல்ல சித்திகள் உண்டாகும்."

"உயிர்கள் ஒன்றையுங் கொல்லாத இல்வாழ்வானுக்கு மேம்பாட்டைக் கொடு"

(யசுர்வேதம் ௩சு-கஅ)— "கடவுளே எல்லாப் பிராணிகளிலும் நான் அன்பாயிருக்கவும், அவைகள் என்னில் அன்பாயிருக்கவும் அருள் செய்"

† இவ்வுண்மைகளை நன்குணர விரும்புவோர் பின்வரும் புத்தகங்களை வாசிப்பாராக:—Pandit Guru Datta's works Part I, Behari Lal Shastri's "Vedas and their Angas and Upangas" Vol. I, available at the Vedic Book Depot, Lahore Road, Lahore.

‡ Colebrooke's essays on the Vedas; also quoted on page 55 of the "Twelve Principal Upanishads" published by Rajaram Tukaram, Tatya.

"புத்தியை வாங்கிநின் பாதாம் புயத்திற் புகட்டி யன்பாய்
முத்தியை வாங்க வறிகின் றிலேன் முதுகூர் நடுங்கச்
சத்தியை வாங்கத் தரமோ குவடு தவிடு படக்
குத்திய காங்கேயனே வினை யேற்கென் குறித்தனையே"

"யா மோதிய கல்வியு மெம் மறிவுந்
தாமே பெற வேலவர் தந்ததனாற்
பூமேன் மயல் போயற மெய்ப்புணர்வீர்
நாமே னடவீர் நடவீரினியே."

6. பார்ப்பாரிற் கொண்ட வெறுப்பினாலும் வேதத்தின் மெய்ப்பொருளை உணராமையாலுண்டான அவமதிப்பினாலும், வேதங்கள் தமிழிலுள்ளன என்றகருத்துச் சிலருக்குண்டாயது. ஆயினும் அவ்வேதங்க ளிவை யென்பதைப்பற்றி யவர்களுக்குள் ஒற்றுமை யிருந்திலது. ஒருசாரார் முயற்கோடன்ன இல்பொருள்களை மறையெனக் கொள்ளின் அவற்றின் உட்பொருளைப்பற்றிய ஆட்சேபங்களினின்றும் விலகலாமெனக் கருதியோ பிறகாரணம் பற்றியோ தோற்ற நிலையிறுதியாகிய இவற்றுளொன்றுக்குஞ் சாட்சி யில்லாத நூல்களைத் திருநான்மறைகளென அறைந்தனர். இக்குழுவினர் ஒருவர் இயற்றிய திருநான்மறை விளக்கமென்னும் நூலில் தமிழ் முனிவர் நால்வர் தமிழில் நான்மறைகள் இயற்றினரெனவும் அவற்றை யழித்தது கடலெனவும் ஒரு கதையைக்கட்டினர். இக்கதையின் விசாரணையே சிவநேசச் செல்வராகிய ஸ்ரீமத் சாம்பசிவ பிள்ளையினது இவ்வரிய நூலின் நோக்கமாம்.

7. இவர், விளக்க நூலாசிரியரது கொள்கைகளை முன் பின் அறுபது கூறாக வகுத்து அவற்றை யட்டவணைசெய்து ஒவ்வொன்றாக வெடுத்துத் தக்க பிரமாணங்களைக் கொண்டு தர்க்கரீதியாகப் புடைத்துப் பரம்பரையான சைவக்கொள்கையே உண்மையான தென்பதைத் "தடக்கையினெல்லிக்கனி" யெனக்காட்டினர். விளக்க ஆசிரியரது போலி நியாயங்கள் நான்காக வகுக்கப்பட்டன. அவையாவன :—

"(க) நூல்களிலிருந்து பிரமாணமென வசனங்களை யெடுத்துக் காட்டி அவற்றினின்று பெறப்படாதவற்றை அநுமானமாகக் கூறுதல். (உ) இயைபின்றியும் முற்றொடர் பின்றியும் பொருள் கொள்ளல். (ந) ஆன்றோர் வாக்கை மாற்றுதல். (ச) தமது கருத்தையையே பிரமாணமாக் குதல்" என்பனவாம். இவரது கொள்கைக்கு யிராகியது தமிழ்முனிவர் நால்வர் தமிழில் நான்மறைகளைச் செய்தவரென்பது. இதற்குத் துணையாகக் காட்டப்பட்ட "காது

பொத்தரை" என்று தொடங்குந் தேவாரத்துக்கு இவர் கொண்ட பொருளின் ஏழு பொருத்தக்கேடுகள் உளவாகவும் அவற்றுளொன்றையேனும் நோக்கினாரல்லர். இத்தேவாரத்தின் மூன்றாமடியின் முதலில் வகர உடம்படுமெய்பெற்ற "ஏதம்" என்பது "வேதம்" எனநிற்க, இதுவேதத்தைக்குறிப்பதெனத்தீர்த்தனர். ஏதமென்பதிலுள்ள ஏகாரத்துக்குமோனையாக அவ்வடியில் வரும் "எய்திய" "இன்பம்" "இணையடி" என்பவற்றிலுள்ள எகர இகரங்களை மதித்தாரல்லர். மூன்று சீர்கள் பின்னே மோனையாக வரும்போது முதலில் வருஞ்சீரை மோனையாகாமற் பதச்சேதஞ் செய்யச் செய்யுள்வழக் கிடந்தராது. இரண்டாவது, கின்னரர் முதலியன மாதவர்க்குவமானமெனப்பட்டது. அவற்றுக்கும் உவமேயத்துக்கும் ஒருவகையொற்றுமையுமின்மையால் அது ஏற்கப்படமாட்டாது. மூன்றாவது, அவைகள் உவமையாயின் "சீயக்கோதில்" என வருமன்றிச் "சீயம் கோதில்" என வரமாட்டாது. நான்காவது, அங்ஙனமாகாமையின், அவை "கேட்ப" என்பதற்கெழுவாயாக, மாதவர் ஆறும் வேற்றுமைப் பெயராகும். இதனைச் "செய்து" என்பதற்கு மாதவர் எழுவாயாதல் பொருந்தாது. ஆதலால் "ஏதம்" எனப்பிரியாமல் "வேதம்" எனக் கொண்டாலும் "மாதவர் வேதஞ் செய்து" எனச் சேராது. ஐந்தாவது, வேதஞ் செய்தலால் வரத்தக்க சிறந்தவின்பமொன்றின்று. ஆறாவது, அதனாலின்ப மிருப்பினும் அதைச் சுந்தரமூர்த்தி நாயனார் கேட்பதற்கிடமில்லை. ஏழாவது, வேதஞ் செய்தலால் இன்பமுற்றமையைக் கேட்கினும் அது காரணமாக அவர் சிவபிரானது இணையடியையடைய வேண்டியதில்லை. விளக்க ஆசிரியரது போக்கிங்ஙனமாகவும், இந்நூலாசிரியர் தேவாரத்தின் பொருளை நன்கு விசாரிப்பதே நடுநிலைக்கும் உண்மையறிவுக்குஞ் சாதனமென நினைந்து தமது கொள்கையிற்றிருத்தியடையாமல் விளக்க நூலாசிரியரையும் புலவர் பதின்மரையும் உசாவினர். பழிக்கஞ்சும் இப்பெருந்தன்மை வியக்கப்படத்தக்கது.

மேற்காட்டிய 'காதுபொத்தரைக் கின்னரர்' என்ற தேவாரத்தில் தமிழ் மக்கள் நால்வர் தமிழில் நான்மறை செய்தனர் என்னும் கோளுக்கு எட்டுணை ஆதாரமுமில்லை யென்பது வெளிப்படை. தேவார திருவாசகங்களில் பெயர் குறிப்பிடாமல் நால்வர், நால்வரெனப் பலகாலும் அருளியிருந்தும், அந் நால்வர்களின் குறி, குலம் அடையாளமாதிய அருளியிருப்பதைக்கொண்டும், நக்கீர தேவர் திருவாக்கில் விளக்கமாயருளியிருப்பதைக் கொண்டும், தாயுமானப் பெருந்தகையார் அந் நால்வர்களின் பெயரை விரித்திருப்பதைக் கொண்டும், அந்

நால்வர்கள், கந்தபுராணச் சரித்திரப்படி சனகாதியரே யென்றும், அவர்கட்கு அருளியவர் தட்சிணாமூர்த்திக் கடவுளே யென்றும், ஆராய்ச்சி ஆசிரியர் சித்தாந்தப்படுத்தியிருப்பது சைவ சமயிகளெல்லோரும் நோக்கத்தக்கது. அப்பமூர்த்திகளது "ஆய்ந்தது வேதமாறங்கமன்று சுட்டது காமனைக் கண்ணாலே" என்னும் தேவாரப்பகுதியும் இப்பொருளைப் பசுமரத்தாணிபோல் வற்புறுத்துகின்றது.

இந்நூலியற்றற்கு வேண்டிய சிரத்தையும் ஊக்கமும் முயற்சியும் அகன்ற அறிவும் இத்துணையவெனச் சொல்லற்பாலனவல்ல. சிவநேசத்துக்கோர் வைப்பென விளங்கும் ஒருவரே யிதனை யிவ்வாறு செய்து முடிக்கத்தக்கவர். உலகம் இயற்கை முறையாக நடைபெறுங் காலத்தில் இவ்வகை நூல்கள் நோயில்லாக் காலத்துச் செய்யப்படும் மருந்துகள்போல மிகையாய் முடியும். திருநான்மறை விளக்க ஆசிரியரும் வேறு பலரும் சைவ சமயத்தவருள்ளத்தைக் கலக்கி மாயாதுக்கங்களுளொன்றாகிய வேதாகம நிந்தையில் வீழ்த்த முயலும்போது இஃது ஓர் பரம ஔஷதமாக வெமக்குக் கிடைத்தது. இதிலுள்ள "சைவத் தமிழ் மக்கட்கொரு விண்ணப்பம்" என்னும் நஅ-ம் விஷயம் நாமெல்லோரு மூன்றி நினைத்துத் தவறாது அநுசரிக்கவேண்டிய போதனைகளையுடையது, மேனாட்டு நாகரிகம் சைவத்தின் மூல வேரைத் தறித்து நிற்கும் முறையைக் காட்டி யெமது கண்களைத் திறப்பது. இவ்வரிய நூலைச் சைவப்பற்றுள்ளோர் யாவரும் பெற்றுத் தமது பெரும் பாக்கியமாகப் பாராட்டித் தம்மில்லங்கடோறும் வைத்துக்கொள்ளுவரென்பதற்கையமில்லை, இது நான்மறை விளக்க நோயைத் தீர்ப்பதோடு இனிமேற் சைவ புருடனை அணுகத்தக்க வேறு நோய்களு மணுகாமற் காக்கத்தக்கதாதலாற் சைவ நாடானது பிள்ளையவர்களுக்கென்றும் நன்றி பாராட்டி அவர்களை வாழ்த்தி நிற்கும். சிவபெருமான் அவர்களுக்குத் திருவருள் சுரந்து மெய்ஞ்ஞானத்தை யூட்டிப் பேரின்பத்தைக் கொடுத்தருளுவார்.

புலோலி, யாழ்ப்பாணம், பங்குனிமீ கஉ.

தஞ்சாவூர் டிஸ்டிரிகட்டு கோர்ட்டு வக்கீலும், தஞ்சைமாநகரம் முனிசிபாலிட்டி சேர்மனை விளங்கியவர்களும், தமிழ் ஆங்கில பாஷைகளின் ஆராய்ச்சியிற் றேர்ந்தவர்களும், 'தமிழ் வரலாறு' என்னுமோர் அரிய தமிழ்நூல் இயற்றியவர்களும், சித்தாந்த சைவத்தில் ஈடுபட்டவர்களுமாகிய

Row Bahadur K. S. சீனிவாசப்பிள்ளையவர்கள்

எழுதியது.

ஸ்ரீமான் சாம்பசிவம் பிள்ளையவர்கள் எழுதியிருக்கிற நான்மறை விளக்க ஆராய்ச்சி என்னும் நூலையும் அதைப்பற்றி யாழ்ப்பாணம் விக்டோரியா கல்லூரித் தலைவர் ஸ்ரீமான் சிவபாத சுந்தரம் பிள்ளையவர்களும், தச்சநல்லூர் பண்டித சிரோமணி ஸ்ரீமான் இலக்குமணப்போற்றி யவர்களும் எழுதியிருக்கிற அபிப்பிராயங்களையும் ஒருவாறு வாசித்துப் பார்த்தேன். அவ்விருவர்கள் அபிப்பிராயத்தோடு நான் பெரும்பாலும் ஒவ்வுகிறேன். ஸ்ரீமான் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் நல்ல குலத்தில் பிறந்தவராயிருந்தும் இந்த நான்மறை விளக்கம் எழுதியிருப்பது கலியுகக் கூத்துக்களில் ஒன்றென்று தோன்றுகிறது. அசஞ்சல சிவபக்தியில் சிறந்த குடும்பத்தில் தோன்றிய ஸ்ரீமான் சாம்பசிவம் பிள்ளையவர்கள் மேலே கண்ட ஆராய்ச்சி என்னும் நூலை எழுதியிருப்பது சைவர்கள் அனைவருக்கும் சந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியது. முதிர்ந்த இந்த வயதில் பெரும் முயற்சி எடுத்துக்கொண்டு அவர்கள் இந்த ஆராய்ச்சியை எழுதியிருக்கிறார்கள் என்பது இதை வாசிப்பதனாலேயே தெளிவாக விளங்கும். ஸ்ரீமான் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் ஆன்றோர்கள் வாக்கைத் திரித்துப் பொருள் கொண்டும் கொள்கைகளை மாற்றியும் எழுதியிருப்பவற்றையெல்லாம் பிசகென்று ஆராய்ச்சியால் பிள்ளையவர்கள் தெளிவாகக் காட்டியிருக்கிறார்கள். ஸ்ரீமான் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களோடு இன்னும் சிலரும் சேர்ந்து சைவத்தின் உண்மைகளைத் திரிக்க எத்தனித்திருப்பது உலகத்தில் சிலருக்கு ஐயத்தைக் கொடுக்கக்கூடும். ஸ்ரீமான் சாம்பசிவப் பிள்ளையவர்கள் ஆராய்ச்சி நூலை வாசிப்பதனாலே அவ்வையங்கள் நீங்குமென்பது திண்ணம். இவ்வாராய்ச்சி நூல் சைவர்கள் ஒவ்வொருவரிடத்திலும் இருக்கவேண்டியது அவசியம். இத்தகைய ஆராய்ச்சி செய்வார் கிடைப்பது இக்காலத்தில் மிகவும் அருமை. பிள்ளையவர்களுக்கு இத்தமிழுலகம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றது.

---

மதுரைத் தமிழ்ச்சங்கப் பரீக்ஷகரும், யாழ்ப்பாணச் செந்தமிழ்ச்சங்க அக்கிராசனாதிபதியும், சைவகலாவிருத்திச் சங்க அங்கத்தவரும், சைவசித்தாந்த சமாச நிரந்தர அக்கிராசனாதிபதியும், சைவ பரிபாலன சபைத் தாபகரும், இந்துசாதனப் பத்திரிகையைப் பத்திராதிபராயிருந்து சில வருடங்கள் சைவ சமய வளர்ச்சிக்கு ஏதுவாக மிகச்சிறப்புற நடாத்தினவரும், கிறிஸ்துமதகண்டன சபைத் தலைவரும், யாவராயினும் சைவ சமய தூடணஞ் செய்யில் அவரை, நூல்வரம்பிகவாது சலிப்பின்றி என்றும் கண்டனஞ் செய்பவரும், நல்லூர்க் கைலாச பிள்ளையார் கோயிற் றருமகர்த்தரும், சைவப் பிரசாரகரும் இந்துக் காலேஜ் உற்பத்திக்கு வித்தாயுள்ளவரும், தமிழ் சமஸ்கிருதம் இங்கிலீஷ் என்னும் முப்பாஷை விற்பனரும், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் தமையனார் புதல்வரும், அவர்கள் மாணாக்கரும், அவர்களுடைய பல சைவப் பிரகாச வித்தியா சாலைத் தருமபரிபாலகரும் ஆகிய,

## ஸ்ரீமத் கைலாச பிள்ளையவர்கள்

இவ்வுரை கண்டார்.

தம் வாழ்நாள் முழுதும் சைவதூஷண பரிகாரஞ் செய்தவிற்றானே போக்கிச் சிவபுண்ணியத்திற் றலைப்பட்டுப் பரோபகாரத்திற் சிறந்தவரும், உண்மைச் சைவவித்துவான்களாலும் சாதுக்கள் பிறராலும் மிகமதிப்புற்று விளங்குகின்றவரும் பன்னூற் பயிற்சியின் நுண்ணறிவுடையரும் ஆகிய ஸ்ரீமான் திரு. மா. சாம்பசிவபிள்ளையவர்கள் இற்றை நாளிற் றாமியற்றிய "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" என்னும் அரியதொரு நூலை வெளியிடுவதன்முன் மற்றைய சைவவித்துவான்களுடைய அபிப்பிராயங்களையும் அறிய விரும்பி அதிற்சில பிரதிகள் யாழ்ப்பாணத்திற்கும் அனுப்பியிருக்கின்றார்கள். எனக்குக் கிடைத்த பிரதியைமுழுதும் கிரமமாக வாசிக்க எனக்குச் சமயங்கிடைக்கவில்லை. வாசித்தபாகங்கள் ஒவ்வொன்றிலும் அவர்களால் எழுதப்பட்டவைகள், ஸ்ரீ. வேதாசலம்பிள்ளை கொள்கையை மறுத்து யான்எழுதிய "தற்காலச்சமயநிலை இரண்டாம்பாகம்" "தென்றமிழ்த்தனிமாட்சி" முதலிய பத்திரிகைகளை நினைவுகூரச் செய்தன. யான் ஒருவிடயத்திற்கு ஒருபிரமாணங் காட்டினால் "ஆராய்ச்சி" காரர் ஒன்பது பிரமாணங்காட்டியிருத்தல் எனக்கு மிகவும் சந்தோஷத்தை உண்டாக்கிற்று. அதுநிற்க.

ஸ்ரீ. வேதாசலம்பிள்ளை ஸ்ரீ. கா. சுப்பிரமணியபிள்ளை முதலிய சிலர் பிராமணர் மேற்கொண்ட பொறாமையினாலே ஏறக்குறையப் பதினைந்து வருஷகாலமாகப் புதுக்கொள்கைகளும்

புதுஅருத்தங்களும் புதுத்திருத்தங்களும் கற்பிக்கின்றார்கள். அவற்றுட்சில மாதிரிக்காக இங்கே யெடுத்துக்காட்டுகின்றேன்.

தொல்காப்பியருக்கு எங்களிலும்பார்க்க மிகச்சமீபகாலத்திருந்த இளம்பூரணர்முதலிய உரையாசிரியர்கள் சகலராலும் பிறவித்துவர்ன்களாலும் விலக்கப்படாத தொல்காப்பியச் சூத்திரங்கள் பல தங்கள் புதுக்கொள்கைகளுக்கு விரோதமாயிருத்தல் கண்டு, அவைகளெல்லாம் பிற்காலத்தாரால் அந்நூலில் இடையிடையே செருகப்பட்டன வென்று இவர்கள் சொல்லுகிறார்கள். இவர்களுடைய கண்களுக்குத் தங்கள் கொள்கைக்கு மாறானவைகளெல்லாம் இடைச்செருகலாகவே தோன்றுவது வழக்கம்.

இனி, திருக்குறளில் ருசுo-ம் பாட்டை "ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்" என்று உள்ளபடியே கொண்டு, பரிமேலழகர் மணக்குடவர் முதலிய உரையாசிரியர்களெல்லாம், ஆ என்பது பசு, அறுதொழிலோர் என்பது அந்தணர் என்றும் உரை எழுதியிருப்ப, இவர்கள், ஆம்பயன் ஆபயனென்றாயிற்று என்றும், அறுதொழிலோர் என்பது அறிதொழிலோர் என இருக்கவேண்டும் என்றும், இப்படியே இன்னும் பலவாகத் தங்கள் மனம்போனபடி திருத்தங்கள் செய்கிறார்கள். அதுநிற்க.

தமது பாண்டிநாடே ஆதிமனிதருக்கு உற்பத்தித்தானம் தமது நாட்டாரே ஆதி திராவிடர் என்று புகழுகிற சுப்பிரமணியபிள்ளை அந்தவகையினாலே ஆரியர்களும் தங்கள் வமிசத்தவராயிருக்க, ஆரியரென்ற பெயரைச் சொன்னாலும் வெருளுதற்கும் வெகுளுதற்கும் காரணம் என்னோ? யெகோவா சிருட்டித்த ஆதாம் ஏவாளுடைய வமிசத்தாரே ஆரியரென்று அந்த யேகோவாவினுடைய சிருட்டியை இவர் ஸ்திரப்படுத்துகிறார்கள் போலும்.

தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருமந்திரம், திருவிசைப்பா, பதினொராந் திருமுறை, பெரிய புராணம், கந்தபுராணம், சிவஞானசித்தியார், சிவதருமோத்தரம், ஔவையாருடைய நூல்கள் முதலிய அளவிறந்த சைவ நூல்களும், தொல்காப்பியர், கொடுஞ்செங்கண்ணனார், வண்ணக்கஞ்சாத்தனார் முதலிய சங்கப்புலவர்களும் சொல்லிய மறை வேதம் என்னுஞ் சொற்கள் ஆரியத்திலுள்ள வேதத்தையே குறிக்கின்றனவென்பது நிச்சயம்.

தென்னாட்டிலிருந்த சைவர், வைஷ்ணவர், சமணர், பௌத்தர், ஆகிய சகலரும் தமிழர்களாகவும், தமிழில் வேதம் இருந்தது, அது கடலாற் கொள்ளப்பட்டுப் போயிற்று, தமிழ் ஆரி

யத்தினும் சிறந்தது, தமிழ் ஆரியத்தினும் முந்தியது என்னுங் கொள்கை அவர்களுக்கெல்லாம் இல்லாமற்போக, இந்நாட் சைவத்தமிழருள்ளே சிலருக்கு மாத்திரம் உண்டாயது பேராச்சரியமே.

வைணவர்கள் ஸ்மார்த்தர்கள் மாத்துவர்கள் தங்கள் சமயங்களைத் தாபிக்க எடுத்தாளும் பிரமாணங்கள் ஆரியத்தினுள்ள வேதம் உபநிடதம் புராணம் இதிகாச முதலியனவே. இன்றைக்கும் அவர்கள் பாராயணம் பண்ணுவது ஆரியத்தினுள்ள இராமாயணத்துச் சுந்தரகாண்டமே. கம்பர் தமது தமிழிராமாயணத்திற் பல விடங்களிலும் இராமருடைய பெயராக எடுத்துச் சொல்லும் "ஆரியன்" என்னுஞ் சொல்லை அவர்கள் அறிவுடையோன் என்னும் பொருளிலன்றி மிலேச்சன் என்னும் பொருளில் எடுக்கவில்லை.

"மறையோர் செஞ்சொல் வேள்விப் புகையும்" என்றார் திருமங்கையாழ்வார்.

"இன்னிய முழங்கி யார்ப்ப வீண்டெரி திகழ வேதந்—
துன்னினர் பலாசிற் செய்த துடுப்பினெய் சொரிந்து வேட்ப—
மின்னியல் கலச நன்னீர் சொரிந்தனன் வீர னேற்றான்" என்றார் சமண நூலாகிய சீவகசிந்தாமணி நூலுடையார். சைனருக்கு முக்கிய மந்திரமாகிய அஸ்தி நாஸ்தி என்பவைகளும் ஆரியச்சொற்களே யாகும்.

"கற்பங் கைசந் தங்கா லெண்கண்—டெற்றெ னிருத்தஞ் செவிசிக் கைமூக்குற்ற வியாகர ணமுகம் பெற்றுச்—சார்பிற் றோன்று வாரண வேதக்—காதியந்தமில்லை யதுவே நெறியெனும்—வேதிய னுரையின் விதியுங் கேட்டு"

என்றார் பௌத்தநூலாகிய மணிமேகலையென்னும் காவியமுடையார்.

இப்படியே அவர்கள் நூல்களிலே பலப்பல வாக்கியங்கள் எடுத்துக் காட்டலாம். இங்கே சொல்லிய மறை வேதம் என்னுஞ் சொற்கள் தமிழ் வேதத்தை உணர்த்துமென்று இவர்கள் சொல்ல முடியுமா!

ஸ்ரீ வேதாசலம் பிள்ளை கொண்ட வேதமாகிய சிவஞானபோதத்தில் "வேள்விப்புகை" "எரி" "பலாசிற் செய்த துடுப்பு" "நெய்" "கற்பம்" முதலியவைகளைக் கை முதலிய அங்கமாகக் கொண்ட "ஆரண வேதம்" என்பன எங்கேயாவது சொல்லப்படவில்லையே.

ஸ்ரீ. கா. சுப்பிரமணிய பிள்ளை வேதாசலம் பிள்ளைக்கு மாறுபட்டுச் சிவஞானபோத முதலியவற்றைத் தமிழ் வேதம்

என்று கொள்ளாது, அது இவற்றிற்கு வேறுயுள்ளது; ஆழி வாயின் அகப்பட்டுவிட்டது என்கின்றார்.

எனவே, இவ்விருவரும் கூறும் வேதங்கட்கும் வேருய்க் கற்ப முதலிய அங்கங்களைக் கை முதலிய அவயவங்களாகக் கொண்டு ஆழிவாய்ப் பட்டழியாமல் இன்று நின்று நிலவும் ஆரிய வேதமே மேலே எடுத்துக் காட்டிய திருவாய்மொழி சீவகசிந்தாமணி மணிமேகலை என்னும் நூல்களிற் கூறப்பட்ட தென்பது பார்ப்பார்க்கும் கேட்பார்க்கும் சொல்வார்க்கும் பட்டப்பகல்போல வெட்டவெளியாகும்.

வேள்விகள் ஆரியர்க்கே உரியன; ஏனையோர்களுக்கு அல்ல என்று சொல்லும் இவர்கள், பல ஆயிரம் வருஷங் களுக்கு முன்னே, வைஷ்ணவர் சமணர் பௌத்தர் என்னும் சமயத்தோர் ஏனையோர்க்கும் உரியன என்று கூறியிருக்குங் கூற்றுக்களுக்கு யாது சொல்வர்?

இனி, வைஷ்ணவர் முதலியோர் காரியம் இவ்வாறிருக்க சைவத் தமிழருள்ளே யாழ்ப்பாணத்தார் ஒருவர், "நீரிறையே யுண்க" "நெருப்பிறையே யுண்க" என்பன முதலிய தமிழ் மந்திரங்கள் இப்பொழுது உண்டாக்குகின்றாரென அறிகிறேன். இம் மந்திரங்களைத்தான் முன்னிருந்த ஆரியர்கள் "வருணுய சுவாகா" "அக்நயேசுவாகா" என்பனவாக மொழிபெயர்த்துக் கொண்டார்கள் என்றும், இதுபோலவே ஆதிதொடங்கித் தமிழிலிருந்த மறையை ஆரியத்தில் மொழிபெயர்த்துக் கொண் டார்கள் என்றும் மற்றை வருஷம் இப்புதுக் கட்சியார் சொல் லப் போகிறார்கள். எச்சரிக்கை. இவர்களுடைய கொள்கை களைப் போறிவாளர் பொருட் படுத்தார்கள் என்பது நிச்சயம்.

மகா வித்துவானும் சுத்தாத்துவித சைவ சித்தாந்தியும் சைவ தூஷண நிராகரண திலகருமாகிய ஸ்ரீமத் திரு. மா. சாம்ப சிவ பிள்ளையவர்கள், ஸ்ரீ வேதாசலம் பிள்ளை ஸ்ரீ கா. சுப்பிர மணிய பிள்ளை முதலானவர்களுடைய கொள்கைகளைப் பழைய உண்மை நூல்களையே வழியாகக் கொண்டு கண்டித்தியற்றிய "திருநான்மறைவிளக்க ஆராய்ச்சி" என்னும் இந்தச் சிறந்த நூலானது சைவத் தமிழ் மக்களெல்லாரும் பழைய நூற் கொள்கையிலே மிக்க விசுவாசத்தைத் தரவல்லதாகலால் அவர் கடந் தலைமேற்கொள்ளத் தக்கதொரு ஞானபரண நூலாகும்.

இத்தகைய பெருமை வாய்ந்ததொரு அரிய நூலை இயற் றித் தமிழ் மக்கள் உண்மை அறிந்து உய்யச் செய்த ஞான தான வள்ளலாகிய ஆக்கியோருக்குச் சைவர் செய்யுங் கை மாறு கண்டிலன். எனது குல தெய்வமாகிய கைலாச பிள்ளை

யார், அவர்கட்கு நீண்ட ஆயுளைக் கொடுத்து இதுபோலும் பல நன்னூல்களை இயற்றுவித்துச் சைவசமயிகட்கு நன்மை செய்யும்படி அநுதினம் அவர் மலரடியை எனது சிரமலராகச் சூடித் தியானிக்கின்றேன்.

---

சிதம்பரந்தாலூகா பூவிழுந்தநல்லூர் மிராசுதாரவர்களும் திருச்சிராப்பள்ளி ஜில்லா டிஸ்திரிகட்டு ரிஜிஸ்டராரவர்களுமாகிய பரம்பரைச் சைவகார்காத்தவேளாள குலதிலகரவர்களும் திருச்

ஸ்ரீமான். ஆ. சுப்பிரமணியபிள்ளை யவர்கள் B. A. எழுதியது.

திருவாளர் திரு. மா. சாம்பசிவம்பிள்ளை யவர்கள் அனுப்பிய திருநான்மறை விளக்க ஆராய்ச்சிப் புத்தகத்தைப் படித்தேன். அவர்கள் அரசாங்கவேலையிலிருந்து உபகாரச் சம்பளம் பெற்று 28 வருடங்கட்கு மேலாகியும், தேக சௌக்கியத்தைப் பொருட்படுத்தாது தமிழ்த்தாயின் உண்மைத்தொண்டில் ஈடுபட்டு இப்பெரிய ஆராய்ச்சியை எழுதி முடித்திருப்பது மிகவும் வியக்கத்தக்கதே. தமிழ்வேதமாகிய தேவார திருவாசகங்களிலும் சிவஞான போதம் முதலிய தமிழ்ஞான சாத்திரங்களிலும் அவர்களுக்குள்ள ஒப்பற்ற தேர்ச்சியானது, இவ்வாராய்ச்சியால் நனகு வெளிவந்திருக்கின்றது. இவ்வாராய்ச்சியிற் கண்ட ஒவ்வொரு விஷயமும் தக்க நூற்பிரமாணங்களாலே தாபிக்கப் பட்டிருக்கின்றதென்பது மறுக்கத்தக்கதல்ல. தமிழில் அதிகப் பயிற்சியில்லாதவர்களும் எளிதிற் படித்து உணருமாறு, இப்புததகம் மிகவும் தெளிவான நடையிலெழுதப்பட்டிருக்கின்றதும் பாராட்டத்தக்கதே. இவ்வாராய்ச்சியால் தமிழ் மக்களும், முக்கியமாய் சைவர்களும், பிள்ளை யவர்களுக்கு மிகவும் கடமைப் பட்டிருக்கிறார்களென்பது சொல்லாமலே விளங்கும். அவர்களுக்கு தீர்க்காயுளையும் இதுபோன்ற ஆராய்ச்சிகளைச் செய்துதவும பொருட்டு இன்றியமையாத் தேகபலத்தையும் கொடுக்குமாறு எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

---

திருநெல்வேலி ஜில்லா, சேரன்மாதேவி தாலூகா போர்டு பிரஸிடெண்டு அவர்களும், திருநெல்வேலி ஜில்லா டிஸ்திரிகட்டு போர்டு மெம்பரவாகளும், ஜில்லா Educational Board மெம்பர் அவர்களும், சிவதேவஸ்தான கமிட்டிமெம்பர் அவர்களும், டிஸ்டிரிகட் கோர்டுவக்கில் அவர்களும் "சிவஞானபோத உபந்நியாச" மாதிய நூல்களின் ஆசிரியரவர்களும், பல சைவ

சபைகளில் தலைமைபூண்டும், சொற்பொழிவு நிகழ்த்தியும் வருபவர்களுமான அம்பா சமுத்திரம்

ஸ்ரீமத் V. P. காந்திமதிநாத பிள்ளையவர்கள் B.A., எழுதியது.

இவ்வாராய்ச்சிக்கு இலக்காய் நிற்கும் "திருநான்மறை விளக்கம்," செந்தமிழ்ச் செல்வி 1-வது சிலம்பின் பல இதழ்களில் வெளிவந்துள்ளது. இவ்வியாசத்திற் சில புதிய கொள்கைகள் காணப்படுகின்றன. வடமொழி மறைகள் சைவ மறைகள் அல்லவென்றும், வடமொழி ஆகமங்கள் சைவ முதல் நூல்கள் அல்லவென்றும், இம்மறைகட்கும் ஆகமங்கட்கும் வேறாய்த் தமிழ் மறைகளும், தமிழ் ஆகமங்களும் பண்டைக் காலத்தில் இருந்தனவென்றும், இத்தமிழ்மறைகளும் தமிழ் ஆகமங்களும் இருந்தன வென்பதைத் தேவார திருவாசக முதலிய சைவத்திருமுறைகளும், புறநானூறு, தொல் காப்பியம் முதலிய பண்டைத் தமிழ்நூல்களும் விளக்குகின்றன வென்றும், இவைபோல்வன பிறவும், இத்திருநான்மறை விளக்கத்தில் எழுதப்பட்டிருக்கின்றன. இவ்வடமொழி மறைகட்கும் வடமொழி ஆகமங்கட்கும் வேறாய்த் தமிழ்மறைகளும் தமிழ் ஆகமங்களும் இருந்தன வென்பதில், எவர்க்கும் எவ்வித வருத்தமுமில்லை. இதனால் இவ்வடமொழி மறைகட்கேனும் வடமொழி ஆகமங்கட்கேனும் எவ்வித இழுக்கும் ஏற்படக் காரணமில்லை. அப்படியே சைவர் அனைவராலும் போற்றப்பட்டு வரும் சைவத் திருமுறைகட்கு வேறாய்த் தமிழ் மறைகள் இருந்தன வென்பதிலும் எவர்க்கும் எவ்வித வருத்தமு மில்லை. பண்டைக்காலத்திலும் தமிழ் மறைகள் இருந்தன வென்பது தமிழ் மக்கட்குப் பெருஞ்சிறப்பே. ஆனால் "மறை," "வேதம்" என்னும் சொற்கள் இப்போதுள்ள வடமொழி மறையையாவது தமிழ் மறையையாவது குறிக்காது, பண்டைக் காலத்தில் இருந்து மறைந்து போனதாகச் சொல்லப்படும் தமிழ் மறையையே குறிக்குமென்றும், பண்டைத் தமிழ்நூல்களிலும் நம் சைவத்திருமுறைகளிலும் வழங்கப்படும் இச் சொற்களும் இப் பண்டைத் தமிழ் மறையையே குறிக்குமென்றும், இந் நான்மறைவிளக்க வியாசத்திற் கண்டிருப்பதே, சைவமக்கட்கும் தமிழ் மக்கட்கும் மிக வருத்தத்தை உண்டாக்கியது. இவ்வியாசத்தில் சைவத்திருமுறைகள் மறைகள் அல்ல வென்று கழிக்கப்படவில்லையாயினும், இத்திருமுறைகளிற் காணப்படும் "மறை," "வேதம்" என்னும் சொற்கள் பண்டைத் தமிழ்மறையையே குறிக்குமென்பதால், இப்போதுள்ள வடமொழிமறைகள் மாத்திரமன்றி நம் சைவத் தமிழ்த் திருமுறை

களுமே, மறைகளாகா என்பது, இவ்வியாசத்தின் கருத்தாய் முடிகிறது. இக்கருத்தைப் பற்றிய ஆராய்ச்சி சைவ மக்கட்கும் தமிழ் மக்கட்கும் அவசியம் வேண்டற்பாலது. இவ்வாராய்ச்சியையே இந்நூல் முக்கியமாய் மேற்கொண்டுள்ளது.

2. இத்தகைய ஆராய்ச்சி நூல் வெளிவருவதை விரும்பி நின்றவர்களில் நானும் ஒருவன். இவ்வாராய்ச்சியை நானே செய்ய நினைத்ததுமுண்டு. ஆனால் இவ்வாராய்ச்சிக்கு வேண்டிய பண்டை நூற் பயிற்சியும் காலவசதியும் எனக்கில்லையென்று மலைந்தேன். என்றாலும் இயன்றவரை இவ்வாராய்ச்சியிற் றலையிடலானேன். இவ்வாராய்ச்சிக்கு எடுத்துக்கொண்ட வியாசத்தில் பல திருமறைப் பாசுரங்களும், பண்டைநூற் பாடல்களும் ஆராய்ச்சி செய்யப்பட்டிருந்தாலும், இப்பாசுரங்களேனும் பாடல்களேனும் முழுமையும் ஆராய்ச்சி செய்யப்படவில்லை. இவ்விவற்றிற்கு முன் பின்னுள்ள பாசுரங்கள் பாடல்களும் ஆராய்ச்சி செய்யப்படவில்லை. இவ்விவற்றின் ஓரோர்பகுதி மாத்திரம் ஆராய்ச்சி செய்யப்பட்டுள்ளது. இத்தகைய ஆராய்ச்சி சரியான முடிவுகளைத் தருமா? என்று சந்தேகிக்கலானேன். இதுவுமன்றி இப்பாசுரப் பகுதிகளும் பாடற் பகுதிகளுமே இவ்வியாசத்திற் கட்டிய முடிபுகளை ஆதரியாமலிருப்பதோடு, அம்முடிபுகட்கு மாறாகவுமிருப்பன போல் எனக்குத் தோன்றியது. என்றாலும், வியாச ஆசிரியர் சிறந்த கல்வியாளரென்பதைப் பாராட்டி, அவ்வியாச முடிபுகளைப்பற்றிய என் கருத்துகளைப் பல ஐயப்பாடுகளாகத் திரட்டினேன். அவற்றின் பெரும் பகுதி, எனது நண்பர் ஒருவர்மூலம், செந்தமிழ்ச் செல்வியில் வெளியாகும்படி வியாச ஆசிரியருக்கு அனுப்பப்பட்டது. இதுவரை இவ்வையப்பாடுகளும் வெளிவரவில்லை. அவற்றிற்கு விடைகளும் வெளிவரவில்லை. இவ்வையப்பாடுகளே இவ்வாராய்ச்சி நூலில் 209-வது பக்கத்தில் குறிக்கப்பட்டிருப்பன. இதனிடையில், இவ்வாராய்ச்சியின் 29-வது பக்கத்தில் சொல்லியபடி "காது பொத்தரை" என்று தொடங்கிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரப் பாசுரத்திற்கு வியாச ஆசிரியர் கொண்ட பொருளைப்பற்றிய என் அபிப்பிராயத்தை இவ்வாராய்ச்சி ஆசிரியர் திருவாளர் மா. சாம்பசிவம் பிள்ளையவர்கள் கேட்டார்கள். இது காரணமாயும், பின்னர் இவ்வாசிரியரை நேரிற்கண்டு உரையாடியதன் மூலமாயும், இவர்கள் இந்நான்மறை விளக்க வியாசத்தை ஆராய்ச்சி செய்து வருகிறார்களென்று தெரிந்தேன். தெரிந்ததும் என்பாலுண்டான மகிழ்ச்சிக்கு அளவில்லை. இவர்பாலுள்ள சைவப்பற்றையும் தமிழ்ப்பற்றையும் நான் எவர்பாலும் கண்டதில்லை, இவர்பாலுள்ள ஊக்கத்தை நான் எத்துணை இளையோ

ரிடத்தும் கண்டதில்லை. இவர்பாலுள்ள சைவக்கல்வியும் தமிழ்க் கல்வியும் எவரையும் கவரத்தக்கது. இவரே, இவ்வாராய்ச்சிக்கு தகுதியுடையாரென்றும், இவராலேயே வியாச முடிவுகளைப் பற்றிய எவ்வித ஐயப்பாடுகளும் தீரலாகு மென்றும், துணிந்தேன். இவரது ஆராய்ச்சி நூல்விரைவில் வெளிவருமென்றும் துணியலானேன்.

3. நான் துணிந்தபடி "திருநான்மறைவிளக்க ஆராய்ச்சி" என்னும் இந்நூல் விரைவில் வெளிவரலாயிற்று. நான் திட்டியெழுதிய ஐயப்பாடுகள் யாவுமே என்னை விட்டு நீங்கின. வியாசத்தில் எடுத்தெழுதப்பட்ட திருமுறைப் பாசுரங்களிற் பல, தப்புப் பாடங்களென்று இவ்வாராய்ச்சியில் நிறுவப்பட்டிருக்கின்றன. சில பாசுரங்கட்கு வியாசத்திற் கூறப்பட்டுள்ள பொருள்கள் தப்பென்றும் முன்னொடு பின் முரண் என்றும் காட்டப்பட்டிருக்கின்றன. சில பாசுரங்கட்கு வியாசத்திற் கூறிய பொருள்கள் அப் பாசுர ஆசிரியர்கள் கருத்துக்கு மாறென்று, அவ்வாசிரியர்கள் அருளிய வேறு பாசுரங்கள் மூலம் விளக்கப்பட்டு மிருக்கின்றன. இவையன்றி இவ்வியாசத்திற் கண்ட பண்டை நூற் பாடல்களைப் பற்றிய ஆராய்ச்சியிலும், இத்தகைய பிழைகள் மலிந்துள்ளன வென்றும் காட்டப் பட்டிருக்கின்றன. தமிழ் மறைகளும் தமிழ் ஆகமங்களும் பண்டைக் காலத்திலிருந்து மறைந்தனவென்பதை, நம் சைவத் திருமுறைகளும் பண்டைத் தமிழ் நூல்களும் சிறிதும் ஆதரிக்கவில்லை யென்று, பசுமரத்தாணிபோல் இவ் வாராய்ச்சியில் தாபிக்கப்பட்டு மிருக்கின்றது. இச்சைவத் திருமுறைகளும் பண்டை நூற் பாடல்களும் "வேதம்," "மறை" என்று கூறுவதெல்லாம் வடமொழி வேதங்களையே என்று நன்கு உணர்த்தப்பட்டு மிருக்கின்றது. இதுவுமன்றி நமது சைவத்திற்குத் தமிழ்மொழி வடமொழி என்னும் இருமொழிகளும், மக்கட்கு இரு கண்கள் போல் நிலவி நமக்கு வேண்டிய ஞானங்கள் அனைத்தையும் உதவுகின்றன என்றும், இவ்வாராய்ச்சியில் வெள்ளிடை மலைபோல் விளக்கப்பட்டு மிருக்கின்றன.

4. இவ்வாராய்ச்சிநூல் நல்ல சமயத்தில் வெளிவந்ததென்று சொல்லலாம். இக்காலத்தில் அரசியல் முறையில், சமுதாயச் சச்சரவுகள் வளர்ந்து கொண்டிருக்கின்றன. இச்சச்சரவுக்கும் நமது சைவசமயத்திற்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. இச்சச்சரவை நம் சமயத்திற்குள் நுழைத்தற்கு எவ்வித காரணமுமில்லை. வடமொழி எந்தச் சமுதாயத்தார்க்கும் சொந்த மொழியன்று எந்தச் சமுதாயத்தாருடைய பேச்சுப் பழக்கத்திலும் எந்தக் காலத்திலும் இருந்திருப்பதில்லை. நமது இந்திய

நாட்டிலுள்ள எல்லாச் சமுதாயங்கட்கும் இது பொதுமொழி
யென்பதை இவ்விரு மொழிகளிலுமுள்ள இலக்கண இலக்கிய
நூல்கள் வலியுறுத்தி உணர்த்துகின்றன. பண்டைக் காலந்
தொட்டு இந்நாள்வரை இவ்வடமொழி எல்லாச் சமுதாயத்
தார்களின் ஆட்சியிலு மிருந்து வருகின்றது. நமது சைவ
நிலையங்களாகிய ஆலயங்களிலும் ஆதீனங்களிலும் இற்றை
நாள்வரை ஆட்சி செலுத்திவருகின்றது. நமது தமிழ்மக்களின்
அனுட்டானம், பூஜை, சமயச் சடங்குகள் முதலிய அனைத்
திலும் கையாடப்பட்டு வருகின்றது. இதனை ஒதுக்குவதெப்
படி? நமது ஆலய ஆதீன பூஜை உபதேசம் முதலியவை
களைத் தமிழ்ப் பூஜை முதலியனவாக மாற்றலாமா? அன்றி
அந்நிலையங்களை அறவே விட்டு வேறுநிலையங்களை உண்டாக்க
லாமா? நமது அனுட்டானம் பூஜை முதலியவைகளை ஒழித்
துவிடலாமா? அன்றி, புதியதமிழ் அனுட்டான முதலியவை
களை உண்டாக்கலாமா? இத்தனை சங்கடங்கட்கும் காரணம்
வடமொழி நம் மொழியன்று, வேறு சமுதாயத்தார்மொழி,
என்பதன்றோ? இக்கொள்கைக்கு ஆதரவு என்னை என்
பதை வியாச ஆசிரியரும் விளக்கினாரில்லை. சரித்திர ஆராய்ச்
சியாற் போதரும் என்றல் மாத்திரம் போதுமா? ஹர்ஷகவி
என்னும் வடமொழியாசிரியரும், சேனாவரையர் முதலிய தமிழ்
இலக்கண ஆசிரியரும், வடமொழியைப் பொதுமொழி யென்
றல் சரித்திர ஆராய்ச்சியில் இடந்தராதா? ஆகவே வட
மொழி வேறு சமுதாயத்தார் மொழியென்ற பொருந்தாக்
கொள்கையைச் சைவநன் மக்களும் தமிழ் நன்மக்களும் அறவே
ஒழித்துவிட வேண்டுமன்றோ? இக்கருத்து என்று நம்
நாட்டில் நிலைபெறுமோ, அன்றே நம்மொழியும் சமயமும்
நாடும் முன்னேற்ற மடையும். நாமும் முன்னேற்றமடைவோம்.
இக்கருத்தே இவ்வாராய்ச்சி நூலின் முக்கிய நோக்கமாய்க்
காணப்படுகின்றது.

5. இது நிற்க, நம் சைவத் திருமுறைகளையும் தமிழ்
மறைகளல்லவென்று சைவ மக்களாவது தமிழ் மக்களாவது
கழிப்பாரென்று நான் கனவிலும் நினைத்ததில்லை. இத்திரு
முறைகளே, நம் திருக்கோவில் களில் நிகழும் எவ்வித வழிபாடு
களிலும் ஓதப்பட்டு வருகின்றன. இவைகளே நம் சைவ
சாத்திரங்கட்கு முதல் நூல்களாய் அவற்றின் உயர்தாக் கருத்
துக்கள் அனைத்தையும் நிரம்பப் பெற்றுள்ளன. இவைகள்
மறைகளல்லவென்றால் நம்திருக்கோவில் களில் ஓதுவதற்குரிய
மறைகள் யாவை? இன்றேல் நம்திருக் கோவில்கள் யாவும்
வடமொழியாளர் கோவில் களாகமாறி விடுமன்றோ? இது
வன்றி நம்சைவ சாத்திரங்கட்கு முதல் நூல்களாய்க் கொள்ளக்

கிடக்கும் தமிழ்மறைகள் தாம்யாவை? இன்றேல் நம்சைவ சாத்திரங்கள் முதனூலாதரவற்ற னவாய் முடியுமன்றோ? எனவே, நம்தமிழ் மொழிக்குப் பண்டைமறை வேண்டுமென்று தேடுதல், இப்போதுள்ள தமிழ் மறையையும் இழந்து விடுவதாக வன்றோ முடிகின்றது. இது வன்றி இச்சைவத் திருமுறையாசிரியர்களாகிய நம் சமய குரவர்களும், தத்தம் காலவர்த்தமானங்களை அனுசரித்து, ஓரோர் இடங்களில் வடமொழி மறைகளையும் உண்மை மறைகளாய்க் கூறுகிறார் என்றல், இச்சைவகுரவர்கட்கு மாத்திரமன்றி நம் சைவ சமயத்திற்குமே இழுக்காய் முடியுமன்றோ? இத்தகைய இழுக்குகள் நம் சமயத்திற்கும் சமய நிலையங்கட்கும் நேராவண்ணம் பாதுகாப்பது சைவமக்கள் தமிழ் மக்களின் கடமையன்றோ? இக்கடமையைத் தீர்த்தற் பொருட்டே இவ்வாராய்ச்சி ஆசிரியர், தமது முதுமை முதலிய பல இடையூறுகளையும் பாராட்டாது, மிகுந்த முயற்சிகள்செய்து இந்நூலை வெளியிட்டுள்ளார்.

6. இத்துணைச் சிறப்புவாய்ந்த இந்நூல் வடமொழியாளர் தமிழ்மொழியாளர் ஆகிய இருமொழியாளரும் படிக்கத் தக்கது. சைவத் திருமுறைகளாகிய தமிழ்மறைகளில், பல இடங்களிலும் புகழ்ந்து போற்றப்படுவன வடமொழி மறைகளேயெனத் தமிழ்மொழியாளர் தெரிந்துகொள்வர். வடமொழிமறைகளில் மறைந்துகிடக்கும் உயர்தரக் கருத்துக்களனைத்தையும் வெளியிட்டுவிளக்குவன தமிழ்மறைகளேயென வடமொழியாளரும் தெரிந்துகொள்வர். இரு மொழிகட்கும் கண்ணுதலார் முதற்குரவர் என்று திராவிடபாடியகர்த்தர் திருவாய் மலர்ந்தருளிய உண்மையை இந்நூல் நன்குவிளக்குகின்றது. இனி நம்நாட்டில் வடமொழி உயரியது தமிழ்மொழி உயரியதுஎன்னும் மொழிச்சச்சரவுக்கு இடமில்லையென்பதை இந்நூல் தெள்ளிதின் உணர்த்துகின்றது. இந்நூலைச் சைவமக்களும் தமிழ்மக்களும் படித்து இதனாற்றாப்படும் பலன்களைப பெற்று, உய்யும்படி அவர்களை வேண்டுகிறேன். இந்நூல் இயற்றிய ஆசிரியரும், மேலும் சிலகாலம் இவ்வுலகிலிருந்து இதுபோலொத்த பேருபகாரங்களைச் செய்யும்படித் திருவருளையும் பிரார்த்திக்கின்றேன்.

---

திருநெல்வேலி ஜில்லா இந்து காலேஜ் தமிழ்ப் போதகாசாரியபவர்களும், தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின் கௌரவ உபந்யாசகரவர்களும், சுருதிசூக்திமாலையின் தமிழ் மொழிபெயர்ப்பு, சிவதத்துவவிவேகம், குமரகுருபர சுவாமிகள்

பிரபந்த மிவற்றிற்கு அரும்பொருள்விளக்க உரை ஆசிரிய
வர்களும் வடமொழிச் சுருதி சூக்திமாலையை உரையுடன்
பரிசோதித்தவர்களுமான

ஸ்ரீமத். வி. சிதம்பரராமலிங்கம்பிள்ளை அவர்கள்
எழுதியது.

இவ்வாராய்ச்சிநூல் வெளிவருதற்குக் காரணமாயிருந்தது திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆதரவில் பிரசுரமாகும் செந்தமிழ்ச் செல்வி யென்னும் பத்திரிகையின் முதற் சிலம்பில் எழுதப்பட்டிருக்கும் திருநான்மறை விளக்கமென்னும் வியாசமாகும். அவ்வியாசம், பரம்பரையாசரணை ஆசாரியர்களது அருளுப்பாடு என்னுமிரண்டனுள் ஒன்றனையேனும் அடிப்படையாகக் கொண்டதாகவுமில்லை: உண்மையுணர்தலென்னும் நோக்கத்துடன் கௌரவமாக எழுதப்பட்டதாகவுமில்லை: தற்காலங் காணப்படும் சமுதாய சச்சரவை முன்னிட்டு, அதற்கோர் அரணாகுமெனக் கொண்டு சமயசாத்திரப் பிறழ்ச்சிசெய்துவிடல் வேண்டுமென்ற கருத்துப்பற்றி எழுந்ததாகக் காணப்படுகின்றது.

இஃதிங்ஙனமாகவும் 'புதியன கண்ட போழ்துவிடுவரோ புதுமை பார்ப்பார்' என்பதற்கிணங்கப் புதுமை பார்க்கும் சிலர் அவ்வியாசத்திற் காணப்படும் விஷயங்கள் பலவும் வாய்மையெனக் கொள்வாராயினர்.

அவ்வியாசத்திலே பிரமாணங்களெல்லாம் உள்ளவாறு எழுதப்படாமல் திரித்துக் காட்டப்பட்டிருக்கின்றன: வேதவாராய்ச்சி சைவ பரம்பரை முறையிற் செய்யப்படாமல் புறச்சமயிகளையும் ஹூண பண்டிதர்களையும் பின்பற்றிச் செய்யப்பட்டிருக்கிறது. வேதபாஷையாகிய ஆரியபாஷா ஞானமின்றி வேதத்தைக்குறித்துப் பலபல அவ்வியாசத்திற் கூறப்பட்டிருப்பது 'கல்லாத மேற்கொண்டொழுகல்' என்னும் பொய்யாமொழியை மெய்ப்படுத்துகின்றது.

இதுகாறும் சைவசாத்திர வரிசையிலே நுழைதற்கு இடம் பெறாது பஞ்சம நிலையிலே நிற்கும் சித்தர் நூல் அவ்வியாசத்தில் அக்கிரஸ்தானம் பெற்றுவிட்டது.

சாதாரண சைவப் பொதுசமூகம் இவற்றையெல்லாம் உணர்ந்து மெய்ம்மை தெரிவதென்பது தமிழ்ப் புலமையும் வடமொழிப் புலமையும் பெரிதும் குன்றிச் சமயஞானம் அருகிவரும் இக்கால நிலைக்கு இயலாததாகின்றது. இவ்வாறு பரிதாபப்படவேண்டிய நிலையிலிருக்கும் சைவப் பொதுசமுதாயத்தார்மீது எழுந்த தமது அவ்வியாஜமான பெருங் கருணையி

ஞாலே திருச்சிராப்பள்ளி ஸ்ரீமாந்: மா. சாம்பசிவம் பிள்ளையவர்கள் அவ்வியாசத்திற் காணப்படும் பொருந்தாக் கருத்துக்களையும் முடிபுகளையும் நன்கு எடுத்துக்காட்டி உண்மையை உணர்த்தியிருக்கின்றார்கள். அவர்கள் தங்கள் உடம்புநிலையையும் விருத்தாப்பிய தசையையும் சிறிதும் பொருட்படுத்தாது செய்த இப்பேருதவி வேறு யாராலும் செய்தல் இயலாது. 'இதனை இதனால் இவன் முடிக்குமென்றாய்ந், ததனை யவன்கண் விடல்' என்றவாறு திருவருளே அந்நிய சாத்தியமாகாத இவ்வருஞ் செயலை இவர்களிடம் செலுத்தி உடனின்று உபகரித்ததென்பது எனது துணிபு.

இவ்வாராய்ச்சிநூல் மனத்திருளை நீக்குதலின் ஞானபாநு; மெய்ம்மை விளக்கி மகிழ்வித்தலின் ஞானவாரமுதம்; அறிவனைத்தும் ஈதலின் இருபெரு நிதியம்.

இந்நூலிலே மந்திர ராஜமாகிய பிரணவம் வடமொழியே யென்பது வடமொழி இலக்கண விதிப்படிச் சிவார்க்கமணிதீபிகையிற் கூறப்பட்டவாறு நன்கு விளக்கப்பட்டிருப்பது மிகவும் பாராட்டத்தக்க விஷயமாகும். மகேந்திரமலை கைலாயமே யென்று அவர்கள் துணிந்திருப்பது, அருச்சுனனுக்கு வேட்டுருவத்திற் சிவபெருமான் அருள்புரிந்த செய்தி கூறுவதாகிய 'வண்டார் குழலுமை நங்கை முன்னே மகேந்திரச் சாரல் வராகத்தின்பின், கண்டார் கவல வில்லாடி வேடர் கடிநாயுடன் கைவளைந்தா யென்னும்' என்னும் திருவிசைப்பா அருள் வாக்கினால் வலியுறுத்தப்படுகின்றது. சிவாரூட சித்தரைப்பற்றிப் பிரஸ்தாபித்த விஷயம் முற்றிலும் உண்மையே; அச்சித்தரை நானும் நேரிலறிவேன்; அச்சித்தர் விளக்க வியாசத்தாரோடொப்பச் சமுதாய சச்சரவிலீடுபட்டவரென்பதனை அவரியற்றிய மக்கட் சட்டமே புலப்படுத்தும்.

வேதத்திற்குப் பொருள் நிருக்த முதலிய ஆறங்கங்கள் புராண இதிகாசங்கள் பரம்பரை வழக்கு என்னும் இவற்றைப் பற்றிக் காணுதல் வேண்டும். அவ்வாறன்றித் தற்காலம் உரையெனக் காணப்படும் சாயனருரை, மஹீதரருரை, ராவணருரை, ஹரிஸ்வாமியுரை முதலியனவெல்லாம் வேதப்பொருளை உள்ளவாறு விளக்குவன வன்மையின் மேனாட்டுப் பண்டிதர்கள் கூறும் வரலாற்று முறைகளும் பொருள்களும் போலியாக ஒதுக்கப்படும். ஸ்ரீமாந்: பிள்ளையவர்கள் தமது ஆராய்ச்சிநூலின் 56-வது பக்கத்திற் செய்திருக்கும் ஆராய்ச்சியே அதற்குச் சான்றாகும்.

ஸ்ரீஞானசம்பந்தப் பெருமான் 'வேதம்' சிருட்டிகாலந் தொடங்கிப் பிரளயகாலம்வரை நிலை நிற்பதென 'மறை முத

ஞான்று மூன்றுகாலமுந் தோன்ற நின்றனை' யென்றருளியும், ஸ்ரீ வாகீசப் பெருந்தகை வடமொழி வேதசாகையின் பெயரை யெடுத்தோதிச் 'சந்தோக சாமமோதும் வாயானை' என்றருளியும், ஸ்ரீ சுந்தரமூர்த்திகள் 'நாளும், ஞாலந்தான் பரவப் படுகின்ற நான்மறையங்கமோதிய நாவன்' என்று தன்னைக் கூறியருளியும், ஸ்ரீ அருணந்திசிவம் வேதம் வடமொழியே யென்றும் அவ்வேதம் அறம்பொருள் இன்பம் வீடென்னும் நான்கனையும் அருளுவதென்றும் 'ஆரியமாயறம் பொருளோடின்ப வீடெல்லாமறைந்து' என வெளிப்படக்கூறி யருளியுமிருப்ப இச்சுருதிகளுக்கு மாறாகவும் இப்பொழுதுள்ள தமிழ் வேதங்களாகிய திருமுறைகளைத் தமிழ் வேதங்களல்லவென நாத்திகம் பேசியும் அத் திருநான்மறை விளக்க வியாசம் செல்லுமானால் அதனை அறிவுடையார் கொள்ளாரென்பது யாம் கூறாமலே அமையும். அவ்வியாசத்தினர் கதி ஸ்ரீ வாகீசப் பெருந்தகை காலத்தரசனாகிய குணபரபல்லவனியற்றிய மத்தவிலாசப் பிரகசனத்தில் வரும் பௌத்தபிக்ஷுவின் கதியேயாகும்.

அவ்வியாசத்தினர் தமது அபார முயற்சியாலும் தமிழபிமானத்தினாலும் தமிழுக்குச் செய்த ஒரு பேருபகாரத்தை நாம் மறத்தல் முடியாது. அவ்வுபகாரந்தான் யாதெனின் :— பொய்ப் பொருளுக்கு உதாரணமாக முயற்கோடு ஆகாயத் தாமரை யாமை மயிர்க்கம்பலம் என்று கூறப்படுவதோடு தமிழ் நான்மறை என்பதும் உதாரணமாகக் காட்டுமாறு செய்ததேயாகும்.

ஸ்ரீமாந் : பிள்ளையவர்கள் சித்தாந்த சைவர்களின் பரம்பரையாசரணையை மேற்கொண்டு நடுவுநிலை திறம்பாது சைவ சமய பிரமாண நூல்கள் வடமொழி வேதங்களே யென்னும் உண்மையை மிகுந்த கௌரவத்துடன் எவ்வித மயக்கமும் வாசிப்போருக்கு உண்டாகா வண்ணம் உபகரித்த பேருதவி சைவ வுலகத்தால் மிகவும் பாராட்டத்தக்கது.

சைவத்திற் பதிந்த மெய்யன்புடையா ரனைவரும் அந் நூலைச் சாவதான சித்தத்துடன் படித்து மெய்யுணர்ந்து சிவ பெருமான் திருவருட்கிலக்காமாறு வேண்டுகின்றேம்.

---

ஸ்ரீ மாணிக்க வாசகர் அல்லது "நீத்தார்பெருமை", "திருப்புக்கொளியூர் அவிநாசிக் கருணாம்பிகையம்மை பிள்ளைத் தமிழ்" ஆதிய நூல்களின் ஆசிரியரும், சைவ அவைக்களகங் களிலும் மற்றும் பொதுவிடங்களிலும், உண்மைச்சைவ நெறி

யினையும், சிவத்தொண்டர் பெருமையினையும் சொற்பொழிவு
செய்யும் சைவப்பெரியாரும் சென்னை சர்வகலாசங்கத்தின்
அங்கத்தினரும் ஆகிய கோயமுத்தூர்

ஸ்ரீமத் C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் B.A. F.M.U.,
எழுதியது:—

சைவத் திருவாளர். திரு. மா. சாம்பசிவம்பிள்ளையவர்கள் எழுதிய "திருநான்மறைவிளக்க ஆராய்ச்சி" என்னும் கட்டுரை யைப்பார்த்தேன். சைவத் திருமுறைகளிலும் மற்றும் ஆன் ழேர் வாக்குகளிலும் "நான்மறை" என்றதொடர் பலகாலும் பயின்றுவருதல் காணப்பெறுகின்றது. அச்சொற்றொடர்க்குப் பொருளாவது வடமொழியில் இப்போது வேதம் என வழங் கப்படுவனதாம் என்பது தொன்றுதொட்டுப் பயின்று வருவ தாகும். அதனை அன்றெனக் காட்டப் புகுந்து தமிழில் நான மறைகள் இருந்தன; அவை பின்னர் அழிவுற்றன என்றகொ ருகொள்கையை நிறுவச் சைவத்திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் "செந்தமிழ்ச் செல்வி"யில் "திருநான்மறை விளக்க"மெனப் பெயரிட்டு ஒருகட்டுரை யெழுதினார்கள். இக் கட்டுரையி னெழுந்தவாதங்களைப் பல ஆதாரங்கள்காட்டி மறுத்துப் பழயகொள்கையை வலியுறுத்த எழுந்தது திருவா ளர் சாம்பசிவம்பிள்ளையவர்களது இவ்வாராய்ச்சியாகும்.

திருவாளர் சுப்பிரமணியபிள்ளையவர்கள் கட்டிய முடிபு கள் பலர்க்கும் உடன்பாடாவன அல்லனவாய் நின்றன. திரு மூலர் முதற்சிவஞான முனிவர்வரைப் பல பெரியாரும் தமிழ் நான்மறை யென யாண்டும் சுட்டக்காண் கின்றிலம். அதுவே யன்றி, "இன்றமிழ்மறைதந்தார்"; "வேதந் தமிழால் விரித்தார்" என்றற்றொடக்கத்த திருமுறைத் திருவாக்குகள் தமிழ்நான் மறைக்கு மாறுபடுவனவாய்க் காணப்படுகின்றன. ஆகலின் அது இன்னும் ஆராய்ச்சிக்கு இடனாய் நிற்கின்றது.

திருவாளர் கா. சுப்பிரமணியபிள்ளையவர்களுக்குத் தமி ழின்கணுள்ள ஆர்வம் மிகவியக்கத்தக்கது. பண்டைக் கொள் கைகளிலும் திருமுறையாதி திருவாக்குகளிலும் திரு. மா. சாம் பசிவம்பிள்ளையவர்கள் கொண்டுள்ளபற்றும் ஆர்வமும் அத காரணமாக வேறொருபற்றுமின்றி மிகத்தளர்ந்த மூப்பிலேயும் மேற்கொள்ளும் முயற்சியும் அதனிலும்மிக்க அதிசயம் விளைத் துநின்றன.

தொன்றுதொட்டு அடிப்பட்ட சான்றோரான் வழங்கப்
கொள்கையினை உறுதிப்படுத்தத் திரு. மா. சாம்ப

சிவம்பிள்ளையவர்கள் எழுதிய இவ்வாராய்ச்சிபெரிதும் பயன் தரும் என்பதில் ஐயமில்லை.

சேக்கிழார் நிலயம், கோவை,
அட்சய, சித்திரைத் திங்கள் 24-வது நாள்.

---

யாழ்ப்பாணத்து வட்டுக் கோட்டைக் கண்ணைலிங்கேசா சுவாமி கோயிலாதீன கர்த்தரும், பௌராணிகரும், சைவப் பிர சாரகரும், கந்தசட்டி புராணம் சிவராத்திரி புராணம் முதலிய வற்றின் ஆக்கியோரும், ஆகிய

பிரமஸ்ரீ சிவசுப்பிரமணிய சிவாசாரியரவர்கள்
அபிப்பிராயம் இது:—

சைவ நூலாராய்ச்சியிற் பெரிதும் வல்லுநரும், இங்கிலிஷ் கற்றுச் சப் மாஜிஸ்திரேட் உத்தியோகத் தமர்ந்தும் ஆன்மப் பெரும்பேறாகிய சிவ பூசையைச் சிறிதும் விதிதவறாது இன்றும் நடத்துகின்றவரும், சைவ சமயாபிமானிகளுள் தற்காலம் முதல் வைத் தெண்ணப்படுபவரும் ஆகிய ஸ்ரீமாந்: திரு. மா. சாம்பசிவம் பிள்ளையவர்கள், ஸ்ரீ கா. சுப்பிரமணிய பிள்ளை "அட்வக்கேட்" பெருங்கேட்டிற் கேதுவாக வெளிப்படுத்திய "திருநான்மறை விளக்கத்" தைப் பன்முறை ஆராய்ந்து அவ்வளவும் புரட்டும் கற்பனைகளுமா யிருத்தலையன்றிச் சைவ சாத்திரமுரணாயிருத்தலையும் செவ்விதிற் றேர்ந்து, தேர்ந்தனை யினமையாது "நாம் பெற்ற வின்பம் பெறுக இவ்வையகம்" என்ற வண்ணம் அவற்றையெல்லாம் பிறரும் அறிந்து மயக்க மொழிதற் பொருட்டு மூவகைப் பிரமாணங்களான் மறுத்து அதற்குத் "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" எனப் பெயர் தந்து அச்சிட்டு அதில் ஒரு பிரதி அனுப்பி எமது அபிப்பி ராயத்தை தெரிவிக்கும்படி கேட்டிருக்கின்றார்கள்.

எமது அபிப்பிராயத்தை மிக விரித்துச் சொல்லுதற்கு மனங் கருதுகின்றது. அதற்கு மிக முதிர்ந்த வயோதிகம் இடந் தாராமையால் "சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்" என் னும் யுத்திப்படி கூறுவான் றொடங்குகின்றாம்.

நாம் இத் "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" என்னும் அரிய பெரிய நூலைப்பார்க்கத் தொடங்கிப் பார்வையிட்டு வரும் போது வயோதிகம்பற்றி மனம் சீக்கிரம் இளைத்துவிடும். உடனே பார்த்தலை நிறுத்திவிடுவேன். இவ்வாறு பார்வையிட்டு முடிக்க இரண்டு வாரங்கள் சென்றுவிட்டன. "விளக்கத்" திலுள்ள புரட்டுகளையும், சைவ சாத்திர முரண்களையும், கற்

பனைக் கொள்கைகளையும் "ஆராய்ச்சி" ஆசிரியர் மிக நுணுகிக் கண்டுபிடித்து அவற்றை மறுத்திருக்குந்தேற்றம் அறிஞரால் மிக வியந்து கொண்டாடத்தக்கது. இனி விரிக்கச் சந்தி யிடந்தரவில்லை. ஆதலால் சுருக்கமாய் விளக்கி முடிக்கப் போகின்றோம்.

நாம் இத் "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" என்னும் விசிட்ட நூலை ஆராய்ந்து அதிற் சொல்லப்பட்டன வெல்லாம் சத்தியம் சத்தியம் முக்காலும் சத்தியம் என்று தெளிந்து அந் நூல் உயிர்க்குறுதி பயக்கும் நன்னூலெனக் கைக்கொண்டேம். அதில் வரைந்து உதாகரித்து மறுத்துச் சொல்வன யாவும் கற்றோர்க்கும் மற்றோர்க்கும் இன்றியமையாத அறிவுப்பெருஞ் செல்வமாகிய அரும் பொருள்களென நன்றாக வற்புறுத்து கின்றோம்.

இந்த அரிய பெரிய நூலை இயற்றி உலகோபகாரமாக்கிய திரிசிரபுரம், ஸ்ரீமத் சாம்பசிவம் பிள்ளையவர்கள் தற்காலத்துச் செய்யும் அருஞ் செய்கைகளையும், இனிமேல் உலகம் திருந்து தற் கேற்ற வழி வகைகளையும், மேலும் மேலும் அபிவிருத்தி செய்தருளும் வண்ணம் எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளாகிய பரமசிவனைத் திரிவித கரணங்களாலுஞ் சேவித்து, அப் பிள்ளை யவர்கள் அரோக திடகாத்திரராய்ப் பூரணாயுசுடன் வாழ்க வென ஆசீர்வதிக்கின்றோம்.

---

"கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன்—நற்றா
டொழாஅ ரெனின்" என்றவண்ணம் வாலறிவன் நற்றாளன்றி
மாலறிவார் சிற்றெழாதவரும், சிவனடியவரைச் சிவனெனக்
கண்டு வழிபாடு செய்பவரும், பொதுநன்மை கருதியுஞ் சிறப்பு
நன்மை கருதியும் இலங்கை இந்தியா என்னுந் தேயங்களில்
நடைபெறும் பல பத்திரிகைகளுக்கு விஷயதானஞ் செய்யும்
ஞானவள்ளலும், வண்ணை வைத்தீசுரர் ஒருதுறைக் கோவை
யாசிரியரும், சைவதூஷண கண்டனத்தாளாளரும், சுக்காத்த
விதசைவ சித்தாந்தியும், அருங்கலை விநோதரும், "கற்றவங் கற்
றாணை" வரும், "உடுக்கையிழந்தவன் கைபோலவாங்கே—யிடுக்
கண்களைவதாநட்பு" என்றவண்ணம் நட்பினரிடுக்கண் விரைந்து
களைபவரும், திருமுறைப்பாராயணரும், பொதுநலப் பிரியரும்,
கவிராசருமாகிய மகாவித்துவரத்தினம் யாழ்ப்பாணத்து
வண்ணை நகர்

ஸ்ரீமத். வைத்தியலிங்க பிள்ளையவர்கள்

அபிப்பிராயம் இது :—

"நிலையிற் பிரியேல்" என்னுந் தலைமைச் சூத்திரப்படி தமக்குரிய எவ்வகை நிலையிலும் எந்நாளும் மாறுபாடில்லா மகா மகிமை பொருந்திய கொள்கையினரும், "ஓதுவதொழியேல்" என்னும் போதமார் சூத்திரப்படி சித்தாந்த சாத்திரம் பதினான்கையும் திருமுறை பன்னிரண்டையும் மிகவிசேடமாக ஓதுதலையே பொழுதுபோக்கும் விளையாட்டாகவுடையவரும், "நயம்படவுரை" என்னுஞ்சூத்திரப்படி தாம்பேசுஞ் சொற்களில் தமக்கும் பிறர்க்கும் நன்மையுண்டாகப் பேசுபவரும், "அறஞ்செயவிரும்பு" என்னுஞ் சிறந்தசூத்திரப்படி பசு புண்ணிய சிவ புண்ணியங்களைப் பகுத்துணர்ந்து அவற்றுள் விசேட புண்ணியங்களையே விசேடமாகச் செய்பவரும், "ஊக்கமது கைவிடேல்" என்னும் போக்கறு சூத்திரப்படி தம்முயிர்க்கும் பிறவுயிர்க்கும் உறுதிபயப்பதிதுவே யெனக்கருதித்தாம் மேற்கொண்ட "ஆராய்ச்சித்" தொழிலில் மனஞ்சோராமையைக் கைவிடாதவரும், "எண்ணெழுத்திகழேல்" என்னுங் கண்மணியனைய சூத்திரப்படி தருக்க விலக்கண மிரண்டையும் தமதிரு கண்களாகப்போற்றி யொழுகுபவரும், "இயல் பலாதன செயேல்" என்னும் மயலிலாத சூத்திரப்படி தரும நூலுக்குப் பொருத்தமில்லாதவைகளைச் சந்ததமுஞ் செய்யாதவரும், "காப்பதுவிரதம்" என்னும் மாப் பெருஞ் சூத்திரப்படி உயிர்களுக்குத் தீங்குசெய்யாமல் அவைகளைக்காப்பாற்றுவதே விரதமாகவுடையவரும், * "கிழமைப்படவாழ்" என்னும் பழமைச் சூத்திரப்படி தம்மிடத்திலுள்ள பொருள் பிறருக்கும் உரிமைப்படும்படி வாழ்பவரும் "நூல்பலகல்" என்னும் மால்பல வகற்றும் மாண்பார் சூத்திரப்படி அறிவை வளர்க்கின்ற நூல்கள் பலவற்றையுங் கற்றுக்கொள்பவரும், "சிவத்தைப் பேணிற் றவத்திற் கழகு" என்னும் அவத்தைப்பாற்று மருஞ் சூத்திரப்படி சிவத்தைப் பேணிச் சிவபூசை செய்பவருமாகிய திருச்சிராப்பள்ளி வித்துவ சிகாமணியாகிய சாம்பசிவம் பிள்ளையவர்கள் தாமியற்றித் "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" என மகுடநாமம் புனைந்து அச்சிடுவித்த பிரதி யொன்று எம்முடைய உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்தித் தரும்படி எமது பார்வைக்கனுப்பியிருக்கின்றார்கள்.

நாம் அவ் "வாராய்ச்சி" நூலைப் படித்துப் பார்த்தபோது, ஸ்ரீ. கா. சுப்பிரமணிய பிள்ளை எம். ஏ. எம். எல். அட்வக்கேட், அவர்கள் "திருநான்மறை விளக்கம்" என ஒரு விஷயம்

* இப்புண்ணியர் தாம் இயற்றி அச்சிட்டு வெளிப்படுத்திய பலப்பல "ஆராய்ச்சி" நூல்களாலும் இவர்கள் தம் பொருள் பலர்க்கும் பயன்படும்படி வாழ்பவர் என்பது அறியலாம்.

வரைந்து, சென்னையிலிருந்து வெளிவருகின்ற "செந்தமிழ்ச் செல்வி" என்னும் மாதாந்த சங்கியைப் பத்திரிகையில் முதலாவது சிலம்பின் இருபதாம் பக்க முதல் இருநூற்றைம்பத்தேழாம் பக்கம் வரையினும் பிரசுரித்திருக்கின்றார் என்று அறியலானேம். அதன் கருத்தாவது, தமிழ் நாட்டில் தமிழ் முனிவராயுள்ளார் நால்வருக்குச் சிவபிரான் கல்லால விருக்ஷத்தினடியிலே அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருடார்த்தம் நான்கனையு முணர்த்த அத்தமிழ்ப் பெரியார் திருக்குறள்போன்ற "நான்மறை" என்னும் பெயருடன் நூல்கள் தமிழிற் செய்திருந்தார்கள் என்பதும், அந்நூல்களுடன் "ஆறங்க"மும் தமிழிலேயே இயற்றியிருந்தன என்பதும், அந்நூல்களனைத்தும் முதற்சங்கத்திறுதியில் அச்சங்கத்தின் ஏனைத்தமிழ்நூல்களுடன் கடல்கோட்பட்டு இறந்துபோயின என்பதும், நமதுசமயாசாரியர் திருவுள்ளக் கருத்தும் அதுவே என்பதும், பிறவுமாம்.

அத் "திருநான்மறை விளக்கத்"தைக் கண்ணுற்று ஸ்ரீமத். சாம்பசிவபிள்ளையவர்கள் அதனை முற்றும் நிராகரித்து, வேத சிவாகமங்கள் சிவபிரான்வாக்கே என்றும், அவைகளே ஆதியில் உண்டான முதநூல்களென்றும், அந்நூல்களினின்றே உலகத்திற் காணப்படும் எல்லாவகை நூல்களும், பல ஆசாரக்கொள்கைளும், ஆன்மாக்களின் கன்மத்துக்கும் காலதேய வர்த்தமானங்களுக்கும் இணங்கத்தோன்றின என்றும், தோத்திர வடிவமாகிய தமிழ் மறைகள் வேத சிவாகமங்களின் சாரமாயுள்ளனவென்றும், ஆரியருக்கும் தமிழருக்குந் தந்தையார் சிவபெருமானே என்றும், அதுபோல அவரே இருமொழிக்குங் குரவர் என்றும், நான்கு வேதம் ஆறங்கம் இருபத்தெட்டாகமம் தமிழில் இருந்தனவென்பது கற்பனையே என்றும், தமிழில் நான்மறையிருந்தனவென்று தேவார முதலியவற்றிற் கூறியிருப்பதாகச் சொல்லுதல் "முயலுக்குக் கொம்பு மூன்று முழம்" என்பது போல வெற்றுரையே என்றும், தொல்காப்பியர் சங்கப்புலவர்கள் சைவ சமயாசாரியர்கள் ஆதியாகச் சந்தானசாரியர் ஈருகவும், ஆதி நமச்சிவாய தேசிகர் முதல் சிவஞானசுவாமிகள் ஈருகவுமுள்ள மகான்களும் இவர்க்குப் பிற்றோன்றல்களாகிய பெரியாரும் தமிழாராய்ச்சியிற் புகுந்திருந்த புறமதக் கல்விச் செல்வரும் இதுகாறும் தமிழில் நான்மறை யாதியாய மூவகை நூல்கள் இருந்தனவென்று கூறவில்லை என்றும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருநாவுக்கரசு நாயனார் சுந்தரமூர்த்தி நாயனார் மாணிக்கவாசக சுவாமிகள் திருமாளிகைத் தேவர் கருவூர்த் தேவர் நக்கீரர் தாயுமான சுவாமி முதலிய மகான்களின் திருவாக்கு

களையும் பிற முக்கிய நூல்களையும் மேற்கோளாக எடுத்துக் காட்டி அட்வக்கேட்டுக் கொள்கையைப் பூர்வபக்கமாக்கித் தமது கொள்கையைச் சித்தாந்தஞ் செய்து என்றுமழியா வியல்பினிதீஇ அவ் "விளக்க வாராய்ச்சியை" அறுபது விஷயங்களாக வகுத்தும் காட்டியிருக்கும் சிறப்பு எமது உள்ளத்தை இடையீடின்றிக் குளிர்வித்து மகிழ்விக்கின்றது.

இருமொழிக்கும் முதற் குரவர் சிவபெருமானே என்று நமது சமய சாத்திரங்களெல்லாம் முழங்கா நிற்பவும், ஸ்ரீ. கா. சுப்பிரமணிய பிள்ளை, அட்வக்கேட்டு அவர்கள் உழக்குக் குள்ளே கிழக்கு மேற்குப் பார்ப்பவர்போல, ஆரியந் தாழ்ந்தது தமிழ் உயர்ந்தது என விகற்பம் கற்பித்து விஷயம் எழுதியது மரபன்று. அது நிற்க,

கல்லால விருக்ஷத்தின்கீழ், கடவுளருள்பெற்ற தமிழ் முனிவர்கள் இயற்றிய தமிழ்வேத வேதாங்கங்களும், மகேந் திரம் என்பது கைலாசமலை என்பதறியாது தமிழ் நாட்டு மகேந்திரமலை யெனப் புதிதொன்று வகுத்து அதிலிருந்து சிவ பிரான் இருபத்தெட்டுத் தமிழ் ஆகமங்களையும் கூறியருளினார் என்று கற்பனை செய்த ஆகமங்களும், கடல் வாய்ப்பட்டும் படாதும் மறைந்து பல்லூழி காலமாகியும் இதுகாறும் அவற்றைப் பழமைபோலத் தமிழுலகத்திற்குத் தோற்று வித்துக் கொடாமல் வாளாவிருத்தல் அக்கிருபா மூர்த்தி ஆன் மாக்கண்மீது முகிழ்த்த பெருங்கருணைக் கிழுக்காமென்று புற மதத்தரும் கூறும்படி இழுக்காக எழுதிவிட்டார். அந்தோ! இவர் ஒரு வகுப்பார்மீது கொண்ட கோபாவேசம் தமக்கு வரும் ஏதத்தை யுணராதவண்ணஞ் செய்துவிட்டது. அது நிற்க,

சங்கங்களிருந்த காலங்களில் அவற்றில் சைவர் மாத்திரந் தானிருந்தாரா? வேறு சமயிகளும் இருந்தார்களா? கடைச் சங்க நூலாலும் அச்சங்க மருவிய நூல்களாலும் கடைச் சங்கத்துப் பலவேறு சமயத்தவரும் இருந்தாரென்று தெரி கின்றது. அது அநுமானப் பிரமாணமாய் முதற் சங்கம் இடைச்சங்கங்களிலும் பலவேறு சமயிகள் இருந்தார் என்று நன்கறிவிக்கின்றது. அவர்கள் யாவரும் கைக்கொண்டொழுகி யது தமிழ் வேத வேதாங்க ஆகமங்களையா? புறச்சமயத்தவர் தங்கள் சமயங்களை நிறுவ எடுத்தாண்ட பிரமாணங்கள், ஆரிய வேதப் பிரமாணங்களே! பாஞ்சராத்திரிகள் மாத்துவர் முதலி யோர் இன்றும் ஆரிய வேதப் பிரமாணங்களையே எடுத்தாளுதல் கண்கூடன்றோ? தமிழ்மறைகள் இருந்தன வென்பதற்கு அகச்சாட்சியின்று. யாதாயினுமொரு புறச்சாட்சியுமில்லை

னுங் காட்டுவாரா? எமது சமயகுரவர் முதலாக எண்ணிறந்த மகான்கள் யாவரும் சிவபெருமானே வேத வேதாங்கங்களையும் ஆகமங்களையும் சொல்லியருளினரென்று வெள்ளிடை விலங்கலை யொப்பப் பல பகுதிகளிலும் கூறியிருப்ப, அந்தப்பிரமாணங்களெல்லாவற்றையும் புறவேலைச் சமுத்திரத்தில் வீசிவிட்டுத், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் சுந்தரமூர்த்தி நாயனார் கூறியருளிய தேவாரத்துணுக்கை ஒவ்வொன்றை எடுத்துக்கொண்டு அவைகளின் பொருளுண்மை காணமாட்டாது, "கடலின்மீனுக்கு நுளையனிட்டது சட்டம்" என்றவாறு தம் மனஞ்சென்றபடி அர்த்தங்கொண்டு தமிழ்முனிவர்கள் தமிழ் மறை செய்தாரென்று அறிவிலாமாந்தரை மயக்குதல் கா. சுப்பிரமணியபிள்ளையைப் போன்ற நன்மக்கட்கழகாகுமா? அது நிற்க.

இனி, ஒருகாலத்தும் இல்லாத காரியமொன்றைத், "தாங் கற்ற—நூலளவே யாகுமா நுண்ணறிவு" என்றவண்ணம் தாம் சிறிதே கற்ற தமிழ் நூலுணர்ச்சியினால் தாபிக்கப் புகுவாரையும், மேதாவியர், பொய்யர் வருக்கத்திற் சேர்த்தொதுக்குவரன்றோ? அது நிற்க.

இதுகாறும் தமிழ் நிலத்துச் சைவர் எவ்வகைக் குழப்பத்திற்கும் உட்படாமல் தமிழ் மொழியும் வடமொழியும் பதி
வார்க்கெனக் கைக்கொண்டு தம்முட் சமமெனக்கொண்டு கூடி
வாழ்ந்திருக்க, இக்காலத்து விபரீதக் கல்வியாளர் சிலர் வட
மொழியினும் தென்மொழியே சிறந்ததெனக் கற்பனை செய்து
வருகின்றார்கள். அங்ஙனம் தமது நவீன எண்ணத்தைச்சாதித்
தெழுதிய "திருநான்மறை விளக்கம்" என்னும் வியாசத்தை
ஸ்ரீமத். சாம்பசிவ பிள்ளையவர்கள் ஆராய்ச்சிசெய்து தக்க
தக்க பற்பல நியாய ஏதுக்களால் மறுத்துவிட்டார்கள். அங்
ஙனம் மறுத்த "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" என்னும்
அரும் பெரு நூலைச் சைவ சமயிகள் வாங்கிப் படித்து உய்த்
துணர்ந்து உண்மை கடைப்பிடிக்கக் கடவர். இவ்வரிய ஆராய்ச்சி
நூலை ஆக்கிய பிள்ளையவர்கள் சரீர சௌக்கியமும் பூரணாயுசும்
பெற்று இன்னும் பல நன்னூல்கள் செய்து உபகரிக்குமாறு
பேரருள் பாலித்தருளும் வண்ணம் சிவபிரான் செம்பொற்றாள்
களைச் சிந்தையினும் சென்னியினும்வைத்துத் தியானிக்கின்றாம்.

ஸ்ரீலஸ்ரீ, ஆறுமுகநாவலரவர்கள் யாழ்ப்பாணத்து வண்ணை நகர்ச் சைவப்பிரகாச வித்தியாசாலை உபாத்தியாயரும், சைவப் பிரசாரகரும், பொதுநன்மைப்புதினப் பத்திரிகைகட்கும் சிறப்புநன்மைப் புதினப்பத்திரிகைகட்கும் விஷயதானஞ் செய்பவரும், வித்தியாவிநோதசபைக் காரியதரிசியும், கொக்குவில் மாத்தனுநகர்ப் பிள்ளையார் கோயிலாதீன தருமகர்த்தரும், மதுரைத் தமிழ்ச்சங்க அங்கத்தராயிருந்து தமிழைப் பல வழியாலும் பரிபாலித்து வந்த வித்துவசிரோமணியாகிய ஸ்ரீமத் அ. குமாரசுவாமிப் புலவரவர்கள் நன்மாணுக்கருமாகிய

கௌரவ பிரமஸ்ரீ, சீ. முருகேசையரவர்கள்

அபிப்பிராயம் இது :—

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக."

எனவுத்தர வேத முறைத்தாங்குக் கற்கவேண்டு நூல்களைக் கசடறக் கற்று அக்கற்றலுக் கேற்ப நிற்கவேண்டு நிலையில் நிற்கும் வித்துவ சூளாமணியாகிய சிவஞானச் செல்வர் ஸ்ரீமத் திரு. மா. சாம்பசிவ பிள்ளையவர்கள் "செந்தமிழ்ச் செல்வி" என்னும் மாசிக வாசிக பத்திரிகையிலே ஸ்ரீமத் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் வெளிப்படுத்திய "திருநான்மறை விளக்க"த்தில் உள்ளவற்றை அநுவதித்துத் தக்க பிரமாணங்களால் மறுத்துத் "திருநான்மறை விளக்கவாராய்ச்சி" எனப் பெயரிட்டு அச்சிடுவித்த பெருநூலில் ஒரு பிரதி எமக்கனுப்பி எமதபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படி கேட்டிருக்கின்றார்கள். யாம் அந்நூலை முற்றுநோக்கி யாவர்க்கும் பயன்தருவதொரு நன்னூலெனக் கண்டு கருத்துள்ளடங்காக் கழிபெருங் களிப்புக்கொண்டேம். எம்மைப்போலவே எமது சைவசமயிகள் யாவரும் இந்நூலை வாங்கிப் படித்துணர்ந்து களிப்புறல் வேண்டும் என்பது எமது கருத்து.

அரசாங்க புருடர்கள் எழுதிவிட்டால் பகுத்தறியும் அறிவாற்றலில்லாரெல்லாரும் அதனைச் சரியெனக்கருதி மயங்குவர். எழுதினவரின் கல்வி, சமயபத்தி, சமயநூல் வழியொழுகும் ஒழுக்கம், உண்மை, நீதி முதலியவற்றை நோக்கி மதிப்பார் அரியாராயினர். ஸ்ரீ கா. சு. முதலானவர்களைப் பின்பற்றும் மற்றமதிகார வர்க்கத்தினரும் பிறரும் மயக்குற்று ஆன்மலாபத்தை இழவாவண்ணம் அதிகார புருடோத்தம ஸ்ரீ சாம்பசிவ பிள்ளையவர்கள் இக்காலத்துத் "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" என்னும் பெருநூலியற்றியது [illegible]

யாம். "விளக்க" முடையார் கொள்கைகளை "ஆராய்ச்சி" உடையார் மறுத்திருக்கும் திட்பமும் நுட்பமும் சிறப்பும் நல்லறிவாளர் எல்லோரும் வியக்கற் பாலனவேயாம்.

உலகத்திலேயுள்ள உண்மைச்சைவர் யாவரும் ஒற்றுமை யடைந்து நிற்கின்ற இடத்திலே ஸ்ரீ கா. சுப்பிரமணிய பிள்ளை யவர்களுக்கும், ஸ்ரீ. வேதாசலம் பிள்ளையவர்களுக்கும், அவ் விருவரும் சொல்லுவனவற்றையும் எழுதுவனவற்றையும் ஆராய்ச்சியின்றி நம்புவோர்களுக்கும் வேற்றுமை தோன்றின் விலக்குவார் யாரே!

உலகர் "கண்டது கலக்கும் பளிங்குபோலச்" சார்ந்ததன் வண்ணமாந் தன்மையராதலின், மேலே சுட்டப்பட்ட இருவ ரும் எழுதிய விடயங்களை நோக்கினபோது அவர் கொள்கைய ராயினார் சிலர், ஸ்ரீமத் சாம்பசிவ பிள்ளையவர்கள் எழுதிய "திருநான்மறைவிளக்க ஆராய்ச்சி"யை நோக்கும்போது "ஆராய்ச்சி" நூலுடையார் கொள்கையினராவார் என்ப தொருதலையென நாம் சொல்லவும் வேண்டுமோ!

"ஆராய்ச்சி" நூலை அமைந்து நோக்கும்போது, அதனுக்கி யோராகிய சிவஞானச்செல்வராம் ஸ்ரீமத் சாம்பசிவ பிள்ளை யவர்களே, சைவசமயந்தழைத்தோங்குதற் பொருட்டுத் தமது உடல் பொருளாவி மூன்றையும் உதவிய பெரியார் என்பது பெரிதும் விளங்குகின்றது.

ஸ்ரீ கா. சு. முதலானவர்களுக்குப் பிரதிகளில் இல்லாத "பிரதிபேதம்," "இடைச்செருகல்," உண்மைக்கு மாறுபட்ட உரைகள், மெய்யறிவிற் பெரியார் வெஃகாத கொள்கைகள் என்றின்னன வேராளமாயுள்ளன. ஆற்றுதார் கூற்றுக்களவு மில்லை.

இவர்கள் கொள்கைக்கு மாறாக நாமும் சில எழுதுகின் றும். தமிழர் வேறு; ஆரியர் வேறு; என்று பகுத்தல் முடி யாது; என்னை! கடவுள் வழிபாடு, பாஷை, தேசாசாரங்கள் கலந்திருத்தலாலென்க.

ஆரியரையும் ஆரியநூல்களையும் நீக்கிவிட்டால், தமிழர் ஒன்றுமிலராய்க் குன்றுவரே! அந்தோ! தமக்கும் உரிமை பூண்ட ஆரியநூலை ஆரியர்க்கேயுரியதென அவர்மீது கொண்ட கோபத்தாற் கைவிட்டுத் தாம் வறியராக முயலுதலை நோக்கும் போது எமது தம்பியர்கள் இக்கதியடையலாமா என்னும் இரக்கம் எமக்குத் தவநனியுண்டு. அந்நியதேயத்தார் ஆரிய நூல்களைக் கூட்டுண்டன்றோ அறிவுப் பெருஞ்செல்வராயினர். அவர்கள் ஆரியமே எல்லாவற்றிற்கும் மூலம் என்று பலப்பல

புத்தகங்களில் வெளிப்படுத்திப் புகழ்ந்து கொண்டாடி மேன்மையடையக் கண்டிருந்தும், நமது சகோதரர் தமது பொருளை அவர்க்குக் கொடுத்துத் தாம் அவற்றை அடைய விரும்பாது வெறுத்தல் விதியார் செய்த சதியே! "விதிவழி புந்தியு மேவுமேகொலாம்"

> "யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
> சேனைத் தலைவராய்ச் சென்றோரும்—ஏனை
> வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாங் கொண்ட
> மனையாளை மாற்றார் கொள."

ஆகலான் நாமிரங்கியும் ஆவதொன்றில்லை. ஆயினுஞ் சகோதரவாஞ்ஞை புத்திசொல்லுகவென்று பிடர்பிடித் துந்துகின்றது. அதுபற்றி இத்துணை எழுதினோம். இனி அப்பாற் செல்வாம்.

இருபெரு மக்களே!

கடவுள் வழிபாட்டுநூல், சோதிடம், சிற்பம், வைத்தியம் முதலிய தமிழ் நூல்கள் ஆதியிலே யுண்டு; அப்போதே யழிந்து விட்டனவென்றால், அன்று முதல் இன்று வரை ஆரியத்தி லுள்ள அந்நூல்களும், ஆரியருமன்றித் தமிழ்ச் சகோதரர் களுக்கு அவற்றைத் தெரித்தார் பிறரில்லையே! ஆகலான், "எந் நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை—செய்நன்றி கொன்ற மகற்கு" என்ற திருக்குறளைச் சிந்தித்து உங்கள் சகோதரர்களாகிய ஆரியரோடும், உங்கட்கும் பிதிரார்ச்சிதமா யுள்ள ஆரியபாடை நூலோடும் நண்பாயிருந்து உண்மை கடைப்பிடியுங்கள்.

சற்காரியவாதங் கூறுஞ் சைவசித்தாந்தத்தின்படி "உள்ளதுபோகாதில்லது வாராது;" "முயற்கோடு" முதலியன போல. ஆகலான், வேதாகமங்கள் காரியப்படும்போது தூலமாயும், காரியப்படாதபோது காரணத்தில் சூக்குமமாயும் என்று முள்ளன. அவை சிருட்டிதோறும் காரியப்படுவன. சிலபோது ஆன்மாக்களது கன்மகாலங்கட் கேற்ப அவைகள் சிவாஞ்ஞையால் மறைக்கப்படும்போது உமாதேவியார், விண்டு, பிரமா முதலியோர் வேண்ட உடனே வெளிப்படுத்தப்படும். அஃதன்றி மூன்று முகந்தோறும் மறைகளை நன்கு விளக்கமுறச் செய்ய வியாசர் சிவாஞ்ஞையால் வருவர்; சிவபிரானும் மறை ஞானத்தைப் போதிக்கத் தென்முகத் தெய்வமாய் வருவர். அவருடன் நான்கு மாணாக்கரும் வருவர். அது:—

"முறையின்வந் தெய்து மூன்று முகந்தொறு முடிவி லாத
மறுவறு தவத்து வேத வியாதன்வந் துதிப்ப னன்னான்
அறிவரு மறைக ளியாரு மறிந்திட வேண்டி யன்பால்
நெறியினிற் பகுத்து மன்னு முலகினி னிகழ்த்து வானே."

"உலகமுய்ந் திடுவான் ஞான மொழிவற வுணர்த்த வேண்டி
மலைவறு ※ தவத்தோ னாகி வருகுவன் யானு மென்பால்
அலைவறு மன்பி னோடு மடைகுவர் நால்வரன்னோர்
தலைமைசேர் ஞான மெய்திக் கைலையங் கிரியிற் சார்வார்"

என்னும் இலிங்க புராணத்தாலும்,

"கொடுத்தவா கமந்தா னுள்பல கழிய விறத்தலுங் கொங்கலர் கூந்தல்
மடத்தகை யுமையா ளிறைவனை நோக்கி மாய்ந்தவா கமமெலா மெடுத்து
நடத்திடல் வேண்டு மென்னலு மைத்த நள்ளிரு ளடுவனின் றுடும்
விடைக்கொடி யுயர்த்தோ னாகம முழுது முன்புபோல் விளங்கிட
[விரித்தான்."

"விரியுமா கமத்தை யண்ணறன் னருளால் யானுமெய் தெரியகத் தியனும்
பொருவிலா ருருவுந் ததீசியு முலகி லுரைசெய்தேங் கலியுகம் பொருந்தி
மருவிடுந் தோறு மறுவறு *யோகா சாரியன் மாசறு வடிவாய்க்
கரியுரி போர்த்தோ னெய்திமற் றதனை யுய்ந்திடக் கழறுவ னன்றே"

"கழறிட வெய்து காலைக டோறுங் காசின்மா ணாக்கர்க ணால்வர்
பழுதற வடைவா ருய்ந்திட வுணர்ந்தோர் மற்றவர் பங்கய மலர்த்தாள்
தொழுதன ரேத்தி விரித்தவா கமத்தைத் துகளற வுணர்ந்துநஞ் சிவன்றான்
உழுவலன் போடு முளத்தினி விருத்தி யோங்கிய முத்திசேர் குவரால்"

"என்றலு நாலா முகம்வருந் தோறு மெய்திடு குரவர்தம் பெயரும்
ஒன்றிய வறிவா லுயர்ந்தமா ணாக்கர் பெயருநீ யுரைத்தியா லென்ன
மன்றலந் துளவ மலர்புனை கண்ணன் வணங்கிமுன் னின்றன னுரைப்பத்
துன்றுவார் சடிலத் திறையவன் மலர்த்தா டொழுதுப மன்னியுப்
[பகர்ந்தான்"

என்னும் வாயுசங்கிதையாலு முணர்க.

நாலா முகந்தொறும் எய்திடும் குரவர் பெயரும் மாணாக்கர் நால்வர் பெயரும் விரிப்பின் மிகப்பெருகும்; ஆகலின், வாயுசங்கிதையிற் காண்க.

இப்பிரமாணங்களாலும் வேதாகமத்தோற்றம் சிவபிரானிடத்ததென்பது செவ்வனே உணர்க. வேறு கூறுவன விழல்,

"திருநான்மறை விளக்கம்" முழுதும் சைவசாத்திரங்களுக்கும், சைவப்பெரியோர் ஆட்சிக்கும் முற்றும் விரோதமே என்பதும், அதனைநம்பினோர் ஆன்மலாபத்தை இழந்து துன்

※ தவத்தோன்-தக்கிணாமூர்த்தி
* யோகாசாரியன்—தக்கிணாமூர்த்தி.

புறுவர் என்பதும், ஆதலால் அதனைச் சைவசமயிகள் கொண்டு தற்கும் அருகரல்லர் என்பதும், கட்டளைச்சட்டமின்றி அரசன் செங்கோல் நடாத்தாதவாறுபோலக் கடவுள் வேதாகமமாகிய சட்டமின்றி உலகத்தைநடத்தார்; ஆகலான், வேதாகமங்கள் ஒருகாரணம்பற்றி மறைந்தாலும் பின்பு தோற்றுவித்துவிடுவார் என்பதும், அங்ஙனந் தோற்றுவியாதிருந்தால் அவர் கருணைக் கிழுக்கென்பதும், தக்கனுக்குத் ததீசிமுனிவர் சொன்னஉண்மைகளை அவன் நன்றாக அறிந்துவைத்தும் பின்னும் இறைவனைமதியாமைக் கேது இருந்தமைபோல, ஸ்ரீ, கா. சுப்பிரமணியபிள்ளையவர்களுக்கு வேதாகமங்கள் இறைவன் வாக்கென்பதும், நால்வர் சனகாதியர் என்பதும், இவர்போல ஒவ்வொருகலியுகத்தும் நால்வர் மாணாக்கர் வெவ்வேறு பெயருடன் வந்தனர்; இன்னும் அப்படியே வருவார்என்பதும், நன்கு தெரிந்திருந்தும் அவற்றை மதியாது முரண்படப் பேசுதற்கு ஒரு பெரிய ஏது உண்டென்பதும், அவ்வேது நீங்கினால் மதித்துப் பொருத்தமுறப் பேசுவார் என்பதும், பிறவும் "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" என்னும் நூலையும் வாயிலாகக்கொண்டு அறிந்துகொண்டேம்.

இத்துணை நன்மைக்கேதுவாகிய மேற்படி "விளக்க வாராய்ச்சி" நூல்செய்த ஆசிரியர் ஸ்ரீமாந். திரு. மா சாம்பசிவ பிள்ளையவர்கள்நிறைந்த ஆயுளும், நிறைந்தசெல்வமும், நிறைந்த ஆரோக்கியமும், நிறைந்தவன்மையும், இன்னனபிற நன்மைகளும்பெற்று நிலவுலகத்தின்னும் சைவவிரோதமாய்ப் பயனின்மையோடமையாது கேடும்பயக்குநூல் எழுமாயின் அதனையும் நிராகரித்து யாவர்க்கும் பெருநன்மை செய்துகொண்டு பேரானந்தப் பெருவாழ்வுறுமாறு எமது குலதெய்வமாகிய விநாயகக்கடவுள் பெருங்கருணை புரியும்வண்ணம் அப்பெருமான் றிருவடிகளைச் சென்னியிற்கொண்டு தியானிக்கின்றாம்.

---

யாழ்ப்பாணத்து நல்லூரைச்சார்ந்த சிவிகையார்தெருச் சித்திவிநாயக ராலயத் தரும கர்த்தரும், பற்பல வித்தியாசாலைகட்கு மானேஜரும், இங்கிலீஷ்படித்த வாலிபரும் பிறரும் சைவசமயத்தினுண்மையுணர்ந்து சைவப்பிரசாரகா தற் பொருட்டுச் சரஸ்வதி பாஷாபிவிருத்திச் சங்கமெனப் பெயரியசபை ஒன்று தாபித்துச் சிறிதுந்தளராவிடாது செவ்வனே நடத்திவருபவரும், பெரிய கோர்ட்டு நீதவானாயிருந்து கவர்ண்மெண்டார் குடிகள்என்னும் இருபாலார்க்கும் நடுநின்று தமது உத்தியோகத்தைச் "சமன்செய்து சீர்தூக்குங் கோல் போலமைந்தொருபாற்—கோடாது" நடத்தினவருமாய இரு

திறத்தார் மதிப்பையும் ஒருங்குபெற்றுத் தற்காலம் இளைப்பாறும் மகாப்பிரபுவாகிய ஸ்ரீமாந். காசிப்பிள்ளையவர்கள் அருந்தவப் புதல்வருமாகிய அட்வக்கேற் ஸ்ரீமத். அருளம்பலம் என்னும் பொருளம்பலப் பேர்தரித்த மகாவித்துவரத்தினத்தின் அபிப்பிராயம் இது:—

திரிசிரபுரவாசரும், "மறைகணிந்தனை சைவ நிந்தனை பொருமண" முடையாரும், அறிஞர் வியக்கும் ஆராய்ச்சி மதுகைச்சீருறு சான்றோரும், சமயநூல் வரம்பிகவாதிமைய வரும் இறும்பூதெய்த அமைவுடன் ஆதரித்துப் பிரமாணசகிதம் பேசுபவருமாகிய, ஸ்ரீமத் சாம்பசிவ பிள்ளையவர்கள், ஸ்ரீமத் கா. சுப்பிரமணிய பிள்ளை அட்வக்கேட் அவர்கள் "செந்தமிழ்ச் செல்வி" வாயிலாக வெளிப்படுத்திய "திருநான்மறை விளக்க"த்தைக் கண்ணுற்று அதன் கணுள்ளன அப் பிரமாணமெனக் கண்டு, அதனை யாவருமறிந்து இலகுவில் உண்மைகடைப் பிடிக்குமாறு "திருநான்மறை விளக்கவாராய்ச்சி" என்னுஞ் சிறந்த நூலொன்றியற்றி அச்சிடுவித்து அதிற் கட்டாத பிரதியொன்று எமக்கனுப்பி எமதபிப்பிராயத்தைத் தமக்குத் தெரிவிக்குமாறு கேட்டுக்கொண்டனர்.

எமது இலௌகிக உத்தியோகமும் வைதிக வுத்தியோகமும் பிறிது கருமத்திற் பிரவேசிக்கக் காலந்தாராவாயினும், "திருநான்மறை விளக்கவாராய்ச்சி" என்னுமிந் நூலைப் படித்துண்மையுணர வேண்டுமென்னும் பேராசையால் விழுங்கப்பட்ட யாம் அதன் வயத்தராயினமையின் உத்தியோகத்துக்குரிய காலத்திற் சிறிது காலத்தை இந்நூல் படித்தலிற் போக்கிப் படித்து முடித்து அறியாதனவெல்லாம் அறிந்தும், தெளியாதனவெல்லாந் தெளிந்தும், பூர்வபக்கத்தார் கூறுவனவெல்லாஞ் சைவசாத்திர முரணுன புதுக்கொள்கைகள் என்பதோர்ந்தும், இத்தகைய மிகக நியாயமான கண்டனநூல் மாந்தர்க்கு "விளக்கத்"தினுல் நேர்ந்த மயக்கொழித் துண்மை தெரித்துறுதி பயத்தற்பொருட்டு அத்தியாவசியகம் வேண்டற்பால தொன்றே யென எமது மனநேர்ந்தும் பேரானந்தப் பெருங் கடலுட்டிளைத்தாம்.

யாமும், எம்மைப்போலவே இங்கிலீஷ்கற்று அட்வக்கேற் உத்தியோக முதலிய பெரிய உத்தியோகங்களில் அமர்ந்துள்ளவர்களும், உயிர்க்குறுதி பயக்குஞ் சைவசமயவிஷயத்திற் சுருதி யுத்தி அநுபவப் பிரமாணங்களைக்கொண்டு மேதாவியர் தாபித்திருக்கின்ற உண்மைகளை உணராது, மனத்திற் ேறாற்றிய திரிபுணர்ச்சியால் அவைகளை மறுக்கப்புகுதல் "ஒப்பிலா மலடி பெற்றமகனெரு முயற்கொம் பேறித்—தப்பிலாகாயப் பூவைப்

பறித்த ''வாருமன்றிச் சிறிதும் பயன்படா தென்பது இங்கி
லீஷ்படித்த எமக்கு நன்குதெரியும். அது கா. சு. "அட்வக்
கேட்'' அவர்கள் வெளிப்படுத்திய "திருநான்மறை விளக்கத்"
தாலும், சாம்பசிவபிள்ளையவர்கள் இயற்றிய அதனாராய்ச்சியா
லும் யாவரும் எளிதில் உணர்ந்து கொள்ளலாம். ஆயினும், ஈண்
விளக்கத்திலிருந்து இரண்டு மூன்று முக்கியவிடயங்களை
டெடுத்துக்காட்டு முகத்தானே பயன்படாமையை வெள்ளிடை
மலைபோற் றெள்ளிதிற் புலப்படுத்துகின்றாம்.

1. ஸ்ரீ, கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் தமிழ் முனிவர்
நால்வர் தமிழில் நான்மறை செய்தனர்; தேவாரங்களில் இறை
வன் கல்லாலடியில் நால்வர்க்கு நான்மறைகளை நான்மறைப்
பொருள்களைப் பகர்ந்தனர் என்ற பகுதிகளெல்லாம் தமது
கொள்கையைக் குறிக்கின்றன என்கின்றார். இன்னும் சுந்தர
மூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த "காதுபொத்தரைக்
கின்னரர்'' என்பதை முதலாகவுடைய திருநின்றியூர்த் தேவா
ரம் தமது கோளை வலியுறுத்தற்கு முக்கிய ஆதாரம் என்றுஞ்
சொல்லுகின்றார். இன்னும் "நால்வர்க் கொளிநெறிகாட்டினை''
என்னுந் திருஞானசம்பந்த சுவாமிகள் திருவெழு கூற்
றிருக்கைத் துணுக்கையும் அதனை வலியுறுத்து மென்கின்றார்.

இவையெல்லாம் அவர் கொள்கையைச் சிறிதும் வலியுறுத்
தாமையைச் சித்தாந்த பானுவாகிய "திருநான்மறைவிளக்க
வாராய்ச்சி'' நூலாசிரியரவர்கள் பல்லாற்றானும் நன்றாக விளக்
கிக்காட்டி அவர் கொள்கையைப் பூர்வபக்கமாக்கி உண்மைக்
கொள்கையைச் சித்தாந்தஞ் செய்திருக்கும் அழகு அறிஞர்
வியக்கத்தக்கது; ஆகலான் ஆண்டுக்கண்டுண்மை கடைப்பிடிக்க.

"காதுபொத்தரைக்கின்னரர்'' என்பதில் கின்னரர் என்
னுஞ்சொற்கு ஆந்தை என்று ஸ்ரீ அட்வக்கேற் சுப்பிரமணிய
பிள்ளையவர்கள் பொருள் கூறியிருக்கின்றார்கள். ஆந்தை என்று
ஒரு தமிழ்முனிவருக்குப் பெயராயிருக்கலாம் என்கின்றார்கள்.
இவர்கள் தமிழ்முனிவர் சமஸ்கிருதமுனிவர் என்று நவீனக்
கொள்கை ஒன்று மேற்கொண்டவர்கள். இன்னுஞ் சிலகா
லத்துள் இங்கிலீஷ்முனிவர் இந்துஸ்தான்முனிவர் என்றற்
றொடக்கத்த முனிவர்களைச் சிருட்டித்தும் விடுவார்கள்,
யாவரும் விழித்திருங்கள்; பார்க்கலாம்.

இதுபற்றித்தான் தமிழ்சமஸ்கிருத சித்தாந்தசாத்திரங்
களை நல்லாசிரியரிடத்துப் பல்காற் பயின்று, பயின்றவண்ணம்
ஒழுகலாற் சிறிது சிறிதாகத் திருவருட்கிலக்காய் வாராத இங்கி
லீஷ் படித்த நம்மவர் பண்டைநல்லாசிரியர் நியாயவாயிலா னிறு
விய கொள்கையை மறுத்துத் தாம்புதுக்கொள்கை நாட்டமுய

லல் "ஒப்பிலாமலடி பெற்றமகனொரு முயற்கொம்பேறித்—தப்பிலா காயப்பூவைப் பறித்த" வாறுமன்றிச் சிறிதும் பயன்படாதென்று மேலே கூறினும். இது "ஏதுவின்முடித்தல்" என்னு முத்தி.

கின்னரர் என்பதற்குப்பொருள் ஆந்தைஎன்றும், தமிழ் முனி ஒருவர்க்கு அதுபெயராயிருக்கலாம்என்றும் கூறியதை நோக்குந்தோறும் நகைச்சுவைக்குப் "பார்ப்பனத்தமிழ்" உதாரணமென்று நச்சினார்க்கினியர் தொல்காப்பிய வுரையுட் கூறியது அக்காலத்துக்குரித்து இக்காலத்துக்குச் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் கொள்கைகளையே யுரித்தெனக்கூறல் வேண்டும் என்றும் இனிப் பொருளதிகாரம் அச்சிடுவிப்போர் "பார்ப்பனத் தமிழ்" என்பதை நீக்கிச் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் கொள்கைகளை அச்சிடுவித்தல் வேண்டும் என்றும், அங்ஙனஞ் செய்தற்குப் பிரமாணம் என்னை? என்பார்க்கும் "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவலகால வகையினானே" என்றும் கூறாநிற்பேம்.

கின்னரர் என்பதன் பொருள் ஆந்தை என்று எக்கோசத்திற் கண்டார்! எவ்விலக்கியத்திற் கண்டார்! எவ்வான்றோர் ஆட்சியிற் கண்டார். இவர், ஒரு சொற்குப் பொருள் கோண் முறை இஃதென இலக்கணநூல் கூறுமாறும் அவ்வாறே இலக்கியங்களில் அப்பொருள் கோண்முறை அமைந்திருக்குமாறு கண்டு உரையாசிரியர்கள் உரை கண்டிருக்குமாறும், ஆன்றோரவற்றை உச்சிமேற் கொண்டொழுகுமாறும் ஒரு சிறிதுமறியாது உத்தியோக ஆற்றல் கொண்டு சமய நிலையையும் சாத்திர நிலையையும் ஆன்றோர் நிலையையும் இலக்கண நிலையையும் இலக்கிய நிலையையும் தருக்க நிலையையும், நியாய நிலையையும் மாற்றிப் புதிதாக ஒரு சைவசமயம் வகுத்துவிடலாம் என்று எண்ணங்கொண்டிருக்கின்றார்.

"ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கும்
எனை யாளு மீசன் செயல்"

என்றவாறு முடியுமன்றி இவர் எண்ணம் ஒன்றும் பயன்றாது. பயன்றருங்கால் முன்னிலை மாத்திரையே. அந்த முன்னிலையும் வினை யொழிந்தாற் றானே ஒழியுமென்பதை மறுப்பார் யார்.

இவர் கின்னரர் என்பதனை உயர்திணைச் சொல்லென்று அறியாராய் ஆந்தையென அஃறிணைப் பொருள் கொண்டதை

இனி, காதுபொத்தரை, என்னுந்தேவாரத்தின் மூன்றும்
அடிமுதலை வேதம்செய்தவர் என்றும் அட்வக்கேற் பிரித்து
மனம்போனவாறு பொருள்கூறுகின்றார். அங்ஙனம் பிரித்
தற்கு இலக்கணம் இடம்தராது. என்னை? மோனையில்லா
மையால், மோனையில்லாச் செய்யுட்களும் இலக்கியங்களுட்
பயின்றுவரக் காண்கின்றேமெனின், அது பற்றி எமக்கு ஆட்
சேபமின்று, மோனையிருக்குஞ் செய்யுளை இல்லாதசெய்யு
ளாக்க இலக்கணம் இடந்தாராதென ஆக்ஷேபிப்பேம். எதம்
என்று பிரித்தால் எய்திய, இன்பம், யானும், இணையடி எனச்
சீர்பலவற்றுள்ளும் பல மோனைசெறிந்து மூவகைமோனையுள்
உத்தம மோனையாகநிற்கும் பெரியதோர் செய்யுட் சிறப்பை
அழிக்க யாரான் முடியும்! ஆகலான் அப்படிப் பிரித்தல் பிழை
யென்பதை எழுத்தறி புலவருள் மறுப்பார் யார்?

இனி, இலக்கண வரம்புட்படாது வேண்டியவாறு பிரித்து
வேண்டாத பொருள்கூற ஒருவர் தலைப்படின், யாம் எதுகைசீர்
முதலியவற்றையும் எம்மனம் போனவாறு திரித்து 'எமக்கு
வேண்டியபடி பொருள்கொள்ளுவேம். அப்போது செய்யு
ளுறுப்புகள் அழிந்து செய்யுளுமில்லையாகும்; அஃதில்லை
யாகவே, பொருள்கோளும் இல்லையாகும், சொல்லுதலுமில்
லையாகும்; எழுதுதலும் இல்லையாகும்; நூலும் இல்லையாகும்,
படிப்பும் இல்லையாகும், வாதமும் இல்லையாகும், ஆகலின்,
மோனை இயல்பாக இல்லாமலே செய்யுள் செய்யும் புலவன்
செய்யுள்செய்துவிட்டால் அது குற்றமாகாது செய்யுளிலக்
கணத்திற்கு ஒப்பமுடிந்ததென்றும், மோனை இருக்கும்படி
செய்யுள் செய்துவிட்டால் அதினும் உத்தமமோனை இருக்கச்
செய்துவிட்டால் மோனை வருமாறு பிரிக்காவிடின் அது குற்ற
மாய்ச் செய்யுளிலக்கணத்திற்கு ஒப்பமுடியாதென்றும் நன்
கனந்தேறுக.

இலக்கணத்திற்குமாறாக இலக்கியத்திற்குப் பொருள்
கோடல் குற்றம்என்பதும் வீடு பேறும் இல்லையாகும்என்பதும்
"எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்—மொழித்திறத்
தின் முட்டறுப்பா னாகு—மொழித்திறத்தின்—முட்டறுத்த நல்
லோன் முதனூற் பொருளுணர்ந்து—கட்டறுத்து வீடு பெறும்"
என்னும் வெண்பாவாலறிக.

இனி, வேதம் என்று பிரித்தமைக்கு மோனை வேண்டு
மானால் "எய்தியவின்பம்" என்பதில் "வின்பம்" மோனை
யென்றார். "வின்பம்" என்று ஒரு சொல் எங்குள்ளது?
எய்திய இன்பம் என்னும் பதங்கள் முறையே உயிரீறும் உயிர்
முதலுமாய் நிற்றலின் உயிர்மேலுயிர் ஏறிப் புணராது;

தோன்றும்;
புணர்க்க அவற்றினிடையே வகரவுடம்படுமெய் தோன்றும்;
தோன்றிய மெய்யில் வருமொழி முதலுயிரேறி எய்திய
வின்பம் என முடிந்தது. உடம்படுமெய் மோனையாதற்கு
அட்வக்கேட்டே நவீன இலக்கண நூலும் உண்டாக்க
வேண்டும். பழைய இலக்கணம் இடந்தராது. ஒரு செய்யு
ளடியை இலக்கணத்திற்கு மாறின்றிப் பிரிக்கத்தானும் தெரி
யாத இவர் தொல்காப்பியத்திற்கு முன்னுரை கொடுத்து
விட்டார். இவர் முன்னுரை எப்போதும் அறிஞர்க்குப்
பின்னுரையாகவே தோன்றும் என்பது இம்மோனை வகுப்
பாலும் யாவரும் எளிதிலுணர்ந்து கொள்ளலாம்.

இனி, நல்லாசிரியர்பால் இலக்கண விலக்கிய தருக்க நூல்
களை வழிபடு முறையில் வழிபட்டுக் கற்று அதன்பின் இலக்கண
தருக்க மிரண்டையும் இரண்டு கண்களாகக் கொண்டு சைவ
சாத்திரங்களையுங் கற்றுத் தேறிக் கற்றவண்ணம் ஒழுகும்
ஒழுகலாறுடைய நல்லோர் கருதல் காண்டல் உரை என்னு
மூன்று பிரமாணங்கட்கும் மாறுபாடின்றிச் செய்த முன்னுரை
யன்றி இங்ஙனங் கல்லாதார் மூவகை பிரமாணங்கட்கும்
மாறாக நவீனக் கொள்கையை மேற்கொடு செய்த முன்னுரை,
நூலுரை யாசிரியர்க்குங் குற்றங் கற்பித்துக் கற்போர்
கருத்தைத் திரித்து விபரீத நெறியில் விடுத்து, நூலுரைகளில்
அவர்கள் வைத்த நம்பிக்கையைத் தடுத்து, இம்மை மறுமை
வீடு என்னும் மும்மைப் பயன்களையுங் கெடுத்து பிறவித்
துன்பத்துட் படுத்துத் தீமையையே பயந்துவிடும்; ஆகலான்,
அத்தகைய முன்னுரையோடும் வெளிப்படும் நூல்களை விடுத்து
நன்மைபயக்கும் நல்லோர் பதிப்பு நூல்களையே உண்மைச்
சமயப் பற்றுடையவர்கள் வாங்கிப் படித்து நன்மையடைய
வேண்டும்.

அட்வக்கேற் தொல்காப்பியத்திற்கு மாத்திரமோ சிவ
ஞான பாஷியத்திற்கும். சித்தாந்த சாத்திர மூலம் பதினைங்கிற்
கும் முன்னுரை கொடுத்திருக்கின்றார். அவை அவ்வுரை
நூல்கட்குப் பொருத்தமில்லாதனவாய், உரை நூலாசிரியர்
கட்கு அறியாமைக் குற்றமேற்றி, அதன் வாயிலாக உரை நூல்
களும் குற்றமுடையனவென்று யாவர்க்குங் கற்பிக்கின்றன.
அவை அங்ஙனஞ் செய்கின்றனவோ! அன்றோ! எனச் சந்தேக
முறுவோர் அவற்றை பார்வையிட்டு உண்மை தெளிக. அவற்
றிற்கும் மறுப்பு எழாநிற்கும்; ஆண்டு விரிக்கப்படுவனவற்றால்
எல்லாம் வெளியாகும். "ஒன்றின முடித்தறன்னின முடித்தல்"
என்னு முத்தியினால் "முன்னுரை" யைப்பற்றி இவையு
நோக்கிச் சிறிது, பேசப்பட்டது. இனிமேற் கொண்ட விட
யத்திற் போதுகின்றாம்.

“மாதவர் குழுவுடன் கேட்ப” என்புழி “மாதவர்” யார்? “வேதஞ் செய்தவர்” என்புழி அவர் யார்? இருபாலரும் ஒருபாலரெனின், இலக்கண வரம்பிகவாது பொருளியையுமாறு கொண்டுகூட்டி முடிவுசெய்து காட்டுக.

அறம் பகர ஏது அம் செய் தவர் எனப் பிரித்து அறமுதல் நான்கையும் பகர்தற்குக் காரணமாகச் செவ்வியதாய்ச் செய்த தவத்தையுடையவர்கள் என்பதே பொருத்தப் பொருள். பகர என்னும் எச்சம் காரியப்பொருட்டில் வந்தது. வழுவின்றிச் செய்த தவம் என்பார் அஞ்செய் தவம் என்றார்; வழுவுறு தவம் அறம் பகர்தற் கேதுவாகாதாகலான். அம்—அழகு. செய்தல் முற்பிறப்பிலுஞ் செய்தல். தவத்தர்—தவத்தினையுடையர். இன்னும் இதினுஞ் சிறந்த பொருள் நல்லாசிரியர் கூறுவர். ஆராய்ச்சி நூலிலும் கூறப்பட்டது.

2. “நால்வர்க்கொளி நெறிகாட்டினை” எனத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளியது வேதஞ் செய்தவர் நால்வர் தமிழ் முனிவர் என்பதனைத் தாபிக்கும் என்று அட்வக்கேற் அறைகின்றார்.

நால்வர் தமிழ் முனிவர் வேதஞ் செய்தார் என்று இத்திருவெழு கூற்றிருக்கைத் துணுக்கையில் எங்கே காணப்படுகின்றது? நான்கு பேருக்கு ஞான மார்க்கத்தைத் தெரித்தீர் என்பது பதப்பொருள். இதற்குச் சரிதங்கொண்டாராயப்புகின் ஞான மார்க்கத்தை வெஃகிவந்தடைந்த சனகாதிமுனிவர் நால்வர்க்கும் கல்லாலநீழற் கீழ்ச் சின்முத்திரைக் கரத்தால் ஞான நெறியைத் தெரித்தருளினீர் என்று விரித்துக் கூறல் வேண்டும். அத்துணையேயன்றிப் பிறிது கூறுவனவெல்லாம் திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய மற்றைத் தேவாரங்கள் எல்லாவற்றிற்கும் முழுமாறு என்பதனை அவ்வத் தேவாரங்களை நோக்கி யாவரும் அறிந்து கொள்ளலாம். ஆராய்ச்சி நூலாசிரியர் நன்றாக விரித்து விளக்கியிருத்தலாலும் அறிந்துகொள்ளலாம்.

3. ஆகமம் இருபத்தெட்டையும் தமிழ்நாட்டு மகேந்திரமலையில் சிவபெருமான் தமிழில் அருளிச்செய்தார் என்கின்றார்.

தமிழ்நாடு எது? அதில் மகேந்திரம் என்ற மலையுண்டா? இவர் தயைகூர்ந்து அதனைக் காட்டுவாரா? தமிழில் சிவபெருமான் செய்த ஆகமங்கள் எங்கே? அவற்றையும் கடல்கொண்டு போயிற்றென்று கூறமறந்துவிட்டனரே! இனி என் செய்வார்! மகேந்திரம் கையிலை என்று ஆராய்ச்சியாசிரியர் விளக்கிக்

காட்டி யிருக்கின்றார். அதுவே சரி என்பது பல சைவநூல் வல்லார்வாய்க் கேட்டுணர்க. இங்கிலிஷ் அதனை யுணர்த்தாது. பிற சைவ விஷயத்தினையும் உணர்த்தாது.

ஒவ்வொரு அரசினர் தாமும் தத்தஞ் சமயவிடயங்களைத் தத்தஞ் சமய குரவரிடம் கேட்டு அவர் சொல்லியவண்ணஞ் செய்தலை நாம் காண்டல் அளவையால் நன்கறிந்திருக்கின்றாம். அதற்குக் காரணம் அவர் சமய சாத்திரத்தைப், பரம்பரையில் அறிந்து உண்மை கடைப்பிடித்தவர் என்று கைக்கொண்டமையேயாம். நம்மவர் கற்றவரிடத்து அங்ஙனம் கேளார். இவை தம்முள் வேற்றுமை. எமது அரசினர் சமய விஷயத்திற் றாம் பிரவேசிப்பதில்லையென்றும், ஒவ்வொருவரும் தத்தஞ் சமயக் கொள்கையை மேற்கொண்டொழுகலாம் என்றும் வாக்குத்தத் தஞ் செய்து செய்தவண்ணமே நடந்துவருகின்றார். அது மட்டோ ஒவ்வொரு மதத்தார்க்கும் வேண்டிய காலங்களில் அதன்பொருட்டு உதவியுஞ் செய்கின்றனர். தேசாபிமானம், பாஷாபிமானம், சாதியபிமானம், சமயாபிமானம் என்னும் நான் கனுள்ளும் சமயாபிமானஞ் சிறந்ததாகலான் அதிற்றலையிடின் தமதரசு, சமயவிஷயத்திற் பிறழ்ச்சி செய்விக்க முயன்ற அரசினர் சில்லாண்டிற் சிதைந்தழிந் தொழிந்தமைபோலாம் என்ப தநுபவத்திலறிந்துதான், அங்ஙனமாகாது தமதரசு செவ்விதின் நீடு நடந்து நிலைக்க வேண்டுமென்பது நினைந்துதான், அறிந்த வண்ணம் நடப்பதே தகுதி யென்று துணிந்துதான் சமய விஷயத்தில் இதுகாறும் தலைப்படாமல் அரசு நடாத்துகின்றனர். அங்ஙனம் நடாத்துதல்,

"தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை
அத்தன் சிவன்சொன்ன வாகம நூல்நெறி
எத்தண் டமுஞ்செயு மம்மையி லிம்மைக்கே
மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே"

என்னுந் திருமூல நாயனார் திருவாய் மலர்ந்தருளிய திவ் விய திருமந்திரத்தினோடு அத்துவிதமுற்று நிற்குஞ் சிறப்பு அறிஞர் உள்ளக்கமலத்தை அலர்த்தா நிற்கும். இத்தகைய பெருஞ் சிறப்புவாய்ந்த நமது காருண்ணிய அரசரின் கீழி ருந்து உத்தியோக நடத்தும் நம்மவரும் அவ்வரசரைப்போலத் தங்கள் தங்கள் சமயநூல் வரம்பு கடவாது ஒழுகி அரசர்க்கும் குடிகட்கும் இதத்தைச் செய்தல் வேண்டும். அப்படியே மற்றச் சமயத்தவர் செய்யக் காண்கின்றோம். நமது அட்வகேட் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் 'சைவசாத்திரங்கட்கு முற் றும் விரோதமாகப் புதிதொன்றோ பல வகுத்து அவற்றை மேற்கொண்டு தாபிப்பான் புகுந்து ஆரியரையும், சிவபிரானைற்

செய்தருளப்பட்ட வேதாகமங்களையும், அவ்வேதாகமங்களே முதனூல்கள் என்று கூறுந் தமிழ்ச் சைவ சாத்திரங்களையுஞ், சைவர்களையும், சைவர்களுக்கு உண்மைவழிகாட்டி நன்மை புரிந்த சைவ நூலாசிரியர் உரையாசிரியர்களையும், தூஷியாமற் றூஷிக்கின்றார். அங்ஙனந் தூஷித்த றகுமோ என்பார்க்கு இறைவன் கல்லானிழற்கீழ் நால்வர்க்கு உரையிறந்த பொருளைச் "சொல்லாமற் சொல்ல" வில்லையா என்று உத்தரங்கூறித் தப்பிவிடலாம் என்று எண்ணினர்போலும், அப்படியானுற் சரிதான், நாமும் சமயநேர்ந்தால் அவ்வாறு சொல்வேம்.

உத்தியோகத்தராகிய நம்முள் ஒருவர் செய்கின்றகுற்றம் மற்ற உத்தியோகத்தரைச் சாராதாயினும், "நத்துப் புரை முடியீர் நல்லுணர்வு சற்றுமிலீர்—எத்துக்கு மூத்தீரிழி குலத் தேன்றன்னை வெஃகிப்-பித்துக் கொண்டார்போற் பிதற்றுவீரிவ் வேடர்—கொத்துக்கெலாமோர் கொடும்பழியைச் செய்தீரே" என்றவண்ணம் உத்தியோக வொப்புமையால் யாவரையும் குற்றதுக்குள்ளாக்கிவிடும். அதுமட்டோ!

சிருட்டி யாரம்பகாலந்தொடுத்துக் கடவுளாலும் அவனருள்வழிப்பட்ட மெஞ்ஞானிகளாலும் இன்றுவரை ஒரேமுகமாக உண்மையென மேற்கொள்ளப்பட்ட நல்விஷயங்களை இவர் மனம்போனவாறு புரட்டுதலால் இவர்விஷயத்தில் சைவ மக்களது பொதுவானசமூக அபிப்பிராயம் எவ்வாறுமோ வென வருந்துகின்றேன்.

அட்வக்கேட் ஸ்ரீமத் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் "செந்தமிழ்ச் செல்வி" என்னும் பத்திரிகையில் வெளிப்படுத்திய திருநான்மறை விளக்கத்திலுள்ள தமிழ் வேதமே ஆதியிலிருந்ததென்றன் முதலிய கற்பனை விஷயங்களெல்லாவற்றையும் தனித்தனி அநுவதித்துக் காண்டல் கருதல் உரை என்னும் மூன்று பிரமாணங்களாலும் மறுத்து உண்மையை விளக்கி "முன்னோர் மொழி பொருளே" நிறுவி யாவர்க்கும் நன்மை பயக்கும் பேருபகாரராக விளங்கும் பெரியாராகிய ஸ்ரீமத் சாம்பசிவ பிள்ளையவர்களுக்குச் சைவ சமய மெய்யன்பர்கள் தாஞ்செய்யும் கைமாறுதான் யாது? வானமோ! பூமியோ! மற்றைத் தானங்கடாமோ! இவையெல்லாம் ஒருங்கு துறுமிய குழுவேயோ! என்றிங்ஙனம் யோசிக்குமிடத்து இவையெல்லாம் அப் பெரியார்செய் பெருநன்றிக்கீடாகா; ஆகலான், அப் பெருநன்றியை மறவாதிருக்குமத்துணையே மெய்யன்பர்கள் செயற்பாலதாம்.

மகைசுவரிய மகௌதாரிய உபகாரியாகிய இப்பெரியார் பூரணாயுசுடன் அரோகதிட காத்திரராயிருந்து கலியுகத்தை யாயிரத்தில் இன்னும் நவீனக்கொள்கை யுடையராய், சைவ

சமயவிரோதிகளாய், சிவதூஷகராய், வேதாகமநிந்தகராய், சமயாசாரிய நிந்தகராய், சந்தாநாசாரிய நிந்தகராய், சைவத்தை வளர்க்கும் தற்காலப்பெரியார் நிந்தகராய் வருவாருளரேல், அவர்கள் நவீனக்கொள்கைகளையும் கண்டித்துச் சைவசமயத் துண்மையை நிறுவி உலகத்துநன்மக்களைப் பலவிதத்தாலும் ஓம்பிப் பேரானந்தத்தோடு பிரகாசப் பெருவாழ்வுறுமாறு பேரருள்புரிந்தருளும் வண்ணம் எமது குலதெய்வமாகிய பெருங் கருணைப் பிழம்பாயுள்ள சித்திவிநாயகர் திருவடியிணையை எம் புந்தியிலிருத்தி அந்தியும்பகலும் மனமாரச் சிந்திதஞ்செய்து, வாயாரவாழ்த்தி, தலையாரக் கும்பிடுகின்றோம்.

---

யாழ்ப்பாணத்துக் கந்தவனக் கோயிலர்ச்சகரும், சைவப் பிரசாரகரும், புராணிகரும், தமிழ் சமஸ்கிருத பாஷா வல்லுநரும், ஆன்மார்த்த பரார்த்தங்களை மந்திரங் கிரியா பாவனைகள் வழுவாது செய்தலில் அதிசமர்த்தரும் மகா வித்துவானுமாகிய

பிரமஸ்ரீ **கனகசபாபதி குருக்களவர்கள்**

அபிப்பிராயம் இது :—

கல்வி யறிவொழுக்கங்களா னுயர்ந்த நன்மக்களாயினோர் யாதானுமோர் விஷயத்தை யெடுத்துத் தாபிக்கப் புகுங்கால் அஃது பண்டைநூன் மரபிற்கும் வழக்கியன் மரபிற்கும் ஒத்ததா! அன்றா! எனப் பூர்வ பராமரிசஞ் செய்து தாபிக்கக் கூடும் பரிசேதேல் அதிற் றலையிடுதல் நியாயமேயாம். அஃதன்றாக, ஸ்ரீமாந் வேதாசலமவர்கள் திருவாசகத்தில் "மூவாநான்மறை முதல்வாபோற்றி" என்னும் அடியிலுள்ள "மூவாநான்மறை" ச்சொற்றொடர் தொல்காப்பியம், இறையனாரகப் பொருள், திருக்குறள், தேவாரம், சிவஞானபோதம் என்னும் நூல்களைக் குறிக்கு மென்றும், வடமொழி நான்கு வேதங்களையுங் குறியா தென்றும் தம் உளம் போனவாறு ஒரு நவீன கற்பனையை வெளியிட்டனர்.

அக்காலையில் அக்கற்பனைக்கோளை, ஆராய்ச்சிவல்ல ஆசியர் ஸ்ரீமத், சாம்பசிவபிள்ளையவர்கள் நியாய வாற்றலாற் கண்டித்துவிட்டனர், பிறருங் கண்டித்தனர்.

இக்காலையில் ஸ்ரீமாந், சுப்பிரமணியபிள்ளையவர்கள் "திரு நான்மறைவிளக்கம்" என்னும் முகவுரையுடன் "செந்தமிழ்ச் செல்வி" என்னும் பத்திரிகை வாயிலாக பகிரங்கப்படுத்திய விஷயத்தை நோக்குமிடத்து முற்றும் அக்கற்பனையாகவே யிருக்கின்றது. அவர் நான்மறையாவன வையே தமிழ்நூல்கள்

என்றும், அவை முதற்சங்கத் திறுதியிலுண்டான கடல்கோ ளில் ஆண்டுள்ள ஏனைய நூல்களோடு இறந்துபோயின என்றும், நமது சைவாசாரியர்களது திருவுளக் கருத்தும் அதுவே என் றும் கட்டுரைத்தனர். "ஒப்பிலியநாதிமுத்த ஞேதியவேத" நிலைமையினை இங்ஙனம் முறைபிறழ்த்ததத்துணிந்த துணிவே துணிவு.

இன்னும் கல்லாலடியில் நால்வர்க்கு இறைவன் வேத மாதியவற்றையும், அவற்றின்பொருளையும் உபதேசித்தருளி னான் என்னும்உண்மைநூற் றுணிபையும் மறுத்தனர்.

பின்னும் சாமவேதமென்று தமிழ்மறையில் வருமிடங் களிலெல்லாம் வடமொழிச் சாமவேதமென்று பொருள்கொள் ளாது இன்னிசைப்பாடலென்று பொருள் கொள்ளவேண்டு மென்றும் சிவபிரானுக்குத் தமிழிலேயே மிக்க விருப்ப மென்றும் உரைத்தனர்.

இன்னோ ரன்ன வினையிலாக் கற்பனை
பன்னினர்; பற்பல பண்டித ராஞேர்
பார்த்து நகைசெயும் பரிசவே; யவற்றை
ஈர்த்தொரோ வொன்று வினையந்தநூற் காட்டொடு
மளக்கும் கருவிகொண் டழகுற நுணித்து
விளக்கமா யாய்ந்து மெய்மை தெரித்துக்
கண்டன மியற்றிக் கற்ருேர் மற்ருேர்
அண்டா மகிழ்கொள வவனியில் விடுத்த
அருஞ்செய லாளரா மன்றநூற் கேள்வியோர்
பெருங்கரு ணைநிதி பேணுசாம் பசிவ
பிள்ளையென் றியாவரும் பேசுநா மத்தினர்
பிள்ளையம் மதியினன் பேதமி லருளால்
நன்றே வாழுக, நன்றியிங் கிதனை
என்று மறவா திதயத் திருத்தி
நனிபா ராட்டி நான்மறை விளக்கம்
நுனிமதி யாய்விலர் நுவன்ற கற்பனையா
உரையவ் வியாத்தியோ டோரதி வியாத்தி
புரையசம் பவமிவை பொதிந்ததா தலினப்
பொய்ப் பொருள் கொளாமே பொருவக ருண்மை
மெய்ப்பொருள் கொள்ளுதன் மேலவர் கடனே.

யாழ்ப்பாணத்துப் புலோலிநகர்ச் சாரதாபீட வித்தியா
சாலைத் தாபகரும், தலைமைப் போதகாசிரியரும், தமிழ் சமஸ்
கிருதம் என்னும் துவிபாஷா வல்லுநரும், சைவப்பிரசாரகரும்
பௌராணிகரும், பசுபதீச்சுரன் கோயில் அருச்சகரும், கர்ஷ
ணாதிப் பிரதிஷ்டாந்தம் பிரதிஷ்டாதி உற்சவாந்தம் உற்சவாதிப்
பிராயச் சித்தாந்தமுள்ள சைவாகமக்கிரியைகளில் வல்லுநரும்,
"சமன் செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை"யைத் தமக்கணிகலமாக உடையவரும், அப்பர்
ஆயுட் பருவமுற்றும் அடையுமாணவர்கட்குச் செப்பமாய்க்
கல்வி கற்பிக்குந் தேற்ற நனியுடையரும், தம் நடையினால்
மாணாக்கரையும் நன்னடையினராகச் செய்பவரும் ஆகிய

பிரமஸ்ரீ ம. முத்துக்குமாரசுவாமிக் குருக்களவர்கள்
அபிப்பிராயம் இது :—

திரிசிரபுரத்து வித்துவ சிரேட்டரும், சுத்தாத்துவித
சைவ சித்தாந்தப் பேரன்பரும், நந்திபெருமான் சிவபிரானி
டத்து வேண்டிப் பெற்றுக்கொண்ட பெரும்பேறு பதினாறனுள்
முதற்கண்வைத் தெண்ணப்பட்ட "மறைக ணிந்தனை சைவ
நிந்தனை பொறுமனை" முடையவரும், லௌகிக உத்தியோகத்
திலே அமர்ந்தும் ஆங்கிலங் கற்ற வேனையோர்
போல அதன் வயத்தினராகாது, சிவதூஷண சிவசாஸ்த்
திர தூஷண சிவனடியார் தூஷண கண்டனமும் சிவபூசா
நியமமுமாகிய வைதிகோத்தியோகத்திலே அமர்ந்திருக்கின்ற
வருமாகிய ஸ்ரீமத் சாம்பசிவ பிள்ளையவர்கள் ஸ்ரீமத் கா. சுப்பிர
மணிய பிள்ளையவர்களால் வெளியிடப்பட்ட "திருநான்மறை
விளக்க"த்தைப் பார்வையிட்டு அது காண்டல் கருதல் உரை
என்னும் மூன்று பிரமாணங்கட்கும் பொருத்தமில்லாதிருத்
தலைக்கண்டு அதனை உலோகோபகாரமா வெளிப்படுத்தி
யாவர்க்குந் தெரிக்கக் கருதித் "திருநான்மறை விளக்க
வாராய்ச்சி" எனப் பெயரிய சிறந்த நூலொன்றியற்றி அச்சிடு
வித்து அதில் ஒரு புத்தகம் எமது அபிப்பிராயம் எவ்வியல்பிற்
றென்றறிதரற்பொருட்டு எமக்கனுப்பினார்கள்.

நாம் அவ் "வாராய்ச்சி" நூலை மிக நன்றாக அமைந்து
பார்வையிட்டேம். "ஆராய்ச்சி" உடையார், "விளக்கம்" உடை
யார்கொள்கைகள் நவீனகற்பனைகளென நன்கு விளக்கிச்
சிறப்புடைப் பிரமாணங்கொண்டு மறுத்திருத்தல் மெய்யுணர்வு
டையார் வியத்தற்குரிய மிக்க அழகு வாய்ந்திருத்தலை ஓர்ந்து
கழிபெருங் காதலும் களிப்பும் வியப்பும் உடையமாயினேம்.

கலியுக தருமத்திற்கேற்ப உண்மையுணரும் கல்வியறிவிலார் பரந்துவரும் இக்காலத்திலே உண்மையுணரவல்ல கல்வியறிவாளராம் ஸ்ரீமத், திரு. மா. சாம்பசிவபிள்ளையவர்கள் இருத்தலை "ஆராய்ச்சி" நூல்வாயிலாக அறிந்து அற்புதமிஃதற்புதமெனக் கருதிக் கூதூகலமடைகின்றேம்.

"வடமொழி வேதங்களையும் வடமொழி ஆகமங்களையும் பிரமாணமாகச் சைவர்கள் கருதுவாராயினர், அங்ஙனம் கருதினமையால் வந்த மயக்கிற்களவில்லை" என்றூர் 'விளக்க' மெழுதினேர்.

அவற்றைப் பிரமாணமாகக் கருதின சைவர் யாரெனில், சிவபிரான், உருத்திரர், நந்திபெருமான், சனற்குமாரர், சத்தியஞானதரிசனிகள், பரஞ்சோதி முனிவர், விஷ்ணுமூர்த்தி, பிரமதேவர், இந்திரன், மற்றைத்தேவர்கள், மெய்கண்டதேவர், அருணந்திசிவாசாரியர், மறைஞானசம்பந்தர், உமாபதிசிவாசாரியர், திருவாவடுதுறை யாதீன சந்நிதானங்களும் அவர்கள் சீடர்களும், தருமபுரவாதீன சந்நிதானங்களும் அவர்கள் சீடர்களும், திருவண்ணுமலை யாதீன சந்நிதானங்களும் அவர்கள் சீடர்களும், சொர்க்கபுரவாதீன சந்நிதானங்களும் அவர்கள் சீடர்களும், அரதத்தாசாரியரும், அப்பைய தீக்ஷிதரும், நீலகண்டசிவாசாரியர் முதலினேருமேயாம். திருவருட்பேற்றிற்குச் சிறிது இலக்காது சாத்திரஞான மணந்தானும் வீசப்பெருதார் மயக்கற்றவராம். சிவபிரான் முதல் திருவருட்பேற்றிற் கிலக்காய் மெய்யுணர்ந்தாரெல்லாம் மயக்கமுடையராம். "கண்டனமின்றியாங் கலியின்வண்ணமே" மயக்கமற்றவர்க் கெல்லாம் மயக்கங் கற்பித்தார்க்கும் அவரைச் சார்ந்தார்க்கும் ஆராய்ச்சி நூலால் மயக்கநீக்கிய பேரறிஞராகிய சாம்பசிவ பிள்ளையவர் கட்கு எல்லா நன்மைகளையும் ஈந்தருளும்வண்ணம் பசுபதீசுவரரைப் பிரார்த்திக்கின்றேன்.

---

யாழ்ப்பாணத்தைச் சார்ந்த பருத்தித்துறை வாசரும், கந்தபுராண விருத்தி யுரையாசிரியரும், வாக்கிய பஞ்சாங்க கணிதரும் தமிழ் சமஸ்கிருத பாஷாபிமானரும், வித்தியா விருத்திச் சங்கத் தருமகர்த்தரும் ஆகிய

**பிரமஸ்ரீ ச. சுப்பிரமணிய சாஸ்திரிகள்**

அபிப்பிராயம் இது :—

வடமொழி தென்மொழி யென்னும் இருமொழிகளும் எங்கட்கெல்லாம் இரண்டு கண்களெனத்தக்கனவாய் இன்றியமையாதிருப்பவும் அஃதறியாமையினாலோ! ஒரு மொழி

மேன்மட்டுங் கொண்ட அபிமானத்தாலோ! கலியின் முதிர்ச்சியினலோ! சிலர் தென்மொழியாகிய தமிழைப் போற்றுதற்காக வடமொழியை ஒதுக்கத் தலைப்பட்டுச் சிற்சில ஆண்டுகளாகப் பற்பல விபரீதங்களைச் செய்து வருகின்றனர்.

குறித்த இருமொழிகளினதும் தாரதம்மியங்களை ஆராய்ந்து நிச்சயிப்பது அவ்விரண்டினும் நிரம்பிய புலமையுடையார்க்கே இயைவதொன்றாம். அத்தகைய புலமையுடையார் பலர் பற்பல நூல்களையும் உரைகளையும் இயற்றியுள்ளார், அவையெல்லாம் அனைவராலும் அன்றுமுதல் இன்றுவரை பொன்னேபோற்போற்றப்பட்டு வருகின்றன. அவர்கள் தங்கள் நூல்களிலாவது உரைகளிலாவது இங்ஙனம் தூரபிமானச் செயல்களைச் செய்யாது உள்ளதைஉள்ளவாறே கூறிப்போந்தனர்.

இக்காலத்திலே ஒரு தமிழ்நூலைத்தானும் நல்லாசிரியரிடத்தே ஐயந் திரிபு அறியாமை என்னும் முக்குற்றமும் நீங்கக் கல்லாது தாமாகவே மனம்போனவாறு பார்த்துவிட்டு, தாமறியாத வடமொழியை இகழ்வாரும், அம்மொழியிலிருந்து தமிழிலெடுத்தாளப்படும் நூல்களைமறுத்துப் பிறிது கற்பனைசெய்வாரும், தமிழில்வந்து வழங்கிய வடசொற்களைத் தமிழிற்கே இயற்கையாகவுடைய சொல்லென்பாருமாய் வழூஉப்படுவார்பலர்.

எங்கள் தமிழ்மொழி, வடதிசையினின்று வந்தவரும், வடமொழியை இனிது பயின்றவரும் ஆகிய அகத்தியமகாமுனிவரால் † ஆதியில் வளர்க்கப்பெற்றது. அம்முனிவர்க்குக் கண்ணுதற்பெருங்கடவுளால் உபதேசிக்கப்பட்டது. ஆதியில் தமிழிலக்கணநூல் செய்தாரும் அம்முனிவரே! அவருக்குப் பிற்பட்ட தொல்காப்பியனாரும் தமிழ் மொழியோடு * ஆரியமொழியும் கற்றே இலக்கணநூல் செய்தனர். பண்டைக்காலத்தின் சங்கத்திருந்து தமிழாராய்ந்த புலவருள்ளும் பலர் இருமொழிகளினுந் தேர்ச்சியுடையரா யிருந்தனர். சங்கந்தவிர்ந்த பின்னிருந்த புலவருள்ளும் பலர் அவ்வாறேயிருந்தனர். அவர்களால் வடமொழியி லிருந்த நூல்கள் பற்பல தமிழில் மொழிபெயர்க்கப்பட்டன. எவராவது ஒருவர் ஒரு மொழியை முற்றக்கற்பினும் அம்மொழிக் கியைபுடைத்தான பிறிதொரு மொழியையுங்கற்பின் புலமைத்திறம் மிக நிரம்பப் பெறுவர். ஆதலின் தமிழைக் கற்போர் தமதுபுலமை மிகநிரம்புதற்பொருட்டு உடன் கற்கற்பாலது அதனோ டியைபுடைய

† அகத்தியன் பயந்த செஞ்சொலாரணங்கு என்னும் பாரதனூலுடையார் கூற்றாலும் அது நன்கு விளங்கும்.

* ஐந்திரநிறைந்த தொல்காப்பியன் என்பதனாலுமஃதறிக

வடமொழியே. வடமொழிகற்போர் தமதுபுலமைமிக நிரம்பு தற்பொருட்டு உடன்கற்கற் பாலது அதனோடியைபுடைய தமிழ் மொழியே.

தமிழிற்குச் சிறப்பெனக் கூறத் தக்கனவாய சொற்களின் றொகையினும்பார்க்க ஒருமடங்கதிகமான சொற்கள் வடமொழியிலிருந்து தமிழில் வந்து வழங்குகின்றன இங்ஙனமிருத்தலால் அச்சொற்களைச் சேர்த்து நூல்களையும் உரைகளையும் இயற்றிய தமிழ்ப் பெரும் புலவரது பாததூளியின் றுணையளவேனும் இருபாடையும் பெறுதார் அச்சொற்களை நீக்கவும் தமிழை வடமொழியுடன் றொடர்பற்ற பாஷையாக்கவும் துணிவது நகைக்கிடனுமன்றி முற்றுப்பெறத்தக்க கருமமன்று.

பண்டைக்காலத்தில் பற்பல வருணத்தாரும் வடதிசையினின்று தமிழ்த்தேசத்தில் வந்து காலந்தோறும் குடியேறினர். தமிழ்த்தேயத்தில் நான்கு வருணத்தார் முதலாயினோராயிருப்போரனைவரும் வடதிசையினின்று வந்து குடியேறினவர்களது பரம்பரையினரே யென்று நினைத்தற்குப் பல காரணங்களுண்டு. இக்காலத்தில் இத்தேசத்தில் இருப்பவர்கள் பூர்வீகமான தமிழரின் பரம்பரையினரென்றாவது வடதிசையினின்று வந்து குடியேறினவர்களின் பரம்பரையினரென்றாவது தங்களை நிச்சயித்துக்கொள்ள வியலாது. ஆதலின், இருமொழிகளுள் ஒன்றைத் தம்முடையதென்றும், மற்றொன்றை அங்ஙனமன்றென்றும் நினைப்பதும், துரபிமானங் கொண்டு ஒரு பாஷையை வெறுப்பதும் பேதமைப்பாலதாம். இருமொழிகளையுங் கற்றலென்! ஒன்றைமாத்திரங் கற்றலுமென்! அனைவரும் அவ்விரு மொழிகளையும் தாய்மொழி யென்று போற்றுதல் கடமை. இஃதிங்ஙனமிருக்க, ஸ்ரீமான் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் அட்வக்கேட் "திருநான்மறை விளக்கம்" என்னுந் தலைப்பெயர் புனைந்து எழுதிய வியாசத்தில் "நான்மறை" என்பது வடமொழியிலுள்ள நான்கு வேதங்களல்லவென்றும், "நான்மறை" யென்னு நாமத்துடன் தமிழிற்றானே ஒரு நூலிருந்திறந்ததென்றும் அங்ஙனமிறந்த நூலையே நான்மறை யென்பதுணர்த்துமென்றும் வெளிப்படுத்தினர்.

அவ்விஷயத்தில், "பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற—செய்யாமை செய்யாமை நன்று" என்னுந் திருக்குறட் கிலக்கியமாகிய வித்துவ சூளாமணியாம் ஸ்ரீமான் திரு. மா. சாம்பசிவ பிள்ளையவர்கள் "திருநான்மறைவிளக்க ஆராய்ச்சி" என்னும் பெயருடன் தம்முடைய அபிப்பிராயத்தை ஒரு புத்தகமாக எழுதி அச்சிட்டிருக்கின்றார்கள்.

அவர்கள் தம்பாலார் துவாரமாக அதில் ஒரு புத்தகம் எமக்குச் சேர்ப்பித்து எமது அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படியாங் கேட்கப்பட்டேம்.

எமது அபிப்பிராயம் வருமாறு :—

தமிழில் நான்மறையென்னும் பெயருடன் ஒருநூல் இருந்ததாக எவ்வாற்றானுந் தெரியப்படவில்லை. இருந்ததென்று சொல்லுதற்கு யாதொரு ஆதாரமுமில்லை. மறை என்பது வேதத்தின் பரியாய நாமம். ஆதலால், நான்மறை என்றது வடமொழியிலுள்ள நான்கு வேதங்களையே யுணர்த்தும்.

"நாடா முதனூன் மறைநான் முதனூவிற்—பாடா, விடைப்பா ரதம்பகர்ந்தேன்" என்னும் நாமகள் வாக்கும் வடமொழி வேதங்களையே வெளிப்படுத்துகின்றது; என்னை! "இடைப் பாரதம் பகர்ந்தேன்" என்றதனாற்பாரதம் வடமொழியாதலின் இனம்பற்றி மறையும் வடமொழி யென்பது தேற்றமாகலின்.

இனி, தமிழிற் செய்யப்பட்டதோர் நூலையே கலைமகள் வாக்கு வெளிப்படுத்திற் றென்னின், அதுவே முதனூலுமாய் அன்று தொட்டின்றுவரை யாவராலு மாளப்பட்டு வரல்வேண்டும். கடல்கோள், ஆட்சியை அசைக்கவுமாட்டாது; ஆகலானும் மறைதமிழன்று.

வேதங்கள் இப்பரதகண்டத்திலே பற்பல மதத்தார்க்கும் முதனூல்களாக விருக்கின்றன. அவர்கள் அவ்வேதத்திற் கூறப்பெற்ற மந்திரங்களாற் சந்தியாவந்தன முதலிய கருமங்களை நாடோறுஞ் செய்து வருகின்றனர். பலர் அவ்வேதத்திலமைந்த மந்திரங்களைக் கொண்டே மதசம்பந்தமான கிரியைகளைச்செய்து வருகின்றனர். அங்ஙனஞ் செய்வோர் ஒரு தேசத்தின்மாத்திர மிருப்பவர்களு மல்லர். பற்பல தேசங்களிற் பலகோடிக் கணக்கினராக விருக்கின்றார்கள். தமிழிற் செய்யப்பட்ட நான்மறை யென்னு நூலொன்றுளதாயின் அவரெல்லாம் அந்நூலிலுள்ள அம்மந்திரங்களையேகைக் கொண்டவர் என்று சொல்லல்வேண்டும். அதுமெய்யாயின் அந்நூலிறப்பதற்குக் காரணமின்று.

ஒரு நூலிறப்பதாயின் அதனைக் கற்பாரும் கேட்பாரும் ஆதரிப்பாரும் இன்மையே காரணமாகும். அல்லது உலக அழிவே காரணமாக வேண்டும். பரதகண்டத்திலே ஒரு சிறு பாகமழிந்தபோதே அந்நூலும் அழிந்ததெனின், அந்நூல் அக்கண்டத்திலேயிருந்தவர்களாற் கைக்கொள்ளப்படாத நூலாய் முடியும். "மறைவழி மதங்கட் கெல்லா மறைபிர மாணம்"

"நான்மறைக் குலத் தந்தணர்" "மறையவர்" என்று வரும் பற்பல ஆன்றோர் வாக்குக்களானே அந்நூல் பரந்து வழங்கிவரும் முதனூலென்பது தெளியக்கிடக்கின்றது. இத்தகைய பெருமைவாய்ந்த முதனூலை மாற்றுவிக்கக் கருதித் தமிழ் நூல் கடல்கோட்பட்டதென்றல் சுருதி யுத்தி அநுபவங்கட்குச் சிறிதும் பொருந்தாது.

தற்காலத்திலும் அத்தகைய வேதங்களை அநுசரிப்பவர்களாகக் கோடிக் கணக்கானோர் இப்பரதகண்டத்தில் வாழ்கின்றனர். அவரெல்லாம் தங்கள் முன்னோர் தமிழில் நான்மறை என்னும் ஒரு நூல் இருந்ததென்றும், அதன் வழியே நித்திய நைமித்திகங்களைச் செய்து வந்தார் என்றும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். குறித்த சுப்பிரமணிய பிள்ளையவர்களும் அவர்பாலார் சிலரும் அதற்கு என்ன செய்யக்கடவர்.

வேதங்கள் முன்னர்க் குறித்தவாறே பற்பல மதத்தினரால் முதனூலாகக் கொள்ளப்பட்டபோதும் வைதிகர் எனப்படுவோர் வேதத்தை மாத்திரமே முதனூலாகக் கொள்பவர்கள். வைதிக சைவர் எனப்படுவோர் வேதாகமம் என்னும் இரு நூல்களையும் முதனூல்களாகக் கொள்பவர்கள். ஆதலால் நான்மறை சிறந்ததெனக் கூறும் இவர் கொள்கை இவ்விருபாலார்க்கும் மிக வெறுப்பைத் தரத்தக்கது. அதுவேயுமன்றி வேத நிந்தனையாகிய மிகு பெரும்பாவமுமாம். இவர் கொண்ட ஆகமக் கொள்கைக்குங் கதி யிதுவேயாம்.

இவ்விதமான விபரீதங்களில் அறிவிற் குறைந்தார் ஏமாந்து பழி பாவங்களை அடையாதவண்ணம் குறித்த ஸ்ரீமாந் சாம்பசிவ பிள்ளை என்னும் நடுநிலையாளராகிய வித்துவ சிரேட்டரவர்கள் செய்து வரும் விடாமுயற்சியாகிய பெருஞ் சிவபுண்ணியம் மிகவும் வியக்கத்தக்கது. பொதுநலங்கருதி இப் பெருமைவாய்ந்த ஆராய்ச்சிநூலை வெளிப்படுத்திய ஆசிரியரவர்களுக்கும் அதற்கு எவ்வகைத் துணைபுரிந்தார்க்கும் பல்வகை நன்மைகளெல்லாவற்றையும் பாலித் தருள்புரியுமாறு பரமசிவன் பாதாரவிந்தங்களைப் பணிந்து பரசுதும்.

---

யாழ்ப்பாணத்து வட்டுக்கோட்டைவாசரும், பாரத இராமாயண காவியங்களின் ஒவ்வொரு பகுதிக்கு உரையாசிரியரும், சிறுத்தொண்டநாயனார் புராணத்தை எழுத்து வர்க்கத்தோடு அகவலாகச் செய்தவரும், சித்தாந்தத் தெளிவாகிய ஆறும் புத்தகம் இயற்றினவரும், விரதமான்மிய முதலிய நூல்களைச் செய்

தவரும், இலங்கைத்தேசாதிபதியவர்களால் இருநூற்றைம்பது (உருO) ரூபா உபகாரம் பெற்றவருமாகிய மகாவித்துவான்

ஸ்ரீமான் ஆறுமுகப் பிள்ளையவர்கள்

அபிப்பிராயம் இது :—

ஸ்ரீமாந். அட்வக்கேட் கா. சுபபிரமணியபிள்ளை யவர்கள் சென்னைச் செந்தமிழ்ச்செல்வி வாயிலாக வெளிப்படுத்திய திருநான்மறை விளக்கம் சைவப்பெரியார் கொள்கைக்கு மாறாயிருப்பக்கண்டு சைவத்திருவாளர் திரு. மா. சாம்பசிவபிள்ளையென்னும் மகா மேதாவியாரவர்களால் "திருநான்மறை விளக்கவாராய்ச்சி" எனச்சிரத்தானப் பெயர்புனைந்து ஒரு பெருநூல் எவராலும் எக்காலத்தும் மறுக்கப்படாத பலப்பல பிரமாணகுழூஉக்கள் துறுமி நின்றிலங்க இயற்றப்பட்டு அச்சுவாகனத்திவர்ந்து விளங்குதலையாம் கண்ணுற்றபோது அட்வக்கேட் அவர்கள் பயனற்ற வழியில் படும்பாட்டைப் பயனுற்ற வழியிற் பட்டால் அவர் தமக்கு மாத்திரமன்று பிறர் தமக்கும் பெரிதும் பயன்படுமே யென்று இரக்கமிகவுற்றேம்.

சைவ சமயாசாரியர்களாலும், சந்தானசாரியர்களாலும், திருவருட் பொலிவெய்திய பிற பெரியோர்களாலும் சிவபெருமானே வேத, சிவாகமங்களை "அருளுருக்கொண்டு" ஆன்மாக்கண்மீது முகிழ்த்த பெருங் கருணையால் அருளிச் செய்தார் என்னும் உண்மை அவர்கள் நூல்களிற் கூறப்பட்டிருத்தலை மறுக்க யாரால் முடியும்!

வடமொழியும் தென்மொழியும் சிவபிரானால் விரும்பப்பட்ட சிறந்த சமத்துவ முடைய பாடைகள் என்பதூஉம், இறைவர் இரண்டனையும் ஒப்பத் தழுவினார் என்பதூஉம் அப்பெரியாரால் அவர்கள் நூல்களிலே இடந்தொறும் இடந்தொறும் நன்கு விளக்கமுறக் காட்டி நிறுவப்பட்டன. அவர் நிறுப்பை மறுப்பவர் மறுப்பும் மறுப்பாமோ! மறுக்க நினைப்பினும் மீளா நரகிற்காளாகவேண்டும் என்று முழங்குஞ் சைவ சாத்திரங்களை ஒருகட் பார்வை செய்யாது இருகட் பார்வை செய்து சிந்திப்பின் எமது உறவினராகிய அட்வக்கேட் இனி அவ்வாறு மறுப்பெழுதப் புகாரென்பது எமது கருத்து.

தமிழில் வேதமில்லை என்பதும், அது தமிழிற்கு ஒரு குறை யென்பதும் அட்வக்கேட் கொள்கை போலும். அறிஞர் அங்ஙனம் கொள்ளுதல் அழகன்று. அங்ஙனம் கொள்ளும் அறிஞர்க்கு யாம் தமிழில் கடல்கோட்படாது இன்றும் முன்னும் பின்னும் நிலவியிருக்கும் தமிழ் வேதத்தைத் தெரிக்கின்றாம். அதுதான் தேவாரமுதலியன. அவைகள் வெள்ளிமலைக்

கண் சிவபிரானால் செய்தருளப்பட்டு விளங்குகின்றனவென்பது சிவரகசியத்தால் அறியலாம். அவற்றில் சில பாகந்தான் சைவ சமயகுரவரால் வெளிப்படுத்தப்பட்டன. அவை தோத்திர ரூபமேயாம். சாத்திர ரூபமன்று.

இங்ஙனமிருத்தலால் இவ்விரு மொழிகளுள் ஒன்றற் கொன்று உயர்வு தாழ்வுள்ளன வென்று கொள்ளுதல் இறைவன் றிருவுள்ளத்திற்கிசையாது.

ஆதலின், சைவசமயமாகிய ஆண்மகனுக்கு இரண்டு கண் களாக விளங்குகின்ற இவ்விருமொழிகளையும், ஆண்டுள்ள வேதங்களையும் ஒப்பநோக்கிப் பயன்பெறாது ஒன்றைச் சிறப் பித்து மற்றதை இகழ்தல் ஒருகண்மூடி ஒருகண் விழித்தல் போலாம்,

அறிஞர்களே! இவ்வுண்மையைச் சித்தசமாதானத்துடன் தேர்ந்து தெளிந்து இறைவன் றிருவுளத்திற் கேற்ப இரு பாடைகளிலுமுள்ள நூல்களைச் சிரத்தரனமாகச் சிரமேற் சூடிப் போற்றிப்புகழ்ந்து சகோதர பாவமுடையர்களாய் ஆனந்தவாழ் வடைவீர்களாக.

நம்முடைய சிற்றறிவும் இத்துணைப் பெரும்பேற்றை விளக் குதற்கேதுவாக ஸ்ரீமாந் சாம்பசிவபிள்ளையாகிய பேரறிஞரவர் கள் "திருநான்மறைவிளக்க வாராய்ச்சி" என்னும் அருமை வாய்ந்த நூலை வெளிப்படுத்தினமைக்கும் யாம் இப்பிறப்பின் மாத்திரமன்று எப்பிறப்பினும் செய்யுங் கைமாறு அவர்கள் செய்தநன்றியை மறவாதிருக்கு மத்துணையேயாம். எம்மைப் போலவே ": ஆராய்ச்சி" நூலால் பயனெய்தும் யாவரும் அப் பெரியார் கைமாறு கருதாது செய்த நன்றியைச் சிந்தித்து வாழ்க.

அப்பெரியாரைப் பூரணசீவந்தராய் வைத்து எம்ம னோர்க்கு இதுபோலும் பெருநன்மைசெய்யுமாறு பேரருள் புரிந் தருளும்வண்ணம் எல்லாம் வல்ல இறை சிவன் றிருவடிகளை இறைஞ்சிவாழ்வாம்

---

பெங்களூர்ச் சமஸ்தான கலாசாலை உயிர்நூலாசிரியர்
ஸ்ரீமத் வித்துவ சிரோமணி செல்வச் சிரஞ்சீவி
ப. மு. சோமசுந்தரப் பிள்ளையவர்கள், M.A., ஆனர்ஸ், L.T.
இயற்றிய
சிறப்புப்பாயிரம்.

உலகெ லாமலர் சிலம்படி யொருபவ னுவப்பத்
திலக வாணுதற் சிவைவயிற் றிரோதையஞ் செல்வி
யிலக மற்றவள் பொருளவாக் கலைகளந் தியையு
மலகி லக்கலை தத்துவ முதலைந்தின் வயங்கும் க

பொன்னஞ் சாரசப் பொகுட்டுறை புங்கவன் போற்ற
வன்னந் தாவிய நிவிருத்தி கலையதன் மாட்டு
மன்னும் பூவிடை நாவலந் தீவிதின் வாய்ப்பச்
சொன்ன பாரத மாவரு டந்தனித் தோன்றும் உ

கற்றைச் செஞ்சடைக் கருணையங் கடலெனுங் கபாலி
யுற்றப் பேறிவ னுதவிடக் குமரியென் றோங்கு
மொற்றைக் கண்டத்தி னுயர்மறை யொழுக்கமு முய்வான்
பெற்ற சாதிகள் சீலமு முயர்வன பெரிதும். ௩

காசி காஞ்சியுங் கங்கையும் யமுனையுங் கவேரன்
மாசில் மங்கையு மனத்தக வாசற மாற்ற
வாசி வாவென வாகமாந் தப்பொருள் வழங்குந்
தேசு லாவிய பொழிலிது தெள்ளிதிற் சிறப்ப. ௪

ஓத லின்றியு முய்பொரு ளாய்தலை யொழித்துந்
தாத லர்ந்தசெம் மலர்கொடு தாணுவைச் சகத்தோர்
காத லன்பொடு பழிச்சுத லின்றியுங் காட்சி
மேத கத்தரூஉந் திருத்தொண்டர் பதியிதன் விழுப்பம். ௫

வேறு.

பரசிவ லிங்கந் தன்னைப் பரசுவார்க் கின்ப நல்க
விரவுறு குமரித் தேஎத்து விளங்குவே தாக மங்கள்
வரவினை வழுத்த லாமே வாலறி வினன்மா சத்தி
நிரவுறு குடிலை நோக்க நிறைந்தன நாதம் விந்து. ௬

விந்துவி னெழுத்துத் தோன்ற மேற்சதா சிவன்பால் வேத
தந்திர மனைத்து மாய தாமரைக் கண்ணு னந்தி
வந்திவண் வழிப்ப டுப்ப வாய்ப்பன கலைகள் யாவு
மெந்திறற் கயிலை யாதி யியன்மர பிரண்டே யிப்பால், ௭

சுத்தமா மாயை வாயிற் சூக்குமை யாதி வாக்கு
மத்தமாம் பவஞ்ச வாழ்வு மனைதர வந்நால் வாக்கின்
முத்தமார் முதலி ரண்டு மொழிசிவ தத்து வத்து
முத்தம சத்தி யாகு முரிமைகொள் தத்து வத்தும். அ

அணிகிளர் மூன்றும் வாக்கிங் காகம மூல மாக
வினையிலாச் சதாசி வத்து மிணங்கமா கேசு ரத்துத்
துணிவருஞ் சூக்கு மஞ்சேர் தாழ்வில்லை கரிதான் மேவப்
பணியதன் பகுப்பா விந்தப் பார்மொழி பிரிந்த வன்றே. கூ

நல்லற மாதி நாட்டும் நற்றமிழ் மொழியு மான்ற
வல்லியங் கமலைப் புத்தே ளாரிய மொழியு மாகச்
சில்லரி யெழுத்தி னேங்குந் திராவிடங் கௌட மெல்லா
மெல்லெனப் புவனி மீது விரிந்தன பற்ப லாற்றுன். க0

வேறு

உத்தம மறையின் வழக்கொடு புணர்ந்த
வுயர்தவ நான்குசா தியரே
மெய்த்தவர் கலப்பான் விரவினர் பலரே
மேதகு மாகம வழியிற்
றுய்த்திடும் பரார்த்த பூசைசெய் குநரே
சூழ்சிவற் பணிபவர் பலரே
கைத்தலில் நிகம வொழுக்கினை விடுத்துக்
கதித்தவவ் விராத்தியர் பலரே. கக

அரசர்தங் குலத்தி னவனியிற் பிறந்து
மங்கிவேட் பொழியவை வேள்வி
விரசுற வுஞற்றும் வேளிர்தம் மரபின்
மேம்படு குலத்தினர் பலரே
கரிசிலாச் சைவ வைதிக நெறியைக்
கடைப்பிடித் தொழுகுநாற் குலத்து
விரிவுறு மவரே விரவினர் பலரே
வியன்றிணை மாந்தர்கள் பலரே. கஉ

சாதிக ணெறியிற் றப்பிடா ராகித்
தனயரு மனைகளிற் றப்பா
தோதிய வெழுத்தா மைந்தினை யெண்ணி
யுறுபிணி வருவதற் கஞ்ச
நீதியின் மனுநூன் முறைமுறை யொழுகி
நிகழ்சிவ தருமமே நடத்திக்
காதிய வினைகள் கடந்தரு ணெறியிற்
கலந்திடப் பொருந்துநர் பலரே. கஙு

வேதநூல் வழியுஞ் சைவநூன் முறையும்
விரிதரு வைதிக சைவ
மோதுநூற் படியு மிருதிநூற் புராண
மிளிரிதி காசநூல் விதியுஞ்
சாதக முறைக்கும் பாஞ்சராத் திரமுஞ்
சாற்றருந் தந்திரம் பிறவும்
வாதமார் சமயப் புறவுரை நூலும்
வழுத்துநர் செறிகுநர் பலரே. கச

தீத்தொழி லொருவிச் சிவபாற் போற்றத்
திகழுமிப் பரதகண் டத்தே
யாத்திரண் மலிய வந்தணர் பல்க
வலமந்து மறத்துறை நலியக்
காத்திளங் கன்றைக் கறவையா னென்னக்
கருதலர்ச் சவட்டிய மன்னர்
பார்த்தனி னோம்ப விளங்குறாஉ நான்கு
பழந்தமிழ் மண்டல மாதோ. கரு

வேறு.

உலையாத வளஞ்செறியம் மண்ட லத்தே
யுயர்தில்லை யந்தணருங் கலயர் நந்தி
தலையாய வகத்தியரும் புரையும் பார்ப்பார்
தகுதியெவை வேதியர்யார் வேதம் யாவை
மலைவாய மயல்கடியும் இலேகை யாது
மன்னுதமிழ் மாமறையி னிலங்கக் கூறும்
நிலையாய விருக்காதி யார ணத்தை
நிறீஇயினான் * யாவனென நிச்ச யித்து. கசா

மலர்தலைமா நிலஞ்சைவத் துறையி னிற்ப
வளர்புகலி யவதரித்த ஞான வள்ளல்
நிலவுதமிழ் முதலாய தமிழ்வே தத்தின்
நித்திலக்கோ வைகள்யாவும் நிறைத்துக் காட்டிக்
கலியிருளைத் துணித்திடுமுத் தமிழ்நான் மாடக்
கலையமர்முச் சங்கத்தார் கருத்துங் கூட்டி
யலர்கதிர்நேர் பெருநூலொன் றமைத்துத் தந்த
வாண்டகைத னற்சார்பை யறையக் கேண்மின். கஎ

* யாவன் = தக்கணாமூர்த்தி

சுறவுயர்த்த விடைக்கொடியான் பாண்டி நாட்டுத்
துரிசறுத்த வேளாளர் மரபிற் கோலஞ்
செறிகதிர்முத் தப்பொருநைக் கரையா ளப்பேர்
திகழ்குடியி னறம்வளர்த்த சிவயோ கத்தாள்
இறுமருங்குல் செய்தவத்தாற் பரனை மாறு
திறைஞ்சுமா சிலாமணியார்க் குதித்த பாலன்
நறுநுதல்வெண் மதிநிகருங் காந்தி யம்மை
ஞானகலை தெருட்டவுணர் ஞேய நூலன். கஅ

பண்பழுத்த சொல்லாளன் செழியர் தேத்துப்
பழம்பழுத்த வில்லாளன் பரையி னோர்பா
னண்பழுத்த கல்லாளன் நவின்ற சைவ
ஞானநெறி வில்லாளன் மெய்கண் டார்க்கோர்
பண்பழுத்த பரம்பரையி னூர்ந்த மானு
பரநல்லூர்ப் பரஞ்சோதி வள்ளல் பாங்க
ரெண்பழுத்த சிவதீக்கை யியையப் பெற்றிங்
கெழில்பழுத்த சிவபூசை யியற்று மேலன். கக

ஒருமாது பாலூட்ட மாத ராரு
மொருமாது பால்சொரிய வுவந்து ஞானந்
தருகாழி வேந்தர்முதற் றலைவர் ஞான்றுந்
தமிழ்முறையைக் கோத்தநம்பி யாண்டார் ஞான்றும்
பொருமாழி மன்னவர்தாம் போற்று வந்த
புணர்வேத மொழியாவை புரிந்த வேள்வி
தருடோழி சூழ்புடவித் தருமம் யாவை
தாமென்னச் சரிதத்தா னுய்ந்த தூயன். உ0

கள்ளவிழ்பூங் கொன்றையணி யானே றேறி
கனியுறழ்சொற் கனிதழீஇ மாக்கீழ் மன்னி
யள்ளிலைவேற் குமரனொடு மமைந்த காஞ்சி
யணிநாட்டுச் சேக்கிழார் மாற்றத் தோடும்
புள்ளுணங்கு கொடியுயர்த்துப் புனற்கட்டுஞ்சும்
பொருபடைய மான்முதலோர் போற்றுஞ் சீர்த்தி
யொள்ளொளிய சிவஞான போத நூலிற்
குறைவகுத்த முனிக்கரசு கூற்றத் தோடும். உக

வேறு

ஒருசிறிது முரணுமே யுரைக்குமொழி கற்றுடையான்
தருதருமந் தவிராமே சங்கரன்பாற் பற்றுடையான்
திருமணிநற் பூதிதிகழ் செல்வமெலாம் பெற்றுடையான்
கருமணிவிற் கண்டத்தான் கழற்குழுவன் முற்றுடையான். உஉ

பூந்தளிரின் முப்பொழுதும் போற்றுவார்க் கருள்சுரப்ப
மாந்தளிரா மலர்ப்பதத்து மட்டுவார் குழலம்மை
தேந்திவலை யாத்தியலர் செஞ்சடிலப் பிரான்பக்கற்
சேந்தமருஞ் செம்பியர்தஞ் சிரபுரத்துச் சேர்வுடையான். உஉ

ஆங்கிலஞ்செந் தமிழ்பயின்ற வருங்கலையி னாதரவாற்
பாங்குபெறத் துரைத்தனத்துப் பற்றொழிலு முனூற்றிமுனந்
தீங்கொறுக்கு நலத்தண்டத் திறலதிகா ரமும்வகித்து
வாங்குகட லுடுத்தபுவி வயங்குபுக ழுடுத்துடையான். உச

ஆரதிரு முறையாய்வி னதிநுட்ப நூல்கண்டான்
ஓரதிரு மார்வமுளா ரோரமொரு பால்விண்டான்
பேரதிரு மானேயம் பெரிதுடையான் சிவமுண்டான்
சீர. திரு. மா.சாம்ப சிவநாமங் கொண்டானே. உரு

---

சென்னை இராஜாங்க சட்ட நிர்மாண சபையில் அங்கத்தினராயிருந்த ஸ்ரீகாழி ஸ்ரீமான் கி. சிதம்பரநாத முதலியார் அவர்கள் இளவலாரும், பண்டார சாத்திர முதலிய அரிய பெரிய நூல்களை அச்சிடுவித்துத் தமிழ்ச் சைவ மக்களுக்கு உபகரித்துவரும் வித்துவ சிரேஷ்டருமாகிய

## திருவாளர் ச. சதாசிவ முதலியாரவர்கள்

இயற்றியது.

சீர்சான்ற வேதசிவா கமங்களினுண் மைப்பொருள்சேர்
செவ்வி வாய்ப்ப
ஏர்சான்ற நான்மறைக ளிவையெனமேற் கோள்கிறுவி
யெவரு மெச்ச
நேர்சான்ற நான்மறையா ராய்ச்சியெனச் செப்புநூ
னெறியிற் றந்தான்
பேர்சான்ற திரிசிரமா புரத்தமருஞ் சாம்பசிவப்
பெரியோன் மாதோ

இப்பெரிய நூலதனை வாசிப்போர் தமிழ்மொழியி
னேற்றத் தோடே
ஒப்பரிய வடமொழியின் மாண்பும்வே தாகமத்தி
னுயர்வு மெண்ணிச்
செப்பரிய திராவிடவே தக்கலைமெய் கண்டசாத்தி
ரத்திற் கூறும்
மெய்ப்பொருளி னுண்மையுணர்ந் துயர்ஞானச்
செல்வராய் விளங்கு வாரே

---

திருச்சிராப்பள்ளிக்கு அடுத்த உறந்தைமா நகரவாசியாரும் ஸ்ரீமீனாட்சிசுந்தர வித்தியாசாலைக்குத் தலைவரும், துறைசை ஸ்ரீநமசிவாயமூர்த்திகள் நான்மணி மாலை ஆதிய அரிய நூல்களியற்றியோரும் செந்தமிழ்ச் செல்வி யென்னும் சஞ்சிகைக்கு அரிய பெரிய விஷயதானம் செய்துவருபவரும் ஆகிய சித்தாந்த சைவப்பிரசாரகர்

## ஸ்ரீமத் தே. பெரியசாமி பிள்ளை அவர்கள்

### அபிப்பிராயம்.

ஸ்ரீமத் திரு. மா. சாம்பசிவம் பிள்ளை யவர்களாலாக்கப் பெற்று அன்புரிமையின் அளிக்கப்பெற்ற "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" (Private Copy) என்னும் பெரிய அரிய நூலை நன்கு பார்வையிட்டுக் கழிபேரு வகை கைவரப் பெற்றும்.

"திருநான்மறை விளக்கம்" என்னும் நூற்கண் உத்தி வாதமாகத் தாபிக்கப் புக்க, முன்னோர் கருத்துக்கு முரணான கொள்கைகளையெல்லாம், திருவருட் பெருஞ் செல்வர்களான சைவசமய சந்தான குருமணிகள் திருவாய் மலர்ந்தருளிய தெய்வச் செந்தமிழ் வேதசிவாகம சார சித்தாந்த உண்மை நூற் பிரமாண வாயிலாகவும், முறையே மறுத்தும், ஆன்றோராசாரம் வழுவா துண்மைநிலையிட்டும் ஒளிரும், 'திருநான்மறை விளக்க ஆராய்ச்சி' என்னும், பிள்ளையவர்கள் திப்பிய நூல் இப்புவியோருட்சிலர் தாமும் தெளிவிலாது மயங்காமைப் பொருட்டு வேண்டற்பால தொன்றேயா மென்ப தெமது கருத்து.

தசரதன் மதலையாகிச் சானகியை மணந்ததாதிய இராம இராவண சமரீறாகக் கூறும் இராமகாதை ஆரியர் கற்பனையென்றும், முருகன் எனும் அரசன் ஒருவன், அசுரன் எனும் பிறிதொருவனோடெதிர்த்துப் பொருதுவென்ற காதையே, சுப்பிரமணியர் பரமாக மாறிக் கந்தபுராணமென வழங்கப்பெறுகின்றதென்றும், இன்னோரன்ன பல கூறித்தொன்னெறி பிழைபடக் காண்பாருஞ் சிலருளராகலின், அமுதினுமினிய தமிழ் மொழி மாட்டுத தமக்குள்ள ஆர்வமிகையானே 'திருநான்மறை விளக்கம்' வரைந்த ஆசிரியரைப்பற்றி விளம்புவதென்னை?

பழுத்த சைவப்பற்றும், திண்ணிய அன்பின் அழுத்தமான சிவ பூஜையும் செறிந்துள்ள நண்பரவர்கள் தாங்கண்ட விளக்கத்தை ஆன்றோர் முன்றந்து உண்மை தேரா வுளத்தினராய்த் 'திருநான்மறை விளக்கம்' வெளிவரக் கண்டார்போலுமென எண்ணுகின்றேம்.

திருவிடைமருதூர், 20—6—26.

மதுரைத் தமிழ்ச் சங்கத்து அங்கத்தவரும், பத்திரிகைகளுக்கு விஷயதானஞ் செய்பவரும், யாழ்ப்பாணத்துச் சுன்னைச் சமஸ்கிருத வித்தியாசாலையில் தமிழ்ப் போதகாசிரியராயிருப்பவரும், நன்மாணுக்கருக்கு வேதனமின்றிக் கற்பிப்பவரும், பௌராணிகரும், சைவப்பிரசாரகரும், இரகுவம்மிச உரையாசிரியரும், ஸ்ரீமத் வித்துவரத்தினம் ஸ்ரீமாந் அ. குமாரசுவாமிப் புலவரவர்கள் சரித்திர ஆக்கியோரும், "அடக்கமமரருளுய்க்கு மடங்காமை-யாரிரு ளுய்த்து விடும்" என்னுங் குறண் முற்பகுதிக் கிலக்கியமானவரும், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் மருகரும் மாணுக்கரும் வித்துவ சிரோமணியுமாகிய ஸ்ரீமத் ந. ச. பொன்னம்பல பிள்ளையவர்கள் மாணுக்கருமாகிய பிரமஸ்ரீ மகா வித்துவான்

கணேச பண்டிதரவர்கள்

அபிப்பிராயமிது :-

சைவ சமயிகளாகிய எமக்கு *முதனூல்களாகவுள்ள வேதம் ஆகமம் என்னுமிரண்டும் வடமொழியாகிய சமஸ்கிருத பாஷையிலேயே ஆகிதொட்டுள்ளன. தென் மொழியாகிய தமிழ்ப் பாஷையிலன்று. வடமொழியும் தென்மொழியுமாகிய விரண்டும் நமக்குரிய மொழிகளாகவே பண்டைக் காலந் தொட்டு ஆன்றோர்களாற் கொள்ளப்பட்டு வந்தன; வருகின்றன; வருவன. இற்றைக்கு ஏறக்குறைய ஐயாயிரம் வருஷங்களுக்கு முன்னிருந்தவராகிய திருமூல நாயனாரும்,

"மாரியுங் கோடையும் வார்பனி தூங்கநின்
றேரியு நின்றங் கிளைக்கின்ற காலத்து
வாரிய முந்தமிழு முடனே சொல்லிக்
காரிகை யார்க்குங் கருணை செய்தானே."

"அவிழ்க்கின்ற வாறுமது கிட்டுமாறுஞ்
சிமிட்டலைப் பட்டுயிர் போகின்றவாறும்
தமிழ்ச் சொல்வட சொல்லெனு மிவ்விரண்டு
முணர்த்துமவனை யுணரலு மாமே."

எனச் சிவபெருமானை யவ்விரு மொழிக்கும் முதல்வராகக் கூறி, யவ்விரு மொழியையு மொப்ப வங்கீகரித்துள்ளார்.

நஞ்சமயாசாரியர்களும், "வடமொழியுந் தென்மொழியு மறைகளநான்குமானவன்" என்றும், "ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்" என்றும், "செந்தமிழோடாரியனைச் சீரியானை" என்றும், "ஆரியந் தமிழோடிசையானவன்" என்றும், சிவபிரானை யவ்விரு மொழி வடிவினராகக் கூறி யங்கீகரித்துள்ளார்கள்.

கடைச் சங்கத்துப் புலவர்களும்

"ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் திதனினிது
சீரியதென் றொன்றைச் செப்பரிதா—லாரியம்
வேதமுடைத் துத்தமிழ் திருவள் ளுவனா
ரோது குறட்பா வுடைத்து." என்றும்,

"வேதப் பொருளை விரகால் விரித்துலகோ
ரோதத் தமிழா லுரைசெய்தா—ராதலா
லுள்ளுன ருள்ளும் பொருளெல்லா முண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு." என்றும்,

இருமொழியையு மங்கீகரித்துள்ளார்கள்.

மாதவச் சிவஞான யோகிகளும்

"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற் [துங்
கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவார்."
என்றும்,

"இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
விருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பு
மிருமொழியு மான்றவரே தழீஇயினா ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ." என்றும்,

அவ்விரு மொழியையு மங்கீகரித்தனர்.

மெய்கண்ட தேவர் முதலிய சைவசித்தாந்தநூ லாசிரியர்களும், வடமொழி தென்மொழியாகிய விரண்டையு மங்கீகரித்து நூல் செய்துள்ளார்கள்.

சேக்கிழார் முதலிய புராணநூ லாசிரியர்களும், இருமொழியையு மங்கீகரித்துள்ளார்கள். சுருங்கச் சொல்லின் வடமொழியை நமக்குரிய மொழி யன்றென விலக்கினவர்கள் இற்றை வரையு மொருவருமிலர், அங்ஙனமாக இக்காலத்து இவ்வுண்மையறியாத சிலர் தஞ் சமயத்திற் சிறிது மபிமான மின்றி வடமொழி பார்ப்பனப் பாஷையென மேற்கொண்டு அவ் வடமொழியி லுள்ள வேதாகமங்களையும் அவ்வேதாகமங்களைக் கைக்கொள்ளும் பிராமணர்களையும் நிந்தனை செய்வான் புக்கு, வடமொழி தொன்மொழி யன்றெனவும், அம்மொழி நம்மொழி யன்றெனவும், அம்மொழியி லுள்ள வேதாகமங்கள் நமக்குரிய வல்லவெனவும், அவ் வேதாகமங்களுக்கு முன்னேயே தமிழில் வேதாகமங்கள் இருந்தனவெனவும், வடமொழி வேதங்களைக்

கைக்கொள்ளும் பிராமணர்கள் வேறு, நந்தமிழந்தணர் வேறு
எனவும், தமக்கோராதாரமுமின்றி வாயில் வந்தவாறு கூறுவா
ராயினர். இவர்களுடைய போலிக் கொள்கைகளுக்குத்
தேவாரமாதிய சைவ நூல்களில் யாதொரு ஆதாரமுங்
கிடையாது.

அங்ஙனமாகவும் இவர்கள் தேவாராதி சைவநூல்களிற்ற
மக்குப் பிரமாணமுள்ளதுபோல், பிரமாணமல்லாத செய்யுட்
களை யெடுத்துக்காட்டி அவற்றின்பொருள்களையுந் திரித்துக்
காட்டி உண்மையறியா மாந்தர்களை மெய்யென்று நம்புமாறு
மயக்கும் விந்தையெவ்வளவு அதிசயிக்கத்தக்கது! அம்மம்ம!
இவர்கள் தங்கள்போலிக் கொள்கைக்கு மாறாகத் தேவாராதி
சைவநூல்களினுள்ள செய்யுட்களை யெடுத்துக் காட்டாது
மறைத்துவிடுகின்றார்கள். இவர்களவ்வாறு செய்வது தம்போ
லிக் கொள்கைகளை ஒருவரும் நம்பமாட்டார்களென் றெண்
ணியன்றோ? அவைகளையு மெடுத்துக்காட்டித் தக்க பிரமா
ணங்கொண்டு மறுத்துத் தங்கொள்கையை நாட்டினன்றோ
எவர்களுமதனை நம்புவார்கள். அன்றியதனை யெவர்கள் நம்பு
வார்கள்! ஒருவரும் நம்பார்! நம்பார்!!

இன்னுமிவர்க ளனுட்டித்துவரும் அனுட்டானக் கிரியை
களோ, அந்தியேட்டிக் கிரியைகளோ, ஆலயக் கிரியைகளோ,
எவைகளும் இன்றுவரையும் சமஸ்கிருத மந்திரங்களாலேயே
செய்யப்பட்டுவருதல் கண்கூடு. அங்ஙனமாகத் தமிழில் மந்தி
ரங்கள் இருந்தன வென்பது எவ்வாறு பொருந்தும்? இருந்
தனவாயின், அம்மந்திரங்க ளெங்கே? அவற்றைக் கூறும்
வேதாகமங்க ளெங்கே? கடல்கொண்ட தென்பாராயின்,
தமிழ்நாடு முழுவதையும் கடல்கொண்ட தாயினன்றோ அவ்
வாறு கூறுவது பொருந்தும். ஒரு சிறுகூறுகடலாற் கொள்ளப்
பட்டதாயினும் மற்றைக் கூறுகளிலவைகள் காணப்படலாமே.
காணப்படாமையின் அவர்கள் கொள்கை போலியென்பது
வெளிப்படை.

பிரணவமும் ஸ்ரீ பஞ்சாக்கரமுமே தமிழ்மந்திர மென்பா
ராயின் அங்ஙனம் தமிழ்நூல்கள் கூறாமையானும், ஆன்றோர்
கள் ஆட்சியின்மையானும், அம்மந்திரங்களே வேதங்களானும்
ஆகமங்களானும் வீட்டுநெறிக்குரிய மந்திரங்களென விசேட
மாக எடுத்துக் கூறப்படும் மந்திரங்களாகக் காணப்படுதலானும்
ஆன்றோர் ஆட்சியுண்மையானும் அவர் கூற்றுச்சிறிதும்
பொருந்தாது. தமிழ் மந்திரங்களையே அவர்கள் கவர்ந்து தம
தாக்கிக் கொண்டனரெனின், அது பொருந்தாமை, அம்மந்
திரங்களின் உண்மையை நோக்குவார்க்குப் புலனாகும். எங்

ஙனமெனின், "ஓ" என்னும் எழுத்தே யன்றி, "ஓம்" என்றொரு எழுத்துத் தமிழினின்மையானும் வடமொழி மந்திரங்களினொவ்வொன்றின் முதலினும் அது கூறப்படலானும், "ஓம்" மென்ற எழுத்தை அகாரம், உகாரம், மகாரம், விந்துநாதம் எனப்பிரித்து வழங்குதல் வடமொழிக்கே யுரிமையானும், தமிழ்ச் சிவஞானபோதகாரரும் வடமொழியென்பது தோன்ற "நாடிற்பிரணவமாம்" என்றும் "எண்ணில வோங்காரம்" என்றும் கூறுதலானும் "ஓ மென்று மறைபயில்வா" ரென ஆரியவேதத்தில் முதலிலே சொல்லப்படுமெனத் திருஞானசம்பந்த சுவாமிகள் தமிழ்வேதத்திற் கூறுதலானும், "வேதநான்கினு மெய்ப்பொருளாவது—"நாத நாம நமச்சிவாய வே" எனத் திருநாவுக்கரசு சுவாமிகள் கூறுதலானும் என்க. ஓம் என்றது தமிழ்மந்திரம் அன்றென்பது ஆராய்ச்சி நூலுள்ளும் தக்க பிரமாணங்களால் வலியுறுத்தப் பட்டது. ஆகலின், இவர் கொள்கையாவும் பிரமாணமற்றதென்பதே துணிபு.

இங்ஙனமே தங் கொள்கையாவும் போலியென்பதுணராத இவர்களுள் ஸ்ரீமாந். கா. சுப்பிரமணியபிள்ளை (எம்.ஏ. எம்.எல். அட்வக்கேற்) அவர்கள் தம்போலிக் கொள்கையைப் பரப்ப முயன்று "திருநான்மறை விளக்க"மென வோர்விஷயமெழுதிச் "செந்தமிழ்ச் செல்வி"யென்னும் பத்திரிகையில் வெளிப்படுத்தி வந்தனர்.

சிவபத்தி, சிவனடியார்பத்தி, சிவசின்னதாரர்பத்தி, சிவசாத்திரப்பத்தி, சிவசாத்திர போதகர்பத்தி, முதலியவற்றிற்கு ஒரு கொள்கலமாயும், "சமன்செய்து சீர்தூக்குங்கோல் போலமைந் தொருபாற்—கோடாமை சான்றோர்க்கணி" என்னும் தேவர் திருக்குறளுக்கு மேதகு மிலக்கியமாயும் இலங்குகின்றவரும், "பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற—செய்யாமை செய்யாமை நன்று" என்றவண்ணம் தாம் இயற்று நூல்களெல்லாவற்றினும் உண்மைப் பிரமாணங்களையே எடுத்துக்காட்டிப் பூர்வபக்கத்தார்க்கு நல்லறிவுச்சுடர் கொளுத்தி உய்விப்பவரும், சிவபூசா நியமதுரந்தருமாகிய ஸ்ரீமாந் சாம்பசிவபிள்ளை யவர்கள் உண்மைக்கு மாறுகிய அவர் கொள்கையை நோக்கிச், "சாதி, குலம், பிறப்பென்னு" மிவற்றுற்றடுமாறுது, உண்மையை நாட்ட முயன்று "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" யென வதற்கோர் மறுப்பெழுதி அதனை வெளிப்படுத்த முயன்று அச்சிட்டு, அச்சிட்ட பிரதியுளொன்றையெமக்கனுப்பி யதனைநோக்கி அபிப்பிராயமெழுதும்படி யெமக்குத் தெரித்தனர். அவர் தெரித்தவாறு, அப்பிரதியை நோக்கினேன். நோக்கியபொழுது சுப்பிரமணிய

பிள்ளை யவர்களெழுதிய போலிக் கொள்கைக ளியாவற்றை யும் ஒவ்வொன்றாக வெடுத்து ஆராய்ந்து மறுத்த மறுப்புக்க ளியாவும், எமக்கு உண்மையாகவே காணப்பட்டன. "நூலை நாவன்ன சமநிலை" நின்று நோக்குவோர்க்கு அவைகளுண்மை யாகவே காணப்படுமென்பதிற் சிறிதுஞ் சந்தேகமே யில்லை.

இக்கண்டனம் சாம்பசிவ பிள்ளை யவர்களின் உண்மை நிலையையும் ஆழ்ந்த கல்வியறிவின் பெருமையையும் எவர்களுக் கும் உணர்த்தாதே போகாது. சுப்பிரமணிய பிள்ளை முதலி யோரெழுதிய வேதம் தமிழில் இருந்ததென்பது முதலிய பொய் வார்த்தைகளையெல்லாம் நோக்கியபொழுது அவைகள் இன்னவின்னவாறே கண்டிக்கப்படவேண்டுமென்று யாம் எண்ணியவாறே அக்கொள்கைகள் பிள்ளையவர்களால் தக்க பிரமாணங்களால் மறுக்கப்பட்டிருத்தலை நோக்கியபொழுது எமக்கு மிகவும் ஆனந்தமுண்டாயது. எமக்கு மாத்திரமன்று. சமயாபிமானத்தை விரும்பிய யாவர்க்கும் இது ஆனந்தமளிக்கு மென்பதிற் சந்தேகமே யில்லை. அம்மறுப்புகளிற் சிலவற்றை இங்கே முகவுரையாக வெடுத்துக் காட்டி யெம் மபிப்பிரா யத்தை முடிக்குதும். அவை வருமாறு:—

க. தமிழ் மக்கள் நால்வருக்குச் சிவபெருமான் கல்லா லடியில் அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கு பொருளையும் உபதேசிக்க அந்நால்வரும் அதுகொண்டு நான்கு வேதங்களையும் தமிழில் இயற்றினாரென்பது கா. சு. அவர்கள் கூற்று.

அது, சிவபிரான் தாம் முன்னர் அருளிய வேதப் பொருளைப் பிரம புத்திரராகிய சனகாதியர்கட்கு உபதேசிக்க அவர்கள் நால்வருங் கேட்டுத் தெரிந்து நிட்டை கூடினான்றி, யவர்கள் நால்வரும் நூல்கள் செய்தாரல்லரென "அணிபெறு வடமரநிழலினி லமர்வொடு மடியிணை யிருவர்கள், பணிதர வற நெறி மறையொடு மருளியபரன்" என்பது முதலாக கா. சு. அவர்கள் காட்டிய தேவாரப்பிரமாணங்கள் கொண்டும், வேறு பிரமாணங்கள் கொண்டும் மறுத்துரைக்கப்பட்டுள்ளது.

உ. "காது பொத்தரை" யென்பதை முதலாகவுடைய தேவாரத்திற் கூறிய பொருளுஞ் சிறப்புடைத்து. அதில் மூன் றும் அடி முதலை ஏதம் செய்தவர் என்றுமோனை வாப்பிரித்துப் பொருள் கோடலே இலக்கண விலக்கியங்கட்கும் ஆக்கியோ ராகிய நாயனார் கருத்திற்கும் ஒத்ததென்பது அப்பதிகத்தை யுற்று நோக்கின் நன்கு விளங்கும்.

ரு. தமிழினுள்ள நான்மறை யென்னும் நூல் ஆதி முதல் தமிழ் நாட்டிலிருந்து பஃறுளியாறு முதலியவற்றைக் கடல்

கொண்டபோது அக்கடல் கோளில் மறைந்தவைகளுடன் மறைந்துபோயினவென்ற கா. சு. அவர்கள் கூற்று, தொல்காப்பிய மியற்றப்பட்ட காலம் முதற் சங்கமாதலின் அதற்குப் பின்னுண்டான கடல் கோளில் தமிழ் நான்மறை மறைந்த போது தொல்காப்பியம் மறையாதிருந்து விளங்குவதென்னை? இது வியப்பே யெனத்தக்க வினு நிகழ்த்தி மறுக்கப்பட்டுளது. இன்னு மவ்வுரை தமிழ் நான்மறை, முதற் சங்க காலத்திருந்ததாயின் முதற் சங்கப் புலவராலியற்றப்பட்டு, புறநானூற்றின் ஆறுவதாயிருக்கின்ற செய்யுள் மறையாதிருக்கத் தமிழ் நான்மறை, மறைந்த தென்னே? வென்னுமோர் வினு நிகழ்த்தி மறுக்கப்பட்டுளது.

௪. அச் செய்யுளில் வரும் நான்மறை யென்பது, தமிழ் வேதமெனக் கூறிய கா. சு. அவர்கள் கூற்று, "புரையி, னற்பனுவ னுல்வேதத்,தருஞ் சீர்த்திப் பெருங் கண்ணுறை, நெய்மலியாவுதி பொங்கப் பன்மாண்,வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி, யூபம்நட்ட வியன்களம் பலகொல் யாபலகொல்லோ" என்னுஞ் செய்யுள் கொண்டு மறுக்கப்பட்டுளது.

௫. திருமூலர் பிராமணர்களை யிகழ்ந்தாரென்ற அவர் கூற்று, வேதப் பொருள் சிவபெருமானென்பதை யுணராத பிராமணரையே யிகழ்ந்தாரன்றி, ஏனையோரை யிகழ்ந்தாரல்லரென அத்திருமூலர் கூறிய

"அந்தண ராவோ ரறுதொழிற் பூண்டுளோர்
செந்தழ லோம்பிமுப் போது நியமஞ்செய்
தந்தவநற் கருமத்து நின்றாங் கிட்டுச்
சந்தியு மோதிச் சடங்கறுப் பார்களே."

"பெருநெறி யான பிரணவ மோர்ந்து
குருநெறி யாலுரை கூடிநால் வேதத்
திருநெறி யான திருகை யிருத்திச்
சொரூப மதானோர் துகளில் பார்ப்பாரே." என்னுஞ்
செய்யுட் பிரமாணங்காட்டி மறுக்கப்பட்டுள்ளது.

௬. வேதாரணியத்துக்குப் பக்கத்திலே கல்லாலிருந்தது என்னுமவர் கூற்று, தக்க பிரமாணங்கள்காட்டி மறுக்கப்பட்டுளது

௭. "சதாசிவதத்துவம் முத்தமிழ் வேதம்" என்பதற்கு சதாசிவ தத்துவத்திலிருந்து முத்தமிழும் வேதமும் தோன்றிய வெனப்பொருள் கொண்டதும், அப்பொருள்,

"ஆரியமுந் தமிழுமுடனே சொல்லி" என்பதனால் வலியுறுத்தப் பட்டிருப்பதும் மிகவும் வியக்கத்தக்கன. இவ்வாறே கா. சுப்பிரமணியபிள்ளை யவர்களுடைய போலிக் கொள்கைகளை எல்லாம் ஆங்காங்கே தக்க பிரமாணங்காட்டி மறுத்த மறுப்புக்களியாவும் மிக வியக்கத்தக்கனவும் யாவரும் மறுக்கொணாத உண்மைகளுமேயாம்.

ஆதலால் இவ்வுண்மைகளையெல்லாம் யாங்கடைப் பிடித்து உய்யுமாறு பலநாண் முயன்று ஆராய்ந்து இவ்வாராய்ச்சியையெழுதி கா. சு அவர்களெழுதிய நவீனப் போலிக் கொள்கைகளால் கல்லாமாந்தர் மயங்காவண்ணம் உதவிய ஸ்ரீமாந். சாம்பசிவ பிள்ளை யவர்களுக்குச் சைவசமயிகளாகிய நாமெல்லாரும் மனமார்ந்த அன்போடு என்றும் ஸ்துதிகூறவேண்டிய வர்களாகவே யிருக்கின்றோம். அதுவேயு மன்றி அவர்கள் பூரணாயுளுடனிருந்து இதுபோலும் உத்தமோத்தம நன்மைகளைச் செய்யுங் கருணை பாலிக்கும்வண்ணம் சிவபிரான்றிருவடிக்கு விண்ணப்பஞ் செய்யும் விழுமிய கடப்பாடுமுடையேம்.

---

# ஸ்ரீலஸ்ரீ. சுவாமிநாதபண்டிதரவர்கள்

## அபிப்பிராயம் இது.

---

### தேவாரம்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

### திருவாசகம்.

தேவதேவன் மெய்ச்சேவகன் றென்பெருந்துறை நாயகன்
மூவராலு மறியொணாமுத லாயவானந் தமூர்த்தியான்
யாவராயினு மன்பரன்றி யறியொணாமலர்ச் சோதியான்
தூயமாமலர்ச் சேவடிக்கணஞ் சென்னிமன்னித் திகழுமே.

---

திருச்சிற்றம்பலத்தெஞ் சிவக்கொழுந்தே! நின்பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்.

அதுதான் முற்றறிவினாலே முதல்வ! நீ! முன்னர்த்தான் முற்று மறியாததன்று. யுகதர்மமாகத்தான், கன்மத்திற் கேற்பத்தான், அன்றேதான், அருளினாற்றான் அர! அமைக்கப் பட்டது நின்னாற்றான்; ஆயினும் அறிந்தருளுக.

திருநெல்வேலி என்னுந் திருப்பதியைச் ஜென்மஸ்தான மாகப் பெற்றவரும், ஸ்ரீமாந். வேதாசலப்பிள்ளையவர்கள் திருநெல்வேலியில் காந்திமதியம்மை கோயின் மண்டபத்திலே, பாண்டி நாட்டார் சைவரல்லர் சமணர்களே என்றும், சாதி இல்லை என்றும் பிரசங்கஞ் செய்த காலத்தில், எம்மைக்கொண்டு சாத்திர வாயிலாக அவர் பிரசங்கத்தை மறுத்துப் பிரசங்கஞ் செய்வித்து அப்பிரசாரகரால் ஏவப்பட்டு எமது பிரசங்கத்திற் குறிப்பெடுத்தற்காகச் சபையில் வந்திருந்த ம-ா-ா-ஸ்ரீ பண்டிதர் சிவராமப்பிள்ளையவர்களும், அவர் மாணாக்கர் நால்வரும் பிரசங்கத்திற் குறிப்பெடுத்தற் கிடம் பெறாமையால் நாண முற்றுப் பாதிப்பிரசங்கத்தில் சபையைவிட்டோடவும் அது கேட்டறிந்த பிரசாரகரும் நாணி மற்றைத்தினமே திருநெல்வேலியைவிட்டு அம்பாசமுத்திரம் ஓடவும் செய்த பெரியதோருண்மைச் சைவாபிமானத்தலைவரும், நன்மை தீமை நிகழ்ச்சிக் கண் மனந்திரியாது திருவருட்சம்மதமென்று கூறுந் திடபத்தியாளரும், அர்த்தயாமத்தில் காந்திமதியம்மை தரிசனஞ்செய்து போசனம் பண்ணுகின்ற நியம நிலையினரும், சுத்தாத்துவித சைவசித்தாந்த ஸ்தாபனத்தில் விசேட வேணவாவுடையவரும், வேதாகம தூடணந்தினைத்துணையுஞ் சகியாதவரும், பீ. ஏ. பிள்ளை என்னு நாமத்தைத் தமக்கிடுகுறியாகப் பெற்றவரும், திருமுறைப்பாராயண நியம தூரந்தரரும், தமது வைதிக கருமத்திற்குக் காலம் போதாமையால் தமக்குக் கிடைத்த உத்தியோகத்தைத் தாமே பரித்தியாகம் பண்ணினவரும், எம்மீது வைத்த பேரன்பால் யாம் பரிசோதித் தச்சிடுவித்த சிவஞான போதமாபாடியம்தேவாரம் என்பனவற்றில் நூறுநூறு புத்தகங்கள் விக்கிரயஞ்செய்து பொருளுபகரித்தவரும், எம்மிடத்துப் போலவே ஸ்ரீலஸ்ரீ. "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" நூலாசிரியரிடத்தும பேரன்புடையவரும், எமதிரு கண்மணியும் எமதன்பர்சிகாமணியுமாகிய ஸ்ரீமத். பீ. ஏ. காந்திமதிநாத பிள்ளையவர்கள் சேட்ட புத்திரரும், கலெக்டர் உத்தியோகத்திற்குக் கற்றற்பொருட்டு இங்கிலாந்து போக முயன்றபோது அப்போக்குத் தமது சமயாசாரத்திற்கும் குலாசாரத்திற்கும் தக்கதன்றெனக் கருதிய அப்பிதாவின் ஆஞ்ஞையால் அம்முயற்சி என்று மின்றாகச் சிவபூசையை மேற்கொண்டவரும் ஆகிய அட்வக்கேட் ஸ்ரீமாந். சுப்பிரமணியபிள்ளை யவர்கள்

சைவசாத்திர வரம்பையும், அச்சாத்திரவழி யொழுகி அருள் பெற்ற ஆன்றோர் கொள்கையையும் இகந்து, "வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்—வாழ்நாள் வழியடைக்குங் கல்" என்னுந் தேவர் திருக்குறளையுமோராது புதிய கோண் மேற்கொண்டு, கொண்டதற் கேற்பப் பிரமாணமின்மையின், பிரமாணமாக்குதற் பொருட்டு, அருட்பாடல்களைப் பிரதிக்கு மாறாகத் *திரித்தும், திரிக்காத சிலவற்றிற்குப் பொருள்கோண் முறை, இலக்கணத்திற்கும், இலக்கியத்திற்கும், நிகண்டு முதலிய கோசங்கட்கும், பண்டையுரைகட்கும், அகராதிகட்கும், யுத்திக்கும் முற்றும் $ பொருந்தாப்பொருள் கூறியும் தமதுநாளை வீழ்நாளாக்கிப் பழி பாவங்கட்கும் அறிஞர்வாய் நகைக்கும் இன்னுமின்னும் ஆளாகாது சைவப்பயிர் தழைத்தினிதோங்க அவர்தாஞ் செவ்வனே முயலுமாறு திருவருள் புரிகவென்றே.

முதற்கண் இவ்வாறு விண்ணப்பஞ் செய்து வேண்டிக் கோடற்குக் காரணம் என்னையெனிற் கூறுதும்:—

---

* திரித்தவற்றுள் எமது பார்வைக் ககப்பட்ட சிலவற்றை இங்கே தெரிக்கின்றாம்.

இந்நூல் 22-ம் பக்கம், தேவாரம். "உரைக்கடங்தோதும்" என்பதை "உரைகடந்தோதும்" என்றும், 26. "கோதின் மாதவர் குழுவுடன் கேட்ப" என்பதைக் "கோதின் மாதவர் குழுவுடன் கூட" என்றும், 33, 34. பெரிய புராணம். "பொருவிறப்ப ஓதுஞர் புகலிவந்த புண்ணிய ஞர் எண்ணிறந்த புனித வேதம்" என்பதைப் "புகலியர் கோன் செப்பி ஞர் எண்ணிறந்த புனித வேதம்" என்றும், 38, 39. தேவாரம், "ஆலத்தார் நிழலில்லறம்" என்பதை "ஆலத்தார் நிழலின் அறன்" என்றும், 63. "தொகுத்தவ னருமறை அங்க மாகமம வகுத்தவன்" என்பதைத் "தொகுத்தவ னருமறை ஆறங்கம்" என்றும், 68. தொல்காப்பியம். "நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த மறைமொழி" என்பதை "நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்தது மறைமொழி" என்றும், 109. 'சைவவேடந் தாளிணைத்து" அல்லது "சைவவேடந் தானினைத்து" என்பதைச் "சைவவேடந்தானினைத்து" என்றும், 132. பதினொராந்திருமுறை. "ஆரியப் புத்தகப்பேய்" என்பதை "ஆரியர் புத்தகப் பேய்" என்றும், 186. "ஓதிய வேத நாவர்" என்பதை "ஓதிய வேத நால்வர்" என்றும், இவை போல்வன பிறவும் திரிக்கப்பட்டிருத்தல் காண்க.

$ பொருந்தாப் பொருளை இந்நூலுள் பக்கம். 38, 39. "கோலம்" "சொல்" "வண்மொழி" பக்கம். 82. "அந்தணர் மறைத்தே" பக்கம் 99. "முது முதல்வன் வாய்போகா தொன்று புரிந்த—வீரிரண்டி னுறுணர்ந்த வொருமுதுநூல்" பக்கம். 77. "கலித்துறையது பயந்த காமர் காட்சி நல்லாளை" என்றற் றொடக்கத்தன பலவற்றிற்கு எழுதிய பொருள்களா லுணர்க.

" அருளறி வொழுக்க மான மாசாரம் பொறைசீ ரன்பு
தருமநன் னெறிநற் றானஞ் சத்தியந் தவத்தோ டாண்மை
விரதநோன் பிரக்க மீசன் மெய்யருட் பத்தி யுள்ளோர்
ஒருவரை யுலகிற் காண்ப தரிதுகா ணுயர்த வத்தீர் "

என்றிங்ஙனங் கலியுக தருமத்தை நன்கு விளக்கிக் கூறிப் போந்த தென்றமிழ்க் கவியு நன்றா நாண, அருளறி வாதிய உத்தமோத்தம குணங்களும், அத்தகைய ஒழுக்கமாதிய செயல்களும் ஒருங்கு குழுமிக் கரசரணாதி யவயவங்களைப் பொருந்தி ஒருருவெடுத்தாற் போன்றவர், பன்னூலாராய்ச்சி வல்லுநர், "ஆராய்ச்சி"யா மாரமிர்தம் ஓயாது பொழியும் அறிவுமாமேகம், "தேருந் தோறு மினிதாந் தமிழ்" என்ற வண்ணம் பழகுந் தோறும் பத்தியு மறிவும் பாதத்தில் ஒத்திடும் பண்பினர்க் கெத்திறத்தானு மினிதாந் தன்மையர், வித்துவ சூளாமணி, சைவசூளாமணியென் றின்னனவாகப் புனைந்துரைத்து மெய்யறிவாளர் போற்றும் ஸ்ரீலஸ்ரீ. திரு. மா. சாம்பசிவபிள்ளையவர்கள் என்னுஞ் சிவஞானச்செல்வப் பெரியார் "திருநான்மறைவிளக்க வாராய்ச்சி" எனப் பெயரிய ஒப்பின் மாபெருமை வாய்ந்த திப்பிய நூலொன்றியற்றி அச்சிடுவித்து, அதில் ஒரு புத்தகம் வெளிப்பாட்டின் முன்னர் எமக்கீந்து நோக்குமாறு செய்தார்கள். யாமும் நோக்குமாறு நோக்கி அறியுமாறறிந்த வழி, அஃதெமதுயிர் நண்பர் ஸ்ரீமத். பி. ஏ. காந்திமதிநாத பிள்ளையவர்கள் குமாரர் ஸ்ரீமாந். அட்வக்கேட் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பொறித்து வெளிப்படுத்திய "திருநான்மறை விளக்க"த்தை ஆயுமாற்றா லாய்ந்து மறுக்குமாற்றான் மறுத்த தொரு சைவக்களஞ்சியநூலாக விருத்தலைக்கண்டு உள்ளத்து வகை வெள்ளத்து மூழ்கினேமாயினும், எமது ஆருயிர் நண்பர் புதல்வர் சைவசாத்திர முதலியவற்றிற்கும் ஆன்றோர் கொள்கைக்கும் முற்றும் மாறாக நவீனக் கொள்கைகளை மேற்கொண்டு ஆதாரம் அணுத்துணையுமின்றிப் புந்தி போனவாறே அந்தில் பொறித்திருக்கும் விந்தையை ஒருகால் இருகாலன்றி முக்காலு நோக்கி எக்காலும் கழிபெருங் கவலைக் கடலுள் ஒருபாலழுந்தி அவர் அக்கையற வெய்தி மெய்ம்மை யோர்ந்து உய்திறனாகச் சைவசமயாபி விருத்தி தமிழ் சமஸ்கிருத பாஷாபி விருத்தி செம்மையே செய்து இம்மை மறுமை வீடு என்னும் மும்மைப் பயனும் தவநனி துய்க்க வேண்டுமென்னும் வேணவாவே அக் காரணமென்று கடைப்பிடிக்க. சமஸ்கிருதம் எமக்குமுரிய சிறந்த பாஷையென்பது முன்னர்த் தெரிக்குதுந் தேர்க.

இனி, "தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொருள்— தந்தம் வினையான் வரும்" என்ப; ஆகலின், புதல்வராகிய

ஸ்ரீமான். சுப்பிரமணியபிள்ளையவர்கள் செய்யு நல்வினைப் பயன்கள் தந்தையாராகிய ஸ்ரீமத். காந்திமதிநாதபிள்ளையவர்களைச் சென்றடைந்து அவர்கட்கு நன்மை பயக்குமாகலின், அவர் புதல்வர் பழி பாவங்கட்குரிய செயலையொழித்துப் புகழ் புண்ணியங்கட் கேதுவாகிய சற்கருமங்களைச் செய்து உய்யுமாறு அருள்புரிவான் யாம் எம்மிறையை வேண்டுதல், அவர் சற்கருமபலன், எமது நண்பராகிய அவர் தந்தையார் பாற் சென்று சேர்ந்து அவர்க்கு நன்மை பயக்கவேண்டும் என்னுங் கருத்தால் நட்பின் மிகுதிப்பாடுபற்றிச் செய்யப்பட்டதென மற்றொரு பிரகாரம் காரணங்கோடலும் ஒன்று. என்னை? "நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி—ஒல்லும்வா யூன்று நிலை," "உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே—இடுக்கண் களைவதா நட்பு" என்றூ ராகலின்.

இங்ஙனங் கொள்ளவே தந்தை மைந்தர் இருவராதும் நலமே பெரிது கருதிக் கண்ணுதல் பால் விண்ணப்பஞ் செய்தவாறு பெறப்பட்டமை காண்க.

இங்கே இடுக்கண் என்னையெனின், "திருநான்மறை விளக்க"த்தில் சைவசாத்திரத்திற்குஞ் சான்றோர் கொள்கைக்கும் ஒத்ததாய் ஒரு கொள்கை தானுங் காணப்படாமையானும், அத்துணையேயன்றி அடியார் அருளாற் கூறிய வாக்கியங்களையு மருளாற் றிரித்தலானும், சில வாக்கியங்கட்கு உள்பொருளை விடுத்து இல்பொருளைத் தாமாகவே படைத்திட்டுக் கூறுதலானும், பிறவாற்றானும் அவ் "விளக்கம்" சிவபிரான் றிருவுள்ளத்திற்கு முரண்பட்டதொன்றேயாமாகலின், அதுபற்றி அவரால் நிகழும் துன்பமாம். அது நிகழாதவண்ணம் வேண்டிக்கோடல் அவர் மாட்டுநட்புடையவெமக்கு மரபாம்; அதுபற்றி "வேண்டுவார் வேண்டுவதே" ஈயும் விமலன் அருளுமென்பது. மைந்தர் தந்தை இருவர்க்கு முள்ள ஒற்றுமை நயம்பற்றி மைந்தர்க்கு வருவது தந்தையார்க்கும் வருவதுபோலக் கூறப்பட்டது. அதுநிற்க.

இனி, "திருநான்மறை விளக்கம்" என்னுஞ் சொற்புணர்ப்பை நுணுகி யுற்று நோக்கி ஆராய்வார்க்கு, "தேவர் குறளுந் திருநான்மறை முடிவும்" என்னும் ஔவையார் அருளிச்செய்த வெண்பாவுட் போந்த 'திருநான்மறை' என்பது எவ்வாற்றானும் இப்போதுள்ள வடமொழி வேதங்களையே உணர்த்தி நிற்கும் மதுகை மிகுதிப்பாட்டை நன்கிதி னுணர்ந்த "விளக்க" முடையார், அதுதான் தமது கொள்கைக்கு நேரே மாறாயிருத்தலை யுணர்ந்து, அதனைச் சகிக்க லாற்றாவுளத்தராய்

அதற்குத் தமிழ் நான்மறை எனப் பொருள் விளக்கக் கருதி, அதன் பின்னர் "விளக்கம்" என்னும் ஒரு சொற் றலைப் பெய்து "திருநான்மறை விளக்கம்" என முகப்பெயரிட்டுக் கொண்டார் என்பது தெற்றென விளங்கும். அவர் அங்ஙனம் விளக்கினும் அது விளக்கும் விளக்காகாது; என்னை? ஔவை யார் தமது காலத்து வழங்கிய தேவர்குறள் முதலியவற்றோடு வழங்காத நான்மறையைச் சேர்த்து ஒன்றாகவைத்தெண்ணி "எல்லாம் ஒரு வாசகமென்றுணர்" என அருளிச் செய்யா ராகலி னென்பது.

"நான்மறை யறங்க ளோங்க" "நான்மறைச் சைவமோங் கிப் புல்லுக வுலக மெல்லாம்" "வேதவா கமமும் வாழ்க" என்றற் றொடக்கத்தனவுமது. "ஒன்றின முடித்த றன்னின முடித்தல்" என்னும் உத்தியினால் ஆறங்கங்கட்கு மிதுவே கதி யென்றுணர்க.

இன்னும் வேதம் முன்னர்த் தமிழில் இல்லை என்பதும், 'விளக்க' முடையார் கொள்கையை உடம்பட்டு நால்வர் தமிழ் முனிவர் தமிழ் வேதஞ் செய்தாரெனக் கொள்ளினும் அது முதனூலாகாதென்பதும் முன்னர்க் கூறுதும்.

"தனக்கு மூக்குப் போனாலும் எதிரிக்குச் சகுனப் பிழை யாயிருக்கல்வேண்டும்" என்று கருதித் தன் மூக்கை அரிந்து கொண்டவன் சீலம் போல, பார்ப்பனரிடத்துக்கொண்ட கோபத்தினால் நமது, சமயத்துக்குவரும் ஏதம் நோக்காது வட மொழி வேதாகமங்கள் சிவபிரானால் செய்தருளப்பட்டன வன்றென்று கூறுதல் எவ்வளவோவறியாமை! எந்த மதத்த ராயினும் தம்மவர்மீது கொண்ட கோபத்தால் தம்மதநூலைக் கடவுளருளிச்செய்ததன்று, தம்மவர் கட்டின கட்டென்று கூற யாம் இதுகாறுங் கேட்டறிந்திலேம். "விளக்க" முடை யாரே அங்ஙனம் கூறக் கேட்டறிந்தேம்; அதுவேயுமன்றிப் பத்திரிகையில் எழுதப் பார்த்தும் அறிந்தேம்!! "கண்டன மின்றியாங் கலியின் வண்ணமே"

இனி ஔவையார் "திருநான்மறை" எனத் திருவை அடைபுணர்த்தோதியது அறம், பொருள், இன்பம், வீடு என் னும் புருடார்த்த நான்கினையும் அறிவிப்பன அவையெனத் தெரித்தற் கென்றுணர்க. என்னை? திரு என்பது பொருட் செல்வம் அருட்செல்வம் இரண்டையும் உணர்த்தும்; உணர்த் தவே, "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்ப ஆகலின், இனம்பற்றி அறமும் இன்பமும் கொள்ளப்

படும்; படவே, "அறம்பொருளின்பம்வீ டடைதனூற் பயனே" என்ற வண்ணம் இந்நான்கையும் அவை உணர்த்துமென்றவா றாயிற்று. இக்கருத்துப்பற்றியன்றே திருமூலநாயனார் திருமந்திரத்துள், "வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தி—லோதத் தகுமற மெல்லா முளதர்க்க—வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற—வேதத்தை யோதியே வீடுபெற் றாரே" என்றருளிச் செய்ததூஉமென்க.

நான் மறை என்பதற்கு "நான்கு கூறுமாய் மறைந்த பொருளுமுடை" யதெனத் தொல்காப்பியவுரையாசிரியர் கூறினார். நான்கு கூறு:-இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்பன. இவை வியாசர் கலந்துகிடந்த வேதங்களைப் பகுத்தகாலத்துப் புனைந்த பெயர்கள். முற்பட்ட காலத்துப் பெயர் தைத்திரியமும் பௌடியமும் தலவகாரமும் சாமமுமாம்.

மறைந்த பொருளாவது:—ஆகமத்துள் வெளிப்படையாகக் கூறிய பதி, பசு, பாச, மென்னு முப்பொருளையும் "தத்துவமசி" என்னு மகா வாக்கியத்துட் புதைத்துக் கூறுதல். அஃதன்றி ஆகமத்துட் பதி சிவபெருமானே யென்று யாண்டுங் கிளந்தெடுத்துக் கூறுதல் போலாது, வேதத்துள் அன்னமய கோசம் பிரமம் என்றும், பின் பிராணமயகோசம் பிரமம் என்றும், பின் மநோமயகோசம் பிரமம் என்றும், பின் விஞ்ஞானமயகோசம் பிரமம் என்றும், பின் ஆனந்தமயகோசம் பிரமம் என்றும், வருணன், அக்கினி, சந்திரன், சூரியன், இந்திரன், பிரமன், விண்டு முதலியோர் பிரமம் என்றும், ஐம்பெரும்பூத முதலியனவும் பிறவும் பிரமம் என்றும் முன்னர்க் கூறிப் பின்னர் இது பிரமமன்று இது பிரமமன்று என ஒவ்வொன்றாகப் பூர்வபக்கத்தை மறுத்துச் சிவமே பிரமம் என நுண்ணிதாய்த் தெரித்தலினால் மறுத்தலையுடையதெனவும் பொருள்படும் மறையென்னுஞ் சொல். இக்கருத்துப் பற்றியே "அல்லையீதல்லையீதென மறைகளு மன்மைச்—சொல்லினாற் றுதித்திளைக்குமிச் சுந்தரன்" எனவும், "இதுவென லருமையி னெழுதரு மொழிகளும்—அதுவல வெனுமெனி னெவருனை யறிபவர்." எனவும் முறையே பரஞ்சோதி மாமுனிவரும், குமாரகுருபர சுவாமிகளும் கூறியருளியதூஉமென்க.

பண்டை ஆசிரியர்கள் இம்மெய்ம்மை யுணர்ந்து கூறிய மெய்ப்பொருட்டுணிவுதேறும் அறிவின் மதுகையும் தவவாற்றலுமில்லாத அபக்குவ நவீனர் சில்லோர் தத்தமக்கு வேண்டியவாறே நவின்று பொருந்தாப் பொருள் கொண்டு கடைபோகாதிடர்ப்படுவர். இது நோக்கியன்றே "உரைப்பாருரைப்பவைக்

கெல்லாம் யாமென் செய்வோம்'' என்று கூறி அவர் நல்வினை யல்லது நோக்கித் தொல்லை நல்லாசிரியர் அவர் பொருட் டிராங்கியதூஉமென்க.

வேதோபநிடதங்களை உற்று நோக்கி உண்மை கடை பிடித்த பெரியார் அன்னவர் கூறும் பொருள் பொருளன் றெனத் தேர்ந்து புறக்கணித்தொதுக்குவரென்பதொருதலை.

இன்னும் வேதம் மறைந்த பொருளை யுடைத்தாயிருப் பினும் ஆகமக் கண்கொண்டு பார்ப்பார்க்கு உண்மைப் பொருள் நன்கு விளங்கும். அதுபோல, அதன் சாரமாகிய வேதாந்த சூத் திரப் பொருளும் மாசற்ற ஞானமுடையார்க்கே விளங்கும். ஏனையோர்க்கு எள்ளத்தனையும் விளங்காது. இக்கருத்துப் பற்றியன்றே "மாசறு காட்சியர்—பார்த்துணர் பான்மையிற் பலவ கைப்படச்—சூத்திர மானவுஞ் சொற்று வைகினன்'' என்றார் காந்தபுராண நூலுடையாரும்.

இங்ஙன மிருத்தலால் மறை என்பதற்கு நச்சினார்க்கினிய ரும் பரஞ்சோதிமாமுனிவரும் குமரகுருபரசுவாமிகளும் கொண்ட பொருள்களே பொருள்களெனப்பட்டு ஏனையோர் பொருள் பொருளன்றெனப்பட்டவாறு காண்க.

இனி, நான்மறை என்பது வடமொழி வேதமோ! அன்றோ? என்னும் ஐயப்பாட்டின்கண் வடமொழி நான்மறை யன்று; தமிழ்மொழி நான்மறையே என்னும் பூர்வபக்கத்தாரை நியாய வாயிலாக மறுக்கும் சித்தாந்தம் வருமாறு:—

தமிழ்மறை காணப்படாமையானும், முதற்சங்கத் திறுதி யிற் கடல்கோட் பட்டதெனின், பண்டை நூலுரைகளுட் கடல்கோட்பட்டன இவையென நன்கறியுமாறு விளங்கக் கூறியிருத்தல்போலத் தமிழ்நான்மறையும் இருந்து கடல் கொள்ளபட்டதெனக் கூறப்படாமையானும், சங்கத்தார் ஆய்ந்த நூல்கள் இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ் நூல்களே யன்றிச் சமய நூலன்றென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்த கருத்தேயாமாகலானும், "உத்தரவேதம்'' எனத் திருக் குறட்குப் பெயர் போந்தது வடமொழிப் பூர்வவேதநோக்கியே யாகலானும், வில்லிபுத்தூராழ்வார் "மறைநாலொ டைந் தென்று நிலைநிற்கவே மாபாரதஞ் சொன்னநாள்'' எனக்கூறி, வடமொழிப் பாரதத்தை, வடமொழி நான்குவேதத்தோடு சேர்த்து ஐந்தாம் வேதமென நிலைநிற்க வியாசர் கூறினரென நன்கு விளக்குதலானும், இங்ஙனமே உமாபதிசிவாசாரிய சுவாமிகளும் "இருக்குமுதன் மறைநான்கி னின்றுமுத லாக

விதுவுமொரு தமிழ்வேத மைந்தாவ தென்று—கருத்திருத்தி" எனப் பெரிய புராணத்தை இருக்கு முதலிய வடமொழி வேத நான்கனோடு சேர்த்து (தேவார முதலியனவேயன்றி) இதுவும் ஐந்தாவது தமிழ்வேதமெனச் சேக்கிழார்புராணத்துக் கூறி யிருத்தலானும், நாமகளும், உக்கிரப்பெருவழுதி முதலிய பற் பல மெய்ப்புலவர்களும் வடமொழி வேதத்தைக் குறித்துப் பல் லாற்றானும் திருவள்ளுவமாலையாகிய சிறப்புப்பாயிரத்துள் விளக்கி அவ்வேத முண்டென நிறீஇப் பேசிப் போந்தமையா னும்,

புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகனுமாச் சிரம
அறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்தும்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்.

ஆன்மாக்கள் வினைக்கீடாகப் படிமுறையாற் கீழ்க்கீழ்ச் சமயங்களின் நின்று மேன்மேற் சமயங்களில் வந்து, பின்னர்ப் பிரமசரிய முதலிய நான்காச்சிரம கருமங்களை இயற்றிப், பின்னர்க் கலைகளை யறிந்து, பின்னர் புராணங்களைப் படித்துப், பின் வேதங்களை உணர்ந்து, பின் உபநிடதத்தை நன்றாகத் தெளிந்து, பிறவிதோறு மிவ்வாறு மேற்பட்டுவந்தால் இப் பக்குவ முதிர்ச்சியால் சைவக்கூற்றின் முடிபாகிய சித்தாந்த சைவத்தை யடைவர் எனச் சிவஞான சித்தியாருட் சோபான முறை கூறும்வழி அருங்கலை ஆரணம் புராணம் உபநிடத மெல் லாம் அதற்கு இன்றியமையாதனவாகக் கூறப்படுதலால் அவை என்று மிருத்தல் வேண்டு மாகலானும், அதன்கண் தேய விசே டங் கூறுங்காலும் "நான்மறை பயிலா நாட்டில் விரவுத லொழிந்து தோன்றன் மிக்கபுண்ணியந்தானாகும்" எனக் கூற லான், அவ்வேதம் என்றும் உள்ளதென்பது நன்று பெறப்பட லானும், சிவபாதவிருதயராகிய தந்தையார் வேள்வி நடாத்து தற்குப் பொருள் வேண்டும் என்று கேட்டபோது திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் சிவபிரானிடத்துப் பொற்கிழிபெற்று,

"ஆதி மாமறை விதியினா லாறுசூழ் வேணி
நாத னாரைமுன் னாகவே புரியுநல் வேள்வி
தீது நீங்கநீர் செய்யவுந் திருக்கழு மலத்து
வேத வேதிய ரனைவருஞ் செய்யவு மிகுமால்."

எனத் திருவாய் மலர்ந்தருளிக் கொடுத்தமையானும், தம்மைத் தாமே தேவாரத்துள் பல இடங்களிலும் "முத்தமிழ் வல்லவன்" "நான்மறை வல்லவன்" என்பன வாதியாகத் தமிழையும் சமஸ்கிருத வேதத்தையும் வேறு பிரித்துச் சிறப்பித்துக் கூறியிருத்தலானும், சுந்தரமூர்த்திநாயனாரும் "நாளு—ஞாலந்தான் பரவப்படுகின்ற நான்மறை யங்கமோதிய நாவன்" எனத் தம்மைத் தாமே சிறப்பித்துப் பாடியதனானும், அது வேயுமன்றி "அந்தணர் வேள்வியு மருமறைத் துழனியுஞ்—செந்தமிழ்க் கீதமுஞ் சீரினால் வளர்தர" எனவும், "அரவொலி யாகமங்க ளறிவாரறி தோத்திரங்கள்—விரவிய வேதவொலி விண்ணெலாம்வந் தெதிர்ந்தி சைப்ப," எனவும், "ஆகம சீலர்க் கருணல்கும் பெம்மானே தண்டமிழ் நூற்புல வாணர்க்கோரமமானே" எனவும், சமஸ்கிருத வேதாகமங்களையும் தமிழையும் வேறு பிரித்து விளக்கிக் கூறினமையானும்,

அப்பரும் "நால்வேத மோர்ந்தோதிப் பயில்வார்வாழ்தரு மோமாம் புலியூர்" என்றற் றொடக்கத்தனவாகக் கூறியருளினமையானும்,

"தென்னாட்டமணு சறுத்துத் திருநீறே—அந்நாடு போற்றுவித்தார் வந்தணையும் வார்த்தைகேட்—டெந்நாட் பணிவதென வேற்றெழுந்த மாமறையோர்—முன்னாக வேத முழங்க வெதிர் கொண்டார்." எனப் பன்னிரண்டாந் திருமுறைக்கண் கூறப் படலானும்,

"வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது" என்னுந் தொல் காப்பியச் சூத்திரத்துள் மூன்று என்றது அது என்றும் நீ என்றும் ஆனாய் என்றும் கூறும் மூன்று பதங்களையே யாகலின், அத் "தத்துவமசி" மகாவாக்கியம் வடமொழி வேதத்தின் கண்ண தாகலானும்,

"மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனி நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே"

"பெற்றநல் லாகமங் காரணங் காமிகம்
உற்றநல் வீர முயர்சிந்தம் வாதுளம்
மற்றவி யாமள மாகுங்கா லோத்தரம்
துற்றநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே"

"நந்தி யிணையடி நான்றலை மேற்கொண்டு
புந்தியி னுள்ளே புகப்பெய்து போற்றிசெய்
தந்தி மதிபுனை யானடி நாடொறும்
சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே"

என்றிங்ஙனம் மந்திரத்துள் மாமூலர் கூறியருளினமையான் அவர் அவற்றைத் தமிழிற் கூறியருள வந்தார் என்பது பெறப்படுதலானும், அவ்வண்ணமே பெரியபுராணம் சான்று பகரலானும்,

"மாமலர்த் தெரியலான் மணிமிடற் றிடைக்கிடந்த—சாமகீத மற்றுமொன்று சாமி நன்கு பாடினன்" எனவும், "மறையார் வேள்வி மந்திரச் செந்தீ" எனவும், "நரம்புறு தெள்விளி நவின்ற நான்மறை—வரம்பெறு நெறியவர்" எனவும், "வல்ல தெனை யென்னமறை வல்லவன்" எனவும், சீவகசிந்தாமணிக் கண்ணும்,

"கற்பங் கைசந் தங்கா லெண்கண்—தெற்றெ னிருத்தஞ் செவிசிக் கைமூக்—குற்ற வியாகர ணமுகம் பெற்றுச்—சார்பிற் றோன்று வாரண வேதக்—காதியந்த மில்லை யதுவே நெறியெனும்—வேதிய னுரையின் விதியுங் கேட்டு" என மணிமேகலையினும்,

"அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்—திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி" எனப் புறநானூற்றினும்,

"அருமறை நாவி னந்தணர்க் காயினும்" எனச் சிறுபாணாற்றுப்படையினும்,

"வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்று—மறைகாப்பாளர்" எனப் பெரும்பாணாற்றுப்படையினும்,

"சிறந்த வேதம் விளங்கப் பாடி" * * * * உறையு மந்தணர்" என மதுரைக்காஞ்சியினும்,

"நான்மறை யோர்புகழ் பரப்பியும்" எனப் பட்டினப் பாலையினும்,

"மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட" எனச் சிலப்பதிகார மங்கலவாழ்த்துப் பாடற்கண்ணும்,

"மாட மறுகு மறையோ ரிருக்கையும்" எனவும், "நான் மறை மரபிற் றீமுறை யொருபால்" எனவும் இந்திர விழவூரெடுத்த காதைக்கண்ணும்,

"முத்தீச் செல்வத்து நான்மறை முற்றி" எனக் கட்டுரை காதைக்கண்ணும்,

"மறையோராக்கிய வாவுதி நறும்புகை" எனவும், "அருமறை யந்தண ராங்குள ராவோர்" எனவும் கால்கோட்காதைக் கண்ணுங் கூறப்படுதலானும்,

உருத்திரபசுபதிநாயனார் செபித்த உருத்திரமும் வடமொழிவேதத்தின் கண்ணதாகலானும், பரமசிவனே பரம்பொருள் என்பது தேற்ற அரதத்தாசாரியர் கூறிய இருபத்திரண்டேதுக்களுள்ளும் முதற்கண்வைத் தெண்ணப்பட்ட "உயர்காயத்திரிக்குரிய பொருளாதலின்" என்னுங் காயத்திரி மந்திரமும் அதன் கண்ணதாகலானும், அவர் செய்த "சதுர்வேத தாற்பரிய சங்கிரகமும்" இப்போதுள்ள அவ்வேதங்களின் தாற்பரியமே யாகலானும், வேதாந்த சூத்திரமும் அவற்றின் சுருக்கமே யாகலானும், அச் சூத்திரத்திற்குப் பாடியஞ் செய்தாரெல்லாம் தத்தங் கோளை நிறுவ இப்போதுள்ள வேதங்களையும், உபநிடதங்களையும், புராணேதிகாச முதலியவற்றையுமே பிரமாணமாகக் கொண்டமையானும், அப்பதீக்கிதரும் சிவார்க்கமணி தீபிகைக்கு அவற்றையே பிரமாணமாகக் கோடலானும், அவர்க்குப் பிற்காலத் தான்றோரும் அவற்றை உடம்பட்டமையானும்,

சைமினிமுனிவர் தாஞ் சிவதூடண பரிகாரமாக இயற்றிய தோத்திரம் முதன் மூன்று பாதமும் அவர்வாக்காகவும் நான்காம் பாதம் இப்போதுள்ள வேதமாகவும் நிலவி "வேதபாதஸ்தவம்" என்னும் காரணப்பெயர் பெற்றிருத்தலானும்,

"பூமேவு செங்கமலப் புத்தேளுந் தேறரிய, பாமேவு தெய்வப் பழமறையுந்—தேமேவு, நாதமுநா தாந்த முடிவு நவை தீர்ந்த, போதமுங் காணாத போதமாய்," "சூழ்வோர்—வடிக்கும் பழமறைக ளாகமங்கள் யாவும், முடிக்குங் கமல முகமும்," "மறைமுடிவாஞ் சைவக் கொழுந்தே" எனக் கந்தர்கலிவெண்பாவினும்,

"பழமறைகண் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டல்," "செழுமறை தெளிய வடித்த தமிழ்ப் பதி கத்தோடே," "தொடுக்குங் கடவுட் பழம்பாடற் றொடையின்பயனே நறைபழுத்த துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ் சுவையே," "கலாபேதமென நின்னைக் கலைமறைகள் முறையிடுவ கண்டோ," "ஏடகத் தெழுதாத வேதச் சிரத்திருக்குமிவள்," "சகலமுங் நின்றிருச் சொரூபமென் றோலிடுஞ் சதுர்

மறைப்பொருள் வெளியிட," "துறைத்தமிழொடுந் தொன் மறை தெளிக்குங் கலைக்கொடி," என மீனாக்ஷியம்மைபிள்ளைத் தமிழினும்,

"மறைபண்ணினாள்," "வடகலை தென்கலை பயிலுமலை" என மீனாக்ஷியம்மைகுறத்தினும்,

"பொழிந்தொழுகு முதுமறையின் சுவைகண்டும் புத்தமுதம்—வழிந்தொழுகுந் தீந்தமிழின் மழலைசெவி மடுத்தனையே" "முதுபாட லெழுதா மறையோடு மிசைமுத் தமிழ்பாட," "வேத முடிவினின் முடிந்து நின்ற வழிக்கய லாகார்," "வடகலை யலபல கலையொடு தமிழ்வள ருங்கூடல்," "வடகலை தென்கலை பலகலை யும்பொலி மதுரை," "கட்புலங் கதுவாச் செவிப்புலம் புக்கு—மனனிடைத் துஞ்சி வாயிடைப்போந்து—செந்நா முற்றத்து நன்னடம் புரியும்—பல்வேறு வன்னத் தொருபரி யுகைத்தோய்," என மதுரைக்கலம்பகத்தினும்,

"தொன்மறைக் குலங்கண் முன்னிய தியாதெனப்—பன்முறை தெரிப்பினும் பயன்கொள வரிதாற்—றேவரி லொருவனென் றியாவரு மருளுற—நீயே நின்னிலை நிகழாது மறைத்துக்—கூறிய தாகு மாகலிற்—றேறினர் மறையெனச் செப்பினர் நன்றே", "எழுதாக் கிளவிநின் மொழியெனப் படுதலின்—நின்பெருந் தன்மை நீயே நவிற்றுதன்—மன்பெரும் புலமைத் தன்றே யும்பரி—னின்னோ ரன்ன ரின்மையி னின்னிலை—கூறுய் நீயெனிற் றேறுந ரிலாராற்—றன்னுடை யாற்றன் முன்னோர் முன்னர்த் தற்புகழ் கிளவியுந் தகுமென் றம்ம—நிற்புகழ்ந் திசைத்தனை நீயே யாக—இருடீர் காட்சிப் பொருடுணிந் துணர்த்தா—தியங்கா மாபி னிதுவிது பொருளென—மயங்கக் கூறுதன் மாண்புடைத் தன்றே—அளவில் காட்சியை யையமின் றுணர்த்தலிற் றளரா நிலைமைத் தென்ப வென்றலிற்—றன்னுடை மயக்கந் திசைமேல் வைத்துச்—சென்னெறி பிழைத்தோன் றிசைமயங் கிற்றென—மொழிகுவ தேய்ப்ப முதுக்குறை வின்மையிற்—பழமறை மயங்கிற் றென்று முழுவதும்—எய்யா திசைக்குதும் போலும்" எனத் திருவாரூர்நான்மணிமாலையினும்,

"செழுமறைப் பொருளி னுரைவிரித் துமெனும் வேதா முடித்தலை மோதுகைக் காய்ப்பொடு" "இறைவியென் றுமறை கையெடுத் தார்ப்பவும்," "மறைமுடிவி னின்றுநிறை செல்வன்," "பயிறரு முதுமறை நூலைத் தெரித்தவள்," "வேதபதி," "வேதபுரி," "இருக்கோ விடுப்பரி புரக்கோலமும்," "நான்மறை முதலி," "மூல மெனக்குல நான்மறையோலிடு முழுமுதலே," "உயர்மறை நூற்கலை முடிவின் முடிந்

திடு மொழு கொளி மரகதமே," "கலைமறை யெனுமுரல் வரி யளி மொய்த்த மலர்க்காவே," "பழமறை வடித்துத் தெளித்த வார்த்தை யொன்று மொழியும்," "கலைப்பா ணிறைந்த முதுக் குறைவிற் கல்விச் செல்வர் கேள்விநலங் கனியக் கனிய வமு தூறுங் கடவுண் மறையு முதற்சங்கத்,—தலைப்பா வலர்தீஞ் சுவைக்கனியுந் தண்டே னறையும் வடித்தெடுத்த, சாரங்கனிந் தூற்றிருந்த பசுந்தமிழு நாற," "அகில மறையு மரியு மயனு முற்றுநின்—முடியு மடியு முணர வரிய முதல்வ," "ஆயிர மறைக்குமொரு பொருளா யிருப்பவன்," "செழுநான் மறை யின் செல்வச் செருக்கே," "பழமறை யார்ப்பென வாகுதி வேட்டெழு பண்ணவ ருண்மகிழ," "வடகலை தென்கலை யொடு பயி லுங்கவி வாணர்க ளோடிவர," "பழமறை கட்கொரு முதல்வன் முழுக்குக," என முத்துக்குமாரசுவாமிபிள்ளைத் தமிழினும்,

"நால்வகைப் பொருளு நவையறக் கிளந்த—வேத புரு டனு மியாதுநின் நிலையெனத்—தேறலன் பலவாக் கூறின னென்ப— அதாஅன்று—முன்னைநான் மறையு முறைப்பட நிறீஇய மன்னிருஞ் சிறப்பின் வாதரா யணனுங் கையிழந் தன னது பொய்மொழிந் தன்றே," "வனசப் புத்தேண் மணிநாப் பந்திக்—கவனவாம் புரவியிற் காட்டிக் கொடுத்துப் —பைந் தமிழ் நவின்ற செந்நாப் புலவன்," "அருமறை கிளந்தநின் றிருவாக்கிற் பிறந்த—அறுபதிற் றுக்கிய வைம்பதிற்று முனிவ ருள்—ஒருவனென் றிசைத்த விருபிறப் பாள," "இருபிறப் பமைந்த வொருபிறப் பெய்து—நான்மறை முனிவர் மூவா யிரவ ரும்" எனச் சிதம்பரமும்மணிக்கோவையினும்,

"வேதந் துறைசெய்தான் மெய்துணியான் கைதுணிந் தான்," "கோமுனிவ ருக்குமரி தாய்முதும றைப்பனுவல் கூறியப ரப்பிரமமாம்—ஓமெனுமெ ழுத்தின்வடி வாய்நடந விற்றுபுலி யூரன்," "மறைதங்கு திருமன்று" "இருக்கோல மிட்டு மின்னுமுண ராது," "நான்மறைக்குந் துறைகண்டார் தோளிழந்தார்," "பலகலையுங் குலமறையும் பயின்றுணர்ந்தும் பயன்கொள்ளாது" எனச் சிதம்பரச்செய்யுட்கோவையினும்,

"கூத்தரவர்—பாடுகின்ற வேதமே," "மறைகொண்டு வாழ்த்துவதும் வம்பே," "தொல்—மறைசெய்த வொண்ணு தலே," எனச் சிவகாமியம்மையிரட்டைமணிமாலையினும்,

"நான்மறை நவின்ற நற்பொரு ளிவையெனா—மோனவா சகத்தான் முப்பொருணவிற்றுபு—நன்னலம் புரியும்" "நல்லருட் டிறத்தா னம்பி நீயே—பல்லுயிர்த் தொகுதியும் பயன்கொண்

டுய்கெனக்—குடிலை யென்னுந் தடவய லுப்பண்—அருள்வித் திட்டுக் கருணைநீர் பாய்ச்சி— வேத மென்னும் பாதபம் வளர்த்தனை—பாதப மதனிற் படுபயன் பலவே— அவற்றுள்— இலைகொண் டுவந்தனர் பலரே யிலையொரீஇத்—தளிர்கொண் டுவந்தனர் பலரே தளிரொரீஇ—அரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை—விரும்பினர் கொண்டுகொண் டுவந்தனர் பலரே—யவ்வா றுறுப்பு மிவ்வாறு பயப்ப—ஒருங்கே தாங்க மென் றுச்சியிற் பழுத்த—ஆரா வின்ப வருங்கனி பிழிந்து—சாரங் கொண்ட சைவசித் தாந்தத்—தேனமு தருந்தினர் சிலரே," "நான்மறைக் கிழவ நற்றவ முதல்வ—நான்முறை பயின்ற நுண்மைசா லறிஞ—சொற்சுவை பழுத்த தொகைத் தமிழ்க் கவிஞ" எனப்பண்டாரமும்மணிக்கோவையினும்,

"உரையாத பழமறையின் முதலெழுத்தி னுண் பொருளை," "அருமறை தெரிய விரித்தனை * * * * தமிழ் தெளித்தனை," "அடுத்த நான்மறை முனிவர் நால்வர்க்கு மம் மறைப் பொருள்கூற—வெடுத்த கோலமா யானந்த வனத்து மெம்மித யத்து மிருப்போனே," "சொல்லாவது மறையே," "தொல்லை—இருக்கோல மிட்டுணராய்," "பண்ணோர் வேதம் பாடிய காசிப் பதியாய்," "தீவளருங்—கஞ்சக் கரத்தான் கலைமறைக்கு நாயகமாம்— அஞ்சக்கரம்," "மறைமுதற் பொருளி னிறைசுவை யமுதினை," "ஆனந்தவனத் திருப்பாரை யெங்கே காண்பார்—பண்ணிருக்கு மறைகளுமெண் கண்ணனுங் கண் ணனுமமரர் பலருந் தாமே," "மறை விரிக்குஞ் சிலம்படி யார்," "ஓதியோதியு மிளைப்பர் வேதம துணர்ந்து தத்துவமு முணர்கிலா ருணரும்வண்ணமநு பவத்தில்வந்திடுமோ ருண்மை வாசகமு ணர்த்துகேம்—எதிருலற மனைத்திலும்பசு விளைப் படுத் தனல்வ ளர்த்திடும் யாகமேயதிக மென்ப தன்பர்த மிறைச்சி மிச்சிலதி லிச்சையா—ராதியாரறிவ ரதுகிடக்கமது வருந்திலப் பொழுதி லேபெறற் கரியதோர்பரம சுகம்விளைத் திடுவ ததுமறுத்த வவையில்லையே" "நகர மாய்மறைச் சிகர மானதால்—அகர மாயினார் நிகரில் காசியே," "உரைத்த நான் மறைச் சிரத்தும்," எனக் காசிக்கலம்பகத்தினும்,

"வடநூற் கடலுந்—தேக்குஞ் செந்தமிழ்ச் செல்வமுந் தொண்டர்செந் நாவினின் று—காக்குங் கருணைக் கடலே" எனச் சகலகலாவல்லிமாலையினும், குமரகுருபரசுவாமிகள் கூறி யருளலானும், "விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்—காரண னுரையெனு மாரண மொழி" என நால்வர் நான்மணி மாலையுட் கூறப்படுதலானும்,

நான்மறை:—தொல்காப்பியம், இறையனாரகப்பொருள், திருக்குறள், தேவாரம், சிவஞானபோதம் என்பனவே; வடமொழி வேத மன்று; என்று கூறினார் ஒருவர். மற்றொருவர் இக்கொள்கையை உடன்படாமல் தமிழ்வேதம் ஆதியில் வேறிருந்தது; அது கடலாற்கொள்ளப்பட்டதென்றார். ஆதியில் தமிழ் வேத மிருந்தது மெய்யானால் இருவரும் ஒரு பெயரையே கூறல் வேண்டும். அங்ஙனமில்லாமையால் தத்தமனம் போனவாறு கூறத் தொடங்கினர். முன்னவர் திருக்குறள் திருமுறைகளைத் தமிழ் வேதம் என்றல் சரியே; "மூவா நான்மறை" என்புழி நான்மறை அவற்றைக் குறிக்கும் என்பது பிழை. "மூவாநான்மறை என்னுஞ் சொற்றொடர் ஆராய்ச்சி" என்னு நூலினால் அது நியாய வாயிலாக மறுக்கப்பட்டது. தொல்காப்பியம் இறையனாரகப்பொருள் சிவஞானபோதம் என்பன நான்மறை என்றல் அவர் கற்பனையே! என்னை ? அங்ஙனம் தொல்லாசிரியர் கூறாமையானும், முறையே அவை வெவ்வேறு பெயர் பெற்று, பெற்றதற்கேற்ற பொருளை விளக்குதலானுமென்க. இவ்விருவரும் தம்முண் முரணிக் கூறினமையே ஆதியில் தமிழ் நான்மறை இல்லை யென்பதைக் கரதலாமலகம்போல விளங்க விளக்குதலானும்,

ஸ்ரீ. தயானந்தசரஸ்வதி என்னும் மகாபண்டிதரும் சைவாகம வுணர்ச்சி யின்மையால் சைவத்துக்கு மாறுபட்டுச் சிலகூறினும், தமது "சத்தியார்த்தப்பிரகாச"த்தில் "அறிவுக் களஞ்சியமாயும், தர்மஸ்தானமாயும் விளங்கும் நான்கு வேதங்களையும் தேவவாக்கெனக் கொள்ளுகின்றேன்; இவைகள் சம்ஹிதையும் மந்திர பாகமுமேயாகும்; பிழையின்றி அவைகள் தமக்குத் தாமே பிரமாணமாக இருக்கின்றன. எனவே, அவைகளை நிறுவ வேறொருநூல் வேண்டியதின்று; சூரியன் சுயம்பிரகாசத்தால் தன்குணங்களையும் பிரபஞ்சத்திலுள்ள சகல பொருள்களின் குணங்களையும் விளக்குதல் போலவே வேதங்களும். சிட்சை, வியாகரணம், சந்தோவிசிதம், நிருத்தம், சோதிடம், கற்பம் என வேதாங்கங்கள் ஆறு. ஆயுர்வேதம், அர்த்தவேதம், தநுர்வேதம், காந்தருவவேதம் என உபவேதங்கள் நான்கு. சாகைகள் ஆயிரத்து நூற்றிருபத்தேழு. இவைகளெல்லாவற்றையும் துணைப்பிரமாணங்களாகக் கருதுகின்றேன்." எனக் கிளந்தெடுத்துக் கூறலானும்,

"இவையெல்லா மருமறை யாகமத்தே யடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும்" என்ப, ஆகலான், யாது யாது எங்கெங்கே ஒடுங்கிற்றோ அது அது அங்கங்கே யுற்பத்தியாம் மண்ணிற் கடம் போலும் என்னும் அவிநாபாவத்தால் அர

னிடத்தே ஒடுங்கிய வேதாகமங்கள் தோன்றுதலும் அர
னிடத்தே யென்பார் "ஆரண மாக மங்க ளருளினு லுருவு
கொண்டு—காரண னருளா னுகிற் கதிப்பவ ரில்லை யாகும்"
எனவும், "மறைகளீ சன்சொல்" எனவுங்கூறிப் போந்தார்
சகலாகமபண்டிதசிவாசாரியராகலானும்,

நால்வர் தமிழ் முனிவர் தமிழ் நான்மறை செய்தனரல்லர்
என்பது பசுமரத் தாணிபோற் பதித்து நாட்டப்பட்டது.
பிடுங்கவல்லம் என்பார் இழுத்துப்பிடுங்கிப் பார்க்கட்டும்
பார்ப்பேம்.

இங்ஙே கூறிய வாற்றால் தமிழ்மறை காணப்படாமையால்
காட்சி யளவையானும், அவிநாபாவமாகிய ஏதுக்காணமையால்
வழியளவையானும், நூலுரைகளுட் கூறப்படாமையால் உரை
யளவையானும் அறியப்படாமையால் ஸ்ரீமாந். சுப்பிரமணிய
பிள்ளையவர்கள் அகவெளியிற்றோற்றுவித்த தமிழ் நான்மறை,
புற வெளித்தாமரையும் புன்முயற் கோடும் ஆமைமயிர்க் கம்பல
மும்போல என்றுஞ் சூனியமேயாமென்பது வெளிப்படையாய
வாறு காண்க.

இவ்வுண்மையைப் பெரிதுமுணர்ந்த பெரியார், "அரை
யன்வா யுரைகள் வரைதரு முடங்க லதுவரக் காணின்மற்
றவனுள்—தரையின்வாழ் பவருண் நடுங்கியோர்ந் ததன்வாய்ச்
சாற்றிய முறைசெய்வா ரென்றால்—கரையில்பே ரின்பந் தர
வெமக் கிறைசொல் கட்டுரை யெனின்வே றென்னை—உரையுள
வேதா கமமவ னெனக்கண் டுரைத்தவா புரிகுவ தல்லால்"
எனவும், "வேதாகமவழி *** சொலற்கியைந்தேன்" எனவும்,
"மறைமுடிவின் றெருட்கு" எனவும், "வேதந் தனைத்தமி
ழுருவத் தொளித்தெமக் களித்தவள் ளுவரே" எனவும்,
இங்ஙனங்கிளந்தோதி அவற்றின் றோற்றநிலைக்களனும் மாண
பும் உண்மையும் நன்கனந் தெரித்தார்.

இங்ஙன மிருந்தவாற்றான், வடமொழிக்கணுள்ள வேதாக
மங்களே ஆன்மாக்கள் பொருட்டுச் சிருட்டியாரம்ப காலத்தில்
சிவபிரானால் திருவாய்மலர்ந் தருளப்பட்ட முதனூல்களென்
பது சித்தித்தவாறு காண்க.

இனிப் பிறிதோராற்றா னதன்கட்படு மாராய்ச்சி வரு
மாறு:—தொல்காப்பியப் பாயிரத்தில், "நான்மறை முற்றிய—
அதங்கோட்டாசான்" என்புழி நான்மறை என்றது வட
மொழி வேதமோ அன்றோ என்னும் ஐயப்பாட்டின்கண்,
"தமிழ் இயல் நூலாகிய தொல்காப்பியத்தை ஆய்ந்து அது

தக்கநூலென்று முடிவு கட்டுதற்கு நான்மறைப் பயிற்சி வேண்டியதாக யூகிக்கப்படுகின்றது. ஆதலால் அந் நான்மறை வடமொழி நூல்களென்று கருதப்படா. தமிழ் நூல்களாமென்பது தெளிவு" என்னும் பூர்வ பக்கத்தார் கொள்கையை நியாயவாயிலாக மறுக்கின்றாம் !

தமிழ் இயனூலாகிய தொல்காப்பியத்துள் வடமொழி நியாயங்களும் அம்மொழி வேத விஷயங்களும் விரவிக் கூறப்படுதலால் அவற்றைக் கற்றார்க்கன்றி மற்றார்க்கும் அத்தகைய நூலை இயற்றலும், அதனைக் கேட்டு இது தக்கதென முடிவு காண்டலும் சாலாவாகலான், அதங்கோட்டாசானும் தொல்காப்பியரும் அவைகளைக் கற்றவர் என்பதை நன்கிதி னுணர்ந்து தற்கு "நான்மறை முற்றிய" என்றும் "ஐந்திர நிறைந்த" என்றும் விசேடித்தார் பனம்பாரனார். அத்துணையேயன்றி வேறன்று.

இக்கருத்தை ஐந்திரநிறைந்த தொல்காப்பியன் என்றமையே தெளிய உணர்த்துப்; என்னை? அவ்வியல்பினர் வடமொழிவழக்கும் அம்மொழி வேதவிடயங்களும் அதனுட் கூறு தொழியாராகலான். வடமொழி நியாயங்களும் அதனுட் போந்தமையானன்றே ! இலக்கணக் கொத்தாசிரியரும் வடமொழி நியாயங்கள் "தொல்காப்பியந் திருவள்ளுவர் கோவையார்—மூன்றிலு முழங்கு மாண்டினு மிலையேல்—வடமொழி வெளிபெற வழங்கும்" என்றார்.

அஃதற்றாயின் "நான்மறை முற்றிய வதங்கோட்டாசான்" என்றதனால் அவர் வியாகரணங் கற்றிலர் என்பதும், "ஐந்திர நிறைந்த தொல்காப்பியன்" என்றதனால் அவர் வேத முணர்ந்திலர் என்பதும் பெறப்படலான், இருவரும் முறையே தொல்காப்பியங் கேட்டலும் அதனை இயற்றலும் சாலாதாலெனின், அற்றன்று; "எழுத்தறியத் திரு மிழிதகைமை தீர்ந்தான்—மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகும்—மொழித்திறத்தின்—முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து—கட்டறுத்து வீடு பெறும்" என்ப ஆகலின், முதனூற் பொருளுணர்தற்கு வியாகரணம் கருவி யெனப்படுதலான், 'நான்மறை முற்றிய' எனவே, அவற்றை முற்றக் கற்றற்குக் கருவியாகிய இலக்கணமுங் கற்றவர் என்பதூஉம், 'ஐந்திர நிறைந்த' எனவே, அது நிறையக் கற்றல் முதனூல் நிறையக் கற்றற்கேயாகலான் நான்மறை கற்றவர் என்பதூஉம் போதரலான் சாலாமை யாண்டையதென் றொழிக. அற்றன்று; இலக்கணங் கற்றன் மாத்திரையி னமைந்து முதனூல் கல்லாதாரையுங்

காண்கின்ற காட்சிப் பிரமாண முண்மையால் தொல்காப்பியரும் 'ஐந்திர நிறைந்து' அவ்வளவி னமைந்தா ரென்னுமோவெனின், என்னும்; என்னை? தொல்காப்பியத்துப் பொருளதிகாரத்துள் வேத விஷயம் மிகவும் விரவிக் கூறப்பட்டுக் கிடத்தலா னென்க.

அல்லதூஉம் கன்னிகா கலியாணம்வரை ஆசிரியனிடத்திலிருந்து வேதமோதலும் விரதங் காத்தலும் அந்தணர் மரபிற் பிரமசரிய நிலையாகலான் அது தடையாகாமையுமறிக.

இனி, அகத்திய முணர்ந்து தமிழில் உலக வழக்குஞ் செய்யுள் வழக்கும் ஆய்ந்ததுபோல, ஐந்திர முணர்ந்தபடியால் சமஸ்கிருதத்தில் உலக மொழியும் வேதமொழியும் ஆய்ந்தமை, தானே பெறப்படுதலுங் காண்க. வடமொழியில் செய்யுள் வழக்கு வேதம் என்பது மாபாடியம் வல்லார் வாய்க் கேட்டுணர்க.

இங்கே கூறிய நியாயங்களினால் "அதங்கோட்டாசான் முற்றிய நான்மறை"யும் வடமொழி நான்மறையே என்பது வாயுமுகத் தழியாத வச்சிரமலைபோல நிறுவப்பட்டமை காண்க.

இனி முதனூலாகிய வேதாகமங்கள் சிருட்டியாரம்பகாலத்தில் சிவபிரானால் திருவாய் மலர்ந்தருளப்படாவாயின், அவை முதனூல்களெனப்படா! என்னை? "வினையி னீங்கி விளங்கிய வறிவின்—முனைவன் கண்டது முதனூலாகும்" என்பவாகலான். அதுவேயுமன்றிக் கதியடைபவருமின்றாய்ச் சிவபிரான் செய்த சிருட்டியும் பயப்பாடிலதாய் முடிந்து,

"உருவருள் குணங்க ளோடு முணர்வரு ளுருவிற் றோன்றிக்
கருமமு மருள ரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்க மெல்லாந் தானரு ளனக்கொன் றின்றி
அருளுரு வுயிருக் கென்றே யாக்கினா னசிந்த னன்றே"

என்னுஞ் சுருதிக்கு மாறாய்க் கருணைமூர்த்தி யென்னும் பெயருமின்றாய் அதனால் இறைமைக் குணமிலனெனப்படுவன் சிவபெருமான்; ஆகலான், சிருட்டி ஆரம்பகாலத்து அவன் இறைமைக்குணம் வழுவாது உயிர்கள் கதியடையுமாறு வேதாகமங்களை அருளிச்செய்தனன் என்னுங் கருத்துப்பற்றியே "ஆரண மாக மங்க ளருளினா லுருவு கொண்டு—காரணனருளா னாகிற் கதிப்பவ ரில்லை யாகும்—நாரணன் முதலா வுள்ள சுரர்நரர் நாகர்க் கெல்லாஞ்—சீரணி குருசந் தானச்

செய்தியுஞ் சென்றிடாவே'' என்னுஞ் சுருதி யெழுந்ததூஉ மென்க. "மாலயனிந் திரன்முதற் றேவர்க் கெல்லாங் குரவா வென்னும்'' என்ற திருவிசைப்பாவுமது.

இனி, "முனைவனாற் செய்யப்படுவதோர் நூல் இல்லை யென்பார், அவன் வழித் தோன்றிய நல்லுணர் வுடையார் அவன் பாற் பொருள்கேட்டு முதனூல் செய்தாரெனவும், அம் முனைவன் முன்னர் ஆகமத்துப் பிறந்ததோர் மொழியைப்பற்றி அனைத்துப் பொருளுங்கண்டு பின்னர் அவற்றவற்றுக்கு நூல் செய்தார் அவரெனவும், அவ்வாகமத்தினையே பிற்காலத்தாரும் ஒழுக்கம் வேறுபடுந் தோறும் வேறுபடுத்து வழிநூலுஞ் சார்பு நூலுமெனப் பலவுஞ் செய்தாரெனவுங் கூறுப. அவை எவ் வாற்றானும் முற்ற உணர்ந்தோர் செய்த நூலன்மையின் அவை தேறப்படா. அல்லதூஉம் அவை தமிழ் நூலன்மையின் ஈண்டு ஆராய்ச்சியில வென்பது.''

முனைவனால் என்பது முதல் ஆராய்ச்சியிலவென்பது வரை 'வினையினீங்கி' என்னுஞ் சூத்திரவுரையின் ஓர்பகுதி. இதன் முதற்பகுதி கொண்டே "நால்வர் தமிழ்மக்கள் தமிழில் வேதஞ் செய்தற்குமுன் வேதமில்லை'' என்று ஸ்ரீமாந். அட்வக் கேட் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் "திருநான்மறை விளக்கத்'' துட் கூற நேர்ந்தது. அக்கூற்றைப் பிற்பாகம் முற்றும் மறுத் தொழித்தமையை உணரவில்லையோ! உணர்ந்து வைத்தும் பிறர் இதனை எவ்வாறு காண்பார்கள் என்னுங் கருத்தினாலோ மறுக் கப்பட்ட பூருவபக்கத்தைச் சித்தாந்தமாகக் கொண்டு கூறி "அவ்வளவிலவன் மகிழுக'' என்னு நியாய நெறியற்றி மகிழ்ந் தார். அதுவேயுமன்றிப் "பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்—பேதை வினைமேற்கொளின்'' என்னும் பொய்யா மொழிக் கெய்து மிலக்கியமாய் அறிஞர் அறிவாம் புனைபூண்டு கொண்டமை உற்றுநோக்கு மொளியுடையார் தெற்றென வறிவர்.

மேற்கூறிப்போந்த பேராசிரியர் உரையின் ஈற்றில் 'அல்ல தூஉம் அவை தமிழ் நூலன்மையின் ஈண்டு ஆராய்ச்சியில வென்பது' என்று கூறியிருத்தலால் அம்முதனூல் வடமொழி யிலுள்ள தென்பதொரு தலையாதலின் தமிழில் முதனூல் செய் யப்பட்ட தென்னும் மதம் நிலையுதலின்றி அழிந்தொழிந்தது. இதனாலே ஆதியிலே முதனூலெனப்படுவனவெல்லாம் முதல் வனால் வடமொழிக்க ணியற்றப்பட்டன என்பதூஉம், "களவியற்'' றமிழ்நூல் ஒன்றுமே முதல்வன் இடைக்காலத்தில் அரு ளிச்செய்த தமிழிலக்கண முதனூல் என்பதூஉம் பெற்றாம்,

"ஒன்றின முடித்த றன்னின முடித்தல்" என்பதனுல் வேதாகமங்கட்கு மிஃதொக்கும்; ஆயினும் பேராசிரியர்தாமே விளந்து காட்டியதும் விளங்கக் காட்டுது முன்னர்.

இன்னும், "தமிழ் நூலுள்ளும் தமது மதத்திற்கேற்பன முதனூல் உளவென்று இக்காலத்துச் செய்துகாட்டினும் அவை முற்காலத் திலவென்பது முற்கூறிய வகையான் அறியப்படும்" என்ற பேராசிரியர் கூற்றிஞலே நூல்செய்யாது கூறிக் காட்டினும் அவை முற்காலத்திலவென்பது தானேபோதரும்.

இன்னும், "தாமே தலைவராவாரும், அத்தலைவரை வழிபட்டுத் தலைவராயினுரும் பலராகலின், தாமே தலைவராயினுர் நூல் செய்யின் முதனூலாவதெனின், அற்றன்று; தாமே தலைவராயினோர் முற்காலத்துத் தமிழ்நூல் செய்திலர்" என்றதனுலும் வடமொழியிலேயே முதனூல் செய்தனர் என்பது இனிது விளங்கும்.

இன்னும், "தொகுத்தல் விரித்தல்" என்னுஞ் சூத்திரவுரைக்கண் "வேதப் பொருண்மையும் ஆகமப் பொருண்மையும் நியாயநூற் பொருண்மையும் பற்றித் தமிழ்ப்படுக்குங்கால் அவற்றிற்கு மிதுவே இலக்கண மென்றற்கு மொழி பெயர்த்தலையும் இவற்றுக்கட் கூறிஞரென்பது." என்றதனுனே முதல்வனுற் செய்யப்பட்ட வேதாகமங்கள் வடமொழிக் கண்ணதன்றித் தென்மொழிக் கண்ணதன்றென்பது பசுமரத்தாணிபோற் பதித்து நாட்டப்பட்டது. ஆகலானும் நால்வர் தமிழ்மக்கள் தமிழில் வேதஞ் செய்தார் என்பதூஉம், அவர்கள் செய்தற்கு முன் வேதம் இல்லையென்பதூஉம் கற்பனைக் கூற்றாயவாறு காண்க.

இன்னும், தமிழியனூலுள் வடமொழி வேதப் பொருண்மை பேசுதற் கோரியை யில்லையெனக் கூறிக் கல்லாரை மயக்கும் நல்லார்க்குப் பேராசிரியரும் பெருங்கூற்றாயவாறு "கைக்கிளை முதலாப் பெருந்திணையிறுவாய்" என்னு முதற் சூத்திரவுரைமுகத் துரைத்த வுரைபற்றி யறிந்து கொள்க. அவ்வுரை வருமாறு:—

சிறுத்த முறையானே பொருளினது இலக்கணம் உணர்த்தினமையால் இது பொருளதிகாரம் என்னும் பெயர்த்தாயிற்று. ***பொருள்களாவன:—அறம் பொருளின்பமும், அவற்றது நிலையின்மையும், அவற்றி னீங்கிய வீடுபேறுமாம்.

பொருளெனப் பொதுப்படக் கூறவே, இவற்றின் பகுதியவாகிய முதல் கரு உரியும், காட்சிப்பொருளும, கருத்துப

பொருளும், அவற்றின் பகுதியவாகிய இயங்குதிணையும் நிலைத்திணையும், பிறவும் பொருளாம்.

அகத்திணைக்கண் இன்பமும், புறத்திணைக்கண் ஒழிந்த மூன்று பொருளு முணர்த்துப.

[ இந்நான்கும் வேதத்துட் கூறப்பட்டன.]

இது வழக்குநூலாதலின், பெரும்பான்மையும் நால்வகை வருணத்தார்க்கு முரிய இல்லறம் உணர்த்திப் பின் துறவறம் சிறுபான்மை கூறுப. அப்பொருள்கள் இவ்வதிகாரத்துட் காண்க.

பிரிதனிமித்தங் கூறவே, இன்பநிலை கூறி, "காமஞ்சான்ற" என்னுங் கற்பியற் சூத்திரத்தால் துறவறங் கூறினார். வெட்சி முதலாகவாகை யீறாக அறனும் பொருளும் பயக்கும் அரசியல் கூறி, அவற்றது நிலையின்மை காஞ்சியுட் கூறவே, அறனும் பொருளும் அவற்றது நிலையின்மையுங் கூறினார். "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்னுஞ் சூத்திரத்தான் இல்லறமுந் துறவறமுங் கூறினார், இந்நிலையாமையானும் இவற்றானும் வீட்டிற்குக் காரணங் கூறினார்.

இங்ஙனங் கூறவே, இவ்வாசிரியர் பெரிதும் பயன்படுவதோர் இலக்கணமே கூறினாராயிற்று; இதனாற்செய்த புலனெறி வழக்கினை யுணர்ந்தோர் இம்மை மறுமை வழுவாமற் செம்மை நெறியாற் றுறைபோவாராகலின்.

இங்ஙனமே நூனுதல் பொருளெல்லாம் நூன்முதற் சூத்திரவுரைக்கண் ஆசிரியர் தாம் முன்னர் விரித்தவாறு தொகுத்துரைத்திருக்கும் உரைபற்றியேனும் வேதப் பொருண்மை விரவப்பெற்ற திவ்வியநூலென்னும் பெற்றி தேறுதார் பிறவாறுரைப்பனவற்றிற்கு ஏ ஏ இவரறிவிருந்தவா றிஃதேயோ வென்றெள்ளி நகையாடா நிற்பர் நல்லாசிரியர் மாட்டுத் தொல்காப்பிய முதலிய நூல்களை வழிபடுமுறையில் வழிபட்டுக் கற்றுண்மை யுணர்ந்த ஒள்ளியா ரென்க.

"ஒரெழுத் தொருமொழி யுணரக்கூறிய—சீரெழுத் தாளரைச் சிதையச் செப்பிடில்" எனவும், "எழுத்தறிவித்தவனிறைவனுவான்" எனவும், "தந்தை யெனப்படுவான் றன்னுவாத்தியாகும்" எனவும் வருவனவற்றிற்கு மாறாக ஆசிரியனின்றித் "தாங்கற்ற நூலளவேயாகுமா நுண்ணறிவு." அந்தோ அவர் தாமென்செய்வார் !!!

இங்ஙனம் கூறிய நூலுரை யாசிரியர்கள் கருத்தை நோக்காத "திருநான்மறைவிளக்க"முடையார் "நூலே கரக முக்

கோன் மனையே" என்னும் இச்சூத்திரத்துட் போந்த 'நூல்' என்னும் பதத்திற்கு ஏடு என்று தம்மனம் போனவாறு பொருந்தாப் பொருள் கொண்டார். அதனை விளக்குதும்:—

நான்கு வருணத்தில்லறத்தார்க்கும் இவை இவை உரியன வென்றுணர்த்தப் போந்த ஆசிரியர், முதற்கண்வைத் தெண்ணப்படும் அந்தணர்க்குரியன இவை யென்று மேலைச் சூத்திரத்தாற் கூறினார். நூல் என்பது "பூணூல்" என முன்பின் முரணுமற் பொருள் கொண்டார் அவ்வாசிரியர். அதற்கு அதுவே பொருளாமாறு ஏனை மூன்று வருணத்தார்க்கும் உரியன இவையென்று கூறிய பிற்சூத்திரங்களானும் இனிது விளங்கும்.

'விளக்க' முடையார்க்குச் சில அந்தணர்மீது தோன்றிய சீற்றம் அவர் வருக்கமெல்லாந் தாவினமையின், அதுபற்றி எம திறைவன் நமர்க்கு முரித்தெனத்தந்த வடமொழியினும், அம் மொழி வேதாகமங்களினுந் தாவி அவற்றை வெறுக்கச்செய்தது. அதுமட்டோ! தாம் நமர்க்குரிய சிறந்த பாஷையெனக் கொண்ட தமிழினுள்ள தேவார முதலிய சீரிய தெய்வ நூல்களையும் திரிக்கவும் அவற்றிற்குத்திரிவுப்பொருள் கொள்ளவுஞ் செய்துவிட்டது! அதுமட்டோ! அவர் தம்மால் தமிழில் வேதாகமங்களைச் சிருட்டிக்கவுஞ் செய்துவிட்டது! அதுமட்டோ! அவற்றைத் திதிக்க மதுகையிலராகவுஞ் செய்துவிட்டது! அதுமட்டோ! சங்காரத்துட் படுத்தியும்விட்டது. நன்கு விளக்குதற் பொருட்டுச் சங்காரம் வெளிப்படையாகவும் கூறப்பட்டது.

" அரக்கரோ ரழிவு செய்து கழிவரே லதற்கு வேறோர்
குரக்கினத் தரசைக் கொல்ல மநுநெறி கூறிற் றுண்டோ "!

என்ற வண்ணம் அந்தணர்மீது கோபம் உண்டானுல் நமர்க்கு முரித்தாய வடமொழியிலும் வடமொழி வேதாகமங்களிலும் வெறுப்படைதல் நீதியா? வேதத்தைச் சுரத்தோடோதுதன் மாத்திரைக்கே நமக்கதிகாரமின்று. அதனுல் நமக்குக் குறைவியாது மின்று. அதனைப் பார்க்கவும் பொருளைக் கேட்கவும் அதனை உணரவும் அதிகாரமுண்டு. முதன் மூன்று வருணத்துட் பட்டாரும் ஒழுக்கந் தவறின் அவரும் வேதம் ஓதன் முதலியன செய்தற்கு அதிகாரிகளல்லர். அது "மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்—பிறப்பொழுக்கங் குன்றக்கெடும்" என்றதனுனு நன்கறியலாம். அதுபோல வேளாளருள்ளும் ஒழுக்க மில்லாதார் ஓத்தை நோக்கவும், பொருளைக் கேட்கவும், அதனை யுணரவும் அதிகாரிகளல்லர் என்றால் அதனுல் நமக்கு ஓத்துரித்தன் றென்பது கருத்தன்று.

முதல் வருணத்துப் பிறந்தாரும் உபவீதந் தரித்தபின்னரன்றி வேதமோதுதற் கதிகாரிகளல்லர் என விதிக்கப்பட்டிருத்தல்போல, ஆகம மோதுதற்கண்ணும் சிவதீக்ஷையின்றி அவர்க்கு மதிகாரமின்று என்ற விதியினால் அவர்க்குக் குறை நேராததுபோலச் சூத்ரோ டோதுதற்கு மாத்திரம் வேளாளர்க் கதிகார மின்றென்பதனால் குறைநேராது. வருணத்திற்கும், ஆச்சிரமத்திற்கும், ஒழுக்கத்திற்கும் தக்கவாறு சிவபெருமானால் வேதாகமங்களுள் விதிக்கப்பட்டனவும் விலக்கப்பட்டனவும் எவ்வாற்றானும் எவ்வருணத்தார்க்குங் குறைவாகாது; என்னை ? இறைவன் ஆன்மாக்களுடைய கன்மத்திற்கும் பரிபாகத்திற்கும் ஏற்பக்கொண்ட திருவுளப் பாங்கவையாகலான்.

இனி, சிவதருமோத்தரத்திலே "சிவஞானதானவியலிலே,

"பருவ முற்றிய பாவக மோர்ந்துபின்
உருகி யோதுக வோதகு மூண்மையை
மருவி வாய்வரு பாடையின் வல்லவர்க்
கரிய வாரியத் தானு மறைகவே"

எனக் கூறப்படுதலால் ஆரியமும் நமக்குரித் தென்பது கண்டு கொள்க. இன்னும், இலிங்காபட்டிய முதலிய வடநூல்கள் இயற்றினோர் சூத்திரரும், அகத்திய முதலிய தமிழ்நூல்கள் இயற்றினோர் அந்தணருமாய்; ஆகலானும் இருதிறத்தார்க்கு மிருபாடையு முரித்தாயவாறு கண்டு கொள்க.

தற்காலத்து, இந்தியாவினும் இலங்கையினும் இங்கிலீஷ் படித்திருப்பவர்கள் அப்பாடைக்கு உரிமையில்லாதவர்கள் என்று யார்தாங் கூறுவர்? இவ்விரு தேயங்களினும் வந்து தமிழ்கற்று விற்பன்னரான போப்பு, பேஷ்வல் முதலான பாதிரிமார்களைத் தமிழிற்கு உரிமையில்லாதவர்என யாவர்தாஞ் சொல்லுவர்!

தமிழிற் கெல்லை அது வழக்கமில் காலத்து மாறுபடுதல், "நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமும்—தமிழ் வரம்பறுத்த தண்புனனாடு" என்னுஞ் சிலப்பதிகார வேனிற்காதைச் செய்யுளுரையானும் பெறுதும்; அங்ஙனமே தமிழ்ப் பாடை கற்று அதன் வழக்கறியாரையும் தமிழ்க் குரியரல்லர் என்றும், சமஸ்கிருதங் கற்று அதன் வழக்கறியாரை அதற் குரியரல்லர் என்றும், அவற்றைக் கற்பாரை அவற்றிற்குரியரென்றும் கூறுதல் மரபேயாமென்க.

வடதேயத்தில் ஆரியரல்லாரும் வடமொழியாளராயும் தென்றேயத்தில் ஆரியரும் தென்மொழியாளராயுமிருப்பக் கண்கூடாகக் காண்கின்றேம். அங்ஙன மிருப்பார்க் கவை எங்ஙனம் உரித்தன்றென மொழியவியலும்!

இங்கிலீஷ்காரர் தமிழ் நிலத்திலிருத்தல் பற்றித் தமிழ ரெனப்படவில்லை; தெலுங்கர், கன்னடர், துலுக்கர் முதலிய பலரும் வசித்தலால் அவர் அப்பெயர் பெறவில்லை. அவ்வப் பாடைகளைக் கற்று அவ்வவற்றிற் பேசிவருவோரை அவ்வப் பாடையாள ராக வழங்கவுங் காண்கின்றோம். ஆகலான், பாடைகள் தம்மைக் கற்றுப் பயின்று வரவல்லாரைப் பெறின், அவர்க்குத் தம்பெயரை ஈயவல்லன; அத்துணையேயன்றிப் பிறிகின்று; ஆகலான் ஆரியபாடை நமக்குரித்தன்றெனவும் ஆரியர்க்கே உரித்தெனவும் நாமே கருதிக்கொண்டு ஆரியபாடையை இகழுதலும், அப்பாடையிலுள்ள நமது சமய முதனூல்களாகிய வேதாகமங்களை இகழுதலும் நமக்கே குறைவைத் தருமன்றி ஆரியர்க்கு ஒருபோதும் குறைவைத் தராது.

ஞான நூல்களாகிய வேத சிவாகமங்களைப் பதினெட்டுப் பாடையிலும் பிறவற்றிலும் வல்ல பக்குவர் பத்தி முதலியன அறிந்து அவ்வப் பாடையில் அவ்வவர்க்குப் போதிக்குமாறும், ஆரியத்தில் வல்லார்க்கு அதனூற் போதிக்குமாறும் கடமுனிவற்குக் கந்தமுருகன் சுந்தரமாகத் திருவாய்மலர்ந்தருளிய பொருளையுடைய "சிவதருமோத்தரத்தையும்" விளக்கமுடையார் நோக்கித் தாமும் வடமொழிக்கும் அம்மொழி நூற்கும் உரியர் என்பது கடைப்பிடித்து எமதாண்டவன் உமாதேவியார்க்கு உபதேசித்த சமத்துவமுடைய இருபாடையுள் ஒன்றாகிய அவ்வடமொழியையும் அந்நூல்களையும் இகழ்ந்து சிவபிரான் செற்றத்திற் கிலக்காகாமல் இனியேனும் விலகி யுய்யுமாறு எமது நண்பர் சேட்ட புதல்வராகிய அவர்க்குத் தெரிக்கின்றாம்.

முதற்சூத்திர வுரைக்கண் "அரசர் வணிகர்க்கும் உரிய நூலினை ஈண்டு வரைந்தோதின தென்னையெனின், ஒருகோலுடையான் நூல்களைவானாகலின், அவனும் சிறுபான்மை அந்தணனெனப்படுமென்பது கோடற்கும், கரகமும் மணையும் உடையனென்றற்கு மென்பது. நூலினை முற்கூறினான் பிறப்பு முறையானுஞ் சிறப்பு முறையானு மென்பது." என்று கூறியிருத்தலானும் ஏடு எனப் பொருள் கோடல் முன்னொடு பின் முரணிப் பொருந்தாமை நன்னர்த் தெளிக.

"திருநான்மறை விளக்கம்" முற்றும் விபரீதப் பொருள்களையே தன்னுட் பொதிந்து காட்டும். "அறிஞர்களடியே

யவற்றைக் காண்கவே'' யாம் "தாலிபுலாக நியாய''மாகச்சில வற்றை ஈண்டெடுத்துக்காட்டுதல் "திருநான்மறைவிளக்க வாராய்ச்சி'' யென்னு நூலை நோக்கப் புகுவார்க்கு அதன்கண் ஊக்க முண்டாக்குதற் பொருட்டேயாம். என்னைகொல் ஊக் கமாமாறெனின், நூலியல் இத்தகைத்தென நூன்முகத்திற் றெரிக்கின் அத்தகை நூலினை முற்று நோக்கல் வேண்டுமென் னும் வேணவா வுண்டாகும்; அது உண்டாகவே உள்ளஞ் சோராது மேன்மேற் கிளருமென்க.

தமிழ்ச்சொற் பொருள் கோடற்குக் கருவி இவை! வட சொற் பொருள் கோடற்குக் கருவி இவை! யென அவ்வப் பாடைவல்ல ஆசிரியர் மாட்டு வழிபடுமுறையின் வைத்து வழி பட்டுக் கற்றாயினும் கேட்டாயினும் அறியாதார்கூறும் அவலப் பொருள், அங்ஙனங் கற்றுங் கேட்டும் வல்ல அறிஞர் அவைக் களத் தேருதென்ப தொருதலையாகத் தேறுக.

"சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை''

இப்புலனெறிவழக்குட் போந்த பதங்கட்கு அவை நின்ற நெறியே நெறியாகப் பொருள் கொண்டால் அப் பொருள் பொருத்தமுறு பொருளாகுமா? இலக்கண நூலை முறைபிற ழாது நல்லாசிரியர் மாட்டுக் கற்றுவல்லார் அங்ஙனம் பொருள் கொள்வாரா? கொள்ளார்! கொள்ளார்! இலக்கண மறியாதார் பொருள்கோண்முறை யறியா ராகலான், அவர் பொருந்தாப் பொருள் கொள்வர்; அது இலக்கணப்புலவர் முன் நிலையுத லின்றிக் கெட்டொழியு மென்னுங் கருத்துப்பற்றியே "எழுத் தறியார் கல்விப் பெருக்க மனைத்தும்—எழுத்தறிவார்க் காணி னிலையாம்'' என்றார் அறிவானுன்ற பெரியாரும்.

இங்ஙனம் வருவனவற்றிற்குப் பொருத்தப் பொருள் கோடற்கன்றே "ஏற்ற பொருளுக் கிசையு மொழிகளை—மாற் றியோ ரடியுள் வழங்கன் மொழிமாற்றே'' எனவும், "அகன்று பொருள் கிடப்பினு மணுகிய நிலையினு—மியன்றுபொருண் முடியத் தந்தன ருணர்த்தன்—மாட்டென மொழிப பாட்டி யல் வழக்கின்'' எனவும் இலக்கணச் சூத்திரங்க ளெழுந்தன வென்க.

மற்றொன்று:—அண்மை, தகுதி, அவாய்நிலை முதலியன பற்றியே ஒரு நூற்குப் பொருள் கோடல் வேண்டும். அங் ஙனங் கொள்ளாக்கால் முன்னொடு பின் மலைவாய்ப் பயப்பா

டின்றி அழிந்தொழிதலோடமையாது அக்கொள்ளார்க்குப் பெரும் பேதையார் என்னும் பெயருஞ் சூட்டி யொழியு மென்க.

"நூலே கரக முக்கோல் மணையே
ஆயுங் காலை யந்தணர்க் குரிய"

என்புழி, நூல் என்னும் பதத்திற்கு "ஏடு" எனப் பொருள் கொண்டது அண்மை பற்றியா? தகுதிபற்றியா? அவாய்நிலைபற்றியா? அதிகாரம்பற்றியா? சூத்திரம்பற்றியா? யாதுமின்று, இவ்வாறு பொருள் கோண்முறை யறியாது ஏடு என்று பொருள் கொண்டது,

"கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தாற்
பெற்றதாம் பேதையோர் சூத்திரம்—மற்றதனை
நல்லா ரிடைப்புக்கு நாணுமே சொல்லித்தன்
புல்லறிவு காட்டி விடும்"

என்னும் வெண்பாவிற் கிலக்கியமாக்கிவிட்டது. அது கிடக்க.

இனி, "அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்புழி அறுவகைப்பட்ட என்பதனைப் பக்கம் என்பதனோடு அன்னுவயித்துப் பொருள் கொள்ளாவிடின் நூலாசிரியர் கோத்து வைத்த பொருட்கோவை குலைந்து மலைந்து உலைந்து பொருள் பயவாது வறிதாம். அதுபற்றியே அங்ஙனம் அன்னுவயித்துப் பொருள் கொண்டார் பேராசிரியர்; அது 'பக்கம்' என்பதற்கு உரைத்துப் போகும் உரைப்போக்கினாலும் இனிது விளங்கும். அஃதுணரு மறிவாற்ற லின்றி 'அறுவகைப்பட்ட' என்பதனைப் பார்ப்பனர் என்பதனோடு அன்னுவயித்து அறுவகைச் சைவர் எனப் பொருள் கொண்டார் "விளக்க" முடையார். அறுவகைச்சைவர் யாண்டுக் கூறப்பட்டனரோ அறிகிலம்! சைவ சாத்திரங்களெல்லாம் எழுவகைச்சைவர் என்றே கூறும். இங்ஙனம் வாயில் வந்தன வந்தனகூற யாண்டு கற்றனரோ? அங்ஙனம் பொருள் கொண்டார் "ஐவகை மரபி னரசர் பக்கமும்" என்புழி 'ஐவகை' என்பதனை அரசரோடு அன்னுவயித்து ஐவகைச் சைவர் எனல் வேண்டும். அதுமட்டோ "இருமூன்று வகையி னேனோர் பக்கமும்" என்புழியும் 'இருமூன்று' என்பதனை ஏனோரோடு அன்னுவயித்து அவரையும் அறுவகைச் சைவர் எனல் வேண்டும். வேண்டவே, ஆதிக்கண் அறுவகைச் சைவர் என அவர் கொண்ட எண்ணுமுறை பிறழ்ந்து பதினெழுவகைச் சைவர் என்னு மெண்ணுமுறை

தோன்றும்; தோன்றவே, சைவரெனப்படுவார் யாவரையு மொன்றாக வைத்துப் பதினெழுவகைப் பார்ப்பனர் என ஒத்துட் சூத்திரஞ் செய்யாது வேறு வேறு தொகையாகவைத்து அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கம், ஐவகைமரபி னரசர் பக்கம், இருமூன்றுமரபி னேனோர் பக்கம் எனத் தொல்காப்பியர் சூத்திரஞ் செய்தமை பிழையெனப்படும். அதுமட்டோ! பார்ப்பனர் அரசர் ஏனோர் என்பனவற்றிற்குச் சைவர் எனப் பொருள் கோடற்கு நூற்பிரமாணம் வேண்டும். அதுமட்டோ! பக்கங்கள் எல்லாம் நின்று வற்றும். அதுமட்டோ! "மறுவில் செய்தி" என்பது முதலாகப் பின்னர்க் கூறப்பட்டவற்றோடு சைவர் என்னும் பொருள் சம்பந்த மின்மையால் வாகைத் திணைக்கிலக்கண மாகாது. ஆகலான், "விளக்க" முடையார் தாங்கொண்ட பொருட் கேற்பச் சூத்திரம் பிறிதொன்று செய்து கொண்டு அப்பொருள் கூறல் வேண்டும். இச் சூத்திரம் அவர் கூறும்பொருட்குச் சிறிதும் இடங்கொடாதென் றுணர்க.

இனி, "நால்வர்க் கொளிநெறி காட்டினை" என்னுந் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருவெழுகூற்றிருக்கைத் துணுக்கை நால்வர் தமிழ்மக்கள் தமிழில் வேதஞ்செய்தார் என்பதற்கு ஆதாரம் என்றார்.

அத்துணுக்கையில் "நால்வர் தமிழ்மக்கள் தமிழில்வேதஞ் செய்தார்" என்ற பதங்கள் காணப்படவில்லை என்பது யாவரும் எக்காலமும் பார்த்தறியலாம்.

சனகராதி முனிவர் நால்வரும் முன்னர் ஆலின்கீழ் ஒருமுறை வேதப்பொருளைக் கேட்டுப் பின்னர் ஒருமுறை ஆகமப் பொருளைக் கேட்டார்கள். அது,

"மற்றது போழ்து தன்னின் மறைப்பொருள்
 வடத்தின் பாங்கர்ப்
பெற்றிடு சனக னாதி முனிவரர்
 பின்னும் பன்னாள்
அற்றமி றவஞ்செய் தெந்தை யருளினாற்
 கயிலை நண்ணி"

"இருட்பெருங் கடலுள் யாமத் தெறிமருத்
 திடைப்பட் டாங்குப்
பொருட்பெருங் கடலாம் வேதம் புடைதொறு
 மலைப்ப வின்னாள்

அருட்பெருங் கடலே யெய்த்தே மமைந்தில
துணர்வு யாங்கள்
மருட்பெருங் கடலி னீங்கும் வண்ணமொன்
றருடி யென்றார்."

"நவையறு தவங்க ளாற்றி நல்லருள்
படைத்த நல்லோர்
இவைபுகன் றிடலு மன்பர்க் கெளிவருங்
கருணை வள்ளல்
அவர்முகந் தெரிந்து நுங்க ளறிவமைந்
தடங்கு மாறு
தவலருஞ் சிறப்பி னன்னூல் சாற்றுது
மிருத்தி ரென்றான்."

"நந்திமுற் கடையைப் போற்ற ஞானநா
யகனு மண்ணல்
முந்துறை சனக னாதி முனிவரர்
தொழுது கேட்ப
அந்தமி லாக மத்தி னரும்பத
மூன்றுங் கூறப்
புந்திய தொடங்கு ஞான போதகம்
போதி யென்றார்."

என்னுங் கந்தபுராணச் செய்யுட்களால் நன்கறியலாம். சைவசமய குரவர் நால்வரும் தேவார திருவாசகங்களுள் சனகாதிமுனிவரர் நால்வரும் ஒருமுறை ஆலின்கீழ் வேதப் பொருள் தெக்ஷிணாமூர்த்திபாற் கேட்டதனையும் மற்றொரு முறை ஆகமப்பொருள் கேட்டதனையும் செய்யுளியைபுக்குத் தக்கவாறு திருவருளுணர்த்திய வண்ணம் அமைத்துப் பாடியருளினர். இவ்வுண்மை உணராதார் ஆலின்கீழ்ச் சனகாதியர் கேட்டது வேதப்பொருள் மாத்திரமே யென்று கொண்டு தேவார திருவாசகங்கட்கு உண்மைப்பொருள் காணமாட்டாது மலைவர்.

திருவெழுகூற்றிருக்கையுட் கூறியது ஆகமப்பொருள் கேட்டதனையேயாம். "அந்தமி லாகமத்தி னரும்பத மூன்றுங் கூறப்—புந்திய தொடங்கு ஞான போதகம் போதி யென்றார்" என்றதனாலும் அது நன்குவிளங்கும். இவ்வுண்மை உணரமாட்டாது "நால்வர்க் கொளிநெறி காட்டினை" என்னும் அத்துணுக்கை, நால்வர் தமிழ்மக்கள் தமிழில் வேதஞ் செய்தார் என்பதற்கு ஆதாரம் என்றும், "இருட்பெருங் கடலுள்" என

னுங் கந்தபுராணச் செய்யுட்கு வேதம் என்னும் பொதுப் பொருளே கொள்ளவேண்டும் என்றும் கூறினமையால்,

"பாடமே யோதிப் பயன்றெரித றேற்றாத
மூடர் முனிதக்க சொல்லுங்கால்—கேடருஞ்சீர்ச்
சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே மற்றவரை
ஈன்றாட் கிறப்பப் பரிந்து"

என்னு நாலடிக் கிலக்காயினமை பற்றியாம் பரிவுறுகின் றாம். ஞானம் பெற்றுத் தமிழ்வேதஞ் செய்தார் என்றன் முதலியன எட்டுணையும் பொருந்தாமை மேலுரைத்தாம். கடைப்பிடிக்க.

'நால்வர்க்கு ஒளிநெறி காட்டினை' என்றதனானே "இறை வன் முனிவர்க்குத் தத்துவங்களைக் கூறி உரையிறந்தபொருளை உணர்த்துங் காலத்து மோன முத்திரை யத்தனாய்த் தானேயே யிருந்து காட்ட ஊமைத் தசும்புள் நீர் நிறைந்தாற்போல ஆனந்த மயமான ஒளி அம்முனிவராகிய மாணாக்கர்க்கு நிறைத லின், அதற்குரிய மோனமுத்திரை கூறி"யதாயிற்று. இக் கருத்துப்பற்றியே "தன்னையுன்னி யென்னை யாக்கியபோழ்தே யானவனாயினேன்" என்றார் பிறரும். இன்னும் இதனை,

"இருவரு முணரா வண்ண லேனவெள் ளெயிறி யாமை
சிரநிரை யனந்த் கோடி திளைத்திடு மாத்திற் சீர்கொள்
கரதல மொன்று சேர்த்தி மோனமுத் திரையைக் காட்டி
ஒருகணஞ் செயலொன் றின்றி யோகுசெய் வாரி னுற்றான்"

"இனையதோர் தன்மை காட்டி யெம்பிரா னுணர்த்தக் கண்டு
சனகனே முதலா வுள்ளோர் தவலரு ஞான போதம்
பனுவலி னளவன் றென்னும் பான்மையைத் தெரிந்து முக்கட்
புனிதன தருளாற் றத்தம் புந்தியி னொடுக்கம் பெற்றார்."

"தத்தமுள் ளொடுங்கல் பெற்ற தாபத கணத்தர் யாரும்
முத்தொழில் புரியும் மூவா முதல்வனு முக்கண் மூர்த்தி
மெய்த்தவ வடிவ முன்னி மேவினர் சூழ்ச்சி மேலோன்
சித்திரம் புணர்த்த பாவை செயலற விருக்கு மாபோல்."

என்னுங் கந்தபுராணத் திருவிருத்தங்களாற் செவ்விதினுணர்க.

நக்கீரதேவர் திருமுரு காற்றுப்படையுள் "மார்பொடு விளங்க வொருகை" எனவும், குமரகுருபர சுவாமிகள் கந்தர் கலிவெண்பாவுள் "மார்பகத்தில் வைத்த காதலமும்" எனவுங் கூறியருளினமையின், இலிங்கபுராணம் வாயுசங்கிதை முதலிய வற்றுட் கூறப்பட்ட வண்ணம் கலியுக முடிவுதோறும் நன்

ஞான்கு இருடிகள் வெவ்வேறு பெயர்களோடு வருவர், அவர்க ளுக்குச் சிவபெருமான் வெவ்வேறாருக்கொண்டு அவற்றிற் கியைய வெவ்வேறு திருநாமங் தரித்துக் குருமூர்த்தியாக வெளிப்பட்டு வேதாகமங்களின் பொருள்களை உணர்த்துமாற்று ணுணர்த்துவர்என்பது சித்தித்தவாறு காண்க. என்னை? மோன முத்திரைக்கை முருகக்கடவுள் திருமார்பைவிட்டு நீங்காமை யான் என்க.

மற்றுப் புறமதத்தர் சைவசாத்திர வுண்மையுணராமை யால் புராணத்தைப் பொய்யென்று புகலல்போலச் சைவருள் ளும் அங்ஙனங் கூறுவாருளரேல் அவர்கட்குச் சித்தாந்தசாத் திரங்களும் திருமுறைகளும் பொய்யெனப்பட்டுச் சமயசாத் திரமு மின்றாய்ச் சைவசமயமு மின்றாய் முடியும், என்னை ?

"நாயகன் கண்ண யப்ப நாயகி புதைப்ப வெங்கும்
பாயிரு ளாகி மூடப் பரிந்துல கினுக்கு நெற்றித்
தூயநேத் திரத்தி னாலே சுடரொளி கொடுத்த பண்பிற்
றேயமா ரொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேச தென்னார்."

"கண்ணுத லியோகி ருப்பக் காமனின் றிடவேட் கைக்கு
விண்ணுறு தேவ ராதி மெலிந்தமை யோரார் மாறன்
எண்ணிவேண் மதனை யேவ வெரிவிழித் திமவான் பெற்ற
பெண்ணினைப் புணர்ந்து யிர்க்குப் பேரின்ப மளித்த தோரார்."

"அரனடிக் கன்பர் செய்யும் பாவமு மறம தாகும்
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி
நாரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே."

"பாலனெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனையன் றேவிக் காரங்கொண்ட—பாலன்
மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங்
கரணம்போ லல்லாமை காண்."

"வாங்கட்டருஞ் செய்ய வயிரவர்க்குத் தங்கள்
காங்களினை லன்றுகறி யாக்க—விரங்காதே
கொல்வினையே செய்யுங் கொடுவினையே யானவற்றை
வல்வினையே யென்றதுநா மற்று."

"பாதக மென்றும் பழியென்றும் பாராதே
தாதையை வேதியனைத் தாளிரண்டுஞ்—சேதிப்பக்
கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே
சண்டீசர் தஞ்செயலாற் றான்."

என்றற் றொடக்கத்தனவாகச் சிவஞானசித்தியார் திருக் களிற்றுப்படியார் முதலிய சைவசித்தாந்த சாத்திரங்களுட் புராண சரிதமே அநுபவப் பயனுக்கும் பிறவற்றிற்கும் பலப் பல இடங்களிலும் கூறப்படுதலானும், பன்னிரு திருமுறையுள் முழுதும் புராண சரிதங்களே கூறப்படுதலானும், "உயர்கா யத்திரிக் குரியபொருளாதலின்" என்னுஞ் செய்யுளிற் போந்த இருபத்திரண்டேதுக்களுட் காயத்திரியை ஒழித்தொழிந்த இருபத்தோரேதுக்களும் புராண சரிதங்களே யாகலானும் சித்தாந்த சாத்திரங்களும் திருமுறைகளும் பொய்யெனப்பட் டுச் சமயசாத்திரமின்றாய் முடியும், முடியவே, அச்சாத்திரத் தால் உணர்த்தப்படும் சைவசமயமும் பொய்யாய் முடியுமாக லான் என்றுணர்க.

இனி, "காது பொத்தரைக்கின்னரர்" என்னுஞ் சுந்தர மூர்த்திநாயனார் தேவாரத்தில், "கோல வாணிழற் கீழறம் பகர—வேதஞ் செய்தவ ரெய்திய வின்பம்" என்புழி ஏதம் செய்தவர் என்று பிரித்தலோ! வேதம் செய்தவர் என்று பிரித்தலோ! எது சரி? எது பிழை? என்னும் ஐயப்பாட்டின் கண், வேதஞ் செய்தவர் எனப் பிரித்தலே சரி யென்னும் பூர்வ பக்கத்தார் கொள்கையை நியாயவாயிலாக மறுக்கின்றாம்.

வேதம் செய்தவர் எனப்பிரித்தால் மோனையின்மைக் குற்றமும், பொருட்பொருத்த மின்மைக் குற்றமும் பற்றும்; ஆகலான், அங்ஙனம் பிரித்தல் பிழை. ஏதம் செய்தவர் எய்திய இன்பம் யானும் கேட்டு எனப் பிரித்தால் ஓரடியுட் பல மோனை வருதற் சிறப்பும், குற்றஞ் செய்தவர் பெற்ற இன்பத்தை யானும் கேட்டு எனப் பொருட் பொருத்தச் சிறப்பும் ஒருங்கு பற்றும்; ஆகலான், ஏதம் செய்தவர் எனப்பிரித்தலே சரி.

ஏதம் செய்தவர் யார்? ஏதம் என்னை? இன்பம் என்னை? அவற்றை அறியுங் கூதூகல முடையேம் என்பீராயின் கூறுதும்:—

சிவபிரான் கல்லானிழற்கீழ் யோகத் திருந்த காலத்துப் பிரமதேவர் மன்மதனை நோக்கி அப்பெருமான் யோகி னீங்கிப் போகியாகிப் புதல்வனைப் பெற்று எம்மைக் காத்தற் பொருட்டுப் புட்பபாணம் அவர்மீது போக்குதற்குக் கைலை செல்கவெனக் காரணங்கூறி அவனை ஏவியபோது அவன் ஏனைத் தேவரிடத் துப்போல என் பாணம் அவரிடத்துக் காமத்தைப் பயவா தெனக் காரணங் கூறி மறுத்து, "இங்கெனக் கடுத்ததொன் றியம்பு செய்வ லென்றனன்."

"என்னும்வேலை யமரரோ டிருந்தவேதன் முனிவுறா
நன்னயந்தழீஇ யுரைத்த நமதுசொன் மறுத்தியால்
அன்னபான்மை புரியினுய்தி யல்லதே லுனக்கியாந்
துன்னுசாப மிடுதும்யாது துணிவுசொல்லு கென்றனன்."

"வெய்யசாப மிடுதுமென்று வெகுளியான் மொழிந்தகேட்
டையமேனி மதனவே ளழுங்கிவெய் துயிர்த்தினிச்
செய்யலாவ தென்னெனத் தெரிந்துசிந்தை தேற்றியே
வையகம் படைத்தவண்ணல் வதனநோக்கி யுரைசெய்வான்."

"கேளிதொன் றுரைப்பல்வேத கேடுசூழ் நினதுவாய்ச்
சூளின்மேலை யியல்பகன்று துன்புழந்து படுதலிற்
காளகண்டன் முன்புசென்று கடியவெய்ய கணைகடூஉய்
மாளினுஞ்சி றந்ததம்ம மற்றுமுய்ய லாகுமே."

என்று கூறிக் கைலை சென்று சிவபிரான்மீது பூம்பாணம் பெய்து ஏத மியற்றியபோது தாம் காமவயத்த ரல்லாத "உலகருள் காரணன்" என்பது உணர்த்துதற்பொருட்டு நெற்றிநாட்டத்தான் மதனை நீறாக்கி, வேண்டாமை யில்லா விமலனென்ப துணர்த்துதற் பொருட்டு மீளமதனை எழுப்பித் தொன்மைபோல அரசுரிமை முதலியன கொடுத்தின்பஞ் செய்தமையானும்,

தேவர் மதனை ஏவினமாத்திரையி னமையாது தங்கருத்து முற்றுவித்தற் பொருட்டு அவன்பின்னர்க் கைலை சென்றமை,

"பணிந்தசொல்ல னாகிநாம் பணித்தவா புரிந்திடத், துணிந் தவாறு நன்று நன்று சூலபாணி யுனைவிடாத், தணந்திடேந் தொடர்ந்து பின்பு சார்துமஞ்சல் போகெனா, உணர்ந்துகூறி மாரவேளை யேவிலன்பொ டேவினான்" "மாரவே ளீண்டுநிற்ப மனோவதி நகரின் மேய, ஆரண முதல்வன்றன்னை யமரர்கோன் றொழுது நோக்கிக், காருறழ் கண்டன் றன்பாற் காமனை விடுத்தி யன்னான், போரிய லுணர்வா னங்கட் போதரல் வேண்டு மென்றான்." "சதமக னினைய கூறத் தண்மலர்க் கடவு ளோராக், கது மென வெழுந்து வானோர் கணத்துட னனையான் போற்றப், பொதிதரு கயிலை யந்தண் பொருப்பின்மே லொருசார் போகி, மதனிய றெரிந்து முக்கண் வள்ளலை வழுத்தி நின்றார்" என்னுங் கந்தபுராணச் செய்யுட்களாற் புலப்பட்டது; அத்தகைய ஏதஞ்செய்த வேதன் இந்திரன் முதலிய தேவர்க்கும் சூரனாதி யசுரரால் போந்த இடுக்கணை நீக்கிச் சத்தியலோகமும் வானாடும் அரசுரிமை முதலியனவும் கொடுத்தின்பஞ் செய்தமையானும் 'ஏதஞ் செய்தவ ரெய்திய வின்பம் யானுங் கேட்டு"

என்றார். இங்கே கூறியவாற்றான் ஏதஞ் செய்தவர் மன்மதனும், பிரமா இந்திரன் முதலிய தேவரும் என்பதூஉம், ஏதம் மன்மதன் பூம்பாணஞ் செலுத்தி யோகத்தை நிலைகுலைக்க முயன்றதும், தேவர் அங்ஙனஞ் செய்யும்படி அவனை ஏவியதும் என்பதூஉம், இன்பப், இரதி பொருட்டு இறந்தமதனை எழுப்பியதும் அரசு கொடுத்ததும், தேவர் பொருட்டு அசுரரைக் கொன்றதும் அவரவர் பதமும் அரசு முதலியன கொடுத்ததும் என்பதூஉம் போந்தவாறு காண்க.

இங்ஙனம் மெய்ப்பொருள் காணப்படுதலால், வேதஞ் செய்தவர் எனப் பிரித்தலும் பொருந்தாப் பொருள் கோடலும் பிழையேயாம்.

தமிழில் நால்வர் தமிழ்மக்கள் வேதஞ் செய்தார் அதனைக் கடல்கொண்டு போயதென்று கூறின் இழுக்கென்னையெனின், அது, மேலே பல்லாற்றானும் விரித்துக் கூறியிருத்தலானும், வேத வழக்கோடும் ஆகம வழக்கோடும் மாறுகொள்வார் இக்காலத் தங்ஙனங் கூறினும் இறந்தகாலத்துப் பிறபாசண்டரும், மூவகைச் சங்கத்து நான்குவருணத் தொடுபட்ட சான்றோரும், சங்ககாலத்துக்குப் பிற்பட்ட காலத்துத் திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் முதலிய சைவசமய குரவரும், மெய்கண்ட தேவர் முதலிய சந்தானகுரவரும், அவர்க்குப் பிற்பட்டகாலத்துச் சைவமடத்துப் பெரியாரும் அங்ஙனம் கூறினாரில்லை யென்பது. என்னை? அவர் மெய்ம்மை கடைப்பிடித்த விழுமியோராகலானும், வீடு காதலித்த சேடராகலானும், பிறரும் அங்ஙனங் கூறிக் கரியோக்கினாராகலானு மென்க.

இன்னும் ஆழ்வாராகிய பெரியாரும், அவர்கள் காலத்துக்குப் பிற்பட்ட இராமாநுஜாசாரியரும், மத்துவாசாரியரும், அவர்கட்குப் பிற்பட்ட வைணவ மடத்துப் பெரியாரும், மாத்துவமடத்துப் பெரியாரும் தாந்தா மியற்றியருளிய திருவாய்மொழியிலும், பாஷியத்திலும், பிறவற்றிலும் அங்ஙனம கூறாமையும் உற்றுநோக்கற்பாலது.

மடங்களினுைப்பு நோக்கியும். தமிழ்வேத ஒப்பு நோக்கியும் இவர் சிறப்புந் தோன்ற வேறு பிரித்துக் கிளந்து கூறினாம்.

கந்தபுராணத்தும் திருமுறையிலும் சனகராதி நால்வரைப் பற்றிப் பேசியிருத்தலே யன்றி நால்வர் தமிழ்மக்களைப்பற்றிப் பேசப்படவில்லை. அவர்கள் "விளக்க" முடையாரால் சிருட்டிக்கப்பட்டு எவர்க்கும் எக்காலத்தும் தோன்றாத அற்புதமுடையர் போலும். அதனாற்றான் நூல்கள் அவரைப்பற்றி

யாதும் பேசாதொழிந்தன. "விளக்க" முடையார் இவரைச் சிருட்டித்தமையால் பிரமா நாணமும் மகிழ்ச்சியும் கவலையும் ஒருங்கடைவர்; என்னை? தஞ்சிருட்டி கட்புலப்படுதலானும் இவர் சிருட்டி கட்புலப்படாமையானும், தமக்கு அதிக வேலை யின்மையானும், இவர் சிருட்டிவிசேட நோக்கிச் சிவபெருமான் சிருட்டித்தொழில் முழுதும் இவர்க்கே கொடுத்துவிடுவாரோ என்னும் ஐயப்பாட்டினாலு மென்க. அது நிற்க.

பிறிதொன்று:—"எல்லாவற்றுள்ளுஞ் சிறந்த ௨௮ சைவ நூல்களையும் தென்றமிழ் நாட்டு மகேந்திரமலையில் சிவ பெருமான் அருளியதாகத் தெரிதலானும்" என்றார்

"விளக்க" முடையார்க்கு அங்ஙனம் தெரியவந்தது எங்ஙனமெனை ஆராய்வார்க்கு "மன்னு மாமலை மகேந்திர மதனிற்—சொன்ன வாகமந் தோற்றுவித் தருளியும்" என்ப தற்குத் திருவாசக வுரையாசிரியர்கள் எழுதிய உரைகளைத் திரித்துணர்ந்தமைபற்றியே என்பது தெற்றெனப் புலப்படும்.

தென்றமிழ்நாட்டு மகேந்திரமலையில் சிவபிரான் ஆக மங்களை அருளிச்செய்தாரென அவ்வுரையாசிரியர்கள் யாண்டு மெழுதவில்லையென்ப தாண்டுக் காண்க. அதுநிற்க.

மகேந்திர மெனப் பெயரிய மலையொன்றுளதெனச் சிவதரு மோத்தரத்தும், கந்தபுராணத்தும் கூறப்படினும், அது, ஒரு சிவஸ்தலமென்றும், அதன்கண் சிவபிரானுக்குத் திருக்கோயில் உண்டென்றும் அவற்றுட் கூறப்படவில்லை. மற்றென்னை கூறப் பட்டவாறெனின், ஏழுமலைகளைச் சொல்லுமிடத்து இதுவும் அவற்று ளொன்றெனச்சொல்லப்பட்ட அத்துணையா மென் றறிக.

இங்ஙன மிருத்தலால் திருவாசகத்தும் திருவிசைப்பா வகத்தும் கூறப்பட்ட மகேந்திரம் மேலே சுட்டிய மகேந்திர மன்று; "திருநான்மறைவிளக்க வாராய்ச்சி" நூலாசிரியப் பெரியார் அதனகத்துக் கூறியவண்ணம் திருக்கைலாசமலையே யென்று பலப்பல ஏதுக்களால் நன்கு விளங்குகின்றது. அவற் றைக் கூறுதும்; கடைப்பிடிக்க.

பாரதத்தில், "எம்பிரா னிமவான் றந்த—புரிகுழ லோடும் வைகும் புண்ணியப் பொருப்பைச் சேர்ந்தான்"

"உருகிய வெள்ளி போல வுயர்முழை
தோறும் வீழும்
அருவிநீர் புனிதன் வேணி யமருமா
நதியிற் றோன்ற

உருகிய பனிவான் குன்றி லொண்பனிக்
 கடவுள் வந்து
மருவிய தென்னத் தோன்றும் வருண*மால்
 வரையின் றென்பால்"

"விசயன் பூண்ட பெருந்தவத்தி னிலைசிலர்க்குப் பேசலாமோ" எனக்கூறப்படுதலான், அருச்சுனன் பாசுபதாஸ்த்திரத்தின் பொருட்டுத் தவஞ்செய்த தானம் கைலைத் தென்றிசைச் சாரலென்பது பெறப்பட்டது.

"நனைமலர் சிதறித் தொழுதுமுன் நின்ற
 நந்திமே னயனம்வைத் தருளி
வினைபடு கேழல் வேட்டைநா மின்றே
 வேடரா யாடுதல் வேண்டும்
நினைவுற வெமது கணத்தொடிக் கணத்தே
 நீயுமவ் வுருக்கொளு கென்று
மனைவியுந் தானுங் கிராதர்தங் குலத்து
 மகிழ்நனும் வனிதையு மானார்."

"ஓரேனந் தனைத்தேட வொளித்தருளு மிருபாதத்
 தொருவ னந்தப்
போரேனந் தனைத்தேடிக் கணங்களுடன் புறப்பட்டான்
 புனங்க ளெல்லாம்
ஏரேனல் விளைகிரிக்குத் தேவதையாங் குழவியையுஞ்
 செங்கை யேந்திப்
பாரேனை யுலகனைத்தும் பணிவுடனே புகழ்ந்திடத்தன்
 பதிபின் வந்தாள்"

"அனந்தவே தமுமிறைவ னேவலினு னொளிகளா
 யருகு சூழ
அனந்தகோ டியிற்கோடி கணநாதர் வேட்டுவரா
 யருகு போத
அனந்தனு லினித்தரிக்க வரிதரிதிப் பூதலமென்
 றமரர் கூற
அனந்தமா முகமாகி யடிச்சுவடு நோக்கினு
 னடவி யெல்லாம்."

* பனிக்கடவுள் வந்து மருவிய தென்னத் தோன்றும் வருணம்—வெண்மை. வெண்மையையுடைய மால்வரை—கைலாசமலை.

"மூகதா னவனிவன்மேன் மூர்ந்தியுயிர் கவருமெனுஞ்
சிந்தை யானப்
பாகசா தனிதவஞ்செய் பாக்கியபூ மியைநோக்கிப்
பரிவி னோடும்
ஏகசா பமும்வணக்கி யேகினா னேருகனு
மிலங்கு வெண்ணீற்
றுகனா னேக்கப்பட் டணுகியதா னருந்தவன்மே
லந்த வேனம்."

"அதிர்ந்துவரு கேழலைக்கண் டருந்தவத்தை யழிக்குமெனை
வஞ்சி நாளும்
உதிர்ந்தசரு குணவொழிய வுணவிலான் விரைவிற்றன்
னொருவில் வாங்கி
முதிர்ந்தசினத் துடனெய்தான் முகம்புதைய வங்கனைக்கு
முன்னே யண்டம்
பிதிர்ந்திடவின் றொணிந்து வேடனுத னபாங்கும்
பிளக்க வெய்தான்."

எனக் கூறப்படலானும், சிவபிரான் வேட்டுவக் கோலங் கொண்டு வேட்டுவக்கணஞ் சூழ வேத ஞானிகள் புடைபோக உமையாகிய வேடிச்சிக்கு முன்னும் பன்றிப் பின்னுஞ் சென்று விசயனுடன் பொருத இடம் கைலைச் சாரல் என்பது பெறப் பட்டது.

இப் பெறப்பட்ட பொருள்களையே திருமாளிகைத் தேவர் "உறவாகிய யோகமும்" என்னுந் திருவிசைப்பாத் திருப்பதி கத்தின் மத்தியின் "சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்" என்னும் வனப்பமைய,

"வண்டார் குழலுமை நங்கை முன்னே
மகேந்திரச் சாரல் வராகத் தின்பின்
கண்டார் கவலவில் லாடி வேடர்
கடிநா யுடன்கை வளைந்தா யென்னும்"

என்ற திருப்பாட்டின் வைத்து விளங்கப்பாடி, அதனுள் அப்பதிகமுழுதிலும் மகேந்திர மென்றது வெள்ளியங்கிரியை யெனத் தெள்ளிதின் விளக்கிவிட்டார். அதுவேயுமன்றிப் பதி னோராந்திருப்பாட்டில் சோதி மகேந்திர மென விசேடித்தும் விளக்கினார். சோதி-வெண்மையொளி; எனவே சோதி மகேந் திரம் வெண்மையாகிய கைலாசம் என்றவாறும். மகா இந்தி ரம் மகேந்திரம்; மிகமேலாகிய பெருமையையுடையது கைலை யாதலின் மகேந்திரம் எனப்பட்டது. அத்துணைப்பெருமை

என்னையெனின், அது ஊழிக்காலத்துப்பிரளய வெள்ளத்தழுந்தாது அதன் மேல்வளர்ந் தோங்குதலும், அழியாதிருத்தலும், பதமுத்தித் தானமாயிருத்தலும் பக்குவராயகணங்கட்குத் தக்க வின்பங் கொடுத்துப் பரமசிவன் ஸ்ரீ கண்ட சரீரசரீரியா யெழுந்தருளியிருக்கும் செம்பொற்றிருக் கோயிலைத்தன்னகத்துக் கொண்டிருத்தலும் முதலியவன.

திருவாதவூரடிகளும் இக்கருத்துப்பற்றியே,

"தூவெள்ளை நீறணி யெம்பெருமான்
சோதிமகேந்திர நாதன்வந்து
தேவர்தொழும்பதம் வைத்தவீசன்"

என்று திருவாசகத்துள் அருளிச்செய்தார். ஆண்டவன் திருக்கைலையினின்று ஆசாரியமூர்த்தமா யெழுந்தருளி வந்தமையை அடிக்கடி அடிகள் கூறுதலைத் திருவாசகத்துட் பாக்கக்காணலாம். ஈண்டுஞ்சோதி யென்ற அடைதானே மகேந்திரம் கைலை என்பதை நன்கு விளக்கிற்று.

இங்ஙனமே ஓரோரிடத்துப் பொதுவாகக் கூறிப் போந்தவற்றை அடைமுதலியவற்றாற் சிறப்பாக உணர்த்திப் போதல் ஆசிரியர்வழக்காறுதலை நல்லாசிரியரிடத்துப்பயின்ற இலக்கியவிலக்கணப்பயிற்சியுடையார் நன்கறிவர்.

கைலைக்கு நொடித்தான்மலை என்னும் ஒருபெயர் காரணத்தா லெய்தியது போல,

"ஊழிதொறூழி முற்று முயர்பொன்னொடித்தான் மலை"

"நிலவி மெண்ணி றலங்களு நீடொளி
இலகு தண்டளி ராக வெழுந்ததோர்
உலக மென்னு மொளிமணி வல்லிமேல்
மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை"

என்றற் றொடக்கத்தனவாக வெண்ணிகந்த பெருமை இலக்கியங்களுட்கூறப்படலால், அப்பெருமை காரணமாக மகேந்திரமெனவும் ஒரு பெயர் பண்பாகு பெயராய்ப் போந்தவாறுகண்டுகொள்க. மகா—பெருமை, மிகுதி முதலியவற்றை விளக்கும் உபசர்க்கம். இந்திரம்—மேன்மை.

இன்னும் அடிகள்,

"வேடுரு வாகி மகேந்தி ரத்து
மிகுகுறை வானவர் வந்து தன்னைத்
தேட விருந்த சிவபெரு மான்
சிந்தனை செய்தடி யோங்க ளுய்ய
ஆட லமர்ந்த பரிமா வேறி
யையன் பெருந்துறை யாதி யந்நாள்
ஏடர்களை யெங்கு மாண்டு கொண்ட
வியல்பறி வாரெம் பிரானு வாரே"

என்னுந் திருவாசகத்தானும் மகேந்திரம் கைலை யென்பதை நன்கு விளக்கியவாறு காண்க. என்னை? தேவர் குறைநேரின் கைலைக்குவந்து சிவபிரானைத் தரிசித்துத் தங்குறை கிளந்து அநுக்கிரகம் பெறுதல் இயல்பு. அருச்சுனன் பொருட்டு வேடுருக்கொண்டு கையிலையிலிருந்த ஞான்று 'மிகுகுறை வானவர்' வந்து, காளகண்டம் மான்மழுச் சதுர்ப்புயங்களோடு சிகண்ட சரீரியாய் என்றும்போல இறைவரிருக்கக் காணாமையின் எம்பெருமான் எங்கே போயினரோவென்றெண்ணித் தேடும்படி யிருந்தமையால் என்க. அக்கைலாச பதியே தமக்காகப் பாண்டியனுக்குப் பரிமாக் கொணர்ந்தவரென்பார் தேடவிருந்த சிவபெருமான், ஐயன், பெருந்துறை ஆதி அடியேங்களுய்யச் சிந்தனை செய்து அந்நாள் ஆடலமர்ந்த பரிமா ஏறி ஏடர்களை எங்கும் ஆண்டு கொண்ட என்றார். ஏடர்-அன்பர். தம்மோடு அரிமர்த்தனபாண்டியன், வந்தியாகிய பிட்டுவாணிச்சி என்னும் இருவரையுஞ் சேர்த்து ஏடர்களை யெனப் பன்மையாற் கூறினாரென் றுணர்க.

அஃதற்றாக,

"மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன வாகமந் தோற்றுவித் தருளியும்"

என்பதன் பொருளுணர்த்து முகத்தானும் மகேந்திரங் கைலையெனத் தேற்றல் வேண்டுமென்பீராயிற் றேற்றுதும் :—

ஒருகாலத்துத் தேவர்கள் சிவபிரானை நோக்கித் தொழுது துதிக்க, அதற்கு மகிழ்ந்து அவர் பிரசன்னமாக, அவர்கள் அன்போ டவ்வாண்டவனைப் பூசனைபுரிதல் வேண்டுமென்ன, பெருமான் சூரியமண்டலத்தூடு விளங்கும் நான்முகத்தோடு தோன்ற, அத்தேவர் விதிப்படி பூசைபுரிந்தனர். அது செய்யத் திருவுள மகிழ்ந்து தேவர்கட்கு ஆகமம் இருபத்தெட்டையும் கொடுத்து மறைந்தனர். கொடுத்த வாகமம் பலநெடுங் காலங்கழிய இறந்துபோதலும் உமாதேவியார் அவற்றை மீள

வுந் தோற்றுவிக்கவேண்டுமென்று இறைவற்கு விண்ணப்பஞ் செய்ய அவர் தோற்றுவித்தார். அது,—

"தொழுதனர் துதிப்பக் கொன்றைவே ணியனு
மகிழ்ந்தனந் துதித்ததற் கென்ன
உழுவலன் போடு பூசனை புரிய
வேண்டுமா லென்னலு மொளிரும்
மழகதி ரிரவி மண்டலத் தூடு
வயங்குநான் முகத்தொடு தோன்றப்
பழுதறு தேவ ரருக்கிய முதவிப்
பாற்படப் பூசனை புரிந்தார்."

"பூசனை புரியவுளமிக மகிழ்ந்து பொன்னுல
குறைபவர் தமக்கு
மாசற விரிந்த வாகம முழுதும்
வழங்குபு மறைதலு மற்றை
ஏசலொன் றில்லா வாகம நோக்கி
மறையவ ரெழின்முடி யரசர்
ஆசிலா வணிகர்*பூசனை புரிதற்
குரியரென் றறைந்துபோ யினரால்."

கொடுத்தவா கமந்தா னுள்பல கழிய
விறத்தலுங் கொங்கலர் கூந்தல்
மடத்தகை யுமையா ளிறைவனை நோக்கி
மாய்ந்தவா கமமெலா மெடுத்து
நடத்திட வேண்டு மென்னலு மைத்த
நள்ளிரு ளடுவணின் றுடும்
விடைக்கொடி யுயர்த்தோ னாகம முழுது
முன்புபோல் விளங்கிட விரித்தான்.

என்னும் வாயுசங்கிதையால் இனிது விளங்கும்.

---

*வேளாளர்க்கும் வணிகர்க்கும் வேள்வி வழிபாடொழிந்த தொழிலெல்லாம் ஒத்தலின், வேளாளரை வேறு கூறாது வணிகருளடக்கிக் கூறினர். இக்கருத்துப் பற்றியே தொல்காப்பியரும் "இருமூன்று திறத்தினேனோர் பக்கமும்" என்று வணிகரையும் வேளாளரையும் வேறுபிரித்துக் கூறாது ஒன்றாகக் கூறியதூஉ மென்க. இங்ஙனஞ் சாத்திரவாம்பிற் கேற்ற சமாதானங்காணமாட்டாத வேளாளருளொருசாரார் சாதிவரம்பழித்துத் தாமும் புலையராய் நிரயம் புகுத முயன்று,

"சாதிநான் கிழிந்த னந்தஞ் சாங்கர சாதி பல்கி" எனவும், "விதிநிலை முறைறவ ரம்பு விடுத்தழிந் தெவரு மொன்றாய்ப்—பதினாறு வயதின் மூப்புப் பழுத்துமாய்ந் தொழிவ ரன்றே" எனவும் போந்த இலக்கியங்கட் கிலக்கணம் புதுக்குதல் "கலியின் வண்ண"மே காண்மின் காண்மின்!!

இனி அத்திருவாசக அடிகட்குப் பொருள் கோண்முறை யாமாறு:—சொன்ன ஆகமம்— ("மாய்ந்த வாகமமெலாம் எடுத்து நடத்திட வேண்டுமென்று" இறைவி) விண்ணப்பஞ் செய்யப்பெற்ற ஆகமங்களெல்லாவற்றையும்,— மன்னும் — ஊழிக்காலத்தும் அழியாது நிலைபெறும்,—மாமலை மகேந்திரம் அதனில்—கைலாசமலையாகிய மகேந்திரமலையில்,—தோற்று வித்தருளியும்—வெளிப்படுத்தியருளியும் என்க.

கைலாசமலை,

"கீணி லாவுறு மூலமெலா நீங்கியே கீழ்போய்ச்
சேணி லாவுறு பதமெலா முருவிமீச் சென்று
மாணி லாவுறு மண்டத்தி னடிமுடி மருவத்
தாணு வாயுல கிறுதியி னிற்பதச் சயிலம்."

என்ப வாகலின், மாமலை யெனப்பட்டது. உலகிலுள்ள மலைகளெல்லாவற்றுள்ளும் பெரியமலை என்றபடி. மாமலை மகேந்திரம் என்பது இருபெயரொட்டுப்பண்புத்தொகை. "மாமலையின் றென்பால்" என்புழியும், மாமலை கைலாசமெனப் பட்டது காண்க.

இன்னும், கீர்த்தித்திருவகவலின், "தில்லை மூதூ ராடிய திருவடி" என்று ஆரம்பித்து, அடுத்ததல மகேந்திரமாகக் கூறினர். முடிக்கும் பொழுதும் அம்முறையே "பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்" எனவும், "ஒலிதரு கயிலை யுயர்கிழ வோனே" எனவும் கூறித் தில்லைக்கும் புலியூர்க்கும் மகேந்திரத்திற்கும் கைலைக்கும் சம்பந்தந் தெரித்து இரண்டும் ஒன்றென விளங்கவைத்த வாறுங் கண்டுகொள்க.

இன்னும் இவ்வகவலுள் "மந்திர மாமலை மகேந்திர வெற்பன்" எனவும்போற்றித்திருவகவலுள்" மந்திர மாமலை மேயாய் போற்றி" எனவுங் கூறி மகேந்திரங் கைலாசமென விளக்கினார். என்னை?

மந்திரம்—கோயில். கைலாசமலையில் நவரத்தினகசிதமான செம்பொற்றிருக்கோயி லொன்று தேவரு மருளுமாறு பேரழ கோடுள்ளது. அக்கோயில் பொருந்திய கைலாசம் என்பது பொருளாகலான் என்க. அதனை,

"அன்னதோர் கைலை நாப்ப ணம்பொனின்
சுடர்மேல் கொண்ட
நன்னெடுஞ் சிமயத் தோங்க னவையொரீஇ
நண்ணிற் றென்னக்

கன்னியங் காப்பு மேவிக் கதிர்மணிக்
        கற்றை சுற்றிப்
பொன்னெடுங் கோயி லொன்று பொலிவொடும்
        பொருந்திற் றன்றே"

"திணிகதி ராரந் தன்னிற் சிறந்தவச்
        சிரத்திற் செக்கர்
மணிதனின் முழுநீ லத்தின் மற்றைய
        வெறுக்கை தன்னிற்
பணிபட வருளாற் றானே பலித்திடு
        சிகர மாதி
அணியினுக் கணியாய் வைகு மாலயச்
        சூழ லெங்கும்"

"என்றுமீ றென்ப தின்றி யிருந்திடுங்
        கைலை வெற்பிற்
பொன்றிகழ் நகரந் தன்னுட் பொருவிலாக்
        கோளு நாளும்
துன்றிய தன்மைத் தென்னத் தூமணிக்
        கதிர்கள் சூழ
மன்றமங் குறையு ளொன்று வனப்பொடு
        வைகிற் றன்றே"

என்னுங் கந்த புராணத்திருவிருத்தங்களாற் றேர்க.

மந்திரம் செம்பொற்றிருக்கோயில். இனி மந்திரமெனப் பொருள் கொண்டால் அது ஆகுபெயராய்ச் சாமானியசுருதி பிரபல சுருதிகளை யுணர்த்து மெனக்கொண்டு அச்சுருதிகளை வெளிப்படுத்துதற்கு முக்கிய ஸ்தானமாகிய கைலை என்றலு மாம்.

இனி, சிவபெருமான் சதாசிவதத்துவ புவனத்திருந்து சத்தி சதாசிவன் முதலாயினோர்க்குச் சொல்லியருளிய ஆகமங் களைத் திருநந்திதேவர் சனகராதி முனிவர் பொருட்டு மகேந் திரமாகிய கையிலையில் வெளிப்படுத்தினார் என்றலுமொன்று. அது,

"சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவம்
உவமா மகேசர் ருருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மிற்றாம் பெற்ற
நவவா கமமெங்க ணந்திபெற் றானே"

என்னுந் திருமந்திரத்தா னுமுணர்க.

அஃதொக்குமன்றாயினும்,

"கேவேட ராகிக் கெளிறது படுத்து
மாவேட் டாகிய வாகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து
உற்றவைம் முகங்க ளாற்பணித் தருளியும்"

என்னுஞ் சொற்றொடர்ப் பொருள்கோளாலும் மகேந்திரங் கைலையாதலையறிய வெஃகினேம் என்பீராயின் அதனை யுங் கூறுதும்:—

கேவேடர் ஆகி—வலைவாணராகி,—மா வேட்டு ஆகிய—மகா லக்குமியெனக்கூறி வேதம் போற்றும் உமையாகிய இறைவியைத் தாம் மணத்தல் நிகழும்படி; கெளிறு அது படுத்து—சுறவேற்றை வலையகப்படுத்து,—ஆகமம் வாங்கியும்—அது சிரத்திடத்துக் கொண்டிருந்த ஆகமங்களைத் தாம் எடுத்தும்,—மற்று அவை தம்மை — அவ்வாகமங்களை, — மகேந்திரத்து இருந்து—கைலாசமலையில் எழுந்தருளி யிருந்து,—உற்ற ஐ முகங்களால் பணித்தருளியும்—அவ்வாகமங்கள் முன்னமே இருந்து வெளிப்பட்ட ஐந்து திருமுகங்களாலும் இறைவிக்கு உபதேசித்தருளியும் என்க.

கெளிறது என்பதில் அது பகுதிப்பொருளது. படுத்தல் வலையகத் தகப்படச்செய்தல். மா—மகாலக்குமியாகிய உமை. வேட்டல் வேட்டு என முதனிலையாய் நின்றது. ஆகிய என்பது செய்திய எனனும் வாய்பாட்டு வினையெச்சம். வாங்குதல்—எடுத்தல், உம்மை எண்ணும்மை. இனி "மிக்கோரிகழ்ம் பற்றொன்றினு முண்மை—கற்றார்தொழு மருணைசலம்" என்புழிப் போல எதிர்மறையும்மை என்றலுமாம்; வாங்காமலும் பணித்து வாங்கியும் பணித் தென்க. மற்று அசை, தம்மும் அசை. உற்ற ஐம்முகம் ஆகமங்கள் பொருந்தித் தோன்றுதற்கிடமாகிய ஐந்து முகம். பணித்தருளல் ஒருசொல்விழுக்காடு; உபதேசித்தல் என்றபடி. இனம்பற்றிச்சுறமேறு கெளிறெனப் பட்டது; "இமைய வில்வாங்கிய வீசன்" என்புழி மேரு இனம்பற்றி இமயம் எனப்பட்டாற் போல.

இனி, (ஆகிய—தமதாஞ்ஞையால்) உண்டாகிய,—கெளிறது—திருநந்தி தேவராகிய கெளிற்றை,—படுத்து—வலையகப் படுத்தி,—ஆகமம் வாங்கியும்—(அதன் சிரத் துற்ற) ஆகமங்களை எடுத்துக்கொண்ட சிவபிரானும்,—மா வெட்டு—மகா லக்குமியாகிய உமையை மணந்து, என்றலுமாம். இப்பொருட்டு வாங்கி பெயர். "தோற்றிய திதியே யொடுங்கி" என்புழி யொடுங்கி போல, உம்மை உயர்வு சிறப்பு.

எவ்வெம் முகத்தில் எவ்வெவ்வாகமங்கள் தோன்றினவோ அவ்வம் முகத்தால் அத்தோற்ற முறைப்படி அவ்வவ்வாகமங் களை உபதேசித்தார் என்பது விளக்கிய உற்றவைம் முகங் களாற் பணித்தருளியும் என்றார்.

ஆலவாயடிகள் இறைவியை நோக்கி வலைஞர் மகளாகப் போந்திரு; நாம் வந்து வதுவை அயர்ந்து வருகுதுமெனப் பண்டு வழங்கிய திருவாக் கொருவாதவண்ணம் ஓர் வலைஞராய் வலைச்சேரி வந்தாராக, அவர்வடிவழகு கண்ட சேர்ப்பன் "நம்பிநீ யாரை யென்ன" அதற்கவர் "தனிவலையுழவனல்ல** மைந்தன் யானென்ன"

"தொண்டுறை மனத்துக் கானற் றுறைமக னஃதே லிந்தத்
தண்டுறை யிடத்தோர் வன்மீன் றழலெனக் கரந்து சீற்றங்
கொண்டுறை கின்ற தைய குறித்தது பிடித்தி யேலென்
வண்டமர் கோதை மாதை மணஞ்செய்து தருவ லென்றான்"

ஆகலான், அதற்கியையக் கேவேடராகி மா வேட்டு ஆகிய கெளிறது படுத்து என்றருளிற் றடிகள். செய்யுளாதலின் முறை பிறழ்ந்திக் கூறிற்று.

கூறவிடத்து வாங்கிய ஆகமங்களை உத்தரகோசமங்கையில் உபதேசித்தார் என்னும் புராணவசனத்தோடு கைலையில் உப தேசித்தார் என்றல் மறுதலைப்படுகின்றதே யெனின், அற் றன்று; என்னை? உத்தரகோசமங்கையில் ஒரு முகத்தோ டிருந்து உபதேசித்த வாகமங்களையே ஐம்முகத்தோடிருந்து தோற்ற முறைப்படி உபதேசித்தருளல் வேண்டுமென்றம்மை இரப்ப இறைவன் அங்ஙனஞ் செய்தான் என்பது,

"வெள்ளி மால்வரைக் கைலையில் வீற்றிருந் தருளித்
துள்ளு வார்புனல் வேணியா ரருள்செயத் தொழுது
தெள்ளு வாய்மையி னாகமத் திறனெலாந் தெரிய
உள்ள வாறுகேட் டருளினா ளுலகையா ளுடையாள்"

என்னும் பெரியபுராணத்தால் நன்கு விளங்கக் கிடத்தலா னென்க.

இன்னும் சிவபெருமான் வேதாகமங்களைப் பக்குவராகிய சனகாதிமுனிவர்க்கும் பிறர்க்கும் வேண்டிய வேண்டிய போதெல்லாம் உபதேசித்தற்கு முக்கியஸ்தானமாகக் கொண்டு விரும்பி எழுந்தருளியிருக்கும் திவ்விய ஸ்தலம் திருக்கைலாச மலையேயாமென்பது,

"இமையகிரி வடகுணபா லிமையவர்க டொழுதேத்த
உமையுடனே பசுபதிதா னுறைவனொரு கிரிமிசையில்
தமையுணர்ந்த தபோதனருந் தங்குவரச் சயிலத்தில்
கமையுடையா ரதன்பெயரைக் கைலையெனக் கழறுவரே

"ஆகமங்க ளனைத்தினையு மருமறைக ளொருநான்கும்
மோகமற முனிவர்க்கு மொழிந்தருள வொழிந்தனவும்
மாகருமோ மாலயனு மலர்தூவித் தலைவணங்க
ஏகனிறை யதன்மிசையு மிருக்கவிரும் பினனினிதே."

என்னுஞ் சிவதருமோத்தரத் திருவிருத்தங்களானு மறி

பசுபதி யுறைவ னென்றது உமையுடனே பசுபதித னுறைவன் எனவும், மாகரும் மாலயனும் மலர்தூவி வணங் இருப்பன் எனவும் உடன் புணர்த்திக் கூறினமையின் உமை மாகர், மால், அயன் முதலாயினார்க்கும் ஒவ்வோர் காரணம்பற் வேதாகமங்களை ஒவ்வோர் காலத்து ஆண்டே உபதேசிப்பா என்பது செவ்விதிற் றெரிந்து கொள்க.

இங்கே எடுத்துக் காட்டிய அதிப்பிரபலப்பிரமாண களாலே, மகேந்திரங் கைலாசமலைதான் என்பது நிறுவ பட்டது; படவே, ம-ா-ா-ஸ்ரீ, சுப்பிரமணியபிள்ளையவர்க தமிழ்நாட்டுட்பட்ட மகேந்திரமலையில் சிவபிரான் ஆகமங்களை தமிழிற் கூறியருளினார் என்னுங் கற்பனை கழிக்கரைப் புலம் லும், கானகத்துப்புலம்பலு மாயவாறு கண்டுகொள்க.

நிலவுலகத் துயிரோம்பு நீதிமன்னன் இவையிவை செய் லாம் இவையிவை செய்யலாகா வென மக்கட்குத் தெரிக்கு நீதிநூலை அவர்கட்குக் கொடுத்து, அதின்படி ஒழுகுவோர்க் நன்மையும் ஒழுகாதார்க்குத் தண்டமுஞ் செய்து காப்பான் அதுபோல, ஈரேழு பதினான்குலகிற்கும் இறைவராகிய நடரா வள்ளலும் விதி விலக்காகிய புண்ணிய பாவங்களைத் தெரிக்கு முதனூலாகிய வேதாகமங்களைத் தேவர் மக்கண் முதலியோர் குக் கொடுத்து அவற்றின்படி ஒழுகுபவர்க்கு இன்பமு ஒழுகாதவர்களுக்குத் துன்பமும் கொடுத்து ஓம்புவார், அது,

"ஆணையா லவனி மன்ன னருமறை முறைசெய் யாரை
ஆணையிற் றண்டஞ் செய்து மருஞ்சிறை யிட்டும் வைப்ப
ஆணையின் வழிசெல் வோருக் கரும்பதி செல்வ நல்கி
ஆணையும் வைப்ப னெங்கு மாணையே யாணையே காண்"

"மறைகளீ சன்சொ லச்சொல் வழிவாரா
வுயிரை வைக்கும்
இறைகண்மா நிரய மிட்ட பணிசெய்வோர்
செல்வத் தோடும்
உறையுமா பதிக ளும்ப ருலகங்கள்
யோனிக் கெல்லாம்
இறைவனு ணையினு லின்பத் துன்பங்க
ளியைவ தாகும்"

என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தங்களினு லறிக.

இவ்வாறு அரசன் முறையின் வைத்து இறைவன் முறை உணர்த்திய சித்தாந்த சாத்திரத்தைச் சிறிதுமோராது, சைவ சமயிகளாகிய நாமெல்லாம், இறைவன் நம் பொருட்டிரங்கித் தந்த வேதாகமங்களை விடுத்தொழித்து வெறுங்கையோடு வீதியினின்று தவிக்குமாறு செய்யக் கருதி, வேதங்கள் ஆரியர் கட்டின கட்டு என்றும், சைவர்கட்கு அவை பிரமாண நூல்களன்றென்றும், சிவபெருமான் தமிழில் வேதஞ் செய்தருளினர் என்றும் உலகந் தோன்றிய நாண்முதல் இதுகாறும் ஒருவருஞ் சொல்லாத நவீனக் கற்பனையாகிய ஓரடிநிலை பாரித்தார் "திருநான்மறைவிளக்க" முடையார்.

இவரது பெலமற்ற வடிநிலை யாமெடுத்துக் காட்டிய இரும்பெரும் வச்சிரக் காட்டாகிய ஊழிப் பெருவெள்ளத்தான் மோதுண்டு இருந்தவிடமுந் தெரியாமற் கரைந்துபோயிற்று.

ஆகலான் மெய்ம்மைச் சைவசமயிகளே! இப்போதுள்ள வடமொழி வேதாகமங்களே இறைவன் சிருட்டியாரம்பகாலத்தில் நம்பொருட்டு அருளிச்செய்த முதனூல்களென்றும், "விளக்கமுடையார் கூறியபடி தமிழில் முதனூல் இறைவன் செய்திலன் என்றும், அதனுல் கடல்கொண்டு போயதென்றது அவரது கட்டுவார்த்தை என்றும், நன்குகத் தேறி அவரை வேதாகம விரோதியெனக்கொண்டு புறப்புறத்தினும் புறப்புறச் சமயத்தவராக வெண்ணி, அவர் சொற் கேட்பின் ஆன்மலாபமிழந்து நரகத் தெய்துதல் ஒருதலையெனத் துணிந்து, அவர் சொற் கேளாது வேதாகம வழி யொழுகி விமல னருள் பெறு நிலைமையை விடாதுபற்றிச் செவ்வனே உய்தி பெறுவீராக.

எமதன்பர் குமாரர் ஸ்ரீமத். சுப்பிரமணியபிள்ளையவர்களும் இவ்வுண்மையை ஓர்ந்து "கொடிறும்பேதையுங் கொண்

* ஈண்டு மறை அரசன் வார்த்தை.

டது விடாது" என்னுந் திருவாசகக் கூற்றிற்குச் சரியான விலக்கியமாகாது, உண்மை கண்டுழியும் அவ்வளவிலமையாது வெற்றுரை பேசித் தமதறியாமையை மேலு மேலும் வெளிப் படுத்தும் பிறர் போலாது அமைந்து நன்மை பெறுவாராக.

இனி, சுந்தரமூர்த்திநாயனார் கைலைக் கெழுந்தருளிய போது வழியிடைத் தாமருளிச்செய்த "தானெனை முன் படைத்தான்" என்பதை முதலாகவுடைய நொடித்தான்மலைத் திருப்பதிகத்தை, அஞ்சைக்களத்தப்பர் சந்நிதி வாயிலாக உல கிற் கறிவுறுத்துமாறு ஆழிநீராசனாகிய வருணனிடம் கொடுத் தார் என்பது,

"ஊழிதொ றூழி முற்று முயர்பொன் னொடித்தான் மலையைச்
சூழிசை யின்கரும் பின்சுவை நாவல வூரன் சொன்ன
ஏழிசை யின்றமி ழாலிசைந் தேத்திய பத்தி னையும்
ஆழி கடலரை யாவஞ் சையப் பர்க்கறி விப்பதே"

என்னும் அப்பதிகத் திறுதித் தேவாரமாகிய அவர் திரு வாக்கானும்,

"வாழி மாதவ ராலால சுந்தரர்
வழியிடை யருள்செய்த
ஏழி சைத்திருப் பதிகமிவ் வுலகினி
லேற்றிட வெறிமுந்நீர்
ஆழி வேந்தனும் வருணனுக் களித்திட
வருணனு மருள்சூடி
ஊழி யிற்றனி யொருவர்தந் திருவஞ்சைக்
களத்தினுய்த் துணர்வித்தான்"

என்னும் பன்னிரண்டாந் திருமுறைத் திருவிருத்தமாகிய சேக்கிழார் நாயனார் திருவாக்கானும் பெறுதும்.

சேரமான் பெருமாணயனார் வழியிடை அருளிச்செய்த திருக்கைலாசஞானவுலாவை அன்று வெள்ளியங்கிரியிற் கேட்ட மாசாத்தனார் அதனை மனத்திற் கொண்டு திருப்பிடவூரில் வெளிப்படக் கூறியருளி உலகத்தில் நிலைபெறச் செய் தார் என்பது,

"சேரர் காவலர் விண்ணப்பஞ் செய்தவத்
திருவுலாப் புறமன்று
சாரல் வெள்ளியங் கயிலையிற் கேட்டமா
சாத்தனார் தரித்திந்தப்

பாரில் வேதியர் திருப்பிட ஊர்தனில்
வெளிப்படப் பகர்ந்தெங்கும்
நார வேலைசூ ழுலகினில் விளங்கிட
நாட்டினர் நலத்தாலே"

என்னும் பெரியபுராணத் திருவிருத்தமாகிய சேக்கிழார் நாயனார் திருவாக்காற் பெறுதும்.

வழியிடை யருளிச்செய்த இவ்வொரு பதிகமும், இவ்வோருலாவும் புவியிடைப்போந்து பயன்படவேண்டி இங்ஙனம் இவர் வாயிலாக அஞ்சைக்களத்தும் பிடவூரகத்தும் அறிவுறுத்துவித்தருளிய பெருங்கருணையாளனாகிய இறைவன் "ஆரணமாகமங்கள்" இல்லையேற் "கதிப்பவரில்லையாகும்" ஆகலான், தமிழிலிருந்த வேதாகமங்களைக் கடல்கொண்டு போந்த ஞான்று தொட்டின்றுகாறும் வெளிப்படுத்திப் பயன்படச் செய்து உயிர்களைப் புரந்து கதிப்பாற் படுத்தாது வாளாவிருத்தல் அவன் கருணைக் கிழுக்காம்பிறவெனின், அற்றன்று; என்னை? தமிழில் அவை செய்யப்பட்டிருந்து கடல்கோட்படினன்றோ! அம்முதல்வன் அங்ஙனஞ் செய்வன். அந்நிகழ்ச்சிகள் யாவும் எக்காலத்தும் இன்மையான் அது செய்திலன் என்க. அதற்கொரு சான்று சோமுகன் கவர்ந்து சென்று கடலிடை மறைத்த வேதத்தை விண்டுவைக்கொண்டு விமலன் வெளிப்படுத்துவித்த சரிதமும் அன்னபிறவு மாம்; ஆகலான் இழுக்கு யாண்டையதென்றொழிக.

இன்னும் கடல்கோட்பட்ட விடத்துள்ள தமிழ் ஆகம முறையாகிய தானி தான்றன்றானத்தொடு அதன் கட்பட்டதெனினும் தமிழ் நாட்டில் மற்றைய இடங்களிலிருந்த தமிழ் ஆகம முறைகள் எங்கே போயினவோ? தமிழ் நாட்டுச் சிவஸ்தல முதலியவற்றில் சிவபிரான் முதலிய கடவுளர்க்கு அவையின்றிச் "சிறப்பொடு பூசனை" சென்றதெங்ஙனம்? வடநாட்டுத் தலங்களிலுள்ள சிவாலய முதலியவற்றில் "சிறப்பொடு பூசனை" யின்றோ? என்னை? அங்குள்ளார் தமிழாகம முணரமாட்டாராகலான். நித்தியமேனு நடைபெறுதவாலயங்கள் இருந்தும் பயனின்றாகலின், அங்குள்ள ஆலயங்கட்காக வடமொழி ஆகமமும் உண்டாக்கினார் என்பராயின், குறை யென்னை? தமிழ் வேதாகமம் கடல் கோட்பட்டால் கடல் கோட்படாத சமஸ்கிருதாகம வேதங்களைக்கொண்டு தமிழ் நாட்டிற் சிவாலயங்களில் நித்திய நைமித்திகங்கள் நடப்பிக்கலாமே. அவற்றைத் தள்ளிவிட்டு "அரசனை நம்பிப் புருஷனை யிழந்தவள்" சீலமாக இல்லாத தமிழ் வேதாகமங்களை நம்பி, இருக்கிற சமஸ்கிருத

வேதாகமங்களைவிட்டுச் சந்தியில் நின்று நாம் தவிக்கவேண்டிய தெற்றிற்கென்று திருவாளர் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் சற்றே தயைகூர்ந்து சிந்தித்து உண்மையில் தமது மனத்தை நிலையுற வூன்றி நன்மை கடைப்பிடித்துச் செம்மையராக வாழ்க சிவா.

இனி, "பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட் டெரியோம்பும்—சிறப்பர்" எனத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரத்துள் ஓதியருளுதலினால், வேள்விக்கட் பசுவேட்டலை விதித்தவேதம் கொலையைக் கூறலால் நன்மை பயவாது போலுமென மலையற்க; என்னை? கொலை, களவு, காமம், பொய், என்பனவன்றோ சமயத்தாரானும் உலகத்தாரானுங் கடியப்பட்டன! அவற்றுள் ஒன்றாலோ இது! எனின், அற்றன்று; கொலை என்னுஞ் சொற்கேட்டுக் கொலை தீதென்பதூஉம், களவென்னுஞ் சொற் கேட்டுக் களவு தீதென்பதூஉம், காமம் என்னுஞ் சொற் கேட்டுக் காமம் தீதென்பதூஉம், பொய் யென்னுஞ் சொற் கேட்டுப் பொய் தீதென்பதூஉ மன்று; மற்றவை நல்லவாமாறுமுண்டு: என்னை? ஒருவன் ஒருகுடும்பத்துப் பத்துமக்களிடத்துக் கொண்ட கோபத்தால் அவர்கள் துயிலும்போது அவர்களை இடைதெரிந்து கொல்லக்கருதி ஆயுதபாணியாகச் சேறலை ஓராற்றானறிந்த மற்றை அருளுடையா னொருவன், பத்து மக்களையும் இவன் கோறல் புரியாமை அவரைக் காப்பேனெனக் கண்ணி அவனைத் தனது சூழ்ச்சியாற் கொன்றிட்டான். அதனால் அவர்களும் சாக்காடு நீங்கினார்கள். அவன் அக்கொலையினான் அவர்களை உய்யக் கொண்டமையான் நல்லூழிச் செல்லு மென்பது. மற்று மிதுபோல்வன கொலையாகா நன்மை பயக்கு மென்பது.

இனி, களவு நன்றாமாறு:— "ஒரு பெண்டாட்டி தமரொடு கலாய்த்து நஞ்சுண்டு சாவல் என்னுமுள்ளத்தளாய் நஞ்சுகூட்டிவைத்து, விலக்குவா ரில்லாதபோழ்து உண்பலென்று நின்றவிடத்து, அருளுடையா ளொருத்தி அதனைக் கண்டு இவளிதனை யுண்டு சாவாமற் கொண்டுபோ யுகுப்பலென்று அவளைக் காணாமே கொண்டுபோ யுகுத்திட்டாள். அவளும் சனநீக்கத்துக்கண் நஞ்சுண்டு சாவான் சென்று அது காணாளாய்ச் சாக்காடு நீங்கினாள்; அவ்வருளுடையாள் அக் களவினான் அவளை உய்யக் கொண்டமையான் நல்லூழிச் செல்லுமென்பது. மற்று மிதுபோல்வன களவாகா நன்மை பயக்குமென்பது."

இனி, காமம் நன்றாமாறு:—"சுவர்க்கத்தின்கட் சென்று போகந்துய்ப்பலென்றும், உத்தரகுருவின்கட் சென்று போகந்

துய்ப்ப லென்றும், நன் ஞானங் கற்று வீடுபெறுவலென்றும், தெய்வத்தை வழிபடுவ லென்றும் எழுந்த காமங் கண்டா யன்றே! மேன்மக்களானும் புகழ்ப்பட்டு மறுமைக்கு முறுதி பயக்கு மாதலின், இக்காமம் பெரிது முறுதியுடைத்தென் பது."

இனி, பொய் நன்றுமாறு:—ஊரிடையிட்டுச் சென்று தன் கருமமுற்றி மீள்வானோர்மகனைச் சில்லோர் வழியிடையிட்டுக் கொலைபுரிந்து அவன் கைப்பொருளைப்பற்ற நின்றவிடத்து, அதனை ஆங்கறிந்து போதரு நன்மகனுவானோர் பதிகன், அம்மீள்வான்றனக்கு அதனைத் தெரிப்ப, அவன் ஆண்டோர் குடிசையில் வசிப்பானோர் கருணையாளனுழை இது சமயம் என்னைக் காவாய் என்று சரண்புக, அவனும் உளமுருகி அது செய்வல் அஞ்சற்கவென் றமைத்த காத்தினனுய் மறைத்துவைத் தாங்கே வெளிப்போந்து நின்றுனிடை அவ்வாறலைப்பான் போந்து நின்ற மறமாக்கள் புக்குத் தாழ்த்த தலையும் தண்ணிய மொழியு முடையராய்த் தன்கைப் பொருளுடையா னொருவ னெம்மினமகன் பொருள் காரண மாகத் தனிவரலஞ்சி ஈண்டுழிதந்தானென அறிந்து அவனைக் காத்துக் கொடுபோதரப் பலர்குழீஇவந்தனம்; அருளுடைப் பெரும! அத்தகையானை நீர் கண்டீர்கொல்லோவென ஐயமவனு ருது நையுமனத்தராய் வினவ, அத்தகையா னொருவன் இச் சதுக்கத்துநின்று நாற்றிசையு நோக்கி உழிதந்து நின்றுன். முன்னர் அதுகண்டுவைத்துக்குடிசையுட் போந்து பின்வந்து நோக்கினேற்கு முன்போற் காணப்பட்டிலன் என்றுன். அவரும் அது கேட்டு மெய்யெனக் கொண்டு தம்முழிப் போந்தார். அதனுன் அவனை யுய்யக்கொண்டமையின் அது நன்மைபயந்த தென்பது. மற்று மிது போல்வன பொய்யாகா நன்மைபயக்கு மென்பது. இக்கருத்துக் கண்ணியன்றே,

> "பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
> நன்மை பயக்கு மெனின்"

என்றுர் வள்ளுவ தேவரும்.

அஃதங்ஙனமாகுக; பரசமய கோளரியாகிய பிள்ளையார், பாண்டியன் சபையிற் சமணரோ டொட்டிச் சமயவாதஞ் செய்து வென்றகாலத்துக் குலச்சிறைநாயனர் சமணரைக் கழு வேற்றியது தீமைபயக்கு மன்றேவெனின், அறியாது கூறினுய்; மற்றென்னைகொல் நன்மை பயக்கு மாறெனின் நன்றே கூறுதும்:—

பதினாறுயிரவரைக் கொல்ல முயன்ற எண்ணாயிரவரை அரசன் கோறல் புண்ணியமாகலானும், ஓட்டியவாறே அவரைக் கழுவேற்றினமை அவர் செய்த சிவதூடணத்தின் பொருட்டு நரகவேதனை அளப்பிலகாலம் அநுபவியாது ஒருசிறுபோழ் துள் நீங்கினமையானும், பின்னும் பின்னும் பிறரும் இவ்வாறு செய்து நரகத்துன்பமும் பிறவித்துன்பமும் எய்தா துய்தற்குக் காரணமாகலானும் அது பெருங்கருணையின் பாலதாய்ப் பெரிது நன்மை பயந்தவாறறிக. இத்துணைச் சுருக்கமாக அத்துணைப் பெருநன்மை பயக்குமாற்றைச் சைவசாத்திர முறைகொண் டன்றிப் பிறிதொன்றினான் எக்காலத்து மெவருமறிய வல்லு நராகார்.

இம்மையிலே பாவஞ்செய்தோர் அரசனாலே தண்டிக்கப் பட்டால் மறுமையிலே அவர்க்கு நரகவேதனை யின்று; அரசன் அறிந்து தண்டிக்கப்படாத பாவங்கட்குத்தான் மறுமையில் யமதண்டமுண்டு. ஆகலான், அரசன் தண்ட மெல்லாம் மறக் கருணையாய்ப் பெருநன்மை பயப்பனவாம். சமணரைக்கழு வேற்றினமையும் அத்தகைய மறக்கருணையே யாமென்பது. அதனை,—

"அரசனுஞ் செய்வ தீச னருள்வழி யரும்பா வங்கள்
தரையுளோர் செய்யிற் றீய தண்டலின் வைத்துத் தண்டத்
துரைசெய்து தீர்ப்பன் பின்பு சொல்வழி நடப்பர் தூயோர்
நிரயமுஞ் சேரா ரந்த நிரயமுன் னீர்மை யீதாம்"

"அருளினா லுரைத்த நூலின் வழிவாரா ததன்மஞ் செய்யின்
இருளுலா நிரயத் துன்பத் திட்டிரும் பாவந் தீர்ப்பன்
பொருளுலாஞ் சுவர்க்க மாதி போகத்தாற் புணியந் தீர்ப்பன்
மருளுலா மலங்க டீர்க்கு மருந்திவை வயித்திய நாதன்"

என்னுஞ் சிவஞானசித்தித்திருவிருத்தங்களினா லறிக.

இனி, அறுபத்து மூவருள் சிறுத்தொண்டநாயனார், எறிபத்தநாயனார், கோட்புலிநாயனார், இயற்பகைநாயனார் முதலாயினோர்; புதல்வர், யானைப்பாகர், சுற்றத்தார் முதலாயி னோரைக் கொன்றமையும் திடபத்தியாற் செய்தமையானும், மீட்டுஞ் சிவபிரான் றிருவருளால் உயிர்பெற்றெழுந்தமையா னும், சுவர்க்காதி பதங்களைப் பெற் றின்புற்றமையானும் நன்மைபயந்தவாறு காண்க. இவ்வுண்மை நோக்கியன்றே "வாளான் மகவரிந் தூட்டவல் லேனல்லன்" எனப் பட்டினத் தடிகள் கூறியருளியதூஉ மென்க. இவை போல்வன பிறவு மன்ன.

இனி, பிறவுயிரை அது நின்ற வுடம்பினின்று நீக்குமாறு போலத் தமதுடலினின்று தம்மைத் தாம் நீக்குதலும் பாவமென்றும், அங்ஙனஞ் செய்வோர் சக்கரவாளகிரிக்குப் புறத்தினுள்ள இருட்பூமியிலே கிடந்து எண்ணில்லாத காலம் வருந்துவார்கள் என்றும் ஆகமத்துள் கூறிய விதி ததீசிமுனிவர் முதலாயினோர் மாட்டுச் செல்லாமை,

"என்று மாதவ னியம்ப வும்பர்கோன்
ஒன்றும் வானவர் தம்மொ டொல்லெனச்
சென்று மாயையின் செயலை நோன்பினால்
வென்ற மாதவ னிருக்கை மேவினான்."

வேறு

"அடிகணீர் மருதமொன் றதனை வேண்டியிம்
முடிகொள்வா னவரொடு முந்தி னேனது
செடிகொள் காருட லவுணர்த் தேய்த்தெமர்
குடியெலாம் புரப்பதோர் கொள்கைத் தாயது."

"யாதெனி னினையதுன் யாக்கை யுள்ளதென்
றோதலும் யாவையு முணர்ந்த மாதவன்
ஆதவற் கண்டதா மரையி னானனப்
போதலர்ந் தின்னன புகல்வ தாயினான்."

"நாய்நம தெனநரி நமதெ னப்பிதா
தாய்தம தெனநமன் றனதெ னப்பிணி
பேய்நம தெனமன மதிக்கும் பெற்றிபோ
லாய்நம தெனப்படும் யாக்கை யாரதே."

"விடம்பயி லெயிற்றர வுரியும் வீறுழை
குடம்பையுந் தானெனுங் கொள்கைத் தேகொலாம்
நடம்பயில் கூத்தரி னடிக்கு மைவர்வாழ்
உடம்பையும் யானென வுரைக்கற் பாலதோ."

"நடுத்தயா விலார்தமை நலியத் துன்பநோய்
அடுத்தயா வருந்திரு வடைய யாக்கையைக்
கொடுத்தயா வறம்புகழ் கொள்வ னேயெனின்
எடுத்தயாக் கையின்பய னிதனின் யாவதே"

வேறு

"என்றனன் கரண மொன்றி யெழுகருத் தறிவை யீர்ப்ப
நின்றனன் பிரம நாடி நெறிக்கொடு கபாலங் கீண்டு
சென்றனன் விமான மேறிச் சேர்ந்தன னுலகை நோன்பால்
வென்றனன் றுறக்கம் புக்கு வீற்றினி திருந்தா னம்மா."

என்னுந் திருவிளையாடற் புராணத்தானறியக்கிடத்தலின் அதுகடாவன்றெனவிடுக்க.

அஃதொக்குமன்றாயினும், வேள்விக்கட் படுத்த பசுவைப் பின்னர் எழுப்பிவிடுதல் நியதமின்மை விருத்திரன் யாகபசுவாக வந்த காலத்து இந்திரன் படுத்து யாகஞ் செய்து பின்னெழுப் பாமையின்வைத் துணரப்படுமாலோவெனின், அற்றன்று;

"மேவரும் வலனெனு மவுணன் மேலைநாண்
மூவரின் விளங்கிய முக்கண் மூர்த்திசெஞ்
சேவடி யருச்சனைத் தவத்தின் செய்தியால்
யாவது வேண்டுமென் றிறைவன் கூறலும்."

"தாழ்ந்துநின் றியம்புவான் சமரில் யாரினும்
போழ்ந்திற வாவரம் புரிதி யூழ்வினை
சூழ்ந்திறந் தாலென்மெய் துறந்த மாந்தரும்
வீழ்ந்திட நவமணி யாதல் வேண்டுமால்."

"என்றுவேண் டலும்வர மீச னல்கினன்" ஆதலான் அவ்வரத்தின்படி அவன் மெய் நவரத்தினமாயிற்றாதலானும், "மாய்த்தனர் மாய்ந்த வள்ளல் வலனுமந் தார மாரி—தூர்த் திட விமான மேறித் தொல்விதி யுலகஞ் சேர்ந்தான்" ஆதலானும் அதுகடாவன்று.

ஈங்கிவைபோல வேள்விக் கொலையும் தீங்குபயவாது நன்மை பயக்குமென்க. நன்மை பயக்குமாறென்னையெனின், நன்றே கூறுதும்:—வேள்வியிற் கொலையுண்ணும் உயிர் மேலுலகத்துச் சென்று இன்பந் துய்க்கும் ஆகலானும், ஈண்டும் கொன்றுவபை எடுத்த பின்னர் எழுப்பப்படுமென்பது "புன்மையாம் பசுத்த டிந்து புரையில் வேள்வி யாற்றியே—தொன் மைபோ லெழுப்பு மாறு சுருதி சொற்ற வாறுபோல்" என்னுங் கந்தபுராணத் திருவிருத்தத்தாற் பெறப்படலானும், யாகாதிபதி சிவனே யாதலால் அவர்க் கவிக்கு நேர்ந்த வபைக்குரிய வுயிரிந்த அபுத்திபூர்வ சிவபுண்ணியத்தால் மறுமைக்கண் புத்தி பூருவ சிவபுண்ணியஞ் செய்து சிவஞான முற்று அத்துவித முத்தியெய்து மாகலானும், இக்கொலை சீரிய நன்மை பயக்குமென்பது. வேதத்துட் கூறப்படும் சோமபான முதலியனவு மதுவே.

இனி இக்காலத்து மீண்டு யாகபசுவை எழுப்புஞ் சத்தியில்லாதார் யாகபசுவைக் கொன்று யாகஞ் செய்யலாகாதென்பது, அப்பதீக்ஷிதர் தமது காலத்து யாகமொன்றியற்றி ஈற்றின் யாகபசுவை யெழுப்ப அது எழவில்லை, அவ்வமையத்துத்

தீக்ஷிதசுவாமிகள் வேதத்தை நோக்கிச் சுருதியே உன்னை நம்பி இப்பசுவைப்படுத்தேன். இது எழாதாயின் எனதுயிரைப் படுப்பல் இது நிச்சயம்; என் சொல்லுதியென்று கூறும் உறுதிமொழியை வேதபுருடன் கேட்டு வெளிப்பட்டு நின்வாய்மைப் பத்தியின் பொருட்டு இப்பசு எழுந்துவிடும். இனி இக்கொடுங் கலியில் பசுப்படுத்து யாகஞ் செய்யாதொழிக. படுப்பின் எழாது என்று சொல்லி மறைந்தனன் என்னுஞ் சரிதத்தின்வைத்துணர்க.

உகங்கள் தோறும் விதிகள் சில மாறுபடு மாற்றை, "அந்த யுகந் தோறுமடி தீண்டியருச் சிக்கைதகு—மிந்தக் கலியுகத்தே யாது" என்பதனு லறிக.

யாகத்தில் கொலை புரிந்த யாகபசுவை எழுப்பவல்லுநர் யாகஞ் செய்யா தொழியின் சிறப்புடையந்தணரெனப்பட மாட்டார்; தில்வாழந்தணர் படுத்த பசுவை எழுப்பவல்லாதலின் வேள்வியாற்றித் தமக்கும் யாகபசுவிற்கும் பிறர்க்கும் நன்மை பயக்குநெறி வழுவா தொழுகிச் சிறப்படைந்தார் என்பார் 'பசு வேட்டெரியோம்புஞ் சிறப்பர்' என்றருளிச் செய்தார் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்.

அந்தணர் வேதமோதாமை வேள்வி செய்யாமை முதலியன பெருங் குற்றமென்பார், புராணத்துட் கலியுகதருமங் கூறும் வழி,

"அந்தணர் வேத மோதா ருருஞ்சிவ
பூசை செய்யார்
செந்தழல் வேள்வி யாற்றூர் செயத்தகு
நியமஞ் செய்யார்
மந்திர நவிற்று ரன்பு வளருண்
மனத்து வையார்
வெந்தொழில் வினைமேற் கொள்வார் விரதநோன்
பினைவி டுப்பார்"

என்றிங்ஙனம் கூறினர் ஆசிரியர் பிறரும்.

இதனுலே அந்தணர்க்கு வேதவேள்வி முதலியன இன்றியமையாத சற்கருமங்கள் என்பது நன்கு விளங்கும். தில்லைவாழந்தணர் அவற்றை உயிரினுமோம்பிச் சிறந்தார் என்பது அவற்றைக் கண்கூடாகக் கண்ட முத்தமிழ் விரகர் தமது தேவாரத்துள் "பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட்டெரியோம்புஞ் சிறப்பர்" என்று சிறப்பித்ததனுல் செவ்வனே தெரிகின்றது. இது அநுவாதம்.

இருந்தவாற்றால் வேள்வியிற் கொலை அவ்வுயிர்க்கு நன்மை பயத்தலால் கொலை யன்றென்பதூஉம், வேதம் ஏனையிடத்துச் செய்யும் கொலையை விலக்கும் என்பதூஉம் அதற்கு மாறாகக் கொலை முதலியன செய்வோர் செயலை வேதத்திலேற்றிக் குறை கூறல் அறிவின்மை என்பதூஉம் அறிந்துகொள்க.

இனி நமது நூல்கள் பெரும்பாலும் செம்பொருளும், ஓரோரிடத்துக் குறிப்புப் பொருளும் கூறுவனவாம். அது:—

"நூலெனப் படுவது நுதலிய பொருளை
ஆதிக் கண்ணே யறியச் சுட்டி
ஒத்துமுறை நிறுத்துச் சூத்திர நிரைஇ
முதல்வழி சார்பென மூவகை மரபிற்
றொகைவகை விரியின் வகையறத் தெரிந்து
ஞாபகஞ் செம்பொரு ளாயிரு வகையிற்
பாவமைந் தொழுகும் பண்பிற் றாகிப்
புணர்ச்சியி னமைந்து பொருளகத் தடக்கித்
தனக்குவரம் பாகித் தான்முடி வதுவே."

என்னும் இலக்கணச் சூத்திரத்தா லறிக. ஆயினும் திருக்கோவையார் முழுதும் செம்பொருள் குறிப்புப் பொருள் இரண்டும் கூறு நூலாம் என்பது,:—

"திருவாத வூர்மகிழ் செழுமறை முனிவர்
ஐம்பொறி கையிகந் தறிவா யறியாச்
செம்புலச் செல்வ ராயின ராதலின்
அறிவனூற் பொருளு முலகநூல் வழக்குமென
இருபொரு ளுதலி யெடுத்துக் கொண்டனர்
ஆங்கவ் விரண்டனுள்
ஆகமநூல் வழியி னுதலிய ஞான
யோகநுண் பொருளை யுணர்த்து தற்கரி
துலகநூல் வழியி னுதலிய பொருளெனும்
அலகி றீம்பாற் பரவைக் கண்ணெனும்
புலனெனுங் கொள்கலன் முகந்த வகைசிறி
தலையா மரபி னுரைக்கற் பாற்று."

என அதற் குரைசெய்வான் புக்க பேராசிரியர் உரைச் சூத்திரத்தானும்,

"ஆரணங் காணென்ப ரந்தணர் யோகிய ராகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலதென்பர்
ஏரணங் காணென்ப ரெண்ண ரெழுத்தென்ப ரின்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே."

என்னும் ஆன்றோர் கலித்துறை யானும், "திருக்கோவை யாருண்மை" என்னும் உரை நூலானும் நன்குணர்க.

வேதத்துட் கூறும் வேள்விக்கண் பசுப்படுத்தல் என்பதற்குக் குறிப்புப் பொருள் செம்பொருள் இரண்டுங் கொள்ளுமாறு சிறிது விளக்குதும்:—

பசு—ஆன்மபோதம். படுத்தல்—அப்போதம் முனேக்காமற் செய்தல். மீட்டு எழுப்புதல்—சிவபோதமாகச் சீவிக்கச் செய்தல், இதனை,:—

"உள்ளமெனுங் கூடத்தி லூக்கமெனுந் தறிநிறுவி
யுறுதி யாகத்
தள்ளரிய வன்பென்னுந் தொடர்பூட்டி யிடைபடுத்தித்
தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக் களித்துண்டு
கருணை யென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை நினைந்துவரு
வினைக டீர்ப்பாம்."

என்னுஞ் செய்யுளுமறிவுறுத்துமாறு உற்று நோக்கியுணர்க. இங்ஙனம் பாவிக்கும் அகத்து வேள்விக்கு நாபித்தானமே குண்டமும், ஆண்டுறும் அங்கியே யாகாக்கினியும், விந்துத் தானத்தமிழ்தே நெய்யும், இடை பிங்கலைகளே சுருக்குச்சுருவமுமாகக் கொள்ளப்படும் என்ப.

புறத்துச் செய்யப்படும் வேள்விக்குப் பசு—ஆட்டுக்கிடாய். ஏனைய வெளிப்படை. இப்புறத்து வேள்வி அகத்து வேள்விக்குக் காரணம். இக்காரணமின்றி அக்காரியம் சித்தியாது. ஆகலான் அது செய்தற்குரியார் தப்பாமற் செய்தல் வேண்டும்.

அகவேள்வி செய்யும் ஆற்றலுடையார் யோகியும் ஞானியும். அவரும் உலகர் பொருட்டுப் புறவேள்வி செய்யினுஞ் செய்வர். "உறங்கினேனைகை வெறும்பாக்கென" அவரறியாது அஃதவரை விட்டு நழுவினும் நழுவும். எங்ஙனமாயினு மவர்க்கது குற்றமன்று. எமக்கு யோக ஞானம் வந்துவிட்டதென முனைப்புக்கொண்டு தாமே விடுவாராயின் குற்றமாம்.

ஒருசாரார் யாகத்துக் கொலை கூறப்படுதலால் சீவகருணையற்ற செயலைக்கூறும் நூல் கடவுள் சொன்னதன் றென்பார் பிறரெனக்கருதிக் குறிப்புப் பொருள் ஒன்றே கொள்வர். அது கூடாதென்பது மேலே விளக்கினும்; கடைப்பிடிக்க.

கந்தபுராணத்திலே வள்ளியம்மை திருமணப்படலத்திலே,

"அன்னதொரு காலை யறுமா முகக்கடவுள்
முன்னொருசார் வந்து முதுகளிற்றின் கோடொற்றப்
பின்னொருசார் வந்து பிடியின் மருப்பூன்ற
இந்நடுவே நின்றா னெறும்வயிரத் தூணேபோல்"

என்புழிப் பிரணவமந்திரத்தை உபதேசித்துப் பரிசதீக்ஷை பண்ணியதென்னுங் குறிப்பு மாத்திரையே கொள்ளற்பாலது. அறுமுகக்கடவுள் மூத்தபிள்ளையாரை நோக்கித் தேவரீர் வருவதால் "புந்தி மயல் தீர்ந்தேன் புணையிழையுஞ் சேர்ந்தனனால்" என்றதும் அக்கருத்துப்பற்றியே யென்றுணர்க. மயல்—பிரணவத்தை யுபதேசிக்கவேண்டும் என்னுமாசை. சேர்தல்—பரிசதீக்கை.

'முன்னொருசார் வந்து முதுகளிற்றின் கோடொற்ற' என்றதனால் பிரணவ மந்திரோபதேசமும், 'பின்னொருசார் வந்து பிடியின் மருப்பூன்ற' என்றதனான் பரிசதீக்கையும் பெறப்பட்டது. அங்ஙனம் பெறப்பட்டனவற்றையே முருகக் கடவுள் பின்னர் எடுத்துக்கூறினது அநுவாதமென்றோர்க; "கூறியதுகூறல்" என்னுங் குற்றமாகாது. இதுகொண்டு ஏனையவும் உய்த்துணர்க. விரிப்பிற் பெருகும்.

இன்னும் இப்படலத்தினால் ஆலவாயவிர்சடைக்கடவுள் அருளிச்செய்த இறையனாரகப் பொருளெனுங் களவியற் பொருளை நமக்குக்காட்டு முகத்தால் அது வீட்டுக்கு நிமித்தமாமாறு உணர்த்தினமை தெற்றெனத்தெளிக.

அறுமுகக்கடவுள் களவுங் கற்பு நடாத்திக்காட்டினமை உலகர் வீடுபேற்றினிமித்தமன்றித் தம்பொருட்டன்று என்பதை நம்மனோர் தெளிந்துய்தற்கன்றே அவர் அந்தணர் முதலிய உயர்ந்த வருணத்தார் உருக்கொண்டுவாராது புள்ளும் மாவும் படுக்கும் வேட்டுவவடிவங்கொண்டு வந்ததூஉமென்க. என்னை? தாம் "பொறிவாயிலைந்தவித்தான்" ஆகலான், ஐம்புலப்புட்படுத்தவர் அல்லது ஐம்புலக்களிறு படுத்தவர் என்பதுணர்த்தித் தமக்கு ஐம்புலநுகர்ச்சியின்றென்பது தெரித்தற்கவ்வுருக்கொண்டாராகலான். எனவே, அவர்களவுங் கற்பும் நடாத்தின்மை காமத்தின் பொருட்டன்று என்பது சித்தித்தவாறு காண்க. கந்தபுராண நூலாசிரியரும் இக்கருத்துப்பற்றியே, "கலைப்படு மதியப் புத்தேள் கலங்கலம் புனலிற் றோன்றி—அலைப்படு நீர்மைத் தன்றோ வறுமுக னுடை லெல்லாம்" எனவும், "குமரற் கிறு திருவிளை யாடல் போலாம்" எனவும் கூறி யொழிந்தார். இப்பொருளை,

"தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ" எனவும்,

"போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரிதலோரார்" எனவும்,

"இடப்பாக மாத ராளோ டிசைந்துயிர்க் கின்ப மென்றும் அடைப்பானு மதுவும்." எனவும்,

"சத்தியுஞ் சிவமு மாய தன்மையிவ் வுலக மெல்லாம்
ஒத்தொவ்வா வாணும் பெண்ணு முணர்குண குணியு மாகி
வைத்தன னவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கை யெல்லாம்
இத்தையு மறியார் பீட லிங்கத்தி னியல்பு மோரார்"

எனவும் போந்த திருவாசகமுஞ் சித்தியாரும் நன்கு விளக்கும். இவற்றை யூகிக்குமாறு ஊகியா மாந்தர்க்கு உண்மை விளங்காது.

வேட்டுவர் புட்படுத்தலை "தவமறைந் தல்லவை செய்தல் வேட்டுவன்—புதன்மறைந்து புட்சிமிழ்த் தற்று" என்பதனானு மறிக. அது நிற்க.

"கல்லாலந் தண்ணிழற்கீழ்க் கலித்துறை யதுபயந்த காமர்
நல்லானை நல்லா ளொருபாக மாகியஞானத் தானை [காட்சி
எல்லாரு மேத்தத் தகுவானை யென்ஞான்றும்
சொல்லாடா ருக்கெல்லாந் துயரல்ல தில்லை கண்டீர்."

என்னும் இப்பாட்டில் 'கலித்துறை' என்பது "பாவகையைக் குறிப்பதாகக் கொள்ளின், அப்பாவகையினுல் நால்வர் செய்த நான்மறைகள் அமைந்திருத்தல் கூடுமென்று கருதுதற்கு இடமுண்டு" என்றார் "விளக்க" முடையார்.

கொள்ளின் என்றுரே அங்ஙனம் கொண்டவர் யார்? கொள்ளச்சொன்னவர் யார்? என்னை? நல்லாசிரியரிடத்துக் கற்றறி மாண்புலவர் "ஏற்புழிக்கோடல்" என்னும் உத்தியை மேற்கொண்டு இடமறிந்து பொருள்கொள்வரன்றி அஃதொழிந்து பொருள் கொள்ளாராகலான்.

மாண்புலவர் கொள்ளார் எனவே, அங்ஙனங் கொள்பவர் "விளக்க" முடையார்தாமே யென்பது பெறப்பட்டது. அவர் கொள்கைபற்றி நமக்காவதியாதுமின்று; என்னை? அவர்தாம் வேதாகம வழக்கோடும் ஆன்றோர் வழக்கோடும் முற்றும் மாறுபட்டோராகலான்,

அங்ஙனம் கொள்ளினும் கலித்துறையது பயந்த நல்லான் என நேரே முடிதலே அறியு மிலக்கண மறியாது நல்லாரல்லாத நால்வரைத் தாம் வலிந்துகொணர்ந்து அவர்கள் பயந்த கலித் துறையென முடிவு காண்டல் விந்தையினும் விந்தையே. முடிப் பினும் முடியாதென்பது நன்னூல் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த நல்லோர் அறிவர். இவர் அறிந்தென்? அறியா தொழிந்தென்?

மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் அச்சிட்ட தொல்காப்பிய உரையுள் "கல்வித்துறை பயந்த" என்ற பாடங்காணப்படு கின்றது. அதனைமேற்கொண்டு "ஆராய்ச்சி" ஆசிரியர் அதற்கு வேதம் என்று பொருள் கண்டார், அதுவேசரி.

கலித்துறை, கல்வித்துறை என்னு மிரண்டும் சொல்லால் வேறுபடினும் பொருளால் ஒன்றேயாம். அதுகாட்டுதும்:—

கலித்துறை என்பதில் கலி—ஒலி. துறை—நூல். எனவே ஒலித்தலையுடைய நூல் என்றபடி. ஒலி உதாத்த அநுதாத்த சுவரிதம். என்றதனால் வேதம் என்பது பெறப்பட்டவாறு காண்க.

கல்வித்துறை என்பதில் கல்வி—அறிவு, துறை—நூல். எனவே, பதி பசு பாசங்களை அறிதற்குக் கருவியாகிய நூல் என்க—எனவே, வேதம் என்றபடி; என்னை? வேதம் என் னும் பதத்திற்கும் பொருள் அதுவே யாகலான்.

இங்ஙனம் இடத்திற்கேற்ற உண்மைப் பொருள் நன்மை பயந்திருப்ப, அது காணமாட்டாது தம்மனம் போனவாறே திரிபு பொருள்கொண்ட இவர் தாம் பயனிழந்து பிறரையும் இழப்பித்தலால் வரும்பயன் தென்றிசைக்கோன்றன்னகத்தீத யன்றிப் பிறிதுயாதுமின்றே! "தூங்கானை மாடச்சுடர்க் கொழுந்தே"!! இவர்க்கு நல்லறிவுச் சுடர்கொளுத்தி உய்விக்கு மாறு இங்கும் வேண்டுகின்றேன்.

இக்கருத்துப் பற்றியே சிவதருமோத்தரத் துள்,

"ஒப்பிலி யநாதி முத்த ஞேதிய வேத மாதிக்
கொப்புயர் வுரைப்போர் நிந்தை யுரைப்பவ ருன்னு வாரும்
வெப்பெரி நிரயம் வீழ்ந்துவெந் துருகி வீயார்
எப்பொழு தேறு வாமென் றிளைத்திளைத் தேங்கு வாரே."

என்று அறுமுக திருமலர் அகத்திய முனிவரர்க் கருளிச் செய்த பொருளையுடைய இத்திருப்பாட்டெழுந்ததூஉமென்க.

மாயூரத்திற் கூடிய "சைவசித்தாந்த மகாசமாசத்தில்" யாம் அக்கிராசனாதிபதியாக விருந்து பொருந்தா விஷயங்களைக் கண்டித்தபோது ஸ்ரீமான். செல்வச் சிரஞ்சீவி கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பன்னூற்றுக்கணக்கான அறிஞர் கேட்க எம்மைத் தாம் பிதாஸ்தானத்தில் வைத்திருப்பதாகவும், யாம் கண்டித்து உண்மையை நாட்டுதல் தமக்குச் சந்தோஷமே என்றும் சபையிற் கூறியது சத்தியமேயானால் இவ்விஷயத்திலும் உண்மை கடைப்பிடித்து மகிழ்மீக்கூர்ந்து தற்கால நிலைமைக்கேற்ப உண்டாகும் கோபத்தை அறவே நீக்கி உறவேகொண்டு வாழ்வாரென்பதொருதலை. ஒருகால் கோபமுண்டானாலும், "வாழ்வெனு மையல்விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பித்—தாழ்வெனுந் தன்மையோடுஞ் சைவமாஞ் சமயஞ் சாரும்—ஊழ் பெறலரிது" என்னுஞ் சித்தியாரைச் சிந்தித்துத் தெளியின் அது உடனே நீங்கும். நீங்கவே, மெய்ம்மையாள ரெனப்பட்டு நன்மையாளராவார். அதுநிற்க.

இனி, மூவகைநூலே யன்றி ஒருசார் ஆசிரியர் எதிர்நூலென வொன்று சேர்த்து நூல் நால்வகைப்படும் என்பர்.

"எதிர்நூலாவது":—முதனூலின் முடிந்தபொருளை ஒருவன் யாதானு மொருகாரணத்தாற் பிறழவைத்தால் அதனை உலகம் மெய்யெனக்கொண்டு மயங்காமைப்பொருட்டுக் கருவியாற் றிரிவுகாட்டி அவன்கோள் மறுத்து, முதனூற்பொருளையே தன்கோளாக நிறுவி ஒருவாமை வைத்தற்கு ஒள்ளியா னொருபுலவனால் உரைக்கப்படுவது." என்னை?

"தன்கோ ளிறீஇப் பிறன்கோண் மறுப்ப
தெதிர்நூ லென்ப வொருசா ரோரே."

என்பதோத்தாகலின்.

இவ்விதியை ஒருவாற்றா னொருவாது மேற்கொண்டு "திருநான்மறைவிளக்கவாராய்ச்சி" என்னுமிந்நூலை "எதிர்நூல்" என்று கூறுதலே பொருத்தமுடைத்தென்பது எமதபிப்பிராயம். என்னை? இதுவும், முதனூலையும் முன்னூலின் முடிந்த பொருளையும் அந்தணர்மீதுகொண்ட கோபத்தால் செல்வச் சிரஞ்சீவி ம-ா-ா-ஸ்ரீ கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள் பிறழவைத்தியற்றிய "திருநான்மறை விளக்கத்தை" உலகம் மெய்யெனக்கொண்டு மயங்காமைப்பொருட்டுக் கருவியாற் றிரிவு காட்டி அவர்கோண் மறுத்து முன்னூற்பொருளையே தங்கோளாக நிறுவி ஒள்ளிய புலவர்திலகராகிய ஸ்ரீலஸ்ரீ. திரு. மா. சாம்பசிவபிள்ளையவர்களாற் செவ்விதிற் செய்யப்பட்டதாகலான்,

இஃதென் சொல்லியவாறோ வெனின், இவ்வாராய்ச்சி நூல் "எதிர்நூல்" இலக்கணம் பெற்றிருத்தலின் இதனை நால்வகை நூலுளொன்றாகிய அந்நூலென வழங்கன் மரபென்றவாறும். அது நிற்க.

இனி, "திருநான்மறைவிளக்கம்" என்பது முற்றும் அப்பிரமாணவிடயமாகலான், அதன்கண் ஆராய்ச்சி அநாவசியகமென்று காலத்தைப் பொருளாகக் கருதும் மேதக்கோர் ஒருகால் எண்ணவுங் கூடும். அஃதவாறிவிற்குக் கண்ணியமேயாயினும், அவ் "விளக்கம்" அப்பிரமாணவிடயமென்பதை அறியு மறிவு தலைப்படாதாரெல்லாம் அதனை மெய்யெனக் கருதி வேதாகமங்களைப் புறக்கணித்து, இறைவனருள்பெறும் வழியைத் தெரிக்குநூல் வேறின்மையால் அவ் வழியுணரமாட்டாது அறன்கடைவழியிற் சென்று புருடார்த்த நான்கையும் அறவே இழந்து மக்கட்பிறப்பின் பயனெய்தா தழிதருவராகலான், "அரவின்குட்டி சிறிதாயினும் பெருங்கோல் கொண்டடித்தல்வேண்டும்" என்னும் பழமொழிப்படி, அப்பிரமாணவிடயமென் றதனைப் பராமுகப்படுத்தாது செப்பமாகிய "எதிர்நூல்" ஒன்றியற்றி அம்மக்கட் புரத்தன் மாண்பார்பேரறமேயாம்.

அதனைப் பண்டைத்தவத்தா னன்கிதி னுணர்ந்த பேரறிவாளராகலான் "ஆராய்ச்சி" ஆசிரியர் அவ்விளக்கத்தை அங்கிங்கசைய வொட்டாது முழுதும் பிரமாணசகிதம் மறுப்பதோர் "எதிர்நூல்" இயற்றிச் சைவமக்கட் கீந்துபகரித்தமை "செய்யாமற் செய்த வுதவி"யும், "காலத்தினாற் செய்த நன்றி"யும், "பயன்றூக்காது செய்த வுதவி"யு மாம் என்பதொருதலை.

எல்லாநூல்களும் எல்லாருக்கும் பயன்படுவனவன்று. பக்குவபேதம்பற்றி ஓரோவொன்றுஞ் சிலவும் ஒரொருவர்க்கும் சிலர்க்கும் பயன்படுவனவாம். இக்கருத்துப்பற்றியே சிவஞானசித்தியுடையாரும் மக்களை; சாமுசித்தர், வைனைகர், பிராகிருதர் என மூவகையினராகப் பிரித்துக்கொண்டு,

"பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்தி பண்ணும்
தொண்டரைத் தானே தூய கதியினிற் றுகுப்பன் மார்க்கர்
கண்டநூ லோதி வீடு காதலிப் பவர்கட் கீசன்
புண்டரி கத்தாள் சேரும் பரிசினைப் புகல லுற்றாம்."

என்றருளிச்செய்தார்.

மூவகை மக்களுள் முதற்கண்வைத்தெண்ணப்படும் சாமுசித்தராவார்:—கழிந்த பிறப்புக்களில் சரியை கிரியை முதலிய சாதனங்கள் நன்கனம் முற்றப்பெற்று, இப்பிறப்பில் பிரபஞ்சத்தை நோக்காது வீடுகாதலித்து அன்புமாத்திரையானே முதல்வனை வழிபடுவோர். அவர்க்கு நூல் கருவியாகச் செய்யப்படும் வழிபாடுகளெல்லாம் முன்னரே முற்றப் பெற்றபடியால் இப்போது நூல் வேண்டாம். முதல்வன்றானே பரகதியிற் சேர்ப்பன். கண்ணப்பர் முதலாயினார் சாமுசித்தர்.

இறுதிக்கண்வைத் தெண்ணப்படும் பிராகிருதராவார்:—காணப்படும் பிரபஞ்சமே யன்றி வேறுபொருளுண்டெனலறியாது அப்பிரபஞ்சவின்பத்தில் அழுந்தி நிற்கும்பேதையர். அவர் நூலறிவைக் கொடுப்பினுங் கொள்ளமாட்டார்; ஆகலான் அவர்க்கும் நூல் வேண்டாம்.

இடைக்கண்வைத் தெண்ணப்படும் வைநைகராவார்:—நித்தியாநித்தியவஸ்துவிவேகம் பிறத்தலால், அநித்தியப்பொருளாகிய பிரபஞ்சத்தைவிடுத்து நித்தியப் பொருளாகிய சிவத்தைத் தேடும் சற்கருமர். அவர், நூல், வழிகாட்ட அதன் வழிநடந்து சிவத்தைப் பெற முயல்வோராகலின், அவர்க்கு அத்தகையநூல் வேண்டும். அருணந்திசிவாசாரியர் முதலியோர் வைநைகர்.

இங்ஙனம் சிவஞானசித்தியுட் கூறப்படுதலால் மாந்தர்க்குத் தீமைகுறித்த நூல்கள் எழுந்தோறும், பக்குவர்க்கு நன்மை குறித்த எதிர்நூலும் அவ்வப்போழ்தெழுதல் போறமாதல் தெற்றெனவுணர்க.

எவராயினும் வேதாகம மார்க்கத்தை மறுத்துத் தமது கொள்கையை நிறுத்த வந்தால் அவரவலக் கொள்கையை மறுத்து வேதாகம நெறியை நிறுத்த வல்லவர் அது செய்யாராயின், பெருங் குற்றம் என்பது,

"நிறுத்திடவ லானமல னாறெறியை யென்றும்
மறுத்திடவ லானவல மார்க்கமய லுற்றே
நிறுத்திலன் மறுத்திலனெனிற்கரிச னேசம்
அறுத்தவனை மாகைகரி சல்லவற மாமே."

என்னுஞ் சிவதருமோத்தரச் செய்யுளானறிக.

"நிகராறுநற் சிவதரும சிவஞானத்தை
நிறுத்திடுவோ னிலுமுயர்ந்தோ னிலத்தி னில்லை
பகர்பரம சிவயோகி யவனே யாகும்
பரிவினிறுத் திடுமாற்றல் படைத்து முய்தி

அகனுமய லானிறுத்தர் தொழிந்தோன் யோகி
 யாயினுமீ சுரப்பிரிய னல்ல னன்னுன்
புகருறுதீ நரகினிடை வீழ்ந்து புன்கண்
 பொருந்திடுவ னெனமறைகள் புகலு மன்றே."

என்னும் அபியுக்தராகிய ஆன்றோர் செய்யுளும் ஈண்டே சிந்திக்கற்பாலது.

சிவதருமம் :— "மறைக ணிந்தனை சைவ நிந்தனை பொறு மனமும்" என்று திருநந்திதேவர் வேண்டியவண்ணம் வேதாகம தூடணங்கேட்டுச்சகியாது தூடணஞ் செய்தோரைக் கண்டித்தல், ஞானதானம், திருக்கோயில் கட்டுதல், புதுக்கல் என்றற் றொடக்கத்தன.

சிவஞானம்—சிவாகமம். அதனை நிறுத்தல் :— இருதிறப் படும். ஒன்று அதிற் கூறப்படும் பதிபசுபாசம் என்னு மூப் பொருளையுந் தாபித்தல். மற்றொன்று அவற்றை நிறுத்துதற்கு அவற்றைத் தெரிக்கு நூலில்வழி அது செய்யவியலாதாகலான், அவ்வாகமத்தைப் பல்லாற்றானும் பாதுகாத்தல். சிவஞானம் சிவாகம மென்பது :— "உயர்ஞான மிரண்டா மாறு மலமகல வகலாத மன்னு போதத்—திருவருளொன் றென்றதனைத் தெளிய வோதுஞ் சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே" என்னுஞ்சிவப்பிரகாசத் திருவிருத்தத்தானறிக.

"அறமொழி விரும்பிக் கேளா தறமலா தறையுந் தீய— மறமொழி விரும்பிக் கேட்கும்" "இப்பெருங் கொடிய பாவ விருங்கலி"யில் தினைத்துணைச் சிவபுண்ணியம் பனைத்துணைப் பயன்றரு மென்பது,

"ஆன்றநற் சனக னாதி நால்வரு மான்மு கத்தை
 மூன்றரைக் கோடி கற்ப நோக்கிப்பின் முத்த ரானர்
 தோன்றிநின் றழியு மிந்தத் தொடுகடற் புவியி னுள்ளார்
 ஊன்றியோர் கணம தேனு நோக்குறி னுறுவர் முத்தி."

என்னும் வள்ளலார் சாத்திரத்தானறியக் கிடத்தலின், திருநான்மறைவிளக்க வாராய்ச்சி" என்னும் எதிர்நூலியற்றுத லாகிய பனைத்துணைப்புண்ணியம் மலைத்துணைப் பயனை ஆக்கி யோருக்களிக்கு மென்க.

இத்துணை விசிட்ட எதிர்நூல் இதுகாறும் யாருஞ் செய் திலர். அதற்குக் காரணம் இத்துணை அப்பிரமாணநூல் இது காறும் எழாமையே. விளக்கத்திலுள்ள அப்பிரமாணமாகிய போலிக்கொள்கைகளை ஒவ்வொன்றாக அநுவதித்துக் காட்டி,

அவ்வவற்றின் போலித்தன்மை இஃதிஃதென்று விளங்க விரித்துக்காட்டிக் காண்டல் கருதலுரை என்னு மூன்றுபிரமாணங் கட்கு மொவ்வாமையைத் தேற்றிப் பன்னூற் பிரமாணங்களால் "விளக்க"முடையாரதக் கோள்களை மறுத்துத் தமது கோளை நாட்டியிருக்கும் மதுகை எத்திறத்தறிஞரு மெச்சு மியல்பிற்று.

அவ்விளக்கத்தை ஒருகூறு இருகூறு முக்கூறு நாற்கூறு படுத்திவிடல் ஆசிரியர் தமக்கு இலகு. அங்ஙனமாகவும் விளக்கத்தை எடுத்துப் பார்ப்போர் புரட்டிப்பார்த்தெறிதற்கு மிக இலகுவினு மிலகுவாக அறுபத்தொரு கூறு செய்து, செய்தவற்றை நூன் முகப்பிற் றலங்கவைத்திருத்தல் நூலினுள் மிக விரித்திருக்கும் விஷயங்களை முன்னரே இலகுவாகத் தெரிக்கும் பாயிரம் வைத்திருத்தலைப் போன்றிருக்கும் அழகு பாராட்டற் பாலது.

"விளக்க" முடையார் எந்தெந்த நூலிலிருந்து தமது கொள்கைக்குப் பிரமாணங் காட்டினாரோ! அந்தந்தப் பிரமாணம் அவர் கொள்கையைச்சாதிக்கு மாற்றலின்றித் தமது கொள்கையைச்சாதிக்கும் ஆற்றன் மிகுதிப்பாட்டை "ஆராய்ச்சி" நூலாசிரியர், அழகுபெற விளக்கிக் காட்டிய புத்தி நுட்பம் புலவர் போற்றற் பாலது.

"ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுண்டோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்."

என்று கூறுவார் கூறுக.

திருநான் மறைவிளக்க வாராய்ச்சி தேரின்
பெருநா ணிலத்துப் பிறங்கு—மிருடீர்
பகலவன்போ லுள்ளிருளைப் பாற்றலாம் பாரோர்
சகலகலா வல்லுநராய்த் தாம்.

என்றிதனையேயாம் மிகுத்துக் கூறுநிற்பேம். என்னை? திருக்குறள் ஒருவர் வாக்காய் ஒருநூலாயிருத்தலானும், இது சங்கப்புலவர் அற்புதஞ் செய்து சைவசமயஸ்தாபனஞ் செய்த அருளாளர் வாக்காயவனேகநூல் குழுமப் பெற்றிருத்தலானும், அது, சென்னைச் "சைவநூற்பதிப்புக் கழகத்தா"ரால் "ஆய்யன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்" என்னும் பாட்டு "ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்" என்று வழுவுறத் திருத்தப்பட்டிருத்தலானும், இது அவ்வாறு தன்னகத்துச் செய்யுள் திருத்தப்படமாட்டா தாகலானும், அஃதறிந்தோர்

ஒருநூலறிந்தவராவா ராகலானும், இஃதறிந்தோர் பன்னூலறிந் தோராவராகலானும், அஃதறிந்தோர் பொதுவறிவுறுவராக லானும், இஃதறிந்தோர் சிறப்பறிவுறுவராகலானும், அஃதறிந் தோர் மும்மூர்த்திகளையறிவ ராகலானும் இஃதறிந்தோர் மும் மூர்த்திகளையும் "மூவர்கோனாய் நின்ற முதல்வனையுஞ்" சேர்த்து நான்கு மூர்த்திகளை யறிவராகலானும், அஃது ஆசிரி யர்மூல மரிதினுணரற் பால தாகலானும், இஃது ஆசிரியரின்றி எளிதினுணரற்பால தாகலானும், இன்னோரன்ன பிறவற்றானு மென்க.

"அறிதொழிலோர்" என்பது எழுத்துப்பிழை யென்ப ரேல் "திருநான்மறை விளக்கத்தைக்" கொண்டு அன்றென நன்று மறுப்பேம். பாடபேதம் என்பாராயின், அப்போது யாம் கூட்டும் வித்துவசபையில் அப்பாடத்தையுடைய பழைய ஏட்டுப் பிரதியைக் கொணர்ந்து காட்டி உண்மையை நாட்டல் வேண்டும். அதுமட்டோ; அக்குறளுக்கு முன்னும் பின்னு முள்ள அதிகாரங்களோடும் செய்யுட்களோடும் முரணுமற் சிறப்புறு பொருள் செய்துங்காட்டல்வேண்டும். கரலிகிதவ மூஉப்பாடங் காணப்படின், அதன்பொருள் விளங்காதபோது பாடபேதமாகப் பதிப்பித்தன் மாத்திரையே சால்புடைத்து. அஃதன்றி அறிவானுன்ற பெரியார் முன்பின் விரோதமறப் பொருடரும் பாடம் இஃதென் றறிந்து மேற்கொண்டு உரையும் பொருத்தமுறக்கண்ட அப்பாடத்தை நீக்கிப் பொருத்தமில் பாடத்தை மேற் கோடல்,

"குலந்தவங் கல்வி குடிமைமூப் பைந்தும்
விலங்காம லெய்தியக் கண்ணும்—நலஞ்சான்ற
மையறு தொல்சீ ருலக மறியாமை
நெய்யிலாப் பாற்சோற்றி னேர்."

என்னு நாலடிக் கிலக்காக்கிவிடும்.

உலகம்—உயர்ந்தோர். என்னை? "உலகமென்ப துயர்ந் தோர் மாட்டே" என்ப; ஆகலான். ஈண்டுக் கருத்தாவாகு பெயராய் அவர் ஒழுகலாற்றை உணர்த்தி நின்றது.

"அறிதொழிலோர்" என்னும் பாடத்திற்கு முன்னதிகா ரம் பின்னதி காரங்கட்கும் முற்செய்யுள் பிற் செய்யுள்கட்கும் முரணுமல் பொருள் கூறற்கு ஒருமுகனுய்வந்து திருக்குறள் செய்தருளிப் பின்மறைந்து நான்முகனுய பிரமா மீட்டு ஐமுக னுய் வரினு முடியாது.

ஆகலாற் கழகத்தார் சைவசமயநூல்களை மனம் போன வாறு திருத்தி நூல்வரம் பழித்து அதன்சொருபத்தைக் கெடுத்து மெய்ப் பொருள் தோன்றுதவாறு செய்து சைவர் கட்கு ஏதஞ் செய்யாமல், பழையவித்துவான்கள் எல்லாவற்று லும் பொருத்தமுறு பொருளுடைய பாடத்தை அறிந்து கர லிகித வழூஉக் களைந்து நூல்களை அச்சிட்டதுபோல, அச்சிடல் வேண்டும் என்பதைச்சம்பந்த நேர்ந்தவழித் தெரித்தாம். அத னல் எமது கடபாட்டை யாம் குறிக்கொண்டு செய்தே மாயி னேம்; எமக்கொரு குறையு மின்று. அவர் அதுசெய்யாராயின் குற்றத்துட்பட்டுத் துன்பமுறுவர். அதுநிற்க.

மற்றுத் திருக்குறள் அதிகாரங்கள் தனித்தனி படிக்கப் படும் போது அது அது சிறந்ததாகத் தோன்றுமாறுபோல, ஆராய்ச்சி எதிர்நூலின்கணுள்ள அறுபத்தொரு பகுதிகளும் தனித்தனி படிக்கும்போது அது அது சிறந்ததாகத் தொன்றும் மாட்சி அத்தியற்புதமாயிருக்கின்றது.

ஆயினும் ஐம்பத்தொன்பதாம் பகுதியில் "மறை, நான் மறை, அந்தணர், பார்ப்பார் என்னுஞ் சொற்களின் வழக்கைப் பின்னுமோர் முறையிற் சிறப்புவகையாய் ஆராய்ந்து சித்தாந் தஞ்செய்வாம்." என்றுகூறப்பட்டிருத்தலைக் கண்டு அதன்கண் வேணவாக்கொண்டு அதனை நாமுஞ் சிறப்புவகையா னேக்க வேண்டு மென்று கருதி அவ்வாறே நோக்கினேம். அவ்வழிச், "சிறப்புவகையாய் ஆராய்ந்து" என்பது மிக்கபிழையெனச் சித்தாந்தஞ் செய்தேம். என்னை? அவை சிறப்பினும் அதி சிறப்பாய் ஆராய்ந்திருத்தலா னென்க.

ஆதலால் அப்பகுதியைப் பன்முறை பார்வையிட்டு உன்னரு மகிழ்ச்சிமீக் கூர்ந்து ஆசிரியரது "நுண்மாணுழை புல" நோக்கி எண்மாண்ட விறும்பூ தெய்தினேம்.

இந்தப் பகுதியை எம்மைப் போலவே யாவரும் பன் முறை பார்த்து உண்மையோர்ந்து ஆசிரியர் வன்மை தேர்ந்து, "யான்பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம்" என்று திருமூல நாயனர் திருவாய் மலர்ந்தருளியதுபோல யாம் பெற்ற வின்பம் பெறுமாறு விரும்புகின்றேம்.

முக்கியமாகிய அறுபத்தொரு பகுதிகளும் நியாய வாயி லாக மறுக்கப்படவே, அமுக்கியமென்று ஒதுக்கிவிடப்பட்டன வும் மறுக்கப்பட்டமை தானே போதரு மென்றுணர்க.

சத்துக் கொளுஞ்சைவ சித்தாந்த சாத்திரச் சார்பிலதாய்ப்
பித்துக் கொளுத்திப் பிரியா நிரயப் பிணியுதவிச்
சித்துக் கெடுத்துத் திரிக்குந் திருநான் மறைவிளக்கஞ்
செத்துக் கிடக்குது சாம்ப சிவநேசன் றெம்முனைக்கே.

"தழங்குரான் முரசிற் சாற்றித் தத்துவந் தழுவல் வேண்டிச்
செழுங்களி யாளர் முன்ன ரிருளறச் செப்பி னாலும்
முழங்கழ னரகின் மூழ்கு முயற்சிய ராகி நின்ற
கொழுங்களி யுணர்வி னாரைக் குணவதங் கொளுத்த லாமோ."

சைவசித்தாந்தசாத்திர வுண்மைப் பொரு ளறியாத பேதை மக்கட்குப் பெருங்கேடு விளைக்குந் "திருநான்மறைவிளக்கத்"தைப் பாற்றிச் சிறந்த நன்மை விளைக்குந் "திருநான்மறை விளக்கவாராய்ச்சி" என்னும் சீரிய "எதிர்நூல்" இயற்றி உபகரித்த வள்ளலாகிய சிவஞானச் செல்வர் ஸ்ரீலஸ்ரீ சாம்பசிவ நேசரவர்கள் செய்த நன்றியை மறவாது "எழுமை எழுபிறப்பு முள்ளுவர் தங்கண்—விழுமந் துடைத்தவர் நட்பு" என்ற வண்ணம் அவர்கள் நட்பை என்றும் உள்ளி, அவர்கட்குப் பூரணசுகவாழ்வும், பூரணவாயுளும் கொடுத்து மீட்டும் மீட்டும் வீட்டிற் கேதுவாய நூல்களைச் செய்து வஞ்சக நூலாற் கெடுவார் கெடாமல் அவர்க்குய்தி பயக்குமாறு அளவில் கிருபை யுளமகிழ்ந் தருளும் வண்ணம் "தேவதேவன் மாதேவன் சிறப்புடை யீசனெங்கோன்—மூவரின் முதல்வ னென்று" முதுமறை முழங்கும் ஒண்ணுதல் பாகக் கண்ணுதற் பரசிவன் கழலடியிணைமலர் நெஞ்சகப் போதினிறுவி வேண்டுதும். சுபம்.

இந்நூ லிருப திருப திருபத்தொன்
றென்னும் பகுதி யிவையுணர்ந்த—பின்னரெங்குங்
கல்லாத நூலில்லை கற்றவர்க்குஞ் சொல்வரெல்லாம்
பல்லாரு மேத்தப் பணிந்து.

இனி இத்தகைய பெருமை வாய்ந்த பன்னூற்களஞ்சியமாகிய "திருநான்மறைவிளக்கவாராய்ச்சி" என்னு மிவ் "வெதிர்நூலை" வெளிப்படுத்தினவர் இயற்றிய ஆசிரியரவர்களோ! அச்சிடுவித்து முடித்த S. I. Ry. ஜனரல் டிராபிக் மானேஜர் ஆபீசு ஹெட் கிளர்க்கு ஸ்ரீமாந். A. குழந்தைவேலுப் பிள்ளையவர்களோ! என்னும் ஐயப்பாட்டின்கண் எமது அபிப்பிராயம் இஃதெனத் தெரிக்கின்றாம்.

ஆசிரியரவர்கள், சிவபெரு மானால் "நீரோ பெரிய சிறுத் தொண்ட"ரெனத் திருவாய்மலர்ந்தருளப் பெற்ற சிறுத் தொண்ட நாயனாரைப்போல யாவர்க்குந் தம்மைச் சிறியாராகக்

காட்டி ஒழுகும் ஒழுகலாறுடையராயினும், ஆக்கையானும், ஆயுளானும், அறிவானும், அனேகநூலாராய்ச்சியானும், அனேக "எதிர்நூல்கள்" ஆக்கலானும், இன்னோரன்னபிறவற்றானும் பெரியராய்க் கோலூன்றுபருவக் கோலத்தராயினமையின், தாமியற்றிய நூலை அச்சிடுவித்தற் பொருட்டு அச்சியந்திரசாலைக்குப் போக்குவரவு செய்யத் தமக்கியலாத நிலைமையையுற்றுநோக்கித், தமக்கதிப்பிரிய நண்பராகிய ஸ்ரீமாந். A. குழந்தைவேலுப்பிள்ளையவர்களிடம் அவ்வேலையை ஒப்பித்துவிட்டார்கள்.

அப்பிள்ளையவர்களும் சிவபத்தி, சிவனடியார்பத்தி, சிவாலயவழிபாடு, விபூதி உருத்திராக்க விசுவாசம், அறிஞர்மாட்டன்பு, பொதுநலப்பிரியம், உற்றவிடத்துதவல் முதலிய நலப்பாட்டிற் சிறந்தவர்களாகலான், இது தமக்கு வாய்ப்புடைத்தாயதோர் சிவபுண்ணிய கைங்கரியமெனக் கருதி அதற்குடன்பட்டுத் தமது இல்லத்து வேலைகளையும் பராமுகப்படுத்தி ஒன்பது திங்கள் ஓயாது யந்திரசாலைக்கு போதல், வருதல் புறூப் (proof) பார்த்தல் முதலிய பல வேலைகளையுஞ் செய்து அச்சிடுவித்துப் பூர்த்தி பண்ணினார்கள்.

நிகழ்ந்தவண்ணம் இவ்வண்ணமாகலான், இதனை வெளிப்படுத்தினார் இவ்விருவருள் இன்னாரென்று துணிந்து யாம் எவ்வண்ண மியம்புவேம், என்னை?

இவர்கள் வெளிப்படுத்தா தொழிந்தால் ஆசிரியரவர்கள் அச்சிட்டு வெளிப்படுத்த லின்று. ஆசிரியரவர்கள் நூல் செய்யாவிடின் இவர்கள் அச்சிட்டு வெளிப்படுத்துதலுமின்றாகலான்.

"வெவ்விசை யப்படை வீட்டிடும் வாளிச்
செவ்விசை தேர்விசை நாடினர் செவ்வேள்
கைவிசை யோநெடுங் கால்விசை தானோ
எவ்விசை யோவிசை யென்றனர் வானோர்."

சுப்பிரமணியக்கடவுள் சூரபன்மனோடு செய்த யுத்தத்திலே அவனது படையை வீட்டச் செலுத்திய பாணவேகத்தையும், வாயுதேவன் செலுத்திய தேர்வேகத்தையும் தேவர்கள் பார்த்து அக்கடவுள் கரவேகமோ! வாயுவின்கைவேகமோ! மிக்கதென்று சொல்லமுடியாமல் நின்றாற் போலவும்,

" தார்கெழுவு வேற்படை தடக்கையுடை யோனும்
சூரனுமி வாறமரி யற்று தொழில்காணு
வீரமட மாதுளம் வியந்திவர் தமக்குள்
ஆரிடை நடத்துமென வையமொடு நின்றாள்."

வீரலக்குமி சுப்பிரமணியக்கடவுளும் சூரபன்மனும் போர்த்தொழில் புரியும் விசேட சமத்துவ வேக மதுகையைப் பார்த்து இவ்விருவருள் யாரிடத்து யாம் செல்லுவே மென்று ஐயமுற்று நின்றாற் போலவும், யாமும் இவ்விருவர் தம்முள் இன்னார் வெளிப்படுத்தினரென்று சொல்ல முடியாமையான் ஐயமுற்று,

"பாத்தினு மேதகு பண்ணவன் வார்விற்
காத்தினை யும்விரை வாற்கரந் தூண்டும்
சாத்தினை யுந்தடந் தேரினை யுங்கால்
உரத்தினை யும்புகழ் வார்புடை யுள்ளோர்."

சுப்பிரமணியக்கடவுள் மருங்கு நின்ற தேவர் முதலாயினோர் அவர் கரவேகத்தையும், சரவேகத்தையும், வாயுதேவன் தூண்டும் தேர்வேகத்தையும், மனோவேகத்தினும் விரைவாக வத்தேரைத் தூண்டும் அவன் கரவேகத்தையும் நோக்கி இன்னதினும் இன்னது மிக்க வேகத்ததென அறியமாட்டாதவர்களாய் அவற்றை ஒருங்கே புகழ்ந்தாற் போல,

கலிவலிமிக்க விக்காலத்திலே இவர்களைப்போல மற்றெவர்களும் சைவசமயாபிமானத்தாலும், சிவபத்தியாலும், நிலையிற் பிரியாமையாலும், உண்மை நிலைமையாலும் மேம்பட்டு இன்னோரன்ன பயன்படு நன்முயற்சிகளைச் செய்யமாட்டார்களென்று இருவரையும் ஒருங்கே புகழ்கின்றாம்.

இத்தகைய சிவபுண்ணிய கைங்கரியத்தின் மேம்பட்ட உத்தம புருஷர்கள் இருவரும் "இருதலைப்புள்ளி னோருயிர் போல," அரோக திடகாத்திரர்களாய்ப் பூரணாயுளுடன் எக்குறையுமின்றி இன்பப் பெருவாழ் வெய்தி இன்னு மின்னும் நன்னர் "எதிர்நூல்" பல ஒருவரியற்றிடவும், ஒருவர் அவற்றை அச்சுவாகனமேற்றவும், அதனால் யாவரும் ஆன்மலாபமடையவும் பெருங் கருணை பாலிக்குமாறு அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவ சங்கர நாமத் தனிமுதல்வன் திருவடிக்கமல மெமதொரு முடிக்கமலமாகக் கொண்டு முப்போதும் முக்கரணங்களானும் மூவித வழிபாடுஞ் செய்கின்றாம்.

சீர்பூத்த கருவிநூ லுணர்ச்சி தேங்கச்
சிவம்பூத்த நிகமாக மங்க ளோங்கப்
பார்பூத்த புறச்சமய விருள்க ணீங்கப்
பரம்பூத்த சைவநிலை பாரோர் தாங்கப்
பேர்பூத்த சடைமவுலிப் பிரானார் செய்ய
பிறங்கொளிமேசர் நலங்குலவு கமலம் போலும்
வார்பூத்த கழலடியை மனத்து நிறீஇ
மறவாம லனுதினமு மதித்து வாழ்வாம்.

சமயகுரவர் சந்தானகுரவர் திருவடிகளே சரணம்.

இங்ஙனம்,

அக்ஷய௵
ஆவணிமீ உ௯௨ }

சுவாமிநாதபண்டிதர்.

---

நூல் ஆக்கியோன் குறிப்பு:— மேலே அச்சிடப்பட்டிருக்கின்ற அபிப்பிராயங்கள் எமக்குக் கிடைத்த காலக்கிரமத்தானே வைக்கப்பட்டு அச்சிடப்பட்டன.

எமது வேண்டுகோட்கிணங்கி அவரவர்கட்குரிய அரிய பெரிய இன்றியமையா வேலைகளுடன் சைவவுலகு உண்மையைக் கைக்கொள்ளு நிமித்தம் அபிப்பிராயம் எழுதி உபகரித்த வித்துவப் பெரியார்கட்குத் திரிகரணசுத்தியோடு வந்தனஞ் சமர்ப்பிக்கின்றோம்.

விசேடக்குறிப்பு:—மேற்காட்டிய பெருமக்கள் அபிப்பிராயங்களில் புழுத்த நாயினுங்கடையனாகிய அடியேனைப் பலவாறு பெருமைப்படுத்தி யெழுதியிருக்கின்றார்கள். அது வேண்டாவெனப் பன்முறைபிரார்த்தித்துக் கேட்டுக்கொள்ளவும் அவர்கள் உடன்படாததனால், அவர்கள் ஆணையை மறுக்க அஞ்சி அவர்கள் எழுதியவாறே அச்சிடப்பட்டன. பெரியோர்கள் பொறுத்தருளுவாராக,

திரு. மா. சா.

சிவமயம்.

# இவ்வாராய்ச்சி அச்சிடுதற்கு முத்திறக்கோடையுள் முதற்கோடையாகப் பொருள் உபகரித்த சைவாபிமானப் பெரியார்கள் பெயருந் தொகையும்.

## முத்திறக்கோடை — (கந்த புராணம்)

"என்னுனு மொருதவி யாதொருவன் யார்க்கெனினுந்
தன்னுன் முடிவதெனிற் றானே முடித்தறலை
சொன்னுன் முடித்த லிடையாகுஞ் சொல்லுகினும்
பன்னுன் மறுத்துப் புரிதல்கடைப் பான்மையதே"

---

| | | |
|---|---|---|
| 1 | அம்பாசமுத்திரம் திருவாளர். V. P. காந்திமதிநாதபிள்ளையவர்கள் B.A. | ரூ. 12—0—0 |
| 2 | திருச்சி, திருவாளர். M. A. சந்திரசேகரபிள்ளையவர்கள் | ரூ. 10—0—0 |
| 3 | யாழ்ப்பாணம், விக்டோரியாக்காலேஜ் பிரின்ஸ்பல் திருவாளர். சிவபாதசுந்தரப்பிள்ளையவர்கள் | ரூ. 15—0—0 |
| 4 | யாழ்ப்பாணம், அட்வோகேட்டு திருவாளர். அருளம்பலம் அவர்கள் | ரூ. 15—0—0 |
| 5 | ஸ்ரீலஸ்ரீ. சுவாமிநாதபண்டிதரவர்கள் | ரூ. 50—0—0 |
| 6 | யாழ்ப்பாணம், பிரமஸ்ரீ. சபாபதிக்குருக்களவர்கள் | ரூ. 15—0—0 |
| 7 | உடையூர், திருவாளர். ஸ்ரீநிவாசபிள்ளை அவர்கள் | ரூ. 10—0—0 |
| 8 | மயிலாப்பூர், திருவாளர். C. V. ஜெம்புலிங்கப்பிள்ளை அவர்கள் | ரூ. 5—0—0 |
| 9 | திருச்சி, திருவாளர். N. P. கல்யாணசுந்தரமுதலியார் அவர்கள் B.A., B.L | ரூ. 5—0—0 |
| 10 | திருச்சி, திருவாளர். A. குழந்தைவேலுப்பிள்ளை அவர்கள் | ரூ. 5—0—0 |
| 11 | உத்தமபாளையம், சிவராமமங்கையர்க்கரசியம்மாள் | ரூ. 100—0—0 |

சிவமயம்.

# இவ்வாராய்ச்சி அச்சிடுதற்கு முத்திறக்கோடையுள் முதற்கோடையாகப் பொருள் உபகரித்த சைவாபிமானப் பெரியார்கள் பெயருந் தொகையும்.

## முத்திறக்கோடை — (கந்த புராணம்)

"என்னானு மோருதவி யாதொருவன் யார்க்கெனினுந்
தன்னான் முடிவதெனிற் றானே முடித்தறலை
சொன்னான் முடித்த லிடையாகுஞ் சொல்லுகினும்
பன்னான் மறுத்துப் புரிதல்கடைப் பான்மையதே"

---

| | | |
|---|---|---|
| 1 | அம்பாசமுத்திரம் திருவாளர். V. P. காந்திமதிநாதபிள்ளையவர்கள் B.A. | ரூ. 12—0—0 |
| 2 | திருச்சி, திருவாளர். M. A. சந்திரசேகர பிள்ளையவர்கள் | ரூ. 10—0—0 |
| 3 | யாழ்ப்பாணம், விக்டோரியாக்காலேஜ் பிரின்ஸ்பல் திருவாளர். சிவபாதசுந்தரப் பிள்ளையவர்கள் | ரூ. 15—0—0 |
| 4 | யாழ்ப்பாணம், அட்வோகேட்டு திருவாளர். அருளம்பலம் அவர்கள் | ரூ. 15—0—0 |
| 5 | ஸ்ரீலஸ்ரீ. சுவாமிநாதபண்டிதரவர்கள் | ரூ. 50—0—0 |
| 6 | யாழ்ப்பாணம், பிரமஸ்ரீ. சபாபதிக்குருக்களவர்கள் | ரூ. 15—0—0 |
| 7 | உடையூர், திருவாளர். ஸ்ரீநிவாசபிள்ளை அவர்கள் | ரூ. 10—0—0 |
| 8 | மயிலாப்பூர், திருவாளர். C. V. ஜெம்புலிங்கப் பிள்ளை அவர்கள் | ரூ. 5—0—0 |
| 9 | திருச்சி, திருவாளர். N. P. கல்யாணசுந்தர முதலியார் அவர்கள் B.A., B.L | ரூ. 5—0—0 |
| 10 | திருச்சி, திருவாளர். A. குழந்தைவேலுப் பிள்ளை அவர்கள் | ரூ. 5—0—0 |
| 11 | உத்தமபாளையம், சிவராமமங்கையர்க்கரசியம்மாள் | ரூ. 100—0—0 |

சிவமயம்.

# பொருள் அட்டவணை.



[குறிப்பு:-கா. சு. எனவெழுதி யிருப்பதைத் திருவாளர், கா. சுப்பிர மணிய பிள்ளையவர்களென்று வாசிக்க வேண்டும்.]

---

சிவமயம்.

# பொருள் அட்டவணை.



[குறிப்பு:-கா. சு. எனவெழுதி யிருப்பதைத் திருவாளர், கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களென்று வாசிக்க வேண்டும்.]

---

| பகுதி. | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| 24 | ஆறு அங்கங்களும் தமிழிலேயே ஆதியில் உண்டாயின வென்னும் கா. சு. கொள்கையும் மறுப்பும் | 63 |
| 25 | தமிழ் மறையென்ற சொல்லின் பொருள் கா. சு. கொள்கைப்படி யின்னதென்பதும் மறுப்பும் | 64 |
| 26 | தொல்காப்பியச் சூத்திரப்படி மறை யென்ற தமிழ் நூல்கள் திகழ்ந்தனவெனும் கா. சு. கொள்கையும் மறுப்பும் | 68 |
| 27 | தொல்காப்பியப் பாயிரத்திற் காணப்படும் 'நான்மறை' வடமொழி நான்மறையன்றென்பதும், அது தமிழ் நான்மறையே யென்பதுமாகிய கா. சு. கொள்கையும் ஆராய்ச்சியும் மறுப்பும் | 71 |
| 28 | தொல்காப்பிய உரையிற் காணப்படும் ஒரு செய்யுள் தமிழ் நான்மறையையே சுட்டுகின்றதென்னும் கா. சு. கொள்கையும் மறுப்பும் | 77 |
| 29 | இறைவன்பால் வேதப்பொருள் கேட்ட நால்வர் பெயர்களைத் தேவாரத்திற் கூறாமைக்கு, கா. சு. கூறும் காரணமும் மறுப்பும் | 77 |
| 30 | தொல்காப்பியச் சூத்திரமொன்றில் 'அந்தணர் மறைத்தே' என்றது தமிழ் முனிவர் செய்த நான்மறையையே குறிக்குமென்னும் கா. சு. கொள்கையும் மறுப்பும் | 81 |
| 31 | "மறையோர் தேஎத்துமன்றலெட்டனுள்" என்பதிற் காணும் மறை யென்னுஞ் சொல் தமிழ்மறையைக் குறித்ததென்னும் கா. சு. கொள்கையும் மறுப்பும் | 83 |
| 32 | தமிழ்மறை நான்கும் தென்றமிழ் நாட்டைக் கடல் கொள்வதற்கு முற்காலத்தே நிலவின வென்னும் கா. சு. கொள்கையும் மறுப்பும் | 92 |
| 33 | அந்தணர், பார்ப்பார் என்ற சொற்கள் தமிழருட்சிலரையே குறிக்குமென்னும் கா. சு. கொள்கையும், அதற்குப் புறநானூற்றிலிருந்து காட்டும் பிரமாணங்களும், அவற்றின் ஆராய்ச்சியும் முடிபும் | 94 |
| 34 | தேவார ஆசிரியர் ஆலநிழற்கீழ் இறைவன் அருளிய மறை யென்ற விடங்களிலெல்லாம் தமிழ்மறை யென்றே பொருள் கொள்ளற்பால வெனும் கா. சு. கொள்கையும் மறுப்பும் | 103 |
| 35 | வேள்வி, அந்தணர், பார்ப்பார் என்ற மொழிகட்கு கா. சு. கொண்ட பொருளும் அதற்கு மேற்கோள்களாக அவர் காட்டும், கலித்தொகை, திருக்குறள், ஆதிய நூல்களின் மேற்கோள்களும் அவற்றின் ஆராய்ச்சியும் முடிபும் | 105 |
| 36 | ஆரிய வேதமே சிறந்ததென்று நாட்டிய பிராமணரைக் கோபப்பிரசாத மியற்றிய நக்கீரர் கடிந்து மொழிந்ததாக கா. சு. கூறுவதும் மறுப்பும் | 131 |

முற்றிற்று.

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் றிருவடிவாழ்க.

உ

சிவமயம்.

# ஆராய்ச்சி இலக்கம் VII

அஃதாவது

திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்

எழுதிய

## திருநான்மறை விளக்கம்

என்னும் விடயத்தை

### ஆராயும் ஆராய்ச்சி

இதன்கண் எடுத்துக்கொள்ளப்பட்டது.

---

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் யம். ஏ. யம். யல்., அட்வோகேட்டு, திருநான்மறை விளக்கமெனவொரு விடயமெழுதியுள்ளார். அது சென்னையிற் பிரசுரமாகிவருகின்ற "செந்தமிழ்ச் செல்வி" யென்னும் மாதாந்தப் பத்திரிகையின் முதலாவது சிலம்பின், ௨௦ முதல் ௨௫ம் பக்கம் வரையினும், ௫௨ முதல் ௫௬ வரையினும், ௮௩ முதல் ௮௭ வரையினும், ௧௧௧ முதல் ௧௧௬ வரையினும், ௧௫௬ முதல் ௧௫௯ வரையினும், ௧௮௧ முதல் ௧௮௭ வரையினும், ௨௧௫ முதல் ௨௨௫ வரையினும், ௨௫௩ முதல் ௨௫௭ வரையினும் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றது.

௨. பல்லாவரம் சுவாமி வேதாசலம் அவர்கள், திருவாசகத்தில் போற்றித் திருவகவலுக்கு எழுதிய விரிவுரையில் "மூவா நான்மறை முதல்வா போற்றி" யென்னும் ௯௪-ம் அடியிலுள்ள மூவா நான்மறை யென்ற சொற்றொடர், தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், திருக்குறள், தேவாரம், சிவஞானபோதம், என்னும் நூல்களைக் குறிக்குமென்றும், வடமொழி நான்கு வேதங்களைக் குறிக்காதென்றும் எழுதினார்கள். அவ்வாறுகொண்ட பொருள் பொருத்தமிலதெனத் தக்க பிரமாணங்களுடன், "திருவாசகம் போற்றித்திருவகவலிற் காணப்படும் மூவா நான்மறை யென்னுஞ் சொற்றொடரின் பொருளாராய்ச்சி" யென்னும் பெயரால் ஒரு விடய மெழுதிச்

உ

சிவமயம்.

# ஆராய்ச்சி இலக்கம் VII

அஃதாவது

## திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்

எழுதிய

## திருநான்மறை விளக்கம்

என்னும் விடயத்தை

## ஆராயும் ஆராய்ச்சி

இதன்கண் எடுத்துக்கொள்ளப்பட்டது.

---

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் யம். ஏ. யம். யல்., அட்வோகேட்டு, திருநான்மறை விளக்கமெனவொரு விடயமெழுதியுள்ளார். அது சென்னையிற் பிரசுரமாகிவருகின்ற "செந்தமிழ்ச் செல்வி" யென்னும் மாதாந்தப் பத்திரிகையின் முதலாவது சிலம்பின், ௨0 முதல் ௨௫ம் பக்கம் வரையினும், ௫௨ முதல் ௫௬ வரையினும், அ௩ முதல் அஎ வரையினும், ௧௧௧ முதல் ௧௧௬ வரையினும், ௧௫௬ முதல் ௧௫௯ வரையினும், ௧அ௧ முதல் ௧அஎ வரையினும், ௨௧௫ முதல் ௨௨௫ வரையினும், ௨௫௩ முதல் ௨௫எ வரையினும் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றது.

௨. பல்லாவரம் சுவாமி வேதாசலம் அவர்கள், திருவாசகத்தில் போற்றித் திருவகவலுக்கு எழுதிய விரிவுரையில் "மூவா நான்மறை முதல்வா போற்றி" யென்னும் ௬௪-ம் அடியிலுள்ள மூவா நான்மறை யென்ற சொற்றொடர், தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், திருக்குறள், தேவாரம், சிவஞானபோதம், என்னும் நூல்களைக் குறிக்குமென்றும், வடமொழி நான்கு வேதங்களைக் குறிக்காதென்றும் எழுதினார்கள். அவ்வாறுகொண்ட பொருள் பொருத்தமிலதெனத் தக்க பிரமாணங்களுடன், "திருவாசகம் போற்றித்திருவகவலிற் காணப்படும் மூவா நான்மறை யென்னுஞ் சொற்றொடரின் பொருளாராய்ச்சி" யென்னும் பெயரால் ஒரு விடய மெழுதிச்

சென்ற ருதிரோற்காரி ஆண்டில் அச்சிடுவித்து வெளியிட்டனம்.

௩. சுவாமி வேதாசலமவர்கள் கொள்கைக்குத் தாம் உடம்பாடில்லாதவராய், நான்மறை யென்பது வேறு தமிழ் நூல்களென நம் நண்பராகிய கா. சு. ஒரு கட்டுரை கட்டியெழுதி அதற்குத் திருநான்மறை விளக்கமெனப் பெயரிட்டு மேற்காட்டியபடி செந்தமிழ்ச் செல்வியில் பிரசுரித்திருக்கின்றார். அதன் கருத்தாவது, நந் தமிழ் நாட்டில் தமிழ் மக்கள் நால்வருக்குச் சிவபிரான் கல்லால மரத்தடியிலே, அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருடார்த்தம் நான்கனையுமுணர்த்த, அத்தமிழ்ப் பெரியோர்கள் திருக்குறள் போன்று நான்மறை யென்னும் பெயருடன் நூல்கள் தமிழிற் செய்திருந்தார்களென்பதும், அந்நூல்களுடன் ஆறங்கமுந் தமிழிலேயே அவர்கள் இயற்றினார்களென்பதும், அந்நூல்கள் முதற் சங்கத்திறுதியில் உண்டான கடல்கோளில் அச்சங்கத்தின் ஏனைய தமிழ் நூல்களுடன் இறந்துபோயின வென்பதுவும் நமது சைவ சமயாசாரியர்கள் திருவுள்ளக் கருத்தும் அதுவே யென்பதுவுமாம். இக்கூற்று உண்மையா வென்பதை ஆராய்தலே இவ்வுரை யெழுதுவதின் நோக்கம்.

௪. கா. சு. அவர்கள் தாம் எழுதப்புகுந்த நவீனக் கொள்கைக்குத் தேவார திருவாசகமாதிய தமிழ் மறைகளில் ஆதாரங்களிருப்பதுபோல உலகினர்க்குக் காட்டவேண்டி, முகவில் எழுதுவதாவது. அபர ஞானமாகிய உண்மை நூலறிவை இறைவன் தவமிக்கார்க்கு உதவியருளி அன்னோர் வாயிலாக உலகினர்க்கு அருணூல்களை நல்குமென்பது நமது திருநெறித் தலைவர்களது திருவுள்ளக் கருத்து என்றதுவும், அறம் பொருளின்பம் வீடடைதலாகிய இந்நான்கனையும் சிவபெருமான் பண்டு அருந்தவர்க்கு உணர்வித்தருளினா னென்றதுவுமே. இவற்றிற்குத் தமிழ் மறைகளில் மூன்று பிரமாணங்களிருப்பதுபோல் மூன்று திருப்பாடல்களைக்காட்டி, இவ்வருளுரைகளால் இனிது விளங்குமென வெழுதியிருக்கின்றார். அப்பாடல்களில் இவர் தங்கொள்கைக்குச் சாதகமானவை யென்று கொண்ட பகுதிகளாவன.

க-வது அந்தணாளர்க் கறம்பொரு ளின்பம்வீடு மொழிந்த
வாயான் முக்கணாதி.—சம்பந்தர்.

உ-வது ஓராலீழலொண் கழலிரண்டு முப்பொழு தேத்திய
நாலவர்க்கொளிநெறி காட்டினை.—சம்பந்தர்.

௩-வது அருந்தவருக் காலின்கீ ழறமுதலா நான்கனையு
மிருந்தவருக்கருளுமது வெனக்கறிய வியம்பேடீ.
— திருவாசகம்

மேற்காட்டிய மூன்று மேற்கோள்களினும் இறைவனிடம் அறமாதியவைகேட்ட அருந்தவர் நால்வர், உலகினர்க்கு அருணூல்களை நல்கினரென்ற பொருள் சற்றுங் காணப்படவில்லை யென்பது யாவரு மெளிதில் அறியக்கூடியதாயிருக்கின்றது. அந்தணாளர்களாகிய நால்வர்க்கும் அறமாதியவற்றைச் சிவபிரானருளினரென்பது, மேற்காட்டிய க, ௨, பிரமாணங்களா லறியக்கிடக்கின்றது. இறைவன், அறமாதியவற்றைத் தானே மொழிந்தார், வேதம், அங்கம் ஆகியவைகளை மொழிந்தாரென இம்மேற்கோள்கள் கூறவில்லையேயெனின், "ஆலதன் கீழிருந்து நால்வர்க் கறம் பொருள் வீடின்ப மாறங்கம் வேதந் தெரித்தானை" யென்று தமிழ் மறை மற்றோரிடத்திற் கூறுகின்றதையும் சாமியப்படுத்தி அன்பர் காட்டிய மேற்கோள்களுக்குப் பொருள்கொள்ளவேண்டுவதே முறைமை. ஏனெனின், கல்லாலடியிலிருந்து இறைவன் நால்வர்க்கு உபதேசித்த ஒரு சரித்திரத்தையே தொகுத்தும் விரித்தும் செய்யுளமைதிக்குத் தக்கவாறு பெருமக்கள், அவர்களருளிய தமிழ் மறையில் ஆங்காங்குக் கூறியிருக்கின்றார்கள். "சொல்லாய் கல்லாலா" "கல்லானிழல் மேயவனே" என்பனவாதிய தமிழ் மறைகளில் காணப்படுகின்ற இவ்வாக்கியங்களுக்குப் பொருள் விரித்துரைக்குங்கால் கல்லாலடியில் நால்வர்க்கு இறைவன் வேதமாதியவற்றையும் அவைகளின் பொருளையும் உணர்த்தின சரித்திரத்தை விரித்துரைக்கவேண்டுவதே முறைமையா யிருக்கின்றது. நண்பர் காட்டிய இரண்டாவது மேற்கோளில் இறைவன் ஒளி நெறி காட்டினரென அருளப்பட்டிருக்கின்றது. இவ்வாக்கியத்திற்கு நண்பர் பின்னுங் கண்ட விசேட உரையாவது; "உலகப் படைப்பிற்குப் பின் இறைவன் உலகர்க்கு அறிவுறுத்து மருணூ லருளின னென்றுரைக்கு மிடத்துள்ள நுண்மை நோக்கற்பாலது" என்பதே. நுண்மை யின்னதென விளக்கிக் காட்டினரில்லை. "ஒருருவாயினை மானாங்காரத் தீரியல்பா யொருவிண் முதல் பூதலம் ஒன்றிய விருசுடரும்பர்கள் பிறவும் படைத்தளித்தழிப்ப மும்மூர்த்திகளாயினை, யிருவரோ டொருவனாகி நின்றனை, ஓரானீழலொண் கழலிரண்டும் முப்பொழுதேத்திய நால்வர்க் கொளி நெறி காட்டினை, நாட்ட மூன்றாகக் கோட்டினை, யிருநதியரவமோ டொருமதி சூடினை," என்பனவாதிய அருண்மொழிகளின் உண்மைப்பொருள், சிவபெருமான் ஒருவரே முழுமுதற் கடவுளெனவும், அவரிடமிருந்தே சிருட்டித் திதி சங்கார காரண கர்த்தர்கள் தோன்றினார்களெனவும், அம் முழுமுதற் கடவுள் அடியார்கள் பொருட்டுச் செய்த பற்பல திருவிளையாட்டுகள் இது இதுவெனச்சுட்டிக் கூறியிருப்பதுமே யெனவும் மேலோர் கூறுவர்

உலகப்படைப்பிற்குப்பின் இறைவன் உலகர்க்கு அறிவுறுத்தும் அருணூலருளினனெனும் பொருளைத் திருவெழுகூற்றிருக்கையில் எம்மொழியும் எச்சொற்றொடரும் தரவில்லையென்பதுவே தேற்றம். "நால்வர்க்கொளிநெறி காட்டினை" யென்ற சொற்றொடரினும் அப்பொருளையேற்ற எவ்வகையினும் முடியாது. இவ்வரிய சொற்றொடருக்கு உரிய பொருளாவது. நமது சைவத் திருமுறைகளிற் பற்பல விடங்களிலும் கல்லாலடியில் இறைவன் நால்வருக்கு அறமாதிய பொருள்களை, அல்லது வேதத்தை, அல்லது அவ்விரண்டையும், அநுக்கிரகித்தானென அருளியபோதெல்லாம், அருளினன், சொன்னன், மொழிந்தான் எனக்கூறப்பட்டிருக்க இந்த ஒரு செய்யுளில்மட்டும் "ஒளிநெறி காட்டினை" யென அருளப்பட்டிருப்பதை நோக்குமிடத்து இத்தேவாரப்பகுதியின் பொருள் நம்மவர் கொண்டதல்லவென்பதே நிச்சயம். ஒளி என்ற சொல் சிவஞானத்தைக் குறிக்கும். ஒளிநெறி என்றால் சன்மார்க்கம். அதாவது சிவஞானத்தால் சிவத்தோடு அத்துவிதமாயியையும் நெறியெனப் பொருள்தரும். அது, "சன்மார்க்கஞ் சகலகலை புராணம் வேதம்" என்னுஞ் சித்தியார் திருவிருத்தத்தானுமுணரக் கிடக்கின்றது. தாயுமான சுவாமிகளும் இக்கருத்துடையராயே "அன்று நால்வருக்கும் ஒளிநெறிகாட்டும் அன்புடைச் சோதியே" என அப்பதங்களையே அப்படியே யெடுத்தாண்டிருத்தலும் காண்க. ஆகலால் ஒளிநெறிகாட்டினையென்றால், வேதங்களையும் உபநிடதங்களையும் பன்னெடுங்காலம் ஓதியுங் கேட்டும் மனம் ஒருமைப்பட்டுச் சிவஞானப்பேறு அடையாதவராகிய நால்வரும், மற்றுமோர்முறை சிவபிரானை வணங்கிப் பிரார்த்திக்க அப்பெருமான் கல்லாலமரத்தடியிலெழுந்தருளி மௌனமுற்றுச் சின்முத்திரையைக் காட்டி அந்நால்வருக்கும் சிவஞான முதிப்பித்ததையே விளக்குமென அறியவேண்டும். கந்தபுராணம் மேருப்படலம். கஉ-வது செய்யுள், "இருவருமுணராவண்ணலேன வெள்ளெயிறியாமை, சிரநிறையனந்த கோடி திளைத்திடு முரத்திற் சீர்கொள், கரதல மொன்று சேர்த்தி மோனமுத்திரையைக் காட்டி, யொருகணஞ்செயலொன்றின்றி யோகுசெய்வாரினுற்றான்" என்பதனுலுமறியலாம். தாயுமானப் பெருந்தகையா ரெத்தன்மையரெனில் சைவத்திருமுறைகளை யெழுத்தெழுத்தாய் ஆராய்ந்து கற்று ஆலநிழலமர்ந்த அழகனாரை உபாசித்து அதன்பயனாக நிட்டை கூடிச் சிவானந்தத்தை யுண்டுதெவிட்டி அதன்காரணமாய் நந்தேவாரதிகட்குப் பாடியம் போன்ற திருப் பாடல்களை அருளிய சைவசித்தாந்த மூர்த்தி. அதனாலன்றோ "மூவர் சொலுந் தமிழ்கேட்குந் திருச்செவிக்கு மூடனேன் புலம்பிய

சொல் முற்றுமோதான்" என்றருளினார். இவ் ஒளிநெறி காட்டுதலை அப்பெருந்தகையார் பன்முறையும் விதந்தோதிய தன்மையைக் "கல்லாலினீழறனிலொரு நால்வர்க்குங் கடவுணீ யுணர்த்துவதுங் கைகாட்டேன்றால்" என்பதும், "நால்வர்க் கன்றாலின் கீழிருந்து மோன ஞானமமைத்த சின் முத்திரைக் கடலே" என்பதுமாகிய அவர்கள் பாடல்களின் பகுதிகள் நன்குகாட்டும். இவ்வாராய்ச்சியால், அபரஞானமாகிய உண்மை நூலறிவை, இறைவன் தவமிக்கார்க்கு உதவியருளி அன்னோர் வாயிலாக உலகினர்க்கு அருணூல்களை நல்குமென் பது நமது திருநெறித்தலைவர்களது திருவுள்ளக் கருத்து எனவும், அறம்பொருளின்பம் வீடடைதலாகிய விந்நான்கனையும் சிவபெருமான் பண்டு அருந்தவர்க்குணர்வித் தருளினனென வும் நம் நண்பர் கட்டிய கட்டு பட்டப்பகலை யிரவென்று கூறிடும் பாதகமே எனப் பட்டினத்தடிகள் தொகுத்த கட் டுரைக்கு இலக்கியமாகின்றது. நிற்க;

ரு. நம்மவர் எழுதியிருக்கிற திருநான்மறை விளக்கத் தின்கொள்கைக்குச் சிவபிரான் கல்லாலமரத்தடியில்நால்வர்க்கு அறமாதிய நான்கையும் வேதத்தையும் வேதப்பொருளையும் ஆறு அங்கங்களையும் அருளினனென்று, தமிழ்த் திருமுறையிற் காணப்படும் பகுதிகளிற் சிலவற்றைப் பிரமாணம்போல் ஆங் காங்குக் காட்டியிருக்கின்றார். அத்தகைய பகுதிகளெல்லா வற்றையும் புத்தகங்களிற் றேடிக் கண்டுபிடிக்குஞ் சிரமத்தை இவ்வாராய்ச்சி உரையை வாசிப்போர் அடையாதிருக்கும் பொருட்டுக் கூடியவரை அவைகளை ஒருங்கு திரட்டி இங்கு வரைகின்றேன்.

**சம்பந்தர்.**

க. அணிபெறு வடமர நிழலினி லமர் வொடு மடியிணை யிருவர்கள். பணிதர வறநெறி மறையொடு மருளிய பானுரை விடம்......திரு மிழலையே.

உ. ஆலின்கீழறமோர் நால்வர்க் கருளியனலது வாடுமெம் மடிகள்...... பாம்புர நன்னகராரே.

ங. சைவ வேடந்தா னினைத்தைம்புலனும் அழிந்த சிந்தை யந்தணாளர்க் கறம் பொருள் வீடின்ப மொழிந்தவாயான் முக்கணாதிமேயது முதுகுன்றே.

ச. ஓரானீழ லொண் கலிரண்டு முப்பொழு தேத்திய நால்வர்க் கொளி நெறி காட்டினை.

ரு. அறங்கிளரு நால்வேத மாலின் கீழிருந்தருளி .....முதுகுன்றமே.

சு. எரிசையும் வடவாலின் கீழிருந்தங் கீரிருவர்க் கிரங்கிநின்று நேரிய ஞான் மறைப்பொருளை யுரைத்தொளிசேர் நெறியளித்தோனின்ற கோயில் மிழலையாமே.

எ. பண்டிருக் கொருநால்வர்க்கு நீருரை செய்ததே. (திருவான்மியூர்)

அ. பண்டாலி னிழலானைப் பரஞ்சோதியை. (கோழம்பம்)

(நாகேச்சரம்)

கூ. கல்லா னிழல் மேயவனே
திறம்பய னுறும்

க0. நிறம் பசுமை செம்மையோ டிசைந்துனது நீர்மை, திறம்பய னுறும்
பொருடெரிந் துணருநால்வர்க், கறம்பய னுரைத்தனைப் புறம்
பயமமர்ந்தோய்

கக. நண்ணியோர் வடக்கிறைல்வர் முனிவர்க்கன்று எண்ணிலிமறைப்
பொருள் விரித்தவரிடம்......திருவையாறே.

கஉ கல்லானிழல் மேவிக்காமுறுசீர்நால்வர்க்கன்—றெல்லாவறனுரையு
மின்னருளாற் சொல்லினர் (திருநாலூர்மயானம்)

கங. ஓதியாரணமாயநுண் பொருளன்று நாலவர்முன்கேட்க நன்னெறி
நீதியானிழலுரைக்கின்ற நீர்மையதென் (திரு ஆமாத்தூர்)
(திருக்காளர்)

கச. ஆலநீழலுளாய் அடைந்தார்க்கருளாயே

கரு. அன்றவ்வானிழலமர்ந்து வறவுரை நால்வர்க் கருளிப்பொன்றினர்
தலையோட்டி லுண்பது (கோச்சைவயம்)

கசு. பண்டு நால்வர்க்கறமுரைத்தருளிப் பல்லுலகினி லுயிர்வாழ்க்கை
கண்ட—நாதனார் (திருக்கேதீச்சரம்)
(திருக்கோட்டாறு)

கஎ. ஆலநீழலிருந்து அறஞ்சொன்ன அழகனே

கஅ. அன்றாலின். கீழிருந்தங்கறம் புரிந்த வருளாளர்
(கச்சிநெறிக்காரைக்காடு)

ககூ. ஆத்தமென மறைநால்வர்க்கறம்புரி நூலன் றுரைத்து—தீர்த்தமல்கு
சடையாருந் திருவேட்டக் குடியாரே.

உ0. முறைத்திற முறப்பொருடெரிந்து முனிவர்க்கருளியாலநிழல்வாய்,
மறைத்திற மறத்தொகுதி கண்டு சமயங்களை வகுத்தவனிடம்......
கோகரணமே.

உக. காய்த்த கல்லாலதன் கீழிருந்த கடவுளிடம் போலும்... .. ...
வலம்புர நன்னகரே. (ஆலவாய்)

உஉ. ஆலநீழலுகந்த திருக்கையே

அப்பமூர்த்திகள்.

உங. மடற்பெரியவாலின் கீழற நால்வர்க்கன் றுரைத்தா னென்கின்ற
ளால் (கழிப்பாலை)
(ஏகம்பம்)

உச. விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்

உரு. அங்கங்களாறு நான்கு மந்தணர்க் கருளிச்செய்து
(செம்பொன்பள்ளி)
(பழனம்)

உசு. ஆலின்கீ ழறங்களெல்லா மன்றவர்க் கருளிச்செய்து
நாலலா

உஎ. ஆலலா லிருக்கையில்லை யருந்தவ முனிவர்க்கன் று
னொடிவதில்லை (திருவையாறு)

உஅ. ஆலத்தார் நிழலில்லறம் நால்வர்க்குக்கோலத்தா லுரை
செய்தவன் (திருமாற்பேறு)

உகூ. நற்றவம்செய்த நால்வர்க்கு நல்லறமுற்ற வண்மொழியா லருள்
செய்த நற், கொற்றவன் (துரங்காடுதுறை)
(நீலக்குடி)

ங0. நாலுவேதியர்க் கின்னருள் நன்னிழலாலன் (தூங்குக்கா)

ஙக. ஆலநீழலமர்ந்த வழகனார்

ஙஉ. அறங்காட்டி யந்தணர்க் கன்றாலநீழ லறமருளிச்
செய்தவானார் (கோயில்)
(இடைமருது)

ஙங. ஆலநீழலிருப்பர் ஆகாயத்தர்

௩௪. கல்லாலினீழலிற் கலந்து தோன்றுங் கவின்மறையோர்
நால்வர்க்கு நெறிகளன்று—சொல்லாகச் சொல்லியவா
தோன்றுந் தோன்றும் (பூவணம்)
௩௫. வேதநான்குங் கல்லாலினீழற் கீழறங் கண்டானை (நள்ளாறு)
௩௬. கல்லாலின் கீழானை (நாகைக்காரோணம்)
௩௭. பொய்யுரையா மறைநால்வர் விண்ணோர்க் கென்றும்
வேதத்தை விரிப்பதற்கு முன்னோ பின்னோ (ஆரூர்)
௩௮. ஆலின்கீழ் நால்வர்க் கறத்தான் கண்டாய் (ஷ)
௩௯. அன்றாலின் கீழிருந் தங்கறஞ் சொன்னானை (மிழலை)
௪0. ஆலதன் கீழிருந்து நால்வர்க் கறம்பொருள் வீடின்ப
மாறங்கம் வேதந்தெரித்தானை (நாகேச்சரம்)
௪க. ஆலதன் கீழற நால்வர்க் கருள்செய்தானை (நாரையூர்)

## சுந்தரமூர்த்திநாயனர்.

௪௨. மறைநான்குங் கல்லாலிழற் கீழ்ப்பன்னிய வெங்கள்பிரான்
பழமண்ணிப் படிக்கரைமேய
௪௩. ஆலக்கோயில் கல்லாலநிழற் கீழறங்களுரைத்த அம்மானே
(கச்சூர் ஆலக்கோயில்)
(ஊர்த்தோகை)
௪௪. சொல்லாய் கல்லாலா
௪௫. காது பொத்தரைக் கின்னரருழுவை
கடிக்கும் பன்னகம் பிடிப்பருஞ்சீயம்,
கோதின் மாதவர் குழுவுடன் கேட்பக்,
கோலவா னிழற் கீழறம் பகர,
எதஞ்செய்தவ ரெய்திய வின்பமியானுங் கேட்டு
நின் னிணையடி யடைந்தேன் (திருநின்றியூர்)
௪௬. நால்வர்க்காலின் கீழுரைத்த அறவனே (நள்ளாறு
௪௭. அருந்தவமா முனிவர்க்கருளாகி யோராலதன் கீழ், இருந்தறமே
புரிதற்கியல்வாகிய தெனனேதொலாம் (நாகேச்சரம்)

## மாணிக்கவாசகர்.

௪௮. நன்றாக நால்வர்க்கு நான்மறையி னுட்பொருளை
யன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் காணேடீ
௪௯. அருந்தவருக் காலின்கீ ழறமுதலா நான்கனையு
மிருந்தவருக் கருளுமது வெனக்கறிய வியம்பேடீ
௫0. அன்றால நீழற்கீ ழருமறைகடானருளி

## திருமாளிகைத் தேவர்.

௫க. அறம்பல திறங்கண் டருந்தவர்க் கரசாயாலின்கீழிருந்த வம்பலவா

## கருவூர்த்தேவர்.

௫௨. முனிவர் தம்மொடு ஆனிழற்கீழ் முறைதெரிந்தோ ருடம்பினராம்

## நக்கீரர்.

௫௩. ஆலநீழலன் றிருந்தறநெறி நால்வர் கேட்க நன்கினி துரைத்தனை
௫௪. ஆலின் கீழிருந் தறநெறி யருளியும்
௫௫. முத்தீ நான்மறை யைம்புல னடக்கிய
வறுதொழிலாளர்க் குறுதிபயந்தனை

௫௬. தொடுத்தமைத்த நாண்மாலை கொண்டணிந்து
நால்வர்க்கன் றுனிழற்கீழ். வாண்மாலையாகும்
வகையருளித், தோண்மாலை. விட்டிலங்கத் தெக்கணமே
நோக்கி வியந்தருண, மெட்டிலங்க வைத்தவிறல் போற்றி.

---

இனித், தாயுமானப் பெருந்தகையார் தமிழ்மறைக்குப் பாடியம்போன்று அருளிய திருப்பாடல்களினும் கல்லாலடியில் இறைவன் நால்வர்க்கருளிச் செய்தமையைப் பன்னிப் பன்னிப் பற்பலவிடங்களில் அருளியிருப்பவைகளும் ஆராய்ச்சிக்குரியனவாயிருப்பதால் அப்பகுதிகளிற் சில அடியிற் காட்டப்படுகின்றன.

௫௭. திருமருவு கல்லாலடிக்கீழும் வளர்கின்ற சித்தாந்த முத்திமுதலே
௫௮. எந்தை வடவாற் பரமகுருவாழ்க
௫௯. சொரூப சாக்ஷாத்கார அனுபூதி அனுகூலமுங், கற்பனை
யறக்காண முக்கணுடன் வட நீழற் கண்ணூடிருந்த குருவே.
௬0. நால்வருக் கறமாதி பொருளுரைப் பத்தொன்
பாலின் முகமாகி வடவாலிருக்கின்ற செல்வமே.
௬௧. சாதக மோனத்திலென்ன வடவானீழல் தண்ணருட்
சந்திரமௌலி தடக்கைக்கேற்க வேதக சின்மாத்திரமா
யெம்மனோர்க்கும் வெளியாக வந்த வொன்றே.
௬௨. ஆலடியிற் பரமகுரு வாழி வாழி
௬௩. ஆலடியிற் பரமமோன, நாதனொருதா
மூலகம் பார்க்கவிச்சை நண்ணுமே
௬௪. அந்தணர் நாலவர்காண அருட்குருவாகி வந்த வெந்தையே
௬௫. நால்வர்க்கன் றாலின்கீ ழிருந்து மோனஞான
மமைத்த சின்முத்திரைக்கடலே
௬௬. படியிருளகலச் சின்மயம் பழுத்த பசுங்கொம்பை
யடக்கியோர் கல்லா லடியிலே யிருந்த வானந்த வாரே.
௬௭. அன்று நால்வருக்கு மௌனி நெறிகாட்டு மன்புடைச் சோதியே
௬௮. கல்லாலின் கீழிருந்த செக்கர்மேனிக் கற்பகமே
௬௯. என்றுந் தண்ணருள்கூர் கோலம் படைத்துக்
கல்லாலடிக் கீழ்வளருங்கோ
௭0. உள்ளபடி கல்லாலின்கீழிருந்து கற்பித்தா னொருவசன
மெல்லாரு மீடேறவே
௭௧. கல்லாலினீழறனிலொரு நால்வர்க்குங் கடவுணீ
புணர்த்துவதுங் கைகாட்டென்றால்
௭௨. கற்றலுங் கேட்டலுந்தானே யேதுக்காகக் கடபடமென்
றுருட்டுதற்கோ கல்லாலெம்மான் குற்றமறக் கை காட்டுங்
கருத்தைக்கண்டு குணங்குறியற் றின்ப நிட்டை கூடவன்றோ
௭௩. ஆரணமாகம மூலமெல்லாமுணர்த்த அருண்டவுன
காரணமூலங் கல்லாலடிக்கே யுண்டு

எச. துங்கமிகு பக்குவச்சனகன் முதல் முனிவோர்களொடு தருகில்
வீற்றிருப்பச் சொல்லரிய நெறியை யொரு சொல்லாலுணர்த்
திய சொரூபானுபூதி காட்டிச் செங்கமல பீடமேற்கல்லா
லடிக்குள் வளர் சித்தாந்தமுத்தி முதலே சிரகிரிவிளங்கவரு
தட்சிணாமூர்த்தியே

எரு. வடநீழலூடேவளர், சநகனாதி முனிவோர்கடம் சொன்
மயக்கமது தீர அங்கைகொடு மோன ஞானமதுணர்த்தியே,
தென்முகத்தின் முகமாயிருந்த கொலுவெம் முகத்திலும்
வணங்குவேன்

---

கூ. நம் சமயாசாரியர்களும் அருட்கவி பாடியோரும், சிவபிரான் கல்லாலடியில் நால்வருக்கு உபதேசித்த முறைமையை எவ்விதமாய்ப் போற்றித் துதித்து இருக்கின்றார்களென்னும் வாய்மை, மேலே திரட்டிக் காட்டியிருக்கின்ற அவர்கள் அருண்மொழியால் விளங்கும்—ஒரு சமயம் (கூ) கல்லானிழல் மேயவனே யென்றும், மற்றோர் சமயம் (யஅ) அன்றாலின் கீழிருந்தங் கறம்புரிந்த வருளாளர், என்றும், மற்றோரிடத்தில் (உஅ) ஆலத்தார் நிழலில்லறம் நால்வர்க்குக் கோலத்தாலுரை செய்தவன் என்றும், பின்னுமோரிடத்தில் (௩க) ஆலநிழலமர்ந்த அழகனார் என்றும், பின்னுமோரிடத்தில் (சO) ஆலதன் கீழிருந்து நால்வர்க்கறம்பொருள் வீடின்ப மாறங்கம் வேதந் தெரித்தானை என்றும், மற்றும் (சச) சொல்லாய் கல்லாலவென்றும், மற்றும் (ருரு) முத்தீநான்மறை ஐம்புலன் அடக்கிய அறுதொழிலாளர்க்குறுதி பயந்தனை யென்றும்,(ருகூ) தொடுத்தமைத்த, நாண்மாலை கொண்டணிந்த நால்வர்க்கன்றாணிழற்கீழ், வாண்மாலையாகும் வகையருளித், தோண்மாலை, விட்டிலங்கத்தெக்கணமே நோக்கி வியந்தகுண, மெட்டிலங்கவைத்த விறல்போற்றி என்றும், சுருக்கமாய்த் தொகுத்தும், விரிவாய் வகைப்படுத்தியும், அருளிச்செய்திருக்கின்றார்கள். தாயுமானப் பெருந்தகையாரோ அவ்வளவோடமையாமல் நால்வர் பெயர்களையுமறிவித்துங் கூறினார்கள். மேற்காட்டிய அருண்மொழிப் பகுதிகளிளெல்லாம் ஓர் சரித்திரத்தை யிவ்வித பாகுபாட்டுடன் கூறினார்களேயன்றி வெவ்வேறு சரித்திரங்களை யல்லவென்றும மேற்காட்டிய க முதல் எரு வரையுள்ள அருண்மொழிப்பகுதிகளும் விளக்கும். சிவபிரானோ ஒருநாம மோருருவமொன்றுமிலார், அவருக்கெய்திய நாமங்களெல்லாம் அடியார்கட்கு அவர் சகளீகரித்துத் தோன்றி அருளிய காரணம் பற்றியே. இக்காரணம்பற்றியே, சிவபிரானுக்கு ஆலமர் கடவுள் என்னும் ஒரு நாமம் திவாகரம் நிகண்டு ஆசிரியர் காரணப்பெயராகவே கூறியுள்ளார்கள். திவாகர நிகண்டு தோன்றுதற்கு

முன்னரே யிருந்த பல சொற்களைத் தொகுத்து இந்நூல்
களின் ஆசிரியர் அந்நூல்கள் செய்தார்களேயன்றி அவர்களாக
உற்பத்திசெய்த மொழி ஒன்றுமில்லை. கைலையினின்று மெழுந்
தருளி நம் தமிழ் நாட்டில் ௩௲ ஆண்டு சிவயோகத்தில் வீற்
றிருந்த திருமூலரும் "விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்பதி
சூழ்ந்து—புரந்த கல்லாலின் புண்ணியன் சொன்ன—பரந்
தன்னையோ ராப்பழி மொழியாளர்—உரந்தன்மையாக
வொருங்கி நின்றார்களே." எனவும் அருளியிருப்பதை, நோக்
குக. இத்திருமந்திரத்தில் மெய்ப்பதி சூழ்ந்து என்றதனால்,
அழியாத பதியாகிய நொடித்தான் மலையில் கல்லாலின்கீழில்
சிவபிரான் நால்வருக்கும் அருளியதாகவே நன்கு விளங்குகின்
றது. சிவபிரான் சகள வடிவங்கொண்டு அடியார்கட்கருளிய
மூர்த்தங்கள் இருபத்தைந்தும் பிறவுமாம். அவற்றினொன்று
தக்ஷிணாமூர்த்தி மூர்த்தம். இம்மூர்த்திதான் நால்வர்க்கருளிய
வனென மேற்காட்டிய (௫ன) தந்திரத்தவர் வாக்கால் நன்கு
விளங்கும். சமயாசாரியர்கள் நால்வர் வாக்கினும் பிறந்த மேற்
காட்டிய பகுதிகளில் இம்மூர்த்திகள் பெயரை வெளிப்படச்
சொன்னார்களில்லையேனும் குறிப்பாய்ச் சிற்சில பகுதிகளிற்
காட்டியிருக்கின்றார்கள். உ-அ ஆலத்தார் நிழலில்லறம் நால்
வர்க்குக் கோலத்தாலுரை செய்தவன் என்றதினுள்ள கோலம்
என்ற பதமும் ௩௯ ஆலநீழலமர்ந்த அழகனார் என்றதினுள்ள
அழகனார் என்ற பதமும் தக்ஷிணாமூர்த்திக் கடவுளையே
குறிக்கும். தாயுமானப் பெருந்தகையாரும் ௯௯—என்றுந் தண்
ணருள்கூர் கோலம் படைத்துக் கல்லாலடிக்கீழ் வளருங்கோ
என்றார். சம்பந்தரும் (௧௦) ஆலநீழலிருந்து அறஞ்சொன்ன
அழகனே, என்றும், (௩௧) அப்பரும் அவ்வாறே அழகனார்
என்றும் கூறியது, தட்சிணாமூர்த்தி வடிவம், முப்பத்திரண்டு
இலக்கணங்களும் முற்றப்பொருந்தி அதி யௌவன பருவ
முடையதாகித் தெரிசிப்போர்கள் வேறு செயலற்று அவனையே
நோக்கிய வண்ணமாக இருக்கும் பொருட்டுக்கொண்ட கோல
மென்பதை யுணர்த்தற்கேயாம்.

எ. திருவிளையாடற் புராணம், வேதத்துக்குப் பொரு
ளருளிச்செய்த படலம், (௧௪-வது செய்யுள் "மானமுனிவோ
ரத்திசையிப்பவடநீழல், மோனவடிவாகிய முதற்குருவினன்றன்,
கூனமிலிலக்கண முறப்பருவமாய காளன், காணவொருகா
மறையோன் வடிவமாகி" என்ற செய்யுளால் அஃது அறிய
லாம். ஆனால் சமயாசாரியர்கள் ஏன் தட்சிணாமூர்த்தமென
வெளிப்படையாகக் கூறிற்றிலராயின், அவ்வாறு கூறுவது
அவர்கள் வழக்கன்று. தக்கனது வேள்வி தகர்த்த சரித்திரம்
பன்முறை யெடுத்துக்கூறியுள்ளார்கள். தக்கனது யாகத்தை

இறுத்தவர் வீரபத்திரக்கடவுள். அவர் பெயரை யாண்டுங் கூறிற்றிலர். பிரமன் சிரங்கொய்தது வடுகமூர்த்தியவதாரம். இம் மூர்த்தி பெயரும் கூறிற்றிலர். இவை போல்வன பல நந்திரு முறையிற் காணலாம். இவைபோலவே தட்சிணாமூர்த்திக் கடவுள் பெயரையும் வெளிப்படையாக மொழிந்திலர். ஏனெனில் இம்மூர்த்தங்களெல்லாம் சிவபேதமே ஆதலால், சமயாசாரியர் மூவரும் சிவாலயங்கடோறும் சென்று தெரிசித்துத் தேவாரப் பாக்களருளிய அவர்களது சரித்திரம் கூறும் பெரிய புராணத்தில் இவர்கள் சிவலிங்க மூர்த்தத்தைத் தவிர வேறு மூர்த்தங்களை வணங்கியதாக வெங்காவது கூறப்பட்டிருக்கின்றதா? இல்லை. ஏனென்றால் மேற்சொன்ன காரணம்பற்றியே. நமது சிவாலயங்களிலெல்லாம் தட்சிணாமூர்த்தத்தை, நால்வர்க்கு அருளின முறையோடு கல்லால விருட்சத்துடன் அமைத்தும், நால்வரையும் ஒருங்கே அம்மூர்த்தத்தின் கீழ் அமைத்தும் எழுந்தருளச்செய்து அபிஷேகாதி நிவேதனங்கள் நடத்தப்பட்டு வருகின்றன. உபநிஷத்துக்கள் ௧௦அ-ல் தக்ஷிணாமூர்த்தி உபநிஷத்து எனத் தனியா யொரு உபநிஷத்து இம் மூர்த்திக்குரியதாகவிருக்கின்றது.

நால்வர்க்கு உபதேசித்த பரம்பரையான முறை இவ்வாறிருக்க, நம்பிள்ளையோ மேற்காட்டிய பிரமாணங்களில் சிலவற்றைப் பொறுக்கி யெடுத்து அவற்றிற்குத் தம் மனம் போல் விபரீதப்பொருள் கற்பித்து விவாதத் திருநான்மறை விளக்க மெழுதியிருக்கின்றார். அதுமட்டோ, தமிழ் வேதம் என்று மேன்மை பூண்ட நம்பெருமக்கள் திருவாக்காகிய மூலப் பாசுர மொழிகளையும் அவர் கற்பனைக்கு இணக்கமாகத் திருத்தியும் பொருள் கொண்டார். அவற்றைப் பின்னர் சமயம் வந்துழி ஆங்காங்குக் காட்டுவோம்—இனி, மேலாராய்வாம்.

அ. மேலும் இவர் சொல்வதாவது,

"இந்நால்வருக்கும் சிவபெருமான் அறம் பகர்ந்தனனென்பது."

"பண்டு நால்வருக் கறமுரைத்தருளிப் பல்லுலகினிலுயிர் வாழ்க்கை கண்ட நாதனார்."

"முறைத்திறமுறப் பொருடெரிந்து முனிவர்க்கருளியால நிழல் வாய், மறைத்திற மறத்தொகுதி கண்டு சமயங்களை வகுத்தவனிடம்" என்னுந் தேவாரங்களால் அறியக் கிடக்கின்றது" என்றெழுதியிருக்கின்றார். அறமென்று சொன்னதனாலேயே புருடார்த்தம் நான்கு மடங்குமென்பதைப் பல பிரமாணங்களுடன் நம்மவர் விரித்துக் காட்டியிருக்கின்றார். அவ்வுரை எல்லாருக்கு முடன்பாடே. ஆனால், சிவபெருமான்,

நால்வருக்கும் அறம் பகர்ந்தனனென்று கூறி, அதற்கு வேதம், அங்கம், என்னும் மொழிகள் காணப்படாத மேற்காட்டிய பிரமாணங்களை இவர் உதகரித்திருப்பது, சிவபெருமான் நான்மறைகளையும் ஆறங்கத்தையும் சொன்மாலையாக மொழியவில்லை. அறமாதிய இன்னவையென மொழிந்தார். அவற்றைக் கேட்ட நால்வரும் அந்நூல்களை இயற்றினார்கள் என்னும் தங்கொள்கைக்கு ஓர் ஆதாரமாக்குவதற்கே. "ஆலதன் கீழிருந்து நால்வர்க்கறம்பொருள் வீடின்பம் வேதந்தெரித்தானை" என்றும், "அணிபெறு வடமர நிழலினி லமர்வொடு மடியிணை யிருவர்கள், பணிதர வறநெறிமறையொடு மருளியபரன்," என்னுந் தமிழ் மறைப்பகுதிகளால், நாற்பொருள்களுடன் மறையையும் சிவபிரானருளினாரென்பது நன்றாய் வெளியாவதால், விரித்துக் கூறும் இவ்வாக்கியங்களின் பொருள் பிறழாது, மேலே இவர் காட்டிய தொகுத்துக் கூறிய பிரமாண வாக்கியங்களுக்கும் பொருள் கொள்வதே முறை. "கல்லானிழன் மேயவனை," "ஆல நிழலுகந்த திருக்கையே" எனவும் நம்பெருமக்கள் மிகவுஞ் சுருக்கமாய் அருளியிருக்கின்றார்கள். இவ்வாக்கியங்களுக்கு விரித்துப் பொருள் கொள்ளுமிடத்து, நால்வருக்கும் கல்லாலடியில் வேதங்களையும், வேதப் பொருள்களையும், ஆறங்கத்தையும் அருளிச்செய்த அவதாரத்தைக்கூற வெழுந்த வாக்கியங்கள் இவையென்றல்லவோ கூறவேண்டும். ஆதலால் அறமாதிய நாற்பொருளை மட்டும் நால்வருக்குச் சிவபெருமான் அருளினான் எனும் கொள்கையைத் தாபித்தற்கு நந்திருமுறைகள் இடங்கொடா. நிற்க;

௯. மேலும் நம்மவர் சொல்வதாவது, "இங்ஙனம் இறை
"வர் மொழிந்த உறுதிப் பொருள் நான்கனையும் கூறும்
"நூல்கள் எழுந்தனவா? அவையாவை என்னும் வினாக்கட்குப்
"பின்வரும் திருமுறைப் பகுதிகளின் வைத்துணரப்படும்".
"மறைநான்கும் கல்லானிழற் கீழ்ப்பன்னிய வெங்கள் பிரான்
"பழமண்ணிப் படிக்கரையே"
"அறங்கிளரும் நால்வேதமாலின் கீழிருந்தருளி"
"வேதம் நான்குங் கல்லானிழற் கீழறங்கண்டானை"
"நூலடைந்த கொள்கையாலே நின்னடி கூடுதற்கு
"மாலடைந்தநால்வர்கேட்க நல்கிய நல்லறத்தை
"ஆலடைந்த நிழன்மேவி யருமறை சொன்னதென்னே"
"என்றமையால் அந்நாற்பொருளும் கூறும் நூல் அருமறை
"யென்பதும் அவை நான்கென்பதும் புலப்படும்" என்று நம்மவர் எழுதியிருக்கின்றார். மேலே காட்டியபடி நூல்கள் எழுந்தனவா? என்று எழுதிக்கொண்டார். நூல்கள் தாமே எழா! தேக உறுப்புகள் எல்லாம் நன்கு அமையப்பெற்ற ஒருவர்

இயற்றினாலன்றி ஏழா. இவர் எழுதியிருப்பது பட்டாசாரியன் மதக்கொள்கைபோலும். மேலே இவராற் காட்டப்பட்ட பிரமாண வாக்கியங்களெல்லாம் சிவபெருமான் கல்லாலடியிலிருந்து நான்கு வேதங்களையும் அவற்றின் பொருளாய அறமாதிய நான்கையும் நால்வருக்குந் தெரித்தானென்று விளக்குகின்றமையால் இவரது கொள்கைக்கு மேற்கோள்கள் ஒரு சாதகமுஞ் செய்தில. நிற்க, மேல் ஆராய்வாம்.

க0. இனி, இவர் கூறுவதாவது "அருமறை நான் காய
"தற்குக் காரணம் நால்வர்க்கும் அவரவர் பக்குவத்திற்கேற்
"பக் கடவுளுணர்த்த அவர்கள் செய்த நூல் நான்காயினமை
"யேயாம். அது "நாலாய மறைக்கிறைவனாயினானை"
"விரித்தானை வெவ்வேறு வேதங்கள்"
"விரித்தவன் வேதங்கள் வேறு வேறு
"தெரித்தவன் உறைவிடம் திருவலமே"
"என்றமையால் விளங்கும்" என நம்மவர் எழுதிக் காட்டினார். மேற்காட்டிய பிரமாண வாக்கியங்களாற் சிவபெருமானே நான்குவேதங்களையும் இயற்றிய கருத்தாவென விளங்குகிறதேயல்லாமல் நால்வர்கள் செய்ததில்லை யெனத்தாபிதமாகிறது. நால்வர் என்ற மொழியே மேற்காட்டிய பிரமாணங்களில் இல்லை. இன்னமும் அவரவர் பக்குவத்திற்கேற்பக் கடவுளுணர்த்தினதாக வெழுதியிருக்கின்றார். நால்வர்களும் ஒருவருக்கொருவர் தாரதம்மியமான பக்குவமுடையவர்களென்று இவருக்கு எவ்வாறு தெரிந்தது? இவருடைய தமிழ் முனிவர் நால்வரின் சரித்திரமுமில்லை, அவர்கள் செய்ததாகச் சொல்லும் நான்மறைகளும் முக்காலத்திலுங் காணப்படவில்லையே யென்று கூறுவார்க்கு இவர் விடுக்கும் கடல்கோளில் அழிந்தனவென்னும் விடைக்கு ஆதாரம் யாண்டுங் காணப்பட்டிலது. இவர் படைத்திட்டுக் கொண்ட வெற்றுரையை அறிஞர் ஒருபொருளாகக் கொள்ளார். மேற்காட்டிய பிரமாணங்களில் வேறு வேறு வேதங்கள் விரித்தவன் என்றதன் பொருள்; நான்கு கூறாய வேதங்களைச் சிவபிரான் அருளினாரென்பதே; நிற்க, மேலாராய்வாம்.

கக. இனி, நம்மவர் சொல்வதாவது "நான்மறைக்கும் கருவி நூலாகிய ஆறும் அவற்றோடெழுந்தன வென்பது"

"ஆலதன் கீழிருந்து நால்வர்க்கு அறம்பொருளின்பம்
"வீடாறங்கம் தெரித்தானை" என்பதால் போதரும்" என்று எழுதியிருக்கின்றார். மேலேகாட்டியபடி, கருவி நூலாறும் அவற்றோடெழுந்தனவென்று சொன்னார். கருவிநூல் தானே எழவில்லை. மேற் பிரமாணத்தால் சிவபிரானே ஆறங்கங்களையும் அருளினான் என்பது விளங்குகின்றது. அன்றியும், நால்வருக்

கும் கல்லாலடியிற் சிவபிரான் அருளுதற்கு முன்னரேயே, நான்கு வேதங்களும், ஆறங்கங்களும் சிவபிரானுல் வெளியிடப் பட்டவையாகும்; அது "பங்கமில் பதினெட்டொடு நான்குக் குணர்வுமாய் அங்கமாறுஞ் சொன்னனுமையாறுடைய வடிகளே" என்ற தமிழ்மறையால் விளங்கும். நிற்க, மேலாராய் வாம்.

கஉ. இனி, திருநான்மறை விளக்க ஆசிரியர் இதுகாறும் பூடகமாய்க்கூறிவந்த அவர் கற்பனைக் கொள்கையை இனி வெளிப்படையாய்க் காட்டுவாராயினர். அஃதாவது: இனி "இம்மறைகளும் ஆறங்கங்களும் ஆலநிழலார் சொன்மாலையாகப் "பொழிந்தருள அவற்றைக்கேட்ட நால்வரும் அச்சொல்வடி "வாகவே உலகிற்கு ஈந்தனரா? அவ்வாறன்றி ஸ்ரீ ஆளுடையபிள் "ளையாரும், சொல்லின் மன்னரும் பிற்றைநாளில் பெருமா "னிடம் நல்லுணர்வு பெற்றாங்கு ஆலின்கீழ் முனிவர் நால்வரும் "இறைவன்வழித் தோன்றிய நல்லுணர்வினராய் அவன்பாற் "பொருள் கேட்டு நான்மறைகள் இயம்பினரா? அல்லது ஸ்ரீ "சுந்தரமூர்த்திகட்கும் ஸ்ரீ சேக்கிழார் பெருமாற்கும் அடி "யெடுத்துதவியாங்கு, முதல்வன், நால்வரும் உண்மை உணரு "மாறுணர்த்த ஒரோவொரு மொழியைப்பற்றிப் பொரு "ளனைத்தையுங்கண்டு பின்னர் நான்மறைகளையும் இயற்றி "அருளினரா? என்னும் ஐயப்பாடுகள் எழற்பாலன, ஆதலால் "அவற்றிற்கு விடை ஈண்டு ஆயத்தக்கன." என்றெழுதிக் கொண்டு அதற்குவிடை அவர்எழுதுவதாவது: முதற்கட்கூறிய கொள்கையையுடையார் "அங்கமும் வேதமுமோது நாவர்," "மறையோதீ மங்கைபங்கா," "பன்னு நான்மறை பாட வல்லோனே," பேசுவதுந் திருவாயான் மறை போலும்," "நான் மறையோடாறங்கஞ் சொன்னார் தாமே," வேத மொழியர்" "என்னும் அருள்மொழிகளைத் தமக்கு ஆதாரமாக உரைப்பர். "அவர் இவைகளில் ஓதுதல் பாடுதல் என்பதனுல் பெறப்படுவது "யாதெனஉய்த்துணரக்கடவர். இச்சொற்றொடர்கள் உருவகப் "பொருள்கள் தருவனவே யன்றி நேர்பொருள் கொள்ளற் "பாலனவல்ல" என்று எழுதியிருக்கின்றார். மேற்காட்டிய அவரது உரையின் பகுதியில் ஓதுதல், பாடுதல் என்னுஞ் சொற்களுக்கு மேற்கோள் காட்டுவார் போன்று அப்ப மூர்த்திகளருளிய தனித் திருவிருக்தம், "பெருங்கடல்மூடி" என்னுந்தொடக்கத்ததாகிய திருப்பாட்டில் "எம்மிறை நல் வீணை வாசிக்குமே" என்பதற்குப் பொருள்கோடல் போலவே பொருள் கோடல் வேண்டும்" எனவும் எழுதியிருக்கின்றார். விளக்கம் எழுதவந்தவர் எம்மிறை நல் வீணை வாசிக்குமே என்ற சொற்றொடருக்குப் பொருள் இன்னதென விளக்கி

யெழுதிக்காட்டினுலல்லவோ இதற்குள்ள பொருள்போல மற்றதற்கும் பொருள் கொள்ளலாம். அதைப்போல இது, இதைப்போல அது என்றால், அது இது என்னுஞ் சொற்கள் இன்ன விஷயத்தில் ஒற்றுமையுடையதெனக் காண்டல் அரிதே. இவ்வாக்கியங்களுக்குத் தம்மனங்கொண்டவாறு வியாக்கியை எழுதிக்கொண்டு "இறைவன் சொன்மாலையாக "நூல் செய்யவேண்டிய அவசியமில்லை. அங்ஙனஞ் செய்ததா "கவுமில்லை" என்னும் முடிபுக்கு வந்தார்.

கங. இறைவன் வேதங்களையும் அங்கங்களையும் அருளினனென்பதை நம்மவர் எடுத்துக்காட்டிய மேற்கண்ட "அங்கமும் வேதமு மோது நாவர்", ஆதிய சு சொற்றொடர்களான் மட்டும் நம்பெருமக்கள் கூறினாரல்லர். நந்தமிழ்த் திருமுறைகளில் அவ்வாறு எண்ணிறந்த வாக்கியங்களுள. அவைகளை இயன்றவரை ஒருங்குசேர்த்து ஈங்கு எழுதிக்காட்டுவது இவ்வாராய்ச்சியை வாசிக்கும் பல நண்பர்களுக்கும் உண்மை உணர ஓர் ஏதுவாகும். ஆனதால் அவற்றைக் கீழே எழுதுவாம்.

## ஸ்ரீஞானசம்பந்தர்

க. மறைகலந்த வொலி பாடலோ டாடலர் (பிரமபுரம்)
உ. பண்ணிலாவு மறைபாடலினன் (புகலூர்)
ங. மந்திரவேதங்களோது நாவர் (மருகல் செங்காட்டங்குடி)
ச. பாடல்மறை வல்லான் (வீரட்டானம்)
ரு. பண்ணார் மறைபாட...... பரமன் ஷை
சு. மறையுடையாய் (நெடுங்களம்)
எ. பண்ணினார் மறைபாடலுடையவன் (கரவீரம்)
அ. பலவேதமங்கமாறு மறைநான் கவையுமானார் (சண்பை)
கூ. வேதமோதி வெண்ணூல்பூண்டு வெள்ளையெருதேறிப் பூதஞ்சூழப் பொலிய வருவார் (பழனம்)
க0. மறையின்னிசையார் (ஈங்கோய் மலை)
கக. பொய்யாமறை பாடல் புரிந்தான் (கோயில்)
கஉ. நால்வேதஞ்சொல்லார் கேண்மையார் (சீகாழி)
கங. பாடலன்மறையன் (ஆரூர்)
கச. அங்கமு நான்மறையு மருள்செய்தழகார்ந்த வஞ்சொன், மங்கையோர் கூறுடையான் (பாதாளேச்சுரம்)
கரு. மறையுமோதுவர் (பராயத்துறை)
கசு. வேதமெல்லா முறையால் விரித்தோத நின்ற ஒருவனார் ஷை
கஎ. ஆறுநான்குஞ் சொன்னானுமையாறுடையயனே (ஐயாறு)
கஅ. பங்கமில் பதினெட்டொடு நான்குக் குணர்வுமா யங்கமாறுஞ் சொன்னானுமையாறுடையயனே
கசு. நான்மறையோடாறங்கம் வல்லானை (சீகாழி)
மறைகள்வேதம் விரித்தோதுவார் (ஏகம்பம்

உக. தூயவாய மறையோதிய வாயனை (ஏகம்பம்)
உஉ. முன்னொரு நான்மறையாறங்கம் பழியாமை
பண்ணிசையான பகர்வானை (மணஞ்சேரி)
உங. வேதமென வங்கமவையோதுங் கருத்தவன் (கருப்பறியலூர்)
உச. ஓர் நால்வேதஞ் சொலச் சங்கையில்லாதீர் (தலைச்சங்காடு)
உரு. பண்ணமரு நான்மறையே பாடியாடல் பயில்கின்றீர் (நல்லூர்).
உசா. சுருதிமறை நான்கான செம்மை தருவானை (சீகாழி)
உஎ. வரிய மறையார் (கடவூர் மயானம்)
உஅ. வினைமிகு வேதநான்கும் விரிவித்த நாவின் விடையான் (நனிபள்ளி)
உகூ. மதிநுதல் மங்கையோடு வடபாலிருந்து மறையோது
மெங்கள் பரமன் (கோளறுபதிகம்)
ஙo. சாகையாயிர முடையார் சாமமு மோதுவதுடையார் (வாழ்கொளிபுத்தூர்)
ஙக. வேதந்தாம் பன்னுநன் பொருள் பயந்தவர் (சிரபுரம்)
ஙஉ. பன்னுலாவிய மறையொளி நாவினர் (கீழ்வேளூர்)
ஙங. வேதநான்கும் பதினெட்டொடாறும் விரித்தார்க்கிடம் (கேதாரம்)
ஙச. பாடினாய் மறையோடு பல்கீதமும் (கோயில்)
ஙரு. பாடினை யருமறை வரன்முறையால் (புகலி)
ஙசா. பன்னிய நான்மறை பாடியாடப் பலவூர்கள்போய் (புனல்வாயில்)
ஙஎ. மறையோதியும் (கோட்டாறு)
ஙஅ. தொகுத்தவனருமறை அங்கம் ஆகமம் வகுத்தவன் (விற்கோலம்)
ஙகூ. அங்கமாறுஞ் சொன்ன அடிகள் (தேவன்குடி)
சo. பாடினாரருமறை (சக்கரப்பள்ளி)
சக. நான்மறைப் பாடலார் ஷை
சஉ. மறையணி நாவினான் மாமழபாடியே (மழபாடி)
சங. வேதம் விரித்தோதுவார் (பெரும்பாழி)
சச. அருமறையின் பொருள் பாடினோர் (முதுகுன்றம்)
சரு. விரித்தவனான் மறையை (பனந்தாள்)
சசா. சொற்பிரிவிலாத மறைபாடி நடமாடுவர் (வேதிகுடி)
சஎ. ஓதி வாயதும் மறைகளே (வீழிமிழலை)
சஅ. மாமறைநாலுந் தம்பாட்டென்பர் (நல்லூர்ப்பெருமணம்)
சகூ. ஆனபாடலுகந்த திருக்கையே (திருவாலவாய்)
ருo. பண்டிருக்கொருநால்வர்க்கு நீருரைசெய்ததே (திருவான்மியூர்)
ருக. வேதநூல் பயில்கின்றது வாயிலே (ஆலவாய்)
ருஉ. சாமநல்வேதனும் (திருப்புகலி)
ருங. சாமவேதன் (பிரமபுரம்)
ருச. தயங்குசோதி சாமவேதா (வலிவலம்)
ருரு. மெய்பயின்றவ ரிருக்கையே (வீழிமிழலை)
ருசா. சொல்லுள சொல்லு நால்வேதப் பாட்டினார்போலும் (பந்தணைநல்லூர்)

அப்பமூர்த்திகள்

ருஎ. மிகைவளர் வேதகீத முறையோடும் வல்ல
கறைகொண்ட மணிசெய்மிடறர் (சிவனெனுமோசை)
ருஅ. விதிவிதி வேதகீத மொருபாடு மோதவொருபாடு
மெல்ல நகுமால் ஷை

ருகூ. நாலுகொலாமறை பாடினதாமே—(விடந்தீர்த்தபதிகம்)
சுO. ஓதினார் வேதம் வாயால் (கோயில்)
சுக. பாடினார் சாமவேதம் பாடிய பாணியாலே ஆடினார் (திருவதிகை)
சுஉ. கூறினாராறு நான்கும் ௸
சுந. அங்கமும் வேதம் வைத்தார் (கழிப்பாலை)
சுச. தூய நான்மறைகளான்கும் பாடினாரொருவர் போலும் (திருப்பழனம்)
சுரு ஆறுமோர் நான்குவேத மறமுரைத்தருளினானே (கோடிகா)
சுசு. மறையணி நாவினானை (பெருவேளூர்)
சுஎ. பாடினார் சாமவேதம் பைம்பொழிற் பழனமேயார் (ஆலங்காடு)
சுஅ. அரிய நான்மறை யோதிய நாவரோ (மறைக்காடு)
சுகூ. வேதமோதும் விரிசடை யண்ணலார் (இடைமருது)
எO. நல்லனைத்திகழ் நான்மறை யோதியை (வெண்ணி)
எக. அரிய நான்மறை யாறங்கமாயைந்து புரியன் (கடம்பந்துறை)
எஉ. பண்டு நான்மறையோதிய பாடலன் (புகலூர்)
எந. மன்னிநான்மறையோடு பலகீதமும்
பன்னினாரவர்பாலைத் துறையரே (பாலைத்துறை)
எச. வேதநாயகன் வேதியர்நாயகன் (ஆதிபுராணம்)
எரு. மந்திரமு மறைப்பொருளு மானான்றன்னை (வீரட்டானம்)
எசு. சாமவேதக் கந்தருவம் விரும்புமே ௸
எஎ. பாடுமே யொழியாதே நால்வேதமும் ௸
எஅ. நான்மறையோ டாறங்கமானாய் போற்றி ௸
எகூ. நான்மறையோ டாறங்கம் நவின்றநாவர் (பந்தணநல்லூர்)
அO. நான்மறையி னொலிதோன்றும் (பூவணம்)
அக. வேதத்தோ டாறங்கஞ் சொன்னார்போலும் (ஆக்கூர்)
அஉ. மறையோதிகாண் (ஆநூர்)
அந. நான்மறையோ டாறங்க மாயினான்காண் ௸
அச. மன்னியசீர்மறை நான்குமானாய்போற்றி ௸
அரு. நால்வேதங்க ரைகண்டானை (ஆவடுதுறை)
அசு. நான்மறைகளாயினான்காண் (வலிவலம்)
அஎ. பந்தரத்து நான்மறைகள் பாடினான்காண் (கோகரணம்)
அஅ. மன்னுருவாய் மாமறைகளோதினான்காண் ௸
அகூ. சந்தோக சாமமோதும் வாயானை (வீழிமிழலை)
கூO. மந்திரமு மறைப்பொருளு மாயினான்காண் ௸
கூக. ஓதாதே வேதமுணர்ந்தாய் போற்றி (கைலை)
கூஉ. மறையுடைய வேதம் விரித்தாய் போற்றி
கூந. மறை கொணாவா (கன்றாப்பூர்)
கூச. மெய்ஞ்ஞானம் விரித்தவன்காண்
விரித்த நால்வேதத்தான்காண் } (ஏகம்பம்)
கூரு. நாலுமறை அங்கமோதக் கண்டேன் (வாய்மூர்)
கூசு. விரித்தானை நான்மறையோடங்கமாறும் (மாற்பேறு)
கூஎ. அருமறையோ டாறங்கமாய்ந்துகொண்டு
பாடினார் நால்வேதம் (பாசூர்)
கூஅ. அங்கமாயாதியாய் வேதமாகி யருமறையோ
டைம்பூதந்தானேயாகி (நின்றதிருத்தாண்டகம்)

### சுந்தரமூர்த்திகள்

௯௯. மறையோதீ மங்கைபங்கா (வெண்ணெய்நல்லூர்)
௧௦௦. பன்னுரன் மறை பாடுதிர் (கோத்திட்டை)
௧௦௧. விரித்தவேத மோதவல்லார் (வெண்காடு)
௧௦௨. மறைநான்கும் விரித்துகந்தீர் (முதுகுன்றம்)
௧௦௩. திருந்துநான் மறை பாடவல்லானை (வாழ்கொளிபுத்தூர்)
௧௦௪. அருமறை யவையங்கம் வல்லானை (ஏகம்பம்)
௧௦௫. சாமவேதம் பெரிது முகப்பானை
௧௦௬. வேத நான்கும் விரித்தோதியோர் நம்பி (நம்பி என்ற பதிகம்)
௧௦௭. சாமவேதனைத் தன்னொப்பிலானை (நன்னாறு)
௧௦௮. அங்கங்களு மறை நான்குடன் விரித்தா
னிடமறிந்தோம் (மறைக்காடு)
௧௦௯. சொற்பொருளாய்ச் சுருங்கா மறை
நான்கினையுமோதியன் (நனிபள்ளி)
௧௧௦. பாடிய நான்மறையான் (நன்னிலம்)

### திருவாசகம்

௧௧௧. மூவா நான்மறை முதல்வா போற்றி.
௧௧௨. மிக்கவேத மெய்ந்நூல் சொன்னவனே.
௧௧௩. ஆய நான்மறை யவனு நீயே.
௧௧௪. துண்டப் பிறையான் மறையான்.
௧௧௫. வேதமும் வேள்வியு மாயினார்க்கு.
௧௧௬. பேசுவதுந் திருவாயான் மறைபோலும்.
௧௧௭. வேதமொழியர்
௧௧௮. முடிவில்லா வேதத்தானே.
௧௧௯. மறை பயின்ற வாசகன்.

### திருவிசைப்பா

௧௨௦. சாமகண்டா அண்டவாணா.
௧௨௧. ஆரணம் மொழியும் பவளவாய் மணியே.

### திருமந்திரம்

௧௨௨. ஆறங்கமாய வருமாமறை யோதியை.
௧௨௩. வேதமோடாகம மெய்யா மிறைவனூல்
ஓதுஞ்சிறப்பும் பொதுவு மென்றுன்னு
நாதனுரை யவை.
௧௨௪. அரனுரை செய்தரு ளாகமந்தன்னில்.
௧௨௫. முதலாகும் வேதமுழுதாகம மகப்பதியான
வீசன் பகர்ந்ததிரண்டு.

### பதினோராந் திருமுறை

௧௨௬. வேதியனை வேத விழுப்பொருளானை
வேதத்துக்காதியனை (காரைக்காலம்மையார்)
௧௨௭. தெய்வமறை நான்கினையுந் தன்றிருவாய்ப்
பாடியான் (ஐயடிகள் காடவர் கோனயனார்)
௧௨௮. ஈங்கோயே வேதவிளம்பிறை சேர்வான்
கடுக்கும்வெற்பு (நக்கீரர்)

கஉகூ. தீதில் மறைகண்டான் (நக்கீரர்)
கஙo. நான்கும் வின்வாய் மொழி ஷை
கஙக. வேதநான்காறங்கம் வேறுரைத்தமேனி விரிசடையன் ஷை
கஙஉ. நான்மறைகள் பகரக்கழலவனைப் பதிஞாயிரம் பதிகம் ...
...வாய் மொழிந்த......காழிப்பிரான் (நம்பியாண்டார் நம்பி)

சிவஞான சித்தியார்

கஙங. மறைகளீசன் சொல்
கஙச. ஆரணமாகமங்களருளினுலுருவு கொண்டு
காரணனருளானுகிற் கதிப்பவரில்லை
கஙரு. வேதநூல் சைவநூலென்றிரண்டே நூல்கள்.....
ஆதிநூலநாதியமலன்றரு நூலிரண்டும்

---

வேதசிவாகமங்கள் இறைவன் வாக்கென்றேகூறும் பிரமாணங்கள் சைவத்திருமுறைகளில் எண்ணிறந்தனவுள. அவற்றுள் (கஙரு) பிரமாணங்கள் மேலே எடுத்துக்காட்டப்பட்டன. இத்திருமுறைப் பகுதிகளை ஆக்கியோர் ஒருகாலத்தவரல்லர். ஓரூரரல்லர். ஒருகாலத்நிலேயே ஆக்கப்பட்டவையுமல்ல. திருமூலரோசித்தயோகி. அவரருளியமந்திரங்களில் ஒவ்வொருமொழியும் ஆழமான பொருள்கொண்டதே. அருணந்தி சிவாசாரியர் மூவகை யளவைகளாலும் ஒவ்வொரு விஷயத்தையுந் தாபிக்கப்புகுந்து நஞ் சைவசித்தாந்தத்தை நிலைநிறுத்துவாராயினர். இவர்களும் வேதாகமங்கள் சிவபிரான்வாக்கென்றே கொண்டார்கள். பாடப்பட்டதுபாட்டாகும். மேற்காட்டிய பலபிரமாணங்களில் பாடினார் பாடினார் என்று பன்முறையும் காணப்பட்டும் "நாலுந் தம்பாட்டென்பர்" என்பதாதியவுங்காணப்படுதலால், இறைவன் வேதாகமங்களைச் சொன்மாலையாகவே அருளினானென்பதும் போதரும். திருவாசகத்தில், ஆகமங்களை இறைவன் தமது ஐம்முகத்தாற் பணித்தருளியதாக விளக்குவதும் ஆகமங்களிற்கூறப்பட்டிருப்பதற்கிணக்கமாகவேயிருக்கின்றது. சைவசமயநெறியில்.(ஙஉஅ-வது திருக்குறள். முதல் ஙஙகூ-வது வரை வேதசிவாகமங்கள் சதாசிவமூர்த்தியின் ஐம்முகங்களிலிருந்தும் உற்பத்தியானவைகளென்றே சொல்லப்பட்டிருக்கின்றன. வேதசிவாகமங்கள் சிவபிரான் வாக்கென்று கூறும் அளவற்ற தமிழ்மறை வாக்கியங்களில் ஆறு வாக்கியங்களைக் காட்டி, இச்சொற்கள் உருவகப் பொருள்கள் தருவனவென்றும் நேர் பொருள் கொள்ளற்பாலன அல்லவென்றும், நம் நண்பர், எழுதினர். மேற்காட்டிய கஙரு பிரமாணங்களும் உருவகப்பொருளா? ஒரே விஷயத்தை நமதுபண்டைய மேன்மக்கள் எல்லோரும் உருவகப் பொருளிலா பாடினார்கள். வடமொழி வேதங்களும், வேதசிவாகமங்கள் சிவபிரான் வாக்கென்றே கூறும்,

𑌅𑌸𑍍𑌯 𑌮𑌹𑌤𑍋 𑌭𑍂𑌤𑌸𑍍𑌯 𑌨𑌿𑌶𑍍𑌵𑌸𑌿𑌤𑌮𑍇𑌤𑌦𑍍 𑌋𑌗𑍍𑌵𑍇𑌦𑍋
𑌯𑌜𑍁𑌰𑍍𑌵𑍇𑌦𑌃 𑌸𑌾𑌮𑌵𑍇𑌦𑍋𑌽𑌥𑌰𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑌿𑌰𑌸 𑌇𑌤𑌿𑌹𑌾𑌸𑌃 𑌪𑍁-
𑌰𑌾𑌣𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌉𑌪𑌨𑌿𑌷𑌦𑌃 ॥

அஸ்யமஹதோ பூதஸ்யநி: ச்வஸிதமேதத்
ருக்வேதோ யஜுர்வேதஸ்ஸாமவேத: ||

'இருக்குவேதம், யசுர்வேதம், சாமவேத முதலிய, இந்தப் பரம் பொருளின் சுவாசம்' என்று பிருகதாரணிய உபநிடதம் கூறும்—இதுவும் உருவகப் பொருள்தானே? தமிழ்க்கல்வி வாணர்களே நடுவு நிலைமையாய்ச் சொல்லுங்கள். மற்றொரு விடயம் ஆராய்ச்சிக்கு உரியது. உருவகம் என்றாலென்னை? அதன் இலக்கண மென்னை? செய்யுட்களின் பொருட்களை அலங்கரிப்பாய்க்காட்ட இலக்கண நூலார் தொகுத்திருக்கும் ௧00-அணிகளுள் அது ஒன்று. உருவகமாவது உபமேயத்தினிடத்து உபமானத்தின் தன்மையை யேற்றிக்கூறுவது என்று இலக்கண நூலோர் சொல்லுவார்கள். பகைவர்களாகிய யானைகளுக்கு இராமன் சிங்கம் என்பதுபோல்வது. மேற்காட்டிய திருமுறைப்பிரமாண மேற்கோள்களில் உபமேயம் யாது? உபமானம் யாது? இவ்வகை ஒன்றுங் காணோம். இதனால் இச்சொற்கள் உருவகப் பொருள் தருவனவென்று நண்பர்கூறுவது பொருந்தாது. இவ்விஷயத்தை இலக்கண நூல்வல்லோர் நன்கு அறிவர்.

௧௪. வேதசிவாகமங்களின் உற்பத்தியைப்பற்றித் திராவிட பாஷ்ய கர்த்தரான மாதவச்சிவஞான முனிவர், சிவஞானபாடியம் சிறப்புப்பாயிர உரையில் ௧0-வதுபக்கத்திற் கூறுவதாவது.

"மகா சங்காரகால முடிவின்கண் உலகங்களை மீளப்
"படைத்தற்பொருட்டுப் பரமான்மாவாகிய பரமசிவத்தி
"னுடைய பராசத்திகுடிலையை நோக்கியவழி, வேதாகமங்கள்
"குடிலையினின்றும் நாதவடிவாயும், அதன்பின் விந்துவடி
"வாயும் முறையே தோன்றின. பின் அவற்றைச் சொற்றொடர்ப்
"படுத்துச் செய்யுளாக்கிப் பிறர்க்கு அருளிச்செய்தற்
"பொருட்டுப் பரமசிவன் ஈசானம் முதலிய பஞ்சப் பிரமமனுக்
"களாகிய சத்திகளே திருவடி முதலிய அவயவங்களாகச்
"சகளநிட்களத்திருமேனிகொண்டருளிச் சதாசிவமூர்த்தியாய்
"நின்று தற்புருடம் முதலிய நான்கு முகங்களால் வேதங்
"களைத் தோற்றுவித்து மேற்கண்ணதாகிய ஈசான முதலாகிய
"ஐந்து திருமுகங்களானும் காமிகம் முதலிய இருபத்தெட்டு
"ஆகமங்களையுந் தோற்றுவித்து, வேதங்களை அநந்த தேவர்
"வழியானே பிரமனுக்கு அருளிச்செய்து சிவாகமங்களைப்
"பிரதி சங்கிதைமுறையானே பிரணவர் முதலிய பதின்மரும்

"மகாருத்திரர் முதலிய பதினெண்மருமாகிய இருபத்தெண்
"மருக்குஞ் சிவபேதம் உருத்திரபேதமெனப் பகுத்து ஓரோ
"வொன்று ஒவ்வொருவருக்கு அருளிச்செய்து, பின்பும்
"கௌகமுறையானே அவ்விருபத்தெட்டினையும் வித்தியேசர்,
"எண்மரின் முதல்வராகிய அநந்த தேவருக்கு அருளிச்செய்
"தான். அவற்றை அநந்ததேவர் நூற்றுப்பதினெட்டு உருத்திர
"ரின் முதல்வராகிய சீகண்டருத்திரருக்கு அருளிச்செய்தார்.
"அவற்றை சீகண்டருத்திரர் கணங்கட்கும் தேவர்க்கும் முனி
"வர்க்கும் அளித்தற்பொருட்டு முதற்கண் நந்திபெருமானுக்கு
"அருளிச்செய்தார். இது சிவாகமம் வந்த வரலாறென்
"றுணர்க" என்பதே.

கரு. சிவஞான முனிவர் எத்தகையரெனின் அவருக்கு இருமொழியினுமுண்டாயிருந்த ஆற்றல் தமிழ்ச் சைவ உலக முற்றும் நன்குணர்ந்ததே. விவாத திருநான்மறை விளக்கம் எழுதிய நம் நண்பர், திராவிட மாபாடியம் அச்சியற்றி வெளி வந்திருக்கும் புத்தகத்திற் கொடுத்திருக்கும் முகவுரையில் சிவஞான முனிவரைப்பற்றி யெழுதியிருப்பதாவது:—"சிவ
"ஞானபோதப் பொருளை விரிவாகவுந் தெளிவாகவும் அளவை
"முறைக்கேற்பவும் விளக்கும் உரை நடை நூலொன்று இன்றி
"யமையாததாயிற்று. அப்பெற்றித்தாகிய பேருரைப் பெரு
"நூலைத் தமிழ் மக்களுக்களித்தருளிய வள்ளல், வெளாண்
"குல முதல்வராய்த் தோன்றித் தமிழ் நூற்கடலும் வடநூற்
"கடலும் நிலை கண்டுணர்ந்த சிவானுபூதிச் செல்வராகிய துறை
"சை மாதவச் சிவஞான யோகியோராவர். இந்நூலானது......
"வடமொழி வேதாகமப் பொருட்டிட்பமும் இருமொழிச்
"சைவ நூற்பொருளொருமையும் மற்றதற்குரிய தெளிவினை
"யும் ஒருங்கே கொண்டுள்ளது...... அளவை நூலாட்சியில்
"இதற்கு இணையாய்த் தமிழ் நூல் வேறியாதுமில்லை. எப்
"பொருளும் முன்னொடுபின் முரணுதலின்றித் திறம் பெற
"விளக்கப்பட்டுளது."

சிவஞான முனிவர் சிவாகமங்களின் கருத்தைக் கண்டு வேத சிவாகமம் உற்பத்தியைக் கூறியிருப்பதில், பரமசிவன் சதாசிவமூர்த்தியாய் நின்று அக்கரத்தைச் சொற்றொடர்ப் படுத்துச் செய்யுளாக்கி வேதங்களையும் ஆகமங்களையும் ஐந்து முகத்தினின்றுந் தோற்றுவித்ததாகக் கூறி இருக்கின்றார். இதற்கு முற்றிலும் முரணாக, இறைவன் சொன்மாலையாக நூல் செய்யவேண்டிய தவசியமில்லை யென்று நம்மவர் இங்குக் கூறி யிருக்கின்றார். சிவஞான முனிவரைப், பாடிய முகவுரையில், மேற்கண்டவாறு புகழ்ந்து கூறினார். இதனாலேற்படுவதி

யாதெனின், இவர் பல நூல்களுக்கெழுதிவரும் முகவுரைகள் உண்மைப் பொருள் கொண்டிலவென்பதே. "ஆலலாலிருக்கை யில்லை அருந்தவ முனிவர்க்கன்று நூலலா லொழிவதில்லை" என அப்பமூர்த்திகளருளிய திராவிட சுருதியினால் நான்கு முனிவர்க்கும் அருளியவை நூல் என்றே வெளிப்படையாக வும் விளங்குகின்றது.

௧௬. வேதசிவாகமங்களை ஆக்கிய முதலாசிரியர் சிவபிரா னென்பதனாலன்றோ, திவாகரத்திலும் பிங்கலந்தையிலும் சூடா மணி நிகண்டிலும் சிவனது பல நாமங்களைத் தொகுத்துக் கூறு மிடத்து வேத முதல்வன், மறைமுதல் என்னும் நாமங்களுஞ் சிவபிரானுக்கே காணப்படுகின்றன. மற்றைய கடவுளர்க்கு இந்நாம முரித்தெனக் கூறியிருக்கவுமில்லை.

மற்றும் 'உரைகடந்தோதுநீர்மை,' 'சொற்பிரிவிலாத மறை,' 'பண்ணொன்மறை பாடுதிர்' என்ற தமிழ்மறைச் சொற் றொடர்ப் பகுதிகட்கு இவர் கொண்ட பொருளிலும் ஆட்சேப முளது. முதல் வாக்கியத்தின் சுத்தபாடம் உரைக்கடந்தோது என்பதே. அதற்கிணக்கமாகவே மற்றைய மூன்றடிகளும் கரைக் கடந்து, அரைக்கிடந்து, இரைக்கிடந்து, எனப்பண் இசைக் குத் தகுதியாகக் ககர மெய்யை விரித்துப் பாடங் கொள் ளப்பட்டிருக்கின்றது. நம்மவர் யாது காரணம் பற்றியோ ககர மெய்யை நீக்கிக்கொண்டார். அஃது எங்ஙனமாயினுமாகுக. அதற்குப் பொருள், "ஓது நீர்மை உரைகடந்தது என்பது அறியக்கிடந்தது" என்றார். உரைகடந்தவென எச்சப்பொரு ளில் ஆசிரியர் கூறியிருப்பதைக் கடந்தது என முற்றுப் பொரு ளில் வைத்துக்கொண்டு எவ்வாறு பொருள்கொண்டார்? அதன் பொருள், உரையைக்கடந்து ஓதும் நீர்மையை உணர்ந்திலே னென்பதாகப் பெரியோர் கொள்வர். சொற்பதங் கடந்த தொல்லோன் என்பதாதிய போல—பண்ணொன் மறை பாடு திர் என்றால் பலதிறப்பட்ட நான்மறைகளைப் பாடுகின்றீர் என்றே பொருள்படும். செம்பாகமான பொருளைத் தள்ளிவிட்டு வலிந்து பொருள்கொள்ளப் பாடுபடுவானேன்? சொற்பிரிவி லாத மறையென்றது பிரணவ மந்திரமென்றார். பிரணவ மென்று சொல்லவேண்டியிருந்தால் திருமுறையில் மற்றும் இடங்களில் அம்மகா மந்திரத்தை வெளிப்படையாகக் கூறிய தொப்ப இங்குங் கூறியேயிருப்பார்கள். இவ்விஷயம் விரிக்கிற் பெருகும். நிற்க. மேலாராய்வாம்.

இனி நம்மவர் கூறுவதாவது, "கடவுள் வாக்கென்று "கூறும் வடமொழி வேதம்போன்ற நூல்கள் தம்மையியற்றி "யோர், கடவுளல்லாத பிறர் என்று தாமே நன்கு விளக்கு

"கின்றன.........இன்றுள்ள வடமொழி நான்கு வேதங்களும் "சிவபெருமானுள்ளிட்ட தெய்வங்களை வழிபட்டுப் பயன் "பெற்றோர் கூறிய பதிகங்களையும் வேள்வி விதிகளையும் பற்பல "ஆன்றோர் செய்த தத்துவ ஆராய்ச்சி வரலாறுகளையும் "சேர்த்து வியாசர் தொகுத்த ஓர் தொகை நூல்களாக விளங்கு "கின்றன" என்றார். பின்னால் நம் நண்பர் வேதவழக்கை விரித்துக்கூறுமிடத்தில் இவ்விஷயம் விவரிக்கப்படும். நிற்க மேலாராய்வாம்.

கஎ. இனி நம்மவர் கூறுவதாவது:—"ஆலநிழற்கீழ் முனிவர் நால்வரும் தாங்கள் கூறப்புகும் மறைகட்கு மூலமாகிய பொருளை இறைவர்பாற் கேட்டுணர்ந்தனர் என்பது பின்வரும் திருவாக்குகளால் இனிது விளங்கும்."

க. "எரிசையும் வடவாலின் கீழிருந்தங் கீரிருவர்க்கிரங்கி நின்று—நேரியனுன் மறைப்பொருளை யுரைத்தொளி சேர் நெறியளித்தானின்ற கோயில்,"

உ. 'எண்ணியோர் வடத்தினீழனல்வர்க்கருளியன்றெண்ணிலி மறைப்பொருள் விரித்தவனிடஞ்சேர்"

ங. "திருந்து மறைப்பொருணல்வர்க்கருள் செய்தானை"

ச. ஓதியாரணமாய நுண்பொருளன்று நால்வர்முன் கேட்க நன்னெறி—நீதியாலுரைக்கின்ற நீர்மையதென்"

"என்ற திருவாக்குகளுக்கு வேறொரு முறையிற் "பொருள் கொள்வர். அவர் ஆதியில் நான்மறைகள் இருந்தன. "அவற்றின் பொருளைச் சிவபிரான் பாலுணர்ந்தனர் என்பர்" என்றெழுதிக்கொண்டு நால்வரும் பிரமதேவன் புதல்வரென்கின்றார்களே, அற்றேல் அவர்கள் தாதையாராகிய பிரமாவிடம் கேட்டிருக்கலாமே, அல்லது சிவபெருமானால் பிரமாவுக்குக் கொடுக்கப்பட்டன நால்வேதமானதால் சிவனிடம் சென்றாரென்றால், சிவன் நால்வேதங்களையும் அருந்தவத்தினர்க்கும் பொருள் தோன்றாவண்ணம் இயற்றியிருப்பது என்ன பிரயோசனம், அல்லது வியாசர்பால் நால்வரும் பொருள் கேட்டிருத்தல்கூடும் என்றும், ஆலநிழற்கீழ் நால்வரும் அறங்கேட்பதற்கு முன் கடவுள் கூறிய வேதம் நான்காவதற்குக் காரணம் விளங்கவில்லையென்றும், குமார்க்கமான வினுக்களை எழுப்பிக்கொண்டு, "ஆலின்கீழ் முனிவர் நால்வரும் அருள்பெறுவதற்கு முன் உலகத்தார்க்குப் பயன்றரவல்ல வேதநூல் ஒன்றுமில்லையென்பதே தெளிவு" என்று எழுதியிருக்கின்றார். இதனால், இவர் கருத்து யாதெனில் ஆலின்கீழ் நால்வர் இறைவன்பால் உண்மைப்பொருளை முன்னர் உணர்ந்து அப்பொருளை அடக்கி நான்மறை அம்முனிவரால் இயற்றப்பட்டதென்பது. நண்பரது வினுக்களுக்கு விடை வருமாறு. மேற்காட்டிய

சிவஞான பாடியத்தில் சிவஞான போதப்பாயிரத்துக்குக் கண்ட உரையில் வேதசிவாகமம் உற்பத்தியின் விவரஞ் சொல்லியிருப்பதை நம்மவர் ஞாபகத்தில் வைத்திருப்பாரேல் இங்கு இவ்வாறு எழுத மனந்துணியார். சதாசிவமூர்த்தியின் கீழ் நான்முகங்களிலிருந்து ஆதியாக நான்கு வேதங்கள் தோன்றினமையான் வேதம் நான்காயிற்று. பிரமன் வேதந் தந்தானெனல், கூலியாள் தன் தலையில் மூட்டையெடுத்துப்போய் அதன் சொந்தக்காரனிடம் ஒப்பித்தது போலாம்—நான்முகனுக்கு வேதப்பொருள் விளங்காமையினன்றோ நமது முருகப்பிரானால் அவன் சிறையிலிடப்பட்டான். பிரமனும் முக்குணவயப்பட்டவனன்றோ? பிரமன் உலகப் படைப்புக்கு ஆரம்பித்து மானசபுத்திரர் நால்வரையும் ஈந்தான். அவர்கள் உலகத்தில் பற்றற்றவர்களாகிச் சிவபிரானிடம் ஞானம் பெறவேண்டி முதற்கண் வேதங்களையும் அவற்றின் பொருளையும் கேட்டுணர்ந்தார்கள். வியாசர் காலத்துக்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னர் நால்வர் தவங்கிடந்து சிவபெருமானால் உபதேசிக்கப்பெற்றவராவார்கள். சிவபெருமான் அருளிய வேதத்தின் பொருள். தவமும் தவமுடையார்க்காகும், என்ற தமிழ்மறை வசனப்படி, ஆன்மாக்கள் செய்த தவத்தின் அளவுக்குத் தக்கபடி விளங்கும். இவை நிற்க, நால்வரும் சிவபெருமானிடம் கல்லாலமரத்தின் கீழ்ப் பெற்றது தாங்கள் பின்னர் செய்த நான்மறைகளுக்கு மூலமாயுள்ள உண்மையறிவை யென்றும் அவ்வாறு உண்மையறிவைப் பெற்றபின்னரே அந்நால்வரும் நான்மறைகள் செய்தாரென்றும் நம்மவர் கருதி அக்கருத்துக்கு ஆதாரவுபோல் மேலே குறிப்பிட்டெழுதியிருக்கிற க. உ. ங. ச. வாக்கியங்களையும் ஆராய்வாம். இந்நான்கு வாக்கியங்களினும் நான்மறைப் பொருளை, எண்ணிலி மறைப்பொருளை, திருந்து மறைப் பொருளை, ஆரணமாய ஓதி நுண் பொருளை, என மறைகளின் பொருளை நால்வர் உணரச் சிவபிரான் உரைத்தனர் எனத் தெளிவாய் விளங்குதலால் அப்பொருளை அறிவதற்கு முன்னரேயே நான்மறைகளிருந்தனவென்பதும் தெள்ளிதாய் விளக்கமாகும். தாங்கள் கூறப்புகும் மறைகட்கு மூலமாகிய பொருளை (மட்டும்) இறைவர்பாற் கேட்டுணர்ந்தாரென இவ்வாக்கியங்களிற் கூறியிருக்கவில்லை. அல்லாமலும் "ஆலதன் கீழிருந்து நால்வர்க்கறம்பொருள் வீடின்பமாறங்கம் வேதந்தெரித்தானை" யென்று நந்திருமுறை மற்றோரிடத்தில் விரித்தோதியவதன் பொருளையே தொகுத்துக்கூறிய மேற்காட்டிய க-உ-ங-ச வாக்கியங்களுக்கும் பொருளெனக் கொள்ளற்பாலது முறைமையாம். ஆலநிழலில நால்வர்க்கு இறைவனருளியது முன்னிருந்த வேதங்களையே யென்பதை மற்றொரு வகையாலும் காட்டுவாம். சிவ

ஞான சித்தியார் பரபட்சம் பாஞ்சராத்திரி மதம் மறுதலை ச-வது செய்யுள்—“ நூலினை யுரைத்து வேத நூலினை நுவலும் வண்ணமாலருள் செய்தானென்றாய் மறைநீதி யுலகியற்கை சாலவே தெரியாதாகிக்கிடந்த நாள் சகத்தியார்க்குமாலின் கீழிருந்து வேத மருளினனறைந்தானாலே.” வேதங்களைத் திருமால் வகுத்தாரென்று பாஞ்சராத்திரி கூறியதற்கு, அது உண்மையல்ல, கல்லாலடியிலிருந்து எம்மிறைவனாகிய பரமேஸ்வரன் வேதங்களையும்ஆகமங்களையும்அருளினரென்று சந்தான குரவராகிய அருணந்தி சிவாசாரியர் இச்செய்யுள் முகத்தாற் கூறினர். இச்செய்யுளுக்கு உரை எழுதிய ஆசிரியர். “நீதியை நிறைவை மறை நான்குடன் ஓதியை” என்ற தேவாரப்பாசுரத்தையும், “நன்றாக நால்வர்க்கு நான்மறையினுட் பொருளை யன்றாலின் கீழிருந்தங்கற முரைத்தான்,” என்னுந் திருவாசகச் செய்யுளையும், “வேதமே முதலாயுள்ள வியன்கலையனைத்துந் தொன்று ளோதினனவனை யெங்கட்குரைத்திடவுணர்ந்தா மன்றே, யீது நீயவற்றிற் காண்டியாரு மொன்றாகக் கொண்டாய், பேதையோ பெரிதுமென்னப் பிதாமகனிலைய சொற்றான்.” என்னுங் கந்தபுராணச் செய்யுளையும் மேற்கோளாக எடுத்துக்காட்டியுள்ளார். ஆதலான், “ஆலின்கீழ் முனிவர் நால்வரும் அருள்பெறுவதற்குமுன் உலகத்தார்க்குப் பயன்றரவல்ல வேதநூல் ஒன்றுமில்லை யென்பதே தெளிவு” என நம்மவர் எழுதிய வாசகம் பண்டைய நமது சைவநூற் பிரமாணங்கட்குமுரணுயுள்ளமயக்கஉரையே. விவாதத்திருநான்மறை விளக்கத்தின் முடிபில், தமிழ்மக்கள் சிறந்த பிரமாண நூல்களாகக் கொள்ளற்பாலனவென்று நம்மவர் காட்டிய நூல்களில் சிவஞான சித்தியாரும் ஒன்று. அதிற் கூறிய மேற்காட்டிய செய்யுட்கு நம்மவர் என்ன உரை பகர்வரோ? இன்னொரு விஷயம் இங்குக் குறிக்கத்தக்கது. நம்மவர் கூற்றுப்படி தமிழ் மக்கள் நால்வர் நான்கு நூல்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் பகுதிகட்குச் செய்திருப்பாரேயானால், அந்நூலுக்கு மறையென்ற பெயர் வருவானேன். மறையென்றது தமிழ்ச்சொல்லே. அது வினைச்சொல்லாயும் பெயர்ச்சொல்லாயும் நின்று வெளிப்படையாய்ப் புலப்படாமல் மறைத்து வைத்தல் எனும் பொருள்கொண்டது. தமிழ்மக்கள்செய்த நூல்களை யாருக்கு மறைத்துவைத்தார்கள். கடல் மறைத்துக் கொள்ளுமென்றதனை முன்னுணர்ந்து அதனால் அப்பெயர் கொடுத்தாரோ? அந்நால்வருக்கும் மறையென்ற பெயரிருந்திருக்கலாம் அதனால், அவர்கள் பெயர் அவர்கள் செய்த நூல்களுக்கு வந்திருக்கலாமென்று நம்மவர் யூகிக்கிறார். அவர்களுக்குத்தான் மறையென்று பெயர் உண்டாவதற்குக் காரண

மென்னை? அந்நால்வர்களில் ஒவ்வொருவருக்கும் அப்பெயர் என்ன காரணத்தால் யாராற்கொடுக்கப்பட்டது? இவை போன்ற பல ஆசங்கைகளுண்டாம். இவைகளுக்கு விடைபகரு வதென்றாலோ, அந்நான்மறைகளும் கடலோடு போயிற்று. அந்நான்மறைகள் உண்டாயினவென்பதற்கும் ஒருவகைச் சரித்திரமும் இம்மியுமில்லை. ஆதலால், "மறையே வேதமும் மறைத்து மொழிகிளவியும்," என்னுஞ் சூத்திரம் தோன்றியதில், மறையென்ற சொற்கு மறைத்து மொழிகிளவியெனக் கூறியது பொருந்தியதே. மறை யென்றது தமிழ்ச்சொல். அது, மறைத்து வெளியாக்காது இரகசியத்தில் வையென்னும் பொருள்படும். மேற் சூத்திரத்தில் வேதம் என்ற சொல் வடமொழிவேதத்தையே குறிக்குமென்பதை யாரும் மறுக்கார். வேதம் என்றால் அறிவு, ஞானம் எனப்பொருள்படும். அறிவு, ஞானம் எல்லோருக்கும் பொதுவே. அவ்வகைப்பொருளடங்கிய நூலை மறையென்ற பெயரால் எங்ஙனம் கூறலாம். ஆதலால், தமிழ்ப் பாஷைக்கு மறைத்துவைக்கப்பட்டு ஆரிய மொழியால் வேதம் வெளிப்பட்டமையால், அதற்கு மறையென்ற காரணப் பெயரை நம்முதறிவாளர்கள் சூட்டினார்களென்பதே பொருத்தமான வியாக்கியையாயிருக்கின்றது. நிற்க மேலாராய்வாம்.

கூஅ. இனி நம்மவர் கூறுவதாவது:—"ஆலநிழலில் கட "வுள்பால் நால்வரும் ஞானம் பெற்ற பின்னேயே, இந்நிலவுல "கத்தில் மறைகளுநான்கு மெழுந்தனவென்பது பெறப்படும். "அவை அந்நால்வரால் செய்யப்பெற்றமை,

"சோதின் மாதவர் குழுவுடன் கூடக்
சோலை வாளிழற்கீ ழறம்பகா
வேதஞ்செய்தவ ரெய்திய வின்பம் யானுங்கேட்டு
நின் னிணையடி யடைந்தேன்"

"என்னும் ஸ்ரீ கந்தமூர்த்தி சுவாமிகளது திருவாக்காற் போத "ரும். இந்நான்கு முனிவர்களுமியற்றிய நான்மறைகள் * வட "மொழிப்பாஷிற்சி மிக்க பிற்காலத்தே வேதம் என்னும் வட "சொல்லாற் குறிக்கப்பெற்றன" என்பது. இவ்விடயம் ஆரா யற்பாலது. மேலே காட்டிய தமிழ்த் திருமுறைகளின் எண் ணிறந்த மேற்கோள்களாலும் ஆசிரியர் சிவஞானமுனிவரின் பாடியத்தாலும் வடமொழி உபநிஷத்து வாக்கியத்தாலும் வேத சிவாகமங்கள், முதல்வன் வாக்கென்பதை காட்டினோம். இனி யும் அவ்விடயம் ஆராயப் புகுதல் மிகையாம். மேற் காட்டிய

* வேதம் என்னுஞ் சொல் தமிழ் மொழியே என மற்றொரு நவீனப் பிரசங்க ஆசிரியர் எழுதியிருக்கின்றார்.

பாசுரத்தின் கருத்து நம்மவர் கொண்டதுதானாவென்பதை இப்போது ஆராயவேண்டும். நமது திருமுறைகளில் நால்வர் நான்மறைகள் செய்தாரென்பதற்குப் பிரமாணம் ஓரிடத்திலுமில்லை. மேற்காட்டிய பாசுரத்தில் 'வேதஞ்செய்தவர்' என்ற ஓர் சொற்றொடரிருப்பதை நம்மவர் கண்டார். இதைக்கொண்டு தங்கருத்தைத் தாபித்துக்கொள்ளலாம் என்றெண்ணி அப்பாசுரத்தின் பொருளை நன்கு அறியாது. 'திருவாக்காற்போதரும்' எனச் சுருக்கமாய் மொழிந்தனர். இப்பாசுர விஷயமாய் எமக்கும் திருநான்மறைவிளக்கம் எழுதியோர்க்கும் நேரிட்ட சங்கைகள் பல. அச்சங்கைகள் முடிவு பெறாததனாற்றான் இவ்வாராய்ச்சி யெழுத நேரிட்டது. செந்தமிழ்ச்செல்வி பக்கம் ௩௪௩ முதல் ௩௪௬ வரையிலும், ௩௫௫ முதல் ௩௬௧ வரையிலும், இவ்வாசங்கை விஷயம் பார்க்கலாம். யாம் விவகரித்து உசாவின விடயங்களை முற்றிலும் அப்பக்கங்களில் காட்டாது சில பாகத்தை மட்டும் அதில் வெளியிட்டமையின், அது விஷயம் கரூரில் பிரசுரமாய் வரும் சைவ பரிபாலனப் பத்திரிகைப் புத்தகம்—உ பதிப்பு ௩அ பக்கம் ௩-௪-ல் விவரித்திருக்கிறோம். நிற்க, மேற்காட்டிய தேவாரப்பகுதி அடங்கிய பாசுரத்தை முற்றிலும் இங்கு எழுதுவது அவசியமாயிருப்பதால், அதை எழுதுகின்றோம்.

"காது பொத்தரைக் கின்னரருழுவை கடிக்கும் பன்னகம் பிடிப்பருஞ்சீயம்—கோதின் மாதவர் குழுவுடன் கேட்பக் கோலவாலிழற் கீழறம்பகர—வேதஞ்செய்தவரெய்தியவின்பமியானுங்கேட்டு நின்னிணையடி யடைந்தேன்—நீதிவேதியர் நிறைபுகழுலகினீடு தென்திரு நின்றியூரானே"—என்பதே.

கல்லாலடியில், இறைவர்பால் அறங்கேட்டவர் நால்வர் எனத் தமிழ்மறையில் பலவிடங்களிலும் கூறியிருக்க விச்செய்யுளில் மட்டும் நால்வர் எனக் கூறவில்லை. அந்நால்வரைத்தான் கோதின் மாதவரெனக் கூறியதாமெனின் அது ஒக்கும். ஆனால் அம்மாதவரோடு காதுபொத்தர், கின்னரர், என்பாரும் உழுவை, பன்னகம், சீயம், என்பவைகளும் கூடவிருந்து அறங்கேட்டதாக இப்பாசுரம் விளக்குகின்றது. ஆதலால் நால்வர் அறங்கேட்டு வேதஞ் செய்தாரென நம்மவர்கூறுங் கூற்று, வெற்றுரையாயிற்று. இப்பாசுரத்திற்குப் பதவுரை கூறவேண்டுமென நம்மவரை யாம் வினவியதற்குக் 'கோதின் மாதவர் என்கின்ற இரண்டாமடிக்கு முற்பட்ட அடிக்கு நான்கு முனிவரது சாயல் அல்லது பெயரைக் குறிப்பனவாகப் பொருள் கொள்கவெனவெழுதி ஆந்தை, புலி, பாம்பு, சிங்கம், என்ற பொருளுடைய சொற்கள் ஆண்டு குறிக்கப்பட்டனவென்று விடை

பகர்ந்தார். இவ்விடை பொருத்தமிலதென்று காரணங்காட்டி மீண்டும் வினவியதற்குத் "தேவார அடிகளுட் போந்த பிராணிகளின் பெயரோ, சாயலோ நமது நால்வர்க்கும் கொள்வதற்கு யாது தடையுளது." எனவெழுதி, "இப்பொழுது அவரது பெயரையுஞ் சாயலையும் பற்றிய ஆராய்ச்சி அவசியமில்லை பாட்டின் பதங்களுக்கும் பொருள் கூறிவிட்டமையால் பதவுரை விரிக்கவேண்டியதும் அவசியமில்லை" யென்றும் எழுதிவிட்டார். கல்லாலடியிற் சிவபிரானிடம் உபதேசப்பொருள் கேட்ட தமிழ் மக்கள் நால்வரின் பெயர் அல்லது சாயல் ஆந்தை, புலி, பாம்பு, சிங்கம், என்று நம்மவர் கூறுகின்றார். இந்நான்கு பிராணிகளும் சாத்வீக குணமுள்ளனவல்ல. பட்சிகளுக்குள் ஆந்தை தீமையைக் கூறும் பட்சி. அதனை "கூகையோடாந்தை தீய புள்ளினமான தம்மிற் பூசலிட்டழிவு சாற்றும்" என்ற பெரிய புராணச்செய்யுட் பகுதியாலறியலாம். புலி, பாம்பு, சிம்மம் கொடிய பிராணிகளென்பது அவைகள் சாத்வீக குணமுள்ள ஆடு மாடுகளையும், மனிதர்களையுங் கொல்லுந்தன்மையாலறியலாம். இக்கொடிய பிராணிகளின் பெயர்பெற்ற நால்வர் சிவபிரானிடம் உபதேசம்பெற முயன்று உபதேசம் பெற்றதாக நம்மவர் சொல்லுவது நகைப்பைத்தருகின்றது. இதற்கு ஆதாரம் எங்குமில்லை. நம்மவர்க்கு ஆதாரம் அவரது ஏகதேச யுக்தியேபோலும், அந்த யுக்தியும் அச்செய்யுட் பொருட்கு முரணாகவுமிருக்கின்றது. இதுகாறும் இச்செய்யுளுக்குப் பொருத்தமான உரை நம்மவர் பகர்ந்திலர். அதன் பொருளை ஆராய்வாம். கின்னரர் என்றால் ஆந்தையென எவ்வகையாய்ப் பொருள்படும். கின்னரம் என்ற ஒன்றன்பாற் சொற்கு ஆந்தையெனப் பொருளுண்டு. இச்சொற்குப் பன்மைப்பெயர் கின்னரங்கள் என்று ஆகும். கின்னரர் என்ற சொல், கின்னரன் என்ற உயர்திணை ஆண்பால் ஒருமைச்சொல்லின் பன்மைப் பெயர். ஆதலால் கின்னரர் என்ற சொற்கு ஆந்தையெனப் பொருள்கொண்டது தவறே. பின்னும், முதலடியில் காது பொத்தர், கின்னரர், உழுவை, பன்னகம், சீயம் என ஐந்து பெயர்கள் காணப்படுகையால், இவ்வைந்து பெயர்களும் நால்வரது சாயல் அல்லது பெயர் என்பது பஞ்சபாண்டவர்கள், கட்டிற்கால்கள் நான்குபோன்ற எண்ணிக்கையுடையர் என்றதுபோலாம். மேலும், முதன்மொழியீறும் வருமொழி முதலும் அகரவுயிரானல் வகர உடம்படு மெய் தோன்றும். எனும் இலக்கண விதிப்படி மூன்றுமடியிலுள்ள ஏதம் என்ற மொழி வேதம் என ஆயிற்று. ஏதம் எனப்பிரித்தலே பொருளமைதியோடு மோனையும் அழகாய் அமைந்திருப்பதைக் காணலாமென வெழுதியதற்குச், சில விடங்களிற் மோனையில்லா

மனும் வரும் என்று காட்டி வேதம் என்பதற்கு வின்பம் என மோனை யிருப்பதாயுஞ் சொல்லி மற்றும் ஏதேதோ பொருள் கொடாத வார்த்தைகளையு மெழுதினர். வின்பம் என்னும் மொழி ஒன்றுளதெனை யாண்டுக் கண்டனரோ அதன் பொருள்தான் என்னையோ அறிகிலேம். இன்பம் எனுஞ் சொல்லின் முதலெழுத்து வகர உடம்படுமெய் பெற்றதனால் அது மோனை யாகாது.

இப்பாசுரத்தின் உண்மைப் பொருள்கொள்வதில் நம் நண்பருக்கும் எமக்கும் மேற்காட்டியவாறு பேதம் விளங்கினமையான், சைவ நூற்றேர்ச்சியுள்ள பலபண்டித சிரோமணிகளை இப்பாசுரத்துக்குப் பொருள் வினவினோம். சிலர் இதன் பொருள் காண்பது அரிதென்றார்கள், சிலர் மௌனமுற்றார்கள். உலகினர்க்கு உண்மைகாட்டுவதில் நோக்கங்கொண்ட பதின்மர் எம்மீது கருணைகூர்ந்து விடையளித்தார்கள். அவர்களாவார்:—

க. கீழைச்சிவப்பட்டி பிரம்மஸ்ரீ பண்டிதர் ரெத்தினசாமி அய்யரவர்கள்.

உ. திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீமத் பரமசிவத் தம்பிரான் சுவாமிகள்.

௩. தச்சநல்லூர் ஸ்ரீலஸ்ரீ இலக்குமணப் போற்றி ஐயா அவர்கள்.

௪. ஸ்ரீலஸ்ரீ ஐயா, சுவாமிநாத பண்டிதரவர்கள்.

௫. ஸ்ரீமத் மதுரைச்சாமி யென்னும் சுப்பிரமணிய சுவாமிகள்.

௬. ஸ்ரீலஸ்ரீ சுவாமி வேதாசலம் அவர்கள்.

௭. திருவாளர் சிந்துபூந்துறை தமிழ்ப்பண்டிதர் சிதம்பர இராமலிங்கம் பிள்ளை அவர்கள்.

௮. அம்பாசமுத்திரம் திருவாளர் காந்திமதிநாத பிள்ளை அவர்கள்.

௯. தேவகோட்டை சிவாகம சங்கத்தார்.

க0. பவானி தமிழ்ப்பண்டிதர் கு. குமாரசாமிப் பிள்ளை அவர்கள்.

இவர்கள் இப்பாசுரத்துக்கு எழுதிய உரையை ஈண்டு வரையப் புகுதல் கால நீட்டிப்புக்குக்காரணமாம் பற்றி அவ்வுரைகளை ஒருங்குப்படுத்தியதன் முடிபை ஈங்கு வரைகின்றோம். இப்பதின்மரில் ஐவர் வேதஞ் செய்தவரென்றே கொண்டு அச்சொற்றொடர்ப் பொருளைச் சிவபிரான் மேலேற்றுகின்றார்கள். இவர்களில் (௫) மதுரைச்சாமியவர்கள் கூறியது மிக்க வியப்பாக

விருக்கின்றது. அதாவது மழை பெய்து குளம் நிறைந்தது என் புழிப்போலச் சிவபிரான் வேதஞ் செய்தலான் நால்வரும் மற்றையோரும் இன்புற்றார்களென எழுதியிருக்கின்றார்கள். மற்றைய ஐவரும் ஏதஞ் செய்தவரெனப் பிரிப்பதே மோனைக்கும் பொருணயத்துக்கும் சிறப்பாய் இருக்கின்றனவெனக் கொண்டு பொருளுரைத்தார்கள். ஒருவரும் நம் நண்பர் கொள்கையை ஆமோதிக்கவில்லை. இப்படின்மருஞ் செய்து கொடுத்திருக்கிற உரையைத் தழுவி யெழுதும் பொருளாவது :—

**காதுபோத்தர்.**-சிவபெருமானது திருச்செவிகளைத் (தோட்டின் வடிவமாக) மூடிக்கொண்டிருக்கும் அசுவதர், கம்பளர் என்னுமிரு முனிவரும் (இவர்கள் இன்னிசை பாடிக்கொண்டிருப்பவர்கள்).*

**ஐகின்னரர்.**—அழகினையுடைய கின்னரரும் ஹா ஹா, ஹூ ஹூ, எனப் பெயர் பெற்ற இவ்விருவர்களும் எம்பிரானது செவியில் வீற்றிருந்து வீணை வாசிப்போர். *

**கடிக்கும் உழுவை.**—கடிக்கும் புலி, அதாவது வியாக்கிரபாதர்.

**கடிக்கும் பன்னகம்.**—கடிக்கும் பாம்பு, அதாவது பதஞ்சலியார்.

**பிடிப்பருஞ்சீயம்.**—எம்பிரான் ஒருவரைத் தவிர்த்து மற்றையோரால் பிடிக்கப்படுவதற்கரிய சிம்மம். அதாவது நாசிம்மமாகிய விண்டு.

**கோதின் மாதவர் குழுவுடன்.**—குற்றமற்ற மகத்தாகிய தவஞ்செய்த நால்வர்சேர்ந்த கூட்டத்துடனிருந்து.

**கோலவானிழற் கீழ்பகர் அறம்.**—அழகிய ஆலநிழற்கீழ் எம்மிறைவன் பகர்ந்த அறமுதலிய நாற்பொருளடங்கிய வேதத்தை

**கேட்ப.**—கேட்க.

**ஏதஞ்செய்தவர்.**—அவ்வாறு கேட்டலாகிய குற்றத்தைச் செய்தவர்கள்.

**எய்திய இன்பம்.**—இன்பமடைந்தமையை.

**யானுங்கேட்டு.**—குற்றஞ்செய்தோனாகிய நானுந் தெரிந்து.

**நின்னிணையடி யடைந்தேன்.**—உமது ஸ்ரீபாதங்களிரண்டனையும் பற்றுக்கோடாக அடைந்தேன். ஆதலால் எம்மை ரெட்சிப்பீராக'

* இந்நால்வர்களையும் இருவரென்றே கூறுவாறுமுண்டு.

என்பது பொருளாக விளங்குகின்றது. வேறுவிதமாய்த் தக்க பொருள், பெரியோர் கூறினால் வணக்கத்துடன் ஏற்றுக் கொள்ளப்படும்.

இப்பாசுரத்துக்கு மற்றுமோர்வகைப் பொருள்! நால்வருக்கும் வேதப்பொருள்கூறச் சிவபிரான் சகளத்திருமேனிக் கோலங்கொண்ட அமையத்து அத்திருமேனியைவிட்டு நீங்காத காதுபொத்தரையும் கின்னரரையும் இப்பாசுரத்தின் முதற் கண்ணே கூறினமையானும் சிவபிரான் உபதேசிக்கப் புகுமுன்னர் மன்மதனொழிந்த வேறு ஒருவரையும் அவ்வுழி விடவேண்டாமென்று நந்தியெம்பெருமானுக்கு ஆணைதந்தமையானும், உழுவை, பன்னகம், சீயம் என்றமை சிவபிரான் அணிந்திருந்த உழுவையின் சர்மம், சர்ப்பம்! வீற்றிருந்த சிம்மாசனம் இவைகளைக் கூறியதாகக் கொள்ளவேண்டும். சிவபிரானது மறக்கருணையைப்பெற்ற புலியும், சிங்கமும், சுப்பிரமணியக்கடவுளால சங்காரஞ்செய்யப்பட்ட சூரன் பதுமன், மயிலும் கோழியுமாகி அக்கடவுளர்க்குப் பணிவிடைபுரிவதுபோல, சர்மமாகியும் சிவபிரானுக்குப் பணிசெய்வனவாயின. ஏதஞ் செய்தவர்கள் யாவர்? எவ்வாற்றானெனின், தவஞ்செய்த நால்வருக்கே, சிவபிரான் வேதத்தையும் அதன் பொருளையும் ரகசியமாக உபதேசிக்கப் புகுந்தனர். அவர் திருமேனியைவிட்டு நீங்காத மற்றையோர் "பிறர் மறைகட்குருடாய்" எனும் நியாயம் பற்றிச் சிவபிரான் மொழிந்தவைகளைக்கேளாது வாளாதிராமல் கேட்டமையைக் குறிப்பிக்கின்றதுபோலும். அதனாலன்றோ கோதின் மாதவர்குழுவுடன் கேட்ப எனக்கூறப்பட்டுளது. கேட்ப என்றே பல சுத்தப்பிரதிகளிலும் அச்சிடப்பட்டிருக்க, கூட, வென அம்மொழியை நம்மவர் திருத்திக்கொண்டார். மேற்காட்டியவாறு இத்தேவாரத்தின் முதலடியில், காதுபொத்தர் இருவர், கின்னரர் இருவர், உழுவை ஒன்று, பன்னகம் ஒன்று, சீயம் ஒன்று இவ்வாறு எழுவராகின்றாகள். நம்மவர் முதலடியில், நாலு பிராணிகளின் பெயர் (ஆந்தை, புலி, பாம்பு, சிம்மம்) இருப்பதாகக்கொண்டு அவைகள் நான்கு முனிவர்களின் சாயல் அல்லது பெயர் எனப்பொருள் சொல்லமுன்வந்த அறிவின்தன்மை இத்தகையதெனத் தமிழ்க் கல்வி வாணர்கள் உணர்வார்கள். (செந்தமிழ்ச்செல்வி பக்கம் (௩௫அ) பார்க்க.)

ஆனால் எவ்வகையினும் நால்வர் முனிவர் வேதஞ்செய்தாரென்றபொருள் இப்பாசுரத்தில் இல்லையென்பது திண்ணம். தமிழ் மக்கள் நால்வர் நான்மறை செய்தார்களென்பதற்கும் வேறு பிரமாணமில்லை. ஆதலால், மறைகள் நான்கும் நால்வரால்

செய்யப்பெற்றமை இச்செய்யுளால் போதருமென நம்மவர் எழுதியதும் ஆதாரவற்றதேயாம். இந்நான்கு முனிவர்களும் இயற்றிய நான்மறைகள் வடமொழிப்பயிற்சிமிக்க பிற்காலத்தே வேதம் என்னும் வடசொல்லாலுங் குறிக்கப்பெற்றனவென்றும் எழுதியிருக்கின்றார். இதனால் விளங்குவதியாதெனில் நான்மறைகளும் தமிழில் ஆதியில் அதாவது வடமொழிப்பயிற்சி பெறாத காலத்தில் இத்தமிழ் நாட்டில் நால்வர் தமிழ்மக்களால் செய்யப்பட்டு நான்மறையெனத் தமிழ்ச் சொற்றொடரால் பெயரெய்தியிருந்ததென்பதும் வடமொழிப்பயிற்சி மிக்க பிற்காலத்தே அந்நான்மறைகளும் வேதமென்னும் வடசொல்லாலுஞ் சொல்லப்பட்டு வந்துகொண்டிருக்கின்றன வென்பதுவுமே. இவர் மேற்காட்டிய தேவார மேற்கோளில், வேதமெனக் காணப்படும்மொழி, ஏதம் எனும் மொழி, புணர்ச்சி வழியின், வேதம் எனத் திரிந்ததைக்கொண்டும், இத்திராவிடசுருதியின் பொருள் இன்னதென வறியாமையானும், வடமொழிச் சொல்லாகிய வேதமெனவே கொண்டு, நால்வர் வேதஞ்செய்தாரென, இவர் கொள்கைக்கு இணங்கப் பொருள் கொண்டமையானும், வேதம் என்னும் வடமொழிப் பிரயோகத்துக்கு ஒரு காரணங் கற்பித்தார்போலும். நால்வர் வேதஞ்செய்தார் எனும் பொருள் இத்தேவாரப் பாசுரத்தில் இலவென்றும், வேதஞ்செய்தவரெனக் கொண்டபோதும், அவ்வேதஞ் செய்தவர் சிவபெருமானே யாவரென்றும் மேலே காட்டினோம். பிற்காலத்தில் வடமொழிப் பயிற்சி தமிழ் நாட்டில் உண்டானதுபோல் இவர் எழுதியிருப்பதைப்பற்றிப் பின்னர்க் காலத்தைக் குறித்து விரிவாயெழுதும்போது தெரிப்பாம். நால்வர் நூல் செய்திருப்பாரேயானால் அதற்கு மறையென்ற மொழியாற், பெயரெய்துவதற்குக் காரண மிலவென்பதையும் முன்னரே காட்டினோம். நிற்க ; மேலாராய்வாம்.

கக. இனி, நம்மவர் கூறுவதாவது, "வேதம் என்னுஞ் "சொற் பொருள் வழக்கறியாமையான் வந்த மயக்க வுணர்ச் "சிக்கு அளவுகூற வியலாது. வேதம் என்னுஞ்சொல் ஞானம், "அறிவு என்னும் பொருளில் முதலில் வழங்குவதாயிற்று. "பின்னர் ஆரியத்தில் அறிவைத்தருகின்ற நூல்கட்கெல்லாம் "அது பொதுப்பெயராக வழங்குவதாயிற்று. உதாரணமாக "ஆயுர்வேதமென்னுஞ் சொற்றொடர் ஆரிய மருத்துவ நூலிற் "குப் பொதுப்பெயராக வழங்குவதேயன்றி அப்பெயருடைய ஒரு நூல் வடமொழியில் யாண்டுங்காணுமாறில்லை. "ஈண்டு வேதமென்றது அறிவுநூலென்னும் பொருட்டாயது "தெளிவு. மேலும், சிறந்த ஞானம் பெற்றவர்கள் கூறும்

"வாக்கே வேதமென்பது, தமிழும் வடமொழியும் அறிந்த
"ஆன்றோர் துணிபு. அது, "புகலியர்கோன் செப்பினார் எண்
"ணிறந்த புனிதவேதம்,'' என்ற பெரிய புராண வாக்கின்
"வைத்துணர்க. வேதம் எண்ணிலவென்று கூறுமிடத்து இப்
"பொதுப்பெயரே வழங்கப்படும், சிறப்புப்பொருளில் வேத
"மென்னும் பெயரைப் பிற்காலத்து வட நூலோர் இருக்கு,
"யசுர், சாமம், அதர்வணமென்ற தொகைநூற்கு இட்டு
"வழங்குவராயினர்,'' என்று எழுதியிருக்கின்றார். வேதம்
என்னுஞ்சொல் ஞானம் அறிவு என்னும் பொருளில் முதலில்
வழங்குவதாயிற்று என்றாரே, எந்நூலில் வழங்குவதை இவர்
கண்டார். சற்றுச் சொல்லவேண்டும். வேதமென்னும் வட
மொழிச்சொல்லுக்கு அறிவு, ஞானம், பொருளென்பது
எல்லோருக்கும் உடன்பாடே. அப்பொருளை அடக்கிக்கொண்டு
முதலில் வெளிவந்த நூல் வேதமேயாம். அதனாலன்றோ வேதத்
திற்கு ஆதிநூல் என்னும் பெயரும் எய்திற்று. "செஞ்சொல்
புனை ஆதிமறை'' என்றும் உமாபதி சிவமுங் கூறினார். வேதம்
என்றால நான்கு வேதங்களையே குறிக்குமானதால் நான்கு
வேதங்களை ஒழிந்த மற்றைய அறிவுநூல்களாகிய மருத்துவம
முதலிய நூலகளைக்கூறவந்தபோது, ஆயுர்வேதம் தனுர்வேதம்
என அடைமொழி கொடுத்துப் பெரியோர்கள் வழஙகியிருக்
கின்றார்கள். இஃது அறியாது, தமிழ் மக்கள் மயக்க வுணர்ச்சி
க்கு உட்படுமாறு மனம்போல் எழுதுவதின் காரியமென்னை?
மேலே காட்டிய சிவஞான பாடியத்தின் சிவஞான போதப்
பாயிரவுரையிற் சிவஞான முனிவர் எடுத்துக்கூறியவாறு,
உலக சிருட்டி காலத்தில் சதாசிவமூர்த்தியின் தற்புருடம்
முதலிய நான்கு திருமுகங்களினின்றும் நான்கு மறைகளும்
தோன்றின என்று கூறியதை உடன்பாடாகக் கொள்ளாது
முற்கால வழக்கம பிற்கால வழக்கமென்று கூறுவோர் கூற்றுக்
கள் ஒதுக்கற்பாலனவேயாம். பின்னும் கூறுவாம். சிவஞான
பாடியம் ௬௮-வது பக்கத்தில் வேதம் பரமசிவனாற் செய்யப்
பட்டதெனச் சிவஞான முனிவர் மறுபடியுங்கூறி அதற்குப்
பிரமாணம உபநிஷத்து வாக்கியங்களையுங் காட்டினார். மறு
படியும் ௧௧௯-வது பக்கத்தில் வேதஞ் சிவாகமம் இரண்டுஞ்
செய்த முதற் கருத்தா பரமசிவனே யென்றுங்கூறி "தொகுத்த
வன் அருமறை அங்கம் ஆகமம் வகுத்தவன் வளர்பொழிற்கூக
மேவினன்'' என்னும் தமிழ் வேதத்தாலும் தெளியப்படும்
என்று விளக்கிக் காட்டினார்கள். நம் நணபர், "சிறந்த ஞானம்
பெற்றவர்கள் கூறும் வாக்கே வேதமென்பது, தமிழும் வட
மொழியும் அறிந்த ஆன்றோர் துணிபு. அது "புகலியர்கோன்

டும் வியப்புற்றேத்துங் கலைமறையோர் கவுணியனார் தம்மைக் கண்முன், வருதியானப் பொருளொன்றிறைஞ்சித் தாமுன் வல்ல மறைகேட்டையந் தீர்ந்து வாழ்ந்தார்.” (உசுரு)

‘மந்திரங்களானவெலா மருளிச்செய்து மற்றவற்றின் வைதிக நூற்சடங்கின்வந்த, சிந்தை மயக்குறும்வண்ணந் தெளியவெல்லாஞ் செழுமறையோர்க்கருளி.” .........(உசுசு)

இச்செய்யுட்கள் சம்பந்தப்பெருமான் சரித்திரத்தில் எவ்வமையம் அருளப்பட்டதென்றால், சம்பந்தர், பிராமணகுல உற்பன்னராதலால் மூன்றாமாண்டு முதல் தமிழ் மொழியில் வேதப்பொருளைப் பாடிவருவதை யுணர்ந்த அந்தணர்கள் உபநயனச் சடங்கைப்பெறும் பருவம் சுவாமிகள் அடைந்தபோது, வேத ஒழுக்கின்படி அச்சடங்கு செய்வித்துப், பரம்பரையாய் ஓதி உணரவரும் வகைமையினையுடைய நான்கு வேதங்களையும் உமக்குத் தந்தோமென்று அப்பிராமணர்கள் கூறினார்கள். அதைக்கேட்ட நஞ்சம்பந்தப் பிள்ளையார் தாம் உலகமாதாவினது ஞானப்பால் உண்டபோதே அவ்வேதங்களை ஓதாமலுணர்ந்து தெரிந்துகொண்டிருக்கின்ற வேதபாரகரானதால் அப்பிராமணர்கள் அதிசயிக்குமாறு அந்நிமிடத்திலேயே எண்ணிறந்த அவ்வேதங்களை ஓதிக் காட்டினார். எவ்வாறு ஓதினாரென்றாலோ, பொருவிறப்ப, ஓதினார் என நஞ்சேக்கிழார் மூர்த்திகளருளிச்செய்தார். பொருவிறப்ப எனுஞ் சொற்றொடருக்கு உரையாசிரியர் கண்ட வியாக்கியை என்னவெனின், பதம், சடை, கிரமம் முதலிய இலக்கணங்கள் பொருந்த, இவ்வாறு ஓதுவார் உலகின்கண் யாருமிலராகலின் ஒப்பெடுத்துரைத்தல் இலாவணம் ஓதினார் என்பது. சம்பந்தப் பிள்ளையார், இவ்வாறு வேதங்களைப் பொருவற ஓதக்கேட்ட அந்தணர்கள் மிக்க வியப்பெய்தித் தாங்கள், தங்கள் மனத்தின் கண்ணே தியானிக்கப்பட்டுவரும் பரம்பொருள் நேரில் கண்காணவந்த இச்சம்பந்தப்பெருமான் என நிச்சயித்து அவரை வணங்கித் துதித்துத் தாங்கள் ஏற்கனவே கற்றிருந்த வேதங்களிலும், வைதிகச் சடங்கின் மந்திரங்களிலும் தங்களுக்குண்டாயிருந்த ஐயப்பாடுகளையெல்லாம் கேட்டுத் தெரிந்துகொண்டார்கள். இவற்றால் ‘ஓதினார் புகலிவந்த புண்ணியனார் எண்ணிறந்த புனிதவேதம்,’ என்பதற்குச் சிவபிரானால் ஆதியில் அருளிய அளவில்லாத வேதங்களையும் அவற்றின் பொருள்களையும் சம்பந்தப்பெருமான் மொழிந்தாரென்றே ஏற்படுகின்றது. “சிறந்த ஞானம்பெற்றவர் கூறும் வாக்கே வேதமென்று” நம்மவர் கூறியது, தமிழ்மொழியும் வடமொழியும் அறிந்த ஆன்றோர் துணிபல்லவென்று பெறப்பட்டது. நிற்க, மேலாராய்வாம்.

இனி, நம்மவர் கூறுவதாவது :—

உ0. "வேதச்சொல்லின் பொதுப்பொருளே நான்கு
"முனிவரும் ஞானமெய்திய வரலாறு கூறும் காந்தச்செய்யுட்
"கண்ணுங்கொள்ளற்பாலது. அது பின்வருமாறு, "இருட்
"பெருங்கடலுள் யாமத்தெறி மருத்திடைப் பட்டாங்குப்,
"பொருட்பெருங் கடலாம் வேதம் புடைதொறு மலைப்பவிந்நா,
"ளருட் பெருங்கடலே யெய்த்தே மமைந்தில துணர்வி
"யாங்கண், மருட்பெருங் கடலினீங்கும் வண்ணமொன்றருடி
"யென்றார்." ஈண்டு வேதமென்றது நூற்றொகையை
"நூலடைந்த கொள்கையாலே" என்ற தேவாரமுங்காண்க."
"என்றார்........................பின்னும் ஸ்ரீமாணிக்கவாசகப்
"பெருமான் கூறியவண்ணம் "உலகச் சமயங்கள் ஒவ்வாத
"சாத்திரமாஞ் சவலைக்கடலுளராய்க்கிடந்து தடுமாறுங் கவலை"
"கெடுக்கப்பெற்றுத் திட்பமெய்துங் கருத்தோடு முனிவர்
"நால்வரும் இறைவன்பால் தவங்கிடந்தனரென்பதே மேற்
"கூறிய செய்யுளிற் போந்த பொருளாகும். அவ்வாறன்றிச்
"சுருங்கிய அளவுடைய வடமொழி நால் வேதங்களையுமோதி
"அவற்றின் பொருளறியாது அன்னார் மயங்கினர் என்று
"கோடல் சிறிதும் பொருத்தமில்லாததொன்றும்" என்று
எழுதினர்.

மேலே நம்மவர் கூறியிருப்பதில், மேற்காட்டிய காந்தச் செய்யுளிற் கூறப்பட்ட வேதம் என்பது வடமொழி வேதமல்ல வென்றும், நூற்றொகையையென்றும் காட்டியுள்ளார், நூற் றொகையென்றாலென்னென்ன நூல்களடங்கியதொகை. அத் தொகையில் வேதங்களாகிய நூலுமடங்குமோ அடங்காதோ? பின்னும், தமிழ்க் கந்தபுராணம் வடமொழிப் புராணத்தின் மொழிபெயர்ப்பேயாம். அதனை, "முன்சொல்கின்றமுனி வட நூலெறீ இத்தென் சொலாற் சிறியேனுரை செய்தலால்" என் னுங் கந்தபுராணச்செய்யுள் விளக்கும். வடமொழிப்புராணத்து வேதம் எனக்கண்ட மொழியே தமிழ்ப் புராணத்துங் கூறப்பட் டுளது. வடமொழிப் புராணத்துட் கண்டவேதம் என்ற பதத் துக்கு நால்வேதமல்லவென்று பொருள்கூறல் ஆன்றோர் அவை யேறாது. நிற்கக், கந்தபுராணத்திற் கூறும் நால்வர் சநகாதி நால்வரல்லவா? அவாந்தரக் கற்பனையாக, இவர் கூறும் நால்வர்; ஊர், பேர் இல்லாத தமிழ் மக்கள் நால்வரல்லவா? இருவகையா ரையும் மிசிரப்படுத்தி எழுதியிருப்பது, வாசிப்போர் உண்மை காணாது மயக்கமடைவதற்கு ஏதுவாம். மேற் கூறிய கந்தபுராணச் செய்யுளிற் கண்ட வேதத்தின் வரன்முறையாவது.

றூந்தின யுகத்தில் வேதமாதிய உண்மை நூல்கள் மறைந்துவர, முழு முதற் கடவுளாகிய சிவபெருமானே மானுட மக்கள் மறந்து அவ்வரவர் வினைப்படித் தத்தம் மனத்துக்கு இயைன்ற வாறு தெய்வ வழிபாடு வகுத்தார். இவ்விஷயத்தைச் சிவ பிரானிடம் பிரம விஷ்ணுக்கள் விண்ணப்பித்த மாத்திரம் அப் பெருமான் விண்டுவின் கலை ஒன்றை வியாசராகப் பிறந்து வேதங்களை விளக்கிக் காட்டுமாறு ஆக்ஞை வகுத்தார். அவ் வாறு வியாசர் பூமியில் தோன்றிக் கரைகடந்த வேதங்களை இருக்கு முதலிய பெயர்களால் நான்காக அமைத்துப் பயிலர் ஆதிய நான்கு முனிவர்க்குங் கூறினார். இவ்வரலாறு கந்த புராணம், பாயிரப்படலம் ௩௩-௪௪-௪௭ செய்யுட்களிலும் மேருப்படலம் ௨-௬-௧0 செய்யுட்களிலும் அறியலாம். ௪௭-வது செய்யுளில் இருக்காதி மறை நான்கனையும் வியாசர் வகுத்த தாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அவ்வரன்முறையில் நான்கு வேதங்களையும் அவற்றின் பொருளினையும் சநகராதி நால்வரும் ஆலமர் கடவுள்பாற் கேட்டனர். இவ்வரலாற்றை மேருப்பட லம் ௨-வது செய்யுளின் முதலிரண்டடியிற் கூறியிருக்கின்றது. அதாவது "மற்றது போழ்திற்றொல்லை மறைப்பொருள் வடத் தின் பாங்கர்ப்—பெற்றிடு சனகனாதி முனிவரர்" என்ற பகுதி யாலறியலாம். இங்குத், தொல்லை மறைப்பொருள் என்றமை யானே, பாயிரப் படலம் ௪௭-வது செய்யுளில் விவரித்திருக்கிற இருக்காதி நான்கு வேதமென்றே பெறப்படும். மேற் கூறிய செய்யுளின் மற்றைப் பகுதியில் விரித்தவாறு "பின்னும் பன் னாள்—அற்றமில் தவஞ்செய்தெந்தை யருளினாற் கைலைநண்ணிச்" சிவபிரானைத் தெரிசிக்கப்பெற்று சனகாதி நால்வரும் சிவபிரா னிடம் விண்ணப்பித்த வாலாற்றை நண்பர் எடுத்துக்காட்டிய மேற்கண்ட ௬-வது செய்யுள் கூறுகின்றது. இச்செய்யுளில் "வேதப் புடைதொறு மலைப்ப," "அமைந்திலதுணர்வு" என்று விண்ணப்பஞ் செய்துகொண்டார்களே யொழிய வேதப் பொருள் தெரியவில்லையென்று அவர்கள் தெரிவித்துக்கொள்ள வில்லை* ஞான நெறியினிற்போர்க்கு இறைவன் ஆகமத்தை அருளிச் செய்தபடியால் அம்மார்க்கத்தைப் போதிக்கும்படி சனகாதிகள் கேட்டுக்கொண்டார்கள். இவ்விஷயத்தை மேலே காட்டிய ௬-வது செய்யுளுக்குத் தொடர்ச்சியான ௧0-வது செய்யுளில் "அந்தமிலாகமத்தினரும்பத மூன்றுங் கூறப்— புந்தியதொடுங்கு ஞான போதகம்போதியென்றார்." எனக்கூறி யிருப்பதை அறியவேண்டும். பின்னர் இறைவன் தட்சிணா

* சிவஞான சித்தியார் சுபட்சம் அ-ம் சூத்திரம் ௨-ம் அதிகரணம் ௧௫-வது செய்யுளைப்பார்க்க.

மூர்த்தமாய் மீண்டு மெழுந்தருளி ஞான முத்திரையைக் காட்டி ஞானம் பெறும் வகை அருளினார். இவ்வாறு கந்தபுராணம் கூறும் மார்க்கத்தைச், சிவஞான சித்தியாரின் "வேதநூல் "சைவநூல்" என்னுஞ் செய்யுளுக்கு உரை யெழுதிய மாதவச் சிவஞான முனிவர் எழுதியிருக்கும் உரையில் "முதல்
"வன் பெருங் கருணையாளனாகலின், உலகத்தாருய்யும்
"பொருட்டுஞ் சத்திநி பாதமுடையாருய்தற்பொருட்டும் திரு
"வுள்ளத்திற் கருதிப் பொருள் பலபடத் தோன்றுஞ் சூத்திர
"மும் அதனை அவ்வாறாக வொட்டாது தெளித்துரைக்கும்
"பாடியமும்போல, முறையே வேதமுஞ் சிவாகமமுஞ் செய்யப்
"பட்டனவாகலான் அவையிரண்டும் முறையானே பொதுநூல்
"சிறப்பு நூலெனப்பட்டுச் சூத்திரமும் பாடியமும் போல வேறு
"வைத்தெண்ணப்பட்டன" என விரித்திருப்பதனாற் காண்க.
விஷயம் இவ்வாறிருக்க முன்பின் செய்யுட்களின் பொருளை யோராது (கந்தபுராணம் மேருப்படலம் சா-வது செய்யுளுக்கு)
"சுருங்கிய அளவுடைய வடமொழி நால் வேதங்களையுமோதி அவற்றின் பொருளறியாது அன்னோர் மயங்கினரென்று கோடல் சிறிதும் பொருத்தமில்லாத தொன்றாம்" என நம்மவர் அவரது உத்தியாற் பொருள் கூறினர். அல்லாமலும் வேதம் என்பது வடமொழி நிகண்டு நூலார் அறிவு நூல்களின் பரியாய நாமம் எனக் கூறினாரில்லை. சுருதி: வேத: ஆம்நாய: த்ரயி என்றே வேதத்தைக் கூறியுள்ளார். நிற்க. இனி, மேலாராய்வாம்.

இனி, நம்மவர் கூறுவதாவது :—

உக. "நான்மறையின் மூலப்பொருளை இறைவன் எவ்
"வாறு நால்வர்க்கு முணர்த்தினா னென்றாயுமிடத்து அதனை
"அவருள்ளத்து ஒளிரும் பிரணவ வாயிலாகவும் பிறமந்திர
"மொழிகள் வாயிலாகவும் அவர்க்கு அறிவுறுத்தினனென்
"பது பின்வரும் அருளுரைகளால் இனிது விளங்கும்.

(க) "ஆலத்தார் நிழலின் அரன் நால்வர்க்கும் கோலத்தால் உரைசெய்தவன்" (கோலம் பிரணவமாக வுணர்க)

* * * *

(உ) "கல்லாலின் நீழலிற் கலந்து தோன்றுங்கவின் மறையோர் நால்வர்க்கு நெறிகளன்று சொல்லாகச்சொல்லியவா தோன்றுந்தோன்றும்"

(ங) "சொல்லருளி அறம் நால்வர்க்கறிய வைத்தார்"

(ச) "சொற்பொருளாய்ச் சுருங்காமறை நான்கினையும் ஓதியான்" ஈண்டு சொல் என்றது பிரணவமொழியைக் "குறிக்கும். அது "ஒரு வார்த்தையுட்படுத்துப் பற்றினாய்" "என்ற திருவாசகத்தாலும் விளங்கும். பிரணவத்தின் பொரு "ளாய் மறை நான்கும் விரிதலின் சுருங்காமறையென்றார்."

(ரு) "நற்றவஞ்செய்த நால்வர்க்கும், உற்ற வண் "மொழியாலுரை செய்தவன்" (வண்மொழிபிரணவம்) "இறைவரது திருமொழிகள் சுத்த வித்தையில் எழுவதால் "நிலைத்த நுண்வடிவுடைய மந்திரமொழியாதலின், "மன் "னுருவாய் மாமறைகளோதினன்காண்." என்றருளியதென்க" என்றெழுதியிருக்கின்றார்.

பிரணவத்தினின்று அல்லது சுத்தவித்தையிடமாக விருந்து வேதமுண்டாயினதென்பது இப்போது விவாதமில்லை. மேற்காட்டிய மேற்கோள் தமிழ்மறைப் பகுதிகட்கு நம்மவர் கூறும் பொருள் உண்மையில் பெறப்படுகின்றதாவென்பதைப் பற்றியே ஆராயவேண்டுவது. முதலாவது காட்டிய மேற்கோள் "ஆலத்தார் நிழலில்லறம் நால்வர்க்குக் கோலத்தாலுரை செய்தவன்" என்பதே சுத்தபாடம். இதை அரன் நால்வர்க்கு என இவர் தம் கொள்கைக்கு இணங்கத் திருத்திக்கொண்டார். எதுக்காக இவ்வாறு செய்தாரென்றால், கோலம் என்பதற்குப் பிரணவமெனப் பொருள்கொண்டு, அரன் பிரணவத்தால் நால்வர்க்கு அறிவுறுத்தினனென்று பொருள் கொள்ளற்கே. தேவாரமென்பது தமிழ் வேதம். அது இறைவன் அருளால்தோன்றியது. ஒவ்வொருவரும் அவரவர் கொள்கைக்கு இணங்கத் திருத்துவாராயின், முடிவு என்னவாகுமோ அறியற்பாலதன்று. இவ்வாறு மூலகிரந்தங்களின் மொழிகளைத் திருத்தி ஒரு நவீனக்கொள்கை சாதிக்க முயன்றால் இக்காலத்தில் அது மிக்க எளிதில் முற்றும். கோலம்என்றசொற்குப் பிரணவம்என்றபொருளில்லை. தமிழ் அகராதியில், இச்சொல, அலங்கரிப்பு, அழகு, இலந்தைக்கனி, உரு ஆதிய பொருட்களைப் பயக்குமெனச்சொல்லப்படுகிறது. நம்பெருமக்கள் அருளிய தமிழ்த்திருமுறையில், கோலம் என்ற சொல்லைப் பிரணவமென்ற பொருளில் யாண்டும் ஆண்டிருக்கவுமில்லை. திருவுரு, அழகு என்ற பொருளிலேயே எடுத்தாண்டிருக்கின்றார்கள். அவைகளிற் சில வருமாறு. "குமிழின் மேனி வந்து கோலநீர்மையது கொண்டார்." "பாடலனான் மறையன் படிபட்டகோலத்தன்." "நீறுபட்ட கோலத்தான்."

"வண்ணம் பொலிந்திலங்கு கோலங் கண்டேன்"

"மேனியிற் கோலமதாகிய நீற்றன் நீலக்குடியரன்"

"திருவீழி மிழலையுட் கோலமே"

"கோங்கணைந்த கூவிளமு மதமத்தமுங் குழற்கணிந்த கொள்கையொடு கோலந் தோன்றும்"

"வேடலங்காரக் கோலத்தினமுதை"

"கோலமே மேலைவானவர் கோவே."

என்பன வாதிய திருவாக்குகளானறியலாம். நம் பெரு மக்கள் பிரணவத்தைக் கூறவேண்டிய விடத்து அம்மந்திரத்தை மறைமொழியாற் கூறாமல் வெளிப்படையாகவே கூறியுள்ளார்கள். கோலம் என்பதற்கு இங்குப் பொருள் என்னையெனில், புருஷ லட்சணங்கள் ௩௨-ம் பொருந்தியவராயும் அதி யௌவன ஈரெட்டாண்டு பருவமுள்ளவராயும் தோற்றிய இறைவரது சகளத்திருவடிவமாகிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தமென்பதே பொருள். "கோலம் படைத்துக் கல்லாலடிக்கீழ் வைகுங்கோ" என்று தாயுமானப் பெருந்தகையாரும் கோலமென்ற சொல்லைத் தக்ஷிணாமூர்த்திக் கடவுளுக்குப் பிரயோகப்படுத்தியிருக்கின்றார். "ஆல நிழலிருந்து அறஞ்சொன்ன அழகனே" என்று சம்பந்தப்பெருமானும் "ஆல நீழலமர்ந்த அழகனார்" என்று அப்பமூர்த்திகளும் அருளியிருப்பதையும் நோக்குக. இக்காரணங்களால் ஆலத்தார் நிழலில்லறம் நால்வர்க்குக் கோலத்தாலுரை செய்தவன் என்பது கல்லாலடியில் இறைவன் தட்சிணாமூர்த்தமாயெழுந்தருளி நால்வருக்கும் அறமாதிய பொருளை அருளியதையே குறிக்கும். மற்ற உ-௩-ச மேற்கோள்களிற் குறித்த சொல் என்னும் மொழியும் பிரணவத்தைக் குறிக்காது. சொல் என்பது வேதத்தையே குறிக்கும். ஏனெனில் வேதமானது எழுதாக் கிளவியாகி நின்று ஆதி முதல் குருசீட பரம்பரையாய் வாய்ச் சொல்லாகவே வந்துகொண்டிருப்பதனால். திருவாசகத்தில் ஒரு வார்த்தை யுட்படுத்து என்று கூறியிருப்பதற்கும் பிரணவமென்று பொருள்கொள்வதற்கிடமில்லை. ஏனெனில் மாணிக்கவாசகருக்கு இறைவன் உபதேசித்தது காரண பஞ்சாட்சரமாகிய ஈரெழுத்தாதலின். திருவாதவூரர் புராணம் திருப்பெருந்துறைச் சருக்கம் ௩௮-வது செய்யுளைப்பார்க்க. சைவ சித்தாந்த ஆண்டானடிமைத் திறத்தைத் தனக்குள் உளளீடாகக்கொண்டிருப்பது பஞ்சாக்கரமே. "கலந் தருள்பெற்றதுமாவசியே" என ஸ்ரீ ஞானசம்பந்தரும், "மாற்றே

னெழுத்தஞ்சும்" என அப்பமூர்த்திகளும் அருளியிருப்ப தையும் கவனிக்க. "நங்களுக்கருங்கலம் நமச்சிவாயவே" என்றும் அப்பமூர்த்திகள் மற்றோரிடத்திலுமருளியிருக்கின்றார்கள். "உடையாளுன்றனடுவிருக்குமுடையா ணடுவுணீயிருத்தி—அடியேனடுவுளிருவீரு மிருப்பதானல்" என்று மாணிக்க வாசகர் பஞ்சாக்கரத்தின் அடைவைக் குறித்து மொழிந்திருக்கின்றார். இன்னம் பலவுள. ஆதலால், ஸ்ரீபஞ்சாட்சரமே, மாணிக்கவாசகப் பெருமானுக்கு உபதேசமானது. சிவஞான போதம் சிறப்புப்பாயிரச் செய்யுளிற் காணப்படும். "பெரும் பெயர்க் கடவுளின்" என்ற சொற்றொடருக்கு மாதவச் சிவ ஞான முனிவர் "பெரும் பெயரெனினும், மகா வாக்கியமெனினும், ஒரு வார்த்தையெனினும் ஒக்கும். பெரும் பெயர்ப் பொருளே அஞ்செழுத்துக்கு மாதலின், பெரும் பெயரோடு அஞ்செழுத்திடை வேற்றுமையின்மை யுணர்க." எனத் திராவிட மாபாடியத்தில் எழுதியிருப்பதுவும், எமது கருத்தை வலியுறுத்தும். ௫-வது மேற்கோளிற்கண்ட, வண்மொழி, என்பதற்கும் பிரணவமென்ற பொருள் கிடையாது. வண்மை யுள்ள அதாவது மெய்யான மொழியென்று அர்த்தமாம்.

40-வது பக்கம் 28, 29 வரிகளிற் காணப்படும் 'வந்து கொண்டிருப்பதனல்' என்னுஞ் சொற்றொடருக்குப் பின், அடியிற் கண்ட விஷயத்தைச் சேர்த்து வாசிக்கவேண்டுவது.

"சொல்லாய் கல்லாலா" என்ற தேவாரப் பகுதியில் சொல், என்னும் மொழி வேதம் என்ற பொருளைக் கொடுத்துக் கொண்டு நிற்பதையுங் காண்க.

௬-வது மேற்கோள்:—"சொற் பொருளாய்ச் சுருங்கா மறை நான்கினையு மோதியன்" என்னுந் தேவாரப் பகுதியிற் கண்ட, சொல், பொருள், என்ற மொழிகளில், சொல் என்பது வன்னங்களாலாய மொழியென்றும், பொருள் என்றது அச்சொல்லின் அர்த்தமென்றும் பொருள்படும். பிரபஞ்சமே சொற் பொருளான் விளங்குவது. இது விஷயம் விரிக்கிற் பெருகும். மிக்கு உயர்ந்த சொற்களாலும், பொருள்களாலும், விளங்கும் நான்மறை யென்பது பொருள். "சொற்பால பொருட்பால சுருதியொடு நான்கும்" எனவும் "செஞ்சொல் புனை ஆதிமறை" எனவும், முறையே ஸ்ரீசுந்தரமூர்த்திகளும் உமாபதி சிவனாரும் அருளியிருப்பதையும் நோக்குக. ஆதலின், ௬-வது மேற்கோளிற் கண்ட சொல் என்ற மொழியும் பிரணவமென்ற பொருளைக் கொடாது.

"வண்ணம் பொலிந்திலங்கு கோலங் கண்டேன்"

"மேனியிற் கோலமதாகிய நீற்றன் நீலக்குடியரன்"

"திருவிழி மிழலையுட் கோலமே"

"கோங்கணைந்த கூவிளமு மதமத்தமுங் குழற்கணிந்த கொள்கையொடு கோலந் தோன்றும்"

"வேடலங்காரக் கோலத்தினமுதை"

"கோலமே மேலைவானவர் கோவே."

என்பன வாதிய திருவாக்குகளானறியலாம். நம் பெருமக்கள் பிரணவத்தைக் கூறவேண்டிய விடத்து அம்மந்திரத்தை மறைமொழியாற் கூறாமல் வெளிப்படையாகவே கூறியுள்ளார்கள். கோலம் என்பதற்கு இங்குப் பொருள் என்னையெனில், புருஷ லட்சணங்கள் ௩௨-ம் பொருந்தியவராயும் அதியௌவன ஈரெட்டாண்டு பருவமுள்ளவராயும்தோற்றிய இறைவரது சகளத்திருவடிவமாகிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தமென்பதே பொருள். "கோலம் படைத்துக் கல்லாலந்...

னெழுத்தஞ்சும்" என அப்பமூர்த்திகளும் அருளியிருப்பதையும் கவனிக்க. "நங்களுக்கருங்கலம் நமச்சிவாயவே" என்றும் அப்பமூர்த்திகள் மற்றோரிடத்திலுமருளியிருக்கின்றார்கள். "உடையாளுன்றனடுவிருக்குமுடையாளடுவுணீயிருத்தி—அடியேனடுவுளிருவீரு மிருப்பதானால்" என்று மாணிக்கவாசகர் பஞ்சாக்கரத்தின் அடைவைக் குறித்து மொழிந்திருக்கின்றார். இன்னம் பலவுள. ஆதலால், ஸ்ரீபஞ்சாட்சரமே, மாணிக்கவாசகப் பெருமானுக்கு உபதேசமானது. சிவஞானபோதம் சிறப்புப்பாயிரச் செய்யுளிற் காணப்படும். "பெரும்பெயர்க் கடவுளின்" என்ற சொற்றொடருக்கு மாதவச் சிவஞான முனிவர் "பெரும் பெயரெனினும், மகா வாக்கியமெனினும், ஒரு வார்த்தையெனினும் ஒக்கும். பெரும் பெயர்ப் பொருளே அஞ்செழுத்துக்கு மாதலின், பெரும் பெயரோடு அஞ்செழுத்திடை வேற்றுமையின்மை யுணர்க." எனத் திராவிட மாபாடியத்தில் எழுதியிருப்பதுவும், எமது கருத்தை வலியுறுத்தும். ௫-வது மேற்கோளிற்கண்ட, வண்மொழி, என்பதற்கும் பிரணவமென்ற பொருள் கிடையாது. வண்மையுள்ள அதாவது மெய்யான மொழியென்று அர்த்தமாம். அதுவும் வேதத்தையே குறிக்கும். மன்னுருவாய் மாமறைகளோதினன்காண், என்பதற்கு நிலைபெற்ற சதாசிவமூர்த்தங் கொண்டு வேதங்களை அருளினனென்பதே பொருளாகும். இவ்வாறு பொருள்கொள்வதே நஞ்சைவநூல்களின் கருத்துக்கு உடன்பாடாகும்; நிற்க மேலாராய்வாம்.

இனி, நம்மவர் கூறுவதாவது :—

உஉ. "பண்டிருக்கொரு நால்வர்க்கு நீருரைசெய்ததே"
"என்றவிடத்து இருக்கு என்ற சொல் மந்திரத்தை யுணர்த்தி
"நின்றது. இருக்கு வேதத்தைச் சுட்டுவதன்று, மந்திரம்
"என்னும் பொருளே அவ்வடசொற்கு உண்மையாலென்க.
"இருக்கு என்பதற்கு அப்பெயருடைய வடமொழி வேத
"மென்று பொருள்கொண்டால் இருக்கு வேதத்தின்
"பொருளை மாத்திரம் சிவபெருமானிடங் கேட்டதாகக்
"கதையுமில்லை. மேலும் அவ்விருக்குவேதம் பல முனிவர்கள்
"சிவபெருமானை யொழிந்த பற்பல தெய்வங்களைப் பற்றிப்
"பாடிய தொகைநூல்களாக விருக்கின்றது.

* * * *

"அதன்கணுள்ள ௧0உஅ சூக்தங்களுள்ளும் நான்கு சூக்தங்
"களே உருத்திரர்க்கு அமைந்துள்ளன. அவ்வுருத்திரரும்
"சிவனென்றழைக்கப்படவில்லை. தத்துவக் கொள்கை

"யாதும் அவ்வுருத்திரர்க்குரிய சூக்தங்களுள் கூறப்படவில்லை.
"நாற்கால் பசுக்களுக்குப் பதியாக ஆண்டு அவர் வழிபடப்
"படுகின்றார். கண்வர் கூறிய இருக்குவேதமுதல் மண்டிலம்
"சஙு-வது சூக்தத்தில் "நம்மைச்சேர்ந்தோர்க்கும் நம்முடைய
"ஆக்களுக்கும் நம்முடைய எருதுகளுக்கும் நம்பின்னோர்க்
"கும் அதிதியானவள் உருத்திரரின் அருளை வழங்குதற்பொ
"ருட்டும்" என்றும், "பசுபதியான அவர் நம்முடையபோர்க்
"குதிரைகட்கு நலத்தினையும் நம்முடைய செம்மறிக் கிடாய்
"கள் கிடாரிகள் நம் ஆடவர் பெண்டிர் ஆக்கள் என்னும்
"இவர்கட்கும் நல்வாழ்வினையுந் தந்தருளுவாராக" என்றுங்
"கூறப்பட்டுள்ளதை நோக்குமிடத்து அது தெள்ளிது"

* * * *

"அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருளையும்
"ஆல நிழற்கீழ் முனிவர்க்குக் கடவுள் அறிவுறுத்தருளினர்
"என்பதைக் கருதுமிடத்து வடமொழி இருக்குவேதத்திற்குப்
"பொருள் கூறினரொன்று யூகிப்பதற்குச் சிறிதுமிடமின்மை
"காண்க. ஆதலால் இருக்கு என்ற சொற்கு மந்திரமென்னும்
"பொருளே மிகவும் இயைபுடையதாகக் கொள்ளற்பாற்று"
எனச் சித்தாந்தப்படுத்தினர்.

மேலே சொல்லியிருப்பவைகளை ஒவ்வொன்றாக விசாரிப்பாம்:—

ருக் என்ற வடசொல் மந்திரத்தை உணர்த்திநின்றது ருக்வேதத்தைச் சுட்டுவதன்று என்றார். ருக் என்ற வடமொழிப் பதம், மந்திரத்தை உணர்த்திநின்றது என்பதை இவர் எந்த மொழிவாயிலாகக் கண்டார். அப்படி இவர் கண்டதும் வடமொழிவாயிலாகத்தானே. அப்படிக்கில்லை தமிழ் மொழியின் இலக்கண இலக்கிய ஆதாரத்தாலெனின் அதற்கு ஆதாரமென்னை? ருக் என்ற வடமொழிக்குத் தமிழ் நூல்களில் பொருள் சொல்லவேண்டுவதில்லையே. தமிழ் நூல்களில் ருக் என்ற பதம் வழங்குவதனால் அதற்குப் பொருள் அறியப்படவேண்டுமே யென்னில் வடமொழிக்கு வடசொல் இலக்கணவாயிலாகத்தான் பொருள் அறியவேண்டும். அப்படி யறியும்போது ருக் என்ற வடமொழிக்கு மந்திரம் என்று பொருள் கொள்வது சரியே. அப்போது மந்திரம் என்ற பதமும் வடமொழியே யாம். வடமொழியாகிய மந்திரம் என்ற பதத்திற்குப் பொருள் விசாரிக்கையில், மந் + திரா வென்னும் தாதுக்கள் அடியாகப் பிறந்த பதமாகி மனசினால் நினைப்பவரைக் காப்பாற்றுந் தன்மையுடைய தெனப்பொருள் படுவதாகத் தெரிகின்றது. இவ்வாறு பொருள்படும் மந்திரங்களாலாகிய ஒரு

நூலை உணர்த்த அம்மந்திரத்துக்குப் பரியாய நாமமாகிய ருக் என்ற வடசொற்பெயரெய்தியதென்று விளங்குகின்றது. குறள் வெண்பாக்களாலாகிய நூலைக்குறள் என்று கூறுதல் போல. அவ்வாறல்ல, தொல்காப்பியர் கூறிய "நிறைமொழிமாந்த ராணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திரம் என்ப" என்னுஞ் சூத்திரத்தில் கூறியபடி மந்திரமெனப் பொருள் கொள்வோமெனின் தொல்காப்பியர் வடமொழியாகிய மந்திர மென்ற பதத்திற்குப் பொருள்கூற இச்சூத்திரம் வகுத்தாரல் லர். தமிழ் வழக்கினுள்ள அறுவகைச்செய்யுள் அதாவது நூலி னை, உரையினை, கொடியொடு புணர்ந்த பிசியினை, ஏது முத லிய முதுமொழியினை, **மறைமொழி கிளந்த மந்திரத்தான**, கூற் றிடை வைத்த குறிப்பினை, எனக்கூறி, **மறைமொழி கிளந்த மந்திரத்தான செய்யுள்** இன்னதென்பதை மேற்காட்டிய "நிறை மொழி மாந்தராணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திர மென்ப" வெனுஞ் சூத்திரத்தால் கூறினாரே யொழிய மந்திரம் என்னும் வடமொழிப் பதத்திற்குப் பொருள்கூற அச்சூத் திரம் கூறினாரல்லர். மந்திரமென்ற மொழியைத்தமிழ் இடு குறிப் பெயராகவே கொண்டாரெனத் தெரிகின்றது. காரணப்பெயராகக் கொண்டாரென்றால் மந்திரமென்ற பதம் எவ்வாறு ஆயது? தமிழ்ச் சொல்லானால், அச்சொற்குப் பகுதி, விகுதி என்னை? இச்சூத்திரத்திற் கூறிய மறைமொழி என்ற சொற்றொடருக்குப், புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லுஞ் சொற்றொடரெல்லாம் மந்திரமெனப் படும் என்று உரையாசிரியர் பொருள் கண்டார். அவ்வகைச் சொற்றொடர்களுக்கு ஓர் உதாரணமுங் கூற இயலாதவராகி அவை வல்லார்வாய்க் கேட்டுணர்கவென்றார். இதனால், இச் சூத்திரத்திற் காணப்படும் மந்திரம் என்ற மொழிக்குள்ள பொருளை ருக் எனுஞ் சொல் உணர்த்தும் மந்திரமெனப் பொருள் கொள்வதற்கு இல்லை. மேலுந் தமிழ் மொழிக்கு இலக்கணமாகவேற்பட்ட இச்சூத்திரம் வடமொழியாகிய ருக் என்ற பதத்திற்குப் பொருள் கூறிற்றென்று சொல்வது பொருந்தாது. இவ்வாராய்ச்சியால் தெரிவதியாதெனின், ஒரு பாஷைக்குரிய ஒரு மொழிக்குப் பொருள் கொள்ள வேண்டுமானால் அந்தப் பாஷையில் அம்மொழிக்கு என்ன பொருள் காட்டப்பட்டிருக்கின்றதோ அப்பொருளையே கொள்ளவேண்டுமென்பதுவே.

𑌤𑌚𑍍𑌚𑍋𑌦𑌕𑍇𑌷𑍁 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌖𑍍𑌯𑌾 ௨, ௧, ௩௨.
𑌤𑍇𑌷𑌾𑌂 𑌋𑌗𑍍 𑌯𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌵𑌶𑍇𑌨 𑌪𑌾𑌦𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾 । ௨, ௧, ௩௫.
𑌗𑍀𑌤𑌿𑌷𑍁 𑌸𑌾𑌮𑌾𑌖𑍍𑌯𑌾 ॥ ௨, ௧, ௩௬.

" தச்சோத சேஷுமந்த்ராக்யா "
" தேஷாம் ருக்யத்ர அர்த்தவஸேந பாதவ்யவஸ்தா "
" கீதிஷு ஸாமாக்யா "

என்ற பூர்வமீமாம்சை சூத்திரங்களால் வேதத்தில் தேவதைகளைப்பற்றிச் சொல்லும் பாகங்களுக்கு மந்திரமென்று பெயர். அர்த்தத்திற்காக எங்கே அடியடியாக அதாவது செய்யுள் வடிவாக இருக்கிறதோ அதற்கு ருக் என்று பெயர். கீதங்களுக்கு ஸாம என்று பெயர். இன்னமும்:—

" அர்ச்சயந்தே தேவா: ஏடா: இதி ருக் " என்ற வாக்கியத்தாலும் தேவர்களை வணங்குவதற்குக் கூறப்பட்டது ருக் ஆகும் என்றார்கள். வடமொழி அமரக்காரரும்.
"ஸ்ருதி ஸ்ரீவேத ஆம்நாய:" "ஸ்திரியாம் ருக்கு ஸாமயஜுஷி"

சுருதி, வேதம், ஆம்நாயம், இவை வேதத்திற்குப் பெயரென்றும் அவை ருக்கு, யஜுர், சாமம் என்னும் பெயர்களும் பெறும் என்றார். இதை அநுசரித்தே தமிழ் திவாகரம், நிகண்டு ஆக்கியோர்களும்.

" இருக்குச் சுருதி, மறை, எழுதாக்கிளவி, ஆதி நூல், சாகை, ஆரணம் வேதம் "

" பௌடிகம் இருக்கு முதல் வேதமாகும் "
" இரண்டாம் வேதம் யசு தைத்திரியம் "
" மூன்றது சாமவேதம் கீதநடை " என்று சூத்திரம் கூறினார்கள்.

இவ்வளவு பிரமாணங்களுக்கெல்லாம் முரணாக, " பண்டு இருக்கு ஒரு நால்வர்க்கு நீர் உரை செய்ததே " என நம் வேதபாரகராகிய ஸ்ரீஞானசம்பந்தப் பெருமான் கூறிய தமிழ் மறையில் காணப்படும் ருக்கு என்ற மொழி இருக்கு வேதத்தைச் சுட்டுவதன்று என நம் நண்பர் கூறும் கூற்று ஆன்றோர் சபையில் ஏறாது. இனி ருக்கு என்பதற்கு அப் பெயருடைய வடமொழி வேதம் எனப் பொருள் கொண்டால் ருக் வேதத்தின் பொருளை மாத்திரம் சிவபெருமானிடங் கேட்டதாகக் கதையுமில்லையென நம்மவர் சொல்வதை ஆராய்வாம். ருக் என முதல் வேதத்தின் பெயரைக் கூறவே இனம்பற்றி மற்றைய மூன்று வேதங்களும் சேரும் என்றே பொருள்படும். " பார்ப்பான் பிறப்பு ஒழுக்கங்குன்றக்கெடும் " என்ற குறட்பாவுக்கு உரையாசிரியர் பரிமேலழகர் சிறப்புடைய வருணத்தை யெடுத்து மொழிந்தமையின் ஏனைய வருணங்களுக்குங் கொள்ளப்பட்டது என்று பொருள் உரைத்ததுபோல், அவ்

லதூஉம் ருக்கு என்னும் பதம், வேதம் என்னும் பொருளையே தரும். "இக்கிராமத்தென்னு மிருக்கு" என்ற சிவஞானபோத உதாரண வெண்பாவின் பகுதியிற்கண்ட ருக்கு என்னுஞ் சொற்கு, ருக்வேதமெனப் பொருள்கொள்ளாமல் "இந்த மறைமை போலவென்னும் வேதங்கள்" எனச் சிவஞான போத விருத்தியுரை ஆசிரியர் பாண்டிப்பெருமாள் உரை கண்டனர். மாதவச் சிவஞான முனிவரும் அவ்வாறே பொருள் கண்டார். பெரிய புராணம், தடுக்காட்கொண்ட புராணம், கசுஎ-ம் செய்யுளில் 'இருக் கோலமிடும் பெருமான்,' சம்பந்தர் புராணம் அ௦-வது செய்யுளில், 'இருக்கு மொழிப்பிள்ளையார்,' கஉசு-வது செய்யுளில் "இருக்குமொழி அந்தணர்" என்னுஞ் சொற்றொடர்களில் காணப்படும் இருக்கு என்னுஞ் சொற்கு வேதம் என்றே உரை ஆசிரியர் பொருள் கண்டார். ஏன் என்றால், ருக்கு என்னும் பதமும் வேதம் என்னும் பதமும் ஒன்றற்கொன்று பரியாய நாமங்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றமையான். திவாகரத்தில் "வேதநூலின் பெயர், ஆதிநூலென்பது வேதநூற் பெயரே. இருக்கோத்தாரணம் வேதமென்ப. பிங்கலந்தையில் "வேதத்தின் பெயர், இருக்குச் சுருதி மறையெழுதாக்கிளவி, ஆதிநூல் சாகை ஆரணம் வேதம்" என்பவற்றானும் விளங்கும். ஆதலால் "பண்டிருக்கொரு நால்வர்க்கு நீருரைசெய்கதே" என்ற தமிழ் மறைப்பகுதியிற் காணப்படும் 'ருக்கு' என்ற சொல் நான்கு வேதங்களையுமே குறிக்கும். இன்னமொன்றுளது. மார்க்கண்டேயர் ஆரியவிருடி யென்பதையும் அவர் சிவபெருமானைப் பூசித்துப் பேறுபெற்றவரென்பதையும் ஒருவரும் மறுக்கார். அவர் வழிபாடு செய்த சரித்திரங்கூறப் புகுந்த திருஞானசம்பந்தப் பெருமான் அருளிய தேவாரம்" "நன்றுநகு நாண்மலரா னல்லிருக்கு மந்திரங் "கொண், டொன்றிவழி பாடுசெய லுற்றவன்றன் ளோங்குயிர் "மேல், கன்றிவரு காலனுயிர் கண்டவனுக் கன்றளித்தான்- "கொன்றைமலர் பொன்றிகழுங் கோளிலியெம்பெருமானே" இத் தேவாரத்தில் வேதமந்திரங்களைக்கொண்டு அர்ச்சித்தார் எனும் பொருள்பட "நல்லிருக்கு மந்திரங்கொண்டு" என அருளிச் செய்திருப்பதனாலும் இருக்கு என்பது வேதம் எனப் பொருள்படுதலையுங்காணலாம். இச்சொற்றொடரில் இருக்கு, மந்திரம், என்ற இரண்டு மொழிகளுங் காணப்படுகின்றன. இருக்கு என்ற சொல்லே நம்மவர் கற்பனைப்படி மந்திரம் எனும் பொருள் பயக்குமானால் இருக்கு என்ற மொழியுடன் மந்திரம் என்ற மொழியையும் சேர்த்துக் கூறவேண்டுவதில்லை. இனி ருக்குவேதம் சிவபெருமானை யொழிந்த பற்பல தெய்வங்களைப்பற்றிய பாடல்களென்றும் சிலவற்றில் உருத்திரர் பெயர்

காணப்படுவதில் அவ்வுருத்திரரும் சிவனென்றழைக்கப்படவில்லை யென்றும் நம்மவர் சொல்வது, அவரது ஆராய்ச்சிக் குறைவே யென்பதனைக் காட்டுதும். ருக்வேதம் க0-கூஉ-கூ.

ஸ்தோமம் வோ அத்ய ருத்ராய ஶிக்வஸே க்ஷயத்வீராய நமஸா திதிஷ்டந । யேபி: ஶிவ: ஸ்வவாம் ஏவயாவபிர் திவ: ஸிஷக்தி ஸ்வயஶா: நிகாமபி: ॥

"ஸ்தோமம்வோ அத்யருத்ராய ஶிக்வஸெக்ஷயத்வீராய நமஸாதிதிஷ்டந | யேபி:ஶிவ: ஸ்வவாம் ஏவயாவபிர்திவ:ஸிஷக்தி ஸ்வயசா:நிகாமபி:" ||

* இதன் பொருள் வருமாறு. தேவர்களே!

வ:—உங்களுடைய, ஸ்தோமம்—ஸ்தோத்திரத்தை, ஶிக்வஸே—நிக்கிரகானுக்ரக சக்தியுடையவரும், க்ஷயத்வீராய—வீரபத்திரர் முதலிய கணங்களாற் சூழப்பட்டவருமாகிய, ருத்ராய—உருத்திரருக்கு, நமஸா—நமஸ்காரத்தோடு கூட, திதிஷ்டந—காட்டுங்கள், ஏபி:—அந்த ஸ்துதி நமஸ்காரங்களால், தேவ:—தேவர்களாகிய நீங்கள், நிகாமபி:—எண்ணும் விருப்பங்களிலெல்லாம், யாவபி:—அடையக்கூடிய பலன்களே, ஸ்வா—எஜமானரும், ஸ்வயஸா:—பிறர்க்கில்லாத கீர்த்தியுடையவருமாகிய, ஶிவஏவ—சிவபெருமான் ஒருவரே, ஸிஷக்தி—சேர்த்திருக்கிறார்.

உங்களுடைய ஸ்தோத்திரமென்றது உங்களுக்குப் பிறர் செய்த ஸ்தோத்திரம் எனப் பொருள். இங்கே கூறப்பட்ட ருத்திரர் மஹாருத்திரரே. குண ருத்திரரல்லர். அவ்வீரபத்ரர் முதலிய கணங்களாற் சூழப்பட்டவரென்பதனாலேயே விளங்கும். இந்த ருக்குவேத மஹாமந்திரத்தால் மகாருத்திரராகிய சிவபெருமான் ஒருவரே எஜமானரும் பிறர்க்கில்லாத கீர்த்தியுடைவருமென்பது காட்டப்பட்டது.

மஹா பிரளய காலத்திலே சிவ பெருமான் ஒருவரே உளர் என்பதை ருக்குவேதம் க0, கஉகூ, க. நாஸதாஸீ ந்நோஸதாஸீத் ததாநீம் (ரூ-கஉகூ-உ) ததேகம் ஆஸீத் (ரூ-கஉகூ-ச) காமஸ் ததக்ரே ஸமவர்த்ததாதி । காமஸ் ததக்ரே ஸமவர்த்தத

---

* இம் மந்திரத்திற்கு இப் பொருள் ஸ்ரீஅரதத்தாசாரியர் அருளிச்செய்த சுருதி சூக்தி மாலையில் "தத்தந்நம:" என்று தொடங்கும் பதினேழாவது சுலோக வியாக்கியானத்திற் சிவலிங்க பூபதி கூறியவாறு பற்றி எழுதப்பட்டது.

னெழுத்தஞ்சும்" என அப்பமூர்த்திகளும் அருளியிருப்பதையும் கவனிக்க. "நங்களுக்கருங்கலம் நமச்சிவாயவே" என்றும் அப்பமூர்த்திகள் மற்றோரிடத்திலுமருளியிருக்கின்றார்கள். "உடையாளுன்றனடுவிருக்குமுடையாளடுவுணீயிருத்தி—அடியேனடுவுளிருவீரு மிருப்பதானால்" என்று மாணிக்கவாசகர் பஞ்சாக்கரத்தின் அடைவைக் குறித்து மொழிந்திருக்கின்றார். இன்னம் பலவுள. ஆதலால், ஸ்ரீபஞ்சாட்சரமே, மாணிக்கவாசகப் பெருமானுக்கு உபதேசமானது. சிவஞானபோதம் சிறப்புப்பாயிரச் செய்யுளிற் காணப்படும். "பெரும் பெயர்க் கடவுளின்" என்ற சொற்றொடருக்கு மாதவச் சிவஞான முனிவர் "பெரும் பெயரெனினும், மகா வாக்கியமெனினும், ஒரு வார்த்தையெனினும் ஒக்கும். பெரும் பெயர்ப் பொருளே அஞ்செழுத்துக்கு மாதலின், பெரும் பெயரோடு அஞ்செழுத்திடை வேற்றுமையின்மை யுணர்க." எனத் திராவிட மாபாடியத்தில் எழுதியிருப்பதுவும், எமது கருத்தை வலியுறுத்தும். ௺-வது மேற்கோளிற்கண்ட, வண்மொழி, என்பதற்கும் பிரணவமென்ற பொருள் கிடையாது. வண்மையுள்ள அதாவது மெய்யான மொழியென்று அர்த்தமாம். அதுவும் வேதத்தையே குறிக்கும். மன்னுருவாய் மாமறைகளோதினன்காண், என்பதற்கு நிலைபெற்ற சதாசிவமூர்த்தங் கொண்டு வேதங்களை அருளினனென்பதே பொருளாகும். இவ்வாறு பொருள்கொள்வதே நஞ்சைவநூல்களின் கருத்துக்கு உடன்பாடாகும்; நிற்க மேலாராய்வாம்.

இனி, நம்மவர் கூறுவதாவது:—

உஉ. "பண்டிருக்கொரு நால்வர்க்கு நீருரைசெய்ததே"
"என்றவிடத்து இருக்கு என்ற சொல் மந்திரத்தை யுணர்த்தி
"நின்றது. இருக்கு வேதத்தைச் சுட்டுவதன்று, மந்திரம்
"என்னும் பொருளே அவ்வடசொற்கு உண்மையாலென்க.
"இருக்கு என்பதற்கு அப்பெயருடைய வடமொழி வேத
"மென்று பொருள்கொண்டால் இருக்கு வேதத்தின்
"பொருளை மாத்திரம் சிவபெருமானிடங் கேட்டதாகக்
"கதையுமில்லை. மேலும் அவ்விருக்குவேதம் பல முனிவர்கள்
"சிவபெருமானை யொழிந்த பற்பல தெய்வங்களைப் பற்றிப்
"பாடிய தொகைநூல்களாக விருக்கின்றது.

* * * *

"அதன்கணுள்ள க0உஅ சூக்தங்களுள்ளும் நான்கு சூக்தங்
"களே உருத்திரர்க்கு அமைந்துள்ளன. அவ்வுருத்திரரும்
"சிவனென்றழைக்கப்படவில்லை. தத்துவக் கொள்கை

“யாதும் அவ்வுருத்திரர்க்குரிய சூக்தங்களுள் கூறப்படவில்லை.
“நாற்காற் பசுக்களுக்குப் பதியாக ஆண்டு அவர் வழிபடப்
“படுகின்றார். கண்வர் கூறிய இருக்குவேதமுதல் மண்டிலம்
“சஙு-வது சூக்தத்தில் “நம்மைச்சேர்ந்தோர்க்கும் நம்முடைய
“ஆக்களுக்கும் நம்முடைய எருதுகளுக்கும் நம்பின்னோர்க்
“கும் அதிதியானவள் உருத்திரரின் அருளை வழங்குதற்பொ
“ருட்டும்” என்றும், “பசுபதியான அவர் நம்முடையபோர்க்
“குதிரைகட்கு நலத்தினையும் நம்முடைய செம்மறிக் கிடாய்
“கள் கிடாரிகள் நம் ஆடவர் பெண்டிர் ஆக்கள் என்னும்
“இவர்கட்கும் நல்வாழ்வினையுந் தந்தருளுவாராக” என்றுங்
“கூறப்பட்டுள்ளதை நோக்குமிடத்து அது தெள்ளிது”

* * * *

“அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருளையும்
“ஆலநிழற்கீழ் முனிவரர்க்குக் கடவுள் அறிவுறுத்தருளினர்
“என்பதைக் கருதுமிடத்து வடமொழி இருக்குவேதத்திற்குப்
“பொருள் கூறினரென்று யூகிப்பதற்குச் சிறிதுமிடமின்மை
“காண்க. ஆதலால் இருக்கு என்ற சொற்கு மந்திரமென்னும்
“பொருளே மிகவும் இயைபுடையதாகக் கொள்ளற்பாற்று”
எனச் சித்தாந்தப்படுத்தினர்.

மேலே சொல்லியிருப்பவைகளை ஒவ்வொன்றாக விசாரிப்பாம்:—

ருக் என்ற வடசொல் மந்திரத்தை உணர்த்திநின்றது ருக்வேதத்தைச் சுட்டுவதன்று என்றார். ருக் என்ற வடமொழிப் பதம், மந்திரத்தை உணர்த்தி நின்றது என்பதை இவர் எந்த மொழிவாயிலாகக் கண்டார். அப்படி இவர் கண்டதும் வடமொழிவாயிலாகத்தானே. அப்படிக்கில்லை தமிழ் மொழியின் இலக்கண இலக்கிய ஆதாரத்தாலெனின் அதற்கு ஆதாரமென்னை? ருக் என்ற வடமொழிக்குத் தமிழ் நூல்களில் பொருள் சொல்லவேண்டுவதில்லையே. தமிழ் நூல்களில் ருக் என்ற பதம் வழங்குவதனால் அதற்குப் பொருள் அறியப்பட வேண்டுமே யென்னில் வடமொழிக்கு வடசொல் இலக்கணவாயிலாகத்தான் பொருள் அறியவேண்டும். அப்படி யறியும்போது ருக் என்ற வடமொழிக்கு மந்திரம் என்று பொருள் கொள்வது சரியே. அப்போது மந்திரம் என்ற பதமும் வடமொழியே யாம். வடமொழியாகிய மந்திரம் என்ற பதத்திற்குப் பொருள் விசாரிக்கையில், மந் + திரா வென்னும் தாதுக்கள் அடியாகப் பிறந்த பதமாகி மனசினால் நினைப்பவரைக் காப்பாற்றுந் தன்மையுடைய தெனப்பொருள் படுவதாகத் தெரிகின்றது. இவ்வாறு பொருள்படும் மந்திரங்களாலாகிய ஒரு

நூலே உணர்த்த அம்மந்திரத்துக்குப் பரியாய நாமமாகிய ருக் என்ற வடசொற்பெயரெய்தியதென்று விளங்குகின்றது. குறள் வெண்பாக்களாலாகிய நூலேக்குறள் என்று கூறுதல் போல. அவ்வாறல்ல, தொல்காப்பியர் கூறிய "நிறைமொழிமாந்தராணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திரம் என்ப" என்னுஞ் சூத்திரத்தில் கூறியபடி மந்திரமெனப் பொருள் கொள்வோமெனின் தொல்காப்பியர் வடமொழியாகிய மந்திரமென்ற பதத்திற்குப் பொருள்கூற இச்சூத்திரம் வகுத்தாரல்லர். தமிழ் வழக்கினுள்ள அறுவகைச்செய்யுள் அதாவது நூலினை, உரையினை, கொடியொடு புணர்ந்த பிசியினை, ஏது முதலிய முதுமொழியினை, மறைமொழி கிளந்த மந்திரத்தான, கூற்றிடை வைத்த குறிப்பினை, எனக்கூறி, மறைமொழி கிளந்த மந்திரத்தான செய்யுள் இன்னதென்பதை மேற்காட்டிய "நிறைமொழி மாந்தராணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திரமென்ப" வெனுஞ் சூத்திரத்தால் கூறினரே யொழிய மந்திரம் என்னும் வடமொழிப் பதத்திற்குப் பொருள்கூற அச்சூத்திரம் கூறினாரல்லர். மந்திரமென்ற மொழியைத்தமிழ் இடுகுறிப் பெயராகவே கொண்டாரெனத் தெரிகின்றது. காரணப்பெயராகக் கொண்டாரென்றால் மந்திரமென்ற பதம் எவ்வாறு ஆயது? தமிழ்ச் சொல்லானால், அச்சொற்குப் பகுதி, விகுதி என்னே? இச்சூத்திரத்திற் கூறிய மறைமொழி என்ற சொற்றொடருக்குப், புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லுஞ் சொற்றொடரெல்லாம் மந்திரமெனப் படும் என்று உரையாசிரியர் பொருள் கண்டார். அவ்வகைச் சொற்றொடர்களுக்கு ஓர் உதாரணமுங் கூற இயலாதவராகி அவை வல்லார்வாய்க் கேட்டுணர்கவென்றார். இதனால், இச்சூத்திரத்திற் காணப்படும் மந்திரம் என்ற மொழிக்குள்ள பொருளை ருக் எனுஞ் சொல் உணர்த்தும் மந்திரமெனப் பொருள் கொள்வதற்கு இல்லை. மேலுந் தமிழ் மொழிக்கு இலக்கணமாகவேற்பட்ட இச்சூத்திரம் வடமொழியாகிய ருக் என்ற பதத்திற்குப் பொருள் கூறிற்றென்று சொல்வது பொருந்தாது. இவ்வாராய்ச்சியால் தெரிவதியாதெனின், ஒரு பாஷைக்குரிய ஒரு மொழிக்குப் பொருள் கொள்ள வேண்டுமானால் அந்தப் பாஷையில் அம்மொழிக்கு என்ன பொருள் காட்டப்பட்டிருக்கின்றதோ அப்பொருளையே கொள்ளவேண்டுமென்பதுவே.

தமெ௺ாஉகெஷ-ு ௨ஂத௲ாவ௵ா ௨, க, ௩௨.
தெஷாஂ ஜீம யத௲ கய-ிவெமு௩ வாஉவ௵வஞூா। ௨, க, ௩௫.
ஜீதிஷ-ு ஷாஉாவ௵ா॥ ௨, க, ௩௬.

"தச்சோத சேஷுமம்த்ராக்யா"
"தேஷாம் ருக்யத்ர அர்த்தவஸேந பாதவ்யவஸ்தா"
"கீதிஷு ஸாமாக்யா"

என்ற பூர்வமீமாம்சை சூத்திரங்களால் வேதத்தில் தேவதைகளைப்பற்றிச் சொல்லும் பாகங்களுக்கு மந்திரமென்று பெயர். அர்த்தத்திற்காக எங்கே அடியடியாக அதாவது செய்யுள் வடிவாக இருக்கிறதோ அதற்கு ருக் என்று பெயர். கீதங்களுக்கு ஸாம என்று பெயர். இன்னமும்:—

"அர்ச்சயந்தே தேவா: ஏடா: இதி ருக்" என்ற வாக்கியத்தாலும் தேவர்களை வணங்குவதற்குக் கூறப்பட்டது ருக் ஆகும் என்றார்கள். வடமொழி அமரக்காரரும்.
"ஶ்ருதி ஸ்ரீவேத ஆம்நாய:" "ஸ்திரியாம் ருக்கு ஸாமயஜுஷி"

சுருதி, வேதம், ஆம்நாயம், இவை வேதத்திற்குப் பெயரென்றும் அவை ருக்கு, யஜுர், சாமம் என்னும் பெயர்களும் பெறும் என்றார். இதை அனுசரித்தே தமிழ் திவாகரம், நிகண்டு ஆக்கியோர்களும்.

"இருக்குச் சுருதி, மறை, எழுதாக்கிளவி, ஆதி நூல், சாகை, ஆரணம் வேதம்"

"பௌடிகம் இருக்கு முதல் வேதமாகும்"
"இரண்டாம் வேதம் யசு தைத்திரியம்"
"மூன்றது சாமவேதம் கீதநடை" என்று சூத்திரம் கூறினார்கள்.

இவ்வளவு பிரமாணங்களுக்கெல்லாம் முரணாக, "பண்டு இருக்கு ஒரு நால்வர்க்கு நீர் உரை செய்ததே" என நம் வேதபாரகராகிய ஸ்ரீஞானசம்பந்தப் பெருமான் கூறிய தமிழ் மறையில் காணப்படும் ருக்கு என்ற மொழி இருக்கு வேதத்தைச் சுட்டுவதன்று என நம் நண்பர் கூறும் கூற்று ஆன்றோர் சபையில் ஏறாது. இனி ருக்கு என்பதற்கு அப்பெயருடைய வடமொழி வேதம் எனப் பொருள் கொண்டால் ருக் வேதத்தின் பொருளை மாத்திரம் சிவபெருமானிடங் கேட்டதாகக் கதையுமில்லையென நம்மவர் சொல்வதை ஆராய்வாம். ருக் என முதல் வேதத்தின் பெயரைக் கூறவே இனம்பற்றி மற்றைய மூன்று வேதங்களும் சேரும் என்றே பொருள்படும். "பார்ப்பான் பிறப்பு ஒழுக்கங்குன்றக்கெடும்" என்ற குறட்பாவுக்கு உரையாசிரியர் பரிமேலழகர் சிறப்புடைய வருணத்தையெடுத்து மொழிந்தமையின் ஏனைய வருணங்களுக்குங் கொள்ளப்பட்டது என்று பொருள் உரைத்ததுபோல், அல்

லதூஉம் ருக்கு என்னும் பதம், வேதம் என்னும் பொருளையே தரும். "இக்கிரமத்தென்னு மிருக்கு" என்ற சிவஞான போத உதாரண வெண்பாவின் பகுதியிற்கண்ட ருக்கு எனுஞ் சொற்கு, ருக்வேதமெனப் பொருள்கொள்ளாமல் "இந்த முறைமை போலவென்னும் வேதங்கள்" எனச் சிவஞான போத விருத்தியுரை ஆசிரியர் பாண்டிப்பெருமாள் உரை கண்டனர். மாதவச் சிவஞான முனிவரும் அவ்வாறே பொருள் கண்டார். பெரிய புராணம், தடுத்தாட்கொண்ட புராணம், கசஉ-ம் செய்யுளில் 'இருக்கோலமிடும் பெருமான்,' சம்பந்தர் புராணம் அ௦-வது செய்யுளில், 'இருக்குமொழிப்பிள்ளையார்,' கூஉ-வது செய்யுளில் "இருக்குமொழி அந்தணர்" என்னுஞ் சொற்றொடர்களில் காணப்படும் இருக்கு என்னுஞ் சொற்கு வேதம் என்றே உரை ஆசிரியர் பொருள் கண்டார். ஏன் என்றால், ருக்கு என்னும் பதமும் வேதம் என்னும் பதமும் ஒன்றற்கொன்று பரியாய நாமங்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றமையான். திவாகரத்தில் "வேதநூலின் பெயர், ஆதி நூலென்பது வேதநூற் பெயரே. இருக்கோத்தாரணம் வேதமென்ப. பிங்கலந்தையில் "வேதத்தின் பெயர், இருக்குச் சுருதி மறையெழுதாக்கிளவி, ஆதிநூல் சாகை ஆரணம் வேதம்" என்பவற்றானும் விளங்கும். ஆதலால் "பண்டிருக்கொரு நால்வர்க்கு நீருரைசெய்கதே" என்ற தமிழ் மறைப்பகுதியிற் காணப்படும் 'ருக்கு' என்ற சொல் நான்கு வேதங்களையுமே குறிக்கும். இன்னமொன்றுளது. மார்க்கண்டேயர் ஆரியவிருடியென்பதையும் அவர் சிவபெருமானைப் பூசித்துப் பேறுபெற்றவரென்பதையும் ஒருவரும் மறுக்கார். அவர் வழிபாடு செய்த சரித்திரங்கூறப் புகுந்த திருஞானசம்பந்தப் பெருமான் அருளிய தேவாரம்" "நன்றுநகு நாண்மலரா னல்லிருக்கு மந்திரங் "கோண், டொன்றிவழி பாடுசெய வுற்றவன்றன் னோங்குயிர் "மேல், கன்றிவரு காலனுயிர் கண்டவனுக் கன்றளித்தான்- "கொன்றைமலர் பொன்றிகழுங் கோளிலியெம்பெருமானே" இத் தேவாரத்தில் வேதமந்திரங்களைக்கொண்டு அர்ச்சித்தார் எனும் பொருள்பட "நல்லிருக்கு மந்திரங்கொண்டு" என அருளிச் செய்திருப்பதனானும் இருக்கு என்பது வேதம் எனப் பொருள்படு தலையுங்காணலாம். இச்சொற்றொடரில் இருக்கு, மந்திரம், என்ற இரண்டு மொழிகளுங் காணப்படுகின்றன. இருக்கு என்ற சொல்லே நம்மவர் கற்பனைப்படி மந்திரம் எனும் பொருள் பயக்குமானால் இருக்கு என்ற மொழியுடன் மந்திரம் என்ற மொழியையும் சேர்த்துக் கூறவேண்டுவதில்லை. இனி ருக்குவேதம் சிவபெருமானை யொழிந்த பற்பல தெய்வங்களைப்பற்றிய பாடல்களென்றும் சிலவற்றில் உருத்திரர் பெயர்

காணப்படுவதில் அவ்வுருத்திரரும் சிவனென்றழைக்கப்படவில்லை யென்றும் நம்மவர் சொல்வது, அவரது ஆராய்ச்சிக் குறைவே யென்பதனைக் காட்டுதும். ருக்வேதம் ௧௦-௯௨-௯.

ஸ்தோமம் வோ அத்ய ருத்ராய ஶிக்வஸே க்ஷயத்வீராய நமஸா திதிஷ்டந। யேபி: ஶிவ: ஸ்வவாம் ஏவயாவபிர் திவ: ஸிஷக்தி ஸ்வயஶா: நிகாமபி: ॥

"ஸ்தோமம்வோ அத்யருத்ராய ஶிக்வஸெக்ஷயத்வீராய நமஸா திதிஷ்டந | யேபி:ஶிவ: ஸ்வவாம் ஏவயா வபிர்திவ:ஸிஷக்தி ஸ்வயசா:நிகாமபி:" ||

* இதன் பொருள் வருமாறு. தேவர்களே!

வ:=உங்களுடைய, ஸ்தோமம்=ஸ்தோத்திரத்தை, ஶிக்வஸே=நிக்கிரகானுக்ரக சக்தியுடையவரும், க்ஷயத்வீராய=வீரபத்திரர் முதலிய கணங்களாற் சூழப்பட்டவருமாகிய, ருத்ராய=உருத்திரருக்கு, நமஸா=நமஸ்காரத்தோடு கூட, திதிஷ்டந=காட்டுங்கள், யேபி:=அந்த ஸ்துதி நமஸ்காரங்களால், தேவ:=தேவர்களாகிய நீங்கள், நிகாமபி:=எண்ணும் விருப்பங்களிலெல்லாம், யாவபி:=அடையக்கூடிய பலன்களை, ஸ்வா=எஜமானரும், ஸ்வயஸா:=பிறர்க்கில்லாத கீர்த்தியுடையவருமாகிய, ஶிவஏவ=சிவபெருமான் ஒருவரே, ஸிஷக்தி=சேர்த்திருக்கிறார்.

உங்களுடைய ஸ்தோத்திரமென்றது உங்களுக்குப் பிறர் செய்த ஸ்தோத்திரம் எனப் பொருள். இங்கே கூறப்பட்ட ருத்திரர் மஹாருத்திரரே. குண ருத்திரரல்லர். அஃது வீரபத்ரர் முதலிய கணங்களாற் சூழப்பட்டவரென்பதனாலேயே விளங்கும். இந்த ருக்குவேத மஹாமந்திரத்தால் மகாருத்திராகிய சிவபெருமான் ஒருவரே எஜமானரும் பிறர்க்கில்லாத கீர்த்தியுடைவருமென்பது காட்டப்பட்டது.

மஹா பிரளய காலத்திலே சிவ பெருமான் ஒருவரே உளர் என்பதை ருக்குவேதம் ௧௦, ௧௨௯, ௧. நாஸதாஸீ ந்நோ ஸதாஸீத்। நாஸதாஸீந்நோஸதாஸீத் ஷெ ம=௧௨௯=௨= ததேகம் (ஆஸீத்) ததேகம் ஆஸீத் ஷெ ம=௧௨௯=௪ காமஸ்ததக்ரே ஸமவர்த்ததா। காமஸ்ததக்ரே ஸமவர்த்தத

* இம் மந்திரத்திற்கு இப் பொருள் ஸ்ரீ அரதத்தாசாரியர் அருளிச்செய்த சுருதி சூக்தி மாலையில் 'தத்கந்நம:' என்று தொடங்கும் பதினேழாவது சுலோக வியாக்கியானத்திற் சிவலிங்க பூபதி கூறியவாறு பற்றி எழுதப்பட்டது.

இவற்றின் பொருள்: மகாபிரளயகாலத்திலே அசத்தும் இல்லை சத்தும் இல்லை, அந்த ஒன்று இருந்தது. அதினின்று முதற் கண்ணே காமம் எனப்படும் பராசக்தி உளதாயிற்று. இந்தக் கருத்தை விளக்கியே,

[illegible]
[illegible]
[illegible] ॥

யதாதமஸ் தந்நதிவான ராத்ரிர் நஸந்நசாஸந்சிவ ஏவகேவல: —
ததக்ஷரந்தத்ஸவிதுர் வரேண்யம் ப்ரஞ்ஞாச தஸ்மாத் ப்ரஸ்
ருதாபுராணீ.

எப்போது இருள் உளதாய்ப் பகலுமின்றி இரவுமின்றிச் சத்துமின்றி அசத்துமின்றி இருந்ததோ, அப்போது சிவன் ஒருவரே இருந்தார். அந்தச் சிவ சூரியனுடைய அந்த அழியாத முக்கியப் பொருளாகிய பிரஞ்ஞை எனப்படும் பழைய பராசக்தி உதித்தார் என்று சுவேதாஸ்வர உபநிஷத்துக் கூறும். சுருங்கச் சொல்லலும் ஆழமுடைய பொருளுடையதுமாகிய சூத்திர ரூபமாகிய வேத வாக்கியங்களின் ரகஸிய அர்த்தங்களையெல்லாம் உபநிஷத்து வாக்கியங்களாற்ருன் அறியவேண்டும். வேதத்தின் அந்தம் வேதாந்தம் என்று உபநிஷத்துக்கள் பெயரெய்தின. அதனால் உபநிஷத்து வாக்கியமும் இங்குக் காட்டப்பட்டது. மகா பிரளயகாலத்திலுள்ள முழுமுதற் கடவுள் சிவபிரானென்று ஏற்படுவதால் அவரே மகா உருத்திரரெனவும் பெயர் பெறுவர். ருக்கு வேதத்திற் கூறப்படும் உருத்திர சப்த முழுமையும் முன் பின் முரணில்லாதவரை மகா உருத்திரரைச் சார்ந்ததே. நமது சிவஞானபோதம் முதற் சூத்திரத்தில் கூறப்படும் "அந்தம் ஆதி யெனமனூர் புலவர்" எனனுஞ் சொற்றொடரில் அந்தத்தைச் செய்யும் இறைவன் என்றதும் இம்மகா ருத்திரரையே. குணி ருத்திரரை அல்ல. ஏனென்ருல ததேகம, என ருக்கு வேதம் சொல்லுகின்றது. ஸ்ரீமாணிக்கவாசகரும் இப்பொருளைச் சுட்டியே 'ஏகன்' எனவும் தமிழ் வேதத்தில் அருளிச் செய்தார். "நாற்காற் பசுக்களுக்குப் பதியாக அவர் (உருத்திரர்) ஆண்டு வழிபடப் படுகின்ருர்" என நம்மவர் எழுதியிருக்கின்ருர். இவர் காட்டிய ருக்கு வேத மேற்கோளிலேயே ஆடு மாடுகளோடுங் கூட நம்மைச் சேர்ந்தோர்க்கும், நம் பின்னோர்க்கும் நம் ஆடவர் பெண்டிர் இவர்களுக்குமெனச் சமஷ்டியாகக் கூறி, இவர்களுக்குப் பசுபதியான அவர் நல்வாழ்வினையுந் தந்தருளுவாராக வெனச் சொல்லப்பட்டிருக்கிறதை வெள்ளிடை மலைபோல

இவரே யெடுத்துக் காட்டியும் வேதத்தைக் குறை கூறவேண்டு மென்று எழுந்த வீராவேச அந்தகாரம் மறைத்துவிட்டது போலும். சிவபெருமான் பசுபதியெனத் தெளிவாய்க் கூறும் வாக்கியம் ருக்கு வேதம். ௧0. ௧௨௧, ௩ல் உளது.

யஃப்ராணதோ நிமிஷதோ மஹித்வைக இந்த்ராஜா ஜகதோ
பபூவ। ய ஈஶே அஸ்ய த்விபதஶ் சதுஷ்பத꞉॥

"ய:ப்ராணதோ நிமிஷதோ மஹித்வைக இத்ராஜா ஜகதோ பபூவ | ய ஈஸே ஸ்யத்விபதச் சதுஷ்பத:||

எவர் சுவாஸம் விட்டதனாலேயும் கண் கொட்டினதனாலேயும் உலகமெல்லாம் சிருஷ்டிக்கப்பட்டதோ, எவர் ஒருவராகவே அரசனாக இருக்கின்றாரோ எவர் இரண்டு காற் பசுக்களுக்கும் நாற்காற் பசுக்களுக்கும் பதியாக இருக்கின்றாரோ அந்தப் பரமேஸ்வரனுக்கு ஹவிஸைக் கொடுப்போம். இதனால் சிவபெருமானை எல்லா ஜீவ ஜந்துக்களுக்கும் பதியென ருக்கு வேதம் பறையறைந்து கூறுவதை நம்மவர்களெல்லாரும் தெரிந்துகொள்ளுவார்களாக. பசுபதி யென்ற பெயர் சிவபெருமானை யொழிந்த வேறெந்தக் கடவுளர்க்கும் எந்த நூலிலுங் கூறப்படவில்லையென்பது சைவ மக்கள் பலருக்கும் தெரிந்த விஷயமே.

யாகாதிபதி சிவபெருமான் என ருக்கு வேதம் கூறும்.

மேதபதிம் । மேதபதிம்—இருக்கு ௧, ௪௩, ௪. ஆவோ ராஜாந மத்வரஸ்ய ருத்ரம் இருக் ௪, ௩, ௧. த்ரிஸ்தஸ்ய ஹோதாரம்..... நிஹிதா। த்ரிஸ் ஸப்தயத்குஹ்யாநித்வே.......நிஹிதா இருக் ௧, ௭௨, ௬.

* மேற்காட்டிய ருக்குகளால் உருத்திரமூர்த்தியாகிய (சிவபெருமான்) யாகங்களுக்குப்பதி-௨௧-யாகங்களுக்கும் தலைவர் என்று ஏற்படுகின்றது. தட்சப்பிரஜாபதி சிவபிரானை நீக்கி யாகஞ் செய்ததும் அதனால் அவன் யாகம் முற்றுப் பெறாமல் அவன் ஈறுபட்டதும் சைவ நூல்களெல்லாம் கூறும். தமிழ் மறைகளிலும் பற்பல இடங்களிலும் விதந்து கூறியிருக்கின்றது. தட்சன் அவனது கர்மவசத்தால் சிவபிரானை இகழ்ச்சிசெய்து

---

* மகா சிவபக்தர்களாயும் தெய்வத்தன்மை வாய்ந்தவர்களாயுமிருந்த தமிழ் நாட்டு மூவேந்தர்களும் இவ் ௨௧ யாகங்களையும் வேத முறைப்படி நடத்தினார்களெனத் தமிழ் நாட்டுச் சரித்திரத்துக்கு ஓர் அஞ்சலாணிபோன்ற சங்க நூல்களாகிய புறநானூறு ஆதிய சாற்றும். பு. நா. செ. ௧௫. ௨௬, ௧௨௨, ௧௬௬, ௨௨௪, ௪௱ பார்க்க.

இவற்றின் பொருள்: மகாபிரளயகாலத்திலே அசத்தும் இல்லை சத்தும் இல்லை, அந்த ஒன்று இருந்தது. அதினின்று முதற் கண்ணே காமம் எனப்படும் பராசக்தி உளதாயிற்று. இந்தக் கருத்தை விளக்கியே,

𑌯𑌦𑌾 𑌤𑌮𑌸𑍍𑌤𑌨𑍍𑌨𑌦𑌿𑌵𑌾 𑌨 𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌰𑍍𑌨 𑌸𑌨𑍍𑌨𑌚𑌾𑌸𑌚𑍍𑌛𑌿𑌵 𑌏𑌵𑌕𑍇𑌵𑌲𑌃
𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌂 𑌤𑌤𑍍𑌸𑌵𑌿𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍇𑌣𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌚 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌾
𑌪𑍁𑌰𑌾𑌣𑍀 ॥

யதாதமஸ் தந்நதிவான ராத்ரிர் நஸந்நசாஸச்சிவ ஏவகேவல: — ததக்ஷரந்தத்ஸவிதுர் வரேண்யம் ப்ரஞ்ஞாச தஸ்மாத் ப்ரஸ் ருதாபுராணீ.

எப்போது இருள் உளதாய்ப் பகலுமின்றி இரவுமின்றிச் சத்துமின்றி அசத்துமின்றி இருந்ததோ, அப்போது சிவன் ஒருவரே இருந்தார். அந்தச் சிவ சூரியனுடைய அந்த அழியாத முக்கியப் பொருளாகிய பிரஞ்ஞை எனப்படும் பழைய பராசக்தி உதித்தார் என்று சுவேதாஸ்வர உப நிஷத்துக் கூறும். சுருங்கச் சொல்லலும் ஆழமுடைய பொரு ளுடையதுமாகிய சூத்திர ரூபமாகிய வேத வாக்கியங்களின் ரகஸிய அர்த்தங்களையெல்லாம் உபநிஷத்து வாக்கியங்களாற் றான் அறியவேண்டும். வேதத்தின் அந்தம் வேதாந்தம் என்று உபநிஷத்துக்கள் பெயரெய்தின. அதனால் உபநிஷத்து வாக் கியமும் இங்குக் காட்டப்பட்டது. மகா பிரளயகாலத்தி லுள்ள முழுமுதற் கடவுள் சிவபிரானென்று ஏற்படுவதால் அவரே மகா உருத்திரரெனவும் பெயர் பெறுவர். ருக்கு வேதத்திற் கூறப்படும் உருத்திர சப்த முழுமையும் முன் பின் முரணில்லாதவரை மகா உருத்திரரைச் சார்ந்ததே. நமது சிவஞானபோதம் முதற் சூத்திரத்தில் கூறப்படும் "அந்தம் ஆதி யெனமனார் புலவர்" எனனுஞ் சொற்றொடரில் அந்தத்தைச் செய்யும் இறைவன் என்றதும் இம்மகா ருத்திரரையே. குணி ருத்திரரை அல்ல. ஏனென்றால் ததேகம, என ருக்கு வேதம் சொல்லுகின்றது. ஸ்ரீமாணிக்கவாசகரும் இப்பொருளைச் சுட் டியே 'ஏகன்' எனவும் தமிழ் வேதத்தில் அருளிச செய்தார். "நாற்காற் பசுக்களுக்குப் பதயாக அவர் (உருத்திரர்) ஆண்டு வழிபடப் படுகின்றார்" என நம்மவர் எழுதியிருக்கின்றார். இவர் காட்டிய ருக்கு வேத மேற்கோளிலேமெய ஆடு மாடுகளொடுங் கூட நம்மைச் சேர்ந்தோர்க்கும், நம் பின்னோர்க்கும் நம் ஆடவர் பெண்டிர் இவர்களுக்குமெனச் சமஷ்டியாகக் கூறி, இவர்களுக் குப் பசுபதியான அவர் நல்வாழ்வினையுந் தந்தருளுவாராக வெனச் சொல்லப்பட்டிருக்கிறதை வெள்ளிடை மலைபோல

இவரே யெடுத்துக் காட்டியும் வேதத்தைக் குறை கூறவேண்டு மென்று எழுந்த வீராவேச அந்தகாரம் மறைத்துவிட்டது போலும். சிவபெருமான் பசுபதியெனத் தெளிவாய்க் கூறும் வாக்கியம் ருக்கு வேதம். கO. கஉக, ருல் உளது.

யஃப்ராணதோ நிமிஷதோ மஹித்வைக இந்த்ராஜா ஜமதோ பபூவ। ய ஈஶே அஸ்ய த்விபதஶ்சதுஷ்பத: ॥
வ

"ய:ப்ராணதோ நிமிஷதோ மஹித்வைக இந்த்ராஜா ஜகதோ பபூவ | ய ஈஶே ஸ்யத்விபதச் சதுஷ்பத:||

எவர் சுவாஸம் விட்டதனுலேயும் கண் கொட்டினதனுலேயும் உலகமெல்லாம் சிருஷ்டிக்கப்பட்டதோ, எவர் ஒருவராகவே அரசனுக இருக்கின்றுரோ எவர் இரண்டு காற் பசுக்களுக்கும் நாற்காற் பசுக்களுக்கும் பதியாக இருக்கின்றுரோ அந்தப் பரமேஸ்வரனுக்கு ஹவிஸைக் கொடுப்போம். இதனுல் சிவபெருமானே எல்லா ஜீவ ஜந்துக்களுக்கும் பதியென ருக்கு வேதம் பறையறைந்து கூறுவதை நம்மவர்களெல்லாரும் தெரிந்துகொள்ளுவார்களாக. பசுபதி யென்ற பெயர் சிவ பெருமானே யொழிந்த வேறெந்தக் கடவுளர்க்கும் எந்த நூலிலுங் கூறப்படவில்லையென்பது சைவ மக்கள் பலருக்கும் தெரிந்த விஷயமே.

யாகாதிபதி சிவபெருமான் என ருக்கு வேதம் கூறும்.

ஜ்யேஷ்டம் । மேதபதிம்—இருக்கு க, சஙு, ச. ஆவோராஜாந மத்வரஸ்ய ருத்ரம் ஆவோராஜாந மத்வரஸ்யருத்ரம் இருக் ச, ரு, க. த்ரிஸ்தஸ்ய யக்ஞஸ்ய நிகே......நிஹிதா। த்ரிஸ் ஸப்தயத்குஹ்யாநிதவே........நிஹிதா இருக் க, எஉ, சு.

* மேற்காட்டிய ருக்குகளால் உருத்திரமூர்த்தியாகிய (சிவபெருமான்) யாகங்களுக்குப்பதி-உக-யாகங்களுக்கும் தலைவர் என்று ஏற்படுகின்றது. தட்சப்பிரஜாபதி சிவபிரானை நீக்கி யாகஞ் செய்ததும் அதனுல் அவன் யாகம் முற்றுப் பெருமல் அவன் ஈறுபட்டதும் சைவ நூல்களெல்லாம் கூறும். தமிழ் மறைகளிலும் பற்பல இடங்களிலும் விதந்து கூறியிருக்கின்றது. தட்சன் அவனது கர்மவசத்தால் சிவபிரானை இகழ்ச்சிசெய்து

* மகா சிவபக்தர்களாயும் தெய்வத்தன்மை வாய்ந்தவர்களாயுமிருந்த தமிழ் நாட்டு மூவேந்தர்களும் இவ் உக யாகங்களையும் வேத முறைப்படி நடத்தினுர்களெனத் தமிழ் நாட்டுச் சரித்திரத்துக்கு ஓர் அஞ்சலாணிபோன்ற சங்க நூல்களாகிய புறநானூறு ஆதிய சாற்றும். பு. நா. செ. கரு. உசு, கஉஉ, கசுசு, உஉச, சா பார்க்க.

வேதத்தில் மேற்காட்டிய "ஆவோராஜா நமத்வரஸ்ய ருத்ரம்" என்று தானே சொல்லப்பட்டிருக்கின்றது. ருத்திரர் அநேகர் இருக்கிறார்கள். ஏகாதச ருத்திராதியோர், அவர்களில் ஒருவரை வைத்துக்கொண்டு யாகத்தை முடிப்பேனென ஆரம்பித்தான். வேதத்திற் கூறப்பட்டிருக்கிற ருத்திரன் என்பவர் சிவபிரானே. அவரே எந்த யாகங்களிலுந் தலைவராயிருந்து முதல் அவிஸ்பெறச் சுதந்திரர். அவரையின்றி நீ யாகஞ் செய்யப்படாதென்று மகரிஷிகளெல்லோருஞ் சொல்லியும் அவன் கேளாமல் தன் மனதின்படி சிவபிரானை வரிக்காமல் யாகத்துக்கு ஆரம்பித்ததில், வீரபத்திரக் கடவுளால் அந்த யாகம் அழிபட்டதுமன்றி தட்சனும் கொல்லப்பட்டான். இதனால் ருக்கு வேதத்தில் கண்ட ருத்திரன், சிவபிரானே என்று ஏற்பட்டது. இதனால் வேதத்தில் ருத்ரமூர்த்தியென்று கூறப்பட்டவர், குணி ருத்திரரல்லர். ஏகாதச ருத்ரர்களில் ஒருவருமல்லர். மகா ருத்திரமூர்த்தியின் சாரூப்பிய பதவி பெற்றவர்களிலும் ஒருவரல்லர். சுத்த மாயா புவனந் தம் சங்கரிக்கும் மகா ருத்திராய் ஏகமூர்த்தியாய்த் தம்மிடமெல்லா ஆன்மகோடிகளையுமடக்கித் தம் அருட்சத்தி மாத்திரையேயாய் நிற்கும் சிவமே யாவர் என்பது மறக்கக்கூடாத துணிபாம். ருத்ரன் என்ற பதத்துக்குப் பொருள் விசாரிக்குங்கால் ருத் (ஆன்மாக்களுக்குப் பிறப்பிறப்பாலாகிய) = துன்பத்தை, திராவக := ஒழிப்பவன், எனப் பொருள் விளங்கும். இந்த வேத மொழியின் பொருளை வேதோப பிருங்கணமாகிய தட்ச காண்டத்திய அடியிற் காட்டப்படுஞ் செய்யுளுங் கூறும். "இன்னலங் கடலுட்பட்டோர் யாரையுமெடுக்கு நீரா, லுன்னரும் பரமமூர்த்தி யுருத்திரனெனும் பேர்பெற்றான், அன்னவன் தரவந்தோர்க்கு மடியடைந்தோர்க்கு மன்னன், தன்னுரு வெய்தினோர்க்குஞ் சார்ந்ததாலவன்றனிப்பேர்" இதனாலுமறிக, ருக்வேத வாக்கியங்களில் ருத்திரன் என்று காணப்பட்ட பதங்களெல்லாம் சிவபெருமானையே குறிக்குமென்பது தட்சன் யாக சரித்திரத்தாலும் நன்கு அறியலாம்.

ருக் வேதத்தில் சிவபூஜா கிரியைகள் கூறப்பட்டுளது.

𑌅𑌨𑍍𑌤𑌰𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌤𑌂 𑌜𑌨𑍇 𑌰𑍁𑌦𑍍𑌰𑌂 𑌪𑌰𑍋 𑌮𑌨𑍀𑌷𑌯𑌾 𑌗𑍃𑌭𑍍𑌣𑌨𑍍𑌤𑌿 𑌜𑌿𑌹𑍍𑌵𑌯𑌾
𑌸𑌸𑌮𑍍 ।

அந்தரிச்சந்திதம் ஜநேருத்ரம் பரோமநீஷயா க்ருப்பணந்தி ஜிஹ்வயாஸஸம் இருக். அ, சுக, ந.

ஜனங்களிடத்து அந்தரியாமியாயிருக்கும் சிவபிரானை எவர் அருட்சத்தியோடு தியானிக்கின்றாரோ அவர் அன்னத்தை நாவினாற் கிரகிக்கின்றார்.

𑌤𑌵𑌶𑍍𑌰𑌿𑌯𑍇 𑌮𑌰𑍁𑌤𑍋 𑌮𑌰𑍍𑌜𑌯𑌨𑍍𑌤 𑌰𑍁𑌦𑍍𑌰 𑌯𑌤𑍍𑌤𑍇 𑌜𑌨𑌿𑌮 𑌚𑌾𑌰𑍁
𑌚𑌿𑌤𑍍𑌰𑌂 ।

"தவச்ரியே மருதோமர்ஜயந்த ருத்ரயத்தே ஜநிம சாரு சித்ரம்" இருக் ரு, ங, ங.

தேவர்கள் பொருளும் அருளுமாம் செல்வத்தை அடையுமாறு, சிவபிரானது விசித்ர ரூபமாகிய மகாலிங்க மூர்த்தியை அபிஷேகாதி பூசை செய்தார்கள்.

மேல் ருக்கில் காணப்படும், ஜநிமசாரு சித்ரம், என்ற பதம் சிவலிங்கத்தின் மேற்றும் என்பது.

𑌰𑍌𑌦𑍍𑌰𑌂 𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌮𑌹𑌾𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌶𑌾𑌨𑍍𑌤𑌂 𑌶𑌿𑌲𑌾𑌮𑌯𑌂 ।
𑌚𑌾𑌰𑍁 𑌚𑌿𑌤𑍍𑌰𑌂 ॥

'ரௌத்ரம் லிங்கம் மஹாவிஷ்ணுர் பக்தயா சாந்தம் சிலாமயம் சாருசித்ரம்.........என்னும் உபபிருங்கணத்திலை றியலாம் என்று மேலோர் பணித்தனர்.

சிவபெருமானெண்ணிறந்த கண் முதலியன உடையவர்.

𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑌶𑍍𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍁𑌤 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋𑌮𑍁𑌖𑍋 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋𑌬𑌾𑌹𑍁𑌰𑍁𑌤 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑌸𑍍𑌪𑌾𑌤𑍍 । 𑌸𑌂 𑌬𑌾𑌹𑍁𑌭𑍍𑌯𑌾𑌂 𑌧𑌮𑌤𑌿 𑌸𑌂 𑌪𑌤𑌤𑍍𑌰𑍈𑌰𑍍𑌦𑍍𑌯𑌾𑌵𑌾𑌭𑍂𑌮𑍀 𑌜𑌨𑌯𑌨𑍍𑌦𑍇𑌵 𑌏𑌕𑌃 ॥

"விஸ்வதஸ் சக்ஷுருத விஸ்வதோமுகோ விஸ்வதோ பாஹு ருதவிஸ்வதஸ்பாத் | ஸம் பாஹுப்யாம் தமதி ஸம்ப தத்ரைர்தயவா பூமீஜநயந்தேவஏக: || ருக்-கO-அக-ங.

எங்குங் கண்ணையும் எங்கும் முகத்தையும் எங்குங் கைகயையும், எங்கும் அடியையும், உடையராய்த் தமது கரங்களினுலும் சிறகுகளினுலும் மண்ணையும் விண்ணையும் இடைத்துப் படைப்பவர் அந்தக் கடவுள் ஒருவரே. இந்த ருக்கின் பொருளையே "எண்ணில் பல்கோடி சேவடி முடிகளெண்ணில் பல்கோடி திண்டோள்க, ளெண்ணில் பல்கோடி திருவுருநாமமேர்கொண் முக்கண்முகமியல்பு, மெண்ணில பல்கோடி யெல்லைக்கப்பாலாய் நின்றைஞ்ஞூற்றந்தணரேத்து, மெண்ணில் பல்கோடி குணத்தரோர்வீழி யிவர் நம்மையாளுடையாரே" என்று திருவிசைப்பாவிலருளியிருப்பதுங் காண்க.

சிவபெருமானைப் பொன்வண்ணரென இருக்குவேதங் கூறுகின்றது.

𑌯𑌶𑍍𑌶𑍁𑌕𑍍𑌰 𑌇𑌵 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌮𑌿𑌵 𑌰𑍋𑌚𑌤𑍇 ।

“யஶ் ஶுக்ர இவசூர்யோ ஹிரண்ய மிவரோசதே-
இருக்கு-க-சஙு-ரு.

சூரிய ஒளியினராயும் பொற்பிரகாசத்தினராயுமுள்ள வர் உருத்திரர். இந்த இருக்கின் பொருளையே, “பொன்னேர் தருமேனியனே” “பொன்னார் மேனியனே” “பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனிபொலிந்திலங்கும்” எனப் பலப் பலவாய் விதந்து நந்தமிழ்த் திருமுறைகளிலும் அருளப்பட் டிருக்கின்றன.

பின்னுஞ் சிவபிரானை உருத்திரப் பெயராற் கூறி அவரை நீண்டசடையுடையவர், நக்கினர். விஷபானஞ் செய்த வர், முக்கணர், என்பதை அடியிற்காட்டியுள்ள ருக்குவேதப் பகுதிகள் கூறுவதையு மறியவேண்டும்.

𑌇𑌮𑌾𑌃 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌯 𑌤𑌵𑌸𑍇 𑌕𑌪𑌰𑍍𑌦𑌿𑌨𑍇 𑌕𑍍𑌷𑌯𑌦𑍍𑌵𑍀𑌰𑌾𑌯 𑌪𑍍𑌰𑌭𑌰𑌾𑌮𑌹𑍇 𑌮𑌤𑍀𑌃 ।
𑌦𑌿𑌵𑍋 𑌵𑌰𑌾𑌹𑌮𑌰𑍁𑌷𑌂 𑌕𑌪𑌰𑍍𑌦𑌿𑌨𑌂 𑌤𑍍𑌵𑍇𑌷𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌨𑌮𑌸𑌾 𑌨𑌿 𑌹𑍍𑌵𑌯𑌾𑌮𑌹𑍇 ।
𑌵𑌾𑌯𑍁𑌰𑌸𑍍𑌮𑌾 𑌉𑌪𑌾𑌮𑌨𑍍𑌥𑌤𑍍 𑌪𑌿𑌨𑌷𑍍𑌟𑌿 𑌸𑍍𑌮𑌾 𑌕𑍁𑌨𑌨𑍍𑌨𑌮𑌾 । 𑌕𑍇𑌶𑍀 𑌵𑌿𑌷𑌸𑍍𑌯 𑌪𑌾𑌤𑍍𑌰𑍇𑌣 𑌯𑌦𑍍𑌰𑍁𑌦𑍍𑌰𑍇𑌣𑌾𑌪𑌿𑌬𑌤𑍍𑌸𑌹 ॥
𑌤𑍍𑌰𑍍𑌯𑌮𑍍𑌬𑌕𑌂 𑌯𑌜𑌾𑌮𑌹𑍇 𑌸𑍁𑌗𑌨𑍍𑌧𑌿𑌂 𑌪𑍁𑌷𑍍𑌟𑌿𑌵𑌰𑍍𑌧𑌨𑌮𑍍 ।

“இமா: ருத்ராய தவஸே கபர்தினேக்ஷயத் வீராய ப்ர பராமஹேமதீ: || இருக்கு க, ககச, க.

“ திவோவராஹ மருஷம் கப்ரதிநம் த்வேஷம்ரூபம் நமஸா நிஹ்வயாமஹே | இரு க-ககச-ரு.

“ வாயுரஸ்மா உபாமந்தத் பிநஷ்டிஸ் மாகுநம் நமா | கேஶீ விஷஸ்ய பாதரேணயத் ருத்ரேணா பிபத்ஸ ஹ || இருக்கு-க௦ கஙு-கூ-எ.

“ த்ரியம்பகம் யஜாமஹே சுகந்திம் புஷ்டிவர்த்தநம்” இரு-எ-ருகூ-உ.

இன்னமும் பதிபசுபாச முப்பொருளினிலக்கணங் கூறும் நஞ் சுத்தாத்துவித சைவ சித்தாந்த முடிபையும் வெளிப்படையாகக்கொண்டு.

𑌦𑍍𑌵𑌾 𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑌾 𑌸𑌯𑍁𑌜𑌾 𑌸𑌖𑌾𑌯𑌾 𑌸𑌮𑌾𑌨𑌂 𑌵𑍃𑌕𑍍𑌷𑌂 𑌪𑌰𑌿𑌷𑌸𑍍𑌵𑌜𑌾𑌤𑍇 । 𑌤𑌯𑍋𑌰𑌨𑍍𑌯𑌃 𑌪𑌿𑌪𑍍𑌪𑌲𑌂 𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑍍𑌯𑌨𑌶𑍍𑌨𑌨𑍍𑌨𑌨𑍍𑌯𑍋 𑌅𑌭𑌿𑌚𑌾𑌕𑌶𑍀𑌤𑌿 ॥

“த்வாஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரி ஷஸ்வஜாதே | தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத் வத்யநச்நந் யொபிசாகஶீதி || இருக்கு-க-ககூசு-உ0-மந்திரம் எழுந்துளது.

இதன்பொருள்-பிரியா நண்பினையுடைய இருபட்சிகள் (சீவான்மாபரமான்மா ஆகிய ஆன்மாவும் சிவமும்) ஒரு விருட்சத்தில் (சரீரத்தில்) இயைந்துள்ளன. அவற்றுள் ஒன்று (சீவான்மா) இனியபழத்தைத் (சிவபோகத்தைத் துய்க்கின்றது, மற்றது (சிவம்) உண்ணாது பார்த்துக்கொண்டிருக்கின்றது. இக்கருத்தை யமைத்தே

“அன்னமிரண்டுள ஆற்றங்கரையினி றன்னியவிரண்டுந் துணைப்பிரியா தன்னந் தன்னிலை யன்னந்தனியொன்ற தென்றக் கால் பின்னமடவன்னம் பேறணுகாதே”.

என்னுந் திருமந்திரச் செய்யுளை நந்திருமூலநாயனாரும் அருளியிருக்கின்றார். பின்னும் இருக்குவேதம், க0-மண்டிலம் கஉகூ-கூ.

𑌅𑌵𑌾𑌗𑍍𑌦𑍇𑌵𑌾 𑌅𑌸𑍍𑌯 𑌵𑌿𑌸𑌜𑌨𑍇𑌨 𑌨𑌾𑌥𑌾 𑌕𑍋𑌵𑍇𑌦𑌯𑌤 𑌆
𑌬𑌭𑍂𑌵।

(அர்வாக்தேவா அஸ்ய விஸர்ஜநே நாதா கோவேதயத ஆப பூவ.)

இ-ள். தேவர்கள் உலக சிருட்டிக்குப் பின்னர்தான் உளரானார்கள். அது எங்கிருந்து உளதாயிற்று என்று யாரறிவார் என வினவி

அவ்வேதமே அடுத்த மந்திரத்தில் (க0-கஉகூ-எ)

𑌯𑍋𑌅𑌸𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑌃𑌪𑌰𑌮𑍇𑌵𑍍𑌯𑍋𑌮𑌨𑍍𑌸𑍋𑌅𑌙𑍍𑌗𑌵𑍇𑌦𑌯𑌦𑌿𑌵𑌾𑌨𑌵𑍇𑌦।

(யோ அஸ்யாத்யக்ஷ: பரமேவியோமந்சோ அங்கவேத யதிவாநவேத.)

இ-ள். பரமவியோமமாகிய (திருச்சிற்றம்பலத்தின் கண்ணே) எவர் பிரபஞ்சத்துக்கு அத்தியக்ஷராய் நின்றாரோ, அவரே அதனை யறிவார்; மற்றெவரும் அறியார் என, அவ்வினாவுக்கு விடையும் கூறிற்று.

இதனாற் பெறப்படும் முடிவு யாதெனில், சிவஞானபோதம் முதற்சூத்திரம் சித்தாந்தப்படுத்தியவாறு சங்காரஞ் செய்யும் இறைவனிடம் சேதன அசேதனப் பிரபஞ்சமெல்லா மொடுங்க, அச்சங்காரகர்த்தா ஒருவரே உளராக, அவரிடம்

நின்றே மீண்டும் அப்பிரபஞ்சந் தோற்றியதென்பதையே ருக்கு வேதங் கூறியதாம்.

நமது பன்னிரெண்டாந் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணத்தில் தில்லைவாழந்தணர் புராணத்தில்

"கற்பனை கடந்த சோதிகருணையே வுருவமாகி யற்புதக் கோலநீடி அருமறைச் சிரத்தின்மேலாஞ் சிற்பரவி யோமமாகுந் திருச்சிற்றம்பலத்துணின்று பொற்புடனடஞ் செய்கின்றபூங் கழல் போற்றி போற்றி."

என, ருக்குவேதத்திற்கண்ட பரமவியோமமாகிய திருச்சிற்றம்பலத்துணின்று பஞ்சகிர்த்திய தாண்டவஞ் செய்யும் பரமபதியை, நம்து குலதெய்வமாகிய சேக்கிழார் நாயனார், துதித்திருக்கின்றமையையுங் காணலாம்.

நம்மவர் காட்டியபடி ஓரிடத்தில்மட்டும் நந்திருமுறையில் இருக்கு என்ற இருக்குவேதத்தைக் குறிக்கும் மொழி காணப்பட்டதன்று, அநேக இடங்களிற் காணப்படுகின்றது. சில வருமாறு.

க. ஆனபாடலுகந்தது இருக்கையே
உ. இருக்கு வாய்மொழியாற்றனே யேத்துவார்
ந. தொல் கழலீர் சொலீர், பண்டு இருக்கு ஒருநால்வர்க்கு நீருரை செய்ததே.
ச. முந்தியதேவர் கூடி முறை முறை யிருக்குச்சொல்லி-எந்தை நீசரணமென்று.
ரு. இருக்கு ஓதிமறையவர்கள் வழிபட்டேத்து மிளங்கோயில்.
சு. இருக்கு வாயந்தணர்களொழுபிறப்புளெங்கும் வேள்வியிருந்து இருநிதியம் வழங்கு நகர்.
எ. மெய்ப்பயின்றவர் இருக்கையே மிழலையூருமதிருக்கையே.
அ. இருக்கு வாய்மொழியாற்றனே யேத்துவார் சுருக்குவார் துயர்.
கூ. தென்கையான்றேர் கடாவிச்சென்றெடுத்தான் மலையை. முன்கையானரம்பு வெட்டி முன் இருக்கிசைகள் பாட.
கo. இருக்கோடு தோத்திரமியம்பினரொருபால்.
கக. இருக்கு ஒலமிடும் பெருமான் } பெரியபுராணம்.
கஉ. இருக்குமொழிப் பிள்ளையார் } பெரியபுராணம்.
கந. இருக்குமொழி அந்தணரும் } பெரியபுராணம்.

என்பனவாதிய—இவ்வகளில்—உ-ரு-சு-அ-கo-கஉ-கந. இவ் எண் கொடுக்கப்பெற்ற தமிழ்முறைப் பகுதிகள், அப்பகுதிகள் அருளப்பட்டகாலத்தில் இருக்குவேதம் ஓதப்பட்டுக் கொண்டிருந்ததாக விளக்குகின்றது. இவ்வாக்கியங்கள் இயற்றிய பெருமக்கள் காலம், தற்காலச் சரித்திர ஆராய்ச்சியார் குறிப்பின்படி சுமார் கூருா வருடங்கட்குள்ளேயே. நண்பர்

படைத்துரைப்படி இருக்கு என்றதைத் தமிழ் மந்திரமெனக் கொண்டால் அம்மறை சுமார் பத்தாயிரம் ஆண்டுகட்கு முன்னரேயே கடல்கோளில் அழிந்து போயிற்றே? நம்பெருமக்கள் காலத்து அம்மறை எவ்வாறு ஓதப்பட்டு வந்தது. இதனால் இருக்கு என்பது முக்காலத்தும் நிலைபெற்று நிற்கின்ற ஆரிய வேதமேயாமென்க.

இன்னமொன்றுளது. கழிபெருஞ்சிறப்பிற்றாகி, யாவரானுங் கைக்கொண்டுவருவதுமாகி, மிகச்சிறந்ததாக வைத்துத் தினம் முக்காலமும் போற்றப்படுவதுமாகிய காயத்திரி மகாமந்திரமெந்த நூலில் ஆகியாகத் தோன்றியது? இருக்குவேதம் மூன்றாம் மண்டலத்தின் இறுதிப்பகுதியிலல்லவோ. இக்காயத்திரி மந்திரத்திற் காணப்படும் பர்க்க வென்னும் பதம் சிவபெருமானைக்குறித்ததன்றோ? பர்க்கன் என்னும் பெயர் சிவபிரான் ஒருவர்க்கே உரித்தானதாக அமரநிகண்டினுட் காணலாமல்லவா? மைத்தாரணிய உபநிடதமும் "பர்க இதிருத்ரோ பிரம்மவாதிந:" என்று கூறி அச்சொல்லின் ஒவ்வோர் எழுத்துக்கும் பலமுறையான பொருள்கூறி அம்மொழியைச் சிவபிரான் மேற்றாக நிலைநாட்டி அறுதி கட்டப்பட்டிருக்கின்றது. சித்தாந்த சைவாசாரியராகிய ஸ்ரீஹரதத்த சிவாசாரியரென்னும் அந்தணர் பெருமானும், 'காயத்திரி வல்லபத்துவாத்' என்று சிவபெருமானைக் குறித்துக் காட்டினார்கள். அதை மொழிபெயர்த்த நஞ் சிவஞானமுனிவரும், உயர் காயத்திரிக்குரிய பொருளாதலின் எனவுங் கூறினார்கள். இப்பிரபல பிரமாணங்களோடு முரண்பட்டுத் தத்தம் மனங்கொண்டபடி பொருளுரைப்பார் உரை கொள்ளற்பாலதன்று.

தற்கால நவீனக்கொள்கையுடையராயினும், எம் நண்பர் சுவாமி வேதாசலம் அவர்கள், அவர்களியற்றிய திருவாசக விரிவுரையில், இருக்கு வேதத்திற் காணப்படும் உருத்திரன் என்னும் பதம், முழுமுதற் கடவுட்குச் (சிவபெருமானுக்கு) சிறந்த பேராகக் காணப்படுமென்று தக்க பல நியாயங்களுடன் எழுதியிருக்கின்றார். திருவாசகம் விரிவுரைப் பக்கம்-௬-௧௦௧-ல் காண்க.

வேதம் சிவபிரான் வாக்காயிருக்க, இருக்கு வேதத்தினுள்ள பற்பல சூக்தங்களும் பற்பல முனிவரால் அருளப்பட்டதாகக் காணப்படுவதற்குக் காரணம் என்னையெனின், வேதம் சிவபிரான் வாக்கு என்பதற்கு யாதொரு ஐயமுமில்லை. ஆனால், இருடிகள் ஒருவருக்கொருவர் பரம்பரையாக உபதேசித்து வந்தமையான் அவர்கள் கூறினதாகவுஞ் சொல்லப்படுதல் உபசார

மென்றறியவேண்டும். ஆன்றோர் கொள்கையுமிதுவே. பல தெய்வங்கள் வழிபாடு இருக்கு வேதத்திற் காணப்படுவதற்குக் காரணம், அப்பல தெய்வங்களும் சிவபிரானது அஷ்டமூர்த்தங்களாதலின். அன்றியும் வேதம் உலகோர்க்கு இயற்றியதாதலின் உலகோர் மேன்மையும் கீழ்மையுமானப் பற்பல கன்மங்களைப் புரிவோராதலானும் அவரவர்கள் பக்குவத்துக்குத் தக்கபடி தெய்வவழிபாடு வேண்டப்படுமாதலானும், என உணரவேண்டும். தாயுமானப் பெருந்தகையாரும், வினையனந் தங் கருத்தோ வனந்தம் பெற்றபேர் சீரனந்தஞ் சொர்க்க நரகமு மனந்தம் நற்றெய்வமு மனந்த பேதம் திகழ்கின்ற சமயமும் அனந்தம்" என அருளினர். ஏனைத்தேவரைப் பரிவாரராகக் கூறலின், ஓர் அரசனுக்கு அமைச்சர் படைத் தலைவர்களாயுள்ளார் பலரையும் குடிகள் புகழ்ந்து கூறினும் அப் புகழ்ச்சிகளனைத்தும் அரையனைச் சேருமாறுபோல ஏனையோர்க்குக் கூறும் வணக்கமனைத்தும் சிவனையே சேருமென்று கூறுவர்.

"யாதொரு பொருளை யாவரிறைஞ்சினும் மதுபோய் முக்கணுதியை யடையும்" எனும் கந்தபுராணமும் ஈண்டுக் கவனித்தற்பாலது.

திருஞானசம்பந்தமூர்த்திகளது தேவாரப் பதிகங்களில் திருவிருக்குக்குறள் எனப்பேர்பூண்ட பல பதிகங்கள் காணப்படுகின்றன. இப்பெயரெய்தின காரணமென்னை? அதிற் பிரயோகப்படுத்தப்பட்டிருக்கும் இருக்கு என்ற மொழிக்குப் பொருளென்னை? இருக்கு வேதப்பொருளை யடக்கிக் கொண்டிருப்பதனானன்றோ? ஆனால் மற்றைய பதிகங்களில் இருக்கு வேதப்பொருள் இலவோவென்று வினவினால், எல்லாம் இருக்கு வேதப்பொருளென்பதே விடையாகும். ஆனால் திருவிருக்குக்குறள் என்னும் பதிகமானது இருக்கு வேதப் பொருளை அடக்கிக்கொண்டிருப்பதுடன், இருக்கு வேதத்தின் ஒவ்வொரு பாடலும் சூத்திரம் போன்று அளவிற் சிறியவும் பொருளிற் பெரியவுமாயிருப்பதுபோல் இப்பதிகங்களினுள்ள ஒவ்வொரு பாடலும் அளவிற் குறுகியும் பொருளிற் பெருகியுமிருப்பதன் நிமித்தமே யென்று பெரியோர் கூறுவார்கள்.

இருக்கு வேதத்திற் சிவபிரானது அதி திவ்விய நாமம் அமைந்திருப்பதையும் அவரைப் பசுபதி எனக் கூறியிருப்பதையும், அவரது திவ்விய மங்கள சொரூபத்தை வியந்து வியந்து பற்பல இடங்களிலும் புகழ்ந்திருப்பதையும், அவரே ஏகமான முழுமுதற் கடவுள் என்று நிலைநாட்டியிருப்பதையும், அவ்

வேதத்தில் ருத்திரன் எனக்கூறிய மொழி மகா உருத்திரராகிய சிவபிரானையே குறித்து நிற்கின்றதென்பதையும் பிரமாண பூர்வமாகக் காட்டினோம். இவ்விசாரத்தால் "அவ்வுருத்திரரும் சிவனென்றழைக்கப்படவில்லை" என நம்மவர் எழுதியது ஆதாரவற்றதே.

ருக்கு வேதத்தில் ஆங்காங்கும், அவ்வேதத்தின் க0-ம் மண்டலத்திற் பெரும்பான்மையும், சிவ பரஞ்சுடரின் சகள நிட்கள சொரூப இலட்சணங்களைத் தமிழ்த் திருமுறைகளி லருளப்பட்டிருப்பதுபோல், உருத்திரப் பெயராற் கூறியிருப்பதாயும், அவைகளுக்குத் தாற்பரியம் எழுதிய பூர்வீகாள் ஏகான்மவாதக்கொள்கை பூண்டவர்களானதால் சில விஷயத்தில் பேதமான வியாக்கியை எழுதியிருப்பதுபோலவும் சைவ சிகாமணிகள் கூறுகின்றார்கள். அவைகளை முற்றிலும் இங்குக் காட்ட வேண்டுமென்பதே எமது பேரவா. எமக்கு வடமொழிப் பயிற்சியில்லாமையான் அவ்வாறு செய்வது மிக்க கஷ்ட சாத்தியமாயினமையின் இம்மட்டோடே நிறுத்தினம். நிற்க மேலாராய்வோம்:—

(ஓர் குறிப்பு—நம்மவர் இருக்குவேத விஷயத்தைக்கூறி அதற்கடுத்து ஆறு அங்கமென்பதைச் சொல்லப்புகுந்து பிறகு சாமவேத விஷயத்திற்குப் போனார். இருக்கு வேத ஆராய்ச்சியை முடித்து சாமவேத விஷய ஆராய்ச்சியில் நாம் புகுவாம்.) இனி, நம்மவர் கூறுவதாவது:—

உ௩. "சாமவேதம் என்று வருமிடங்களினும் அச்சொற்
" றொடரின் பொதுப்பொருளே கொள்ளற்பாற்று. கடவு
" ளைப்பற்றிய இன்னிசைப் பாடல்களை அச்சொல்லால் வழங்கு
" தல் நூல் மரபு. ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் சாமம் என்று
" கூறவேண்டிய விடத்துக் "குறிகொள் பாடலி னின்னிசை"
" யென்று திருவாய் மலர்ந்தருளினமையால் அச்சொல்லின்
" பொதுப்பொருள் விரித்தமை தெளியப்படும். இலங்கை
" மன்னன் வடமொழிச் சாமவேதம் பாடினனென்று கொள்வ
" தினும் இன்னிசை மிக்க பொருட்பனுவல் இசைத்தன
" னென்று கோடலே நமது அறிவிற்கு இசைந்துளது".

" கீதமுறைகளையும் விதிகளையும் வடமொழியாளர்
" உயர்ந்த தமிழ் இசைப்புலவர்களிடமிருந்து தெரிந்துகொண்
" டமை காலஞ்சென்ற கனம் ஆபிரகாம் பண்டிதர் முதலியோர்
" ஆராய்ச்சி நூலால் இனிது விளங்கும்............தமிழகச்சார்
" பாய இலங்கையை அரசாண்ட மன்னன் பண்மிக்க தமிழ்ப்
" பாடல்களையே பாடியிருத்தல் கூடுமென்பது நடுநிலையுடை

குறிப்பு:—56-ம் பக்கத்தில் ரு-வது வரி 'ஆதரவற்றதே' என்பதற்குப் பின்னர் இப்பக்கத்தையும் அடுத்த 56b, 56c, 56d, பக்கங்களையும் படித்து முடித்த பின்னர் 56-ம் பக்கம் விட்ட பாகத்திருந்து வாசிக்கவேண்டும்.

(க) [illegible]

கௌரீர்மிமாய ஸலிலாநி தக்ஷயத்யேகபதீ த்விபதீஸா சதுஷ்பதீ | அஷ்டாபதீ நவபதீ பபூவுஷீ ஸஹஸ்ராக்ஷரா பரமே வ்யோமந். ருக்-வே-க-க௬௪-௪க.

(உ) [illegible]

கணாநாந்த்வா கணபதிம் ஹவாமஹே கவிம் கவீநாமுபமச்ரவஸ்தமம் | ஜ்யேஷ்டராஜம் ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்பத ஆந: ச்ருண்வந்நூதிபி: ஸீதஸாதநம். ருக்-வே-உ-உ௩-க

(௩) [illegible]

யதக்ரந்த: ப்ரதமம் ஜாயமாந உத்யந்த்ஸமுத்ராதுதவா புரீஷாத் | ச்யேநஸ்யபக்ஷா ஹரிணஸ்யபாஹூ உபஸ்துத்யம் மஹிஜாதம்தே ஸர்வந். ருக்-வே-க-க௬௩-க.

மேற்காட்டிய இருக்குவேத மூன்று மந்திரங்களும் முறையே பார்வதி தேவியார் விநாயகர் முருகக் கடவுள் இவர்களைக் குறித்தவையெனச் சைவப் பெரியோர் கூறுகின்றார்கள். ஆனால், வேதபாடியஞ் செய்த சாயனர், முதற்காட்டிய மந்திரத்துக்கு, [illegible]=மேகத்தி லுண்டாகிற சப்தமெனக் கொண்டு அதற்கு மழை ஜலம் ஒருகால், இருகால், நாற்கால், எண்கால், ஒன்பது காலாகிப் பலவிடத்திற் பரவுகின்றதாயும் மேலான ஆகாயத்திலுண்டாகிறதென்றும்; இரண்டாவதாகக் காட்டிய மந்திரத்துக்கு, [illegible]=ஓபிரமணஸ்பதயே எனவொரு கடவுளரை விளித்து அவரைக் கணங்களுக்குப் பதியென்றும், கவிகளுக்கு முதல்வரென்றும், அன்னத்துடன்

கூடினவர்களுக்குள் மேலானவரென்றும், தோத்திரஞ் செய்தும் உமக்குக் கற்பித்த ஆசனத்தில் உட்காரும் என்றும்; மூன்றாவதாகக் காட்டிய மந்திரத்துக்கு, ஊவ-ந்நீ=ஒரு குதிரை, யென ஆரம்பித்து அக்குதிரை முன்னால் ஆகாயத்தில் உண்டாகிப் (பின்னர்) ஜலத்திலிருந்து கிளம்பிச் சத்தமிட்டுக், கழுகினது சிறகுகளையும், மானினது கைகளையுமுடையதென்றும், அதனுடைய உயர்ந்த பிறப்பு கொண்டாடத் தகுந்ததென்றும், பொருளை விளக்கியிருக்கின்றார். மேலும், வேத வேதியர்கள் நவக்கிரக அருச்சனை செய்யுங்கால் குரு அல்லது சந்திரன் அருச்சனை ஆரம்பிப்பதற்கு முன், முதற் குறிப்பிட்ட மந்திரத்தை ஓதியே அருச்சனை செய்வார்கள். மற்றும் வைதிக ஒழுக்கமுடைய வேதியர்கள், தாங்கள் செய்யும் ஜெபம், சூரிய நமஸ்காரம், ஹோமம், சுப கர்மாக்கள் யாவற்றுக்கும் முன்னர், விநாயகர் துதியாக இரண்டாவதாகக் காட்டிய மந்திரத்தைத் தொன்றுதொட்டே ஓதி வந்துகொண்டிருக்கிறார்கள். பாஷ்யகாரர் ரூடியாகப் பொருள் வரைந்திருப்பதாக வேதவித்துக்களின் கருத்து. அன்றியும், வடமொழியிலும், தமிழிலும், ஆங்கிலத்திலும், சரித்திர ஆராய்ச்சியிலும், வல்லுனராகிய M. A., L. T., பட்டம் பெற்ற ஒரு விப்பிரசிகாமணியின் கருத்து என்னவெனில், வேதத்திற்குப் பொருள் வரைந்த பாஷியகாரர்கள் கருமகாண்டத்தின் யக்ஞயமாதிகளையே வற்புறுத்திக் கூறியுள்ளார்களென்பதும் ஞானகாண்டப் பொருளாகிய சமயக் கொள்கைகளைக் கூறிற்றிலர் என்பதுவுமே. இஃதெவ்வாறாயினுமாகுக.

பதினெண் புராணங்களிலொன்றாகிய சிவ மஹாபுராணம், கைலாச சம்ஹிதை, பூஜாபலமுரைத்த அத்தியாயத்தில், (கடு-வது பக்கம் பார்க்க) சிவபிரான் தமது சத்தியாராகிய மனோன்மனியைப் பார்த்துத் தேவீ? உன்னை எமது வாமபாகத்திற் பிரணவ பூர்வமாய் 'கௌரீர்மிமாய' என்னும் மந்திரத்தினால் ஆவாகனஞ் செய்து ஏகாக்கிரச் சித்தனாய்த் தியானிக்கக்கடவன் எனக் கூறினாரெனச் சொல்லி யிருக்கின்றது. தேவியினது அருச்சனை மந்திரங்களில் முதன் மந்திரம் 'கௌரியைநம' என்பதே. ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் அம்பிகையை ஸ்தோத்திரஞ் செய்திருப்பதில் 'ரூ—மெஹ்வாக்ஷி நிமெஷவிமெத' எனவுங் கூறினார்கள். கௌரி என்றால் கிரிராஜனது புத்திரி யென்பது பொருள். ஆனதால் இம்மந்திரம் கௌரியம்மையார் மந்திரமே. இரண்டாவதாகக் காட்டிய மந்திர விஷயம், பதினெண் உப புராணங்களில் ஒன்றாகிய விநாயக புராணம், உபாசநாகாண்டம், கிருச்சமர் உபதேசம்

பெற்ற படலம் (உசுஉ-ம் பக்கம்), திரிபுரன் வரம்பெறு படலம் (உஎ௦-ம் பக்கம்) விநாயக பூஜாவிதியைக் கூறுமிடத்து 'கணுருந்தவா' என்னும் மந்திரத்தை அனுட்டிப்போடு ஜெபித்து வருபவர்களுக்குக் கணேச மூர்த்தியின் திருவருளுண்டாமெனக் கூறி யிருப்பதோடு, கிரிச்சுமதரும், திரிபுரனும் அவ்வாறே அம்மந்திரத்தை ஜெபித்து விநாயகரைப் பூஜித்து மேலான பதவியை யடைந்தார்களென்றுங் கூறியிருக்கின்றது. விநாயக மூர்த்தியின் ஸகஸ்ரநாம மந்திரங்களில், கணபதயே நம, ஜ்யேஷ்டராஜாயநம, என்பனவாதிய மந்திரங்கள் காணப்படுகின்றன. ஆனதால் இம்மந்திரம் விநாயகரதே. மூன்றுவது மந்திரம் சுப்பிரமணிய மூர்த்திக்குரியதென்று பம்பாய் நிர்ணய சாகர அச்சியந்திரசாலையில் அச்சிடப்பட்ட இருக்குவேத மந்திர சம்ஹிதை பக்கம் ருக-ல், 'யஊக்ஷ்ரூ௦ஜெளவடியெ்ரா தீவ-கதஊாஷ்ஷாஊஷி ஷ‑ூவ்।' என்று காணப்படுகின்றது. இம்மந்திர ஆதாரவைக்கொண்டே தைத்திரீய ஆரணியத்தும் பல உபநிஷத்துக்களினும் சுப்பிரமணியக் கடவுளின் பெருமை கூறப்பட்டிருக்கின்றது. இருமொழிகளையும் முற்றுமுணர்ந்த நமது மாதவச் சிவஞானயோகியரும், இவ்வாதாரங்கள் பற்றியே 'முக்கனல் சூழ்வேள்வியிற் சுப்பிரமணிய ஞெமெனவு முக்காற் கூறும்' என அருளினர். சாயனர் இம்மந்திரப் பொருளைக் கூறுங்கால் ஆகாயத்திலும் ஜலத்திலுமுண்டான குதிரை யென்றார். அதற்குக் கழுகின் சிறகும் மான் கைகளு முளவெனக் கொண்டார். எல்லாம் உருவகமே. ஆகாயமென்றது ஆகாயத்துக்கு அதி தெய்வமாகிய சதாசிவ மூர்த்தத்தை. ஜலமென்றது சரவணப் பொய்கையை. குதிரை யென்றது ஸ்கந்த மூர்த்தியின் அவதாரத்துக்கு மூலகாரணமாய்த் தோன்றிய தீப்பொறிகளை

[இருக்குவேதம் க-உஎ-க அஸ்வம் நத்வா வாரவந்தம் வநதத்யா அக்நிம் நமோபி: | ஷை ரு-உஎ-கச வ்ருஷோ அக்நி: ஸமித்ய தெஸ்வோ நதேவ வாஹந: | என்னும் மந்திரங்களில் அசுவமென்றது அக்நியேயாமென்று குறிப்பிட்டிருக்கின்றது. ஆதலால் விவாத மந்திரத்தில் காண்கின்ற குதிரை யென்றமொழியும் அக்நியைக்குறித்ததெனப்பெரியோர் கூறுநிற்பர். ஒருவராலுந் தாங்கப்படாத வெப்பத்தோடு சிவபிரானிடமிருந்து தோன்றிய அப்பொறிகளே கந்தமூர்த்தியாகப் பரிணமித்தனவெனப்புராணம் கூறுகின்றது.]

கழுகின் சிறகுஎன்றது வேலாயுதத்தை. மான்கைகள் என்றது அவ்வேலாயுதத்தைப் பகைவர் மேற் பிரயோகிக்கும் அதிதீவர வேகத்தை. நிற்க, முதன்மந்திரத்தில், ஒருகால், என்றது சிவமுஞ்சத்தியுஞ் சிருட்டி காலத்துக்குமுன் (ஒருருவாயினை)

கூடினவர்களுக்குள் மேலானவரென்றும், தோத்திரஞ் செய்தும் உமக்குக் கற்பித்த ஆசனத்தில் உட்காரும் என்றும்; மூன்றாவதாகக் காட்டிய மந்திரத்துக்கு, சுவ-நீ=ஒரு குதிரை, யென ஆரம்பித்து அக்குதிரை முன்னால் ஆகாயத்தில் உண்டாகிப் (பின்னர்) ஜலத்திலிருந்து கிளம்பிச் சத்தமிட்டுக், கழுகினது சிறகுகளையும், மானினது கைகளையுமுடையதென்றும், அதனுடைய உயர்ந்த பிறப்பு கொண்டாடத் தகுந்ததென்றும், பொருளை விளக்கியிருக்கின்றார். மேலும், வேத வேதியர்கள் நவக்கிரக அருச்சனை செய்யுங்கால் குரு அல்லது சந்திரன் அருச்சனை ஆரம்பிப்பதற்கு முன், முதற் குறிப்பிட்ட மந்திரத்தை ஓதியே அருச்சனை செய்வார்கள். மற்றும் வைதிக ஒழுக்கமுடைய வேதியர்கள், தாங்கள் செய்யும் ஜெபம், சூரிய நமஸ்காரம், ஹோமம், சுப கர்மாக்கள் யாவற்றுக்கும் முன்னர், விநாயகர் துதியாக இரண்டாவதாகக் காட்டிய மந்திரத்தைத் தொன்றுதொட்டே ஓதி வந்துகொண்டிருக்கிறார்கள். பாஷ்யகாரர் ரூடியாகப் பொருள் வரைந்திருப்பதாக வேதவித்துக்களின் கருத்து. அன்றியும், வடமொழியிலும், தமிழிலும், ஆங்கிலத்திலும், சரித்திர ஆராய்ச்சியிலும், வல்லுனராகிய M. A., L. T., பட்டம் பெற்ற ஒரு விப்பிரசிகாமணியின் கருத்து என்னவெனில், வேதத்திற்குப் பொருள் வரைந்த பாஷியகாரர்கள் கருமகாண்டத்தின் யக்ஞயமாதிகளையே வற்புறுத்திக் கூறியுள்ளார்களென்பதும் ஞானகாண்டப் பொருளாகிய சமயக் கொள்கைகளைக் கூறிற்றிலர் என்பதுவுமே. இஃது தெய்வாருயினுமாகுக.

பதினெண் புராணங்களிலொன்றாகிய சிவ மஹாபுராணம், கைலாச சம்ஹிதை, பூஜாபலமுரைத்த அத்தியாயத்தில், (கரு-வது பக்கம் பார்க்க) சிவபிரான் தமது சத்தியாராகிய மனோன்மணியைப் பார்த்துத் தேவீ? உன்னை எமது வாமபாகத்திற் பிரணவ பூர்வமாய் 'கௌரீர்மிமாய' என்னும் மந்திரத்தினால் ஆவாகனஞ் செய்து ஏகாக்கிரச் சித்தனாய்த் தியானிக்கக்கடவன் எனக் கூறினாரெனச் சொல்லியிருக்கின்றது. தேவியினது அருச்சனை மந்திரங்களில் முதன் மந்திரம் 'கௌரியைநம' என்பதே. ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் அம்பிகையை ஸ்தோத்திரஞ் செய்திருப்பதில் 'ராமெவ்ஷாஷி நிமெஷிவிதெ' எனவுங் கூறினார்கள். கௌரி என்றால் கிரிராஜனது புத்திரி யென்பது பொருள். ஆனதால் இம்மந்திரம் கௌரியம்மையார் மந்திரமே. இரண்டாவதாகக் காட்டிய மந்திர விஷயம், பதினெண் உப புராணங்களில் ஒன்றாகிய விநாயக புராணம், உபாசநாகாண்டம், கிருச்சமர் உபதேசம்

பெற்ற படலம் (௨௯௨-ம் பக்கம்), திரிபுரன் வரம்பெறு படலம் (௨௭௦-ம் பக்கம்) விநாயக பூஜாவிதியைக் கூறுமிடத்து 'கணு ஞுந்தவா' என்னும் மந்திரத்தை அனுட்டிப்போடு ஜெபித்து வருபவர்களுக்குக் கணேச மூர்த்தியின் திருவருளுண்டா மெனக் கூறி யிருப்பதோடு, கிரிச்சுமதரும், திரிபுரனும் அவ் வாறே அம்மந்திரத்தை ஜெபித்து விநாயகரைப் பூஜித்து மேலான பதவியை யடைந்தார்களென்றுங் கூறியிருக்கின்றது. விநாயக மூர்த்தியின் ஸகஸ்ரநாம மந்திரங்களில், கணபதயே நம, ஜ்யேஷ்டராஜாயநம, என்பனவாதிய மந்திரங்கள் காணப் படுகின்றன. ஆனதால் இம்மந்திரம் விநாயகரதே. மூன்று வது மந்திரம் சுப்பிரமணிய மூர்த்திக்குரியதென்று பம்பாய் நிர்ணய சாகர அச்சியந்திரசாலையில் அச்சிடப்பட்ட இருக்கு வேத மந்திர சம்ஹிதை பக்கம் ௩௧-ல், 'யதக்ரந்த: ப்ரதமம் ஜாயமான உத்யந்த்ஸமுத்ராதுத வா புரீஷாத்। என்று காணப்படுகின்றது. இம் மந்திர ஆதாரவைக்கொண்டே தைத்திரீய ஆரணியத்தும் பல உபநிஷத்துக்களினும் சுப்பிரமணியக் கடவுளின் பெருமை கூறப்பட்டிருக்கின்றது. இருமொழிகளையும் முற்றுமுணர்ந்த நமது மாதவச் சிவஞானயோகியரும், இவ்வாதாரங்கள் பற் றியே 'முக்கனல் சூழ்வேள்வியிற் சுப்பிரமணிய னேமெனவு முக்காற் கூறும்' என அருளினர். சாயனர் இம்மந்திரப் பொருளைக் கூறுங்கால் ஆகாயத்திலும் ஜலத்திலுமுண்டான குதிரை யென்றார். அதற்குக் கழுகின் சிறகும் மான் கைகளு முளவெனக் கொண்டார். எல்லாம் உருவகமே. ஆகாயமென் றது ஆகாயத்துக்கு அதி தெய்வமாகிய சதாசிவ மூர்த்தத்தை. ஜலமென்றது சரவணப் பொய்கையை. குதிரை யென்றது ஸ்கந்த மூர்த்தியின் அவதாரத்துக்கு மூலகாரணமாய்த் தோன் றிய தீப்பொறிகளை

[இருக்குவேதம் ௧-௨௭-௧ அஸ்வம் நத்வா வாரவந்தம் வந்தத்யா அக்நிம் நமோபி:| ஷை ௩-௨௭-௧௪ வ்ருஷோ அக்நி: ஸமித்ய தேஸ்வோ நதேவ வாஹந:| என்னும் மந்திரங்களில் அசுவமென்றது அக்நியே யாமென்று குறிப்பிட்டிருக்கின்றது. ஆதலால் விவாத மந்திரத்தில் காண் கின்ற குதிரை யென்றமொழியும் அக்நியைக்குறித்ததெனப்பெரியோர் கூறுநிற்பர். ஒருவராலுந் தாங்கப்படாத வெப்பத்தோடு சிவபிரானிட மிருந்து தோன்றிய அப்பொறிகளே கந்தமூர்த்தியாகப் பரிணமித்தன வெனப்புராணம் கூறுகின்றது.]

கழுகின் சிறகுஎன்றது வேலாயுதத்தை. மான்கைகள் என்றது அவ்வேலாயுதத்தைப் பகைவர் மேற் பிரயோகிக்கும் அதிதீவர வேகத்தை. நிற்க, முதன்மந்திரத்தில், ஒருகால், என்றது சிவமுஞ்சத்தியுஞ் சிருட்டி காலத்துக்குமுன் (ஒருருவாயினை)

என்ற தமிழ்மறைப் பகுதியில் அருளியவாறு நின்ற அவதாரத்தை, இருகால் என்றது சத்தியுஞ் சிவமும் பிரிந்து இரண்டாகி விளங்குதலை, நாற்கால் என்றது அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருளையுந் தருதற்குக் காரணமாயுள்ள சத்தி பேதங்களை, எண்கால் என்றது அஷ்டமூர்த்தியாய் விளங்கும் அஷ்ட மூர்த்தங்களுக்கும் வேவ்வெறு சத்தியாய் நிற்றலை. ஒன்பதுகால் என்றது நவவடிவமாக விளங்கும் முழுமுதற் கடவுளுருவிற்குபாதானமாக விருக்கும் சத்திபேதங்களை.

வேதத்தின் உண்மைப்பொருளை யறிவதற்கு நாற்பத்தெட்டாண்டு பிரமசரிய விரதங்காத்துத் தக்க ஆசிரியரிடம் வேதம் வேதாங்கங்களைக் கற்க வேண்டுமெனப்பெரியோர் கூறுவர். லண்டன்மா நகரத்தில் ஓர் ஆங்கிலப் பெருந்தகையார் ௪0-ஆண்டுகளாக ருக்கு வேதம் ஒன்றையே ஆராயப் புகுந்து ஆராய்ச்சி செய்து வருகின்றாராம். இன்னமும் அவ்வாராய்ச்சி முடியவில்லையாம். இக்காலம் நம்நாட்டில் உண்மைப் பொருள் தெரிந்து விளக்குபவர் அரிதாய் விட்டது.

தமிழ்ச் சைவமக்கள், தங்களுக்குப் பிரமாணமாகக் கொள்ளவேண்டிய நூல்கள் தேவாரம், திருவாசகம் பெரிய புராணமுமே. இவைகளில் எல்லாப் பொருளுமடங்கியிருக்கின்றன. ஸ்ரீஞானசம்பந்தப் பெருமான் அருளிய திருப்பாசுரத்தில், 'வேதம் முதல்வன்' என்னுந் திருப்பாட்டிலும், அப்பாட்டிற்கு உரை வகுத்துச் சேக்கிழார் கூறிய 'வேதம் முதல்வனென்னும்' எனும் பெரியபுராணச் செய்யுளிலும் பதினெண் புராணங்களையும் ஓதும்படியாகக் கட்டளை யிட்டருளியபடி, அவ்வாக்கியத்தையே உறுதியாகக் கொண்டு வேதோபபிருங்கணமாகிய மேற்காட்டிய புராணஙகளிற் கூறிய பொருளையே நாம் கொள்வோமாக. சாயனர் முதலிய பாஷியகாரர்களின் கருத்தைவிட வேதோப பிருங்கணங்களாகிய புராணங்களின் பிரமாணமே மேலாயது.

நமது சமயத்தின் உண்மையுமறியாது, இதிகாச புராணங்களின் சரித்திரங்களையும் நம்பாது, கல்வி கற்கத் தொடங்கிய நாண்முதல் மேனாட்டுப் பழக்கங்களையே கைக்கொண்டு பாடியத்தின் ரூடிப்பொருளையே ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்ட ஆங்கில பாஷையிலுள்ள ருக்கு வேதமாதியவைகளைப் படிப்போர் ருக்கு வேதத்தில் சிவம் என்ற பெயரே இல்லையெனக் கூறுவது ஓர் அதிசயமல்ல. இவ்வாராய்ச்சியினால் ருக்கு வேதத்தில் சிவபெருமான் பெயருடன், அவர் பத்தினியார், அவர் மூத்த பிள்ளையார், இளைய பிள்ளையார் இவர்கள் பெயர்களும் காணப்படுகின்றனவென்பது ஒருதலை.

"யார் யாவருடைய அறிவிற்கும் பொருத்தமாவதொன்றும்.
"தமிழிசையில் இறைவன் மிக்க விருப்பினனென்பது தேவா
"ரத்திற் கூறப்பட்டுளது. "தமிழினீர்மை பேசித் தாளம்
"வீணை பண்ணி நல்ல, முழவமொந்தை மல்குபாடல் செய்கை
"யிடமோவார்," என்ற ஞானசம்பந்தமூர்த்தி திருவாக்கையும்
"உற்று நோக்குக"

* * * *

"ஆசிரியர் தொல்காப்பியனார் காலமாகிய வான்மீகியார் காலத்
"திலேயே இசைக் கருவிகளும் இசைநூலும் தமிழ் நாட்டில்
"நன்கு வழங்கினவென்பது தொல்காப்பியத்துட் குறிப்பினால்
"பலவிடத்தும் உணரக்கிடக்கின்றது.

"அளபிறந்துயிர்த்தலு மொற்றிசை நீடலு
"முளவென மொழிப விசையொடு சிவணிய
"நரம்பின் மறையவென்மனார் புலவர்"—என்ற
"தொல்காப்பியமுங் காண்க.

"இவ்வாறே பிற இடங்களிலும் பொதுப் பொருளில் வட
"சொற்கள் வழங்குவதை உற்றுணர்ந்து அவற்றைத் தழுவிக்
"கொள்ளுதலும் அவற்றின் சிறப்புப் பொருள்களைத் தவ
"ருகத் தழுவி உண்மையைத் திரிவுபடக் கொள்ளாமையும்
"ஒருதலையாய நம்மவர் கடமையாகும்"

என்று சாமவேத விஷயத்தில் தம் மனதிற்குத் தோன்றிய கற்பனைகளைக் கழறினார். இவர் கூற்றை ஆராய்வாம்.—

கடவுளைப்பற்றிய இன்னிசைப் பாடல்களை அச்சொல்லால் (சாமம் அல்லது சாமவேதம் என்ற சொல்லால்) வழங்குவது நூன் மரபு என்று முதற்கண் எழுதினார். தமிழில் இசை, பண் முதலிய சொற்களும், யாழ், குழல் முதலிய இசைக்கருவிப் பெயர்களுமிருக்க, இம்மொழிகளை வழங்காமல் வேறு பாஷையிலுள்ள சாமம் அல்லது சாமவேதம் என்ற பெயர்களால், தமிழ் இன்னிசைப் பாடல்களைக் குறித்து வழங்கப்படவேண்டுவது ஏனோ? இது பொருந்தவில்லை. இவர் கற்பனைக் கூற்றுக்கு யாதும் பிரமாணங்காட்டினாரில்லை. தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூன்மரபியல் "அளபிறந்துயிர்த்தலும்" என்ற ௩௩-ம் சூத்திரத்தைமட்டும் எழுதிக் காட்டினாரேயொழிய அச்சூத்திரம் எவ்வகையில் இவர்கொள்கையை வலியுறுத்துகின்றதென்பதைச் சற்றும் விளக்கினாரில்லை.

இச்சூத்திரம், தமிழ் இசையில் உயிர், மெய், எழுத்துகளுக்குள்ள மாத்திரை அளவின்மீறி ஒலித்தல்போலத் தமிழினது நால்வகைச் செய்யுட்கண்ணும் எழுத்துக்களின்

மாத்திரை அளபிறந்தும் நீண்டும் ஓசை கொடுக்கும் என்பதை யுணர்த்துகின்றது. ஆனால் தமிழகத்துத் தமிழில் இசையும், அதைச் செவிக்கு இன்புறவேண்டிக் காட்ட இசைகருவியுமுண் டென்பதை இச்சூத்திரத்தா லறியலாம். இஃது எல்லாரும் ஒத்துக்கொள்ளும் விடயமே. சாமம் அல்லது சாமவேதம் என்னுஞ் சொல்லால், கடவுளைப்பற்றிய இன்னிசைத் தமிழ்ப் பாடல்கள் வழங்குமென்று ஓர் இலக்கணம் இச்சூத்திரத்தில் கூறியிருக்கவில்லை. ஆதலின் நான்மரபு என்று நம்மவர் கூறியது அவர் கற்பனைக்கு ஆதாரங் காணப்படாதபோதெல்லாம் அவர் கைக்கொள்ளும் அவரது ஓர் வழக்கச்சொல்லாம்.

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் முதலாவது பிறப்பியலில்

"எல்லாவெழுத்தும் வெளிப்படக்கிளந்து
சொல்லிய பள்ளியெழுதரு வளியிற்
பிறப்பொடு விடுவழி யுணர்ச்சிவாரத்
தகத்தெழு வளியிசையரிறப நாடி
யளபிற் கோடலந்தணர் மறைத்தே
யஃதிவணுவலாதெழுந்து புறத்திசைக்கு
மெய்தெரிவளியிசையளவு நுவன்றிசினே."

என்னுஞ் சூத்திரங் காணப்படுகின்றது. உரையாசிரியர் இதற்கெழுதிய பொருளாவது. ஆசிரியன் எல்லாவெழுத்துக் களும் பிறக்குமாறு முந்துநூற் கண்ணே கூறி வெளிப்படுக்கையினுமேலே, யானும் அவ்வாறே கூறிய எண்வகை நிலத்தும் பிறக்கின்ற பிறப்போடே அவ்வெழுத்துக்களைக் கூறுமிடத்து, யான் கூறியவாறு அன்றி, உந்தியில் தோன்றுங் காற்றினது திரிதருங் கூற்றின்கண்ணே மாத்திரை கூட்டிக் கோடலும் மூலாதாரத்திலெழுகின்ற காற்றினேசையைக் குற்றமற நாடிக் கோடலும், பார்ப்பாரது வேதத்துளதே. அந்நிலைமை ஆண்டுணர்க. அங்ஙனங் கூறலை ஈண்டுக் கூறலாகாமையின் இந்நூற்கட் கூறாதே உந்தியிற் றோன்றி புறத்தே புலப்பட்டு ஒலிக்கும் பொருள் தெரியுங் காற்றினது துணிவிற்கே யான் மாத்திரை கூறினேன். அவற்றினது மாத்திரையை உணர்க என்பதே. இதனால் வடமொழி வேத எழுத்துக்கள் உந்தியினின்றும் மூலாதாரத்தினின்றும் பிறப்பன. அவைகளுக்கு மாத்திரை அளபு வேறு, தமிழ் எழுத்துக்கள் உந்தியினின்மற பிறப்பன. அவைகளுக்கு மாத்திரை அளபு வேறு என்று விளங்குகின்றதுமன்றி அவ்வேத எழுத்துக்களின் ஓசையானது மூலாதாரத்தினின்றும் எழுவதானதால் தொல்காப்பியத்துட் கூறலாகாமையின் கூறிற்றிலர் என்பதும் பெறப்பட்டது.

சிவதருமோத்தரம், சிவஞானதானவியலில் அபக்குவர் இன்னாரெனக் கூறுமிடத்துச் "சந்தபேதமுங் கானறியார்" என்னுஞ் சொற்றொடர்க்குப் பொருள் "வடமொழி தென்மொழியாகிய இருவகைச் சந்தபேதத்தை யறியாதோரும்" எனப்பொருள் கண்டமையின் இருமொழிக்குஞ் சந்தம், பேதமுற்று விளங்குமெனப் போந்தமையினானும், இச்செய்யுளின் விசேட உரையிற்காட்டிய வீரசோழியமுடையார் இலக்கணத்தின் மேற்கோளில் வடமொழிச் சந்தம் இருபானென்றெனக் கூறப்பட்டமையானும், "இருவிதஞ் சந்தமிவற்றொன்றெழுத்தாலி லங்கு மற்றை, யொருவித மாத்திரையாலே யொளிருமிது, பொருவரிதாகிய வாரியத்துண்டு பொதியமென்னு, மருவரை மாதவன் கூறுந்தமிழுக்கருகமன்றே" எனவும் விளக்கினமையானும், வடமொழிச் சந்தங்கள் தமிழ்மொழிச் சந்தம் போலல்ல மிகவும் பேதப்பட்டு விளங்குபவை யென்பது உறுதியாயிற்று. இவ்வாராய்ச்சியால், சாமவேத மென்னும் வடமொழி நூற்குள்ள சந்தபேதம் வேறு என்பது திண்ணமாய்ப் பெறப்பட்டது. இதனால், தமிழ் மொழியில், தமிழ் இலக்கண முறைப்படி செய்யுளை யியற்றி அதில் சாமம் அல்லது சாமவேதம் என்னும் வடமொழிப் பதத்தை, "வடசொல் செய்யுளீட்டச் சொல்லே" யென்ற இலக்கண விதிப்படி, காட்டியிருந்தால் அச்சொற்களுக்கு அவற்றின் பொருளைத் தழுவுதல் தவறு என்று முடிபுக்கு வந்த நண்பர் கூற்றே தவறுதலாம். தமிழ் மொழியில் பண்முதலாகிய சொற்கள் இன்னிசை யென்பதைக் குறிக்க நிலாவவும் அதைச் செய்யுட்களில் வழங்காமல் வடமொழிச் சொற்றொடராகிய சாமவேத மென்னுஞ் சொற்றொடரை வழங்கினமையானது அச்சொற்றொடருக்கு வடமொழியில் என்ன பொருளுண்டோ அதைக் குறிக்கவே யென்றுணர வேண்டும். நமது தமிழ் மறையில், சாமம் அல்லது சாமவேதம் என்னுஞ் சொற்றொடரை அதற்கிசைந்த அடைமொழிகளுடன் ஓரிடத்திலா! இரண்டிடத்திலா! பிரயோகப்படுத்தியிருக்கின்றது? இருக்கு என்ற மொழிப் பிரயோகம்போல அநேக இடங்களிற் காணலாம். சிலவருமாறு.

சம்பந்தர்.

க. தயங்கு சோதி சாமவேதா
உ. சாமவேதமோர் கீதமோதியத் தசமுகன்பரவு நாமதேயமதுடையார்
ந. சாகையாயிர முடையார் சாமமுமோதுவ துடையார்.
ச. சாமநல் வேதனும்
ரு. சாமவேதன்

அப்பர்.

சு. சாமுண்டி சாமவேதங் கூத்தொடும் பாடவைத்தார்
எ, பாடினார் சாமவேதம் பைம்பொழிற் பழனமேயார்

௮. சந்தோக சாமமோதும் வாயானை
௯. சாமவேதக் கந்தருவம் விரும்புமே
௧௦. சாமத்து வேதமாகி நின்றதோர் சயம்புதன்னை

### சுந்தரர்.

௧௧. சாமவேதம் பெரிது முகப்பானை
௧௨. சாமவேதனைத் தன்னொப்பிலானை

### திருமாளிகைத்தேவர்.

௧௩. சாமகண்டா அண்டவாணா என்பனவாதியாம்

மேற்காட்டிய தமிழ்மறை வாக்கியங்களுள் ஒன்றையாவது நம்மவர் எடுத்துக்காட்டி அவரது கொள்கையைத் தாபித்தாரிலர். பொதுவாக சாமவேதம் என்று வருமிடங்களினும் அச்சொற்றொடரின் பொதுப் பொருளே கொள்ளற் பாற்று என்று எழுதிக்கொண்டார். இலங்கை மன்னன் பாடியது பண்மிக்க தமிழ்ப் பாடல்களே என்று கூறினமையானும் தமிழ் இசையில் இறைவன மிக்க விருப்பினன் என்று கூறினமையானும் மேற்காட்டிய தேவாரப் பகுதிகளிற் கண்ட சாமவேதமென்பதற் கெல்லாம் தமிழ் இன்னிசையென்றே பொருள்கொள்ளவேண்டுமென்பது இவர் முடிபு போலும். அது பொருந்துமாவென்பதைப் பார்ப்பாம். இலக்கம் உ-ல் காட்டிய தேவாரப் பகுதியில் சாமவேதம் என்று சொல்லும்படியான கீதத்தை இராவணன் பாடினான் என்ற பொருள் விளங்கும். மூன்றாவது காட்டிய பகுதியில் சாமவேதம் ஆயிரம் சாகைகளையுடையதென்பதை விளக்கும். எட்டாவதாகக் காட்டப்பட்டிருக்கிற தமிழ்மறைப் பகுதி சாமவேதம், சாந்தோக்கிய உபநிடதத்தை யுடையதென்பதைக் காட்டிற்று. ஒன்பதில் சாமவேதமாகிய கானத்தைச் சிவனார் விரும்புவரென்பது பெறப்பட்டது. பத்தாவது சிவனார் சாமவேத ரூபமாகவே யிருப்பாரென்பதை விளக்குகின்றது. இவ்வாராய்ச்சியால் தேவாரப் பாக்களிலும் மற்றுஞ் செய்யுட்களிலும் காணப்படும் சாம வேதமென்னுஞ் சொற்றொடர் வடமொழிச் சாம வேதத்தையே குறிக்குமென்பது திண்ணம். வேறுவகைப் பொருள் கொள்வது கலிகாலப் பிறழ்ச்சிகளிலொன்றே, தொல்காப்பிய மென்னும் நமது ஆதி தமிழ் இலக்கண நூல் விதிகளுக்கும் மாறுபட்டதே.

இராவணன் பாடியது தமிழ்ப் பாடலென்பது நம்மவர் போன்ற தற்காலப் பிறழ்ச்சி ஆசிரியர்களின் பிறழ்ச்சிகளில் ஒன்று. மேற்காட்டிய இலக்கம், இரண்டிலுள்ள பகுதி, சாம வேதமென்னுங் கீதத்தை இராவணன் பாடினானென்று நன்கு தெரிவிக்கின்றது. இராவணனது சரித்திரங் கூறுந் தமிழ்

இராமாயணத்திலும் பதினெண் புராணங்களுளொன்றாகிய கூர்ம புராணத்திலும் அவ்வாறே கூறப்பட்டிருக்கின்றது. தமிழ் இராமாயணம் உத்தரகாண்டம் வரையெடுத்த படலம், ௧௪0-வது செய்யுளில் "வான்றிகழ் வெள்ளி வெற்பின்கீழுற்று வருந்துகின்ற, ஊன்றிகழ் வேலினானை யமைச்சர்கா முற்று நோக்கித், தேன்றிக ழிதழியான்றன் றிருச் செவிசார நின்னை, தான்றிகழ் வீணையாகப் பாடுதி சாமமென்றார்". அடுத்த செய்யுளில் "பன்னருஞ் சாமகீதம் பரிவுடன் பாடலுற்றான்" என்று கூறப்பட்டிருக்கின்றது. கூர்ம புராணம் இராவணன் மரபுரைத்த அத்தியாயம் ௩௭-ம் செய்யுளில் "பரமனைப் பழிச்சி வெய்யோனை துணர் சாமகான மறிவொடும் பாடலுற்றான்" என்று கூறப்பட்டுள்ளது. இவ்விரு நூலுமியற்றியோர் தமிழ் மக்களே. இராவணன் இளமைப் பருவத்தில் கல்வி கற்றதைக்கூறிய வமையத்தில் "மனு நூலும் வேதமவை யோராயிரமும் விளங்குங்கலையுந் தசக்கிரீவன் ஓத" வென்றும் இராமாயணங் கூறுகின்றது.

இதனால் இளமைப் பருவமுதல் இராவணன் வேதங்களைக் கற்றறிந்தவனென்று துலங்குகின்றது. தமிழுக்கும் ஆரியத்துக்குஞ் சங்கபேத மிருப்பதோடு ஆரிய வேதத்தின் சங்கந் தமிழுக்குரியதன்று எனவும் தொல்காப்பியத்தால் தெரிகின்றது. ஆரிய பாஷை எல்லோருக்கும் பொதுவான பாஷை. தெய்வ வழிபாட்டுக்கு அப்பாஷை நூல்களே முற்காலத்தில் கையாண்டுவந்திருப்பதாகத் தெரிகின்றது. வான்மீக இராமாயணம் சுந்தரகாண்டத்தில் அனுமார் இலங்காபுரியில் கண்ணுற் கண்ட வளங்களைக் கூறும் அமையத்தில் அந்நகரத்தில் வேதகோஷமும் அக்கினி ஹோத்திரமும் விளங்குவதைக் கண்டதாகவும் அடியிற்கண்ட இராமாயண சுலோகத்தால் விளங்கும். சுந்தரகாண்டம் ௮-ம் சருக்கம்

𑌷𑌡𑌙𑍍𑌗𑌵𑍇𑌦𑌵𑌿𑌦𑍁𑌷𑌾𑌂 𑌕𑍍𑌰𑌤𑍁𑌪𑍍𑌰𑌵𑌰𑌯𑌾𑌜𑌿𑌨𑌾𑌂 ।
𑌶𑍁𑌶𑍍𑌰𑌾𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌘𑍋𑌷𑌾𑌂𑌶𑍍𑌚 𑌵𑌿𑌰𑌾𑌤𑍍𑌰𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌰𑌕𑍍𑌷𑌸𑌾𑌂 ॥

ஷடங்கவேத விதுஷாம் க்ரதுப்ர வரயாஜிநாம் |
சுச்ராவப்ரம கோஷாந் ஸவிராத்ரே ப்ரம்மரக்ஷஸாம் ||

இராவணன் புலஸ்திய பிர்மாவின் கொள்பேரன். புலஸ்தியன் பிரமனது பேரன். தேவாரப் பாக்களில் மற்றுமிடங்களில் இராவணன் பாடியதைக் குறிப்பிட்டபோதும் "தீதிலா மலை யெடுத்த அரக்கன் நீதியால் வேதகீதங்கள் பாடவென்றும்" "முன்கையால் நரம்புவெட்டி முன்னிருக்கிசைகள் பாட" என்றும், "சாமவேத மோர்கீத மோதியத் தசமுகன் பரவுநாம

தேய மதுடையார்" என்றும் சாமவேதத்தையே குறிப்பிட்டு ஆரியபாஷை மொழிகளாற் சொல்லப்பட்டிருக்கின்றன. இலங்கை மன்னனைத் தமிழன், தமிழன், என்று தற்காலத்திய தமிழ் மக்களிற் சிலர் கூறுகின்றார்களே. அதற்கென்ன ஆதாரம். வடமொழி ஆதாரவால் இயற்றப்படாத சங்க நூல் போன்ற தமிழ் நூல்கள் ஏதாவது இராவணன் சரித்திரம் கூறும் நூலுண்டா? வடமொழி நூல்களிற்றானே இவன் சரித்திரமுண்டு. இராவணன் தகப்பன், பாட்டன், அரசு புரிந்தவர்களா? அல்லது இராவணன், பின் சந்ததியார் அவனுக்குப் பின் அரசுபுரிந்தனரா? இல்லையே. அவனது தகப்பன் பாட்டன் பிரமனது வழித்தோன்றல்களெனச் சரித்திரங் கூறும்போது ஏன் அவன் ஆரியன் ஆகமாட்டான்? இப்பிரமாணங்களால் இராவணன் பாடியது சாமவேதமே யெனத் தாபிக்கப்படுகின்றது. நிற்க, இறைவன் தமிழ்மொழியில் மிக்க விருப்பினனென்பதற்குத், 'தமிழினீர்மை பேசி' என்னுந் தேவாரத்தைப் பிரமாணமாகக் காட்டினார். இதுசரியே. ஆனால் இந்தத் தேவாரத்தில் தமிழைத் தவிர்த்து வேறு பாஷையில் அவருக்கு விருப்பமிலது எனக்கூறப்பட்டிருக்கவில்லை. அவ்வாறு எதிர்மறை முகத்தால் கூறியிருந்தாலொழிய நம்மவர் கூற்று பிரமாணமாகாது. "தென்சொல் விஞ்சமர் வடசொற்றிசை மொழி யெழினரம்பெடுத்துத் துஞ்சு நெஞ்சிரு ணீங்கத் தொழுதெழு தொல்புகலூர்" எனவுஞ் சம்பந்தப்பெருமானே அருளிய தேவாரப் பாசுரத்தை நம் நண்பர் அறியார்போலும். மற்றும் "வேதியனை வேதத்தின் பொருள் கொள்வீணை கேட்பானை" எனவும் "சாமவேதம் பெரிது முகப்பானை" என்றும் தமிழ் மறை அருளுவதையும் நோக்கவேண்டும். பெரிய புராணத்திற் கூறப்பட்ட தொகையடியார் ஒன்பதின்மரில், பரமனையே பாடுவார்களைச் சொல்லுமிடத்துத், "தொகுத்த வடமொழி தென்மொழி யாதொன்று தோன்றியதே, மிகுத்த வியலிசை வல்லவகையில் விண்டோயும் நெற்றி, வகுத்தமதிற்றில்லையம்பலத்தான் மலர்ப்பாதங் கண்மேல், உகுத்த மனத்தொடும் பாடவல்லோரென்பருத்தமரே" என்னும் நம்பியாண்டார் நம்பி அருளிய திருவந்தாதியாலும் நம்மிறைவனுக்கு வடமொழி தென்மொழி யிரண்டிலும் பிரியமென்பது விளங்கும். அறுபான் மூவரில் ஒருவராகிய உருத்திர பசுபதி நாயனார் வடமொழியஜுர் வேதத்திலுள்ள ஸ்ரீருத்திரத்தையே ஓதச் சிவபிரான் அதைக்கேட்டு ஆனந்தமுற்று அவருக்கு முத்தியளிக்கவில்லையா? ஆதலால் தமிழில்தான் சிவபிரானுக்கு விருப்பம் என நம் நண்பர் கூறுவது பொருந்தமிலதே. ஆப்ரகாம் பண்டிதர் கூற்றை நம் நண்பர் பொருண்மையாகக் கொள்

வாரெனின், யாம் ஒல்காப் புகழ்பூண்ட தொல்காப்பியர் கூற்றையும் ஸ்ரீஞான சம்பந்தராதியோரது அருள் வாக்கையும் தலைமேற்கொண்டு அவர்கள் ஆணையின்படி ஒழுகுவேம். தமிழ் மொழியிலேயே சிவபிரானுக்கு விருப்பமென்று கூறும் நம் நண்பர், அவர் ஆத்துமார்த்தமாகச் செய்துவரும் சிவஞான பூசையில், அஷ்டோத்தர முதலிய வடமொழி மந்திரங்களை ஏன் சொல்லி இறைவனை அர்ச்சிக்கின்றார். நிற்க, மேலாராய்வாம். இனி, நமமவர் கூறுவதாவது.—

உசு. "நான்மறை அவற்றின் கருவிநூல் ஆறு என்னு "மிவற்றினுட்பப் பொருளைத் தொகுததுணர்த்தினமையால் ""தொகுத்தவனருமறை ஆறங்கம்" என்றருளியதென்க" என வெழுதியிருக்கின்றார். அத்தேவாரச் சுத்த பாடமாவது "தொகுததவனருமறை அங்கமாகமம் வகுத்தவன் வளர் பொழிற்கூக மேவினான்" என்பது, இதில் 'ஆறு' என்னும் எண்ணுப்பொருளைக் குறிக்கும் மொழி கூறப்பட்டிருக்கவில்லை. ஆயினும் அங்கம் ஆறு என்பது நமது மேன்மக்களது மற்றைய தேவாரப் பகுதிகளில் காணப்படுவதான், அவைகளை வைத்துக்கொண்டு நம்மவர் கூறும் விஷயத்தை ஆராய்வாம்.

" ஆறங்கம் என்றவிடத்து அவை வடமொழி வேதக் " கருவிநூல்களாகக் கொள்ளப்படா..............வடமொழி " ஆறங்க நூலோ வெவ்வேறு ஆசிரியர்களால் வடமொழி " வேதம் நான்கும் வகுத்தபின்னர் இயற்றப்பட்ட நூலாகும்" என வெழுதியிருக்கின்றார்.

வேதம், அங்கம், ஆகமம், சிவபிரானால் அருளப் பட்டனவென இவர் காட்டிய மேற்கோளாகிய தேவாரமே கூறுகின்றது. அத்தேவாரத்தில், அங்கம் வடமொழி வேதக்கருவி நூல்களாகக் கொள்ளப்படாவென்று கூறுகின்றதா? அல்லது வடமொழி ஆறங்க நூலோ, வெவ்வேறு ஆசிரியர்களால் வடமொழி நான்கும வகுத்தபின்னர் இயற்றபபட்ட நூலாகும், என்றாவது கூறுகின்றதா? இல்லை. தேவாரப் பாக்களுக்கு இவர் விபரீதப் பொருள் கொண்டு மயக்கத்தைக் கொடுக்கும் ஒரு நவீனக் கொள்கையைத் தாபிக்கப் புகுந்தவரானதால் மேற்கண்டவாறு எழுதினார்.

ஆறு அங்கம் இல்லாவிடத்து வேதப்பொருள் காணுமாறில்லை. அதனாலன்றே, சிவபிரான் வேதத்தை ஆதியில் அருளினார் என்று கூறும் தேவாரப் பகுதிகள், அங்கத்தையுங் கூடவே சேர்த்துச் சொல்லுகின்றன. "பதினெட்டொடு நான்குக் குணர்வுமாய் நால்வேத மாறங்கந் தெரித்தானை"

என்றதன் பொருளேக்கண்டு அறிக. சிவபிரானருளிய ஆறு அங்கமே வெவ்வேறு ஆசிரியர்கள் மூலமாய் வெளிப்பட்டதென்றுணரவேண்டும்.

"தமிழர் கருவிநூல் ஆறினுக்கும் நேராக ஆறு அங்க "நூலே வடமொழியாளர் வகுத்துக்கொண்டனர் என்பது "யூகித்தற்குரியது" எனவும் நம்மவர் எழுதியிருக்கின்றார். தமிழர் கருவிநூல், ஆறு இருந்தனவென்பது நம்மவர் கற்பனேயே தவிர அதற்கு ஆதரவு ஒன்றுமில்லே. இதுகாறுந் தோன்றிய பெருமக்களில் ஒருவரும இவ்வாறு கூறியதுமில்லே. முற்காலமிருந்ததும் இக்காலமிருப்பதும் வடமொழி ஆறங்கமே. சம்பந்தப்பெருமானும் அப்பமூர்த்தியும் பற்பல சிவதலங்களுக்கு எழுந்தருளியபோது ஆங்காங்கு அந்தணர்கள் வேதமோடு ஆறங்கத்தையும் ஓதினதைக் கண்டும் கேட்டும், அவர்களருளிய தேவாரப்பாக்களில் நன்குய்க் கூறியிருக்கிறூர்கள்.

> "அங்கமும் வேதமுமோது நாவர் அந்தணர் நாளுமடி பரவ" எனச் சம்பந்தரும்,
>
> "அங்க மாறுமருமறை நான்கும் தங்கு வேள்வியர் தாம் பயிலும் நகர்"

என அப்பமூர்த்திகளும் திருவாய் மலர்ந்திருப்பதனல் அறியலாம்.

"தொகுத்தவனருமறை, அங்கம் ஆகமம் வகுத்தவன்" என்ற தேவாரப் பகுதியில், மறையைத் தொகுத்தவன் அங்கம் ஆகமத்தை **வகுத்தவன்** எனக் கூறியிருபபதின் நுட்பம் ஆயத்தக்கது.

வேதத்தைச் சுருக்கமாகவும் ஆழ்ந்த கருத்துடனும் சூத்திரரூபமாகத் தொகுத்தும் அங்கத்தையும் ஆகமத்தையும், வேதத்திற்குப் பாஷ்யமாக விரித்தும் கூறினர் என்பது அதன் பொருளென உணரவேண்டும். நிற்க மேலாராய்வாம்.

உடு. இனி, நம்மவர் கூறுவதாவது.— "தமிழ் மறை என்ற சொல்லுக்குப் பொருளாய்தல்வேண்டும்" என முதலிலெழுதிக்கொண்டு பின்பு ஏதேதோ எழுதியிருக்கின்றார். சைவ சமய பரிபாலகரான அநபாய சோழமகாராஜன் நந்தமிழ்ச்சைவ நாட்டை ஆளுடபோது சற்று ஏறக்குறைய ஆயிரமாண்டுகட்கு முன்னர் நடராஜப்பிரபு, அடியெடுத்துக் கொடுத்தும் உள்ளத்தினின்றுணர்த்தவும், சேக்கிழார் பெரு

மான் அருளிய பெரிய புராணத்தில் சம்பந்தமூர்த்திகள் புராணம் ௲கககூ-வது செய்யுளிலும் கூஉஉ-வது செய்யுளினும் கூசடு-வது செய்யுளினும் முறையே, தமிழ் மறையாம் பதிகம் பாடி என்றும், அருந்தமிழ் மாமறைபாடி யென்றும், இன்றமிழ் மறை தந்தாரை என்றும், அருளப்பட்டுத் தமிழ்மறை யென்பது ஸ்ரீஞானசம்பந்தமூர்த்திகளருளிய தேவாரப் பதிகங்களென்று வரையறுத்து இறுதிகட்டப்பட்டிருக்கின்றது. பின்னர்த் தோன்றிய சந்தான ஆசாரியர்முதல் சிவஞான முனிவர் ஈறாயுள்ள தெய்வத் தன்மைவாய்ந்த சைவப்பெருமக்களும் ஏனைய சைவப் புலவோர்களும் இதுகாறும் அவ்வாறே உறுதியாய்க் கொண்டிருந்தார்கள். இவற்றிற்கெல்லாம் முரண்பட நம்மவர் இப்போது தமிழ்மறை இன்னதென்பதை ஆராயப் புகுந்தனராம். இதுகாறும அமைதியோடு இருந்த சைவ உலகத்தை ஏதோ பேதப்படுத்துவதற்கு எத்தனம்போலும். அவர் கூற்று எவ்வகைத்தென்பதை ஆராய்வாம்.

அவர் எழுதுவதாவது.— "வேதம் என்ற சொல்லைத் "தத்தம் சமயநூல்களைக் குறிப்பதற்குப் பலசமயத்தாரும் "வழங்கிவந்தனர் என்பது, சிலப்பதிகாரம் நாடுகாண் காதை "யில் "ஓதிய வேதத்தொளியுறி னல்லது போதார் பிறவிப் "பொதியறையோரென" என்றவிடத்து 'வேதத்தொளி "யென்பதற்கு அருகன் ஆகமமாகிய விளக்கொளி என்று "பொருள்' கொள்ளப்படுதல் பற்றியும் அருகக் கடவுளை வேத "முதல்வன் என்றவிடத்து ஆகமமூன்றிற்கு முதலாயுள்ளவன் "என்று பொருள் கொள்ளுதல்பற்றியும் உணரப்படும். இன் "னும் அருகனை 'சிவகதி நாயகன்' என்றும், காமனை வென் "றோன், என்றுங் கூறினமை உற்று நோக்கத்தக்கது."

"தேவாரத்துள் சிவபெருமானை "புலன்களைந்தும் "வென்றான்." என்றுங் கூறியதையுங் கருதுக. தற்காலத் "தில் மஹமதியர்களும் கிரிஸ்தவர்களும் தத்தம் சமயநூலை "வேதம் என்ற சொலலால் வழங்குவதுங் காண்க. இவ்வாறே "ஆகமமென்ற சொல்லைப் பண்டை நாட்டொட்டுத் தத்தம் "சமயநூலைக் குறிப்பதற்கு ஒவ்வொரு சமயத்தாரும் வழங்கி "வந்திருத்தல் தெளிவு. புத்தர்களும் சமணர்களும் தமது "சமய நூலையே ஆகமமென்ற சொல்லாற் குறித்தமை வெளிப் "படை. ஆசிரியர் பரிமேலழகர், எல்லாச் சமயநூற்கும் "ஒப்பமுடிந்ததென்று கருதுமிடங்களிலெல்லாம், எல்லா "ஆகமங்கட்கும் ஒப்பமுடிந்ததென்று கூறுதல் இதற்கு ஒரு "சிறந்த சான்றும். ஸ்ரீநீலகண்டாசாரியார் தமது பாடியததில்

" "வேதோபி சிவாகம:" என்றவிடத்து வேதம் என்பதே சிவாக
" மமெனப்பட்டது. இன்னும், ஸ்ரீஞானசம்பந்தப்பெருமான்,
" "வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப் போதத்
" தால் வழிபட்டான்," என்றவிடத்தும் அப்பொருள் கொள்
" ளற்பாலது. என்னை ? சிவாகமமே இவ் வழிபாட்டிற்குரிய
" மந்திரம் கிரியை பாவனை என்பவற்றை விதித்தலானும்,
" அவற்றுட்போந்த மந்திரங்களே வேதத்துட் பயிலுதலானு
" மென்க."

" இதுகாறுங் கூறிப்போந்த வாற்ருன், வேதம் என்ற
" சொல்லும் பிறவும் பல சமயத்தாராலும் தத்தம் நூலுள்
" வழங்கப்படுமிடத்து, இயைபுபற்றி அம்மொழிகட்குப்
" பொருள் கொள்ளவேண்டுமென்பது வற்புறுத்தப்பட்டது"
என்று எழுதியிருக்கின்ருர். இவற்றை ஆராய்வாம். 'தமிழ் மறையென்ற சொல்லுக்குப் பொருள் ஆய்தல் வேண்டும்' என ஆரம்பித்துக்கொண்டு, புறச்சமயத்தார்களும் அவரவர் மதக் கொள்கை நூல்களை வேதம், ஆகமம், ஆதிய சொற்களால் கூறுகின்ருர்களென்பனவற்றை மத்தியில் வித்தாரமாயெழுதி, இயைபுபற்றி அம்மொழிகட்குப் பொருள் கொள்ளவேண்டு மென்பது வலியுறுத்தப்பட்டதுஎன முடிவில் நம்மவர் எழுதிய நோக்கம் யாதுபற்றியென யூகிக்குமிடத்துத், தேவார மாதிய தமிழ்ச் சைவத் திருமுறைகளில் பலவிடங்களிலும் நம் பெருமக்கள் எடுத்தாண்டுவந்திருக்கிற வேதம், நான்மறை ஆதிய மொழிகட்கு இயைபுபற்றி இவர் நவீனமாகக் கண்ட ஆதாரவற்ற தமிழ் முனிவர் நால்வர் செய்த தமிழ் நான்மறை யெனப் பொருள் கொள்ளவேண்டுமென்று வற்புறுத்திக் காட்டுவதற்கே யெனத் தெளிவாய் விளங்குகிறது. இவர், இவ ரது கல்வித் திறத்தால் என்ன சொற்ருலும் பொய் பொய்யே யாம். மெய் மெய்யேயாம். ஆனல் புறச்சமயத்தார் அவ்வாறு கூறுவதற்குள்ள காரணங்கள் இன்னவையென விளக்கிக் காட்டுவது இன்றியமையாததாயிருப்பதால் அவ்விஷயம் சற்று விவகரிப்பாம்.

ஏற்கனவே காட்டப்பட்டிருக்கிற பற்பல பிரபல பிர மாணங்களால், நமது வேதம், ஆகமம் உலக சிருஷ்டியின் போதே, சிவபெருமானல் ஆக்கப்பட்டனவென்பது தெளியப் படும். இந்நூல்களால் ஆதரிக்கப்பட்டு இராஜாங்கத்திலமர்ந்து விளங்கும் நமது சமயக் கொள்கையே உலகத்தில் அனுசரிக்கப் பட்டு வரும் மற்றைய சமயக் கொள்கைகட்கு முந்தியது. புத்த மத நூலோ இன்றைக்கு உத்தேசம் ஆண்டுகட்கு முன்னரும, கிறிஸ்து மத நூலோ ஆயிரத்துத் தொளாயிரம் வருடத்துக்கு

முன்னரும், மஹமதிய மத நூல் அதற்குப் பின்னரும் உண்டாயவை. ஆனால் ஆங்கிலக் கல்வி வாயிலாக மேல் நாட்டுச் சரித்திரம் கற்றவர்கள் நம் வேதமாதிய உற்பத்திக்கும் ஓர் கால அளவை, அதாவது: மூவாயிரத்து இருநூறு வருடங்கட்கு முன்னர் என்றும் கூறுவர். உலகமே உற்பத்தி ஆகி சுமார் வருடம்தான் ஆயிற்று என்பது மேல்நாட்டுச் சமயத்தோர் கூற்று. அக்கால அளவுக்குட்படுத்தியே நமது சமயக்கொள்கையின் காரியங்களையெல்லாம் அவர் கூறுவர். பூத தத்துவ, வான தத்துவ சாஸ்த்திரங்களிற் பேர்பெற்று ஆங்கிலமுங் கற்ற யம். பிலண்டிட்டு என்றவர் பாரிஸ் நகரத்தில் செய்த பிரசங்கத்தில் சரியான பிராணிகள் ஜெநித்தற்கு ஐந்து கோடி வருடமாயிருக்கவேண்டுமென்று அதற்குத் தக்க பிரமாணங்களுடன் சொல்லியிருக்கின்றார். அதனை வலியுறுத்தி ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளும் எழுதியிருக்கின்றார்கள். மேல் நாட்டார் நமது நூல்களைப் பயின்ற பின்னர், உலகம் சிருட்டிக்கப்பட்டு சுமார் ஆண்டுதான் ஆயிற்று என்று கூறும் அவர்கள் சமயக்கூற்றை நம்பாதவராகி அவர்களிற் பற்பலர்களும் பற்பல விதமாக ஆராய்ச்சி செய்துவருகின்றார்கள். நமது சமயக்கொள்கை நூல்களோ, உலகம் சிருஷ்டிக்கப்பட்டு, நூற்றுத் தொண்ணூற்றைந்து கோடியே ஐம்பத்தெட்டு லெட்சத்து எண்பத்து நாலாயிரத்துத் தொளாயிரத்தெண்பத்தொன்பது ஆண்டுகள் ஆயிற்று என்று கூறும். இக்கணக்கைப் பின்பற்றும் நாம் மேல் நாட்டுச் சரித்திர ஆராய்ச்சியை நம்புவமோ? கிறிஸ்து மதம், மஹமதியமதம் நம் தேயத்திலுண்டானவையல்ல. நமது பாஷையும் அச்சமயங்கள் பிறந்த நாட்டிற் கிடையா. அவர்களது பாஷையிலெழுதப்பட்ட அவர்கள் சமய நூல்களில் வேதம், ஆகமம், எனும் மொழிகளே இல்லை. இருக்க நியாயமுமில்லை, நம் தேயத்துக்கு அவர்கள் வந்தபிறகு நமக்குள்ள சமய நூல்கள் வேதம், ஆகமம் என்னும் பெயரால் வழங்கப்படுவதைக் கண்டு, அவர்கள் சமய நூல்களை நம்மொழியில் மொழி பெயர்த்த போது, வேதம், ஆகமம், எனும் பெயர்களை அவர்களும் இரவலாகப் பெற்றுக்கொண்டார்கள்.

புத்த சமயமோ நம் நாட்டில் உண்டாயது, அதை உண்டாக்கியோரும் நம்மவரே, அவர்கள் பாஷையும் நமது பாஷையே, அப்பாஷையிலேயே அவர்களது சமய நூலும் எழுதப்பட்டுளது. அவர்களது சமயம் உண்டானதற்கு முந்திய அநாதியாயுள்ள நஞ்சமயக்கொள்கையை விரிக்கும் நூல் வேதம் ஆகமம் என்பதையும் அம்மொழிகட்குள்ள மேலான பொருளையும் உணர்ந்து அப்பெயர்களை அவர்கள்

தங்கள் சமய நூல்களுக்கும் கொண்டார்கள். அருகனைச் சிவ கதி நாயகனென்றுங், காமனை வென்றோனென்றுங் கூறுவதும், நம் வேதாகமங்களில் முழுமுதற்கடவுளைச் சிவமென்னும் மங்க ளச்சொல்லால் கூறியிருப்பது பற்றியே. காமனை வென்றோன் ஆதிய மொழிகளும் நமது வேதாகிகளிலிருந்து இரவல் வாங் கியவையே. சிவமென்ற மங்களச் சொல்லை விரும்பாதவரு முளரோ? கிருஸ்து நாதர் குழந்தைப் பருவமாயிருந்தபோது அவரை ஈன்ற மரியம்மையார், எஞ்சிவமே யென்று அக்குழந் தையை அருமையாக அழைத்ததாகத் 'தேம்பாவணி' என்னும் கிறிஸ்துமதத் தமிழ் நூலின் ஓர் செய்யுள் கூறும்.

நமது வேதாகமம் பதிநூலென்றும் மற்றைய சமய நூல்கள் பசுநூலென்றும் கூறும் சிவதரு மோத்தரச்செய்யுள்.

"அற்பாயு நார்க்கென்றே யமலன்வேத மாதிதனைத் தொகுத் தறைந்தாலுயாது மிவற்றை, நிற்பாருஞ் சிலர் நில்லாக்குரம்பைதன்னை நிலையெனவே கருதியவப்பசு நூறன்னைக், கற்பாருஞ் சிலாமலன் கழறும் வாக்கைக் கருதாதே யவனதடிக்கமலந்தன்னைப், பொற்பாருங் கருணையினுன் மற்றை நூலாற் பொருந்துதலுமரிது மலம் போக்க ருனும்."

என்னுந் திருப்பாடலால் அறியலாம். இனி, அவர் எழுதியிருப் பதை ஆராய்வாம்.

உசு. "இனி மறையென்பது மறைவாகிய நுண்ணிய "உண்மைப் பொருளை யுணர்த்துவதென்னும் பொரு "ளுடைமையால் அத்தகைய வண்மொழியாகிய மந்திரங்களை "யும் ஞான நூல்களையும் அது குறித்து நின்றது. தமிழில் "பண்டை நூல்கள், நூல், உரை, பாட்டு, பிசி அங்கதம், முது "மொழி, மறை என எழுவகைப்படுமென்றும் "நிறைமொழி "மாந்தர் ஆணையிற் கிளந்தது மறைமொழி" யென்றும் ஆசிரி "யர் தொல்காப்பியர் செய்யுளியலுட் கூறிப்போந்தமையா "னும் 'மறைமொழிதானே மந்திரம்' என்றவிடத்து ஆசிரியர் "நச்சினார்க்கினியர் "மறைமொழியென்றது தமிழ் மந்திரங் "களை, அவற்றை வல்லார் வாய்க்கேட்டுணர்க என்று கூறினமை "யானும் தமிழில் அப்பெயர்த்தாகிய நூல்கள் பெரியோரால் "இயற்றப்பெற்றுத் திகழ்ந்தனவென்பது தெளியப்படும். "மறைமொழிகள் அடங்கிய நூல் மறையெனப்படும். மறை "மொழியையே மறையென்றலும் ஒன்று. அது "மறையிடை "வைத்த வேதம்" என்ற தேவாரப்பகுதியான் உய்த் "துணர்க" என எழுதியிருக்கின்றார்.

மறையென்பது மறைவாகிய நுண்ணிய உண்மைப் பொருளை யுணர்த்துவதென்னும் பொருளுடைமையால் அத்தகைய வண்மொழியாகிய மந்திரங்களையும் ஞான நூல்களையும் அது குறித்து நின்றது என முதற்கண்ணே மறையெனுஞ் சொற்கு ஒருவரையறை கற்பித்துக்கொண்டார். தமிழ்ப் பண்டைய சொற்களுக்குப் பொருள் கொள்வதில், சுருதி, யுக்தி, அனுபவம் மூன்றுக்கும் பொருந்தமாறு உரைவிரிப்பதுவே பொருத்தமாம். நம்மவர் கூறிய பொருள் ஒருவகையானும் ஆதரிக்கப்பட்டிலது. தமிழ் நிகண்டு ஆசிரியர்களில் முதல் ஆசிரியர் திவாகரர். இவர் காலம் சுமார் ஆறிரா ஆண்டுகட்கு முன்னர். கடைச்சங்க மிறுதியடைந்த காலத்துக்குச் சமீபமென்றுஞ் சொல்லலாம். வடமொழி தென்மொழியில் மிக்க வல்லுனர். இவரியற்றிய திவாகரமென்னும் நிகண்டில் "மறையே வேதமும் மறைத்த மொழிகிளவியும்" எனச் சூத்திரம் வகுத்தார். இவர்காலத்துக்கு முந்தியிருந்த நிகண்டைபோ, அல்லது பண்டைய நூல்களின் ஆட்சியைபோ, ஆதாரமாகக்கொண்டு இவர் இந்நூலியற்றினரே பொழிய, அநாதியாயுள்ள தமிழ் மொழிகட்குச் சுயமாக இவர் பொருள் வகுத்தவரல்லர். அன்றியும் வேதம் என்ற சொற்குப் பரியாய நாமங்களைக் கூறுங்கால் "சுருதி, மறை, சாகை எழுதாக் கிளவி" எனவும் கூறப்பட்டுளது. 'மறையே வேதமும்' என்றதில் வேதமென்னுஞ் சொல் வடமொழி வேதமென்றே தெளிவாய்க்கிடக்கின்றது. இச்சூத்திரத்தைத் தொடர்ந்தே முதல் வேதத்தின் பெயர்; அதற்கடுத்தது உ-ம் வேதத்தின் பெயர், இவ்வாறு நான்கு வேதங்களையும் அவற்றிற்குள்ள பல பெயர்களோடு சூத்திரங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன. தமிழ்ப் பண்டைய நூல்களில் மறை யென்ற மொழி காணப்படுமிடங்களிலெல்லாம் முன்பின் அடைமொழியால் வேறு பொருளைச் சிறப்புத் தன்மையாற் குறியாதவரை, வேதம் என்றே பண்டைய உரையாசிரியர்கள் பொருள் கண்டார்கள். யுக்தியாய்ப் பார்க்குமிடத்தும் மறையென்ற சொல் வினைச்சொல் ஏவலில் வந்தால், ஒளித்திரு, ஒளித்துவை, என்பதுவே அச்சொல்லிற்கு உரித்தாகி உடனிகழும் முதற் பொருளாம். வினைமுதலாகப் பிறந்த மறை யென்னும் மொழியைப் பெயர்ச் சொல்லாகக்கொண்டால் மறைவாயுள்ள எப்பொருளையுங் குறிக்கும். அதனாற்றான் மந்திரம் இரகசியம் என்ற பொருள் இச்சொற்கு ஏற்பட்டது. நம்மவர் ஞான நூல்களையும் அது குறிக்குமென்றார். இது பொதுத் தன்மையாய் நின்று எந்த ஞான நூலைக்குறித்தது எனுங்கடாவுக்குக் காரணமாய் நிற்பதாக ஆகின்றது. வேதம் என்றே

முன்னோர்கள் அறுதியிட்டு அவ்வாறே வழக்கினும் வந்திருப்பதால், அதற்கு மாறாக நம்மவர் கொண்டபொருள் பொருந்தாது. "தகுதியும் வழக்குந் தழீஇ இன வொழுகும் பகுதிக் கிளவிவரை நிலையிலவே" என்னும் தொல்காப்பியச் சூத்திரமும் கூறுவதானு மறியலாம். பின்னும் நம்மவர் எழுதியிருப்பதில் "நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்தது மறைமொழி" யென்றும், ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுளியலுட் கூறிப் போந்தமையானும் எனக் கிளந்தது என முற்றுச் சொல்லாக்கிக் கொண்டார். கிளந்த என எச்சப்பொருளில் சூத்திரம் வகுக்கப் பட்டிருக்கின்றது. பின்னும் நம்மவர் எழுதுவதாவது, "மறைமொழிதானே மந்திரம்" என்றவிடத்து ஆசிரியர் நச்சினார்க்கினியர், "மறைமொழி யென்றது தமிழ்மந்திரங்களை அவற்றை வல்லார்வாய்க்கேட்டுணர்க" என்பது; நச்சினார்க்கினியர் மேலே குறியிட்டுக் குறித்துள் காட்டியிருக்கிற சொற்றொடர்களால் பொருள் கூறவில்லை. "மறைமொழிதானே மந்திரமென்ப" என்னுஞ் சூத்திரப்பகுதிக்கு அவர் கூறும் பொருளாவது. "புறத்தார்க்குப் புலனாகாமன் மறைத்துச்சொல்லுஞ் "சொற்றொடரெல்லா மந்திரமெனப்படும் என்றவாறு, அவை "வல்லார்வாய்க் கேட்டுணர்க. தானே என்று பிரித்தான் "இவை தமிழ் மந்திரமென்றற்கும் பாட்டாகி அங்கதமெனப் "படுவனவுமுள. அவை நீக்குதற்குமென உணர்க" இவ்வாக்கியங்களையே உரைஆசிரியர் எழுதியது. ஆசிரியர் தொல்காப்பியனார், தமிழ் வழக்கிற்கூறுஞ் செய்யுள் வகையைச் செய்யுளியல் சஎஎம் சூத்திரத்தில் "ஆறெனமொழிப" எனக் கூறினார். அடுத்த சஎஅம் சூத்திரத்தில் "அவை தாம் "நூலினான உரையினான கொடியொடு புணர்ந்த பிசியினான "வேதுமுதலிய முதுமொழியான மறைமொழிகிளந்த மந்திரத்தான கூற்றிடைவைத்த குறிப்பினான" என அவ்வாறு வகைச் செய்யுளின் பேர் கூறினார். அடுத்த சூத்திரங்களில் ஆறுவகைச்செய்யுள் இன்னதெனக் கூறிவந்து விவாத "நிறை மொழிமாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி தானே மந்திரம்" என்ற சூத்திரத்திலே மந்திரச் செய்யுள் இன்னதென உணர்த்தினாரேயன்றி மறை, இன்னதென இச்சூத்திரத்தால் தொல்காப்பியனார் உணர்த்தினாரில்லை. மேலும் இச்சூத்திரங்கள் நூல், அல்லது நூல்களின் வகைகளைச்சொல்ல எழுந்தனவல்ல. செய்யுட்களின் வகைகளைக்கூற வெழுந்தவை. நூல்களைப்பற்றி மரபியலில் கூறியிருக்கின்றது. மேற்காட்டிய சூத்திரங்களையும், அவற்றிற்கு உரை ஆசிரியர் எழுதிய உரையையும் நன்கு வாசித்து உணர்பவர்கள் யாங்கூறியது உண்மையோ நம் நண்பர் கூறியது உண்மையோ என்பதை

அறிவார்கள். திவாகரர் கூறியவாறே பிங்கலந்தையாரும் "வேதத்தின் பெயர் இருக்குச்சுருதி மறை யெழுதாக்கிளவி ஆதிநூல் சாகை ஆரணம் வேதம்" என்றார். ஆதநூல் என்றும் முதனூல் என்றும் ஒரு பொருளையே குறிக்கும்.

"வினையினீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதனூலாகும்" என்ற தொல்காப்பியச் சூத்திரமும் ஆதிநூல என்பது கடவுளால் அருளப்பட்டதென்று கூறுகின்றது. இக்காரணங்களால் மறையென்ற மொழிக்குப பொருள், "நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திரமென்ப" எனுந் தொல்காப்பியச் சூத்திரத்தாற் ருபிக்க வெழுந்தது பயனிலதாயிற்று என்பதைத் தமிழ்க் கல்வியாளர்கள் அறிவார்கள். "அது "மறையிடைவைதத வேதம" என்ற தேவாரப்பகுதியான உய்த்துணர்க" வென்றார். மறையிடை வைத்த வேதம் எனுஞ் சொற்றொடர் அடங்கன் முறைக்குள் காணப்படவில்லை. "மறையுடைய வேதம் விரித்தாய்போற்றி" என அப்பமூர்த்திகளருளிய கைலைத் திருப்பதி போற்றித்திருத்தாண்டகத்தில காணப்படுகின்றது. இச்சொற்றொடரைததான் நமமவர், அவரது வழக்கம்போல மாறறிக்கொண்டாரோ என்னமோ தெரியவில்லை. ஒருக்கால் காணப்படினும் அவ்வாக்கியத்துக்கு இடை இடையே மறைவான அதாவது இரகசியமான பொருளைக்கொண்ட வேதம, என்பதே பொருளாதலால் அவர் கொள்கைக்கு அவ்வாக்கியமும ஆதரவு செய்வதிலலை. நிற்க, மேலாராய்வாம்.

உஎ. இனி நம் நண்பர் எழுதுவதாவது.— "இனி "தொல்காபபியப் பாயிரத்தில் "நான்மறை முற்றக்கறற" "அதங்கோட்டா சாற்கு அந்நூல் குற்றமறத் தெரிக்கப் "பட்டதெனக் காண்கிறோம். ஆதலால் தமிழ் இயல் நூலா "கிய தொல்காப்பியத்தை ஆய்ந்து அது தக்க நூல என்று "முடிபு கட்டுவதற்கு நான்மறைப் பயிற்சி வேண்டியதாக "யூகிக்கப்படுகினறது..........ஆதலால நான்மறை முறறக் "கறறவென்றவிடத்து அநநானமறை வடமொழி நூல்க "ளென்று கருதபபட்டா. ஆகவே அவைகள் தமிழ் நூல்களா "மென்பது தெளிவு" என்று எழுதியிருக்கின்றார்.

மேலே யாம், தக்க பிரபல பிரமாணங்களால் நான்மறை அலலது நாலவேதம் என்பது சிவபெருமான் அருளியவை யென்பதைக் காட்டினோம்.

"காரியமா யுலகமெலா மிருத்தலாலே கடாதிகள்போற் காரிய கர்த்தா வொருவன் வேண்டும், ஆரியமா யறம்பொருளோடின்ப வீடெல்லா மறைந்துயிர்கட்கறிவு செயலளிப்பது நூலந்நூல், சூரியர் களாயுள்ளவர்களோத வோதிக் கொண்டவரலான் முன்னே குற்ற மின்றிச், சீரிய பேரறிவுடையோன் செப்பவேண்டுஞ் செயலினுக்குங் கரிவேண்டுஞ் சிவனுள்னென் றறியே"

என்ற சிவஞான சித்தியார்ச் செய்யுளில் அருணந்தி சிவனார் காரண காரியங்களைக்கொண்டு சாதித்து அறமாதி நான்கையு மறைவது சிவபெருமானருளிய வேத சிவாகமங்களே யென் றும் அவை வடமொழிகளிலாயவை யென்றும் தெளிவாய் விளக்கியிருக்கின்றார். நந்தி யெம்பெருமான் திருவருள் பெற்ற நான்மறையோகியர் ஒருவர் அகத்தியரைக் காணும் பொருட்டுக் கைலையினின்றும் தென்னாட்டுக்கு எழுந்தருளிய வர், திருவாவடுதுறைக்குச் சமீபத்தில பசுக்களை மேய்த்துக் கொண்டிருந்த மூலன் என்ற பெயருடைய ஓர் இடையன், காலகதியாய் மரணமடைய அதனாற் பசுக்கள் அடைந்த துய ரத்தைக் கண்ணுற்று அத்துயரத்தை நீக்கும்பொருட்டுத் தமது யோக சக்தியால் அவனுடலிற் புகுந்து பசுக்களது துயரத்தை நீக்கியபின்னர் தாஞ் சேமித்துவைத்த தமது உடலைக்காணாது அதற்குக் காரணம என்னவெனச் சிவயோகக் காட்சியினால ஆய்ந்தபோது அவர் அறிவில் உணர்ந்ததைக் கூறும் அமையம சேக்கிழார்மூர்த்திகளருளிய செய்யுளாவது.

"தண்ணிலவார் சடையார்தாந் தந்தஆகமப்பொருளை, மண்ணின் மிசைத்திருமூலர் வாக்கினாற் றமிழ் வகுப்பக், கண்ணியவத் திருவருளா லவ்வுடலைக் கரப்பிக்க, வெண்ணிறந்த வுணர்வுடையாரீச ரருளென வுணர்ந்தார்."

இச்செய்யுளில் ஆகமம் என்ற சொல்வேதங்களையுங் குறிக்கும். ஏனெனில் நான்மறையோகியர் என அவரை முன்னம்மெய பெரிய புராணம் குறிக்கின்றது. ஆகமங்களைத் தமிழில் இயற்ற இவரது உடலைச் சிவபிரான் கரப்பித்தார் என இச் செய்யுள் கூறுவதால், இவா முந்தியே கற்ற ஆகமமும நான் மறையும் தமிழலல, வடமொழி, என்பதைத் தெரிக்கின்றது. திருமந்திர மாலையில திருமூலர் வரலாறு என்னும் இயலிற் காணப்படுஞ் செய்யுளாவது.

"பின்னை நின்றென்னே பிறவிபெறுவது
முன்னை நன்றாக முயலதவஞ் செயகிலர்
என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே"

இம்மந்திரச் செய்யுளையும் மேற்காட்டிய பெரிய புராணச் செய்யுளையும், பெரிய புராணத்தில் இப்பெரியோர் கைலை

யினின்றும் தென்திசை புகுமுன்னர் இவரை நான்மறை யோகிகளென்று சொல்லியிருப்பதையும், கூர்ந்து நோக்கில், திருமூலர்க்கு மாதா வயிற்றில் ஜெனித்த பிறப்பு நான்மறைக் குரிய அந்தணர் குலமென்றும், குலம் தேகத்தொடக்குள்ள வரைமட்டுமேயானதால், அத்தேகத்தோடே அக்குலம் விடு பட்டுப் போயிற்றென்றும் பின்னர் மூலனது குலமே இவர்க் கெய்தியதென்றும் அதனால் இம்முனிபுங்கவர் யோக உணர்ச்சி யால் தமக்கு மூலனது தேகத்தை இறைவன் கொடுத்ததைப் “பின்னை நின்றென்னே பிறவி பெறுவது” என வியந்தோதி இறைவனது வேதாகமப்பொருளைத் தமிழிற் செய்யும் பொருட்டெனஅறிந்துகொண்டாரென்பதும் நன்கு விளங் கும். சேக்கிழார் புராணம் ௬0-வது செய்யுளில் இந்நாய ஞாரக் கோபாலர் மரபு எனக்கூறியிருப்பதன் கருத்தும் உற்றுநோக்கத்தக்கது. இவ்வரலாற்றுவழி இச்சிவயோகியார் மூலன் என்னும் பெயருடைய இடையனது உடலிற்புகுந்த படியேயிருந்து திருமூலர் என்னும் பெயரை யெய்தித் திரு மந்திரமென்னும் அரிய தமிழ் நூலை அருளிச்செய்தார். அந் நூலில் வேதச்சிறப்பு என்னும் இயலில் அடியிற்காட்டி யிருக்குஞ் செய்யுள் காணப்படுகின்றது.

“வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தின்
ஓதத் தகுமறமெல்லா முளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடு பெற்றார்களே”

இச்செய்யுளால், வேதத்திலில்லாத பொருள் ஒன்றுமில்லை. இவ்வேதத்தை ஓதி அறிவுள்ளோர்கள் வீட்டு நெறியடைந் தார்கள், என விளங்குவதால், அத்தகைய மகிமைபொருந்திய நான்மறைகளையுங்கற்ற பெரியோன் அதங்கோட்டு ஆசான் என்பதைக் குறிப்பிக்கின்றதேயொழிய வேறுவகையிலல்ல. இருமொழியையும் முற்ற உணர்ந்த சிவஞான முனிவராகிய தமிழ் முனிவர் அவர் இயற்றிய தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தியில் “வடநூலுணர்ந்தார்க்கன்றித் தமிழியல்பு விளங்காதென்பது முணர்ந்துகோடற்கன்றே பாயிரத்துள் “ஐந்திரநிறைந்த தொல்காப்பியன்” என்றதூஉமென்க” எனவெழுதியிருப்பதை நோக்கின், தமிழ்த் தொல்காப்பி யத்தை உள்ளவாறறிதற்கு, வடமொழிப்பயிற்சி இன்றி யமையாதென்பதும் விளங்கும். தமிழில் நான்மறை யென்னு மொரு நூல் ஆதிமுதல் தமிழ்நாட்டில் இருந்து பஃறுளியாறு முதலியவற்றைக் கடல்கொண்டபோது, முதற் சங்கநூல்கள் அக்கடல்கோளில் மறைந்தவைகளுடன், இத்தமிழ் நான்மறை யும் மறைந்துபோயினவென்று நம்மவர் கற்பிக்கின்றார். தொல்

"காரியமா யுலகமெலா மிருத்தலாலே கடாதிகள்போற் காரிய கர்த்தா வொருவன் வேண்டும், ஆரியமா யறம்பொருளோடின்ப வீடெல்லா மறைந்துயிர்கட்கறிவு செயலளிப்பது நூலந்நூல், சூரியர் களாயுள்ளவர்களோத வோதிக் கொண்டுவரலான் முன்னே குற்ற மின்றிச், சீரிய பேரறிவுடையோன் செப்பவேண்டுஞ் செயலினுக்குங் கரிவேண்டுஞ் சிவனுள்னென்றறியே"

என்ற சிவஞான சித்தியார்ச் செய்யுளில் அருணந்தி சிவனார் காரண காரியங்களைக்கொண்டு சாதித்து அறமாதி நான்கையு மறைவது சிவபெருமானருளிய வேத சிவாகமங்களே யென் றும் அவை வடமொழிகளிலாயவை யென்றும் தெளிவாய் விளக்கியிருக்கின்றார். நந்தி யெம்பெருமான் திருவருள் பெற்ற நான்மறையோகியர் ஒருவர் அகத்தியரைக் காணும் பொருட்டுக் கைலையினின்றும தென்னாட்டுக்கு எழுந்தருளிய வர், திருவாவடுதுறைக்குச் சமீபத்தில பசுக்களை மேய்த்துக் கொண்டிருந்த மூலன் என்ற பெயருடைய ஓர் இடையன், காலகதியாய் மரணமடைய அதனாற் பசுக்கள் அடைந்த துய ரத்தைக் கண்ணுற்று அத்துயரத்தை நீக்கும்பொருட்டுத் தமது யோக சக்தியால் அவனுடலிற் புகுந்து பசுக்களது துயரத்தை நீக்கியபின்னர் தாஞ் சேமிததுவைத்த தமது உடலைக்காணாது அதற்குக் காரணம என்னவெனச் சிவயோகக் காட்சியினால ஆய்ந்தபோது அவர் அறிவில் உணர்ந்ததைக் கூறும் அமையம சேக்கிழார்மூர்த்திகளருளிய செய்யுளாவது.

"தண்ணிலவார் சடையார்தாந் தந்தஆகமப்பொருளை, மண்ணின்மிசைத்திருமூலர் வாக்கினாற் றமிழ் வகுப்பக், கண்ணியவத் திருவருளா லவ்வுடலைக் கரப்பிக்க, வெண்ணிறந்த வுணர்வுடையாரீச ருளென வுணர்ந்தார்."

இச்செய்யுளில் ஆகமம் என்ற சொல்வேதங்களையுங் குறிக்கும். ஏனெனில நான்மறையோகியர் என அவரை முன்னமமைய பெரிய புராணம் குறிக்கின்றது. ஆகமங்களைத் தமிழில் இயற்ற இவரது உடலைச் சிவபிரான் கரப்பித்தார் என இச் செய்யுள் கூறுவதால், இவர் முந்தியே கற்ற ஆகமமும நான் மறையும் தமிழல்ல, வடமொழி, என்பதைத் தெரிக்கின்றது.

திருமந்திர மாலையில திருமூலர் வரலாறு என்னும் இயலிற் காணப்படுஞ் செய்யுளாவது.

"பின்னை நின்றென்னே பிறவிபெறுவது
முன்னை நன்றாக முயலதவஞ் செய்கிலர்
என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே"

இம்மந்திரச் செய்யுளையும் மேற்காட்டிய பெரிய புராணச் செய்யுளையும், பெரிய புராணத்தில் இப்பெரியோர் கைலை

யினின்றும் தென்திசை புகுமுன்னர் இவரை நான்மறை யோகிகளென்று சொல்லியிருப்பதையும், கூர்ந்து நோக்கில், திருமூலர்க்கு மாதா வயிற்றில் ஜெனித்த பிறப்பு நான்மறைக் குரிய அந்தணர் குலமென்றும், குலம் தேகத்தொடக்குள்ள வரைமட்டுமேயானதால், அத்தேகத்தோடே அக்குலம் விடு பட்டுப் போயிற்றென்றும் பின்னர் மூலனது குலமே இவர்க் கெய்தியதென்றும் அதனால் இம்முனிபுங்கவர் யோக உணர்ச்சி யால் தமக்கு மூலனது தேகத்தை இறைவன் கொடுத்ததைப் "பின்னை நின்றென்னே பிறவி பெறுவது" என வியந்தோதி இறைவனது வேதாகமப்பொருளைத் தமிழிற் செய்யும் பொருட்டெனை அறிந்துகொண்டாரென்பதும் நன்கு விளங் கும். சேக்கிழார் புராணம் ௬0-வது செய்யுளில் இந்நாய ஞயரக் கோபாலர் மரபு எனக்கூறியிருப்பதன் கருத்தும் உற்றுநோக்கத்தக்கது. இவ்வரலாற்றுவழி இச்சிவயோகியார் மூலன் என்னும் பெயருடைய இடையனது உடலிற்புகுந்த படியேயிருந்து திருமூலர் என்னும் பெயரை யெய்தித் திரு மந்திரமென்னும் அரிய தமிழ் நூலை அருளிச்செய்தார். அந் நூலில் வேதச்சிறப்பு என்னும் இயலில் அடியிற்காட்டி யிருக்குஞ் செய்யுள் காணப்படுகின்றது.

"வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தின்
ஓதத் தகுமறமெல்லா முளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடு பெற்ருர்களே"

இச்செய்யுளால், வேதத்திலில்லாத பொருள் ஒன்றுமில்லை. இவ்வேதத்தை ஓதி அறிவுள்ளோர்கள் வீட்டு நெறியடைந் தார்கள், என விளங்குவதால், அத்தகைய மகிமைபொருந்திய நான்மறைகளையுங்கற்ற பெரியோன் அதங்கோட்டு ஆசான் என்பதைக் குறிப்பிக்கின்றதேயொழிய வேறுவகையிலல்லை. இருமொழியையும் முற்ற உணர்ந்த சிவஞான முனிவராகிய தமிழ் முனிவர் அவர் இயற்றிய தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தியில் "வடநூலுணர்ந்தார்க்கன்றித் தமிழியல்பு விளங்காதென்பது முணர்ந்துகோடற்கன்றே பாயிரத்துள் "ஐந்திரநிறைந்த தொல்காப்பியன்" என்றதூஉமென்க" எனவெழுதியிருப்பதை நோக்கின், தமிழ்த் தொல்காப்பி யத்தை உள்ளவாறறிதற்கு, வடமொழிப்பயிற்சி இன்றி யமையாதென்பதும் விளங்கும். தமிழில் நான்மறையென்னு மொரு நூல் ஆதிமுதல் தமிழ்நாட்டில் இருந்து பஃறுளியாறு முதலியவற்றைக் கடல்கொண்டபோது, முதற் சங்கநூல்கள் அக்கடல்கோளில் மறைந்தவைகளுடன், இத்தமிழ் நான்மறை யும் மறைந்துபோயினவென்று நம்மவர் கற்பிக்கின்றார். தொல்

காப்பியம் இயற்றப்பட்ட காலம் ஆதியூழியின் அந்தத்தே என்றும் அக்காலம் நிலந்தரு திருவிற் பாண்டியன் அரசாட்சிக் காலமென்றுந் தெரிகின்றது. ஆதியூழியில் அரசாண்ட பாண்டியர்கள் காய்சினவழுதி முதற் கடுங்கோனீறாக வெண்பத்தொன்பதின்மர் எனப் பண்டைய நூல்கள் தெரிவிக்கின்றவாறு, ஆதியூழியின் கடைசியில் அரசாண்ட பாண்டியன் கடுங்கோன் என்பனுவான். ஆதலால் நிலந்தருதிருவிற் பாண்டியன் என்போன் கடுங்கோனுக்கு முந்தி அரசாண்டவனாகுவான். இதனால் நிலந்தரு திருவிறபாண்டியன் காலமும், அதங்கோட்டாசான் காலமும், தொல்காப்பியர் காலமும் ஓரே காலமென்பது விளங்கும். அன்றியும் கடல்கோளுக்கு முன்னரே தொல்காப்பியம் இயற்றப்பட்டு அரங்கேற்றப்பட்டதாயும் தெரிகிறது. இதற்குப் பின்னர் உண்டான கடல்கோளில், தமிழ் நான்மறை மறைந்தபோது, தொல்காப்பியம் மறையாதிருந்து இந்நாள்வரையும் விளங்குமாறென்னே? இது வியப்பே! தொல்காப்பியத்தை அரங்கேற்றும்போது அதைக்கேட்ட ஆசான் அதங்கோட்டாசான். இவர் கற்றிருந்தது நான்மறை. அது தமிழாமானால், இவர் காலத்திலிருந்து தொல்காப்பியமென்னுந் தமிழ்ப் பெருநூலியற்றிய தொல்காப்பியனாருக்கும் அத்தமிழ் நான்மறை தெரிந்திருக்கவேண்டும். தொல்காப்பியமென்னும் விரிவான தமிழ் நூலில் அத்தகைய நூலைக்குறிப்பிட வேண்டுவதும் மிக்க அவசியம். அவ்வாறு செய்யாது வடமொழி வேதங்களையும் அவற்றை ஓதும் முறைமையினையும் ஓதுவோர் இன்னுரென்பதையும் விரித்துச்சொல்லியிருப்பதைக் கருதுமிடத்தும், தமிழ் நான்மறை யென்றதொரு நூல் இருந்ததில்லையென்பது தெளிவாய்விளங்கும். கடல்கோளில் மறைந்த தமிழ் நூல்கள் இன்னவையென நம் நூல்கள் கூறுகின்றன. தமிழர்க்கு முக்கியமான நான்மறையொன்று தமிழில் இருந்து மறைந்துபோயிருந்தால் அந்நூற்பெயரும் மறைந்த நூல்களில் ஒன்றாகச் சொல்லப்பட்டிருக்கவேண்டும். அதுவுமில்லை, தமிழ் மக்களுக்கென்று இறைவனால் நான்மறை யென்னும் ஒரு தமிழ் நூல் கொடுபட்டிருந்தால் அது அழியுமா? தேவார திருவாசகங்களில் நான்மறையென்பது, "மூவா நான்மறை" அதாவது அழியாத நான்மறை யென்றும், "மறைமுதனான்கும் மூன்று காலமுந்தோன்ற நின்றனை" அதாவது நான்கு மறைகளும், செல்காலம், நிகழ்காலம், எதிர்காலமாகிய முக்காலமும் நிலைபெற்று நிற்கும்படி அருளப்பட்டனவென்றும் கூறுகின்றதே. தமிழில் நான்மறைகளிருந்தன. அவைகள் கடற்பெருக்கில் அழிந்துபோயினவென்று நம்மவர் கூறித்தேவாரப்பாக்களில் கூறும்

நான்மறை, தமிழ் நான்மறைகளையே குறிக்குமென்றுஞ் சொல்லுகிற வாசகம் எவ்வாறு பொருந்தும். ஆனதால் நம் நண்பர் சொல்வது பொருளல்லவென்று புறக்கணிக்கத்தகுதி யுள்ளதே. இன்னமும் நம்மவர் எழுதுவதாவது "ஆசிரியர் "நச்சினார்க்கினியர் தொல்காப்பியநூல் ஆதியூழியின் அந் "தத்தே இயற்றப்பட்டதென்றும் வியாசர் தொகுத்த இருக் "கும், யசுரும் சாமமும் அதர்வணமும் தொல்காப்பிய "னருக்குப் பிற்காலத்தினராகிய வியாசமுனிவரால் வகுக்கப் "பெற்றனவாகலின் பாயிரத்துட்கூறித்த நான்மறை அவை "யல்லவென்றுங் கூறிப்போந்தார்" என்றுமெழுதி அதனுலும் அந்நான்மறை, தமிழ் நான்மறையே யாமென்றும் நம்மவர் சொல்லுகிறார். நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பாயிரச் செய்யுளிற் காணப்படும், நான்மறை வியாசர் வகுத்த இருக் காதி நான்மறை அல்லவென்று சொன்னாரேயொழிய அந்நான் மறை தமிழ் நான்மறையென்று சொல்லவில்லை. நம் நண்பர் நச்சினார்க்கினியர் வாசகத்தை உள்ளபடியே யெழுதிக்காட்டி னாரில்லை. தமிழ்மக்களை வஞ்சிக்கும் வகையானெழுதியிருக் கின்றார். இவ்விஷயமடங்கிய தொல்காப்பிய மூலபாடமும் அதற்கு உரையாசிரியர் உரையும் வருமாறு "அறங்கறை நாவி னான்மறைமுற்றிய வதங்கோட்டாசாற்கரிறபத்தெரிந்து= அறமே கூறும் நாவினையுடைய நான்கு வேதத்தினையும் முற்ற அறிந்த அதங்கோடென்கிற ஊரின் ஆசிரியனுக்குக் குற்றமற ஆராய்ந்து கூறி" என்பது. இது மூலமும் அதற்கு நச்சினார்க் கினியர் கூறியபதவுரையுமாம். அவர் கூறும் விசேடவுரையா வது "நான்கு கூறுமாய் மறைந்த பொருளுமுடைமையின் "நான்மறையென்றார்" அவை தைத்திரியமும் பௌடிகமும் தலவகாரமுஞ் சாமவேதமுமாம். இனி இருக்கும் யசுர்வும் சாம மும் அதர்வணமுமென்பாருமுளர். அது பொருந்தாது. இவர் இந்நூல் செய்த பின்னர், வேதவியாதர் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோருணர்தற்கு நான்கு கூறாக இவற்றைச் செய்தா ராதலின். இவ்வாக்கியந்தான் நச்சினார்க்கினியர் எழுதியிருப் பது. இதனால் விளங்குவதியாதெனின், வியாசர் காலத்துக்கு முந்தியே தைத்திரியமாதி நான்கு வேதங்களிருந்தனவென் பதும் அவற்றை இக்காலத்துக்குத் தகுதியாக வியாதர் சுருக்கி இருக்காதி நான்மறைகளாக வகுத்தனர் என்பதுமாம். முந்தியே நான்மறை யிருந்ததானால் மீட்டும் வியாசர் நான் மறை தொகுக்கவேண்டியதில்லையே எனவும் நம்மவர் தர்க்கிக் கின்றார். அதற்குக் காரணம் நச்சினார்க்கினியரே மேற் காட்டிய அவர் உரையிற் கூறியிருக்கின்றார். வியாதர் நான் மறை வகுத்த வரலாறு,

"இறந்தன வரம்புல கெவரும் வேதநூன்
மறந்தனர் பவநெறிமல்கி நாடொறுஞ்
சிறந்தன வவையுயிர் செய்த தொல்வினை
யறிந்தருளைய நீயமைத்த வாயினும்."

"காதலி னருளுமுன் கலையின் பன்மையிற்
கோதற மோர்கலை கொண்டு நேமிசூழ்
மேதினி யதனிடை வியாத னென்றிடு
போதக முனியெனப் போந்து வைகுதி."

"போந்தவ ணிருந்தபின் புகரிலா மறை
யாய்ந்திடின் வந்திடு மவற்றை நால்வகை
வாய்ந்திட நல்கியே மரபினோர்க் கெலா
மீந்தனை யவரகத் திருளை நீத்தியால்."

சிவபிரான் விண்டுவை நோக்கி உலகோர் வேதநூலை மறந்தமையான் நீவிர் உம்முடைய ஒரு கலையான் வியாத னெனும் பெயருடன் உலகிற்றோன்றி அவ்வேதங்களை நான்கு கூறாகச் செய்வீராக என அருளியதாகக் கூறும் இக்கந்த புராணச் செய்யுட்களாலும் அறியலாம்.

வியாதர் பழைய மறைகளைக் கொண்டே நான்கு இருக்காதிய தொகுத்தனரென்றால், அந்தப் பழைய மறைகள் எங்கேயென நம் நண்பர் வினவுகின்றார். பண்டைய மறைகளைக்கொண்டே வியாதர் நான்கு இருக்காதிய தொகுத்தாரென எந்நூலிற் கூறியிருக்கின்றது? மேற்காட்டிய கந்த புராணச் செய்யுளில் "எவரும் வேதநூன் மறந்தனர்" எனக் கூறுவதை நோக்குக. பின்னும் பண்டைய! நான்மறைகளுமே வியாசர் வாக்கில் அவர் ஓதாமலே வந்தனவெனவு முணர வேண்டும். பின்னும் நம்மவர் எழுதுவதாவது. "வடமொழி "வேதங்கள் இந்நாற் பொருளை (அறமாதிய நான்கினை) "விதந்துகூறும் நூலல்ல" என்று எழுதிக் "குறிப்பாக அந் "நாற் பொருள்களையும் கூறினவென்று கொள்ளின் அவ்வாறு "கோடல் எந்நூற்குமொத்ததே" என்று மீண்டுமெழுகினார். ஆழமுடைய பொருளைச் சுருங்கச் சொல்லல் என்னும் விதியாலாய சூத்திர ரூபமாயுள்ள பாடல்களினாலாயவை வேதங்கள். ஆதலாற்றான் வேதப்பொருள், அங்கங்கள், ஸ்மிருதிபுராண இதிகாசங்களைக் கற்றறிந்தவர்கட்கே விளங்குமென்று பெருமக்கள் கூறினார்கள். வேதாகமமே ஆதிநூலென்பதும் மற்றெந்த நூல்களும் அவற்றினின்று தோன்றியவையே யென்பதும் "வேதநூல் சைவநூலென்றிரண்டே நூல்கள்வேறுரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள்" எனும் சிவஞான சித்தியார் பாடலாலும் அறியக்கிடக்கின்றன.

உஅ. பின்னும் நம் நண்பர் எழுதுவதாவது. "தொல் "காப்பிய உரையிற்போந்த ஒரு செய்யுளில் 'கல்லாலந் தண் "ணிழற்கீழ்க் கலித்துறையது பயந்தகாமர்காட்சி' என்ற "அடியில் கலித்துறையென்பது பாவகையைக் குறிப்பதாகக் "கொள்ளின் அப்பாவகையிலேலே நால்வர் செய்த நான்மறை "கள் அமைந்திருக்கல் கூடுமென்று கருதற்கு இடமுண்டு" என எழுதியிருக்கின்றார். மேற்காட்டிய பகுதி அடங்கிய செய்யுள் முழுதையும் படித்தாலொழிய அதன் பொருள் விளங்காதாதலால் அதை யெழுதுகிறேன்.

"கல்லாலந் தண்ணிழற் கீழ்க்கலித்துறை யதுபயந்தகாமர்காட்சி
நல்லானை நல்லாளொரு பாகமாகிய ஞானத்தானை
யெல்லாருமேத் தத்தகுவானை யெஞ்ஞான்றுஞ்
சொல்லாடாருக்கெல்லாந் துயரல்லதில்லை தொழுமின் கண்டீர்"

இச்செய்யுளில் நால்வர் என்ற பதமேயில்லை. "கலித்துறை யதுபயந்தகாமர்காட்சி நல்லானை நல்லாளொருபாகமாகிய ஞானத்தானை" என்றமையால் கலித்துறையைப் பயந்தவன் உமையைப்பாகத்துடைய சிவபெருமான் என வெளியாகின்றது. மதுரைச்சங்கத்தார் அச்சியற்றிய தொல்காப்பியச் செய்யுளியலில், கல்வித்துறை, யென்றிருக்கின்றது. கல்வித் துறை யென்ற சொற்றொடர்க்கு வேதமென்னும் பொருளே முற்பட்டு நிற்கின்றது. ஆகலான், கல்லாலடியிலிருந்து சிவ பெருமான் வேதமருளியதையே இச்செய்யுள் கூறிற்றென்பது ஒருதலை. ஆதலால் நால்வர்செய்த, தமிழ் நான்மறை கள் என்பது, இச்செய்யுளில் அமைந்திருத்தல் கூடுமென்று கருதுவதற்கு இடமுண்டு என்று நம் நண்பர் சொப்பனங் காணவேண்டுவதுதான். நிற்க, மேலாராய்வாம்.

உகூ. பின்னும் நம்மவர் கூறுவதாவது. "நால்வர் நால் "வர் என்று பன்முறை தேவார முதல்வர்கள் ஆலின்கீழ் "முனிவரைக் கூறினரேயன்றி அந்நால்வர் திருப்பெயரை "யாண்டுங் கூறிற்றிலரென்பதுணர்க. அது தமிழ் வழக்குப் "போலும்" என நம் நண்பர் எழுதியிருக்கின்றார். நால்வர் பெயரை வெளியிட்டுக் கூறியிருந்தால் நம் நண்பர் திருநான் மறை விளக்கமெனவொரு கட்டுரை கட்டுவதேது? இவ் வாறு முக்கியமான விஷயத்தின்பொருளை விரித்துச்சொல் லாது, அவரவர் தம்மனத்திற்கேற்றபொருளை அச்சொற் றொடரின் தலையிலேற்றி ஒவ்வொருவரும் ஓயாது வாதஞ் செய்துகொண்டிருக்க இடந்தருவதுதானா தமிழ் வழக்கு? ஐயோ! பாவம், தமிழ்மாது வீண்பழி சுமந்தாள், தமிழில்

மட்டுமல்ல. ஆரியத்திலும் இவ்வாறு காணலாம். பாரதம் அனுசாஸனபர்வம் 225-ம் அத்தியாயம், பார்வதி அம்மைக்குப் பரமேசுவரன் பாசுபதமுறை கூறும் அமையம்.

𑌆𑌶𑍍𑌰𑌮𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑍍𑌯𑍋𑌽𑌹𑌂 𑌚𑌤𑍁𑌰𑍋 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌨𑍍 𑌶𑍁𑌭𑍇 । 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑍍 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌾𑌨𑍍 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌨𑍍 𑌸𑌮𑌾𑌨𑍀𑌯 𑌤𑌪𑌸𑍍𑌵𑌿𑌨𑌃 ॥ 𑌵𑍍𑌯𑌾𑌸𑌕𑍍𑌷𑍍𑌯𑍇𑌽𑌹𑌂 𑌤𑌦𑌾 𑌦𑍇𑌵𑌿 𑌯𑍋𑌗𑌂 𑌪𑌾𑌶𑍁𑌪𑌤𑌂 𑌮𑌹𑌤𑍍 । 𑌗𑍍𑌰𑌾𑌹𑌿𑌤𑌂 𑌤𑌚𑍍𑌚 𑌤𑍈𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌮𑍁𑌖𑌾𑌚𑍍𑌚𑍈𑌵 𑌤𑍁 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌤𑍍 ॥ 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 𑌤𑌥𑌾 𑌤𑍍𑌰𑌿𑌲𑍋𑌕𑍇𑌷𑍁 𑌸𑍍𑌥𑌾𑌪𑌿𑌤𑌂 𑌚𑌾𑌪𑌿 𑌤𑍈𑌃 𑌪𑍁𑌨𑌃 ।

"ஆஸ்ரமேப்பியஸ் சதுர்பியோஹம் சதுரோபிராமணாந் ஸுபே | மத்பக்தாந் நிர்மலாந் புண்ணியாந் ஸமாநீய தபஸ்விந: | ௧௦ | வியாசக்ஷ்யே ஹம்ததா தேவியோகம் பாசுபதம் மஹத் | க்ராஹிதம் தச்சதைஸ்ஸர்வம் முகாச்சமம் தக்ஷிணாத் | ௧௧ | ஸ்ருத்வாதத் திரிலோகேஷுஸ்தாபிதந்நாபிதைர் புந: || சிவபிரான் தட்சிண முகத்தால் பிரம இருடிகள் நால்வர்க்குப் பாசுபத யோகத்தைக் கூறினதாக இச்சுலோகங்களிற் கூறப்பட்டிருப்பதைக்காண்க. நண்பர் கொள்கையைக் கொள்வோமேயானல் புறச்சமயத்தார் ஒவ்வொருவரும் அவரவர் குருமார்களே நால்வரென்றும், அவர்கள் சமயக் கொள்கைகளையே அந்நால்வர் சிவபெருமானிடமே பெற்றார்களென்றுசொல்லி அது காரணமாகவே அவரவர் சமயக் கொள்கைகளை உண்மையென நிலைநாட்டமுயலுவார்கள். நால்வர் பெயர் கூருததற்குக் காரணம் என்னையென்பதனை ஆராய்வாம். தேவார ஆசிரியர்களுக்கும் அந்நால்வர் பெயர் தெரியாதிருக்க வேண்டுமென்றால் அவ்வாறு கொள்வது பெருங்குற்றமேயாம், அப்பெருமக்கள் பசுகரணம் நீங்கப் பெற்று பதிகரணமுடையவர்களாய் அவர்கள் திருவாய் மலர்ந்தருளியவை சிவபிரான் வாக்காகவே கொள்ளப்படுகையால். ஆதலால் அவர்கள் ஏன் நால்வர் பெயர்களை விரித்துச்சொல்லவில்லையெனின், கூறுதும். தேவாரம்படித்துப் பொருள் கொள்வதென்றால், எளிதல்ல. தமிழ் மொழியை முறையாகக் கற்பார் இக்காலம் அரிது. இக்காலப்படிப்போ முதலிற் கற்கப்புகுவது முதற்பாட புத்தகமே. அதில் எழுதியிருக்கிற அடுப்பு, அரிவாள், மணையென்ற சில சொற்களைக் கற்றவுடனே படிக்க ஆரம்பிப்பது திருக்குறளே. அடுத்தது கம்பர் இராமாயணமே. இதுதானு தமிழும் சைவநூலும் கற்கும் முறை? முதலிலேயே நல்லாசிரியனை அடுத்துப் பொதுவகையான நீதிநூல்களையும் இலக்கண இலக்கிய நூல்களையும் ஐயமறக்கற்

றுணர்ந்து பின்னர்ச் சமயதீக்கை பெற்றுச் சைவநூல்களாகிய இதிகாச புராணங்களைக்கற்றுத் தேர்ச்சியடைந்து பின்னர்த் தமிழ்மறையாகிய தேவார திருவாசகத்தை ஓதப்புகுவோர்க்கு அதில் மறைவாயுள்ள பொருள்கள் நன்கு விளங்கும். மறைவான பொருள் கொண்டிருத்தலினாலன்றோ அதற்கு மறை என்ற பெயர் எய்தியது. இவ்வாறு முறையாகக் கற்றவர்க்கு நால்வர் ஆவார் இன்னார் என்பது நன்கு விளங்கும். "நால்வர்க்கு ஒளிநெறி காட்டினை" "ஆலத்தார் நிழலில்லறம் நால்வர்க்குக் கோலத்தாலுரை செய்தவன்" என்ற தமிழ் மறைப் பகுதிகட்கு முன்னர்யாம் பொருள்காட்டியபடி சிவபெருமான் கல்லாலடியில் தட்சிணாமூர்த்தமாயெழுந்தருளி நால்வர்க்கும் உண்மைப்பொருளைச் சின்முத்திரையாற்காட்டி உணர்த்தினாரென்பது விளங்குவதாலும, அந்நால்வரும் பிரம்ம புத்திரர்களாகிய ஸநகாதிநால்வரென்ற பொருள் விளங்குமாறு அவர்களை, அந்தணர், வேதியர், மறையோர் என்ற அடைமொழிகளால் தமிழ்மறையுணர்த்துவதாலும், நக்கீர் தேவரருளிய திருவெழுகூற்றிருக்கையில், "மூத்தீ நான்மறை ஐம்புலனடக்கிய அறுதொழிலாளர்க்குறுதிபயந்தனை" எனக்கூறி அவர்களுக்குரிய சிறப்புத் தொழிலைக்கூறுவதாலும், பின்னரும், நக்கீர தேவரியற்றிய போற்றிக்கலிவெண்பாவில் "தொகுத்தமைத்த நாண்மாலை கொண்டணிந்த நால்வர்க் கன்றுனிழற்கீழ், வாண்மாலையாகும் வகையருளித் தோண்மாலை விட்டிலங்கத் தெக்கணமே நோக்கி வியந்தகுண மெட்டிலங்க வைத்தவிறல் போற்றி" என்று அருளியிருப்பதில் நால்வருக்கும் இறைவன் தட்சிணாமூர்த்தமாயெழுந்தருளி, அருளினானெனக் கூறுவதனாலும், தாயுமானப்பெருந்தகையார், கல்லாலடியில் சிவபெருமானிடம் ஞானம் பெற்றவர்கள் நால்வர் நால்வர் எனவே அம்மூர்த்திகள் அருளிய பாடலிற்கூறி ஒவ்வோரிடங்களில் அவர்கள் பேர்களை விரித்துச்சொல்வதனாலும் நமது சிவாலயங்களிலெல்லாம் சிவபெருமானது அருட்டிருக்கோலங்கள் அமைந்து விளங்குவதில், அந்தணர் நால்வர்க்குபதேசித்த ஐதிகத்துடன் நால்வர் திருவுருவத்துடன் தட்சிணாமூர்த்தம் பிரகாசித்துக் கொண்டிருப்பதானும் அந்நால்வரும் சநகாதியரென்றே சிற்ப நூலாற் கூறப்பட்டு அந்நூற்கியைய அவர்கள் திருவுரு ஆக்கப்பட்டிருத்தலானும், இவர்களது சரித்திரம் சைவபுராணமாகிய காந்தமகா புராணத்தில் கூறப்படலாலும், தட்சிணாமூர்த்தி உபநிடதமென ஓர் நூல் இருப்பதானும் தேவார முதலிகளால், நால்வா, நால்வர் என்று பல இடங்களில தேவாரத்தில் கூறபபட்டிருப்பவர்கள் சநகாதியர் நால்வரே என்பதும், அவர்கட்கு கல்லாலடி

யிலிருந்து அருளிச்செய்தவர் தட்சிணாமூர்த்திக்கடவுளே யென்பதூஉம் தெளிவாய் விளங்கும். பஞ்சபாண்டவர்கள் ஐவ ரென்றால் அவர்கள் பெயர்களை விரித்தும் கூறவேண்டுமோ? ஆலிலைந்தாடுவான் என்று தேவாரங்களில் பல இடங்களில் காணப்படுவதில் அதற்கு விரிவான பொருள் எவ்வாறு அறி கின்றோமோ அவ்வாறே கல்லாலடியில் இறைவன் வேதப் பொருளை நால்வர்க்கு அருளினனென்றால் அந்நால்வர் சநகாதி யரென்றேயறியவேண்டும். இவ்வாறன்றிப் பலரும் பலவித மாகப் பொருள்கொள்ளுமாறு தேவார ஆசிரியன்மார்கள் கூறியிருப்பார்களேயானால் "மயங்கவைத்தல்" என்னுங்குற் றம் அவர்கள்மேல் ஏற்படும். "ஒன்றொழி பொதுச்சொல்" என்னும் இலக்கண வரம்புக்குட்பட்டது இக்கூற்று என்றறிய வேண்டும்.

கல்லாலடியில் இறைவனிடம் உபதேசம்பெற்ற நால் வரும் தமிழ் முனிவரென நம் நண்பர் கற்பிக்கின்றாரே, அக் கற்பனைக்கு ஓர் இம்மி அளவாவது தேவாரப்பாக்களிலாவது, மற்றைய எந்நூலகளிலாவது ஆதரவு உண்டா? அந்நால்வர் பெயரென்ன? அந்நால்வரைப் பெற்றோர் யாவர்? இவர் கள் சரித்திரம் எந்நூலிலாவது காணப்படுகின்றதா? கர்ண பரம்பரையிலாவது வழங்கப்படுகின்றதா? முதற்சங்கம், இரண்டாவது சங்கம் இவைகள் நிலைபெற்றிருந்த நகரங் களும், அச்சங்கங்களினிலாவிய நூல்களும், அச்சங்க மேறிய தெய்வப்புலவர்களும், அக்காலம் அரசாட்சி செய்த பாண்டியர்களும், கடல் கோளிலோ அல்லது எவ் வகையானோ மறைந்தபின்பும், அந்நகரங்களின் பேர்களும் மறைந்த அந்நூல்களின் பெயர்களும் அச்சங்கப் புலவர் பெயர்களும், அக்காலமரசாண்ட பாண்டிய அரசர்கள் பெயர் களும், இக்காலமும் தெரியுமாறு விளங்குகின்றனவே. தமிழ் முனிவர் நால்வரிருந்து சிவபிரானிடம் அவர்கள் உபதேசம் பெற்றுத் தமிழில நான்மறை அவர்கள் செய்தார்களென்பது மட்டுந்தானா விளங்கற்கில்லாது போயிற்று. நிற்கப், "புராணங் களுள் அவர்கள் பேர் (சிவபிரானிடம் கல்லாலடியில் உப தேசம் பெற்ற நால்வர் பேர்) ஒருவாறு குறிக்கப்படுகின்றன. அவற்றை நாம் பாராட்டவேண்டுவதில்லை" என நம் நண்பர் எழுதியிருக்கின்றார். பாராட்டாது விடுவதற்குக் காரணம் யாதும் எழுதினாரில்லை. இவர் பாராட்டாது விட்டேனென் றால் கற்றறிந்த உலகு இவரைச் சும்மாவிடுமா? புராணங்கள் விஷயத்தில் இவர் கருத்து இன்னதென வியக்தமாய்த் துலங்க வில்லை, சரித்திர ஆராய்ச்சியார் எனப் பெயர்வகித்த இவர்

போன்ற சிலர், புராணங்களெல்லாம் பொய்யென்று கூறி வருவதை, நம் நண்பர் கொஞ்சம் மரியாதைச் சொற்களாற், பாராட்டவேண்டியதில்லையெனக் கூறினர்போலும். "பங்கமில் பதினெட்டொடு நான்குக்குணர்வுமாய் அங்கமாறுஞ் சொன்னனுமையாறுடைய வடிகளே" எனச் சம்பந்தப்பெருமான் அருளியதுமன்றித் திருப்பாசுரத்தின் அ-வது பாசுரம் நான்காமடி "சூதன் ஞெலிமாலையென்றே கலிக்கோவை சொல்லே" எனவும் திருவாய் மலர்ந்தருளினர். நமது சைவ சமய குலபானுவாகிய ஸ்ரீசேக்கிழார் மூர்த்திகள் அப்பாசுரத்துக்குப் பொருள் கூறியதாவது "வேதம் முதல்வனென்னும் மெய்த்திருபாட்டினிலே, ராதியுலகோரிடர் நீங்கிட வேத்தவாடும், பாதம் முதலாம் பதினெண்புராணங்களென்றே, யோதென்றுரை செய்தனர் யாவுமோதாதுணர்ந்தார்" என்பதே. வேதப்பொருளையறிவதற்குப் பதினெண் புராணங்களும் இன்றியமையாதவையெனச் சம்பந்தப்பெருமான் கட்டளையிட்டிருப்பாராகல் அக்கட்டளையைப் புறக்கணித்துப் புராணங்களை நாம் பாராட்டவேண்டுவதில்லையெனப் பரம்பரை உத்தமச் சைவகுலத்தோன்றலாகிய நம் நண்பர் கூறுவது கலிபுருடனது தாண்டுதலே யெனக்கொள்வாம். கல்விச் செருக்கிலாவது பிறர் மதிக்கவாவது தேவாரப்பாடல்களின் பொருளைக் கூறத்துணிவது தகுதியல்லவென்பதைக் காட்டவே, "வெறியார்பொழிற் சண்பையர் வேந்தர் மெய்ப்பாசுரத்தைக், குறியேறிய வெல்லையறிந்து கும்பிட்டேனல்லேன், சிறியேனறிவுக் கவர்தந்திருப்பாதந்தந்த, நெறியே சிறிதியானறி நீர்மைகும்பிட்டேனன்பால்." என்னும் அருமையான பாடலினல், பொருள் சொன்னதாகச் சொல்லாமல், கும்பிட்டேனென்று சேக்கிழார் விதந்து கூறினரென்பதையுமறியவேண்டும். மேற்காட்டிய வேதம் முதல்வன் என்னும் பெரிய புராணச் செய்யுட்கு உரையாசிரியர் எழுதிய விசேட உரையில் "நான்கு வேதங்களை யுணர்ந்தானேனும் புராணத்தை நன்குணரானேல், அவ்வேதங்கள் எமது அர்த்தங்களைப் பேதிப்பானென்று அவனுக்கு அஞ்சும்" எனக் குறிப்பிட்டெழுதியிருப்பதை உய்த்துணரவேண்டும். அதுபோலவே, தமிழ் மறைகளின் பாடல்களை யுணர்ந்தானேனும், புராணத்தை நன்குணரானேல் அம்மறைகளின் அர்த்தத்தைப் பேதிப்பானென்று தமிழ் மறைகளும் அவனுக்கு அஞ்சும் என்பதும் விளங்கும்.

௩0. நிற்க, பின்னும் நம் நண்பர் கூறுவதாவது "மேற் "கூறிப் போந்த பொருளே (அதாவது தொல்காப்பியப் "பாயிரத்துள் காணப்படும் நான்மறை, தமிழ் நான்மறை

"யென்னுங் கற்பனை) மறையென்ற சொல்லிற்கு " அளவிற் "கோடல் அந்தணர் மறைத்தே" என்றவிடத்துங் கொள்ளற் "பாலது எனவுமெழுதினார்." அதாவது அந்தணர் மறைத்தே என்ற பகுதிக்குத் தமிழ் முனிவர் நால்வர் செய்த தமிழ்மறை யெனப் பொருள் கொள்ளவேண்டுமாம். கொள்ளற்பாலது என்றார். உண்மைப்பொருளை யாவருங் கொள்வரேயன்றி நாலும் மூன்றும் எட்டெனப் பொருள் கொள்ளற்பாலது என்றால் அப்பொருளை ஒருவருங் கொள்ளாது நகைப்பார்கள். அந்தணர் மறைத்தே என்ற தொல்காப்பியச் சூத்திரப் பகுதிக்கு முன்னமேயே ருஅ, ருகூ பக்கங்களில் விரிவாய்ப் பொருள் காட்டியிருக்கிறோம். வாசிப்போர் சௌகரியத்தை உத்தேசித்து இங்கும் எழுதுவாம், ஒரு நூலுக்கு உரை காணுமிடத்து அந்த நூலாசிரியன் கருத்தையறிந்து உரைகாணுதல் வேண்டும். ஒரு நூற்பொருள் துணிதற்கு அந்நூலின்கண் வந்த சொற்களையும் சொற்றொடர்களையும் பலகால் ஆய்ந்து பார்ப்பதுடன், அதற்கு நம் முன்னோர்களாகிய மேதாவிகள் கண்ட பொருளமைதியையுங் கருதவேண்டும். தாம் ஒரு பொருளை முன்னமமைத்துக்கொண்டு அப்பொருளை அந்நூலின்கண்ணே புகுத்த முயல்வது நடுநிலைமையுடைய கற்றறிந்தோர் கொள்கையன்று. அந்தணர் மறைத்தே என்னும் பகுதிகொண்ட தொல்காப்பியச்சூத்திரம் வருமாறு. எழுத்ததிகாரம், பிறப்பியல் உ0-ம் சூத்திரம்.

"எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி யெழுதரு வளியிற்
பிறப்பொடு விடுவழி யுறழ்ச்சி வாரத்
தகத்தெழு வளியிசை யரிறப நாடி
யளபிற் கோட லந்தணர் மறைத்தே
யஃதிவ ணுவலாது எழுந்து புறத்திசைக்கும்
மெய்தெரி வளியிசை யளவு நுவன்றிசினே"

என்பதாம். அந்தணர் மறைத்தே யென்னுஞ் சொற்றொடர்க்கு அடைமொழியாக "எழுதருவளியிற் பிறப்பொடு விடுவழி யுணர்ச்சிவாரத், தகத்தெழுவளியிசையரிறப நாடியளபிற்கோடல்" என்ற நீண்டதோர் சொற்றொடரிருக்கின்றதே அதன் பொருளைக் கொண்டல்லவா அந்தணர் மறைத்தே என்பதற்குப் பொருள் கொள்ளவேண்டும். அன்றியும் அந்தணர் மறைத்தே என்று கூறி அஃதிவணுவலாது என்று நூலாசிரியர் சொன்னாரே, அதன் பொருளென்ன? இச்சூத்திரத்தில் அகத்தெழுவளியிசை ஒன்று, புறத்திசை மெய்தெரி வளியிசை ஒன்று என உடம்பினின்று காற்று வெளிப்பட்டு வருவதை யிரண்டாக வகுத்தார். முன்னையது, எழுதருவளி

யின் உறழ்ச்சிவாரத்தின் அளபுகோடலும் அகத்தெழுவளி இசை அரிறப நாடிக்கோடலும் ஆகியது. அஃதென்னெனின் உந்தியில் தோன்றுங் காற்றினது திரிதருங்கூற்றின் கண்ணே மாத்திரை கூட்டிக்கோடலும் மூலாதாரத்தினெழுகின்ற காற்றிேைசையைக் குற்றமற நாடிக்கோடலுமாம். இவ்வோசையானது எந்நூலின்கண்ணே யுளதென்றால் அந்தணர் மறைத்தே என்றார் நூலாசிரியர். பின்னும் நூலாசிரியர் அஃதி வணுவலாது என்றார். அந்த நூலின் ஓசையின் கூறுபாட்டை இத்தொல்காப்பிய நூலில் நான் சொல்லாது, எழுந்து புறத்திசை மெய்தெரிவளியிசையளவு நுவலுகிறேனென்றார். இத ஞல் விளங்குவது, உடம்பினின்றும் எழும் இசை, உந்தியினின்றும் மூலாதாரத்தினின்றும் எழுவது யாதோ அது அந்தணர் மறைத்தே என்றார்; என்பதே.

உதாத்த அநுதாத்த, சுவரிதம் என்னும் ஓசைகளோடு கூடியவை வடமொழி எழுத்துக்களே. அவ்வெழுத்தாலான சொற்களால் ஆக்கப்பட்டது அந்தணர் மறையே என்றார். ஆதலால் அந்தணர் மறையென்றது உரையாசிரியர் கூற்றுப்படி பார்ப்பாரது வேதமேயாம். அவ்வெழுத்துக்களுக்கு மாத்திரைவிதி, தான் கூறவில்லையென்று சொல்லி, உந்தியிற் ருேன்றி புறத்தே புலப்பட்டு ஒலிக்கும் தமிழ் எழுத்துக்களுக்கே தான் மாத்திரையளவு தொல்காப்பியத்திற் கூறினதாகச் சொன்ஞர். விஷயம் இவ்வாறிருக்க, அந்தணர் மறைத்தே என்றது நான்கு தமிழ் முனிவர்கள் செய்த நான்கு தமிழ்மறை யென்ற பொருளைக் குறிப்பிட்டு மேற்கூறிப் போந்த பொருளே, அளவிற்கோடல் அந்தணர் மறைத்தே என்றவிடத்துங் கொள்ளற்பாலது என எந்நியாயம்பற்றி யெழுதினுரோ தெரியவில்லை. இச்சூத்திரம் நண்பரது கொள்கைக்கு உடன்பாடல்லவென்பதைத் தமிழ்க் கல்வி வாணர்கள் நன்கு அறிவார்கள். நிற்கப், பின்னும் நண்பர் எழுதுவதாவது.—

௩௧. "மறையோர்தே எத்து மன்ற லெட்டனுள்"
"என்றவிடத்து மேற்கூறிப் போந்த பொருள் பொருத்தமில
"தாகத் தோன்றுதல் கூடும்" என்று நண்பர் எழுதி அதற்கு
"ஒரு சமாதானம் அவர் சொல்லுகிறார். அதாவது மறை என்ற
"சொல் ஆரியர் கலந்த பிற்காலத்தே வடமொழி வேதத்தை
"யுங் குறிக்க நேர்ந்தது. இச்சூத்திரம் பிற்காலத்தே
"யெழுந்ததாகல் வேண்டும்" என்று எழுதியிருக்கிறார். ஆரியர் தமிழரோடு கலவாத காலமொன்று முன்னர் இருந்ததாகவும் பின்னர் ஆரியர் தமிழரோடு கலந்த காலமுண்டாயதாகவும்,

மேனாட்டுச் சரித்திரமுறை ஆராய்ச்சியை இங்குக் கூறவந்தார். அது நமது நூல்களின் கருத்துக்கும் நம் நாட்டின்கண் அநாதியாய் நிகழ்ச்சி பெற்றுவரும் நடைக்கும் பொருந்தாது. எவ்வாறெனில் கூறுதும்.

"பாரதமு நவதீவ பாகமுறு மவற்றுள்ளுஞ்
சீரியது குமரியெனுந் தீவதனிற் சிறந்திருப்ப
ராரியராமந் தணருமல்லாரு மரு மறையின்
காரியமு முறு மதனிலின்னு முளகழறிடுவோம்"

"கங்கைமுதனதி பலவுங்காசி முதற்பதி பலவும்
பொங்கு மயேந்திரம் பொதிய முதன்மலையும் பொருந்தியிடு
மங்கதற்கு யோசனை யோராயிர முண்டெனவறிக
வெங்கொடிய மிலேச்சரிட மெட்டினு மெண் ணாயிரமே"

என்ற சிவதருமோத்தரச் செய்யுட்களால் நாம் வசித்துவரும் பூமியின் பாகத்துக்கு (அதாவது இந்தியாவெனும் நாடு) குமரிகண்டமெனும் பேரென்றும், அதில் ஆரியராமந்தணர்களும்* அவர்களல்லாத ஏனையோரும் வசித்துவருவார்களென்றும் அருமறையின் வழித்தாய காரியங்களும் அங்கு நிகழப்பெறுமென்றும் கங்கை முதலாய புண்ணிய நதிகளும் காசி முதலிய சிவதலங்களும் பொதியம் முதலிய மலைகளும் அதில் பொருந்தியிடுமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. பதினெண் புராணங்களிலொன்றாகிய கூர்ம புராணமென்னுஞ் சைவ புராணமும்,

"குடக்கினில் யவனர்வாழ்வர் குணக்கினிற் கிராதர்வாழ்வர்
அடுத்திடு நடுவெண்வேத மறையவரரசர் நாய்கர்
ஒடிப்பில் சீர்ச்சதுர்த்தர் யாருந்தத்தம வொழுக்கின்வாழ்வர்
தடுப்பருநதிகள் குன்றப் பெயரிவை சாற்றலுற்றும்"

"அற்புடை பரதகண்டத் தளப்பறு தேயமுண்டாற்
பற்பல பாடைமாக்கள் பயில்வர்மற்றிதற்கே நான்காய்ச்
சொற்படு யுகபேதங்கள் தொழில்பல வியற்றல்கூடு
மற்றைய வருடமெட்டு மின்னவை மருவிடாவால்"

---

* குறிப்பு:— இது விடயமாய் மதுரைத்தமிழ்ச் சங்கத்துச் செந்தமிழாசிரியர் பிரமஸ்ரீ திருநாராயணய்யங்காரவர்கள் எமக்கு எழுதியதைப் பல்லோருமறிய இங்குக்காட்டுவோம்.

வைதிக சம்பந்தத்தை விலக்க முயலும் பிறட்சி யுணர்ச்சிக்கு முதன்மையானகாரணம், தமிழப்பார்ப்பனரை ஆரியரென்று மயங்கிப் பிறநாட்டினர் எழுதிய சரித்திரவாராய்ச்சியின் மாருட்டத்தாலுண்டாகிய போராட்டமேயன்றி வேறில்லை.

* * * *

ஆரியர் என்ற சொல்லுக்கு, நிகண்டில் I 'மிலேச்சர்' என்றும், II 'நல்லோர்' என்றும், இரண்டு பொருளே சொல்லப்பட்டன. "பார்ப்பனர்"

என்ற செய்யுட்களும் அவ்வாறே கூறும். ஏனைய செய்யுட்களில், கங்கை, நருமதை, காவிரி, வைகை, பொருனை, குமரி ஆதிய நதிகளும் மலையம், சையம், விந்தம் முதலிய பர்வதங்களும் இப்பரதகண்டத்திலிருப்பனவாகவுங் கூறப்பட்டிருக்கின்றது. மற்றை எட்டுக் கண்டங்களிலும் மிலேச்சர் வசிப்பதனாலும், கன்னித்தீபம் அல்லது பரதகண்டமெனும் பெயர் பெறும் இந்நாட்டில், மறைவழக்கமிருப்பதனாலுமன்றோ நம் அருணந்தி சிவனாரும் "நரர்பயிறேயந்தன்னி னான்மறை பயிலா நாட்டில், விரவுதலொழிந்து தோன்றல் மிக்க புண்ணியந்தானாகும்" என்று அருளிச்செய்தனர். தொல்காப்பியர் அவர் காலத்துக்கு முந்தியே, ஆதிமுதலே வடமொழி, தமிழ் நாட்டிலும் பரவியிருந்ததனாலன்றோ அம்மொழிகள் தமிழ் நூல்களில் வழங்கப் பெறுவதற்கு இலக்கணமுந் தொல்காப்பியத்தினுட் கூறினார். அன்றியும் தமிழ் எழுத்துக்கள் பிறக்கும் இடங்கள் (அதாவது உடம்பின் உறுப்புகள்) வடமொழி எழுத்துக்களைப் போலல்லவென்றுங் கூறினார். ஐந்திரமென்கிற வடமொழி இலக்கணங் கற்ற தொல்காப்பியனென்றும், தொல்காப்பியப்பாயிரச் செய்யுளுங் கூறிற்று. அன்றியும் அத்தொல்காப்பியப் பாயிரம், நான்மறை கற்ற அதங்கோட்டாசான் எனத் தொல்காப்பியம் அரங்கேற்றியபோது அதைக்கேட்டு அங்கீகரித்த புலவரும் நான்கு வேதங்களையும் கற்றவரெனப் புகழ்ந்து கூறுவதாயிற்று. இன்னமும் அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் என்ற சூத்திரத்தாலும் மற்றுஞ் சூத்திரங்களாலும் பார்ப்பார் முதலிய குலத்தவரது வருணாச்சிரம தருமங்களையும் அத்தொல்காப்பியம் எடுத்து விதிப்பதாயிற்று. இன்ன

---

என்ற பொருள்யாண்டும் கண்டதில்லை. மிலேச்சர் என்ற பொருளில் வழங்கும் I 'ஆரியர்' என்னும் சொல்வடமொழியில் இல்லாமையால் அது தமிழ்மொழியேயாம். மிலேச்சராவார். 'மிலேச்ச அவ்யக்தே சப்தே' என்றதாது பாடத்தின்படி, பொருள் விளக்கமின்றிப் பேசுவர். அதாவது பிறபாஷைக்குரியவராய்த் தமிழைப் பயிலாமற் பிறழப் பேசுமவர் என்பதே. இதுவே தமிழ் மொழியிலுள்ள I 'ஆரியர்' என்பதன் பொருளாம். இது பண்புபற்றிய பெயராதலால் அப்பண்புடையோர் யாராயிருப்பினும் அவரையே உணர்த்துமல்லது, பார்ப்பனர் என்னும் ஒரு ஜாதியாரை யுணர்த்தமாட்டாது.

'நல்லோர்' என்னும் பொருளில் வழங்கும் II 'ஆரியர்' என்னும் சொல் வடமொழியிலுள்ள 'ஆரியா:' என்பதோடு ஒருபடியாய், பூஜ்யரை யுணர்த்துகிறது. இதுவும் பண்புபற்றிய பெயராயிருப்பதால் அப்பண்புடையோர் யாராயினு மவரையுணர்த்துவதல்லது பார்ப்பனரென்னும் ஜாதியாரை யுணர்த்தமாட்டாது.

மும், "உயர்ந்தோர்க்குரிய வோத்தினான," "வேண்டிய கல்வி யாண்டு மூன்றிறவாது," என்ற சூத்திரங்களானும், வேதத்தை யும் வேதத்திற் கூறும் தத்வமசி எனும் மகா வாக்கியத்தையும் வேதசிவாகமங்களைக் கற்கும் மரபையும் தொல்காப்பியம் குறிப்பிட்டுப் புகல்கின்றது. இவைகளையெல்லாங் கூர்ந்து நோக்கும்போது தொல்காப்பியர் காலத்துக்கு முந்தியே நந் தமிழ் நாட்டில், சிவதருமோத்தரம் கூர்மபுராணம் கூறியபடி வேத மறையோர் இருந்ததுமன்றி வேதங்களும், வேத ஒழுக்க மும், பரவியிருந்தனவென்றும், திட்டமாய் யாதொரு ஐய மின்றித் தெரிவதாகிறது. சிவதருமோத்தரம் சிவஞான தானவியல் சஉ-வது செய்யுள்.

"பருவமுற்றிய பாவகமோர்ந்துபின்
னுருகியோதுக வோதருமுண்மையை
மருவியாய்வரு பாடையின்வல்லவர்க்
கரியவாரியத்தானு மறைகவே"

எனவோர் செய்யுள் எழுந்துளது. இச்செய்யுளில் ஆசான் சீடனுக்கு இன்ன பாஷையில் உபதேசமொழியைக் கூற வேண்டுமென்னும் விதியை விதிக்கின்றது. இச்செய்யுளுக்கு உரையாசிரியர் கண்ட பொருளாவது; பதினெண் பூமியிலுள் ளோரும் (தமிழ்ப் பூமியிலுள்ளோரையும் கூட்டி) பயின்று வசனித்துவரும் பாஷா பேதங்களுள் யாதொரு பாஷை வல்லோருக்கு அந்தந்த பாஷையினாலும் வடமொழி வல் லோர்க்குப் பெறுதற்கரிய வடமொழியினாலும் (ஆசானானவன்) உபதேசிக்கக்கடவன் என்பதே. இவற்றால் ஆரிய பாஷை

---

இவ்விரு வேறுவழக்கினுள், (I) ஆரியபடன், ஆரியன் காவல் ஆரியப்போர், ஆரியப்படை, ஆரியக்கூத்து என்றற்றொடக்கத்துள்ளது. இது பிறபாஷைக்குரிய அயல் நாட்டவராய்த் தமிழ் பேசத்தெரியாது பிறழப்பேசுமியல் புடையாரை யுணர்த்துமாறு காணலாம். II. ஆர்யபுத்ர:, ஆர்யா விருத்தம், ஆரியபாஷை, ஆர்யா, (ஐயை) ஆர்ய: (ஐயன்) என்றற்றொடக்கத்தன பூஜ்யவாசகமாக வருதல் காணலாம்.

ஆனல், நச்சினார்க்கினியர் தொல்காப்பிய வுரையில் நகைச் சுவைக்கு, உதாரணமாக 'ஆரியர் கூறும் தமிழ்' என்று கூறியிருப்பதால், பார்ப்பனர் என்றே கொள்வோமெனில், நச்சினார்க்கினிய ரெழுதிய உரைகளும், தொல்காப்பிய முதலியனவும் ஆரியர் கூறிய தமிழாய் நகைச் சுவைக்கிலக்காக வேண்டுமாதலால் அவர்க்கது கருத்தன்று. இங்கு I ஆரியர் என்றது தமிழ்ச்சொல். இது பிறபாஷைக் குரியவராய்த் தமிழ் பேசத்தெரியாது பிறழப் பேசும் துருக்கர் முதலாயினோரை யுணர்த்துமென்பது வெளியாம். இன்னோர் பேசுந்தமிழே நகைச் சுவைக்கு இலக்காயிருப்பதை யாண்டும் காணலாம்,

பதினெட்டுத் தேயங்களிலும் வழங்குமென்றும் அப்பாஷை பதினெட்டுத் தேயத்தாருக்கும் பொதுவானதென்றும் பதினெட்டு தேயத்தாரும் அப்பாஷையைப் பயின்றுவருபவர்களென்று மேற்படுகின்றது; இன்னமும், அநாதியாயுண்டாயிருக்கிற நமது தமிழ் நாட்டுச் சிவாலயங்களினும் விஷ்ணு ஆலயங்களினும் மற்றைய நாடுகளிலுமுள்ள அவ்விருவகை ஆலயங்களினும், வடமொழி வேதங்களினும் வடமொழிச் சைவ வைணவ ஆகமங்களினும் கண்டவாறே அம்மொழியாலுய வாக்கியங்கள், மந்திரங்களைக்கொண்டே, கர்ஷணாதி கும்பாபிஷேக பரியந்தமும் நித்திய நைமித்திக பூஜாகாரியங்களும்நடந்து வருவதானும், தமிழரில் வேளாளர் என்ற உயர் வகுப்பார் எல்லோருக்கும் ஏனையோர்க்கும் சுபாசுபங்களில் ஓதப்படும் வாக்கியங்கள், மந்திரங்கள் தமிழிலில்லாது ஆரியமாயே யிருப்பதானும் சைவர் என்று சொல்லப்படும் வேளாளராகிய தமிழருக்குச் செய்யப்படும் சமய, விசேட, நிர்வாண ஆசாரியாபிடேக தீட்சாவிதிகளெல்லாம் தொன்றுதொட்டே ஆரியத்திலமைந்து அவ்வாறே நடைபெற்று வருவதானும், சைவவேளாளர்கள் பாரம் பரியமாய்க் கைக்கொண்டு வரும் சிவபூஜைக்கு இன்றியமையாதனவாகிய பஞ்சப்பிரம மந்திரம், ஷடங்கம், பதமந்திரம், சிவகாயத்திரி ஆதிய மந்திரங்களெல்லாம் ஆரியமாகவே நிலைபெற்றிருப்பதானும், நிர்வாணதீக்கைக்கண் ஆரியத்தின் நிக அட்சரங்களே, கலாசோதனையில் நியோகிக்கப்பட்டுவருவதானும், இவ் நிக அட்சரங்கள் இல்லாவிடின், நிர்வாணதீக்கையே நிகழப்பெறாததனானும், ஆரியம் நம் நாட்டில், அது உற்பத்தியான காலம் முதல்

---

இனி, இந்நாட்டுப் பார்ப்பனரைத் தமிழரல்லர் என நாட்ட விரும்புமொரு சிலர் இந்நாட்டுப் பார்ப்பனரும் வடநாட்டுப் பார்ப்பனரும் ஒரு கோத்திரமுடையராயிருத்தலைக் காட்டக்கூடும். இதன் உண்மை பின்வருமாறறியத்தக்கது. பார்ப்பனருக்கு இரண்டு பிறப்பு உண்டென்பது எல்லோருமறிந்தது. அவற்றுள் முதற்பிறப்பிற் கோத்திர சூத்திரங்களொன்றுமில்லை.

இரண்டாம் பிறப்பில் (உபநயநத்தில்) பிரும்மோபதேசஞ் செய்யும் ஆசாரியனிடமிருந்து கோத்திர சூத்திரங்கள் ஏற்படுகின்றன. இக் காலத்தில், பெற்ற தமப்பனே ஆசாரிய ஸ்தானத்திலிருந்து உபதேசிப்பதால் கோத்திரம் பிதுர் பரம்பரைபற்றி வந்திருப்பதாக மயங்குகிறார்கள்.

முற்காலத்தில் பிர்ம்மோபதேச ஆசாரியன் பிதாவானாலும், அந்யனானாலும் யோக்யதையுடையவன் எவனோ அவனிடம் உபதேசம் பெற்றுவந்தமையால் ஆசாரியனைப் பற்றிவரும் கோத்திரம் இரண்டாம் பிறப்பாகிய விப்பிர ஜன்மத்தின் பரம்பரையைக் காட்டுமாகையால் சரீர ஜன்மத்தின் பிதிர் பரம்பரையைக்காட்டமாட்டாது.

நிலைபெற்றே வருகின்றதென்பது தாபிக்கப்படும். இன்னமும் வடக்கே இமயமலை முதல் தெற்கே கன்னியாகுமரியீறாயுள்ள இப்புண்ணிய பூமியின்கண் பதினெட்டுப்பாஷை வழங்கும் நாடுகளிலும் அநேக சிவாலயங்கள், விண்டு ஆலயங்கள் தோன்றி நிலைபெற்று விளங்குகின்றன. அத்தலங்களில் எழுந்தருளியிருக்கும் சிவபிரானையும் திருமாலையும் எந்நாட்டாரும், எப்பாஷையாரும் பண்டுதொட்டே தரிசித்து வருகின்றனர். இமாசலத்தின்மீது விளங்கும் திருக்கேதாரம், பதரி நாராயணம் என்னும் தலங்களில் அந்நாட்டாருக்கும் மற்றைய எந்நாட்டாருக்கும் அர்ச்சனை செய்விப்பது, ஆரியவேத புராணோக்த அஷ்டோத்தர சகஸ்ரநாமாதி மந்திரங்களைக் கொண்டே. இந்துஸ்தானி பாஷை வழங்கும், காசியிலும் அவ்வாறே. வெங்காளபாஷை வழங்கும், கல்கத்தா காளிகட்டத்திலுமவ்வாறே. குஜராத்தி பாஷை வழங்கும், பாம்பே நகரத்தருகிருக்கும் சோமநாதபுரத்திலும் அவ்வாறே. துளுவ பாஷை வழங்கும், கோகாணத்திலும் அவ்வாறே. தெலுங்கு பாஷை வழங்கும், ஸ்ரீபருப்பதத்திலுமவ்வாறே. கன்னட பாஷை வழங்கும், மைசூர் நாடுகளிலுள்ள தலங்களிலுமவ்வாறே. தமிழ் நாட்டில் காளத்திமுதல் இராமேச்சரம் ஈறாகவுள்ள தலங்களிலும் அவ்வாறே. மலையாளபாஷை வழங்கும், மலையாள நாட்டிலும் சிங்களபாஷை வழங்கும், ஈழ நாட்டிலும் அவ்வாறே. நந்தமிழ் நாட்டிலும், மற்றுமுள்ள நாடுகளிலும் தொன்றுதொட்டு நிலைபெற்றிருக்கும் சைவ வைணவ மடாலயங்களிலும் நித்திய நைமித்திக அனுஷ்டானங்களிலெல்லாம் தமிழ்த் தேசிகமூர்த்திகளும் ஏனையோரும் கைக்கொண்டு வழங்கிவருவதும் ஆரியபாஷையிலுள்ள ஸ்தோத்திரமாதி மந்திரங்களே. நந்தமிழ்நாட்டுச் சிவாலயங்களில் ஆரியத்திலுள்ள வேதமாதிகளை ஆசரிப்பது நியாயமல்லவென்று எழுதியவரும், ஆரிய வேதங்களைப்பழித்துக் கூறுபவருமான நம் நண்பரும் ஆன்மார்த்தமாக நெறிவழாது செய்துவரும் சிவபூஜையில் நியமமாக நாடோறும் கைக்கொண்டு ஸ்தோத்திரித்து அருச்சனை செய்தும் ஜெபித்துவரும் மந்திரங்கள் ஆரியமும் அவ்வாரியமே.

---

ஆதலால் கோத்திரகூடஸ்தர் எம்மொழியாளராயிருப்பினும் இழுக்கின்று. அவர் தமிழராயிருக்கக்கூடாதென்றும் நியதியுமில்லை. இங்ஙனமாயினமையாற் பல மொழியாளர் ஒரு கோத்திரமுடையராயிருத்தல் பொருத்தமுடைத்தே.

தமிழ் நாட்டிலுள்ள ஸ்தலங்களைப்பற்றிய புராணங்களால் 'பிருகு' 'மார்க்கண்டர்' முதலிய கோத்திரகூடஸ்தர்களும் தமிழ் நாட்டிலிருந்தவரென்றறியலாம்.

இன்னமும், இதுகாறும் வெளிவந்திருக்கும் சங்கநூல்கள் பலவும் அறம் பொருள் இன்பத்தைக் கூறியவையேயன்றி ஒன்றுவது வீட்டுநெறி மார்க்கம் போதிக்கும் விரிந்தநூலாயிலது. இக்கூற்றை "அறம்பொருளின்பமடுக்கி யவ்வகை திறம்படவருவது கீழ்க்கணக்காகும்" என்னும் பன்னிருபாட்டியற் சூத்திரமும் வலியுறுத்தும். ஆனால் திருமூலர் திருமந்திரம் எனும் ஒரு நூல்சமய உணர்ச்சிக்குரியதாய்த் தமிழிலுளது. இந்நூலிலும் "வேதமோடாகம மெய்யாம் இறைவனூல்" எனக்கூறியிருப்பதுமன்றி வேதச்சிறப்பு ஆகமச்சிறப்பு என இரண்டு இயல் கூறப்பட்டு வேதச் சிறப்பில் ருக் வேதத்தின் பெயரையும் ஆகமச் சிறப்பில் காமிகாதி ஆகமங்களின் பெயர்களையும் கூறியிருப்பதுமன்றி அந்நூலின் அநேக பாகம் ஆரிய மந்திரங்களடங்கிய திரிபுரை சக்கரமாதியன கூறுவதுளவேயாம். உதாரணமாக ஒரு செய்யுளைக் காட்டுவாம்.

"சௌமுத லவ்வொடு ஹௌவுட னுங்கிரீம்
கௌவுளு மையுளுங் கலந்திரீம் சிரீமென்
றௌவ்விலெழுங் கிலீமந்திர பாத மாச்
செவ்வு ளெழுந்து சிவாய நமவெனே"

இச்செய்யுளிற் காணப்படும் மந்திரங்களை வடமொழிப் பயிற்சியின் உதவியின்றி ஒலிக்கவும் பொருள் கூறவும் முடியுமா. மற்றுமிவ்வாறே.

இவ்வரிய பிரபல உண்மையான பிரமாணங்களான், ஆரியர் ஆரியத்துடன் ஓர் காலத்தில் நம் நாட்டுக்குப் பாரசீக தேசத்திலிருந்து வந்தவர்கள் என மேனாட்டுச் சரித்திர ஆராய்ச்சியார் கூற்று நம் சமயக்கொள்கை நூல்கட்கும் தொன்றுதொட்டே நிகழ்ச்சி பெற்றுவரும் ஆசரிப்புக்கும்

---

தமிழ் வல்லாராக மார்க்கண்டர், வான்மீகி, கௌதமர் தேவருஷி, நாரதர் முதலிய ரிஷிகளும் உள்ளார்கள். இங்ஙனமிருந்ததுபற்றியே ஆரிஷம், ஆரிஷப்போலி என்னும் செய்யுளிலக்கணப் பகுப்புக்களும் தமிழில் அமைக்கப்பெற்றிருக்கின்றன. தென்னாட்டுப் பிராமணர்கள் 'திராவிடர்' என்றும் வடநாட்டுப் பிராமணர்கள் 'கௌடர்' என்றும், ஒருவர்க்கொருவர் வேறுபட்ட இருவகையாகப் பிரிக்கப் பட்டிருப்பதும் உலகறிந்த விஷயம். இந்த கௌடவகுப்புப் பிராமணர் இந்நாட்டில் 'ஆரியர்' என்ற பெயருடன் இராமேச்சுரத்தில் பூஜகராயிருக்கிறார்கள். அவர் தமிழப் பிராமணருடன் சம்பந்திப்பதில்லை. அவர்கள் வீட்டுப்பேச்சு வடநாட்டு மொழிப் பேச்சாயிருப்பதை யின்றுமறியலாம். அவ்வாறே தெலுங்கு, கன்னடம், மஹாராஷ்டரம் முதலிய நாட்டிலிருந்துவந்து தமிழ் நாட்டிலிருக்கும் பிராமணர் வீட்டில் அவரவர் நாட்டுமொழியே பேசப்படுகின்றன. அவ்வாறு தமிழப் பிராமணர் வீட்டில் தமிழ் மொழியன்றிப் பிறமொழியொன்றும் பேசப்படாமையால்

மூரண்பட்டதாகும். நமது பாரத கண்டத்தின் பாஷைகளி லும் மேனாட்டுப் பாஷைகளிலும் வல்லவராகிச் சரித்திர ஆராய்ச்சியிலும் விற்பன்னராகித் தற்காலங் கண்டுபிடிக்கப் பட்டிருக்கின்ற மண்ணுலகு முற்றும் அநேகமாய்ச் சஞ்சாரஞ் செய்து உலகமுற்றுமுள்ள பிரபல நாடுகளின் மக்களது நாகரீகங்களைக் கண்டறிந்து நமது நன்மார்க்க நெறியை யெங் கும் பல வியாசங்களாற் பரவச்செய்து மிக்க கீர்த்தியும் புகழும் பூண்ட சுவாமி விவேகானந்தர், ஆரியர்கள் அயனாட்டி னின்றும் பாதகண்டத்தினுட் புகுந்தவரென்று, சரித்திர ஆராய்ச்சியார் சொல்லும் விஷயத்தில் எழுதுவதாவது.

"And what your European Pandits say about the Aryans swooping down from some foreign land, snatching away the lands of the aborigines, and settling in India by exterminating them, are all pure nonsense, foolish talk! Strange, that our Indian scholars, too, say amen to them; and all these monstrous lies are being taught to our boys! This is very bad indeed."

* * * *

"In what Veda, in what Suktah do you find that the Aryans came to India from a foreign country? Where do you get the idea that they slaughtered the wild aborigines? What do you gain by talking such nonsense?..........

சுவாமி விவேகானந்தர் தமது அநுபவத்தையும், பண்டைய நமது நூல்களின் பிரமாணத்தையும் ஒட்டி யெழுதி யிருப்பதானது முன்பக்கத்திற் காட்டிய சிவதருமோத்தரச் செய்யுளுக்கு ஒற்றுமையாயிருப்பதை நம்மவர்கள் கண்டு களிப்பார்களாக. ஆரியர்கள் புறநாட்டிலிருந்து வந்தார்க ளென்னும் பெரும் புழுகு வார்த்தையை நமது பிள்ளை களுக்கு இளமையிற்றானே கற்றுக்கொடுத்து அதையே நம்மவர்

---

இவர் தமிழர் என்பதிற் சந்தேகமென்ன? வடமொழி வேதம் பயில்வது பற்றிப் பிறமொழியாளரெனக் கருதுவராயின் அவ்வடமொழியும் தமிழோடு உடன்பிறந்ததன்றோ? வடமொழி பிறமொழி நாட்டார்க்கும் உரியதாயினும் தமிழர்க்கே மிகுதியும் உரியதென்பதை, வடமொழிக் குரிய தனியெழுத்து வரிவடிவிற்பிறிதொன்றின்றித் தமிழ் நாட்டார் எழுதும் கிரந்தலிபியாயிருப்பதாலும், அதுவும் வரிவடிவில் தமிழ் எழுத்துக்களோடு ஒற்றுமையுற்றிருப்பதாலுமறியலாம். வடமொழி தமி ழின சம்பந்தமேயில்லாத பிறநாட்டுமொழியுமாய், தமிழப்பார்ப்பனர் பிறநாட்டவருமாயின் வடிவெழுத்தால் தமிழெழுத்தோடொற்றுமை யுடைய கிரந்தவடிவெழுத்து எதற்காக ஏற்பட்டது? பிரணவாகார விமானங்கள் எவ்வெழுத்தின் வடிவால் நிருமிக்கப்பெற்றுள்ளன" என்பதே.

களிற் கற்ற மேதாவிகளிற் சிலரும், தொட்டிற் பழக்கம் சுடலை மட்டும், என்னும் பழமொழிக்கு இலக்கியமாகிக் குழறுபடையாய் உளறுவதை முன்னிட்டு சுவாமி விவேகானந்தர் மிக்க வருத்தமுற்று மேற்கண்டவாறு எழுதியிருக்கிறார்களென்பது, தானே விளங்கும். பின்னும், வடமொழி தென்மொழிகளிலும் ஆங்கிலத்திலும், மஹா வித்துவசிரோமணியாய் விளங்கும் பிரம்மஸ்ரீ பி. தி. சீனிவாசய்யங்கார், M.A., L.T., அவர்கள் இயற்றிய ஆராய்ச்சிமலிந்த இந்திய சரித்திரம் முதலாவது சஞ்சிகை பக்கம் சுடு-ல் எழுதியிருப்பதாவது. "அன்றியும் 'ஆரியர்' என்னும் இனத்தார் இந்தியாமேல் படையெடுத்துவந்து ஜயித்து இந்த பாஷையை (வேதமந்திர பாஷையை) இந்தியாவில் பரப்பினார் என்ற ஒரு கற்பனையை ஐரோப்பியர்கள் உண்டாக்கியிருக்கின்றார்கள். இது நம்பத்தக்க கற்பனையல்ல. ஆரிய முறைகள் உண்டானது மத்திய தேசத்தில். (கங்கை, யமுனை நடுவிலிருக்கும் நாட்டில்) வேதமந்திரங்களில் ஆரியர் வெளிநாட்டிலிருந்து வந்தார்களென்று குறிப்பொன்றுமில்லை." மற்றும் இவ்விடயத்தை வலியுறுத்தியே அவர்களெழுதிய சரித்திரத்தில் பிற இடங்களிலும் எழுதியிருக்கின்றார்கள். என்பதே. இவர்கள் ஆராய்ச்சிகளும் நம் நூல்களின் பிரமாணத்தையே வலியுறுத்துகின்றன. ஆதலால், "மறை என்ற (தமிழ்ச்) சொல் ஆரியர் கலந்த பிற்காலத்தே வடமொழி வேதத்தையுங் குறிக்க வழங்கியது" என்னும் நம் நண்பர் கூற்றுப் பயனிலதாயிற்று. தமிழ் எக்காலமோ, ஆரியம் எக்காலமோ, வேதம் எக்காலமோ, அக்காலமே, மறையென்ற தமிழ்ச் சொல்லுமுண்டாகி வேதத்தைக்குறித்து நின்றுகொண்டிருக்கின்றது. "ஆரியமுந் தமிழும்முடனே சொல்லிக் காரிகையார்க்குங் கருணைசெய்தானே." என்னுந் திருமந்திரச்செய்யுளானும் இருமொழியும் ஓரேகாலத்திற் சிவபிரானிடந் தோன்றினவென்பதையுமறிக. "மறையே வேதமும் மறைத்து மொழிகிளவியும்" எனச்சூத்திர மேற்பட்டதும் மறையென்ற பதம் வேதமுண்டான காலமே உண்டாயிற்றென்பதைக்காட்டும். தமிழ்மாது ஆரியத்திலிருக்கும் வேதம் தனக்கு மறைவாயிருந்ததனால் மறையென்ற சொல்லால் அதைக் கூறினாள்போலும். ஆனால் நம் நண்பர் ஓர் தந்திரம் கற்றுக்கொண்டார். அஃதாவது அவர்கொள்கைக்கு உடன்பாடில்லாது முரணாகக்காணப்படும் பண்டைய நூல்களின் வாக்கியங்களையெல்லாம் புதுவதாகப் புகுத்தியவையென்று சொல்வதே. ஆதிமுதல் இதுகாறுந்தோன்றிய தெய்வவருள் பெற்ற பெரும்க்கள்களில் ஒருவருங் காணாததொன்றை இவர் தமது நவீனக்கற்பனைக்கு ஆதா

வாகக்கூறுவதானால் அதை ஆன்றோர் கொள்ளார். இக்காரணங்களான் "மறையோர்தே எத்துமன்ற லெட்டனுள்" என்ற சூத்திரப்பகுதியில் மறையென்றது ஆரியவேதத்தையே குறித்து நின்றது. நம் சோமசுந்தரக்கடவுளும் "அந்தணரு மறைமன்ற லெட்டினுள்" என்று தாமியற்றிய அகப்பொருளி லும் கூறினர். பிற்காலத்திய அகப்பொருள் விளக்க ஆசிரியரும் "ஒருநான்கு வேதத்திருநான்குமன்றலுள்" எனவுங் கூறினர். மறையென்ற சொல்லின் ஆராய்ச்சியை இத்தோடு நிறுத்தி இனி, மேலாராய்வாம்.

௩உ. இனி நண்பர் கூறுவதாவது. "தமிழ்மறை நான்" "கும் தென்றமிழ் நாட்டைக்கடல்கொள்வதற்கு முற்காலத்தே "நிலவினவென்பது கடல்கோட்குப்பின் முதன்முதலுண்டாய "தொல்காப்பியநூலின் பாயிரத்தே அவை விதந்தோதப் "பட்டமை விளங்கும். கடல்கோட்குச்சற்று முன்னே "பின்னே ஆரியரது கலப்பு இந்நாட்டில் வந்துவிட்டது" என்று எழுதியிருக்கின்றார். கடல்கோட்கு முன்னர் தமிழ் நான்மறை நிலவியதென்றும் கடல்கோட்குப்பின்னர் முதல் முதலுண்டாயது தொல்காப்பிய நூலென்றும் நண்பர் சொன்னார். தொல்காப்பியத்துக்கு முந்தி நான்மறையென்று ஒரு தமிழ்நூல் இருந்திருக்குமானால் அதன் பெயர் விவரம் தொல்காப்பியத்துள் வாராதிருக்க நியாயமில்லையென்பதற்குள்ள பல காரணங்களைக்காட்டி இவ்வாராய்ச்சி எ௩ முதல் எசு பக்கங்கள் வரை விரிவாயெழுதினோம். தொல்காப்பியத்துள் அக்காலம் வணங்கப்பெற்ற கடவுளர் பெயர்கள் கொடிநிலை கந்தழி, வள்ளியென்ற பெயர்களால் அழைக்கப்பட்டிருக்கின்றன. சிவபிரான் கல்லால நீழலில் தமிழ் முனிவர் நால்வர்க்கருளிய தன் காரணமாக அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கு பகுதியைச் சுட்டித் தமிழரது ஒழுக்கத்துக்குத் தமிழில் நான்மறையென்ற ஒரு நூல் தோன்றியிருக்குமானால், அறம் பொருள் இன்பப் பகுதியை விரித்துக்கூறிய தொல்காப்பியனார் அவர் இயற்றிய விரிவான தமிழ்மக்களுக்குரிய நூலில் அத்தமிழ் நான்மறையென்ற பெயரும் சிவபிரானது பெயரும் இடம்பெறுமற்போகுமா? முதனூல் வழிநூல் இன்னதென்றும் பலவகைச் செய்யுளிலக்கணம் இன்னதென்றும் தொல்காப்பியம் கூறுகின்றதே. தமிழர்களது நான்மறைகளையும் அவைகளில் விளங்கிய தமிழ்ச்செய்யுட்போக்கையும் தொல்காப்பியனார் கூறாது விடுவரோ. தமிழ் நான்மறை கற்றவரென்று நண்பரால் சொல்லப்படும் அதங்கோட்டாசிரியர் தாம் கற்றிருந்த தமிழ் நான்மறை விவரங்கள், தான்கேட்டு அங்கிகாரஞ்செய்த

நூலிற் காணப்படாதிருக்கவும், அதை அங்கிகரிப்பரோ? ஆதலால் தமிழ் நான்மறை ஒன்றிருந்ததென்பது தன்கருத்து முற்றுவித்தற்பொருட்டுக் கல்லாமாந்தரை மயக்கித்தன்வசப் படுத்தற்குக் கூறியவெற்றுரை யென்பது ஒருதலை. கடல் கோட்குமுன் என்ற காலவெல்லையை நமது சரித்திரவாயிலாக ஆராய்வாம். தலை, இடை, கடையென முச்சங்கங்கள் நிலைபெற்று நின்றனவென்பதும் தலை, இடை இரண்டு சங்கங்களும் அவை நிலாவிய மதுரை, கபாடபுரம் என்னும் நகரங்களும் இருமுறையுண்டான கடல்கோள்களில் மறைந்து போயினவென்பதும் நமது பண்டைய நூல்களிற் கூறப் பட்டிருக்கின்றன. தற்காலச் சரித்திர ஆராய்ச்சி வல்லுநர் கடைச்சங்க மிறுதிக்காலத்தை ஒரே நிலையாகக் குறிப் பிட்டுக் கூறவில்லை. திருவள்ளுவர் குறள் அரங்கேற்றிய காலம் கடைச்சங்க மிறுதிக்காலமாயிருக்கலாமென்பது பல் லோர் கருத்து. அவ்வாறுனல் சுமார் இரண்டாயிரம் ஆண்டு கட்கு முன்னர் கடைச்சங்கங் குலைந்திருக்கவேண்டும். எம் நண்பர் திருவாளர் சீனிவாசப் பிள்ளையவர்கள் பல ஆராய்ச்சி கொண்டு கடைச்சங்கம் இறுதிபெற்றது, கி. பி. மூன்றும் நூற் ருண்டென்கிருர்கள். இவ்வாராய்ச்சிக்கு அக்கணக்கு எல்லை யையே வைத்துக்கொள்வோம். அப்போது கடைச்சங்கம் இறுதியடைந்து ௲௬௱ ஆண்டுகள் ஆகின்றன. கடைச்சங்கம் நிகழ்ப்பெற்றகாலம் நமது நூல்களின் ஆதாரவுப்படி ௧அ௫0 வருடங்கள், இடைச்சங்கம் நடைபெற்றகாலம் ௩எ00 ஆண்டு கள். இவ்வகையில் ௧௬00 + ௧அ௫0 + ௩எ00 = எ௧௫0 வருடங் கட்கு முன்னர் தலைச்சங்க மிருந்ததாகத் துலங்குகிறது. ஒவ் வொரு சங்கமும் மறைந்து அடுத்த சங்கந்தோன்றிய காலத் துக்கு இடையே எத்தனை ஆண்டுகள் நின்றனவோ அது விவரம் தெரியாது. தொல்காப்பியம் முதலிய நூல்களை ஆராய்ந்து முதல்தடவையாக அச்சிட்டு வெளிப்படுத்திய ஸ்ரீமான் தாமோ தரம் பிள்ளையவர்கள் தொல்காப்பியம் இயற்றப்பட்டு ௧௨,000 ஆண்டுகள் ஆயின என்கிருர். அவ்வளவுதூரம் போகவேண் டாம். ஏற்பட்ட கணக்கின்படி எ௧௫0 வருடங்களுக்கு முன் னர் தொல்காப்பியம் இயற்றப்பட்டிருப்பதாகத் தெரிகின்றது. ஆரியர்கள் மத்திய ஏஷியாவிலிருந்து முதல் முதல் பஞ்சாப் தேசத்திற் குடிபுகுந்தது இன்றைக்கு. ௩௫00 ஆண்டுகட்கு முன்னர் என்று மேனுட்டுச்சரித்திர ஆராய்ச்சியார் கூறுகின் ருர்கள். பிறகுதான் நான்கு வேதங்களுமியற்றப் பெற்றன வாம். இவ்வாறுகில், நமது நூல்களின்படி ஏற்பட்ட குறைந்த எண்ணிக்கைப்படி எ௧௫0 ஆண்டுகட்குமுன் இயற்றப்பெற்ற தொல்காப்பியத்தில், ஆரிய அந்தணர்களைப்பற்றியும் அவர்கள்

ஒழுக்கங்களைப்பற்றியும், அவர்கள் வேதநூல், மதக்கொள்கைகள், ஆரிய எழுத்தின் பிறப்பு முதலிய, ஆரியமொழிகள் தமிழ்ச் செய்யுளில் வருவதற்கு இலக்கணம், இவைகளெல்லாம் தொல்காப்பிய நூலில் எவ்வாறு எழுதப்பட்டன. ஆனால் மேனாட்டுச் சரித்திர ஆராய்ச்சியைப் பின்பற்றிய நம்மவருட் சிலர் தொல்காப்பியர் தோன்றியே இரண்டாயிரம் ஆண்டுகள் ஆனதாகச் சொல்லுவார்கள். இவர்கள் கூற்றுக்குப் பிரமாணம் அவர்கள் வாய்மொழியே.

ஆதலால் சிவதருமோத்தரம், கூர்ம புராணங் கூறியவாறு, ஆரியர்களாகிய அந்தணர்களும் நம் நாட்டில் நம் முன்னோர்களுண்டாயபோதே உண்டானவர்களாவார்கள். நமது சிவபிரானே 'ஆரியன் கண்டாய், தமிழன் கண்டாய்' என இருவகையோர்க்கும் முதற் றந்தையாயிருக்கின்றார். ஆரியத்துக்கும் தமிழுக்கும் அவரே முதற் குருவாகி நிற்கின்றார். நிற்க மேலாராய்வாம்.—

௩௩. இனி நம் நண்பர் எழுதுவதாவது. "அந்தணர், "பார்ப்பார் என்ற சொற்கள் தமிழருட் சிறந்த சிலவகை "யாரையே, ஆதியிற் குறித்தனவென்பதைப் பின்னர்க் காட்டு "தும்" எனப் பீடிகை எழுதிக்கொண்டு புறநானூற்றிற் சில பிரமாணங்கள் அதற்கு இருப்பனபோல அந்நூலிற் சில செய்யுட்களை யெழுதி விவகரிக்கின்றார். இச்சொற்கள் ஆதியில் தமிழரிற் சிலரைக் குறித்ததாயிருந்தால், வான்முறையாகவே வந்து இக்காலமும் அவ்வாறே நிகழவேண்டியதல்லவா? அவ்வாறு இல்லை. எக்காலம் எக்காரணத்தால் அம்முறைதவறிற்று. இவைகளைப்பற்றி நம்நண்பர் யாதுஞ் சொல்லவில்லை. புறநானூற்றில் என்ன காட்டுகிறாரென்பதைப் பார்ப்பாம். முதலாவது "புறநானூற்றின் ௬-வது செய்யுளிற், "சிறந்த நான்மறை முதல்வர் ஏந்து கையெதிரே வாடுக" என்று காணப்படுவதில் நான்மறை யென்றது தமிழ்வேதங்களை யென்றார். அவ்வாறு அவர் பொருள் கொண்டதற்குக் காரணம் அப்பாட்டுடைத்தலைவனை பல்யாகசாலை முதுகுடுமி யென்னுமரசன், வியாசர் நான்கு வேதங்களை வகுத்தகாலத்திற்கு நெடுநாள் முன் வாழ்ந்தவனையாமென்றார். வியாசர் காலமின்னதெனவும் முதுகுடுமி அரையன் காலமின்னதெனவும் எண் அளவால் இவர் காட்டினாரில்லை. முதுகுடுமி காலம் வியாசர்க்குமுன் என எவ்வாறு கண்டுபிடித்தார். நமது கணக்குப்படி வியாசர் காலம் ௫௦௦௦ வருடங்கட்கு முன்னர். இதை இவர் ஒப்புகின்றாரா? இது எவ்வாறாயினுமாகுக. வியாசர் காலத்துக்கு முந்தியே நான்மறைகள் வட-

மொழியிலிருந்தனவென்று நச்சினார்க்கினியர் உரையினிடத்துக் கூறியிருப்பதை நம்மவர் காட்டாது எழுதியிருப்பதை விளக்கிக்காட்டி முன்னமேயே எ௫, எகூ-வது பக்கங்களில் எழுதியிருக்கின்றோம். நான்கு வேதங்கள் வியாசர் காலத்துக்கு முந்தியே விரிவாயிருந்து மறைந்து போனவைகளை வியாசர் சிவனருளால் நான்கு கூறாகத் தொகுத்தாரே யொழிய நான்கு வேதங்களை அவரியற்றவில்லை. இச் செய்யுளில், நான்மறை முதல்வர் என்று காணுஞ் சொற்றொடர்க்கு, நான்மறையைக் கற்ற முதல்வர், அல்லது நான்மறையையுடைய முதல்வர் எனப்பொருள்கோடலே அமையும். இந்த நான்மறை தமிழ் வேதமென்று நம்மவர் கூறுகின்றார். நம்மவர் கூற்றுப்படி தமிழ் நான்மறை தலைச்சங்க மிறுதிக் காலத்தே கடல்கோளில் மறைந்துவிட்டது. அற்றேல், இச் செய்யுள் பாடிய புலவரும், பாடப்பட்ட பாண்டியனும் முதலூழியின் கடல்கோளுக்கு முன்னரே இருந்திருக்கவேண்டும். கடல்கோளுக்கு முன்னர் பாடின இச்செய்யுள்மட்டும் தமிழ் வேதங்களுடன் கடல்கோளில் மறைந்துவிடாமல் இருந்து இடைச்சங்க காலம் ௩எ00 ஆண்டுகளும் நிலைபெற்று விளங்கி இரண்டா மூழியிலும் மறைந்துவிடாமல் உயிரோடிருந்து கடைச்சங்கப் புலவர்களால் புறநானூற்றில், சேர்க்கப்பட்டதென்பது பெரு விந்தையேயாம். அல்லது இப்புலவரும் இப்பாண்டியனும் கடைச்சங்க காலத்தவர்கள், இச்செய்யுளும் அக்காலத்ததே என்று சொல்வோமானால் தலைச்சங்கத்திறுதியில் அழிந்துபோன தமிழ் வேதங்களைக் கற்றவர் எவ்வாறு இப்பாண்டியன் காலத்திருந்து உபசரிக்கப்பட்டார்கள். இவையெல்லாம் பெருங்குழப்பமேயாம். மற்றும், புற. நா. கரு-வது செய்யுளில் இந்தப் பாண்டியனையே மற்றோர் புலவர் "புரையினற்பனுவ னால்வேதத் தருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை நெய்மலி யாவுதி பொங்கப் பன்மாண் வீயாச் சிறப்பின் வேள்வி முற்றியூப நட்டவியன்களம் பலகொல் யாபல கொல்லோ" வெனப் பாடியிருக்கின்றார். இதனால், யூபஸ்தம்பங்களை நட்டு நான்கு வேதமுறைப்படிப் பல யாகங்களைச் செய்து முடித்ததனால் பல யாகசாலைகளை உடையவன் எனப் புகழப்பட்டிருக்கிறான். யூபஸ்தம்பம் நட்டது எதுக்கு? யாகப்பசுக்களைக் கட்டுவதற்கன்றோ? இச்செய்யுளை ஏன் நம்மவர் எடுத்துக்காட்டாது விடுத்தனர்? இச்செய்யுளிற் கூறியிருக்கும் "நற்பனுவல் நால்வேதம்" என்றதும் அவரது தமிழ்மறைதானோ? இவரது தமிழ்மறையிலும் யூபஸ்தம்பங்கள் நட்டு யாகப்பசுக்களைக்கட்டி யாகஞ் செய்யவேண்டிய முறை கூறியிருந்ததென்று சொல்வது வடமொழி வேதங்

களிற் கூறப்பட்டிருக்கும் யாகங்களை நிந்திக்கும், நம்மவருக்கும் உடன்பாடோ? இச்செய்யுள் இவர் கோளுக்குப்பொருந்தில; அதனாற்றான் இச்செய்யுளைக் காட்டாதுவிடுத்தனர். இந்தப் பாண்டியனையே கூ-வது செய்யுட்கூறிய புலவர் அவனது பெருமையைச் சொல்லுமிடத்து "பெருமநின்சென்னி, சிறந்த நான்மறை முதல்வர், ஏந்துகையெதிரேவாடுக" "பெருமநினது முடி, மிக்க நான்கு வேதத்தினையுடைய அந்தணர் நின்னை நீடுவாழ்கவென்றெடுத்தகையின் முன்னே வணங்குக" எனக் கூறினாரென்றால், இந்த வேதமட்டும் இறந்துபோன தமிழ்வேதமும், இந்த வேதத்தையுடையவர் தமிழ் அந்தணரும் ஆவரோ? "பார்ப்பார்க் கல்லது • பணிபறியலையே" எனப் பதிற்றுப் பத்தும் கூறும். முதுகுடுமியென்ற பாண்டியன் பலயாகசாலை என்ற அடைமொழியுடன் பெயரெய்தி விளங்கினமையானும், அவ்யாகஞ் செய்விப்போர் அந்தணரே யாவரானமையானும் அவ்வந்தணர்கள் கூறும் ஆசிச்சொற்களுடன் அவர்கள் எடுத்தகைமுன் அவன் முடிவணங்கும் என கூ-வது செய்யுளியற்றிய புலவர் கூறினாரென்றறியவேண்டும். இவ்வரசன் முக்கட்செல்வர் வழிபாடுடையானென்று நம்மவர் சூசிப்பித்தார். முக்கட்செல்வர் வழிபாடு கொண்டவரானால் ஆரியவேத வாயிலாக இவன் யாகஞ்செய்ய இசையானென்பது இவர் கருத்துப்போலும். மேற்காட்டிய கஎ-வது செய்யுளில் இப்பாண்டியன் வேதமுறைப்படி யூபஸ்தம்பங்களை நட்டுப் பலயாகங்கள் செய்தவனென்று விளங்குவதை இவர் படிக்கவேண்டும். "மேதபதிம்"; "ஆவோராஜா நமத்வாஸ்யருத்ராம்..........அவஸேக்ருணுத்வம்" என்னும் இருக்கு வேத வாக்கியங்களில், யாகத்துக்குத்தலைவர் சிவபெருமானே என்று கூறியிருப்பதையும் இவ்வாக்கியங்களுக்கு மாறாகச் சிவபிரானை வரிக்காது யாகஞ்செய்யப்புகுந்த தக்கன் பட்டபாட்டையும் இவ்வரசன் நன்குணர்ந்து தான்கொண்ட சிவபக்திக்கிணங்க யாகங்கள் பலவற்றை மழைவளஞ் சுரந்து நாடு செழித்துக்குடிகள் இன்புறற்கும் தெய்வங்கட்குச் சிறப்பொடு பூசனை செவ்விற் செல்லுதற்பொருட்டும் இன்னோரன்ன பிற பயன்களைக்குறித்துஞ் செய்தவன் ஆவான். நந்தமிழ் நாட்டில் யாகஞ்செய்தோர், முதுகுடுமிக்கு முற்பட்ட பல அரையர்களுமுண்டு. திருவிளையாடற் புராணத்தில், உலகமாதாவைத் தனக்குப் புத்திரியாகப்பெற்ற மகாசிவபக்தனாகிய மலையத்துவஜ பாண்டியன். கூகூ அசுவமேத யாகஞ்செய்தவனெனப் "புண்ணியம் நிரம்புபரிவேள்வி புரிகுற்றான்." "ஈறின்மறை கூறுமுறை யெண்ணுமொரு தொண்ணூற்றுறிறொடு மூன்று மகமாற்ற" எனக்கூறியிருப்பதாலும் அறியலாம். பெரிய

புராணத்தில், மனுநீதிகண்ட சோழர் அசுவமேத முதலிய பற்பல யாகங்களைச் செய்தவர் என்றும் சேக்கிழார் மூர்த்திகள் கூறியுள்ளார். இக்காரணங்களால் புறநானூறு கூ-வது செய்யுளிற்கண்ட நான்மறையைத் தமிழ் நான்மறை யென்று நம்மவர் கொண்ட பொருள் உண்மைப்பொருளல்லவென்பது விளங்கும். இனி அவரது இரண்டாவது பிரமாணமாவது "புறநானூற்றுக் கடவுள் வாழ்த்துச்செய்யுளுட்போந்த மறையென்பது மந்திரமென்னும் பொருட்டு" என்று சுருக்கமாய்க்கூறினார். அவ்வாழ்த்துச் செய்யுளில் "மறைநவிலந்தணர் நுவலவும்படுமே" என்ற சொற்றொடர் காணப்படுகின்றது. இதில் மறை என்றதற்கு, மந்திரம் எனவோர் பொதுவான பொருளை அமைப்பதானால், சிவமந்திரம், தேவிமந்திரம், விண்டுமந்திரம், மற்றைய கடவுளர் மந்திரம் பலவுளவானதால், இவைகளில் எம்மந்திரத்தை மறையென்ற சொல் குறித்ததெனஅறியப்படாமையின் இச்செய்யுட்கூறிய புலவர்மேல், மயங்கக்கூறல் என்னுங் குற்றமேற்படும். அன்றியும் இம்மந்திரங்களெல்லாம் ஆரியத்திலேயே நின்று நிலாவுகின்றன. தமிழில் மந்திர நூலுங்கிடையாது. தமிழ் எழுத்துக்கள் மந்திரங்களைச்சொல்லும் ஆரியவெழுத்துக்களது மாத்திரை பெற்றுமில. ஆனதால் அம்மந்திரங்களைப் பயின்ற அந்தணர் ஆரியரேயாவர். அற்றன்று, "நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த மறைமொழிதானே மந்திரமென்ப" என்ற தொல்காப்பியச்சூத்திரப்படிக்குள்ள மந்திர மென்பாரேல் அச்சூத்திரம் மறைத்த பொருளடங்கிய மந்திரச்செய்யுள் இன்னதெனக் கூறிற்றேயொழிய மந்திரம் இன்னதெனக் கூறிற்றில. அந்தத்தமிழ் மந்திரச் செய்யுட்களைக் கற்ற அந்தணர் எனப்பொருள் கொள்ளப்படாதோவெனின், கொள்ளப்படாது. ஏனெனில் கடைச்சங்கப் புலவருக்குத் தொல்காப்பியமே இலக்கணம். தொல்காப்பிய விதிக்குச் சற்றும் மாறுபடாதவர்கள். தொல்காப்பியத்தில், நான்கு வருணமும் வகுத்துக் கூறி அவர்களது ஒழுக்கங்களையுங் கூறி அவர்களில் முதலாயவரை அந்தணர் என்ற மொழியாற் கூறி அவர்களுக்கே வேதம் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தலாதிய தொழில் உரிமை யென்றும், கூறுவதால் இக்கடவுள் வாழ்த்துச் செய்யுளிற் கூறப்பட்ட அந்தணர் அவரேயாவர். ஆனதால் மறைநவிலந்தணர் என்றது உரையாசிரியர் எழுதியபடி, வேதத்தைப் பயிலும் அந்தணர், என்றே பொருள்படும்.

புறநானூற்றின் இவரது மூன்றாவது பிரமாணமாவது அந்நூலின் உ-வது செய்யுளில் "நாஅல் வேதநெறி" "அந்தியந்தணருங் கடனிறுக்கும் முத்தீவிளக்கிற்றுஞ்சும் பொற்

கோட்டிமயமும் பொதியமும்” என்னும் இரண்டு வாக்கியங்
களை ஆதாரவாகக்கொண்டு, “நால்வேத நெறி யென்பது அறம்
“பொருளின்பம் வீடென்னும் நான்கையும் அடையும் நெறி
“யைக்குறித்தலால் பண்டைத்தமிழ்மறை நெறியினையே அது
“சுட்டியதாகக் கருதல் வேண்டும். அதனுட் போந்த முத்தீ
“யென்பது மலை யகத்துள்ள முனிவர் வளர்த்த தெனத்
“தெரிதலால் அது அருந்தவத் தோர் வழிபாட்டு முறையின்
“பாலதாம். ஆதலின் அதனை ஆரியப் பிராமணரது முத்தீ
“யெனக் கொள்வதற்கு இடமில்லை என்று விளக்கினார். இவர்
கூறும் பண்டைத்தமிழ் மறை மறைந்து போயிற்று என்று
இவரே கூறினார். அவ்வாறு ஒரு நூல் தமிழில் இருந்ததெனக்
கோடலே ஆதாரமற்றதாக விருக்கின்றது. அந்நூலின் நெறி
யினை நம்மவர் எவ்வாறு கண்டார்—“ஆரியமாய் அறம்பொரு
ளோடின்ப வீடெல்லா மறைந்துயிர்கட் கறிவு செயலளிப்பது
நூல்” அதாவது வடமொழியாய் அறம் பொரு ளின்பம்
வீடென்னும் நான்கு காரியமுஞ் சொல்லி யான்மாக்கட்கு
யறிவையுஞ் செயலையுங் கொடுப்பது வேதாகமங்கள் என
அருணந்தி சிவனார் அருளியவாறு இச்செய்யுளில் நால்வேத
நெறி யென்பது ஆரியவேத நெறியையே குறிக்கும். “செந்தமிழி
லின்பமிறுவாயலது செப்பார், அந்தமிலி ஆதியுமிலா னுரையை
யாய்ந்தார்” எனச் சிவதருமோத்தரஞ் செப்புதலினால் வீட்டு
நெறியை மேலோர் முன்னாளிற் றமிழாற் கூறுரென்பதும் பெறப்
படும்—அன்றியும் பாரத காலத்ததெனச் சொல்லப்படு மிச்
செய்யுளில், அக்காலத்திற்குப் பல்லாயிர மாண்டுகட்கு முன்
னரே தலைச்சங்கங் கடல்கொண்டபோதே மறைந்தொழிந்து
போனதாகச் சொல்லப்படும் தமிழ் கற்பனை நான்மறையின்
நெறியைக் கூறியிருப்பதாகக் கொள்வது, அசம்பாவிதமாம்.
அன்றியும் “நாஅல்வேதநெறி திரியினும்” என்ற சொற்றொட
ரமைப்பையும் அதன் பொருளையுமுய்த்து நோக்குங்கால் இந்
நால்வேதம், அச்சொற்றொடரியற்றிய ஆசிரியர் காலத்தே நடை
பெற்றுக்கொண்டிருந்தவை யெனவே விளங்கும். எனவே
மூவா நான்மறை யென்றபடி முக்காலத்திலும் தோன்றி
நின்றுளது ஆரிய வேதமேயாம். முத்தீ யென்பது அருந்தவத்
தோர் வழிபாட்டு முத்தீ யென்றார். அருந்தவத்தோர் இன்னா
ரென்று இவர் குறித்திலர். ஆனாலவர் ஆரிய பிராமணரல்ல
ரென்றார். அதனால் அவர்கள் தமிழ் முனிவரென்பது இவர்
கருத்தெனத் தெரிகின்றது. முத்தீ நியமமாக வளர்க்குந் தமி
ழர்களை இக்காலம் எங்காவது காணலாமா? முற்காலம் அவ்
வழக்கம் இருந்திருந்தால் அவ்வழக்கம் பின்பற்றியே நாளிது
வரை வந்திருக்கலாமே. ஆரியக் கலப்பில்லாத தமிழ் நூல்

கள் எதிலாவது முத்தீ வளர்த்தலின் மரபும், முறைமையும், அதனால் பெறும்பயனும் குறிக்கப்பட்டிருக்கின்றனவா? இவ்வாறு முத்தீ வளர்த்தலை "ஒன்று புரிந்தடக்கிய இருபிறப்பாளர் முத்தீப்புரைய", "மூன்று வகைக் குறித்த முத்தீச் செல்வத் திருபிறப்பாளர்" "ஒன்று புரிகொள்கை யிருபிறப்பாளர் முத்தீச்செல்வத்து," என மற்றும் புறநானூற்றிலும், திருமுருகாற்றுப்படையினும், சிலப்பதிகாரத்தினும் கூறப்பட்டிருப்பதனால் முத்தீ வளர்ப்பது இருபிறப்பாளராகிய நால்வேத நெறியினர்க்கே உரித்து என்பதுவே தெளிவு. நமது திவாகரம் முதலிய நிகண்டுகளினும் பார்ப்பாருக்குத் தீவளர்ப்போர் என ஓர் பரியாய நாமமுங் கூறப்பட்டிருக்கின்றது. அருந் தவத்தோர்க்கு அப் பெயர் இருப்பதாகக் கூறவில்லை. அந்தணர் என்ற சொல், காரண இடுகுறிப் பெயராய் இருபிறப்பினராகிய பார்ப்பனமக்களையே குறிக்கும். மேற்காட்டிய அந்தி அந்தணாருங்கடனிறுக்கும் முத்தீ என்றதில் அந்தணர் என்ற சொல் இருபிறப்பாராகிய பார்ப்பன மக்களையே குறிக்கும். ஆனதால் 2-வது செய்யுள் நம்மவர் கற்பனைக்கு உபகரித்தது ஒன்றுமில்லை. புறநானூறு ௧௬௬-வது செய்யுளின் ஓர் பகுதிக்கு இவர் கூறும் வியாக்கியானம் நமது செந்தமிழ்க் கல்வியாளர்களெல்லோரும் அவசியம் குறிக்கத்தக்கதானதால் அப்பகுதியையும் அதற்கு இவர் கூறும் உரையையும் மற்றும் நமது ஆராய்ச்சியையும் அடியில் எழுதுவாம்.

"நன்றாய்ந்த நீணிமிர்சடை முதுமுதல்வன் வாய்போகாது
ஒன்று புரிந்த வீரிரண்டின் ஆறுணர்ந்த ஒருமுதுநூல்
இகல்கண்டோர் மிகல்சாய்மார் மெய்யன்ன பொய்யுணர்ந்து
பொய்யோராது மெய்கொளீஇ மூவேழ் துறையுமுட்டின்று [போகிய
உரைசால் சிறப்பின் உரவோர் மருக."

இப்பகுதிக்குப்

**பண்டைய உரை ஆசிரியரது உரை.**

பெரிதும் ஆராயப்பட்ட மிக்க நீண்ட சடையினையுடைய முதிய இறைவனது வாக்கை விட்டு நீங்காது அறமொன்றையே மேவிய நான்கு கூற்றையுடைத்தாய் ஆறங்கத்தாலும் உணரப்பட்ட ஒரு பழய நூலாகிய வேதத்திற்கு மாறுபட்ட நூல்களைக் கண்டோராகிய புத்தர் முதலாயின புறச்சமயத் தோரது மிகுதி சாய்க்கவேண்டி அவரது

**கா. சுப்பிரமணிய பிள்ளை உரை.**

மேற்காட்டியசெய்யுளின் பாகத்தில், நன்றாய்ந்த என்பது முதல் முதுநூல் என்றசொல்வரையுள்ள பாகத்திற்கு மட்டும் இவர் உரையெழுதி அவ் வுரையைக்கொண்டு மேல் விவகரிக்கின்றார்.

அவ்வுரையாவது:—

சிவ பெருமான் வாய் மொழியாற் கூறாமல் குறிப்பொன்றினாலுணர்த்த அதனை விளக்க எழுந்த

மெய்போன்ற பொய்ம்மையை
உளப்பட்டறிந்து அப் பொய்
மையை மெய்யென்று கருதாமல்
உண்மைப் பொருள்களை அவர்க
ளுக்கு ஏற்பச்சொல்லி இருபத்
தொரு வேள்வித் துறைகளையுங்
குறை யின்றாகச் செய்து முடித்த
புகழமைந்த தலைமையையுடைய
அறிவுடையோர் மரபிலுள்ளானே
என்பது.

நான்கு நூல்களின் முறை தெரிந்
துணர்த்தும் ஒரு முது நூல் என்று
வடமொழி இருக்குவேதம் குறிக்கப்
படுவதை நோக்குமிடத்து என்றார்.

குறிப்பு ஒன்றினு லுணர்த்த
அதனை விளக்க எழுந்த என்னும்
பொருளை மேற் செய்யுளின் எம்
மொழிகள் பயக்கின்றன. குறிப்
பொன்றினு லுணர்த்தப்பட்டவர்
யாவர்? அவரை இச்செய்யுள் கூற
வில்லையே.

நான்கு நூல்கள் எவ்வாறு எழுந்தன? அவை சுயமாயெழுந்த
னவா? அல்லது ஓர் கர்த்தாவினுலா? இவ்விபரங்களை யெவ்
வாறு அறிவது? இச்செய்யுளுக்கு இவர் கூறிய உரையை ஆத
ரவு செய்ய இவ்விபரங்களை உணர்த்த, ஓர்சரித்திரம் தமிழ்
நூலிலோமற்று எந்நூலில்தானும் உண்டோ? இவை முதலிய
ஆசங்கைகளை யெவ்வாறு தீர்த்துக்கொள்வது? இதற்கு வழி
ஒன்றுங்காணேம். ஆனதால் இவர் கூறிய உரை நன்றாகாது.
இறைவனது வாக்கைவிட்டு நீங்காது என்னும் பொருளைக்
கொடுக்கும் "முதுமுதல் வன்வாய் போகாது" என்னுஞ் சொற்
றொடர் இச்செய்யுளிற் காணப்படுவதுபோல நமது பண்டைய
நூல்களில் ஏராளமாய்க் காணலாம். "மாமுது முதல் வன்வாய்
மையின் வழாஅ நான் மறைமரபின்" என்று சிலப்பதி
காரத்திற் காணலாம். அதற்கு அடியார்க்கு நல்லார் எழுதிய
உரையாவது. பிரமனது வாயிற்றப்பாத நாலாகிய வேதங்கள்
என்பதே. மறைகொணுவா, மறையணி நாவினுன், ஓதிவாயதும்
மறைகளே. சந்தோக சாம மோதும் வாயானை. பேசுவது
ந்திருவாயான் மறைபோலும், வேதமொழியர், ஆரணம் பொழி
யும் பவளவாய்மணியே, என்பனவாதிய தமிழ்மறைப்பகு
திகளும், வேதம் சிவபிரான் வாயினிடமுள்ள தென்பதைக்
காட்டும்.

நம் நண்பர் அவர் எழுதிய மேற்காட்டிய உரைப் பகுதி
யைத் தொடர்ந்து பின்னும் அவர் எழுதியிருப்பதாவது
"இருக்குவேதம் குறிக்கப்படுவதை நோக்குமிடத்து வடநாட்
"டினின்றும் புகுந்த ஆரிய பிராமணர்தமது வேள்வி நூலைச்
"சிவ வாக்கென்று தமிழர்க்கு உரைத்துத் தமிழ் நாட்டிலே
"மறைந்தொழிந்த நான்மறையின் முறையைத்தமது நூல்
"விளக்குவதாயுங் காட்டியுரைத்தனர் என்பது யூகித்தற்
"பாலது." மற்றும் ஓரிடத்தில் அவர் எழுதியிருப்பதாவது
""ஆரிய ஆசிரியராகிய பிராமணர் தென்னுட்டிற் புகுந்து தமிழ்
"அரசர்களிடம் வேள்வி செய்வதனுற் பெரும்பயன் விளையு

"மென்றுவற்புறுத்தி அவரால் பலவேள்வியியற்றுவித்தாரென் "பது," பல்யாகசாலைமுதுகுடுமி" யென்னுஞ் சொற்றொடரின் "பொருளால் யூகித்தற்குரியது" என்றுமெழுதியிருக்கின்றார். நம் நண்பருக்குப் பிரமாணமாவதெல்லாம் அவரது யூகமே யொழிய வேறு, காட்சி, அனுமானம், உரை ஆகிய பிரமாணங் கள் கிடைக்கா. இவர் யூகத்தான் மேலேயெழுதியிருப்பவை களைக்கூர்ந்து உய்த்து நோக்குங்கால் பற்பல யூகங்கள் மேலும் மேலுந் தோன்றுகின்றன. நம் நாட்டை அரசாண்ட வெற்றி யும் தெய்வத்தன்மையும் பொருந்திய பூர்வீக சேர சோழ பாண்டிய மன்னர்களும் மிக்க நாகரீகமும் புகழும் ஒப்பற்ற செந்தமிழ்க்கல்வியின் தேர்ச்சியும் படைத்த நம் முன்னோர் களும் உண்மையறியாதவர்களாகி உண்மையல்லாத காரியங் களைப் பற்றினார்களென்பதொன்று. அப்படிக்கல்லாவிடின், நம் நாட்டிற் புகுந்த ஆரியர்கள் சதுரங்க சேனையுடன் புகுந்து நமது வீரபராக்கிரமம் பொருந்திய மன்னர்களையும் நம் முடைய முன்னோர்களையும் தண்டபேதத்தால் வயப்படுத் திக் கொண்டார்களென்பது ஒன்று. நம் நாட்டு பண் டைக் கல்வியாளர் இக்காலத்தவர் போலிராது உண்மை யறியாமல் மயக்கமுற்று வேள்வி யாகங்களைப் புகழ்ந்து செய் யுட்கள் அமைத்தார்களென்பதொன்று. அவ்வாறு ஆக்கப் பட்ட செய்யுட்களைப் பொய்யடிமையில்லாத புலவர்க்குமடி யேன் என்று நமது சைவ சமயாசாரியரால் தோத்திரிக்கப் பட்ட தெய்வீகம்பொருந்திய சங்கப்புலவர்களும் ஏற்றுத் தொகுத்து வைத்துக்கொண்டமையான், அவர்களும் உண்மை யறியாது போயினார்களென்பதொன்று. "பொய்யடிமையில் லாத புலவர்க்குமடியேன்" எனச்சங்கப்புலவரைத் தோத் திரித்து அவர்களுக்கு அடிமை பூண்ட ஸ்ரீமத் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பேரிலும், "அற்றன்றி மதுரைத் தொகையாக்கின னும்" எனச்சங்கப்புலவரையும் அச்சங்கம் ஆக்கிய இறை வனையும் புகழ்ந்துகூறிய முத்தமிழ் விரகர்பேரிலும், "உயர் மதிட்கூடலினாய்ந்த வொண்டீந்தமிழ்" என்று சங்கப்புலவர் களது தமிழ் ஆராயச்சியைப் புகழ்ந்து கூறிய நம் மாணிக்க வாசகப்பெருமான் பேரிலுங்குறை கூறியதாகும்:—இம் மட்டோ,

"பொன்னின் பீடிகை யென்னும் பொன்னாமேற்
றுன்னு நாவலர் சூழ்மணியாகவே
மன்னினார் நடுநாயக மாமணி
என்ன வீற்றிருந்தார் மதுரேசரே"

என்னுந் திருவிளையாடற் புராணச் செய்யுட்படி, சங்கப்புலவர் களுக்கு அத்தியட்சராய் எழுந்தருளி வீற்றிருந்து அச்சங்

கத்தை நடாத்திய ஸ்ரீமீனாட்சி சுந்தரேசரிடத்தும் அறியாமைக்குற்றம் ஏற்றப்புகுந்ததுவுமாம். ஐயோ! நங்கடவுள், நம் நண்பர் போன்ற ஒருவரை அக்காலந் தோற்றுவித்தாரில்லையே! அக்காலம் பாபகாலமும் இக்காலம் புண்ணியகாலமும் போலும். இவ்வாறு இன்னமும் பற்பல ஆசங்கைகள் தோன்றுமென்பதில் ஐயமுண்டோ? ஆனதால் இவைகளெல்லாம் குழறுபடையான மயக்கவுரைகளேயாம். சிவதருமோத்தரம், தமிழ் மறை ஆதிய நம் நூல்கள் கூறுகின்றபடி நாமும் ஆரியர்களே. ஆரிய நூல்களும் நம் நூல்களே. 'இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர்' என நம் பாடிய கர்த்தா மொழிந்த உறுதிவாக்கியங்கொண்டு அவ்விருமொழிக்கும் அவரே என் முதற்பிதா ஆகமாட்டார் என்று யாங்கேட்போம். மற்றும், புறநானூறுஉகூ-கக உ-செய்யுட்களை நம்மவர் எடுத்துக்கூறி ஏதேதோ அவர் கொள்கையைக்காட்டாநிற்பர். அவைகள் ஏற்கனவே நாம் எழுதியிருக்கும் ஆராய்ச்சியி லடங்குமானதால் மீட்டும் அவைகளை யெடுத்து ஆராயாது விடுந்தோம். நம்மவர் கூறும் மற்றைய வாக்கியங்கள் வருமாறு :—

"இக்காலத்திற்குப்பின்பு அதாவது புத்தசமயம் வழங்க ஆரம்
"பித்தகாலத்திற்குப் பின்பு நான்மறையென்ற சொல் வட
"மொழிகளைக் குறிப்பதற்குப் பெரிதும் வழங்கிவந்ததாகத்
"தெரிகின்றது. தேவாரத்துள்ளும் சிற்சில விடங்களில் மறை
"யென்றசொல் வடமொழி வேதங்களைக்குறிப்பதுண்டு. ஆயின்
"பெரும்பான்மையும் ஆலநிழலின் கண் அருள் பெற்றமுனிவர்
"நால்வர்கூறிய நான்மறைகளே விதந்தோதப்பெற்றுள. இவை
"யே கடவுள் தந்த முதநூலென்பது தேவார ஆசிரியர் கருத்து.
"அவ்வாசிரியர் தமது காலத்தே வடமொழிமறைகளே தமிழ்
"நாட்டில் வழங்கினமையோடு அவற்றின் முடிந்த பொருள்
"சைவமென்னுங்கருத்தும் நிலைபெற்றிருந்தமையால் அதனை
"வற்புறுத்துவான் அவற்றையும் சிற்சில விடங்களிற் காட்டி
"யருளுவாராயினர். ஆனால் அவற்றைக் கடவுள் தந்த முத
"னூலென யாண்டுங் குறித்திலர். ஆல நிழற்கீழ் கூறிய
"மறையென்ற விடத்தெல்லாம் தமிழ்மறை யென்றே கொள்ள
"ற்பாலன" என்று எழுதியிருக்கின்றார். இவற்றிற்கு விடையாவது.

புத்த சமயம் உண்டாகியே உகூ௱ வருடம் தானாகிறது. அதற்கு முன்னர் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்றோன்றிய தொல்காப்பிய நூலிலேயே ஆரிய மொழியின்விவகாரம் பல இடங்களிலே சொல்லப்பட்டிருக்கிறது. அந்நூலின் பாயிரத்திலேயே நான்மறையென்ற பெயர் ஆரியவேதமென்கிற பொருளோடு அமைந்திருக்குமானால் நான்மறை தமிழில் இருந்தன

வென்னும் விவகாரம் எவ்வாறு நிலைபெறும். முன்பக்கங்களில் இவ்விஷயம் வித்தரித்து எழுதப்பட்டிருக்கின்றது. ஆண்டுக் காண்க.

௩௪. "தேவாரத்துள்ளும் சிற்சிலவிடங்களில் மறையென்ற சொல்வடமொழி வேதங்களைக்குறிப்பதுண்டு" என்றும் "ஆல நிழற்கீழ் கூறியமறை யென்ற விடத்தெல்லாம் தமிழ்மறை யென்றே கொள்ளற்பாலன" வென்றும் இவர் எழுதியிருக் கின்றார். ஆலநிழற்கீழ் இறைவன் கூறியது தமிழ்மறை யென்பதைத் தேவாரங்களின் ஒரு பதத்தாலு மிவர் காட்ட முடியாதவராகிக், கொள்ளற்பாலன வென்று கூறும் இவர் வெறுமொழியை எவ்வாறு பிரமாணமாகக் கொள் வோம். தேவாரத்துள் பெரும்பான்மையும் ஆல நிழலின் கண் அருள்பெற்ற முனிவர் நால்வர் கூறிய நான்மறை களே விதந்தோதப் பெற்றுள்ளன. இவையே கடவுள் தந்த முதனூலென்பது தேவார ஆசிரியர் கருத்து என்கிறார். ஆல நிழலின்கண் அருள்பெற்ற முனிவர் நால்வர் நான்மறைகள் கூறியதாகச் சொல்லும் இவர் கற்பனைக் கூற்று தேவாரத்துள் ஒரு இடத்துங் காணப்பெறுதிருக்கும்போது தேவாரம் அவைகளை விதந்து ஓதினவென்று இவர் கூறியது வெற் றுரையேயாம். இவையே கடவுள் தந்த முதனூல் என்பது தேவார ஆசிரியர் கருத்து என்று எந்தத் தேவாரத்தால் இவர் அறிந்தார். இவர் கருத்து அதுவாயிருக்கலாம். தேவார ஆசிரியர் கருத்துத் தாம் கூறியதே என்பதனை எவ்வுணர்ச்சி யுபகரித்தது. வடமொழி வேதங்களைக் கடவுள் தந்த முத னூலென யாண்டும் தேவார ஆசிரியர் குறித்திலர் என்றார். ஆனால் இவரது மறைந்துபோன தமிழ் நான்மறைகளைக் கடவுள் தந்த முதனூலெனத் தேவார ஆசிரியர் யாண்டாவது குறித்திருப்பதாக இவர் காட்டினாரா? இல்லை. அவ்வாறு தேவாரத்திலிருந்தாலல்லவோ அவ்வாக்கியத்தை யெடுத்துக் காட்டியிருப்பார். இவ்வாராய்ச்சியின் முதற்கண்ணே பக்கம் கரு முதல் கக வரை தொகுத்துக் காட்டப்பட்டிருக்கும், தேவாரமாதிய கஙௌபிரமாணங்களால் வடமொழி வேதங்களைக் கடவுள் தந்த முதனூலென அவற்றின் பெயர்களோடு தேவார ஆசிரியர் ஆதியோர் குறித்திருப்பதை ஒருங்கே திரட்டிக் காட்டியிருக்கின்றோம்.

"வேதியர் தொழுதெழு வெங்குரு மேவிய
ஆதிய அரு மறை யீரே
ஆதிய வரு மறை யீருமையலர்கொடு
ஓதி யருணர் வுடை யோரே."

என்னுந் தேவாரத்தில் அருமறை ஆதியில் உண்டாயதென சம்

பந்தப் பெருமான் அருளியிருப்பதை நோக்குக. பண்டாய நான் மறையும் பாலணுகா வென்ற திருவாசக மொழியாலும் நான் மறை பண்டே ஆயவென மணிவாசகப்பெருமான் கூறுவதாலும் அறிக. உமாபதி சிவமும் 'செஞ்சொல்புனை ஆதிமறை' யென் றுங்கூறி யருளியது. முதல், ஆதி, பண்டு ஒரு பொருளையே குறிக்கும். பின்னும் இவர் எழுதியிருப்பது அவ்வாசிரியர் (தேவார ஆசிரியர்) தமது காலத்தே வடமொழி மறைகளே தமிழ் நாட்டின் வழங்கினமையோடு அவற்றின் முடிந்த பொருள் சைவமென்ற கருத்து நிலைபெற்று மிருந்தமையால் அதனை வற்புறுத்துவான் அவற்றையும் சிற்சில விடங்களில் காட்டியரு ளுவாராயினர்'' என்பது. தேவார ஆசிரியர்கள் காலத்துக்கு முன்னும் நீண்டகாலமாகவே வடமொழி மறைகளே தமிழ் நாட்டில் வழங்கிவந்தனவென்பதற்கும், அவைகளின் பொருள் சைவமேயென அக்காலமுங் கொண்டிருந்தார்களென்பதற் கும், நக்கீராதியோர் "அருமறைகளாவனவு, மஞ்செழுத்துங் கற்கவணித்தாகும்." "நான்கு நின்வாய்மொழி." "வேத விச்சையை." "நிறைமறைப் பொருளினை." "வேதமு நீயே வேள்வியு நீயே." "வேதியனை வேதப்பொருளானை வேதத்துக் காதியனை," எனச் சிவபிரானை துதித்திருக்கும் வாய்மை மொழிகளும், அவர்கள் வைதிக சைவசமயத்தையே உண்மைப் பொருளாகக் கொண்டிருந்தமையும், சேர சோழ பாண்டிய மன்னர்கள் அவ்வேத முறைப்படி யாகாதிகள் செய்து அவ் வேதப்பொருளாகிய சைவத்தையே உண்மையாய்த் தழுவி நின்றமையும் "ஆரியம் வேதமுடைத்து" எனக் கடைச்சங்கத் தார் மொழிந்திருப்பதும், சிதம்பரமாதிய பூர்வீக சைவ தலங் களின் வரலாறும், சான்றுபகரும், விரிக்கிற் பெருகும். தேவார ஆசிரியர் காலத்துக்குப் பின்னரோ இதுகாறுந் தோன்றிய செந்தமிழ்க்கல்விச் செல்வர்களும் சைவ சித்தாந்த நூல் ஆக்கி யோரும் சைவ சித்தாந்த அனுபூதிமான்களும் வடமொழி வேத முடிந்தபொருள் சைவ சித்தாந்தமே யெனக்கொண்டு இருந்தார்களென்பதும்;

"ஆரியமாய் அறம் பொருள் இன்பம் வீடு அளிப்பது நூல்"
"நீண்மறையி னொழிபொருள் வேதாந்தத் தீதில் பொருள்
கொண்டுரைக்கு நூல் சைவம்"
"பழைய வைதிக சைவம் பரக்கவே"
"இராஜாங்கத்தில் அமர்ந்தது வைதிக சைவம்"
"வேதாந்த மென்றுச்சியிற் பழுத்த சைவ சித்தாந்தம்"

என்பனவாதிய அருண்மொழிகளால் விளங்கும். இவ் வாராய்ச்சியால் நம் நாட்டில் வேதமும் வேதப்பொருளாகிய சைவ சமயமுமே எக்காலமும் நிலைபெற்றிருந்தனவென்பது

பெறப்படும். தேவார ஆசிரியர் காலத்தே வடமொழி மறைகளே தமிழ் நாட்டில் வழங்கினமையோடு அவற்றின் முடிந்த பொருள் சைவமென்னுங் கருத்தும் நிலைபெற்றிருந்தமையால் அதனை வற்புறுத்துவான் அவற்றையுஞ் சிற்சில இடங்களிற் காட்டியருளுவாராயினர் என்று நம்மவர் எழுதியிருக்கின்றார். இக்காலம்வரை வேதத்தின் முடிந்த பொருள் சைவம் என்றே நம் மேன்மக்கள் கொண்டிருப்பதை மேலே பிரமாணமூலமாகக் காட்டினோம். "வேதப்பயனாஞ் சைவமும்போல் என்னும் சேக்கிழார் திருவாக்கும் நோக்கற்பாலது. "அதனை வற்புறுத்துவான் அவற்றையும் சிற்சில இடங்களில் காட்டியருளுவாராயினர்" என்று நம்மவர் எழுதியிருப்பதை உய்த்து நோக்கும்போது பற்பல இடங்களில் அவற்றிற்கு அதாவது வடமொழி மறைகட்கு வேறான தமிழ் மறைகளை வற்புறுத்தாமலே காட்டியருளினார் என்பது போதரும். இதனால் நம் சமயாச்சாரியர்கள் உண்மைகூறாது காலத்துக்கு இயைந்தபடி அவரவர்க்கிணக்கமாகத் தேவாரப்பாக்களை அருளினாரென்று கருத இடமுண்டாகிறது. ஆக்கவும், அளிக்கவும், அழிக்கவும் ஆற்றல் வாய்ந்த நம் பெருமக்களும், நடுவுநிலைமை நாடாது காலகதிக்குட்பட்டு மெய் ஒன்றையே காட்டாது உலகம் மயக்கமடையுமாறு தேவாரப்பாக்கள் மொழிந்தாரெனல் எப்பெரும் பாதகமோ அறியேம். நிற்க, மேலாராய்வாம்.

௩௫. இனி, நம்மவர் மறைவரலாறு விளங்குவதற்கு வேள்வி, அந்தணர், பார்ப்பார் என்ற சொற்களின் பொருள் ஆராய்ச்சி இன்றியமையாதது என எழுதிக்கொண்டு வேள்வியென்பது விரும்பியதைக் கொடுத்தல் என்னும் பொருட்டாய் உபகாரத்தைக் குறிப்பதற்கு வழங்குந் தமிழ்மொழியென்றுமெழுதி அது ஈகைச் செய்கைகள் மிகுதிப்பட்ட யாகம் முதலிய அங்கிவழிபாட்டிற்கும் பெயராக வழங்கக் காண்கின்றோம் என்றுமெழுதிப், பின்னர் உயிர்க்கொலையில்லாத ஓமங்களும் வேள்வி யென்றழைக்கப்படுகின்றன வென்றுங் கூறிப் பின்னரும் அவ்வகையாகச் சிலவெழுதி "அது பிராமணர் யாகத்தையே சுட்டுவதென்று எவ்விடத்துங் கொள்ள இடமில்லை" யென முடித்தார்.

வேள்வியென்பது சிவாகமப்படிக்குள்ள சைவ வேள்வியெனவோர் வகையும், வேதவிதிப்படிக்குள்ள வைதிக வேள்வியென ஒருவகையும் ஆகி அவ்விருவகையும் நந்தமிழ்மறையிற் கூறப்பட்டேயிருக்கின்றன. வைதிக வேள்வியில் பசுபந்தனமுமடங்கும். அவ்வேள்வி செய்பவர்கள், சொர்க்காதி போகங்களை விரும்பிய அந்தணரிற் பலரும், அரசர்களும் அவர்கள்

ஆசாரத்தைப் பின்பற்றினவருமே. இவ்வகை வேள்விபுரிந்து வருவதையும் நந்தமிழ்த் திருமறையிடத்துங்காணலாம்.

க. "பறப்பைப் படுத்தெங்கும் பசு வேட்டெரி யோம்புஞ்
சிறப்பர் வாழ்தில்லை" சம்பந்தர்.

உ. "பறப்பையும் பசுவும் படுத்தும்பல—திறத்தவு
முடையோர் திகழும்பதி" அப்பர்.

ங. "தூயநெய்யால், வட்டக்குண்டத் தெரிவளர்த்
தோம்பிமறை பயில்வார்—அட்டக்குண்டத்
துண்பதறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே" சுந்தரர்.

ச. "ஓவா முத்தீயஞ்சு வேள்வியாறங்கம் நான்மறையோர்
ஆவே படுப்பா ரந்தணாள ராகுதிவேட்டுயர்வார்
மூவாயிர வர்தங்களோடு முன்னரங்கேறி நின்றகோவே"
கண்டராதித்தர்.

ரு. "ஆத்தனைத்தான் படுக்கும் அந்தணர் தில்லையம்பலத்துள்"
திருவாலியமுதனார்

இத் தமிழ்மறைப் பிரமாணங்களாலும்,

"புன்மையாம் பசுத்தடிந்து புரையில் வேள்வியாற்றியே
தொன்மைபோ லெழுப்புமாறு சுருதிசொற்றவாறு போன்
மன்மதன் றனைப்படுத்து மாதைவேட்டு மற்றதன்
பின்முறைக்கணல்க வெம்பிரானி னைந்தனன் கொலாம்"

என்ற கந்தபுராணச் செய்யுளாலும்,

"வெய்யகனற் பதங்கொள்ள வெந்துளதோவெனு மன்பா
னையு மனத்தினிமையி னினையமிகு மென்றிடலாற்
செய்யு மறைவேள்வியோர் முன்பு தருந்திருந்தவியி
லெய்யும் வரிச்சிலையவன்றானிட்டவூனெனக்கினிய"

என்ற திருத்தொண்டர் புராணச் செய்யுளாலும், சிவபிரான் (வைதிக வகையில்) யாகத்திடமுண்டாகும் ஊன் அவிஸில் விருப்பமில்லாதவரல்லரென்றும் வேள்வியென்ற சொல் பிராமணர் செய்யும் யாகத்தினையுஞ் சுட்டுமென்றும் அறியலாகும்.

நிற்க; கலித்தொகையில் அந்தணர் என்ற மொழி காணப்படுஞ் சில செய்யுட்களை யெடுத்தெழுதி அவற்றிற்குத் தம் மனம்போலப் பொருள்கண்டு முடிவில் அவருக்குத் தோற்றிய சிலவற்றைக்கூறி அவரது கருத்தை "அந்தணர் என்பது தமிழ் முனிவர்க்கேயன்றி ஆரியப் பிராமணர்க்கும் பிற்காலத்தில் ஒரு பெயராக அமைந்துவிட்டது" என்று முடித்திருக்கிறார். அவர் எழுதிய முறைப்படி ஒவ்வொரு செய்யுள் விஷயத்திலும் அவர் கூறுவதைக் கண்டு அதை ஆராய்ந்து பார்த்து அவர் கொண்ட கருத்து சரியோ என்பதைப் பார்ப்போம்.

"அந்தணர் என்ற சொல் ஆதியில் துறவிகளுள் ஒரு
"வகையாரைக் குறித்து நின்றது. தொல்காப்பியத்தில்
""நூலே கரகமுக்கோல் மணையே, ஆயுங்காலை அந்தணர்க்
"குரிய" வென்றவிடத்து ஏடும் கமண்டலமும் முக்கோலும்
"இருக்கையும் அந்தணர்க்கு அடையாளமாகக் கூறப்பட்டன.
"கலித்தொகை கஉரு-வது செய்யுளில் "முக்கோல் கொளந்த
"ணர் முதுமொழி நினைவார்போல" என்ற விடத்து அந்தணர்
"என்பதற்குக் காஷாயம்பூண்ட குழாங்களென்றும், முது
"மொழி யென்றதற்குப் பிரணவமென்றும் ஆசிரியர் நச்சினார்க்
"கினியார் பொருள் கொண்டார்" என வெழுதியிருக்கின்றார்.

தொல்காப்பியச் சூத்திரத்தில் நூல் கரகம் முக்கோல் மணை அந்தணர்க்குரித்தென்று தொல்காப்பியர் கூறினார். தொல்காப்பியர் சொல்லியது மனு ஸ்மிருதி ச-ம் அத்தியாயம் கீழ்க்காட்டிய ௩௬-வது சுலோகப் பொருளுக்கொத்தது.

𑌵𑍈𑌣𑌵𑍀𑌂 𑌧𑌾𑌰𑌯𑍇𑌦𑍍𑌯𑌷𑍍𑌟𑌿𑌂 𑌸𑍋𑌦𑌕𑌂 𑌚 𑌕𑌮𑌣𑍍𑌡𑌲𑍁𑌮𑍍 ।
𑌯𑌜𑍍𑌞𑍋𑌪𑌵𑍀𑌤𑌂 𑌵𑍇𑌦𑌂 𑌚 𑌶𑍁𑌭𑍇 𑌰𑍌𑌕𑍍𑌮𑍇 𑌚 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑍇 ॥

(இ-பொ) மூங்கிற்றண்டம், தீர்த்த கமண்டலம், பூணூல், தருப்பாசனம் பவித்திரம், சுவர்ன குண்டலம் இவைகளை எப்போதும் (கிரகஸ்தனாகிய பிராமணன்) தரிக்கவேண்டியது. நூல் என்ற சொல்லுக்கு முந்நூல் என ஆசிரியர் நச்சினார்க்கினியர் பொருள் கண்டார். விசேட உரையில், நூலினை முற்கூறினான் பிறப்பு முறையானுஞ் சிறப்பு முறையானு மென்பது எனவும் கூறினார். நம்மவர் அச்சொற்கு ஏடு எனப் பொருள் சொன்னார். ஏடு என்றால் பனைஓலையில் எழுதிய ஓர் சுவடி யென்பது பொருளாகலாம். மற்றோரிடத்தில் நம்மவர் எழுதியிருப்பது நூலை ஆராய்தல் அந்தணர் தொழில் என்பது. அதனாற்றான் நூல் என்றதற்கு ஏடு என இங்குப்பொருள் எழுதினார்போலும். நூலை ஆராய்தல் யாவர்க்கும் பொதுவான தர்மம். இங்கு அந்தணர் என்ற சொல் பிறப்பினாலேயே அந்தணர் எனப் பேர்கொண்ட முதல் வருணத்தாரையே குறித்து நின்றது. உரை ஆசிரியர் "இச்சூத்திரம், உயர்திணை நான்கு "சாதியும்பற்றி மரபு உணர்த்துவான் முறையானே அந்தணர்க் "குரிய மரபுபட்டுவருங் கலப்பை வேறுபாடுணர்த்துதனுத "லிற்று", என இச்சூத்திரப்பொருளைக் கூறினார். தொல்காப்பியத்தில் இச்சூத்திரமும் அதற்கடுத்த சூத்திரங்களும் அமைத்திருக்கும் முறைமையினையும் அவற்றின் பொருளையும் நோக்குங்கால், அந்தணர், அரையர், வைசியர், வேளாளர் என்னும் நான்கு வருணத்தாரையும் ஒருவருக்குப் பின் ஒருவராக முறையே கூறி அவரவர்களுக்குரிய அடையாளம் தொழில்

என்பனவற்றையுங் கூறப்புகுந்து முதற் கண்ணே முதல் வருணத்தாராகிய அந்தணர்க்குரிய அடையாளத்தைக் கூறினர் தொல்காப்பியர் எனக்கோடலே பொருத்தம். உரையாசிரியர் அவர் எழுதிய உரையில் "தண்டொடு பிடித்ததாழ் கமண்டலத்துப் படிவவுண்டிப்பார்ப்பன மகனே" என்ற மேற்கோளையுங் காட்டினர். "நூலேகரகம்" என்ற சூத்திரத்திற்கண்ட அந்தணர் துறவிகளைக் குறிப்பதானால் இச் சூத்திரத்திற்கு அடுத்த சூத்திரங்களிற் சொல்லும் அரையர், வைசியர், வேளாளர் இவர்களுந் துறவிகளாகவேண்டும். அவ்வாறானல் எச்சூத்திரம் கிரகத்தனைக் குறித்தது, ௬௩0, ௬௩௧, சூத்திரங்களில் நான்கு சாதியாரும் பிறந்த ஊர், ஆதியனவும் அவர்கள் தலைமைக் குணம்படச் சொல்லுங் கூறப்பட்டிருக்கின்றன. "அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கம்" என்ற சூத்திரத்தில் 'நாலிருவழக்கிற்றபதர் பக்கமும்" என்றதே துறவிகளைக் குறித்ததென்பதை யுணரவேண்டும். இப்பகுதியின் உரைக்கு உரை ஆசிரியர் காட்டியிருக்கிற உதாரண மேற்கோள்களையுங் கண்டுணர்க. ஆதலால் அந்தணர் என்ற சொல் ஆதியில் துறவிகளுள் ஒருவகையாரைக் குறித்து நின்றது எனவெழுதி அதற்குப் பிரமாணமாக "நூலேகரகம்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தை நம் நண்பர் காட்டியது பிழையே. இனிமேற்காட்டிய கலித்தொகைச் செய்யுளில், தொல்காப்பியச் சூத்திரத்திற்கண்ட அடையாளப் பொருள்கள் நான்கில் ஒன்றுதான் அதாவது முக்கோல் என்பதுதான் காணப்படுவதோடு கலித்தொகைச் செய்யுளிற்கண்ட அந்தணர் காஷாயம் பூண்ட குழாங்களெனப் பொருள் சொல்லப்பட்டிருக்கின்றது. காஷாயத்தை ஓரடையாளமாகத் தொல்காப்பியச் சூத்திரத்தில் அந்தணர்க்குச் சொல்லப்படவில்லை. சந்நியாசிகள் கமண்டலம், திரிதண்டம், தருப்பை, காஷாயம் இவைகளைத் தரித்துக் கொள்ள வேண்டுமென்று மனுஸ்மிருதி ௬ அத்தியாயம் ௪௧, ௫௨, சுலோகங்கள் கூறும். பிராமண சந்நியாசிகள், சதா பரமாத்மாவையே சிந்தித்துக்கொண்டிருந்து மோட்ச சித்தியை நாடவேண்டுமென்றும் ஷை ௬-அத்தியாயம் ௪௨ சுலோகம் கூறும். ஆதலாற்றான் இச்செய்யுளிற்கண்ட காஷாயம் பூண்ட அந்தணர் பிரணவத்தையே உச்சரிப்பாராயினர். ஆதலாற் அவ் அந்தணர் என்ற மொழியும் முதல் வருணத்தாரையே குறிக்கும். நிற்க, நம்மவர் பின்னரெழுதுவதாவது :—

"கலித்தொகை ௯-வது செய்யுளில் உறித்தாழ்ந்த கரக
"மும், உரைசான்ற முக்கோலும் நெறிப்படச் சுவலசைஇ
"வேறோரா நெஞ்சத்துக் குறிப்பேவல் செயன்மாலைக் கொளை
"நடையந்தணீர், என்றதுங் காண்க" என்றெழுதினர். இச்

செய்யுளால் தங்கொள்கைக்குச் சாதகம் இன்னவாற்றால் என விரித்துக் காட்டிலர். இச் செய்யுளினும் அந்தணர் என்ற சொல் காணப்படுதலே தங்கொள்கைக்குச்சாதகமெனக் கொண்டார்போலும். இச்செய்யுளின் முதற் பகுதி "எறித்தரு கதிர் தாங்கியேந்திய குடை நீழல்" என்பதை நம்மவர் காட்டாது விடுத்தார். குடையும் கமண்டலமும் முக்கோலும் தாங்கிய அந்தணர் என்பது பொருள். முக்கோல் என்பது, அரியயன் அரன் என்னும் மூவரையும் ஒருவனாகவல்லது வேருக நினையாத நெஞ்சையுடைய அந்தணர் என உரையாசிரியர் விசேடப் பொருள் கண்டார். ஆதலால் இம் முக்கோல் தாங்கல் வைதிக ஆசாரங்கொண்ட வைதிகப் பிராமணர்களைச் சுட்டுமேயல்லது சைவாசாரங்கொண்ட ஒருவரையுங் குறிக்காது. முக்கோல் கமண்டலமாதிய பிராமணர்களுக் குரித்தென்று மனுஸ்மிருதியுங்கூறுநின்றது. பிராமணர்கள் அடையாளங் கூறவந்த தொல்காப்பியச்சூத்திரமும் அவர்களுக்கு முக்கோல் கமண்டலமாதிய உடைப் பொருள்களாகவும் கூறியுமுள்ளது. ஆயுங்கால் என்றதனல் குடையும் அவர்க்குண்டு என ஆசிரியர் நச்சினர்க்கினியர் உரையில் எழுதியுள்ளார். இக்காரணங்களால் இக்கலிச் செய்யுளிற் காணப்படும் அந்தணர் என்ற சொல் தொல்காப்பியச் சூத்திரப்படி முதல் வருணத்தாரையே குறித்துநின்றது. நிற்க நம்மவர் பின்னுமெழுதுவதாவது:— "கலித்தொகை கூக-வது செய்யுள் "நறவினை வரைந்தார்க்கும் "வரையார்க்குமவை யெடுத்து அறவினை யின்புறூஉம் அந்தண "ரிருவரும் "என்றவிடத்துத் தேவகுருவும் அசுரகுருவும் அந்தணர் எனப்பட்டார்" என்பது. இதனல் இவர்கொள்கைக்கு என்ன சாதகமோ. தேவகுருவும் அசுரகுருவும் தமிழ் முனிவரென்பது இவர் கருத்தோ? தேவகுருவும் அசுரகுருவும் நவக்கிரகங்களில் இருவர். பூவுலகத்து நடவடிக்கை போல நவக்கிரகங்களுள்ளும் தேவர்கட்குள்ளும் நான்கு வருணமுண்டென நமது நூல்கள் பகரும். ஒன்பது கிரகங்களினும் இன்னர் பிராமண குலம், இன்னர் அரசகுலம், இன்னர் வைசிய குலம், இன்னர் சூத்திர குலம் என ஜோதிஷ நூலிற் கூறியிருக்கின்றது. இவ்விரு கிரகங்களும் குருத்தன்மைவகித்த பிராமண குலமென அந்நூல் கூறும். ஆனதால் பிராமணரைக் குறிக்கும் அந்தணர் என்ற தமிழ்ச் சொல்லால் இவர்களை இச்செய்யுளிற் கூறியுள்ளது. நிற்க, நம்மவர் பின்னரும் எழுதுவதாவது. "ஆலநிழல் முனிவர் நால்வர்க் "கும் அவர் வேடத்தாலும் அந்தணர் என்ற பெயர் கூறப் "பட்டுளது. "சைவ வேடந்தானினைத்து அழிந்தசிந்தையந்த "ணாளர்" என்ற தேவாரமும், 'ஆறறியந்தணர்க்கு அருமறை

"பலபகர்ந்து' என்ற கலித்தொகைக் கடவுள்வாழ்த்தும் அவர் "களை யங்ஙனம் கூறின" என்று எழுதினர். இதை விசாரிப்பாம். கல்லாலடியில் இறைவனிடம் வேதத்தையும் வேதப் பொருளையுங்கேட்ட அந்தணர் நால்வர்களின்வேடம் இன்னது எனத்தமிழ் மறையில் ஒரு செய்யுளிலுங் கூறியிருக்கவில்லை. மேற்காட்டிய தேவாரத்தில் அவர்கள் சைவவேடந் தாங்கி யிருந்ததாகக் கூறியிருப்பதாக நம்மவர் எழுதியிருக்கிறார். அது பொருளல்ல. இத்திருப்பாட்டின் சுத்தபாடம், தானினைத்து அழிந்த சிந்தை அந்தணாளர் என்பதுவே. இவரே செந்தமிழ்ச் செல்வி உ0-வது பக்கத்தில் அவ்வாறே, தானினைத்து. என்று எழுதியிருக்கின்றார். இங்குச் சமயத் துக்குத்தக்கவாறு தம்மனம்போல் பொருள்கொள்ளவேண்டித் தாணிணைத்து, எனத்திருத்தி யெழுதிக்கொண்டார்! இத் தேவாரம் வருமாறு

"சுழிந்தகங்கை தோய்ந்த திங்கட்டொல்லரா நல்லிதழி
சழிந்தசென்னிச் சைவ வேடந் தானினைத்து
அழிந்தசிந்தை யந்தணாளர்"

இத்திருப்பாடலின் பொருளமைப்பை நோக்குங்கால், சைவ வேடமென்பதனைச் சிவபெருமானுக்கு ஏற்றியிருப்பது நன்கு துலங்கும். அல்லாவிடின், கங்கை, திங்கள், அரவம் கொன்றைப்பூ, இவைகள் நிலவிய சென்னியெனச் சிவ பெருமான் கோலத்தை மிக்க வியப்பாயும் அழகாயும் புனைந்த மொழிகள் வெறும் வார்த்தைகளாம். சைவ வேடந்தான் + நினைத்து = தானினைத்து என்றால் (கங்கை ஆதியவற்றைச் சிரசிற் சூடிய சிவபெருமானது) திருவேடத்தை மனதின்கண் தியானித்து என்று பொருள்படும். சிவ வேடந்தான் + இணைத்து = தாணிணைத்து என்றால் சிவ வேடத்தைத் தான் பூண்டு எனப் பொருள்படும். அப்போது கங்கை ஆகிய வற்றைச் சிரசில் சூடிய என்றருளியதற்குப் பயன் இன்றாகும். இவ்வாறு தமக்குப் பொருந்தாத பண்டைய நூல்களிற் காணப்படும் மொழிகளைத் திருத்திக்கொள்வதே நம்மவருக்கு வழக்கமாய்விட்டது. இவ்வாறே பல்லோரும் அவரவர் நவீனக் கொள்கைக்குத் தக்கபடி மேன்மக்களது திருவாக்கிற்போந்த அரிய செய்யுட்களை அவரவரும் திருத்திவருவாரேயானால் முடிவில் ஆக்கியோர் செய்யுட்களே மாறுபட்டுப் பொருளும் கிரந்த கர்த்தாவின் கருத்துக்கு வேறுபடும் என்பதில் ஐயமில்லை. கல்லாலடியில் உபதேசம் பெற்றதாகக் கூறவெழுந்த, தேவாரப் பகுதிகளிற்கண்ட அந்தணாளரை நக்கீரர் அவர் இயற்றிய திருவெழு கூற்றிருக்கையில் "முத்தீ நான்மறை ஐம்புலனடக்கிய அறுதொழிலாளர்க் குறுதிபயந்தனை" எனக் குறிப்பிட்

டருளினர். முத்தீ நான்மறைக்குரியவர்களும் அறுதொழிலாளர்களும் யாவரென்று ஆராயுமிடத்து அவர்கள் முதல் வருணத்தாரே யாவரெனச் சிறப்புவகையானும் விளங்கும். "ஆறறியந்தணர்க்கு அருமறை பல பகர்ந்து" என்ற கலித்தொகைக் கடவுள் வாழ்த்தும் அவர்களை யங்ஙனம் கூறினவென்று நம்மவர் எழுதினர். எங்ஙனம் கூறிற்றென்று விரித்து எழுதினரில்லை. இதில் காணப்படும் அந்தணர் என்ற பதம் தமிழ் முனிவரைக் குறித்ததென்பது அவர் கருத்தாகும். ஆறறியந்தணர்க் கருமறை பல பகர்ந்து என்ற செய்யுளில் அவ்வந்தணர்க்கு வேடமொன்றுங் குறிப்பிடவில்லை. ஆறறியந்தணரென்றதனுல், ஆறு அங்கத்தையும் அறிந்தவர் என ஏற்பட்டது. ஏற்படவே அவற்றிற்கு இனமாகிய வேதத்தையும் மறிந்தோரேயாவர். ஆனதால் ஆறங்கத்தையும் வேதத்தையுமறிந்த அந்தணரென்ருல், வேதம் ஓதல் முதலிய அறு தொழிலையுடையோர் யாவர். அவர் அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் என்ற தொல்காப்பியச் சூத்திரத்தானே, பார்ப்பன அந்தணரே யாவர். வேதத்தையும் ஆறு அங்கத்தையும் அந்தணர் நால்வரும் முன்னமேயே அறிந்திருந்தாரேயானுல் சிவபெருமானிடம் அவைகளைக் கேட்கத் தவங்கிடக்கவேண்டியதில்லையே யென ஓர் வினு எழலாம். அவர்கள் தங்கள் குலாச்சாரப்படி அந்நூல்களைக் கற்ருர்கள். அவைகளின் உண்மைப் பொருள் விளங்காமையினுல் அந்நூல்களுக்கு முதலாசிரியராகிய சிவபெருமானிடங் கேட்கப் புகுந்து தவம் புரிந்தார்களென்பதே அதற்கு விடை.

ஆறறியந்தணர் என்ற கலித்தொகைச் செய்யுளிற்கண்ட அந்தணர், "அந்தத்தை அணவுவார் அந்தணர்; என்றது, வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பார் என்றவாறு" என உரையாசிரியரும் விரித்தார். இச்செய்யுளிற்கண்ட, "மறையாவன தைத்திரியமும் பௌடியமுந் தலவாகாரமுஞ் சாமவேதமுமாம்" என்றும் உரையாசிரியர் விரித்தார். ஆதலால் இச்செய்யுளும் நம் நண்பர் கொள்கையை ஆதரிக்காமல் கைவிட்டது. நிற்கப், பின்னரும் நம் நண்பர் எழுதியதாவது :—

"அந்தணர் என்ற சொல் செந்தீ வளர்த்தல் முதலிய கடவுள் வழிபாடு செய்பவர்க்கும் பெயராகப் பிற்காலத்து அமைக்கப்பட்டதாகத் தெரிகின்றது" என வெழுதி அதற்கு ஆதாரம்போலக் "கேள்வியந்தணர் கடவும், வேள்வி யாவியினுயிர்க்கு மென்னெஞ்சே" "ஓத்துடை யந்தணனெறிவலஞ் செய்வான்போல்" என்ற இரண்டு கலித்தொகைச் செய

யுட்களின் பகுதிகளைக் காட்டுகின்றார். முற்காலம் பிற்காலம் என்ற இவர் வழக்குக்கு ஆதாரம் இச்செய்யுட்களில் ஒன்று மில்லை. தொன்றுதொட்டே நாற்குலத்தவரும் நம் நாட்டினிலிருந்து வாழ்பவர்களேயென்று சிவதருமோத்தரமாதிய நூற்பிரமாணங்களால் வலியுறுத்திக்காட்டப்பட்டது. அல்லாமலும், கலித்தொகை ஆகிய நூலியற்றினோர் கடைச்சங்க காலத்தவர்களே. இச்சங்கம் தாபித்த புலவர்களில் முதன்மை பெற்றவரும் சங்கத்தில் முதல் முதல் ஏறியவரும் நக்கீரரே. இவர் பாடிய திருமுருகாற்றுப்படையில் "ஒரு முகம் மந்திர விதியின் மரபுளிவழாஅ, அந்தணர் வேள்வியோர்க்குமமே" என்றும் "மூன்றுவகைக்குறித்த முத்தீச்செல்வத் திருபிறப்பாளர்" என்றும் அவர் இயற்றிய திருவெழுகூற்றிருக்கையில் "முத்தீ நான்மறையைம்புலனடக்கிய அறுதொழிலாளர்க்குறுதி பயந்தனை" என்றும், அவரியற்றிய பெருந்தேவபாணியில் சிவபெருமானை, "வேதமும் நீயே வேள்வியும் நீயே" என்றும், "வேதவேள்வியை" யென்றும்; ருக்வேதத்தின் மேற்காட்டிய (க-எ௨-சு) "த்ரிஸ்ஸப்தயத் குஹ்யா நித்வே......... நிஹிதா = இருபத்தொரு யக்ஞமும் உம்மிடத்திலே வைக்கப்பட்டுள்ளனவெனும் சுருதியின் பொருளினாலேயே துதித்திருக்கிறாரென்று திட்டமாய்த்தெரிகின்றது.

சிதம்பர க்ஷேத்திரத்தில் பேர்பெற்று விளங்கும் சிவாலயத்தில் சிவபெருமானைப் பூசிக்கும் செல்வமடைந்தவர்களைத் தில்லைவாழந்தணர் என இறைவன் கூறினானெனப் பெரிய புராணத்தாற் சைவர்களெல்லாருமறிகின்றோம். இறைவன் பிரமனைத்தோற்றுவித்து அவர் மூலமாக ஆதியில் கச மநுக்களைத் தோற்றுவித்ததாயும் ஒவ்வொரு மநுவின் காலம் மனித அளவில், சா௬,௨0,000 ஆண்டுகள் என்றும் நமது நூல்களாற்றெரிகின்றோம். இப்போது நடப்பது எ-வது வைசுவத மநுவின் காலமென்பதை, வைசுவத மநுவந்தரே, கலியுகேப்ரதமபாதே, என்று நம் இந்துதேயம் முற்றுமுள்ள எந்நாடுகளிலும் வழங்கும் சங்கற்பாதிகளால் அறியலாம். ஐந்தாவது மநுவின்காலத்தில், சிதம்பரத்தில், ஆதியில் இறைவன், பதஞ்சலி வியாக்கிரபாத மகரிஷிகளின்பொருட்டு நிருத்த தெரிசனத்தைக் காட்டியருளியபோது, (அத்தெரிசனத்தைத்) தெரிசிக்க வந்த மற்றைய தேவர்கள் இருடிகளுடன் இந்தத் தில்லைவாழ்ந்தணர்களும் தாருகாவனமிருந்து வந்தவர்களென உமாபதி சிவனார் அருளிய கோயிற் புராணத்தாலறியலாம். அவர்கள் வைதிக ஒழுக்கையும் சிவாகம ஒழுக்கையும் கைக்கொண்டவர்களாதலின் அவர்கள் "குண்டிகை கொண்டைத்தண்டொடு மண்டிக்குலைவேணி, முண்டகமிலங்கக் கொண்டயர்கின்றார்,"

அதாவது அவர்கள் அத்தெரிசனத்தைக் கண்டு, கமண்டலங்கள், தண்டுகளோடு சடையும் விபூதி ருத்திராட்சமும் விளங்கக் கூத்தாடுகின்றார்களெனவும் கோயிற் புராணத்திற் கூறப்பட்டிருக்கின்றது. இவர்கள் பதஞ்சலி வியாக்கிரபாதர் காலத்திலேயே, பிரமதேவன், கங்கைக்கும் யமுனைக்கும் மத்தியிலுள்ள அந்தர்வேதி யென்னும் பிறதேசத்திலே வேதமுறைப்படி ஓர் யாகஞ்செய்ய ஆரம்பித்ததில் அந்த யாகத்துக்கு இவ்வந்தணர்கள் வாராமையால் தேவர்கள் ஒருவரும் வராதிருப்பதை யோர்ந்த பிரமன்தானே நேரில் வந்து அநேகமாய்ப் பிரார்த்தித்து வியாக்கிரபாதர் உத்திரவின்பேரில் நது அந்தணர்களையும் அழைத்துப் போனதாகவும் கோயிற் புராணம் கூறும். பின்னர், அந்த ஐந்தாவது மநுவந்தரத்திலேயே, கௌடதேசாதிபதி சிங்கவர்மன் என்பவன் தில்லைக்குவந்து ஆண்டவனது நிருத்ததெரிசனத்தைக் காணப்பெற்று அவ்விறைவனுக்குப் பொற்சபை முதலிய ஆலயங்களை யெழுப்பித் திருவிழா முதலிய நடத்த ஆரம்பித்தபோது, அந்தர்வேதி நாட்டுக்கு யாகங்காணச்சென்ற அந்தணர்கள் மூவாயிரவர்களையும் மனைவி மக்களுடன் தருவித்து அவர்களுக்கு வசிக்கத் திருமாளிகை முதலியவும் நிபந்தம் முதலியவும் ஏற்படுத்திக் கொடுத்து அந்த அரையனே சோழனெனும் பெயருடன் இப்பூமியை ஆண்டான் என்றும் கோயிற் புராணம் கூறுகின்றது. "பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட்டெரி யோம்புஞ் சிறப்பர் வாழ்தில்லை" எனவும் "ஓவாமுத்தீ யஞ்சுவேள்வியாறங்கம் நான்மறையோர் ஆவே படுப்பார் அந்தணாளர் ஆகுதி வேட்டுயர்வார் மூவாயிரவர் தங்களோடு முன்னரங்கேறி நின்ற கோவே" எனவும், இவர்களைத் தமிழ்முறையுஞ் சொல்லுகின்றன. ஆனதால் நான்மறைக்குரிய செந்தீ முதலிய வழிபாடுடைய அந்தணர்கள் நம் நாட்டில் பூர்வமாகவே இருந்துவருகிறார்களென்பது ஏற்படும். அந்தணர் என்ற சொல் செந்தீ வளர்த்தல் முதலிய கடவுள் வழிபாடு செய்பவர்க்கும் பெயராக பிற்காலத்து அமைந்ததாகத் தெரிகின்றது எனக்கால வெல்லையை முற்காலம் பிற்காலம் என வகுத்து முற்காலத்தில் அந்தணர் என்ற சொல் தமிழ் முனிவரைக்குறித்ததெனை நிலைநாட்ட நம் நண்பர் முயலுவது நூலாதரவு பெறாத காரியமேயாம். நிற்க, நம் நண்பர் திருக்குறளிற் காணப்படும் அந்தணர் என்ற சொல்லை எடுத்துக்காட்டித் தம் மனம்போல் அதற்குப் பொருள் வரைந்தார்.

அவர் எழுதுவதாவது:—"திருக்குறளில் அந்தணர் என்"னும் மொழியின் பொருள் தெளிவாக நீத்தார் பெருமை"யுட் கூறப்பட்டது. நீத்தார் பெருமை திருக்குறட்பாயிரத்

“ துளங்குதலாலும் நீத்தாரே உள்ளதை உள்ளவாறுணர்ந்து
“ மாற்றலுடைய ராதலாலும் நூலாராய்ச்சி யென்பது அந்த
“ ணர்க்கு முதலிலக்கணமாகத் தொல்காப்பியத்துட் கூறப்
“ பட்டதாலும், “ அந்தணர் நூற்கும்” என்ற திருக்குறட்
“ பகுதியுள் “ அந்தணர் என்பதற்கு நூலாராய்ச்சியுடைய நீத்
“ தார் என்றே பொருள் கொள்ளல்வேண்டும்.” என்று எழுதி யிருக்கின்றார். அந்தணர் என்னும் மொழி திருக்குறளில் நீத்தார் பெருமையுள் கூறப்பட்டிருப்பது உண்மையே. நீத்தார் பெருமை கூறவந்த அதிகாரத்துக்கு முன்னரே, முதற் கண்ணே கூறிய கடவுள் வாழ்த்தில் “ அறவாழி யந்தணன்றாள் சேர்ந்தார்க்கல்லால் பிறவாழி நீந்தலரிது ” என்னுங் குறளில் அந்தணன் என்ற சொல்லைக் கடவுளுக்கு முரியதாகச் சொல்லப்பட்டிருக்கின்றதே அதையேனோ நம்மவர் படித்து அதன் பொருளை உணரவில்லை. கடவுளையும் நீத்தாருள் ஒருவராக எண்ணவேண்டுமோ, அவ்வாறாயின் ஒவ்வொரு நீத்தாரும் ஒவ்வொரு கடவுளாவர். “ அந்தணரென்போர் அறவோர்” என்ற செய்யுளுக்குப்பரிமேலழகியார் செய்த உரையாவது “ எல்லாவுயிர்கள் மேலுஞ் செவ்விய தண்ணளியைப்பூண்டு ஒழுகலான் அந்தணர் என்று சொல்லப்படுவார் துறவறத்தினின்று ரென்றவாறு. பூணுதல் விரதமாகக்கோடல் அந்தணரென்பது அழகிய தட்பத்தினையுடையாரென ஏதுப்பெயராகலின் அஃது அவ்வருளுடையோர் மேலன்றிச் செல்லாதென்பது கருத்து” என்பதுவே. கடவுள் வாழ்த்திற்கண்ட “ அறவாழியந்தணன்” என்பதற்கு அறக்கடலாகிய அந்தணன் என்றே பரிமேலழகர் உரையெழுதியிருக்கின்றார். இவ்வுரையில் அந்தணன் என்னுஞ் சொல்லமைப்புக்குக் காரணங்காட்டவில்லை. ஆதலால் கடவுளுக்கு அந்தணன் என்ற பெயர் இயற்கையாகவே உண்டு என்பதைக்காட்டினார். நஞ்சிவபெருமானை அந்தணன் என்ற சொல்லாலே பலவிடத்தும் கூறப்பட்டிருப்பதைத் தமிழ் மறைகளிலும் ஏனைய நூல்களிலும் காணலாம். அரசனது செங்கோன்மையைக் குறிக்கும் அதிகாரத்தில் “ அந்தணர் நூற்கும் அறத்திற்குமாதியாய் நின்றது மன்னவன்கோல் ” என்ற குறளில் காணப்படும் அந்தணர் நூற்கும் எனுஞ் சொற்றொடருக்கு “நூலாராய்ச்சியையுடைய நீத்தார் ” என நம் நண்பர் பொருள்கண்டார். அந்தணர் நூற்கு ஆதியாய் நின்றது மன்னவன்கோல் என நாயனார் கூறினாரேயொழிய, நூலாராய்ச்சியுடைய அந்தணர்க்கு ஆதியாய் நின்றது மன்னவன்கோல் என்று கூறினாரில்லை. நூற்குஆதி கோலேயொழிய, அந்தணர்க்கு ஆதி நூல்எனக்கொள்ளப்படவில்லை. நூற்கு என்பதில், கு, வென்னும் நான்காம் வேற்றுமை யுருபு, தகுதிப்

பொருளைக்கொடுத்துக்கொண்டு அந்தணர்க்குரிய நூலெனப் பொருள் விளக்குகின்றது. நீத்தார் பெருமை என்னும் அதிகாரத்திற்கண்ட அந்தணர் எனுஞ் சொற்கு ஏதுப்பொருள் கொண்டு உரைகூறிய பரிமேலழகர் இங்கு அந்தணர்க்குரித்தாகிய வேதத்திற்கு எனவும், "அரசர் வாணிகரென்னும் ஏனையோர்க்கும் உரித்தாயினுந் தலைமைபற்றி அந்தணர் நூல் என்றார்" எனவும் பொருள் கண்டார்.

ஆதலால், முக்கணன் என்னுஞ் சொல் காரணங்கருதிய வழி மூன்று கண்ணுடைய விநாயகர், வீரபத்திரர், முதலியோரையும், காரணங் கருதாத வழி இடுகுறியாய்ச் சிவபெருமான் ஒருவரையே உணர்த்துதல்போல, அந்தணன் என்னும் தமிழ்ச் சொல்லும் காரணங் கருதாத வழி, இறைவனையும் அந்தணர் என்ற பார்ப்பனக் குலத்தினரையும் உணர்த்தும். ஏதுப் பெயராகுங்கால் பரிமேலழகியர் கூறியவாறு அச்சொல்லினது பொருளைக்கொண்ட யாவருக்குமாகும்.

நூலாராய்ச்சியென்பது அந்தணர்க்கு முதலிலக்கணமாகத் தொல்காப்பியத்துட் கூறப்பட்டதானும், என்று எழுதினாரே, அவ்வாறு எழுதப்பட்டுள்ள உரைப்பாகத்தை ஏன் இவர் எடுத்துக்காட்டினாரில்லை. அந்தணரைக்குறித்த தொல்காப்பியச் சூத்திரம் "நூலேகரகம் முக்கோல மணையே ஆயுங்காலை அந்தணர்க்குரிய" என்பதுவே. இதில் நூல் என்பதற்கு, ஏடு எனப்பொருளாமென நம் நண்பர் முதலிற் பிழையான பொருளைத் தம் யுக்தி வயத்தாற் கற்பித்துக்கொண்டார். பின்னர் அவ் ஏடு என்றதற்கு நூலாராய்ச்சியென இங்கு எழுதினார், தொல்காப்பியத்தில், தொல்காப்பியர் காலத்தில் இந்நாட்டிலிருந்த நால்வகை மக்களையும் அவர்களது வழக்கம் அடையாளம் முதலியவற்றையுங் கூறியுள்ளன. முதற்கண் அந்தணரையும் பிறகு அரையரையும் பிறகு வைசியரையும் பிறகு வேளாளரையும் வைத்து அந்தணர்க்குரிய ஒழுக்கம் முதலிய கூறினதில், நூல் முதலிய நான்கு பொருள்கள் அந்தணர் அடையாளமென்றார். நூல் என்பது முன்னூல் என்றும் அதுபிறப்பு வகையானும் சிறப்பு வகையானும் அந்தணர்க்குரித்தாதலானும் இச்சூத்திரத்தின் முதலில் அச்சொல் வைக்கப்பட்டதென்றும் உரையாசிரியர் பொருள் விளக்கியிருக்கின்றார். நூலாராச்சியுடையவர் எல்லோருமே. ஆதலால் அந்தணரென்போருக்குமட்டுந் தொல்காப்பியனார் அச்சொல்லைச் சேர்த்திருப்பதனால், ஏடு, நூலாராய்ச்சி, என்ற பொருள்களை அச்சொல் பயவாது. தெய்வத்தன்மை பொருந்திய உரையாசிரி

யர் கண்டதே அதன் பொருளாம். நஞ் சிவபெருமானையும், அந்தணனென்று குறித்தமையினன்றோ, "விரிநூல் திகழ் மார்பினர்" "புரிநூல் திகழ்மார்பினர்" "வேதமோதி வெண்ணூல் பூண்டு" "பிணி மல்கு நூல் மார்பினர்" "வேதியன்காண் வெண்புரிநூல் மார்பினன்காண்" என நமது தமிழ்த் திருமுறையிற் கூறப்பட்டுள்ளன. தொல்காப்பியச் சூத்திரத்துள் அந்தணர்க்குரியது நூல் எனச் சொற்றமையினன்றோ, நஞ் சீகாழிப் பிள்ளையாரும் அந்தணர் குலத்தோன்றலாரானதால், "ஒல்லை முறையுபநயனப் பருவமெய்த வுலகிறந்த சிவஞானமுணரப்பெற்றார். தொல்லை முறை விதிச் சடங்கு மறையோர் செய்யத், தோலொடு நூறாங்கினார் சுரர்கள்போற்ற" எனச் சேக்கிழார் பெருமானும் அருளிச்செய்தார். ஆதலால், நம்மவர் அவரது கற்பனைக் கொள்கைக்கு இணக்கமாகத் தொல்காப்பியச் சூத்திரத்துக்கு இந்நாள்வரையுங் காணப்படாத பொருள் எழுதியது ஒரு பிரமாணமாகாது. பின்னரும் நம்மவர் எழுதுவதாவது. "ஆபயன் குன்றும்," என்ற திருக்குறளில் அந்தணர் அறுதொழிலோர் எனப்பட்டார். அறுதொழிலோர் என்னும் பாடஞ் சிறந்ததன்று. அக்குறளுள், ஆம்பயன் என்பது ஆபயன் என விகாரப்பட்டு நின்றது. அந்தணர் என்பது தமிழ் முனிவர்க்கேயன்றி ஆரியப் பிராமணர்க்கும் பிற்காலத்தில் ஒரு பெயராக அமைந்துவிட்டது." என வெழுதியிருக்கின்றார். ஆம்பயன் என்பது ஆபயன் என விகாரப்பட்டு நின்றது என நம்மவர் எழுதுகின்றார். அவ்வாறு விகாரப்படுதற்கு இலக்கண நூல்களில் விதி காணேம். ஆம்பயன் என்பது ஆகும்பயன் என்பதன் விகாரமே. ஆம்பயன் என்பது ஆபயன் என விகாரப்பட்டதாகக் கூறுவது, இருவகை வழக்கினும் ஆகா வென இலக்கண நூல் விற்பனர் கூறுகின்றார். இலக்கணக்கொத்து ஒழிபியல் ௯-வது சூத்திரத்தில் "தொக்குழியப் பொரு
"டோன்றியும் வேறோர், பொருளே தோன்றியும் பல பொரு
"டோன்றியும், வரும் பின்னிரண்டு மயக்கங்கொடுக்குமத்
"தொகை யிருவகை வழக்கினுமாகா." எனவும், உதாரணத்தில், ஆகும் வாகனம், ஆருவாகனம், ஆவாகனம் எனக் காட்டியிருப்பதையுங் கண்டு, நம்மவர் கூறியது பிழையெனவ் இலக்கண நூல் வல்லோர் மொழிவர்; தொல்காப்பிய நூலைவிட ஆதியாயுள்ள இலக்கணநூல் தமிழில் கிடையாது. அந்நூலில் தமிழர் ஆரியர் என மக்களைப் பிரித்திருக்கவில்லை. தமிழர், தமிழர் எனப் போராடுவது வீணே. ஒருவருக்கொருவர் தாழ்ந்தவராகக்கொண்டு, அந்தணர், அரையர், வைசியர், வேளாளர் என நான்கு கூறாகத் தமிழ்நாட்டு மக்களைப் பிரித்திருக்கிறது.

"மறைய வரர்ச்சனை வண்படி கந்தான்
இறைய வரர்ச்சனை யேய பொன்னுகும்
குறைவிலா வயிசியர்க்குக் கோமள மாந்
துறையுடை சூத்திரர் தொல்வாண லிங்கமே"

உலகப்பற்றை யெல்லாம்விட்டு மூவாயிரமாண்டு சிவயோகத் திருந்த சிவயோகியாரும் அகத்தியர் காலத்தவருமாகிய திருமூலரும் மேற்காட்டிய திருமந்திரச்செய்யுளில் நான்கு வருணமுண்டென்பதைக் காட்டி அவர்கள் மறையவர், அரையர், வசியர், சூத்திரர் எனக் கூறியிருப்பாரேயானல், நம் நாட்டில் தொல்காப்பியச் சூத்திரங்களின்படி நான்கு வருணமுண்டென்பதற்கு வேறு சான்று வேண்டுமா? துறையுடை சூத்திரர் என்றது சற்சூத்திரர் அசற்சூத்திரர் என்னும் பிரிவுடைமையால். பன்னிருபாட்டியல் ஆசிரியரும், அவ்வாறே "பார்ப்பாரரசர் வணிகர் வேளாளரெனப் பாற்படு நாற்பெயர் குலப்பெயராகும்." எனக்குலம் நான்கெனக் கூறினர். முதற் குலத்தார் அந்தணராவார். அவருக்கு முன்னூல், கமண்டலம், முக்கோல், மணை ஆதிய உரிமைப் பொருளாகக் கூறப்பட்டன. மற்றவர்க்கு அவ்வாறு கூறவில்லை. உரை ஆசிரியர் மேற்கோளால் அவரைப் பார்ப்பாரெனவும் காட்டினர். அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமுமென்னுஞ் சூத்திரத்தின் பகுதியும் அந்தணரைக் குறித்ததே. அப்பகுதிக்கு ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல், ஏற்றல் ஆகிய அறுதொழிலவர்க் குரியனவென்னுமுறை காணப்படுகின்றது. இதனல் அந்தணர் என்ற மொழி தொல்காப்பியர் காலமுதற்கொண்டே பார்ப்பனரைக்குறித்த மொழியாய் நிற்கின்றது. "ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர் காவலன் காவானெனின்" என்பது குறள். இக்குறளால் கொடுங்கோலரசன் நாட்டில் நிகழுங் குற்றங்கூறப்பட்டது. செங்கோல் அரசன் ஆளும் நாட்டில் "அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது மன்னவன்கோல்" எனச்சொல்லி அந்த நாட்டின் சிறப்பைச் சொன்னதற்கு எதிராக "ஆபயன் குன்றும்" எனும் குறளை நாயனர் அருளியிருக்கின்றார். இக்குறளுக்குப் பரிமேலழகியார் உரையாவது, "காத்தற்குரிய அரசன் உயிர்களைக் காவானு "யின் அறனில்லாத அவன் நாட்டுப் பசுக்களும் பால் குன்றும் "அந்தணரும் நூல்களை மறந்துவிடுவார் என்றவாறு. அறு "தொழிலாவன ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், "ஈதல், ஏற்றல் எனவிவை. பசுக்கள் பால் குன்றியவழி அவி "யின்மையானும், அது கொடுத்தற்குரியார் மந்திரங்கற்பமென் "பன ஓதாமையானும், வேள்வி நடவாதாம். ஆகவே வானம் "பெயலொல்லாதென்பதாயிற்று" என்பதே. (பெரிய புரா

ணம் திருஞானசம்பந்தசுவாமிகள் புராணம் "தென்னவன் மாறன்" என்ற செய்யுட்படிக்கும் இருபா இருபஃது "மன்ற பாண்டியன் கேட்பக்கிளக்கு மெய்ஞ்ஞானத்தின்" என்றதிருப் பாட்டுப்படிக்கும்) வைகைமா நதிக்கரையே தீட்சாமண்டபமாக நெடுமாற நாயனூர்க்குச் சிவஞானோபதேசஞ் செய்து, அருளிச்செய்ததும் அந்நதியின் வெள்ளப் பெருக்கில் எதிரேறச் செல்லவிட்ட ஏட்டில் தீட்டியதுமான திருப்பாசுரத்தின் முதற் பாசுரமாவது "வாழ்க அந்தணர் வானவர் ஆனினம், வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக" என்றதும் மேற்கண்ட குறட்பாவின் கருத்தே. இத்திருப்பாசுரத்துக்கு சேக்கிழார் பெருமான் விளக்கிக் காட்டிய அரிய பொருளடங்கிய செய்யுட்கள்.

"அந்தணர் தேவரா னினங்கள் வாழ்கவென்
றிந்தமெய்ம் மொழிப்பய னுலக மின்புறச்
சந்தவேள்வி கண்முதற் சங்க ரற்குமுன்
வந்த வர்ச்சனை வழிபாடு மன்னவாம்."

"வேள்வி நற்பயன் வீழ்புன லாவது
நாளு மர்ச்சனை நல்லுறுப் பாதலால்
ஆளு மன்னனை வாழ்த்திய தர்ச்சனை
மூளு மற்றிவை காக்கு முறைமையால்."

மேற் குறட்பாவுஞ் சம்பந்தப் பெருமான் திருவாக்கும் பொருளால் வேற்றுமை யில்லனவென்பதை நற்றமிழ்ச் சைவப் பெருமக்கள் பலருங் கண்டு களிப்பாராக. நந்திருமூல நாயனூர் அருளிய

"ஆவையும் பாவையும் மற்றற வோரையுந்
தேவர்கள் போற்றுந் திருவேடத் தாரையும்
காவலன் காப்பவன் காவா தொழிவனேல்
மேவு மறுமைக்கு மீளா நரகமே."

என்றுந் திருமந்திரச் செய்யுளையும் நோக்குங்கள். பசுக்களினது அவயவங்களில் திரிமூர்த்திகள் ஆதியாக வெல்லாத் தேவர்களும் வசிப்பார்களென்று சிவதருமோத்தரமென்னுஞ் சிவாகமம் விரிவாய்க் கூறும்.

"ஆக்க டன்னை அருமறை நான்முறை
காக்க காக்க லிலாரை யக்காசினி
காக்குங் காவலன் காய்ந்து காப்பித்திடி
னேக்கியே சிவலோகத் துறைவனே."

என்னு மிச்சிவதருமோத்தரச் செய்யுள் பசுவுக்குத் தீங்கு வாராமற் காத்த அரசன் சிவலோகத் துறைவனெனக் கூறிற்று.

"காக்கிலாரையும் காக்குமவரையும்
நோக்குநாடொறு நோக்கிலனாகிலும்
காக்கிலாரைக் கடிகிலனாகிலும்
தீக்குக்காட்டமெனக் கனல்சேர்வரே."

என்னு மிச்சிவதருமோத்தரச் செய்யுள், பசுவுக்குத் தீங்கு வராது காவாத அரசன் அக்கினிக்கு விறகு எவ்வாறு இரையாமோ அவ்வாறு நரகத்துக்கு இரையாவானெனக் கூறிற்று.

நம் அப்பமூர்த்திகளும் ஆவினுக் கருங்கலமரனஞ்சாடுதல் என, ஆக்களைப் புகழ்ந்து ஓதினார்கள். பெரிய புராணத்தில் சண்டேச நாயனார் புராணத்தில் சேக்கிழார் மூர்த்திகள் பசுவைப்பற்றி அருளிய சிறப்புகளடங்கிய செய்யுட்களை இங்கு எழுதுவதானால் மிக விரியும். அச்செய்யுட்களையும் வாசிக்கும் படி நம்மவர்களை வேண்டுகிறோம். தமிழ்ச் சங்க நூல்களிலே, பார்ப்பார் அல்லது அந்தணரைக்கூற நேரிட்ட அமையங்களிலெல்லாம் பசுவையுஞ் சேர்த்தே கூறுவர்.

"ஆவும் ஆனியற் பார்ப்பனமாக்களும்" புறநானூறு
"எச்சிலார் தீண்டார் பசுப்பார்ப்பார்" ஆசாரக்கோவை
"ஐம்பூதம் பார்ப்பார் பசுத்திங்கள் நாயிறு,, ஷை
"பார்ப்பார் அறவோர் பசுப்பத்தினிப் பெண்டிர்" சிலப்பதிகாரம்

என் பசுவையும் பார்ப்பாரையுஞ் சேர்த்துக் கூறவேண்டியிருந்ததென்றால் பார்ப்பார் செய்யும் நித்திய நைமித்திய ஆகுதியக்ஞங்களுக்குப் பசுவின் பால் நெய் இன்றியமையாதன வாதலால்.

சிவபெருமானுக்கு அபிடேகத்துக்கும் பால் தயிர் நெய் முதலிய பஞ்சகௌவியமும் கோரோசனையும் பசுவினின்றும் பெறப்படுவன. சைவத்துக்கே முதற் காரணமாயுள்ள விபூதி விளைதற்குமான மூலப்பொருளையும் பசுவினின்றும் பெறுகின்றோம்.

இவ்வித மேன்மைவாய்ந்த பசுக்களைப் புரப்பது அரசனது கடமையென்று திருமூலர், சிவதருமோத்தர ஆசிரியர், சேக்கிழார் பெருமான், சொன்னவாறு, பொய்யாமொழியாரும் அவரியற்றிய சைவத்தையே உள்ளீடாக அமைத்த திருக்குறளில் புகன்றார். இதனாலன்றோ நம் மூதன்னையாரும் தேவர் குறளும், மூவர் தமிழாகிய சைவ நூல்களெல்லாம் ஓரே வாசகமென் றறியென்று கட்டளையிட்டார்.

இனி அக்குறளில், அறுதொழில் என்ற பாடஞ் சிறந்ததல்லவென்று நண்பர் கூறினரே, அது எம்மட்டும் பொருந்துமென்பதைப் பார்ப்போம். புறநானூறு ௬௬௩-வது செய்யு

ளில் அறுதொழிலந்தணர் எனக் காண்கிறோம். பதிற்றுப் பத்து மூன்றாம்பத்தில் அவ்வறுதொழில் "ஓதல் வேட்டல் அவை பிறர்ச் செய்தல் ஈதல் ஏற்றல் என்றாறு புரிந்தொழுகும் அறம்புரியந்தணர்" என்றதனால் அவ்வறுதொழில் இன்னவை யென நன்கு விளங்கும். "அந்தணரென்போர் அறுதொழிற் பூண்டுளோர்" எனத் திருமூலநாயனாரும் அருளினார். இந் நூல்களுக்கெல்லாம் இலக்கண்ம் தொல்காப்பியமே. மனுஸ் மிருதி முதலத்தியாயம். அஅ-வது சுலோகம்.

𑌅𑌧𑍍𑌯𑌾𑌪𑌨𑌂 𑌅𑌧𑍍𑌯𑌯𑌨𑌂 𑌯𑌜𑌨𑌂 𑌯𑌾𑌜𑌨𑌂 𑌤𑌥𑌾 ।
𑌦𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 𑌚𑍈𑌵 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌨𑌾𑌮𑌕𑌲𑍍𑌪𑌯𑌤𑍍 ॥

"அத்யாபநம் ச்சாத்யயநம் யஜநம் யாஜநந்ததா |
தாநம் பிரதிக்கிரஹம் சைவப்ராஹ்மணாநாமகல்பயத்||

(இ-ள்) பிராமணனுக்கு ஓதுவித்தல் ஓதல் எக்கியஞ்செய்தல் செய்வித்தல் தானங்கொடுத்தல் தானம் வாங்கல் ஆகிய அறு தொழிலையும் ஏற்படுத்தினர் என்பதே. இந்த நூல்களெல் லாம் அந்தணருக்கு அறுதொழில் உரியவையென ஒற்றுமைப் படக்கூறுவதைச் செந்தமிழ்ச் சைவக் கல்விவாணர்காள்! கூர்ந்து கவனியுங்கள். சம்பந்தப்பெருமானைத் திருமணம் செய்துகொள்ளவேண்டுமென அந்தணர்கள் பிரார்த்தித் ததைச் சேக்கிழார் கூறுவதையுங் கவனியுங்கள்.

"அருமறையோரவர் பின்னுங் கைதொழுதங் கறிவிப்பா
ரிருநிலத்துல் மறைவழக்க மெடுத்தீர் நீராதலினால்
வருமுறையா லறுதொழிலின் வைதிகமா நெறியொழுகுந்
திருமணஞ்செய் தருளுதற்குத் திருவுள்ளஞ் செய்யுமென"

இச்செய்யுளில் வைதிகமாம் வேதமார்க்கம் அறுதொழிலை உடையதென்பதைக் குறிப்பித்தார்.

இவ்வாறு, அந்தணர்க்குரித்தாகிய அறுதொழிலை யுடைய அந்தணரை அறுதொழிலோரென்றும் அவர்களது வேதமந்திரங்களை நூல் என்றுங் குறிப்பிட்டு அறுதொழிலோர் நூன்மறப்பர் எனச் சைவப்பெரியாராகிய பொய்யா மொழி யார் கூறினாரென்பது அதிதுல்யமாய் விளங்கும். நம்மவர் திரு நான்மறை விளக்கமெனும் வியாசத்தில் அறுதொழிலோ ரென் பது சிறந்த பாடமன்றென்றுமாத்திரங் கூறிப் பின்னரெழுதிய மற்றொரு வியாசத்தில் அறிதொழிலோரென்பதே சிறந்த பாட மெனக் குறித்தார். இக்கூற்றை வலியுறுத்த, கழகத்தினின் றும் வெளியிட்ட திருக்குறள் மூலத்தில் அறிதொழிலோ ரென்றே மாற்றப்பட்டிருக்கின்றது, இவ்வாறு மாற்றுவதற்கு

ஆதாரம் ஷை கழகத் தலைவர் கேட்டதில் ஏட்டுப் பிரதியில் அவ்வாறு இருப்பதென்று நம்மவர் கூறியதாகத் தெரிகின்றோம். இனியாவது அவ்வேட்டுப் பிரதியைக் கழகத்தவருக்கும் நமக்குங் காட்டி அவரது கூற்றை உறுதிப்படுத்திக் கொள்வாராக.

மூவகை நிகண்டாசிரியர்களும், அறு தொழிலாளர், அந்தணர், என்ற சொற்கள் பார்ப்பார் என்ற சொல்லுக்குப் பரியாய நாமங்களாகவும் கூறியுள்ளார்கள்.

இதுகாறுங் காட்டிய அதி பிரபல பிரமாணங்களால் அறுதொழிலென்பது இன்னவையென வரையறுத்துக் கூறப்பட்டும் அறு தொழிலோர் என்னும் பதம் அவ் அறுதொழிற் குரித்தோராகிய பார்ப்பன மக்களையே குறிக்குமென்றுங் காட்டப்பட்டது.

இனி நம் நண்பர், பார்ப்பார் என்றசொற்குப் பொருள் விளக்கப் புகுகின்றார். அது விஷயம் அவர் எழுதுவதாவது. "பார்ப்பார் என்ற சொல் ஆதியில் தமிழ் நாட்டில் கடவுட் "பூசைசெய்வோர்க்கும் நூலாராய்ச்சி செய்வோர்க்குஞ் சிறந்த "பெயராக அமைந்திருந்தது" என்றார். இவ்வுரைக்குப் பிரமாணம் ஒன்றுமிவர் காட்டிலர். ஆதலால் அது வெற்றுரையேயாம். "பார்ப்பார் அரசர் வணிகர் வேளாளரெனப் பாற்படு நாற்பெயர் குலப்பெயராகும்" என்ற பன்னிரு பாட்டியற் சூத்திரமொன்றுமே பார்ப்பார் என்ற சொல், முதற் குலத்தவர் பெயரென விளக்குகின்றது. பின்னுமவர் எழுதுவதாவது, "கள்ளும் ஊனுங்கைவிட்டுக் கடவுள் வழிபாடு செய்ப "வர்க்கே அது பெயராக விருந்ததாகத் தெரியவருகின்றது" என்றெழுதினார். இவருக்குத் தெரிவித்தவர் யாவரோ? அல்லது எந்த நூல் தெரிவித்ததோ? அதை விளக்கிக் காட்டினாரில்லை. எல்லாம் இவர் வாசா கைங்கரியமாகவே இருக்கின்றன. "பண்டைய நூல் சிலவற்றில் பார்ப்பாருடைய உணவு ஊன் கலப்பில்லாத உணவு எனக் கூறப்பட்டுளது" என்று எழுதினார். அஃதிருக்கலாம். சிவாலயங்களில் பரார்த்தபூசை புரிவோர் ஆதி சைவப் பிராமணர்களை அஃது குறிக்கலாம், பின்னும் நமமவர் எழுதுவதாவது "இப்பொழுது விளங்குகின்ற சைவர் என்ற சொல்லின் பொருளே பார்பபார் என்ற சொல்லிற்குப் பழய காலத்தில் வழங்கியதாகக் கருத இடமுண்டு" என எழுதியிருக்கின்றார். இபபொழுது விளங்குகின்ற சைவர் என்ற சொல்லின பொருள் இன்னதென இவர் எழுதவில்லை. வழக்கத்தில் சைவர் என்ற சொல்லிற்குப் பற்பலர் பற்பலவிதமாக அவரவர்களிஷ்டம்போலப் பொருள் கொள்ளு

கிறார்கள். நம் நண்பருக்கு அவ்வாறு கருதக் கிடைத்த இடத்தை மற்றையோருக்குங் காட்டியிருந்தால் பேருபகாரமாயிருக்குமே. சிவ சம்பந்தப்படுவோர் சைவராவார். அவர் எக்குலத்தாராயினும் எந்நாட்டாராயினும் கவனிக்கத்தக்கதில்லை. பார்ப்பார் என்ற சொல் மேற்காட்டிய பன்னிரு பாட்டியற் சூத்திரப்படி முதற் குலத்தாரையே குறிக்கும். தொல்காப்பியனாரும், முதற் குலத்தாரைப், பார்ப்பார், அந்தணர் மறையோர் எனக் கூறினார். நமது நிகண்டுகளிலும் அவ்வாறே கூறியுள்ளது. மனம் போன போக்கிலே போகவேண்டாம் என்ற நமது நாட்டுப் பண்டைய நீதிமொழியை மறந்து நமது பூர்வீக நூல்களில் இல்லாத ஓர் நவீன மார்க்கத்தைக் கற்பிக்கப் புகுந்து அதற்குத் தக்கவாறு ஆதாரங்கள் தேடுமிவர் கூற்றை எவ்வாறு ஏற்கலாம். நிற்க, மற்றுமிவர் எழுதுவதாவது:—

"தமிழ் நாட்டுப் பார்ப்பார் ஊனுண்ணுமை, "நோய் கொண்டார் பார்ப்பாருந் தின்பருடம்பு" என்னும் பழமொழியாலும் யூகித்துணரப்படும்." என்று எழுதியிருக்கின்றார். இந்த மேற்கோளில் பார்ப்பார் என்று எழுதப்பட்டிருக்கிறதே யொழியத் தமிழ் நாட்டுப் பார்ப்பாரென வெழுதப்பட்டிருக்கவில்லை. ஆதலால், பார்ப்பார் எனுங் குலத்தார் எந்தெந்த நாடுகளில் உள்ளாரோ அவர்களையெல்லாஞ் சமஷ்டியாகக் குறிக்கும். தமிழ் நாட்டுப் பார்ப்பாரை மட்டுங் குறியாது. அவ்வாறல்ல, இஃதியற்றிய கவிவாணர் தமிழ் நாட்டார். இந்நூல் வேறுபாஷைகளின் மொழிபெயர்ப்பல்ல. தமிழ்ச் சங்கமருவிய தமிழ்நூல். ஆதலான் இதில் பார்ப்பார் என்றது தமிழ் நாட்டுப் பார்ப்பாரையே குறிக்குமெனின், அற்றன்று, இந்நூலாசிரியர் இந்நூலில் தமிழ் நாட்டுக் கொள்கைகளை மட்டுங் கூறினாரில்லை. வடநாட்டுப் பஞ்சபாண்டவர்கள், இராமன் இவர்கள் சரித்திரமும் இந்நூலில் இடம்பெற்று நிற்கின்றன. இந்நூலிற் கூறப்படும் நீதி பொதுத் தன்மையால் எல்லோருக்கும் பயன்படும். த்விஜர் (இருபிறப்பர்), சிவத்விஜர் (ஆதிசைவராகிய இருபிறப்பர்) என்னும் பார்ப்பனர்களே இந்நூலாசிரியர் காலத்தும் அதற்கு முன்னரும் பின்னரும், எந்நாடுகளிலும் இருந்தமைபோல இந்நாட்டினு மிருந்திருக்கிறார்கள். ஆனதால் வேறு அடைமொழியின்றி பார்ப்பார் என்றே நூலாசிரியர் கூறியிருப்பதால், அம்மொழி சமஷ்டியாகவே பொருள்படுமென்பதில் ஐயமில்லை. இஃது இவ்வாறாக நம் நண்பர் காட்டிய மேற்கோள் சுத்த பாடமா? அதன் கருத்து என்ன? என்பதைப் பல வித்துவ சிரோமணிகளைக் கேட்டுத் தெரிந்ததன் பயனாவது. பழமொழியென்ற நூல் நால்வரால்

அச்சிடப்பட்டு வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றது. முதலாவது அச்சிட்டவர் சோடசாவதானம் சுப்பராயச் செட்டியாரவர்கள். இரண்டாவது, தமிழ்ப் பண்டிதர் ஆறுமுக நயினாரவர்கள். மூன்றாவது, மதுரைச் சங்கம் பிரமஸ்ரீ இராகவய்யங்கார் அவர்கள். நான்காவது, சென்னை செல்வக்கேசவராய முதலியாரவர்கள் M.A. நான்கு பதிப்புகளிலும் 'தின்பர் உடம்பு' எனக் காணப்படுகின்றது. நண்பர் காட்டியபடி 'தின்பர் உடம்பு' எனக் காணப்படவில்லை. உடம்பு என்றது மனிதர் தேகத்தையே சுட்டும். நூல்களைத் திருத்துவது நண்பருக்கு வழக்கமாய்க் காணப்படுவதால் அவர் தாம், திருத்திக் கொண்டாரோ, அச்சுப்பிழையோ அறியக்கூடவில்லை. அஃதறியாதவரை, அச்சுப்பிழை யென்றே வைத்துக்கொண்டு உடம்பு என்ற சொல்லையே பொருளாய்தலுக்குத் தகுதியானதென்று வைத்துக்கொண்டோம். மற்றைய பாகத்திலும் பாடபேதங்களுள்ளன. மூன்று, நான்காவது பதிப்புகளில் "நாய் கொண்டாற் பார்பாருந் தின்பர் உடம்பு" எனவும் மற்றைய இரண்டு பதிப்புகளில் "நோய்கொண்டாற் பார்ப்பாருந் தின்பர் உடம்பு" எனவும் காணப்படுகின்றது. இது விஷயம் ஆராய்ந்ததில், நாய்கொண்டாற் பார்ப்பாருந் தின்பர் உடம்பு என்றதே சுத்தபாடமெனத் தெரிந்தது. பிரமஸ்ரீ இராகவய்யங்கார் அவர்கள் வெளியிட்ட புத்தகத்தில் இதன் விஷயம் எழுதியிருப்பதாவது, "இதன் பழமொழி பண்டைய வூழி காலத்து ஒழுக்கம்பற்றிப் பிறந்தது. ஆதலால் அவ்வொழுக்கம் பழிக்கப்பட்ட பிற்காலத்து வழக்கிற் பொருளற்றமையால் இறந்தாயிற்று" என்பதே.

அஶ்வாலம்பம் கவாலம்பம் ஸந்ந்யாஸம் பலபைத்ருகம்।
தேவரேண ஸுதோத்பத்திம் கலௌ பஞ்ச விவர்ஜயேத்॥

"அஸ்வாலம்பம் கவாலம்பம் ஸந்யாஸம் பலபைத்ர்கம்
தேவரேணஸுதோத்பத்திம் கலௌ பஞ்ச விவர்ஜயேத்."

என்னும் ஸ்மிருதி ஆகிய பிரமாணங்களாலறிக. பின்னும் ஐயங்காரவர்கள் எழுதியிருப்பதாவது, "வேட்டையின் ஞமலி கறித்திடு செய்யமென்றசையும் ஒன்றிமிச்சிலென விகழ்ந்துரை யாருணர்ந்துளோர்" என்பதுமொரு சான்று. இங்ஙனமன்றி "நோய்கொண்டாற் பார்ப்பாருந் தின்பர் உடம்பு" என்பது பிரதி பேதமாயிருப்பினும், அது இழிந்தோர் வாய்ப்பட்ட நல்லுரைக்கு உவமமாகாமையானும் உடம்பே யிழிக்கப்பட்டதாக வேண்டுமாதலானும் பொருளொடு பொருந்தாமையானும், பிறிதொரு சிறப்புமில்லாமையானும் அது பாடமன்றென வுணர்க" என்பதே "சுத்தம் ஆகேடகே ஶுநாம்" (வேட்டை

யில் நாய் முகம் சுத்தம்) என்ற வாக்கியமுமிருப்பதாக ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத பண்டிதரவர்களும் எழுதியிருக்கின்றார்கள். இந்தப் பழமொழி வெண்பாவின் விஷயங்களின் உவமான உபமேயத்துக்கு இவர்கள் கருத்துத்தான் பொருத்தமாக விருக்கின்றது.

இக்காரணங்களால் மேற்காட்டிய பழமொழி வெண்பாவின் பகுதி தமிழ்நாட்டுப் பார்ப்பாரை மட்டும் சுட்டியதில்லையென்பதும் நாய் கொண்டால் என்பதே சுத்த பாடமென்பதும் பெறப்படும். நிற்கப், பின்னும் நம்மவர் எழுதுவதாவது. "ஆரியப்பிராமணர் ஊனுண்டல் மநு ஸ்மிருதியில் யாகத்தின் "மாத்திரமல்லாமல் சிரார்த்தங்களிலும் ஊன் நிவேதித்தல் "வேண்டுமென்ற விதியினை வகுத்துக் கூறுமிடத்து" என்றெழுதிக்கொண்டு ஸ்மிருதியில் அவ்வூன்வகைக்குக்கூறும் மிருகம் பட்சிகளின் பெயர்களை யெல்லாம் படிப்போர் பிரமையடையுமாறு, எழுதிக் காட்டினர். தமிழ்க் கூர்மபுராணம் முதலியவற்றுள்ளும் அவ்வாறே கூறப்பட்டு மிருக்கின்றது. இவ்விதியெல்லாம் பண்டைய ஊழிக்காலத்து ஒழுக்கம்பற்றியெழுந்தவை. * இக்காலம் அவ்வித ஒழுக்க மிறந்ததாயிற்று. சிருட்டி காலத்தொடக்கத்தில் ஊனுண்டல் உலகமெல்லாம் நிரம்பியே யிருந்ததாகத் தெரிகின்றது. தற்காலத்திலும் காட்சிப்பிரமாணத்தில் பூமண்டலமுற்றுமே நம் இந்துதேசமுள்பட, சைவத்தைத் தழுவினவர்கள் எனப்போலிப் பெயருடையோருமுள்பட, (சிவாகம விதிப்படி பண்டையக் காலந்தொட்டே சைவ அநுஷ்டான முறையுடைய சிலர் ஒழிய) ஊனுண்டலை இன்னமுங்காணலாம். மனு ஸ்மிருதி பூர்வத்தில் உண்டானமையால் அதில் அவ்வாறு கூறியிருந்தாலும் அதே சாஸ்திரத்தில் "மிருகங்களின் தேகத்தைப் புசிக்க மனதிருந்தால் நெய்யினாலாவது மாவினாலாவது மிருக ரூபமாகச்செய்து புசிக்கலாமேதவிர வீணாகப்பசுவைக் கொல்லவேண்டுமென்று மனதினாலும் நினைக்கக்கூடாது."

"பசுவை வீணாகக்கொல்பவன் அந்தப் பசுவுக்கு எத்தனை மயிரிருக்கின்றனவோ அத்தனை ஜநநம் பசுவாகப்பிறந்து ஒருவரால் கொல்லப்படுவான்." "எவன் நூறு வருஷம் வரையில் வருடந்தோறும் அசுவமேத யாகஞ்செய்கிறானோ, எவன் மாம்ஸத்தைச் சாமளவும் நீக்குகிறானோ, இவ்விருவருக்கும் புண்ணியபலம் சரிதான்."

---

* மேற்காட்டிய, அஸ்வாலம்பம், எனும் வாக்கியத்தில் பலபைத்ரகம், எனும் விஷயம் கலியுகத்தில் விலக்கப்பட்டிருத்தலைக் கவனிக்க.

"மாம்ஸத்தை நீக்குகிறவன் எந்தப்பலனை அடைகிறானோ அதைப் பழம், கிழங்கு, சாலி அன்னம் இவைகளால் ஜீவிக்கிற முனியுமடையமாட்டான்" என்றும் கூறப்பட்டிருக்கின்றன. குடங்குடமாகத் தினம் தினம் கள்ளருந்தும் ஒருவனை நல்வழிப்படுத்தற் பொருட்டு அவனிடம் அன்பு வைத்த பெரியோர் அவனை நோக்கி, அப்பா நீ இப்படிச் செய்யாதே தினம் ஒரு ஆழாக்குக் கள் அருந்திவாவென்றுகூறி, அவனை அவ்வழியிற்றிருப்பிச் சிலநாட்கழித்து ஒரு வீசம் இரண்டு வீசம் சாப்பிட்டு வாவென்றுகூறி, அவன் அதனிற் பழகிவந்தபின்னர், இனி இப்படிச்செய்யாதே ஒரு வீசம் கள்ளில் ஒரு வீசம் சுத்த ஜலம் சேர்த்து அருந்திவாவென்றுகூறி முடிவாகச் சுத்த ஜலமே சாப்பிடும்படிகூறிச் சோபானமுறையாக அவனை நல்வழியில் நிலைநிறுத்தினவாறு போல, உயிர்வர்க்கங்கள் மீது கருணை பூண்ட ஸ்மிருதிகாரரும் சோபானக்கிரமமாகத் தர்மம் கூறியிருப்பதை உய்த்துணரவேண்டும். தர்ம சாஸ்திரத்தின் உட்கருத்து கொல்லாமையைக் கைக்கொள்ளவேண்டுமென்பதே. ஆனதால் பொதுவிதி சிறப்புவிதிகள் இன்னவெனவோர்ந்து உண்மை கடைப்பிடிக்கவேண்டுமே தவிர நிகழ்ச்சியிலில்லாது நிஷேதமென விலக்கப்பட்ட பண்டைய யுக தர்மங்களை யெடுத்துக்காட்டி அவற்றிற்கு ஒரு பழி கற்பிப்பது பொருத்தமிலது.

"கள்ளுமூனும் நீவிரும்பினல் மகங்கள்செய் காமத்தின்மனதானல்
கொள்ளும்பெண்டொடு கலவிசெய்யெனிலிவன் குறையெலாந்
தொடானென்றே
தள்ளும்வேதத்தின் சம்மதஞ்சகலமுந் தவிர்வதே கருத்தாகும்
விள்ளுமிவ்விதியென் னெனிற் பூருவநியமமாம் விதியன்றே"

என்னுஞ் செய்யுளில் மேலே காட்டிய ஸ்மிருதியின் கருத்தை யடக்கியே கைவல்ய நூலாசிரியரும் கூறுவாராயினர். இனி நம்மவர் எழுதுவதாவது. "சிவாகமங்களுள் அயன்முகத் "துதித்த பிராமணர் வேறு. சிவன் முகத்துதித்த அந்தணர் "வேறு. முன்னையோர் பரார்த்த பூசனைக்குரியரல்லர். "பின்னையோர் அதற்குச் சிறந்தோர். முன்னையோர் அது புரி "யின் நாட்டிற்குத் தீதுவரும் என்று கூறப்பட்டுளது. அக் "கருத்தை விளக்கும் திருமூலமாமுனிவர்.

"பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றனையர்ச் சிக்கின்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டிற்குப் பஞ்சமுமா மென்றே
சீர்கொண்ட நந்தி தெரிந் துரைத்தானே"

"என்றவிடத்து ஆரியப் பிராமணனைப் பேர்கொண்ட பார்ப்

"பான் என்றனர்." என்று எழுதியிருக்கின்றார். இது யாவர்க்கு முடன்பாடே.

இதற்குமேல் அவர் எழுதுவதாவது. "பேர்கொண்ட "பார்ப்பானென்பதற்குப் பேர்மாத்திரத்தாலே பார்ப்பான், "ஒழுக்கத்தால் அப்படியல்லாதவன் என்று பொருள் "கொள்ளலாமோவெனில், அது பொருந்தாது. என்னை, நல் "லொழுக்கமுடையனும் மூவகைத் தீக்கையும் பெற்று ஆசாரி "யாபிஷேகமுடைய மகா சைவனெனப்படும் ஸ்மார்த்தப் "பிராமணனுங்கூடப் பரார்த்த பூசைக்குரியவனல்லனென்று "ஆகமமுழங்குதலாலென்க. ஆகலான் பார்ப்பான் என்ற "பெயர் முன்னில்லாமல் பின் தனக்கு ஒரு நாமமாக வைத்துக் "கொண்ட பிராமணன் என்ற பொருள்தான் அத்தொடர்க்கு "இயைபுடைத்து" என்றெழுதி யிருக்கின்றார். மேலே பெரு எழுத்தால் காட்டியிருக்கிற இவரது முடிபு மட்டும் பிழையுள்ளதே. ஏனெனில் தொல்காப்பியத்திலேயே, அந்தணர், பார்ப்பார் என்ற சொற்கள் ஒன்றுக்கொன்று பரியாய நாமமாகவே கூறப்பட்டுளது. அன்றியும் மேற்செய்யுள் கூறிய திருமூலரே, அந்தணர் ஒழுக்கங்கூறிய இயலில், அந்தணர், மறையோர், பார்ப்பார், பிராமணர் என்ற மொழிகளை ஒரே குலத்தவரைக் குறிக்கும் பரியாய நாமங்களாக எடுத்து ஆண்டிருக்கின்றனர். சிவன் முகத்திலுதித்த அந்தணரையும், பிரமன் முகத்திலுதித்த அந்தணரையும், அந்தணர், பார்ப்பார், மறையோர், பிராமணர் என்ற பேர்கள் குறிப்பிடு மானதால் பிரமன் முகத்துதித்த அந்தணர் என்பவரைப் பிரித்து விலக்குவதற்காகவே "பேர்கொண்ட" வெனும் அடைமொழி சேர்க்கப்பட்டிருக்கின்றது. இதற்குப் பொரு ளென்னையெனின், பேர் என்ற சொல், புகழ்ச்சிகீர்த்தி என் னும் பொருளையுந்தரும். "இருபிறப்பு இருபெயர் ஈரநெஞ்சத் தொருபெயர் அந்தணர் அறன் அமர்ந்தோயே" என்னும் பரிபாடலிற்போந்த, ஒருபெயர் என்பதற்கு ஒப்பில்லாத புகழ் என்று பரிமேலழகியார் உரைகூறியுள்ளார். அந்த இடமும் அந்தணரைக் குறித்ததே. இங்கும் அந்தணரைக் குறித்ததே. இவ்வளவு ஆழ்ந்த ஆராய்ச்சி வேண்டாம். உலகவழக்கில், அவன் நிரம்பப் பேர்பெற்றவன் என்று சொன்னால் அவன் கீர்த்தியுடையவன் என்பதைக் குறிப்பிடுவதாயிருக்கிறது. ஆனதால் பேர்கொண்ட பார்ப்பானென்றால் மிக்க புகழ் அதாவது வைதிக கருமங்களோடு சிவாகமப்படி தீட்சை முதலானவை பெற்று மகா சைவனெனப் பேர்கொண்டிருந்தாலும் அவன் பரார்த்த பூசைக்கருகனல்ல னென்பதை நம் திருமூல மூர்த்திகள் குறிப்பிட்டுப் பேர்கொண்ட எனும் அடை

மொழியைக் கொடுத்துச் செய்யுளியற்றினரென்பது வெளிப் படை, இவ்வாறு பொருள் கொள்வதைவிடுத்து நம்மவர் ஏதேதோ எழுதியிருக்கிறார். இங்கு ஒன்று குறிப்பிடத் தக்கது. நம்மவர் மேனாட்டுச் சரித்திர ஆராய்ச்சியை உண்மை யெனக்கருதி தற்காலம் நம் பரதகண்டத்திலுள்ள ஆரிய அந்தணர்களென்போர் மிலேச்ச நாடாகிய பெர்சியா தேயத்தி னின்றும் ஆதியில் போந்தவர்களின் சந்ததியாரெனுங் கோட் பாடுடையவரா யிருக்கச், சிவன் முகத்திலுதித்த அந்தணர், அயன் முகத்திலுதித்த பிராமணர் என்னும் வேத சிவாகம வழக்கை யெடுத்து விவகரிப்பதில் இவருக்கு என்ன உண்மை புலப்படும். ஒன்று நமது வேத சிவாகம வழியினிற்கவேண் டும். அல்லது அவற்றிற்குப் புறம்பான மேனாட்டார் கொள்கை யினிறங்கி விடவேண்டும். இருவகைகளையும் கைக்கொண்டவ ராக ஒழுகுதல் இருவகைக்கும் புறம்பாவரென்பதைக் காட்டும். நிற்கப் பின்னும் நம்மவர் எழுதுவதாவது.

"தொல்காப்பியத்தில் "அறுவகைப்பட்ட பார்ப்பனப் "பக்கமும்" என்றவிடத்து பார்ப்பார் அறுவகைப்பட்ட "னர் என்பது அறியக்கிடக்கின்றது. அறுவகை என்பதற்கு "அறுதொழில் என்று பொருள் கொள்ளுதல் தவறு. அறு "வகைப் பார்ப்பார் என்பவரையே அறுவகைச் சைவர் என்று "சிவாகமங்களுட் கூறியதாகக் கருத இடமுண்டு. ஆனல் இப் "போதுள்ள சிவாகமங்களுள் ஆரியாது வருணமுறையுங் "கலந்துண்மையால் அறுவகைச் சைவர் என்ற விடத்துப் "பண்டை அறுவகைப்பார்ப்பாரது இலக்கணங் கூறப்படாமல் "வருணம் பற்றிய வகுப்புச் சுட்டப்பட்டது" என்று, அதா வது, அறுவகைச் சைவரைக் குறிக்குமென்பதுபோல், எழுதி யிருக்கின்றார். இதனால், "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்க "மும்" என்ற சொற்றொடர்க்கு, "ஆறு கூற்றினுட்பட்ட "பார்ப்பியற் கூறும், ஆறு பார்ப்பியலென்றது வகையென்ற "தனுன், அவை தலை, இடை, கடை, என ஒன்று மும் "மூன்றாயப் பதினெட்டாமென்று கொள்க. அவை ஓதல், ஓது "வித்தல், வேட்டல், வேட்பித்தல், கொடுத்தல், கோடல் "என வாறும்" என ஆசிரியர் நச்சினர்க்கினியர் எழுதிய உரை தவறு என இவர் கூறினர் என்பது பெறும். இச்சூத் திரம் பார்ப்பார், அரசர், வைசியர், வேளாளர் என்னும நால் வர்களது தொழிலைக்கூற எழுந்ததேயொழிய ஒவ்வொரு வருணத்தாரும் இத்தனை வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறார் கள் என்பதைக் கூறவெழுந்ததல்ல. இஃது ஐவகை மரபின் அரசர் பக்கமும், இரு மூன்று மரபினேனோர் பக்கமும் என்ற சொற்றொடர்கள் மற்றைய அரசர், வணிகர், வேளாளர் இவர்

களது தொழில்களைக்காட்ட நூலாசிரியரால் அமைக்கப்பட்ட சொற்றொடர்களாய் விளங்கும் நிமித்தம் அவைகளுக்கும் அவ்வவர் தொழில்களைக் கூறியே உரை ஆசிரியர் பொருள் கண்டிருப்பதால் விளங்கும். சிவாகமங்களுள் சைவரை எழுவகையாக வருணம் பற்றியே பிரித்திருக்கின்றது, இப்போதுள்ள சிவாகமம் என்றார். இதனால் முந்தியிருந்த சிவாகமம் வேறு என்பது இவர் கருத்தாகும். அவ்வாறு சிவாகமம் தமிழிலிருந்ததாகவும் தமிழ் நான்மறையோடு அவைகளும் கடற்பெருக்கில் மறைந்துபோனது போலவும் இவர் மற்றோரிடத்தில் கூறியிருக்கின்றார். சிவாகமம் உஅ-ம் நான்கு வேதங்களும் சிவபிரான் வாக்கென்றும், அவைகள் ஆரியத்திலேயே, அழிவின்றி முக்காலமுமிருப்பவை யென்றும் தேவாரம், சைவ சித்தாந்த சாத்திரம் ஆதிய தமிழ் நூற் பிரமாணங்களாலே முன்னமே காட்டினோம். அறுவகைப் பார்ப்பார் என்பவரையே அறுவகைச் சைவர் என்று சிவாகமங்களுட் கூறியதாகக் கருத இடமுண்டு என எழுதினர். சைவரை எழுவகையாகப் பிரித்திருக்க அறுவகை யென்றார். அதற்குக் காரணம் இவர் கூறுவது, மகா சைவர் எனப்படும் ஆகம நெறிநடக்கும் பார்ப்பார், ஆரியர் இந்நாட்டுக்கு வந்தபிறகு உண்டாயவரென்றும், சிவாகமங்களில் ஆதியிற் காட்டியிருந்த அறுவகையோருடன் இவரையுஞ் சேர்த்துப் பிற்காலத்தி லெழுவகையாரென வெழுதிக்கொள்ளப்பட்டது போலும் என்பது இவர் கருத்து. இவர் எழுதியபடியே மகா சைவர் என்னும் ஒருவகையினரைச் சிவாகமத்திற் சொல்லும் சைவர் வகை ஏழில் நீக்கி பார்ப்பனர் வகை ஆறு என்று பொருள் கொண்டால், இந்த ஆறுவகையார் யாவர் என விசாரிக்குங்கால் அநாதி சைவர், ஆதிசைவர், அநு சைவர், அவாந்தர சைவர், பிரவர சைவர், அந்திய சைவர் என்ற அறுவகையாராவர். இந்த ஆறு வகையில் முதற்கண் நிற்கும் அநாதி சைவர் என ஒருவகைப் பார்ப்பனர் உலகத்தில் உள்ளார்களா? அநாதி சைவர் எனப்படுவோர் சிவபிரானல்லவோ? இவரிடந் தோன்றிய ஆதி சைவர்கள் என்பவர் தானே உலகத்திலுள்ளார். அதனாற்றானே யவர்களுக்கு ஆதி சைவர் அதாவது சைவர் வகுப்பினரில் முதலாயவர் எனப் பெயருமெய்தயது. அநாதிசைவராகிய சிவன் முகத்திற்றோன்றிய ஆதி சைவரை யொழித்து அநாதிசைவப் பார்ப்பார் என ஒருவகையினர் உலகத்தில் இன்மையால், அவ்வாறு உலகத்தல்லலாத ஒருவகைப் பார்ப்பார்வகை ஒன்று உண்டென்று பொருளபடுமாறு அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் எனத் தொல்காப்பியர் சூத்திரங் கூறினரென்பது நூற்பயிற்சி சற்றுமறியாதவர் கூற்றேயாம். இதை நம்மவர்

அறியாது சிவாகமத்திற் கண்ட சைவர் எழுவரில் மகா சைவரை யொழித்து எஞ்சிய அறுவகைச் சைவர்களையே அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமெனத் தொல்காப்பியச் சூத்திரங் கூறியதாகக் கருத இடமுண்டு என்று எழுதினர். ஆதலால் இவரது வியாக்கியை தவறு எனச் சான்றோர் கூறுவர்.

அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் என்ற சொற்றொடர்க்கு மற்றொருவகையில் இவர் பொருள் விளக்குவதாவது. அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமென்றதற்குத் தென்னாட்டில் பெருவழக்காயிருந்த அறுவகைக் கடவுளரைப் (அதாவது சிவன், அம்பாள், திருமால், பிள்ளையார், முருகர், ஞாயிறு) பூசிப்போர் அறுவகைப் பார்ப்பனர் எனப்பட்டார் என்று கருத இடமுண்டு என்று சொல்லுகிறார். இது ஆமானால், சிவன் பிள்ளையார் என்ற கடவுட் பெயர்களைத் தொல் காப்பியங் கூறாததென்னை? ஆரிய வேதத்திற் பலதெய்வ வழிபாடு கூறியிருப்பதாகச் சொல்லி அக்காரணத்தால் அவ் வேதத்தை நிந்தைபுரிந்த இவர் தென்னாட்டில் ஆறு தெய்வங்கள் வணங்கப்பட்டு வந்தனவென்று இங்குக்கூறுவது என்னை? ஆறு தெய்வமும் சிவபேதமென்பரேல், அவ்வாறு ஏன் வேதத்திற் கூறப்படுபவைகளுக்கும் பொருள் கொள்ளப்படாது? இவ்வாறு தென்னாட்டில் ஆறு கடவுளரை வணங்கினார்களென்பதற்கு என்ன பிரமாணம்? இக்காரணங்களால் அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும் என்ற தொல்காப்பியச் சூத்திரப் பகுதிக்கு அந்தணர் அறுதொழில் என்று உரையாசிரியர் கொண்ட பொருளே உறுதியாம். மேலே காட்டிய பதிற்றுப் பத்தின் மூன்றும்பத்து உச-வது செய்யுளும் அந்தணரது அறுதொழிலையும், தொல்காப்பிய இலக்கணப்படி விரித்துக் கூறு நின்றது. நிற்கப், பின்னும் நம்மவர் எழுதுவதாவது, "நூல் "பயில்கின்றவன் என்ற பொருளில் மறப்பினும் ஓத்துக்கொள "லாகும் பார்ப்பான் என்றவிடத்து அது வழங்கினமை காண்க. "ஓத்து என்பது நூல். பார்ப்பான் என்பவன் நூல்களைப் "பார்க்கின்றவன். இங்ஙனம் ஆசிரியர் மணக்குடவர் பொருள் "கொண்டார். ஓத்து என்பதற்கு வேதம் என்றும் பார்ப்பான் "என்பதற்கு ஆரியப்பிராமணன் என்றும் ஒடுங்கியவகையாகப் "பொருள் கொள்ளுதல் திருவள்ளுவர் கருத்துக்கு மிகவும் "பொருத்தமில்லாததொன்றே" எனவுமெழுதியிருக்கின்றார்.

நூல்களை பார்ப்பவன் பார்ப்பானென்றால், எந்த நூல் களைப் பார்ப்பவன் எனுங்கடா நிகழும், நூல் என்பது பொதுச் சொல்லாதலின் ஒரு நூலின் பெயரைச் சொன்னால் இன்னொரு நூலைச் சொல்லிக் கேட்டால் அதுவுந்தான், மற்

றொன்றைச் சொல்லிக் கேட்டால் அதுவுந்தான் என இவ் வாறே சுற்றின்றிப் பெருகிய முடிபு இல்லாததாகும். எல்லா நூல்களையும் பார்ப்பவன் என்றால் நூல்களுக்கு அளவில்லை. கல்விகரையில, வென்று மேலோரும் பணித்தனர். "வேதத்தை விட்ட அறமில்லைவேதத்தி லோதக்தகும் பொருளெல்லாமுள தர்க்க வாதத்தைவிட்டு மதிஞர் வளமுற்ற வேதத்தை ஓதியே வீடுபெற்றார்களே" எனத் திருமூல யோகியார் அருளியபடி வேதத்தைப் பார்ப்பவன், வேதத்தினந்தத்தை பார்ப்பவன், என்றே பொருள்படும். "இருக்குஓத்து ஆரணம் வேதம்" என்னும் திவாகரச் சூத்திரமும் ஓத்து என்பது வேதத்தையே குறித்து நின்றது. அன்றியும் நம்மவர் இக்குறட்பாவை அந் வயப்படுத்திப் பொருள் கொண்டதும் பொருத்தமின்று. இத் திருக்குறள் செய்யுள், ஒழுக்கமென்னும் அதிகாரத்துட்காணப் பட்டது. கல்வியைப்பற்றிய அதிகாரமல்ல. ஒழுக்கமென்னும் அதிகாரத்துட்போந்த ௧௦ செய்யுளும் ஒழுக்கத்தையே தலை மைப்பொருளாகக் கொண்டது. "மறப்பினும் ஓத்துக்கொள லாகும் பார்ப்பான்" என அந்வயப்படுத்தினர். அது பொருந் தாது. பார்ப்பான் பிறப்பு ஒழுக்கங் குன்றக்கெடும் என்று கொள்ளவேண்டும். பார்ப்பானுக்கு அவனது பிறப்பினாலாய மேலான ஜன்மம், அவன் ஒழுக்கந்தவறினால், கீழான ஜன்ம மாவான் என்பதே பொருள். அதனால் வேதத்தை மறந் தாலும் பின்னும் கற்றுக்கொள்ளலாமென்றார். ஒழுக்கத்தை ஒருபோதும் விடப்படாதென்றார். ஒழுக்கங்கூறவந்த அதி காரத்துட்போந்த இச்செய்யுளில், பார்ப்பான் பிறப்பு என்று நூலாசிரியர் சொன்னமையால், பிறப்பினாற் பார்ப்பானென்று பெயரெய்தியவனையே இக்குறள் குறித்தது என்பதுதானே விளங்கும். ஆதலால் நூலைப் பார்ப்போரெல்லாம் இக்குறளின் கருத்துப்படி பார்ப்பார் ஆகமாட்டாரென்பது ஏற்பட்டது. ஏற்படவே பார்ப்பாரென்பது சிறப்புப் பொருளில் குறிப்ப தாக ஆயிற்றேயொழிய பொதுப்பொருளில் இச்செய்யுள் குறித்ததில்லையென்பது விளங்கும். அது விளங்கவே பார்ப் பார் என்பது ஒரு குலத்தாரையே சுட்டும். நான்மணிக்கடிகை நூலாசிரியர் அந்தணரினல்ல பிறப்பில்லையென்றார். உயர்ந்த குடியிற் பிறப்பதும் இழிந்த குடியிற் பிறப்பதும் பூர்வ ஜந்ம கர்மத்தினாலாவதே. பூமியிற் பிறந்தபின் செய்துகொள்ளக் கூடியதல்ல. சித்தாந்த சாத்திரங்களெல்லாம் அவ்வாறே கூறும். சிவப்பிரகாசத்தில் "கன்ம நெறிதிரிவிதம் நற்சாதி ஆயுட்போகக் கடனதெனவரும்" எனக் கூறியிருப்பதாலறிய லாம். ஆனதால் பார்ப்பானது பிறப்பு எய்துவதும் பூர்வ ஜந்ம கன்ம விசேடத்தாலேதான், அது எய்தினும் அப்பிறப்புக்

குரிய ஒழுக்கத்தை அவன் கைவிடாதிருக்கவேண்டும். ஒழுக்கந் தவறினல் தாழ்ந்த குலத்தவனுவான். "ஒழுக்கமுடைமை குடிமை இழுக்கம் இழிந்த பிறப்பாய்விடும்" என்று நாயனர் விவாதச் செய்யுளுக்கு முந்திய செய்யுளாக அருளினர். விவாதச் செய்யுளில் பார்ப்பான் ஓத்து மறப்பினுங் கொளலாகும் என்ருர். அந்த பார்ப்பானும் பிறப்பினுற் பெயரெய்தினவனே என்பது, பார்ப்பான் என்ற பதத்தோடு பிறப்பு என்னும் பதத்தைச் சேர்த்திருப்பதால் நன்கு விளங்கும். அவனுக்குரிய ஓத்து எதுவென்று விசாரிக்குங்கால் அது வேதம் எனவேபடும். ஓத்து எனப்படும் வேதம் பார்ப்பாருக்குரிமையாதலினன்ருே திருக்குறளைக் கேட்டு அதற்குச் சிறப்புப் பாயிரங்கள் கொடுத்த சங்கத்தாருள் ஒருவர் "செய்யா அதற்குரியர் அந்தணரே" என்ருர். (செய்யா அது=வேதம்). 'இன்ற ஓத்திலாப் பார்ப்பானுரை' என்றும் "அந்தணர் ஓத்துடைமையாற்றமிக வினிதே" என்றும் சங்கமருவிய நூல்களுஞ் சொல்லும். சென்னை யரசாங்கத்துப் புத்தகசாலையிலுள்ள மணக்குடவர் உரையைப் பார்த்தெழுதி இப்போது அச்சிட்டு வெளிவந்த புத்தகத்தில் ஓத்து என்பதற்கு வேதம் என்றும் பார்ப்பான் என்பதற்குப் பிராமணன் என்றுமே உரைகள் கண்டிருக்கின்றன. முந்தியது தற்காலப் புறட்சியுடையோர், புறட்சிக்குத் தக்கவாறு, கூட்டியுங் குறைத்தும், எழுதிய பிரதியின் பதிப்பு என்பது உலகவதந்தி, அதை யாங் கொள்ளோம். உரையாசிரியர் பரிமேலழகர் ஓத்து என்றதற்கு வேதம் எனவும், பார்ப்பார் என்றதற்கு அந்தணர் எனவும், சிறப்புடை அந்தணர் வருணத்தை யெடுத்து மொழிந்தமையின் இஃது ஏனை வருணங்களுக்குங் கொள்ளப்படுமென்றும் உரைத்தார். இக்காரணங்களால் "ஓத்து என்பதற்கு வேதமென்றும் பார்ப்பாரென்பதற்கு ஆரியப் பிராமணனென்றும் ஒடுங்கியவகையாகப் பொருள்கொள்ளுதல் திருவள்ளுவர் கருத்துக்கு மிகவும் பொருத்தமிலாததொன்றே" என நம் நண்பர் கூறியது, ஆரியப் பிராமணரிடத்தும் வேதத்தினிடத்தும் இவருக்குள்ள வெறுப்புக் காரணமாகவே எனக் கூறலாம். மேலாராய்ச்சியால், இத்திருக்குறளுக்கு நம் பூர்வீகாள் கண்டவுரை, அச்செய்யுளுக்குப் பொருந்தியதே என விளங்குவதோடு அவ்வுரை ஒடுங்கியவகையான பொருளல்லவென்பதும் வெளியாகும். நிற்க, இனி நம் நண்பர் எழுதுவதாவது.

௩௬. "ஞானசம்பந்தப் பெருமானுக்கு உபநயனஞ் "செய்தகாலை வேதத்திற்குப் பொருள்கேட்ட அந்தணர்க்கு "வேதத்தின் மெய்ப்பொருள் சிவபெருமானே என்றும் சிறந்த "மந்திரம் ஐந்தெழுத்துமே யென்றும் சுவாமிகள் வற்புறுத்தி

"யறிவுறுத்தியதாகப் பெரிய புராணங் கூறுகின்றது. "வேத
"நான்கினு மெய்ப்பொருளாவது நாதநாம நமச்சிவாயவே"
"என்றதுங் காண்க. பெரிய புராணத்துள் சைவ நெறியில்
"ஒழுகும் அந்தணர் ஒரு புறமும் சித்தாந்தச் செல்வர்களாகிய
"அடியார்கள் ஒரு புறமும் சம்பந்தப் பெருமானைச் சூழ்ந்து
"சென்றதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஞானசம்பந்தப் பெரு
"மான் இருமொழி மறையையும் இன்னின்னவாறு தமது
"தேவாரத்துள் விளக்கிப்போந்தனரென்று மேலே காட்டினும்.
"சைவநெறி யொழுக்கந்தலை சிறந்த பிராமணருக்கு எடுத்துக்
"காட்டு ஸ்ரீமத் அப்பூதியடிகளாவர்.

"இம்முறையாகச் சைவநெறி கைப்பற்றாது தமது
"ஆரியவேத சமயமே சிறந்ததென்றுகூறி அதனைத் தமிழர்
"கைப்பற்றற்குமுரியாரென்றுந் தாமே அவர்கட்கு ஆசிரியர்
"களென்றுங்கூறித் தமது மதம் நாட்டிய பிராமணரை
"நோக்கிப் பதினோராந் திருமுறையின் பகுதியாகிய கோபப்
"பிரசாதமுடையார்

"ஆரியர் புத்தகப் பேய்கொண்டு புலம்புற்று
வட்டணை பேசுவர் மானுடம் போன்று" என்றும்
'ஆடு போலக்கூடி நின் றழைத்தும்
மரக்கள் போல வேட்கை யீடுண்டும்
இப்படி ஞான மப்படி யமைத்தும்
இன்ன தன்மைய னென்றிரு நிலத்து
முன்னே யறியா மூர்க்க மாக்களை" என்றும்

"கடிந்து மொழிந்தமை காண்க" என்று எழுதியிருக்கின்றார்.
இவர் கூற்றை ஒவ்வொன்றாய் ஆராய்வாம்.

ஞானசம்பந்தப் பெருமானுக்கு உபநயனஞ் செய்த காலை வேதத்திற்குப் பொருள்கேட்ட அந்தணர்க்கு வேதத்தின் மெய்ப்பொருள் சிவபெருமானே என்றும் சிறந்த மந்திரம் ஐந்தெழுத்துமே என்றும் சுவாமிகள் வற்புறுத்தி யறிவுறுத்திக் கூறியது உண்மையே. இதனை இன்னம் விளக்கிக்காட்டுவாம். சம்பந்தருக்கு உபநயனப்பருவம் எய்திற்று. வேதவிதிப்படி பூணூல் தரித்தார்கள். இவ்வாறு பூணூல் தரித்தலாலாகிய இருபிறப்பு சுவாமிகளுக்கு எய்தக் காட்டிய வேதப்பிராமணர்கள் சுவாமிகள் முன்னின்று எழுதுங்கிளவியாகாது எழுதாக்கிளவியாகிச் சீடப்பரம்பரையாய் ஓதி உணரவரும் நான்கு வேதங்களையும் உமக்குத் தந்தோமென்று சொன்னார்கள். அவ்வாறு சொல்லிய பிராமணர்களுக்கு உலகமாதா ஞானப்பால் ஊட்டிய அன்றே அதாவது மூவாட்டைப் பிராயத்தே உவமையில்லாத எல்லாக்கலை ஞானத்தையும் ஓதாதே உணர்ந்தோராதலின்,

சடை, பதம், கிரமத்தோடு, எண்ணிறந்த புனித வேதங்களையும் அப்பிராமணர்கள் கேட்க ஓதினார். இது கேட்ட பிராமணர்கள் திடுக்கும் வியப்புமுற்றுச் சுவாமிகளைப் பரப்பிரம சொரூபியே யென மதித்துச் சுவாமிகளிடந் தங்களுக்கு வேதத்திலுள்ள சந்தேகங்களை யெல்லாங்கேட்டுத் தெளிந்தார்கள். சுவாமிகள்வேத மந்திரங்களை யெல்லாஞ் சொல்லி அம்மந்திரங்களுக்கெல்லாந் தலையாயது சிவபிரானது அஞ்செழுத்து மந்திரமென்றுகூறி, அவ்வமையம் ஸ்ரீபஞ்சாட்சரப் பதிகத்தையும் அருளிச்செய்தார்கள். இவ்விஷயம் ௩௪, ௩௫, பக்கங்களில் பிரமாணத்துடனே காட்டியிருக்கின்றோம். வேதத்தின் மெய்ப்பொருள் சிவபெருமானே யென்பது சத்தியமே. ஆனால் இச்சமயம் சம்பந்தமூர்த்தி சுவாமிகள் வேதத்தின் மெய்ப்பொருள் சிவபெருமானே என்று அருளியதாகப் பெரிய புராணங்கூறுகின்றது என நம் நண்பர் சொல்லி யிருப்பது பெரிய புராணங்கூறாததே. இவ்வாறு சம்பந்தப்பெருமான் வேதங்களை விதந்து கூறியிருக்க நம் நண்பர் ஏனோ வேதங்களை யிழித்துக் கூறிவருகின்றார். பஞ்சாட்சரப்பதிகம் அந்தச்சமயம் அந்த வேதப்பிராமணர்கள் முன்னிலையிலே அருளப்பட்டது. அப்பதிகம் உ-ம் திருப்பாட்டு. "மந்திர நான்மறையாகி வானவர், சிந்தையுணின்றவர் தம்மையாள்வன, செந்தழலோம்பிய செம்மை வேதியர்க், கந்தியுண்மந்திரமஞ் செழுத்துமே" யென்பது. இச்செய்யுளில் பஞ்சாட்சரமே நான்மறையானதாகவும் பிராமணர்கள் செந்தழலோம்புபவர் என்றும் அவர்களுக்கு மாலையில் ஜபிக்கு மந்திரம் பஞ்சாட்சரமென்றுந் தெரிவித்திருக்கத் தமிழில் நான்மறை யென ஒரு நூல் இருந்து மறைந்து போனதாகக் கூறியும், ஆரியர் பெர்சியா நாட்டினின்றும் வந்து நம் நாட்டை அபகரித்துப் பின்னர் நான்கு வேதங்களையுஞ் செய்தாரென்னும் மேனாட்டார்கூற்றையே வலியுறுத்திப் பேசியும், ஏன் நம் நண்பர் வீணுக்கு வாதஞ்செய்கின்றார். "வேத நான்கினு மெய்ப்பொருளாவது நாதனாம நமச்சிவாயவே" என்பதை யெடுத்துக்காட்டினாரே! அதனால் நான்கு வேதங்களினும் சிவபரஞ்சுடரின் நாமமிருப்பதாக ஏற்படுகிறது. அவ்வாறு இருப்பதையும் வேதமந்திரங்களின் பிரமாணத்தால் மேலே எடுத்துக் காட்டியுமிருக்கிறோம். ஏன் ருக்கு வேதத்தில் சிவன் பேரே இல்லையென்று வாதிக்கவருகிறார். வேதம் நான்கும் ஆரியமாய் அக்காலத்தில் இருந்தமையானன்றோ அவ்வேதங்களை முன்னர் கற்காமலே உபநயன காலத்தில் ஓதியருளிய சம்பந்தமூர்த்திகள் "வேத நான்கினு மெய்ப் பொருளாவது" என அருளிச் செய்தார்கள். பின்னும் "அந்தணர்க் கருங்கலம் அருமறை ஆறங்கம்" எனவும் அப்பமூர்த்திகளும் சொல்லி

"நங்களுக்கருங்கலம் நமச்சிவாயவே" யென அருளியிருப்ப தின் நுட்பத்தை அறியுங்கள். பெரிய புராணத்தில் சைவ நெறியில் ஒழுகும் அந்தணர் ஒரு புறமுஞ் சம்பந்தப்பெரு மானைச் சூழ்ந்து சென்றதாகக் கூறப்பட்டிருக்கிறது என்று எழுதியிருக்கிறாரே, ஒரு செய்யுளாவது அவ்வாறு கூறுவதை யெடுத்துக் காட்டுவாரா? ஞான சம்பந்தப் பெருமான் இரு மொழி மறையையும் இன்னின்னவாறு தமது தேவாரத்தின் விளக்கிப் போந்தனரென்று மேலே காட்டினும் என்று நம்மவர் இங்கு எழுதினரே, இருமொழி மறை என்றால் வடமொழி மறையென்பது ஒன்று. மற்றொன்று தமிழிலிருந்து கடல் கொண்டதாக நண்பர் சொல்லும் தமிழ் நான்மறை போலும். சம்பந்தப் பிரானருளிய எந்தத் தேவாரத்தைக் காட்டித் தமிழில் நான்மறை யிருந்ததாக இவர் விளக்கினர். ஆனால் சில இடங்களில் மூல பாடங்களைத் தன் மனம் போல் மாற்றியும் உரையாசிரியர் கருத்தையோதும் இப்படித்தான் கருதவேண்டும் அது சரியான பாடமல்ல என்பனபோன்றவை களை யெழுதிக்கொண்டு வந்து கடைசியில் இருமொழி மறையையும் ஞானசம்பந்தப்பெருமான் தமது தேவாரத்தில் விளக்கிப்போந்ததைத்தான் காட்டினதாக எழுதிக்கொண் டார். இவை பொருளில்லாத வார்த்தைகளே. சம்பந்தப்பெரு மான் தேவாரத்தில் காணப்படும் மறை வேத முதலிய சொற் கள் ஆரியவேதத்தையே குறிக்குமென்பதை மேலேகாட்டினும். சம்பந்தப்பெருமான் அருளிய தேவாரங்களே தமிழ்மறை யென்பதும் அந்தத் தேவாரங்கள் ஆரிய வேதத்தின் சாரமா மென்பதும் முன் பக்கங்களிற் காட்டியிருக்கின்றோம்.

"வேதியர் வேதமுழக்கொலி வேதத்தைத் தமிழால்
ஓதிய மூவர் திருப்பதிகத் தொலி"

"தேவருமெழுதவொணு மறையைத் தமிழ் செய்து திருப்பதி கம் பாடுமூவரும்" என்று உமாபதி சிவமருளிய சேக்கிழார் புராணப்பாட்டுக்களின் பகுதிகளாலும் மேலதன் உண்மையை நன்கு காணலாம். இங்கு ஒரு விடயங்குறிக்கின்றோம். எமக்கும் திருநான்மறை விளக்க ஆசிரியருக்கும், வேதம், தமிழ்மறை என்பவைகளின் விடயமாக அபிப்பிராய பேதம் நேரிட்டு ஹிந்து முதலிய ஆங்கிலப் பத்திரிகைகளில் ஒருவர் எழுதியதை ஒருவர் மறுத்து எழுதிவருங்காலை (1923-ம் வருடம்) மேற்காட்டிய சேக்கிழார் புராணச் செய்யுட்களை மேற்கோளாகக் காட்டித் தமிழ்மறை யென்னுந் தேவாரம் ஆரிய வேதத்தின் சாரமேயென்று Hindu பத்திரிகை 27—3—23-ல் எழுதினோம். அதற்கு மறுப்பாக நம்மவர்

Justice Paper 20-4-23-ல் எழுதியதாவது. "In the stanzas he refers to, The terms Vedam and Marai mean wisdom or books of wisdom and they are used there in a general, not a special sense. There is no mention of Arya Veda in those stanzas." இதன் கருத்து. இச்செய்யுட்களிற் கண்ட வேதம் மறையென்ற மொழிகள் அறிவு அல்லது அறிவுநூல் களைக் குறிக்கும். ஆரிய வேதமென்று அச்செய்யுட்களில் குறிப்பிடவில்லை என்பது. இவ்விஷயம் இங்கு ஆராயவேண்டும்.

"வேதியர் வேதமுழக்கொலி" என்றால் எந்த அறிவு நூல்களை வேதியர்கள் முழக்கமாக வொலிக்கின்றார்கள். வட மொழி வேதத்தைத் தவிர்த்து வேறு எப்பாஷையில் வேறு எந்நூல்களையாவது வேதியர்கள் முழக்கமாக ஒலிக்கின்றார் களா? திருவாத வூரடிகள், திருக்கோவையாரில், வேதியரை வினவல் என்னுந் துறைச் செய்யுளில் "வெதிரேய்கரத்து மென்றோலேய் சுவல் வெள்ளை நூலிற் கோண்மூ, வதிரேய் மறையினிவ்வாறு செல்வீர்" எனத் திருவாய்மலர்ந்தருளினர். அந்தணர்க்குரிய மூங்கிற்றண்டம், ஆசனம், பூணூல் ஆதிய அடையாளங்களைக் கூறி அவர்கள் ஓதும் மறையின்னொலி மேக முழக்கம்போலுமென அருளப்பட்டிருக்கின்றது. (பிறவு முள). ஆதலால் வேத முழக்கொலி என்றது ஆரிய வேத முழக்கொலியையே சாருமென்று யாம் திண்ணமாய்ச் சொல்லு கின்றோம். நம்மவர், அல்லவென்றும் அறிவு நூலொலியே யென்றும் மேற்கோளும் வழக்குங்காட்டி அவர் கோளை நிலை நிறுத்திக் கொள்ளவேண்டியது அவர் கடமையாம். மற்றொரு செய்யுளில் எழுதவொணு மறையென்று குறித்திருப்பதனாலும் எழுதாக்கிளவி யென்பது ஆரிய வேதத்தையும் எழுதும் மறை யென்பது தமிழ்வேதத்தையுங் குறிக்குமானதாலும், இச்செய் செய்யுளிற் கண்ட எழுதவொணு மறையென்றதும் ஆரிய வேதத்தையே குறித்தது என வரையிடுவதற்கு எட்டுணை ஐயமு மிலலை. நம்மவர் நியாயவாயிலாக, அல்லவெனக் காட்டட்டும். இன்னமும், "வேதத்தைத் தமிழாலோதிய மூவர் திருப்பதிகத் தொலி" என்றமையானும், "எழுதவொணு மறையைத் தமிழ் செய்து திருப்பதிகம் பாடு மூவரும" என்றமையானும், வேதம் அல்லது மறை சமயாசாரியர்கள் மூவரால் தமிழில் வெளிப் படுத்தப்படுவதற்கு முன்னர் அவ்வேதமும் அல்லது மறையும், ஆயபாஷை தமிழல்லவென்பது மலையிலக்காய் விளங்குகின்றது. அப்பாஷை எதுவெனத் தேருமிடத்து "ஆரியம் வேத முடைத்து," "ஆரியமாயறம் பொருளின்பம வீடெல்லா மறைந்துயிர்கட் கறிவு செயலளிப்பது நூல்" என்னும் மேன் மக்கள் திருவாக்குகளானும், நிகண்டாசிரியர்கள் வேதம், மறை

ஆதிய சொற்களுக்குப் பொருள் கூறியிருக்கும் முறைமையா னும், அது ஆரிய பாஷையென்பதே முடிபு. இவ்வாறே 'வேதம் தமிழ் செய்த மாறன்' என விண்டுவின் அடியார்களு மருளியிருக்கின்றனர்கள். ஆதலால் நமது தமிழ்த் திருமறை ஆரியவேதத்தின் சாரமேயாம். இங்கு ஆரிய வேதமென்றதில் உபநிடதங்களுமடங்கும். தமிழின் தன்மையறிந்த தண்ணளிப் புலவீர்காள்? இங்குயாமெழுதியவற்றில் பிழை உளதேல் எடுத்துக் காட்டுவீர்களாக. சைவநெறி ஒழுக்கந்தலை சிறந்த பிராமணருக்கு எடுத்துக் காட்டு ஸ்ரீமத் அப்பூதியடிகளாவர் என்று எழுதினர். சைவர்களும மறைமறையோரும் செய்யும் சிவ பூஜாபலத்தையும் ஆலயங்களில் செய்துவரும் சிவாலய தெரிசனைபலத்தையுங் கொடுத்துவரும் சண்டேச்சுரநாயனர் ஏன் சைவநெறி ஒழுக்கஞ் சிறந்த பிராமணருக்கு எடுத்துக் காட்டு ஆகமாட்டார். ஏன் உருத்திர பசுபதி நாயனர் ஆக மாட்டார். சைவநெறி ஒழுக்க மில்லாதவர்களுக்குச் சிவ பிரான் அருள் கிடைக்குமா? ஆனதால் அறுபான் மூன்று நாயன்மார்களுள் விளங்கும் திருமறையோர் பதின்மூவருமே சைவநெறி ஒழுக்கஞ் சிறந்த பிராமணருக்கு எடுத்துக் காட்டு ஆவார்கள். நிறக, நமமவர் சொல்வதாவது பிராமணர் தங்களது ஆரியசமயமே சிறந்ததென்று கூறியும் தமிழர்கள் அதைக் கைப் பற்ற உரியாரென்று கூறியும் தங்கள் மதத்தை நாட்டினர் களாம். ஆனதால் நக்கீரதேவர் அவர் அருளிய கோபப்பிர சாதம் என்னும் நூலின் பகுதியில் பிராமணர்களைக் கடிந்து மொழிந்தாராம். ஒருவர் கூறுவதை மற்றொருவர் கேட்டு அக் கூற்றுப்படி நடப்பதானல் கூறுபவன் மேலானவனுயிருக்க வேண்டும். கேட்பவன் கீழானவனுயிருக்க வேண்டும். அல்லது கூறுபவன் உண்மை தெரிந்தவனுயிருக்கவேண்டும். கேட்பவன் உண்மை தெரியாதவனுயிருக்க வேண்டும். அல்லது கூறுபவன் அரசனிடம அதிகாரம் பெற்றவனுயிருக்க வேண்டும் கேட்ப வன் சாமானியனுயிருக்க வேண்டும. இம்மூவகையில் கேட்ட தமிழர் எந்த வகை? கூறிய பிராமணர் எந்த வகை? பெரியோர் களே? ஆராய்ந்து முடிவு கட்டுங்கள். பிராமணர் சமயமும் தமிழர் சமயமும வேறலல. ஒன்றே. அதையே வேதம் முடிவில் கூறும. வேதத்திற் கூறிய ஒரே சமயமே யிருவகையினராலு மனுட்டிக்கப்பட்டு வந்துகொண்டிருக்கின்றது. அதனலன்றோ வேததிற்கும் சிவாகமத்துக்கும பேதம் காண்கிலேம எனப பாஷ்யகாரா நீலகண்டரும கூறினர். கோபப்பிரசாதம் என் னும நூலில் பிராமணரைக்கடிந்து மொழிந்திருப்பதாக நம்மவர் கூறுவதும வெற்று மொழியே. வேதத்தையும பிராமணரையும் புகழ்ந்தே அந்நூலிற் கூறியிருக்கின்றது. நம்மவர் காட்டிய

மேற்கோளில் முன் பின் பாகத்தைக் காட்டாது விடுத்தனர். அவ்வாறு செய்ததிலும் இவரது வழக்கமான செய்கையைக் கைக்கொண்டே தமது கொள்கைக்கு இணங்க மூலபாடத்தைப் பிழைப்பட எழுதியுமுள்ளார். அப்பகுதியின் உண்மைப் பொருளை அறியாதவருமாயினர். இக்கோபப் பிரசாதம் என்னும் நூலுக்குக் கல்வி ஒழுக்கங்களிற் சிறப்புற்று விளங்கிய சூரியனார் கோயில் ஆதீனம் ஸ்ரீமத் சிதம்பரத் தம்பிரான் சுவாமிகள் உரையியற்றி உள்ளார். அதையாவது பார்த்தவராயுங் காணப்படவில்லை. வேதத்தினிடத்தும் அதற்குரிய பிராமணரிடத்தும் கொண்ட துவேஷம் மேலிட்டதனாலன்றோ இவரது குலதர்மமாகிய நடுவு நிலைமை கீழ்ப்பட்டு விட்டது. இவர் எழுதிக்காட்டுவது "ஆரியர் புத்தகப்பேய் கொண்டு புலம்புற்று வட்டணை பேசுவர் மானுடம் போன்று" என்பது. இதற்குப் பொருள் ஆரியராவோர் அவர்களது புத்தகமென்னும் வேதப்பேயினால் பிடிபட்டுப் புலம்புதலைச் செய்து வக்கணையான மொழிகளைச் சொல்வாரெனக் கொள்ளவேண்டிவரும். ஆனால் இவர் கொண்ட பொருள் என்னவோ அதை யிவரெழுதாமையால் அறியக்கூடவில்லை. முன் பின் எழுதியிருக்கிற வாசகத்தால் மேற்காட்டிய பொருளே இவர் கொண்டதாக நினைக்கக்கூடியதாயிருக்கின்றது. சுத்தபாடம் "ஆரியப் புத்தகப்பேய் கொண்டு" என்பது. இவர் எழுதிக் காட்டியிருப்பதில் 'ஆரியர்' என்ற சொல் எழுவாயாக நிற்கின்றது. இவர் எழுதாது விடுத்த முந்திய வாக்கியங்களில் எழுவாய் நிற்கின்றது. உண்மைப் பொருள்கோடலுக்கு இப்பகுதியை முற்றிலும் எழுதுவாம்.

"பூக்கமழ் சடையனைப் புண்ணிய நாதனை
யினைய தன்மைய னென்றறி வரியவன்
தனைமுன் விட்டுத் தாமற்று நினைப்போர் *
மாமுயல் விட்டுக் காக்கைப்பின்போங் கலவர்போலவும்
விளக்கங்கிருப்ப மின் மினி கவரு
மளப்பருஞ் சிறப்பிலாதர் போலவும்
கச்சங்கொண்டு கடுந்தொழில் முடியாக்
கொச்சைத் தேவரைத் தேவரென் றெண்ணிப்
பிச்சரைப் போல வோர்
ஆரியப்புத்தகப் பேய் கொண்டு புலம்புற்று
வட்டணை பேசுவர் மானுடம் போன்று
பெட்டினை யுரைப்போர் பேதையர்" †

இதன் கருத்தாவது, இன்ன தன்மையனென்றறியக்கூடாத பரமசிவனை நினையாமல் விடுத்து வேறு தேவரை நினைப்போர்

* எழுவாய் † பயனிலை

முயலை விட்டுக் காக்கைப்பின் போவார் போலவும் வெளிச்சத் துக்கு விளக்கிருக்க மின் மினி தேடுவார் போலவும் ஒரு காரிய முமுடிக்கத் திறமையற்ற சிறு தேவர்களை மாதேவன் என் றெண்ணி ஒப்பற்ற மேன்மை பொருந்திய வேதத்தின் உண்மை யறியாது பித்தரைப் போலவும் பேயைப்போலவும் பிதற்றித் திரிவார் பேதையரே; என்பது. இதனால் வேதத்தைத் தாழ்த்திக் கூறவில்லை யென்பதும் பிராமணர்களை சமஷ்டி யாகக்கொண்டு கடிந்து கூறவில்லையென்பதும் விளங்கும். வேதத்தின் உண்மைப் பொருளை யறிந்து சிவபிரானை வணங் காதவர்களையே பேதையர் என்று கூறிற்று. இரண்டாவதாகக் காட்டப்பட்ட "ஆடுபோலக் கூடி நின்றழைத்தும்" என்னுந் தொடக்கத்து மேற்கோளின் கருத்தும் மேற்காட்டிய பொரு ளையே ஒட்டியது. அதாவது வேதத்திலுள்ள திருவுருத்திரத் தின் பொருளை யறிந்து அப்பொருளாய சிவபரஞ் சுடரை வணங்காது வீணுக் ஆடுகள் கூடி மேமே என்று கத்துவது போல அவ்வுருத்திரத்தை வாயினால்மட்டுஞ் சொல்லி உள் ளத்தினிடம் பொய்த் தேவர்களைத் தியானிப்பவர்களை மூட ரென்று இந்த மேற்கோள் குறிப்பிட்டது. இதனாலும் வேதத்தைக் குறைகூறவில்லை. பிராமணர்களையும் கடிந்து மொழிந்ததாகவுமில்லை. வேதத்தின் உண்மைக் கருத்து அறிந்து அவ்வழி ஒழுகாதவர்களையே கடிந்து கூறிற்று.

"ஒருமுகம் மந்திரவிதியின் மரபுளிவழாஅ
அந்தணர் வேள்வியோர்க்கும்மே" என்றும்,

"இருமூன்றெய்திய இயல்பினின்வழாஅ
திருவர்ச்சுட்டிய பல்வேறு தொல்குடி
யறுநான்கிரட்டி யிளமை நல்லியாண்
டாறினிற் கழிப்பியவறனவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச்செல்வத்
திருபிறப்பாளர் பொழுதறிந்து நுவல
வொன்பதுகொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலரவுடீஇ
யுச்சிக்கூப்பிய கையினர் தற்புகழ்ந்
தாறெழுத்தடக்கிய வருமறைக் கேள்வி
நாவியன் மருங்கினவிலப் பாடி" என்றும்

இன்னமும் அவர் இயற்றிய நூல்களிற் பலவிடங்களினும் வேத மார்க்கத்தையும் அதைக் கைக்கொண்டொழுகும் வேதியரையும் பலவாறு புகழ்ந்துகூறிய வைதிக சைவ பூஷண மாகிய நக்கீரதேவரும் பிராமணர்களைக் கடிந்தும் பேசுவரா? ஒருக்காலும் கடிந்துபேசார். ஒழுக்கந்தவறினவரைக் குறை கூறுதல் உலக வழக்கேயாம். இரண்டாவதாக நண்பர் காட் டிய பகுதியின், முடிபை அவர் காட்டிலர். அதனை யெழுது

வாம். "முன்னையறியா மூர்க்கமாக்களை யின்னேகொண் டேகா கூற்றந், தவறுபெரிதுடைத்தே தவறுபெரிதுடைத்தே" எனச் சொல்லி நக்கீரர் பிரபந்தத்தை முடிவுபெறச் செய்தார். அதாவது மேற்சொன்னபடி வேதத்தின் உண்மைப் பொருளறியாதவர்களை ஓ இயமனே! இப்போதே பூமியைவிட்டு அகலச்செய்யாதது உன்பேரில் பெரிதும் குற்றமே பெரிதும் குற்றமே என்பது.

௩எ. நிற்கத், திருமூலமாமுனிவரும் "சத்தியமின்றி" என்றும் "பாணுண்மையில்லார்" என்றும் அன்னோரைக் கூறினர் என்றார். இக்கூற்றும் இரு பிறப்பாளரில் வேத வுண்மையறிந்த சத்தியமுள்ளவர்களையும் பாணுண்மை யறிந்தவர்களையுந் தவிர்த்து அக்குணங்களில்லாதவரையே தழுவி நின்றது. திருமூலநாயனார் 'அந்தணரொழுக்கம்' என்றவியலில் அந்தணர்கள் பெருமையையும் மிகச்சிறப்பாய்க் கூறியிருப்பது,

"அந்தண ராவோர் அறுதொழிற் பூண்டுளோர்
செந்தழ லோம்பி முப்போது நியமஞ்செய்
தந்தவ நற்கரு மத்துநின் றாங்கிட்டுச்
சந்தியு மோதிச் சடங் கறுப்பார்களே"

"பெரு நெறியான பிரணவ மோர்ந்து
குரு நெறியாலுரை கூடினால் வேதத்
திரு நெறியான திருகை யிருத்திச்
சொருப மதானோர் துகளில் பார்ப்பாரே"

என்னும் அவர் அருளிய திருமந்திரச் செய்யுட்களால் நன்கு விளங்கும்.

௩அ. நிற்க, நம்மவர் "திருவிசைப்பா ஆசிரியர் அவரை "அசிக்க ஆரியங்களோதும் ஆதர்" என்றனர் என்றார். இச் சொற்றொடரில் அவர் கொள்கைக்கு ஆதரவு இன்னதென விவரித்துக் கூறவில்லை. இதைக் கவனிக்கவேண்டியிருக்கிறது. ஆரியங்கள் என்றால் வடமொழி அல்லது வடமொழி நூல்கள் என்றும் ஆதர் என்றால் அறிவிலார் என்றும் பொருள்படும். இவ்வாறே பொருள்கொள்வோமானால் வடமொழி நூல் ஓதுபவர்கள் எல்லோரும் அறிவிலார் எனக்கொள்ளவேண்டிவரும். இவ்வாறு கொள்வதுதகுதியா? ஞானசம்பந்தராதியாகச் சிவ ஞான முனிவரீறாக உள்ள பெருமக்களெல்லோரும்ஆரியபாடை கற்றோர்களே. இச்சொற்றொடர் அடங்கிய செய்யுளை இங்கே எழுதுகிறேன்.

"திசைக்கு மிக்குலவு சீர்த்தித்தில்லைக் கூத்துகந்துதீய
நசிக்க வெண்ணீறதாடு நமர்களை நணுகா நாய்கள்
அசிக்க ஆரியங்களோது மாதரைப் பேதவாதப்
பிசுக்கரைக் காணகண்வாய் பேசாதப் பேய்களோடே"

இச்செய்யுளில் அவர்களை நாய்கள் என்றும் குறிப்பிட்டிருக்கின்றது. அன்றியும் ஆரியங்கள் என்று பன்மைச்சொல்லாலுங் கூறப்பட்டிருக்கின்றது. தமிழ்கள், தெலுங்குகள் எனச் சொல்வதும் வழக்கில் இல்லாதது.

"ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்"
"செந் தமிழோ டாரியனைச் சீரியானை"
"ஆரியந் தமிழோ டிசை யானவன்"
"வடமொழியுந் தென்றமிழும் மறைகளான்குமானவன்"

என்னுந் தமிழ்மறை வாக்கியங்கள் வடமொழியாகிய ஆரியத்தையும் அம்மொழியிலுள்ள வேதத்தையும் சிவபிரான் தழுவிக்கொண்டனர் என்று கூறுகின்றன. இருமொழிக்குங் கண்ணுதலார் முதற் குரவர் எனவும் திராவிட பாஷ்யகாரரும் கூறினர். மேற் பக்கங்களில் எடுத்துக் காட்டியிருக்கிறபடி வேதங்களும் சிவாகமங்களும் ஆரியத்திலேயே யிருப்பதாகச் சிவதருமோத்தரம், சித்தாந்த சாத்திரம் ஆகிய நூல்களும் கூறுகின்றன. இச்செய்யுள் திருமாளிகைத் தேவர் இயற்றிய திருவிசைப்பாப் பதிகங்கள் நான்கனுள் நாலாவதாயதன் ரு-வது செய்யுள். அப்பதிகங்களில், சாமகண்டா, அருமையின் மறை நான் கோலமிட்டாற்றுமப்பனே, பெருவளர் முத்தீ நான்மறைத் தொழில் சாலெழின் மிகுபெரும் பற்றப் புலியூர், என்று சாம வேதத்தையும், நான்கு வேதங்களையும் அவ்வேதங்களிற் கூறியபடி முத்தீ வளர்த்தலையும் இச்செய்யுள் இயற்றிய ஆசிரியரே சிறப்பித்துக் கூறியிருக்கின்றார். இக்காரணங்களால் இச்செய்யுளில் காணப்படும் ஆரியங்கள் என்னுஞ் சொற்கு வடமொழியெனப் பொருள் கொள்வது தகைமையுடைத்ததாயில்லை. இச்செய்யுளடங்கிய பதிகத்தின் கO செய்யுட்களிலும் காணப்படுகின்ற சொற்றொடர்களாவன, கோறைவாய்ப்பீறற் பிண்டப்பிணங்களை, பிட்டரை, கழுக்களாய பிரட்டரை, சீத்தை யூத்தைப் பிணுக்கரை, ஆதரைப் பேதவாதப் பிசுக்கரை, அவியாப்பாவப் பெருக்கரை, குண்டமிண்ட வெத்தரை, பசுநூல் கற்கும்பிச்சரை, திட்டைமுட்டைப்பெண்ணரை, என்பன. இச்சொற்றொடர்கள் போன்றன வெல்லாஞ்சமண் சாக்கிய புத்தராதிகளைக்குறிப்பிட்டு நந்தமிழ் மறைகள்கூறு நின்றன. அவைகளிற்சில காட்டுதும், பாசிப்பல் மாசுமெய்யர், கசிவொன்றில்லாப் பிட்டர், அமண் கழுக்கள், பிரட்டே திரிவார், ஊத்தைவாய்ச் சமண் சாக்கியர், சமண் ஆதர், குண்டர், பண்ணிய சாத்திரப் பேய்கள், முட்டைக்கட்டுரை, என்பனவாதிய, இப்பதிகத்தின் ஒவ்வொரு செய்யுளும் "கண்காணு வாய்பேசாதப் பேய்களோடே" என்ற மகுடத்தால் முடிகிறது. இந்நியாயங்களால் இப்பதிகம் இச்செய்யு

ளுள்பட சமண் சாக்கியரை இழித்துக்கூற எழுந்ததாக நினைக்க ஏது இருக்கிறது. விவாதச்செய்யுளிலும் ஆதர் என்னும் சொல்லும், பேதவாதப் பிசுக்கர் என்னுஞ் சொற்றொடருங் காணப்படுகின்றன. ஆரியம் என்ற பதத்திற்குச் செல்வம் என்னும் பொருளுண்டென்று தெரிகிறது. அப்பொருளையே ஆரியங்கள் என்ற மொழிக்குங் கொள்ளல் கூடுமன்றோ? திருவிசைப்பா உரைஆசிரியர் கண்ட பொருளும் இது போன்றதே. அதாவது வெண்ணீறு பூசுஞ் சிவனடியார்களை நணுகாது, நாய்கள் = நாய்கள் போன்றவராய், அசிக்க = அருவருக்கத்தக்க, ஆரியங்கள் ஓதும் = பெருமைகள் பேசுகின்ற, ஆதரை = அறிவிலிகளைக், கண்களுங்காணா அவர்களோடு வாயும்பேசாது. இச்செய்யுட்குப் பொருத்தமான பொருள் இதுவே. இவ்வாறு பொருள் அறியாது அப்பகுதி ஆரியப் பிராமணர்களையே குறிக்குமென்றல் அளவற்ற ஆட்சேபனைகளுக்கு இடமுண்டாம். நிற்க, இவ்வாறன்றி, இவ்வாக்கியத்திற்காணப்படும் ஆரியங்கள் என்ற மொழிக்கு ஆரியவேதங்களென்றே பொருள்கொள்ள வேண்டுமென்பார்களேயானால், ஆரியவேதங்களின் உண்மை சைவ சித்தாந்தமென்பதை அவ்வேதங்களைப்படித்தும் தெரிந்துகொள்ளாமல், முத்தியினு மூன்று பொருளுண்டென்னும் சைவ சித்தாந்திகளை மூடர் என்றழைத்துத் தமிழில் அநேக நூல்களைப் பேதவாதமாகவும் மாயாவாதக்கொள்கையைத் தழுவியும் இயற்றியிருக்கும் அந்தணர்களைக்குறித்தும் நின்றதென்னவே உணரவுங் கூடும்.

௩௬. இன்னும் நம்மவர் எழுதுவதாவது. “உமாபதி
“சிவமும் “ஆதிமறையோதியதன் பயனென்றுமறியா வேதியர்
“சொல் மெய்யென்றுமேவாதே” என்றதன் மேலும் பண்
“டைத் தமிழ்மறையின் பொருளை விளக்கும் மூவர் தேவாரம்
“சிவபெருமானாகிய ஓரே கடவுளைப்பற்றிக்கூறுவது என்னும்
“பொருளில் “அருமறையைச் சிச்சிலி பண்டருந்தத்தேடுமது
“போலன்றிது வென்றுமுளதாம் உண்மைப்பரபதமுந் தற்
“பரமும் பரனேயன்றிப் பலரில்லை யென்றெழுதும் பனுவல்”
“என்றருளிச் செய்தமையும் காண்க” என்றெழுதி விடுத்து மேலெழுதப் புகுந்தாரேயொழியத் தாமெடுத்துக்காட்டிய இம்மேற்கோளினால் அவர்க்குச் சாதகமின்னதென விவரித்துக் காட்டினாரில்லை. உமாபதிசிவம் அருளிய நெஞ்சுவிடு தூதின் பகுதியாகிய மேற்குறித்த எடுத்துக்காட்டில் ஆதியென்னும் அடைமொழிக்கு முன்னர் “செஞ்சொல்புனை” யென்ற சொற்றொடர் மூலபாடத்தில் காணப்படுவதை நம்மவர் இங்குக்காட்டாது ஏனோ மறைத்தார். வேதங்களைப்பழித்துக் கூறப்புகுந்த இவர் அவ்வேதங்களுக்குப் பெருமைகொடுக்கும் அடை

மொழியை வேணுமென்றுதான் காட்டாது விட்டனரோ, அல்லது யாதுகாரணம்பற்றியோ சொல்லக்கூடவில்லை. அது எவ்வாறுயினுமாகுக. செஞ்சொல்புனை ஆதிமறையென்றதனால் செம்மையான சொற்களால் ஆக்கப்பட்டு ஆதியாகிய இறைவனாலருளிய அல்லது சிருட்டி காலத்தில் உண்டாகிய நூல் என்று பொருள்படும். ஆதிநூல் அல்லது முதனூல் என வேதம் பெயர் எய்தவே, அதற்கு முந்தி வேறுநூல் கிடையாதென்பதே பெறப்படும். அவ்வாறு ஏற்பட அதற்கு முந்தித் தமிழில் நான்மறை உண்டாயிருந்ததென்றும் அம்மறையின் பொருளைத் தமிழ்மறை விளக்குகின்றதென்றும் எவ்வாறு நம்மவர் கூறுகின்றார். செஞ்சொல்புனை ஆதிமறையென்று உமாபதிசிவம் கூறினார். சொல்வடிவம் அம்மையென்றும் அம்மையை விட்டகலாத அப்பன் அச்சொல்லின் பொருள் என்றும் பெரியோர் கூறுவர். அதனால் செஞ்சொல்புனை ஆதிமறையென்றால் சிவபெருமானையே புனைந்த சொற்களால் நிறைந்த முதனூல் வேதம் எனப் பொருளாகின்றது. இவ்வளவு சிறப்புப்பொருந்திய நான்மறைகளை ஏன் நம் நண்பரும் மற்றும் சிலரும் குறைகூறவேண்டும். உமாபதிசிவமே, தாமியற்றிய சேக்கிழார் புராணத்தில் "தேவரும் எழுதவொண்ணுமறையைத் தமிழ்செய்து திருப்பதிகம்பாடும்மூவரும்" எனவும் அருளியிருக்கின்றார். அதனால் எழுதாமறையாகிய வேதப்பொருளே எழுதுந் தமிழ்மறையாகிய தேவாரமென்பது பெறப்படுகின்றதன்றோ? திருஞான சம்பந்தமூர்த்திகளும் சுந்தரமூர்த்திகளும் தாங்கள் அருளிய தமிழ்மறைத் தேவாரப்பதிகங்களில் தங்கள் பெயர்களைக் கூறியவிடத்துத் தாங்கள்கற்றநூல் மறையென்றும் நான்மறையெனவும் தாங்கள் கூறிய தமிழ்த் தேவாரப்பதிகங்கள் அம்மறைகளின் பொருளென்றுங்கூறிய தேவாரப்பகுதிகளை யிங்குத்தொகுத்துக்காட்டுகின்றோம்.

க. நல்லுயர் நான்மறை நாவினற்றமிழ் ஞானசம்பந்தன்
உ. மறையிலங்கு தமிழ்
ங. நான்மறை நாவனற்றமிழ்க் கின்றுணை ஞானசம்பந்தன்
ச. மறைசேர் வருங்கலை ஞானசம்பந்தன் தமிழின் ஒளிகெழுமாலை
ரு. எழின்மறை தன்னியல்வல தமிழ் விரகன்
சு. செழுமறைகள் பயிலுநாவன் வளர் ஞானசம்மந்தன்
எ. நற்றமிழ் ஞானசம்பந்தன் மறைவளருந் தமிழ்மாலை
அ. நாவினலம் புகழ்சீர் நான்மறையான் ஞானசம்பந்தன்
கூ. செழுமறை நின்றநாவன் அரவெனும் பணிவல்லவன் ஞானசம்பந்தனன்புறுமாலை
கO. நான்மறைவல்ல ஞானசம்பந்தன் உளறுமின்றமிழால்
கக. நற்றமிழ் ஞானசம்பந்தன் நான்மறை கற்றவன்

கஉ. அருமறை யவைவல்ல அணிகொள் சம்பந்தன் சொற்பரவிய தமிழ்
கங. சிந்தையுளிடை பெறவுரை செய்த தமிழிவை செழுவிய-அந்தணர் புகலியுளழகமர் அருமறை ஞானசம்பந்தன் மொழியிவை
கச. மாமறை நான்கினோடங்கமாறும் வல்லவன் வாய்மையினோ—ஓமரு கேள்வி நலந்திகழும் ஞானசம்பந்தன் சொன்ன—பாமருபாடல்கள் பத்தும்.
கரு. நாளும்-ஞாலந்தான் பரவப்படுகின்ற நான்மறையங்கமோதிய நாவன்—சீலந்தான் பெரிதும் மிகவல்ல சிறுவன் தொண்டனூரன் உரைத்த பாடல் பத்திவை.

மேலே காட்டிய க-முதல் கரு-வரையுள்ள தேவாரப்பகுதிகளுள், ஞானசம்பந்தப் பெருமான், தாம் நான்மறைகளையும் அங்கங்களையும் பயின்ற நாவர், அவைகளில் வல்லவர், அப்பெற்றியாயதாம், அப்பொருள் விளங்க, எழுதும் மறையாகிய தமிழ்ப்பதிகம், மாலை, பாடினதாகக் கூறியிருப்பதை அறிய வேண்டும். இங்கு நான்மறை--மறை என்றது அவர்கள் காலத்து நிகழப்பெற்றதும் அவர்கள் காலத்துக்கு முன் நிகழ்ந்ததும் அவர்கள் காலத்துக்குப் பிந்தி இதுகாறும்வரை நிகழ்ந்து வருவதுமான இருக்காதி நான்மறைகளையே-கரு-வது இலக்கத்தில் காட்டிய சொற்றொடரில் நாளும்—ஞாலந்தான் பரவப்படுகின்ற நான்மறையங்கமோதிய நாவன் என்றதனால் முக்காலமும் விளங்கப்பெற்ற நான்மறை அங்கங்களைக் கற்றவர்கள் தேவாரம் பாடியவர்களென்றும் துலங்குகின்றது. இத்தேவாரப்பகுதிகளால் பண்டைத்தமிழ்மறையெனவோர் நூலிருந்தது அவற்றின் பொருளைத் தேவாரம் விளக்குகின்றது எனும் எண்ணங்கொள்வதற்கு அணுவளவும் ஆதாரங்காணோம். ஏனோ நம்மவர், தமிழ் நான்மறையென்பன இருந்தன, அவ்வ கடல்கோளிற் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே மறைந்தன, அவைகளின் பொருள்தான் தேவாரம் என்று சொல்லி மனப்பால் குடிக்கிறார்.

சேக்கிழார் பெருமான் அருளியிருப்பதாவது—

| | | | |
|---|---|---|---|
| க. | எழுது சொன்மறையளிப்பவர்தாம், பெரியபு.சம்பந்தர்செய்யுள் | | உஉச |
| உ. | தமிழ்வேதம் பாடினார் தாளம் பெற்றார் | ஷை | உசா0 |
| ங. | விருப்புடன் பாடலிசைத்தார் வேதந்தமிழால் விரித்தார் | ஷை | உஅகூ |
| ச. | மன்னுதமிழ் மறையாம் பதிகம் பாடி | ஷை | ஙகக |
| ரு. | ஓதினார் தமிழ் வேதத்தினோங்கிசை | ஷை | ஙருஎ |
| சா. | எழுதுமாமறையாம் பதிகத்திசை முழுதும்பாடி | ஷை | ஙருஅ |
| எ. | மிக்க சொற்றமிழினால் வேதமும் பாடினார் | ஷை | ஙசாஉ |
| அ. | எழுது மாமறையாம் பதிகத்திசை போற்றி | ஷை | ஙஎரு |
| கூ. | அருந்தமிழ் மாமறைபாடி | ஷை | சாஉஉ |
| க0. | இன்றமிழ் மறைதந்தாரை | ஷை | சாசசா |

மேற் காட்டிய பெரிய புராணச்செய்யுட் பகுதிகளான், தமிழ் மறை, தமிழ் வேதம், எழுதும் மறையெனும் பெயர்கள் சம்பந்தப் பெருமான் அருளிய தேவாரங்களுக்கே பெயராயிற்று எனவிளங்கும். தேவாரத்துக்கு முன் ஒரு நூல் தமிழ்மறையெனும் பெயருடன் இருந்திருந்து அத்தமிழ் மறையின் பொருளையே சம்பந்தப் பெருமான் அருளிய தேவாரத்துள் கூறி யிருந்தால் முந்திய தமிழ் மறையின் சிறப்பைச் சேக்கிழார் பெருமான் கூறாது விடுவாரோ? இதனால் தேவாரப்பதிகங்களுக்கு முன் தமிழில் நான்மறையென ஒரு நூல் இருந்ததில்லை யென்பதே நிச்சயம். தமிழில் நான்மறை இருந்தது என்பதையும் மற்றும் அது விஷயங்களைப்பற்றியும் சித்தாந்தப்படுத்தும்போது, காட்சி, அனுமானம், உரை ஆகிய மூவகை அளவைகளில் ஒன்றானுங் காட்ட முடியாதவராகி, நோக்கற்பாலது, ஊகித்தற்பாலது, மேற்கோளின் வைத்துணர்க, வைத்துணரப்படும், நேர்பொருள் கொள்ளற்பாலன வன்று. பொருள் கோளல் வேண்டும், அறியக்கிடந்தது, கோடற்பாற்று, கருத்தாகக் கொள்க. உற்று நோக்கத்தக்கது, உய்த்துணர்க, என்று கருதுதலே நமக்கு அறிவிற்கு மிகவும் பொருத்தமானது, யூகித்தற்குரியது, நாட்டியதாகக்கருதல் வேண்டும், யூகிக்கறபாலது, யூகித்தற்கிடனுண்டு, இருத்தலுங் கூடும், எனுந்தமது சொந்தமான சொற்றொடர்ப்பிரமாணங்களை நமது நண்பர் எடுத்து ஆள்வாராயினர். நாம் எடுத்துக் காட்டிய இவ்விஷயங்களை நம்மவர் எழுதிய திருநான்மறை விளக்கத்தை நடுவு நிலைமையாய் வாசிக்கும் எவருங் காணலாம்.

ஸ்ரீ ஞானசம்பந்தப்பெருமான், யக்ஞோபவீதம் புனைந்த காலத்தில் அங்கிருந்த அந்தணர்களுக்கு அறிவித்தவாறு, வேதங்களின் உண்மைப் பொருளை யறியாது, ததீசிஆதியோரது சாபம் பெற்று, வேதநெறிக்குப் புறம்பான நெறி வகுத்து, அதையும் வேதநெறிதான் என்று காட்டிவரும் வேதியர்சொல்லை மெய்யென்றுமேவாதேயென உமாபதிசிவம் மேற்காட்டிய நெஞ்சுவிடுதூது என்னும் நூலுட் கூறியருளினாரென்றறிக. சமஷ்டியாகப் பிராமணர்கள் சொல்லைக் கேட்க வேண்டாமென்று சொன்னாரில்லை. "பாரசர மாமுனி மாபுபயில்" என்று, அதாவது சாமவேதமானது உலகத்தில் மென்மேலுந் தழைத்தோங்குக, பாரசர இருடியின் கோத்திரமும் அவ்வாறே வாழையடி வாழையாக உலகத்தில் விளங்குக என்று சிவப்பிரகாசப் பாயிரத்திலருளிய உமாபதிசிவனாரும், வேதம் ஓதும் வேதியரையும் வேதத்தையுங் குறைகூறுவாரா? சைவம் வேதத்தினுட் போந்ததனாலல்லவோ "தரையெலாம் பழைய வைதிக சைவம் பரக்கவே" என அப்பெரியோராகிய

உமாபதிசிவமும் அவரருளிய கோயிற்புராணத்தின் வாழ்த்திற் கூறியது. "வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க" எனவுஞ் "சைவமுதல் வைதிகமுந் தழைத்தோங்க" எனவும் சேக்கிழாரும் அருளினர். "வேதாந்தத் தீதில் பொருள் கொண்டுரைக்கும் நூல் சைவம்" என்றும் சிவஞான சித்தியாருங் கூறுகின்றது.

"பண்டைத் தமிழ்மறையின் பொருளை விளக்கும் "மூவர் தேவாரம் சிவபெருமானாகிய ஒரே கடவுளைப்பற்றிக் "கூறுவது என்னும் பொருளில் "அருமறையைச் சிச்சிலி "பண்டருந்தத் தேடுமதுபோலன்று இது என்றுமுளதாம் "உண்மைப் பரபதமுந் தற்பரமும் பரனேயன்றிப் பலரில்லை "யென்றெழுதும் பனுவல்" என்றருளிச் செய்ததையுங் "காண்க" என்றெழுதினாரே உமாபதிசிவனார் மறையென்று கூறாது 'அருமறை' என்று கூறினாரே அதன் கருத்தை இவர் உணர்ந்தாரா? "செஞ்சொல்புனை ஆதிமறை" யென்று ஆம் மூர்த்திகளருளியிருப்பதை இவர்படித்தும், அம்மறையை ஓதியுமதன் உண்மையறியாத வேதியர்போல, நம்மவரும் ஆயினரே. இது பரிதாபம். "அருமறையைச் சிச்சிலி பண்டருந்தத் தேடும்" என அருளிய உமாபதிசிவனாரே "அரியமுறை தேட வெங்குமிலாமையாலே, நையுமனத்தினனாகி யிருக்குங்காலை" எனத் தேவாரத்திருமுறைகளும் மறைந்திருந்து தேடப்பட்டதாயும் "சீராருந் திருமுறைகள் கண்டதிறற் பார்த்திபனு மோராருமிறைவன்" என அத்தேவாரத் திருமுறைகளைத் தேடிக் (சிவனருளால்) கண்டவன் அபயகுல சேகரசோழன், எனவும் அருளியிருக்கின்றாரே, அதன் உள்ளுறையையும் நம்மவர் கருதிற்றிலர். இதன் விரிவைத் திருமுறைகண்ட புராணத்திற் காணலாம். மறையானது, அருமையான பொருளையடக்கிக் கொண்டிருப்பதனாலன்றோ அருமறையெனச் சிறப்பித்துக் கூறினார்.

"வேதநூல் சைவநூலிரண்டே நூல்கள்
வேறுரைக்கும் நூலிவற்றின் விரிந்தநூல்கள்
ஆதிநூல நாதியமலன்றரு நூலிரண்டும்
ஆரணநூல் பொதுசைவமருஞ் சிறப்புநூலாம்
நீதியினாலுலகர்க்குஞ் சத்திநி பாதர்க்கும்
நிகழ்த்தியது நீண்மறையினொழி பொருள்வேதாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்குநூல் சைவம்பிறநூல்
திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்தமாகும்"

என்னுஞ்சித்தியாரின் செய்யுட் கருத்தையே உமாபதிசிவம் அவரியற்றிய அருமறை யென்ற செய்யுளில் அருமறையாகிய

வேதத்திற்கும் தமிழ்மறையாகிய தேவாரத்துக்கும் தாரதம்மியம் கூறினாரேயொழிய வேதத்தை யெவ்வகையினும் தாழ்த்துதற்கல்லவென அறியவேண்டும். மேற்கண்ட செய்யுளில் வேதம் உலகினர்க்கும் சிவாகமம் சத்திநிபாதமுடையார்க்கும் அருளப்பட்டது எனக்கூறியிருக்கின்றது. வேதத்தின் ஞான காண்டமாகிய உபநிஷத்துக்களினும், சிவபெருமானே முழுமுதற் கடவுளெனக் கூறப்பட்டிருப்பதாகப் பெரியோர் சொல்லுகிறார்கள்.

"பெரிது மானத்தாலுயர்ந்தவள் பிறரைப் பேசிடாவரன்சிவன்முதலா
மரிய நின்னுமைக்குருமணிக் கோவையாலுடன் முழுதலங்கரித்தாள்,
கரியவற்கரியாய் நின்னொடொப்பவரே கருதினுமிலை யெனத்துணிந்தன்
றிருவடிதனக்கே தன்கருத்தெல்லா மமைத்தாள் சீருபநிடதமாமிவளே"

என்ற சிவதத்துவ விவேக மொழிபெயர்ப்புச் செய்யுளாலுமறியக்கிடக்கின்றது.

இருக்கு வேதத்தில் சிவபரஞ்சுடரை எல்லாத் தேவர்களுக்கும் மேலான கடவுள் என்று கூறும் பாகங்கள் பக்கம் ௪௬ முதல் ௫௨ வரை காட்டப்பட்டிருக்கின்றன. யஜுர் வேதம் முற்றிலும் அநேகமாய்ச் சிவபிரான் விஷயமே. இதன் மத்தியில் நடுநாயகமாய் விளங்குவது சிவபிரானையே புகழ்ந்து கூறும் ஸ்ரீருத்திரம் எனும் பகுதியே. அதை ஓதியே அறுபத்துமூவரில் ஒருவராகிய உருத்திரபசுபதி நாயனார் என்னும் அந்தணர் பெருமான், சிறப்புற்ற சிவாகமப்படிக்குள்ள சிவபதவியை எய்தினாரென நமது பெரிய புராணம் கூறுமேயானால், நம்மவர் வேத நிந்தையில் இறங்கியது அவரது ஊழ்வினையேயாம். உபநிஷத்துக்களும் சிவபரஞ்சுடரையே துரியமூர்த்தியெனவும் பிரம விஷ்ணு ருத்திராதிகட்கு அப்பாற்பட்டவரெனவும் கூறுவதாகவும் பெருமக்கள் கூறுகின்றார்கள். விரிவஞ்சி அவ் வாக்கியங்களை யெழுதாது விடுத்தாம். மேற்காட்டிய சிவஞான சித்தியார்ச் செய்யுளில், வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள் எனத் தேற்றேகாரங் கொடுத்து, அருணந்தி சிவனார் வரையறுத்துக் கூறியிருக்கவும், தமிழ் நான்மறை யென்பது ஒன்றிருந்ததாயும் அது கடல்கோளில் மறைந்து விட்டதாயும் நம்மவர் கூறும் வெற்றுரை நிலைபெறுமா? சைவ நூற்பயிற்சியுள்ளோர் நகையாடுவர். மேற்காட்டிய பிரமாணங்களால் உமாபதி சிவனார் வாக்கு, வேதங்களையும் வேதியரையுங் கண்டிக்க வெழுந்ததல்லவென்பதே போதரும். நிற்க, மேலாராய்வாம்.

௬0. இனி நம் நண்பர் சொல்வதாவது, அப்பமூர்த்திகள் அருளிய,

"கங்கையாடிலென் காவிரியாடிலென்"
"சாத்திரம் பல பேசுஞ்சழக்கர்காள்,
கோத்திரமுங் குலமுங் கொண்டென் செய்வீர்"
"கோலும் புல்லும் ஒரு கையிற் கூர்ச்சமும்"

என்னுந் தொடக்கங்களையுடைய செய்யுட்களை யெடுத்துக் காட்டி அப்பர் சுவாமிகளும் இரங்கிக் கூறினமை காண்க வென்றெழுதியிருக்கின்றார். கடவுள் இல்லை யென்றுங்கன்மமே எல்லாப்பலன்களையும் கொடுக்குமென்றும் சித்தாந்த முடையோராகிய ஓர்வகைப் பூர்வமீமாஞ்சகர்கள் மதம் பற்றி யெழுந்த செய்யுட்களிவையெனப் பெரியோர் கூறுவர். சிவ பெருமான் ஒருவரே முழுமுதற் கடவுளென்றும் கன்மபலன் களைக் கொடுப்பவர் அவரே யென்றும் உணராது புரியுங் கன்மங்களெல்லாம் பயன்றராவென்பதே இத்தேவாரப்பாக்க ளின் கருத்தாம். நதிஆதிய தீர்த்தங்களில் ஆடுபவர்களையும் சாத்திரம் படிப்பவர்களையும் கோத்திரங் குலமுண்டென் போர்களையும் கோலும் புல்லுங் கூர்ச்சமுமெடுக்க வேண்டு மென்போர்களையும் இழித்துக்கூறவெழுந்த செய்யுட்களல்ல இவை என உணரவேண்டும். அப்பமூர்த்திகள் கருத்துமவை யல்லவென்பது:—

"தாவி முதற்காவிரி நல்யமுனை கங்கைசரச்சதி
பொற்றாமரை புட்கரணி தெண்ணீர்க்—கோவியொடுகுமரி
வருதீர்த்தஞ் சூழ்ந்த குடந்தைக்கீழ்க்கோட்டம்" என்றும்

"அளித்து வந்தடிகை தொழுமவர் மேல்வினை கெடுமென்றி வையகங், களித்துவந்துடனே கலந்தாடக் காதலாய்க், குளித்து மூழ்கியுந் தூவியுங் குடைந்தாடு கோதையர் குஞ்சி யுள்புகத், தெளிக்குந் தீர்த்தமருந் திருவாரூரம்மானே," என் றும், "குலம் பொல்லேன்" என்றும் "ஒன்றிய சீரிரு பிறப்பர் முத்தீயோம்பும் உயர்புகழ் நான்மறையோர் ஓமாம்புலியூர்" என்றும், அம்மூர்த்திகளே அருளிய தேவாரப் பாக்களால் விளங்கும். எவ்வாறெனில் நதி ஆதிய தீர்த்தங்களையும் அவை களில் முழுகுவோர் சிறப்பையும், குலத்தையும், முத்தீயோம் பும் பிராமணர்களையும் புகழ்ந்து கூறினமை அவர்களருளிய மேற்காட்டிய பாசுரங்களால் விளங்குகின்றமையால். இவ் வாராய்ச்சியால் அப்பமூர்த்திகள் இரங்கிக் கூறினமை பிராம ணரைச் சமஷ்டியாக நோக்கி அல்லவென்பது பெறப்படும். நிற்க:— இனி நம்மவர் எழுதுவதாவது.

சக. "ஸ்ரீமத் மாணிக்கவாசக சுவாமிகள் வேதக்கிரி "யாகாண்டத்தை யாத்திரம் சிறப்பாகக் கொள்வோரை மறுக் "கும் முகத்தான்" விரதமே பரமாக வேதியருஞ் சாதமாகவே

"சாத்திரங் காட்டினர்" என்றும், ஆரியாது ஏகான்ம வாதக் "கொள்கையை மறுக்கும் முகத்தான், "மிண்டிய மாயாவாத "மென்னுஞ் சண்டமாருதஞ் சுழித்தடித்தார்த்து" என்றும், "கடவுள் திருமறையைக் குறிக்குமிடத்து "மிக்க வேதமெய்ந் "நூல் சொன்னவனே" என்றும், ஆரிய வேதங்களைக் குறிக்கு "மிடத்து "வேதங்களையாவென வோங்கி யாழ்ந்தகன்ற நுண் "ணியனே" என்றும், ஆகமங்களைச் சிறப்பிக்கும் முறைமை "யால்" ஆகமமாகி நின்றண்ணிப்பான் றாள்வாழ்க" என்றும் "அருளிச்செய்தமை உற்று நோக்கத்தக்கது." என வெழுதி யிருக்கின்றார். இவ் விடயங்களை ஒன்றின் பின் ஒன்றாக ஆராய்வாம். மாணிக்கவாசகப் பெருமான் 'விரதமே பரமாக வேதியருஞ் சரதமாகவே சாத்திரங் காட்டினர்' என்றாரே யொழியச் சரதமாகவே சுருதி அல்லது வேதங் காட்டினர் என்று அருளியிருக்கவில்லை. ஆதலால் இங்குச் சாத்திரமென் றது பூர்வமீமாஞ்சகர் நூலே. மீமாஞ்சக நூலாரின் கொள்கை, கடவுள் இல்லையென்பதும் விரதமாதிய செய்யப்படுங் கருமங் களே இச்சித்த பயனைப் பயக்குமென்பதும். ஆதலான் மேற் காட்டிய எடுத்துக்காட்டுகளில் முதலாயுள்ள மாணிக்கவாசகர் உரை அன்னோரையே குறிக்கும். ஏகான்ம வாதம் ஆரியாது கொள்கையென வெந்நூலினுங் கொள்ளப்படவில்லை. ஆனாலோ வேத வியாசர் காலத்துக்கு முந்திய காலத்தே ஆங் காங்குச் சிதறுண்டும் விரிந்தும் மறைந்தும் பாவிக்கிடந்த நான்கு வேதங்களைத் தொகுத்து உலகர்க்கு அளிக்கவேண்டியே சிவ பிரானது ஆக்ஞை யான், விண்டுவின்கலையொன்று வியாசராகத் தோன்றி அவ் வேதங்களை யோதாதுணர்ந்து நான்கு கூறாகத் தொகுத்தும், அவைகளின் சாரத்தைப் பிரம சூத்திரமெனப் பெயரிய ஒரு சுருக்க நூலையுமியற்றினரெனக் கந்தபுராணங் கூறும். இப்பிரம சூத்திரத்துக்கு நீலகண்டர், சங்கரர், இராம னுஜர் மத்துவாசாரியார் முதலியோர் ஒன்றையொன்று தழு வாத பாஷ்யங்கள் முதலியவற்றைத் தனித்தனியாய் இயற்றி னர். இவருள் மூவர் ஆரியரே. இவற்றில் முதற்கண் இயற்றப் பட்ட நீலகண்ட பாஷியமே சைவர் கொண்டது. நீலகண்ட ரும் சிவத்வஜராகிய பிராமண குலத்தவரே. இந்நூல்களுள் சங்கரபாஷியம் ஒன்றுமே மாயா வாதக் கொள்கையுடைய தென மேன்மக்கள் சொல்லுவார்கள். ஆதலான் ஏகான்ம வாதம் ஆரியாது கொள்கையெனச் சமஷ்டியாக நம்மவர் சொன்னது பொருத்தமிலதாம்.

"ஆர்யாணாம் ஶிவநிஷ்டாநாம் பாஷ்யமேதந் மஹாநிதி:॥"

"ஆர்யாணும் சிவநிஷ்டாநாம் பாஷ்யமேதந் மஹாநிதிஹி"

என்று சீகண்டர், பாடியமுகத்துரைத்தார். வேதங்களும் உபநிஷத்துகளும் பதி பசு பாச முப்பொருளையே நிலை நாட்டுகின்றனவென்பதே அறிவுடைய பெருமக்கள் கொள்கை, மேலே யாம் காட்டிய இருக்கு வேத மந்திரங்களின் ஒன்று, ஓர் மரத்தில் இரு பட்சிகள் உள, ஒன்று அம்மரத்தின் பழத்தைப் புசிக்கின்றது மற்றொன்று பார்த்துக்கொண்டு விளங்குகின்றது எனக்கூறுகின்றதே. அது சைவ சித்தாந்த முப்பொருள் இலட்சணமல்லவா? "பலகலை ஆகமம் வேதம் யாவையினுங் கருத்துப் பதி பசு பாசந்தெரித்தல்," எனுஞ் சிவப்பிரகாச நூலின் பகுதியையும், "வேதாந்தத்தீதில் பொருள் கொண்டுரைக்குநூல் சைவம்" எனும் சிவஞானசித்தியாரின் பகுதியையும் மற்றுஞ் சைவ நூல்களையும் மேற்கோளாகக் காட்டி முதனூலாகிய வேதத்தில் பூர்வபக்கமாகிய பிறநூற்பொருளைத் தவிர்த்து மற்றைப் பொருள் முழுதுமே ஆகமமாக அருளிச் செய்யப்பட்டிருக்கின்றனவெனப் பெரியோர்கள் சொல்லுகின்றார்கள். இவ்வாராய்ச்சியால், ஏகான்ம வாதம் ஆரியரது கொள்கை யெனவும், மாணிக்கவாசகர் அதை மறுத்தாரென்றும் நம்மவர் கூறியது பொருத்த மற்றதே. நிற்கக் "கடவுள் திருமறையைக் குறிக்குமிடத்து 'மிக்க வேதமெய்ந்நூல் சொன்னவனே' என்றும் ஆரிய வேதங்களைக் குறிக்குமிடத்து "வேதங்களையாவென வோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே" என்றும்" மாணிக்கவாசகர் அருளிச்செய்தார், என்றார். கடவுள் திருமறையைக் குறிக்குமிடத்து என்றும் ஆரிய வேதங்களைக் குறிக்குமிடத்து என்றும் மாணிக்கவாசகர் இருவகையாற் பிரித்துக்காட்டினாரல்லர். 'கடவுள் திருமறை' யென்றாரே, யதன் பொருளென்னை? இச்சொற்றொடரை இதுகாறுந்தோன்றியநம் பெருமக்களில் யாவராவது அவர்களியற்றிய வெத்தகையத் தமிழ்ச்சைவநூல்களில் பிரயோகப்படுத்தி யிருக்கின்றார்களா? இச்சொற்றொடரைப் பிரித்து என்ன பொருள்படுகின்றதெனப்பார்ப்போம். கடவுளது திருமறை, கடவுள் இயற்றிய திருமறை, கடவுளைக்குறித்துப் பண்ணுந்திருமறை, கடவுள் அடியை அடையும் வழியைக் காட்டுந்திருமறை, கடவுள் அருளால் உண்டாய திருமறை, என்பனவாதிய பல பொருட்களைக் கொடா நிற்கும். மறையென்பதற்குப் பொருள் "மறையே வேதமுமறைத்து மொழிகிளவியும்" எனத் திவாகரனார் சூத்திரம் வகுத்தார். வேதம் என்றால் என்னவென விசாரிக்குங்கால், "வேதநூலின் பெயர் ஆதிநூலென்பது வேதநூற் பெயரே. இருக்கு ஒத்து ஆரணம் வேதமென்ப" என அவரே சூத்திரம் வகுத்தார். இதற்கு முரணுகப் பொருள்கூறுதல் ஏலாது. கடவுள் திருமறையெனும் பெயர்தாங்கிய ஒருநூல்

தமிழிலிருப்பதாகவும் தெரியவில்லை. ஆனால் பின் வாக்கியத்தில் ஆரியவேதங்களைக் குறிக்குமிடத்து, என இவர் எழுதியிருப்பதனாலே, கடவுள் திருமறையென்று இவர் முன் வாக்கியத்திற் சொல்லியது, ஓர் கற்பனைக்கட்டுப் பெயரால் தமிழ் நான்மறை யெனக்கூறியும் அந்நூல் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே கடற்பெருக்கில் இறந்து பட்டொழிந்ததெனச் சொல்லியுமுள்ள தமிழ் நான்மறைக்குப் பிரதிபதமாகக் கடவுள் திருமறையென இங்குச் சொன்னாரெனவே தெரிகின்றது. அவ்வாறானால், நம்மவர் தமிழ்நான்மறை, மாணிக்கவாசகர் காலத்தில் இல்லை. இருந்ததாக அம்மூர்த்திகளும் சொல்லியிருக்கவில்லை. ஆதலால் அந்நான்மறையைக் குறிப்பிட்டு மிக்க வேதமெய்ந்நூல் சொன்னவனேயென்று மாணிக்கவாசகர் அருளினாரென்பது சிறிதும் அடாதது. வேதமென்னும் மெய்ந்நூல் சொன்னவனே என்றதனால் வேதமாகிய சத்திய நூலை அருளினவர் சிவபிரானே எனக்குறிப்பிட்டும் நின்றது. நம்மவர்கூறும் கற்பனைத் தமிழ்நான்மறை சொன்னவர் தமிழ் முனிவர் நால்வரென்பது நம்மவர் கொள்கை. ஆதலால் இவர் கூற்றுப்படிக்கும் பொருந்தவில்லை. இவரது தமிழ்நான்மறை சிவபிரானருளிய மெய்ந்நூலாகிய வேதமாகுமானால் சிவபிரான் முக்காலத்தும் நிலைபெற்று அழியாதிருப்பதுபோல், அவர், ஆன்மாக்களிடத்துக் கருணை கொண்டு அருளிய அத்தமிழ் நான்மறையும், அழியாது எக்காலமுமிருந்திருக்க வேண்டும். இன்னமொன்று:—நம்மவரது இறந்துபட்ட தமிழ் நான்மறையையும், என்றும் உயிரோடிருக்கும் ஆரிய வேதத்தையும் மாணிக்கவாசகர் குறித்து, முறையே, மிக்க வேத மெய்ந்நூல் சொன்னவனே என்றும், வேதங்களையாவென வோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே என்றும் அவர் அருண் மொழிகளில் அமைத்தாரெனின், ஏதுக்காக இறந்துபட்ட தமிழ்நான்மறையை அவர் குறிப்பிட வேண்டும். வேதங்களை யாவெனக்கூப்பிட்டும் அவ்வேதத்திற்கு அப்பாற் பட்டுப் போயினர் கடவுள், ஆதலால் ஆரியவேதம் சிறப்புற்றதன்று என மாணிக்கவாசகரே கூறியுள்ளாரெனச் சைவத் தமிழ் மக்கட்குக்காட்ட, நம்மவர் கட்டிய கட்டுக்களில், இதுவுமொன்று என்பதற்குத் தடையேயில்லை. வேதங்களையாவென வோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே என்றது போல "நான்மறை கடா மறியா வெம்பெருமான் ஈசாவென்றேத்தினை காண் சாழலோ" என்றும் "பண்டாய நான்மறையும் பாலணுகா" வென்றும் மாணிக்கவாசகப் பெருந்தகையாரே மற்றும் அருளியிருக்கின்றார்கள். மற்றும் நமது சைவநூல்களெல்லாம் அவ்வாறு கூறியுமிருக்கின்றன. இவற்றின் உண்மைப்பொருளை

நோக்குமிடத்து, நந்தாயுமானப் பெருந்தகையார் கூறியபடி, தெய்வமுமனந்தபேதம். ஆதலின் வேதம், அவ்வவர் வினைக்குப் பொருந்தப்பல தெய்வங்களைக் கடவுளர்களாகக் கூறி வந்து அவர்களில் ஒருவரும் முழுமுதற் கடவுளல்லரென வொதுக்கித்தள்ளி முழுமுதற் கடவுள் அவர்களுக்கெல்லாம் மேலாய சிவபிரானென்று தெரித்து, அவர்தான் ஏகம் என்பவர், சிவனென்பவர், உமாபதி யென்பவர், பசுபதி யென்பவர், என்பனவாதிய சிறப்புப்பெயர்களால் கூறப்பட்டவர், என்று கூறி, அவரது சொருப இலட்சணங்களை, மிகுதியாய் விரித்துக் கூறாது விட்டதனால், நம் பெருமக்கள் எல்லோரும் "வேதங்களை யாவென வோங்கியாழ்ந்தகன்ற நுண்ணியனே" "அருமையின் மறைநான் கோலமிட்டாற்றுமப்பனே" "அல்லையீதல்லையீதென மறைகளுமன்மைச் சொல்லினாற்றுதித்திளைக்கும்,, என்பனவாதிய சொற்றொடர்களால் சிவபரஞ்சுடரைத் துதித்தார்கள் என்பதே திண்ணம். ஏனென்றால் வேதம் சூத்திரரூபமாதலானும் வேதப்பொருளை நன்கு விளக்கச் சிவாகமங்கள், அருளப்பட்டிருப்பதானும் என்ப. "திருவாசகம் முற்றுமே வேத உபநிஷத்துக்களின் சாரமென்பது கொண்டு" சுருதி செந்தமிழாக்கிய மொழியார்" என மாணிக்கவாசகரை, அவரது சரித்திரம் கூறும் திருவாதவூரர் புராணமுமொழியும். இக்காரணங்களால் மாணிக்கவாசகர் நம்மவரது இறந்துபோன தமிழ் நான்மறையைக் குறித்து அவர் இயற்றிய திருவாசகத்தில் சொல்லியிருப்பதாகக் கூறியிருப்பது அசப்பியமேயாம். ஆகமத்தை விசேடித்துக் கூறவேண்டுவது விகிதமே. ஏனெனில் அவை வேதப்பொருளை விரித்துக்கூறும் பாடியமாகலின்; "தொகுத்தவனருமறை, அங்கம், ஆகமம் வகுத்தவன்" எனவும் ஞானசம்பந்தப்பெருமானும் அருளினார்; பின்னும் நம்மவர் எழுதுவதாவது.

"தினைத்தனை வேதங்குன்றாத் தில்லைச்சிற்றம்பலத்தே," என வாதவூரடிகள் அருளியதில் வேதம் என்ற சொல்லுக்கு ஞானநூல் என்பது பொருளாம் என்று நண்பர் எழுதினார். ஞானநூலென்றால் பாசஞானம், பசுஞானம், பதிஞானம், இவற்றை உணர்த்தும் எல்லா நூல்கட்கும் பொதுப்பெயராகும். ஞானநூல் எனப்பெயர் கொண்ட ஒரு நூல் இருமொழியினுமில. வேதம் என்ற சொல் வடமொழி வேதங்களையே குறிக்கும். சிதம்பரத்தலத்தின்கணுள்ள மூலட்டானேஸ்வரர் நடராஜப்பிரபு ஆதிய மூகூர்த்தங்களையும் மற்றும் அத்திருப்பதியின் கண்ணுள்ள சிவாலயங்களையும் பூசித்துவருபவர் வேதவேதியர்களாகிய தில்லைவாழந்தணர்களே. மற்றைய வெல்லாத் தலங்களினும் பூசிக்கும், சிவாகம வேதியர்க்கும் இவர்களுக்கும்

எவ்வகையினுஞ் சம்பந்தமில்லை. ஆதலால் இங்குத், தினைத்தனை வேதங்குன்றா எனுஞ் சொற்றொடரிலுள்ள வேதம் என்றசொல் வடமொழி வேதத்தையே குறிப்பிட்டு நிற்கின்றது. உயர்வொப்பில்லாத வித்தலத்தை இக்காலத்திலுங் காலந்தோறுந் தெரிசிப்பவர்கள் 'தினைத்தனை வேதங்குன்றாத் தில்லைச் சிற்றம்பலம்' என்ற அருண்மொழிகளிலுள்ள 'வேதம், என்பது இன்ன நூலெனக்காட்சிப் பிரமாணத்தாலுமறிவார்கள். நிற்க, மேலாராய்வாம்.

சஉ. இனி நம்மவர் எழுதுவதாவது. "வடமொழி "வேதவரலாறும், தேவாரத்துட் கூறும் தமிழ் நான்மறை "வரலாறும் தம்முள் வேற்றுமையுடையன." என்றெழுதிக் "கொண்டு இந்நிலவுலகத்திலே ஆலநிழற் கீழ் அருள்பெற்ற "முனிவர் நால்வரும் செய்த மறைகளே தமக்குமுற்பட்ட மறை "களாகத் தேவாரகருத்தாக்கள் குறித்துள்ளார்கள்" என முடிபு செய்தார். தேவாரப்பாசுரங்களுள் ஒரு செய்யுள் அல்லது ஒரு செய்யுளின் ஓரடி அல்லது ஓரடியின் ஒரு சொல் தமிழ் நான்மறை யென்ற ஒரு நூலைக்குறித்திருக்குமேயானால் அதை யெடுத்துக்காட்டி அவர் கொள்கையைத் தாபிதஞ் செய்யாமல் விருதாவாகப் பேசுவதனாலும் எழுதுவதனாலும் பிரயோசனமில்லை. தேவாரப்பாக்களிலும், மற்றும் இவர்காட்டும் மேற்கோள்களிலும் அவைகளில் உள்ள உண்மைப் பொருள்களைக்காட்டாது மூலபாடங்களிலுள்ள மொழிகளைத் தம்கொள்கைக்கு இணங்கத்திருத்தியும் தெய்வத்தன்மைபொருந்திய உரை ஆசிரியர்கள் உரையைப்புறக்கணித்துத்தள்ளிவிட்டும் பொருந்தாத நவீன உரை கற்பித்தும் மூவகை அளவைகளுள் ஒரு அளவையாலும் தாபிக்கப்படுவதற்கு இயலாதபடி இவர் எழுதிவந்திருக்கும் கொள்கையை ஒவ்வொன்றாய் மேலே யெடுத்துக்காட்டி; அவைகளெல்லாம் உண்மைப் பொருளுக்குப் பொருத்தமற்றவை யெனப் பிரபலபிரமாணங்களுடன் வரிசையாக எழுதிக்காட்டி வந்திருக்கிறோம். "காது பொத்தரைக்கின்னரர்" என்ற சுந்தரப்பெருமான் தேவாரத்தில் வேதஞ் செய்தவர் தமிழ் முனிவர் நால்வரெனப் பொருள் இருப்பதாகவெழுதியிருக்கின்றாரே ஒழிய அப்பாசுரத்தின் பொருளைக்கூறித் தம்கொள்கையைத் தாபிக்கப்புகுந்திலர். அத்தேவாரத்தின் பொருளே இவருக்கு விளங்கவில்லையென மேலே உகூ-ம் பக்கம் முதல் ௬உ-ம் பக்கம் வரை விவரித்துக்காட்டி யிருக்கின்றோம். பிரபல பண்டிதர்களில் ஒருவரும் இவரது கொள்கைக்கு உடன்பட்டிலர்.

திருமறைக்காட்டுத் தலத்திற்கருகே, கல்லாலமரமிருப்பதாகவும் எழுதியிருக்கின்றார். அப்படி அங்குக் கல்லாலமரம் இல்லையென்பது தெளிவு. அத்தல விருட்சமோ வன்னிமரம். ஆலய ஆவரணத்துள் அது நிலைபெற்று மிக்க அழகாய்ப் பல கிளைகளுடன் ஓங்கி வளர்ந்து விளங்கித்தான் பூர்வீகமாயுள்ளதென்பதைக் காட்டிக்கொண்டு நிற்கின்றது. ஆனால் வெள்ளால் என்கிற ஒரு புண்ணிய விருட்சம் திருமறைக்காட்டுத் தலத்திற்குச் சுமார் ஏழு மைலுக்குத் தெற்கிற் கோடிக்குழகர் கோயிலுக்குச் சமீபம் இருப்பதாகத் திருமறைக்காட்டுத் தலப் புராணம் கூறுகின்றது. தமிழ்நான்மறை யுணர்ந்தோர் பூசித்த தலம் திருமறைக்காடு என்று நம்மவர் எழுதியிருக்கின்றார். அம்மறைகள் மறைந்தபின்பு அவற்றை யுணர்ந்தோரால் அக்கோயிற் கதவுகள் மூடப்பட்டனவென்றும் பின்பு தேவார மருளிய பெரியோரால் திறக்கப்பட்டனவென்றும் எழுதியிருக்கின்றார். அம்மறைகள் மறைந்தபின்பு அவற்றை யுணர்ந்தோர் திருமறைக்காட்டில் இருந்திருந்தால், அவர் வழியாய் அவை வந்துகொண்டேயிருந்து இக்காலமும் அத்தமிழ் நான்மறைகள் நிலவுதல்கூடுமே. தென்மதுரையைக் கடல்கொண்டபோது தமிழ் நான்மறையும், தமிழ் ஆறங்கமும், தமிழ் இருபத்தெட்டு ஆகமங்களும், அழிந்துபோயினவென்பது இவர் படைத்துரை; தென்மதுரையென்னும் பண்டையகாலத்து நகரம், இப்போது நிலைபெற்று விளங்கும் கன்னியாகுமரிக்குத் தெற்கே அநேகமைல்களுக்குத் தென்பாலிருந்த நகரமெனக் கூறுவார்கள். திருமறைக் காட்டுத் தலத்துக்கும் கன்னியாகுமரிக்குமே இப்போதுள்ள தூரம் நாற்பது காதமாகும். கன்னியாகுமரிக்குத் தெற்கு எவ்வளவு தூரமோ பழயமதுரை, அது தெரியாது. திருமறைக்காட்டில் தமிழ்நான்மறை உண்டாகி அத்தலத்து இறைவனை அந்த நான்மறை செய்தோர் பூசித்திருந்தால், இவ்வகண்டதமிழ் நாட்டுப்பூதலத்துள், அத்தமிழ் நான்மறைகளும் அவற்றோடு சேர்த்து எண்ணப்படும் மற்றைத்தமிழ் ஆறங்கமும் தமிழ் ஆகமம் இருபத்தெட்டும் நிலைபெற்றிருக்க, ஓரிடமாவது இப்பக்கம் பெறாது, உற்பத்தியான தாய்த்தமிழ்நாட்டை அறவே விடுத்தொழித்துவிட்டுப், பன்னூறுகாத தூரமுள்ள தென்மதுரையிற்போய்க் குடிபுகுந்து அவைகள் முற்றும் கடலரையனாற்கவர்ந்து கொள்ளப்பட்டனவென நம்மவர் கூறுவது எவ்வகையிற் பொருந்துமோ? தமிழ்க் கல்வியாளர்களே கூர்ந்து நோக்கி முடிபுகட்டுங்கள். தமிழ்நாடு வடக்கின்கண் திருப்பதிவரை எல்லைபெற்று விளங்கிக்கொண்டிருக்கின்றது. அவ்வெல்லைக்குட்பட்ட தொண்டைநாடு சான்றோருடைத்து எனப் புகழப்பட்ட நாடாகும். இங்கெல்லாம் தமிழ்கற்ற

தமிழர்களும் சைவசமயக் கொள்கையுடைய தமிழ் மேன்மக்களும், அந்நூல்களை ஆதரித்துப் பாதுகாவாது போனார்களோ? இமயமலைவரை தமிழ் அரையர் தங்களது அரசாட்சி பரவச் செய்துகொண்டிருந்ததாகவுஞ் சொல்லப்படுகின்றதே? இவ்வகண்ட பூமிப்பரப்புள் வசிப்பவர்களில் யாரும் அந்நூல்களில் சிற்சில பாகத்தையாவது போற்றி வைத்திலரோ? அந்நூலின் பெயராவது கர்னபரம்பரையாய் வந்து நிலவுதல் வேண்டாமோ? தேவார கருத்தர்கள் அவர்கள் அருளிய தமிழ் மறையில் அவர்களுக்கு முன்னிருந்த தமிழ் நான்மறையைக் குறிப்பிட்டிருப்பதாக நம்மவர் சொல்லுகின்றாரே, அவ்வாறு தமிழ்நான்மறையென்றும் ஒரு நூல் இருந்திருந்தால், அதை ஓர் நொடியில் தருவித்துத் தமிழ் உலகினர்க்குக் கொடுத்துப் பேருபகாரஞ்செய்திருப்பார்களன்றோ?. கர்ன பரம்பரையாக வழங்கும் ஒரு சரிதையாவது:—ஸ்ரீசம்பந்தப் பெருமான் திருவாவடுதுறையில் இறைவனை வணங்கித் துதித்துப் பலிபீடத் தருகேவருகையில், இங்குத்தமிழ் மணம் வீசுகின்றதென்றாராம். பலிபீடத்தைச் சோதித்துப்பார்த்ததில் அதனடியில் திருமந்திரம் என்னும் தமிழ் ஆகமம் சேமிக்கப்பட்டு வைத்திருந்து அகப்பட்டதாம் என்பது. இவ்வாறு தமிழ் நான்மறையையும் வெளிப்படுத்தியிருப்பார்களே. சில ஆண்டுகட்கு முன் இறந்து போய் மயானத்தில் தகனஞ் செய்யப்பட்ட ஓர் அருமைக் கன்னிகையை அவளது சென்ற வயதுடன் ஒரு நிமிடத்தில் வரும்படி அநுக்கிரகித்து அந்தப் பெண்ணை அவளது தாய் தந்தையாரிடம் சம்பந்தப்பெருமான் அளித்தாரல்லவா? அது போல் தம்பிரான் றோழரும் ஒரு முதலையால் விழுங்கப்பட்டு அதற்கு இரையாகி ஜீரணித்துப்போன ஓர் பார்ப்பனச் சிறுவனைச் சில ஆண்டுகளுக்குப் பின்னர்த் தண்ணீரில்லாது வறண்டுபோய் வெறுந்தரையாயிருந்த அக்குளத்தில் நீர்பெருகச்செய்து அங்கு அம்முதலையை வரச்செய்து அதன்வாயினின்றும் அச்சிறுவனை உமிழச்செய்து அச்சிறுவனைப்பெற்றோர்க் களிக்கவில்லையா? ஒரு கற்பத்தில் வேதங்களையெல்லாந் திரட்டித் திருடிக்கொண்டு சமுத்திரத்தில் ஒளித்துப்போன அசுரனிடமிருந்து, சிவாக்ஞைப்படி, திருமாலானவர் மச்சாவதாரமெடுத்து அவ்வேதங்களைக் கொணர்ந்து உலகினர்க்குக் கொடுத்து உபகரிக்கவில்லையா? ஓர் காலத்தில் சுப்பிரமணியக் கடவுளால் கடலில் எரியப்பட்டுப்போன வேதாகமங்களை நந்தியெம்பெருமானை மகர மச்சமாகச் செய்து அந்நூல்களைத் தாங்கச்செய்து இறைவன்றாமே அவைகளைக் கொணர்வித்து அந்நூல்களை மகேந்திர மலையினின்று தாமே உலகினர்க்கு அளிக்கவில்லையா? நம்மவர் சொல்லுந் தமிழ் நான்மறை தமி

மூர்களுக்கென்று இறைவனது கருணையினால் கொடுக்கப்பட்டிருந்தால் சமுத்திரத்தில் மறைந்துபோன அம்மறையை மீண்டும் வரும்படிச்செய்து தமிழர்க்குக் கொடுத்துபகரிப்பது வித்தின்றி நாறுசெய்யும் இறைவனுக்கு ஓர் அரிய காரியமா? கருங்கற்றூணோடு சேர்த்துப் பிணிக்கப் பட்டுக்கடல் நடுவில் தள்ளப்பட்ட எந்தைபிரானாகிய அப்பமூர்த்திகளைக் கடலரையன் தன்றலைமேற்றாங்கி வந்து கரையில் ஏற்றிவிட அக்காரணத்தால் அவ்விடத்துக்குக்கரை யேறவிட்டகுப்பம் என இன்னமும் பெயர் வழங்கிவர வில்லையோ? தமிழ் மறையென ஒரு நூல் இருந்திருந்து சமுத்திரத்தில் அது மறைந்து போய்விட்டது மெய்யாமாகில், "மறைமுதனென்கும் மூன்று காலமுந் தோன்ற நின்றனை" எனவும் "மூவா நான்மறை" எனவும் "முடிவிலா ஓத்து" எனவும் நமது சமயாசாரிய மூர்த்திகள் அருளியிருக்கும் அருண் மொழிகள் வெற்றுரையாகுமே? இன்னோரன்ன காரணங்களால் தேவார திருவாசகங்களிற் காணப்படும் மறை, அல்லது நான்மறை யென்பது முக்காலமும் நிலைபெற்று விளங்குவதாகிய நான்கு வேதங்களேயாம் என்பதும் தமிழ் நான்மறையென ஓர் நூல் இருந்ததில்லையென்பதும் தமிழ் நான்மறை யென்பது தேவார திருவாசகமேயாமென்பதும், திண்ணம்.

தமிழ் நான்மறை உண்டாயது திருமறைக் காட்டுத் தலத்திலென்றும் அவைகளை ஆக்கிய தமிழ் முனிவர் நால்வர் பூசித்த தலமே அதுவென்றும், அவைகள் மறைந்தபின் அவற்றை யுணர்ந்தோர் அத்தலத்தின் வாயில்களை அடைத்து விட்டனர் என்றும் நம்மவர் கூறினாரே, அம்மறைகள் கடல் கோளில் எவ்வளவோ காததூரத்துக்கு அப்பால் மறைந்து போனால், ஏன் இத்தலத்தின் வாயில்களை மற்றவர் அடைத்து வேறு வாயில் காணவேண்டும். உலகெலாம் பெற்றெடுத்த நமது அன்னைக்கும் அப்பனுக்கும் தமிழ்மறைகள் இறந்தநாள், தனிஷ்டா பஞ்சமிபோலும். அவ்வாறு கொண்டாலும் தனிஷ்டா பஞ்சமியின் நீடித்த காலம் ஒரு ஆண்டுக்கு மேலில்லை. இக்கதவம் அடைக்கப்பட்ட காலத்துக்கும் திறக்கப்பட்ட காலத்துக்கும் இடையினுள்ள கால அளவு அநேக காலமாகத் தெரிகின்றது. இக்கதவைத் திறக்கும்படிக்கும் அடைக்கும் படிக்கும், நம்பெருமக்கள் தேவாரம் பாடினார்களே, அத் தேவாரப் பாக்களிலாவது தமிழ் மறை நான்கினால் அடைக்கப் பட்ட கதவு என்பதைக் காட்டியிருக்கின்றார்களா? அல்லது அத் தமிழ்மறை செய்தோர் தமிழ் முனிவர் நால்வரால் பூசிக்கப்பட்ட தலமென்பதனையாவது குறிப்பாலாயினும் காட்டி

ஞர்களா? இல்லையே. ஆனாலோ திருஞான சம்பந்தப்பெருமான் அத்தலத்துக்கு அருளிய தேவாரப் பாக்களில்

"பலகாலங்கள் வேதங்கள் பாதங்கள் போற்றி
மலரால் வழிபாடுசெய் மாமறைக் காடா"
"வேதம் பலவோமம் வியந்தடி போற்ற
ஓதம்முலவும் மறைக் காட்டி லுறைவாய்" என

அருளியிருப்பதைக் கூர்ந்து நோக்குமிடத்து வேத புருஷன் பல ஹோமங்களை வியக்கும்படிசெய்து புஷ்பங்களால் சிவபெருமானை அருச்சித்த திருமறைக்காடு என்பது விளங்குகின்றது. ஹோமம் என்னும் வடமொழியே ஓமமெனத் திரிந்தது. ஹோமம் என்பது, சாத்திர விதிப்படி அமைக்கப்பட்ட அக்கினி மூலமாய்த் தேவர்களுக்கு உணவு அளிக்கும் அக்கினி காரியமென்பதாகும். இவ்வகையான கர்மா, வடமொழி நூலால் வகுக்கப்பட்டதே. ஆதலால் வேத புருஷன் அக்கருமாக்களையுஞ் செய்தானெனச் சம்பந்தப் பெருமான் கூறியருளினர். வேத புருஷன் பூசித்த காலத்தில், நான்கு வேதங்களும் ஒவ்வொன்றும் வெவ்வேறு நிறமுடைய நான்கு வர்ணமான அலரிப்புஷ்பம் பூக்கும் அலரிச் செடிகளை அத்தலத்துக்குப் பக்கத்தில் ஏராளமான காடுபோல உண்டாக்கி அப்புஷ்பங்களை யெடுத்துப் பூசித்தானென்றும் இந்நாள் காறும் அச்செடிகள் விளங்கிக் கொண்டிருப்பதாகவும் அத்தலத்தார் சொல்லி அப் புஷ்பச் செடிகளையுங் காட்டுவர். சிவபெருமானை வழிபாடு செய்வது, அபிஷேகம், நிவேதனம், தோத்திர மாதிகளிருக்க, மலரால் வழிபாடு செய்ததாக மலரையே குறித்து அருளியிருப்பதுவும் அவ்வுண்மை தோன்றற்பொருட்டே; சம்பந்தரும், அப்பரும் இத்தலத்துத் திருக்கோயிலருகே வந்து ஆலயத்தினுள் நேராய்ப்புகும் வாயிலினது திருக்கதவம் திருக்காப்பிட்டிருப்பதைக் கண்டார்கள் எனக் கூறும் அமையத்தில் சேக்கிழார் பெருமான் அருளியிருப்பதாவது,

"முன்னுட்படியின் மறையருச்சித்துக் காப்புச்செய்த பைம்பொன்மணித்
திருவாயிற் பாங்குவந்தார்"
"அருமறைகள் திருக்காப்புச் செய்துவைத்த அக்கதவம்"

என்பன. இச்செய்யுட் பகுதிகள் வேதங்களே அக்கதவுகளைத் திருக்காப்பிட்டு வைத்தனவென்று தெரிக்கின்றன. தமிழ் நான்மறை, அஃதியற்றிய தமிழ் முனிவர் நால்வர் என்னும் வாசனைகூடச் சேக்கிழார் வாக்கிலுங் காணப்படவில்லை. நம்மவரோ தமிழ் நான்மறைகள் கடலில் மறைந்தபின்பு அவற்றை யுணர்ந்தோரால் அக்கோயிற் கதவுகள் மூடப்பட்

டன என்கின்றார். இவ்வரிய கற்பனை எங்குக் கண்டுபிடித்த னரோ அவரே பகரவேண்டும். அகோர தேவர் இயற்றிய வேதாரணியத் தலப் புராணம், நாமச்சருக்கம் என்னுஞ் சருக் கத்தில், இத்தலத்துக்கு வேதாரணியமென்னும் பெயர் எய்திய தற்குக் காரணங் கூறப்பட்டிருக்கின்றது. அதன் சுருக்க மாவது :—இத்தலத்துக்கு ஆதியில் எய்தியிருந்த பெயர் சத்திய கிரி என்பதாம். அப்பமூர்த்திகள் அருளிய இத்தலத்துத் தேவாரப் பதிகத்தில் "மலையினீடிருக்கும் மறைக் காடரோ" எனக் காணப்படுவதின் கருத்தும் இக்காரணம்பற்றியே யென வும் அறியவேண்டும். ஓர் பிரளய காலத்தில், அங்கம், ஸ்மிருதி, புராணம், ஆதிய நூல்களெல்லாம் வேதத்தி லொடுங்கிற்று. வேதம், புருடரூபங்கொண்டு சத்தியகிரித் தலத்தைச் சார்ந்து, வேத அமிர்தமெனவோர் தடாக முண்டுசெய்து அத்தடாகத் தீர்த்தத்தால் அத்தலத்தில் எழுந்தருளியிருந்த சிவகிரி நாதனை அபிடேகித்து அநேக காலம் வணங்கியது. அதுபற்றியன்றோ பலகாலங்கள் வேதங்கள்போற்றி எனச் சம்பந்தரருளியது மென்க. அவ்வழிபாட்டால் சிவபெருமான் சகளீகரித்து எழுந்தருள, வேதபுருடன்கேட்ட வரங்கள் மூன்று. முதலா வது "தீண்டரும் பதிதர்தூர்த்தர் செறிந்த பாசண்டர்தீயோர், மாண்டருங்குணமிலாதார் மறையவரென்ன நாமம், பூண் டறைந்திட வாலாமைபூண்டனம் புனிதமற்றே" ஆதலான், "வீரியசத்தியாவும் வீந்தனமீள நின்றால், ஆரியமாகியாக்க மடைந்துறு வலியினோடும், பேரியல்புனிதமாகப் பிறங்க லொன்று." இரண்டாவது கேட்டவரமாவது "ஒன்றுபேசுங் காரியமனைத்து மாயுங்காலையிற் கலக்கமற்றே" "நினதடிக்கம லம்போற்றி நிலையுமிப்பதியின்மேவி, முனமனுவுருவமாற்றி மூதுலகறியாவண்ணம் இனமுறுவிலங்கு புள்ளுத்தரு *வரி விவற்றிற்காய,மனமனுவுருவாயீங்கு வைகல்"; மூன்றாவதாவது, இத்தலத்திற்கு வேதவனமென்றும் இத்தலத்தில் விளங்கும் இலிங்கமூர்த்திக்கு வேதவனநாதர் என்றும் நதிக்கு வேதநதி என்றும் பெயர் வழங்கவேண்டுமென்றும் மற்றுஞ்சில வரங் களும் வேதபுருடன் வேண்டினன். வேண்டியவண்ணமே எம் பிரானருளிச்செய்தார். "வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்" என அப்பமூர்த்திகள் இத்தலத்தேவாரத்தில் அருளியிருப்பதும் இக்காரணம்பற்றியே. அவ்வாறே இறை வன் வேதங்களை ஆரியத்தில் அருளி உபகரித்தனன் என் பது இதனாலன்றோ. வேதங்களையும் சிவாகமங்களையும் ஓதிச் சகலாகம பண்டிதர் என்னுங் காரணப்பெயர் பூண்டு

* வரில் = மூங்கில்

உலககுருவாய் விளங்கிப் பின்னர் நம்மெய்கண்ட தேவருக்குச் சீடராகி அருணந்தி சிவமெனத்தீட்சா நாமம் பெற்றுச் சிவஞான சித்தியார் என்னுஞ் சைவசித்தாந்த சாத்திரமியற்றிய குருமூர்த்திகள், அந்நூலில் "ஆரியமா யறம் பொருளோடின்பம் வீடெல்லா மறைந்துயிர்கட்கறிவு செயலளிப்பது நூலந்நூல், கூரியராயுள்ளவர்களோத வோதிக் கொண்டு வரலான் முன்னே குற்றமின்றிச், சீரியபோறிவுடையோன் செப்பவேண்டுஞ் செயலினுக்குங்கரி வேண்டுஞ் சிவனுளனென்றறியே" எனக்காரிய காரணசம்பந்தத்தைக் காட்டிச் சிவபிரானே ஆரியத்தில் வேதங்களைத்தந்தருளினர் என்று திருவாய்மலர்ந்தருளினர். அப்பமூர்த்திகள் அருளிய இத்தலத்துத் தேவாரப்பதிகத்தில் "ஆரியன்கண்டாய் தமிழன் கண்டாய்" எனவும் "முத்தமிழும் நான்மறையுமாயினன் காண்" எனவும் அருளிச்செய்திருப்பதுவும் இக்காரணம் பற்றியேபோலும். மற்றைய தலங்களின் தேவாரங்களிலும் இவ்வாறே அந்தந்தத் தலத்தின் சரித்திரங்களையெடுத்துக் குறிப்பாய்க் காட்டியிருப்பதை அத்தேவாரப் பொருளைக் கூர்மையாய் அறிவோர்கள் அறிவார்கள். அன்றியும் திருமறைக்காட்டில் வேதங்கள் பூசித்திருத்தல் போலவே நந்தமிழ் நாட்டிலுள்ள சிவாலயங்களில், வைத்தீஸ்வரன் கோயில் என்ற திருப்புள்ளிருக்குவேளூரிலும், திருக்கழுக்குன்றம் என்னும் வேதகிரியென்னுந் தலத்தும், திருவேதிகுடியென்னுந் தலத்தும், திருமைலையென்னும் வேதபுரியென்னுந் தலத்தும், திருவாலவாயென்னும் கடம்பவனத்தும், ஒவ்வோர்காரணம்பற்றிச் சிவபிரானை வேதங்கள் பூசித்தனவென அத்தலமான்மியங்கள் விளக்குகின்றன. திருப்புள்ளிருக்குவேளூர் என்ற அத்தலத்துப் பெயரில் இருக்கு என்னும் வடமொழி வேதப் பெயர் காணப்படுவதே அதற்கு அத்தாட்சியாம். தேவாரங்களிலும் அத்தலத்தின் பெயரைத் திருப்புள்ளிருக்குவேளூர் என்றே கூறப்பட்டிருக்கின்றது. இதனால் இருக்கு என்ற வேதம் நந்தமிழ் நாட்டில் இவ்வாலயமுண்டானபோதே நிலவியதென்பதையுமறியலாம்.

இக்காரணங்களால் தமிழ்நான்மறையென்பது உண்டாயது திருமறைக்காட்டில் என்றும், அவைகளை ஆக்கிய தமிழ் முனிவர் நால்வர் பூசித்த தலமே அதுவென்றும், அந்நான்மறைகள் கடல்கோளில் மறைந்துபோன பின்னர், அவற்றை யுணர்ந்தோர் அத்தலத்திலுள்ள சிவபெருமானது ஆலயக் கதவுகளை மூடிவிட்டார்களென்றும், நம்மவர் கூறுங்கூற்றுச் சற்றும் ஆதாரமற்றதென நன்கு விளங்கும். நிற்க, மேலாராய்வாம்,

சரு. இனி நம்மவர் கூறுவதாவது. "பழந்தமிழ் நூல் "கள் யாவற்றுள்ளும் 'ஆலமர் கடவுள்' 'ஆலமர் செல்வன்' "எனச்சிவபிரானை விதந்தோதுவதும், தமிழந்தணர்க்குக்கூறிய "கமண்டல முதலிய அடையாளங்களையே, அவர்க்குக் கூறு "வதும் அவர் "தமிழ்மறை முதல்வ" ரென்பதற்குத்தக்க "சான்றாகும்"

"சீர்மிகு சிறப்பினோன் மரமுதற் கைசேர்த்த
நீர்மலிகரகம் போற் பழந்தூங்கு முடத்தாழை"

"என்ற கலித்தொகை (செய்யுள் கருரு) யடியுங்காண்க." எனவெழுதியதுமன்றி மற்றோர் * இடத்தில் "பண்டைத்தமிழ் "நூலோர் 'சீர்மிகு சிறப்பினோன்' 'ஆலமர் செல்வன்' என்ற "பெயர்களால் குறித்தனரேயன்றித் தென்முகக் கடவுளென்று "விதந்து ஓதிற்றிலர். ஆனால் வடமொழி நூலோர் அக்கட "வுளைத் தட்சிணாமூர்த்தியென்று கூறுகின்றார்கள். தட்சிணா "மூர்த்தி யென்ற சொற்குத் தெற்குக்கடவுள் என்பதே நேர் "பொருளாகத் தெரிகிறது. ஸ்ரீமன் மாணிக்கவாசக சுவாமி "களும் "தென்னாடுடைய சிவனே போற்றி" "எந்நாட்டவர்க் "கும் இறைவா போற்றி" யென்றமையானும் தென்னாட்டில் "கடவுள் நால்வருக்கும் மறை அருளிச்செய்தாரென்பது "யூகிக்கற்பாலது. தென்னாட்டில் எழுந்தமறை தமிழ்மறை "ஆதல் தெளிவு" எனவும் எழுதியிருக்கின்றார்.

இப்போது நம்மவர் அவரது கொள்கைக்கு ஆதரவாக மேலேயெடுத்துக்காட்டிய மேற்கோள்களை ஆராய்ந்து அவற்றின் பொருள் அவர் கொள்கைக்கு ஆதரவாய் நிற்கின்றதாவென்பதைப் பரிசோதிப்பாம். சீர்மிகு சிறப்பினோன் என்ற சொற்றொடரைக் கலித்தொகையில் இருப்பதைக் காட்டியது போல மற்றை ஆலமர் செல்வன், ஆலமர் கடவுள், என்ற வாக்கியங்கள்வரையப்பட்டுள்ள பழந்தமிழ்நூல்களை இவர் ஏன் எடுத்துக்காட்டிலர். முன் பின் தொடர்ந்த பதங்களின்றிச் செய்யுட்களிற் காணப்படும் பதங்களுக்கு ஓர் பொருள் கொள்வது உண்மை விளங்காது. இவ்விரண்டு பதங்களும் சிவபிரானுக்குக் காரணங்குறித்து எய்திய பெயர்களே. சிவபிரான் கல்லாலடியில் எழுந்தருளியது நால்வருக்கு உபதேசித்த ஒரு காரணத்தான் மட்டுமல்ல. நந்தி யெம்பெருமானுக்கு உபதேசஞ் செய்ததும் கல்லாலடியிலிருந்தே. இதனைக் 'கல்லாணிழல் மலைவில்லாரருளிய" என்னும் மெய்கண்ட சிவஞானபோத பாவையும் அதற்குச் சிவஞான முனிவர் இயற்றிய உரையையும் நோக்குக. ஆதலால் அவ்விரண்டு சொற்றொடர்கள் நம் நண்பர்

* செந்தமிழ்ச் செல்வி சிலம்பு க, உஉஉ-ம் பக்கம்

கொள்கைக்கு யாது பயனும் கொடா. சீர்மிகு சிறப்பினோன் என்ற கலித்தொகைச் செய்யுளில் காணப்படுகின்ற சீர்மிகு சிறப்பினோன் கைசேர்த்த நீர்மலிகரகம் போலபழந்தூங்கு முடத்தாழை யென்றதில்:—சீர்மிகு சிறப்பினோனது கையி லிருக்கும் நீர்மிகுந்தகரகம் ஒருகையிலுள்ள பொருள் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இவருக்கு எத்தனை கைகளுள, ஒருகையில் கரகமிருந்தால் மற்றையக் கைகளில் என்ன விருக் கின்றனவென்பதை இவர் அறிந்துகொள்ள வகைதேடினால் லர். கடவுளர்கட்கெல்லாம் நான்கு கைகளுண்டு என்பதே நமது நூல்களின் துணிபு. அது எவ்வகையானும் ஆகுக. அதையிங்கு ஆராயவேண்டாம். சீர்மிகுசிறப்பினோன் ஒற்றைக் கையனல்லன், இருகையுடையோனென்று கொள்வதே யாவ ருக்கும் இயைந்ததாகும். இவரது மற்றொருகை யென்ன கொண்டதென்றால் சின்முத்திரையாகிய ஞானமுத்திரை யையே. ஆதலால் சீர்மிகு சிறப்பினோன் என்றபதம் தட்சிணா மூர்த்திக்கடவுளையே குறித்து நின்றது. எமது கூற்றை மேற் காட்டிய கலித்தொகைச்செய்யுட் பகுதிக்குப் 'புகழ் மிகுகின்ற தலைமையினையுடைய தக்கணாமூர்த்தித்தேவர் தாமிருந்த ஆல மரத்தே' என உரைஆசிரியர் பொருள்கொண்டிருத்தலே, வலி யுறுத்தும். ஆகவே நம்மவர் முடிபின்படி (அவர் கலித்தொகை யில் குறிப்பிட்ட தக்கணாமூர்த்தித்தேவர்) தமிழ்மறை முதல்வர் என்பதற்குத்தக்க சான்று ஆகமாட்டார் என்பதே உறுதி. ஏனெனில் தட்சிணாமூர்த்தியாயெழுந்தருளிய சிவபிரான் சன காதி முனிவர் நால்வராகிய பிரமபுத்திரர்கட்கே வேதமாதிய மொழிந்தாரென்று நமது இதிகாச புராணங்களெல்லாம் ஓரே மொழியாகக் கூறுவதானும் அவைகளே இந்நாள்காறும் நிலை பெற்றிருப்பதானும் நம்மவர் கூறுங் கற்பனைத்தமிழ் மறை இறந்து போயினவென்று அவரே கூறுதலானும் அறியக்கிடக்கின்றது. இதனாற் பெறப்படுவதும் தமிழ்நான் மறையென ஒருநூல் இருந்ததில்லை என்பதே. மற்றும் பழந் தமிழ்நூல்கள் யாவற்றுள்ளும் ஆலமர்கடவுள், ஆலமர்செல் வன், என்பவருக்குத் தமிழந்தணர்க்குரிய கமண்டலம் ஆதிய அடையாளங்களையே கூறுகின்றனவென்கின்றார். பழந்தமிழ் நூல்களுள் ஒன்றிலாவது தமிழ் அந்தணர் என்ற பதங்காண்ப தில்லை. இவராவது அத்தகைய நூலையெடுத்துக் காட்டினவரு மல்லர். தமிழ்நூல்களுக்கெல்லாம் ஆதிநூலாகிய தொல்காப் பியத்திலேயே அந்தணர், அரையர், வைசியர், வேளாளர் என மக்களை நான்குவகுப்பாய் வகுத்துக்காட்டி அந்தணர்க்குரிய அடையாளம் 'நூலே கரகம் முக்கோல் மணையே' என்றும் மற்றைமூவருக்கும் இவ்வடையாளங்களைக் கூறுதொழித்து

மிருக்கின்றதை நோக்குங்கால் தமிழந்தணர் என்ற சொற்றொடர் நம்மவரால் சமயோசிதமாய் ஆக்கப்பட்டதெனக் கூறுதற்குத் தடையாதுங்காணேம். கலித்தொகையில் அந்தணர் எனக்கூறியிருக்கும் பகுதிகளையும் அவர்க்குக்கூறியிருக்கும் கரகம், முக்கோல் என்ற அடையாளங்களையும் நம்மவர் எடுத்துக் காட்டி அவ்வந்தணராவோர் தமிழ் அந்தணர் எனத் திரிபாகப் பொருள்கொண்டு எழுதியிருக்கின்றார். மேலே அவ்வவ்விடங்களில் அவைகளை யெடுத்துக்காட்டி அவர்கள் தமிழ் அந்தணர் அல்லரென்பதைத் தக்கபிரமாணங்களுடன் விரித்துக்காட்டியிருக்கின்றோம். இங்கு, ஆலமர்கடவுளுக்குத் தமிழந்தணர்க்குரிய கமண்டலம் ஆதிய அடையாளங்களையே கூறுகின்றன வென்கிறார். எந்தச்செய்யுளிலே ஆலமர்கடவுளுக்கு அடையாளங்கள் கூறப்படுகின்றன? இவர்காட்டிய சீர்மிகுசிறப்பினோன் என்ற செய்யுளில்கூறிய அடையாளமாகிய கரகமென்பது தொல்காப்பிய நூலிற் கூறியபடிக்குள்ள கரகமன்று. தொல்காப்பியத்துட் கூறும் கரகமோ நீர்நிறைந்ததாய், அசுத்தம் அணுகாமையின் பொருட்டு அந்தணர்கள் எக்காலமுங், கைக்கொண்டிருப்பது. சீர்மிகு சிறப்பினோன் கைக்கரகமோ அமுதம் நிறைந்துள்ளது. உள்ளங்கையாற்றாங்கி யேந்திக் கொண்டிருப்பது. இவ்வாறு இறைவன் கோலத்தில் நீர் நிறைந்த கரகமொன்று ஒரு கையில் ஏந்திக் கொண்டிருப்பதன் காரணமென்ன? இறைவனது கோலத்தைக்கூறிய செய்யுளாவது "சீதளப்பளிக்கு மேனியும் பளிக்குச் செம்மலை பதித்ததுப்பன்ன, பாதமுஞ் செவ்வாய் மலரு முக்கண்ணும் பங்கயச்செங்கர நான்கும், வேத புத்தகமும முதகும்பமும் தன்விழிமணிவடமு மெய்ஞ்ஞான, போதமுத்திரையுந் தரித்ததோர் தனிமைப்போதன் முன்றாழ்ந்தெழுந்தேத்தா." இச் செய்யுளில் இறைவன் கொண்ட கோலத்தின் நான்கு கரங்களினுங் கொண்ட பொருட்கள் இன்னவையெனக் கூறியிருப்பதுடன் அந்தக் கரங்களின் ஒருகரத்திற் கொண்டது அமுதகும்பமெனச் சொல்லப்பட்டிருக்கின்றது. மற்றொருகையில் போத முத்திரை தரித்திருப்பதாகவுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

"ஸ்படிகாரஜிதவர்ணம் மௌக்திகீ மக்ஷமாலாம் அம்ருதகலஶவித்யாஜ்ஞானமுத்ராஃ கராப்ஜை। தததமுரககக்ஷம் சந்த்ரசூடம் த்ரிணேத்ரம் விதருதவிவிதபூஷம் தக்ஷிணாமூர்த்திமீடே॥"

ஸ்படிகரஜிதவர்ணம் மௌத்திகீ மக்ஷமாலாமமிர்தகலஸ வித்யாஞ்ஞான முத்ராஹகராப்ஜெ| தததமுாககக்ஷ சந்திரசூடம் திரிணேத்ரம் வித்ருத விவிதபூஷம் தக்ஷிணாமூர்த்திமீடே||

இந்த ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி உபநிடத மந்திரப் பொருள்களையே மேற்காட்டிய திருவிளையாடற் புராணச் செய்யுளுங் கொண் டிருப்பதையுமோர்க. ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத பண்டிதரவர்கள் அச்சிட்டு வெளியாக்கிய சிவஞானபோத பாடியப் புத்தகத்தின் முன் பக்கத்தில் பண்டிதரவர்கள் இதற்கு எழுதிய உரை வருமாறு.

மெய்ஞ்ஞான போதமுத்திரை—தத்துவஞானத்தைப் போதிக்கும் முத்திரை—எனவே சின்முத்திரை யென்றதாம். தத்துவ ஞானத்தை முத்திரை போதித்தலாவது, இறைவன் முனிவர்க்குத் தத்துவங்களை யுரைத்து உரையிறந்த பொருளை யுணர்த்துழிச் சின் முத்திரைக் கையனாய்த்தானே யிருந்து காட்ட ஊமைத்தசும்புள் நீர்நிறைந்தாற்போல மாணாக்கர்க்கு ஆனந்தமயமான உள்ளொளி நிறைதலாம் என்பது; இறைவன் தமது கரங்களிற் கொண்ட சின் முத்திரையும், அமுத கும்பமும், ஒன்றாக்கொன்று சாதகமாயுள்ள பொருளைப் பயந்துகொண்டிருப்பதாகவும் திண்ணமாய்த் தெரிக்கின்றதே யொழிய, தக்ஷிணாமூர்த்தித் தேவர் அந்தணர்க்குள்ள அடையாளமாகிய கரகத்தைக் கைக்கொண்டிலர் என்பதே தேற்றம்.

பண்டைத் தமிழ் நூலோர், ஆலமர் கடவுளைத் தென்முகக் கடவுள் என்றும் விதந்து ஓதிற்றிலர், என்று நம்மவர் எழுதியிருக்கின்றார். பண்டைத் தமிழ் நூலோர்களில் முதன்மைபெற்ற சங்கப் புலவரும், "பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்" எனச் சுந்தரமூர்த்திகளால் துதிக்கப்பட்டவர்களில் ஒருவரும் தேவார காலத்திற்கு முற்பட்டவருமாகிய தெய்வத் தன்மை பொருந்திய நக்கீரதேவ நாயனார், அவர் அருளிய போற்றிக் கலிவெண்பாவில் "தொடுத்தமைத்த, நாண்மாலை கொண்டணிந்த நால்வர்க் கன்றுனிழற் கீழ். வாண்மாலையாகும் வகையருளித், தோண்மாலை, விட்டிலங்கத் தெக்கணமே நோக்கி வியந்தருண, மெட்டிலங்க வைத்த விறல்போற்றி" என அருளியிருப்பதில் இறைவன் ஆலநிழலில் நால்வர்க்கு உபதேசித்த முறைமை தெற்கு நோக்கியிருந்தே உபதேசித்த தாகக் கூறுவதை அறிய வேண்டும். தாயுமான சுவாமிகளும் "வடநீழலூடுவளர் சனகாதி முனிவோர்கடம், சொன்மயக்க மதுதீர வங்கைகொடு மோனஞானமதுணர்த்தியே......... தென்முகத்தின் முகமாயிருந்த கோலு வெம்முகத்திலும் வணங்குவேன்" என அருளியிருக்கும் அருண்மொழிகளாலும் உணரற் பாற்று. தேவாரத்தலைவர்கள் ஏன் அவ்வாறு கூறிற்றிலரோ வெனில் அவ்வாறு கூறுதல் அவர்கள் கொள்கையன்று தக்கன்யாக மிறுத்தவர் வீரபத்திரக் கடவுள். திரிபுரமெரித்தவர் திரிபுரசம்மாரி, காலனை உதைத்தவர் காலசம்மாரமூர்த்தி,

மன்மதனை யெறித்தவர் தட்சிணாமூர்த்தி, அச்சரித்திரங்களைத் தேவாரங்களிற் கூறுமிடங்களிலெல்லாம் சிவபிரான் மேற்றே கூறினார்கள். அதுபோலவே இஃதுவுமெனவறிக. "தக்ஷிணாமூர்த்தி யென்பதற்குத் தெற்குக் கடவுளென்பதே "நேர் பொருளாகத் தெரிகின்றது. மாணிக்கவாசகரும் தென் "னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா "போற்றி யென்றார். இவ்வாறு கூறினமையான் தென்னாட் "டில் கடவுள் நால்வர்க்கும் மறை அருளிச் செய்தாரென்பது "யூகிக்கற்பாலது" என நம்மவர் எழுதியிருக்கின்றார். தென்னாடுடைய சிவனே போற்றி யென்றதனால் மற்றைய மூன்று திக்குகளினுமுள்ள நாடு அவரது அல்லவென்பது போதருமோ? மலைநாடுடைய மன்னே போற்றி யென்றாரே. மலையில்லாத நாடே உலகத்திற்கிடையாதே. இதற்கென்ன சொல்வர். தென்னாடுடைய சிவனே போற்றி யென்றது சிவபிரான் வடக்கின்கணுள்ள கைலையினின்றும் எழுந்தருளிச் சோமசுந்தர பாண்டியனாய் வீற்றிருந்து தென்னவனது நாட்டை அரசாண்டமையாலென்றறியவேண்டும். இறைவனது ஐம்முகங்களின் ஒன்றாகிய அகோரம் எனப்படும் தெற்கு நோக்கியமுகம் ஆன்மாக்களுக்கு அனுக்கிரகத்தைச் செய்து ஞானம் உணர்த்துவது. அதனாலன்றோ நம் சிவாலய முற்றிலும் சிவலிங்கப் பெருமான் எழுந்தருளியிருக்கும் கர்ப்பக்கிரகமென்னும் ஆவரணத்திலேயே தெற்குமுகமாகத் தட்சிணாமூர்த்திக் கடவுளின் திருமேனி அமைக்கப்பட்டுளது. மாணிக்கவாசகருக்கும் மானுடச் சட்டை சாத்தி எழுந்தருளிவந்த இறைவனும் தென்முகம் நோக்கியிருந்தே ஞானோபதேசஞ் செய்ததைச் "செப்பிளமுலையாள் பங்கன் தென்திசை நோக்கி" எனவுந் திருவாதவூரர் புராணங் கூறுகின்றது. அவ்வாறு ஞானோபதேசஞ் செய்த தலமாகிய திருப்பெருந்துறை யென்னுந் தலத்தில்மற்றெந்தத் தலத்திலுங் காணுதல் இல்லாதபடி இறைவனது மஹா சந்நிதானமும் தெற்கு நோக்கியபடி அமைந்திருப்பதையும், இறைவன் தெற்கு நோக்கியிருந்தே மாணிக்கவாசகருக்கு உபதேசித்த திருவுருவத்தையும் இந்நாளும் யாவருங் காணலாம். இறைவன், பதஞ்சலி வியாக்ரபாதருக்கும், தாருகாவன இருடிகட்கும், தென்முகம் நோக்கியே நிருத்த தரிசனம் காட்டியருளியதும் நோக்குக. இக்காரணங்களால் தட்சிணாமூர்த்தம் என்பது தென்முகம் நோக்கிய கடவுளென்றே பொருள்படும்.

தக்ஷிணாமூர்த்தி உபநிடதத்திற் காணப்படும் மந்திரம்,

"𑌶𑍇𑌮𑍁𑌷𑍀 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌸𑌾 𑌯𑌸𑍍𑌯𑌾𑌭𑍀𑌕𑍍𑌷𑌣𑍇 𑌮𑍁𑌖𑌮𑍍 ।
𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌭𑌿𑌮𑍁𑌖𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌃 𑌶𑌿𑌵𑍋𑌽𑌸𑍌 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 ॥

"சேமுஷீ தக்ஷிணுப்ரோக்தாஸாயஸ்யா பீக்ஷணேமுகம் |
தக்ஷிணுபிமுகஹப்ரோக்தஸ்ஸிவோ ஸவுபிரமவாதிபி: ||

இதன் பொருள் தக்ஷிணு என்பது ஞானமென்று சொல்லப்படும். அது யாருடைய பார்வையில் முகமாயிருக்கின்றது. அதனுல் இந்தச் சிவபிரான் பிரமவாதிகளால் தக்ஷிணுமுகமென்று சொல்லப்பட்டார். இதனுலும் தெற்குக் கடவுள் எனப் பொருள் கொள்வது பிழையேயாம்.

தமிழ் நாட்டில் தோன்றிய சைவ சித்தாந்த நூலாசிரியரும் ஏனைத் தமிழ்ப் புலவோர்களாகிய சைவமக்களும், மறை ஆரியத்திலே உண்டாயிருப்பதாகக் கூறிய செய்யுட்களாகிய பண்டைய தஸ்தாவேஜ் சாட்சியத்தின் முன்னர் நம்மவரது ஏகதேசமாகிய யூகிக்கற்பாலது என்னும் சாட்சியம் ஆன்ருேர் அவையிற் செல்லவுமாட்டாது. நிலைபெறவுமாட்டாது.

சச. நிற்க, இனி நம்மவர் எழுதுவதாது. "அருணூல் "கள் யாவும் பிரணவ மந்திரத்தினின்று வெளிப்பட்டனவென் "பதைக் கருதுமிடத்துப் பிரணவ மந்திரம் ஆதியில் தமிழி "லிருந்ததாகத் தெரிவதால், அருள் நூல்களுந் தமிழிலேயே "யிருந்தனவென்று கருத இடமுண்டு." "அருணூல்கள் யாவும் "பிரணவ மந்திரத்தினின்று வெளிப்பட்டன வென்பதைக் "கருதுமிடத்துப் பிரணவ மந்திரம் ஆதியில் தமிழிலிருந்த "தாகத் தெரிவதால்" என்று எழுதினுரே, எந்த அருணூல்களில் பிரணவ மந்திரம் ஆதியில் தமிழிலிருந்ததாகச் சொல்லுகின்றது, அதை யெடுத்துக் காட்டாத வீண்பேச்சு என்ன பிரயோஜனம். இவர் தேவாரப் பாக்களின் மூலபாடத்தைத் தங் கொள்கைக்கு இணங்கத் திருத்தியுந் திரிபான பொருள் கொண்டும் அவற்றிற்குப் பிரணவமெனப் பொருள் கொண்டு கூறியிருப்பவைகளெல்லாம் பொருத்தமற்றவை யெனப் பக்கம் ௯அ—௪0 வரை காட்டப்பட்டிருக்கின்றன. அருணூல்கள் என மேலே இவர் எழுதியிருப்பது கடலில் மறைபட்டுப்போன இவரது தமிழ் நான்மறைகளைக் குறிப்பவை யெனத் தெரிகின்றது. அந்தத் தமிழ் நான்மறைகள் பிரணவத்திலிருந்து வெளிப்பட்டன வென்பது எவ்வாறு இவர் கண்டு பிடித்தார். அந்தத் தமிழ் நான்மறைகளே ஒரு காலமுமிருந்ததில்லை யென ஏற்படும்போது அவைகளை ஈன்ற அன்னை ஒருத்தித் தமிழ் மகளாக இருந்தாளென்பதும் "ஒப்பிலா மலடி பெற்ற வொரு மகன் முயற்கொம்பேறித், தப்பிலா காயப்பூவைப் பறித்தமை சாற்றிஞரே" என்றதற்கினமாயதோர் வெற்றுரையே.

சரு. ஓம் என்ற பதத்தின் தாதுக்களைப் பற்றியும் அதன் பொருளைக்குறித்தும் நம்மவர் கூறுவதாவது. "ஓம் என்ற

"சொல்லிற்குப் பாதுகாத்தல் என்ற பகுதிப்பொருள் தமிழி
"லேயுள்ள தென்பது அதனடியாகப் பிறந்த ஓம்பு என்பதன்
"பொருள் அஃதாதலின் வைத்துணரப்படும். பிரணவத்
"துக்கு அப்பொருளுண்மை வடமொழி கூர்மபுராணத்துட்
"கூறப்பட்டுள்ளது. வடமொழியிலே ஓம் என்ற சொல் 'அவ'
"என்பதன் மருஉ என்று கூறப்படுகின்றது. அது மொழி
"நூல் முறைக்கு முற்றும் முரணுகின்றது. ஓம் என்ற பகுதி
"யினடியாகப் பிறந்த சொற்கள் யாவும், வடமொழியிலிருப்
"பனவாகத் தெரியவில்லை. ஓம் என்பதற்கு முண்டகம் முத
"லிய உபநிடதங்கள் கூறும் வரிவடிவமும் தமிழிலேதான்
"காணப்படுகின்றது. தமிழ் ஓங்காரமும் ஓங்கார தெய்வமு
"மாகிய பிள்ளையாரது திருமுக அமைப்பும் ஒத்திருத்தல்
"காண்க. உகரமும் அகரமும் முறையே வந்தவிடத்து
"ஓகாரம் எழுதல் ஒலிநூல் விதிக்கு ஒத்தது. அஃதே தமிழி
"லும் விதியாக உள்ளது. அகர உகரம் ஔகாரமாகும்.
"அது வடமொழியில் விதித்ததுபோல ஓகாரமாகுமென்று
"கொள்ளுதல் ஒலிநூற்கு இயைந்ததில்லை. ஆதலாற் பிரண
"வத்தின் ஒலியமைப்பும் சத்தியெழுத்தை முதற் கண் வைக்
"கும் தமிழர் வழக்குக்கு ஒத்ததாயில்லை" என்றெழுதியிருக்
கின்றார். இவ்வாக்கியங்களின் பொருளை ஆராய்வாம். ஓம்பு என்ற தமிழ்ப்பதம் ஓம் என்ற சொல்லின் அடியாகப் பிறந்த பதம் என எங்குச்சொல்லி யிருக்கின்றது. தமிழ் இலக்கண இலக்கிய நூல்களிலாவது, வழக்கிலாவது, அவ்வாறு கூறி யிருப்பதை இவர் காட்ட வேண்டும். அவ்வாறில்லை யென் பதே திண்ணம். ஓமல் என்ற வொரு தமிழ் மொழியுண்டே, அது எதனடியாகப் பிறந்தது? வடமொழி கூர்மபுராணம், வடமொழிக்குப் பொருள் கூறுமேயல்லது, தமிழ் மொழிக்குப் பொருள் கூறிற்று எனக்கொள்வது பிறழ்வுற்ற உணர்ச்சியே. இவர் காட்டாது விடுத்த வடமொழிக் கூர்மபுராண சுலோக மாவது,

𑌹𑌰𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌹𑌰𑌣𑌾𑌦𑍍𑌵𑌿𑌭𑍁𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌭𑌗𑌵𑌾𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑌵𑌨𑌾𑌦𑍋𑌮𑌿𑌤𑌿𑌸𑍍𑌮𑍃𑌤𑌃 ॥

"ஹரஸ் ஸர்வஸ்ய ஹரணத் விபுத்வாத் விஷ்ணுருச்யதே |
பகவாந் ஸர்வவிஜ்ஞா நாதவநாதோ மிதிஸ்ம்ருத: ||"

இதன் பொருள், அனைத்தையுஞ் சங்கரிப்பவராதலின் ஹரன் என்றும், வியாபகராதலின் விஷ்ணு என்றும், சர்வஞ்ஞராதலிற், பகவானென்றும், காப்பவராதலின் ஓம் என்றும், திருநாமங்கள் சிவபெருமானுக்குப் போந்தன என்பது. இவைகளில் ஹரன் எனும் பதம் எடுத்துக்கொள்ளுதல் எனும் பொருளையுடைய,

ஹரிருஞ், என்னுந்தாதுவினிடமிருந்தும், விஷ்ணு என்னும் பதம் உலகெலாம் வியாபகமாயுள்ள என்னும் பொருளைத்தரும், விஸ்வம் வியாப்னோதி, என்ற பதத்திலிருந்தும், ஓம் என்றபதம் காப்பாற்றுகிறது என்னும் பொருளைத்தரும் அவ என்ற தாது வினிடமிருந்தும், பிறந்ததாக வடமொழி வியாகரண நூல் கூறு வதாகத் தெரிகிறது. ஓம்பு என்ற தமிழ்ப்பதத்திற்கு ஓம்பு எனுந்தமிழ்ச் சொல்லே ஆதியாய் நின்று, ஓம்புகிறேன் ஓம்பி னேன், ஓம்புவேன், ஓம்பல், ஓம்புதல் என வரும் தமிழ் மொழி களுக்கெல்லாம் பகுதியாய் நிற்பதால் ஓம் என்ற மொழிக்கும் ஓம்பு என்ற மொழிக்குஞ் சம்பந்தமில்லை யென்பது தெளிவு. "வடமொழியிலே ஓம் என்ற சொல் 'அவ' என்றதன் மரூஉ "என்று கூறப்படுகின்றது. அது மொழி நூன்முறைக்கு "முற்றும் முரணுகின்றது. ஓம் என்ற பகுதியினடியாகப் 'பிறந்த யாவும் வடமொழியிலிருப்பனவாகத் தெரியவில்லை" என நம்மவர் எழுதினரே, அது எம்மட்டும் பொருந்து மென் பதை ஆராய்வாம். ஓம் என்ற சொல் 'அவ' என்பதன் மரூஉ அல்ல. ஓம் என்ற சொல், இரட்சணார்த்தத்திலுள்ள 'அவ'* என்ற தாதுவடியாகப் பிறந்தது. மரூஉ என்ற மொழியும், தாது என்ற பதமும் ஒரேபொருளைத்தருவனவல்ல. மரூஉ என் பது ஒரு சொல் மற்றொரு சொல்லாக இடையில் எழுத்துக் கள் மாறி வழங்குவது. அது தமிழ் இலக்கண வழக்கியல் முறை. அருமருந்தன்ன, மரவடி என்ற மொழிகள் முறையே அருமாந்த, மராடி என மருவினவைபோல, தாது என்பது வட மொழி இலக்கண முறைப்படி ஒரு பதத்துக்குப் பொருள் இன்னதெனச் சொல்வதற்கு ஆதிகாரணமாய் நிற்பது. இரண் டற்குமுள்ள பேதத்தை யறியாது 'ஓம் என்ற சொல் வட மொழியிலே 'அவ' என்றதன் மரூஉ எனக் கூறப்படுகின்றது' என நம்மவர் எழுதியது உண்மைபயப்பனவல்ல. நிற்க, மொழி நூல் முறைக்கு முரணுகின்றது என்றார். மொழிநூல் என்ப தியாது? எப்போழ்தி யாரால் உண்டாக்கப்பட்டது? அந்த நூலை எதற்காக அந்நூலாசிரியர் எழுதினர்? என்பனவற்றை விசாரிக்குமிடத்துச் சில வருடங்கட்கு முன்னர் சைதாப்பேட் டையிலிருந்த திருவாளர் மாகறல் கார்த்திகேய முதலியாரென் பவர் தமிழ் மொழியே ஆதியாயுள்ளது. அதனிடமிருந்து வட மொழிஉண்டாயது எனும் ஒரு நவீனக்கொள்கையைத்தாபிக்க எழுதிய நூல் அஃது எனத்தெரியவருகின்றது. "ஆரியமுந்தமி ழும் உடனே சொல்லி;" "இரு மொழிக்குங் கண்ணுதலார் முதற் குரவர்" என்னும் நமது ஆப்த வாக்கியங்களுக்கு அம்

* அவ் என்பது தாது வாகவுஞ் சொல்லப்படுகின்றது.

மொழி நூல் முற்றும் முரணுதலால் அதை நம் சைவமக்கள் பலரும் அங்கீகாரஞ் செய்யார். ஓம் என்றது பகுதியாயிருந்தாலல்லவா அதனிடமாக மற்றும் வடமொழியிற் சொற்கள் பிறக்கும். ஓம் என்பதே முற்றுச்சொல், அதற்குத் தாது அவ என்பது. அந்த அவ என்ற தாதுவிலிருந்து மற்றுஞ் சொற்கள் வடமொழியிலுள. 'அவநாத்' என்று மேற் சுலோகத்திலே உள்ள மொழியினாலேயே அறியலாம். தமிழ்ப்பதமாகிய ஓம்பு என்றதற்கு ஓம்பு என்பதே பகுதியாதலால் அதனடியாக மேலே காட்டியபடி தமிழ்ச் சொற்கள் பிறந்திருக்கின்றன. இனி அவ என்பது ஓம் என ஆயதற்கு வடமொழி வியாகரணம் வருமாறு.

"அவதேஷ்டி லோபஸ்ச"

"என்னும் உணாதி சூத்திரத்தாலே இரக்ஷணார்த்தத்திலுள்ள "அவ என்னுந்தாதுவுக்கு மங் பிரத்தியயஞ்செய்து அந்தப் "பிரத்தியயத்து அங் என்னும்டிக்கு உலோபஞ் செய்தலால், "அது அவ + ம் என நிற்க, "ஜ்வரத்வரஸ் ரிவ்யவிமவா முபதா "யாஸ்ச (பா. வி சூ, ச, உ0) என்னுஞ்சூத்திரத்தினாலே, "அவ" "என்னும் தாதுவிலுள்ள அகாரத்திற்கும் வகரத்திற்கும் தனித் "தனி ஊகாரம் செய்ய, அது (ஊ + ஊ + ம்) என நிற்குங்கால் "அகஸ்ஸவர்ணே தீர்க்க:" (பா, வி, சூ, க, க0க) என்னும் "சூத்திரத்தால் அது ஊம் என நின்று" ஸார்வதாது கார்த்த தாதுகயோ: (பா, வி எ, ௩, அச) என்னும் சூத்திரத்தினால் குணமாகி ஓம் என முடிந்தது" என, அவ எனும் தாது, ஓம் என்ற சொல்லாயதற்குச் சிவபெருமானால் வடமொழிக்கு இலக்கணமுபதேசிக்கப் பெற்ற பாணினி மஹா இருடியின் வடமொழி இலக்கணச் சூத்திர விதிகளைக்காட்டி நீலகண்ட பாஷியத்திலே காரணம் எழுதப்பட்டிருக்கின்றது.

சசு. தவிர "ஓம் என்பதற்கு முண்டக முதலிய உபநிடதங்கள் கூறும் வரிவடிவமும் தமிழிலேதான் காணப்படுகின்றது" என வெழுதினார். முண்டகோபநிடத்தில் நம்மவர் தமக்கு ஆதாரமாகக் கருதிய மந்திரமாவது

"𑌪𑍍𑌰𑌣𑌵𑍋 𑌧𑌨𑍁𑌶𑍍𑌶𑌰𑍋 𑌹𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌲𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌅𑌪𑍍𑌰𑌮𑌤𑍍𑌤𑍇𑌨 𑌵𑍇𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 ॥" என்னும் மந்திரமேயாம்.

"ப்ரணவோ தநுஸ்ஸரோ ஹ்யாத்ப்ரமதல்லக்ஷ்யமுச்சதே |
அப்ரமத்தேநவேத்தவ்யம் ||"

இது, முண்டகோபநிடத்தில் இரண்டாவது முண்டகம், இரண்டாவது கண்டம், ச-வது மந்திரமாகவுள்ளது. இதில்

'ப்ரணவோதநு' என்று வருவதால் நம்மவர் பிரணவத்தின் வரிவடிவம் குறிப்பிட்டதாகக் கருதினார். அவ்வாறாயின் 'சரோஹ்யாத்மா' என்று வருவதில் உயிர் அம்பு என்று கூறப் பட்டிருப்பதால் நம்மவர் உயிருக்கும் வடிவம் உண்டென்று கூறுவார்போலும். அன்றியும் இம்மந்திரத்திற்கு முன் மந் திரத்தில் 'யநாஶ்ராஹ்ஸ்வௌபநிஷதம்' என்று வருவதால் உபநிஷதத்திற்கு வரிவடிவங் கூறப்பட்டதென்று கூற முற்படு வார்போலும்.

முற்கூறப்பட்ட 'பிரணவோதநு' என்று தொடங்கும் மந்திரத்தின் பொருளாவது :-பிரணவம் தனுசு, ஆத்மாபாணம், பிரம்மம் லக்ஷ்யம், பிரமாதமில்லாதவனால் அக்குறி அடிக்கப் படட்டும்' என்பது, இதனாற் பெறப்பட்டது. பிரணவ சாத னத்தால் ஆன்மா பிரமமாகிய சிவபிரானை அடையவேண்டு மென்பதே. இதன் பொருள் நம் நண்பர் இம்மந்திரத்தின் பொருளை நன்கு நோக்கி யெழுதாது ஏதேதோ கூறினார். அது பொருந்தாதென்பதனை வேத பண்டிதர்கள் நன்குணர்வர். இம்மந்திரம் சிவபிரானையடைய பிரணவத்தை யுச்சரிக்க வேண்டுமென்று கூற எழுந்ததேயொழிய யாதாமொரு பாஷை யெழுத்தின் வரிவடிவத்தைக் கூற எழுந்ததன்று.

பின்னும் "தமிழ் ஓங்காரமும் ஓங்கார தெய்வமாகிய பிள்ளையாரது திருமுக அமைப்பும் ஒத்திருத்தல் காண்க" என்றும் எழுதினார். தமிழ் ஓங்காரதெய்வம் பிள்ளையார் என்றதற்குப் பிரமாணங் காட்டிலர். தமிழ்ஓங்காரமெனவே வட மொழி ஓங்காரம் வேறு என்றும், தமிழ் ஓங்கார தெய்வமாகிய பிள்ளையாரெனவே வடமொழி ஓங்கார தெய்வமாகிய பிள்ளை யார் வேறு என்றும் பெறப்படும். இவரது கொள்கை நகைப் புக்கிடமாயதே. தமிழ் ஓங்கார தெய்வமாகிய பிள்ளையாரது தோற்றமாதிய எத்தமிழ் நூலிற் கூறியிருக்கின்றது? ஏன் அதை யெடுத்துக்காட்டாது விடுத்தார்? ஓங்காரத்தின் கடவுள் சிவபெருமானே என்பதற்கு மேற்காட்டிய கூர்மபுராண சுலோ கமே சான்று. வேதம், உபநிடதங்கள், வேதோப பிருங்கணங் கள், அவற்றின்வழியாய தமிழ்நூல்கள், எல்லாமும் அவ்வாறே கூறுகின்றன. இவ்வாராய்ச்சி இனியும் மிகவிரியுமாதலால் அதற்குச்சான்றாகிய பலமேற்கோள்கள் இங்குக்காட்டப்பட வில்லை. விநாயகக்கடவுள் சிவபிரானது மூத்த பிள்ளையாரா தலினாற்றமது தந்தையார் பிரணவசொரூபி, எனக்காட்டிக் கொண்டு, அவரும் எழுந்தருளினார். விநாயக மூர்த்தியின் தோற்றச்சரிதமாவது :— கைலையங்கிரியின் ஓர் பக்கத்தில் ஒரு மண்டபத்தின் சுவரில் பிரணவத்தைப் பொறித்திருந்த

தாயும், ஒரு காலத்தில் நம் அப்பனும் அம்மையும் அங்குச் சென்று அப்பிரணவ எழுத்தைக்கண்ணுற்றபோது அது சிவபிரான் ஆணையால் இரண்டு யானைகளாக ப்பரிணமித்து யானைமுகக்கடவுளைத்தந்ததாகவும் வடமொழி கந்தபுராணமும் அதன் தமிழ்மொழி பெயர்ப்பும் கூறும். இச்சரித்திரத்தை வற்புறுத்தியே,

"பிடியதனுருவுமை கொளமிகு கரியது
வடிகொடுதனதடிவழிபடுமவரிடர்
கடிகணபதி வரவருளினன் மிகு கொடை
வடிவினர் பயில் வலிவல முறையிறையே. "

என நமது தமிழ்மறையும் கூறும்:—

இவ்வாராய்ச்சியால், ஓ வென்ற தமிழ் எழுத்தின்வரி வடிவம் வடமொழி உபநிடதத்திற் கூறப் பட்டிருப்பதாயும், தமிழ் ஓங்காரதெய்வம் பிள்ளையார்எனவும் கூறும் இவர்கூற்றும் சற்றும் ஆதாரவற்றதே யெனத் தெள்ளிதாய் விளங்கும். பிரணவ விடயமாய் நம்மவர் எழுதியிருப்பதை மேலே காட்டியிருக்கின்றோம். அதிற்கண்ட மற்றொரு பகுதியாவது. "உகர "மும் அகரமும் முறையே வந்தவிடத்து ஓகாரம் எழுதல் ஒலி "நூல் விதிக்கு ஒத்தது. அஃதே தமிழினும் விதியாகவுள் "ளது. அகர உகர ஔகாரமாகும். அது வடமொழியில் "விதித்ததுபோல ஓகாரமாகுமென்று கொள்ளுதல் ஒலிநூற்கு "இயைந்ததில்லை. ஆதலாற் பிரணவத்தின் ஒலியமைப்பும் "சத்தியெழுத்தை முதலில் வைக்கும் தமிழர் வழக்குக்கு "ஒத்ததாயில்லை" என்பது; இவற்றை ஆராய்வாம்.

ஒலிநூலுடையார்க்கு எழுத்துக்கள் சுத்த மாயாகாரிய மென்பது உடன்பாடன்மையின் சுத்த மாயையினின்றும் விருத்தியாகி அகார உகார மகார விந்துநாத ரூபமாகிய சூக்கும பஞ்சாக்கரங்களின் சமட்டி ரூபமாகிய பிரணவத் தோற்றத்துக்கு ஒலிநூலைப் பிரமாணமாகக் கோடல் சைவ சித்திகளாயினோர்க்கு அடாத செய்கையாம். உகரமும் அகரமுஞ் சேர்ந்து ஓகாரமாகுமெனத் தொல்காப்பிய முதலிய இலக்கண நூல்கள் கூறுகின்றனவா? அல்லது சைவ சித்தாந்த நூல்கள் கூறுகின்றனவா? அகார உகார மகார விந்துநாதங்களே பிரணவமென்றும் அவற்றிற்குப் பிரமன் முதலியோர் அதி தெய்வங்களென்றும் சித்தாந்த சைவத் தமிழ்ப் பெருங் குரவராகிய மெய்கண்ட தேவர் அகாரத்தையே முதலில் வைத்தாரே!! அகர உகரங்கள் மாத்திரையே ஔகாரமாகுமென்றும் அது போலி எழுத்தென்றும், அது கொள்ளற்கவென்றுங் கூறிய நச்சினார்க்கினியருரையையும் இலக்கண விளக்க வுரை

ணையும் நன்னூல் விருத்தியினும் தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தியினும் தக்க நியாயவாயிலாகக் கண்டித்தொழிக்கிருப் பதையும் நோக்காது அகர உகரம் ஔகாரமாகுமென்று பிணங்குவதென்னையோ? உகர அகரங்கள் ஓகாரமாகுமென்று எந்தத்தமிழ் நூல் கூறிற்று? ஓகரமே ஓகாரமாய்ப் பிரணவ மாயிற்றென்று எந்தச்சமய நூல் கூறுகின்றது? அந்தமிழ் ஓகாரப் பிரணவத்தின் சமஷ்டி வியஷ்டி எழுத்துக்களும் அவை யிற்றின் அதி தெய்வங்களும் முறையும் எந்தச் சமய நூல் கிளந்து உரைக்கின்றனர்? ஒரு நூலேயேனு மெடுத்துக் காட்டாது விடுத்ததென்னையோ? இன்னமும், 'தத்துவப்பிரகாசம்' என்னுஞ் சைவசித்தாந்த நூல், உரு-வது செய்யுளின் பகுதியில், "வன்னமுதலா, நந்துபராசத்தியாளுத விந்துத் தோன்றி நாதத்தே மூன்று சுடர் நடந்ததான்" எனக் கூறியிருக்கின்றபடி, யெல்லா வெழுத்துக்களும் பராசத்தியின் சூக்கும ரூபம் நூலரூபமெனப்படும். அகாரம் நாதமாத்திரை யாளுகி வாயங் காத்தல் மாத்திரத்தானே இயல்பிற் பிறந்த லால் அகரம் இருமொழிகளினும் எழுத்துக்கள் எல்லாவற்றிற் கும் முதலாக விளங்கி நிற்கின்றது. ஆதலானும் அ, உ என்று சொல்வதே முறை. அ, உ என்ற எழுத்துக்கள் இருமொழி கட்கும் பொதுவாயிருப்பதில் எம் மொழியைக் கொள்ள வேண்டுமென்றாயுமிடத்து, மேற்காட்டிய செய்யுளில் பரா சத்தியினிடமாகப் பிரணவந் தோன்றி அதனின்றும் உயி ரெழுத்துப் பதினாறும் மெய்யெழுத்து முப்பத்தைந்தும் தோன்றினவென்று சொல்வதனால், இவ்வெழுத்துக்கள் ஐம்பத் தொன்றும் வடமொழி யெழுத்துக்களென்பதே தெளிவு. இவ் வடமொழி யெழுத்துக்கள் ஐம்பத்தொன்றுமே நஞ்சமயக் கொள்கைக்கு ஆன்மார்த்தத்திலும் பரார்த்தத்திலு மெடுத் தாளப்பட்டிருக்கின்றன. தமிழெழுத்துக்களுக்கு இவ்வாறு காரணகாரியங் கற்பிக்கப்பட்டிருக்கவில்லை. இது விஷயம் விரிக் கிற் பெருகும். சத்தி யெழுத்தை முதலில் வைப்பது தமிழர் வழக்கு என்றார். எழுத்துக்கள் எல்லாமே பராசத்தியின் ரூப மென மேற்காட்டிய தமிழர் இயற்றிய நூல் நன்கு தெரிக்கின் றது. பஞ்சாட்சரத்தின் முதலெழுத்து சத்தி யெழுத்தா? சத்தி யெழுத்தைப் பின்னால்லவா அமைத்திருக்கின்றது. நம் பொய்யா மொழியாரும் அகர முதல வெழுத்தெல்லாம் என்றாரே யல்லது உகர முதல வெழுத்தெல்லாமெனக் கூறிஞ ரல்லர். ஆதலால் அ, உ என்ற வடமொழி யெழுத்துக்களே பிரணவத்தின் முதலெழுத்தாகிய ஓ என ஆயிற்றென்பதே ஒரு தலை. இவ்வாராய்ச்சியானும் பிரணவம் எப்பாஷை மொழி யென்பதை அறிஞர் அறிந்துகொள்வர்.

சஎ. நிற்க:— பின்னும் நம் நண்பர் எழுதுவதாவது, "நூற்பிரமாணங் கருதுவார் "கொன்றைச் சடையார்க்கு ஒன்றைத் தெரியக் கொஞ்சித் தமிழாற் பகர்வோனே" என்ற திருப்புகழை நோக்குக. "அரிய தமிழ்தானளித்த மயில்வீர" என்று தனக்கு உபதேசஞ் செய்த மந்திரத்தைத் தமிழென அருணகிரி நாதர் கூறியதுங் காண்க" என்று எழுதியிருக்கின்றார்.

திருப்புகழினின்றும் மேற்காட்டிய இரண்டு வாக்கியங்களைக் காட்டி, நோக்குக, காண்க, வென வெழுகினாரேயொழிய அவ்வாக்கியங்களாற் றமக்கு இன்னபடி சாதகமென வெழுதிக் காட்டினாரில்லை. முதன் மேற்கோளில் "ஒன்றைக் கொஞ்சித் தமிழாற் பகர்வோனே" என்றருளியிருப்பதில், ஒன்று, என்றது பிரணவத்தை. திருக்கைலையில் வழங்கும் இரு மொழிகளுள் தமிழ் மொழியாற் பிரணவத்தின் பொருளைச் சிவபெருமானுக்கு முருகக் கடவுள் கூறினாரென்பதே அதன் பொருள். பிரணவம் தமிழ் என்று இம்மேற்கோளிற் கூறியிருக்கவில்லை. பிரணவத்தின் பொருளைத் தமிழாற் கூறினாரெனவே பிரணவம் தமிழல்லவென்பது தானே பெறப்படும். மற்றொரு வகையில்; கொஞ்சித் தமிழாற் பகர்வோனே யென்றால் தமிழ் என்றது மென்மையை; அது தமிழ் தழீஇய சாயல வென்பதானுமுணர்க. ஈண்டு மென்மை யென்றது பிறர் செவிக்குக் கேட்க உரத்துச் சொல்லாது சிவபெருமான் திருச்செவிக்கு மாத்திரங் கேட்ப மந்தணமாகச் சொல்லுதலென்னும் பொருண்மேற்று. பிரணவம் வடமொழியே என்பதனைத் திருப்புகழினின்றே வெள்ளிடைமலைபோற்காட்டுதும். "திருக்கஞ்சத்தனைக் கண்டித் துறக்கங் குட்டிவிட்டுஞ் சற்சிவற்கன்று, அப்பொருட் கொஞ்சிப் பகர்வோனே." என்னுந் திருப்புகழ்ச் செய்யுளின் பகுதியால், பிரமன் பிரணவப் பொருளைச் சொல்லமாட்டாமையால், அவனைச் சிரசில் குட்டிச் சிறையில் விடுத்துச் சிவபெருமானுக்கு அப்பொருளைப் பகர்ந்தவர் சுப்பிரமணியர், என்பது பொருள்படுகின்றது. இச்சரித்திரம் எங்கு விளங்குகின்றது என்றால் கந்தபுராணத்துட் காணப்படுகின்றது. அச்சரித்திரம் கூறும் செய்யுட்களாவன. கந்தமூர்த்தி பாலப்பருவத்தராகிக், கைலையங்கிரியின் ஓர் பக்கம் வீற்றிருந்த நாட்களில் ஒருநாள்

"அங்கண் வைகுமுருக னம்பனடி வணங்கிவந்திடும்
புங்கவர்க் குளாதியாய போதினனை நோக்குறா
விங்குநம்முன் வருதியாலெனா விளிப்ப வேகியே
பங்க யாசனத்திறைவன் பணிந்திடாது தொழுதலும்"

"ஆதிதேவனருளு மைந்தனவ னுளத்தை நோக்கியே
போதனே யிருக்கெனப் புகன்றிருத்தி வைகலு

மேதுநீ புரிந்திடு மியற்கையென்ன நான்முக
னாதனுனை யாலனைத்து நான்படைப்ப னென்றனன்"

"முருகவேளது கேட்டலு முறுவல் செய்தருளித்
தரணிவாழுயிர் முழுவதுந் தருதியே யென்னிற்
சுருதியாவையும் போகுமோ மொழியெனத் தொல்சீர்ப்
பிரமனென்பவ னித்திறம் பேசுதலுற்றான்"

"ஐய கேளனை யாதிகாலந் தனிலளித்த
மையுலா வருகளத்தின னளப்பிலா மறைகள்
செய்யவாகமம் பற்பல புரிந்ததிற் சிலயா
னுய்யுமா றருள்செய் தனனவை யுணர்ந்துடையேன்"

"என்றுநான்முக னிசைத்தலு மவற்றினு ளிருக்கா
மொன்று நீவிளம்புதியென முருக வேளுரைப்ப
நன்றெனாமறை யவற்றிற்கு மாதியின தில்வா
னின்றதோர் தனிமொழியை முன்னோதினா னெறியால்"

"தாமரைத் தலையிருந்தவன் குடிலைமுன் சாற்றி
மாமறைத் தலையெடுத்தனன் பகர்தலும் வரம்பில்
காமர் பெற்றுடைக்கு மரவேளினிற்றி முன்கழறு
மோமெனப்படு மொழிப்பொரு ளியம்பு கென்றுரைத்தான்."

"முகத்தி லொன்றதா வக்கெழுத்துடைய தோர்முருக
னகைத்துமுன் னெழுத்தினுக்குரை பொருளென நவில
மிகைத்தகண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித்
திகைத் திருந்தனன் கண்டிலனப் பொருட்டிறனே"

"தாமறைக்கெலா மாதியு மந்தமுஞ் சொல்லு
மோமெனப்படு மோரெழுத் துண்மையை யுணரான்
மாமலர்ப் பெருங்கடவுளு மயங்கினா னென்றா
லாமினிச்சில வறிந்தன மென்பது நகையே"

"எட்டொணாதவக் குடிலையிற் பயனினைத் தென்றே
கட்டுரைத்திலன் மயங்கலு மிதன்பொருள் கருதாய்
சிட்டிசெய்வதித் தன்மையதோ வெனாச் செவ்வேள்
குட்டினானய னான்கு மாமுடிகளுங் குலுங்க"

"மறைபுரிந்திடுஞ் சிவனருண் மதலைமா மலர்மே
லுறைபுரிந்தவன் வீழ்தரப் பதத்தினா லுதைத்து
நிறைபுரிந்திடு பரிசனரைக் கொடே நிகளச்
சிறைபுரிந் திடுவித்தனன் கந்தமாஞ் சிலம்பில்"

பிரமதேவனை உனக்கு வேதம் வருமோவென்று முருகப்பிரான் கேட்க, சில தெரியுமென்று பிரமன் சொல்ல, ஒரு ருக்கு சொல் என்று முருகவேள் கட்டளையிட வேதஞ் சொல்வதற்கு முன்னர் பிரணவத்தைச் சொல்லவேண்டுமெனும் விதிப்படி, முதலில் பிரணவத்தைப் பிரமன் ஓதியதும், அதற்குப் பொருள் முருகப்பிரான் கேட்டருளப், பிரமன் அஃதறிந்திலனாதலால்

சொல்ல இயலாதவனானான். முருகப்பிரான் கோபங்கொண்டு அவன் சிரங்களிற் குட்டியும் அவனைச் சிறையிலுமிடுவித்தார் என்பதே மேற்செய்யுட்களின் கருத்து. பிறகு சிவபெருமான் எழுந்தருளிவந்து பிரமனைச் சிறையினின்று விடுவித்து அன்பின் மிகுதியால் குமரக்கடவுளிடம் பிரணவத்தின் பொருளைக் கேட்டு ஆனந்தித்தார் என்பது பின் சரிதை. இதனால் விளங்குவது 'ருக்கு' எனமேற் செய்யுளிற் கூறியிருப்பதால் அது ஆரியவேதமேயாம். அதைச் சொல்ல ஆரம்பிக்கும்போதும் சொல்லி முடிக்கும்போதும் பிரணவத்தைச் சொல்ல வேண்டியதும் நியதி. அஃதும் ஆரியமேயென்பதும் முடிபு. ஆதலால் நமது நண்பர் உரை, பயனிலதாய் முடிந்தது. அருணகிரிநாதரது மற்றொரு திருவாக்கில் காணப்படும் "அரிய தமிழ் தானளித்த மயில்வீர" என்றதைக் காட்டித் "தனக்கு உபதேசஞ் செய்த மந்திரத்தைத் தமிழென அருணகிரிநாதர் கூறியது காண்க" என எழுதியிருக்கிறார். மேற்காட்டிய வாக்கியத்தில் யாதாயினுமோர் மந்திரத்தை அருணகிரிநாதர், தனக்கு, முருகக் கடவுள் உபதேசித்ததாகச் சொல்லவில்லை. தனக்குத் தமிழை யளித்தாரென்கிறார். அதாவது தமிழ்பாடும் உணர்வளித்தாரென்பதே பொருள். அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ் மிக்க அற்புதமானதும் சிவஞானப் பொருளமைந்ததும் கேட்போர் மனங்கசிந்துருகும் வண்ணம் சந்தவிசை பொருந்தியது மென்பது யாவருமறிந்ததே. அதனால் வாக்கிற் கருணகிரி யெனவும் ஆன்றோர் புகழ்ந்ததும் காண்க. மூலபாடங்களில் சற்றுமில்லாத பொருளை நம் நண்பர் கற்பித்துக்கொண்டு அக்கற்பனையையே பின்னர் ஓர் சித்தாந்தமாக வைத்துக் கொண்டு அதன்பேரில் மேலும் மேலும் கற்பனைகளைக் கட்டிக் கொண்டே வந்து அவரெழுதிய இவ்வாராய்ச்சிக்குரிய திருநான்மறை விளக்கமென்னும் உரையெழுதி முடித்திருக்கிறார் என்பது தேற்றம். நிற்க.

சஅ. தமிழானது மறைகளும் மந்திரங்களுங் கூறுதற்குரிய மொழியாதலால் தேவாரத்துள்ளும் 'ஓமென்று மறை பயில்வார்' என்று ஞானசம்பந்தப் பெருமான் அருளிச் செய்தனர் என எழுதி யிருக்கின்றார். இவ்வாக்கியம் மறையென்றதே யொழியத் தமிழ்மறை யெனச் சொன்னதில்லை. தமிழானது மறைகளும் மந்திரங்களுமுள்ள மொழியாகவே இருந்துகொண்டே யிருக்கின்றதே. இதில் இவருக்கு உண்டான ஆசங்கையென்ன? தேவாரம் திருவாசகமே தமிழ் மறையென்று தமிழ்ச்சைவ உலகு பூர்வந்தொட்டுக் கைக்கொண்டிருக்கின்றது. சைவர்கள் என்னப்படும் தமிழர்களெல்லாம் நியமமாகச் செய்துவரும் அனுஷ்டானம் சிவபூஜைகளிலும்

மற்றும் சுபாசுபங்களிலும் மந்திரங்களைச் சொல்லியே வருகின்றார்கள். ஆனால் அம்மந்திரங்கள் தமிழ்மொழியல்ல, ஆரியமேயென்பது பிரத்தியட்சம். சம்பந்தப்பெருமான் ஓமென்று மறைபயில்வார் என்ற சொற்றொடரிற் கண்ட மறை யென்பது ஆரியவேதத்தைக் குறித்ததே. பயில்வாரென்றது அவ்வேதம் ஓதும் பிராமணர்களைக் குறித்ததே. இப்பகுதி பிரமபுரமென்னும் சீகாழித்தலத்துத் தேவாரத்திற் கண்டது. இத்தலத்துக்கருளிய அநேக தேவாரப்பதிகங்களிலும் அந்நகரத்தில் அக்காலம் வசித்திருந்த பிராமணர்கள் வேதமோதுதலையும் வேள்வி செய்தலையும் முத்தீவளர்த்தலையும் சிறப்பித்துச் சம்பந்தப்பெருமான் குறிப்பாயும் வெளிப்படையாயும் அருளிச்செய்திருக்கின்றார். சில வருமாறு:—

"ஒருங்கிய மனத்தோ டிருபிறப்போர்ந்து முப்பொழுது குறைமுடித்து நான்மறையோதி ஐயவகை வேள்வி யமைத்தாறங்கமுதலெழுத்தோதி வரன்முறை பயின்றெழுவான் றனைவளர்க்கும், பிரமபுரம் பேணினே" என்றும்

"மணவிடை வைகியோர்க்கு வாணிரு ளறத்தூப்ப வெண்டிசையும், புரைமலி வேதம்போற்று பூசுரர்கள் புரிந்தவர் நலங்கொளாகுதியினி னிறைந்த, விரைமலி தூபம் விசும்பினை மறைக்கும் வெங்குரு."

"தூயமறையாளர் முறையோதி நின்ற தோணிபுரம்"

இப்பகுதிகளில் அருளியிருப்பது பிராமண குலத்தவரையும், அவர்கள் ஓதும் பிரணவ முட்பட்ட வேதங்களையும் அவர்கள் வேத முறைப்படி செய்யும் வேள்வி யாதிகளையுமே குறிக்குமென்பது வெளிப்படை. அதுபோலவே, ஓமென்று மறைபயில்வார் பிரமபுரம் என்பதும் பொருள்படும் ஓமென்னும் பிரணவத்தை ஓதியே வேதத்தைப்படிக்க ஆரம்பிக்கவேண்டு மென்பதும் படித்து முடித்த பின்னரும் பிரணவத்தைச் சொல்லவேண்டுமென்பதும், ஆரியவேதமோதுதலுக்கே நியமமானது. மேற்காட்டிய கந்தபுராணச் செய்யுட்களில் "தாமறைக்கெல்லாம்" என்னுஞ் செய்யுளிலும் அவ்வாறே கூறப்பட்டுளது. மநுஸ்மிருதி உ-ம் அத்தியாயம் எச ஸ்லோகமும் அதாவது

𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 𑌪𑍍𑌰𑌣𑌵𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌦𑌾𑌦𑌾𑌵𑌨𑍍𑌤𑍇 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 ।
𑌸𑍍𑌰𑌵𑌤𑍍𑌯𑌨𑍋𑌂𑌕𑍃𑌤𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌚𑍍𑌚 𑌵𑌿𑌶𑍀𑌰𑍍𑌯𑌤𑌿 ॥

"பிரமண: பர்ணவம் குர்யாதாதா வந்தேசசர்வதா |
ப்ரவத்யநோம் க்ருதம் பூர்வம் பரஸ்தாச்சவி சீர்யதே||

என்பதே. இ-ள் பிராமணன் வேதமோதத் துவக்கும்போதும், முடிக்கும்போதும், பிரணவத்தைச் சொல்லவேண்டியது. அப்

படி முன்னர் சொல்லாததனால், ஓதின வேதம் கொஞ்சமாய் மறந்துவிடும். பின்னர்ச் சொல்லாவிட்டால் ஞாபகத்தில் தரித்திராது. நிகழ்காலத்திலும் இந்நியமம் வழங்கப்பெற்று வருவதையும் அறிகிறோம். நமது தமிழ் மறையாகிய தேவாரப் பதிகங்களையோத ஆரம்பிக்கும்போதும் ஓதி முடித்தபிறகும், திருச்சிற்றம்பலமென்று நாம் சொல்லிவருகிறோம். பழய ஏட்டுப் புத்தகங்களிலும் அச்சுப்பிரதிகளிலும் அவ்வாறே ஒவ்வொரு பதிகத்தின் முதலிலும் ஈற்றிலும், திருச்சிற்றம்பலமென வரைந்திருப்பதையுங் காணலாம். வருணாசிந்தாமணி யென்னும் நூலாசிரியர் இம்மரபுக்கு ஓர் ஆதாரமுங் கண்டுபிடித்தெழுதியிருப்பதாவது. திருவிசைப்பாவில் காணப்படும் "அம்பலவரென்னுஞ் சுருதி" தேவார திருவாசகம் படிக்க ஆரம்பிக்கும்போது திருச்சிற்றம்பலம் என்று சொல்லியே ஆரம்பிக்க வேண்டுமென்று சுட்டுவதாக எழுதியிருக்கின்றார்.
"திருமூலமா முனிவர் சதா சிவந் தத்துவம் முத்தமிழ் வேதம்
"என்று கூறியவிடத்து முத்தமிழ் வேதம் என்று சுட்டப்
"பட்டது, அருள்நூல் மூலமாகிய சுத்த வித்தையை. அங்கே
"முத்தமிழ் என்றது பிரணவத்தை. முத்தமிழ் என்று பிரண
"வத்தைக் கூறுவது தமிழறிவர் (சித்தர்) நூல்வழக்கு." என்றெழுதி மற்றுமேதேதோ நம்மவர் எழுதியிருக்கின்றார். முத்தமிழ் வேதம் என்றதற்குச் சுத்த வித்தையென்று கூறியதற்குப் போதியப் பிரமாணமென்னை? சித்தர் நூல் வழக்கு என்றார். எந்தச் சித்தர் எந்த நூலிலே முன்னுக்குப் பின் விரோதமன்றி இப்பொருளில் இச்சொற்களை வழங்கியிருக்கின்றார்? முத்தமிழ் வேதம் சுத்த வித்தை யென்றவர், பின்னர் முத்தமிழ் வேதம் பிரணவமென்றார். இவற்றில் எது சரி. இரண்டுஞ் சரியெனில் வேறு வேறு கூறவேண்டாவே. முத்தமிழ் வேதமென்று சேர்த்துக் கூறி யொருங்கே சுத்த வித்தை யென்று பொருள்கொண்டு பின்பு முத்தமிழ் என்று கூறிய பதம் எங்கிருந்து கிடைத்தது.

இனி முத்தமிழ் என்பதற்குப் பிரணவமெனப் பொருள் யாண்டு கூறப்பட்டது. இத்தொடருக்கு நேர்பொருளாவது, சதா சிவ தத்துவத்தில் முத்தமிழும் வேதமும் தோன்றுமென்றும், சதாசிவம் தமிழ் சமஸ்கிருத சொரூபரென்றும் பொருள் கொள்ளப்படும். "ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய், என்னும் திராவிட சுருதியும்" "ஆரியமும் தமிழுமுடனே சொல்லி" என்னுந் திருமந்திரப் பகுதியும் நமது கோளை வலியுறுத்தும். "வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தினோதத் தகு மறமெல்லாமுள" என்னும்

"ஐம்ப தெழுத்தே அனைத்து வேதங்களும் *
ஐம்ப தெழுத்தே அனைத்தாக மங்களும்
ஐம்ப தெழுத்தி னடைவை யறிந்தபின்
ஐம்ப தெழுத்தே யஞ் செழுத்தாமே" என்றும்

"அகார முதலாக வைம்பத் தொன்றாகி ※
உகார முதலாக ஓங்கி யுதித்து
மகார விறுதியாய் மாய்ந்து மாய்ந்தேறி
நகார முதலாகு நந்திதன் னாமமே" எனவும்

நந்திருமூல நாயனார் அருளியிருப்பவைகளினால் வடமொழி எழுத்துக்களாகிய ஐம்பத்தொரு அட்சரங்களினின்று பஞ்சாக்கரமும் பிரணவமும் வேதாகமங்களும் தோன்றியதாக வெள்ளிடைமலைபோல விளங்கும். அதனால், ஓங்காரம் தமிழ்மொழி யென்று நம் நண்பர் கூறும் கூற்று வெற்றுரையேயாம். இன்னமும், "என்னை நன்றாக இறைவன் படைத்தனன் றன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே" எனத்திருமூலர் கூறியிருக்கின்றார். இம்முனிவர் ஆதியில் திருக்கைலாயத்தின் பக்கமிருந்தபோதே நந்தியெம்பெருமான் அருள்பெற்று நான்மறையாதிய கற்று அஷ்டமாசித்திகளும் கைவரப்பெற்று நான்மறை யோகியர் எனப்பெயர் வழங்கப் பெற்றவரெனப் பெரியபுராணங் கூறுகின்றது. தமிழ் நாட்டுக்கு வந்த பின்னர் அம்முனிவரது ஜெனனதேகம் ஒரு வகையான் மறைபடத் தமிழனாகிய மூலனென்பவனது உடல் இவருக்குக் கிடைத்தது. அதனாற்றான் "என்னை நன்றாக இறைவன் படைத்தனன், றன்னை நன்றாகத் தமிழ்ச்செய்யுமாறே" எனத் தமது வரலாற்றில் திருமூலர் கூறினார். இதனால் இவர் கற்றிருந்த ஆரிய வேதாகமங்களின் பொருளையே தமிழிற் கூறினாரென்பது நன்கு விளங்கும். "உள்ளுணர்வான் ஞானமுதலிய வொரு நான்குண்மை, தெள்ளுதீந் தமிழாற் கூறுந் திருமூலர்" என்னுஞ் சேக்கிழார் மூர்த்திகளது அருண்மொழியானும் இஃது நிலைபெறும். 7.

* "ஐம்பத்தோரக்கரங்களின் ளகரம் லகரத்துளடங்கு மென்பது பற்றி வன்றோத்துவா ஐம்பதென்றும் சிலவாகமங்களிற் கூறப்படும்" எனச் சிவஞான பாடியத்திற் கூறப்பட்டுளது. பக்கம் ௨௧௭.

※ ஐம்பத்தோரட்சரத்துக்கு விவரமாவது. தத்துவப் பிரகாசம் ௨௬௫ செய்யுளின் பிற்பாதி.

............"வன்ன முதலா, நந்து பராசத்தியானதை; விந்துத் தோன்றி நாதத்தே மூன்று சுரநடந்தனவீண்டு, சிந்துமகாரம், மற்றைப் பத்து மாஞ்சத்தி திருமேனியின் மூப்பத்தைந்தும் சேர்ந்திடுமே." இதன் பொருள்; அட்சரந் தோன்றுமிடத்துப் பராசத்தியாலே பிரணவமாகிய மாயையிலே அகார இகார உகாரமாகிய மூன்று விந்து பிறக்கும்;

பின்னும் நம் நண்பர் அவர் மனம்போல சில வெழுதி "வித்தெழுத்துக்களாகிய சிறந்த மந்திரங்கள் ஆதியில் தமிழி "லிருந்தனவென்பதும், அவையே இன்றுள்ள வடமொழித் "தந்திரத்தும் தமிழ்ச்சித்தர் நூலுள்ளும் பயிலுகின்றன "வென்பதும் உய்த்துணரப்படும். ஆதலால் உண்மை "யில் மந்திரங்கள் தமிழிலேயே ஆதியிலிருந்தன வென் "பது தெளியப்படும்." என முடிபு கட்டியிருக்கின்றார். இன்றுள்ள வடமொழித்தந்திரத்து வித்தெழுத்துக்களாகிய சிறந்த மந்திரங்கள் உளவென்பதை இவர் ஒப்புகின்றார். இது ஆரியத்துள்ள சிவாகமங்களைக் குறிக்கின்றது. வேத சிவாகமம் இரண்டும் ஆரிய எழுத்துக்களால் ஆயினவென்பது மேற் காட்டிய திருமந்திரச் செய்யுட்களால் விளங்கும்; சிவஞான சித்திச் செய்யுள்* சிவதருமோத்தரச் செய்யுள்‡ மேலேகாட்டி யிருப்பவைகளாலும் விளங்கும். இப்போதுள்ள வடமொழிச் சிவாகமங்களுக்கு முந்தித்தமிழிலே ஆகமங்களிருந்தன வென் பது இவரது கொள்கை. அந்த ஆகமங்களுங் கடல்கோளில் மறைந்து போயினவாம். இதுவும் கற்பனையே. ஆதியிலிருந்த வடமொழி ஆகமந்தான் இப்போதுள்ளதும். தமிழ் எழுத்துக் களில் சிவாகமங்களிலுள்ள மந்திரங்களை உச்சரிக்க அல்லது எழுதவருமோ வென்பதைஆராய்வாம். ஆலயங்களில், கர்ஷணாதி பிரதிஷ்டாந்தமும், பிரதிஷ்டையாதி உற்சவாந்தமும், உற்சவாதிபிராயச்சித்தாந்தமும் என்னுமிவைகளில் பீஜத்தோடு கூடிய எண்ணிறந்த மந்திரங்கள் நிகழப்பெற்று வருகின்றன. அவைகளையெல்லாம் இங்கு எடுத்துக்காட்டவியலாது. தமிழ் மக்களில் சைவர் எனப்படும் வேளாளர்கள் கைக்கொண்டு அனுஷ்டித்து வரும் அனுஷ்டானம் சிவபூஜை யாதிகளிலுள்ள சில மந்திரங்களையே காட்டி விவகரிப்பாம். அவைகள், பஞ்சாட் சரம், பஞ்சப்பிரம மந்திரம், ஷடங்கம், கலாமந்திரம், சிவகாயத் திரி, பதமந்திரம், பிராசாதம், அசபா, ஹம்ஸம், ஆதிய மந்தி ரங்களாம். இம்மந்திரங்களில் ஶ, ஷ, ஸ, ஜ, ஹ, க்ஷ என்னு மெழுத்துக்களும், ககரவர்க்கத்தில் ககரமொழிந்த ஏனைய உரத்தும் மெலிந்தும், மெலிந்ததில் உரத்துமுள்ள மூன்று எழுத்துக்களும் அதுபோலவே ச, ட, த, ப என்னும் நான்

அதிலே ஆ, ஈ, ஊ என்னும் மூன்று நாதம் பிறக்கும்; இவை ஆறிலும் நின்று பத்தக்கரம் பிறக்கும். இப்பதினாறும், மாதிருகையென்று பெய ராய்ப் பராசத்தியின் சூக்கும ரூபமாம். ககரம் முதல் க்ஷகர மீறாக முப் பத்தைந்தும் தூலதேகமாம் இப்படியாம் அக்கரம ஐம்பத்தொன்றாம்"

இவ்வக்ஷரங்கள் முறையே வடமொழியின் உயிரெழுத்துக்களும் மெய்யெழுத்துக்களுமாம்.

*காரியமாய் என்னுஞ்செய்யுள் ‡செந்தமிழில் என்னுஞ்செய்யுள்

கெழுத்துகளிலுள்ள கஉ-எழுத்துக்களும் தமிழ் மொழியில்
இல்லை: இவ்வெழுத்துக்களாற் பெரும்பாலும் மந்திரங்கள்
ஆக்கப்பட்டிருக்கின்றன. இதனாலன்றே தொல்காப்பியர்
முதல் முதல் எழுத்து அதிகாரஞ் சொல்ல வந்தபோதே, பிறன்
கோட் கூறல் என்னு முத்தியைக் கொண்டு, எழுத்துக்களில்,
தமிழ் எழுத்துக்கள் வடமொழி எழுத்துக்கள் இவைகளின்
பிறப்பின் பேதத்தைக்காட்டி வடமொழி யெழுத்துக்களின்
பிறப்பைத் தாம் இந்நூலிற் காட்டவில்லை யென்றும் அவைகளை
அந்தணர் வேதங்களிற் கண்டுகொள்க வென்றுங் கூறினார்.
"எல்லாவெழுத்தும் வெளிப்பட" என்னும், இப்பொருளடங்
கிய சூத்திரத்தையும் அதன் உரையையும் இவ்வாராய்ச்சியின்
ருஅ, அஉ. பக்கங்களில் காட்டியிருக்கின்றதைப் பார்த்தால்
தெளிவாகும்.

மந்திரம் என்ற மொழியே மந்=நினைப்பவன், திர=காப்
பது, அதாவது நினைப்பவனைக் காப்பது எனும் பொருளைப்
பயந்து கொண்டு நிற்கும் வடமொழித்தாதுக்களாலாகிய மொழி
யாகுமானால், வீண்காலம்விளைப்பது யாது பயன் படும். மந்
திரம என்ற சொற்குப் பகுதி விகுதிப்பொருள் தமிழ் மொழிக்
கு இணங்க ஒருவரும் கூறிற்றிலர். "செம்பு பொன்னாகும்
ஸ்ரீயுங் கிரீயுமென" எனவும் "ஆனந்தம் அம், ஹிரீம், அம்,
சக்ஷம், ஆம், ஆகுமே" என்றும் "ஒளியது ஹௌமுன் கிரீமது
வீரும்" என்னும் திருமந்திரச் செய்யுட்களின் பகுதிகளில்
பீஜாட்சரங்களைத் தமிழ் எழுத்துக்களால் எழுத முடியாது
வடமொழி எழுத்துக்களாலேயே குறித்திருப்பதையுங் காண்க.
சிவதருமோத்தரம், "சந்தம்பதமுந் தானறியானென" வென்
னுஞ் செய்யுளுரையிற் காட்டப்பட்டிருக்கும் வீர சோழிய
இலக்கணச் செய்யுளால் வடமொழிச் சந்தம்பதம் உசு-வகை
யென்றும் "இருவிதஞ் சந்தமிவற்றொன்று எழுத்தாலிலங்கு
"மற்றை, யொருவித மாத்திரையாலே யொளிருமொளிருமிது,
"பொருவரிதாகிய வாரியத்துண்டு பொதியமென்னு, மருவரை
"மாதவன் கூறுந்தமிழுக்கருகமன்றே" என்ற செய்யுளாலும்,
ஆரியத்திலேயே சந்தம்பதங்களும் மாத்திரை பேதங்களுமுள்ள
மந்திரம் முதலிய வென்பதையுங் காண்க. வடமொழி
அமரம் பிரமவர்க்கத்தில், சஉகூ-சுலோகத்தில் 'காயத்திரிப்ர
முகம்ச்சந்தோ' எனக் கூறப்பட்டிருப்பதையும் அதற்கு
உரை "ச்சந்த:, இது காயத்திரிமுதலான எ ச்சந்தஸ்களுக்குப்
பேர்" என்றெழுதியிருப்பதையும் மேற்காட்டிய சிவதருமோத்
தரச் செய்யுளையும் அதன் உரையையும் ஒப்பிட்டு நோக்குக.
இவ்வரிய பிரமாணங்களால மந்திரங்கள் ஆதியில் தமிழிலிருந்

தனவென்று நம் நண்பர் கூறுஞ் சொல் பொருத்தமற்றதென வே விளங்கும். ஆதியிலிருந்திருந்தால் இப்போதில்லாது போவானேன்?

சக. பின்னும் நம்மவர் எழுதுவதாவது. "ஐந்தெழுத் "திற்கும் வெவ்வேறு பொருள் கொள்ளல் வேண்டும். அது "தான் அம்மந்திரங்களின் சிறப்புப் பொருள். அச்சிறப்புப் "பொருளில் ஆகமத்திலும் திருமூலர் முதலிய அறிவர் நூலி "லுந்தான் அது வழங்குகின்றது, வைதிகர் அதற்கு வள "மில்லாத பொதுப் பொருள் கொள்வர். ஆதலால் அவர்க்கது "மந்திரமாகாது. அம்மந்திரத்தின் சிறப்புப் பொருளே தேவா "ரத்துள்ளும் கொள்ளற்பாற்று. பொதுப்பொருள் கொள் "வது பொருத்தமின்லயென்பது "நாதனுமை நமச்சிவாயவே" "என்பதற்குப் பொருள் விரிப்பின் விளங்கும். நாதனுடைய "நாமம் 'நமஸ்காரம் சிவனுக்கு' என்று பொருள் கொள்வது "எவ்வளவு பொருத்தமிலாத தென்பதை உற்று நோக்குக. "சிறப்புப் பொருளில் ஐந்தெழுத்தும் தமிழ் மந்திரமே," என வெழுதியிருக்கின்றார். வேதம் சூத்திரரூபமாயுள்ளது. சிவாக மம் வேதத்திற்குப் பாடியமாயுள்ளது என நம் மேலோர் பணித்திருப்பதை நம்மவர் ஞாபகத்தில் வைத்து அதன்வழி நடப்போரானால் இவ்வாறு எழுதத் துணியார். ஐந்தெழுத்து ந, ம, ஶி, வ, ய என்பது. மேற்காட்டிய தேவாரச் செய்யுளில், நமச்சிவாய, வென்று, ஶி, சிகரமாகியும் சகரவொற்று ஒன்று தோன்றியும் வகர எழுத்து வாகாரமாக நீண்டுமிருப்பது ஏன். நமச்சிவாய வாஅழ்க என மாணிக்கவாசக சுவாமிகள் கூறினரே, நம் நண்பர் பொருளின்படி நமஸ்காரம் சிவனுக்கு வாழ்க வென்பதுதான் அதன் பொருளோ? பஞ்சாட்சரத்துக்கு இரு வகைப் பொருளுண்டெனப் பெரியோர்கள் மொழிவார்கள். ஒன்று சிவபெருமானை நமஸ்கரிக்கிறேன் என்பது. மற் ஞென்று ஈசன் சத்தி ஆன்மா, மலமாதிய; சிவபெருமானை நமஸ்கரிக்கிறேன் என்று பொருள் கோடலிலும், ஈசன் சத்தி ஆன்மா முதலிய பொருள் குறிப்பாய் அடங்கியுள்ளன. எவ் வாறெனில் நமஸ்கரிக்கிறேன் என்றவன் ஆன்மா, எதுக்கு நமஸ்கரிக்கவேண்டும்? மலநீக்கத்தின் பொருட்டு. ஆதலால் "நாடிரண்டந்தம் பேதமதென்பர் பெரியோர்க்க பேதமே" எனத் திருமூல நாயனர் அருளியபடி வைதிகர் கூற்றும் சைவர் கூற்றும் முடிவில் ஒரே பொருளைப் பயந்துகொண்டே நிற்கின் றன. ந, ம, ஶி, வ, ய வென்பது வடமொழி எழுத்துக்கள். தமிழிற் செய்யுளிற் கூறவந்தபோது தமிழ் இலக்கண முறைப் படி நமச்சிவாயவெனத் திரிபு பெற்றது. எவ்வாறெனில் நமஶ்ஶிவாய என்பதில் நம: என்பதிலுள்ள, விஸர்க்கம், ஸகாரத்

தின் றிரிபு. அது வருமொழி முதலிலுள்ள ஷகாரமாகித்
திரிந்ததனால் (ஷ ஷ) இரண்டு ஷகாரங்களாயின. அவை
"முப்பது சயவும்" என்ற நன்றாற்சிசைய இரண்டு சகாரங்க
ளாய் நமச்சிவாய என்றாயது. திருமூலர் முதலிய மகான்க
ளெல்லாம், அம்மந்திரம் வடமொழி யெழுத்துக்களாலாய
தெனவே கூறியிருப்பதை மேலே காட்டினோம். "அருமறை
யின் அகத்தானை" எனத் திருநாவுக்கரசு மூர்த்திகள் அருளி
யிருக்கின்றதே. [அஃது எவ்வாறு? மூன்று வேதங்களிலும்
நடு வேதம் எது? அது யசுர் வேதம். அதன் ஏழு காண்டங்
களிலும் முதன் மூன்று பின் மூன்று தள்ளி நடுவிலுள்ள
௪-வது காண்டம். அந்நான்காவது காண்டத்தில் நடுவுள் நிற்
கும் ஸ்ரீ உருத்திரத்தின் நடுவுள் ("நமச்சிவாயச் சிவதராயச"
என) ஐந்தெழுத்தையும் ஈரெழுத்தையும் கூறியவாற்று
னன்றோ; (திருமூலர் அருளிய திருமந்திரம், வேத சிவாகமப்
பொருளே. தேவாரமும் வேதசாரமே.) பஞ்சாக்கரம் அரு
மறையினகத்து விளங்குவதை "மும்மறையுள் நடுமறையின்
"முனிவிலெழு காண்டத்திற், செம்மைதரு நடுக்காண்டஞ்
"சேர்ந்த வெழு சங்கிதையி, லம்ம நடுச்சங்கிதையினி
"யீரெழுத்து நடுப், பொம்மலுற வமர் மநுவின் பொரு
"ளாவனெவன் மைந்த," என்ற செய்யுளாலும் பெரியோரும்
பணித்தனர்.]

௫௦. மிற்க, நம்மவர் இன்னமொன்று கூறுகின்றார்.
அதாவது "தந்திர வழக்கங்களையும் முறைகளையும் தமிழ்ச்
"சித்தர் நூல்களொடு ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து இரண்டும்
"ஒரு தன்மையனவா யிருத்தலானும், தந்திரம் யாவற்றுள்
"ளும் சிவ வழிபாடு கூறுதலானும் அவை யெல்லாவற்றுள்
"ளுஞ் சிறந்த உஅ சைவ நூல்களையும் தென்றமிழ் நாட்டு
"மகேந்திர மலையில் சிவபெருமான் அருளியதாகத் தெரிதலா
"னும், தந்திரத்திற் கூறப்படும் வித்தெழுத்துக்கள் யாவும்
"தமிழ்ச் சித்தர் நூல்களுள் மிகுதிப் பயிலுதலானும், வட
"மொழியில் தந்திரம் ஏற்படுதற்கு நெடுநாட்கு முன்னரேயே
"ஆகமமெனப்படும், அருள் நூல்கள் தென்றமிழ் நாட்டில்
"எழுந்தமையானும், வடமொழித் தந்திரங்கள் தமிழ் அருள்
"நூல்களின் மொழி பெயர்ப்பென்பதூஉம் தந்திர நாகரிகம்
"தமிழர் நாகரிகமென்பதூஉம் உய்த்துணரப்படும்." என்றெழுதி
யிருக்கின்றார். முறையே இவற்றை ஆராய்வாம்.

தந்திர வழக்கங்கள் இன்னவை, சித்தர் நூல்கள் இன்
னவை, அவற்றின் வழக்கங்கள் இன்னவை, இரண்டு வழக்கங்
களும் இன்ன தன்மையில் ஒத்து இருக்கின்றனவென்பவை

களில் ஒரு வழக்கத்தையாவது இவரெடுத்துத் தமிழுலகினர்க்குக் காட்டினாரில்லை. தமிழ்ச் சைவ மக்களுக்குப் பன்னிரண்டு திருமுறைகள் நூல்களென நமதுலகை அரசாட்சிபுரிந்தசைவப் பெருந்தகையார் காலத்தில் வகுக்கப்பெற்று அவை இன்று காறும் விளங்கி வருகின்றன. அவைகளில் சித்தர் நூல் என ஒரு நூலையும் எடுத்து ஆளவில்லை. தந்திரம் யாவற்றுள்ளும் சிவ வழிபாடு கூறுகின்றதென்றார். பாஞ்சராத்திரம், வைகாநசம், எனும் இரண்டு வடமொழித் தந்திரங்கள் திருமால் வழிபாடு கூறுகின்றனவல்லவா? வடமொழியிலிருக்கு மிவ்வாகமங்களுந் தமிழின் மொழிபெயர்ப்போ? இத்தமிழாகமங்களையுங் கடல் கொண்டதோ? ஆதிகால முதலே சிவாலயங்கள் பலவிடங்களில் இருத்தல்போல பலவிடங்களிலும் திருமால் ஆலயங்களும் இருக்கின்றனவன்றோ? இருபத்தெட்டு சைவ நூல்களையும் தென்றமிழ் நாட்டு மகேந்திர மலையில் சிவபெருமான் அருளியதாகத் தெரிதலானும் என்றெழுதினரே, இவர் எவ்வாறு இது விஷயம் தெரிந்தார், யாராவது இவருக்குச் சொன்னார்களா? அல்லது சைவ நூல்களில் எங்காவது சொல்லியிருப்பதைப் படித்துத் தெரிந்தாரா? அக்குறிப்பை யாதுங் காட்டியிருக்கவில்லை. திருவாசகங் கீர்த்தித் திருவகவலில், "மன்னுமாமலை மகேந்திரமதனிற் சொன்னஆகமந் தோற்றுவித் தருளியும்" எனவும் "கேவேடராகிக் கெளிறதுபடுத்து மாவேட்டாகிய ஆகமம்வாங்கியும், மற்றவைதம்மை மகேந்திரத் திருந், துற்ற வைம்முகங்களாற் பணித்தருளியும்" எனவும் காணப்படும் பாவின் பகுதிகளே சிவபிரான் ஆகமங்களை மகேந்திர மலையில் அருளினரென்பதற்குத் தெரிந்தவரை, சைவத் தமிழ் நூற் பிரமாணமாகக் காணப்படுவன. மேலே காட்டிய அருண்மொழிப் பகுதிகளில் தென்றமிழ்நாட்டு மகேந்திர மலையென்று கூறப்பட்டிருக்கவில்லை. சுவாமி வேதாசலம் அவர்கள் எழுதிய திருவாசக விரிவுரையின் கூக-ம் பக்கத்தில் சொல்லியிருக்கிறபடி தெலுங்கு நாடாகிய கஞ்சம் ஜில்லாவில் பண்டைய சிவாலயங்களுடன் விளங்கும் மகேந்திரமெனப் பெயரிய ஒரு மலையிருப்பதாகத் தெரிகின்றது. சிறப்புப் பெயர் அகராதியிற் காட்டியபடி வடநாட்டில் உற்கல நாடுமுதல், காண்டவ நாடு வரை வியாபித்துள்ளது மற்றொரு மகேந்திரமலை. இவ்வாறு பற்பல மலைகள் வேறு பாஷைகட்குரிய பற்பல நாடுகளில் மகேந்திரமெனப் பெயர்கொண்டு விளங்கலான், தென்றமிழ்நாட்டு மகேந்திர மலையிற்றான், சிவபிரான் ஆகமங்களை அருளினரென்று சொல்வதற்கு, நம்மவர் உரையைத் தவிர வேறு ஆதாரவில்லை. அன்றியும் மேற்காட்டிய இரண்டு திராவிடசுருதி வாக்கியங்களுள், முதல் வாக்கியம், மகேந்திர

மதனிற் சொன்ன வாகமத் தோற்றுவித்தருளியும் எனப் பிறவினை கொண்டு முடிவதானும், மகேந்திரமதனிற் சொன்ன வாகமம், எனக் காணப்படுவதானும் சொன்னவிடம் வேறு தோற்று வித்த இடம் வேறு எனப் புலப்படுவதானும், ஆகமத்தை அரு ளிய காலம், இடம், வேறு; அவைகளைப் பிறரைக்கொண்டு தோற்றுவித்த காலம், இடம், வேறு எனப் பொருள்படுகின் றமையால் நம்மவர் கூற்றுக்கு இவ்வாக்கியம் பிரமாணமாகாது. இரண்டாவது வாக்கியமோவெனில், திருவிளையாடற் புராணத் தின் வலைவீசு திருவிளையாடற் சரித்திரத்தின் ஒரு பகுதியைக் குறிப்பிடுவது. அஃதாவது, குமரவேள் கடலிலெறிந்த சிவாக மங்களைச், சிவபிரானுணையால் நந்தியெம்பெருமான் மகரமாகித் தலையிற் றாங்கிக்கொண்டு கடலிற் படிந்திருந்தகாலை வலைஞர் கோன் வேடம்பூண்டு வந்த சிவபிரான் அம்மீனைப்படுத்து அவ்வாகமங்களை வாங்கி மகேந்திரத்தெழுந்தருளி அருளிய தாகவுங், கூறும் சரித்திரம். அறுபத்துநான்கு திருவிளை யாடல்களில், ருஎ-வது வலைவீசிய திருவிளையாட்டின் சரித் திரம் அது. அது நிகழ்ந்தது அரிமர்த்தன பாண்டியன் காலத்தில், இப்பாண்டியனுக்கு முன்னர் அநேகம் பாண்டியர் கள், அரசாண்டார்கள். நண்பர் கூற்றுப்படி பொருள் கொண்டால் அரிமர்த்தன பாண்டியன் காலத்திற்றான் சிவ பிரான் ஆகமங்களை அருளினாரெனக் கொள்ளவேண்டும். அன்றியும் முன்னரேயிருந்த ஆகமங்களையே மகேந்திரத்திற் றோற்றுவித் தருளினதாகவும் திருவாசகப் பாவாற் றெரிகின் றது. ஆதலால் நம்மவர் கூற்றுக்கு எட்டுணையும் ஆதாரமில்லை. நம்மவர் தென்றமிழ்நாட்டு மகேந்திரமலை, என்றார். 'மகேந் திரம்' என்ற பதமே வடமொழியாம். தமிழ் நாட்டிலுள்ள பர்வதத்துக்கு வடமொழிப் பெயர் எவ்வாறெய்தியது? இவர் கூற்றெல்லாங் கலவரமே. இன்னமொன்றுளது. திரு விசைப்பா, திருமாளிகைத் தேவர், ௩-சிதம்பரத் தலத்துக் கருளிய 'உறவாகிய யோகம்' என்ற பதிகத்தில் பாசுரந் தோறும் மகேந்திரமலை குறிப்பிடப்பட்டிருக்கின்றது. "மகேந் திரப் பொன்மலையின் மலைமகளுக்கருளுங் குரு நீ," என்னுஞ் சொற்றொடர் அப்பதிகத்தின் ௧0-வது பாசுரத்திற் காணலாம். இதன் பொருளையும் பெரியபுராணம் திருக்குறிப்புத் தொண் டர் நாயனார் புராணம் 'வெள்ளிமால் வரைக் கைலையில் வீற் 'றிருந்தருளித் துள்ளுவார் புனல்வேணியார் அருள்செயத் 'தொழுது தெள்ளு வாய்மையி னாகமத்திறனெலாந் தெரிய 'உள்ளவாறு கேட்டருளி னாளுலகை யாளுடையாள்' என்ற ரு0-வது செய்யுட் பொருளையும் ஒப்பிட்டு நோக்குங்கால் மகேந்திரம் என்னும் பெயர் கைலயங்கிரிக்கும் போந்த ஒரு

பெயராகுமென்பது தெளிவு. மஹா=மகத்தான, இந்திரம் =மேன்மை தங்கியவென்பது பொருள். இவ்வாராய்ச்சியா லும் மகேந்திரமென்னும் மலை தமிழ் நாட்டிலுள்ளதென்னும் நண்பர் கூற்று நிலைபெறுதென்பதே தேற்றம். தந்திரத்திற் கூறப்படும் வித்தௌழுத்துக்கள் யாவும் தமிழ்ச் சித்தர் நூல் களுள் மிக்குப் பயிலுதலாலும் என்றார். சித்தர் நூல் இன்ன தெனக் குறிப்பிட்டாரல்லர், தந்திரமெனப்படும் வட மொழிச் சிவாகமங்களில் மந்திரங்களெல்லாம் கூறுவது உண்மையே, அதை யாவரும் அப்பியசிப்பது முண்மையே. இதனால் நண்பர் கொள்கைக்குஒரு சாதகமுமில்லை. ஆனால் வேதங்களில் வித்து எழுத்தில்லை யென்று சொல்ல வரலாம். நான்காவது வேதமாகிய அதர்வணம் முற்றும் மந்திரமே, அல் லாமலும் வேதமும் ஆகமமும் ஒன்றுக்கொன்று உதவி நூல் களே. "வடமொழியில் தந்திரம் ஏற்படுதற்கு நெடுநாட்கு "முன்னரேயே ஆகமமெனப்படும் அருள் நூல்கள் தென் "தமிழ் நாட்டின் எழுந்தமையானும்," என்றெழுதியிருக் கின்றார். வடமொழியில் தந்திரமென்று இங்கு இவர் கூறுவது வடமொழிச்சிவாகமங்கள் இருபத்தெட்டையுமே. "வேதமோடாகமம் மெய்யாமிறைவனூல்" என்று திருமூல தேவரும் "தொகுத்தவனருமறை அங்கம், ஆகமம், வகுத்த வன் வளர்பொழிற்கூக மேவினான்" என்று திருஞானசம்பந்தப் பெருமானும், அருளியிருக்கின்றார்கள். அந்நூல்கள் ஆரி யத்த்த உளவென்று அருணந்தி சிவாசாரியாரும்* கூறியிருக்கின் றனர். இவற்றானும், சிவாகம வரலாறு உமாபதி சிவாசாரியார் பவுஷ்கரவுரையுள் விரித்துக் கூறுதலானும், வேதவாக்கியங்க ளென ஆண்டாண்டு எடுத்தாளுதலானும், சந்தானசாரியர்கள் திருவுளத்திற்கு மாறுபட்டுக் கூறுதல் சைவசித்தாந்திகட்க டாது. ஏனையோருங் கூறியிருப்பதற்கு முரணாக இப்போ துள்ள வடமொழி ஆகமங்களுக்கு நெடுநாளைக்கு முன்னரேயே ஆகமமெனப்படும் அருள்நூல்கள் தென்தமிழ்நாட்டில் எழுந் தனவென்று நம்மவர் கூறுவது மிக்க வியப்பாக விருக்கின்றது. அன்றியும் அவ்வாறாயின் அந்தத்தமிழ் ஆகமங்களை யியற்றி னோர் யாவர், அவ்வகைச் சரித்திரம் எந்நூலிற் கூறப்பட்டுளது. ஆன்றோர்களில் யாராவது இவ்வகைக்கூற்று கூறினதுண்டா? இருபத்தெட்டு ஆகமங்களுமா கடல்கோளிற் போய் விட்டன, தமிழ்நாடு தெற்கே கன்னியாகுமரி முதல் வடக்கே திருப்பதி வரை யுண்டே? இவ்வகண்ட பூப்பரப்பினுள் சைவசமயம்

---

* சிவஞானசித்தியார் பரபட்சம், சௌந்திராந்திகன் மதமறுதலை ௩௪-வது செய்யுள், காரியமாயுலகமெலாம், எனுஞ்செய்யுள்

கைக்கொண்டவர் அக்காலம் ஒருவருமில்லையா? எண்ணிறந்த சிவாலயங்கள் சோழநாட்டிற்றானே யுண்டு. இந்நாட்டில் அவ்வாகமங்களில் ஏதேனு மிருந்திருக்கப்படாதா? ஆதலால் இருபத்தெட்டு ஆகமங்கள் தமிழிலிருந்தனவென்பதும் வடமொழித் தந்திரங்கள் தமிழ் அருணூலின் மொழிபெயர்ப்பு என்பதும் மூன்று அளவைகளுள் ஒன்றானும் ஆதரிக்கப்படாததென்பதும், நம் நண்பர் அவரது கற்பனைக் கொள்கையைத் தாபித்துக்கொள்ள அவரது யுக்திவாயிலானே எழுதப்பட்டதென்பதும் நன்கு விளங்கும். "வேதஸார மிதம்தந்த்ரம் ஸித்தாந்தம் பரமம் சுபம்" என்னும் மகுடாகம வாக்கியத்தானும் தந்திரமென்பது வேதசாரமென்றறிய வேண்டும். தமிழ் அருள்நூலின் மொழிபெயர்ப்பு என்றார். அவ்வாறானால் மொழிபெயர்த்த காலத்தில், அந்தத்தமிழ் அருள் நூல்கள் இருந்திருக்க வேண்டும். ஆரியர், பெர்சியா நாட்டினின்று முதல் முதல் பஞ்சாபுக்கு வந்ததே இற்றைக்கு ௩௫௦௦-ஆண்டுகட்குமுன்னர் என இவரது சரித்திர ஆராய்ச்சி கூறும். இவர் சொற்படிக்கே உ௮-ஆகமங்கள் கடல்கோளில் மறைபட்ட காலம் ஆதியூழியின் அந்தத்தே. அதாவது இற்றைக்குச் சுமார் குறைந்தபட்சம் ௭௲-ஆண்டுகட்கு முன்னர், இவ்வாறு பார்த்தாலும் பொருத்தமில்லை. நிற்க மேலாராய்வாம்.

௫௧. இனி, வடமொழிவேத வரலாற்றைக்கூறும் வாக்கியங்களை ஆராய்வோம், என நம் நண்பர் எழுதிக்கொண்டு, வேதமானது பிரமாவினுடைய நான்கு முகத்தினின்றும் நான்கு வேதங்கள் தோன்றினவென்பது பிராமணருடைய கொள்கை. சைவருள் ஒரு சாரார், சிவபெருமானுடைய நான்கு முகத்தினின்றும் நான்கு வேதங்களும் தோன்றினவென்பர் என ஒரு முகவுரை யெழுதிக்கொண்டார். இவ்வுரைக்குப் பிரமாணங் காட்டிலர். பின்னர் தம்மனம் போனபடி ஆட்சேப சமாதானங்களைப் புகுத்திக்காட்டி, யெவ்வாறாயினும் இப்போதுள்ள நான்கு வேதங்கள் அயன்வாக்கல்லவென்பது அவற்றை நேரில் படித்த யாவரும் மறுக்க வொண்ணாத ஒருண்மை என முடிபு கூறினார். நேரே வேதகாரணர் சிவபெருமான், பாம்பரைக்காரணர் பிரமன், அவருடைய நான்கு முகங்களினின்றும் வேதங்கள் தோன்றினவென்பது கற்பனை. வேதம் ஆதியில் சிவனால் அளிக்கப்பட்டுப் பின்னர் வரன்முறையால் பிரமனால் இருடிகட்கு அளிக்கப்பட்டதென்பதே சுருதி ஆதாரத்தோடு மேலோர் கூறுங் கொள்கை. வைதிகரில் மீமாஞ்சகமதம் பற்றியோர், வேதம் சுயம்புவென்றே கூறுவர், மனுதர்மசாஸ்திரம் ௧௨-ம் அத்தியாயம் ௯௪-வது

சுலோகத்தில் வேதம் சுயம்புவேயல்லது ஒருவராற் செய்யத் தக்கதன்று எனக் கூறியிருப்பதுங் காண்க. பிராமணருள்ளும் ஆங்கிலக் கல்வியிற் றேர்ச்சியடைந்து அவ்வகைச் சரித்திர ஆராய்ச்சியைக் கைக்கொண்டோருட் சிலர் வேதம் ஓர் காலத்தில் ஒன்றின்பின் ஒன்றாய் ஆக்கப்பட்டதென்று கூறுவர். அவ்வாறு எழுதப்பட்டவோர் வியாசத்தைக் கண்டனஞ் செய்து அவ்வாறு எழுதியவரையும் ஏளனஞ் செய்து, சங்கரர், இராமாநுஜர், மாத்துவர் பாஷ்யங்களினிருந்தும், மனு சாஸ்த்திரத்தினின்றும், மற்றும் வடமொழி நூல்களினின்றும், பல பிரமாணங்களை மேற்கோளாகக் காட்டி, வேதம் சுயம்பு என்பதாகத் தாபித்து, ஆரிய தர்மம் எனுமோர் பத்திரிகையில் எழுதப்பட்டிருக்கின்றது. (சென்ற சித்தார்த்த வருஷம், ஐப்பசி, கார்த்திகை மாதங்களின் பத்திரிகைகளைப் பார்க்க) சிவஞானபாடியம் ௬௬௬௨-பக்கங்களில் வேதம் நித்தனாகிய பரமசிவனாற் செய்யப்பட்டமையானும, இறுதிக்காலத்துப் பரமசிவனிடத் தொடுங்கிய வேதம் படைப்புக்காலத்து, முன்புபோலவே தோன்றுதலானும், நித்தமென்று உபசரித்துக் கூறப்படும் என்று எழுதப்பட்டிருக்கின்றது. வேதமாதிய பரமசிவனாற் செய்யப்பட்டதென்பதற்கு "அஸ்யமஹதோ பூதஸ்ய" என்னும் உபநிஷத்து வசனத்தையும், "யோப்ரமஹாணம்" என்னும் உபநிஷத்து வாக்கியத்தையும் "அஷ்டாதசாநாம்" "அங்காணி" என்ற புராண வாக்கியங்களையும் மேற்கோளாகக் காட்டப்பட்டிருக்கின்றன. மாதவச் சிவஞான முனிவர் வேதப்பொருளை அறியாதவராகித் திராவிட மகா பாஷியஞ் செய்தனர் போலும்.

சைவருள் ஒரு சாரார், வேதம் சிவபிரானது நான்கு முகங்களினின்றுந் தோன்றினவென்பர் என நம்மவர் எழுதினார். மற்றொரு சாரார் யாவரோ, அவர் கூறுவது யாதோ, அறிகிலம். சைவருள் எத்தனை சார்பினர் உளரோ, அதுவும் தெரிந்திலம். சைவர் கொள்கையினையும் சைவசிகாமணியாகிய மாதவச் சிவஞான முனிவர் கண்ட பிரமாணியத்தையும் இவர் மறுக்கப் புகுந்தனர். இனி இவர் சைவருள் எவ்வகைச் சார்பினரோ தெரியவேண்டும். நிற்க,

௫௨. பின்னும் நம் நண்பர் எழுதுவதாவது:—

"ஆயின் பிரம வாக்கு சிவவாக்கு வேதம் என்று
"சொல்வதற்குக் காரணம் யாதென்று ஆராய்தல்வேண்டும்.
"ஒவ்வொரு அண்டத்திலும் அதனைப் படைக்கும் ஒரு தெய்
"வம் பிரமாவெனப்படும் என்றும், அப்பிரமாவும் கடவுளல்ல
"வென்றும் ஞான நூலோர் கூறுகின்றார்கள், படைப்பவன்

“கடவுளல்லவனுகவே அவன் கடவுளிடத்தினின்று படைப்
“பின்முறையைக் கற்பவனுகல்வேண்டும். அங்ஙனம் அவன்
“கற்றதைத் தன் ஏவலாளர்க்கு அறிவித்தலும் இயல்பே.
“அதனை, “ஆதியிற் பிரமனுர்தாம் அர்ச்சித்தார்” என்றும்,
“ஓதிய வேத நால்வர் உணருமாறுணாலுற்றுர்.” என்றுமுள்ள
“தேவாரப் பகுதிகளால் உய்த்துணர்ந்துகொள்க.” என்று
எழுதியிருக்கின்றுர். இவர் காட்டியிருக்கின்ற மேற்கோள்
கட்கும் அவர் எழுதியிருக்கிற வாக்கியங்கட்கும் ஒற்றுமை
இன்னதென அறியக்கூடவில்லை. பிரமன் கடவுளினிடம்
படைப்புத் தொழிலைக் கற்றவனென்றுர். கற்றதை ஏவலா
ளர்க்கு அறிவித்தல் இயல்பு என்றுர். அதனை மேற்காட்டிய
தேவாரப் பகுதிகளால் உணர்க வென்றுர். இதனுல், முதற்
காட்டிய மேற்கோள், பிரமன் கடவுளிடம் கற்றதை உணர்த்தி
யது என்றும், இரண்டாம் மேற்கோள், பிரமன் அவனது ஏவ
லாளர்க்கு அறிவித்ததை உணர்த்தியதென்றும் அறியற்பாலதா
யிருக்கின்றது.—வேறு வகையாய்ப் பொருள்கொள்ள இவர்
எழுதியிருக்கும் விடயங்கள் இடங்கொடா. இத்தேவாரப்
பகுதிகட்கு இதுதான் பொருளோ வென்பதை ஆராய்தல்
வேண்டும். அத்தேவாரப் பகுதிகள் இரண்டும் ஓர் தேவா
ரச் செய்யுளிலுள்ளவையே. அத்தேவாரம், அப்பமூர்த்திகள்
அருளியது. அது வருமாறு:— “ஆதியிற் பிரமனுர்தாம்
அர்ச்சித்தார் அடியிணைக்கீழ், ஓதிய வேதநாவர் உணருமா
றுணாலுற்றுர், சோதியிற் சுடராய்த் தோன்றிச் சொல்லினை
யிறந்தார் பல்பூக், கோதிவண் டறையுஞ் சோலைக், குறுக்கைவீ
ரட்டனுரே” என்பதே. இதன் இரண்டாமடியில் ஓதிய வேத
நாவர் என்று எழுதப்பட்டிருப்பதே சுத்த பாடம். தனித்
தனி நால்வரால் அச்சிடப்பட்டிருக்கின்ற சுத்த பாடமாகிய
தேவாரப் புத்தகங்களிலும், பழய ஏட்டுப் பிரதிகளிலும் இவ்
வாறே காணப்படுகின்றது. ஓதிய வேத நால்வர் என நம்மவர்
திரித்து எழுதிக்காட்டியுள்ளார். இவ்வாறு திருத்தி எழுதியது
இவரது தமிழ் நான்மறை செய்த நால்வர் என்பதை இவ்வாக்
கியத்தாற் ருபிக்கவோயாதோ அறியக்கூடாததாக விருக்கின்
றது. ஆதியிற் குறுக்கைவீரட்டனுர் பாதங்களில் பிரமன் அருச்
சித்தாரென முதலடியின் பொருளாகின்றது மேற் காட்டிய
தேவாரத்திற் காணப்படும் ‘அடியிணைக்கீழ்’ என்னும்
பகுதியை நம்மவர் காட்டியிருக்கவில்லை. இத்திருப்பாடல்
காணப்படும், தேவாரப்பதிகத்திலுள்ள, க0 செய்யுட்களில்
ஒவ்வொன்றும், ஒவ்வொரு காலத்தில், ஒவ்வொருவர், சிவ
பிரானைப்பூசித்துப் பேறுபெற்ற சரித்திரங்களையே கூறுவதை
யும் காண்க. வேதத்தை அருளிய நாவையுடையவர் குறுக்கை

பிரமனும்
வீரட்டனார் என்றும் ~~மற்றைத்தேவரும்~~ அவ்வேதத்தை உணருமாறு அவர் உணர்ந்தார் என்றும் இரண்டாம் அடியின் பொருளாகும். குறுக்கை என்னும் தலம் பிரமனாலும் மற்றைத் தேவராலும் பூசிக்கப்பட்டதலம்.

"ஆத்தமாமயனுமாலுமன்றி மற்றொழிந்த தேவர் சோ
"த்தமெம் பெருமானென்று தொழுது தோத்திரங்கள் சொல்
"லத் தீர்த்தமாமட்டமிமுன் சீருடையேழு நாளுங் கூத்தாய்
"விதிபோந்தார் குறுக்கை வீரட்டனாரே." என அப்பமூர்த்திகளருளிய மற்றொரு பதிகப் பாசுரத்தாலுமறியலாம். நம்மவர் இவ்வாறே பெருமக்கள் வாக்கை அலட்சியஞ்செய்து தமது கொள்கைக்கு இணக்கமாகத் திருத்திக்கொள்வது அவருக்கு வழக்கமாயிருக்கிறதென்பதை இதுகாறும் மேலே அங்கங்கே எடுத்துக்காட்டிய வற்றால், தமிழ்ச் சைவ மக்கள் பலரும் அறிந்து கொள்ளலாம். ஆதலால் இவர் முடிபுரைக்குப் பிரமாணமேயில்லையென்பதே தெளிவு; நிற்க.

ருரு. பின்னும் நம்மவர் எழுதுவதாவது:—

"சரித்திர ஆராய்ச்சியால் விளங்கும் உண்மையைக்
"கருதின் இப்போதுள்ள வடமொழி வேதங்களுள் பழமை
"யான இருக்கு வேத மந்திரப்பாடல்கள் அவை யென்பதும்,
"ஆரியர் பஞ்சாப் தேசத்தில் சிந்து நதிக்கரையில் வாழ்ந்த
"போது அக்நி முதலிய பல தெய்வங்களை உபாசிப்போரால்
"அவை பாடப்பெற்றன வென்பதும், அக்காலத்தே அவர்
"கள் வடகிழக்கு இந்தியாவிலுள்ள ஜனங்களோடு சண்டை
"செய்தார்களென்பதும், அவர்களை வென்றும் அவர்களோடு
"கலந்தும் கங்கை நதிதீரம் வரை பரவியபோது வடமொழி
"வேதங்கள் மூன்றாயினவென்பதும், தந்திர நெறியினரோடு
"பழகியபின் வேத வியாசர் காலத்திலே வேதங்கள் நான்காயின
"வென்பதும், அங்ஙனம் ஆயகாலத்தே தந்திரப்பகுதி பலவும்
"வேதத்திற் கலந்தன வென்பதும் அறிகின்றோம். வியாசர்
"காலத்திற்குப் பின்னே சிவாகமத்தின் உண்மை உணர்ந்த
"பெரியோர்கள் வேதத்தின் முடிந்த பொருள் சைவமென்று
"கோடற்குரிய வழி வகுத்தனர். அக்காலந் தொடங்கிச்
"சைவர்கள் யாவரும் வேதத்தின் பொருளும் ஆகமத்தின்
"பொருளும் முடிவில் ஒன்றேயென்ற கொள்கையைக் கடைப்
"பிடிப்பாராயினர். சமயாசாரியர்கள் தோன்றிய காலத்தே
"இக்கொள்கை நிலைபெற்றுப் பிராமணருட்பலரும் சிவபெரு
"மானையே கடவுளென்றுகொண்டு தமது வேதத்தின் உயர்ந்த
"கருத்தும் அஃதே யென்ற கொள்கை யுடையவராய்த்
"தாம் செய்யும் அங்கி (அக்நி) வழிபாடு சிவ வழிபாடே

" யென்று கருதினமையால் ஸ்ரீமத் ஞானசம்பந்த மூர்த்தியும்
" ஸ்ரீமத் அப்ப மூர்த்தியும் பிறரும் வடமொழி வேதப்பொருள்
" சைவமென்பதைத் தழுவி உரைப்பாராயினர். அங்ஙனங்
" கொள்ளாதாரை நோக்கி "எரிபெருக்குவரவ்வெரியீசன,
" துருவருக்கமாவ துணர்கிலார்" "இருக்கு நான்மறை யீச
" னையே தொழுங்கருத்தினை நினையார் கன்மனவரே" என்றும்
" அருளிச்செய்தமை காண்க.

"ஓமத்துளங்கி" என்னுந் திருமந்திரச் செய்யுளைப்
" பின்னர் எழுதி "என்ற திருமந்திரமுங் காண்க" எனவு
மெழுதிப் பின்னும்,

" இதனால் தெரிவது யாதெனின் வடமொழி வேதத்
" துட் போந்த சைவப் பகுதியையே சமயாசாரியர் உண்மை
" யென்று போதித்தார் என்பதே. அங்கி வழிபாடுஞ் சைவ
" வழிபாடாயிற்று. இங்ஙனமே வடமொழி இருக்கு வேதத்
" துட் போந்த சில பகுதிகளுக்கு ஆசிரியர் மெய்கண்டார்
" சைவப்பொருள் கொண்டனர். பிறவு மன்ன" என்று நீண்ட
தோர் பகுதி யெழுதியிருக்கின்றார். இதை, முறையே ஆராய்
வாம். 'சரித்திர ஆராய்ச்சியால் விளங்கும் உண்மையைக் கரு
தின் என, முதலிற் பீடிகை இவர் கட்டிக்கொண்டிருப்பதை
நோக்குமிடத்துச் சரித்திர ஆராய்ச்சியான் விளங்குவது
மட்டுமே உண்மை மற்றையவெல்லாம் பொய்ம்மை யென்பது
இவரது சித்தாந்தமென்பது நன்கு புலப்படுகின்றது. சரித்திர
ஆராய்ச்சி வகையால் நமது சமயக்கொள்கையை அளந்து
காணுதலால் உண்மை வெளிப்படாதென்பதை முன்னரே
௮௧-௯௰ பக்கம் வரை, விரித்துக்காட்டி யெழுதியுள்ளோம். உல
கமே சிருட்டிக்கப்பட்டு ஆறாயிரம் வருடங்கள்தான் ஆயிற்று
என்னுங் கொள்கையுடைய மேல் நாட்டாரது தோற்றம் அபி
விருத்தி, சமய வளர்ச்சி முதலிய கூறுவதற்கு அவர்கள் அநு
சரித்துவருவது சரித்திர ஆராய்ச்சியென்பது. அவர்களது
தோற்றம், அபிவிருத்தி, சமயவளர்ச்சி ஆகியவெல்லா விஷயங்
களையும் ஆறாயிரம் ஆண்டுக்குட்படுத்தியே கூறுவர். அவர்கள்
கொள்கைதான் உண்மையென்று கொண்டு, நமது நாட்டு மனி
தர்களின் தோற்றம், அபிவிருத்தி, சமயப்பகுதி எல்லாம் அந்த
ஆறாயிரம் வருடத்துக்கு உட்படுத்தியே கூறவேண்டுமென்பது
அவர்கள் நோக்கம். ஆங்கிலக்கல்வி கற்ற நம்மவர்களுள் சில
ரும் அக்கொள்கையைக் கைப்பிடித்தார்கள். நமது சமயா
சாரியர்கள் செய்த அற்புதங்களைச், சம்பந்தப்பெருமான்
மூவாண்டில்உலகன்னையாரின் திருமுலைப்பாலூட்டப்பட்டதை,
அந்நிமிடமே சகல வேத சிவாகமங்களை ஓதாதுணர்ந்ததை,

அந்நிமிடமே வேதாகமப் பொருளடங்கிய தேவாரம் அருளியிருப்பதை, கற்றூணைற் பிணிக்கப்பட்டுக் கடல் நடுவுள் தள்ளப்பட்ட அப்பமூர்த்திகள் அக்கல்லையே தெப்பமாகக்கொண்டு கடற்கரை சேர்ந்ததை, வெள்ளை யானையினை ஆரோகணித்து ஆகாயமார்க்கமாய்த் திருக்கயிலை சேர்ந்த சுந்தரமூர்த்திகளது சரிதத்தை, மெய்கண்டதேவர் மூவாண்டில் பரஞ்சோதியாரால் உபதேசிக்கப்பட்டுப் பின்னர் பொல்லாப் பிள்ளையாரால் அநுக்கிரகிக்கப்பட்டு வடமொழிச் சிவஞானபோதத்தைத் தமிழால் மொழிபெயர்த்தாரென்னும் சரித்திரத்தை, உமாபதிசிவம் ஓர் பஞ்சமனுக்குத் தீட்சையினால் அவனது தேகம் தகிக்கப்பட, அவனுக்கு முத்திகொடுத்தாரெனும் சரித்திரத்தை, சரித்திர ஆராய்ச்சியார் நம்புவாரா? ஒரு மனுவின் காலம் ௪௮,௨0,000 மனு வருடங்கொண்டதென்றும், இப்போது, நிகழ்வது ஏழாம் மனுவின் காலமென்றும் ஐந்தாம் மனுவின் காலத்தில் தில்லைவாழந்தணர்கள் எனப்படுவோர் அந்தர்வேதி யென்னும் நாட்டினின்றும் சிதம்பரத் தலத்துக்கு இரண்யவருமனென்னும் அரையனால் அழைத்துவரப்பட்டு வந்தவர்கள் என்னும் சரித்திரத்தைச் சரித்திர ஆராய்ச்சியார் நம்புவாரா? தேவார திருவாசகங்களிற் பன்முறை ஓதப்படும் அமுதங் கடைந்தது முதலிய புராணச் சரித்திரங்களை ஒப்புவாரா? நம் நண்பரே புராணம், கற்பபேதம், ஆதிய ஒப்புக்கொள்ளத்தக்கதில்லை என வெழுதியிருக்கின்றார். வடமொழிச் சிவஞானபோதம் மெய்கண்டாருக்கு நல்கப்பட்டதெனக் கூறப்படும் நமது பண்டைய சித்தாந்தத்தை நம் நண்பரே மறுக்கின்றார். வடமொழி பாஷ்யம் தென்மொழி பாஷ்யம் செய்த சிவாக்கிரயோகிகள், சிவஞான முனிவர், இவர்களைவிடத் தங்களுக்கு மேலான அறிவு விளங்குவதாகச் சரித்திர ஆராய்ச்சியார் காட்டுகின்றார்கள்.

ஆங்கிலமுந் தமிழுங் கற்ற சரித்திர ஆராய்ச்சியார்களுள் ஒரு சிவ மதத்தினர் அப்பமூர்த்திகள் சரித்திரத்தைப் பெரிய புராணம் பாடியோர் சரியா யெழுதவில்லையென வெழுதி அம்மூர்த்திகள் 'கூற்றாயினவாறு' என்னுந் தேவாரப் பதிகத்தை முதல் முதல் அருளியதாகச் சொல்லியிருப்பது, அம்மூர்த்திகளைக்கடலிற் கல்லோடு பிணித்துத் தள்ளியதாகக் கூறப்படுவது ஆதிய, அவர்கள் பாடிய தேவாரப்பாக்களுக்கு ஒத்திருக்கவில்லை யென்று எழுதிப் பெரிய புராணத்திற் கூறப்படுஞ் சரித்திரத்துக்கு நேர்விரோதமான ஓர் விநோதக் கதை யொன்றெழுதினார். மற்றோர் பெரியோர் திருவிளை யாடற் புராணத்திற் காணப்படும் வன்னியுமிலிங்கமு மழைத்த சரித்திரம் பரஞ்சோதியாரே கட்டிவிட்ட தென்றெழுதினார். மற்றொருவர்,

பாண்டியனது ஓர் அரச குமாரத்தியை அர்ச்சுநன் விவாகஞ் செய்தான், அக்கதையைத்தான், மீனாட்சி தேவியார்திக்கு விஜயம் செய்தாரென்றும் கைலைக்கிறைவை மணம் புரிந்தாரென்றும் வழங்கப்படுகிறதென்று கூசாமல் எழுதியிருப்பதுமன்றி அர்ச்சுநன் பஞ்சபாண்டவர்களில் ஒருவனானதால் பாண்டிய வம்ச அரையர்களுக்குப் பஞ்சவன் எனும் பேரெய்தியதாகவுமெழுதினார். சரித்திர ஆராய்ச்சியிற் பெரியோராகிய, மற்றொருவர் மாணிக்கவாசகர் பிரமசாரியானதால் அவரை மாணியெனக் கூப்பிட்டு வந்தார்களாம். அதனாற் பிற்காலத்தார் அவருக்கு மாணிக்கவாசக ரெனப் பெயர் கொடுத்தனரென்றும், நரி பரியாக்கினது பரி நரியானது இச்சரித்திரம் கட்டுக்கதைகளென்றும், மாணிக்கவாசகர் அரேபியாதேசமிருந்தும் குதிரைகளைத் தருவித்தாரென்றுமெழுதினார். இவர்களெல்லாரும் நம் நாட்டவர்களே. நஞ் சமயக்கொள்கை பூண்டவர்களின் சந்ததியாரே.

இஃதிவ்வாறிருக்கப் பேர்போன ஆங்கில சரித்திர ஆசிரியரான ஜே. எ. பிரௌட் அவர்கள், சமய சரித்திரங்களை மற்ற ஜீவிய சரித்திரங்களின் உண்மைகளை அளந்தறிவதுபோல், அறியக்கூடாதென்றும், சமய சரித்திரங்களில் என்றுமழியாத உண்மைகள் புலப்படுமேல் அவைகளே போதுமென்றுங் கூறியிருப்பதாக ஆங்கிலமுந் தமிழும் நன்கு கற்ற ஓர் பெரியோர் எழுதியிருக்கின்றார்.

இவ்வாறு, சரித்திர ஆராய்ச்சியார்களது சித்தாந்தங்களை முற்றிலு மெழுதுவதானால் காலம் போதாது. ஆனால், நந்தமிழ் நாட்டுள் உத்தம சைவ வேளாள குலத்துதித்தவர் யாரும், நம் நண்பர்போலச் சரித்திர ஆராய்ச்சியைக்கொண்டு நமது சமய நுட்பங்களை ஆராய்ந்தவர் ஒருவரையுங் காணேம். நமது சமயமோ; மறையினால், அயனால், மாலால், மனத்தினால், வாக்கால், அளவைகளால் அறியப்படாதது. அதை நமது சிற்றறிவைக்கொண்டு ஆராயப்புகுந்தால் விபரீதப் பொருள் தான் பயக்கும். நம்மவர் மேலே எழுதியிருக்கும் வாசகங்களால் வேதங்கள், ஆதியில் உண்டாயபோது அவைகளில் சைவ சம்பந்தமே இல்லாதிருந்து பிற்காலத்தில் கலந்ததுபோலும் என விளக்கமாகிறது. இவ்வாறு சொல்பவர்களுக்குச் சமாதானங்கூறமுடியாது. அவ்வாறு சொல்வதற்கு ஒரு பண்டைய நூலின் பிரமாணங் காட்டவேண்டும். அவ்வாறு காட்டமுடியாதவராகித் தங்கள் சொற்களையே பிரமாணமாகக் காட்டுவார்.—வேதங்களிலாவது மற்ற எந்நூல்களிலாவது. ஆரியர் பாரசீக நாட்டினின்றும் பஞ்சாப் என்னும் நம் தேயத்

துக்கு வந்தவர்களெனக் கூறப்பட்டிருக்கின்றதா? பாரசீக நாட்டின் ஆதிக்குடிகளாக ஆரியரிருந்தால், அந்நாட்டிலிருக்கும் போதே ஏன் வேதங்களை இவர்கள் செய்யவில்லை. வேதவியா சருக்கு முன் எத்தனையோ தலைமுறைகளுக்கு முந்தி வசிஷ்டர் இருந்தாரே. அக்காலம் வேதங்கள் இல்லையோ? இராமர் காலத்தில் இராவணன் சாமவேதம் ஓதினனென்று சொல்லப் படுகின்றதே. ருக்குவேதத்தின் சில பாகங்களை மேலே காட்டி அவைகளெல்லாம் சிவபிரானையே குறிக்கின்றன வென்பதை மேலே காட்டினோம். சிவதருமோத்தரம் என்னும் உபாகமத் தாலும ஆரியர் நம் நாட்டில் என்றுமுள்ளவரென்பதை விளக் கினோம்.

தொல்காப்பியத்தினுள், அந்தணர் வேதமும் ஆரிய பாடையின் விஷயமு மெடுத்துக் கூறப்பட்டிருக்கின்றன. தொல்காப்பியப்பாயிரத்துள், காணப்படும் நான்மறை யென் பது வியாசர் காலத்திற்கு முந்தியேயிருந்த நான்மறைகள் என ஆசிரியர் நச்சினார்கினியர் கூறினர். கந்த புராணமும் பண் டைய நான்மறைகள் சிதறுண்டு விரிவாய்க் கிடந்ததையே, வியாசர் சிவாக்ஞைப்படிச் சுருக்கித் திரட்டி நான்மறைகளாகச் செய்தனர் என்று கூறும்—சரித்திர ஆராய்ச்சியார், ஆரியர் நம் தேயத்துக்கு வந்து ௫,௫00 ஆண்டுகள் ஆயினவென்பர். வேதங்களும் அதற்குப் பின்னுலுண்டாயினவென்பர். தொல் காப்பியமுண்டாய்க் குறைந்தபட்சம் ஏழாயிரமாண்டுகளாயின. அதில் ஆரியவேதங்களின் ச்சந்தஸ்கள் ஆதிய கூறப்பட்டு அந் தணர் ஆதிய நான்கு வருணத்தவர் விஷயமுங் கூறப்பட்டுள் ளன. நான்மறையோகியர் ஒருவர் (திருமூலர்) திருக்கைலையி னின்றும் அகத்தியரிடங்கொண்ட நட்பினுல் அவரைப்பார்க்கத் தென்னாட்டுக்கு எழுந்தருளியதாகப் பெரிய புராணங் கூறும். அகஸ்தியர் காலமோ முதற்சங்க காலத்திற்கு முன்னர். அக் காலங் குறைந்தது இன்றைக்குப் பத்தாயிரம் ஆண்டுகட்கு முன் னர், அத் திருமூல தேவர் இயற்றிய திருமந்திர மென்னும் நூலில். வேதச் சிறப்பும், ஆகமச் சிறப்புமு, அவ்வேதாகமங் களின் பெயர்களுடன் கூறபபட்டிருக்கின்றன. ஆரிய வெழுத் துக்கள் ஐம்பத்தொன்று என்றும் வேதாகமங்கள் அவ்வெழுத் துக்களாலாயவையென்றும் கூறப்பட்டிருக்கின்றன. இவைக ளின் விரிவை ௬௦௫-ம் பக்கத்தில் காட்டியிருக்கின்றோம். ஆரியர் பிற நாட்டினின்றும் நம் நாட்டிற் குடியேறினவர் என்னுங் கொள்கையைச் சுவாமி விவேகாநந்தரும் மற்றுமோர் ஆராச்சி வல்லுனரும் மறுத்து எழுதியிருப்பதை இவ்வாராய்ச்சியின் ௬௦, ௬௧-வது பக்கங்களிற் காட்டியிருக்கின்றோம்.

ஆதலால், சரித்திர ஆராய்ச்சிப்படி விளங்கும் உண்மையெனக் கூறிக்கொண்டு அதனடியில் எழுதியிருக்கும் நம் நண்பர் உரை, அவர் ஒருவரால் கட்டப்பட்டதேயொழிய நமது பண்டை நூல்களால் ஆதரிக்கப்படாததென்றோம்.

வேதங்கள் ஒன்றின் பின் ஒன்றாக உற்பத்தியானதென்பதும் பிற்காலத்தில் தந்திரப்பகுதி அவைகளிற் கலந்ததென்பதும் சரித்திர ஆராய்ச்சி முறைப்படி உண்மையெனவெழுதி "சமயாசாரியர்கள் தோன்றியகாலத்தே இக்கொள்கை நிலை "பெற்றும் பிராமணருட் பலரும் சிவபெருமானையே கடவு "ளெனக்கொண்டு தமது வேதத்தின் உயர்ந்த கருத்தும் "அஃதே யென்ற கொள்கையுடைத்தோராய்த் தாம் செய்யும் "அங்கி (அக்நி) வழிபாடு சிவ வழிபாடே யென்று கருதின "மையால் ஸ்ரீமத் ஞானசம்பந்த மூர்த்தியும், ஸ்ரீமத் அப்ப "மூர்த்தியும் பிறரும் வடமொழி வேதப்பொருள் சைவமென் "பதைத்தழுவி உரைப்பாராயினர். அங்ஙனங்கொள்ளாதாரை "நோக்கி "எரிபெருக்குவ ரவ்வெரி யீசன துருவருக்கமாவ "துணர்கிலர்." "இருக்கு நான்மறை யீசனையே தொழுங் கருத் "தினை நினையார் கன்மனவரே" என்று அருளிச்செய்தமை "காண்க" எனவெழுதியிருக்கின்றார். (மேலே இக்கொள்கை என்றது வியாசர் காலத்தே தந்திரப்பகுதி வேதங்களிற் கலந்ததென நம்மவர் கூறுங்கூற்றைச் சுட்டுகின்றது) தந்திரப்பகுதி வேதத்திற் பிற்காலத்திற் கலந்ததென்பதற்கு நண்பர் உரையைத்தவிர வேறு நூற்பிரமாணமொன்றுமில்லை. தொல்காப்பியர், அகத்தியர் காலத்தவரான திருமூலர், ஆதியான பண்டையோர் அவர்களியற்றிய நூல்களில் வேதத்தைப் பற்றித் தெளிவாய் எழுதியிருக்கின்றார்கள். நஞ்சமயாசாரியர் காலத்தே பல பிராமணர்கள் கொண்ட வேதக்கொள்கை, அவர்கள் செய்த அங்கிவழிபாடு, இவைகள் சிவவழிபாடு என்று, அவர்கள் கருதியிருந்ததனால் அக்கருத்தை யுணர்ந்து நஞ்சைவ சமயாசாரியர்களும் அக்கொள்கையை யநுசரித்து மேற்காட்டிய தேவாரப் பாக்கள் அருளினார்களென்பது நண்பர் கொள்கைபோலும். பிராமணர்கள் அவ்வாறான கொள்கையராய் அக்காலமிருந்திராவிட்டால் இச்செய்யுட்களைச் சமயாசாரியர்கள் அருளிச்செய்திரார் என்பதும் இதனால் போதரும். அன்றியும் பிராமணர்கள் அங்ஙனங் கொளளாவிட்டால் "அவ்வெரி" ஈசனதுருவருக்கமாகாமல் ஈசனுக்குரிய அட்டமூர்த்தம் சப்தமூர்த்தமாகியும் குறைவுறுமென்று எள்ளலாய் முடியும். ஆரியம்வேத முண்டாயபோது அதில் சைவப் பகுதிகளில்லாதிருந்தன, வென்பதை நம் நண்பர் இக்காலங்கண்

டறிந்தபடி அக்காலம் சமயாசாரியர்கள் அறிந்திலர் என்பதும் சமயாசாரியர்கட்கு அங்கிவழிபாடு உண்மையில் உடன்பா டன்றென்பதுவும் போதரும்.

"பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங்
காலனை யன்றே விகராக்கொண்ட—பாலன்
மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங்
கரணம் போலல்லாமை காண்"

"துரியங்கடந்த சுடர்த் தோகையுட னென்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான்—றுரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித்தான் செய்யுந் தன்மைகளு
மாக்கியிடு மன்பர்க்கவன்" [திருக்களிற்றுப்படியார்]

என்றபடி சமயாசாரியர்கள் பசுகரணம் நீங்கிப் பதிகரண முடையோரென்றும் பஞ்சகிர்த்தியங்கள் செய்யும் ஆற்றலுடை யோரென்றும் பெருமக்கள் கூறியிருக்கும் அருண்மொழிக ளெல்லாம் இவர்க்குமருண் மொழிகளாயிற்றே. அந்தோ பாவம்!! பாவம்!! சிவசிவ!! சிவசிவ!! திருஞானசம்பந்தப் பெருமானே தமது திருவாக்குகளில் தம்மைக்கூறியிருப்ப தாவது. "எமதுரை தமதுரையாக"—"வாய்மையினுைமரு கேள்வி ஞானசம்பந்தன்"—"பதியான ஞான முனிவன்" "சுற்றுமுற்றுமாயினுன்". என்பவைகளும் நம்பியாண்டார் நம்பிகள் சம்பந்தரைக்குறித்துக் கூறியிருப்பவைகளான "ஆன சிர்த்தத்துவனை நித்தனைச்சைவத்தவரரசை"-"மானமறையவற் றின் வான்பொருளை" என்பவைகளும் சம்பந்தப்பெருமான் ஏழாமாண்டில் உபநயனச்சடங்கு கொண்டருளிய காலத்தே பிராமணர்கள் அதிசயிக்குமாறு சடை, பதம், கிரமம் பொருந்த எண்ணிறந்த வேதங்களையும் அவற்றின் பொருளையும் அருளி னுரென்று சேக்கிழார் கூறியருளியதும் பொய்வார்த்தைகளாம். சேக்கிழார் வார்த்தை பொய்யாகுமேல், "உலகெலாம்" என நடேசப்பெருமான் முதலெடுத்துக் கொடுத்ததாகக்கூறும் மொழியும் பொய்யாய் முடியுமே. இக்காலத்திய கல்வியாளர் களிற் சிலர், "பாடங்கொள்பனுவற்றிறங் கற்றுப்போய், நாடங் குள்ளன தட்டிய நாணிலீர்" என்னும் அப்பமூர்த்திகள் திரு வாக்குக்கு இலக்கியமாய், வயிறுவளர்க்கவேண்டி நடுவுநிலைமை யினில்லாது அவைக்களத்துள்ளோர் நோக்கம் போல் சொற் பொழிவு செய்தல்போல நம்பெருமக்களும் உலகினர் கருத் துக்குத்தக்கவாறு பாடினுர்களேயொழிய உண்மையைக்காட்டி உபகரித்திலர் என்பது பெறப்படுமே!!! இக்காரணங்களால் நம்மவர் கொள்கை பூஷிக்கப்படுவதன்றென்பது ஒருதலை. அங்கிவழிபாடு சிவாகமங்களுட் கூறப்பட்டு சிவாலயங்களுள் அவ்வழிபாட்டுக்கென்றே யாகசாலை மண்டபம் எனத் தனி

யாகச் சிற்ப சாஸ்திர முறைப்படி ஆலயம் கட்டப்படும்போதே சமைக்கப்பட்டு நித்திய நைமித்தியங்களிலும் உற்சவாதிகளிலும் பிரதிஷ்டை கும்பாபிஷேக காலங்களிலும் பலவித குண்ட மண்டலங்களோடு நிகழ்ச்சிபெற்று வந்துகொண்டேயிருக்கின்றது. சைவர்கள் எனப்படும் வேளாளர்களும் சிவபூஜா காலங்களிலும் மற்றைய சுபா சுப காலங்களிலும், அங்கிவழிபாடு தொன்றுதொட்டே பாரம்பரியமாய் கைக்கொண்டு வருகிறார்கள். வடமொழிச் சிவாகமப்படி தமிழில் ஏற்பட்ட சிவபூஜா பத் ததிநூல்களிலும் அங்கிவழிபாடு இன்றியமையாத தொன்றெனக் கூறப்பட்டுமிருக்கின்றது. "வடமொழி இருக்கு "வேதத்துட்போந்த சில பகுதிகட்கு மெய்கண்டார் சைவப் "பொருள் கொண்டனர்" எனவும் நம்மவர் எழுதியிருக்கின்றார். மெய்கண்டார், வேதத்துள் சைவப் பகுதி யிருந்தமையினால் வேதத்திற்குப் பிற்காலம் தாமருளிய தமிழ்ச் சைவ நூலில் அவ்வேதப் பகுதியை ஒரு பிரமாணமாகக் காட்டினாரேயல்லாது பிறிதொன்றுமல்ல. 'இக்கிரமத்தென்னுமிருக்கு' என்னும், மெய்கண்டாரது திருவாக்கின் பொருளுட்பமறிந்தவர்கள் இதன் உண்மையறிவார்கள். "தேவர் குறளுந் திருநான்மறைமுடியும்" என்ற செய்யுளில் நான்கு வேதங்களும், தேவார திருவாசகங்கள், பிரமசூத்திரம், திருமந்திரம் ஆகிய நூல்களும் ஓரே வாச்சியப் பொருளைக் கொண்டதெனச் சரஸ்வதியின் அவதாரமாகிய ஒளவைப் பிராட்டியாரும் அருளிச் செய்திருப்பதாலும், நான்கு வேதங்களும் தேவாரமாதிய தமிழ்நூல்களும் ஓரே பொருளைக் குறித்தனவென்பதையு மறியலாம். சமயாசாரியர்களும், சந்தான குரவர்களும் வேதத்தில் சைவ மார்க்கமிருக்கின்றதென அவர்கள் கண்டு போதித்த மார்க்கத்தைக் கைவிடாது அவ்வழி யொழுகுவதுதான் அவர்கள் சந்தான பரம்பரையிற் றோன்றிய மாணாக்கர்கட்கு அழகு. ஆசாரியர் காட்டிய வழி நடவாதவர் ஆசாரியர் அநுக்கிரகத்தைப் பெறுவரோ? யாது பிரயோஜனங் கருதி நஞ் சமயாசாரியர் கொள்கைக்கு முரணாக இவர் எழுதுவரோ அறியக்கூடவில்லை. ஆராய்ச்சியினும் கல்வித்திறமையினும் அநுபவத்தினும் மிக்குயர்ந்த சுவாமி வேதாசல மென்பார், நவீனக் கொள்கை பெரிது முடையராயிருந்தும், அவரெழுதிய "தமிழ் நான்மறையின் தெய்வீக உண்மை" யென்ற மேலுரையில், தமிழ் நான்மறை யென்பது தேவார திருவாசகமென்றும், அவற்றிற்கும் வடமொழி நான்மறைக்கு முள்ள பேதம், இருபாஷைகளும் தங்கண் உள்ள சாத்திர உண்மைப் பொருளை அறிவுறுத்துச் சிவானந்தப் பேற்றை யெய்துவிக்குஞ் சிறப்புடையனவாயினும் முன்னையது திராட்சபாக அமைதியும்

பின்னையது நாரிகேளபாக அமைதியும் பெற்றுப் பிரகாசிக்கின்றனவெனப் பொருள் கொண்டு எழுதியிருக்கின்றார். நம்மவரைப்போலத் தேவார திருவாசகத்தை யொழித்துத் தமிழ் நான்மறை வேறு இருந்து கடல்கோளில் அழிந்துபோனதாக அவர் கூற முன்வந்திலர்.

ருசு. நிற்க, இனி நம்மவர் திருவிளையாடற் புராணத்தினுள்ள வேதத்திற்குப் பொரு ளருளிச்செய்த படலத்திற் கூறும் சரித்திரத்தை விளக்கப் புகுந்தார். அவர் எழுதுவதாவது. "வேதத்திற்குப் பொருளருளிச்செய்த படலத்தில் காசியி "லிருந்த முனிவர்கள் திருவாலவாய் வந்து தென்முகக் கடவு "ளிடம் வேதப் பொருள் கேட்டனர் என்று சொல்லப்பட் "டிருக்கின்றது. வடமொழியிலுள்ள வேதத்தையே அங்குப் "புராண ஆசிரியர் குறித்திருக்கின்றார். வேதம் வடமொழி "யிலே யிருப்பவும், அதற்குப் பொருள் தென்றமிழ் "நாட்டிலே வந்து கடவுளிடத்துக் கேட்டனர் என்று சொல்லு "தல் பொருத்தமில்லாததாகவே தோன்றுகின்றது. அக்கதை "யின் கருத்தை யாதென வூகிக்குமிடத்து வடமொழி வேதத் "திற் கூறிய சமயம் வேறாகவும் அவற்றிற்குப் புறமாய்க் கூற "வரும் சைவக் கொள்கைகள் மிகச் சிறந்தனவாகவும் "கண்டோருட் சில ஆரியர் தமது வேதத்தையும் கடவுள் "வாக்கென்ற கொள்கை யுடையராதலின் வேதத்தை விடு "வதோ சைவத்தைப் பற்றுவதோ என்ற ஐயமுடையவர் "களாய்த் தென்னாட்டிலே சென்று சிவோபாசனை செய்யில் "கடவுள் அதனை விளக்குவாரென்று கேள்விப்பட்டுத் திரு "வாலவாய்க்கு வந்து கடவுள் அருளால் உண்மை தெரிந்தனர் "என்பதே கொள்ளற்பாலது. அஃதன்றெனின் அக்கதை "யைப் பொய்யென்று கொள்ளவேண்டும்" என்று எழுதி முடித்தார்.

இப்பகுதிதான், நம்மவரெழுதியது மிவ்வாராய்ச்சிக்குரியதுமான திருநான்மறை விளக்க முடிபுக்குச் சற்று முந்திய பகுதி. வேதப்பொருள் கேட்கவந்த முனிவர் காசியினின்றும் வந்ததாகத் திருவிளையாடற் புராணத்தில் கூறுவதாக இவர் சொல்வது பொய். தென்னாட்டிலே சிவோபாசனை செய்யில் கடவுள் அதனை விளக்குவாரென்று கேள்விப்பட்டு திருவால வாய்க்கு வந்தாரென இவர் எழுதியிருக்கின்றாரே. வடநாட்டிலே யிருந்து சிவோபாசனை செய்யில் கடவுள் அதை விளக்கமாட்டாரா? தென்னாட்டுக் கடவுள் வேறு வடநாட்டுக் கடவுள் வேறா? அகத்திய மாமுனிவருக்குக் குமரவேள் காசியின் சிறப்பை "இலகுசுடர் விச்சுவநாதற் கிணையாங்

கடவுளிலிங்கமு நீர், சுலவு மணிகர் ணிகைக்கிணை யாந்துகடீர் தெய்வத் தீர்த்தமும்வான், கலவமஞ்ஞை நடம்பயிலுங் காசிக் கிணையா நன்னகரு, முலகமொரு மூன்றினுமில்லை யீதுண்மை யுண்மை யுண்மையால்" என்று முக்காலும் கூறினர். இவ் வரிய பெரிய சிறப்புவாய்ந்த அக்காசிப் பதியினுறைவோர் அதனைவிட்டுப் பன்னூறுகாத தூரமுள்ள மதுரைக்கு ஏன் வரவேண்டும். வேதம் வடமொழியிலிருப்பவும் அதற்குப் பொருள் தென்றமிழ் நாட்டிலே வந்து கடவுளிடத்துக் கேட்டனர் என்று சொல்வது பொருத்தமில்லாததாகவே தோன்றுகிறது எனவெழுதினரே? இவருக்குப் பொருத்த மில்லாததாகத் தோன்றுதற்குள்ள நியாயம் இன்னதென வெழுதினரில்லை. இவருக்குத் தோன்றுவது சித்தாந்தமோ? வடமொழி தென்னாட்டிலில்லையென்பது இவர் கருத்தோ? அல் லது வடமொழி வேதப்பொருள் வடநாட்டுக் கடவுளுக்குத் தெரியாதென்பதும், தென்னாட்டுக் கடவுளுக்குத்தான் வேதத் தின் உண்மைப் பொருள் தெரியுமென்பதும் இவர் கருத்தோ? தெரியக்கூடவில்லை. தமிழ்நாடு திருப்பதிவரை அதாவது மது ரைக்கு வடக்கு சுமார் ஐம்பது காதம்வரை பரவியிருக்கவும் அவ்விஸ்தாரமான தமிழ்ப்பூமியில் எண்ணிறந்த சிவாலயங்கள் தொன்று தொட்டு விளங்கவும் அவைகளை எல்லாங்கடந்து மதுரைக்கு அவர்கள் ஏன் வரவேண்டும். நம் நண்பர் சித் தாந்தத்தில், இவ்வகை ஆசங்கைகள் பலவெழுமாதலால், திரு விளையாடற் புராண ஆசிரியர் கூற்றுப்படி மதுரைமாநகரம் விராட்புருடனது சென்னிப்பன்னிருவிரன் மேலுள்ள துவாத சாந்த க்ஷேத்திரமானதால் அம்முனிவர்கள் திருவாலவாய்க்கு வந்தனரென்று கூறுவதே சங்கையற்றதென்பதை யுணரவேண் டும். வடமொழிக்கும் தென்மொழிக்கும் தந்தையாயினோர் சிவபிரானே என்றும், ஆதலால் ஆரியமுஞ் செந்தமிழும் ஒன்றையொன்று விரோதியாமல் நாடெங்கும் பரவி யிருக் கின்றனவென்றும் சிவபிரான் ஒருவரே முழுதற் கடவுளாகி அண்டபிண்டசராசரங்கட்கெல்லாம் இறைவனாய் விளங்குகின் றனரெனவும் வேதசிவாகமங்கள் அவராலே அருளப்பட்ட முத னூல்களெனவும் நமது சைவநூல்கள் கூறுவதை உணர்ந்தோர், நண்பர் கருத்தோடு ஒன்றுபடார். தென்றமிழ்வேதம் வேறு, வடமொழிவேதம் வேறு, தென்திசைக் கடவுள் வேறு வட திசைக் கடவுள் வேறு, என்னும் விசித்திரக்கொள்கை பூண்ட வர்கள் தான் இவ்வாறு சொல்லுவது தகுதி. நிற்க, வட மொழி வேதத்துட் கூறிய சமயம் வேறு என நம்மவர் எழுதி னர். பிரமசூத்திரத்திற்குப் பாஷியம் ஆதியிற் செய்த ஸ்ரீநீல கண்டர் வேதசிவாகமங்கட்குப் பேதங்கண்டிலேம் எனவெழுதி

ஞர். திருமூலதேவரும் இரண்டு அந்தமும் பெரியோர்க்கு அபேதம் என அருளினர். மற்றும் நஞ்சைவ சமயாசாரியர் களும், சந்தானசாரியர்களும் சைவசித்தாந்த அனுபூதிமான் களும் வேதாந்தத்திறம் சைவமென்றும், வேதாந்தத்துச்சியிற் பழுத்தது சைவசித்தாந்தமென்றும், பன்முறை கூவிக்கூவி அறைந்துள்ளார்கள். இவ்வரிய பிரபல பிரமாணங்கட்கெல் லாம், மாறுபட்டு நம் நண்பர் வடமொழி வேதத்துட் கூறிய சமயம் வேறு என்று தங்கோளைநிறுவற் பொருட்டு மாற்சரியத் தினல் கூறினரென்பதை வெள்ளிடைமலைபோலத் தெள்ளிதிற் புலப்படக்காட்டுதும். இவர் வேதத்துட் கூறிய சமயம் வேறு என்றது ஆரியசமயம் ஒன்றைக்கருதியே. வேதத்தில் உலகத்தி லுள்ள பல மதங்களும் தூலசூக்குமமாகக் கூறப்பட்டிருக்கின் றன. இவ்வுண்மை 'வேதமென்னும் பாதவம்வளர்த்தனை பாதவமதனிற்படு பயன்பலவே' எனும் குமரகுருபர சுவாமி கள் திருவாக்காலுணர்க. ஆகமத்தும் அவ்வாறே பல சமயங்கள் கூறப்பட்டுள்ளனவென்பது "வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள், வேறுரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள்" என்னும் சித்தியார் திருவிருத்தத்தால் உணரலாம். ஆனல் வேதத்தின் உண்மையறியாத சில பார்ப்பனர் சிவ பிரானை முழுமுதற் கடவுளாகக் கருதாது பலவகையான ஆபாசங்களை மொழிவர். அது தக்கன் யாகத்துச் சிவபிரானை நிந்தனை செய்ததனல் ததீசி ஆதிய மகா சைவவிருடிகளால் இடப்பட்ட சாபத்தின் பயனென்றுணரவேண்டும். அவ்விஷ யத்தில் யாஞ்செய்யத்தக்க தொன்றுமில்லை

"பேசரியமறைகளெலாம் பராபரனீ யெனவணங்கிப் பெரிதுபோற்று
மீசனையுமன்பரையு நீற்றோடு கண்டி கையினையு மிகழ்ந்துநீவிர்
காசினியின் மறையவரா யெந்நாளும்பிறந்திறந்து கதியுறாது
பாசமதனிடைப்பட்டு மறையுரையா நெறியதனிற் படுதிரென்றான்"

"முறைபடு சுருதியெல்லா மொழியினு மதுவேசார்வா
வுறகிலராகிப் பொல்லா வொழுக்கமே கொண்டுழக்க
ணிறைவனை யிகழ்ந்து முத்தியெய்திடாதுழல முன்னாண்
மறையவர் பெற்றசாப நின்னையு மயக்குறாதோ"

"தாதையாய்த் தம்மைநல்கித்தந் தொழிற் குரியனாகி
யாதியாய்த் தங்கட்கின்றி யமைவுறாச் சிவனைநீங்கி
யேதிலார் பக்கமாகி யில்லொழுக்கிறந்தார் போலும்
வேதியர் முறையேசெய்தாய் வெறுப்ப தெனின்னையானே"

எனும் கந்தபுராணச் செய்யுட்களாலும்

"பலவகைப்பவந்தோ றெய்திடுந்தவத்தோர் படர்ந்தெழுமகத்திருள் [கடிந்தோர்
நலமுறுமியமநியம நற்செய்கைநயந்து ளோருனைப்பெற முயல்வார்

கலியுறுநவை சேருளத்தவர சுரக்கடுமையர்த தீசியாதிகளா
லலமரச் சபிக்கப்பட்டுளோ ரெவ்வாறறிவரோ வையநின் றனையே"

எனும் பிராமண குலோத்தமராகிய அப்பயதீட்சித முனிவர் இயற்றிய சிவ தத்துவ விவேகச் சுலோகத்தின் சிவஞான முனிவரது மொழி பெயர்ப்புச் செய்யுளாலும் அறிந்துகொள்க.

மேற்காட்டிய, ஸ்ரீநீலகண்டர், சித்தாந்த நூலாசிரியோ ராதியோர்கள், கருத்தைத் தழுவியே, சிவஞான போதபாஷ்ய கர்த்தர் பாடியம் கசு-ம் பக்கத்தில் கூறுவதாவது. "இனி வேத "முஞ் சிவாகமு மொன்றேயாயினும் இருபகுதிப்பட்டது. "வேதம் மூன்று வருணத்தாருக்கும் சிவாகமம் நான்கு வருணத் "தாருக்கும் பொதுவாதல் பற்றி யாதலால் சிவாகமங்கள் பிர "மாணம் என்பது தெற்றென உணர்க. இங்ஙனம் சைவாக "மங்களுக்குப் பிராமாணியம் பவுட்கர உரையின் உமாபதி "சிவாசாரியர் காட்டியவாறே காண்க." நீலகண்ட பாடியத்திற் பதியதிகரணத்திற் காட்டுமாறு:-"சிவாகமங்களில் ஒரு சாரன "பரப்பிரமங் கேவலம் நிமித்த காரணம் எனக் கூறும்; அதனை "மறுத்தற்கு எழுந்தது இவ் வதிகரணமென்று உரைப்பாரு "முளர்; அது பொருந்தாது; யாம் வேதத்திற்குஞ் சிவாகமத் "திற்கும் வேற்றுமை கண்டிலம்; சிவனாற் செய்யப்படுதலின் "வேதமுஞ் சிவாகமமெனப்படும்; ஆதலாற் சிவாகமம் மூன்று "வருணத்துக்கே உரித்தாயதும் நான்கு வருணத்துக்கே உரித் "தாயதும் என இருவகைப் படும். அவற்றுள் முன்னையது "வேதம் எனவும் பின்னையது சிவாகமம் எனவும் வழங்கப்பட் "டன; இவ்விரண்டுஞ் செய்த கருத்தன் சிவன் ஒருவனேயாம்; "இவ்வாறு சுருதியினும் புராணங்களினுஞ் சிவாகமங்களினுங் "கூறப்பட்டது; பஞ்சப் பிரமம் பிரணவம் பஞ்சாக்கரம் பிரா "சாத முதலிய மந்திரங்களும், பதி, பசு, பாச முதலிய பொருள் "வழக்கமும், திருநீற்றின் உத்தூளனம் திரிபுண்டரம் உருத்தி "ராக்கம் தரித்தல் சிவலிங்க பூஜை முதலிய தருமங்களும் பிற "வும் வேதஞ் சிவாகமம் இரண்டினும் ஒப்பக் காண்டலான், "அவ்விரண்டும் பிரமாணமே ஆகலானும், கருத்தா ஒருவனே "ஆகலான் அவ்விரண்டிற்கும் பொருள் ஒன்றேயாகலின் அவற் "றுள்ளும் மாறுபாடின்மையானும், இவ்வதிகரணங் கேவலம் "நிமித்த மாத்திரமே இறைவன் எனக் கூறும் இரணிய கருப்ப "நூலாகிய யோக சாத்திரத்தை மறுத்தற்கு எழுந்ததெனவே "யாங் கூறுதும்" என்று இவ்வாறு நீலகண்ட சிவாசாரியாராற் காட்டப்பட்டது."

பின்னும் "புறச்சமயத்தவர்க்கிருளாய்" என்னுஞ் "சிவப்பிரகாசப்பாயிரம், எ-வது செய்யுளிற் காணப்படும்

"வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத்திறன்" என்று "பகுதிக்குச் சிவஞானமுனிவர் கூறும் விருத்தியாவது (பாடி "யம் ௧0௬-ம் பக்கம்) வேதாந்தமுஞ் சித்தாந்தமும் வேறு "என்பாரை மறுத்துப் பல பொருள்படுஞ் சூத்திரத்தை அபி "னம் படாமைத் தெளித்துரைக்கும் பாடியம்போல வேதாந் "தத்தைத் தெளித்துரைப்பதே சைவ சித்தாந்தமென்பார். "மகுடாகமம் முதலியவற்றுள் *ஓதியவாறே "வேதாந்தத் "தெளிவாஞ் சைவ சித்தாந்தத்திறன்", என்றார் என்பது—

மேலே காட்டிய படிக்குள்ள நம் ஆன்றோரது பிரமா ணங்களுக்கும் முரணையது, "வேதத்திற்கூறிய சமயம் வேறு" என நம் நண்பர் அவரது யுக்தி யொன்றுனே எழுதியது எனச் சைவ மக்கள் பல்லோருங் கொள்வார்—இன்னமும் அம்முனி வர்கள் திருவாலவாய்க்கு வந்து கடவுள் அருளால் உண்மை தெரிந்தனர் என்பதே கொள்ளற்பாலது எனவெழுதினரே. கடவுள் அருளை அவர்கள் தென்றமிழ் நாட்டில் எவ்வாறு பெற்றனர் என்பதை நம்மவர் விரித்திலர். இவரது இறந்து போன தமிழ் நான்மறையையாவது அதன் பொருளையாவது அவர்கள் கண்டுபிடித்துக் கடவுள் அருளைப் பெற்றிலர், மற் றெவ்வாறெனில் "§வடகிழலமர்ந்த மறைமுதன்மேதாமனு ¶வெழுத்திருபது மிரண்டுங்—கிடமுறவா பத்தன்றனுற் றெளிந்து" எனக் கடவுள் அருளைப்பெற்றதற்குக் காரணம் அப்புராணத்திற் கூறியுள்ளது. இன்னமும், திருவாலவாய்க்கு வந்து கடவுள் அருளால் உண்மை தெரிந்தனர் என்று நம்மவர் சொன்னரேயொழிய அவ்வுண்மை யின்னதெனக்கூறினரில்லை. அவ்வுண்மை என்னவெனத் திருவிளையாடற் புராணத்தைப் பார்க்குமிடத்துத் தட்சிணுமூர்த்திக் கடவுள் அம்முனிவர் களுக்கு நேரில் பிரசன்னராகி அநுக்கிரகித்ததாவது, "சிவா கம நூலிச்சுரவரனடு முகத்துதித்த" என முதலில் அனுக்கிர கித்தார். சிவபெருமானே வடமொழிச்சிவாகம உற்பத்தி தம் மிடமிருந்து ஆயினவென அருளியிருக்க நம்மவர் ஏன் அதற்கு முரணுகத் தமிழ் உअ-ஆகமங்களிருந்தன போலவும் அவை களின் மொழிபெயர்ப்பு வடமொழி ஆகமம் என்றும் தமிழி லி

---

* வேதமுராமயி தந்தந்திரம் ஸித்தாந்தம் பரமம் சுபம்

§ திருவிளையாடற் புராணம் வேதத்துக்குப் பொருளருளிச் செய்த படலம். ௧௫-வது செய்யுள்.

¶ மேதாமனு என்றது தக்ஷிணாமூர்த்தி பேதங்களுள் ஒன்றாய் விளங் கும் மேதா தக்ஷிணாமூர்த்திக்குரிய இருபத்திரண்டு அக்கரங்களாலாய மூலமந்திரத்தை. இது வடமொழி மந்திர சாஸ்திரங்களிலேயே கூறப்பட் டுளது.

ருந்த ஆகமம் கடற்பெருக்கிற் போயது எனவும் கற்பிக்க ஆரம்

பித்தார். இச்செய்யுளில் வடமொழி ஆகமம் எனக்கூறவில்லை யெனில் தென்மொழி ஆகமமென்றுங் கூறவில்லை. மற்றுவட மொழியென எவ்வாறு பொருள்கொள்வதென்றாலோ, அடுத்த செய்யுட்களில் இருக்கு முதலிய நான்கு வேதங்களும் சிவபிரானால் அருளப்பட்டதெனக் கூறியிருப்பதனாலும், நமது நண்பர் நான்கு மறைகளைத் தமிழ்முனிவர் நால்வர் கூறினாரென்று சொல்வதாலும் அவைகள் வடமொழியே யென்பது திண்ணம். முக்காலமுமுணர்ந்த திருமூலர் ஆதியோர் வேதசிவாகமங்கள் வடமொழியின் எழுத்துக்களால் ஆயவென அருளியிருப்பதானும் அவ்வடமொழி சிவாகமங்களேநந் தமிழ் நாட்டிலும் மற்று எந்நாட்டிலுமுள்ள சிவாலயங்கடோறும் பண்டைக்காலம் முதல் வழங்கப்பட்டு நிலைபெற்றிருக்கின்றமையானும் அருணந்திசிவமும் அவ்வாறே அருளியிருப்பதானும் (காரியமாய் என்னுஞ் சிவஞானசித்தியார் செய்யுளைப்பார்க்க.) இச்செய்யுளில் கூறப்பட்டுள்ள ஆகமம் வடமொழியென்றே கொள்ளவேண்டு மென்பதுறுதி. பின்னர்க் கடவுள் என்ன அநுக்கிரகித்தாரெனில்,

"கீட்டிசை முகத்தொன் றடுத்த நாலைந்திற்கிளைத்ததா லிருக்கது தென்பா
லீட்டியவிரண்டாம் வேதநூறுருவோ டெழுந்ததுகுடதிசை முகத்தி
னீட்டிய சாமமாயிர முகத்தானிமிர்ந்தது வடதிசைமுகத்தி
னொட்டிய வொன்பதுருவொடு கிளைத்துநடந்தது நான்கதாமறையே"

என்றும்

"மறைவழி மதங்கட்கெல்லா மறைபிரமாணம் பின்சென்
றறைதரு மிருதியெல்லா மவைக்கனு குணமாமின்ன
முறையினுன் *மார்த்தமென்று மொழிவதம் மார்த்தஞ்சேர்ந்த
துறைகள் வைதிகமா மேலாச்சொல்வதிச் சுத்தமார்க்கம்" என்றும்

"நிறைபராபரம் விஞ்ஞான நிராமயமென்று நூல்க
ளறைபரம் பிரமமாகு மிதனுருவாகு மேக
மறையிதன் பொருளே யிந்தசசுந்தர வடிவாயிங்கு
னுறைசிவலிங்க மொன்றேயென்பர் நூலுணர்ந்த நல்லோர்"

என்றும்

"கிரியையான் ஞானந்தன்னாற் கிளர்சிவ பத்திபூசை
தரிசனஞ் சைவலிங்க தாபனஞ் செய்தலீசற்
குரிய மெய்யன்பர்பூசை யுருத்திர சின்னந்தாங்க
லரிய தேசிகன்பாற் பத்தியனைத்தையும் தெரியலாகும்" என்றும்

---

* மார்த்தம் என்றது ஸ்மார்த்தம் எனும் வடமொழியின் திரிபு. சாங்கிய முதலியவற்றை நோக்க ஸ்மார்த்தம் மேலென்பது இதன் கருத்து. இம்முனிவர்கள் வேதப்பொருளை விரும்பினமையால் இறைவன் வைதிக மார்க்கத்தை உபதேசித்தார். வைதிக சைவம் வேறு என்பதைக் காட்டுதும். திருவிளையாடலில், சிவாகமநூ லீச்சுரன்னடுமுகத்துதித்த என்று

அருளிச்செய்திருப்பதில், இருக்காதிவேதங்கள் சிவபிரானிடமிருந்தே தோன்றினவென்றும் அதற்கு அநுகுணமாய் ஸ்மிருதி ஆதிய தோன்றின வென்றும், வேதத்திற் கூறுவது ஒரே கடவுளைப்பற்றி யென்றும், அக்கடவுள் சிவபிரானே என்றும், அவரைச் சிவலிங்கத்தினிடமாய்ப் பூசையாதிய செய்தலே கிரியாமார்க்கமென்றும், அதுதான் வைதிக சுத்த ஸ்மார்த்த மார்க்கமென்றும், தமிழ்நாட்டுத் தட்சிணாமூர்த்திக் கடவுளே உபதேசித்ததாகத் தெளியதாய் விளங்குகின்றது. நம்மவரே எடுத்துக்காட்டிய திருவிளையாடற் புராணத்தில் உண்மை இஃதெனக் கடவுளே கூறியிருக்க நம்மவர் § "வட "மொழி இருக்குவேதத்துட் போந்த ஆயிரத்திருபத்தெட்டுச் "சூக்தங்களுள் இருநூற்றின் மேற்பட்டவை இந்திரனைப் "பற்றிக் கூறப்படுவன. அவன்பாற் செய்யப்படும் கொலை, "குடி முதலிய பயிலும் வேள்விகள் பலப்பல இந்திரவணக் "கமே யன்றி எண்ணிறந்த தெய்வங்களின் வழிபாடும் சிறப் "பாகக் கூறப்படுகின்றன.................இன்னும் மணமிலா "இளைஞனும் கைம்பெண்ணுங் கலந்ததின் பயனைக் கருவி "யாகக் கொண்டு செய்யும் பௌண்டீரிகயாக முதலிய மிக "வெறுக்கத்தக்க வேள்விகளும் வேதத்துட் காணப்படுவதாகத் "தெரிகின்றது. இங்ஙனங் கொலை முதலியன விதிக்கும் " நூல்களைச் சிவவாக்காகவும் கூறுதல் அபிமானம் பற்றியோ, "அறியாமை பற்றியோ அறிகிலம். இருக்கு வேதம் போன்ற " ஒரு நூல் தமிழில் வேண்டுமானல் காடன், மாடன், காட்டேரி "வீரப்பன் முதலிய சிறு தெய்வங்களுக்கு இழிகுலத்தார் "பாடும் பாட்டுக்களையும் அவர்கள் வணங்கும் வழக்கங்களை "யுந் தொகுத்துள்ள கதைகளையும் கோவைசெய்து ஒரு " நூலாக்கி அத்தொகை நூலை மறையல்லது வேதமென்ற பெய

கூறி அது பற்றி விரிக்காது நால்வேறு வகையாய் அருமறையின் விரிந்த செய்திகளைக்கூறி, நித்திய முதலியவற்றுக்குச சிவகோசங்காரண மெனக் கூறி முடித்துப்பின் மறைவழி மதங்கட்கெல்லா மென்றெடுத்துக் கொண்டு மிருதி அவற்றிற் கனுகுணமெனக்கூறி அதனைச் சுத்தமார்க்க மென்று முடித்தலின் மறைவழிப்பட்ட கருமகாண்டத்துக்கு மிருதி அனுகுணமென்பதும் வைதிகத்தின் வழிவந்த எனைய மதப்பிரிவுகளெல்லாம் ஸ்மார்த்தமென்னும் பொதுப்பெயரால் வழங்கப்படு மென்பதும் விளங்குகின்றன. அங்ஙனமாயினும் ஸ்மார்த்தமுஞ் சித்தாந்த சைவமு மொன்ருகா. "உலகியல் வேத நூலொழுக்க மென்பதும், இலகு மெய்ந் நெறி சிவ நெறியதென்பதும்" எனவும், "மிருதிவழியுழன்றும்" எனவும் முறையே பெரிய புராணத்துஞ் சித்தியாரினும் வரை செய்திருத்தலோடு பொருந்துமாறே கூறவேண்டும்.

§ செந்தமிழ்ச்செல்வி ருத்திரோத்காரி ஐப்பசி பக்கம் ௩௯௪-௩௯௦ பார்க்க.

"ருடன் அமைக்கவேண்டும்" எனவெழுதியிருப்பதை யென்ன வென்று சொல்லலாம். சிவபிரான் வேதத்துக்குப் பொருள றியச்செய்த காலையில் நம்மவர் இல்லாது போயினர். இருந் திருந்தால் இவர்க்குண்டாகிய மேற்காட்டிய இவரது ஆசங்கை களைச் சிவபிரானிடத்தே வினவி அவரையறியாமை ஆக்கி விடு வார். மற்றையோர் கூறுங்கூற்று இவர்க்குப் பயன்படா, மேற்காட்டிய திருவிளையாடற் சரித்திரத்தை எதற்கு எடுத்துக் காட்டினரோ தெரியவில்லை. அவர் கொண்ட கொள்கை தப்பு என்பதையே இச்சரித்திரம் நிலை நாட்டுகின்றது. இங்கு வேறு ஒன்று விரிக்க வேண்டியதாயிருக்கின்றது. திருவிளையாடற் புராணமும் பெரிய புராணமுந் தமிழ்ச்சைவப் பெருமக்கட்கு இரு கண்கள் போன்றன. சிவபூஜை செய்ய இயலாத்தமிழ்ச் சைவப்பெரியோர், திருவிளையாடற் புராணத்தைக் குருமுக மாகப் பெற்றுச் சிவபூஜை செய்து வருவதுபோலவே நாடோ றும் நியமமாக நேசித்துப் பூசித்து வாசித்து இச்சித்த சித்தி யையும் பெற்று வருபவர்களாயிருக்கின்றார்கள். அத்த கைய தெய்வத்தன்மை பொருந்திய ஒரு நூலிற் கூறப் பட்ட வொரு சரித்திரத்தைத் தமது மனம் போலப் (பிழைபட்ட பொருள்) பொருள் கொள்ளாவிடின் அக் கதை பொய் யென்று கொள்ள வேண்டும் என எழுதி னரே. இவரது மனோ தர்மம் எத்தகையதோ. கல்விச் செருக் கினல் நக்கீரனுஞ் சிவபிரான் வாக்கை அவமதித்து அதற் குத்தக்க பலனைப் பெற்றதாக நமது நூல்கள் கூறுகின்றன. அத்தகைய நூல்களைக் கற்றறிந்த சைவ மக்கள் கல்வியினற் செருக்குற்றுத் தம்மை மறவார்கள். இன்னெரு விடயமிங் குக் குறிக்கற்பாலது. குலபூடணனெனும் ஓர் பாண்டியன், சுந்தரேஸ்வரரிடம் மிக்க அன்பு பூண்டவனாகிச் சிவபுண்ணிய மெல்லாங் கைக்கொண்டு குறைவுபடாது செய்து அரசாட்சி யும் முறைப்படி நடாத்தி வரும் நாள், தான் மிக்க சிவபுண்ணி யஞ் செய்து வருபவன் என்னுங் களிப்பையுடையவனாய்த் தனது நாட்டிலுள்ள வேத அந்தணர்களை யிகழ்ந்தும் அவர் களைப் பாதுகாவாதவனுமாயினன். அவர்கள் புறநாடணைந் தார்கள். யாகாதி கிரியைகள் நடவா தொழிந்தன, மழை மறுத்தது, பஞ்சம் பரவியது, குடிகளெல்லாம் வருந்தி ஒழிந் தார்கள், அரசன் வருவாய் குன்றியது, அவன் மிக்க கவலை பூண்டு தனது குடிக்கோர் குலதெய்வமாகிய சொக்கக் கடவு ளைப் பணிந்து விண்ணப்பஞ் செய்துகொண்டான். இறைவன் அவனது தவறுதலைக் கருதி, நேரில் அருளாராகிச் சொப்பன வத்தையிற் றேன்றி, நீ நம்மிடம் அன்பிற் குறைந்தவனலன், அரசு புரிவதிற் கொடுங்கோலனல்லன், ஆனல் வேத அந்தணர்

களை யிகழ்ந்து கைவிட்டாய், வேதமே எனது சொருபம், ஆத லினாலித்தீங்கு நிகழ்ந்தது என அருளப் பாண்டியன் தெளிந்து, உடனே வேதியர்களைத் தருவித்துத் தக்கபடி ஆதரித்து வந் தான். வேள்வி ஆகிய கிர்த்தியங்கள் நன்றாய் நடையுற்று நாடுஞ் செழிப்புற்றதெனவோர் சரித்திரம் * இருவிதத் திரு விளையாடற் புராணங்களிலும் காணப்படுகின்றது. சரித்திர ஆராய்ச்சியார் இதை நம்பமாட்டார்கள். ஐரோப்பா அமே ரிக்கா கண்டங்களில் மழை பெய்யவில்லையா? பார்ப்பார்கள் தங்கள் பிழைப்புக்கு வகைதேடிய சரித்திரம் இதுவென்பார் கள். ஆனால் இச்சரித்திரம் நமது சமய நூலிற் கூறியுள் ளதே. ஆதலாற்றான் சமய நூல்களைச் சரித்திர ஆராய்ச்சி யால் அளவிட்டுக் காணுதல் அரிதெனக் கூறினோம். சமுத் திரத்தின் ஆவி வெப்பத்தாற் கிளம்பி ஆகாயமார்க்கத்தி னிறைந்து காற்றினாற் சிதறுண்டு மழையாய் வீழ்கின்றது. இதற்குக் கடவுள் தயை யென்னவெனக் கூறவேண்டிவரும். வெப்பம் சூரியனால் உண்டாவது. சூரியனைத் தோற்றுவித்தவ ரார்? சூரியனுக்கு வெப்பத்தையும், சந்திரனுக்குக் குளிர்ச்சி யையுங் கொடுத்தவரார்? ஆகாயத்தில் மேகங் கிளம்பியும் மழை பெய்யாது போகின்றதே. அச்சமயம் காற்று உண்டாய் மேகங்களை மழை பெய்யவிடாது சமுத்திரத்திற்கே தள்ளிக் கொண்டுபோய்விடுகின்றதே. ஓர் சமயம் ஆண்டுக் கணக்காய் மழையில்லாது போகின்றதே. ஓர் சமயம் மழையே நன்மை யுங் கொடுக்கின்றது தீமையும் பயக்கின்றது. இவைகளுக் கெல்லாங் காரண கருத்தா ஒருவன் வேண்டுமென்பதையும் அவர்கள் நினையாராகி முடிவில் நாஸ்திகராவர். நிறகப் பின்னும் நம்மவர் எழுதுவதாவது:—

௫௫. "திருவிளையாடற் புராணத்து இப்படலத்திலும், "கந்த புராணத்திலும், பண்டைக்காலத்தில் பிரளயம் வந்து "வேதங்கள் அழிந்துபோயினவென்று சொல்வதன் பொருள் யாதெனில்," என வெழுதிக்கொண்டு தனது கற்பனைத் தமிழ் நான்மறை, கடலின் பெருக்கில் மறைந்ததாகத்தான் கூறுவதை அந்நூல்கள் கூறியனபோலப் பொருள்படுமாறு எழுதப்பட் டிருக்கின்றது. கடல்கோள் என நம் நண்பர் கூறுவது, தென் மதுரையும் அதன் பக்கமுள்ள நாடுகளும் கடலுள் மறைந்தவற் றையே. அக்காலம் தென் மதுரைக்கு வடபாகமுள்ள பூமண் டலப் பரப்பு முற்றும் நிலைபெற்றேயிருந்தது. அதனாற்றான் பக்கத்து சமுத்திரக் கரை நகராகிய கபாடபுரத்தைப் பாண்

---

* இருவிதத் திருவிளையாடற் புராணங்கள், ஒன்று பெரும்பெற்றப் புலியூர் நம்பியார் இயற்றியது. மற்றொன்று பரஞ்சோதியார் இயற்றியது.

டியர்கள் தலைநகராக உடனே கொண்டனர். திருவிளையாடற் புராணத்து வேதத்திற்குப் பொருளருளிச்செய்த படலத்துக் கூறும் பிரளயம் காரண கர்த்தர்களாகிய மும்மூர்த்திகளும், ஈரேழு (பதினான்கு) உலகமும், அண்ட பிண்ட சராசரங்களெல்லாமும், புராணங்கள், ஸ்மிருதிகள் இதிகாசங்கள் வேத வேதாங்கங்கள் எல்லாமும், சிவஞானபோதம் முதற் சூத்திரத்தில் "தோற்றிய திதியே ஒடுங்கி" யெனக்கூறியவாறு சிவத்தினிடம் ஒடுங்கியதாகக்கூறும் மகா பிரளயத்தையென அறிய வேண்டுவது. மீண்டும் சிவத்தினிடமிருந்து, ஒடுங்கின வகை போல மேலே விவரித்துக்காட்டிய எல்லாமும் தோன்றியதாகவும் அப்படலங் கூறும்—இதனை,

"ஐம்பெரும் பூதமிலை திரிந்தீரே ழடுக்கிய வுலகொடு மயன்மா, லும்பர்வான் பதமுமுதித்த வாறொடுங்க வுருத்த ரோருழி வந்தெய்தச் செம்பொருள் மறையு மொடுங்கிய வழிநாட் செஞ்சுடர்க் கடவுண் [முன்மலரும்
வம்பவிழ் கமலமென வரன்றிருமுன் மலர்ந்ததா லகிலமும் மாதோ."

என்னும் செய்யுளாலும் "பிரணவமுதித்தவதனிடை வேதம் பிறந்தன" வென்னுஞ் செய்யுளாலும் மற்றும் அப்படலத்தி லுள்ள செய்யுட்களாலும் பிரளயம் வந்து அழிந்துபோன விவரங்களை நன்றாய்ப் புலப்படுத்திக் கூறியிருக்க, அதற்குப் பொருள் நம்மவர் விகற்பமாய்க் கூறுவது என்ன ஆதாரவு பற்றியோ? மற்றும் ஒடுங்கினவழியே, சிவத்தினிடமிருந்து வேதம் முதலிய யாவும் தோற்றியதாகவும் மேற்காட்டிய செய்யுட்களாலறியக் கிடக்கின்றதே, அவ்வாறு இவாது! தமிழ்நான்மறை ஆதியவுந்தோன்றி யிருக்கவேண்டுமே. அவ்வாறுமில்லையே. ஈதென்ன இவர்கூற்று இந்திரஜால மகேந்திரஜாலக் கற்பனையாயிருக்கின்றது. ஒரு ஆதாரவுமிலாது அவாது சொந்தயுக்திக் கற்பனவுரையை யாவர் கொள்வர். பிரளயம் வந்து அதனால் வேதம் அழிந்துபோனதாகக் கந்தபுராணத்தில் எங்குக்கூறியுள்ளதோ அறிகிலம். கந்தபுராணப் பாயிரச் செய்யுட்களில் வேதம் தலைதடுமாறி முன்பின்னாகவும் பின்முன்னாகவுங்கலந்து போயினமையால் ஒரு நெறிப்படுத்து உண்மை உணர முடியாதாயிற்று. பலசமயங்கள் வேதக்கொள்கைக்கு மாறுதலாயுந் தோன்றின. அதனால், சிவபிரான் ஆணைப்படி விண்டுவின் ஓர் கலைவியாசராகத்தோன்றி, அவர் நினைத்த மாத்திரத்தானே வேதங்களை யோதாதுணர்ந்து உலகினர்க்குக் கொடுத்து உபகரித்தனர் எனக் கூறப்பட்டிருக்கின்றது. பிரளயம் என்னும் பெயரே அங்குக்காணேம். சைவசித்தாந்தப் பெருந்தகையோர்களே! மேற்காட்டியவாறு நமது சமயவுண்மை நூல்களில் இல்லாத பொருளை நமது நண்பர் அவாது யுக்தியொன்றாலேயே

அவரது கல்வித்திறமையால் எழுதிக்காட்டித் * திருநான்மறை விளக்கமெனப் பெயரிட்டு வெளியிட்டிருக்கின்றாரென்பதை அறிந்துகொள்ளுங்கள். நிற்க,

௫௬. நம் நண்பர் எழுதிய திருநான்மறை விளக்கத்தின் முடிபில் அவர் கூறியவைகளில் குறிப்பிடத்தக்க ஒரு விடயமாவது (க) "பண்டைத் தமிழ்த் திருநான்மறையும், ஆகம "மெனப்படும் பண்டை அருணூலும் மறைந்த பிற்காலத்தே "சைவப்பொருள் கொள்ளப்பட்ட வடமொழி வேதம் நான் "கும், தமிழ் அருணூல்களைத் தழுவி யியற்றப்பட்ட ஆகமங் "களுமே நிலவினவாதலால், அவற்றையும் பிரமாண நூல்க "ளாகச் சைவர்கள் கருதுவாராயினர். அங்ஙனங்கருதினமை "யால் வந்த மயக்கிற்களவில்லை" (உ) தற்காலத்திலே தந்திரக் "கிரியை விளக்கும் சித்தர் நூல்களும், தேவார திருவாசக "முதலிய பன்னிரு திருமுறைகளும் சிவஞான போதம்முத "லிய சித்தாந்த நூல்களும் திருவள்ளுவரது பொதுமறை "யாகிய திருக்குறளும் தமிழர்க்குத் தமிழிலே சிறந்த நூல்க "ளாகக் கொள்ளற்பாலன. சிவாகமக்கிரியாகாண்டமும் "ஏற்ற பெற்றி அவ்வாறே" என்றெழுதியிருக்கின்றார். மேலே காட்டப்பட்டிருக்கின்ற இவரது கொள்கையின் கருத்துக்கு ஒற்றுமையாக இவர் முன்னர் எழுதியிருக்கின்ற மற்றொரு பகுதியையும் இங்கு எழுதிக்காட்டுவது அவசிமாகக் காணப்படுவதால் அப்பகுதிக்கு, ந, என இலக்கங்கொடுத்து இங்கு எழுதுகின்றோம். (ந) "வடமொழி வேதத்துட்போந்த "சைவப் பகுதியையே, சமயாச்சாரியர் உண்மை யென்று

* நம்மவர் எழுதிய வியாசத்திற்கு நம்மவர் புனைந்த பெயரில் திருவென்னும் அடைமொழி சேர்க்கப்பட்டுளதே அது பொருந்துமாவென்பதை ஆராய்கையில், திருக்கோவையாரிற் காணப்படும் "திருவளர் தாமரை" யென்னுஞ் சொற்றொடருக்கு உரைகண்ட பேராசிரியர் "யாவன் ஒருவன் யாதொரு பொருளைக் கண்டானே அக்கண்டவற்கு "அப்பொருண்மேற் சென்ற விருப்பத்தோடு கூடிய அழகு. அதன் "மேலவற்கு விருப்பஞ் சேறல் அதனிற் சிறந்த உருவும் நலனும் ஒளியு "மெவ்வகையானும் பிறிதொன்றற்கில்லாமையால்" எனக் கூறினர். அன்றியும் முக்காலத்து முள்ளவரும் அழிவில்லாதவரும் நித்தியருமாகிய சிவபிரானைத் 'திருவே யென் செல்வமே' என மேலோரும் பணித்தனர். இக்காரணங்களான், அழிந்துபோனதாகச் சொல்லும் ஒரு நூலைக் குறித்த வியாசத்துக்கிட்ட பெயருடன், திருவென்னும் அடைமொழி சேர்த்ததும், பொருந்தாததொன்றே. நிலைபெற்று விளங்காநின்ற திருநெறிய தமிழ், திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருவாய்மொழி, திருக்குறள் ஆதிய நூல்களுக்கும், திருக்கோயில், திருச்சிற்றம்பலம், திருவரங்கம் ஆதிய புனிதத்தலங்களுக்குமே திருவென்னும் மங்கலச்சொல் உரித்தாம்.

"போதித்தார்" என்பதும், "இங்ஙனமே வடமொழி யிருக்குவேதத்துட்போந்த சைவப் பகுதிகட்கு ஆசிரியர் மெய்கண்டார் சைவப் பொருள்கொண்டார்" என்பதுவுமே. மேற்காட்டிய முதலாவது பகுதியின் ஈற்றில் சைவர்களுக்கு அளவில்லாத மயக்க முண்டாயிற்று எனப் பொருள்படுமாறு எழுதப்பட்டிருக்கின்றது. ஏன் அம்மயக்கம் உண்டாயிற்றென்றால், சைவப்பொருள் கொள்ளப்பட்ட வடமொழி வேத நான்கையும் தமிழிலிருந்த உஅ-ஆகமங்களையுந் தழுவி யியற்றப்பட்ட வடமொழி உஅ-ஆகமங்களையும் பிரமாணமாகச் சைவர்கள் கருதுவாராயினாரானமையால் என்பது நம்மவர் கருத்தின்படி அதற்கு விடையாகும். எக்காலமுதல் சைவர்கள் அவ்வாறு கருதுவாராயினர் என்றால் ஆரியர்கள் நம் நாட்டுக்கு வந்து ஆரியவேதஞ் செய்தபின்னரும் தமிழிலிருந்த ஆகமங்களை வடமொழியில் மொழிபெயர்த்த பின்னரும் என்பதும் நம்மவர் கருத்தின்படி அதற்கு விடையாம். ஆரியர்கள் நம் நாட்டிற்கு ஆதியில் வந்தது இற்றைக்கு மூவாயிரத்து ஐஞ்ஞூற்று ஆண்டுகளுக்கு முன்னர் எனச் சரித்திர ஆராய்ச்சியோர் கூறுவர். இதனால் நம் நாட்டில் அதற்கு முன் ஆரிய பாடையே இருந்ததில்லை யென்பது பெறப்படும். தமிழ் நான்மறையும் தமிழ் ஆகமங்களுங் கடல்கோளில் மறைந்து போனதாக நம்மவர் கூறுங் காலம், முதற் சங்கத்திறுதிக் காலத்தே. அதாவது இற்றைக்குக் குறைந்தபட்சம் ஏழாயிரம் ஆண்டுகட்கு முன்னர். இவ்வாறு ஏழாயிரம் ஆண்டுகட்கு முன்னரே மறைபட்டு ஒழிந்துபோன தமிழ் நான்மறையிலுள்ள சைவப்பகுதியை அவைகள் மறைந்தொழிந்த மூவாயிரத்தைந்நூறு ஆண்டுகட்குப் பின்னர் உண்டாயின ஆரிய வேதத்தில் எவ்வாறு சேர்க்கக்கூடும்? எவ்வாறு அவ்வாகமங்களை வடமொழியில் மொழி பெயர்க்கக்கூடும்? ஆதலால் நம்மவர் கொள்கை நிலைபெற்றிலது. மற்றொரு வகையான் ஆராயலாம். வடமொழி வேதத்துட் போந்த சைவப்பகுதியையே சமயாசாரியர் உண்மை யென்று போதித்தார் என்றார். அவர்கள் போதித்தது தேவாரப் பாசுரங்களின் மூலமாகவே. ஆதலால் சமயாசாரியர்களே சைவர்கள் கொள்ளும் மயக்கத்திற்குக் காரணர்களாகின்றார் என்பதும் பெறப்படுகின்றது. அத்தகைய தேவாரங்களைப் படிக்கும்படி சைவர்களுக்கு நம்மவர் ஏன் கற்பனை செய்கிறார். வேதங்களிற் சைவப் பகுதியைப் புகுத்திய காலமுதலும் சமயாசாரியர்களும் சந்தாஞசாரியர்களும் வேதத்திலுள்ள சைவப்பகுதிகளைக் கைக்கொண்டு அவர்கள் நூல்களை அருளிய காலமுதலும் இதுகாறும் சைவர்கள் அளவற்ற மயக்கங் கொண்டிருந்ததாக நம்

மவர் எழுத்தால் தெரியக்கிடக்கின்றது. இந்நீடித்த காலத்திற்றோன்றிய சைவப் பெருமக்கள் ஒருவரும் இம்மயக்கத்தைக் கொண்டவராயும் அதைத்தீர்க்க வழிதேடினவராயுமில்லை. மயக்கமிருந்தாலல்லவோ அதைத்தீர்த்துக்கொள்ள வழியுங் கண்டு பிடித்திருப்பார்கள். நோயுண்டானாலல்லவா அதற்கு மருந்து தேடப்படும். நமது நண்பர் சைவர்களுக்கு மயக்கமிருப்பதாக அவரே சுதாவில், ஒருவருடைய வேண்டுகோளின்றிக் கண்டு அதற்கு மருந்து திருநான்மறை விளக்கமென ஓர் உரை யெழுதினார். இத்திருநான்மறை விளக்கத்தில் ஆதிதொட்டு அந்தம் வரை இவர் காட்டியிருக்கும் மேற்கோள்களும் அவைகட்கு இவர் கொண்ட கருத்தும் இவ்வாராய்ச்சியில் விட்டுவிடப் படாது கூடியவரை யெழுதப்பட்டு அவைகள் ஆராய்ந்து பார்க்கப்பட்டிருக்கின்றன வென்பதை இவ்வாராய்ச்சியை வாசிக்கும் நண்பர்கள் பலரும் அறியலாம். வடமொழி மேலும், அவ்வடமொழி வேதங்கள் நான்கின் மேலும் கொண்ட வெறுப்பினால், அவைகட்கு முந்தியே, தமிழில் நான்மறை, ஆறு அங்கம், இருபத்தெட்டு ஆகமங்கள், இருந்தனவென்று தாபிக்க வேண்டுமென்று ஒரு யுக்தி கண்டு அதற்குப் பிரமாணங்கள் தமிழ் மறையாகிய தேவார திருவாசகங்களிலிருப்பவை போலச் சைவ மக்களுக்குக் காட்டக் கருதி அந்நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டப் புகுந்தார். உண்மையில் அவ்வாறு இல்லாமையான், தேவாரப்பாசுரங்களிலும் மற்றுமுள்ள தொல்காப்பியம், திருக்குறளாதிய அரிய பெரிய தமிழ் நூல்களிலும் இவர் கருத்துக்கிணங்க இடங்கொடாத மூல பாடங்களெல்லாம் இவரால் திருத்தப்பட்டன. தெய்வத் தன்மை பொருந்தியவையும் இதுகாறுந் தமிழ் நாட்டு மேன்மக்களால் சிறப்பாய்ப் புகழப்பட்டு வந்ததுமாகிய பண்டைய மெய்யாசிரியர்களின் உரையையும் புறக்கணித்துத் தாமே தங்கொள்கைக்கு இணங்க உரை கற்பித்தார். மூல பாடங்களுக்குப் பொருந்தாத உரை புகுத்தினார். திருவிளையாடற் புராணத்திற் காணப்படும் வேதத்திற்குப் பொருளருளிச்செய்த சரித்திரத்திற்கு இவர் காட்டியபடி பொருள் கொள்ளாவிடின் அச்சரித்திரம் பொய்யென்று கொள்ளவேண்டுமெனவுங் கூசாது கூறினார். இவ்வாறு விபரீதமான உண்மை பயவாத மொழிகளையே ஒன்றின்மே லொன்றாக அடுக்கிவந்து முடிவாக மேற் காட்டப்பட்டிருக்கின்றபடி சைவர்கள் அளவில்லாத மயக்க மெய்தியுள்ளாரெனப் பொருள்பட எழுதி முடித்தார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய "காது பொத்தரை" யென்ற தேவாரத்தின் ஒரு பகுதியே தமிழர் நால்வர் தமிழ் வேதஞ் செய்தனர் என்ற இவரது கொள்கைக்கு அஸ்திவாரக் கல்

போன்ற முதல் ஆதாரம். இத்தேவாரத்திற்கு இவர் கொண்ட
பொருள் பிழைபட்டதென இவ்வாராய்ச்சியிற் காட்டப்பட்
டிருக்கின்றது. இனியாவது அத்தேவாரச் செய்யுளுக்கு இலக்
கண இலக்கிய முறைக்குப் பொருந்துமாறும் இரு மொழியுங்
கற்ற சைவ மக்கள் நால்வர் அங்கீகரிக்குமாறும் நம்மவர் பத
வுரை எழுதிக்காட்டி அத்தேவாரத்தால் தமிழ் மக்கள் நால்வர்
தமிழில் நான்மறை செய்தனரென்பதைத் தாபித்துக்கொள்ளட்
டும் பார்ப்போம். 'சைவ வேடந்தாளினைத்து' என்ற சுத்த
பாடத் தேவாரப்பகுதியைச் சைவ வேடந்தாளிணைத்து எனத்
திருத்திக்கொண்டு அவர் கொள்கையைத் தாபிக்கப் புகுந்
தாரே!! அது பிழைபட்டதென இவ்வாராய்ச்சியில் எழுதப்
பட்டுளது. அவ்வாறு யாம் எழுதியது பிழை, தாம்கொண்டதே
சரியென்றால், பழைய ஏட்டுப் பிரதிகளில் தமது பாடத்தைக்
காட்டி முன்பின் விரோதப்படாமல் பொருளுங்கூறித் தங்
கொள்கையைத் தாபித்துக் கொள்ளட்டும் பார்ப்போம்.
"தொகுத்தவனருமறை அங்கம் ஆகமம் வகுத்தவன்" என்
னுந் தேவாரப் பகுதியில் காணப்படாத 'ஆறு' என்னும்
மொழியை அத்தேவாரத்துட்கூட்டி அதற்கு வியாக்கியை
தம் மனம்போல வெழுதினாரே அது பிழை யென்றோம். பிழை
அல்லவெனத் தாபித்துக்கொள்ளட்டும் பார்ப்போம். தமிழ்
முனிவர் நால்வருக்கு அருளிச்செய்த கடவுள் சிவபிரான்
என்றும் அவர் தட்சிணாமூர்த்தத்திருமேனி தாங்கிவந்து
அருளவில்லை யென்பதும் நம்மவர் கொள்கை. அக்கொள்
கையைத் தாபித்துக்கொள்ள 'சீர்மிகு சிறப்பினோன்' என்ற
கலித்தொகைச் செய்யுளை ஆதாரமாகக் காட்டினர். நமது இவ்
வாராய்ச்சியில் அச்செய்யுளில் சனகாதி நால்வர்க்கருளிய தட்சி
ணாமூர்த்திக் கடவுளையே குறித்திருக்கின்றமை தென வெழுதியுள்
ளோம். தக்கபிரமாணங்களால் அதை மறுத்து எழுதவேண்
டுவதும் அவர் கடமையாம்.

இருக்கு வேதத்துட்போந்த பலமந்திரங்களை யெடுத்
துக்காட்டி, அவ்வேதம சிவபிரானையே முழுமுதற் கடவுளெ
னப் பலவகையானும ஓலமிட்டுக்கூறியும் அவரே பசுபதியென
வுங் கூறுகின்றதெனவும், உரு-யாகங்களுக்கும் அவரே தலைவ
ராயிருந்து முதற்கண் அவிசு பெறுபவர் என்றும், தட்சப்பிர
ஜாபதி அதற்கு மாறுபட்டு யாகஞ்செய்ய ஆரம்பித்ததில்
அவன் யாகமு முற்றுப்பெறாது அழிபட்டும், தலையும் இழந்
தானென்றும, இவ்வாராய்ச்சியில் எழுதியுள்ளோம். காடன்
மாடன் பாட்டுகளின் தொகுதிபோன்றது ருக்கு வேதமென்று
சொல்லி அவ்வேதத்தை யிழித்துக்கூறும் நம்மவர், தக்க பிர

மாணங்களால், பலரும் ஒப்புமாறு எமது சித்தாந்தத்தை மறுத்துக் காட்டவேண்டியதும் அவரது கடமையாம். ஏனையவு மன்ன.

இன்னமொன்று வினவுகின்றோம். எம் நண்பர் அம்பா சமுத்திரம் திருவாளர் V. P. காந்திமதிநாத பிள்ளை யவர்கள், நம்மவர் எழுதியுள்ள திருநான்மறை விளக்கத்திலுள்ளப் பல ஆசங்கைகளைக்கண்டு கஙஎ-வினாக்கள் எழுப்பி அவற்றிற்கு விடை பகருமாறுகேட்டு ஓராண்டாகியும் இன்னமும் நம்மவர் விடை பகராதிருப்பானேன். விடைபகர வியலாவிட்டாலும் அவ்வாசங்கைகளைப் பலருமறியும் வண்ணம் செந்தமிழ்ச் செல்விப் பத்திரிகையிலாவது பிரசுரித்திருக்கலாமே. அவ்வாறு மில்லையே. இது தோல் வித்தானத்தைப் பயக்குமென்பதை நம்மவர் அறியார்போலும்.

தேவார திருவாசக மாதியவெல்லாம் வேத சிவாகமங்களின் சாரமே யென்பது பல மேற்கோள்களால் இவ்வாராய்ச்சியில் ஏற்கனவே விரித்துக் காட்டப்பட்டிருக்கின்றது. நிற்க, மேற்காட்டிய நம்மவர் கற்பனைகளில் இரண்டாவதில், தமிழர்க்குத் தமிழிலே சிறந்த நூல்கள் இன்னின்னவென நம்மவர் காட்டிய நூல்களில் "தந்திரக்கிரியை விளக்கும் சித்தர் நூல்களும்" ஒன்று எனக்கூறித் தேவா ரதிருவாசக மாதிய சைவ அருள் நூல்களுக்கெல்லாம் மேலானது போல அப்பெயரைத் தலைப்பிற் காட்டியும் நம்மவர் எழுதியிருக்கின்றார். அவர் எழுதிய விவாதத் திருநான்மறை விளக்கத்திலும் ஆங்காங்கே சித்தர் நூற்படி கொள்ளற் பாலனவென்று மெழுதியிருக்கின்றார். மற்றைய நூல்களின் பெயரைக் குறிப்பிட்டுச் சொன்னவர் அந்நூல்களின் பெயர்களையாவது அந்நூல்களை ஆக்கியோர் பெயரைக் குறிப்பிட்டாவது எழுதிக்காட்டாமல் சித்தர் நூல்களென்று பொதுவாக வெழுதியிருக்கின்றார். ஆதலால் நம்மவர் கருத்தை யறியக்கூடவில்லை. பதினெண் சித்தர், நவ சித்தர் என்போர் அஷ்டமா சித்திகளுங் கைவரப்பெற்றுக் காய சித்தியுமெய்தி உலகமுற்றுஞ் சஞ்சாரஞ் செய்யும் சித்தமூர்த்திகள். அவர்கள் இன்று மிருப்பதாகவே பெரியோர் கொள்வர். தமிழ்த் திருமுறைகள் அருளிச்செய்தவர்களில் திருமூலர், திருமாளிகைத் தேவர், கருவூர்த் தேவர் சித்தர்களே. தற்காலம் புத்தகக்கடைகளிற் காணப்படும் சித்தர் நூலென்பவைகளை யியற்றினோர் பதினெண் சித்தர், நவசித்தர், இவர்களில் ஒருவருமல்லரென்பது தமிழ்மொழி ஆராய்ந்த பல்லோர் கருத்து. கடைவீதிச் சித்தர் நூலிற் காணப்படுஞ் சில செய்யுட்களாவன :—

"வாயிலெச்சில் போகவே நீர்குடித்துத் துப்புவீர்
வாயிருக்க எச்சில் போன வாறதென்ன தெவ்விடம்
வாயிலெச்சிலல்லவோ நீருரைத்த மந்திரம்
நாதனை யறிந்தபோது நாடும்மெச்சிலேது சொல்"

"ஓது நாலுவேதமு முரைத்த சாஸ்திரங்களும்
பூதலத்து அங்கமும் பொருந்து மாகமங்களும்
சாதிபேத வண்மையுந் தயங்குகின்ற நூல்களும்
பேதபேதமாகியே பிறந்துழன்றிருந்ததே"

"அங்கலிங்கம் பூண்டு நீரகண்ட பூசைசெய்கிறீர்
அங்கலிங்கம் பூண்டு நீயமர் நதிருந்தமார்பனே
எங்குமோடி யெங்குமெங்கு மீடழிந்துமாய்கிறீர்
செங்கல் செம்புகல்லெலாஞ் சிறந்துபார்க்குமூடரே"

"நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே
சுற்றிவந்து மொணமொணென்று சொல்லு மந்தரமேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள்ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவங் கறிச்சுவை யறியுமோ"

இவ்வகைப் பாடல்கள் பல அந்நூல்களில் ஆங்காங்குக் காணலாம். இந்நூல் கற்றவர்களைக் கேட்டால் அவையெல்லாம் ஞானமார்க்கமென்பார்.

சைவச்சரியை கிரியை மார்க்கங்களைக் குறைகூறுவது நம்மனோர்க்கு ஞான நூலாகுமா.?

"கண்ணினாலவர் நல்விழாப் பொலிவுகண்டார்தல், உண்மையாமெனின் உலகர் முன்வருகென வுரைப்பார்" என்றும், "ஆக்கையாற் பயனென் அரன்கோயில் வலம்வந்து, பூக்கையாலட்டிப் போற்றியென்னாத விவ்வாக்கையாற் பயனென்" என்றும் "நிலைபெறுமாறெண்ணுதியேனெஞ்சே நீவா, நித்தலு மெம்பிரானுடைய கோயில்புக்குப்-புலர்வதன் முன்னலகிட்டு மெழுக்குமிட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித், தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச் சங்கராசயபோற்றி போற்றியென்றும், அலைபுனல்சேர் செஞ்சடை யெம்மாதி யென்று மாரூராவென்றென்றே வலறு நில்லே"

என்றும், இன்னம் பலவாறாகவும், தாதமார்க்கம் புத்திரமார்க்கமாதிய சிவத்தொண்டை உலகினர்க்குப் போதித்தும் தாங்களும் அவ்வழியொழுகியும் அதிமதுர அற்புதத் திருப்பாடல்களை அருளியும் அபபாடல்களின் பயனைகப் பலப்பல அற்புதங்களைச் செய்துகாட்டியும் சைவ சமயத்தைத் தாபித்துபகரித்த சைவ சமய குரவர்கள் கற்பித்த வழியைக் கைப்பிடித்தொழுகுஞ் சைவமக்களுஞ் சித்தர் நூலை நோக்கவுமிசைவரோ ? ஒருகாலுமிசையார். சாயுச்சிய பதவியை விரும்பிச் சிவஞானமார்க்கவழி யொழுகுபவர்க்குச் சிவஞான மெய்ந்நூலருளிய சந்தான குரவர்கள் கற்பித்திருப்பதாவது,

"செம்மலர் நோன்றாள் சேர லொட்டா, அம்மலங்கழீஇ அன்ப ரொடுமரீஇ, மாலறநேய மலிந்தவர் வேடமும், ஆலயந்தானும் அரனெனத்தொழுமே" என்றும், "கண்டதொரு மந்திரத் தாற் காட்டத்திலங்கிவே—றுண்டல் போனின்றங்குளதாமாற் கண்டவுருத்—தானதுவாயன்றுனன் றானதுவாய்த் தோன் றுனே-தானதுவாய்க் காணுந்தவர்க்கு" என்றும் "திருக் கோயிலுள்ளிருக்குந் திருமேனி தன்னைச் சிவனெனவே கண்ட வர்க்குச் சிவனுறைவனங்கே" எனவும் காணப்படும் சைவ மணங்கமழும் அருண்மொழிகளுக்கும் மேற்காட்டிய சித்தர் நூற் செய்யுட்கட்குமுள்ள ஏற்றத் தாழ்வுகளை நம்மனோர் கண்டு அந்நூல்களைக் கையாலுந் தீண்டாரென்க. சித்தர் நூலெனப் பெரியார் பெயர்களை வைத்துச் சிவபிரான் பெயரை யும் பராசத்திப் பெயரையும் பஞ்சாட்சரப் பெயரையும் ஊடூடே காட்டிப்புறச் சமயக்கொள்கைகளையே சித்தாந்தமாக வைத்து இலக்கண இலக்கிய விதிகளுக்குப் பொருந்தாத பாடல்களை யெவரெவரோ பாடி வெளியிடப்பட்டிருக்கும் நூல்களே சித் தர் நூலென உலாவுகின்றனவெனச் சைவ மக்கள் கொள்வர். சில மாதங்கட்கு முன் வெளிப்பட்டு வந்திருக்கும், தமிழக வொழுகு, என்ற மக்கட் சட்டம் என்னும் நூலே இதற்கோர் சான்றும். இந்நூல் இயற்றியோர் இன்னாரென்றாவது, இன்ன காலத்தினரென்றாவது, அவரது சரித்திரம் இன்னதென்றாவது இலக்கண முறைப்படி அந்நூலிற் கூறாது அவ்விஷயங்களில் மயங்கவிட்டு அந்நூலின் கடைசி அடியிலே "சிவாரூட சித்தன் செய்ததிது" எனக் குறிப்பிட்டிருக்கின்றது. இச்சித்த மூர்த்தி கள் யாவரோ? இவரும் பண்டையநாட் சித்தர்களில் ஒரு வரோ? கலிகாலக்கொடுமையை விளக்க அவதரித்த சித்தர் களில் ஒருவரோ, அறியக்கூடவில்லை. இது போலவே சித்தர் நூல்களென வழங்கும் நூல்களும் காலக்கிரமத்தே யெழுந்தன வாதல் வேண்டும்.

நாம் வசிக்கும் இக்கன்னித் தீபமெனப்படும் வடக்கே இமயமலையும் தெற்கே குமரியும் மற்றிருபக்கமுங் கடலும் சூழ்ந்த இப்பூமியே ஓங்கார வடிவாயுள்ளது. நமக்குள்ள வட மொழி வேத சிவாகமங்களும் அவைபற்றித் தோன்றிய திரு நெறித்தமிழ் முறைகளும் பிரணவத்தினின்று உதித்தவைகள். வடமொழி வேதமோதுபவர்கள் "ஓமென்று மறைபயில்வா" ரெனுந் திருவாக்குப்படி வேத அத்தியயனத்துக்கு முந்திப் பிரணவத்தைச் சொல்லியும் அது முடிந்த போதும் அவ்வாறே சொல்வதையும் கண் கூடாகப் பார்த்து வருகின்றோம். மனுஸ்மிருதி உ-ம் அத்தியாயம் எச-வது ஸ்லோகமும் அவ் வாறே கட்டளையிடுகின்றது. திருநெறித் தமிழ்ச் சைவமுறை

களில் முதலாவது முறையின் முதற்றிருப்பாசுரம் ஸ்ரீ ஞான சம்பந்த மூர்த்திகள் 'தோடு' என்ற மொழியால் ஆரம்பித்தார். இதில் தகரமெய்யோடு ஒகாரவெழுத்தமைந்திருத்தலைக் காண்கின்றோம். பனிரெண்டாவது, அதாவது இறுதியாகிய பெரிய புராணத் திருமுறையின் ஈற்றுச் செய்யுளின் ஈறு, மகரவொற்றையிறுதியில் கொண்ட உலகெலாம் என்னும் மொழியால் முடிவு பெறுவதையும் காண்கின்றோம். இதனால் விளங்குவது பிரணவப்பொருளாகிய சிவத்தைக் குறித்த தமிழ் நூல்கள் இத்திருமுறைகளே என்பது பெறப்படுகின்றது. தமிழ் நாட்டு வேத வியாசர் என்றெண்ணப்பட்ட நம்பியாண்டார் நம்பி யென்ற அந்தணர் குலோத்தமரும், நம் தமிழ் நாட்டை அரசுபுரிந்த சைவப் பெருந்தகையாருஞ் சிவபிரானது திருவருளைப் பெற்றவருமாகிய அநபாயச்சோழ மகாராஜாவும், நடேசப்பிரான் சந்நிதியில் சைவர்களுக்குரிய செந்தமிழ்த் தெய்வ அருள் நூல்களைப் பன்னிரெண்டு திருமுறையாக வகுத்து அம்முறைகளில் எந்தெந்த நூல்களைச் சேர்த்திருக்கின்றனரோ அந்நூல்கள்தான் சைவர்களுக்குரியவை. சித்தர் நூல்களென்பன அவைகளிற் சேர்க்கப்பட்டிருக்கவில்லை. திருமுறைகள் வகுக்கப்பட்ட காலத்தில் அந்நூல்கள் இருந்து அவைகளிற் சேர்க்கப்பட்டிருக்கவில்லை யென்று கொள்வோமானால் அவைகளைச் சைவநூல்களெனக் கொள்ளப்படவில்லை யென்பது போதரும். அக்காலம் அவைகள் இருந்ததில்லை யென்போமானால் மேற்காட்டிய தமிழக ஒழுகு தோன்றியதுபோலவே அவைகளும் ஆம்.

நிஎ, பின்னும் நம்மவர் எழுதுவதாது," "சாந்தோக்கிய "உபநிடதத்தில் பரம்பரையாய் அங்கி வழிபாடியற்றிய பிராமணர் நால்வர், ஓர் அரசனிடஞ்சென்று ஞானம் பெற முயன்ற "காலத்து அவ்வரசன் அவர்களைப் பார்த்து இதுவரை இந்த "ஞானத்தைப் பிராமணர்கள் நாடியதில்லையே யென்று கூறியதாகத் தெரிகின்றோம். அவ்வரசன் ஆரிய மன்னனாகவிருப்பின் ஆரிய சமுதாயக் குருக்களாகிய பிராமணர்களுக்கு அவ்வாறு கூறக் காரணமில்லை. ஆதலால் அவனை வேற்று மன்னனாகக் கருதுமிடத்துப் பல காரணங்களால் அவன் தமிழ் "அரசனென்றே யூகிக்கற்பாலது. ஆதலால் அக்கதையும் "தமிழரது பண்டைத் தத்துவஞான வுணர்ச்சியைக் குறிப்பதற்குச் சான்றாகும்." என்பதே.

இவர் கூறும் இச்சரித்திரம், சாந்தோக்கியத்தில் ஐந்தாம் பிரபாடகம் மூன்றும் கண்டத்தின் ஏழு மந்திரங்களில் கூறியது. அஃதாவது "பிரவாஹண சைவலி யென்னும் பாஞ்சால தேயத்தாசனிடம் ஆருணேயன் சென்றகாலத்துச் சைவலி அவனை நோக்கி, "நின் பிதா உனக்கு எல்லாம் கற்பித்தனரா"

என்று கேட்க அவன் "ஆம்" என்றனன். சைவலி "பூமியினின்றும் மனிதர் எங்கே ஏகுகின்றனர்? என்பது முதலிய ஐந்து வினாக்களை அவனிடம் கேட்டான். அவன் விடை யறியாது தன் பிதாவுடன் சைவலி பால் வரப் பிதா சைவலியிடம் வினாக்களுக்கு விடை வேண்டினன். சைவலி மனம் வருந்தி ஆருணேயனது பிதாவை நோக்கி "என்னோடு சிலகால மிங்கே யிரும். ஒரு பிராமணனும் இதனை இன்றுகாறும் அறிந்திலராகலானும் நீர் அறிய விரும்புகின்றமையானும், க்ஷத்திரியர்க்கே இதனை எல்லாருக்கும் அறிவுறுக்கும் உரிமை உண்டாயிருக்கின்றது என்று கூறினன்" என்பதே. இச்சரித்திரத்தில் நம்மவர் கூறுமாறு 'பரம்பரையாய் அங்கிவழி பாடியற்றிய பிராமணர் நால்வர்' என்று கூறியிருக்கவில்லை. மேலும் அவ்வரசனைப் பாஞ்சாலதேயத் தரசனென்று கூறியிருக்கின்றது. திராவிட அரசனெனக் கூறவில்லை. பிராமணர், க்ஷத்திரியர் என்னும் பெயர்களால் அவர்கள் குறிப்பிடப்பட்டிருப்பதால், அவர்கள் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரரெனும் நாற்பால் வகையினருளாவர். பிராமணருக்கும் க்ஷத்திரியருக்கும் மிக்க நெருக்கமுண்டு. விசுவாமித்திராதியோர் சரிதைகளே அதற்குச் சான்று. க்ஷத்திரியர்கள் கன்னிகைகளை பிராமணர்கள் மணந்து வாழ்ந்த கதைகள் அநேகம் கேட்டுளோம். இந்த க்ஷத்திரிய வம்சத்துக்கும் ஆருணேயனெனும் பிராமண குலத்துக்கும் சம்பந்தமிருந்திருக்கலாம். அதனாலன்றோ, இப்பிராமணச் சிறுவனை இவ்வரசன் ஏ 'குமாரானு' என விளித்ததாக வடமொழி மந்திரங் கூறிற்று. இன்னமுங் காசி, கேகய நாடுகளின் அரசர்களிடமும் சில விப்பிரர் ஞானோபதேசங் கேட்டதாக மற்றும் உபநிடதங்களும் சாந்தோக்கிய உபநிதடமும் கூறும். வடவேங்கடம் என்பதே தமிழ் நாட்டு வடவெல்லையெனச் சுமார் ௰௲-ஆண்டுகட்கு முன்னரே உண்டாகிய தொல்காப்பியச் சிறப்புப்பாயிரங்கூறும். பாஞ்சாலம், கேகயம், காசி முதலியன ஆரியாவர்த்தமெனும் நாட்டைச் சார்ந்தவை. இந்நாடுகளில் தமிழ் அரசர்கள் பிராமண குலத்தாருக்கு ஞானோபதேசஞ் செய்யும் நிலைமையில் வீற்றிருந்து அரசாட்சி செய்து வந்தார்களென்பதற்குப் போதுமான சான்று காட்டாது அவர் யூகத்தைக்கொண்டே கூறிய கூற்றுச் சான்றோர் அவை ஏறாது. தமிழ் நாட்டுப் பண்டைய மன்னர் சரித்திரம்கூறும் புறநானூறு முதலிய சங்ககாலத்துத் தமிழ் நூல்களி லெதிலாவது தமிழரசர்கள் அந்தணர்க்காயினும் ஏனையோருக்காயினும் குரவர்களாயிருந்து உபாசனைக் கிரமங்களைப் போதித்ததாகக் கூறியிருக்கவில்லை. ஆனால், கூறப்பட்டிருப்பதென்னெனின் தமிழ் மன்னர்கள் அந்தணர்களைக் குரவர்களாகக்

கொண்டு யாகாதி கிருத்தியங்களை நடத்தி அவர்களை வணங்கி அவர்களிடம் ஆசி பெற்றுக்கொண்டார்களென்பதே. "அற்றிடினே யந்தணருள் ஞானி அடுத்த வன்பாற் பெற்றிடுக அந்தணன் மெய்ப்பேறு" என்னுஞ் சைவ சமயநெறித் திருக்குறளில் விதித்த விதிப்படி இப்பிராமணர்கள் க்ஷத்திரியர்களிடம் ஞானோபதேசம் பெற்றார்களென உணரவேண்டும். அன்றியும் உபாசனா மார்க்கம் சோபான முறையாகப் பூர்வ வினையை யொட்டிப் பலவிதங்களாயிருக்கும். பிராமணர்கள் எல்லோரும் சமஷ்டியாக முற்றிலுந் தெரிந்திருப்பார்களென்று நினைப்பது பொருந்தாததொன்றே "அறுநான்கிரட்டி யிளமை நல்லியாண்டாறினிற் கழிப்பிய வறனவில் கொள்கை, மூன்று வகைக் குறித்த முத்தீச் செல்வத் திருபிறப்பாளர்" என நக்கீரதேவ நாயனார் மொழிந்தார். இதனால் வேதப் பயிற்சியும் வேதவொழுக்கமும் எளிதில் கிடைப்பனவன்றென்பது பெறப்பட்டது. மேலும் உபநிடதங்களிற் காணப்படும் இவ்வகைச் சரித்திரங்களெல்லாம், அவற்றை வாசிப்போர் உள்ளத்தில் நன்றாய்ப் பதியும்பொருட்டு ஓர் அரசனிடம் ஒருவன் சென்றதுபோலவும் அவன் விடை பகர்ந்ததுபோலவும் பலவிதமாக சரித்திரரூபமாகப் புனைந்து அறிவுறுத்தப்பட்டிருக்கின்றனவென்பதே பெரியோர்கள் கொள்கை. சாந்தோக்கிய உபநிடத்திலேயே ஐந்தாவது பிரபாடகம் முதலாவது கண்டத்திலே பதினைந்து மந்திரமுடைய ஓர் சரித்திரமுண்டு. அஃதாவது வாக்கு, நேத்திரம், செவி, மனது இவைகளில் ஒவ்வொன்றும் நான் பெரியன் நான் பெரியன் என்று பூசலிட்டுப் பிரமனிடம் போய்க் கேட்டுத் தெரிந்தும், இவைகள் தாமே அநுபவித்துத் தெளிந்தும் பின்னர் தங்களுக்குமேல் ஆன்மாவே பெரிதென்று தெரிந்துகொண்டனவாம். கண் செவி ஆதிய எவ்வாறு பேசும்? எவ்வாறு பிரமனிடம் போகும்? ஆதலால், கேட்போருங் கற்போரும் அவர்கள் உள்ளத்திற் பசுமரத்தாணிபோல் நிறுவற்பொருட்டு ஞானவித்தை அலங்காரப்படுத்திக் காட்டப்பட்டிருப்பதாகவே கொள்ளல் வேண்டும். இவ்வுண்மை, பிரமசூத்திரம் மூன்றும் அத்தியாயம் நான்காம் பாதம் நான்காவது அதிகரணமாகிய பாரிப் பிலவாதிகரணம் (உந, உச) "உப "நிடதங்களில் நேருங் கதைகள் உபாசனா விதிகளோடிசைந்து "அவைகளைத் துதிக்கும்பொருட்டே யுள்ளன என்கின்றது" என நீலகண்ட பாஷ்யத்தில் கூறியிருப்பதனானிலைபெறும். ஆனதால் நம்மவர் கூற்று விகற்பக் கூற்றே.

நவீனமார்க்கங் கற்பிக்கும் யாரேனுமொருவர் அதற்கு ஆதரவு பூர்வீக கிரந்தங்களில் காட்டவேண்டுமானால், உள்ளதை உள்ளபடியே காட்டி மேல் ஆட்சேபனை சமாதானஞ்

சொல்லித் தம் உரையைத் தாபிக்கப் புகின் அவ்வுரையை மேலோர் ஒருவாறு மதிப்பர். அவ்வாறன்றிப் பூர்வீக கிரந்தங்களின் வாக்கியங்களையும் அர்த்தங்களையும் பேதப்படுத்தியெழுதித் தம் நவீனக் கொள்கையைத் தாபிக்கப் புகுவாராயின், அக்கொள்கையைச் சற்றும் மதியாது இயற்றினோரையும் எள்ளி ஏளனஞ் செய்வார்கள். இது உலக வழக்கு.

நஅ. நிற்க, ஏற்கனவே நமது சைவ மரபுக்குரிய வேளாண் மாந்தரிற் பலர் சைவ வொழுக்கங்களைக் கைவிட்டுக் கடவுள் எங்குமில்லையா? கோயிலுக்குப் போவானேன். கடவுள் சுத்தமாய்க் கொடுத்த முகத்திற் சாம்பலைத் தேய்ப்பானேன். மஞ்சளைப் பூசுவானேன் என்று சொல்லிக்கொண்டு மாட்டுக்கொழுப்புச் சேர்ந்த சோப்புக்கட்டியைத் தேய்த்துக் கொள்வார்கள். அநுட்டான மந்திரங்களில் சிகாயை நமவெனச் சிகைக்கு மந்திரமேற்பட்டிருக்கத் தலையை மொட்டையடித்துக் கொள்வார்கள், கரிச் சட்டியைத் தலையிற் கவிழ்த்ததுபோலத் தலை முழுமையிலும் உரோமங்களைக் கத்திரித்துக்கொள்வார்கள். எச்சிலேது தீட்டு ஏது என்று சொல்லித் தர்க்கம்பேசி நீருருந்தும் பாத்திரங்களை வாய்க்குள் உண்ணாக்குமட்டும் புகச்செய்து நீருருந்துவார்கள். தீட்சையென்பதென்ன பணஞ் சம்பாதிக்கப் பண்டாரங்கள் கற்பித்த வழி. கைகால்களை அசைத்துக்கொண்டு மூக்கைப் பிடித்துக் கொண்டிருப்பதுதானா கடவுளை வழிபடும் வழி மனதில் நினைத்தலே தக்க வழிபாமெனன்பார்கள். 'பச்சிலையுங் கிள்ளப்படுமோ பராபரமே' எனத் தாயுமானவரே சொல்லியிருக்க, வீணாகப் பச்சிலை புட்பங்களைக் குடலை குடலையாகப் பறித்துக் கிள்ளிக் கிள்ளி யெறிவதுதான் பூசையாவென்று நகையாடுவர். பெண்டுகள் மாதவிடாய் ஆனால் ஏன் அவர்களை ஒதுக்கமாய்த் தனியே வைக்கவேண்டும், ஸ்நானஞ் செய்துவிட்டால் தேக அழுக்கு போய்விடுமே என்று சொல்லி அந்தப்படி நடக்க முயலுகிறார்கள். தாய்தந்தையருக்குத் திதி கொடுப்பானேன், இறந்துபோனவர்கள் நம்மிடம் வந்து வாங்கிப் புசிக்கின்றார்களா? இவையெல்லாம் பிழைப்பு நிமித்தங் கட்டிய கட்டுப்பாடு என்று சொல்லித் தாய்தகப்பன திவசத்தையும் அறவே ஒழித்தும் விட்டார்கள். ஆங்கிலங் கற்று வெள்ளைக்க உத்தியோக முறையிற் சிறப்புற்று விளங்கும் பாரம்பரை வேளாளச் சைவ உத்தம குலத்திற் றோன்றிய சிலர், அவர்கள் மூதாதையோர் வழக்கிற்கும், சைவ சமய சந்தானாசாரியர்கள கட்டளைக்கும் முற்றிலும் முரணாக, உயர்குலம், தாழ்குலமென்பது வீண் கட்டுப்பாடெனக்கூறி, மக்களாவார் யாவராயினும், அவருடன் ஒருங்கிருந்து உணவுகொள்ளவும்

பழகிக் கொண்டார்கள். பொது நன்மையையும் நம் நாட்டின் முன்னேற்றத்தையும் நாடுபவர்கள் பூர்வஜன்ம தவப்பயனாக அவர்களுக்குக் கிடைத்த அரிதான உரிமைப் பொருளாகிய சிறப்பின் தன்மையை யிழந்துவிடாமலே தொழில் நடத்தலாமே.

'அடுக்கியகோடி பெறினுங்குடிப்பிறந்தார் குன்றுவ செய்தலிலர்.''

''குற்றமிலனாய்க் குடிசெய்துவாழ்வானைச் சுற்றமாச்சுற்று முலகு.''

''ஒழுக்கமும் வாய்மையும்நாணுமிம்மூன்று மிழுக்கார்குடிப்பிறந்தார்.''

என்னும் நம் நீதிநூலின் வாக்கியங்களின் உண்மையை உணராது மேனாட்டுக் கல்விப் பயிற்சியின் பெருக்கத்தால் வந்த கெடுதிகள் இவைபோல்வன பல நம் நாட்டில் பயிராகி வருகின்ற இக் கொடுங் கலிகாலத்தே, மேலே உகO-ம் பக்கத்தில் காட்டிய செய்யுட்களடங்கிய, சித்தர் நூல்களென்னப்படும் போலி நூல்களையும் படிப்பார்களேயானால் காற்றோடு சேர்ந்த தீப்போலாமென்பதில் ஐயுறவு கொஞ்சமுமில்லை. ஆதலால் நமக்குத் தரப்பட்ட சைவ நூல்களாகிய பன்னிரு திருமுறைகளையும் ஓதியுணர்ந்து அவைகளில் விதித்த வழியே யொழுகு வதுஞ் சித்தாந்தசாத்திரங்களின்படி சிவோபாசனை செய்வதுமே சைவப் பெருமக்கள் கடமையாம். இது சத்தியம். சத்தியம். முக்காலுஞ் சத்தியம்.

இன்னமொரு பிரார்த்தனை :—

பண்டையத்தமிழ்ச் சைவசமயக்குடியிற் பிறந்த பரம்பரைச் சைவப்பெருமக்களுக்கு இன்றியமையாத விஷயமொன்றுளது. உலகத்திலுள்ள ஆஸ்திக சமயக்கொள்கைகளில் சைவ சமயமே சிறந்தது. மற்றவை சைவ சமயத்தின் அங்கங்களே. இராஜாங்கத்திலமர்ந்தது வைதிகசைவ' மென நந்தாயுமானப் பெருந்தகையார் அருளியிருப்பதே எம்மொழிக்குச் சான்று. அப்பமூர்த்திகளும் 'பொதுநீக்கித்தனை நினைய வல்லோர்க்கென்றும் பெருந்துணையை' எனவும், மாணிக்கவாசகரும் 'பொது விணிற்றீர்த் தென்னையாண்டோ' னெனவும் அருளி யிருக்கின்றார்கள். கடவுள் ஆதிய பொதுமொழிகள் எல்லா மதத்தோர்களாலுங் கொள்ளற்பாலவை. இக்கூற்று நான்முகக்கடவுள், காவற் கடவுள், ஆலமர் கடவுள், முருகக் கடவுள், விநாயகக் கடவுள் அருகக் கடவுள் ஆதிய மொழிகளால் உறுதிப்படும். 'சிவம்' ஆதிய சிறப்புப் பெயர்களே சைவமதத்தினர் கொள்ளத்தக்கவை. இக்காலம் மேனாட்டு ஆசாரணையைக் கைக்கொண்டு நமது சைவசமய உண்மை யறியாது அவர்கள் சமயங்களுடன் நமது சைவ சமயத்தையும் ஒப்பக்காட்ட விச்சை

கொண்டு நம்மவர்களிற் சிலர், அவர்களெழுதி வரும் வியாசங்களில் கடவுண்மறை, கடவுண்முறை, கடவுள், உயிர், உலகம், என்பனவாதிய பொதுச் சொற்களை உபயோகித்து வருவதில் மிக்க விருப்பமுடையவர்களா யிருக்கின்றார்கள். பண்டைக் காலந்தொட்டு நம் முன்னோர்கள் ஒருவருக்கொருவர் எழுதிக் கொள்ளும் நிருபங்களின் தொடக்கத்திலும் நூல்களின் ஆரம்பத்திலும் இறுதியிலும், சிவமயம், கணபதி துணை, முருகன் துணை யென எழுதுவதே நஞ்சமயக் கொள்கையின் சாம்பிரதாய வழக்கம். சைவ சமயத்தின் உண்மைப் பேற்றைப் பயப்பதற்கு சாதனமாகிய அவ்வழக்கத்தை அறவே விட்டுவிட்டு 'ஓம் தத்சத்' 'கடவுள் துணை' என்பனவாதிய பொதுமொழிப் பிரயோகங்களைக் கைக்கொண்டு வருகின்றார்கள்: ஒன்றுமெழுதாது, இக்காலம் நம்மவரிற் சிலர் தலையை முண்டிதஞ் செய்து கொள்வது போலப் பிள்ளையார் சுழிகூட வெழுதாது மொட்டையாய் விட்டு மேனாட்டார் கொள்கையைக் கைப்பற்றியும் வருகின்றார்கள். எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும் சிவநாமத்தை மொழிவதே நஞ்சமயக்கொள்கையின் மேலானதாய (ஞானம்) பலனைப்பயக்கும். சிவம் என்ற மொழியே எல்லா மொழிகட்கும் மேலாய ஓரே மொழி. 'வேதநான்கினு மெய்ப்பொருளாவது நாதனும நமச்சிவாயவே' என்றும் 'சிவனெனு நாமந்தனக்கே யுடைய செம்மேனி யெம்மான்' என்றும், 'நானேயோ தவஞ் செய்தேன் சிவாயநம வெனப்பெற்றேன்' என்றும், "சிவ சிவ வென்கிலர் தீவினையாளர் சிவசிவ வென்றிடத் தீவினை மாளுஞ் சிவசிவ வென்றிடத் தேவருமாவர், சிவசிவ வென்னச் சிவகதி தானே' என்றும் 'சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க் கபாய மொருநாளுமில்லை' என்றும், இன்னமும் நம் பெருமக்களெல்லோரும ஓரே மொழியாய் 'சிவ' என்னும் மந்திரத்தின் அளவற்ற ஆற்றலை யெடுத்தெடுத்துப் புகன்றிருக்கின்றார்கள். சைவ குலத்திற் பிறந்த நமக்கு இயற்கையிலேயே கிடைத்து நமது உள்ளங் கையில் வற்றாது முற்றாதுபெருகியிருக்கும், பிறப்பிறப்பாகிய பெருநோயைத் தீர்க்கவல்ல, சிவானந்தத் தேனைக் கைவிட்டு உடம்பின் பிணிதீர்க்கும் வேப்பெண்ணெய்யைத் தேடுவார்போன்று ஒழுகுவது கூடாவொழுக்கமேயாம். இது பற்றியன்றோ அருணந்தி சிவாச்சாரியர் "சைவமாஞ் சமயஞ் சாருமூழ் பெறலரிது' எனவருளினார். மெய்கண்டசிவனாரும் 'சிவமென்னு மந்ததர' வெனத் தமது சைவமாணாக்கனைக் கூவி யழைத்தார். நமது சமயத்தின் பெயர் சைவ சமயம், கடவுட் சமயமல்ல; நாம் வணங்கத் தோன்றியிருக்கும் ஆலயங்களின் பெயர் சிவன் கோயில், கடவுள் கோயிலல்ல;

நமக்கு நியமமாக ஜெபித்தற்குரிய மந்திரம் சிவாய நம, கட வுளாய நம அல்ல; நமது காயத்திரி மந்திரம் சிவகாயத்திரி கடவுள் காயத்திரி அல்ல; நாம் நியமமாகச் செய்யும் பூசை சிவபூஜை, கடவுட் பூஜையல்ல; நாம் கற்கும் சமயநூல்களின் பெயர்கள் சிவஞானபோதம், சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம், சிவதருமோத்தரம் ஆகிய நூல்களே, கடவுள் ஞானபோதம், கடவுள் ஞான சித்தியார் கடவுட் பிரகாசம் என்ற நூல்களல்ல, நாம் அடையவேண்டி முயலும் ஞானம் சிவஞானமேயாம், கடவுள் ஞானமல்ல; "சிவமாக்கி யெனையாண்ட அத்தன்" என மாணிக்கவாசக ரருளினரே யொழிய கடவுளாக்கி யென வருளினரல்லர். * ஆனதால் நஞ் சைவகுலத் தோன்றல்களாகிய மக்களும் மாணவர்களும், சைவநெறியில் விருப்புற்று அவ்வழி நடக்கும் ஏனையோர்களும் இவ்வாசகங்களைக் கூர்ந்து நோக்கிச் சிவமென்ற பெயரையே சிறப்புப் பெயராகக்கொண்டு "இருக்கினு நிற்கும்போது மிரவு கண்டுயிலும்போதும், பொருக்கென நடக்கும்போதும் பொருந்தியூண் டெய்க்கும்போதும், முருக்கிதழ்க் கனிவாயாரை முயங்கி நெஞ் சழியும்போதுந், திருக்களாவுடைய நம்பா சிந்தையுன் பாலதாமே." என்னும் அதிமதுர அற்புதத் திருவாக்கின் ஆணைப்படி ஒழுகி வரவேண்டுமெனப் பன்முறையும் வற்புறுத்திப் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்கின்றோம்.

நிகூ. இவ்வாராய்ச்சியை இத்துடன் நிறுத்தி, மறை நான்மறை, அந்தணர், பார்ப்பார் என்னுஞ் சொற்களின் வழக்கைப்பின்னுமோர் முறையிற் சிறப்பு வகையாய் ஆராய்ந்து சித்தாந்தப் படுத்துவாம்.

தமிழ்மக்களுக்குத் தொல்காப்பியம் என்னும் நூலே தமிழ் நூல்களுக் கெல்லாம் முந்தியதாய் நின்றுலாவுகின்றதென்பது எவராலும் மறுக்கப்படாத தொன்றே. இது, நம் நூல்களின் கணக்குப்படி குறைந்தது ஏழாயிரமாண்டுகட்கு முன்தோன்றியுள்ளது. இந்நூலின் சிறப்புப்பாயிரத்தில் நான்மறை யென்ற சொற்றொடர் காண்கிறோம். அதற்குப் பொருள் "நான்கு கூறுமாய் மறைந்த பொருளு முடைமையான் "நான் "மறை" யென்றார் அவை தைத்திரியமும் பௌடிகமும்

*ஆனல், சிவம் கடவுள் அல்லரோவெனக் குதர்க்கவாதிகள் வினவலாம். 'சிவசிவ வென்கிலர், தீவினையாளர்' எனத் திருமூலமா யோகிகள் குறிப்பிட்டவர்களில் முதற் றும்பூலம் பெறுபவர்கள் இவர்களே யாவர். சிவவென்ற மந்திரத்தின் முதலெழுத்தே கடவுள் என்ற பொதுச் சொல்லின் பொருளைக்கொண்டிருப்பதன் மேலும் சைவருக்கு முத்திசாதனமாகிய சூட்சம ரகசியப் பொருளும் அம்மந்திரத்திலுளது.

“தலவாகாரமுஞ் சாமவேதமுமாம், இனிஇருக்கும் யசுவும் “சாமமும் அதர்வணமு மென்பாருமுளர். அது பொருந்தாது. “இவர் இந்நூல் செய்தபின்னர் வேதவியாதர் சின்னாட்பல் “பிணிச்சிற்றறிவினோர்க்கு நான்கு கூறுக இவற்றைச் “செய்தாராதலின்” எனஉரை ஆசிரியர் உரைகண்டார். இப் பாயிரச் சூத்திரத்துக்கு விருத்தி உரைசெய்த சிவஞான முனிவோராதியதமிழ்ப் பெருமக்கள் யாவரும் இவ்வுரையை மறுத்திலர். ஆதலால்இப்போது வழங்கும் வடமொழி நான் மறைகள் தோன்றுவதன் முன்னரே வடமொழியில் நான்மறை கள் நின்று நிலாவின வென்பது வெளிப்படை. இனித் தொல் காப்பியத்தில், தொல்காப்பியர் முதன்முதல் இயற்றிய எழுத்தின் பிறப்பியல் உ0-வது சூத்திரத்தில் கூறுவதாவது:— தமிழ் எழுத்துக்கள் உந்தியினின் றெழும் காற்றாற் பிறப்பன, வடமொழி யெழுத்துக்கள் உந்தியினின்றும் மூலாதாரத்தி னின்றும் எழும் ஓசையாற்பிறப்பன, அவற்றின ஓசையையும் மாத்திரைகளையும் அந்தணர்களது மறையிற் காணலாம், அதை யிந்நூலில் சொல்ல இயலாது, உந்தியினின்று பிறக்கும் எழுத்து களின் மாத்திரைகளையே கூறினேனென்றார். எச்ச வியலில் “இயற்சொ றிரிசொல், திசைச்சொல், வடசொல் என் றனைத்தே செய்யுளீட்டச் சொல்லே” என்றும் “அந்நாற் சொல்லுந் தொடுக்குங்காலை ✻ ✻ நாட்டல் வலிய என்மனார் புலவர்” என்றும் தொல்காப்பியர் கூறினர். இதனாலுணரப் படுவது யாதெனின், தமிழ்ச் செய்யுளிடத்து வடமொழியும் விரவப்பெறுமென்றும், அவ்வகைக்கும் தொல்காப்பியர் இலக் கணங்கூறினரென்றும் அவ்வாறு தொல்காப்பியர் கூறியது, அவர் ஆசிரியர் அகத்தியனார் கூறிய இலக்கணவழியே என்ப தும் பெற்றாம். இதனால் அகத்தியர் கூறிய அகத்தியத்தி னும் வடமொழி வழக்கு இருந்ததென்பதே நிலைபெறும்.

அகத்தியனாரும் தாமே இலக்கணம் வகுத்தவரல்லர். அவருக்கு முன்னரே தமிழ்நாட்டில் தமிழ் வழக்கு இருந்த தென்றே தமிழ் நூல்கள் கூறுகின்றமையைக்கொண்டு அதற்கு முந்தியிருந்த இலக்கண நூல்களை ஆதாரவாகக்கொண்டே அகத் தியரும் இலக்கணம் வகுத்தாரென்பது தமிழ் ஆசிரியர்கள் கருத்து. ஆதலால் வடமொழியும் வடமொழி வேதமும் ஆதி தொட்டே நந்தமிழ் நாட்டிற் பரந்து நிலாவியதென்பதே உறுதி. தொல்காப்பியத்தில் சமயக்கொள்கைகளையும் அச்சமயக் கட வுளர்களை வழிபடும் முறைமையையும் விவரித்துக்கூறவேயில்லை. சிவம் என்ற பெயரே அந்நூலில் காணவில்லை. ஆனால் தொல் காப்பிய நூல் எழுவதற்கு முன்னரே அகத்தியர் தென்னாட் டுக்கு எழுந்தருளியபோதே தமிழ் நாட்டில் சிவாலயம் விண்டு

ஆலயம் தோன்றியிருந்தனவாகவே தெரிகின்றது. திருக்குற்றாலம் என்னுந் தலம் விஷ்ணு ஆலயமாயிருந்ததாயும் அதைச் சிவ தலமாக அகத்தியனார் ஆக்கியதாயுங் கந்த புராணம் கூறும். வான்மீகர் இயற்றிய வடமொழி இராமாயணத்துள் சுவேதாரணிய சைவதலங் கூறப்பட்டுள்ளது. மதுரையிற் சோமசுந்தரக் கடவுளை அகத்தியனார் வணங்கியதாகவுஞ் சைவ நூல்கள் கூறும். தொல்காப்பியம் தமிழ் மொழிக்கு இலக்கணமாதலின் சமயக் கொள்கை ஒன்றும் அதில் விவரித்துக் காட்டவில்லையென்பதே உறுதி. கடைச்சங்க நூல்கள் இயற்றினோர்க்குத் தொல்காப்பியமே இலக்கணமாம். ஆதலால் சங்க நூல்களிற் காணப்படும், மறை, நான்மறை என்ற சொற்களுக்குத் தொல்காப்பியர் கூறிய இலக்கண முறைப்படியே பொருள் கொள்ளவேண்டுவது நம்மனோர் கடமை. நமது யுக்திப்படி பொருள் கற்பிப்பதானால் இலக்கணமெனும் ஒரு நூல் ஏதுக்குத் தோன்றியது. ஒவ்வொருவரும் அவரவர் மனம்போலப் பொருள் கூறினால் தமிழ்மொழி இலக்கண வரம்புக்குட்படாத சாமானிய பாஷையாம். புறநானூற்றில் மறை, நான்மறையென்று காணப்படுஞ் சொற்களுக்குப் பொருள் வடமொழி வேதம் என்றே இவ்வாராய்ச்சியில் மேலே காட்டப்பட்டுளது. பின்னும் சில மேற்கோள்கள் அவ்வகைக்கு சங்க நூல்களிலிருந்து கீழே குறிக்கப்படுகின்றன.

(க) "அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர், திறம்புரி பசும்புற் பரப்பினர்" — பு. நானூறு.

(உ) "அருமறை நாவினந் தணர்க்காயினும்" சிறுபாணாற்றுப்படை.

(ங) "வளைவாய்க்கிள்ளை மறைவிளிபயிற்று, மறைகாப்பாளருறை பதி" — பெரும்பாணாற்றுப்படை.

(ச) நான்மறையோர் புகழ் பரப்பியும்" — பட்டினப்பாலை.

(ரு) "மறையறிப அந்தணர் புலவர்" — நான்மணிக்கடிகை.

(சு) "வரன் முறையான் வந்த நான்மறையாளர், மேன்முறைப் பாற்றங் குரவரைப்போ லொழுகல். நான்முறையாளர் துணிபு" — ஆசாரக்கோவை.

மற்றும் உள. இவைகளால், அந்தந்த நூலாக்கியோர் காலத்து நிகழ்ந்தவற்றைக்கண்டு மறை, நான்மறை யென்ற சொல் வடமொழி வேதங்களைக்குறித்தே ஆளப்பட்டிருக்கின்றனவென்று வெளியாகின்றது. உரையாசிரியர்களும் அவ்வாறே உரை கண்டார்கள். இனி அந்தணர், பார்ப்பார், எனுஞ் சொற்கள் எப்பொருளைக்கொண்டு சங்க நூல்களிற் பிரயோகப்படுத்தப் பட்டிருக்கின்றன வென்பதைப் பார்ப்போம்.

(௪) ஆவுமானியற் பார்ப்பன மாக்களும் * * *
எம்மம்பு கடிது விடுது நும்மரண் சேர்தும்—பு. நா.

(௨) ஆன்முலையறுத்த வறனி லோர்க்கும் மாணிழை மகளிர்
கருச்சிதைத்தோர்க்கும் பார்ப்பார்த்தப்பிய
கொடுமை யோர்க்கும்— பு. நா.

(௩) நன் பலகேள்வி முற்றிய வேள்வியந்தணர்க்—கருங்கல
நீரொடு சிதறிப் பெருந்தகை— பு. நா.

௪. ஏற்றபார்ப்பார்க் கீர்ங்கைநிறையப்-பூவும்பொன்னும்
புனல்படச்சொரிந்து பு. நா

௫. செறுவிற்பூத்த சேயிதழ்த்தாமரை யறுதொழிலந்தணரறம்புரிந்
தெடுத்த—தீயொடு விளங்குநாடன் பு. நா

௬. ஓதல்வேட்டல் அவைபிறர்ச்செய்தல், ஈதலேற்றல் என்றாறு
புரிந்தொழுகு மறம்புரியந்தணர் பதிற்றுப்பத்து

௭. அறங்கரைந்து வயங்கியநாவிற் பிறங்கியவுரைசால் வேள்வி
முடித்த கேள்விஅந்தணர் பதிற்றுப்பத்து

௮. அருமறை நாவினந்தணர்க் காயினும் சி. பாணாற்றுப்படை

௯. கேள்வி அந்தணர் அருங்கடனிறுத்த வேள்வித்தூணத்தசைஇ"
[பெ. பாணாற்றுப்படை]

௧௦. சிறந்தவேதம் விளங்கப்பாடி ... .. குன்றுகுயின்றன்ன அந்த
ணர்பள்ளியும் மதுரைக்காஞ்சி

௧௧. அந்தணரினல்ல பிறப்பில்லை நான்மணிக்கடிகை

௧௨. பார்ப்பார் பசித்தவர் தவசிகள்......தாப்பால், நீண்டாரால்எண்
ணாதுநீத்தவர் மண்ணாண்டுபெண்டாரம் பற்றவாழ்வர்—ஏலாதி

௧௩. பார்ப்பார் அறவோர் பசுப்பத்தினிப்பெண்டிர் மூத்தோர்
குழவியெனுமிவரைக் கைவிட்டுத் தீத்திறத்தார் பக்கமே
சேர் கென்று சிலப்பதிகாரம்

இன்னம் பலவுள, விரிவஞ்சி விடுத்தனம். இம்மேற்கோள்களால், அந்தணர் பார்ப்பார் என்போர், அவர்கள் பிறப்பினாலேயே, மேன்பட்டவரெனவும், தொல்காப்பியர் சொன்னபடி அவர்கள் வேதம் ஓதல் வேள்விவேட்டல் ஆகிய அறுதொழிற் பூண்டுளோரெனவும் ஆதலால் அவர்களை காரணம் பயன் கருதாது பண்டையோர் உபசரித்துப் பாதுகாத்து வந்தனரெனவும் விளக்கமாவதைக் காணலாம். இன்னமும் அகத்தியனார் மாணாக்கர் பன்னிருவரியற்றிய பன்னிருபடலமென்னும் முதனூலுக்குப் புறப்பொருள் வெண்பாமாலையென்னும் வழிநூலியற்றிய சேரர்பரம்பரை ஐயனாரிதனார் என்னும் மூதறிவாளர், அவ்வழி நூலில், வேதம், நான்மறை, பார்ப்பார், அந்தணர், மறையோர், வேள்வி ஆகிய இம்மொழிகளை யெடுத்தாண்டிருக்கிற செய்யுட்கள் வருமாறு,

### வாகைப்படலம், பார்ப்பனவாகை.

"ஓதங் கரைதவழ் நீர் வேலியுலகினுள்
"வேதங்களை கண்டான் வீற்றிருக்கு—மேதகு
"சுடுசுடர் தானாகிச் சொல்லவே வீழ்ந்த
"விடுசுடர் வேள்வி யகத்து"

### பார்ப்பன முல்லை.

"ஒல்லெனீர் ஞாலத் துணர்வோ விழுமிதே
"நல்லிசை முச்செந்தீ நான்மறையோன்—செல்லவும்
"வென்றன்றி மீளா விறல்வேந்தர் வெம்பகை
"யென்றன்றி மீண்டதிலர்"

### பாடாண் படலம்.

*கபிலைகண்ணிய புண்ணியனிலை*

*அண்ணனுண்மறை யந்தணாளர்க்குக்-கண்ணியகபிலை நிலையுரைத்தது.*

"பருக்காழுஞ் செம்பொன்னும் பார்ப்பார் முகப்பக்
"குருக்கட் கபிலை கொடுத்தான்—செருக்கோ
"டிடிமுர சத்தானை யிகலிரிய வெங்கோன்
"கடிமுர சங்காலைச் செய்"

### வேள்வி நிலை.

"கேள்வி மறையோர் கிளைமகிழ்த லென்வியப்பாம்
"வேள்விவிறல் வேந்தன்றான் வேட்ப—நீள்விசும்பி
"னீர்ந்தாரிமை யோருமெய்தி யழல்வாயா
"லார்ந்தார் முறையாலவி"

இச்செய்யுட்களால் தொல்காப்பியத்தில் 'அறுவகைப் பட்ட' என்னுஞ் சூத்திரத்தின் "அறுவகைப்பட்ட பார்ப் பனப்பக்கமும்" என்ற பகுதியை அமைத்த அந்நூலாசிரிய ரின் கருத்து, நம்மவர் கொள்கைப்படி, பார்ப்பாரென்றால் நூலைப் பார்ப்பவரல்லரென்பதும், அந்தணரென்றால் தமிழ் முனிவரல்லரென்பதும், நான்மறை யென்றால் கடலில் மறைந்து போனதாகச் சொல்லப்படும் தமிழ் நான்மறை யல்லவென்ப தும், வேள்வி யென்றால் சைவநூலிற் கூறப்படும் ஐவகை யாக மல்ல வென்பதும் வெள்ளிடைமலை போல் விளங்கும். புறப் பொருள் வெண்பாமாலை யென்னும் நூல் புறப்பொருளின் இலக்கண இலக்கியத்தைச் செந்தமிழ்க் கவிவாணர் பல்லோ ருக்குங் காட்ட எழுந்ததென்பதைத் தமிழுலகு அறிந்ததே.

மற்றொரு வகையாகவும் ஆராய்வாம். மேற்காட்டிய நூல்களெல்லாம் அறம் பொருள் இன்பத்தையே விசேடமாய்க் கூறியவை. வீட்டு நெறியை விரித்துக் கூறுவனவல்ல. வேதம், மறை, நான்மறை, வேள்வி, அந்தணர், பார்ப்பார், ஆதிய பாகுபாடுகளும் அவற்றின் பொருள்களும் இன்னவை இன்

னவை எனத் தேவார திருவாசகமாதிய தமிழ் முறைகளின் ஆதாரவைக்கொண்டு அச்சொற்களின் பொருளை அறிவதே நடுவுநிலைமை காண்பாருக்கு உறுதியாம். ஆதலால் நந்தமிழ்த் திருமுறைகளில் அம்மொழிகளை எவ்வகைப் பொருளில் நம் சமயாசாரியர்கள் பிரயோகித்திருக்கின்றார்களென்பதை அவர்களது அருள் வாக்கைக் கொண்டே ஈண்டுக் காட்டுவாம். வாசிப்போர் சலிப்படையாது, உண்மை காணும்பொருட்டுக் கவனித்துப் பார்க்க வேண்டப்படுகின்றார்கள்.

சம்பந்தர்

க. பொய்ம்மொழியா மறையோர்களேத்த ப்புகலி நிலாவிய புண்ணியனே

உ. மெய்ம்மொழி நான்மறையோர் மிழலைவிண்ணிழி கோயில் விரும்பியதே

ந. நாமருகேள்வியர் வேள்வியோவா நான்மறையோர் வழிபாடு செய்ய மாமருவுமணிக்கோயில் மெய்மருகல்

ச. அங்கமும் வேதமுமோதுநாவர் அந்தணர்நாளும் அடிபரவ மங்குல் மதிதவழு மாடவீதிமருகல்

ரு. கீதத்திசையோடுங் கேள்விக்கிடையோடும் வேதத்தொலி யோவா வீழிம்மிழலையே

சு. வேதமோர் கீதமுணர்வாணர் தொழுதேத்த மிகுவாசப் போதனைப்போன் மறையோர் பயிலும் புகலி

எ. ஒருங்கிய மனத்தோ—டிருபிறப்போர்ந்து முப்பொழுது குறை முடித்து நான்மறையோதி யைவகைவேள்வி யமைத்தாறங் கம் முதலெழுத்தோதி வரன்முறை பயின்றெழு வான் றனைவளர்க்கும் பிரமபுரம்.

அ. புந்தியி னான்மறை வழியே புற்பரப்பி நெய்சமிதை கையிற்கொண்டு வெந்தழலின் வேட்டுலகின்மிக அளிப்போர் சேருமூர் மிழலையாமே.

கூ. மந்திரந் தருமாமறையோர்க டவத்தவர் செந்திலங்கு மொழியவர் சேர்தெளிச் சேரியீர்

ய. வேதியர்கள் வேள்வி யொழியாது மறைநாளு மோதியரனும முரைத்திடு நள்ளாறே.

கக. சதுரம் மறைதான் றுதிசெய்து வணங்கும் மதுரம் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா

கஉ. பலகாலங்கள் வேதங்கள் பாதங்கள் போற்றி மலரால் வழிபாடு செய்மா மறைக்காடா

கந. வேதம் பலவோமம் வியந்தடிபோற்ற—வோதமுலவு மறைக்காட்டி லுறைவாய்.

கச. ஓமென்று மறை பயில்வார் பிரமபுரம்

கரு. கேள்வியார் நாடோறு மோதுநல் வேதத்தர் கேடிலா வேள்வி செயந்தணர் வேதியர் வீழிமிழலையார்

கசு. அந்தணர் வேள்வியு மரு மறைத்துழனியும் செந்தமிழ்க்
கீதழஞ் சீரிஞல் வளர்தர — — மழபாடி

கஎ. செந்தமிழர் தெய்வ மறைநாவர் செழுநற்கலைதெரிந்த
வவரோ டந்தமில் குணத்தவர்க ளர்ச்சனைகள் செய்ய
அமர்கின்ற அரஞர் — — மிழலை

கஅ. வாய்த்தழுத் தீததொழின் நான்மறையோர் வலம்புரம்

கக. ஆங்கெரிமூன் றமர்ந்துடனிருந்த அங்கையாலாகுதி
வேட்டு—மோங்கிய மறையோ ரோமமாம் புலியூர்

உ0. கற்றநால்வேத மங்கமோ ராறுங் கருத்திஞ ருத்தியாற்
றெரியு முற்றபல் புகழாரோமமாம் புலியூர்.

உக. மணந்திகழ் திசைகளெட்டு மேழிசையு மலியுமாறங்கமை
வேள்வி—யிணைந்த நால்வேத மூன்றெரியிரண்டு பிறப்பென
வொருமையா லுணருங், குணங்களு மவற்றின் கொள்
பொருள் குற்றமற்றவை யுற்றதுமெல்லா, முணர்ந்தவர்
வாழு மோமமாம் புலியூர்.

அப்பர்.

உஉ. அந்தணர்க் கருங்கல மருமறையா றங்கம்—நங்களுக்
கருங்கல நமச்சிவாயவே.

உரு. செந்தீயார் வேள்வியோவாத் தில்லைச் சிற்றம்பலம்

உச. திணைத்தனை வேதங்குன்றுத் தில்லைச்சிற்றம்பலம்

உரு. அங்கமாறு மருமறை நான்குடன் தங்குவேள்வியர்
தாம் பயிலுங் நகர். திருவாஞ்சியம்.

உசு. குசையு மங்கையிற் கோசகமுங் கொண்ட வசையின்
மங்கல வாசகர் வாழ்த்தவே.

உஎ. இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்து மிளங்கோயில்

உஅ. ஓதிமிக அந்தணர்கள் எரிமூன்ருேம்பு மூயர்புகழார்தரு
மோமாம் புலியூர்.

உக. ஒன்றியசீரிரு பிறப்பர்முத்தீ யோம்பு முயர்புகழ்
நான்மறை யோமாம் புலியூர்.

ங0. தகை நால்வேத—மோர்ந்தோதிப் பயில்வார்
வாழ்தரு மோமாம் புலியூர்.

ஙக. பார்கெழுவு புகழ்மறையோர் பயிலுமாடப்
பைம்பொழில் சேர்தரு மோமாம் புலியூர்.

சுந்தரர்.

ஙஉ. கலையடைந்த கலிகடியந்தண ரோமப் புகையாற்
கணமுகில் போன்றணி கிளருங் கலையநல்லூர்.

ஙங. சொற்பால பொருட்பால சுருதியொடு நான்குந்
தோத்திரமும் பலசொல்லித் துதித்திறை தன்றிறத்தே
கற்பாருங் கேட்பாரு மாயெங்கு நன்கார் கலைபயிலந்தணர்
வாழுங்கலைய நல்லூர்காணே.

௩௪. பொய்யாத வாய்மையாற் பொடிப்பூசிப் போற்றிசைத்துப் பூசைசெய்து, கையினு லெரியோம்பி மறைவளர்க்கு. மந்தணர்தங் கருப் பறியலூர்.

௩௫. மன்னிய சீர்மறை நாவனின்ற வூர்ப்பூசல்

௩௬ இருக்குவா யந்தணர்க ளொழுபிறப்பு ளெங்கும் வேள்வியிருந் திருநிதியம் வழங்குநகர்—காறாட்டுமுள்ளூர்

௩௭. நம்பினார்க் கருள்செய்யு மந்தணர் நான்மறைக்கிடமாய் வேள்வியுட், செம்பொனேர் மடவாரணிபெற்ற திருமிழலை.

௩௮. பார்சிலவு மறையோரும் பத்தர்களும் பணிசெய்ய [வெண்பாக்கம்]

௩௯. அங்கமோராறவையும் மருமாமறை வேள்விகளும் எங்குமிருந்தந் தணரெரிமூன் றவையோம்புமிடம் ........ நனிபள்ளியதே.

நம் பெருமக்கள் தெரிசிக்கச்சென்ற சிவதலங்களில் அக்காலம் நிகழ்ந்த சிறப்புகளை அவர்கள் கண்கூடாகக் கண்டபடி, அவர்களது பாடல்களில் மேற்காட்டியவாறு இன்னும் பல அருளியிருக்கின்றார்கள். தேவாரம் பெற்ற சிவதலங்கள் ௨௭௪. அத்தலங்களின் தேவாரங்களிலெல்லாம் இவ்வாறு கூறப்பட்டிருக்கவில்லை. எந்தெந்தத் தலங்களில் அந்தணர், நான்மறை, வேதவேள்வி செந்தமிழோர் பெருக்கமாயிருக்கக் கண்டார்களோ அத்தலத் தேவாரங்களிலேயே அவ்வாறு அருளியிருக்கின்றார்கள். அவற்றிலும், ஓமாம்புலியூர், மிழலை, இத்தலங்களின் தேவாரப் பதிகங்களில் மூவர்களும் ஒரே தன்மையாய்ச் சிறப்பித்திருக்கின்றார்கள். தொல்காப்பியர், அந்தணர் பார்ப்பனர் எனக் கூறியும் அவர்களது அறுதொழிலைக் கூறியுமுள்ளபடியே மேற்காட்டிய தேவார அருண்மொழிகளில் சமயாசாரியர் மூவரும் அருளிச் செய்திருப்பதும் நன்கு புலப்படும். ஆதலால் தொல்காப்பியத்து வரும் இவ்வகைச் சூத்திரங்கட்கு மனம்போல வெவ்வேறு பொருள்கொள்ளப் புகுவதும் பொருத்தமிலதாம். மேலே கண்டிருக்கிற தேவாரப் பகுதிகளில் ௨௨-வது எண்ணில் காட்டியவாறு அப்பமூர்த்திகள், அந்தணார்க் கருங்கலம் அருமறை ஆறங்கம் என்றும் நங்களுக் கருங்கலம் நமச்சிவாயவே என்றும் இருவகையாய்ப் பிரித்துக் காட்டியிருப்பதை நோக்குங்கால் நமது பாஷ்யகர்த்தர் அருளியபடி அருமறை ஆறங்கம் முதல் மூன்று வருணத்தாருக்கே உரியதென்பதும் சிவாகமம் நான்கு வருணத்தாருக்கும் உரியதென்பதும் விளக்கமாகின்றன, ௧௬-௧௭ பகுதிகளில் அந்தணர் வேள்விகளையும் அவர்களோதும் வேத ஒலியையும் தமிழர்களுடைய செந்தமிழ் கீதத்தையும் வேறாகப் பிரித்துக் காட்டியிருப்பதனாலும் இருவகை மக்களையுஞ் சொல்லி ஒருவர் செந்

தமிழர் என்றும் மற்றொருவர் தெய்வமறை நாவர் என்றும் விசேஷித்துக்காட்டி யிருப்பதாலும் அந்தணர் ஆவார் வேறு குலத்தார் அவர்கள் ஓதும் மறை செந்தமிழல்லாத வேறு பாஷை என்பதும் தெள்ளிதாய் விளங்கும்,. ௩அ-வது பகுதியில் பார்நிலவு மறையோரும் பத்தர்களும் பணிசெய்ய எனச் சுந்தரமூர்த்திகள் அருளியிருப்பதினும் சிவத்தொண்டர்களை யிருவகையாகப் பிரித்திருப்பதனால், மறையோர் என்ற மொழி முதல் வருணத்தினரையும் பத்தர் என்ற மொழி மற்றையோரையுங் குறித்துக்கொண்டு நிற்பதையுங் காணலாம். ஸ்ரீஞான சம்பந்தப்பெருமான், அந்தணர் மறையோர் இவர்களைச் சிறப்பித்துக் கூறியதுபோல வேளாளர்களையுஞ் சிறப்பித்தே கூறியிருக்கின்றனர். ஆனால் அந்தணர்களுக்கு வேதம் ஓதல் வேள்வி வேட்டல் முத்தீயோமபுதல் ஆதிய தொழில்களைக் குறிப்பிட்டதுபோல் வேளாளர்களுக்குக் குறிப்பிடவில்லை. மற்றெவ்வாறெனில் வள்ளற் றன்மையில் அதாவது ஈதலிற் பெருங்கீர்த்தியுடையவரெனக் கூறப்பட்டிருப்பதோடு இருவரும் வெவ்வேறு குலத்தினரெனவுங் கூறப்பட்டிருக்கின்றது.

க. வேளாளரென்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்குந்
தாளாளராக் கூரிற்றூன் றேன்றிமாடமே என்பதனாலும்,

உ. கொடையுடைவண் கையாளர், மறையோர்கள்
என்றும் வளர்கின்ற கொச்சைவயமே என்பதனாலும்

௩. கொடையிலோ வார்குலமும், முயர்ந்தம் மறையோர்கடாம்
புடைகொள் வேள்விப் புகை யும்பருலாவும் புகலியே.

என்பதனாலும் அறியலாம்.

மாணிக்கவாசகரை இறைவன் அந்தணர் கோலங்கொண்டு தேசிக மூர்த்தியாகி ஆட்கொண்டனர் என்பதை ஒருவரும் மறுக்கார். தமது ஆசிரியரை, அம்மூர்த்திகள்

க. "மறைபயிலந்தணனா யாண்டுகொண்ட திருவான தேவன்"

உ. "அந்தண னாயறை கூவி வீடருளும் அங்கருணை வார்கழலே பாடுதுங்காணம்மானாய்"

௩. "வெள்ளத்தழுத்தி வினைகடிந்த வேதியன்"

ச. "மறையான் பெருந்துறையான் கொண்டபுரிநூலான்"

ரு. "முன்னே யெனையாண்ட பார்ப்பானே"

சு. "பத்தர்சூழப் பராபரன் பாரில் வந்து பார்ப்பானென"

எ. "மறையோர் கோலங்காட்டியருளலும்"

என்பனவாதிய அருண் மொழிகளாற் றுதித்தார். இவற்றாலும், அந்தணர், பார்ப்பார், ஆதிய சொற்கள் காரண விடுகுறிப் பெயராய் நின்று தொல்காப்பியச் சூத்திரப்படி முதற் குலத்தவ

ரையே குறித்தனவென்பதை அறியவேண்டும். மேலும் சிவ பெருமான் அந்தணர் கோலங்கொண்டதற்கியைய முப்புரி நூல் தரித்துவந்தனர் என மாணிக்கவாசகர் அருளியிருப்ப தால் தொல்காப்பியத்தில் அந்தணர்க்குரிய அடையாளங்களில் ஒன்று நூல் என்று கூறியமொழிக்கு ஏடு, என நம்மவர் விகற்ப உரைகண்டது உண்மையலவென்பதும் விளங்கும்.

பின்னும் மற்றொரு வகையானும் ஆராய்வாம். சைவத் தமிழ் மக்களுக்குப் பெரிய புராணமென்னும் நூலே கண் போன்றது. இந்நூல் தோன்றியிராவிடின் தேவாரமென்னுந் தமிழ் மறையின் வரலாறும் அதன் பொருளும் காண்பது மிக அரிது. நடராஜப் பெருமான் முதலெடுத்துக் கொடுக்கச் சேக்கிழார் நாயனாரால் அஃது பாடப்பட்டு நிலவுகின்றது. சேக்கிழார் தொண்டைநாட்டு வேளாள குலாதிபதி. தில்லை வாழந்தணர்களில் ஒருவரும் சந்தான குரவர்களில் ஒருவரு மாகிய உபாபதி சிவத்தாலுந் துதிக்கப் பெற்றவர். அநபாய சோழனென்னும் சோழ அரையனுக்கு முதல் மந்திரியாயிருந்து லௌகிகத் தன்மையிலும் முற்றுந் தேர்ந்தவர். இப்பெரிய புராணம் அறுபான் மூன்று நாயன்மார்கள் சரிதத்தை விரித் துக் கூறுகின்றது. அது விரிநூலாதலான் அவர்கள் குலம், தொழில், சிவத்தொண்டு ஆதியவற்றை விரித்துக் கூறும். அறுபத்து மூவர்களும் தொகையடியார்களும் பிறப் பினால் பல பேதப்பட்ட குலத்தவராவர். அறுபத்துமூவர் களில் பதின்மூவர் பிராமண குலத்தவரென்று சொல்லப்படு கின்றார்கள். அவர்களாவார் (க) தில்லைவாழந்தணர்கள் (உ) கலயர் (௩) முருகர் (௪) பசுபதியார் (௫) சிறப்புலியார் (௬) கணநாதர் (௭) பூசலார் (அ) சண்டேசர் (௯) சோமாசிமாறர் (௧0) நமிநந்தி (௧௧) சம்பந்தர் (௧௨) அப்பூதி (௧௩) நீலநக்கர், எனச் சேக்கிழார் புராணம் ௩௩-வது செய்யுள் கூறும். இந் நாயன்மார்களைக் குறிப்பிடும்போது மட்டுமே, அந்தணர், மறை யோர், வேதியர், மறை, நான்மறை, வேதம், வேள்வி என்பன வாதிய மொழிகளை யெடுத்துப் பெரிய புராணத்தில் ஆளப் பட்டிருக்கின்றன.

**தில்லைவாழந்தணர்களை**

(க) "வருமுறை யெரிமூன்றோம்பி மன்னுயிர ருளான்மல்கத்
தருமமே பொருளாக்கொண்டு தத்துவநெறியிற் செல்லு
மருமறை நான்கினோடா றங்கமும்பயின்று வல்லார்"

(உ) "செம்மையாற் றணிந்த சிந்தைத்தெய்வ வேதியர்கள்"

**குங்கிலியக்கலயநாயனாரை**

(க) "அருமறை முந்நூல் மார்பினந்தணர் கலயரென்பார்"

முருக நாயனாரை

(க) "மானமறையோர் குலமரபின் வந்தார் முந்தைமறை முதல்வர்......முருகனார்"

பசுபதியாரை

(க) "அருமறைவாய்மைத் தூங்கவேதியர் குலத்தினிற் றோன்றிய தூயோர்"

(உ) "அருமறைப் பயனாகிய உருத்திரமதனை, வருமுறைப் பெரும் பகலுமெல்லியும் வழுவாமே, திருமலர்ப்பொகுட்டிருந்த வனனையவர் சிலநாள்-ஒருமையுய்த்திட"

சிறப்புலியாரை

(க) 'நான்மறைக் குலத்தினுள்ளார்"

கணநாதரை

(க) "காழிமாநகர்த் திருமறையவர் குலக்காவலர்"

பூசலாரை

(க) "அருமறை மரபுவாழ அப்பதிவந்து ... ... வாய்மைப் பொருள்பெறு வேதநீதிக் கலையுணர் பொலிவின்மிக்கார்"

சண்டேச நாயனாரை

(க) "நன்மைமறையின் றுறைவிளங்க, என்று மறையோர் குலம்பெருக .....உதயஞ்செய்தார் விசாரசருமனார்"

சோமாசிமாறரை

(க) "தூயவாய்மை, வேதம்பயிலு மறையாளர் குலத்தின்மேலோர்"

நமிநந்தி நாயனாரை

(க) "பேணுநீற்றுச் சைவநெறி-யொருமைவழி வாழந்தணர் தமோங்கு குலத்தினுள் வந்தார்"

(உ) "வாய்மைமறைநூற் சீலத்தால் வளர்க்குஞ் செந்தீயெனத் தகுவார்"

சம்பந்தரை

(க) "அப்பதியி லந்தணர்தங்குடி முதல்வரா சின்மறை கைப்படுத்த சீலத்துக் கௌணியர்கோத்திரம் விளங்க செப்புநெறி வழிவந்தார் சிவபாத இருதயர்"

(உ) "மற்றவர் தந்திருமனையார் வாய்ந்தமறை மரபின்வரு பெற்றியினார்"

(இவர்களைத் தந்தை தாயராகக்கொண்டு)

(ங) "தாவில் சராசரங்களெலாஞ் சிவம் பெருக்கும் பிள்ளையார் திருவவதாரஞ் செய்தார்"

அப்பூதி நாயனாரை

(க) "திங்களூர் மறைத்தலைவர்" "மறையோர்" "ஆதிநான்மறை நூல்வாய்மை அப்பூதியார்"

நீலநக்க நாயனுரை

(க) "சீலமுய்த்தவத் திருமறையோர் செழு மூதூர்
ஞாலமிக்கநான் மறைக்குலம் விளக்கிய நலத்தார்
ஆலம்வைத்த கண்டத்தவர் தொண்டரா மன்பர்
நீலநக்கனு ரென்பவர் நிகழ்ந்துளாரானுர்"

என்பனவாதிய பெரிய புராணச் செய்யுட் பகுதிகளில் மேற்காட்டிய பதின்மூன்று பிராமணகுலப் பெருமக்களை வேதமாதியவைகட்குரிய மறையவர், அந்தணர், வேதியர் என்போரது குலத்திற்றேன்றினவர்களென்று சேக்கிழார் அருளியிருக்கின்றனர். மற்றைய நாயன்மார்கள், அரையர், வைசியர், வேளாளர் ஆதிய பற்பல குலத்தவராவார். இவர்களில் ஒருவரையாவது குறிப்பிடும்போது மேற்கண்ட மொழிகள் பிரயோகப் படுத்தப்பட்டிருக்கவில்லை. திருநாவுக்கரசு நாயனுர் பரம்பரைச் சைவ உத்தம வேளாள குலத்தலைவர். சைவசமயாசாரியர்களில் ஒருவர். அந்தணராதியோராலும் போற்றப்படும் பெரியார். சம்பந்தப்பெருமானே அம்மூர்த்திகளை வணங்கி யிருப்பாரேயானுல் அம்மூர்த்திகளின் பெருமை எத்தகையதென்று சொல்லலாம். அப் பெருந்தகையாரைக் குறிப்பிட்ட இடங்களிற் கூட அந்தணர், வேதியர், மறையோராதிய பெயர்களாற் சேக்கிழார் மூர்த்திகள் குறிப்பிடவில்லை. இவற்றுல், அந்தணர், மறையோர், வேதியர், பார்ப்பார் என்போர் தொல்காப்பியச் சூத்திரப்படி முதற் குலத்தவரையே சுட்டுமென்பதற் கையமுமுண்டோ. மறை, வேதம் என்பன அவர்கள் ஓதும் வடமொழி வேதங்களே யாகும், 'அருமறை முந்நூல் மார்பினந்தணர்' என்றுஞ் சொன்னமையால், நூலே கரகம் முக்கோல் மணையே ஆயுங்காலை அந்தணர்க்குரியவென்னுஞ் சூத்திரத்தில் நூல் என்பதற்கு முன்னூல் என உரை ஆசிரியர் கண்ட பொருளே பொருளென்பதும் விளங்கும்.

சேக்கிழார் மூர்த்திகளேயன்றி மற்றைச் சிவானுபூதிச் செல்வர்கள் பலர். அவர்களுள் கண்ணுடைய வள்ளலார், அருணகிரிநாதர், சிதம்பர சுவாமிகள், குமரகுருபர சுவாமிகள், அதிவீர ராமபாண்டியன் ஆதியோர்களாலும் அருளப்பட்ட சைவ நூல்களாகிய ஒழிவில் ஒடுக்கம், திருப்புகழ் திருப்போரூர்ச் சந்நிதிமுறை ஆதிய பிரபந்தங்களில், மறைப் புதல்வன், இருக்கு ஐயம்போக உரைத்தோன், மூவாமறையே மறையின் பொருளே, பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலே, எஞ்ஞான்று மீறிலா மறைமுடி யிருப்பான், எனக் காணப்படும் அருண்மொழிப்

பகுதிகளில் மறையென்ற சொல்லுக்கு அப்பேரறிவாளர்கள் என்ன பொருள்கொண்டு பிரயோகித்திருக்கின்றார்களென்பதையும் உய்த்துணரவேண்டும்.

நமது தமிழ் நாட்டில் மெய்கண்ட சந்தான பரம்பரையாகத் தோன்றி நிலைபெற்று விளங்கும் திருவாவடுதுறை, தருமபுரம், ஆதிய தமிழ்ச் சைவாதீனங்களிலும், ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருமான் காலம் முதல் தோன்றி விளங்கிவருவதாகச் சொல்லப்படும் மதுரைத் திருஞான சம்பந்த மூர்த்திகள் ஆதீனத்திலும், அந்தந்த ஆதீனங்கள் தோன்றிய காலம் முதல் இருமொழிகளிலும் மிக்க வல்லவர்களாகிய மகா மேதாவிகளும், தமிழ்ப் பற்றுள்ளவர்களுமாகிய, சிறந்த மெய்யடியார்கள் குழுவுடன் பல அற்புதங்களைச் செய்த தேசிக மூர்த்திகள், விளங்கித் தமிழை வளர்த்து வந்திருக்கின்றார்கள். இவர்களில் யாரும், நமது நண்பர், இக்காலம் கண்டுபிடித்த கற்பனை உரைகளை நமது பண்டைய தமிழ் நூல்களிற் புகுத்தினாரில்லை.

இறுதியாய், மற்றொரு வகையான் நமது நண்பர் கற்பனைக்கு ஆதரவுண்டோவெனப் பார்த்து இவ்வாராய்ச்சியை ஒருவாறு முடிக்கின்றோம், நமது கன்னித் தீபமுற்றும் அதனுள்ளும் சிறந்த நந்தமிழ் நாட்டகத்தும், சிவாலயங்களும், திருமால் ஆலயங்களும் பண்டுதொட்டே நிலைபெற்று விளங்குகின்றன. அகத்தியர் பெருமான் நந்தமிழ் நாட்டுக்கு எழுந்தருளும் முன்னரே விண்டுவின் ஆலயம் தென் நாட்டில் தோன்றி விளங்கிவருவதாகத் தெரியவருமேயானால் அது விஷயத்தில் சங்கை தோன்ற நியாயமில்லை. வடநாட்டுத் திருமால் வேறு தென்னாட்டுத் திருமால் வேறு எனப் பொருள் கொள்ளும்படியாய் நம்மவரிற் சிலர் வீணாகப் பிதற்றுவார்கள். அதெல்லாம் மயக்கவுரையே. "தென்னாடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கன்" எனத் திருமால் அடியார் கூறுவாராயினர். வழிபாட்டு விஷயங்களிற் சில வேற்றுமை காணலாம். அது நமக்கு உடன்பாடல்ல. திருமாலானவர் சிவபெருமானது புருஷ சக்தியாவர். சிவாலயம் உள்ள தலங்களில் பெரும்பாலும் திருமால் ஆலயமும் நிலவப்பெற்று வருவதைக் காணலாம். சில சிவாலயங்களில், அவ்வாலய ஆவரணத்துக்குள்ளேயே விஷ்ணுமூர்த்தி எழுந்தருளியிருப்பதையுங் காணலாம். திருநெல்வேலியில் சிவாலயத்திற்குள் நெல்லையப்பர் எழுந்தருளியிருக்குங் கெற்பக் கிரகத்தையடுத்துச் சிவலிங்கப் பெருமானுக்குப் பக்கத்தே விஷ்ணுமூர்த்தியு மெழுந்தருளியிருக்கின்றார். "அரியலாற்றேவியில்லை ஐயனையாறனார்க்கே" என்றும் "கடல்வண்ணனாகி நின்ற தேவியைப் பாகம் வைத்தார்." என்

றும் சைவத் திருமுறைகளும் கூறுகின்றன. சிவபெருமான் துதியாகத் தமிழ்மறை யென்னுந் தேவாரந் தோன்றியது போலவே திருமால் துதியாகத் திராவிட வேதமென்னும் நாலாயிரப் பிரபந்தந் தோன்றியுள்ளது. இந்தத் திராவிட வேதத்தினுள் மறை, நான்மறை, அந்தணர், மறையோர் என்பதாதிய சொற்களையும் திருமால் அடியார்கள் பிரயோகப்படுத்தியிருக்கின்றார்கள். அவைகளிற் சில பகுதிகளை அடியிற் காட்டுவாம்.

### பெரியாழ்வார்.

க. "நம்முடைய நாயகனே நான்மறையின் பொருளே"

உ. "செஞ்சொல் மறையவர் சேர்புதுவைப் பட்டன்"

ங. "இருக்கொடு நீர்சங்கிற் கொண்டிட்டு எழின்மறையோர் வந்துநின்றார்"

ச. "நால்வேதக் கடலமுதை மேலிருங் கற்பகத்தை வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை"

ரு. "மறைப்பெருந்தீ வளர்த்திருப்பார் வருவிருந்தை யளித்திருப்பார் சிறப்புடைய மறையவர் வாழ்திருவரங்கம்"

சு. "தென்னாடும் வடநாடுந் தொழுகின்ற திருவரங்கம்"

### சூடிக்கொடுத்த நாச்சியார்.

எ. "பழகு நான்மறையின் பொருளாய் மத, மொழுகுவாரண முய்ய வளித்த வெம்,மழகன்"

### குலசேகரப் பெருமாள்

அ. "அந்தமிழின் இன்பப்பா வினையவ் வடமொழியைப் பற்றற்றார் பயிலரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும் கோவினை."

### திருமழிசைப்பிரான்.

கூ. "அங்கமாறும் வேதம் நான்குமாகி நின்றவற்றுளே தங்குகின்ற தன்மையாய்"

க0. "இருக்கலந்த வேதநீதி யாகிநின்ற நின்மலா"

### மதுரகவியாழ்வார்.

கக. "அவ்வருமறையின் பொருள் அருள்கொண்டாயிர மின்றமிழ்ப் பாடினன்.

### திருமங்கை ஆழ்வார்.

கஉ. வாயோது வேத மலிகின்ற தொல்சீர் மறையாளர் நாளுமுறையால் வளர்த்த, தீயோங்க வோங்கப் புகழோங்கு தில்லைத் திருச்சித்திரகூடம்"

கங. "இலங்கிய நான்மறை யனைத்துமங்கமாறுமேழிசையும் கேள்விகளு மெண்டிக் கெங்குஞ்—சிலம்பிய நற்பெருஞ் செல்வந் திகழு நாங்கூர்"

கச. "ஊழிதோறு மூழிதோறு முயர்ந்த செல்வத்தோங்கிய
நான்மறை யனைத்துந் தாங்கு நாவர்"
கரு. "பண்டை நான்மறையும் வேள்வியும் கேள்விப்
பதங்களின் பொருளும் .. ..தானாய்
நின்ற வெம்பெருமான் அரங்கமா நகரமர்ந்தானே"
கசு. "ச்சந்தோகா, பௌழியா, தைத்திரியா, சாமவேதியனே
நெடுமாலே"
கஎ. "செந்தமிழும் வடகலையுந் திகழ்ந்த நாவர்
திசைமுகனே யனையவர்கள் செம்மைமிக்க அந்தணர்
தமாகுதியின் புகையார் செல்வத் தணியழுந்தூர்
நின்றுகந்த அமரர் கோவே"
கஅ. "செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி"

நம்மாழ்வார்.

கக. மேவித் தொழுதுய் மீனீர்கள் வேதப்புனித இருக்கை
நாவிற்கொண் டச்சுதன் றன்னை"

இவைபோன்றன பலவுள. விரிவஞ்சி விடுத்தாம். இப்பகுதிகளிலும், தேவாரத் திருமுறைகளிற் காணப்படுவதுபோலவே, மறை, நான்மறை, வேள்வி, அந்தணர் இருக்கு முதலாகிய நான்மறைகளின் பெயர்களையும், தென்மொழி வடமொழி இவைகளைப்பாகுபடுத்திக் கூறியிருப்பதையும் நஞ் சைவச் செந்தமிழ்க் கல்விவாணர்கள் நன்கு நோக்குவார்களாக. இந்த இருக்காதிய நான்மறைகளை யெந்தத் தமிழ் முனிவர் நால்வர், எக்காலம், யாரிடம் கேட்டு இயற்றினர்களோ? நம் நண்பர்தான் கூறவேண்டும்.

இதுகாறுங்காட்டிய பலவகை நியாயங்களாலும் அதி பிரபல பிரமாணங்களாலும், அந்தணர், மறையோர் வேதியர், பார்ப்பார் என்ற சொற்கள் காரண இடுகுறிப் பெயர்களாக நின்று, பண்டைய காலந்தொட்டே தொல்காப்பிய இலக்கண முறைப்படி, முதல் வருணத்தாரையே குறிப்பிட்டு வருகின்றன வென்பதும், மறை வேதம் என்பன அவர்களது வடமொழி வேதமே யென்பதும் வேதம் ஓதல், வேள்வி புரிதல் ஆதிய அறு தொழில் பூண்டுளார் அவர்களே யென்பதும் தெளிவாய் விளங்குகின்றன. இவைகளைப்பற்றியும் வேத சிவாகமங்களில் விளங்கும் முழுமுதற் கடவுளாகிய சிவபிரானது திவ்ய மங்கள குணாலங்கிர்தங்களைப்பற்றியும் அவைகளின் சாரமாகிய திராவிட வேத அருண்மொழிகளைப்பற்றியும் நாயினுங் கடையேனாகிய அடியேன் எடுத்துரைக்கவும், அவைகளின் பொருள்கள் இவைதான், இவையல்லவென்று வற்புறுத்திக் கூறவும் எம்மாத்திரம். மேரு மலைக்கும் பரமாணுவுக்கும் எவ்வளவு தாரதம்மிய முண்டோ அதுவுமில்லை. ஏதோ நம் பெருமக்களது உண்மைநெறியைப் பல்லோரும் அறியச் செய்யவேண்டுமென

வெழுந்த, என் ஆசைப் பெருக்கத்தால் இவ்வித ஆராய்ச்சியிற் புகுந்தேன். பெரியோர்கள் மன்னிப்பார்களாக.

சமயாசாரிய மூர்த்திகள், கல்லாலடியில் சிவபிரானிடம் வேதம் வேதாங்கங்களைக் கேட்ட நால்வரையும் அவர்கள் பாடிய தேவாரங்களில் குறிக்குங்கால், "அங்கங்களாறும் நான் கும் அந்தணர்க் கருளிச்செய்து" எனவும் "ஆலின்கீழ் அறங்களெல்லாம் மறையவர்க் கருளிச்செய்து" எனவும் "வேதியர்கள் நால்வருக்கு வேதஞ்சொல்லி" எனவும் அருளி யிருக்கின்றார்கள். "பொய்யடிமையில்லாத புலவர்க்குமடி யேன்" என ஸ்ரீசுந்தரமூர்த்திகளால் வணங்கப்பெற்ற தொகை அடியார்களில் ஒருவரும் சிவபெருமானை நேரில் தெரிசிக்கப் பெற்று அவரிடம் திருவருள் பெற்றவருமாகிய நக்கீரதேவர் இயற்றிய பிரபந்தங்களில் "முத்தீநான்மறை யைம்புலனடக் கிய அறுதொழிலாளர்க் குறுதிபயந்தனை" என்றும் "தொடுத் தமைத்த நாண்மாலை கொண்டணிந்த நால்வர்க்கன்றுணிழற்கீழ் வாண்மாலையாகும் வகையருளித், தோண்மாலை, விட்டிலங்கத் தெக்கணமே நோக்கி வியந்தகுண மெட்டிலங்கவைத்த விறல் போற்றி" என்றும் அருளியிருக்கின்றார்கள். வேதப்பொருளை உபநிடதங்கள் எவ்வாறு விளக்குகின்றனவோ அவ்வாறே திரா விட வேதப் பொருள்களை விளக்கத் திருப்பாடல்களை அருளிய தாயுமான தயாபர மூர்த்திகள் "ஆரணமாகம மூலமெல்லா முரைத்தவருண்மவுன காரணமூலங் கல்லாலடிக்கேயுண்டு" எனவும் "அந்தணர் நால்வர் காண அருட்குருவாகிவந்த எந்தை" எனவும் "துங்கமிகு பக்குவச் சனகன் முதன் முனி வோர்கள் தொழுதருகில் வீற்றிருப்பச் சொல்லரிய நெறியை யொரு சொல்லாலுணர்த்தியே சொரூபானுபூதி காட்டி" என வும் அருளிச்செய்திருக்கின்றார்கள். சிவபிரான் கல்லாலடியில் சநகாதி முனிவர் நால்வருக்கும் வேதாகமங்களையும் அவற்றின் பொருள்களையும் இருமுறை யுபதேசித்த சரித்திரம் கந்தபுரா ணத்துட் காணப்படுகின்றது. அக்காலந்தான் மன்மதனை இறைவன், நெற்றிக்கண்ணுலெரித்ததாகவும் கந்தபுராணங் கூறும். அப்பமூர்த்திகள் அருளிய "ஆய்ந்தது வேதமாறங்க மன்று சுட்டது காமனைக் கண்ணாலே" என்னும் தேவாரப்பகு தியின் பிரமாணத்தாலும் இவ்வுரை யெவ்வகையானும் மறுக் கப்படா. மற்றுஞ் சைவநூல்களும் அவ்வாறே கூறுவதைக் கொண்டே தமிழ்ச் சைவக் கவிவாணர்களும் மற்றையோரும் பண்டைய காலந்தொட்டே அவ்வாறே கூறுநிற்பர். ஆதலால் தேவார திருவாசகமாதிய சைவத்திருமுறைகளிற் காணப்படும் கல்லாலடியில் அறங்கேட்ட அந்தணர் நால்வர் எனப்படுவோர் சனகாதியர்களாவர் என்பதற்குத் தடையில்லை.

௯0. நம்மவர் எழுதிய திருநான்மறை விளக்கம், உ௬ வது பக்கத்தில் "சுத்த வித்தையில் எழும் அருள்நாத ஒலியாகிய "ஓங்காரத்தின் வாயிலாக உவமையிலாக் கலைஞானத்தை உதவ "அங்ஙனம் உதவப்பெற்றார் இயற்றிய நூலே ஆகமமாமெனச் "சுவாயம்புவத்திற் கூறியவாறே நால்வர்க்கருளிய விடத்தும் "மறைகள் எழுவதாயினவெனக் கோடலே மூவகை அளவைக் "கும் ஒத்ததாமெனவெழுதி, உ௧அ-வது பக்கத்திலும் அவர் கருத்தை வலியுறுத்திக் கூறியிருக்கின்றார். சுவாயம்புவத்தின் வாக்கியங்களைக் காட்டாது இவர் எழுதி யிருப்பதைக் கொண்டே ஒருவித முடிபுக்கு வருவது உண்மைபயவாது. "மூவகை அளவைக்கும் ஒத்ததாம்" என்றாரே, அதைப் பரியாலோசிப்பாம். மூவகை அளவையாவன காண்டல், கருதல், உரை யென்பன. கடல்கோளில் அழிந்துபோனதாக நம்மவர் சொல்லுந் தமிழ்நான்மறை இவராலும் மற்றெவராலுங் காணப்படாததொன்றாம். ஆதலால் காண்டல் அளவையால் இவர் கோள் சாதிக்க முடியாது. மலையில் காணும் புகையைக்கண்டு அங்கு அதன் காரணமாகிய நெருப்புண்டென்று சித்தாந்தப் படுத்துவதுபோலக் காணப்படும் ஒன்றைக் கண்டுதான் அதற்குக் காரணமான மற்றொன்று உண்டெனத் தாபிக்கப்படவேண்டும். தமிழில் நான்மறையிருந்ததெனத் தமிழுலகு தோன்றியது முதல் இதுகாறுந்தோன்றிய செந்தமிழ்க் கல்வியாளர்களில் ஒருவரும் இவ்விதக் கருத்துக் கொண்டிலராதலாலும் அந்நான்மறையின் மணங்கூட முகருதற்கிலாமையாலும், கருதலளவையாலுந் தாபிக்கவியலாது. நமது வடமொழிக்கும், வேதசிவாகமங்கட்கும், வேதக்கொள்கைக்கும் விரோதியாயெழுந்த ஒருவர் தக்க பிரமாணங்காட்டாது அவரொருவர் கருதியதே பிரமாணமாகாது. தமிழ்நான்மறையென வொன்றிருந்ததென்பது வைதிக, சைவ, வைணவ தமிழ் நூல்கள் ஒன்றிலாவது, சங்க நூல்கள் ஒன்றிலாவது சொல்லப்படாதிருப்பதனால் நம்மவர் கூற்று உரையளவை யானுந் தாபிக்கப்படவில்லை யெனத் திண்ணமா யுரைக்கலாம். இவ்வகையில், நம்மவர் கோள் மூவகையளவையின் ஒன்றானும் சாதிக்கப்படவில்லை யென்பதே முடிபாம்.

௯௧. இதுகாறுங் கண்ட ஆராய்ச்சியால் வேத சிவாகமங்கள்சிவபெருமான் வாக்கே யென்பதும், அவைகளே ஆதியிலுண்டான முதனூல்களென்பதும், அந்நூல்களினின்றே உலகத்திற் காணப்படும் எவ்வகை நூல்களும் பல ஆசாரக் கொள்கைகளும் ஆன்மாக்களின் கன்மத்துக்கும் காலதேயவர்த்தமானத்துக்கு மிணங்கத் தோன்றின வென்பதும் ருக்கு வேதஞ் சிவபிரானையே முழுமுதற் கடவுளெனக் கூறுமென்ப

தும், தமிழ்த் திருமுறைகள் வேத சிவாகமப் பொருளே யென்பதும் ஆரியருக்குந் தமிழருக்குந் தந்தையார் சிவபிரானே யென்பதும், அதுபோலவே, அவரே இருமொழிக்குங் குரவரென்பதும், நான்மறை ஆறங்கம் இருபத்தெட்டு ஆகமங்கள் தமிழில் இருந்தனவென்பது கற்பனையே யென்பதும், தமிழில் நான்மறை யிருந்ததாகத் தேவார திருவாசகங்களிற் கூறியிருப்பதாகச் சொல்வது முயலுக்குக் கொம்பு மூன்றுமுள தென்பது போலவே யென்பதும், தொல்காப்பியர், சங்கப்புலவர்கள், சைவசமயாசாரியர்கள் ஆதியாகச் சந்தானசாரியர்களீறாகவும், அக்காலமுதற் சிவஞான முனிவரீறாகவும், இவர்களுள்ளிட்டவரும், தமிழ் ஆராய்ச்சியிற் புகுந்திருந்த புறமதக் கல்வி வாணர்களும் இதுகாறுந் தமிழில் நான்மறை ஆதிய மூவகை நூல்கள் இருந்தனவென்று கூறவில்லை யென்பதும், பிறவும், பசுமரத்தாணிபோற் பதித்து நாட்டப்பட்டன.

தமிழ்ச்சைவ உலகு இதுகாறும் எவ்வகைக் குழப்பத்திற்கும் உட்படாமல் மிக்க சாந்த குணமுடையதாகிச் சிவபெருமானை வழிபட்டுத் தேவார திருவாசக முதலிய தோத்திர ரூபமான அருட்பாக்களையும் சாத்திர ரூபமான சிவஞான போதம் முதலிய நூல்களையும் ஓதியுணர்ந்து சிவனருள் பெற்று வந்திருக்க, அவ்வுலகத்தார்களுட் பிரிவு உண்டாமாறும் தம்முட் சமமாய்க் கூடி வாழ்ந்த தமிழும் வடமொழியும் போராட்டஞ் செய்யுமாறும் இக்காலத்துப் படித்த சிலர் நவீனக் கற்பனை செய்து வருகின்றார்கள். என்ன கற்பனை கற்பித்தும் ஆரிய வேதங்களும் தமிழ்மறைகளும் ஒன்றுக்கொன்று அனுசரணையாயிருந்து பொருளில் வேற்றுமைப்படாது சைவசமயப் பகுதிகளை விளக்கிக் கொண்டிருப்பதைக் காட்சிப் பிரமாணத்தாற் காண்கின்றபடியால் அவைகளை அறவே மறைக்க முடியாமையினாலே, முன்னமே யிருந்த தென்னாட்டுச் சைவப் பகுதிகளை ஆரியர்கள் அவர்கள் வேதங்களுட் புகுத்திக் கொண்டார்களென்றும் சைவ சமயாசாரியர்களும் வேதத்துட் போந்த சைவப் பகுதிகளைப் போதித்தார்களென்றுந் தந்திரமாக வெழுதித் திருநான்மறை விளக்கமென்னுமொரு வியாசமெழுதப்பட்டிருக்கின்ற தென்பதும் இவ்வாராய்ச்சியால் நன்கு விளக்கி யிருத்தலைச் சைவசமயிகள் உய்த்து நோக்கி உண்மை கடைப்பிடிக்கக் கடவர்கள்.

"சுருதிவானவனுந் திருநெடுமாலுஞ் சுந்தரவிசும்பி லிந்திரனும்
பரிதிவானவனும் படர்சடைமுக்கட் பகவனும கவுயிர்க்கமுதாம்
எருதுவாகனனும் எயில்கண்மூன்றெரித்த வேறுசேவகனுமாம் பின்னும்
கருதுவார்கருது முருவமாங் கங்கைகொண்ட சோளேச்சுரத்தானே"

என்னுந் திருவிசைப்பா அருண்மொழிப் பொருளையும், "யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வமாகி யாங்கே மாதொருபாகனார் தாம்வருவர்" என்னுஞ் சிவஞான சித்தியாரின் செய்யுட் பொருளையும், "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடுவாழ்வா" ரென்னும் உத்தரவேதப் பொருளையுமுணர்ந்த நம்மனோர் சைவசமய முறைப்படி சிவபிரானையும் அவரது திருவேடமாகிய திருநீறு, திருக்கண்மணியையும், அவரது மெய்யடியார்களையும் எந்நாளும் மறவாமற் பேணி, வாழையடி வாழையாகச் சைவவுலகிற் பல்கிப்பரவியோங்கி நம், தவப்பயனாக அவதரித்த நந்திராவிட பாடியகர்த்தர், நமது மூதாதையர்கள், இவர்கள் வகுத்த வழியேயொழுகி வருமாறு அனுக்கிரகிக்கும்படி சிவபிரானைக் காயத்தாலும் வாக்காலும் மனத்தாலும் வணங்கி வாழ்த்தித் தியானித்து இதனை முடிக்கின்றோம்.

திருச்சிற்றம்பலம்.

சுபம். சுபம். சுபம்.

---

மழை வழங்குக மன்னவ னோங்குக
பிழையில் பல்வள னெல்லாம் பிறங்குக
தழைக அஞ்செழுத் தோசை தரையெலாம்
பழைய வைதிக சைவம் பரக்கவே.

---

பரசிவன் றனதுயர்ச்சியே தெரிப்பதிற் பகரொருப் பாட்டிற்றூ
யரியகால் கதிர் வியாதனுதியர் மொழியால் விளங்கிடு நீர்த்தாய்த்
திரிவுகாட்சிய ருளத்துறு தறிகிகர் செம்பொருட்கோ வைத்தாய்
விரியுநீ ருலகினுக் கிதந் தருமுதல் வித்தையோங்குக மாதோ.

திருநான்மறை விளக்க ஆராய்ச்சி
முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ மெய்கண்டதேசிகன் திருவடி வாழ்க.

---

சிவமயம்.

# பிழையும் திருத்தமும்.

## வித்துவப் பெரியாரபிப்பிராயத்தில்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 14 | 30 | சூளாமணியாகிய | சூளாமணியுமாகிய |
| 15 | 31 | மொழிபெயர்புகளிலும் | மொழிபெயர்ப்புகளிலு |
| 20 | 12 | நடைபெருங்காலத்தில் | நடைபெறுங்காலத்தில் |
| 35 | 4 | C. K. | ஸ்ரீமத் C. K. |
| 48 | 22 | னூலாசிரியரவர்கள் | நூலாசிரியரவர்கள் |
| 56 | 11 | யாழ்பாணத்து | யாழ்ப்பாணத்து |
| 81 | 18 | வராய்ச்சி | வாராய்ச்சி |
| 86 | 22 | பின்னர் புராணங் | பின்னர்ப்புராணம் |
| 93 | 15 | தொல்லாரிசியர் | தொல்லாசிரியர் |
| 96 | 30 | கருனை மூர்த்தி | கருணை மூர்த்தி |
| 99 | 26 | திவ்விய னூலென் | திவ்விய நூலென் |
| 104 | 30 | யாண்டு கற்றனரோ | யாண்டுக்கற்றனரோ |
| 110 | 7 | ளழுங்கி | ளழுங்கி |
| 117 | 30 | வேளாரை | வேளாளரை |
| 119 | 24 | சுகுதி | சுருதி |
| 120 | 32 | திரு÷தி | திருநந்தி |
| 120 | 36 | இப்பொருட்டு | இப்பொருட்கு |
| 134 | 8 | வருவதால் | வருதலால் |
| 135 | 29 | என்னை ? | என்னை ? |
| 136 | 28 | வேணுடுகின்றேன் | வேண்டுகின்றேம் |
| 138 | 35 | புகல் லுற்றும் | புகலலுற்றும் |
| 143 | 8 | கடபாட்டை | கடப்பாட்டை |
| | 15 | தொன்றும் | தோன்றும் |
| 145 | 24 | வெனிப்படுத்த | வெளிப்படுத்த |

## நூலில்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 29 | பரனுரை | பானுறை |
| 5 | 36 | கலிரண்டு | கழலிரண்டு |
| 11 | 12 | சிவாலயங்களிளெல்லாம் | சிவாலயங்களிலெல்லாம் |
| 21 | 3,4 | பின்பும் கௌகமுறையானே | பின்புமகௌக முறையானே |
| 37 | 3 | இயைன்ற | இயன்ற |
| 66 | 9 | வரற்ருன் | வாற்ருன் |
| 66 | 23 | மொழிநட்கு | மொழிகட்கு |
| 67 | 12 | ககக | தக்க |
| [illegible] | 11 | மொழிகானே | மொழிதானே |
| [illegible] | 29 | கூஞர் | கூறிஞர் |
| 72 | 3 | நூலந்தூல் | நூலந்நூல் |
| 72 | 8 | காரியங்கனே | காரியங்களை |
| 72 | 24 | மிகைத்திருமூவர் | மிசைத்திருமூலர் |
| 72 | 32 | தமிழலல | தமிழல்ல |
| 72 | 37 | என்ளை | என்னை |
| 74 | 29 | அந்தூற் | அந்நூற் |
| 75 | 33 | நாள்கு | நான்கு |
| 76 | 14 | மறைந்தமையான் | மறந்தமையான் |
| 78 | 27,28 | மலர்ந்தருணியவை | மலர்ந்தருளியவை |
| 79 | 16 | நக்கீர் | நக்கீர |
| 80 | 4 | ஆவிளைந்தாடுவான் | ஆவினைந்தாடுவான் |
| 86 | 11 | தரணவியல் | தானவியல் |
| 112 | 35,36 | தில்லைவாழந்தணர்களும் தாருகாவனமிருந்து வந்தவர்களென | தில்லைவாழந்தணர்களும் வந்தவர்களென |
| 120 | 22 | இருநிலத்துல் மறைவழக்க | இருநிலத்து மறைவழக்க |
| 127 | 40 | சொற்றேடர் | சொற்றொடர் |
| 132 | 20 | மரக்கள் | மாக்கள் |
| 151 | 12 | நான்கோல் மிட்டாற்று | நான்கோலமிட்டாற்று |
| 166 | 33, 34 | சைதாப்பேட்டையிவிருந்த | சைதாப்பேட்டையிலிருந்த |
| 167 | 30, 36 | முண்டகோபநிடத்தில் | முண்டகோபநிடதத்தில் |
| 168 | 13 14 | வேண்டுமென்பதே. இதன் பொருள் | வேண்டுமென்பதே, இதன் பொருள். |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 185 | 10 | சுயம்யு | சுயம்பு |
| 186 | 5,22 | உணறுமாறு | உணருமாறு |
| 187 | 1 | மற்றைறயோரும் | பிரமனும் |
| | 8 | விதிபோந்தார் | வீதிபோந்தார் |
| 191 | 35 | உ0ரு | கஎகூ |
| 195 | 6 | ருஉ | ருச |
| 199 | 31 | தமில் | தமிழில் |
| 204 | 12 | நீரேமுழுடுக்கிய | நீரேழுடுக்கிய |
| 204 | 25 | ஈதென்ள | ஈதென்ன |
| 207 | 33 | மெய்யென்று | பொய்யென்று |
| 211 | 22 | அவ்விஷ்யங்களில் | அவ்விஷயங்களில் |
| 220 | 24 | நாலினந்தணர்க்காயினும் | நாவினந்தணர்க்காயினு |
| 227 | 15 | உபாபதி | உமாபதி |
| 325 | 36 | விசும்பிலிந்திரனும் | விசும்பினிந்திரனும் |

## வடமொழி மேற்கோள்களில்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 20 | 1 | நிஷ்வலித | நிஷ்வலித |
| 51 | 32 | வஸிஷ்டஹிஜாதெ | வஸிஷ்டஷ்வஜாதெ |
| | 33 | ஷ்வாகஶீதி | ஹிவாகஶீதி |
| 123 | 27 | ஸுதொதாதக்ஷிம் | ஸுதொதாதக்ஷிம் |
| 163 | 39 | உகூஷிணாஹிஉ-வெஃ | உகூஷிணாஹிஉ-வெஃ |

குறிப்பு:—பிழைகளைப் பூர்த்தியாய்ச் சோதிக்க காலம் பெறவில்லை. நண்பர்கள் பலரும் இவ்வாராய்ச்சிநூல் விரைவில் வெளிவர விரும்பினார்கள். எழுத்துக்களின் தேய்வாலுளவாகிய பிழைகள் திருத்தப்பட்டில. மற்றும் பிழைகளைத் திருத்திக்கொண்டு வாசிக்கவேண்டும்.

போற்றினர்" என்ற வண்ணம் மனத்திற்றோன்றிய தோன்றிய படி எழுதியிருக்கின்றார்கள். "அறிஞர்களுடியே யவற்றைக் காண்கவே."

"திருநான்மறை விளக்கத்" திற் காணப்படுவனவெல்லாம் சைவ சாத்திரங்களுக்கு முற்றும் மாறுபட்டனவேயாம், முக்கியமான சிலவற்றை ஈண்டெடுத்துக் காட்டினும். இவைக ளெல்லாம், சைவ சமயம் இல்லை; சைவ சாத்திரம் இல்லை; சாதி இல்லை; ஆச்சிரமம் இல்லை; சிவன் இல்லை; சிவன் இல்லை; புண்ணியம் இல்லை; பாவம் இல்லை; அவற்றின் பயன்களாகிய இன்பம் இல்லை; துன்பம் இல்லை; அவ்வின்பத் துன்பங்களை அனுபவிக்கும் சுவர்க்கம் இல்லை; நரகம் இல்லை; "கொலை யொடு களவு காமங் குறித்திடு வஞ்ச மெல்லா—நிலையெனப் புரிதியற்றூ னினக்குமேல் வருந்தீ தொன்று" இல்லை; எனவும் இன்னன பிறவும் கூறும் நாத்திகர்க்கும் உடன்பாடாகாதெ னின், இவைகளெல்லாம் உண்டெனக் கூறும் ஆத்திக சைவசற் சனசங்கத்தனுத்துணை தானு மனுகாதழிந்துபடும் என்ப தறை யவும் வேண்டுங் கொல்லோ!

உண்மைச் சைவ சற்சன சபையில் அவையனுத்துணையு மேறுவென்பது "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" என்னு நூலைப்படிப்பவர் நன்கறிவர். "ஆராய்ச்சி" ஆசிரியர், கா. சு. என்பார் கொள்கைகளெல்லாவற்றையும் தக்க பிரமாணங் கொண்டு மறுத்திருத்தலின் யாம் மறுப்பான் புகவில்லை. அம் மறுப்புக்கு மதிப்புரை கொடுப்பான் புகுந்தேம். எமதபிப் பிராய மதிப்புரை இதுவேயாம்.

நல்லாசிரியரை வழிபடு முறையில் வழிபட்டுக் கேட்கு முறையிற் கேட்டுச் சைவ சித்தாந்த நூல்களைக் கற்று உள்ளவா றுணர்ந்த நல்லோர்கள் "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" ஆசிரியர் அறிவின் மதுகையை அறிந்து வியந்து மகிழா நிற்பர். ஏனையோர் வியந்தென்? ஒழிந்தென்?

சைவவுலகந் தடுமாறிப் பிறவிப்பயனை இழவாதவண்ணம் "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" என்னும் சிறந்த நூலியற்றி ஈடேறச் செய்த புலவர் திலகராகிய ஸ்ரீமத் சாம்ப சிவம் பிள்ளையவர்கள் இன்னும் இதுபோலும் பெருநூல்கள் செய்து உபகரித்துப் பூரணாயுசுப் பெற்றுப் புண்ணியராய் ஆனந்த வாழ்வுறும்படி "சிற்சபை பொலியத் திருநடம்புரியு, மற்புதக் கூத்தர்" அருள்புரியுமாறு அனுதினமும் வேண்டு கின்றோம்.

---

மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பரீக்ஷகரும், யாழ்ப்பாணத்து
ஆரிய திராவிட பாஷாபி விருத்திச் சங்கத்தின் நிர்வாக சபை
வித்தியா சபைகளின் அங்கத்தவரும் உதவிக் காரியதரிசியும்,
பரீக்ஷகரும், "உலகியல் விளக்க நூல்" ஆசிரியரும்,
சங்கநூல் ஆராய்ச்சி விநோதருமாகிய

**பிரமஸ்ரீ நவநீதகிருஷ்ணபாரதியவர்கள் இவ்வுரை கண்டார்.**

தென்னிந்தியாவிலேயுள்ள பார்ப்பன மக்களுட் பெரும்பாலார் அரசாங்க உத்தியோக வேணவா மேலீட்டானே தத்தமக்குரிய வைதிக சன்மார்க்க நெறியை மறந்து ஆங்கிலங் கற்றுத் தாம் பெரும் பதம் பெற்றுப் பாங்கிலரொன்னும் பான்மையாராயினர். ஆங்குள்ள ஏனையோரும் அப்பதங்களைத் தாங்களும் பெறுதற்குத் தடையாயிருப்பவர் பார்ப்பாரெனத் தாமே கருதிக்கொண்டு அவரை வெறுத்து அடக்குவான் முயல்கின்றனர்

அவர் தம் முயற்சி, அப்பார்ப்பார்க் குரியதென்று அவர்தாமே எண்ணிக்கொண்ட வடமொழியின் மீதும், அம்மொழியினார்ந்த வேதாகமங்கண் மீதும், அப்பார்ப்பார் மரபுடையரெனக் கருதப்படும் **திருஞானசம்பந்த சுவாமிகள்** போன்றார் மீதும், சகத்தியல் கடந்த **அகத்தியர்** முதலாய முனிவர்கண் மீதும் வெறுப்புக் கொள்ளச் செய்து விட்டதெனின், வேறினி விளம்புதற் கியாதுள தவர்தம் முயற்சி விசேடம்.!

இன்னும் அவர்கள் தமது வெறுப்புவிசேட மொன்றையே நிலைக்களனாக வைத்துக்கொண்டு உண்மையை அறவே மறைத்துத் தொன்னூல் வரம்பிகந்து வேண்டிய மாறுபாடுகளை அச்சநாண மறுத்துணையுமின்றி உளுற்றி வருகின்றனர். அவற்றுட் சிலவற்றை அறியவெஃகும் வேட்கையாளர் பொருட்டு ஈண்டு வரைகின்றாம்.

திருக்குறளில் "அறுதொழிலோர்" என்றதனை "அறிதொழிலோர்" என்றும், தேவாரத்தில் "சைவவேடந் தானிணைத்து" என்றதனைச் "சைவவேடந் தானிணைத்து" என்றும், பாடங்கொண்டும், தேவார முதலியவற்றில் "மறை" என்பது தமிழ்வேதம் என்றும், "அந்தணர்" என்பது "தமிழராகிய முனிவர்" என்றும், "சிவன்" என்பதற்குச் சிவந்த நிறம் உடையவன் என்றும் ஓராதாரமுமின்றி வாளா பொருள் கூறியும், தம்முடைய கொள்கைக்கு மாறுபட்ட பிரபலமான பிரமாணங்களை இடைச்செருகல் என்றும் எழுதியும் இயம்பியும், இன்னன பிறவா றுளுற்றியும் வருகின்றனர். இவ்வருவோருட்டலையாயார் ஸ்ரீ வேதாசலம் பிள்ளை என்பாரும் ஸ்ரீ கா. சுப்பிரமணிய பிள்ளை என்பாருமாவர்.

கா. சு. என்பார் வடமாநிழற்கண் நால்வர்க்கருளிய மறை என்பது இருக்கு முதலியவற்றைக் குறியாது தமிழ் மொழிக் குரிய ஓம் என்பதனையே குறிக்கும் என்றார். அன்றிக் கேட்ட நால்வரும் சநகர்தியர் ஆகார்; தமிழ் மக்களே ஆவார் என்றும் பிறவாறும் மேலே குறித்த தம்மத வெளியீட்டாகிய "திருநான் மறை விளக்கம்" என்னும் பொதுமொழி தலைப் பொய்க்கொண்டு பொருளில் உரையைச் "செந்தமிழ்ச்செல்வி" என்னும் பொருத்தமில் பத்திரத்தில் வெளியிட்டிருக்கின்றார்.

இத்தகாத செயலுக்கஞ்சி உண்மை வெளியிடற் கெந்தாது முன் வந்து தோன்றியோர் பல சைவத் தமிழ்ப் பெரியாராவர் அவர் தம்முள்ளும் தலை சிறந்த பெரியாராகிய ஸ்ரீமத். தி. ந. ம. சாம்பசிவம் பிள்ளையவர்கள் "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" எனப் பெயரியதோரரிய நூலொன்றியற்றி அதன் மாதிரிப் பிரதி யொன்றை எமக்கனுப்பி வைத்தனர்.

அந்நூல் கா. சு. என்பார் காட்டிய போலிக் கொள்கை களை வேரறுத்தில்லையாக்கிச் 'சைவப் பயிர் தழைத்தோங்க வைத்துச் சிவானந்தப் பேற்றினைச் சைவ வுலகந் துய்த்தாட செய்து விளக்குறுகின்றது என்பது எமது உள்ளக்கிடக்கை.

அந்நூலாசிரியருக்கும், மாரிக்குப்போலச் சைவ வுலகம் என்ன கைமாறு செய்ய வல்லது! நாளும், ஆசிரியனார், சைவமும், தமிழும், வடமொழியும், அம்மொழி வேதாகமங்களும், அன்ன பிறவும் தழைத்து வளர்ந்தோங்கி நிலைபெறும்வண்ணம் அருள் புரிவான் கலியுகவரத! கந்த! முருக! எந்தை செவ்வேள்! கமலச்சேவடி! விமல! வேண்டுதும் பெரிதே.

---

யாழ்ப்பாணத்து மாவைக் கந்தவேள் ஆலய ஆதீன கர்த்தருள்
ஒருவரும், பௌராணிகரும், சைவப்பிரசாரகரும்,
கவிப்புலவரும், ஆகிய

### பிரமஸ்ரீ ஸா. குமாரசாமிக் குருக்களவர்கள் கண்ட வுரை.

செந்தமிழ்ப்புலவரும், நந்தலில் அன்பரும், உத்தம ஒழுக்கரும், சந்தத மியற்றும் அந்தமில் பூசையும், சிந்தையில் அடியவர் சுந்தரத்தொண்டும் பந்தம தகற்றும் பாண்மையிற் செய்யும் பத்த சிரேட்டரும், வித்தக நூல் விநோதருள் சத்துரு கண்டனம் பத்தோ மேலும் பற்பல படைத்திது பாரிற் சைவம் பரப்பினரும் பரப்புகின்றவரும் பரப்புவாருமாகிய ஸ்ரீமத் சாம்பசிவம் பிள்ளையவர்கள் எமது பார்வைக்கு அனுப்பிய "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" யாப்பெற்றதைப் பார்வையிட்டு அவ்வுத்தம சிரோமணி சைவர்கட்கு செய்த

பாண்டியனது ஓர் அரச குமாரத்தியை அர்ச்சுநன் விவாகஞ் செய்தான், அக்கதையைத்தான், மீனாட்சி தேவியார்திக்கு விஜயம் செய்தாரென்றும் கைலைக்கிறைவனை மணம் புரிந்தாரென்றும் வழங்கப்படுகிறதென்று கூசாமல் எழுதியிருப்பதுமன்றி அர்ச்சுநன் பஞ்சபாண்டவர்களில் ஒருவனானதால் பாண்டிய வம்ச அரையர்களுக்குப் பஞ்சவன் எனும் பேரெய்தியதாகவு மெழுதினர். சரித்திர ஆராய்ச்சியிற் பெரியோராகிய, மற்றொருவர் மாணிக்கவாசகர் பிரமசாரியானதால் அவரை மாணியெனக் கூப்பிட்டு வந்தார்களாம். அதனாற் பிற்காலத்தார் அவருக்கு மாணிக்கவாசக ரெனப் பெயர் கொடுத்தனரென்றும், நரி பரியாக்கினது பரி நரியானது இச்சரித்திரம் கட்டுக்கதைகளென்றும், மாணிக்கவாசகர் அரேபியாதேசமிருந்தும் குதிரைகளைத் தருவித்தாரென்றுமெழுதினர். இவர்களெல்லாரும் நம் நாட்டவர்களே. நஞ் சமயக்கொள்கை பூண்டவர்களின் சந்ததியாரே.

இஃதிவ்வாறிருக்கப் பேர்போன ஆங்கில சரித்திர ஆசிரியரான ஜே. எ. பிரௌட் அவர்கள், சமய சரித்திரங்களை மற்ற ஜீவிய சரித்திரங்களின் உண்மைகளை அளந்தறிவதுபோல், அறியக்கூடாதென்றும், சமய சரித்திரங்களில் என்றுமழியாத உண்மைகள் புலப்படுமேல் அவைகளே போதுமென்றுங் கூறியிருப்பதாக ஆங்கிலமுந் தமிழும் நன்கு கற்ற ஓர் பெரியோர் எழுதியிருக்கின்றார்.

இவ்வாறு, சரித்திர ஆராய்ச்சியார்களது சித்தாந்தங்களை முற்றிலு மெழுதுவதானால் காலம் போதாது. ஆனால், நந்தமிழ் நாட்டுள் உத்தம சைவ வேளாள குலத்துதித்தவர் யாரும், நம் நண்பர்போலச் சரித்திர ஆராய்ச்சியைக்கொண்டு நமது சமய நுட்பங்களை ஆராய்ந்தவர் ஒருவரையுங் காணேம். நமது சமயமோ; மறையினால், அயனால், மாலால், மனத்தினால், வாக்கால், அளவைகளால் அறியப்படாதது. அதை நமது சிற்றறிவைக்கொண்டு ஆராயப்புகுந்தால் விபரீதப் பொருள் தான் பயக்கும். நம்மவர் மேலே எழுதியிருக்கும் வாசகங்களால் வேதங்கள், ஆதியில் உண்டாயபோது அவைகளில் சைவ சம்பந்தமே இல்லாதிருந்து பிற்காலத்தில் கலந்ததுபோலும் என விளக்கமாகிறது. இவ்வாறு சொல்பவர்களுக்குச் சமாதானங்கூறமுடியாது. அவ்வாறு சொல்வதற்கு ஒரு பண்டைய நூலின் பிரமாணங் காட்டவேண்டும். அவ்வாறு காட்டமுடியாதவராகித் தங்கள் சொற்களையே பிரமாணமாகக் காட்டுவார்.—வேதங்களிலாவது மற்ற எந்நூல்களிலாவது. ஆரியர் பாரசீக நாட்டினின்றும் பஞ்சாப் என்னும் நம் தேயத்

துக்கு வந்தவர்களெனக் கூறப்பட்டிருக்கின்றதா? பாரசீக நாட்டின் ஆதிக்குடிகளாக ஆரியரிருந்தால், அந்நாட்டிலிருக்கும் போதே ஏன் வேதங்களை இவர்கள் செய்யவில்லை. வேதவியா சருக்கு முன் எத்தனையோ தலைமுறைகளுக்கு முந்தி வசிஷ்டர் இருந்தாரே. அக்காலம் வேதங்கள் இல்லையோ? இராமர் காலத்தில் இராவணன் சாமவேதம் ஓதினனென்று சொல்லப் படுகின்றதே. ருக்குவேதத்தின் சில பாகங்களை மேலே காட்டி அவைகளெல்லாம் சிவபிரானையே குறிக்கின்றன வென்பதை மேலே காட்டினோம். சிவதருமோத்தரம் என்னும் உபாகமத் தாலும ஆரியர் நம் நாட்டில் என்றுமுள்ளவரென்பதை விளக் கினோம்.

தொல்காப்பியத்தினுள், அந்தணர் வேதமும் ஆரிய பாடையின் விஷயமு மெடுத்துக் கூறப்பட்டிருக்கின்றன. தொல்காப்பியப்பாயிரத்துள், காணப்படும் நான்மறை யென் பது வியாசர் காலத்திற்கு முந்தியேயிருந்த நான்மறைகள் என ஆசிரியர் நச்சினார்கினியர் கூறினர். கந்த புராணமும் பண் டைய நான்மறைகள் சிதறுண்டு விரிவாய்க் கிடந்ததையே, வியாசர் சிவாக்ஞைப்படிச் சுருக்கித் திரட்டி நான்மறைகளாகச் செய்தனர் என்று கூறும்—சரித்திர ஆராய்ச்சியார், ஆரியர் நம் தேயத்துக்கு வந்து ௩,௫00 ஆண்டுகள் ஆயினவென்பர். வேதங்களும் அதற்குப் பின்னுலுண்டாயினவென்பர். தொல் காப்பியமுண்டாய்க் குறைந்தபட்சம் ஏழாயிரமாண்டுகளாயின. அதில் ஆரியவேதங்களின் ச்சந்தஸ்கள் ஆதிய கூறப்பட்டு அந் தணர் ஆதிய நான்கு வருணத்தவர் விஷயமுங் கூறப்பட்டுள் ளன. நான்மறையோகியர் ஒருவர் (திருமூலர்) திருக்கைலையி னின்றும் அகத்தியரிடங்கொண்ட நட்பினால் அவரைப்பார்க்கத் தென்னாட்டுக்கு எழுந்தருளியதாகப் பெரிய புராணங் கூறும். அகஸ்தியர் காலமோ முதற்சங்க காலத்திற்கு முன்னர். அக் காலங் குறைந்தது இன்றைக்குப் பத்தாயிரம் ஆண்டுகட்கு முன் னர், அத் திருமூல தேவர் இயற்றிய திருமந்திர மென்னும் நூலில். வேதச் சிறப்பும், ஆகமச் சிறப்பும, அவ்வேதாகமங் களின் பெயர்களுடன் கூறபபட்டிருக்கின்றன. ஆரிய வெழுத் துக்கள் ஐம்பத்தொன்று என்றும் வேதாகமங்கள் அவ்வெழுத் துக்களாலாயவையென்றும் கூறப்பட்டிருக்கின்றன. இவைக ளின் விரிவை ~~௬௦௬~~-ம் பக்கத்தில் காட்டியிருக்கின்றோம். ஆரியர் பிற நாட்டினின்றும் நம் நாட்டிற் குடியேறினவர் என்னுங் கொள்கையைச் சுவாமி விவேகாநந்தரும் மற்றுமோர் ஆராச்சி வல்லுனரும் மறுத்து எழுதியிருப்பதை இவ்வாராய்ச்சியின் ௬௦, ௬௬-வது பக்கங்களிற் காட்டியிருக்கின்றோம்.

ஆதலால், சரித்திர ஆராய்ச்சிப்படி விளங்கும் உண்மையெனக் கூறிக்கொண்டு அதனடியில் எழுதியிருக்கும் நம் நண்பர் உரை, அவர் ஒருவரால் கட்டப்பட்டதேயொழிய நமது பண்டை நூல்களால் ஆதரிக்கப்படாததொன்றாம்.

வேதங்கள் ஒன்றின் பின் ஒன்றாக உற்பத்தியானதென்பதும் பிற்காலத்தில் தந்திரப்பகுதி அவைகளிற் கலந்ததென்பதும் சரித்திர ஆராய்ச்சி முறைப்படி உண்மையெனவெழுதி "சமயாசாரியர்கள் தோன்றியகாலத்தே இக்கொள்கை நிலை "பெற்றும் பிராமணருட் பலரும் சிவபெருமானையே கடவு "ளெனக்கொண்டு தமது வேதத்தின் உயர்ந்த கருத்தும் "அஃதே யென்ற கொள்கையுடைத்தோராய்த் தாம் செய்யும் "அங்கி (அக்நி) வழிபாடு சிவ வழிபாடே யென்று கருதின "மையால் ஸ்ரீமத் ஞானசம்பந்த மூர்த்தியும், ஸ்ரீமத் அப்ப "மூர்த்தியும் பிறரும் வடமொழி வேதப்பொருள் சைவமென் "பதைத்தழுவி உரைப்பாராயினர். அங்ஙனங் கொள்ளாதாரை "நோக்கி "எரிபெருக்குவ ரவ்வெரி யீசன துருவருக்கமாவ "துணர்கிலர்." "இருக்கு நான்மறை யீசனையே தொழுங் கருத் "தினை நினையார் கன்மனவரே" என்று அருளிச்செய்தமை "காண்க" எனவெழுதியிருக்கின்றார். (மேலே இக்கொள்கை என்றது வியாசர் காலத்தே தந்திரப்பகுதி வேதங்களிற் கலந்ததென நம்மவர் கூறுங்கூற்றைச் சுட்டுகின்றது) தந்திரப்பகுதி வேதத்திற் பிற்காலத்திற் கலந்ததென்பதற்கு நண்பர் உரையைத்தவிர வேறு நூற்பிரமாணமொன்றுமில்லை. தொல்காப்பியர், அகத்தியர் காலத்தவரான திருமூலர், ஆதியான பண்டையோர் அவர்களியற்றிய நூல்களில் வேதத்தைப் பற்றித் தெளிவாய் எழுதியிருக்கின்றார்கள். நஞ்சமயாசாரியர் காலத்தே பல பிராமணர்கள் கொண்ட வேதக்கொள்கை, அவர்கள் செய்த அங்கிவழிபாடு, இவைகள் சிவவழிபாடு என்று, அவர்கள் கருதியிருந்ததனால் அக்கருத்தை யுணர்ந்த நஞ்சைவ சமயாசாரியர்களும் அக்கொள்கையை யநுசரித்து மேற்காட்டிய தேவாரப் பாக்கள் அருளினார்களென்பது நண்பர் கொள்கைபோலும். பிராமணர்கள் அவ்வாறான கொள்கையராய் அக்காலமிருந்திராவிட்டால் இச்செய்யுட்களைச் சமயாசாரியர்கள் அருளிச்செய்திரார் என்பதும் இதனால் போதரும். அன்றியும் பிராமணர்கள் அங்ஙனங் கொள்ளாவிட்டால் "அவ்வெரி" ஈசனதுருவருக்கமாகாமல் ஈசனுக்குரிய அட்டமூர்த்தம் சப்தமூர்த்தமாகியும் குறைவுறுமென்று எள்ளலாய் முடியும். ஆரியம்வேத முண்டாயபோது அதில் சைவப் பகுதிகளில்லாதிருந்தன வென்பதை நம் நண்பர் இக்காலங்கண்

டறிந்தபடி அக்காலம் சமயாசாரியர்கள் அறிந்திலர் என்பதும் சமயாசாரியர்கட்கு அங்கிவழிபாடு உண்மையில் உடன்பாடன்றென்பதுவும் போதரும்.

"பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங்
காலனை யன்றே விகராக்கொண்ட—பாலன்
மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங்
கரணம் போலல்லாமை காண்"

"துரியங்கடந்த சுடர்த்தோகையுட னென்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான்—றுரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித்தான் செய்யுந் தன்மைகளு
மாக்கியிடு மன்பர்க்கவன்" [திருக்களிற்றுப்படியார்]

என்றபடி சமயாசாரியர்கள் பசுகரணம் நீங்கிப் பதிகரணமுடையோரென்றும் பஞ்சகிர்த்தியங்கள் செய்யும் ஆற்றலுடையோரென்றும் பெருமக்கள் கூறியிருக்கும் அருண்மொழிகளெல்லாம் இவர்க்குமருண் மொழிகளாயிற்றே. அந்தோ பாவம்!! பாவம்!! சிவசிவ!! சிவசிவ.!! திருஞானசம்பந்தப் பெருமானே தமது திருவாக்குகளில் தம்மைக்கூறியிருப்பதாவது. "எமதுரைதமதுரையாக"—"வாய்மையினுரைமருகேள்வி ஞானசம்பந்தன்"—"பதியான ஞான முனிவன்" "சுற்றுமுற்றுமாயினன்". என்பவைகளும் நம்பியாண்டார் நம்பிகள் சம்பந்தரைக்குறித்துக் கூறியிருப்பவைகளான "ஆனசீர்த்தத்துவனை நித்தனைச்சைவத்தவராசை"-"மானமறையவற்றின் வான்பொருளை" என்பவைகளும் சம்பந்தப்பெருமான் ஏழாமாண்டில் உபநயனச்சடங்கு கொண்டருளிய காலத்தே பிராமணர்கள் அதிசயிக்குமாறு சடை, பதம், கிரமம் பொருந்த எண்ணிறந்த வேதங்களையும் அவற்றின் பொருளையும் அருளினரென்று சேக்கிழார் கூறியருளியதும் பொய்வார்த்தைகளாம். சேக்கிழார் வார்த்தை பொய்யாகுமேல், "உலகெலாம்" என நடேசப்பெருமான் முதலெடுத்துக் கொடுத்ததாகக்கூறும் மொழியும் பொய்யாய் முடியுமே. இக்காலத்திய கல்வியாளர்களிற் சிலர், "பாடங்கொள்பனுவற்றிறங் கற்றுப்போய், நாடங்குள்ளன தட்டிய நாணிலீர்" என்னும் அப்பமூர்த்திகள் திருவாக்குக்கு இலக்கியமாய், வயிறுவளர்க்கவேண்டி நடுவுநிலைமையினில்லாது அவைக்களத்துள்ளோர் நோக்கம் போல் சொற்பொழிவு செய்தல்போல நம்பெருமக்களும் உலகினர் கருத்துக்குத்தக்கவாறு பாடினர்களே யொழிய உண்மையைக்காட்டி உபகரித்திலர் என்பது பெறப்படுமே!!! இக்காரணங்களால் நம்மவர் கொள்கை தூஷிக்கப்படுவதன்றென்பது ஒருதலை. அங்கிவழிபாடு சிவாகமங்களுட் கூறப்பட்டு சிவாலயங்களுள் அவ்வழிபாட்டுக்கென்றே யாகசாலை மண்டபம் எனத் தனி

யாகச் சிற்ப சாஸ்திர முறைப்படி ஆலயம் கட்டப்படும்போதே சமைக்கப்பட்டு நித்திய நைமித்தியங்களிலும் உற்சவாதிகளிலும் பிரதிஷ்டை கும்பாபிஷேக காலங்களிலும் பலவித குண்ட மண்டலங்களோடு நிகழ்ச்சிபெற்று வந்துகொண்டேயிருக்கின்றது. சைவர்கள் எனப்படும் வேளாளர்களும் சிவபூஜா காலங்களிலும் மற்றைய சுபா சுப காலங்களிலும், அங்கிவழிபாடு தொன்றுதொட்டே பாரம்பரியமாய் கைக்கொண்டு வருகிறார்கள். வடமொழிச் சிவாகமப்படி தமிழில் ஏற்பட்ட சிவபூஜாபத் ததிநூல்களிலும் அங்கிவழிபாடு இன்றியமையாததொன்றெனக் கூறப்பட்டுமிருக்கின்றது. "வடமொழி இருக்கு "வேதத்துட்போந்த சில பகுதிகட்கு மெய்கண்டார் சைவப் "பொருள் கொண்டனர்" எனவும் நம்மவர் எழுதியிருக்கின்றார். மெய்கண்டார், வேதத்துள் சைவப் பகுதி யிருந்தமையினால் வேதத்திற்குப் பிற்காலம் தாமருளிய தமிழ்ச் சைவநூலில் அவ்வேதப் பகுதியை ஒரு பிரமாணமாகக் காட்டினாரேயல்லாது பிறிதொன்றுமல்ல. 'இக்கிரமத்தென்னுமிருக்கு' என்னும், மெய்கண்டாரது திருவாக்கின் பொருளுணுட்பமறிந்தவர்கள் இதன் உண்மையறிவார்கள். "தேவர் குறளுந் திருநான்மறைமுடிவும்" என்ற செய்யுளில் நான்கு வேதங்களும், தேவார திருவாசகங்கள், பிரமசூத்திரம், திருமந்திரம் ஆகிய நூல்களும் ஓரே வாச்சியப் பொருளைக் கொண்டதெனச் சர்ஸவதியின் அவதாரமாகிய ஔவைப் பிராட்டியாரும் அருளிச் செய்திருப்பதாலும், நான்கு வேதங்களும் தேவாரமாதிய தமிழ்நூல்களும் ஓரே பொருளைக் குறித்தனவென்பதையு மறியலாம். சமயாசாரியர்களும், சந்தான குரவர்களும் வேதத்தில் சைவ மார்க்கமிருக்கின்றதென அவர்கள் கண்டு போதித்த மார்க்கத்தைக் கைவிடாது அவ்வழி யொழுகுவதுதான் அவர்கள் சந்தான பரம்பரையிற் றோன்றிய மாணாக்கர்கட்கு அழகு. ஆசாரியர் காட்டிய வழி நடவாதவர் ஆசாரியர் அநுக்கிரகத்தைப் பெறுவரோ? யாது பிரயோஜனங் கருதி நஞ் சமயாசாரியர் கொள்கைக்கு முரணாக இவர் எழுதுவதோ அறியக்கூடவில்லை. ஆராய்ச்சியினும் கல்வித்திறமையினும் அநுபவத்தினும் மிக்குயர்ந்த சுவாமி வேதாசல மென்பார், நவீனக் கொள்கை பெரிது முடையராயிருந்தும், அவரெழுதிய "தமிழ் நான்மறையின் தெய்விக உண்மை" யென்ற மேவாருரையில், தமிழ் நான்மறை யென்பது தேவார திருவாசகமென்றும், அவற்றிற்கும் வடமொழி நான்மறைக்கு முள்ள பேதம், இருபாஷைகளும் தங்கண் உள்ள சாத்திர உண்மைப் பொருளை அறிவுறுத்துஞ் சிவானந்தப் பேற்றை யெய்துவிக்குஞ் சிறப்புடையனவாயினும் முன்னையது திராட்சபாக அமைதியும்

பின்னையது நாரிகேளபாக அமைதியும் பெற்றுப் பிரகாசிக்கின்றனவெனப் பொருள் கொண்டு எழுதியிருக்கின்றார். நம்மவரைப்போலத் தேவார திருவாசகத்தை யொழித்துத் தமிழ் நான்மறை வேறு இருந்து கடல்கோளில் அழிந்துபோனதாக அவர் கூற முன்வந்திலர்.

நிற்க, இனி நம்மவர் திருவிளையாடற் புராணத்தினுள்ள வேதத்திற்குப் பொரு ளருளிச்செய்த படலத்திற் கூறும் சரித்திரத்தை விளக்கப் புகுந்தார். அவர் எழுதுவதாவது. "வேதத்திற்குப் பொருளருளிச்செய்த படலத்தில் காசியி "லிருந்த முனிவர்கள் திருவாலவாய் வந்து தென்முகக் கடவு "ளிடம் வேதப் பொருள் கேட்டனர் என்று சொல்லப்பட் "டிருக்கின்றது. வடமொழியிலுள்ள வேதத்தையே அங்குப் "புராண ஆசிரியர் குறித்திருக்கின்றார். வேதம் வடமொழி "யிலே யிருப்பவும், அதற்குப் பொருள் தென்றமிழ் "நாட்டிலே வந்து கடவுளிடத்துக் கேட்டனர் என்று சொல்லு "தல் பொருத்தமில்லாததாகவே தோன்றுகின்றது. அக்கதை "யின் கருத்தை யாதென யூகிக்குமிடத்து வடமொழி வேதத் "திற் கூறிய சமயம் வேறாகவும் அவற்றிற்குப் புறமாய்க் கூற "வரும் சைவக் கொள்கைகள் மிகச் சிறந்தனவாகவும் "கண்டோருட் சில ஆரியர் தமது வேதத்தையும் கடவுள் "வாக்கென்ற கொள்கை யுடையராதலின் வேதத்தை விடு "வதோ சைவத்தைப் பற்றுவதோ என்ற ஐயமுடையவர் "களாய்த் தென்னாட்டிலே சென்று சிவோபாசனை செய்யில் "கடவுள் அதனை விளக்குவாரென்று கேள்விப்பட்டுத் திரு "வாலவாய்க்கு வந்து கடவுள் அருளால் உண்மை தெரிந்தனர் "என்பதே கொள்ளற்பாலது. அஃதன்றெனின் அக்கதை "யைப் பொய்யென்று கொள்ளவேண்டும்" என்று எழுதி முடித்தார்.

இப்பகுதிதான், நம்மவரெழுதியது மிவ்வாராய்ச்சிக் குரியதுமான திருநான்மறை விளக்க முடிபுக்குச் சற்று முந்திய பகுதி. வேதப்பொருள் கேட்கவந்த முனிவர் காசியினின்றும் வந்ததாகத் திருவிளையாடற் புராணத்தில் கூறுவதாக இவர் சொல்வது பொய். தென்னாட்டிலே சிவோபாசனை செய்யில் கடவுள் அதனை விளக்குவாரென்று கேள்விப்பட்டு திருவால வாய்க்கு வந்தாரென இவர் எழுதியிருக்கின்றாரே. வடநாட்டிலே யிருந்து சிவோபாசனை செய்யில் கடவுள் அதை விளக்கமாட்டாரா? தென்னாட்டுக் கடவுள் வேறு வடநாட்டுக் கடவுள் வேறா? அகத்திய மாமுனிவருக்குக் குமரவேள் காசியின் சிறப்பை "இலகுசுடர் விச்சுவநாதற் கிணையாங்

கடவுளிலிங்கமு நீர், சுலவு மணிகர் ணிகைக்கிணை யாந்துகடீர் தெய்வத் தீர்த்தமும்வான், கலவமஞ்ஞை நடம்பயிலுங் காசிக் கிணையா நன்னகரு, மூலகமொரு மூன்றினுமிலை யீதுண்மை யுண்மை யுண்மையால்" என்று முக்காலும் கூறினார். இவ் வரிய பெரிய சிறப்புவாய்ந்த அக்காசிப் பதியினுறைவோர் அதனைவிட்டுப் பன்னூறுகாத தூரமுள்ள மதுரைக்கு ஏன் வரவேண்டும். வேதம் வடமொழியிலிருப்பவும் அதற்குப் பொருள் தென்றமிழ் நாட்டிலே வந்து கடவுளிடத்துக் கேட்டனர் என்று சொல்வது பொருத்தமில்லாததாகவே தோன்றுகிறது எனவெழுதினாரே? இவருக்குப் பொருத்த மில்லாததாகத் தோன்றுதற்குள்ள நியாயம் இன்னதென வெழுதினாரில்லை. இவருக்குத் தோன்றுவது சித்தாந்தமோ? வடமொழி தென்னாட்டிலில்லையென்பது இவர் கருத்தோ? அல் லது வடமொழி வேதப்பொருள் வடநாட்டுக் கடவுளுக்குத் தெரியாதென்பதும், தென்னாட்டுக் கடவுளுக்குத்தான் வேதத் தின் உண்மைப் பொருள் தெரியுமென்பதும் இவர் கருத்தோ? தெரியக்கூடவில்லை. தமிழ்நாடு திருப்பதிவரை அதாவது மது ரைக்கு வடக்கு சுமார் ஐம்பது காதம்வரை பரவியிருக்கவும் அவ்விஸ்தாரமான தமிழ்ப்பூமியில் எண்ணிறந்த சிவாலயங்கள் தொன்று தொட்டு விளங்கவும் அவைகளை எல்லாங்கடந்து மதுரைக்கு அவர்கள் ஏன் வரவேண்டும். நம் நண்பர் சித் தாந்தத்தில், இவ்வகை ஆசங்கைகள் பலவெழுமாதலால், திரு விளையாடற் புராண ஆசிரியர் கூற்றுப்படி மதுரைமாநகரம் விராட்புருடனது சென்னிப்பன்னிருவிரன் மேலுள்ள துவாத சாந்த க்ஷேத்திரமானதால் அம்முனிவர்கள் திருவாலவாய்க்கு வந்தனரென்று கூறுவதே சங்கையற்றதென்பதை யுணரவேண் டும். வடமொழிக்கும் தென்மொழிக்கும் தந்தையாயினோர் சிவபிரானே என்றும், ஆதலால் ஆரியமுஞ் செந்தமிழும் ஒன்றையொன்று விரோதியாமல் நாடெங்கும் பரவி யிருக் கின்றனவென்றும் சிவபிரான் ஒருவரே முழுதற் கடவுளாகி அண்டபிண்டசராசரங்கட்கெல்லாம் இறைவனாய் விளங்குகின் றாரெனவும் வேதசிவாகமங்கள் அவராலே அருளப்பட்ட முத னூல்களெனவும் நமது சைவநூல்கள் கூறுவதை உணர்ந்தோர், நண்பர் கருத்தோடு ஒன்றுபடார். தென்றமிழ்வேதம் வேறு, வடமொழிவேதம் வேறு, தென்திசைக் கடவுள் வேறு வட திசைக் கடவுள் வேறு, என்னும் விசித்திரக்கொள்கை பூண்ட வர்கள் தான் இவ்வாறு சொல்லுவது தகுதி. நிற்க, வட மொழி வேதத்துட் கூறிய சமயம் வேறு என நம்மவர் எழுதி னார். பிரமசூத்திரத்திற்குப் பாஷியம் ஆதியிற் செய்த ஸ்ரீநீல கண்டர் வேதசிவாகமங்கட்குப் பேதங்கண்டிலேம் எனவெழுதி

னர். திருமூலதேவரும் இரண்டு அந்தமும் பெரியோர்க்கு அபேதம் என அருளினர். மற்றும் நஞ்சைவ சமயாசாரியர்களும், சந்தானசாரியர்களும் சைவசித்தாந்த அனுபூதிமான்களும் வேதாந்தத்திறம் சைவமென்றும், வேதாந்தத்துச்சியிற் பழுத்தது சைவசித்தாந்தமென்றும், பன்முறை கூவிக்கூவி அறைந்துள்ளார்கள். இவ்வரிய பிரபல பிரமாணங்கட்கெல்லாம், மாறுபட்டு நம் நண்பர் வடமொழி வேதத்துட் கூறிய சமயம் வேறு என்று தங்கோளைநிறுவற் பொருட்டு மாற்சரியத்தினல் கூறினரென்பதை வெள்ளிடைமலைபோலத் தெள்ளிதிற் புலப்படக்காட்டுதும். இவர் வேதத்துட் கூறிய சமயம் வேறு என்றது ஆரியசமயம் ஒன்றைக்கருதியே. வேதத்தில் உலகத்திலுள்ள பல மதங்களும் தூலசூக்குமமாகக் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வுண்மை 'வேதமென்னும் பாதவம்வளர்த்தனை பாதவமதனிற்படு பயன்பலவே' எனும் குமரகுருபர சுவாமிகள் திருவாக்காலுணர்க. ஆகமத்தும் அவ்வாறே பல சமயங்கள் கூறப்பட்டுள்ளனவென்பது "வேதநூல் சைவநூலென்றிரண்டே நூல்கள், வேறுரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள்" என்னும் சித்தியார் திருவிருத்தத்தால் உணரலாம். ஆனல் வேதத்தின் உண்மையறியாத சில பார்ப்பனர் சிவபிரானை முழுமுதற் கடவுளாகக் கருதாது பலவகையான ஆபாசங்களை மொழிவர். அது தக்கன் யாகத்துச் சிவபிரானை நிந்தனை செய்ததனல் ததீசி ஆதிய மகா சைவவிருடிகளால் இடப்பட்ட சாபத்தின் பயனென்றுணரவேண்டும். அவ்விஷயத்தில் யாஞ்செய்யத்தக்க தொன்றுமில்லை

"பேசரியமறைகளெலாம் பராபரநீ யெனவணங்கிப் பெரிதுபோற்று
மீசனையுமன்பரையு நீற்றோடு கண்டி கையினையு மிகழ்ந்துநீவிர்
காசினியின் மறையவரா யெந்நாளும்பிறந்திறந்து கதியுறாது
பாசமதனிடைப்பட்டு மறையுரையா நெறியதனிற் படுதிரென்றான்"

"முறைபடு சுருதியெல்லா மொழியினு மதுவேசார்வா
வுறகிலராகிப் பொல்லா வொழுக்கமே கொண்டுமுக்க
ணிறைவனை யிகழ்ந்து முத்தியெய்திடாதுழல முன்னாண்
மறையவர் பெற்றசாப மின்னையு மயக்குறாதோ"

"தாதையாய்த் தம்மைநல்கித்தந் தொழிற் குரியனாகி
யாதியாய்த் தங்கட்கின்றி யமைவுறாச் சிவனைநீங்கி
யேதிலார் பக்கமாகி யில்லொழுக்கிறந்தார் போலும்
வேதியர் முறையேசெய்தாய் வெறுப்ப தெனின்னையானே"

எனும் கந்தபுராணச் செய்யுட்களாலும்

"பலவகைப்பவந்தோறெய்திடுந்தவத்தோர் படர்ந்தெழுமகத்திருள் [கடிந்தோர்
நலமுறுமியமநியம நற்செய்கையந்து ளோருனைப்பெற முயல்வார்

*கலியுறுநவை சேருளத்தவர சுரக்கமெமையர்த தீசியாதிகளா*
*லலமரச் சபிக்கப்பட்டுளோ ரெவ்வாறறிவரோ வையநின்றனையே"*

எனும் பிராமண குலோத்தமராகிய அப்பயதீட்சித முனிவர் இயற்றிய சிவ தத்துவ விவேகச் சுலோகத்தின் சிவஞான முனிவரது மொழி பெயர்ப்புச் செய்யுளாலும் அறிந்துகொள்க.

மேற்காட்டிய, ஸ்ரீநீலகண்டர், சித்தாந்த நூலாசிரியோராதியோர்கள், கருத்தைத் தழுவியே, சிவஞான போத பாஷிய கர்த்தர் பாடியம் கசு-ம் பக்கத்தில் கூறுவதாவது. "இனி வேத "முஞ் சிவாகமு மொன்றேயாயினும் இருபகுதிப்பட்டது. "வேதம் மூன்று வருணத்தாருக்கும் சிவாகமம் நான்கு வருணத் "தாருக்கும் பொதுவாதல் பற்றி யாதலால் சிவாகமங்கள் பிர "மாணம் என்பது தெற்றென உணர்க. இங்ஙனம் சைவாக "மங்களுக்குப் பிராமாணியம் பவுட்கர உரையின் உமாபதி "சிவாசாரியர் காட்டியவாறே காண்க." நீலகண்ட பாடியத்திற் பதியதிகரணத்திற் காட்டுமாறு:-"சிவாகமங்களில் ஒரு சாரன "பரப்பிரமங் கேவலம் நிமித்த காரணம் எனக் கூறும்; அதனை "மறுத்தற்கு எழுந்தது இவ் வதிகரணமென்று உரைப்பாரு "முளர்; அது பொருந்தாது; யாம் வேதத்திற்குஞ் சிவாகமத் "திற்கும் வேற்றுமை கண்டிலம்; சிவனாற் செய்யப்படுதலின் "வேதமுஞ் சிவாகமமெனப்படும்; ஆதலாற் சிவாகமம் மூன்று "வருணத்துக்கே உரித்தாயதும் நான்கு வருணத்துக்கே உரித் "தாயதும் என இருவகைப் படும். அவற்றுள் முன்னையது "வேதம் எனவும் பின்னையது சிவாகமம் எனவும் வழங்கப்பட் "டன; இவ்விரண்டுஞ் செய்த கருத்தன் சிவன் ஒருவனேயாம்; "இவ்வாறு சுருதியினும் புராணங்களினுஞ் சிவாகமங்களினுங் "கூறப்பட்டது; பஞ்சப் பிரமம் பிரணவம் பஞ்சாக்கரம் பிரா "சாத முதலிய மந்திரங்களும், பதி, பசு, பாச முதலிய பொருள் "வழக்கமும், திருநீற்றின் உத்தூளனம் திரிபுண்டரம் உருத்தி "ராக்கம் தரித்தல் சிவலிங்க பூஜை முதலிய தருமங்களும் பிற "வும் வேதஞ் சிவாகமம் இரண்டினும் ஒப்பக் காண்டலான், "அவ்விரண்டும் பிரமாணமே ஆகலானும், கருத்தா ஒருவனே "ஆகலான் அவ்விரண்டிற்கும் பொருள் ஒன்றேயாகலின் அவற் "றுள்ளும் மாறுபாடின்மையானும், இவ்வதிகரணங் கேவலம் "நிமித்த மாத்திரமே இறைவன் எனக் கூறும் இரணிய கருப்ப "நூலாகிய யோக சாத்திரத்தை மறுத்தற்கு எழுந்ததெனவே "யாங் கூறுதும்" என்று இவ்வாறு நீலகண்ட சிவாசாரியாராற் காட்டப்பட்டது."

பின்னும் "புறச்சமயத்தவர்க்கிருளாய்" என்னுஞ் "சிவப்பிரகாசப்பாயிரம், எ-வது செய்யுளிற் காணப்படும்

"வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத்திறன்" என்ற
"பகுதிக்குச் சிவஞானமுனிவர் கூறும் விருத்தியாவது (பாடி
"யம் ௧௦௯-ம் பக்கம்) வேதாந்தமுஞ் சித்தாந்தமும் வேறு
"என்பாரை மறுத்துப் பல பொருள்படுஞ் சூத்திரத்தை அந்
"நனம் படாமைத் தெளித்துரைக்கும் பாடியம்போல வேதாந்
"தத்தைத் தெளித்துரைப்பதே சைவ சித்தாந்தமென்பார்.
"மகுடாகமம் முதலியவற்றுள் *ஓதியவாறே "வேதாந்தத்
"தெளிவாஞ் சைவ சித்தாந்தத்திறன்", என்றார் என்பது—

மேலே காட்டிய படிக்குள்ள நம் ஆன்றோரது பிரமாணங்களுக்கும் முரணுவது, "வேதத்திற்கூறிய சமயம் வேறு" என நம் நண்பர் அவரது யுக்தி யொன்றுனே எழுதியது எனச் சைவ மக்கள் பல்லோருங் கொள்வார்—இன்னமும் அம்முனிவர்கள் திருவாலவாய்க்கு வந்து கடவுள் அருளால் உண்மை தெரிந்தனர் என்பதே கொள்ளற்பாலது எனவெழுதினுர். கடவுள் அருளை அவர்கள் தென்றமிழ் நாட்டில் எவ்வாறு பெற்றனர் என்பதை நம்மவர் விரித்திலர். இவரது இறந்துபோன தமிழ் நான்மறையையாவது அதன் பொருளையாவது அவர்கள் கண்டுபிடித்துக் கடவுள் அருளைப் பெற்றிலர், மற்றெவ்வாறெனில் "§வடகிழலமர்ந்த மறைமுதன் மேதாமனு ¶வெழுத்திருபது மிரண்டுங்—கிடமுறவர பத்தன் றனுற்றெளிந்து" எனக் கடவுள் அருளைப்பெற்றதற்குக் காரணம் அப்புராணத்திற் கூறியுள்ளது. இன்னமும், திருவாலவாய்க்கு வந்து கடவுள் அருளால் உண்மை தெரிந்தனர் என்று நம்மவர் சொன்னுரேயொழிய அவ்வுண்மை யின்னதெனக்கூறினுரில்லை. அவ்வுண்மை என்னவெனத் திருவிளையாடற் புராணத்தைப் பார்க்குமிடத்துத் தட்சிணுமூர்த்திக் கடவுள் அம்முனிவர்களுக்கு நேரில் பிரசன்னராகி அநுக்கிரகித்ததாவது. "சிவாகம நூலிச்சுரவரனடு முகத்துதித்த" என முதலில் அனுக்கிரகித்தார். சிவபெருமானே வடமொழிச்சிவாகம உற்பத்தி தம்மிடமிருந்து ஆயினவென அருளியிருக்க நம்மவர் ஏன் அதற்கு முரணுகத் தமிழ் ௨௮-ஆகமங்களிருந்தன போலவும் அவைகளின் மொழிபெயர்ப்பு வடமொழி ஆகமம் என்றும் தமிழி

* வேதமாமி தந்தந்திரம் ஶித்தாந்தம் பரமம் சபம்

§ திருவிளையாடற் புராணம் வேதத்துக்குப் பொருளருளிச் செய்த படலம். ௧௫-வது செய்யுள்.

¶ மேதாமனு என்றது தக்ஷிணுமூர்த்தி பேதங்களுள் ஒன்றும் விளங்கும் மேதா தக்ஷிணுமூர்த்திக்குரிய இருபத்திரண்டு அக்ஷரங்களாலாய மூலமந்திரத்தை. இது வடமொழி மந்திர சாஸ்திரங்களிலேயே கூறப்பட்டுளது.

ருந்த ஆகமம் கடற்பெருக்கிற் போயது எனவும் கற்பிக்க ஆரம்

பித்தார். இச்செய்யுளில் வடமொழி ஆகமம் எனக்கூறவில்லை யெனில் தென்மொழி ஆகமமென்றுங் கூறவில்லை. மற்றுவட மொழியென எவ்வாறு பொருள்கொள்வதென்றாலோ, அடுத்த செய்யுட்களில் இருக்கு முதலிய நான்கு வேதங்களும் சிவபிரா னால் அருளப்பட்டதெனக் கூறியிருப்பதனாலும், நமது நண்பர் நான்கு மறைகளைத் தமிழ்முனிவர் நால்வர் கூறினாரென்று சொல்வதாலும் அவைகள் வடமொழியே யென்பது திண்ணம். முக்காலமுமுணர்ந்த திருமூலர் ஆதியோர் வேதசிவாகமங்கள் வடமொழியின் எழுத்துக்களால் ஆயவென அருளியிருப்பதா னும் அவ்வடமொழி சிவாகமங்களேநந் தமிழ்நாட்டிலும் மற்று எந்நாட்டிலுமுள்ள சிவாலயங்கடோறும் பண்டைக்காலம் முதல் வழங்கப்பட்டு நிலைபெற்றிருக்கின்றமையானும் அருணந்திசிவ மும் அவ்வாறே அருளியிருப்பதானும் (காரியமாய் என்னுஞ் சிவஞானசித்தியார் செய்யுளைப்பார்க்க.) இச்செய்யுளில் கூறப்பட்டுள்ள ஆகமம் வடமொழியென்றே கொள்ளவேண்டு மென்பதுறுதி. பின்னர்க் கடவுள் என்ன அநுக்கிரகித்தா ரெனில்,

"கீட்டிசை முகத்தொன்றடுத்த நாலைந்திற்கிளைத்ததா விருக்கது வென்பா
லீட்டியவிரண்டாம் வேதநூறுருவோ டெழுந்தது குடதிசை முகத்தி
னீட்டிய சாமமாயிர முகத்தானிமிர்ந்தது வடதிசைமுகத்தி
னாட்டிய வொன்பதுருவொடு கிளைத்துநடந்தது நான்கதாமறையே"

என்றும்

"மறைவழி மதங்கட்கெல்லா மறைபிரமாணம் பின்சென்
றறைதரு மிருதியெல்லா மவைக்கனு குணமாமின்ன
முறையினன் *மார்த்தமென்று மொழிவதம் மார்த்தஞ்சேர்ந்த
துறைகள் வைதிகமா மேலாச்சொல்வதிச் சுத்தமார்க்கம்" என்றும்

"நிறைபராபரம் விஞ்ஞான நிராமயமென்று நூல்க
ளறைபரம் பிரமமாகு மிதனுருவாகு மேக
மறையிதன் பொருளே யிந்தசசுந்தர வடிவாயிங்ங
னுறைசிவலிங்க மொன்றேயென்பர் நூலுணர்ந்த நல்லோர்"

என்றும்

"கிரியையான் ஞானந்தன்றாற் கிளர்சிவ பத்திபூசை
தரிசனஞ் சைவலிங்க தாபனஞ் செய்தலீசற்
குரிய மெய்யன்பர்பூசை யுருத்திர சின்னந்தாங்க
லரிய தேசிகன்பாற் பத்தியனைத்தையும் தெரியலாகும்" என்றும்

---

* மார்த்தம் என்றது ஸ்மார்த்தம் எனும் வடமொழியின் திரிபு. சாங் கிய முதலியவற்றை நோக்க ஸ்மார்த்தம் மேலென்பது இதன் கருத்து. இம்முனிவர்கள் வேதப்பொருளை விரும்பினமையால் இறைவன் வைதிக மார்க்கத்தை உபதேசித்தார். வைதிக சைவம் வேறு என்பதைக் காட்டு தும். திருவிளையாடலில், சிவாகமநூ லீச்சுரன்னடுமுகத்துதித்த என்று

அருளிச்செய்திருப்பதில், இருக்காதிவேதங்கள் சிவபிரானிடமிருந்தே தோன்றினவென்றும் அதற்கு அநுகுணமாய் ஸ்மிருதி ஆதிய தோன்றின வென்றும், வேதத்திற் கூறுவது ஒரே கடவுளைப்பற்றி யென்றும், அக்கடவுள் சிவபிரானே என்றும், அவரைச் சிவலிங்கத்தினிடமாய்ப் பூசையாதிய செய்தலே கிரியாமார்க்கமென்றும், அதுதான் வைதிக சுத்த ஸ்மார்த்த மார்க்கமென்றும், தமிழ்நாட்டுத் தட்சிணாமூர்த்திக் கடவுளே உபதேசித்ததாகத் தெளிவியதாய் விளங்குகின்றது. நம்மவரே எடுத்துக்காட்டிய திருவிளையாடற் புராணத்தில் உண்மை இஃதெனக் கடவுளே கூறியிருக்க நம்மவர் § "வடமொழி இருக்குவேதத்துட் போந்த ஆயிரத்திருபத்தெட்டுச் "சூக்தங்களுள் இருநூற்றின் மேற்பட்டவை இந்திரனைப் "பற்றிக் கூறப்படுவன. அவன்பாற் செய்யப்படும் கொலை, "குடி முதலிய பயிலும் வேள்விகள் பலபல இந்திரவணக் "கமே யன்றி எண்ணிறந்த தெய்வங்களின் வழிபாடும் சிறப் "பாகக் கூறப்படுகின்றன.................இன்னும் மணமிலா "இளைஞனும் கைம்பெண்ணுங் கலந்ததின் பயனைக் கருவி "யாகக் கொண்டு செய்யும் பௌண்டரிகயாக முதலிய மிக "வெறுக்கத்தக்க வேள்விகளும் வேதத்துட் காணப்படுவதாகத் "தெரிகின்றது. இங்ஙனம் கொலை முதலியன விதிக்கும் " நூல்களைச் சிவவாக்காகவும் கூறுதல் அபிமானம் பற்றியோ, " அறியாமை பற்றியோ அறிகிலம். இருக்கு வேதம் போன்ற " ஒரு நூல் தமிழில் வேண்டுமானால் காடன், மாடன், காட்டேரி "வீரப்பன் முதலிய சிறுதெய்வங்களுக்கு இழிகுலத்தார் "பாடும் பாட்டுக்களையும் அவர்கள் வணங்கும் வழக்கங்களை "யுந் தொகுத்துள்ள கதைகளையும் கோவைசெய்து ஒரு " நூலாக்கி அத்தொகை நூலை மறையல்லது வேதமென்ற பெய

கூறி அது பற்றி விரிக்காது நால்வேறு வகையாய் அருமறையின் விரிந்த செய்திகளைக்கூறி, நித்திய முதலியவற்றுக்குச சிவகோசங்காரணமெனக் கூறி முடித்துப்பின் மறைவழி மதங்கட்கெல்லா மென்றெடுத்துக் கொண்டு மிருதி அவற்றிற் கனுகுணமெனக்கூறி அதனைச் சுத்தமார்க்கமென்று முடித்தலின் மறைவழிப்பட்ட கருமகாண்டத்துக்கு மிருதி அனுகுணமென்பதும் வைதிகத்தின் வழிவந்த ஏனைய மதப்பிரிவுகளெல்லாம் ஸ்மார்த்தமென்னும் பொதுப்பெயரால் வழங்கப்படு மென்பதும் விளங்குகின்றன. அங்ஙனமாயினும் ஸ்மார்த்தமுஞ் சித்தாந்த சைவமு மொன்றாகா. "உலகியல் வேத நூலொழுக்க மென்பதும், இலகு மெய்ந் நெறி சிவ நெறியதென்பதும்" எனவும், "மிருதிவழியுழன்றும்" எனவும் முறையே பெரிய புராணத்துஞ் சித்தியாரினும் வரை செய்திருத்தலோடு பொருந்துமாறே கூறவேண்டும்.

§ செந்தமிழ்ச்செல்வி ருத்திரோத்காரி ஐப்பசி பக்கம் ௩௬௧-௩௭௦ பார்க்க.

"ருடன் அமைக்கவேண்டும்" எனவெழுதியிருப்பதை யென்ன வென்று சொல்லலாம். சிவபிரான் வேதத்துக்குப் பொருள றியச்செய்த காலையில் நம்மவர் இல்லாது போயினர். இருந் திருந்தால் இவர்க்குண்டாகிய மேற்காட்டிய இவாது ஆசங்கை களைச் சிவபிரானிடத்தே வினாவி அவரையறியாமை நீக்கி விடு வார். மற்றையோர் கூறுங்கூற்று இவர்க்குப் பயன்படா. மேற்காட்டிய திருவிளையாடற் சரித்திரத்தை எதுக்கு எடுத்துக் காட்டினரோ தெரியவில்லை. அவர் கொண்ட கொள்கை தப்பு என்பதையே இச்சரித்திரம் நிலை நாட்டுகின்றது. இங்கு வேறு ஒன்று விரிக்க வேண்டியதாயிருக்கின்றது. திருவிளையாடற் புராணமும் பெரிய புராணமுந் தமிழ்ச்சைவப் பெருமக்கட்கு இரு கண்கள் போன்றன. சிவபூஜை செய்ய இயலாத்தமிழ்ச் சைவப்பெரியோர், திருவிளையாடற் புராணத்தைக் குருமுக மாகப் பெற்றுச் சிவபூஜை செய்து வருவது போலவே நாடோ றும் நியமமாக நேசித்துப் பூசித்து வாசித்து இச்சித்த சித்தி யையும் பெற்று வருபவர்களாயிருக்கின்றார்கள். அத்த கைய தெய்வத்தன்மை பொருந்திய ஒரு நூலிற் கூறப் பட்ட வொரு சரித்திரத்தைத் தமது மனம் போலப் (பிழைபட்ட பொருள்) பொருள் கொள்ளாவிடின் அக் கதை பொய் யென்று கொள்ள வேண்டும் என எழுதி னரே. இவரது மனோ தர்மம் எத்தகையதோ. கல்விச் செருக் கினால் நக்கீரனுஞ் சிவபிரான் வாக்கை அவமதித்து அதற் குத்தக்க பலனைப் பெற்றதாக நமது நூல்கள் கூறுகின்றன. அத்தகைய நூல்களைக் கற்றறிந்த சைவ மக்கள் கல்வியினாற் செருக்குற்றுத் தம்மை மறவார்கள். இன்னொரு விடயமிங் குக் குறிக்கற்பாலது. குலபூடணனெனும் ஓர் பாண்டியன், சுந்தரேஸ்வரரிடம் மிக்க அன்பு பூண்டவனாகிச் சிவபுண்ணிய மெல்லாங் கைக்கொண்டு குறைவுபடாது செய்து அரசாட்சி யும் முறைப்படி நடாத்தி வரும் நாள், தான் மிக்க சிவபுண்ணி யஞ் செய்து வருபவன் என்னுங் களிப்புடையவனாய்த் தனது நாட்டிலுள்ள வேத அந்தணர்களை யிகழ்ந்தும் அவர் களைப் பாதுகாவாதவனுமாயினன். அவர்கள் புறங்காட்டினர் தார்கள். யாகாதி கிர்த்தியங்கள் நடவா தொழிந்தன, மழை மறுத்தது, பஞ்சம் பரவியது, குடிகளெல்லாம் வருந்தி ஒழிந் தார்கள், அரசன் வருவாய் குன்றியது, அவன் மிக்க கவலை பூண்டு தனது குடிக்கோர் குலதெய்வமாகிய சொக்கக் கடவு ளைப் பணிந்து விண்ணப்பஞ் செய்துகொண்டான். இறைவன் அவனது தவறுதலைக் கருதி, நேரில் அருளாராகிச் சொப்பன வத்தையிற் றோன்றி, நீ நம்மிடம் அன்பிற் குறைந்தவனலன், அரசு புரிவதிற் கொடுங்கோனல்லன், ஆனால் வேத அந்தணர்

களை யிகழ்ந்து கைவிட்டாய், வேதமே எனது சொரூபம், ஆத லின் லித்தீங்குநிகழ்ந்தது என அருளப் பாண்டியன் தெளிந்து, உடனே வேதியர்களைத் தருவித்துத் தக்கபடி ஆதரித்து வந்தான். வேள்வி ஆகிய கிர்த்தியங்கள் நன்றாய் நடையுற்று நாடுஞ் செழிப்புற்றதென வோர் சரித்திரம் * இருவிதத் திருவிளையாடற் புராணங்களிலும் காணப்படுகின்றது. சரித்திர ஆராய்ச்சியார் இதை நம்பமாட்டார்கள். ஐரோப்பா அமெரிக்கா கண்டங்களில் மழை பெய்யவில்லையா? பார்ப்பார்கள் தங்கள் பிழைப்புக்கு வகைதேடிய சரித்திரம் இதுவென்பார்கள். ஆனால் இச்சரித்திரம் நமது சமய நூலிற் கூறியுள்ளதே. ஆதலாற்றான் சமய நூல்களைச் சரித்திர ஆராய்ச்சியால் அளவிட்டுக் காணுதல் அரிதெனக் கூறினோம். சமுத்திரத்தின் ஆவி வெப்பத்தாற் கிளம்பி ஆகாயமார்க்கத்தினிறைந்து காற்றினாற் சிதறுண்டு மழையாய் வீழ்கின்றது. இதற்குக் கடவுள் தயை யென்னவெனக் கூறவேண்டிவரும். வெப்பம் சூரியனால் உண்டாவது. சூரியனைத் தோற்றுவித்தவரார்? சூரியனுக்கு வெப்பத்தையும், சந்திரனுக்குக் குளிர்ச்சியையுங் கொடுத்தவரார்? ஆகாயத்தில் மேகங் கிளம்பியும் மழை பெய்யாது போகின்றதே. அச்சமயம் காற்று உண்டாய் மேகங்களை மழை பெய்யவிடாது சமுத்திரத்திற்கே தள்ளிக் கொண்டுபோய்விடுகின்றதே. ஓர் சமயம் ஆண்டுக் கணக்காய் மழையில்லாது போகின்றதே. ஓர் சமயம் மழையே நன்மையுங் கொடுக்கின்றது தீமையும் பயக்கின்றது. இவைகளுக்கெல்லாங் காரண கருத்தா ஒருவன் வேண்டுமென்பதையும் அவர்கள் நினையாராகி முடிவில் நாஸ்திகராவர். பிறகப் பின்னும் நம்மவர் எழுதுவதாவது:—

௫௫. “திருவிளையாடற் புராணத்து இப்படலத்திலும், “கந்த புராணத்திலும், பண்டைக்காலத்தில் பிரளயம் வந்து “வேதங்கள் அழிந்துபோயினவென்று சொல்வதன் பொருள் யாதெனில்,” என வெழுதிக்கொண்டு தனது கற்பனைத் தமிழ் நான்மறை, கடலின் பெருக்கில் மறைந்ததாகத்தான் கூறுவதை அந்நூல்கள் கூறியனபோலப் பொருள்படுமாறு எழுதப்பட்டிருக்கின்றது. கடல்கோள் என நம் நண்பர் கூறுவது, தென் மதுரையும் அதன் பக்கமுள்ள நாடுகளும் கடலுள் மறைந்தவற்றையே. அக்காலம் தென் மதுரைக்கு வடபாகமுள்ள பூமண்டலப் பரப்பு முற்றும் நிலைபெற்றேயிருந்தது. அதனாற்றான் பக்கத்து சமுத்திரக் கரை நகராகிய கபாடபுரத்தைப் பாண்

* இருவிதத் திருவிளையாடற் புராணங்கள், ஒன்று பெரும்பெற்றப் புலியூர் நம்பியார் இயற்றியது. மற்றொன்றுபரஞ்சோதியார் இயற்றியது.

டியர்கள் தலைநகராக உடனே கொண்டனர். திருவிளையாடற் புராணத்து வேதத்திற்குப் பொருளருளிச்செய்த படலத்துக் கூறும் பிரளயம் காரண கர்த்தர்களாகிய மும்மூர்த்திகளும், ஈரேழு (பதினான்கு) உலகமும், அண்ட பிண்ட சராசரங்களெல்லாமும், புராணங்கள், ஸ்மிருதிகள் இதிகாசங்கள் வேத வேதாங்கங்கள் எல்லாமும், சிவஞானபோதம் முதற் சூத்திரத்தில் "தோற்றிய திதியே ஒடுங்கி" யெனக்கூறியவாறு சிவத்தினிடம் ஒடுங்கியதாகக்கூறும் மகா பிரளயத்தையென அறிய வேண்டுவது. மீண்டும் சிவத்தினிடமிருந்து, ஒடுங்கின வகைபோல மேலே விவரித்துக்காட்டிய எல்லாமும் தோன்றியதாகவும் அப்படலங் கூறும்—இஃதை,

"ஐம்பெரும் பூதமிலை திரிந்தீரே ழடுக்கிய வுலகொடு மயன்மா, லும்
பர்வான் பதமுமுதித்த வாறொடுங்க வுருத்த ரோருழி வந்தெய்தச்
செம்பொருள் மறையு மொடுங்கிய வழிநாட் செஞ்சுடர்க் கடவுண்
[முன்மலரும்
வம்பவிழ் கமலமென வரன்றிருமுன் மலர்ந்ததா லகிலமும் மாதோ."

என்னும் செய்யுளாலும் "பிரணவமுதித்தவதனிடை வேதம் பிறந்தன" வென்னுஞ் செய்யுளாலும் மற்றும் அப்படலத்தி லுள்ள செய்யுட்களாலும் பிரளயம் வந்து அழிந்துபோன விவரங்களை நன்ருய்ப் புலப்படுத்திக் கூறியிருக்க, அதற்குப் பொருள் நம்மவர் விகற்பமாய்க் கூறுவது என்ன ஆதரவு பற்றியோ? மற்றும் ஒடுங்கினவழியே, சிவத்தினிடமிருந்து வேதம் முதலிய யாவும் தோற்றியதாகவும் மேற்காட்டிய செய்யுட்களாலறியக் கிடக்கின்றதே, அவ்வாறு இவரது! தமிழ்நான்மறை ஆதியவுந்தோன்றி யிருக்கவேண்டுமே. அவ்வாறுயில்லையே. ஈதென்ன இவர்கூற்று இந்திரஜால மகேந்திரஜாலக் கற்பனையாயிருக்கின்றது. ஒரு ஆதாரவுமிலாது அவரது சொந்தயுக்திக் கற்பனவுரையை யாவர் கொள்வர். பிரளயம் வந்து அதனால் வேதம் அழிந்துபோனதாகக் கந்தபுராணத்தில் எங்குக்கூறியுளதோ அறிகிலம். கந்தபுராணப் பாயிரச் செய்யுட்களில் வேதம் தலைதடுமாறி முன்பின்னாகவும் பின்முன்னாகவுங்கலந்து போயினமையால் ஒரு நெறிப்படுத்து உண்மை உணர முடியாதாயிற்று. பலசமயங்கள் வேதக்கொள்கைக்கு மாறுதலாயுந் தோன்றின. அதனால், சிவபிரான் ஆணைப்படி விண்டுவின் ஓர் கலைவியாசராகத்தோன்றி, அவர் நினைத்த மாத்திரத்தானே வேதங்களை யோதாதுணர்ந்து உலகினர்க்குக் கொடுத்து உபகரித்தனர் எனக் கூறப்பட்டிருக்கின்றது. பிரளயம் என்னும் பெயரே அங்குக்காணேம். சைவசித்தாந்தப் பெருந்தகையோர்களே! மேற்காட்டியவாறு நமது சமயவுண்மை நூல்களில் இல்லாத பொருளை நமது நண்பர் அவரது யுக்தியொன்றாலேயே

அவரது கல்வித்திறமையால் எழுதிக்காட்டித் * திருநான்மறை விளக்கமெனப் பெயரிட்டு வெளியிட்டிருக்கின்றா ரென்பதை அறிந்துகொள்ளுங்கள். நிற்க,

௫௬. நம் நண்பர் எழுதிய திருநான்மறை விளக்கத்தின் முடிவில் அவர் கூறியவைகளில் குறிப்பிடத்தக்க ஒரு விடயமாவது (க) "பண்டைத் தமிழ்த் திருநான்மறையும், ஆகம
"மெனப்படும் பண்டை அருணூலும் மறைந்த பிற்காலத்தே
"சைவப்பொருள் கொள்ளப்பட்ட வடமொழி வேதம் நான்
"கும், தமிழ் அருணூல்களைத் தழுவி யியற்றப்பட்ட ஆகமங்
"களுமே நிலவினவாதலால், அவற்றையும் பிரமாண நூல்க
"ளாகச் சைவர்கள் கருதுவாராயினர். அங்ஙனங்கருதினமை
"யால் வந்த மயக்கிற்களவில்லை" (உ) தற்காலத்திலே தந்திரக்
"கிரியை விளக்கும் சித்தர் நூல்களும், தேவார திருவாசக
"முதலிய பன்னிரு திருமுறைகளும் சிவஞான போதம் முத
"லிய சித்தாந்த நூல்களும் திருவள்ளுவரது பொதுமறை
"யாகிய திருக்குறளும் தமிழர்க்குத் தமிழிலே சிறந்த நூல்க
"ளாகக் கொள்ளற்பாலன. சிவாகமக்கிரியாகாண்டமும்
"ஏற்ற பெற்றி அவ்வாறே" என்றெழுதியிருக்கின்றார். மேலே காட்டப்பட்டிருக்கின்ற இவரது கொள்கையின் கருத்துக்கு ஒற்றுமையாக இவர் முன்னர் எழுதியிருக்கின்ற மற்றொரு பகுதியையும் இங்கு எழுதிக்காட்டுவது அவசிமாகக் காணப்படுவதால் அப்பகுதிக்கு, ௩, என இலக்கங்கொடுத்து இங்கு எழுதுகின்றோம். (௩) "வடமொழி வேதத்துட்போந்த
"சைவப் பகுதியையே, சமயாச்சாரியர் உண்மை யென்று

---

* நம்மவர் எழுதிய வியாசத்திற்கு நம்மவர் புனைந்த பெயரில் திருவென்னும் அடைமொழி சேர்க்கப்பட்டுளதே அது பொருந்துமாவென்பதை ஆராய்கையில், திருக்கோவையாரிற் காணப்படும் "திருவளர் தாமரை" யென்னுஞ் சொற்றொடருக்கு உரைகண்ட பேராசிரியர்
"யாவன் ஒருவன் யாதொரு பொருளைக் கண்டானோ அக்கண்டவற்கு
"அப்பொருண்மேற் சென்ற விருப்பத்தோடு கூடிய அழகு. அதன்
"மேலவற்கு விருப்பஞ் சேறல் அதனிற் சிறந்த உருவும் நலனும் ஒளியு
"மெவ்வகையானும் பிறிதொன்றற்கில்லாமையால்" எனக் கூறினர். அன்றியும் முக்காலத்து முள்ளவரும் அழிவில்லாதவரும் நித்தியருமாகிய சிவபிரானைத் 'திருவே யென் செல்வமே' என மேலோரும் பணித்தனர். இக்காரணங்களான், அழிந்துபோனதாகச் சொல்லும் ஒரு நூலைக் குறித்த வியாசத்துக்கிட்ட பெயருடன், திருவென்னும் அடைமொழி சேர்த்ததும், பொருந்தாததொன்றே. நிலைபெற்று விளங்காநின்ற திருநெறிய தமிழ், திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருவாய்மொழி, திருக்குறள் ஆதிய நூல்களுக்கும், திருக்கோயில், திருச்சிற்றம்பலம், திருவரங்கம் ஆதிய புனிதத்தலங்களுக்குமே திருவென்னும் மங்கலச்சொல் உரித்தாம்.

"போதித்தார்" என்பதும். "இங்ஙனமே வடமொழி யிருக்குவேதத்துட்போந்த சைவப் பகுதிகட்கு ஆசிரியர் மெய்கண்டார் சைவப் பொருள்கொண்டார்" என்பதுவுமே. மேற்காட்டிய முதலாவது பகுதியின் ஈற்றில் சைவர்களுக்கு அளவில்லாத மயக்க முண்டாயிற்று எனப் பொருள்படுமாறு எழுதப்பட்டிருக்கின்றது. ஏன் அம்மயக்கம் உண்டாயிற்றென்றால், சைவப்பொருள் கொள்ளப்பட்ட வடமொழி வேதநான்கையும் தமிழிலிருந்த உஅ-ஆகமங்களையுந் தழுவி யியற்றப்பட்ட வடமொழி உஅ-ஆகமங்களையும் பிரமாணமாகக் சைவர்கள் கருதுவாராயினாரானமையால் என்பது நம்மவர் கருத்தின்படி அதற்கு விடையாகும். எக்காலமுதல் சைவர்கள் அவ்வாறு கருதுவாராயினர் என்றால் ஆரியர்கள் நம் நாட்டுக்கு வந்து ஆரியவேதஞ் செய்தபின்னரும் தமிழிலிருந்த ஆகமங்களை வடமொழியில் மொழிபெயர்த்த பின்னரும் என்பதும் நம்மவர் கருத்தின்படி அதற்கு விடையாம். ஆரியர்கள் நம் நாட்டிற்கு ஆதியில் வந்தது இற்றைக்கு மூவாயிரத்து ஐஞ்ஞாற்று ஆண்டுகளுக்கு முன்னர் எனச் சரித்திர ஆராய்ச்சியோர் கூறுவர். இதனால் நம் நாட்டில் அதற்கு முன் ஆரிய பாடையே இருந்ததில்லை யென்பது பெறப்படும். தமிழ் நான்மறையும் தமிழ் ஆகமங்களுங் கடல்கோளில் மறைந்து போனதாக நம்மவர் கூறுங் காலம், முதற் சங்கத்திறுதிக் காலத்தே. அதாவது இற்றைக்குக் குறைந்தபட்சம் ஏழாயிரம் ஆண்டுகட்கு முன்னர். இவ்வாறு ஏழாயிரம் ஆண்டுகட்கு முன்னரே மறைபட்டு ஒழிந்துபோன தமிழ் நான்மறையிலுள்ள சைவப்பகுதியை அவைகள் மறைந்தொழிந்த மூவாயிரத்தைந்நூறு ஆண்டுகட்குப் பின்னர் உண்டாயின ஆரிய வேதத்தில் எவ்வாறு சேர்க்கக்கூடும்? எவ்வாறு அவ்வாகமங்களை வடமொழியில் மொழி பெயர்க்கக்கூடும்? ஆதலால் நம்மவர் கொள்கை நிலைபெற்றிலது. மற்றொரு வகையான் ஆராயலாம். வடமொழி வேதத்துட் போந்த சைவப்பகுதியையே சமயாசாரியர் உண்மை யென்று போதித்தார் என்றார். அவர்கள் போதித்தது தேவாரப் பாசுரங்களின் மூலமாகவே. ஆதலால் சமயாசாரியர்களே சைவர்கள் கொள்ளும் மயக்கத்திற்குக் காரணர்களாகின்றார் என்பதும் பெறப்படுகின்றது. அத்தகைய தேவாரங்களைப் படிக்கும்படி சைவர்களுக்கு நம்மவர் ஏன் கற்பனை செய்கிறார். வேதங்களிற் சைவப் பகுதியைப் புகுத்திய காலமுதலும் சமயாசாரியர்களும் சந்தானசாரியர்களும் வேதத்திலுள்ள சைவப்பகுதிகளைக் கைக்கொண்டு அவர்கள் நூல்களை அருளிய காலமுதலும் இதுகாறும் சைவர்கள் அளவற்ற மயக்கங் கொண்டிருந்ததாக நம்

மவர் எழுத்தால் தெரியக்கிடக்கின்றது. இந்நீடித்த காலத்திற்றோன்றிய சைவப் பெருமக்கள் ஒருவரும் இம்மயக்கத்தைக் கொண்டவராயும் அதைத்தீர்க்க வழிதேடினவராயுமில்லை. மயக்கமிருந்தாலல்லவோ அதைத்தீர்த்துக்கொள்ள வழியுங் கண்டு பிடித்திருப்பார்கள். நோயுண்டானாலல்லவா அதற்கு மருந்து தேடப்படும். நமது நண்பர் சைவர்களுக்கு மயக்கமிருப்பதாக அவரோசுதாவில், ஒருவருடைய வேண்டுகோளின்றிக் கண்டு அதற்கு மருந்து திருநான்மறை விளக்கமென ஓர் உரை யெழுதினார். இத்திருநான்மறை விளக்கத்தில் ஆதிதொட்டு அந்தம் வரை இவர் காட்டியிருக்கும் மேற்கோள்களும் அவைகட்கு இவர் கொண்ட கருத்தும் இவ்வாராய்ச்சியில் விட்டுவிடப் படாது கூடியவரை யெழுதப்பட்டு அவைகள் ஆராய்ந்து பார்க்கப்பட்டிருக்கின்றன வென்பதை இவ்வாராய்ச்சியை வாசிக்கும் நண்பர்கள் பலரும் அறியலாம். வடமொழி மேலும், அவ் வடமொழி வேதங்கள் நான்கின் மேலும் கொண்ட வெறுப்பினால், அவைகட்கு முந்தியே, தமிழில் நான்மறை, ஆறு அங்கம், இருபத்தெட்டு ஆகமங்கள், இருந்தனவென்று தாபிக்க வேண்டுமென்று ஒரு யுக்தி கண்டு அதற்குப் பிரமாணங்கள் தமிழ் மறையாகிய தேவார திருவாசகங்களிலிருப்பவை போலச் சைவ மக்களுக்குக் காட்டக் கருதி அந்நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டப் புகுந்தார். உண்மையில் அவ்வாறு இல்லாமையான், தேவாரப்பாசுரங்களிலும் மற்றுமுள்ள தொல்காப்பியம், திருக்குறளாதிய அரிய பெரிய தமிழ் நூல்களிலும் இவர் கருத்துக்கிணங்க இடங்கொடாத மூல பாடங்களெல்லாம் இவரால் திருத்தப்பட்டன. தெய்வத் தன்மை பொருந்தியவையும் இதுகாறுந் தமிழ் நாட்டு மேன்மக்களால் சிறப்பாய்ப் புகழப்பட்டு வந்ததுமாகிய பண்டைய மெய்யாசிரியர்களின் உரையையும் புறக்கணித்துத் தாமே தங்கொள்கைக்கு இணங்க உரை கற்பித்தார். மூல பாடங்களுக்குப் பொருந்தாத உரை புகுத்தினார். திருவிளையாடற் புராணத்திற் காணப்படும் வேதத்திற்குப் பொருளருளிச்செய்த சரித்திரத்திற்கு இவர் காட்டியபடி பொருள் கொள்ளாவிடின் அச்சரித்திரம் பொய்யென்று கொள்ளவேண்டுமெனவுங் கூசாது கூறினார். இவ்வாறு விபரீதமான உண்மை பயவாத மொழிகளையே ஒன்றின்மே லொன்றாக அடுக்கிவந்து முடிவாக மேற்காட்டப்பட்டிருக்கின்றபடி சைவர்கள் அளவில்லாத மயக்கமெய்தியுள்ளாரெனப் பொருள்பட எழுதி முடித்தார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய "காது பொத்தரை" யென்ற தேவாரத்தின் ஒரு பகுதியே தமிழர் நால்வர் தமிழ் வேதஞ் செய்தனர் என்ற இவரது கொள்கைக்கு அஸ்திவாரக் கல்

போன்ற முதல் ஆதாரம். இத்தேவாரத்திற்கு இவர் கொண்ட
பொருள் பிழைபட்டதென இவ்வாராய்ச்சியிற் காட்டப்பட்
டிருக்கின்றது. இனியாவது அத்தேவாரச் செய்யுளுக்கு இலக்
கண இலக்கிய முறைக்குப் பொருந்துமாறும் இருமொழியுங்
கற்ற சைவ மக்கள் நால்வர் அங்கீகரிக்குமாறும் நம்மவர் பத
வுரை எழுதிக்காட்டி அத்தேவாரத்தால் தமிழ் மக்கள் நால்வர்
தமிழில் நான்மறை செய்தனரென்பதைத் தாபித்துக்கொள்ளட்
டும் பார்ப்போம். 'சைவ வேடந்தானினைத்து' என்ற சுத்த
பாடத் தேவாரப்பகுதியைச் சைவ வேடந்தானினைத்து எனத்
திருத்திக்கொண்டு அவர் கொள்கையைத் தாபிக்கப் புகுந்
தாரே!! அது பிழைபட்டதென இவ்வாராய்ச்சியில் எழுதப்
பட்டுளது. அவ்வாறு யாம் எழுதியது பிழை, தாம்கொண்டதே
சரியென்றால், பழைய ஏட்டுப் பிரதிகளில் தமது பாடத்தைக்
காட்டி முன்பின் விரோதப்படாமல் பொருளுங்கூறித் தங்
கொள்கையைத் தாபித்துக் கொள்ளட்டும் பார்ப்போம்.
"தொகுத்தவனருமறை அங்கம் ஆகமம் வகுத்தவன்" என்
னுந் தேவாரப் பகுதியில் காணப்படாத 'ஆறு' என்னும்
மொழியை அத்தேவாரத்துட்கூட்டி அதற்கு வியாக்கியை
தம் மனம்போல வெழுதினரே அது பிழையென்றோம். பிழை
அல்லவெனத் தாபித்துக்கொள்ளட்டும் பார்ப்போம். தமிழ்
முனிவர் நால்வருக்கு அருளிச்செய்த கடவுள் சிவபிரான்
என்றும் அவர் தட்சிணாமூர்த்தத்திருமேனி தாங்கிவந்து
அருளவில்லை யென்பதும் நம்மவர் கொள்கை. அக்கொள்
கையைத் தாபித்துக்கொள்ள 'சீர்மிகு சிறப்பினோன்' என்ற
கலித்தொகைச் செய்யுளை ஆதாரமாகக் காட்டினர். நமது இவ்
வாராய்ச்சியில் அச்செய்யுள் சனகாதி நால்வர்க்கருளிய தட்சி
ணாமூர்த்திக் கடவுளையே குறித்திருக்கின்றதெனவெழுதியுள்
ளோம். தக்கபிரமாணங்களால் அதை மறுத்து எழுதவேண்
டுவதும் அவர் கடமையாம்.

இருக்கு வேதத்துட்போந்த பலமந்திரங்களை யெடுத்
துக்காட்டி, அவ்வேதம சிவபிரானையே முழுமுதற் கடவுளெ
னப் பலவகையானும் ஓலமிட்டுக்கூறியும் அவரே பசுபதியென
வுங் கூறுகின்றதெனவும், உக-யாகங்களுக்கும் அவரே தலைவ
ராயிருந்து முதற்கண் அவிசு பெறுபவர் என்றும், தட்சப்பிர
ஜாபதி அதற்கு மாறுபட்டு யாகஞ்செய்ய ஆரம்பித்ததில்
அவன் யாகமுமுற்றுப்பெறாது அழிபட்டும், தலையும் இழந்
தானென்றும், இவ்வாராய்ச்சியில் எழுதியுள்ளோம். காடன்
மாடன் பாட்டுகளின் தொகுதிபோன்றது ருக்கு வேதமென்று
சொல்லி அவ்வேதத்தை யிழித்துக்கூறும் நம்மவர், தக்க பிர

மாணங்களால், பலரும் ஒப்புமாறு எமது சித்தாந்தத்தை மறுத்துக் காட்டவேண்டியதும் அவரது கடமையாம். ஏனையவு மன்ன.

இன்னமொன்று வினவுகிறோம். எம் நண்பர் அம்பாசமுத்திரம் திருவாளர் V. P. காந்திமதிநாத பிள்ளை யவர்கள், நம்மவர் எழுதியுள்ள திருநான்மறை விளக்கத்திலுள்ளப் பல ஆசங்கைகளைக்கண்டு கஅ-வினாக்கள் எழுப்பி அவற்றிற்கு விடை பகருமாறுகேட்டு ஓராண்டாகியும் இன்னமும் நம்மவர் விடை பகராதிருப்பானேன். விடைபகர வியலாவிட்டாலும் அவ்வாசங்கைகளைப் பலருமறியும் வண்ணம் செந்தமிழ்ச் செல்விப் பத்திரிகையிலாவது பிரசுரித்திருக்கலாமே. அவ்வாறு மில்லையே. இது தோல் வித்தானத்தைப் பயக்குமென்பதை நம்மவர் அறியார்போலும்.

தேவார திருவாசக மாதியவெல்லாம் வேத சிவாகமங்களின் சாரமே யென்பது பல மேற்கோள்களால் இவ்வாராய்ச்சியில் ஏற்கனவே விரித்துக் காட்டப்பட்டிருக்கின்றது. நிற்க, மேற்காட்டிய நம்மவர் கற்பனைகளில் இரண்டாவதில், தமிழர்க்குத் தமிழிலே சிறந்த நூல்கள் இன்னின்னவென நம்மவர் காட்டிய நூல்களில் "தந்திரக்கிரியை விளக்கும் சித்தர் நூல்களும்" ஒன்று எனக்கூறித் தேவார திருவாசக மாதிய சைவ அருள் நூல்களுக்கெல்லாம் மேலானது போல அப்பெயரைத் தலைப்பிற் காட்டியும் நம்மவர் எழுதியிருக்கின்றார். அவர் எழுதிய விவாதத் திருநான்மறை விளக்கத்திலும் ஆங்காங்கே சித்தர் நூற்படி கொள்ளற் பாலனவென்று மெழுதியிருக்கின்றார். மற்றைய நூல்களின் பெயரைக் குறிப்பிட்டுச் சொன்னவர் அந்நூல்களின் பெயர்களையாவது அந்நூல்களை ஆக்கியோர் பெயரைக் குறிப்பிட்டாவது எழுதிக்காட்டாமல் சித்தர் நூல்களென்று பொதுவாக வெழுதியிருக்கின்றார். ஆதலால் நம்மவர் கருத்தை யறியக்கூடவில்லை. பதினெண் சித்தர், நவ சித்தர் என்போர் அஷ்டமா சித்திகளுங் கைவரப்பெற்றுக் காய சித்தியுமெய்தி உலகமுற்றுஞ் சஞ்சாரஞ் செய்யும் சித்தமூர்த்திகள். அவர்கள் இன்று மிருப்பதாகவே பெரியோர் கொள்வர். தமிழ்த் திருமுறைகள் அருளிச்செய்தவர்களில் திருமூலர், திருமாளிகைத் தேவர், கருவூர்த் தேவர் சித்தர்களே. தற்காலம் புத்தகக்கடைகளிற் காணப்படும் சித்தர் நூலென்பவைகளை யியற்றினோர் பதினெண் சித்தர், நவசித்தர், இவர்களில் ஒருவருமல்லரென்பது தமிழ்மொழி ஆராய்ந்த பல்லோர் கருத்து. கடைவீதிச் சித்தர் நூலிற் காணப்படுஞ் சில செய்யுட்களாவன :—

"வாயிலெச்சில் போகவே நீர்குடித்துத் துப்புவீர்
வாயிருக்க எச்சில் போன வாறதென்ன தெவ்விடம்
வாயிலெச்சிலல்லவோ நீருரைத்த மந்திரம்
நாதனே யறிந்தபோது நாடும்மெச்சிலேது சொல்"

"ஓது நாலுவேதமு முரைத்த சாஸ்திரங்களும்
பூதலத்து அங்கமும் பொருந்து மாகமங்களும்
சாதிபேத வண்மையுந் தயங்குகின்ற நூல்களும்
பேதபேதமாகியே பிறந்துழன்றிருந்ததே"

"அங்கலிங்கம் பூண்டு நீரகண்ட பூசைசெய்கிறீர்
அங்கலிங்கம் பூண்டு நீயமர் நதிருந்தமார்பனே
எங்குமோடி யெங்குமெங்கு மீடழிந்துமாய்கிறீர்
செங்கல் செம்புகல்லெலாஞ் சிறந்துபார்க்குமூடரே"

"நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பஞ்சாத்தியே
சுற்றிவந்து மொணமொணென்று சொல்லு மந்தரமேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள்ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவங் கறிச்சுவை யறியுமோ"

இவ்வகைப் பாடல்கள் பல அந்நூல்களில் ஆங்காங்குக் காணலாம். இந்நூல் கற்றவர்களைக் கேட்டால் அவை யெல்லாம் ஞானமார்க்கமென்பார்.

சைவச்சரியை கிரியை மார்க்கங்களைக் குறைகூறுவது நம்மனோர்க்கு ஞான நூலாகுமா.?

"கண்ணினலவர் நல்விழாப் பொலிவுகண்டார்தல், உண்மையா மெனின் உலகர் முன்வருகென வுரைப்பார்" என்றும், "ஆக்கையாற் பயனென் அரன்கோயில் வலம்வந்து, பூக்கையாலட்டிப் போற்றியென்னுத விவ்வாக்கையாற் பயனென்" என்றும் "நிலைபெறுமாறெண்ணுதி யேனெஞ்சே நீவா, நித்தலு மெம்பிரானுடைய கோயில்புக்குப்-புலர்வதன் முன்னலகிட்டு மெழுக்குமிட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித், தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச் சங்கராசயபோற்றி போற்றி யென்றும், அலைபுனல்சேர் செஞ்சடை யெம்மாதி யென்று மாரூரா வென்றென்றே வலறு நில்லே"

என்றும், இன்னம் பலவாறுகவும், தாதமார்க்கம் புத்திரமார்க்கமாதிய சிவத்தொண்டை உலகினர்க்குப் போதித்தும் தாங்களும் அவ்வழியொழுகியும் அதிமதுர அற்புதத் திருப்பாடல்களை அருளியும் அப்பாடல்களின் பயனைப் பலப்பல அற்புதங்களைச் செய்துகாட்டியும் சைவ சமயத்தைத் தாபித்துபகரித்த சைவ சமய குரவர்கள் கற்பித்த வழியைக் கைப்பிடித்தொழுகுஞ் சைவமக்களுஞ் சித்தர் நூலை நோக்கவு மிசைவரோ? ஒருகாலுமிசையார். சாயுச்சிய பதவியை விரும்பிச் சிவஞானமார்க்கவழி யொழுகுபவர்க்குச் சிவஞான மெய்ந் நூலருளிய சந்தான குரவர்கள் கற்பித்திருப்பதாவது,

"செம்மலர் நோன்றாள்சேர லொட்டா, அம்மலங்கழீஇ அன்ப ரொடுமரீஇ, மாலறநேய மலிந்தவர் வேடமும், ஆலயந்தானும் அரனெனத்தொழுமே" என்றும், "கண்டதொரு மந்திரத் தாற் காட்டத்திலங்கிவே—றுண்டல் போனின்றங்குளதாமாற் கண்டவுருத்—தானதுவாயன்றுஞன் றனதுவாய்த் தோன் றுஞே-தானதுவாய்க் காணுந்தவர்க்கு" என்றும் "திருக் கோயிலுள்ளிருக்குந் திருமேனி தன்னைச் சிவனெனவே கண்ட வர்க்குச் சிவனுறைவனங்கே" எனவும் காணப்படும் சைவ மணங்கமழும் அருண்மொழிகளுக்கும் மேற்காட்டிய சித்தர் நூற் செய்யுட்கட்குமுள்ள ஏற்றத் தாழ்வுகளை நம்மனோர் கண்டு அந்நூல்களைக் கையாளுந் தீண்டாரென்க. சித்தர் நூலெனப் பெரியார் பெயர்களை வைத்துச் சிவபிரான் பெயரை யும் பராசத்திப் பெயரையும் பஞ்சாட்சரப் பெயரையும் ஊடுடே காட்டிப்புறச் சமயக்கொள்கைகளையே சித்தாந்தமாக வைத்து இலக்கண இலக்கிய விதிகளுக்குப் பொருந்தாத பாடல்களை யெவரெவரோ பாடி வெளியிடப்பட்டிருக்கும் நூல்களே சித் தர் நூலென உலாவுகின்றனவெனச் சைவ மக்கள் கொள்வர். சில மாதங்கட்கு முன் வெளிப்பட்டு வந்திருக்கும், தமிழக வொழுகு, என்ற மக்கட் சட்டம் என்னும் நூலே இதற்கோர் சான்றும். இந்நூல் இயற்றியோர் இன்னாரென்றாவது, இன்ன காலத்தினரென்றாவது, அவரது சரித்திரம் இன்னதென்றாவது இலக்கண முறைப்படி அந்நூலிற் கூறாது அவ்விஷயங்களில் மயங்கவிட்டு அந்நூலின் கடைசி அடியிலே "சிவாரூட சித்தன் செய்ததிது" எனக் குறிப்பிட்டிருக்கின்றது. இச்சித்த மூர்த்தி கள் யாவரோ? இவரும் பண்டையநாட் சித்தர்களில் ஒரு வரோ? கலிகாலக்கொடுமையை விளக்க அவதரித்த சித்தர் களில் ஒருவரோ, அறியக்கூடவில்லை. இது போலவே சித்தர் நூல்களென வழங்கும் நூல்களும் காலக்கிரமத்தே யெழுந்தன வாதல் வேண்டும்.

நாம் வசிக்கும் இக்கன்னித் தீபமெனப்படும் வடக்கே இமயமலையும் தெற்கே குமரியும் மற்றிருபக்கமுங் கடலும் சூழ்ந்த இப்பூமியே ஓங்கார வடிவாயுள்ளது. நமக்குள்ள வட மொழி வேத சிவாகமங்களும் அவைபற்றித் தோன்றிய திரு நெறித்தமிழ் முறைகளும் பிரணவத்தினின்று உதித்தவைகள். வடமொழி வேதமோதுபவர்கள் "ஓமென்று மறைபயில்வா" ரெனுந் திருவாக்குப்படி வேத அத்தியயனத்துக்கு முந்திப் பிரணவத்தைச் சொல்லியும் அது முடிந்த போதும் அவ்வாறே சொல்வதையும் கண் கூடாகப் பார்த்து வருகின்றோம். மனுஸ்மிருதி உ-ம் அத்தியாயம் எச-வது ஸ்லோகமும் அவ் வாறே கட்டளையிடுகின்றது. திருநெறித் தமிழ்ச் சைவமுறை

களில் முதலாவது முறையின் முதற்றிருப்பாசுரம் ஸ்ரீ ஞான சம்பந்த மூர்த்திகள் 'தோடு' என்ற மொழியால் ஆரம்பித்தார். இதில் தகரமெய்யோடு ஓகாரவெழுத்தமைந்திருத்தலைக் காண்கின்றோம். பனிரெண்டாவது, அதாவது இறுதியாகிய பெரிய புராணத் திருமுறையின் ஈற்றுச் செய்யுளின் ஈறு, மகரவொற்றையிறுதியில் கொண்ட உலகெலாம் என்னும் மொழியால் முடிவு பெறுவதையும் காண்கின்றோம். இதனால் விளங்குவது பிரணவப்பொருளாகிய சிவத்தைக் குறித்த தமிழ் நூல்கள் இத்திருமுறைகளே என்பது பெறப்படுகின்றது. தமிழ் நாட்டு வேத வியாசர் என்றெண்ணப்பட்ட நம்பியாண்டார் நம்பி யென்ற அந்தணர் குலோத்தமரும், நம் தமிழ் நாட்டை அரசுபுரிந்த சைவப் பெருந்தகையாருஞ் சிவபிரானது திருவருளைப் பெற்றவருமாகிய அநபாயச்சோழ மகாராஜாவும், நடேசப்பிரான் சந்நிதியில் சைவர்களுக்குரிய செந்தமிழ்த் தெய்வ அருள் நூல்களைப் பன்னிரெண்டு திருமுறையாக வகுத்து அம்முறைகளில் எந்தெந்த நூல்களைச் சேர்த்திருக்கின்றனரோ அந்நூல்கள்தான் சைவர்களுக்குரியவை. சித்தர் நூல்களென்பன அவைகளிற் சேர்க்கப்பட்டிருக்கவில்லை. திருமுறைகள் வகுக்கப்பட்ட காலத்தில் அந்நூல்கள் இருந்து அவைகளிற் சேர்க்கப்பட்டிருக்கவில்லை யென்று கொள்வோமானால் அவைகளைச் சைவநூல்களெனக் கொள்ளப்படவில்லை யென்பது போதரும். அக்காலம் அவைகள் இருந்ததில்லை யென்போமானால் மேற்காட்டிய தமிழக ஒழுகு தோன்றியதுபோலவே அவைகளும் ஆம்.

[illegible]ள, பின்னும் நம்மவர் எழுதுவதாது," "சாந்தோக்கிய "உபநிடதத்தில் பரம்பரையாய் அங்கி வழிபாடியற்றிய பிராம "ணர் நால்வர், ஓர் அரசனிடஞ்சென்று ஞானம் பெற முயன்ற "காலத்து அவ்வரசன் அவர்களைப் பார்த்து இதுவரை இந்த "ஞானத்தைப் பிராமணர்கள் நாடியதில்லையே யென்று கூறிய "தாகத் தெரிகின்றோம். அவ்வரசன் ஆரிய மன்னனாகவிருப் "பின் ஆரிய சமுதாயக் குருக்களாகிய பிராமணர்களுக்கு அவ் "வாறு கூறக் காரணமில்லை. ஆதலால் அவனை வேற்று மன்ன "னாகக் கருதுமிடத்துப் பல காரணங்களால் அவன் தமிழ் "அரசனென்றே யூகிக்கற்பாலது. ஆதலால் அக்கதையும் "தமிழரது பண்டைத் தத்துவஞான வுணர்ச்சியைக் குறிப் "பதற்குச் சான்றாகும்." என்பதே.

இவர் கூறும் இச்சரித்திரம், சாந்தோக்கியத்தில் ஐந்தாம் பிரபாடகம் மூன்றும் கண்டத்தின் ஏழு மந்திரங்களில் கூறியது. அஃதாவது "பிரவாஹண சைவலி யென்னும் பாஞ்சால தேயத்தாசனிடம் ஆருணேயன் சென்றகாலத்துச் சைவலி அவனை நோக்கி, "நின் பிதா உனக்கு எல்லாம் கற்பித்தனரா"

என்று கேட்க அவன் "ஆம்" என்றனன். சைவலி "பூமியினின்றும் மனிதர் எங்கே ஏகுகின்றனர்? என்பது முதலிய ஐந்து வினாக்களை அவனிடம் கேட்டான். அவன் விடை யறியாது தன் பிதாவுடன் சைவலி பால் வரப் பிதா சைவலியிடம் வினாக்களுக்கு விடை வேண்டினன். சைவலி மனம் வருந்தி ஆருணேயனது பிதாவை நோக்கி "என்னோடு சிலகால மிங்கே யிரும். ஒரு பிராமணனும் இதனை இன்றுகாறும் அறிந்திலராகலானும் நீர் அறிய விரும்புகின்றமையானும், க்ஷத்திரியர்க்கே இதனை எல்லாருக்கும் அறிவுறுக்கும் உரிமை உண்டாயிருக்கின்றது என்று கூறினான்" என்பதே. இச்சரித்திரத்தில் நம்மவர் கூறுமாறு 'பரம்பரையாய் அங்கிவழி பாடியற்றிய பிராமணர் நால்வர்' என்று கூறியிருக்கவில்லை. மேலும் அவ்வரசனைப் பாஞ்சாலதேயத் தரசனென்று கூறியிருக்கின்றது. திராவிட அரசனெனக் கூறவில்லை. பிராமணர், க்ஷத்திரியர் என்னும் பெயர்களால் அவர்கள் குறிப்பிடப்பட்டிருப்பதால், அவர்கள் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரரெனும் நாற்பால் வகையினருளாவர். பிராமணருக்கும் க்ஷத்திரியருக்கும் மிக்க நெருக்கமுண்டு. விசுவாமித்திராதியோர் சரிதைகளே அதற்குச் சான்று. க்ஷத்திரியர்கள் கன்னிகைகளை பிராமணர்கள் மணந்து வாழ்ந்த கதைகள் அநேகம் கேட்டுளோம். இந்த க்ஷத்திரிய வம்சத்துக்கும் ஆருணேயனெனும் பிராமண குலத்துக்கும் சம்பந்தமிருந்திருக்கலாம். அதனாலன்றோ, இப்பிராமணச் சிறுவனை இவ்வரசன் ஏ 'குமாரானு' என விளித்ததாக வடமொழி மந்திரங் கூறிற்று. இன்னமுங் காசி, கேகய நாடுகளின் அரசர்களிடமும் சில விப்பிரர் ஞானோபதேசங் கேட்டதாக மற்றும் உபநிடதங்களும் சாந்தோக்கிய உபநிதடமும் கூறும். வடவேங்கடம் என்பதே தமிழ் நாட்டு வடவெல்லையெனச் சுமார் ௰௲-ஆண்டுகட்கு முன்னரே உண்டாகிய தொல்காப்பியச் சிறப்புப்பாயிரங்கூறும். பாஞ்சாலம், கேகயம், காசி முதலியன ஆரியாவர்த்தமெனும் நாட்டைச் சார்ந்தவை. இந் நாடுகளில் தமிழ் அரசர்கள் பிராமண குலத்தாருக்கு ஞானோபதேசஞ் செய்யும் நிலைமையில் வீற்றிருந்து அரசாட்சி செய்து வந்தார்களென்பதற்குப் போதுமான சான்று காட்டாது அவர் யூகத்தைக்கொண்டே கூறிய கூற்றுச் சான்றோர் அவை ஏறாது. தமிழ் நாட்டுப் பண்டைய மன்னர் சரித்திரம்கூறும் புறநானூறு முதலிய சங்ககாலத்துத் தமிழ் நூல்களி லெதிலாவது தமிழரசர்கள் அந்தணர்க்காயினும் ஏனையோருக்காயினும் குரவர்களாயிருந்து உபாசனைக் கிரமங்களைப் போதித்ததாகக் கூறியிருக்கவில்லை. ஆனால், கூறப்பட்டிருப்பதென்னெனின் தமிழ் மன்னர்கள் அந்தணர்களைக் குரவர்களாகக்

கொண்டு யாகாதி கிருத்தியங்களை நடத்தி அவர்களை வணங்கி அவர்களிடம் ஆசி பெற்றுக்கொண்டார்களென்பதே. "அற்றிடினே யந்தணருள் ஞானி அடுத்த வன்பாற் பெற்றிடுக அந்தணன் மெய்ப்பேறு" என்னுஞ் சைவ சமயநெறித் திருக்குறளில் விதித்த விதிப்படி இப்பிராமணர்கள் க்ஷத்திரியர்களிடம் ஞானோபதேசம் பெற்றார்களென உணரவேண்டும். அன்றியும் உபாசனா மார்க்கம் சோபான முறையாகப் பூர்வ வினையை யொட்டிப் பலவிதங்களாயிருக்கும். பிராமணர்கள் எல்லோரும் சமஷ்டியாக முற்றிலுந் தெரிந்திருப்பார்களென்று நினைப்பது பொருந்தாததொன்றே "அறுநான்கிரட்டி யிளமை நல்லியாண்டாறினிற் கழிப்பிய வறனவில் கொள்கை, மூன்று வகைக் குறித்த முத்தீச் செல்வத் திருபிறப்பாளர்" என நக்கீரதேவ நாயனார் மொழிந்தார். இதனால் வேதப் பயிற்சியும் வேதஒழுக்கமும் எளிதில் கிடைப்பனவன்றென்பது பெறப்பட்டது. மேலும் உபநிடதங்களிற் காணப்படும் இவ்வகைச் சரித்திரங்களெல்லாம், அவற்றை வாசிப்போர் உள்ளத்தில் நன்றாய்ப் பதியும்பொருட்டு ஓர் அரசனிடம் ஒருவன் சென்றதுபோலவும் அவன் விடை பகர்ந்ததுபோலவும் பலவிதமாக சரித்திரரூபமாகப் புனைந்து அறிவுறுத்தப்பட்டிருக்கின்றனவென்பதே பெரியோர்கள் கொள்கை. சாந்தோக்கிய உபநிடத்திலேயே ஐந்தாவது பிரபாடகம் முதலாவது கண்டத்திலே பதினைந்து மந்திரமுடிய ஓர் சரித்திரமுண்டு. அஃதாவது வாக்கு, நேத்திரம், செவி, மனது இவைகளில் ஒவ்வொன்றும் நான் பெரியன் நான் பெரியன் என்று பூசலிட்டுப் பிரமனிடம் போய்க் கேட்டுத் தெரிந்தும், இவைகள் தாமே அனுபவித்துத் தெளிந்தும் பின்னர் தங்களுக்குமேல் ஆன்மாவே பெரிதென்று தெரிந்துகொண்டனவாம். கண் செவி ஆதிய எவ்வாறு பேசும்? எவ்வாறு பிரமனிடம் போகும்? ஆதலால், கேட்போருங் கற்போரும் அவர்கள் உள்ளத்திற் பசுமரத்தாணிபோல் நிறுவற் பொருட்டு ஞானவித்தை அலங்காரப்படுத்திக் காட்டப்பட்டிருப்பதாகவே கொள்ளல் வேண்டும். இவ்வுண்மை, பிரமசூத்திரம் மூன்றும் அத்தியாயம் நான்காம் பாதம் நான்காவது அதிகாணமாகிய பாரிப் பிலவாதிகாணம் (உரு, உச) "உப "நிடதங்களில் நேருங் கதைகள் உபாசனா விதிகளோடிசைந்து "அவைகளைத் துதிக்கும்பொருட்டே யுள்ளன என்கின்றது" என நீலகண்ட பாஷ்யத்தில் கூறியிருப்பதனானிலைபெறும். ஆனதால் நம்மவர் கூற்று விகற்பக் கூற்றே.

நவீனமார்க்கங் கற்பிக்கும் யாரேனுமொருவர் அதற்கு ஆதரவு பூர்வீக கிரந்தங்களில் காட்டவேண்டுமானால், உள்ளதை உள்ளபடியே காட்டி மேல் ஆட்சேபனை சமாதானஞ்

சொல்லித் தம் உரையைத் தாபிக்கப் புகின் அவ்வுரையை மேலோர் ஒருவாறு மதிப்பர். அவ்வாறன்றிப் பூர்வீக கிரந்தங்களின் வாக்கியங்களையும் அர்த்தங்களையும் பேதப்படுத்தி யெழுதித் தம் நவீனக் கொள்கையைத் தாபிக்கப் புகுவாராயின், அக்கொள்கையைச் சற்றும் மதியாது இயற்றினோரையும் எள்ளி ஏளனஞ் செய்வார்கள். இது உலக வழக்கு.

௫அ. நிற்க, ஏற்கனவே நமது சைவ மரபுக்குரிய வேளாண் மாந்தரிற் பலர் சைவ வொழுக்கங்களைக் கைவிட்டுக் கடவுள் எங்குமில்லையா? கோயிலுக்குப் போவானேன். கடவுள் சுத்தமாய்க் கொடுத்த முகத்திற் சாம்பலைத் தேய்ப்பானேன். மஞ்சளைப் பூசுவானேன் என்று சொல்லிக்கொண்டு மாட்டுக்கொழுப்புச் சேர்ந்த சோப்புக்கட்டியைத் தேய்த்துக் கொள்வார்கள். அநுட்டான மந்திரங்களில் சிகாயை நம வெனச் சிகைக்கு மந்திரமேற்பட்டிருக்கத் தலையை மொட்டையடித்துக் கொள்வார்கள், கரிச் சட்டியைத் தலையிற் கவிழ்த்ததுபோலத் தலை முழுமையிலும் உரோமங்களைக் கத்திரித்துக்கொள்வார்கள். எச்சிலேது தீட்டு ஏது என்று சொல்லித் தர்க்கம்பேசி நீரருந்தும் பாத்திரங்களை வாய்க்குள் உண்ணாக்குமட்டும் புகச்செய்து நீரருந்துவார்கள். தீட்சை யென்பதென்ன பணஞ் சம்பாதிக்கப் பண்டாரங்கள் கற்பித்த வழி. கைகால்களை அசைத்துக்கொண்டு மூக்கைப் பிடித்துக் கொண்டிருப்பதுதானா கடவுளை வழிபடும் வழி மனதில் நினைத்தலே தக்க வழிபாடென்பார்கள். ‘பச்சிலையுங் கிள்ளப்படுமோ பராபரமே’ எனத் தாயுமானவரே சொல்லியிருக்க, வீணாகப் பச்சிலை புட்பங்களைக் குடலை குடலையாகப் பறித்துக் கிள்ளிக் கிள்ளி யெறிவதுதான் பூசையாவென்று நகையாடுவர். பெண்டுகள் மாதவிடாய் ஆனால் ஏன் அவர்களை ஒதுக்கமாய்த் தனியே வைக்கவேண்டும், ஸ்நானஞ் செய்துவிட்டால் தேக அழுக்கு போய்விடுமே என்று சொல்லி அந்தப்படி நடக்க முயலுகின்றார்கள். தாய்தந்தையருக்குத் திதி கொடுப்பானேன், இறந்துபோனவர்கள் நம்மிடம் வந்து வாங்கிப் புசிக்கின்றார்களா? இவையெல்லாம் பிழைப்பு நிமித்தங் கட்டிய கட்டுப்பாடு என்று சொல்லித் தாய்தகப்பன திவசத்தையும் அறவே ஒழித்தும் விட்டார்கள். ஆங்கிலங் கற்று லௌகிக உத்தியோக முறையிற் சிறப்புற்று விளங்கும் பரம்பரை வேளாளச் சைவ உத்தம குலத்திற் றோன்றிய சிலர், அவர்கள் மூதாதையோர் வழக்கிற்கும், சைவ சமய சந்தானாசாரியர்கள கட்டளைக்கும் முற்றிலும் முரணாக, உயர்குலம், தாழ்குலமென்பது வீண் கட்டுப்பாடெனக்கூறி, மக்களாவார் யாவராயினும், அவருடன் ஒருங்கிருந்து உணவுகொள்ளவும்

பழகிக் கொண்டார்கள். பொது நன்மையையும் நம் நாட்டின் முன்னேற்றத்தையும் நாடுபவர்கள் பூர்வஜன்ம தவப்பயனாக அவர்களுக்குக் கிடைத்த அரிதான உரிமைப் பொருளாகிய சிறப்பின் தன்மையை யிழந்துவிடாமலே தொழில் நடத்தலாமே.

'அடுக்கியகோடி பெறினுங்குடிப்பிறந்தார் குன்றுவ செய்தலிலர்.''

'' குற்றமிலனாய்க் குடிசெய்துவாழ்வானைச் சுற்றமாச்சுற்று முலகு.''

'' ஒழுக்கமும் வாய்மையும்நாணுமிம்மூன்று மிழுக்கார்குடிப்பிறந்தார்.''

என்னும் நம் நீதிநூலின் வாக்கியங்களின் உண்மையை உணராது மேனாட்டுக் கல்விப் பயிற்சியின் பெருக்கத்தால் வந்த கெடுதிகள் இவைபோல்வன பல நம் நாட்டில் பயிராகி வருகின்ற இக் கொடுங்கலிகாலத்தே, மேலே உகO-ம் பக்கத்தில் காட்டிய செய்யுட்களடங்கிய, சித்தர் நூல்களென்னப்படும் போலி நூல்களையும் படிப்பார்களேயானால் காற்றோடு சேர்ந்த தீப்போலாமென்பதில் ஐயுறவு கொஞ்சமுமில்லை. ஆதலால் நமக்குத் தரப்பட்ட சைவ நூல்களாகிய பன்னிரு திருமுறைகளையும் ஓதியுணர்ந்து அவைகளில் விதித்த வழியே யொழுகு வதுஞ் சித்தாந்தசாத்திரங்களின்படி சிவோபாசனை செய்வதுமே சைவப் பெருமக்கள் கடமையாம். இது சத்தியம். சத்தியம். முக்காலுஞ் சத்தியம்.

இன்னமொரு பிரார்த்தனை :—

பண்டையத்தமிழ்ச் சைவசமயக்குடியிற் பிறந்த பரம்பரைச் சைவப்பெருமக்களுக்கு இன்றியமையாத விஷயமொன்றுளது. உலகத்திலுள்ள ஆஸ்திக சமயக்கொள்கைகளில் சைவ சமயமே சிறந்தது. மற்றவை சைவ சமயத்தின் அங்கங்களே. இராஜாங்கத்திலமர்ந்தது வைதிகசைவ' மென நந்தாயுமானப் பெருந்தகையார் அருளியிருப்பதே எம்மொழிக்குச் சான்று. அப்பமூர்த்திகளும் 'பொதுநீக்கித்தனை நினைய வல்லோர்க்கென்றும் பெருந்துணையை' எனவும், மாணிக்கவாசகரும் 'பொதுவினிற்றீர்த் தென்னையாண்டோ' னெனவும் அருளி யிருக்கின்றார்கள். கடவுள் ஆதிய பொதுமொழிகள் எல்லா மதத்தோர்களாலுங் கொள்ளற்பாலவை. இக்கூற்று நான்முகக்கடவுள், காவற் கடவுள், ஆலமர் கடவுள், முருகக் கடவுள், விநாயகக் கடவுள் அருகக் கடவுள் ஆதிய மொழிகளால் உறுதிப்படும். 'சிவம்' ஆதிய சிறப்புப் பெயர்களே சைவமதத்தினர் கொள்ளத்தக்கவை. இக்காலம் மேனாட்டு ஆசாரணையைக் கைக்கொண்டு நமது சைவசமய உண்மை யறியாது அவர்கள் சமயங்களுடன் நமது சைவ சமயத்தையும் ஒப்பக்காட்ட விச்சை

கொண்டு நம்மவர்களிற் சிலர், அவர்களெழுதி வரும் வியாசங்களில் கடவுண்மறை, கடவுண்முறை, கடவுள், உயிர், உலகம், என்பனவாதிய பொதுச் சொற்களை உபயோகித்து வருவதில் மிக்க விருப்பமுடையவர்களா யிருக்கின்றார்கள். பண்டைக் காலந்தொட்டு நம் முன்னோர்கள் ஒருவருக்கொருவர் எழுதிக் கொள்ளும் நிருபங்களின் தொடக்கத்திலும் நூல்களின் ஆரம்பத்திலும் இறுதியிலும், சிவமயம், கணபதி துணை, முருகன் துணை யென எழுதுவதே நஞ்சமயக் கொள்கையின் சாம்பிரதாய வழக்கம். சைவ சமயத்தின் உண்மைப் பேற்றைப் பயப்பதற்கு சாதனமாகிய அவ்வழக்கத்தை அறவே விட்டுவிட்டு 'ஓம் தத்சத்' 'கடவுள் துணை' என்பனவாதிய பொதுமொழிப் பிரயோகங்களைக் கைக்கொண்டு வருகின்றார்கள்: ஒன்றுமெழுதாது, இக்காலம் நம்மவரிற் சிலர் தலையை முண்டிதஞ் செய்து கொள்வது போலப் பிள்ளையார் சுழிகூட வெழுதாது மொட்டையாய் விட்டு மேனாட்டார் கொள்கையைக் கைப்பற்றியும் வருகின்றார்கள். எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும் சிவநாமத்தை மொழிவதே நஞ்சமயக்கொள்கையின் மேலானதாய (ஞானம்) பலனைப்பயக்கும். சிவம் என்ற மொழியே எல்லா மொழிகட்கும் மேலாய ஒரே மொழி. 'வேதநான்கினு மெய்ப்பொருளாவது நாதனாம நமச்சிவாயவே' என்றும் 'சிவனெனு நாமந்தனக்கே யுடைய செம்மேனி யெம்மான்' என்றும், 'நானேயோ தவஞ் செய்தேன் சிவாயநம வெனப்பெற்றேன்' என்றும், "சிவ சிவ வென்கிலர் தீவினையாளர் சிவசிவ வென்றிடத் தீவினை மாளுஞ் சிவசிவ வென்றிடத் தேவருமாவர், சிவசிவ வென்னச் சிவகதி தானே' என்றும் 'சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க் கபாய மொருநாளுமில்லை' என்றும், இன்னமும் நம் பெருமக்களெல்லோரும ஒரே மொழியாய் 'சிவ' என்னும் மந்திரத்தின் அளவற்ற ஆற்றலை யெடுத்தெடுத்துப் புகன்றிருக்கின்றார்கள். சைவ குலத்திற் பிறந்த நமக்கு இயற்கையிலேயே கிடைத்து நமது உள்ளங் கையில் வற்றாது முற்றாதுபெருகி யிருக்கும், பிறப்பிறப்பாகிய பெருநோயைத் தீர்க்கவல்ல, சிவானந்தத் தேனைக் கைவிட்டு உடம்பின் பிணிதீர்க்கும் வேப்பெண்ணெய்யைத் தேடுவார்போன்று ஒழுகுவது கூடா வொழுக்கமேயாம். இது பற்றியன்றோ அருணந்தி சிவாச்சாரியர் "சைவமாஞ் சமயஞ் சாருமூழ் பெறலரிது' எனவருளினார். மெய்கண்ட சிவனாரும் 'சிவமென்னு மந்தரா' வெனத் தமது சைவமாணாக்கனைக் கூவி யழைத்தார். நமது சமயத்தின் பெயர் சைவ சமயம், கடவுட் சமயமல்ல; நாம் வணங்கத் தோன்றியிருக்கும் ஆலயங்களின் பெயர் சிவன் கோயில், கடவுள் கோயிலல்ல;

நமக்கு நியமமாக ஜெபித்தற்குரிய மந்திரம் சிவாய நம, கடவுளாய நம அல்ல; நமது காயத்திரி மந்திரம் சிவகாயத்திரி, கடவுள் காயத்திரி அல்ல; நாம் நியமமாகச் செய்யும் பூஜை சிவபூஜை, கடவுட் பூஜையல்ல; நாம் கற்கும் சமயநூல்களின் பெயர்கள் சிவஞானபோதம், சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம், சிவதருமோத்தரம் ஆதிய நூல்களே, கடவுள் ஞானபோதம், கடவுள் ஞான சித்தியார் கடவுட் பிரகாசம் என்ற நூல்களல்ல, நாம் அடையவேண்டி முயலும் ஞானம் சிவஞானமேயாம், கடவுள் ஞானமல்ல; "சிவமாக்கி யெனையாண்ட அத்தன்" என மாணிக்கவாசக ரருளினரே யொழிய கடவுளாக்கி யென வருளினாரல்லர். * ஆனதால் நஞ் சைவகுலத் தோன்றல்களாகிய மக்களும் மாணவர்களும், சைவநெறியில் விருப்புற்று அவ்வழி நடக்கும் ஏனையோர்களும் இவ்வாசகங்களைக் கூர்ந்து நோக்கிச் சிவமென்ற பெயரையே சிறப்புப் பெயராகக்கொண்டு "இருக்கினு நிற்கும்போது மிரவு கண்டுயிலும்போதும், பொருக்கென நடக்கும்போதும் பொருந்தியூண் டியக்கும்போதும், முருக்கிதழ்க் கனிவாயாரை முயங்கி நெஞ் சழியும்போதுந், திருக்களாவுடைய நம்பா சிந்தையுன் பாலதாமே." என்னும் அதிமதுர அற்புதத் திருவாக்கின் ஆணைப்படி ஒழுகி வரவேண்டுமெனப் பன்முறையும் வற்புறுத்திப் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்கின்றோம்.

௫௬. இவ்வாராய்ச்சியை இத்துடன் நிறுத்தி, மறை, நான்மறை, அந்தணர், பார்ப்பார் என்னுஞ் சொற்களின் வழக்கைப்பின்னுமோர் முறையிற் சிறப்பு வகையாய் ஆராய்ந்து, சித்தாந்தப் படுத்துவாம்.

தமிழ்மக்களுக்குத் தொல்காப்பியம் என்னும் நூலே தமிழ் நூல்களுக் கெல்லாம் முந்தியதாய் நின்றுலாவுகின்றதென்பது எவராலும் மறுக்கப்படாத தொன்றே. இது, நம் நூல்களின் கணக்குப்படி குறைந்தது ஏழாயிரமாண்டுகட்கு முன்தோன்றியுள்ளது. இந்நூலின் சிறப்புப்பாயிரத்தில் நான்மறை யென்ற சொற்றொடர் காண்கின்றோம். அதற்குப் பொருள் "நான்கு கூறுமாய் மறைந்த பொருளு முடைமையான் "நான் "மறை" யென்றார் அவைதைத்திரியமும் பௌடிகமும்

*ஆனல், சிவம் கடவுள் அல்லரோவெனக் குதர்க்கவாதிகள் வினவலாம். 'சிவசிவ வென்கிலர், தீவினையாளர்' எனத் திருமூலமா யோகிகள் குறிப்பிட்டவர்களில் முதற்றாம்பூலம் பெறுபவர்கள் இவர்களே யாவர். சிவவென்ற மந்திரத்தின் முதலெழுத்தே கடவுள் என்ற பொதுச்சொல்லின் பொருளைக்கொண்டிருப்பதன் மேலும் சைவருக்கு முத்திசாதனமாகிய சூட்சம ரகசியப் பொருளும் அம்மந்திரத்திலுளது.

"தலவாகாரமுஞ் சாமவேதமுமாம், இனிஇருக்கும் யசுவும் "சாமமும் அதர்வணமுமென்பாருமுளர். அது பொருந்தாது. "இவர் இந்நூல் செய்தபின்னர் வேதவியாதர் சின்னாட்பல் "பிணிச்சிற்றறிவினோர்க்கு நான்கு கூறாக இவற்றைச் "செய்தாராதலின்" எனஉரை ஆசிரியர் உரைகண்டார். இப் பாயிரச் சூத்திரத்துக்கு விருத்தி உரைசெய்த சிவஞான முனிவோராதிய தமிழ்ப் பெருமக்கள் யாவரும் இவ்வுரையை மறுத்திலர். ஆதலால்இப்போது வழங்கும் வடமொழி நான் மறைகள் தோன்றுவதன் முன்னரே வடமொழியில் நான்மறை கள் நின்று நிலாவின வென்பது வெளிப்படை. இனித் தொல் காப்பியத்தில், தொல்காப்பியர் முதன்முதல் இயற்றிய எழுத்தின் பிறப்பியல் உ0-வது சூத்திரத்தில் கூறுவதாவது:— தமிழ் எழுத்துக்கள் உந்தியினின் றெழும் காற்றாற் பிறப்பன, வடமொழி யெழுத்துக்கள் உந்தியினின்றும் மூலாதாரத்தி னின்றும் எழும் ஓசையாற்பிறப்பன, அவற்றின ஓசையையும் மாத்திரைகளையும் அந்தணர்களது மறையிற் காணலாம், அதை யிந்நூலில் சொல்ல இயலாது, உந்தியினின்று பிறக்கும் எழுத்து களின் மாத்திரைகளையே கூறினேனென்றார். எச்ச வியலில் "இயற்சொ றிரிசொல், திசைச்சொல், வடசொல் என் றனைத்தே செய்யுளீட்டச் சொல்லே" என்றும் "அந்நாற் சொல்லுந் தொடுக்குங்காலே * * நாட்டல் வலிய என்மனார் புலவர்" என்றும் தொல்காப்பியர் கூறினர். இதனானுணரப் படுவது யாதெனின், தமிழ்ச் செய்யுளிடத்து வடமொழியும் விரவப்பெறுமென்றும், அவ்வகைக்கும் தொல்காப்பியர் இலக் கணங்கூறினரென்றும் அவ்வாறு தொல்காப்பியர் கூறியது, அவர் ஆசிரியர் அகத்தியனார் கூறிய இலக்கணவழியே என்ப தும் பெற்றாம். இதனால் அகத்தியர் கூறிய அகத்தியத்தி னும் வடமொழி வழக்கு இருந்ததென்பதே நிலைபெறும்.

அகத்தியனாரும் தாமே இலக்கணம் வகுத்தவரல்லர். அவருக்கு முன்னரே தமிழ் நாட்டில் தமிழ் வழக்கு இருந்த தென்றே தமிழ் நூல்கள் கூறுகின்றமையைக்கொண்டு அதற்கு முந்தியிருந்த இலக்கண நூல்களை ஆதாரவாகக்கொண்டே அகத் தியரும் இலக்கணம் வகுத்தாரென்பது தமிழ் ஆசிரியர்கள் கருத்து. ஆதலால் வடமொழியும் வடமொழி வேதமும் ஆதி தொட்டே நந்தமிழ் நாட்டிற் பரந்து நிலாவியதென்பதே உறுதி. தொல்காப்பியத்தில் சமயக்கொள்கைகளையும் அச்சமயக் கட வுளர்களை வழிபடும் முறைமையையும் விவரித்துக்கூறவேயில்லை. சிவம் என்ற பெயரே அந்நூலில் காணவில்லை. ஆனால் தொல் காப்பிய நூல் எழுவதற்கு முன்னரே அகத்தியர் தென்னாட் டுக்கு எழுந்தருளியபோதே தமிழ் நாட்டில் சிவாலயம் விண்டு

ஆலயம் தோன்றியிருந்தனவாகவே தெரிகின்றது. திருக்குற்றாலம் என்னுந் தலம் விஷ்ணு ஆலயமாயிருந்ததாயும் அதைச் சிவ தலமாக அகத்தியனார் ஆக்கியதாயுங் கந்த புராணம் கூறும். வான்மீகர் இயற்றிய வடமொழி இராமாயணத்துள் சுவேதாரணிய சைவதலங் கூறப்பட்டுள்ளது. மதுரையிற் சோமசுந்தரக் கடவுளை அகத்தியனார் வணங்கியதாகவுஞ் சைவ நூல்கள் கூறும். தொல்காப்பியம் தமிழ் மொழிக்கு இலக்கணமாதலின் சமயக் கொள்கை ஒன்றும் அதில் விவரித்துக் காட்டவில்லையென்பதே உறுதி. கடைச்சங்க நூல்கள் இயற்றினோர்க்குத் தொல்காப்பியமே இலக்கணமாம். ஆதலால் சங்க நூல்களிற் காணப்படும், மறை, நான்மறை என்ற சொற்களுக்குத் தொல்காப்பியர் கூறிய இலக்கண முறைப்படியே பொருள் கொள்ளவேண்டுவது நம்மனோர் கடமை. நமது யுக்திப்படி பொருள் கற்பிப்பதானால் இலக்கணமெனும் ஒரு நூல் ஏதுக்குத் தோன்றியது. ஒவ்வொருவரும் அவரவர் மனம்போலப் பொருள் கூறினால் தமிழ்மொழி இலக்கண வரம்புக்குட்படாத சாமானிய பாஷையாம். புறநானூற்றில் மறை, நான்மறையென்று காணப்படுஞ் சொற்களுக்குப் பொருள் வடமொழி வேதம் என்றே இவ்வாராய்ச்சியில் மேலே காட்டப்பட்டுளது. பின்னும் சில மேற்கோள்கள் அவ்வகைக்கு சங்க நூல்களிலிருந்து கீழே குறிக்கப்படுகின்றன.

(க) "அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர், திறம்புரி பசும்புற் பரப்பினர்" — பு. நானூறு.

(உ) "அருமறை நாவினந் தணர்க்காயினும்" சிறுபாணாற்றுப்படை.

(ங) "வளைவாய்க்கிள்ளை மறைவிளிபயிற்று, மறைகாப்பாளருறை பதி" — பெரும்பாணாற்றுப்படை.

(ச) நான்மறையோர் புகழ் பரப்பியும்" — பட்டினப்பாலை.

(ரு) "மறையறிப அந்தணர் புலவர்" — நான்மணிக்கடிகை.

(கூ) "வரன் முறையான் வந்த நான்மறையாளர், மேன்முறைப் பாற்றங் குரவரைப்போ லொழுகல். நான்முறையாளர் துணிபு" — ஆசாரக்கோவை.

மற்றும் உள. இவைகளால், அந்தந்த நூலாக்கியோர் காலத்து நிகழ்ந்தவற்றைக்கண்டு மறை, நான்மறை யென்ற சொல் வடமொழி வேதங்களைக்குறித்தே ஆளப்பட்டிருக்கின்றனவென்று வெளியாகின்றது. உரையாசிரியர்களும் அவ்வாறே உரை கண்டார்கள். இனி அந்தணர், பார்ப்பார், எனுஞ் சொற்கள் எப்பொருளைக்கொண்டு சங்க நூல்களிற் பிரயோகப்படுத்தப் பட்டிருக்கின்றன வென்பதைப் பார்ப்போம்.

(ச) ஆவுமானியற் பார்ப்பன மாக்களும் * * *
எம்மம்பு கடிது விடுதும் நும்மரண் சேர்தும்—பு. நா.

(உ) ஆன்முலையறுத்த வறனிலோர்க்கும் மாணிழை மகளிர்
கருச்சிதைத்தோர்க்கும் பார்ப்பார்த்தப்பிய
கொடுமையோர்க்கும்— பு. நா.

(ங) நன் பலகேள்வி முற்றிய வேள்வியந்தணர்க்—கருங்கல
நீரொடு சிதறிப் பெருந்தகை— பு. நா.

ச. ஏற்றபார்ப்பார்க் கீர்ங்கைநிறையப்-பூவும்பொன்னும்
புனல்படச்சொரிந்து பு. நா

ரு. செறுவிற்பூத்த சேயிதழ்த்தாமரை யறுதொழிலந்தணரறம்புரிந்
தெடுத்த—தீயொடு விளங்குநாடன் பு. நா

சு. ஓதல்வேட்டல் அவைபிறர்ச்செய்தல், ஈதலேற்றல் என்றாறு
புரிந்தொழுகு மறம்புரியந்தணர் பதிற்றுப்பத்து

எ. அறங்கரைந்து வயங்கியநாவிற் பிறங்கியவுரைசால் வேள்வி
முடித்த கேள்விஅந்தணர் பதிற்றுப்பத்து

அ. அருமறை நாவினந்தணர்க் காயினும் சி. பாணாற்றுப்படை.

கூ. கேள்வி அந்தணர் அருங்கடனிறுத்த வேள்வித்தூணத்தசைஇ''
[பெ. பாணாற்றுப்படை]

க0. சிறந்தவேதம் விளங்கப்பாடி ... .. குன்றுகுயின் றன்ன அந்த
ணர்பள்ளியும் மதுரைக்காஞ்சி

கக. அந்தணரினல்ல பிறப்பில்லை நான்மணிக்கடிகை

கஉ. பார்ப்பார் பசித்தவர் தவசிகள்......தூப்பால், நீண்டாரால்எண்
ணாதுநீத்தவர் மண்ணுண்டுபெண்டாரம் பற்றவாழ்வர்—ஏலாதி

கங. பார்ப்பார் அறவோர் பசுப்பத்தினிப்பெண்டிர் மூத்தோர்
குழவியெனுமிவரைக் கைவிட்டுத் தீத்திறத்தார் பக்கமே
சேர் கென்று சிலப்பதிகாரம்

இன்னம் பலவுள, விரிவஞ்சி விடுத்தனம். இம்மேற்கோள்களால், அந்தணர் பார்ப்பார் என்போர், அவர்கள் பிறப்பினாலேயே, மேன்பட்டவரெனவும், தொல்காப்பியர் சொன்னபடி அவர்கள் வேதம் ஓதல் வேள்விவேட்டல் ஆதிய அறுதொழிற் பூண்டுளோரெனவும் ஆதலால் அவர்களை காரணம் பயன் கருதாது பண்டையோர் உபசரித்துப் பாதுகாத்து வந்தனரெனவும் விளக்கமாவதைக் காணலாம். இன்னமும் அகத்தியனார் மாணாக்கர் பன்னிருவரியற்றிய பன்னிருபடலமென்னும் முதனூலுக்குப் புறப்பொருள் வெண்பாமாலையென்னும் வழிநூலியற்றிய சேரர்பரம்பரை ஐயனாரிதனார் என்னும் மூதறிவாளர், அவ்வழி நூலில், வேதம், நான்மறை, பார்ப்பார், அந்தணர், மறையோர், வேள்வி ஆதிய இம்மொழிகளை யெடுத்தாண்டிருக்கிற செய்யுட்கள் வருமாறு,

வாகைப்படலம், பார்ப்பனவாகை.

"ஓதங் கரைதவழ் நீர் வேலியுலகினுள்
"வேதங்களை கண்டான் வீற்றிருக்கு—மேதகு
"சுடுசுடர் தானாகிச் சொல்லவே வீழ்ந்த
"விடுசுடர் வேள்வி யகத்து"

பார்ப்பன முல்லை.

"ஒல்லெனீர் ஞாலத் துணர்வோ விழுமிதே
"நல்லிசை மூச்செந்தீ நான்மறையோன்—செல்லவும்
"வென்றன்றி மீளா விறல்வேந்தர் வெம்பகை
"யென்றன்றி மீண்டதிலர்"

பாடாண் படலம்.

கபிலைகண்ணிய புண்ணியனிலை

அண்ணனுன் மறை யந்தணாளர்க்குக்-கண்ணியகபிலை நிலையுரைத்தது.

"பருக்காழுஞ் செம்பொன்னும் பார்ப்பார் முகப்பக்
"குருக்கட் கபிலை கொடுத்தான்—செருக்கோ
"டிடிமுர சத்தானை யிகலிரிய வெங்கோன்
"கடிமுர சங்காலைச் செய்"

வேள்வி நிலை.

"கேள்வி மறையோர் கிளைமகிழ்த லென்வியப்பாம்
"வேள்விவிறல் வேந்தன்றான் வேட்ப—நீள்விசும்பி
"னீர்ந்தாரிமை யோருமெய்தி யழல்வாயா
"லார்ந்தார் முறையாலவி"

இச்செய்யுட்களால் தொல்காப்பியத்தில் 'அறுவகைப் பட்ட' என்னுஞ் சூத்திரத்தின் "அறுவகைப்பட்ட பார்ப் பனப்பக்கமும்" என்ற பகுதியை அமைத்த அந்நூலாசிரிய ரின் கருத்து, நம்மவர் கொள்கைப்படி, பார்ப்பாரென்றால் நூலைப் பார்ப்பவரல்லரென்பதும், அந்தணரென்றால் தமிழ் முனிவரல்லரென்பதும், நான்மறை யென்றால் கடலில் மறைந்து போனதாகச் சொல்லப்படும் தமிழ் நான்மறை யல்லவென்ப தும், வேள்வி யென்றால் சைவநூலிற் கூறப்படும் ஐவகை யாக மல்ல வென்பதும் வெள்ளிடைமலை போல் விளங்கும். புறப் பொருள் வெண்பாமாலை யென்னும் நூல் புறப்பொருளின் இலக்கண இலக்கியத்தைச் செந்தமிழ்க் கவிவாணர் பல்லோ ருக்குங் காட்ட எழுந்ததென்பதைத் தமிழுலகு அறிந்ததே.

மற்றொரு வகையாகவும் ஆராய்வாம். மேற்காட்டிய நூல்களெல்லாம் அறம் பொருள் இன்பத்தையே விசேடமாய்க் கூறியவை. வீட்டுநெறியை விரித்துக் கூறுவனவல்ல. வேதம், மறை, நான்மறை, வேள்வி, அந்தணர், பார்ப்பார், ஆதிய பாகுபாடுகளும் அவற்றின் பொருள்களும் இன்னவை இன்

னவை எனத் தேவார திருவாசகமாதிய தமிழ் முறைகளின் ஆதாரவைக்கொண்டு அச்சொற்களின் பொருளை அறிவதே நடுவுநிலைமை காண்பாருக்கு உறுதியாம். ஆதலால் நந்தமிழ்த் திருமுறைகளில் அம்மொழிகளை எவ்வகைப் பொருளில் நம் சமயாசாரியர்கள் பிரயோகித்திருக்கின்றார்க ளென்பதை அவர்களது அருள் வாக்கைக் கொண்டே ஈண்டுக் காட்டுவாம். வாசிப்போர் சலிப்படையாது, உண்மை காணும்பொருட்டுக் கவனித்துப் பார்க்க வேண்டப்படுகின்றார்கள்.

சம்பந்தர்

க. பொய்மொழியா மறையோர்களேத்த ப்புகலி நிலாவிய
புண்ணியனே

உ. மெய்ம்மொழி நான்மறையோர் மிழலைவிண்ணிழி கோயில்
விரும்பியதே

ங. நாமருகேள்வியர் வேள்வியோவா நான்மறையோர் வழிபாடு
செய்ய மாமருவுமணிக்கோயில் மெய்மருகல்

ச. அங்கமும் வேதமுமோதுநாவர் அந்தணர்நாளும் அடிபரவ
மங்குல் மதிதவழு மாடவீதிமருகல்

ரு. கீதத்திசையோடுங் கேள்விக்கிடையோடும் வேதத்தொலி
யோவா வீழிம்மிழலையே

சு. வேதமோர் கீதமுணர்வாணர் தொழுதேத்த மிகுவாசப்
போதனைப்போன் மறையோர் பயிலும் புகலி

எ. ஒருங்கிய மனத்தோ—டிருபிறப்போர்ந்து முப்பொழுது குறை
முடித்து நான்மறையோதி யைவகைவேள்வி யமைத்தாறங்
கம் முதலெழுத்தோதி வரன்முறை பயின்றெழு வான்
றனைவளர்க்கும் பிரமபுரம்.

அ. புந்தியி ஞன்மறை வழியே புற்பரப்பி நெய்சமிதை
கையிற்கொண்டு வெந்தழலின் வேட்டுலகின்மிக
அளிப்போர் சேருமூர் மிழலையாமே.

கூ. மந்திரந் தருமாமறையோர்க டவத்தவர்
செந்திலங்கு மொழியவர் சேர்தெளிச் சேரியீர்

ய. வேதியர்கள் வேள்வி யொழியாது மறைநாளு
மோதியரனும முரைத்திடு நள்ளாறே.

கக. சதுரம் மறைதான் றுதிசெய்து வணங்கும் மதுரம்
பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா

கஉ. பலகாலங்கள் வேதங்கள் பாதங்கள் போற்றி
மலரால் வழிபாடு செய்மா மறைக்காடா

கங. வேதம் பலவோமம் வியந்தடிபோற்ற—வோதமுலவு
மறைக்காட்டி லுறைவாய்.

கச. ஓமென்று மறை பயில்வார் பிரமபுரம்

கரு. கேள்வியார் நாடோறு மோதுநல்வேதத்தர்
கேடிலா வேள்வி செயந்தணர் வேதியர் வீழிமிழலையார்

௧௬. அந்தணர் வேள்வியு மரு மறைத்துழனியும் செந்தமிழ்க்
கீதமுஞ் சீரினால் வளர்தர — — மழபாடி

௧௭. செந்தமிழர் தெய்வ மறைநாவர் செழுநற்கலைதெரிந்த
வவரோ டந்தமில் குணத்தவர்க ளர்ச்சனைகள் செய்ய
அமர்கின்ற அரனூர் — — மிழலை

௧௮. வாய்த்தமுத் தீதொழின் நான்மறையோர் வலம்புரம்

௧௯. ஆங்கெரிமூன்று மமர்ந்துடனிருந்த அங்கையாலாகுதி
வேட்டு—மோங்கிய மறையோ ரோமமாம் புலியூர்

௨0. கற்றநால்வேத மங்கமோ ராறுங் கருத்தினா ருத்தியாற்
றெரியு முற்றபல் புகழாரோமமாம் புலியூர்.

௨௧. மணந்திகழ் திசைகளெட்டு மேழிசையு மலியுமாறங்கமை
வேள்வி—யிணைந்தநால்வேத மூன்றெரியிரண்டு பிறப்பென
வொருமையா லுணருங், குணங்களு மவற்றின் கொள்
பொருள் குற்றமற்றவை யுற்றதுமெல்லா, முணர்ந்தவர்
வாழு மோமமாம் புலியூர்.

அப்பர்.

௨௨. அந்தணர்க் கருங்கல மருமறையாறங்கம்—நங்களுக்
கருங்கல நமச்சிவாயவே.

௨௩. செந்தீயார் வேள்வியோவாத் தில்லைச் சிற்றம்பலம்

௨௪. தினைத்தனை வேதங்குன்றாத் தில்லைச்சிற்றம்பலம்

௨௫. அங்கமாறு மருமறை நான்குடன் தங்குவேள்வியர்
தாம் பயிலுங் நகர். திருவாஞ்சியம்.

௨௬. குசையு மங்கையிற் கோசகமுங் கொண்ட வசையின்
மங்கல வாசகர் வாழ்த்தவே.

௨௭. இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்து மிளங்கோயில்

௨௮. ஓதிமிக அந்தணர்கள் எரிமூன்றோம்பு முயர்புகழார்தரு
மோமாம் புலியூர்.

௨௯. ஒன்றியசீரிரு பிறப்பர்முத்தீ யோம்பு முயர்புகழ்
நான்மறை யோமாம் புலியூர்.

௩0. தகை நால்வேத—மோர்ந்தோதிப் பயில்வார்
வாழ்தரு மோமாம் புலியூர்.

௩௧. பார்கெழுவு புகழ்மறையோர் பயிலுமாடப்
பைம்பொழில் சேர்தரு மோமாம் புலியூர்.

சுந்தரர்.

௩௨. கலையடைந்த கலிகடியந்தண ரோமப் புகையாற்
கணமுகில் போன்றணி கிளருங் கலையநல்லூர்.

௩௩. சொற்பால பொருட்பால சுருதியொடு நான்குந்
தோத்திரமும் பலசொல்லித் துதித்திறை தன்றிறத்தே
கற்பாருங் கேட்பாரு மாயெங்கு நன்கார் கலைபயிலந்தணர்
வாழுங்கலைய நல்லூர்காணே.

௩௪. பொய்யாத வாய்மையாற் பொடிப்பூசிப் போற்றிசைத்துப் பூசைசெய்து, கையினு லெரியோம்பி மறைவளர்க்கு. மந்தணர்தங் கருப் பறியலூர்.

௩௫. மன்னிய சீர்மறை நாவனின்ற வூர்ப்பூசல்

௩௬ இருக்குவா யந்தணர்க ளொழுபிறப்பு ளெங்கும் வேள்வியிருந் திருநிதியம் வழங்குநகர்—காளுட்டுமுள்ளூர்

௩௭. நம்பினர்க் கருள்செய்யு மந்தணர் நான்மறைக்கிடமாய் வேள்வியுட், செம்பொனேர் மடவாரணிபெற்ற திருமிழலை.

௩௮. பார்சிலவு மறையோரும் பத்தர்களும் பணிசெய்ய [வெண்பாக்கம்]

௩௯. அங்கமோராறவையும் மருமாமறை வேள்விகளும் எங்குமிருந்தந் தணரெரிமூன் றவையோம்புமிடம் ........ நனிபள்ளியதே.

நம் பெருமக்கள் தெரிசிக்கச்சென்ற சிவதலங்களில் அக்காலம் நிகழ்ந்த சிறப்புகளை அவர்கள் கண்கூடாகக் கண்டபடி, அவர்களது பாடல்களில் மேற்காட்டியவாறு இன்னும் பல அருளியிருக்கின்றார்கள். தேவாரம் பெற்ற சிவதலங்கள் உஎச. அத்தலங்களின் தேவாரங்களிலெல்லாம் இவ்வாறு கூறப்பட்டிருக்கவில்லை. எந்தெந்தத் தலங்களில் அந்தணர், நான்மறை. வேதவேள்வி செந்தமிழோர் பெருக்கமாயிருக்கக் கண்டார்களோ அத்தலத் தேவாரங்களிலேயே அவ்வாறு அருளியிருக்கின்றார்கள். அவற்றிலும், ஓமாம்புலியூர், மிழலை, இத்தலங்களின் தேவாரப் பதிகங்களில் மூவர்களும் ஓரே தன்மையாய்ச் சிறப்பித்திருக்கின்றார்கள். தொல்காப்பியர், அந்தணர் பார்ப்பனர் எனக் கூறியும் அவர்களது அறுதொழிலைக் கூறியுமுள்ளபடியே மேற்காட்டிய தேவார அருண்மொழிகளில் சமயாசாரியர் மூவரும் அருளிச் செய்திருப்பதும் நன்கு புலப்படும். ஆதலால் தொல்காப்பியத்து வரும் இவ்வகைச் சூத்திரங்கட்கு மனம்போல வெவ்வேறு பொருள்கொள்ளப் புகுவதும் பொருத்தமிலதாம். மேலே கண்டிருக்கிற தேவாரப் பகுதிகளில் உஉ-வது எண்ணில் காட்டியவாறு அப்பமூர்த்திகள், அந்தணர்க் கருங்கலம் அருமறை ஆறங்கம் என்றும் நங்களுக் கருங்கலம் நமச்சிவாயவே என்றும் இருவகையாய்ப் பிரித்துக் காட்டியிருப்பதை நோக்குங்கால் நமது பாஷ்யகர்த்தர் அருளியபடி அருமறை ஆறங்கம் முதல் மூன்று வருணத்தாருக்கே உரியதென்பதும் சிவாகமம் நான்கு வருணத்தாருக்கும் உரியதென்பதும் விளக்கமாகின்றன, கசு-கஎ பகுதிகளில் அந்தணர் வேள்விகளையும் அவர்களோதும் வேத ஒலியையும் தமிழர்களுடைய செந்தமிழ் கீதத்தையும் வேறாகப் பிரித்துக் காட்டியிருப்பதனுலும் இருவகை மக்களையுஞ் சொல்லி ஒருவர் செந்

தமிழர் என்றும் மற்றொருவர் தெய்வமறை நாவர் என்றும் விசேஷித்துக்காட்டி யிருப்பதானும் அந்தணர் ஆவார் வேறு குலத்தார் அவர்கள் ஓதும் மறை செந்தமிழல்லாத வேறு பாஷை என்பதும் தெள்ளிதாய் விளங்கும். ௩அ-வது பகுதியில் பார்நிலவு மறையோரும் பத்தர்களும் பணிசெய்ய எனச் சுந்தரமூர்த்திகள் அருளியிருப்பதினும் சிவத்தொண்டர்களை யிருவகையாகப் பிரித்திருப்பதனால், மறையோர் என்ற மொழி முதல் வருணத்தினரையும் பத்தர் என்ற மொழி மற்றையோரையுங் குறித்துக்கொண்டு நிற்பதையுங் காணலாம். ஸ்ரீஞானசம்பந்தப்பெருமான், அந்தணர் மறையோர் இவர்களைச் சிறப்பித்துக் கூறியதுபோல வேளாளர்களையுஞ் சிறப்பித்தே கூறியிருக்கின்றனர். ஆனால் அந்தணர்களுக்கு வேதம் ஓதல் வேள்வி வேட்டல் முத்தீயோமபுதல் ஆதிய தொழில்களைக் குறிப்பிட்டதுபோல் வேளாளர்களுக்குக் குறிப்பிடவில்லை. மற்றெவ்வாறெனில் வள்ளற் றன்மையில் அதாவது ஈதலிற் பெருங்கீர்த்தியுடையவரெனக் கூறப்பட்டிருப்பதோடு இருவரும் வெவ்வேறு குலத்தினரெனவுங் கூறப்பட்டிருக்கின்றது.

க. வேளாளரென்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்குந்
தாளாளராக் கூரிற்றன் றேன்றிமாடமே என்பதனாலும்,

உ. கொடையுடைவண் கையாளர், மறையோர்கள்
என்றும் வளர்கின்ற கொச்சைவயமே என்பதனாலும்

ங. கொடையிலோ வார்குலமும், முயர்ந்தம் மறையோர்கடாம்
புடைகொள் வேள்விப் புகை யும்பருலாவும் புகலியே.

என்பதனாலும் அறியலாம்.

மாணிக்கவாசகரை இறைவன் அந்தணர் கோலங் கொண்டு தேசிக மூர்த்தியாகி ஆட்கொண்டனர் என்பதை ஒருவரும் மறுக்கார். தமது ஆசிரியரை, அம்மூர்த்திகள்

க. "மறைபயிலந்தணனா யாண்டுகொண்ட திருவான தேவன்"

உ. "அந்தணனாயறை கூவி வீடருளும் அங்கருணை வார்கழலே பாடுதுங்காணம்மானாய்"

ங. "வெள்ளத்தழுத்தி வினைகடிந்த வேதியன்"

ச. "மறையான் பெருந்துறையான் கொண்டபுரிநூலான்"

ரு. "முன்னே யெனையாண்ட பார்ப்பானே"

சு. "பத்தர்சூழப் பராபரன் பாரில் வந்து பார்ப்பானெனை"

எ. "மறையோர் கோலங்காட்டியருளலும்"

என்பனவாதிய அருண் மொழிகளாற் றுதித்தார். இவற்றாலும், அந்தணர், பார்ப்பார், ஆதிய சொற்கள் காரண விடுகுறிப் பெயராய் நின்று தொல்காப்பியச் சூத்திரப்படி முதற் குலத்தவ

ரையே குறித்தனவென்பதை அறியவேண்டும். மேலும் சிவ பெருமான் அந்தணர் கோலங்கொண்டதற்கியைய முப்புரி நூல் தரித்துவந்தனர் என மாணிக்கவாசகர் அருளியிருப்ப தால் தொல்காப்பியத்தில் அந்தணர்க்குரிய அடையாளங்களில் ஒன்று நூல் என்று கூறியமொழிக்கு ஏடு, என நம்மவர் விகற்ப உரைகண்டது உண்மையலவென்பதும் விளங்கும்.

பின்னும் மற்றொரு வகையானும் ஆராய்வாம். சைவத் தமிழ் மக்களுக்குப் பெரிய புராணமென்னும் நூலே கண் போன்றது. இந்நூல் தோன்றியிராவிடின் தேவாரமென்னுந் தமிழ் மறையின் வரலாறும் அதன் பொருளும் காண்பது மிக அரிது. நடராஜப் பெருமான் முதலெடுத்துக் கொடுக்கச் சேக்கிழார் நாயனாரால் அஃது பாடப்பட்டு நிலவுகின்றது. சேக்கிழார் தொண்டைநாட்டு வேளாள குலாதிபதி. தில்லை வாழந்தணர்களில் ஒருவரும் சந்தான குரவர்களில் ஒருவரு மாகிய உபாபதி சிவத்தாலுந் துதிக்கப் பெற்றவர். அநபாய சோழனென்னும் சோழ அரையனுக்கு முதல் மந்திரியாயிருந்து லௌகிகத் தன்மையிலும் முற்றுந் தேர்ந்தவர். இப்பெரிய புராணம் அறுபான் மூன்று நாயன்மார்கள் சரிதத்தை விரித் துக் கூறுகின்றது. அது விரிநூலாதலான் அவர்கள் குலம், தொழில், சிவத்தொண்டு ஆதியவற்றை விரித்துக் கூறும். அறுபத்து மூவர்களும் தொகையடியார்களும் பிறப் பினால் பல பேதப்பட்ட குலத்தவராவர். அறுபத்துமூவர் களில் பதின்மூவர் பிராமண குலத்தவரென்று சொல்லப்படு கின்றார்கள். அவர்களாவார் (க) தில்லைவாழந்தணர்கள் (உ) கல யர் (ங) முருகர் (ச) பசுபதியார் (ரு) சிறப்புலியார் (சு) கண நாதர் (எ) பூசலார் (அ) சண்டேசர் (கூ) சோமாசிமாறர் (க0) நமிநந்தி (கக) சம்பந்தர் (கஉ) அப்பூதி (கங) நீலநக்கர், எனச் சேக்கிழார் புராணம் ஙங-வது செய்யுள் கூறும். இந் நாயன்மார்களைக் குறிப்பிடும்போது மட்டுமே, அந்தணர், மறை யோர், வேதியர், மறை, நான்மறை, வேதம், வேள்வி என்பன வாதிய மொழிகளை யெடுத்துப் பெரிய புராணத்தில் ஆளப் பட்டிருக்கின்றன.

**தில்லைவாழந்தணர்களை**

(க) "வருமுறை யெரிமூன்றோம்பி மன்னுயி ரருளான்மல்கத்
தருமமே பொருளாக்கொண்டு தத்துவநெறியிற் செல்லு
மருமறை நான்கினோடா றங்கமும்பயின்று வல்லார்"

(உ) "செம்மையாற் றணிந்த சிந்தைத்தெய்வ வேதியர்கள்"

**குங்கிலியக்கலயநாயனாரை**

(க) "அருமறை முந்நூல் மார்பினந்தணர் கலயரென்பார்"

முருக நாயனுரை

(க) "மானமறையோர் குலமரபின் வந்தார் முந்தைமறை முதல்வர்......முருகனுர்"

பசுபதியாரை

(க) "அருமறைவாய்மைத் துங்கவேதியர் குலத்தினிற் ருேன்றிய தூயோர்"

(உ) "அருமறைப் பயனுகிய உருத்திரமதனை, வருமுறைப் பெரும் பகலுமெல்லியும் வழுவாமே, திருமலர்ப்பொகுட்டிருந்த வனனையவர் சிலநாள்-ஒருமையுய்த்திட"

சிறப்புலியாரை

(க) "நான்மறைக் குலத்தினுள்ளார்"

கணநாதரை

(க) "காழிமாநகர்த் திருமறையவர் குலக்காவலர்"

பூசலாரை

(க) "அருமறை மரபுவாழ அப்பதிவந்து ... ... வாய்மைப் பொருள்பெறு வேதநீதிக் கலையுணர் பொலிவின்மிக்கார்"

சண்டேச நாயனுரை

(க) "நன்மைமறையின் றுறைவிளங்க, என்று மறையோர் குலம்பெருக .....உதயஞ்செய்தார் விசாரசருமனுர்"

சோமாசிமாறரை

(க) "தூயவாய்மை, வேதம்பயிலு மறையாளர் குலத்தின்மேலோர்"

நமிநந்தி நாயனுரை

(க) "பேணுநீற்றுச் சைவநெறி-யொருமைவழி வாழந்தணர் தமோங்கு குலத்தினுள் வந்தார்"

(உ) "வாய்மைமறைநூற் சீலத்தால் வளர்க்குஞ் செந்தீயெனத் தகுவார்"

சம்பந்தரை

(க) "அப்பதியி லந்தணர்தங்குடி முதல்வரா சின்மறை கைப்படுத்த சீலத்துக் கௌணியர்கோத்திரம் விளங்க செப்புநெறி வழிவந்தார் சிவபாத இருதயர்"

(உ) "மற்றவர் தந்திருமனையார் வாய்ந்தமறை மரபின்வரு பெற்றியினுர்"

(இவர்களைத் தந்தை தாயராகக்கொண்டு)

(ங) "தாவில் சராசரங்களெலாஞ் சிவம் பெருக்கும் பிள்ளையார் திருவவதாரஞ் செய்தார்"

அப்பூதி நாயனுரை

(க) "திங்களூர் மறைத்தலைவர்" "மறையோர்" "ஆதிநான்மறை நூல்வாய்மை அப்பூதியார்"

நீலநக்க நாயனுரை

(க) "சீலமுய்த்தவத் திருமறையோர் செழு மூதூர்
ஞாலமிக்நான் மறைக்குலம் விளக்கிய நலத்தார்
ஆலம்வைத்த கண்டத்தவர் தொண்டரா மன்பர்
நீலநக்கனு ரென்பவர் நிகழ்ந்துளாராஞர்"

என்பனவாதிய பெரிய புராணச் செய்யுட் பகுதிகளில் மேற்காட்டிய பதின்மூன்று பிராமணகுலப் பெருமக்களை வேத மாதியவைகட்குரிய மறையவர், அந்தணர், வேதியர் என்போரது குலத்திற்றேன்றினவர்களென்று சேக்கிழார் அருளியிருக்கின்றனர். மற்றைய நாயன்மார்கள், அரையர், வைசியர், வேளாளர் ஆதிய பற்பல குலத்தவராவார். இவர்களில் ஒருவரையாவது குறிப்பிடும்போது மேற்கண்ட மொழிகள் பிரயோகப் படுத்தப்பட்டிருக்கவில்லை. திருநாவுக்கரசு நாயனுர் பரம்பரைச் சைவ உத்தம வேளாள குலத்தலைவர். சைவசமயாசாரியர்களில் ஒருவர். அந்தணராதியோராலும் போற்றப்படும் பெரியார். சம்பந்தப்பெருமானே அம்மூர்த்திகளை வணங்கி யிருப்பாரேயாளுல் அம்மூர்த்திகளின் பெருமை எத்தகையதென்று சொல்லலாம். அப் பெருந்தகையாரைக் குறிப்பிட்ட இடங்களிற் கூட அந்தணர், வேதியர், மறையோராதிய பெயர்களாற் சேக்கிழார் மூர்த்திகள் குறிப்பிடவில்லை. இவற்ருல், அந்தணர், மறையோர், வேதியர், பார்ப்பார் என்போர் தொல்காப்பியச் சூத்திரப்படி முதற் குலத்தவரையே சுட்டுமென்பதற் கையமுமுண்டோ. மறை, வேதம் என்பன அவர்கள் ஓதும் வடமொழி வேதங்களே யாகும், 'அருமறை முந்நூல் மார்பினந்தணர்' என்றுஞ் சொன்னமையால், நூலே கரகம் முக்கோல் மணையே ஆயுங்காலை அந்தணர்க்குரியவென்னுஞ் சூத்திரத்தில் நூல் என்பதற்கு முன்னூல் என உரை ஆசிரியர் கண்ட பொருளே பொருளென்பதும் விளங்கும்.

சேக்கிழார் மூர்த்திகளேயன்றி மற்றைச் சிவானுபூதிச் செல்வர்கள் பலர். அவர்களுள் கண்ணுடைய வள்ளலார், அருணகிரிநாதர், சிதம்பர சுவாமிகள், குமரகுருபர சுவாமிகள், அதிவீர ராமபாண்டியன் ஆதியோர்களாலும் அருளப்பட்ட சைவ நூல்களாகிய ஒழிவில் ஒடுக்கம், திருப்புகழ் திருப்போரூர்ச் சந்நிதிமுறை ஆதிய பிரபந்தங்களில், மறைப் புதல்வன், இருக்கு ஐயம்போக உரைத்தோன், மூவாமறையே மறையின் பொருளே, பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலே, எஞ்ஞான்றும் மீறிலா மறைமுடி யிருப்பான், எனக் காணப்படும் அருண்மொழிப்

பகுதிகளில் மறையென்ற சொல்லுக்கு அப்பேரறிவாளர்கள் என்ன பொருள்கொண்டு பிரயோகித்திருக்கின்றார்க ளென்பதையும் உய்த்துணரவேண்டும்.

நமது தமிழ் நாட்டில் மெய்கண்ட சந்தான பரம்பரையாகத் தோன்றி நிலைபெற்று விளங்கும் திருவாவடுதுறை, தருமபுரம், ஆதிய தமிழ்ச் சைவாதீனங்களிலும், ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருமான் காலம் முதல் தோன்றி விளங்கிவருவதாகச் சொல்லப்படும் மதுரைத் திருஞான சம்பந்த மூர்த்திகள் ஆதீனத்திலும், அந்தந்த ஆதீனங்கள் தோன்றிய காலம் முதல் இருமொழிகளிலும் மிக்க வல்லவர்களாகிய மகா மேதாவிகளும், தமிழ்ப் பற்றுள்ளவர்களுமாகிய, சிறந்த மெய்யடியார்கள் குழுவுடன் பல அற்புதங்களைச் செய்த தேசிக மூர்த்திகள், விளங்கித் தமிழை வளர்த்து வந்திருக்கின்றார்கள். இவர்களில் யாரும், நமது நண்பர், இக்காலம் கண்டுபிடித்த கற்பனை உரைகளை நமது பண்டைய தமிழ் நூல்களிற் புகுத்தினாரில்லை.

இறுதியாய், மற்றொரு வகையான் நமது நண்பர் கற்பனைக்கு ஆதாரவுண்டோவெனப் பார்த்து இவ்வாராய்ச்சியை ஒருவாறு முடிக்கின்றோம், நமது கன்னித் தீபமுற்றும் அதனுள்ளும் சிறந்த நந்தமிழ் நாட்டகத்தும், சிவாலயங்களும், திருமால் ஆலயங்களும் பண்டுதொட்டே நிலைபெற்று விளங்குகின்றன. அகத்தியர் பெருமான் நந்தமிழ் நாட்டுக்கு எழுந்தருளும் முன்னரே விண்டுவின் ஆலயம் தென் நாட்டில் தோன்றி விளங்கிவருவதாகத் தெரியவருமேயானால் அது விஷயத்தில் சங்கை தோன்ற நியாயமில்லை. வடநாட்டுத் திருமால் வேறு தென்னாட்டுத் திருமால் வேறு எனப் பொருள் கொள்ளும்படியாய் நம்மவரிற் சிலர் வீணாகப் பிதற்றுவார்கள். அதெல்லாம் மயக்கவுரையே. "தென்னாடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கன்" எனத் திருமால் அடியார் கூறுவாராயினர். வழிபாட்டு விஷயங்களிற் சில வேற்றுமை காணலாம். அது நமக்கு உடன்பாடல்ல. திருமாலானவர் சிவபெருமானது புருஷ சக்தியாவர். சிவாலயம் உள்ள தலங்களில் பெரும்பாலும் திருமால் ஆலயமும் நிலவப்பெற்று வருவதைக் காணலாம். சில சிவாலயங்களில், அவ்வாலய ஆவரணத்துக்குள்ளேயே விஷ்ணுமூர்த்தி எழுந்தருளியிருப்பதையுங் காணலாம். திருநெல்வேலியில் சிவாலயத்திற்குள் நெல்லையப்பர் எழுந்தருளியிருக்குங் கெற்பக் கிரகத்தையடுத்துச் சிவலிங்கப் பெருமானுக்குப் பக்கத்தே விஷ்ணுமூர்த்தியு மெழுந்தருளியிருக்கின்றார். "அரியலாற்றேவியில்லை ஐயனையாறனார்க்கே" என்றும் "கடல்வண்ணனாகி நின்ற தேவியைப் பாகம் வைத்தார்." என்

றாம் சைவத் திருமுறைகளும் கூறுகின்றன. சிவபெருமான் துதியாகத் தமிழ்மறை யென்னுந் தேவாரந் தோன்றியது போலவே திருமால் துதியாகத் திராவிட வேதமென்னும் நாலாயிரப் பிரபந்தந் தோன்றியுள்ளது. இந்தத் திராவிட வேதத்தினுள் மறை, நான்மறை, அந்தணர், மறையோர் என்பதாதிய சொற்களையும் திருமால் அடியார்கள் பிரயோகப்படுத்தியிருக்கின்றார்கள். அவைகளிற் சில பகுதிகளை அடியிற் காட்டுவாம்.

## பெரியாழ்வார்.

க. "நம்முடைய நாயகனே நான்மறையின் பொருளே"

உ. "செஞ்சொல் மறையவர் சேர்புதுவைப் பட்டன்"

ங. "இருக்கொடு நீர்சங்கிற் கொண்டிட்டு எழின்மறையோர் வந்துநின்றார்"

ச. "நால்வேதக் கடலமுதை மேலிருங் கற்பகத்தை வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை"

ரு. "மறைப்பெருந்தீ வளர்த்திருப்பார் வருவிருந்தை யளித்திருப்பார் சிறப்புடைய மறையவர் வாழ்திருவரங்கம்"

சா. "தென்னாடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கம்"

## சூடிக்கொடுத்த நாச்சியார்.

எ. "பழகு நான்மறையின் பொருளாய் மத, மொழுகுவாரண முய்ய வளித்த வெம்,மழகன்"

## குலசேகரப் பெருமாள்

அ. "அந்தமிழின் இன்பப்பா வினையவ் வடமொழியைப் பற்றற்றார் பயிலரங்கத்தரவ ணையிற்பள்ளிகொள்ளும் கோவினை."

## திருமழிசைப்பிரான்.

கூ. "அங்கமாறும் வேதம் நான்குமாகி நின்றவற்றுளே தங்குகின்ற தன்மையாய்"

க0. "இருக்கலந்த வேதநீதி யாகிநின்ற நின்மலா"

## மதுரகவியாழ்வார்.

கக. "அவ்வருமறையின் பொருள் அருள்கொண்டாயிர மின்றமிழ்ப் பாடினான்.

## திருமங்கை ஆழ்வார்.

கஉ. வாயோது வேத மலிகின்ற தொல்சீர் மறையாளர் நாளுமுறையால் வளர்த்த, தீயோங்க வோங்கப் புகழோங்கு தில்லைத் திருச்சித்திரகூடம்"

கங. "இலங்கிய நான்மறை யனைத்துமங்கமாறுமேழிசையும் கேள்விகளு மெண்டிக் கெங்குஞ்—சிலம்பிய நற்பெருஞ் செல்வந் திகழு நாங்கூர்"

கச. "ஊழிதோறூழிதோறுயர்ந்த செல்வத்தோங்கிய
நான்மறை யனைத்துந் தாங்கு நாவர்"

கரு. "பண்டை நான்மறையும் வேள்வியும் கேள்விப்
பதங்களின் பொருளும் .. ..தானாய்
நின்ற வெம்பெருமான் அரங்கமா நகரமர்ந்தானே"

கசு. "ச்சந்தோகா, பௌழியா, தைத்திரியா, சாமவேதியனே
நெடுமாலே"

கஎ. "செந்தமிழும் வடகலையுந் திகழ்ந்த நாவர்
திசைமுகனே யனையவர்கள் செம்மைமிக்க அந்தணர்
தமாகுதியின் புகையார் செல்வத் தணியழுந்தூர்
நின்றுகந்த அமரர் கோவே"

கஅ. "செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி"

நம்மாழ்வார்.

ககூ. மேவித் தொழுதுய் மினீர்கள் வேதப்புனித இருக்கை
நாவிற்கொண் டச்சுதன் றன்னை"

இவைபோன்றன பலவுள. விரிவஞ்சி விடுத்தாம். இப்பகுதிகளிலும், தேவாரத் திருமுறைகளிற் காணப்படுவதுபோலவே, மறை, நான்மறை, வேள்வி, அந்தணர் இருக்கு முதலாகிய நான்மறைகளின் பெயர்களையும், தென்மொழி வடமொழி இவைகளைப்பாகுபடுத்திக் கூறியிருப்பதையும் நஞ் சைவச் செந்தமிழ்க் கல்விவாணர்கள் நன்கு நோக்குவார்களாக. இந்த இருக்காதிய நான்மறைகளை யெந்தத் தமிழ் முனிவர் நால்வர், எக்காலம், யாரிடம்கேட்டு இயற்றினர்களோ? நம் நண்பர்தான் கூறவேண்டும்.

இதுகாறுங்காட்டிய பலவகை நியாயங்களாலும் அதிபிரபல பிரமாணங்களாலும், அந்தணர், மறையோர் வேதியர், பார்ப்பார் என்ற சொற்கள் காரண இடுகுறிப் பெயர்களாக நின்று, பண்டைய காலந்தொட்டே தொல்காப்பிய இலக்கண முறைப்படி, முதல் வருணத்தாரையே குறிப்பிட்டு வருகின்றன வென்பதும், மறை வேதம் என்பன அவர்களது வடமொழி வேதமே யென்பதும் வேதம் ஓதல், வேள்வி புரிதல் ஆதிய அறுதொழில் பூண்டுளார் அவர்களே யென்பதும் தெளிவாய் விளங்குகின்றன. இவைகளைப்பற்றியும் வேத சிவாகமங்களில் விளங்கும் முழுமுதற் கடவுளாகிய சிவபிரானது திவ்ய மங்கள குணாலங்கிர்தங்களைப்பற்றியும் அவைகளின் சாரமாகிய திராவிட வேத அருண்மொழிகளைப்பற்றியும் நாயினுங் கடையேனாகிய அடியேன் எடுத்துரைக்கவும், அவைகளின் பொருள்கள் இவைதான், இவையல்லவென்று வற்புறுத்திக் கூறவும் எம்மாத்திரம். மேரு மலைக்கும் பரமாணுவுக்கும் எவ்வளவு தாரதம்மிய முண்டோ அதுவுமில்லை. ஏதோ நம் பெருமக்களது உண்மைநெறியைப் பல்லோரும் அறியச் செய்யவேண்டுமென

வெழுந்த, என் ஆசைப் பெருக்கத்தால் இவ்வித ஆராய்ச்சியிற் புகுந்தேன். பெரியோர்கள் மன்னிப்பார்களாக.

சமயாசாரிய மூர்த்திகள், கல்லாலடியில் சிவபிரானிடம் வேதம் வேதாங்கங்களைக் கேட்ட நால்வரையும் அவர்கள் பாடிய தேவாரங்களில் குறிக்குங்கால், "அங்கங்களாறும் நான்கும் அந்தணர்க் கருளிச்செய்து" எனவும் "ஆலின்கீழ் அறங்களெல்லாம் மறையவர்க் கருளிச்செய்து" எனவும் "வேதியர்கள் நால்வருக்கு வேதஞ்சொல்லி" எனவும் அருளியிருக்கின்றார்கள். "பொய்யடிமையில்லாத புலவர்க்குமடியேன்" என ஸ்ரீசுந்தரமூர்த்திகளால் வணங்கப்பெற்ற தொகை அடியார்களில் ஒருவரும் சிவபெருமானை நேரில் தெரிசிக்கப் பெற்று அவரிடம் திருவருள் பெற்றவருமாகிய நக்கீர தேவர் இயற்றிய பிரபந்தங்களில் "முத்தீநான்மறை யைம்புலனடக்கிய அறுதொழிலாளர்க் குறுதிபயந்தனை" என்றும் "தொடுத்தமைத்த நாண்மாலை கொண்டணிந்த நால்வர்க்கன்றுனிழற்கீழ் வாண்மாலையாகும் வகையருளித், தோண்மாலை, விட்டிலங்கத் தெக்கணமே நோக்கி வியந்தகுண மெட்டிலங்கவைத்த விறல் போற்றி" என்றும் அருளியிருக்கின்றார்கள். வேதப்பொருளை உபநிடதங்கள் எவ்வாறு விளக்குகின்றனவோ அவ்வாறே திராவிட வேதப் பொருள்களை விளக்கத் திருப்பாடல்களை அருளிய தாயுமான தயாபர மூர்த்திகள் "ஆரணமாகம மூலமெல்லா முரைத்தவருண்மவுன காரணமூலங் கல்லாலடிக்கேயுண்டு" எனவும் "அந்தணர் நால்வர் காண அருட்குருவாகிவந்த எந்தை" எனவும் "துங்கமிகு பக்குவச் சனகன் முதன் முனிவோர்கள் தொழுதருகில் வீற்றிருப்பச் சொல்லரிய நெறியையொரு சொல்லாலுணர்த்தியே சொரூபானுபூதி காட்டி" எனவும் அருளிச்செய்திருக்கின்றார்கள். சிவபிரான் கல்லாலடியில் சநகாதி முனிவர் நால்வருக்கும் வேதாகமங்களையும் அவற்றின் பொருள்களையும் இருமுறை யுபதேசித்த சரித்திரம் கந்தபுராணத்துட் காணப்படுகின்றது. அக்காலந்தான் மன்மதனை இறைவன், நெற்றிக்கண்ணாலெரித்ததாகவும் கந்தபுராணங் கூறும். அப்பமூர்த்திகள் அருளிய "ஆய்ந்தது வேதமாறங்க மன்று சுட்டது காமனைக் கண்ணாலே" என்னும் தேவாரப்பகுதியின் பிரமாணத்தாலும் இவ்வுரை யெவ்வகையானும் மறுக்கப்படா. மற்றுஞ் சைவநூல்களும் அவ்வாறே கூறுவதைக் கொண்டே தமிழ்ச் சைவக் கவிவாணர்களும் மற்றையோரும் பண்டைய காலந்தொட்டே அவ்வாறே கூறுநிற்பர். ஆதலால் தேவார திருவாசகமாதிய சைவத்திருமுறைகளிற் காணப்படும் கல்லாலடியில் அறங்கேட்ட அந்தணர் நால்வர் எனப்படுவோர் சனகாதியர்களாவர் என்பதற்குத் தடையில்லை.

௬0. நம்மவர் எழுதிய திருநான்மறை விளக்கம். ௨௩வது பக்கத்தில் "சுத்த வித்தையில் எழும் அருள்நாத ஒலியாகிய "ஓங்காரத்தின் வாயிலாக உவமையிலாக் கலைஞானத்தை உதவ "அங்ஙனம் உதவப்பெற்றார் இயற்றிய நூலே ஆகமமாமெனச் "சுவாயம்புவத்திற் கூறியவாறே நால்வர்க்கருளிய விடத்தும் "மறைகள் எழுவதாயினவெனக் கோடலே மூவகை அளவைக் "கும் ஒத்ததாமெனவெழுதி, ௨௪௮-வது பக்கத்திலும் அவர் கருத்தை வலியுறுத்திக் கூறியிருக்கின்றார். சுவாயம்புவத்தின் வாக்கியங்களைக் காட்டாது இவர் எழுதியிருப்பதைக் கொண்டே ஒருவித முடிபுக்கு வருவது உண்மைபயவாது. "மூவகை அளவைக்கும் ஒத்ததாம்" என்றாரே, அதைப் பரியாலோசிப்பாம். மூவகை அளவையாவன காண்டல், கருதல், உரை யென்பன. கடல்கோளில் அழிந்துபோனதாக நம்மவர் சொல்லுந் தமிழ்நான்மறை இவராலும் மற்றெவராலுங் காணப் படாததொன்றாம். ஆதலால் காண்டல் அளவையால் இவர் கோள் சாதிக்க முடியாது. மலையில் காணும் புகையைக்கண்டு அங்கு அதன் காரணமாகிய நெருப்புண்டென்று சித்தாந்தப் படுத்துவதுபோலக் காணப்படும் ஒன்றைக் கண்டுதான் அதற்குக் காரணமான மற்றொன்று உண்டெனத் தாபிக்கப்படவேண்டும். தமிழில் நான்மறையிருந்ததெனத் தமிழுலகு தோன்றியது முதல் இதுகாறுந்தோன்றிய செந்தமிழ்க் கல்வியாளர்களில் ஒருவரும் இவ்விதக் கருத்துக் கொண்டிலாததலாலும் அந்நான் மறையின் மணங்கூட முகருதற்கிலாமையாலும், கருதலளவையாலுந் தாபிக்கவியலாது. நமது வடமொழிக்கும், வேதசிவாகமங்கட்கும், வேதக்கொள்கைக்கும் விரோதியாயெழுந்த ஒருவர் தக்க பிரமாணங்காட்டாது அவரொருவர் கருதியதே பிரமாணமாகாது. தமிழ்நான்மறையென வொன்றிருந்ததென்பது வைதிக, சைவ, வைணவ தமிழ் நூல்கள் ஒன்றிலாவது, சங்க நூல்கள் ஒன்றிலாவது சொல்லப்படாதிருப்பதனால் நம்மவர் கூற்று உரையளவை யானுந் தாபிக்கப்படவில்லை யெனத் திண்ணமா யுரைக்கலாம். இவ்வகையில், நம்மவர் கோள் மூவகையளவையின் ஒன்றாலும் சாதிக்கப்படவில்லை யென்பதே முடிபாம்.

௬௧. இதுகாறுங் கண்ட ஆராய்ச்சியால் வேத சிவாகமங்கள்சிவபெருமான் வாக்கே யென்பதும், அவைகளே ஆதியிலுண்டான முதனூல்களென்பதும், அந்நூல்களினின்றே உலகத்திற் காணப்படும் எவ்வகை நூல்களும் பல ஆசாரக் கொள்கைகளும் ஆன்மாக்களின் கன்மத்துக்கும் காலதேய வர்த்தமானத்துக்கு மிணங்கத் தோன்றின வென்பதும் ருக்கு வேதஞ் சிவபிரானையே முழுமுதற் கடவுளெனக் கூறுமென்ப

தும், தமிழ்த் திருமுறைகள் வேத சிவாகமப் பொருளே யென்பதும் ஆரியருக்குந் தமிழருக்குந் தந்தையார் சிவபிரானே யென்பதும், அதுபோலவே, அவரே இருமொழிக்குங் குரவரென்பதும், நான்மறை ஆறங்கம் இருபத்தெட்டு ஆகமங்கள் தமிழில் இருந்தனவென்பது கற்பனையே யென்பதும், தமிழில் நான்மறை யிருந்ததாகத் தேவார திருவாசகங்களிற் கூறியிருப்பதாகச் சொல்வது முயலுக்குக் கொம்பு மூன்றுமுள மென்பது போலவே யென்பதும், தொல்காப்பியர், சங்கப்புலவர்கள், சைவசமயாசாரியர்கள் ஆதியாகச் சந்தானசாரியர்களீறாகவும், அக்காலமுதற் சிவஞான முனிவரீறாகவும், இவர்களுள்ளிட்டவெரும், தமிழ் ஆராய்ச்சியிற் புகுந்திருந்த புறமதக் கல்விவாணர்களும் இதுகாறுந் தமிழில் நான்மறை ஆதிய மூவகை நூல்கள் இருந்தனவென்று கூறவில்லை யென்பதும், பிறவும், பசுமரத்தாணிபோற் பதித்து நாட்டப்பட்டன.

தமிழ்ச்சைவ உலகு இதுகாறும் எவ்வகைக் குழப்பத்திற்கும் உட்படாமல் மிக்க சாந்த குணமுடையதாகிச் சிவபெருமானை வழிபட்டுத் தேவார திருவாசக முதலிய தோத்திர ரூபமான அருட்பாக்களையும் சாத்திர ரூபமான சிவஞான போதம் முதலிய நூல்களையும் ஓதியுணர்ந்து சிவனருள் பெற்று வந்திருக்க, அவ்வுலகத்தார்களுட் பிரிவு உண்டாமாறும் தம்முட் சமமாய்க் கூடி வாழ்ந்த தமிழும் வடமொழியும் போராட்டஞ் செய்யுமாறும் இக்காலத்துப் படித்த சிலர் நவீனக் கற்பனை செய்து வருகின்றார்கள். என்ன கற்பனை கற்பித்தும் ஆரிய வேதங்களும் தமிழ்மறைகளும் ஒன்றுக்கொன்று அனுசரணையாயிருந்து பொருளில் வேற்றுமைப்படாது சைவசமயப் பகுதிகளை விளக்கிக் கொண்டிருப்பதைக் காட்சிப் பிரமாணத்தாற் காண்கின்றபடியால் அவைகளை அறவே மறைக்க முடியாமையினாலே, முன்னமே யிருந்த தென்னாட்டுச் சைவப் பகுதிகளை ஆரியர்கள் அவர்கள் வேதங்களுட் புகுத்திக் கொண்டார்களென்றும் சைவ சமயாசாரியர்களும் வேதத்துட் போந்த சைவப் பகுதிகளைப் போதித்தார்களென்றுந் தந்திரமாக வெழுதித் திருநான்மறை விளக்க மென்னுமொரு வியாசமெழுதப்பட்டிருக்கின்ற தென்பதும் இவ்வாராய்ச்சியால் நன்கு விளக்கி யிருத்தலைச் சைவசமயிகள் உய்த்து நோக்கி உண்மை கடைப்பிடிக்கக் கடவர்கள்.

"சுருதிவானவனுந் திருநெடுமாலுஞ் சுந்தரவிசும்பி லிந்திரனும்
பரிதிவானவனும் படர்சடைமுக்கட் பகவனும கவுயிர்க்கமுதாம்
எருதுவாகனனும் எயில்கண்மூன்றெரித்தவேறுசேவகனுமாம்பின்னும்
கருதுவார்கருது முருவமாங் கங்கைகொண்ட சோளேச்சுரத்தானே"

என்னுந் திருவிசைப்பா அருண்மொழிப் பொருளையும், "யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வமாகி யாங்கே மாதொருபாகனார் தாம்வருவர்" என்னுஞ் சிவஞான சித்தியாரின் செய்யுட் பொருளையும், "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடுவாழ்வா" ரென்னும் உத்தரவேதப் பொளையுமுணர்ந்த நம்மனோர் சைவசமய முறைப்படி சிவபிரானையும் அவரது திருவேடமாகிய திருநீறு, திருக்கண்மணியையும், அவரது மெய்யடியார்களையும் எந்நாளும் மறவாமற் பேணி, வாழையடி வாழையாகச் சைவவுலகிற் பல்கிப்பரவியோங்கி நம், தவப்பயனாக அவதரித்த நந்திராவிட பாடியகர்த்தர், நமது மூதாதையர்கள், இவர்கள் வகுத்த வழியேயொழுகி வருமாறு அனுக்கிரகிக்கும்படி சிவபிரானைக் காயத்தாலும் வாக்காலும் மனத்தாலும் வணங்கி வாழ்த்தித் தியானித்து இதனை முடிக்கின்றோம்.

திருச்சிற்றம்பலம்.

சுபம். சுபம். சுபம்.

---

மழை வழங்குக மன்னவ னோங்குக
பிழையில் பல்வள னெல்லாம் பிறங்குக
தழைக அஞ்செழுத் தோசை தரையெலாம்
பழைய வைதிக சைவம் பரக்கவே.

---

பரசிவன் றனதுயர்ச்சியே தெரிப்பதிற் பகரொருப் பாட்டிற்று
யரியகால் கதிர் வியாதனுதியர் மொழியால் விளங்கிடு நீர்த்தாய்த்
திரிவுகாட்சிய ருளத்துறு தறிகிகர் செம்பொருட்கோ வைத்தாய்
விரியுநீ ருலகினுக் கிதந் தருமுதல் வித்தையோங்குக மாதோ.

திருநான்மறை விளக்க ஆராய்ச்சி
முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ மெய்கண்டதேசிகன் திருவடி வாழ்க.

---

சிவமயம்.

# பிழையும் திருத்தமும்.

## வித்துவப் பெரியாரபிப்பிராயத்தில்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 14 | 30 | சூளாமணியாகிய | சூளாமணியுமாகிய |
| 15 | 31 | மொழிபெயர்புகளிலும் | மொழிபெயர்ப்புகளிலு |
| 20 | 12 | நடைபெருங்காலத்தில் | நடைபெறுங்காலத்தி |
| 35 | 4 | C. K. | ஸ்ரீமத் C. K. |
| 48 | 22 | ஞூலாசிரியரவர்கள் | நூலாசிரியரவர்கள் |
| 56 | 11 | யாழ்பாணத்து | யாழ்ப்பாணத்து |
| 81 | 18 | வராய்ச்சி | வாராய்ச்சி |
| 86 | 22 | பின்னர் புராணங் | பின்னர்ப்புராணங் |
| 93 | 15 | தொல்லாரிசியர் | தொல்லாசிரியர் |
| 96 | 30 | கருனை மூர்த்தி | கருணை மூர்த்தி |
| 99 | 26 | திவ்விய ஞூலென் | திவ்விய நூலென் |
| 104 | 30 | யாண்டு கற்றனரோ | யாண்டுக்கற்றனரோ |
| 110 | 7 | ளழுங்கி | ளமுங்கி |
| 117 | 30 | வேளாரை | வேளாளரை |
| 119 | 24 | சுகுதி | சுருதி |
| 120 | 32 | திரு:தி | திருநந்தி |
| 120 | 36 | இப்பொருட்டு | இப்பொருட்கு |
| 134 | 8 | வருவதால் | வருதலால் |
| 135 | 29 | என்னை ? | என்னை ? |
| 136 | 28 | வேணடுகின்றேன் | வேண்டுகின்றேம் |
| 138 | 35 | புகல் லுற்றும் | புகலலுற்றும் |
| 143 | 8 | கடபாட்டை | சடப்பாட்டை |
|  | 15 | தொன்றும் | தோன்றும் |
| 145 | 24 | வெனிப்படுத்த | வெளிப்படுத்த |

## நூலில்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 29 | பரனுரை | பானுறை |
| 5 | 36 | கலிரண்டு | கழலிரண்டு |
| 11 | 12 | சிவாலயங்களிளெல்லாம் | சிவாலயங்களிலெல்லாம் |
| 21 | 3,4 | பின்பும் கௌகமுறையானே | பின்பும கௌக முறையாே |
| 37 | 3 | இயைன்ற | இயன்ற |
| 66 | 9 | வரற்ருன் | வாற்ருன் |
| 66 | 23 | மொழிநட்கு | மொழிகட்கு |
| 67 | 12 | கக்க | தக்க |
| [illegible]0 | 11 | மொழிகானே | மொழிதானே |
| [illegible] | 29 | கூஞர் | கூறிஞர் |
| 72 | 3 | நூலந்தால் | நூலந்நூல் |
| 72 | 8 | காரியங்கனை | காரியங்களை |
| 72 | 24 | மிசைத்திருமூவர் | மிசைத்திருமூலர் |
| 72 | 32 | தமிழலல | தமிழல்ல |
| 72 | 37 | என்ளை | என்னை |
| 74 | 29 | அந்தாற் | அந்நூற் |
| 75 | 33 | நாள்கு | நான்கு |
| 76 | 14 | மறைந்தமையான் | மறந்தமையான் |
| 78 | 27,28 | மலர்ந்தருணியவை | மலர்ந்தருளியவை |
| 79 | 16 | நக்கீர் | நக்கீர |
| 80 | 4 | ஆவிளைந்தாடுவான் | ஆவினைந்தாடுவான் |
| 86 | 11 | தரனவியல் | தானவியல் |
| 112 | 35,36 | தில்லைவாழந்தணர்களும் தாருகாவனமிருந்து வந்தவர்களென | தில்லைவாழந்தணர்களும் வந்தவர்களென |
| 120 | 22 | இருநிலத்துல் மறைவழக்க | இருநிலத்து மறைவழக்க |
| 127 | 40 | சொற்ருேடர் | சொற்ருெடர் |
| 132 | 20 | மரக்கள் | மாக்கள் |
| 151 | 12 | நான்கோல் மிட்டாற்று | நான்கோலமிட்டாற்று |
| 166 | 33, 34 | சைதாப்பேட்டையிவிருந்த | சைதாப்பேட்டையிலிருந்த |
| 167 | 30, 36 | முண்டகோபநிடத்தில் | முண்டகோபநிடதத்தில் |
| 168 | 13 14 | வேண்டுமென்பதே. இதன் பொருள் | வேண்டுமென்பதே, இதன் பொருள். |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 185 | 10 | சுயம்யு | சுயம்பு |
| 186 | 5,22 | உணறுமாறு | உணருமாறு |
| 187 | 1 | மற்றைறயோரும் | பிரமனும் |
| | 8 | விதிபோந்தார் | வீதிபோந்தார் |
| 191 | 35 | உ0ரு | கஎசு |
| 195 | 6 | ருஉ | ருச |
| 199 | 31 | தமில் | தமிழில் |
| 204 | 12 | நீரேமுடுக்கிய | நீரேழுடுக்கிய |
| 204 | 25 | ஈதென்ள | ஈதென்ன |
| 207 | 33 | யொய்யென்று | பொய்யென்று |
| 211 | 22 | அவ்விஷ்யங்களில் | அவ்விஷயங்களில் |
| 220 | 24 | நாவினந்தணர்க்காயினும் | நாவினந்தணர்க்காயினும |
| 227 | 15 | உபாபதி | உமாபதி |
| 325 | 36 | விசும்பிலிந்திரனும் | விசும்பினிந்திரனும் |

## வடமொழி மேற்கோள்களில்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 20 | 1 | நிஷ்வலித | நிஷ்வலித |
| 51 | 32 | வஸிஷ்ஹிஜாதே | வஸிஷ்ஹஜாதே |
| | 33 | ஸ்ஹவாகஸீதி | ஸ்ஹிவாகஸீதி |
| 123 | 27 | ஸ்ஜேதா-த்திம் | ஸ்ஜேதா-த்திம் |
| 163 | 39 | உக்ஷிணாஹீஜவஃ | உக்ஷிணாஹிஜவஃ |

குறிப்பு:—பிழைகளைப் பூர்த்தியாய்ச் சோதிக்க காலம் பெறவில்லை. நண்பர்கள் பலரும் இவ்வாராய்ச்சிநூல் விரைவில் வெளிவர விரும்பினார்கள். எழுத்துக்களின் தேய்வாலுளவாகிய பிழைகள் திருத்தப்பட்டில. மற்றும் பிழைகளைத் திருத்திக் கொண்டு வாசிக்கவேண்டும்.

போற்றினார்" என்ற வண்ணம் மனத்திற்றோன்றிய தோன்றிய படி எழுதியிருக்கின்றார்கள். "அறிஞர்களுடியே யவற்றைக் காண்கவே."

"திருநான்மறை விளக்கத்"திற் காணப்படுவனவெல்லாம் சைவ சாத்திரங்களுக்கு முற்றும் மாறுபட்டனவேயாம். முக்கியமான சிலவற்றை ஈண்டெடுத்துக் காட்டினும். இவைகளெல்லாம், சைவ சமயம் இல்லை; சைவ சாத்திரம் இல்லை; சாதி இல்லை; ஆச்சிரமம் இல்லை; சிவன் இல்லை; சீவன் இல்லை; புண்ணியம் இல்லை; பாவம் இல்லை; அவற்றின் பயன்களாகிய இன்பம் இல்லை; துன்பம் இல்லை; அவ்வின்பத் துன்பங்களை அனுபவிக்கும் சுவர்க்கம் இல்லை; நரகம் இல்லை; "கொலையொடு களவு காமங் குறித்திடு வஞ்ச மெல்லா—நிலையெனப் புரிதியற்று னினக்குமேல் வருந்தீ தொன்று" இல்லை; எனவும் இன்னன பிறவும் கூறும் நாத்திகர்க்கும் உடன்பாடாகாதெனின், இவைகளெல்லாம் உண்டெனக் கூறும் ஆத்திக சைவசற்சனசங்கத்தனுத்துணை தானு மனுகாதழிந்துபடும் என்பதறையவும் வேண்டுங் கொல்லோ!

உண்மைச் சைவ சற்சன சபையில் அவையணுத்துணையு மேறாவென்பது "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" என்னு நூலைப்படிப்பவர் நன்கறிவர். "ஆராய்ச்சி" ஆசிரியர், கா. சு. என்பார் கொள்கைகளெல்லாவற்றையும் தக்க பிரமாணங் கொண்டு மறுத்திருத்தலின் யாம் மறுப்பான் புகவில்லை. அம் மறுப்புக்கு மதிப்புரை கொடுப்பான் புகுந்தேம். எமதபிப்பிராய மதிப்புரை இதுவேயாம்.

நல்லாசிரியரை வழிபடு முறையில் வழிபட்டுக் கேட்குமுறையிற் கேட்டுச் சைவ சித்தாந்த நூல்களைக் கற்று உள்ளவாறுணர்ந்த நல்லோர்கள் "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" ஆசிரியர் அறிவின் மதுகையை அறிந்து வியந்து மகிழா நிற்பர். ஏனையோர் வியந்தென்? ஒழிந்தென்?

சைவவுலகந் தடுமாறிப் பிறவிப்பயனை இழவாதவண்ணம் "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" என்னும் சிறந்த நூலியற்றி ஈடேறச் செய்த புலவர் திலகராகிய ஸ்ரீமத் சாம்பசிவம் பிள்ளையவர்கள் இன்னும் இதுபோலும் பெருநூல்கள் செய்து உபகரித்துப் பூரணாயுசுப் பெற்றுப் புண்ணியராய் ஆனந்த வாழ்வுறும்படி "சிற்சபை பொலியத் திருநடம்புரியு, மற்புதக் கூத்தர்" அருள்புரியுமாறு அநுதினமும் வேண்டுகின்றும்.

---

மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பரீக்ஷகரும், யாழ்ப்பாணத்து
ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்தின் நிர்வாக சபை
வித்தியா சபைகளின் அங்கத்தவரும் உதவிக் காரியதரிசியும்,
பரீக்ஷகரும், "உலகியல் விளக்க நூல்" ஆசிரியரும்,
சங்கநூல் ஆராய்ச்சி விநோதருமாகிய

**பிரமஸ்ரீ நவநீதகிருஷ்ணபாரதியவர்கள் இவ்வுரை கண்டார்.**

தென்னிந்தியாவிலேயுள்ள பார்ப்பன மக்களுட் பெரும்
பாலார் அரசாங்க உத்தியோக வேணவா மேலீட்டானே தத்
தமக்குரிய வைதிக சன்மார்க்க நெறியை மறந்து ஆங்கிலங் கற்
றுத் தாம் பெரும் பதம் பெற்றுப் பாங்கிலரென்னும் பான்மை
யராயினர். ஆங்குள்ள ஏனையோரும் அப்பதங்களைத் தாங்க
ளும் பெறுதற்குத் தடையாயிருப்பவர் பார்ப்பாரெனத் தாமே
கருதிக்கொண்டு அவரை வெறுத்து அடக்குவான் முயல்
கின்றனர்

அவர் தம் முயற்சி, அப்பார்ப்பார்க் குரியதென்று அவர்
தாமே எண்ணிக்கொண்ட வடமொழியின் மீதும், அம்மொழியி
னூர்ந்த வேதாகமங்கண் மீதும், அப்பார்ப்பார் மரபுடைய
ரெனக் கருதப்படும் **திருஞானசம்பந்த சுவாமிகள்** போன்றார்
மீதும், சகத்தியல் கடந்த **அகத்தியர்** முதலாய முனிவர்கண்
மீதும் வெறுப்புக் கொள்ளச் செய்து விட்டதெனின், வேறினி
விளம்புதற் கியாதுள தவர்தம் முயற்சி விசேடம்.!

இன்னும் அவர்கள் தமது வெறுப்புவிசேட மொன்றையே
நிலைக்களனாக வைத்துக்கொண்டு உண்மையை அறவே மறைத்
துத் தொன்னூல் வரம்பிகந்து வேண்டிய மாறுபாடுகளை அச்ச
நாண மனுத்துணையுமின்றி உளறி வருகின்றனர். அவற்றுட்
சிலவற்றை அறியவெஃகும் வேட்கையாளர் பொருட்டு ஈண்டு
வரைகின்றாம்.

திருக்குறளில் "அறுதொழிலோர்" என்றதனை "அறி
தொழிலோர்" என்றும், தேவாரத்தில் "சைவவேடந் தானி
னைத்து" என்றதனைச் "சைவவேடந் தானிணைத்து" என்
றும், பாடங்கொண்டும், தேவார முதலியவற்றில் "மறை"
என்பது தமிழ்வேதம் என்றும், "அந்தணர்" என்பது "தமிழ
ராகிய முனிவர்" என்றும், "சிவன்" என்பதற்குச் சிவந்த
நிறம் உடையவன் என்றும் ஓராதாரமுமின்றி வாளா பொருள்
கூறியும், தம்முடைய கொள்கைக்கு மாறுபட்ட பிரபலமான
பிரமாணங்களை இடைச்செருகல் என்றும் எழுதியும் இயம்
பியும், இன்னன பிறவா றுளறியும் வருகின்றனர். இவ்வரு
வோருட்டலையாயார் ஸ்ரீ வேதாசலம் பிள்ளை என்பாரும்
ஸ்ரீ கா. சுப்பிரமணிய பிள்ளை என்பாருமாவர்.

கா. சு. என்பார் வடமாநிழற்கண் நால்வர்க்கருளிய மறை என்பது இருக்கு முதலியவற்றைக் குறியாது தமிழ் மொழிக் குரிய ஓம் என்பதனையே குறிக்கும் என்றார். அன்றிக் கேட்ட நால்வரும் சனகாதியர் ஆகார்; தமிழ் மக்களே ஆவார் என்றும், பிறவாறும் மேலே குறித்த தம்மத மேற்கோளாக "திருநான் மறை விளக்கம்" என்னும் பொதுமொழி தலைப் பெயர்கொண்டு பொருளில் உரையைச் "செந்தமிழ்ச்செல்வி" என்னும் பொருத்தமில் பத்திரத்தில் வெளியிட்டிருக்கின்றார்.

இத்தகாத செயலுக்கஞ்சி உண்மை வெளியிடற்கு அந்நாது முன் வந்து தோன்றியோர் பல சைவத் தமிழ்ப் பெரியாரவர்; அவர் தம்முள்ளும் தலைசிறந்த பெரியாராகிய ஸ்ரீமத். திரு. மா. சாம்பசிவம் பிள்ளையவர்கள் "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" எனப் பெயரிய தோரரிய நூலொன்றியற்றி அதன் மாதிரிப் பிரதி யொன்றை எமக்கனுப்பி வைத்தனர்.

அந்நூல் கா. சு. என்பார் காட்டிய போலிக் கொள்கைகளை வேரறுத்தில்லையாக்கிச் 'சைவப் பயிர் தழைத்தோங்க வைத்துச் சிவானந்தப் பேற்றினைச் சைவவுலகந் துய்க்குமாறு செய்து விளக்கமுறுகின்றது என்பது எமது உள்ளக்கிடக்கை.

அந்நூலாசிரியருக்கும், மாரிக்குப்போலச் சைவவுலகம் என்ன கைமாறு செய்ய வல்லது! நூலும், ஆசிரியரும், சைவமும், தமிழும், வடமொழியும், அம்மொழி வேதாகமங்களும், அன்ன பிறவும் தழைத்து வளர்ந்தோங்கி நிலைபெறுமாறு வண்ணம் அருள் புரிவான் கலியுகவரத! கந்த! முருக! எந்தை செவ்வேள்! கமலச்சேவடி! விமல! வேண்டுதும் பெரிதே.

---

யாழ்ப்பாணத்து மாவைக் கந்தவேள் ஆலய ஆதீன கர்த்தருள்
ஒருவரும், பௌராணிகரும், சைவப்பிரசாரகரும்,
கவிப்புலவரும், ஆகிய

## பிரமஸ்ரீ ஸா. குமாரசாமிக் குருக்களவர்கள் கண்ட வுரை.

செந்தமிழ்ப்புலவரும், கந்தலில் அன்பரும், உத்தம ஒழுக்கரும், சந்தத மியற்றும் அந்தமில் பூசையும், சிந்தையில் அடியவர் சுந்தரத்தொண்டும் பந்தம தகற்றும் பண்ணையிற் செய்யும் பத்த சிரேட்டரும், வித்தகநூல் வினோதருமாக யாம் கண்டனம் பத்தோ மேலும் பற்பல படைத்தித்து பாரிற் சைவம் பரப்பினரும் பரப்புகின்றவரும் பரப்புவாருமாகிய ஸ்ரீமத் சாம்பசிவம் பிள்ளையவர்கள் எமது பார்வைக்கு அனுப்பிய "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" யாம்பெற்றுப் பார்வையிட்டு அவ்வுத்தம சிரோமணி சைவர்கட்குச் செய்த

செப்பஞ்செய்து உவந்தினிதிருக்க வரந்தருக
ர மதலே தன்றிருவடியிணை புந்திகொண்டிறைஞ்
லன்றுமே.

---

த்துத் திருநெல்வேலிச் சிவன் கோயில் அர்ச்ச
ரும், பற்பல சிவாலய குகாலய முதலிய சைவா
சாரோகணஞ் செய்து உற்சவநடாத்தும் வித்த
ப்போதுந்திருமேனிதீண்டு"ம் உத்தமோத்தம
ணளிமிக்காரும், வித்துவான்கள் எனப்படுவார்
னும் அவர்பாற் பத்திமை பழூத்தொழுகும்
ண்பினரும், கல்வி விநோதரும், ஈகையாளரும்,
ரகரும், ஞானப்பிரகாச சபையின் நிரந்தர அக்கி
பௌராணிகரும், கர்ஷணுதிப் பிரதிஷ்ட்டாந்தம்
உற்சவாந்தம் உற்சவாதிப் பிராயச்சித்தாந்தம்
ர்த்தக் கிரியைகளில் மிகப்பயின்றவரும், பொது
நலப்பிரியரும் ஆகிய,

சபாபதிக்குருக்களவர்கள் இவ்வுரை கண்டாராவர்.

-ா-ஸ்ரீ கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் "செங்
வி" என்னும் பத்திரிகையில் "திருநான்மறை
எனத் தலைக்கட் பெயர் பொறித்து எழுதிய விடய
சைவ சாத்திர முரண்கமெனக் கண்டு கண்டனங்
ட்டு அதில் ஒரு பிரதி எமதபிப்பிராயம் அறிதற்
எமக்கனுப்பி வைத்தார் ஒரு பெரியார்.

தாம் யாரெனின் சைவ சாத்திரமுரணினர் எனப்
னைகட்கொப்பற்ற சிங்கேறும், நாத்திகர்களாகிய
கோராத்திகக் கோடரியும், கற்றவர்காமுறும் பொற்
ரும், நெற்றிநேத்திரத்தனைப் பற்றொடு பூசை நித்த
யும் பளகறு தவத்தரும், மூவொருபாவை மேவரப்
தாவிலதாகத் தமதுளங் கொண்டவரும், சைவசித்
மய்வரக்கற்றுப் பன்னிருதிருமுறை நன்னருற்றேர்ந்து
ளங்கி மனமயலகலப் போதனை செய்யும் புண்ணிய
ரும், நீதி நூல்கள் பேதியா துணர்ந்து இலக்கியம்
இலக்கணந் தேர்ந்து தருக்கம் படித்துத் தாம்பெரி
ரும், திருப்புகழ்ப் பெருமான் "சேவடி படருஞ்
ள்ள"த்தரும் ஆகிய ஸ்ரீமத் திரு. மா. சாம்பசிவம்
வர்களே!

ப் பெரியார் அனுப்பிய "திருநான்மறை விளக்க
ச்சி" என்னும் பெரு நூலை யாம் அரைப்பாகம் வரை

பார்வை யிட்டேம். எமது சிவாலய பூசை முதலாய கைங்கரியங்கள் முழுப்பாகமும் இப்பொழுது பார்க்க இடந்தந்தில. ஆயினும் எமது கருத்துப் பழுதுறுவண்ணம் பின்னர் எஞ்சிய பாகத்தையும் பார்வையிட்டுப் பூர்த்தி செய்தின்புறலாமென்றெண்ணி ஒருவாறு மனந்தேறினேம். அது நிற்க.

ஒரு பானை சோற்றிற் கோரவிழ் பதம் பார்த்தல் என்னும் பொருளையுடைய "தாலீபுலாகநியாயத்"தானே பார்த்த பாகத்தைக் கொண்டு பாராத பாகமும் இத்தன்மைத்தென்பது இனிது விளங்கிற்று

அவ்"வாராய்ச்சி"தான், சைவ நூற் பிரமாணங்களையும் யுத்தி அநுபவங்களையும் தன்னக முழுதுங் கொண்டு, "திருநான்மறைவிளக்க" முடையார் புதுக்கொள்கைகள் முற்றும் சுருதி முதலிய மூன்றற்கும் சிறிதும் ஒவ்வாமையை வெள்ளிடை மலை போற் றெள்ளிதிற் காட்டித் திகழ்கின்ற சிறப்பு, "விளக்க" முடையார் உளக்கமலமு நெகிழ்த்தின்புறுத்தி உண்மை கடைப்பிடிக்கச் செய்யுமென்ப தொருதலை.

அவ்"வாராய்ச்சி"யாம் அரும்பெரு நூற்கு இலக்காக்கப்பட்ட ம-ா-ா-ஸ்ரீ வேதாசலம் பிள்ளையவர்களும் ம-ா-ா-ஸ்ரீ கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களும் தாங்கள் மேற்கொண்ட புதுக்கொள்கைகளைச் சைவநூற் கொள்கைகள் என்று ஆராய்ச்சியில்லார் கருதும்படி வெளியிட்டு வருகிறார்கள். அவற்றைப் பார்க்க விரும்புவோர் முறையே "திருவாசகவிரிவுரை"யிலும், "திருநான்மறைவிளக்கம்" அச்சிடப்பட்ட "செந்தமிழ்ச்செல்வி" என்னும் மாசிக பத்திரிகையிலும், அன்ன பிறவற்றிலும் பார்க்கக் காணலாம்

இவ்விருவருக்கும் ஒருவருக்குமில்லாத ஒரு சூக்கும அறிவு தலைப்பட்டிருத்தலை எப்பாலர் அறியினும் தப்பாமல் ஆற்றவும் ஆச்சரியமடைவர். அதுதான் மற்றெவ்விலக்கணத்ததெனிற் கூறுதும்:—

க. தாங்கள் பிரமாணமாகக் கொண்டதொன்றைப் பிறர் பிரமாணமாகக் காட்டினால், பதில் சொல்லமுட்டுற்று, அது இடைச்செருகல் என்று கூறி விடுதல்.

உ. பலபொருளொரு சொல் ஓரிடத்திற் பிரயோகித்திருந்தால் அதற்கு அவ்விடத்திற்கு ஏற்பதொரு பொருளை விடுத்துத் தாம் மேற்கொண்ட கொள்கைக்கேற்ப வலிந்திழுத்துப் பொருந்தாப் பொருள் கோடல்.

ங. ஒரு நூலில் ஒரு விடயத்தைப் பற்றி முன்பின்னுள்ள தொடர்புபடச் சொல்லி வரும் பொருத்தப் பொருட் சம்பந்த

ங்கொண்ட நவீனக் கொள்கைக்கேற்பப் புதுப்
-ல்.

காட்டும் பிரமாணம் எதிரி கொள்கையைத்
ஊக்குப் பிரதிகூலமாய்த் தம்மைத் தோல்வித்
த்திவிடுதலை எள்ளத்தனையுங் கருதாதொழிதல்.

கள் புதுக்கொள்கைக்குப் பிரமாணமின்மை
றரிந்துவைத்தும் தெரியாதார் போல, தேவார
)த் தங்கள் கொள்கைக்கு ஏற்பத் திரித்துப்
).

த்திரம் பேசேல்" என்ற ஔவையார் திரு
துஞ் சிந்தியாது அறவே மறந்து அதுவே பேசுதல்.

ங்கள் தங்கள் கொள்கையைத் தாபித்தற்கு நூல்
புதிதொன்று கூறின், ஏனையரும் வரம்பிகந்து
புதிதொன்று கூறின் அப்போது தாம் செய்யக்
ன்றுமின்றென வுணராது களித்தல்.

ங்கள் புதுக்கொள்கை, அதனையறியு மறிவாற்ற
சவசமயிகளுக்குத் தெய்வபத்தியைக் கெடுத்து
னவாறு ஒழுகச்செய்து நரகத்திற்காளாக்கிவிடும்
தி யிரங்காதுவிடுதல்.

)ந்நவீனக் கொள்கையுடைய இவ்விருவரில் முன்
ன்னப்பட்ட ஒருவர் நான்மறை சிவஞான சித்தி,
திருக்குறள், இறையனாரகப்பொருள், தொல்காப்பி
கூறப் பின்வைத் தெண்ணப்பட்ட மற்றொருவர்
-று; அது வேறு; அது கடலாற் கொள்ளப்
-றல்.

னம் இவ்விரு பெருமர் சூக்குமவறிவும் நவமாகப்
ூவற்றுள்ளும் ஒவ்வொன்று பலவேறுவகைப்படப்
-ல்லுஞ் செலவினையுடைய விலக்கணத்தன.

பறிவு இருந்தழி யிருந்து தீட்டாத் தீட்டும் பயனில்
ர விடயங்கட்குட் புதைந்து கிடக்குமன்றி அறிஞர்
னத் தணுகி அரை மாத்திரைதானும் நின்று பயன்
ான் றன்ற என்பதஃதறியவல்ல அவர்பாற் றோன்று
காரணம் என்னைகொல்லோ! வினையென்பேமா!
று; கலிவலி என்பேமா! அஃதன்று; கண்ணுதற்
பிரோகமென்பேமா! அதுவுமன்று; சார்ந்த இனத்
தன்பேமா; என்னென்பேம்! என்னென்பேம், சிவதா!
அது கிடக்க

திரிபுரத்தசுரர்கள் தேவர்க்குச் செய்த சகித்தற்கரிய இடுக்கண்ணை அவர் முறையீட்டால் அறிந்து கருணை மீக்கூர்ந்து அதனை ஒழிக்கத் திருவுளங்கொண்ட செகதீசனாகிய சிவபெருமான், அவ்வசுரர்கள் சிவபூசா துரந்தரர்களாயிருத்தலின், அப்பெரும்பேறுடையாரைப் பரமபதியாகிய தம்மாலும் கோறல் முடியாதென்றுணர்ந்து முகத்தால் சிவபூசைவிசிட்டஞ் செகத்தினர்க்குத் தெரிக்க திருவுளங்கொண்டு தமது "நால்வகைப்பட நண்ணிய சத்தியுள்—மாலு மாதலின்," அம்மாலாகிய விண்டு தேவரைக் கூவி இதனைச் செவியறிவுறுப்பாராயினர். அது வருமாறு:—

விண்டுவே! நீ பௌத்தகுரவனாயும் நாரதன் உனது சீடனாகவும் கோலங்கொண்டு திரிபுரஞ்சென்று அப்புரவாசிகட்குப் பௌத்த சமய போதனைசெய்து சிவபத்தியையும் சிவபூசையையும் விடுவித்து, பௌத்த பத்தியையும் பௌத்த பூசையையுந் தொடுவித்துவரக்கடவீர் என்று அறிவுறுத்தினர். சமணசமயத்தையும் போதிக்கும்படி தெரித்தார் எனக் கூறும் புராணமும் உண்டு.

சிவபிரான் தெரித்தருளியவாறு விண்டுதேவரும் நாரதரும் கோலங்கொண்டு திரிபுரஞ் சென்று பௌத்த சமண போதனைசெய்து அவ்வசுரர் சிவபத்தி சிவபூசைகளைக் கெடுத்துப் பௌத்தபத்தி பௌத்தபூசைகளைக் கொடுத்து மீண்டனர்.

அதன்பின் சிவபிரான் திரிபுரதகனஞ் செய்து தேவர்களை இரக்ஷித்தார். அக்காலத்து விண்டுதேவர் போதனையைக் கேட்டும் அதில் மனம்பற்றாத மூவர் சிவபத்தி சிவபூசைகளை விடாதிருந்தனர். அவர் அவ்விசேடத்தால் தகிக்கப்படாது உய்ந்தார். இதனால் சிவபத்தி சிவபூசைகளின் விசிட்டம் எத்துணை சிறந்ததென்பது யாவரும் எளிதிலறிந்து யாவரும் கடைப்பிடியாக மேற்கொண்டு உய்யக்கடவர்கள்.

"வேண்டுவார் வேண்டுவதே யீயும்" பெருங்கருணைப் பெருவள்ளல் எங்கள் சிவபெருமானேயாதலால், தேவர் வேண்டுகோளை முடித்தற்கு அதற்குரியவாயிலை யுண்டாக்கி முடித்தருளினர். அதுபோல, கலியுக தருமம் இவையென விதித்த சிவபிரான், சைவசமயிகளிடத்து அவை காணப்படாமையால், அவற்றைச் சைவரைக்கொண்டு செய்வித்தற்குரிய வாயில் இஃதெனத் திருவுளங்கொண்டு வேதாசலம் சுப்பிரமணியம் என்னும் தமது தலப்பெயர் சுயப்பெயரோடு மானுட வடிவங்கள் எடுத்துக்கொண்டுவந்து சைவசமயிகளுடைய உறுதியான சிவபத்தி, வேதாகமபத்தி, வடமொழிப் பத்தி, பிராமணபத்தி, சைவசமய குரவர்பத்தி, சைவசமய

பத்தி, சித்தாந்த சாத்திரப்பத்தி, பன்னிரு திரு
முதலியவற்றைக் கெடுத்து நவீன சைவமதத்தில்
த்தெட்டுக்கோடி நரகங்களிலும் மடுத்து வருத்
கொண்டிருந்தாலு மிருக்கலாம்; அப்படி யாயா
வர்மீதும் குற்றமேற்ற இடமில்லை யென்றுங்

ர்மறை விளக்க ஆராய்ச்சி" என்னும் பெரு
கவனிக்கற்பால சிலவற்றை ஈண்டு எடுத்துக்

.

தி வேதம் ஆரியர் கட்டியது; சிவபிரான் திரு
ளப்பட்டதன்று என்றும், சனகாதி முனிவர்கள்
ஸன்று தமிழ் மக்கள் நால்வர் என்றும், அவர்கள்
து ஞானம் பெற்றுத் தமிழ் நான்மறை செய்தார்
அவற்றைக் கடல் கொண்டுபோயிற்று என்றும்,
என்று தேவார முதலியவற்றிலே கூறியிருத்தல்
றையைச் சுட்டியது என்றும் கூறியிருத்தலும்
வுமாம். இவையெல்லாம் "அறையுமாடரங்
ளைகள்—தறையிற் கீறிடிற் றச்சருங் காய்வரோ"
பியிற் பெரிய கம்பர் அருமைப் பாட்டிற் கிலக்
ப் பிறிதன்றெனத் தெளிவோர் தெளிவர்,
ன்றுந் தெளியார். அவர் கன்மத்திற்கு நல்லோர்
ர்.

ரத்தினமாகிய "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி"
பார் சுருதி யுத்தி அநுபவம் என்னு மூன்றினாலும்
ந்தை மறுத்துத் தமது பட்சத்தைச் செவ்வனே
செய்திருத்தலின், நாம் அதனை மறுவலும் மறுக்கப்
டவேடணமியாய" மாய் முடியுமாகலான் அதிற்
ம்.

ப்ச்சி" நூலுடையார் உண்மைச் சிவபத்தியும்,
சவாபிமானமும், சைவ சாத்திரத்தின் உண்மைப்
புடைபடவொற்றி ஆராய்ந்தறியும் அறிவின்
மற்றைய பன்னூற் பயிற்சியும், நூல்வரம்பினின்று
வாதஞ்செய்தலும், பிற பிற பற்பல நன்னலங்க
குடையரென்பது அவர் "ஆராய்ச்சி" நூலால்
ங்கும்.

கைய பெரியார் இதுபோலும் நன்மை பயக்கும்
ள் இன்னும் இன்னும் பல பல செய்துகொண்டு
பயன்படச்செய்து பூரணாயுசுடன் நித்தியசுகமுடைய

ராய் எம்போல்வாரை மகிழ்வித்துக்கொண்டிருக்கும் வண்ணம் பேரருள் பாலித்தருளும்படி எமது முழுமுதற் கடவுளாகிய சிவபிரான் றிருவடிமலரை எமதொருமுடி மலராகச் சூடித் தினந்தினம் சிந்திக்கின்ரும்.

---

திருநெல்வேலி ஜில்லா தச்சநல்லூர், இருமொழிகளிலும் சிறப்புற்றவர்களும்
தமிழ் வளர்ச்சியில் முழுதும் ஈடுபட்டவர்களுமாகிய
ஸ்ரீலஸ்ரீ ஐயா இலக்குமணப்போற்றி ஐயா
அவர்களது அபிப்பிராயம்

இத்திருநான்மறை விளக்க ஆராய்ச்சி யெனும் நூலைப் படித்தேன். இதிற் காணப்பெற்ற பொருளைப்பற்றி யென் கருத்தை வெளியிடல் வேண்டுமென இந்நூலாசிரியர் விரும்பிக் கொண்டார்கள். ஆதலால், என் சொற்ப அறிவிற்குப் புலப்பட்டதை இதில் எழுதுகின்றேன்.

திருநான்மறை விளக்க ஆசிரியரும், திருநான்மறை விளக்க ஆராய்ச்சி ஆசிரியரும் கல்வியிற் சிறந்த உண்மைச் சைவ ஒழுக்கமுடையோராவர். இவர்கள் சைவ நூல்களையே தாங்கள் பாராட்டுதற்குரியனவாகக் கொண்டவர்கள். ஆனல், அவற்றில் திருநான்மறை யெனும் பதப் பொருள்பற்றி வேறுபட்ட கருத்துடையராயிருக்கின்றனர். திருநான்மறை யென்பது வடமொழி வேதமா, தென்மொழி வேதமா என்பது அவர்கள் ஆராய்ச்சிக் குறிப்பு. கருத்தின் வேறுபாடு ஆன்மாக்களின் பக்குவத்தைப் பொறுத்ததே. வியாசசூத்திரம் ஒன்றினுக்கு நால்வர் பெரியார் ஒன்றிற்கொன்று முற்றும் மாறுபட்ட கருத்துள்ள நான்கு பாஷியங்களை வகுத்துள்ளார். ஒவ்வொருவரும் துர் அபிமானங்கொள்ளாமல் தங்கள் தங்கள் புத்தியிற் புலப்பட்டதை உள்ளவாறே வெளியிடுவது பெருமையேயாம். நிற்க

இத்திருநான்மறை பற்றிய ஆராய்ச்சிக்கு விஷயமாயுள்ள நூல்கள் முக்கியமாகத் தமிழ்த் தேவாரத் திருவாசகங்களேயாம். இவற்றை யருளிச் செய்த மகான்கள் கருத்தில் வடமொழி வேதங்களின்றி வேறு தமிழ் வேதங்கள் உண்டெனுங் கொள்கை ஒரு சிறிதுங் காணப்படவில்லை. வடமொழிப் புராண இதிகாசங்களின் கதாசாரங்களின் தொடர் பின்றி அப்பா சுரங்களை ஆராயப்புகின் சிவபிரானுக்கு இட்டுள்ள திருநாமங்களில் ஒன்றுகூடக் காணக்கிடையாது. இங்ஙனம்

...ரங்களில் பிரயோகமாகிய பதங்களுக்கு வட...
...நக்குப் புறம்பாகப் பொருள் கூறுதல் இயை...
...றவில்லை. அன்றியும் தமிழிலுள்ள தேவார
... திருவள்ளுவர் திருக்குறள் ஸ்ரீவைஷ்ணவ
...பிரப் பிரபந்தம் இவை அனைத்தும் தமிழ்
...பாராட்டப்பட்டு வருகின்றன.

...ந்த திருவாக்கால்'' தமிழில் ஆடியெடுத்தளிக்கப்
...தாண்டத் தொகை, பொல்லாப்பிள்ளையார்
... நம்பியாண்டார் நம்பி அந்தாதி, 'உலகெ
...யெடுத் தருளப்பெற்ற பெரியபுராணம், இவை
...இல் உண்டாயவை; மொழி பெயர்க்கப்பட்டன
...ளாவது வடமொழி வேதங்களை யெடுத்தாளா
... சிவாகமங்கள் தமிழிலிருந்து மொழி பெயர்க்
...யெனக்கொள்வாமெனின், சமய தீக்ஷையில் பிர
...ந்திரங்கள் கூடத் தமிழில் இல்லை. வடமொழி
... இதனால் தமிழ் மொழி உயர் தனிச் செம்
...பதை மறுக்கவில்லை. இந்நூலின் ஆராய்ச்சி அள
... திருநான்மறை யென்பதை வடமொழி வேத
...வத்துகின்றது. இந்நூலாசிரியர் சைவத் திருவாளர்
...பிள்ளையவர்கள் தக்கமேற்கோள்களை ஆராய்ந்து
...ற விளக்கத்திற்கண்ட ஒவ்வொரு விஷயத்துக்கும்
...பகர்ந்துள்ளார். இவர்களது பெருமுயற்சி மிக
...திக்கற்பாலதாம்.

---

... விக்டோரியாக் காலேஜ் பிரின்சிப்பலும், சைவப்பிரசார
...தான வள்ளலும், பரம்பரையாக வருகின்ற வித்துவ சந்த
...லும், விழுமிய குணனெலாந்துறமிய மேன்மையாளரும்,
...தன்மொழி சாத்திரங்களும் இவற்றின் ஆங்கில மொழி
...களும் ஒப்ப நோக்கி மொழிபெயர்ப்பின் மாறுபாடுகளை மிக
... பிறர்க்குப் போதிக்கும் வன்மையுமுடைய மகா வித்துவ
...கிய ஸ்ரீமத் S. சிவபாத சுந்தரம் பிள்ளை B.A., யவர்கள்
எழுதியது.

...வொரு சமயத்தவருந் தத்தம் முதனூல்களிவை யென்
...பற்றிய ஐயம் எக்காலத்தும் நிகழாமல் அவற்றை
...லையான வாய்மையெனக் கொண்டு வருவது சமயத்
...சமய நூலுக்கும் உள்ள ஒற்றுமையை இனிது விளக்
...ன்று வரையும் வைணவர் தமது முதனூல், வேத
...த்திரங்களென்றும், பௌத்தர் பிடக நூலென்றும்,
...வர் பைபிளென்றும், முகமதியர் கொரானென்றும்,
...ம் ஐயுறாது கருதுகின்றனர். அநாதியானதும அநாதி
...முதனூல்களை யுடையதும் எனக் கொள்ளப்படும் சைவ

சமயத்தின் பிரமாண நூல்களை சில ஆண்டுகளாகச் சில நவீன
விவேகிகளுக்குச் சந்தேகத்துக்கும் திரிபுணர்ச்சிக்கும் இட
மாயின. கோடானு கோடி யாண்டுகளாகச் சைவக் கல்வி
மான்களாலும் சிவபத்த சிரோமணிகளாலும் சிவ ஞானிகளா
லும் முதனூலெனக் கொள்ளப்பட்ட வேதங்களையும் ஆகமங்
களையும், மேனாட்டு நாகரிகத்தையும் வேண்டிய அளவு பருகாத
இப்புத்தறிவினர் பசு நூல்களெனத் தள்ளுகின்றனர். மேலைத்
தேசங்களிலே சுயாதீனமென்றொன்று தோன்றி வரம்பு கடந்து
யாண்டும் பரவி ஆண் பெண்ணென்னுமிரு பாலாரது சிந்தை
யைத்திருக்கி எண்ணுதற் கரிய இழிவான செயல்களையும்
மாபாதகங்களையும் செய்வித்து வருகின்றது. ஒரு குழந்தை
யானது பிறந்த பதினைந்தா நாள் அழுது தாய்க்குரிய சுயாதீன
மாகிய மனவமைதியைக் கெடுத்ததனாலே இச் சுயாதீனமானது
அதனுடைய கழுத்தை அவளைக் கொண்டறுப்பித்தது. இக்
கொடிய பூதம் வேறெக் கொடுமையைத்தான் செய்யமாட்டாது!
பிற வூர் நாகரிகம் வரமுன்னர் பார்ப்பாரும் மற்றையோரும் ஓர்
உடலின் வெவ்வேறு பகுதிகள் போலவும், ஆரியமுந் தமிழும்
உடன் பிறந்தார் போலவும், வாழ்ந்து வந்ததை யறியாதவர்
யாவர்! நான்கு வருணத்தவரும் ஒருவருக்கொருவர் துணை
செய்து தத்தந் தொழில்களை யாற்றி வருவதே தக்கதாதலால்
அவர்கள் மக்கட் சாதியாகிய புருடனின் தலை கை உடல் கா
லாகிய பகுதிகளென வேதம் கூறிற்று. புது நாகரிகத்தின்
பயனாக இவர்கள் ஒருவரை யொருவர் கெடுக்குந் தன்மைய
ராய், அந்தணர் ஏனையோர்க் கிடர் செய்ய, அவர்கள் அந்த
ணரிற் கொண்ட அழலானது அவர்களோடு சிறிதுந் தொடர்
பில்லாததாகிய ஆரியத்தை அவர்களது மொழியென மயங்க
வைத்து அதிற்றாவி அதிலுள்ள எமது பிரமாண நூல்களாகிய
வேதாகமங்களிலும் பற்றியது. அன்றியும் தக்க குருவின்றித்
தன்னைக் கற்போரை எக்காலமும் மயங்க வைத்துப் பலபுறச்
சமயங்கள் தோன்றுதற்கிடனாய் நின்ற வேதங்களைப் பிற நாட்
டுப் பிற சாதிப் பிற சமயத்தவரது மொழி பெயர்புகளிலும்
ஆகம விரோதமான பாடியங்களின் துணை கொண்டுங் கற்றதன்
பயனாய், அவை இந்திரன் முதலிய சிறு தேவர்களைப் பற்றிக்
கூறுகின்றன வென்றும், அவர் பாற் செய்யப்படுங் கொலை குடி
முதலிய பயிலும் வேள்விகள் பல பல வென்றும் திரிபுணர்ச்சி
யுற்று, இவற்றாற் சைவ சமயத்திற்கு இழுக்குண்டாகுமெனக்
கருதியும் வேதத்தை யிகழ்பவருண்டு. இவ்விகழ்ச்சிக் கொரு
காரணமாகிய சைவாபிமானப் பெருங் குணத்தை நாமென்றும்
பாராட்ட வேண்டுமாயினும் இது அதி பாதகமாகிய சிவ
நானிந்தையாகவும் சிவனடியார் நிந்தையாகவும் முடிதலால்

வாங்கினின் பாதாம் புயத்திற் புகட்டி யன்பாய்
வாங்க வறிகின்றிலேன் முதுசூர் நடுங்கச்
வாங்கத் தரமோ குவடு தவிடு படக்
காங்கேயனே வினை யேற் கென் குறித்தனையே"

தியகல்வியு மெம் மறிவுந்
பெற வேலவர் தந்ததனுற்
மயல் போயற மெய்ப்புணர்வீர்
டவீர் நடவீரினியே."

யாரிற் கொண்ட வெறுப்பினுலும் வேதத்தின்
உணராமையாலுண்டான அவமதிப்பினுலும்,
ழிலுள்ளன என்றகருத்துச் சிலருக்குண்டாயது.
வேதங்க ளிவை யென்பதைப்பற்றி யவர்களுக்
யிருந்திலது. ஒருசாரார் முயற்கோடன்ன
மறையெனக் கொள்ளின் அவற்றின் உட்
றிய ஆட்சேபங்களினின்றும் விலகலாமெனக்
காரணம் பற்றியோ தோற்ற நிலையிறுதியாகிய
ன்றுக்குஞ் சாட்சி யில்லாத நூல்களைத் திருநான்
அறைந்தனர். இக்குழுவினர் ஒருவர் இயற்றிய
விளக்கமென்னும் நூலில் தமிழ் முனிவர் நால்வர்
மறைகள் இயற்றினரெனவும் அவற்றை யழித்தது
ஒரு கதையைக்கட்டினர். இக்கதையின் விசா
நேசச் செல்வராகிய ஸ்ரீமத் சாம்பசிவ பிள்ளையி
ய நூலின் நோக்கமாம்.

வர், விளக்க நூலாசிரியரது கொள்கைகளை முன்
கூறாக வகுத்து அவற்றை யட்டவணைசெய்து
ாக வெடுத்துத் தக்க பிரமாணங்களைக் கொண்டு
கப் புடைத்துப் பரம்பரையான சைவக்கொள்கை
மயான தென்பதைத் "தடக்கையினெல்லிக்கனி"
டினர். விளக்க ஆசிரியரது போலி நியாயங்கள்
வகுக்கப்பட்டன. அவையாவன :—

நூல்களிலிருந்து பிரமாணமென வசனங்களை
காட்டி அவற்றினின்று பெறப்படாதவற்றை
மாகக் கூறுதல். (உ) இயைபின்றியும் முற்றொடர்
பொருள் கொள்ளல். (ங) ஆன்றோர் வாக்கை
. (ச) தமது கருத்தையையே பிரமாணமாக்
என்பனவாம். இவரது கொள்கைக்கு யிராகியது
னிவர் நால்வர் தமிழில் நான்மறைகளைச் செய்தவ
. இதற்குத் துணையாகக் காட்டப்பட்ட "காது

பொத்தரை" என்று தொடங்குந் தேவாரத்துக்கு இவர் கொண்ட பொருளின் ஏழு பொருத்தக்கேடுகள் உளவா கவும் அவற்று ளொன்றையேனும் நோக்கினாரல்லர். இத்தே வாரத்தின் மூன்றாமடியின் முதலில் வகர உடம்படுமெய்பெற்ற "ஏதம்" என்பது "வேதம்" எனநிற்க, இதுவேதத்தைக்குறிப் பதெனத்தீர்த்தனர். ஏதமென்பதிலுள்ள ஏகாரத்துக்குமோனை யாக அவ்வடியில் வரும் "எய்திய" "இன்பம்" "இணையடி" என் பவற்றிலுள்ள எகர விகாரங்களை மதித்தாரல்லர். மூன்று சீர்கள் பின்னே மோனையாக வரும்போது முதலில் வருஞ்சீரை மோனையாகாமற் பதச்சேதஞ் செய்யச் செய்யுள்வழக் கிடந்த ராது. இரண்டாவது, கின்னரர் முதலியன மாதவர்க்குவமான மெனப்பட்டது. அவற்றுக்கும் உவமேயத்துக்கும் ஒருவகை யொற்றுமையுமின்மையால் அது ஏற்கப்படமாட்டாது. மூன்றா வது, அவைகள் உவமையாயின் "சீயக்கோதில்" என வரு மன்றிச் "சீயம் கோதில்" என வரமாட்டாது. நான்காவது, அங்ஙன மாகாமையின், அவை "கேட்ப" என்பதற்கெழுவா யாக, மாதவர் ஆறாம் வேற்றுமைப் பெயராகும். இதனாற் "செய்து" என்பதற்கு மாதவர் எழுவாயாதல் பொருந்தாது. ஆதலால் "ஏதம்" எனப்பிரியாமல் "வேதம்" எனக் கொண் டாலும் "மாதவர் வேதஞ் செய்து" எனச் சேராது. ஐந்தா வது, வேதஞ் செய்தலால் வரத்தக்க சிறந்த வின்பமொன்றின்று. ஆறாவது, அதனாலின்ப மிருப்பினும் அதைச் சுந்தரமூர்த்தி நாயனார் கேட்பதற்கிடமில்லை. ஏழாவது, வேதஞ் செய்தலால் இன்பமுற்றமையைக் கேட்கினும் அது காரணமாக அவர் சிவ பிரானது இணையடியையடைய வேண்டியதில்லை. விளக்க ஆசிரியரது போக்கிங்ஙனமாகவும், இந்நூலாசிரியர் தேவாரத் தின் பொருளை நன்கு விசாரிப்பதே நடுநிலைக்கும் உண்மை யறிவுக்குஞ் சாதனமென நினைந்து தமது கொள்கையிற்றிருத்தி யடையாமல் விளக்க நூலாசிரியரையும் புலவர் பதின்மரையும் உசாவினர். பழிக்கஞ்சும் இப்பெருந்தன்மை வியக்கப்படத் தக்கது.

மேற்காட்டிய 'காதுபொத்தரைக்கின்னரர்' என்ற தேவா ரத்தில் தமிழ் மக்கள் நால்வர் தமிழில் நான்மறை செய்தனர் என்னும் கோளுக்கு எட்டுணை ஆதாரமுமில்லை யென்பது வெளிப்படை. தேவார திருவாசகங்களில் பெயர் குறிப்பிடா மல் நால்வர், நால்வரெனப் பலகாலும் அருளியிருந்தும், அந் நால்வர்களின் குறி, குலம் அடையாளமாகிய அருளியிருப் பதைக்கொண்டும், நக்கீர தேவர் திருவாக்கில் விளக்கமாயருளி யிருப்பதைக் கொண்டும், தாயுமானப் பெருந்தகையார் அந் நால்வர்களின் பெயரை விரித்திருப்பதைக் கொண்டும், அந்

வித்துவப் பெரியாரபிப்பிராயம்

புராணச் சரித்திரப்படி சனகாதியரே யென்
கு அருளியவர் தட்சிணாமூர்த்திக் கடவுளே
ராய்ச்சி ஆசிரியர் சித்தாந்தப்படுத்தியிருப்பது
ல்லோரும் நோக்கத்தக்கது. அப்பமூர்த்திக
வேதசாறங்கமன்று சுட்டது காமனைக் கண்
ம் தேவாரப்பகுதியும் இப்பொருளைப் பசுமரத்
ற்புறுத்துகின்றது.

ற்றற்கு வேண்டிய சிரத்தையும் ஊக்கமும்
ன்ற அறிவும் இத்துணையவெனச் சொல்லற்
சிவநேசத்துக்கோர் வைப்பென விளங்கும் ஒரு
யிவ்வாறு செய்து முடிக்கத்தக்கவர். உலகம்
றயாக நடைபெறுங் காலத்தில் இவ்வகை நூல்
க் காலத்துச் செய்யப்படும் மருந்துகள்போல
யும். திருநான்மறை விளக்க ஆசிரியரும் வேறு
சமயத்தவரதுள்ளத்தைக் கலக்கி மாபாதகங்களு
வேதாகம நிந்தையில் வீழ்த்த முயலும்போது
ம ஔஷதமாக வெமக்குக் கிடைத்தது, இதி
வத் தமிழ் மக்கட்கொரு விண்ணப்பம்" என்னும்
ம் நாமெல்லோரு மூன்றி நினைத்துத் தவறாதனு
ய போதனைகளையுடையது, மேனாட்டு நாகரிகம்
மூலவேரைத் தறித்து நிற்கும் முறையைக் காட்டி
களைத் திறப்பது. இவ்வரிய நூலைச் சைவப்பற்றுள்
ரும் பெற்றுத் தமது பெரும் பாக்கியமாகப்
தம்மில்லங்கடோறும் வைத்துக்கொள்ளுவரென்ப
லை, இது நான்மறை விளக்க நோயைத் தீர்ப்ப
மேற் சைவ புருடனை அணுகத்தக்க வேறு நோய்
மற் காக்கத்தக்கதாதலாற் சைவ நாடானது பிள்ளை
கன்றும் நன்றி பாராட்டி அவர்களை வாழ்த்தி
வபெருமான் அவர்களுக்குத் திருவருள் சுரந்து
த்தை யூட்டிப் பேரின்பத்தைக் கொடுத்தருளுவர்.

லோலி, யாழ்ப்பாணம், பங்குனிமீ ௧௨௨

தஞ்சாவூர் டிஸ்டிரிகட்டு கோர்ட்டு வக்கீலும், தஞ்சைமா நகரம் முனிசிபாலிட்டி சேர்மனை விளங்கியவர்களும், தமிழ் ஆங்கில பாஷைகளின் ஆராய்ச்சியிற் றேர்ந்தவர்களும், 'தமிழ் வரலாறு' என்னுமோர் அரிய தமிழ்நூல் இயற்றியவர்களும், சித்தாந்த சைவத்தில் ஈடுபட்டவர்களுமாகிய

Row Bahadur K. S. சீனிவாசப்பிள்ளையவர்கள்

எழுதியது.

ஸ்ரீமான் சாம்பசிவம் பிள்ளையவர்கள் எழுதியிருக்கிற நான்மறை விளக்க ஆராய்ச்சி என்னும் நூலையும் அதைப்பற்றி யாழ்ப்பாணம் விக்டோரியா கல்லூரித் தலைவர் ஸ்ரீமான் சிவபாத சுந்தரம் பிள்ளையவர்களும், தச்சநல்லூர் பண்டித சிரோமணி ஸ்ரீமான் இலக்குமணப்போற்றி யவர்களும் எழுதியிருக்கிற அபிப்பிராயங்களையும் ஒருவாறு வாசித்துப் பார்த்தேன். அவ்விருவர்கள் அபிப்பிராயத்தோடு நான் பெரும்பாலும் ஒவ்வுகிறேன். ஸ்ரீமான் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் நல்ல குலத்தில் பிறந்தவராயிருந்தும் இந்த நான்மறை விளக்கம் எழுதியிருப்பது கலியுகக் கூத்துக்களில் ஒன்றென்று தோன்றுகிறது. அசஞ்சல சிவபக்தியில் சிறந்த குடும்பத்தில் தோன்றிய ஸ்ரீமான் சாம்பசிவம் பிள்ளையவர்கள் மேலே கண்ட ஆராய்ச்சி என்னும் நூலை எழுதியிருப்பது சைவர்கள் அனைவருக்கும் சந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியது. முதிர்ந்த இந்த வயதில் பெரும் முயற்சி எடுத்துக்கொண்டு அவர்கள் இந்த ஆராய்ச்சியை எழுதியிருக்கிறார்கள் என்பது இதை வாசிப்பதனாலேயே தெளிவாக விளங்கும். ஸ்ரீமான் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் ஆன்றோர்கள் வாக்கைத் திரித்துப் பொருள் கொண்டும் கொள்கைகளை மாற்றியும் எழுதியிருப்பவற்றையெல்லாம் பிசகென்று ஆராய்ச்சியால் பிள்ளையவர்கள் தெளிவாகக் காட்டியிருக்கிறார்கள். ஸ்ரீமான் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களோடு இன்னும் சிலரும் சேர்ந்து சைவத்தின் உண்மைகளைத் திரிக்க எத்தனித்திருப்பது உலகத்தில் சிலருக்கு ஐயத்தைக் கொடுக்கக்கூடும். ஸ்ரீமான் சாம்பசிவம் பிள்ளையவர்கள் ஆராய்ச்சி நூலை வாசிப்பதனாலே அவ்வையங்கள் நீங்குமென்பது திண்ணம். இவ்வாராய்ச்சி நூல் சைவர்கள் ஒவ்வொருவரிடத்திலும் இருக்கவேண்டியது அவசியம். இத்தகைய ஆராய்ச்சி செய்வார் கிடைப்பது இக்காலத்தில் மிகவும் அருமை. பிள்ளையவர்களுக்கு இத்தமிழுலகம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றது.

---

## வித்துவப் பெரியாரபிப்பிராயம்

தமிழ்ச்சங்கப் பரீக்ஷகரும், யாழ்ப்பாணச் செந் ... க்கிராசனாதிபதியும், சைவகலாவிருத்திச் சங்க ... சைவசித்தாந்த சமாச நிரந்தர அக்கிராசனாதி ... பரிபாலன சபைத் தாபகரும், இந்துசாதனப் ... பத்திராதிபராயிருந்து சில வருடங்கள் சைவ ... க்கு ஏதுவாக மிகச்சிறப்புற நடாத்தினவரும், ... டன சபைத் தலைவரும், யாவராயினும் சைவ ... செய்யில் அவரை, நூல்வரம்பிகவாது சலிப் ... கண்டனஞ் செய்பவரும், நல்லூர்க் கைலாச ... கரயிற் றருமகர்த்தரும், சைவப் பிரசாரகரும் ... உற்பத்திக்கு வித்தாயுள்ளவரும், தமிழ் சமஸ் ... லீஷ் என்னும் முப்பாஷை விற்பனரும், ஸ்ரீலஸ்ரீ ... வலரவர்கள் தமையனார் புதல்வரும், அவர்கள் அவர்களுடைய பல சைவப் பிரகாச வித்தியா சாலைத் தருமபரிபாலகரும் ஆகிய,

### ஸ்ரீமத் கைலாசபிள்ளையவர்கள்

இவ்வுரை கண்டார்.

...நாள் முழுதும் சைவதூஷண பரிகாரஞ் செய்த ... சாக்கிச் சிவபுண்ணியத்திற் றலைப்பட்டுப் பரோப ... றந்தவரும், உண்மைச் சைவவித்துவான்களாலும் ... றராலும் மிகமதிப்புற்று விளங்குகின்றவரும் பன் ... யின் நுண்ணறிவுடையரும் ஆகிய ஸ்ரீமான் திரு. ... பிள்ளையவர்கள் இற்றைநாளிற் றுமியற்றிய "திரு ... விளக்க ஆராய்ச்சி" என்னும் அரியதொருநூலை ... தன்முன் மற்றைய சைவவித்துவான்களுடைய ... ங்களையும் அறிய விரும்பி அதிற்சில பிரதிகள் ... த்திற்கும் அனுப்பியிருக்கின்றார்கள். எனக்குக் ... ரதியைமுழுதும் கிரமமாக வாசிக்க எனக்குச் சம ... கவில்லை. வாசித்தபாகங்கள் ஒவ்வொன்றிலும் ... எழுதப்பட்டவைகள், ஸ்ரீ. வேதாசலம்பிள்ளை ... யை மறுத்து யானெழுதிய "தற்காலச்சமயநிலை ... பாகம்" "தென்றமிழ்த்தனிமாட்சி" முதலிய பத் ... நினைவுகூரச் செய்தன. யான் ஒருவிடயத்திற்கு ... ணங் காட்டினால் "ஆராய்ச்சி" காரர் ஒன்பது பிர ... ட்டியிருத்தல் எனக்கு மிகவும் சந்தோஷத்தை உண் ... அதனிற்க.

வேதாசலம்பிள்ளை ஸ்ரீ. கா. சுப்பிரமணியபிள்ளை மு ... ர் பிராமணர் மேற்கொண்ட பொறுமையினாலே ஏறக் ... பதினைந்து வருஷகாலமாகப் புதுக்கொள்கைகளும்

து அருத்தங்களும் புதுத்திருத்தங்களும் கற்பிக்கின்றுர்கள்.
வற்றுட்சில மாதிரிக்காக இங்கே யெடுத்துக்காட்டுகின்றேன்.

தொல்காப்பியருக்கு எங்களிலும்பார்க்க மிகச்சமீபகாலத்திருந்த இளம்பூரணர்முதலிய உரையாசிரியர்கள் சகலராலும் றவித்துவர்ன்களாலும் விலக்கப்படாத தொல்காப்பியச் சூத்திரங்கள் பல தங்கள் புதுக்கொள்கைகளுக்கு விரோதமாயிருத்தல் கண்டு, அவைகளெல்லாம் பிற்காலத்தாரால் அந்நூலில் இடையிடையே செருகப்பட்டன வென்று இவர்கள் சொல்லுகிறுர்கள். இவர்களுடைய கண்களுக்குத் தங்கள் கொள்கைக்கு மாருனவைகளெல்லாம் இடைச்செருகலாகவே தோன்றுவது வழக்கம்.

இனி, திருக்குறளில் ருசுo-ம் பாட்டை "ஆபயன் குன்றுமறுதொழிலோர் நூன்மறப்பர்" என்று உள்ளபடியே கொண்டு, பரிமேலழகர் மணக்குடவர் முதலிய உரையாசிரியர்களெல்லாம், ஆ என்பது பசு, அறுதொழிலோர் என்பது அந்தணர் என்றும் உரை எழுதியிருப்ப, இவர்கள், ஆம்பயன் ஆபயனென்ருயிற்று என்றும், அறுதொழிலோர் என்பது அறிதொழிலோர் என இருக்கவேண்டும் என்றும், இப்படியே இன்னும் பலவாகத் தங்கள் மனம்போனபடி திருத்தங்கள் செய்கிருர்கள். அதுநிற்க.

தமது பாண்டிநாடே ஆதிமனிதருக்கு உற்பத்தித்தானம் தமது நாட்டாரே ஆதி திராவிடர் என்று புகழுகிற சுப்பிரமணியபிள்ளை அந்தவகையினுலே ஆரியர்களும் தங்கள் வமிசத்தவராயிருக்க, ஆரியரென்ற பெயரைச் சொன்னுலும் வெருளுதற்கும் வெகுளுதற்கும் காரணம் என்னே? யெகோவா சிருட்டித்த ஆதாம் ஏவாளுடைய வமிசத்தாரே ஆரியரென்று அந்த யேகோவாவினுடைய சிருட்டியை இவர் ஸ்திரப்படுத்துகிருர்கள் போலும்.

தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருமந்திரம், திருவிசைப்பா, பதினொராந் திருமுறை, பெரிய புராணம், கந்தபுராணம், சிவஞானசித்தியார், சிவதருமோத்தரம், ஔவையாருடைய நூல்கள் முதலிய அளவிறந்த சைவ நூல்களும், தொல்காப்பியர், கொடுஞ்செங்கண்ணனுர், வண்ணக்கஞ்சாத்தனுர் முதலிய சங்கப்புலவர்களும் சொல்லிய மறை வேதம் என்னுஞ் சொற்கள் ஆரியத்திலுள்ள வேதத்தையே குறிக்கின்றன வென்பது நிச்சயம்.

தென்னுட்டிலிருந்த சைவர், வைஷ்ணவர், சமணர், பௌத்தர், ஆகிய சகலரும் தமிழர்களாகவும், தமிழில் வேதம் இருந்தது, அது கடலாற் கொள்ளப்பட்டுப் போயிற்று, தமிழ் ஆரி

...ததது, தமிழ் ஆரியத்தினும் முந்தியது என்னும் ...வர்களுக்கெல்லாம் இல்லாமற் போக, இந்நாட் ...ள்ளே சிலருக்கு மாத்திரம் உண்டாயது பே

...கள் ஸ்மார்த்தர்கள் மாத்துவர்கள் தங்கள் சம ...பிக்க எடுத்தாளும் பிரமாணங்கள் ஆரியத்தி ... உபநிடதம் புராணம் இதிகாச முதலியனவே. அவர்கள் பாராயணம் பண்ணுவது ஆரியத்தி ...மாயணத்துச் சுந்தரகாண்டமே. கம்பர் தமது ...ணத்திற் பலவிடங்களிலும் இராமருடைய பெய ...ச் சொல்லும் "ஆரியன்" என்னுஞ் சொல்லை ...றிவுடையோன் என்னும் பொருளிலன்றி மிலேச் ... பொருளில் எடுக்கவில்லை.

...யோர் செஞ்சொல் வேள்விப் புகையும்" என்றார் ...ாழ்வார்.

...ரிய முழங்கி யார்ப்ப வீண்டெரி திகழ வேதந்— ...பலாசிற் செய்த துடுப்பினெய் சொரிந்து வேட்ப— ...லச நன்னீர் சொரிந்தனன் வீர னேற்றான்" என் ...நூலாகிய சீவகசிந்தாமணி நூலுடையார். சைன ...ய மந்திரமாகிய அஸ்தி நாஸ்தி என்பவைகளும் ...ற்களே யாகும்.

...ங் கைசந் தங்கா லெண்கண்—டெற்றெ னிருத்தஞ் ...கழுக்குற்ற வியாகர ணமுகம் பெற்றுச்—சார்பிற் ...வாரண வேதக்—காதியந்தமில்லை யதுவே நெறி ...வேதிய னுரையின் விதியுங் கேட்டு"

...ர் பௌத்தநூலாகிய மணிமேகலை யென்னும் காவிய ...ர்.

...படியே அவர்கள் நூல்களிலே பலப்பல வாக்கியங்கள் ...காட்டலாம். இங்கே சொல்லிய மறை வேதம் என் ...ற்கள் தமிழ் வேதத்தை உணர்த்துமென்று இவர்கள் ...முடியுமா!

...வேதாசலம் பிள்ளை கொண்ட வேதமாகிய சிவஞான ...ில் "வேள்விப்புகை" "எரி" "பலாசிற் செய்த ... "நெய்" "கற்பம்" முதலியவைகளைக் கை முதலிய ...க்கொண்ட "ஆரண வேதம்" என்பன எங்கேயாவது ...ப்படவில்லையே.

... கா. சுப்பிரமணிய பிள்ளை வேதாசலம் பிள்ளைக்கு ...டுச் சிவஞானபோத முதலியவற்றைத் தமிழ் வேதம்

என்று கொள்ளாது, அது இவற்றிற்கு வேறுயுள்ளது; ஆழி வாயின் அகப்பட்டுவிட்டது என்கின்றூர்.

எனவே, இவ்விருவரும் கூறும் வேதங்கட்கும் வேறுய்க் கற்ப முதலிய அங்கங்களைக் கை முதலிய அவயவங்களாகக் கொண்டு ஆழிவாய்ப் பட்டழியாமல் இன்று நின்று நிலவும் ஆரிய வேதமே மேலே எடுத்துக் காட்டிய திருவாய் மொழி சீவகசிந்தாமணி மணிமேகலை என்னும் நூல்களிற் கூறப்பட்ட தென்பது பார்ப்பார்க்கும் கேட்பார்க்கும் சொல்வார்க்கும் பட்டப்பகல்போல வெட்டவெளியாகும்.

வேள்விகள் ஆரியர்க்கே உரியன; ஏனையோர்களுக்கு அல்ல என்று சொல்லும் இவர்கள், பல ஆயிரம் வருஷங் களுக்கு முன்னே, வைஷ்ணவர் சமணர் பௌத்தர் என்னும் சமயத்தோர் ஏனையோர்க்கும் உரியன என்று கூறியிருக்குங் கூற்றுக்களுக்கு யாது சொல்வர்?

இனி, வைஷ்ணவர் முதலியோர் காரியம் இவ்வாறிருக்க சைவத் தமிழருள்ளே யாழ்ப்பாணத்தார் ஒருவர், "நீரிறையே யுண்க" "நெருப்பிறையே யுண்க" என்பன முதலிய தமிழ் மந்திரங்கள் இப்பொழுது உண்டாக்குகின்றூரென அறிகிறேன். இம் மந்திரங்களைத்தான் முன்னிருந்த ஆரியர்கள் "வருணய சுவாகா" "அக்நயேசுவாகா" என்பனவாக மொழிபெயர்த்துக் கொண்டார்கள் என்றும், இதுபோலவே ஆதிதொடங்கித் தமிழிலிருந்த மறையை ஆரியத்தில் மொழிபெயர்த்துக் கொண் டார்கள் என்றும் மற்றை வருஷம் இப்புதுக் கட்சியார் சொல் லப் போகிறூர்கள். எச்சரிக்கை. இவர்களுடைய கொள்கை களைப் பேரறிவாளர் பொருட் படுத்தார்கள் என்பது நிச்சயம்.

மகா வித்துவானும் சுத்தாத்துவித சைவ சித்தாந்தியும் சைவ தூஷண நிராகரண திலகருமாகிய ஸ்ரீமத் திரு. மா. சாம்ப சிவ பிள்ளையவர்கள், ஸ்ரீ வேதாசலம் பிள்ளை ஸ்ரீ கா. சுப்பிர மணிய பிள்ளை முதலானவர்களுடைய கொள்கைகளைப் பழைய உண்மை நூல்களையே வழியாகக் கொண்டு கண்டித்தியற்றிய "திருநான்மறைவிளக்க ஆராய்ச்சி" என்னும் இந்தச் சிறந்த நூலானது சைவத் தமிழ் மக்களெல்லாரும் பழைய நூற் கொள்கையிலே மிக்க விசுவாசத்தைத் தரவல்லதாகலால் அவர் கடந் தலைமேற்கொள்ளத் தக்கதொரு ஞானுபரண நூலாகும்.

இத்தகைய பெருமை வாய்ந்ததொரு அரிய நூலை இயற் றித் தமிழ் மக்கள் உண்மை அறிந்து உய்யச் செய்த ஞான தான வள்ளலாகிய ஆக்கியோருக்குச் சைவர் செய்யுங் கை மாறு கண்டிலன். எனது குல தெய்வமாகிய கைலாச பிள்ளை

ரு நீண்ட ஆயுளைக் கொடுத்து இதுபோலும் பல இயற்றுவித்துச் சைவசமயிகட்கு நன்மை செய் னம் அவர் மலரடியை எனது சிரமலராகச் க்கின்றேன்.

---

தாலூகா பூவிழுந்தநல்லூர் மிராசுதாரவர்களும் வகார்காத்தவேளாள குலதிலகரவர்களும் திருச் ஜில்லா டிஸ்திரிகட்டு ரிஜிஸ்டரரவர்களுமாகிய சுப்பிரமணியபிள்ளை யவர்கள் B. A. எழுதியது.

ர் திரு. மா. சாம்பசிவம்பிள்ளை யவர்கள் அனுப் றை விளக்க ஆராய்ச்சிப் புத்தகத்தைப் படித் கள் அரசாங்கவேலையிலிருந்து உபகாரச் சம்பளம் ருடங்கட்கு மேலாகியும், தேக சௌக்கியத்தைப் ாதது தமிழ்த்தாயின் உண்மைத்தொண்டில் ஈடு ரிய ஆராய்ச்சியை எழுதி முடித்திருப்பது மிகவும் தே. தமிழ்வேதமாகிய தேவார திருவாசகங்களி போதம் முதலிய தமிழ்ஞான சாத்திரங்களிலும் ள்ள ஒப்பற்ற தேர்ச்சியானது, இவ்வாராய்ச்சி வெளிவந்திருக்கின்றது. இவ்வாராய்ச்சியிற் கண்ட விஷயமும் தக்க நூற்பிரமாணங்களாலே தாபிக்கப் றதென்பது மறுக்கத்தக்கதல்ல. தமிழில் அதிகப் ாதவர்களும் எளிதிற் படித்து உணருமாறு, இப் கவும் தெளிவான நடையிலெழுதப்பட்டிருக்கின்ற டத்தக்கதே. இவ்வாராய்ச்சியால் தமிழ் மக்களும், சைவர்களும், பிள்ளை யவர்களுக்கு மிகவும் கடமைப் ளர்களென்பது சொல்லாமலே விளங்கும். அவர் ர்க்காயுளையும் இதுபோன்ற ஆராய்ச்சிகளைச் செய் பொருட்டு இன்றியமையாத தேகபலத்தையும் மாறு எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்

---

நெல்வேலி ஜில்லா, சேரன்மாதேவி தாலூகா போர்டு ண்டு அவர்களும், திருநெல்வேலி ஜில்லா டிஸ்திரி ர்டு மெம்பரவர்களும், ஜில்லா Educational Board அவர்களும், சிவதேவஸ்தான கமிட்டிமெம்பர் அவர் ஸ்டிரிகட் கோர்டுவக்கீல் அவர்களும் "சிவஞானபோத ச" மாதிய நூல்களின் ஆசிரியரவர்களும், பல சைவ

சபைகளில் தலைமைபூண்டும், சொற்பொழிவு நிகழ்த்தியும் வருபவர்களுமான அம்பா சமுத்திரம்
ஸ்ரீமத் V. P. காந்திமதிநாத பிள்ளையவர்கள் B.A.,
எழுதியது.

இவ்வாராய்ச்சிக்கு இலக்காய் நிற்கும் "திருநான்மறை விளக்கம்," செந்தமிழ்ச் செல்வி 1-வது சிலம்பின் பல இதழ்களில் வெளிவந்துள்ளது. இவ்வியாசத்திற் சில புதிய கொள்கைகள் காணப்படுகின்றன. வடமொழி மறைகள் சைவ மறைகள் அல்லவென்றும், வடமொழி ஆகமங்கள் சைவ முதல் நூல்கள் அல்லவென்றும், இம்மறைகட்கும் ஆகமங்கட்கும் வேறாய்த் தமிழ் மறைகளும், தமிழ் ஆகமங்களும் பண்டைக் காலத்தில் இருந்தனவென்றும், இத்தமிழ்மறைகளும் தமிழ் ஆகமங்களும் இருந்தன வென்பதைத் தேவார திருவாசக முதலிய சைவத்திருமுறைகளும், புறநானூறு, தொல் காப்பியம் முதலிய பண்டைத் தமிழ்நூல்களும் விளக்குகின்றன வென்றும், இவைபோல்வன பிறவும், இத்திருநான்மறை விளக்கத்தில் எழுதப்பட்டிருக்கின்றன. இவ்வடமொழி மறைகட்கும் வடமொழி ஆகமங்கட்கும் வேறாய்த் தமிழ்மறைகளும் தமிழ் ஆகமங்களும் இருந்தன வென்பதில், எவர்க்கும் எவ்வித வருத்தமுமில்லை. இதனால் இவ்வடமொழி மறைகட்கேனும் வடமொழி ஆகமங்கட்கேனும் எவ்வித இழுக்கும் ஏற்படக் காரணமில்லை. அப்படியே சைவர் அனைவராலும் போற்றப்பட்டு வரும் சைவத் திருமுறைகட்கு வேறாய்த் தமிழ் மறைகள் இருந்தன வென்பதிலும் எவர்க்கும் எவ்வித வருத்தமுமில்லை. பண்டைக்காலத்திலும் தமிழ் மறைகள் இருந்தன வென்பது தமிழ் மக்கட்குப் பெருஞ்சிறப்பே. ஆனால் "மறை," "வேதம்" என்னும் சொற்கள் இப்போதுள்ள வடமொழி மறையையாவது தமிழ் மறையையாவது குறிக்காது, பண்டைக் காலத்தில் இருந்து மறைந்து போனதாகச் சொல்லப்படும் தமிழ் மறையையே குறிக்குமென்றும், பண்டைத் தமிழ்நூல்களிலும் நம் சைவத்திருமுறைகளிலும் வழங்கப்படும் இச் சொற்களும் இப் பண்டைத் தமிழ் மறையையே குறிக்குமென்றும், இந் நான்மறைவிளக்க வியாசத்திற் கண்டிருப்பதே, சைவமக்கட்கும் தமிழ் மக்கட்கும் மிக வருத்தத்தை உண்டாக்கியது. இவ்வியாசத்தில் சைவத்திருமுறைகள் மறைகள் அல்ல வென்று கழிக்கப்படவில்லையாயினும், இத்திருமுறைகளிற் காணப்படும் "மறை," "வேதம்" என்னும் சொற்கள் பண்டைத் தமிழ்மறையையே குறிக்குமென்பதால், இப்போதுள்ள வடமொழிமறைகள் மாத்திரமன்றி நம் சைவத் தமிழ்த் திருமுறை

என்றார். இங்ஙனே கூறியவாற்றான் வதஞ் செய்தவர் மன்மதனும், பிரமா இந்திரன் முதலிய தேவரும் என்பதூஉம், வதம் மன்மதன் பூம்பாணஞ் செலுத்தி யோகத்தை நிலைகுலைக்க முயன்றதும், தேவர் அங்ஙனஞ் செய்யும்படி அவனை ஏவியதும் என்பதூஉம், இன்பம், இரதி பொருட்டு இறந்தமதனை எழுப்பியதும் அரசு கொடுத்ததும், தேவர் பொருட்டு அசுரரைக் கொன்றதும் அவரவர் பதமும் அரசு முதலியன கொடுத்ததும் என்பதூஉம் போந்தவாறு காண்க.

இங்ஙனம் மெய்ப்பொருள் காணப்படுதலால், வேதஞ் செய்தவர் எனப் பிரித்ததும் பொருந்தாப் பொருள் கோடலும் பிழையேயாம்.

தமிழில் நால்வர் தமிழ்மக்கள் வேதஞ் செய்தார் அதனைக் கடல்கொண்டு போயதென்று கூறின் இழுக்கென்னை யெனின், அது, மேலே பல்லாற்றானும் விரித்துக் கூறியிருத்தலானும், வேத வழக்கோடும் ஆகம வழக்கோடும் மாறுகொள்வார் இக்காலத் தங்ஙனங் கூறினும் இறந்தகாலத்துப் பிறபாசண்டரும், மூவகைச் சங்கத்து நான்குவருணத் தொடர்பட்ட சான்றோரும், சங்ககாலத்துக்குப் பிற்பட்ட காலத்துத் திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் முதலிய சைவசமய ஆசாரியரும், மெய்கண்ட தேவர் முதலிய சந்தானாசாரியரும், அவர்க்குப் பிற்பட்ட காலத்துச் சைவமடத்துப் பெரியாரும் அங்ஙனம் கூறினாரில்லை யென்பது. என்னை? அவர் மெய்ம்மை கடைப்பிடித்த விழுமியோராகலானும், வீடு காதலித்த சேடராகலானும், பிறரும் அங்ஙனங் கூறிக் கரிபோகின்றாராகலானு மென்க.

இன்னும் ஆழ்வாராதிய பெரியாரும், அவர்கள் காலத்துக்குப் பிற்பட்ட இராமாநுஜாசாரியரும், மத்துவாசாரியரும், அவர்கட்குப் பிற்பட்ட வைணவமடத்துப் பெரியாரும், மாத்துவமடத்துப் பெரியாரும் தாந்தாம் இயற்றியருளிய திருவாய்மொழியினும், பாஷ்யத்தினும், பிறவற்றினும் அங்ஙனம் கூறாமையும் உற்றுநோக்கற்பாலது.

மடங்களிலெழுப்பு நோக்கியும், தமிழ்வேத ஒப்பு நோக்கியும் இவர் சிறப்புத் தோன்ற வேறு பிரித்துக் கிளந்து கூறினரா.

கந்தபுராணத்துந் திருமுறையினும் சனகாதி நால்வரைப் பற்றிப் பேசியிருக்கின்றனவன்றி நால்வர் தமிழ்மக்களைப்பற்றிப் பேசப்படவில்லை. அவர்கள் "விளக்க" முடையாரால் சிருட்டிக்கப்பட்டு எவர்க்கும் எக்காலத்தும் தோன்றாத அற்புத முடையர் போலும். அதனாற்றான் நூல்கள் அவரைப்பற்று

யாதும் பேசாதொழிந்தன. "விளக்க" முடையார் இவ
சிருட்டித்தமையால் பிரமா நாணமும் மகிழ்ச்சியும் கவ
ஒருங்கடைவர்; என்னை? தஞ்சிருட்டி கட்புலப்படுதலை
இவர் சிருட்டி கட்புலப்படாமையாலும், தமக்கு அதிக
யின்மையாலும், இவர் சிருட்டிவிசேட நோக்கிச் சிவ
மான் சிருட்டித்தொழின் முழுதும் இவர்க்கே கொடுத்து
வாரோ என்னும் ஐயப்பாட்டினாலு மென்க. அது நிற்க.

பிறிதொன்று:—"எல்லாவற்றான் முந்திறந்த ... அ
நூல்களையும் தென்றமிழ் நாட்டு மகேந்திரமலையில்
பெருமான் அருளியதாகத் தெரிதலாலும்" என்றார்

"விளக்க" முடையார்க்கு அங்ஙனம் தெரியவந்
எங்ஙனமெனை ஆராய்வார்க்கு "மன்னு மாமலை மகேந்
மதனிற்—சொன்ன வாகமந் தோற்றுவித் தருளியும்" எ
தற்குத் திருவாசக வுரையாசிரியர்கள் எழுதிய உரைகளை
திரித்துணர்ந்தமைபற்றியே என்பது தெற்றெனப் புலப்படு

தென்றமிழ்நாட்டு மகேந்திரமலையில் சிவபிரான்
மங்களை அருளிச்செய்தாரென அவ்வுரையாசிரியர்கள் யாக
மெழுதவில்லையென்ப தாண்டுக் காண்க. அது நிற்க.

மகேந்திர மெனப் பெயரிய மலையொன்றுளதென சிவ
மோத்தரத்தும், கந்தபுராணத்தும் கூறப்படினும், அது, ஒ
சிவஸ்தலமென்றும், அதன்கண் சிவபிரானுக்குத் திருக்கோயி
உண்டென்றும் அவற்றுட் கூறப்படவில்லை. மற்றென்னை கூ
பட்டவாறெனின், ஏழுமலைகளைச் சொல்லுமிடத்து இதுவு
அவற்று ளொன்றெனச்சொல்லப்பட்ட அத்துணையா மெ
றறிக.

இங்ஙன மிருத்தலால் திருவாசகத்தும் திருவிளையா
வகத்தும் கூறப்பட்ட மகேந்திரம் மேலே சுட்டிய மகேந்தி
மன்று; "திருநான்மறைவிளக்க வாராய்ச்சி" நூலாசிரிய
பெரியார் அதனகத்துக் கூறியவண்ணம் திருக்கைலாசமலையே
யென்று பலப்பல ஏதுக்களால் நன்கு விளங்குகின்றது. அவ
றைக் கூறுதும்; கடைப்பிடிக்க.

பாரதத்தில், "எம்பிரா னிமையவன் றந்த—புரிகுழ லொருமை
வைகும் புண்ணியப் பொருப்பைச் சேர்ந்தான்"

"உருகிய வெள்ளி போல வுயர்முழை
தோறும் வீழும்
அருவிநீர் புனிதன் வேணி யமருமா
நதியிற் றோன்ற

என்னையெனின், அது ஊழிக்காலத்துப்பிரளய வெள்ளத்தழுந் தாது அதன் மேல்வளர்ந் தோங்குதலும், அழியாதிருத்தலும், பதமுத்தித் தானமாயிருத்தலும் பக்குவாரயகணங்கட்குத் தக்க வின்பங் கொடுத்துப் பரமசிவன் ஸ்ரீ கண்ட சரீரசரீரியா யெழுந்தருளியிருக்கும் செம்பொற்றிருக் கோயிலைத்தன்னகத் துக் கொண்டிருத்தலும் முதலியவன.

திருவாதவூரடிகளும் இக்கருத்துப்பற்றியே,

“ தூவெள்ளை நீறணி யெம்பெருமான்
சோதிமகேந்திர நாதன் வந்து
தேவர்தொழும்பதம் வைத்தவீசன் ”

என்று திருவாசகத்துள் அருளிச்செய்தார். ஆண்டவன் திருக்கைலையினின்று ஆசாரியமூர்த்தமா யெழுந்தருளி வந் தமையை அடிக்கடி அடிகள் கூறுதலைத் திருவாசகத்துட் பரக் கக்காணலாம். ஈண்டுஞ்சோதி யென்ற அடைதானே மகேந்தி ரம் கைலை யென்பதை நன்கு விளக்கிற்று.

இங்ஙனமே ஓரோரிடத்துப் பொதுவாகக் கூறிப் போந்த வற்றை அடைமுதலியவற்றாற் சிறப்பாக உணர்த்திப் போதல் ஆசிரியர் வழக்காறாதலை நல்லாசிரியரிடத்துப் பயின்ற இலக்கிய விலக்கணப்பயிற்சியுடையார் நன்கறிவர்.

கைலைக்கு நொடித்தான்மலை யென்னும் ஒருபெயர் கார ணத்தா லெய்தியது போல,

“ ஊழிதொறூழி முற்று முயர்பொன் னொடித்தான் மலை ”

“ நிலவு மெண்ணி றலங்களு நீடொளி
இலகு தண்டளி ராக வெழுந்ததோர்
உலக மென்னு மொளிமணி வல்லிமேல்
மலரும் வெண்மலர் போல்வது மால்வரை ”

என்றாற் றொடக்கத்தனவாக வெண்ணிறந்த பெருமை இலக்கியங்களுட் கூறப்படலால், அப்பெருமை காரணமாக மகேந்திரமெனவும் ஒரு பெயர் பண்பாகு பெயராய்ப் போந்த வாறுகண்டுகொள்க. மகா — பெருமை, மிகுதி முதலியவற்றை விளக்கும் உபசர்க்கம். இந்திரம் — மேன்மை.

இன்னும் அடிகள்,

"வேடுரு வாகி மகேந்திரத்து
மிகுகுறை வானவர் வந்து தன்னைத்
தேட விருந்த சிவபெருமான்
சிந்தனை செய்தடி யோங்க ளுய்ய
ஆட லமர்ந்த பரிமா வேறி
யையன் பெருந்துறை யாதி யந்நாள்
ஏடர்களை யெங்கு மாண்டு கொண்ட
வியல்பறி வாரெம் பிரானா வாரே"

என்னுந் திருவாசகத்தானும் மகேந்திரம் கைலை [illegible] பதை நன்கு விளக்கியவாறு காண்க. என்னை? [illegible] குறைநேரின் கைலைக்குவந்து சிவபிரானைத் தரிசித்துக் [illegible] குறை கிளந்து அநுக்கிரகம் பெறுதல் இயல்பு. அதற்க [illegible] பொருட்டு வேடுருக்கொண்டு கையிலையிலிருக்க தொன்று 'மிகு [illegible] குறை வானவர்' வந்து, காளகண்டம் மான்மழுச் ச [illegible] புயங்களோடு சீகண்ட சரீரியாய் என்றும்போல இறைவரிரு [illegible] காணாமையின் எம்பெருமான் எங்கே போயினாரோவெ [illegible] றெண்ணித் தேடும்படி யிருந்தமையால் என்க. அக்கா [illegible] பதியே தமக்காகப் பாண்டியனுக்குப் பரிமாக் கொணர்க் [illegible] ரென்பார் தேடவிருந்த சிவபெருமான், ஐயன், பெருந்துறை [illegible] ஆகி அடியேங்களுய்யச் சிந்தனை செய்து அந்நாள் ஆடலமர் [illegible] பரிமா ஏறி ஏடர்களை எங்கும் ஆண்டு கொண்ட என்ற [illegible] ஏடர்-அன்பர். தம்மோடு அரிமர்த்தனபாண்டியன், வந் [illegible] யாகிய பிட்டுவாணிச்சி என்னும் இருவரையுஞ் சேர்த்து ஏட [illegible] களை யெனப் பன்மையாற் கூறினரென் றுணர்க.

அஃதற்றாக,

"மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன வாகமந் தோற்றுவித் தருளியும்"

என்பதன் பொருளுணர்ந்து முகத்தானும் மகேந்திரம் [illegible] கைலையெனத் தேற்றல் வேண்டுமென்பிராயிற் கூறுதும்:—

ஒருகாலத்துத் தேவர்கள் சிவபிரானை நோக்கித் தொழுது துதிக்க, அதற்கு மகிழ்ந்து அவர் பிரசன்னமாக, அவர்கள் அன்போடவ்வாண்டவனைப் பூசனைபுரிதல் வேண்டுமென்ன, பெருமான் சூரியமண்டலத்தூடு விளங்கும் காண்முகத் தோன்ற, அத்தேவர் விதிப்படி பூசைபுரிந்தனர். அது செய் யத் திருவுள மகிழ்ந்து தேவர்கட்கு ஆகமம் இருபத்தெட்டை யும் கொடுத்து மறைந்தனர். கொடுத்த வாகமம் பலநெடுங் காலங்கழிய இறந்துபோதலும் உமாதேவியார் அவற்றை மீள

இனி அத்திருவாசக அடிகட்குப் பொருள் கோண்
யாமாறு:—சொன்ன ஆகமம்— ("மாய்ந்த வாகமமெ
எடுத்து நடத்திட வேண்டுமென்று" இறைவி) விண்ண
செய்யப்பெற்ற ஆகமங்களெல்லாவற்றையும், — மன்னு
ஊழிக்காலத்தும் அழியாத நிலைபெறும்,—மாமலை மகேந்
அதனில்—கைலாசமலையாகிய மகேந்திரமலையில்,—தோ
வித்தருளியும்—வெளிப்படுத்தியருளியும் என்க.

கைலாசமலை,

"கீணி லாவுறு முலகெலா நீங்கியே மேற்போய்ச்
சேணி லாவுறு பதமெலா முருவியே சென்று
மாணி லாவுறு மண்டத்தி னடிமுடி மருவத்
தாணு வாயுல கிறுதியி னிற்பதச் சயிலம்."

என்ப வாகலின், மாமலை யெனப்பட்டது. உலகிலுள்
மலைகளெல்லாவற்றுள்ளும் பெரியமலை என்றபடி. மா
மகேந்திரம் என்பது இருபெயரொட்டுப்பண்புத்தொ
"மாமலையின் றென்பால்" என்புழியும், மாமலை கைலாசமென
பட்டது காண்க.

இன்னும், கீர்த்தித்திருவகவலின், "தில்லை மூதூ ராடி
திருவடி" என்று ஆரம்பித்து. அடுத்தலை மகேந்திரமாக
கூறினர். முடிக்கும் பொழுதும் அம்முறையே "பொலிதர
புலியூர்ப் புக்கினி தருளினன்" எனவும், "ஒலிதரு கயி
யுயர்கிழ வோனே" எனவும் கூறித் தில்லைக்கும் புலியூர்க்கு
மகேந்திரத்திற்கும் கைலைக்கும் சம்பந்தந் தெரித்து இரண்டு
ஒன்றென விளங்கவைத்த வாறுங் கண்டுகொள்க.

இன்னும் இவ்வகவலுள் "மந்திர மாமலை மகேந்திர வெ
பன்" எனவும்போற்றித்திருவகவலுள்" மந்திர மாமலை மேயா
போற்றி" எனவுங் கூறி மகேந்திரங் கைலாசமென விளக்கின
என்னை?

மந்திரம்—கோயில். கைலாசமலையில் நவரத்தினகசிதமான
செம்பொற்றிருக் கோயி லொன்று தேவரு மருளுமாறு பொ
கொடுள்ளது. அக்கோயில் பொருந்திய கைலாசம் என்பது
பொருளாகலான் என்க. அதனை,

"அன்னதோர் கைலை நாப்ப ணம்பொனின்
சுடர்மேல் கொண்ட
நன்னெடுஞ் சிமயத் தோங்க னவையொரீஇ
நண்ணிற் றென்னக்

கன்னியங் காப்பு மேவிக் கதிர்மணிக்
கற்றை சுற்றிப்
பொன்னெடுங் கோயி லொன்று பொலிவொடும்
பொருந்திற் றன்றே"

"திணிகதி ராரந் தன்னிற் சிறந்தவச்
சிரத்திற் செக்கர்
மணிதனின் முழுநீ லத்தின் மற்றைய
வெறுக்கை தன்னிற்
பணிபட வருளாற் றானே பயிற்றிடு
சிகர மாதி
அணியினுக் கணியாய் வைகு மாலயஞ்
சூழ லெங்கும்"

"என்றுமீ றென்ப தின்றி யிருந்திடுங்
கைலை வெற்பிற்
பொன்றிகழ் நகரந் தன்னுட் பொருவிலாக்
கோபு ரமும்
துன்றிய தன்மைத் தென்னத் தூமணிக்
கதிர்கள் சூழ
மன்றம ருறையு ளொன்று வனப்பொடு
வைகிற் றன்றே"

ன்னுங் கந்த புராணத் திருவிருத்தங்களாற் றேர்க.

மந்திரம் செம்பொற்றிருக்கோயில். இனி மந்திரமெனப் பாருள் கொண்டால் அது ஆகுபெயராய்ச் சாமானியசுருதி ாபல சுருதிகளை யுணர்த்தி மெனக்கொண்டு அச்சுருதிகளை வளிப்படுத்துதற்கு முக்கிய ஸ்தானமாகிய கைலை என்று ம்.

இனி, சிவபெருமான் சதாசிவதத்துவ புவனத்திருந்து த்தி சதாசிவன் முதலாயினோர்க்குச் சொல்லியருளிய ஆகமங் ளைத் திருநந்திதேவர் சனகாதி முனிவர் பொருட்டு மகேந் மாகிய கைலையில் வெளிப்படுத்தினார் என்றலுமொன்று. து,

"சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவம்
உவமா மகேசர் ருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மிற்றாம் பெற்ற
நவவா கமமெங்க ணந்திபெற் றானே"

என்னுந் திருமந்திரத்தானு முணர்க.

அஃதொக்குமன்றாயினும்,

எவ்வெம் முகத்தில் எவ்வெவ்வாகமங்கள் தோன்றினவோ அவ்வம் முகத்தால் அத்தோற்ற முறைப்படி அவ்வவ்வாகமங்களை உபதேசித்தார் என்பது விளக்கிய உற்றவைம் முகங்களாற் பணித்தருளியும் என்றார்.

ஆலவாயடிகள் இறைவியை நோக்கி வலைஞர் மகளாகப் போந்திரு; நாம் வந்து வதுவை அயர்ந்து வருகுதுமெனப் பண்டு வழங்கிய திருவாக் கொருவாதவண்ணம் ஓர் வலைஞராய் வலைச்சேரி வந்தாராக, அவர்வடிவழகு கண்ட சேர்ப்பன் 'நம்பிநீ யாரை யென்ன'' அதற்கவர் "தனிவலையுழவனல்ல** மைந்தன் யானென்ன"

"தொண்டுறை மனத்துக் கானற் றுறைமக னோகே யிந்தத்
தண்டுறை யிடத்தோர் வன்மீன் றழலெனக் காந்து சீற்றங்
கொண்டுறை கின்றதைய குறித்தது பிடித்தி யேலென்
வண்டமர் கோதை மாதை மணஞ்செய்து தருவ லென்றான்"

ஆகலான், அதற்கியையக் கேவேடராகி மாவேட்டு ஆகிய களிறது படுத்து என்றருளிற் றடிகள். செய்யுளாதலின் றை பிறழ்த்திக் கூறிற்று.

சுறவிடத்து வாங்கிய ஆகமங்களை உத்தரகோசமங்கையில் பதேசித்தார் என்னும் புராணவசனத்தோடு கைலையில் உபதேசித்தார் என்றல் மறுதலைப்படுகின்றதே யெனின், அற்ன்று; என்னை? உத்தரகோசமங்கையில் ஒரு முகத்தோருந்து உபதேசித்த வாகமங்களையே ஐம்முகத்தோடிருந்து தோற்ற முறைப்படி உபதேசித்தருளல் வேண்டுமென்றமை ரப்ப இறைவன் அங்ஙனஞ் செய்தான் என்பது,

வெள்ளி மால்வரைக் கைலையில் வீற்றிருந் தருளித்
துன்று வார்புனல் வேணியா ரருள்செயத் தொழுது
தென்று வாய்மையி னாகமத் திறனெலாந் தெரிய
உன்ன வாறுகேட் டருளின ளுலகையா ளுடையாள்"

என்னும் பெரியபுராணத்தால் நன்கு விளங்கக் கிடத்தலான்க.

இன்னும் சிவபெருமான் வேதாகமங்களைப் பக்குவராகிய காதிமுனிவர்க்கும் பிறர்க்கும் வேண்டிய வேண்டிய வெல்லாம் உபதேசித்தற்கு முக்கியஸ்தானமாகக் கொண்டு ம்பி எழுந்தருளியிருக்கும் திவ்விய ஸ்தலம் திருக்கைலாச யேயாமென்பது,

"இமையகிரி வடகுணபா லிமையவர்க டொழுதேத்த
உமையுடனே பசுபதிதா னுறைவனென்று மக்கிரியை
தமையுணர்ந்த தபோதனருந் தக்குமாச் சயிலத்தி
கமையுடையா ரதன்பெயரைக் கைலையெனக் கூற

"ஆகமங்க ளனைத்தினையு மருமறைக ளொருநான்கு
மோகமற முனிவர்க்கு மொழிந்தருள மொழிந்தனை
மாகருமோ மாலயனு மலர்தூவித் தலைவணங்க
வகனிறை யதன்மிசையு மிருந்தனிருப் பினையளித்த

என்னுஞ் சிவதருமோத்தரத் திருவிருத்தங்களானு

பசுபதி யுறைவ னென்றது உமையுடனே பசு
னுறைவன் எனவும், மாகரும் மாலயனும் மலர்தூவி வ
இருப்பன் எனவும் உடன் புணர்த்திக் கூறினமையின் ம
மாகர், மால், அயன் முதலாயினோர்க்கும் ஒவ்வோர் காலம்
வேதாகமங்களை ஒவ்வோர் காலத்து ஆண்டே உபதேசி
என்பது செவ்விதிற் றெரிந்து கொள்க.

இங்கே எடுத்துக் காட்டிய அதிப்பிரபலப்பிரமா
களாலே, மகேந்திரங் கைலாசமலைதான் என்பது நி
பட்டது; படவே, ம-ா-ா-ஸ்ரீ, சுப்பிரமணியபிள்ளையவ
தமிழ்நாட்டுட்பட்ட மகேந்திரமலையில் சிவபிரான் ஆகமங்க
தமிழிற் கூறியருளினர் என்னுங் கற்பனை கழிக்கப் பு
லும், கானகத்துப்புலம்பலு மாயவாறு கண்டுகொள்க.

நிலவுலகத் துயிரோம்பு நீதிமன்னன் இவையிவை செ
லாம் இவையிவை செய்யலாகா வென மக்கட்குத் தெரி
நீதிநூலை அவர்கட்குக் கொடுத்து, அதின்படி ஒழுகுவோர்
நன்மையும் ஒழுகாதார்க்குத் தண்டமுஞ் செய்து காப்ப
அதுபோல, ஈரேழு பதினான்குலகிற்கும் இறைவராகிய நட
வள்ளலும் விதி விலக்காகிய புண்ணிய பாவங்களைத் தெரி
முதனூலாகிய வேதாகமங்களைத் தேவர் மக்கள் முதலியோ
குக் கொடுத்து அவற்றின்படி ஒழுகுபவர்க்கு இன்ப
ஒழுகாதவர்களுக்குத் துன்பமும் கொடுத்து ஓம்புவார், அ

"ஆணையா லவனி மன்ன னருமறை முறைசெய் யாரை
ஆணையிற் றண்டஞ் செய்து மருஞ்சிறை யிட்டும் வைப்ப
ஆணையின் வழிசெல் வோருக் கரும்பதி செல்வ நல்கி
ஆணையும் வைப்ப னெங்கு மாணையே யாணையே காண்

"மறைகளீ சன்சொ லச்சொல் வழிவாரா
வுயிரை வைக்கும்
சிறைகண்மா நிரய மிட்ட பணிசெய்வோர்
செல்வத் தோடும்
உறையுமா பதிக ளும்ப ருலகங்கள்
யோனிக் கெல்லாம்
இறைவனா ணையினா லின்பத் துன்பங்க
ளியைவ தாகும்"

ன்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தங்களினா லறிக.

இவ்வாறு அரசன் முறையின் வைத்து இறைவன் முறை ணர்த்திய சித்தாந்த சாத்திரத்தைச் சிறிதுமோராது, சைவ மயிகளாகிய நாமெல்லாம், இறைவன் நம் பொருட்டிரங்கித் ந்த வேதாகமங்களை விடுத்தொழித்து வெறுங்கையோடு வீதி னின்று நவிக்குமாறு செய்யக் கருதி, வேதங்கள் ஆரியர் ட்டின கட்டு என்றும், சைவர்கட்கு அவை பிரமாண நூல்க ன்றென்றும், சிவபெருமான் தமிழில் வேதஞ் செய்தருளினார் ன்றும் உலகந் தோன்றிய நாண்முதல் இதுகாறும் ஒருவருஞ் சால்லாத நவீனக் கற்பனையாகிய ஓரடிநிலை பாரித்தார் "திரு ன்மறைவிளக்க" முடையார்.

இவரது பெலமற்ற வடிநிலை யாமெடுத்துக் காட்டிய இரும் ருமம் வச்சிரக் காட்டாகிய ஊழிப் பெருவெள்ளத்தான் ாதுண்டு இருந்தவிடமுந் தெரியாமற் கரைந்துபோயிற்று.

ஆகலான் மெய்ம்மைச் சைவசமயிகளே! இப்போதுள்ள டமொழி வேதாகமங்களே இறைவன் சிருட்டியாரம்பகாலத் ல் நம்பொருட்டு அருளிச்செய்த முதனூல்களென்றும், விளக்கமுடையார் கூறியபடி தமிழில் முதனூல் இறைவன் ய்திலன் என்றும், அதனைக் கடல்கொண்டு போயதென்றது வாது கட்டுவார்த்தை என்றும், நன்றாகத் தேறி அவரை தாகம விரோதியெனக்கொண்டு புறப்புறத்தினும் புறப்புறச் மயத்தவராக வெண்ணி, அவர் சொற் கேட்பின் ஆன்மலாப றந்து நரகத் தெய்துதல் ஒருதலையெனத் துணிந்து, அவர் ாற் கேளாது வேதாகம வழி யொழுகி விமல னருள் பெறு ல்மையை விடாதுபற்றிச் செவ்வனே உய்தி பெறுவீராக.

எமதன்பர் குமாரர் ஸ்ரீமத். சுப்பிரமணியபிள்ளையவர் ளும் இவ்வுண்மையை யோர்ந்து "கொடிறும் பேதையுங் கொண்

* ஈண்டு மறை அரசன வார்த்தை.

டது விடாது" என்னுந் திருவாசகக் கூற்றிற்குச் சரியா விலக்கியமாகாது, உண்மை கண்டுழியும் அவ்வளவிலமையா வெற்றுரை பேசித் தமதறியாமையை மேலு மேலும் வெளி படுத்தும் பிறர் போலாது அமைந்து நன்மை பெறுவாராக.

இனி, சுந்தரமூர்த்திநாயனார் கைலைக் கெழுந்தருளி போது வழியிடைத் தாமருளிச்செய்த "தானெனை மு படைத்தான்" என்பதை முதலாகவுடைய நொடித்தான்மலை திருப்பதிகத்தை, அஞ்சைக்களத்தப்பர் சந்நிதி வாயிலாக உ கிற் கறிவுறுத்துமாறு ஆழிநீராசனாகிய வருணனிடம் கொடு தார் என்பது,

"ஊழிதொ றூழி முற்று முயர்பொன் னொடித்தான் மலையைச்
சூழிசை யின்கரும் பின்சுவை நாவல வூரன் சொன்ன
வேழிசை யின்றமி ழாலிசைந் தேத்திய பத்தி னையும்
ஆழி கடலரை யாவஞ் சையப்பர்க் கறிவிப்பதே"

என்னும் அப்பதிகத் திறுதித் தேவாரமாகிய அவர் திரு வாக்கானும்,

"வாழி மாதவ ராலால சுந்தரர்
வழியிடை யருள்செய்த
ஏழி சைத்திருப் பதிகமிவ் வுலகினி
லேற்றிட வெறிமுந்நீர்
ஆழி வேந்தனும் வருணனுக் களித்திட
வருணனு மருள்சூடி
ஊழி யிற்றனி யொருவர்தந் திருவஞ்சைக்
களத்தினுய்த் துணர்வித்தான்"

என்னும் பன்னிரண்டாந் திருமுறைத் திருவிருத்தமாகிய சேக்கிழார் நாயனார் திருவாக்கானும் பெறுதும்.

சேரமான் பெருமாணாயனார் வழியிடை அருளிச்செய்த திருக்கைலாசஞானவுலாவை அன்று வெள்ளியங்கிரியிற் கேட்ட மாசாத்தனார் அதனை மனத்திற் கொண்டு திருப்பிட வூரில் வெளிப்படக் கூறியருளி உலகத்தில் நிலைபெறச் செய் தார் என்பது,

"சேரர் காவலர் விண்ணப்பஞ் செய்தவத்
திருவுலாப் புறமன்று
சாரல் வெள்ளியங் கயிலையிற் கேட்டமா
சாத்தனார் தரித்திந்தப்

பாரில் வேதியர் திருப்பிட வூர்தனில்
வெளிப்படப் பகர்ந்தெங்கும்
நார வேலைசூ ழுலகினில் விளங்கிட
நாட்டினர் நலத்தாலே"

என்னும் பெரியபுராணத் திருவிருத்தமாகிய சேக்கிழார் நாயனார் திருவாக்காற் பெறுதும்.

வழியிடை யருளிச்செய்த இவ்வொரு பதிகமும், இவ்வோருலாவும் புவியிடைப்போந்து பயன்படவேண்டி இங்ஙனம் இவர் வாயிலாக அஞ்சைக்களத்தும் பிடவூரகத்தும் அறிவுறுத்துவித்தருளிய பெருங்கருணையாளனாகிய இறைவன் "ஆரணமாகமங்கள்" இல்லையேற் "கதிப்பவரில்லையாகும்" ஆகலான், தமிழிலிருந்த வேதாகமங்களைக் கடல்கொண்டு போந்த ஞான்று தொட்டின்றுகாறும் வெளிப்படுத்திப் பயன்படச் செய்து உயிர்களைப் புரந்து கதிப்பாற் படுத்தாது வாளா விருத்தல் அவன் கருணைக் கிழுக்காம்பிறவெனின், அற்றன்று; என்னை? தமிழில் அவை செய்யப்பட்டிருந்து கடல்கோட்படினன்றோ! அம்முதல்வன் அங்ஙனஞ் செய்வன். அந்நிகழ்ச்சிகள் யாவும் எக்காலத்தும் இன்மையான் அது செய்திலன் என்க. அதற்கொரு சான்று சோமுகன் கவர்ந்து சென்று கடலிடை மறைத்த வேதத்தை விண்டுவைக்கொண்டு விமலன் வெளிப்படுத்துவித்த சரிதமும் அன்னபிறவு மாம்; ஆகலான் இழுக்கு யாண்டையதென்றொழிக.

இன்னும் கடல்கோட்பட்ட விடத்துள்ள தமிழ் ஆகம முறையாகிய தானி தான்றன்றானத்தொடு அதன் கட்பட்டதெனினும் தமிழ் நாட்டில் மற்றைய இடங்களிலிருந்த தமிழ் ஆகம முறைகள் எங்கே போயினவோ? தமிழ் நாட்டுச் சிவஸ்தல முதலியவற்றில் சிவபிரான் முதலிய கடவுளர்க்கு அவையின்றிச் "சிறப்பொடு பூசனை" சென்றதெங்ஙனம்? வடநாட்டுத் தலங்களிலுள்ள சிவாலய முதலியவற்றில் "சிறப்பொடு பூசனை" யின்றோ? என்னை? அங்குள்ளார் தமிழாகம முணரமாட்டாராகலான். நித்தியமேனு நடைபெறுதவாலயங்கள் இருந்தும் பயனின்றாகலின், அங்குள்ள ஆலயங்கட்காக வடமொழி ஆகமமும் உண்டாக்கினார் என்பராயின், குறை யென்னை? தமிழ் வேதாகமம் கடல் கோட்பட்டால் கடல் கோட்படாத சமஸ்கிருதாகம வேதங்களைக்கொண்டு தமிழ் நாட்டிற் சிவாலயங்களில் நித்திய நைமித்திகங்கள் நடப்பிக்கலாமே. அவற்றைத் தள்ளிவிட்டு "அரசனை நம்பிப் புருஷனை யிழந்தவள்" சீலமாக இல்லாத தமிழ் வேதாகமங்களை நம்பி, இருக்கிற சமஸ்கிருத

வேதாகமங்களைவிட்டுச் சந்தியில் நின்று நாம் தவிக்கவேண்டிய தெற்றிற்கென்று திருவாளர் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் சற்றே தயைகூர்ந்து சிந்தித்து உண்மையில் தமது மனத்தை நிலையுற வூன்றி நன்மை கடைப்பிடித்துச் செம்மையராக வாழ்க சிவா.

இனி, "பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட் டெரியோம் பும்—சிறப்பர்" எனத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் தேவாரத்துள் ஓதியருளுதலினுல், வேள்விக்கட் பசுவேட்டலை விதித்தவேதம் கொலையைக் கூறலால் நன்மை பயவாது போலு மென மலையற்க; என்னை? கொலை, களவு, காமம், பொய், என் பனவன்றோ சமயத்தாரானும் உலகத்தாரானுங் கடியப்பட்டன! அவற்றுள் ஒன்றேலா இது! எனின், அற்றன்று; கொலை என் னுஞ் சொற்கேட்டுக் கொலை தீதென்பதூஉம், களவென்னுஞ் சொற் கேட்டுக் களவு தீதென்பதூஉம், காமம் என்னுஞ் சொற் கேட்டுக் காமம் தீதென்பதூஉம், பொய் யென்னுஞ் சொற் கேட்டுப் பொய் தீதென்பதூஉ மன்று; மற்றவை நல்லவாமாறு முண்டு: என்னை? ஒருவன் ஒருகுடும்பத்துப் பத்துமக்களிடத் துக் கொண்ட கோபத்தால் அவர்கள் துயிலும்போது அவர் களை இடைதெரிந்து கொல்லக்கருதி ஆயுதபாணியாகச் சேறலை ஓராற்ருனறிந்த மற்றை அருளுடையா னொருவன், பத்து மக்களையும் இவன் கோறல் புரியாமை அவரைக் காப்பே னெனக் கண்ணி அவனைத் தனது சூழ்ச்சியாற் கொன்றிட் டான். அதனுல் அவர்களும் சாக்காடு நீங்கினர்கள். அவன் அக்கொலையினுன் அவர்களை உய்யக் கொண்டமையான் நல் லுழிச் செல்லு மென்பது. மற்று மிதுபோல்வன கொலையாகா நன்மை பயக்கு மென்பது.

இனி, களவு நன்ருமாறு:— "ஒரு பெண்டாட்டி தம ரொடு கலாய்த்து நஞ்சுண்டு சாவல் என்னுமுள்ளத்தளாய் நஞ்சுகூட்டிவைத்து, விலக்குவா ரில்லாதபோழ்து உண்ப லென்று நின்ற விடத்து, அருளுடையா ளொருத்தி அதனைக் கண்டு இவளிதனை யுண்டு சாவாமற் கொண்டுபோ யுகுப்ப லென்று அவளைக் காணுமே கொண்டுபோ யுகுத்திட்டாள். அவளும் சனநீக்கத்துக்கண் நஞ்சுண்டு சாவான் சென்று அது காணுளாய்ச் சாக்காடு நீங்கினள்; அவ்வரு ளுடையாள் அக் களவினுன் அவளை உய்யக் கொண்டமையான் நல்லுழிச் செல்லுமென்பது. மற்று மிதுபோல்வன களவாகா நன்மை பயக்குமென்பது."

இனி, காமம் நன்ருமாறு:—"சுவர்க்கத்தின்கட் சென்று போகந்துய்ப்ப லென்றும், உத்தரகுருவின்கட் சென்று போகந்

துய்ப்ப லென்றும், நன் ஞானங் கற்று வீடுபெறுவலென்றும், தெய்வத்தை வழிபடுவ லென்றும் எழுந்த காமங் கண்டா யன்றே! மேன்மக்களானும் புகழ்ப்பட்டு மறுமைக்கு முறுதி பயக்கு மாதலின், இக்காமம் பெரிது முறுதியுடைத்தென் பது."

இனி, பொய் நன்றுமாறு:—ஊரிடையிட்டுச் சென்று தன் கருமமுற்றி மீள்வா னோர்மகனைச் சில்லோர் வழியிடையிட்டுக் கொலைபுரிந்து அவன் கைப்பொருளைப்பற்ற நின்றவிடத்து, அதனை ஆங்கறிந்து போதரு நன்மகனுவானோர் பதிகன், அம்மீள்வான்றனக்கு அதனைத் தெரிப்ப, அவன் ஆண்டோர் குடிசையில் வசிப்பானோர் கருணையாளனுழை இது சமயம் என்னைக் காவாய் என்று சரண்புக, அவனும் உளமுருகி அது செய்வல் அஞ்சற்கவென் றமைத்த கரத்தினனாய் மறைத்துவைத் தாங்கே வெளிப்போந்து நின்றானிடை அவ்வாறலைப்பான் போந்து நின்ற மறமாக்கள் புக்குத் தாழ்த்த தலையும் தண்ணிய மொழியு முடையராய்த் தன்கைப் பொருளுடையா னொருவ னெம்மினமகன் பொருள் காரண மாகத் தனிவரலஞ்சி ஈண்டுழிதந்தானென அறிந்து அவனைக் காத்துக் கொடுபோதரப் பலர்குழீஇவந்தனம்; அருளுடைப் பெரும! அத்தகையானை நீர் கண்டீர்கொல்லோவென ஐயமவனு ழுது நையுமனத்தராய் வினவ, அத்தகையா னொருவன் இச் சதுக்கத்துநின்று நாற்றிசையு நோக்கி உழிதந்து நின்றான். முன்னர் அதுகண்டுவைத்துக்குடிசையுட் போந்து பின்வந்து நோக்கினேற்கு முன்போற் காணப்பட்டிலன் என்றான். அவரும் அது கேட்டு மெய்யெனக் கொண்டு தம்முழிப் போந்தார். அதனான் அவனை யுய்யக்கொண்டமையின் அது நன்மைபயந்த தென்பது. மற்று மிது போல்வன பொய்யாகா நன்மைபயக்கு மென்பது. இக்கருத்துக் கண்ணியன்றே,

"பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்"

என்றார் வள்ளுவ தேவரும்.

அஃதங்ஙனமாகுக; பரசமய கோளரியாகிய பிள்ளையார், பாண்டியன் சபையிற் சமணரோ டொட்டிச் சமயவாதஞ் செய்து வென்றகாலத்துக் குலச்சிறைநாயனார் சமணரைக் கழு வேற்றியது தீமைபயக்கு மன்றோவெனின், அறியாது கூறினாய்; மற்றென்னைகொல் நன்மை பயக்கு மாறெனின் நன்றே கூறுதும்:—

பதினாறுயிரவரைக் கொல்ல முயன்ற எண்ணாயிரவரை அரசன் கோறல் புண்ணியமாகலானும், ஒட்டியவாறே அவரைக் கழுவேற்றினமை அவர் செய்த சிவதூடணத்தின் பொருட்டு நரகவேதனை அளப்பிலகாலம் அநுபவியாது ஒருசிறுபோதுள் நீங்கினமையானும், பின்னும் பின்னும் பிறரும் இவ்வாறு செய்து நரகத்துன்பமும் பிறவித்துன்பமும் எய்தா துய்தற்குக் காரணமாகலானும் அது பெருங்கருணையின் பாலதாய்ப் பெரிது நன்மை பயந்தவாறறிக. இத்துணைச் சுருக்கமாக அத்துணைப் பெருநன்மை பயக்கு மாற்றைச் சைவசாத்திர முறைகொண்டன்றிப் பிறிதொன்றினான் எக்காலத்து மெவருமறிய வல்லுநராகார்.

இம்மையிலே பாவஞ்செய்தோர் அரசனாலே தண்டிக்கப்பட்டால் மறுமையிலே அவர்க்கு நரகவேதனையின்று; அரசன் அறிந்து தண்டிக்கப்படாத பாவங்கட்குத்தான் மறுமையில் யமதண்டமுண்டு. ஆகலான், அரசன் தண்டமெல்லாம் மறக்கருணையாய்ப் பெருநன்மை பயப்பனவாம். சமணரைக்கழுவேற்றினமையும் அத்தகைய மறக்கருணையே யாமென்பது. அதனை,—

"அரசனுஞ் செய்வ தீச னருள்வழி யரும்பா வங்கள்
தரையுளோர் செய்யிற் றீய தண்டலின் வைத்துத் தண்டத்
துரைசெய்து தீர்ப்பன் பின்பு சொல்வழி நடப்பர் தூயோர்
நிரயமுஞ் சேரா ரந்த நிரயமுன் னீர்மை யீதாம்"

"அருளினா லுரைத்த நூலின் வழிவாரா ததன்மஞ் செய்யின்
இருளுலா நிரயத் துன்பத் திட்டிரும் பாவந் தீர்ப்பன்
பொருளுலாஞ் சுவர்க்க மாதி போகத்தாற் புணியந் தீர்ப்பன்
மருளுலா மலங்க ளுக்கு மருந்திவை வயித்திய நாதன்"

என்னுஞ் சிவஞானசித்தித்திருவிருத்தங்களினா லறிக.

இனி, அறுபத்து மூவருள் சிறுத்தொண்டநாயனார், எறிபத்தநாயனார், கோட்புலிநாயனார், இயற்பகைநாயனார் முதலாயினோர்; புதல்வர், யானைப்பாகர், சுற்றத்தார் முதலாயினோரைக் கொன்றமையும் திடபத்தியாற் செய்தமையானும், மீட்டுஞ் சிவபிரான் றிருவருளால் உயிர்பெற்றெழுந்தமையானும், சுவர்க்காதி பதங்களைப் பெற் றின்புற்றமையானும் நன்மைபயந்தவாறு காண்க. இவ்வுண்மை நோக்கியன்றே "வாளான் மகவரிந் தூட்டவல் லேனல்லன்" எனப் பட்டினத்தடிகள் கூறியருளியதூஉ மென்க. இவை போல்வன பிறவுமன்ன.

இனி, பிறவுயிரை அது நின்ற வுடம்பி னின்று நீக்குமாறு போலத் தமதுடலினின்று தம்மைத் தாம் நீக்குதலும் பாவ மென்றும், அங்ஙனஞ் செய்வோர் சக்கரவாளகிரிக்குப் புறத்தி லுள்ள இருட்பூமியிலே கிடந்து எண்ணில்லாத காலம் வருந்து வார்கள் என்றும் ஆகமத்துள் கூறிய விதி ததீசிமுனிவர் முதலாயினர் மாட்டுச் செல்லாமை,

"என்று மாதவ னியம்ப வும்பர்கோன்
ஒன்றும் வானவர் தம்மொ டொல்லெனச்
சென்று மாயையின் செயலை நோன்பினால்
வென்ற மாதவ னிருக்கை மேவினான்."

வேறு

"அடிகணீர் மருதமொன் றதனை வேண்டியிம்
முடிகொள்வா னவரொடு முந்தி னேனது
செடிகொள் காருட லவுணர்த் தேய்த்தெமர்
குடியெலாம் புரப்பதோர் கொள்கைத் தாயது."

"யாதெனி னினையதுன் யாக்கை யுள்ளதென்
றோதலும் யாவையு முணர்ந்த மாதவன்
ஆதவற் கண்டதா மரையி னானனப்
போதலர்ந் தின்னன புகல்வ தாயினான்."

"நாய்நம தெனநரி நமதெ னப்பிதா
தாய்தம தெனநமன் றனதெ னப்பிணி
பேய்நம தெனமன மதிக்கும் பெற்றிபோ
லாய்நம தெனப்படும் யாக்கை யாரதே."

"விடம்பயி லெயிற்றர வுரியும் வீறுழை
குடம்பையுந் தானெனுங் கொள்கைத் தேகொலாம்
நடம்பயில் கூத்தரி னடிக்கு மைவர்வாழ்
உடம்பையும் யானென வுரைக்கற் பாலதோ."

"நடுத்தயா விலார்தமை நலியத் துன்பநோய்
அடுத்தயா வருந்திரு வடைய யாக்கையைக்
கொடுத்தயா வறம்புகழ் கொள்வ னேயெனின்
எடுத்தயாக் கையின்பய னிதனின் யாவதே"

வேறு

"என்றனன் கரண மொன்றி யெழுகருத் தறிவை யீர்ப்ப
நின்றனன் பிரம நாடி நெறிக்கொடு கபாலங் கீண்டு
சென்றனன் விமான மேறிச் சேர்ந்தன னுலகைநோன்பால்
வென்றனன் துறக்கம் புக்கு வீற்றினி திருந்தா னம்மா."

களுமே, மறைகளாகா என்பது, இவ்வியாசத்தின் கருத்தாய் முடிகிறது. இக்கருத்தைப் பற்றிய ஆராய்ச்சி சைவ மக்கட்கும் தமிழ் மக்கட்கும் அவசியம் வேண்டற்பாலது. இவ்வாராய்ச்சியையே இந்நூல் முக்கியமாய் மேற்கொண்டுள்ளது.

2. இத்தகைய ஆராய்ச்சி நூல் வெளிவருவதை விரும்பி நின்றவர்களில் நானும் ஒருவன். இவ்வாராய்ச்சியை நானே செய்ய நினைத்ததுமுண்டு. ஆனால் இவ்வாராய்ச்சிக்கு வேண்டிய பண்டை நூற் பயிற்சியும் காலவசதியும் எனக்கில்லையே யென்று மலைந்தேன். என்றாலும் இயன்றவரை இவ்வாராய்ச்சியிற் றலையிடலானேன். இவ்வாராய்ச்சிக்கு எடுத்துக்கொண்ட வியாசத்தில் பல திருமறைப் பாசுரங்களும், பண்டை நூற் பாடல்களும் ஆராய்ச்சி செய்யப்பட்டிருந்தாலும், இப்பாசுரங்களேனும் பாடல்களேனும் முழுமையும் ஆராய்ச்சி செய்யப்படவில்லை. இவ்விவற்றிற்கு முன் பின்னுள்ள பாசுரங்கள் பாடல்களும் ஆராய்ச்சி செய்யப்படவில்லை. இவ்விவற்றின் ஓரோர்பகுதி மாத்திரம் ஆராய்ச்சி செய்யப்பட்டுள்ளது. இத்தகைய ஆராய்ச்சி சரியான முடிவுகளைத் தருமா? என்று சந்தேகிக்கலானேன். இதுவுமன்றி இப்பாசுரப் பகுதிகளும் பாடற் பகுதிகளுமே இவ்வியாசத்திற் கட்டிய முடிபுகளை ஆதரியாமலிருப்பதோடு, அம்முடிபுகட்கு மாறாகவுமிருப்பன போல் எனக்குத் தோன்றியது. என்றாலும், வியாச ஆசிரியர் சிறந்த கல்வியாளரென்பதைப் பாராட்டி, அவ்வியாச முடிபுகளைப்பற்றிய என் கருத்துகளைப் பல ஐயப்பாடுகளாகத் திரட்டினேன். அவற்றின் பெரும்பகுதி, எனது நண்பர் ஒருவர்மூலம், செந்தமிழ்ச் செல்வியில் வெளியாகும்படி வியாச ஆசிரியருக்கு அனுப்பப்பட்டது. இதுவரை இவ்வையப்பாடுகளும் வெளிவரவில்லை. அவற்றிற்கு விடைகளும் வெளிவரவில்லை. இவ்வையப்பாடுகளே இவ்வாராய்ச்சி நூலில் 209-வது பக்கத்தில் குறிக்கப்பட்டிருப்பன. இதனிடையில், இவ்வாராய்ச்சியின் 29-வது பக்கத்தில் சொல்லியபடி "காதுபொத்தரை" என்று தொடங்கிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரப் பாசுரத்திற்கு வியாச ஆசிரியர் கொண்ட பொருளைப்பற்றிய என் அபிப்பிராயத்தை இவ்வாராய்ச்சி ஆசிரியர் திருவாளர் மா. சாம்பசிவம்பிள்ளையவர்கள் கேட்டார்கள். இது காரணமாயும், பின்னர் இவ்வாசிரியரை நேரிற்கண்டு உரையாடியதன் மூலமாயும், இவர்கள் இந்நான்மறை விளக்க வியாசத்தை ஆராய்ச்சி செய்து வருகிறார்களென்று தெரிந்தேன். தெரிந்ததும் என்பாலுண்டான மகிழ்ச்சிக்கு அளவில்லை. இவர்பாலுள்ள சைவப்பற்றையும் தமிழ்ப்பற்றையும் நான் எவர்பாலும் கண்டதில்லை, இவர்பாலுள்ள ஊக்கத்தை நான் எத்துணை இனியோ

ரிடத்தும் கண்டதில்லை. இவர்பாலுள்ள சைவக்கல்வியும் தமிழ்க் கல்வியும் எவரையும் கவரத்தக்கது. இவரே, இவ்வாராய்ச்சிக்கு தகுதியுடையாரென்றும், இவராலேயே வியாசமுடிவுகளைப் பற்றிய எவ்வித ஐயப்பாடுகளும் தீரலாகுமென்றும், துணிந்தேன். இவரது ஆராய்ச்சி நூல்விரைவில் வெளிவருமென்றும் துணியலானேன்.

3. நான் துணிந்தபடி "திருநான்மறைவிளக்க ஆராய்ச்சி" என்னும் இந்நூல் விரைவில் வெளிவரலாயிற்று. நான் திரட்டியெழுதிய ஐயப்பாடுகள் யாவுமே என்னை விட்டு நீங்கின. வியாசத்தில் எடுத்தெழுதப்பட்ட திருமுறைப் பாசுரங்களிற் பல, தப்புப் பாடங்களென்று இவ்வாராய்ச்சியில் நிறுவப்பட்டிருக்கின்றன. சில பாசுரங்கட்கு வியாசத்திற் கூறப்பட்டுள்ள பொருள்கள் தப்பென்றும் முன்னொடு பின் முரண் என்றும் காட்டப்பட்டிருக்கின்றன. சில பாசுரங்கட்கு வியாசத்திற் கூறிய பொருள்கள் அப்பாசுர ஆசிரியர்கள் கருத்துக்கு மாறென்று, அவ்வாசிரியர்கள் அருளிய வேறு பாசுரங்கள் மூலம் விளக்கப்பட்டிருக்கின்றன. இவையன்றி இவ்வியாசத்திற் கண்ட பண்டை நூற் பாடல்களைப் பற்றிய ஆராய்ச்சியிலும், இத்தகைய பிழைகள் மலிந்துள்ளன வென்றும் காட்டப்பட்டிருக்கின்றன. தமிழ் மறைகளும் தமிழ் ஆகமங்களும் பண்டைக் காலத்திலிருந்து மறைந்தனவென்பதை, நம் சைவத் திருமுறைகளும் பண்டைத் தமிழ் நூல்களும் சிறிதும் ஆதரிக்கவில்லையென்று, பசுமரத்தாணிபோல் இவ்வாராய்ச்சியில் தாபிக்கப்பட்டிருக்கின்றது. இச்சைவத் திருமுறைகளும் பண்டை நூற் பாடல்களும் "வேதம்," "மறை" என்று கூறுவதெல்லாம் வடமொழி வேதங்களையே என்று நன்கு உணர்த்தப்பட்டிருக்கின்றது. இதுவுமன்றி நமது சைவத்திற்குத் தமிழ்மொழி வடமொழி என்னும் இருமொழிகளும், மக்கட்கு இரு கண்கள் போல் நிலவி நமக்கு வேண்டிய ஞானங்கள் அனைத்தையும் உதவுகின்றன என்றும், இவ்வாராய்ச்சியில் வெள்ளிடைமலைபோல் விளக்கப்பட்டிருக்கின்றன.

4. இவ்வாராய்ச்சிநூல் நல்ல சமயத்தில் வெளிவந்ததென்று சொல்லலாம். இக்காலத்தில் அரசியல் முறையில், சமுதாயச் சச்சரவுகள் வளர்ந்து கொண்டிருக்கின்றன. இச்சச்சரவுக்கும் நமது சைவசமயத்திற்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. இச்சச்சரவை நம் சமயத்திற்குள் நுழைத்தற்கு எவ்வித காரணமுமில்லை. வடமொழி எந்தச் சமுதாயத்தார்க்கும் சொந்த மொழியன்று எந்தச் சமுதாயத்தாருடைய பேச்சுப் பழக்கத்திலும் எந்தக் காலத்திலும் இருந்திருப்பதில்லை. நமது இந்திய

நாட்டிலுள்ள எல்லாச் சமுதாயங்கட்கும் இது பொதுமொழி யென்பதை இவ்விரு மொழிகளிலுமுள்ள இலக்கண இலக்கிய நூல்கள் வலியுறுத்தி உணர்த்துகின்றன. பண்டைக் காலந் தொட்டு இந்நாள்வரை இவ்வடமொழி எல்லாச் சமுதாயத் தார்களின் ஆட்சியிலுமிருந்து வருகின்றது. நமது சைவ நிலையங்களாகிய ஆலயங்களிலும் ஆதீனங்களிலும் இற்றை நாள்வரை ஆட்சி செலுத்திவருகின்றது. நமது தமிழ்மக்களின் அனுட்டானம், பூஜை, சமயச் சடங்குகள் முதலிய அனைத் திலும் கையாடப்பட்டு வருகின்றது. இதனை ஒதுக்குவதெப் படி? நமது ஆலய ஆதீன பூஜை உபதேசம் முதலியவை களைத் தமிழ்ப் பூஜை முதலியனவாக மாற்றலாமா? அன்றி அந்நிலையங்களை அறவே விட்டு வேறுநிலையங்களை உண்டாக்க லாமா? நமது அனுட்டானம் பூஜை முதலியவைகளை ஒழித் துவிடலாமா? அன்றி, புதியதமிழ் அனுட்டான முதலியவை களை உண்டாக்கலாமா? இத்தனை சங்கடங்கட்கும் காரணம் வடமொழி நம் மொழியன்று, வேறு சமுதாயத்தார்மொழி, என்பதன்றோ? இக்கொள்கைக்கு ஆதாரம் என்னை என் பதை வியாச ஆசிரியரும் விளக்கினாரில்லை. சரித்திர ஆராய்ச் சியாற் போதரும் என்றல் மாத்திரம் போதுமா? ஹார்ஷகவி என்னும் வடமொழியாசிரியரும், சேனாவரையர் முதலிய தமிழ் இலக்கண ஆசிரியரும், வடமொழியைப் பொதுமொழி யென் றல் சரித்திர ஆராய்ச்சியில் இடந்தராதா? ஆகவே வட மொழி வேறு சமுதாயத்தார் மொழியென்ற பொருந்தாக் கொள்கையைச் சைவநன் மக்களும் தமிழ் நன்மக்களும் அறவே ஒழித்துவிட வேண்டுமன்றோ? இக்கருத்து என்று நம் நாட்டில் நிலைபெறுமோ, அன்றே நம்மொழியும் சமயமும் நாடும் முன்னேற்ற மடையும். நாமும் முன்னேற்றமடைவோம். இக்கருத்தே இவ்வாராய்ச்சி நூலின் முக்கிய நோக்கமாய்க் காணப்படுகின்றது.

5. இது நிற்க, நம் சைவத் திருமுறைகளையும் தமிழ் மறைகளல்லவென்று சைவ மக்களாவது தமிழ் மக்களாவது கழிப்பாரென்று நான் கனவிலும் நினைத்ததில்லை. இத்திரு முறைகளே, நம் திருக்கோவில் களில் நிகழும் எவ்வித வழிபாடு களிலும் ஓதப்பட்டு வருகின்றன. இவைகளே நம் சைவ சாத்திரங்கட்கு முதல் நூல்களாய் அவற்றின் உயர்தாக் கருத் துக்கள் அனைத்தையும் நிரம்பப் பெற்றுள்ளன. இவைகள் மறைகளல்லவென்றால் நம்திருக்கோவில் களில் ஓதுவதற்குரிய மறைகள் யாவை? இன்றேல் நம்திருக் கோவில்கள் யாவும் வடமொழியாளர் கோவில் களாகமாறி விடுமன்றோ? இது வன்றி நம்சைவ சாத்திரங்கட்கு முதல்நூல்களாய்க் கொள்ளக்

கிடக்கும் தமிழ்மறைகள் தாம்யாவை? இன்றேல் நம்சைவ சாத்திரங்கள் முதனூலாதாரவற்ற னவாய் முடியுமன்றோ? எனவே, நம்தமிழ் மொழிக்குப் பண்டைமறை வேண்டுமென்று தேடுதல், இப்போதுள்ள தமிழ் மறையையும் இழந்து விடுவ தாக வன்றோ முடிகின்றது. இது வன்றி இச்சைவத் திரு முறையாசிரியர்களாகிய நம் சமய குரவர்களும், தத்தம் கால வர்த்தமானங்களை அனுசரித்து, ஓரோர் இடங்களில் வடமொழி மறைகளையும் உண்மை மறைகளாய்க் கூறுகிறார் என்றல், இச் சைவகுரவர்கட்கு மாத்திரமன்றி நம் சைவ சமயத்திற்குமே இழுக்காய் முடியுமன்றோ? இத்தகைய இழுக்குகள் நம் சம யத்திற்கும் சமய நிலயங்கட்கும் நேராவண்ணம் பாதுகாப்பது சைவமக்கள் தமிழ் மக்களின் கடமையன்றோ? இக்கடமை யைத் தீர்த்தற் பொருட்டே இவ்வாராய்ச்சி ஆசிரியர், தமது முதுமை முதலிய பல இடையூறுகளையும் பாராட்டாது, மிகுந் த முயற்சிகள்செய்து இந்நூலை வெளியிட்டுள்ளார்.

6. இத்துணைச் சிறப்புவாய்ந்த இந்நூல் வடமொழியா ளர் தமிழ்மொழியாளர் ஆகிய இருமொழியாளரும் படிக்கத் தக்கது. சைவத் திருமுறைகளாகிய தமிழ்மறைகளில், பல இடங்களிலும் புகழ்ந்து போற்றப்படுவன வடமொழி மறை களையெனத் தமிழ்மொழியாளர் தெரிந்துகொள்வர். வட மொழிமறைகளில் மறைந்துகிடக்கும் உயர்தரக் கருத்துக்க ளனைத்தையும் வெளியிட்டுவிளக்குவன தமிழ்மறைகளே யென வடமொழியாளரும் தெரிந்துகொள்வர். இரு மொழிகட் கும் கண்ணுதலார் முதற்குரவர் என்று திராவிடபாடியகர்த்தர் திருவாய் மலர்ந்தருளிய உண்மையை இந்நூல் நன்குவிளக்கு கின்றது. இனி நம்நாட்டில் வடமொழி உயரியது தமிழ்மொழி உயரியதுஎன்னும் மொழிச்சச்சரவுக்கு இடமில்லையென்பதை இந்நூல் தெள்ளிதின் உணர்த்துகின்றது. இந்நூலைச் சைவ மக்களும் தமிழ்மக்களும் படித்து இதனாற்றாப்படும் பலன் களைப பெற்று, உய்யும்படி அவர்களை வேண்டுகிறேன். இந் நூல் இயற்றிய ஆசிரியரும், மேலும் சிலகாலம் இவ்வுலகி லிருந்து இதுபோலொத்த பேருபகாரங்களைச் செய்யும்படித் திருவருளையும் பிரார்த்திக்கின்றேன்.

---

திருநெல்வேலி ஜில்லா இந்து காலேஜ் தமிழ்ப் போதகா சாரியரவர்களும், தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின் கௌரவ உபந்யாசகரவர்களும், சுருதிசூக்திமாலையின் தமிழ் மொழிபெயர்ப்பு, சிவதத்துவவிவேகம், குமரகுருபர சுவாமிகள்

பிரபந்த மிவற்றிற்கு அரும்பொருள்விளக்க உரை ஆசிரியர வர்களும் வடமொழிச் சுருதி சூக்திமாலையை உரையுடன் பரிசோதித்தவர்களுமான

ஸ்ரீமத். வி. சிதம்பரராமலிங்கம்பிள்ளை அவர்கள்

எழுதியது.

இவ்வாராய்ச்சிநூல் வெளிவருதற்குக் காரணமாயிருந்தது திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆதரவில் பிரசுரமாகும் செந்தமிழ்ச் செல்வி யென்னும் பத்திரிகையின் முதற் சிலம்பில் எழுதப்பட்டிருக்கும் திருநான்மறை விளக்கமென்னும் வியாசமாகும். அவ்வியாசம், பாரம்பரையாசரணை ஆசாரியர்களது அருளுப்பாடு என்னுமிரண்டனுள் ஒன்றனையேனும் அடிப்படையாகக் கொண்டதாகவுமில்லை: உண்மையுணர்தலென்னும் நோக்கத்துடன் கௌரவமாக எழுதப்பட்டதாகவுமில்லை: தற்காலங் காணப்படும் சமுதாய சச்சரவை முன்னிட்டு, அதற்கோர் அரணாகுமெனக் கொண்டு சமயசாத்திரப் பிறழ்ச்சிசெய்துவிடல் வேண்டுமென்ற கருத்துப்பற்றி எழுந்ததாகக் காணப்படுகின்றது.

இஃதிங்ஙனமாகவும் 'புதியன கண்ட போழ்துவிடுவரோ புதுமை பார்ப்பார்' என்பதற்கிணங்கப் புதுமை பார்க்கும் சிலர் அவ்வியாசத்திற் காணப்படும் விஷயங்கள் பலவும் வாய்மையெனக் கொள்வாராயினர்.

அவ்வியாசத்திலே பிரமாணங்களெல்லாம் உள்ளவாறு எழுதப்படாமல் திரித்துக் காட்டப்பட்டிருக்கின்றன: வேதவாராய்ச்சி சைவ பரம்பரை முறையிற் செய்யப்படாமல் புறச்சமயிகளையும் ஹீனை பண்டிதர்களையும் பின்பற்றிச் செய்யப்பட்டிருக்கிறது. வேதபாஷையாகிய ஆரியபாஷாஞானமின்றி வேதத்தைக்குறித்துப் பலபல அவ்வியாசத்திற் கூறப்பட்டிருப்பது 'கல்லாத மேற்கொண்டொழுகல்' என்னும் பொய்யாமொழியை மெய்ப்படுத்துகின்றது.

இதுகாறும் சைவசாத்திர வரிசையிலே நுழைதற்கு இடம்பெறாது பஞ்சம நிலையிலே நிற்கும் சித்தர் நூல் அவ்வியாசத்தில் அக்கிரஸ்தானம் பெற்றுவிட்டது.

சாதாரண சைவப் பொதுசமூகம் இவற்றையெல்லாம் உணர்ந்து மெய்ம்மை தெரிவதென்பது தமிழ்ப் புலமையும் வடமொழிப் புலமையும் பெரிதும் குன்றிச் சமயஞானம் அருகிவரும் இக்கால நிலைக்கு இயலாததாகின்றது. இவ்வாறு பரிதாபப்படவேண்டிய நிலையிலிருக்கும் சைவப் பொதுசமுதாயத்தார்மீது எழுந்த தமது அவ்வியாஜமான பெருங் கருணையி

ஞாலே திருச்சிராப்பள்ளி ஸ்ரீமாந்: மா. சாம்பசிவம் பிள்ளையவர்கள் அவ்வியாசத்திற் காணப்படும் பொருந்தாக் கருத்துக்களையும் முடிபுகளையும் நன்கு எடுத்துக்காட்டி உண்மையை உணர்த்தியிருக்கின்றார்கள். அவர்கள் தங்கள் உடம்புநிலையையும் விருத்தாப்பிய தசையையும் சிறிதும் பொருட்படுத்தாது செய்த இப்பேருதவி வேறு யாராலும் செய்தல் இயலாது. 'இதனை இதனால் இவன் முடிக்குமென்றாய்ந், ததனை யவன்கண் விடல்' என்றவாறு திருவருளே அந்நிய சாத்தியமாகாத இவ்வருஞ் செயலை இவர்களிடம் செலுத்தி உடனின்று உபகரித்ததென்பது எனது துணிபு.

இவ்வாராய்ச்சிநூல் மனத்திருளை நீக்குதலின் ஞானபாநு; மெய்ம்மை விளக்கி மகிழ்வித்தலின் ஞானவாரமுதம்; அறிவளைத்தும் ஈதலின் இருபெரு நிதியம்.

இந்நூலிலே மந்திர ராஜமாகிய பிரணவம் வடமொழியேயென்பது வடமொழி இலக்கண விதிப்படிச் சிவார்க்கமணிதீபிகையிற் கூறப்பட்டவாறு நன்கு விளக்கப்பட்டிருப்பது மிகவும் பாராட்டத்தக்க விஷயமாகும். மகேந்திரமலை கைலாயமேயென்று அவர்கள் துணிந்திருப்பது, அருச்சுனனுக்கு வேட்டுருவத்திற் சிவபெருமான் அருள்புரிந்த செய்தி கூறுவதாகிய 'வண்டார் குழலுமை நங்கை முன்னே மகேந்திரச் சாரல் வராகத்தின்பின், கண்டார் கவல வில்லாடி வேடர் கடிநாயுடன் கைவளைந்தா யென்னும்' என்னும் திருவிசைப்பா அருள் வாக்கினால் வலியுறுத்தப்படுகின்றது. சிவாரூட சித்தரைப்பற்றிப் பிரஸ்தாபித்த விஷயம் முற்றிலும் உண்மையே; அச்சித்தரை நானும் நேரிலறிவேன்; அச்சித்தர் விளக்க வியாசத்தாரோடொப்பச் சமுதாய சச்சரவிலீடுபட்டவரென்பதனை அவரியற்றிய மக்கட் சட்டமே புலப்படுத்தும்.

வேதத்திற்குப் பொருள் நிருக்த முதலிய ஆறங்கங்கள் புராண இதிகாசங்கள் பரம்பரை வழக்கு என்னும் இவற்றைப் பற்றிக் காணுதல் வேண்டும். அவ்வாறன்றித் தற்காலம் உரையெனக் காணப்படும் சாயனருரை, மஹீதரருரை, ராவணருரை, ஹரிஸ்வாமியுரை முதலியனவெல்லாம் வேதப்பொருளை உள்ளவாறு விளக்குவன வன்மையின் மேனாட்டுப் பண்டிதர்கள் கூறும் வரலாற்று முறைகளும் பொருள்களும் போலியாக ஓதுக்கப்படும். ஸ்ரீமாந்: பிள்ளையவர்கள் தமது ஆராய்ச்சிநூலின் 56-வது பக்கத்திற் செய்திருக்கும் ஆராய்ச்சியே அதற்குச் சான்றாகும்.

ஸ்ரீஞானசம்பந்தப் பெருமான் 'வேதம்' சிருட்டிகாலந் தொடங்கிப் பிரளயகாலம்வரை நிலை நிற்பதெனப் 'மறை முத

ஞன்கு மூன்றுகாலமுந் தோன்ற நின்றனை' யென்றருளியும், ஸ்ரீவாகீசப் பெருந்தகை வடமொழி வேதசாகையின் பெயரை யெடுத்தோதிச் 'சந்தோக சாமமோதும் வாயானை' என்றருளியும், ஸ்ரீசுந்தரமூர்த்திகள் 'நாளும், ஞாலத்தான் பாவப் படுகின்றநான்மறையங்கமோதிய நாவன்' என்று அவனைக் கூறியருளியும், ஸ்ரீஅருணந்திசிவம் வேதம் வடமொழியே யென்றும் அஃது அறம்பொருள் இன்பம் வீடென்னும் நான்கனையும் அருளுவதென்றும் 'ஆரியமாயறம் பொருளின்பம் வீடெல்லாமறைந்து' என வெளிப்படக்கூறியருளியுமிருப்ப இச்சுருதி கணங்கட்கு மாறுகவும் இப்பொழுதுள்ள தமிழ் வேதங்களாகிய திருமுறைகளைத் தமிழ் வேதங்களல்லவென நாத்திகம் பேசியும் அத் திருநான்மறை விளக்க வியாசம் செல்லுமாறல் அதனை அறிவுடையார் கொள்ளாரென்பதுயாம் கூறாமலே அமையும். அவ்வியாசத்தினர் கதி ஸ்ரீ வாகீசப் பெருந்தகை காலத்தரசனாகிய குணபரபல்லவனியற்றிய மத்தவிலாசப் பிரகசனத்தில் வரும் பௌத்தபிக்ஷுவின் கதியேயாகும்.

அவ்வியாசத்தினர் தமது அபார முயற்சியாலும் தமிழபிமானத்தினாலும் தமிழுக்குச் செய்த ஒரு பேருபகாரத்தை நாம் மறத்தல் முடியாது. அவ்வுபகாரந்தான் யாதெனின் :— பொய்ப் பொருளுக்கு உதாரணமாக முயற்கோடு ஆகாயத் தாமரை யாமை மயிர்க்கம்பலம் என்று கூறப்படுவதோடு தமிழ் நான்மறை என்பதும் உதாரணமாகக் காட்டுமாறு செய்ததேயாகும்.

ஸ்ரீமாந் : பிள்ளையவர்கள் சித்தாந்த சைவர்களின் பரம்பரையாசரணையை மேற்கொண்டு நடுவுநிலை திறம்பாது சைவ சமய பிரமாண நூல்கள் வடமொழி வேதங்களே யென்னும் உண்மையை மிகுந்த கௌரவத்துடன் எவ்வித மயக்கமும் வாசிப்போருக்கு உண்டாகா வண்ணம் உபகரித்த பேருதவி சைவவுலகத்தால் மிகவும் பாராட்டத்தக்கது.

சைவத்திற் பதிந்த மெய்யன்புடையா ரனைவரும் அ நூலைச் சாவதான சித்தத்துடன் படித்து மெய்யுணர்ந்து சி பெருமான் திருவருட்கிலக்காமாறு வேண்டுகின்றோம்.

---

ஸ்ரீ மாணிக்க வாசகர் அல்லது "நீத்தார்பெருமை" "திருப்புக்கொளியூர் அவிநாசிக் கருணாம்பிகையம்மை பிள்ளைத் தமிழ்" ஆதிய நூல்களின் ஆசிரியரும், சைவ அவைக்களங் களினும் மற்றும் பொதுவிடங்களிலும், உண்மைச்சைவ நெ

யினையும், சிவத்தொண்டர் பெருமையினையும் சொற்பொழிவு செய்யும் சைவப்பெரியாரும் சென்னை சர்வகலாசங்கத்தின் அங்கத்தினரும் ஆகிய கோயமுத்தூர்

C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் B.A. F.M.U.,

எழுதியது :—

சைவத் திருவாளர். திரு. மா. சாம்பசிவம்பிள்ளையவர்கள் எழுதிய "திருநான்மறைவிளக்க ஆராய்ச்சி என்னும் கட்டுரையைப்பார்த்தேன். சைவத் திருமுறைகளிலும் மற்றும் ஆன்றோர் வாக்குகளிலும் "நான்மறை" என்றதொடர் பலகாலும் பயின்றுவருதல் காணப்பெறுகின்றது. அச்சொற்றொடர்க்குப் பொருளாவது வடமொழியில் இப்போது வேதம் என வழங்கப்படுவனதாம் என்பது தொன்றுதொட்டுப் பயின்று வருவதாகும். அதனை அன்றெனக் காட்டப் புகுந்து தமிழில் நான்மறைகள் இருந்தன; அவை பின்னர் அழிவுற்றன என்றகொள்கையை நிறுவச் சைவத்திருவாளர் கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள் "செந்தமிழ்ச் செல்வி" யில் "திருநான்மறை விளக்க" மெனப் பெயரிட்டு ஒருகட்டுரை யெழுதினார்கள். இக்கட்டுரையினெழுந்தவாதங்களைப் பல ஆதாரங்கள்காட்டி மறுத்துப் பழயகொள்கையை வலியுறுத்த எழுந்தது திருவாளர் சாம்பசிவம்பிள்ளையவர்களது இவ்வாராய்ச்சியாகும்.

திருவாளர் சுப்பிரமணியபிள்ளையவர்கள் கட்டிய முடிபுகள் பலர்க்கும் உடன்பாடாவன அல்லனவாய் நின்றன. திருமூலர் முதற்சிவஞான முனிவர்வரைப் பல பெரியாரும் தமிழ் நான்மறை யென யாண்டும் சுட்டக்காண் கின்றிலம். அதுவேயன்றி, "இன்றமிழ்மறைதந்தார்"; "வேதந் தமிழால் விரித்தார்" என்றற்றொடக்கத்த திருமுறைத் திருவாக்குகள் தமிழ்நான்மறைக்கு மாறுபடுவனவாய்க் காணப்படுகின்றன. ஆதலின் அது இன்னும் ஆராய்ச்சிக்கு இடனாய் நிற்கின்றது.

திருவாளர் கா. சுப்பிரமணியபிள்ளையவர்களுக்குத் தமிழின்கணுள்ள ஆர்வம் மிகவியக்கத்தக்கது. பண்டைக் கொள்கைகளிலும் திருமுறையாதி திருவாக்குகளிலும் திரு. மா. சாம்பசிவம்பிள்ளையவர்கள் கொண்டுள்ளபற்றும் ஆர்வமும் அதுகாரணமாக வேறொருபற்றுமின்றி மிகத்தளர்ந்த மூப்பிலேயும் மேற்கொள்ளும் முயற்சியும் அதனினும்மிக்க அதிசயம் விளைத்துநின்றன.

தொன்றுதொட்டு அடிப்பட்ட சான்றோரான் வழங்கப்பட்டுவந்த கொள்கையினை உறுதிப்படுத்தத் திரு. மா. சாம்ப

சிவம்பிள்ளையவர்கள் எழுதிய இவ்வாராய்ச்சி பெரிதும் பயன் தரும் என்பதில் ஐயமில்லை.

சேக்கிழார் நிலயம், கோவை,
அட்சய, சித்திரைத் திங்கள் 21-வது நாள்.

---

யாழ்ப்பாணத்து வட்டுக் கோட்டைக் கண்ணலிங்கேச்சுர சுவாமி கோயிலாதீன கர்த்தரும், [illegible], [illegible] சாரகரும், கந்தரட்டி புராணம் [illegible] வைத்தியசூடாமணியாரும், ஆகிய

பிரமஸ்ரீ சிவசுப்பிரமணிய சிவாசாரியாரவர்கள்
அபிப்பிராயம் இது:—

சைவ நூலாராய்ச்சியிற் பெரிதும் வல்லுநரும், ஆங்கிலங் கற்றுச் சப் மாஜிஸ்திரேட் உத்தியோகம் பார்த்தும் அன்பர் பெரும்பேறாகிய சிவபூசையைச் சிறிதும் விதிவழுவாது இன்புற நடத்துகின்றவரும், சைவ சமயாபிமானிகளுள் தலையாய முதல் வைத் தெண்ணப்படுபவரும் ஆகிய ஸ்ரீமாந்: திரு. மா. சாம்பசிவம் பிள்ளையவர்கள், ஸ்ரீ கா. சுப்பிரமணிய பிள்ளை "அட்வக்கேட்" பெருங்கேட்டிற் கேதுவாக வெளிப்படுத்திய "திருநான்மறை விளக்கத்" தைப் பன்முறை ஆராய்ந்து அவ்வளவும் புரட்டும் கற்பனைகளுமா யிருத்தலையும் [illegible] சாத்திரமுரணாயிருத்தலையும் செவ்விதிற் றேர்ந்து, [illegible] யினமையாது "நாம் பெற்ற வின்பம் பெறுக இவ்வையகம்" என்ற வண்ணம் அவற்றையெல்லாம் பிறரும் அறிந்துய்ய மொழிதற் பொருட்டு ஆவலைப் பிரமாணங்களால் மறுத்து அதற்குத் "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" எனப் பெயர் தந்து அச்சிட்டு அதில் ஒரு பிரதி அனுப்பி எமது அபிப்பிராயத்தை தெரிவிக்கும்படி கேட்டிருக்கின்றார்கள்.

எமது அபிப்பிராயத்தை மிக விரித்துச் சொல்லுதற்கு மனங் கருதுகின்றது. அதற்கு மிக முகிர்ந்த வயோதிகம் இடந் தராமையால் "சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்" என்னும் யுத்திப்படி கூறுவான் றொடங்குகின்றாம்.

நாம் இத் "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" என்னும் அரிய பெரிய நூலைப்பார்க்கத் தொடங்கிப் பார்வையிட்டு வரும் போது வயோதிகம்பற்றி மனம் சீக்கிரம் இளைத்துவிடின், உடனே பார்த்தலை நிறுத்திவிடுவேன். இவ்வாறு பார்வையிட்டு முடிக்க இரண்டு வாரங்கள் சென்றுவிட்டன. "விளக்கத்" திலுள்ள புரட்டுகளையும், சைவ சாத்திர முரண்களையும், கற்

சிவம்பிள்ளையவர்கள் எழுதிய இவ்வாராய்ச்சிபெரிதும் பய
தரும் என்பதில் ஐயமில்லை.

சேக்கிழார் நிலயம், கோவை,
அட்சய, சித்திரைத் திங்கள் 24-வது நாள்.

---

யாழ்ப்பாணத்து வட்டுக் கோட்டைக் கண்ணலிங்கேசு
சுவாமி கோயிலாதீந கர்த்தரும், பௌராணிகரும், சைவப் பி
சாரகரும், கந்தசட்டி புராணம் சிவராத்திரி புராணம்முதலி
வற்றின் ஆக்கியோரும், ஆகிய

பிரமஸ்ரீ சிவசுப்பிரமணிய சிவாசாரியரவர்கள்
அபிப்பிராயம் இது :—

சைவ நூலாராய்ச்சியிற் பெரிதும் வல்லுநரும், இங்கிலீ
கற்றுச் சப் மாஜிஸ்திரேட் உத்தியோகத் தமர்ந்தும் ஆன்ம
பெரும்பேறாகிய சிவபூசையைச் சிறிதும் விதிதவறாது இன்று
நடத்துகின்றவரும், சைவ சமயாபிமானிகளுள் தற்கால
முதல் வைத் தெண்ணப்படுபவரும் ஆகிய ஸ்ரீமாந்: திரு. மா
சாம்பசிவம் பிள்ளையவர்கள், ஸ்ரீ கா. சுப்பிரமணிய பிள்ளை
"அட்வக்கேட்" பெருங்கேட்டிற் கேதுவாக வெளிப்படுத்தி
"திருநான்மறை விளக்கத்" தைப் பன்முறை ஆராய்ந்
அவ்வளவும் புரட்டும் கற்பனைகளுமா யிருத்தலை யன்றிச் சை
சாத்திரமுரணாயிருத்தலையும் செவ்விதிற்றேர்ந்து, தேர்ந்தமை
யினமையாது "நாம் பெற்ற வின்பம் பெறுக விவ்வையகம்"
என்ற வண்ணம் அவற்றையெல்லாம் பிறரும் அறிந்து மயக்
மொழிதற் பொருட்டு மூவகைப் பிரமாணங்களான் மறுத்து
அதற்குத் "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" எனப் பெயர்
தந்து அச்சிட்டு அதில் ஒரு பிரதி அனுப்பி எமது அபிப்பி
ராயத்தை தெரிவிக்கும்படி கேட்டிருக்கின்றார்கள்.

எமது அபிப்பிராயத்தை மிக விரித்துச் சொல்லுதற்கு
மனங் கருதுகின்றது. அதற்கு மிக முதிர்ந்த வயோதிகம் இடந்
தராமையால் "சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்" என்
னும் யுத்திப்படி கூறுவான் றொடங்குகின்றாம்.

நாம் இத் "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" என்னும்
அரிய பெரிய நூலைப்பார்க்கத் தொடங்கிப் பார்வையிட்டு வரும்
போது வயோதிகம்பற்றி மனம் சீக்கிரம் இளைத்துவிடும்.
உடனே பார்த்தலை நிறுத்திவிடுவேன். இவ்வாறு பார்வையிட்டு
முடிக்க இரண்டு வாரங்கள் சென்றுவிட்டன. "விளக்கத்"
திலுள்ள புரட்டுகளையும், சைவ சாத்திர முரண்களையும், கற்

பனைக் கொள்கைகளையும் “ஆராய்ச்சி” ஆசிரியர் மிக நுணுகிக் கண்டுபிடித்து அவற்றை மறுத்திருக்குந்தேற்றம் அறிஞரால் மிக வியந்து கொண்டாடத்தக்கது. இனி விரிக்கச் சத்தியிடந்தரவில்லை. ஆதலால் சுருக்கமாய் விளக்கி முடிக்கப் போகின்றோம்.

நாம் இத் “திருநான்மறை விளக்க வாராய்ச்சி” என்னும் விசிட்ட நூலை ஆராய்ந்து அதிற் சொல்லப்பட்டன வெல்லாம் சத்தியம் சத்தியம் முக்காலும் சத்தியம் என்று தெளிந்து அந் நூல் உயிர்க்குறுதி பயக்கும் நன்னூலெனக் கைக்கொண்டேம். அதில் வரைந்து உதாகரித்து மறுத்துச் சொல்வன யாவும் கற்றோர்க்கும் மற்றோர்க்கும் இன்றியமையாத அறிவுப்பெருஞ் செல்வமாகிய அரும் பொருள்களென நன்றாக வற்புறுத்துகின்றாம்.

இந்த அரிய பெரிய நூலை இயற்றி உலகோபகாரமாக்கிய திரிசிரபுரம், ஸ்ரீமத் சாம்பசிவம் பிள்ளையவர்கள் தற்காலத்துச் செய்யும் அருஞ் செய்கைகளையும், இனிமேல் உலகம் திருந்துதற் கேற்ற வழி வகைகளையும், மேலும் மேலும் அபிவிருத்தி செய்தருளும் வண்ணம் எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளாகிய பரமசிவனைத் திரிவித கரணங்களாலுஞ் சேவித்து, அப் பிள்ளையவர்கள் அரோக திடகாத்திரராய்ப் பூரணாயுசுடன் வாழ்கவென ஆசீர்வதிக்கின்றாம்.



“கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன்—நற்றாள் தொழாஅ ரெனின்” என்றவண்ணம் வாலறிவன் நற்றாளன்றி மாலறிவர் சிற்றொழாதவரும், சிவனடியவரைச் சிவனெனக் கண்டு வழிபாடு செய்பவரும், பொதுநன்மை கருதியும் சிறப்புநன்மை கருதியும் இலங்கை இந்தியா என்னுந் தேயங்களில் நடைபெறும் பல பத்திரிகைகளுக்கு விஷயதானஞ் செய்யும் ஞானவள்ளலும், வண்ணைவைத்தீசுரர் ஒருதுறைக் கோவையாசிரியரும், சைவதூஷண கண்டனத்தாளாளரும், சுத்தாத்துவித சைவ சித்தாந்தியும், அருங்கலை விநோதரும், “கற்றவந் நற்றுணை” வரும், “உடுக்கையிழந்தவன் கைபோலவாங்கே—யிடுக்கண் களைவதாநட்பு” என்றவண்ணம் நட்பினரிடுக்கண் விரைந்து களைபவரும், திருமுறைப்பாராயணரும், பொதுநலப் பிரியரும், கவிராசருமாகிய மகாவித்துவரத்தினம் யாழ்ப்பாணத்து வண்ணை நகர்

ஸ்ரீமத். வைத்தியலிங்க பிள்ளையவர்கள்

அபிப்பிராயம் இது :—

"நிலையிற் பிரியேல்" என்னுந் தலைமைச் சூத்திரப்படி தமக்குரிய எவ்வகை நிலையிலுஞ் சற்றும் [illegible] மகிமை பொருந்திய கொள்கையினராய், "ஓதுவதொழியேல்" என்னும் போதனார் சூத்திரப்படி சித்தாந்த சாத்திரப் [illegible] கையும் திருமுறை பண்ணியல்பையும் விசேடமாக ஓதுதலையே பொழுதுபோக்கும் விநோதமாகவுடையவரும், "ஞயம்பட உரை" என்னுஞ் சூத்திரப்படி தாம் பேசுஞ் சொற்களில் தமக்கும் பிறர்க்கும் நன்மையுண்டாகப் பேசுபவரும், "அறஞ்செய விரும்பு" என்னுஞ் சூத்திரப்படி பசு புண்ணிய சிவபுண்ணியங்களைப் பகுத்துணர்ந்து அவற்றுள் விசேட புண்ணியங்களையே விசேடமாகச் செய்பவரும், "ஊக்கமது கைவிடேல்" என்னும் [illegible] சூத்திரப்படி தம்முயிர்க்கும் பிறவுயிர்க்கும் உறுதிப்பயப்பதிதுவே யெனக் கருதித் தாம் மேற்கொண்ட "ஆராய்ச்சித்" தொழிலில் மனந்தளராமையைக் கைவிடாதவரும், "எண்ணெழுத்திகழேல்" என்னுங் கண்மணி யனைய சூத்திரப்படி தருக்க இலக்கண மிரண்டையுந் தமது கண்களாகப் போற்றி யொழுகுபவரும், "இயல்பலாதன செய்யேல்" என்னும் மயிலாக சூத்திரப்படி [illegible] பொருத்தமில்லாதவைகளைச் சத்தமுஞ் செய்யாதவரும், "[illegible] பதுவிரதம்" என்னும் மாப் பெருஞ் சூத்திரப்படி உயிர்களுக்குத் தீங்குசெய்யாமல் அவைகளைக் காப்பாற்றுவதே விரதமாகவுடையவரும், * "கிழமைப்படவாழ்" என்னும் பழமைச் சூத்திரப்படி தம்மிடத்திலுள்ள பொருள் பிறருக்கும் உரிமையாகும்படி வாழ்பவரும் "நூல்பல கல்" என்னும் [illegible] மாண்பார் சூத்திரப்படி அறிவை வளர்க்கின்ற நூல்கள் பலவற்றையுங் கற்றுக்கொள்பவரும், "சிவத்தைப் பேணிற் றவத்திற் கழகு" என்னும் அவத்தைப்பாற்று மருந்துச் சூத்திரப்படி சிவத்தைப் பேணிச் சிவபூசை செய்பவருமாகிய திருச்சிராப்பள்ளி வித்துவ சிகாமணியாகிய சாம்பசிவம் பிள்ளையவர்கள் தாமியற்றித் "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" [illegible] நாமம் புனைந்து அச்சிடுவித்த பிரதி யொன்று எம்முடைய உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்தித் தரும்படி [illegible] வைக்கனுப்பியிருக்கின்றார்கள்.

நாம் அவ் "வாராய்ச்சி" நூலைப் படித்துப் பார்த்து [illegible], ஸ்ரீ. கா. சுப்பிரமணிய பிள்ளை எம். எ. எம். எல். அவர் [illegible] கேட்டு, அவர்கள் "திருநான்மறை விளக்கம்" [illegible]

* இப்புண்ணியர் தாம் இயற்றி அச்சிட்டு வெளிப்படுத்திய பல்வகை "ஆராய்ச்சி" நூல்களாலும் இவர்கள் தம் பொருள் பலர்க்கும் பயன் படும்படி வாழ்பவர் என்பது அறியலாம்.

ஸ்ரீலஸ்ரீ, ஆறுமுகநாவலரவர்கள் யாழ்ப்பாணத்து வண்ணை நகர்ச் சைவப்பிரகாச வித்தியாசாலை உபாத்தியாயரும், சைவப் பிரசாரகரும், பொதுநன்மைப்புதினப் பத்திரிகைகட்கும் முப்புநன்மைப் புதினப்பத்திரிகைகட்கும் விஷயதானஞ் செய்தவரும், வித்தியாவிநோதசபைக் காரியதரிசியும், கொக்குவில் சித்தனுநகர்ப் பிள்ளையார் கோயிலாதீன தருமகர்த்தரும், மதுரைத் தமிழ்ச்சங்க அங்கத்தராயிருந்து தமிழைப் பலவழிகளாலும் பரிபாலித்து வந்த வித்துவசிரோமணியாகிய ஸ்ரீமத் அ. குமாரசுவாமிப் புலவரவர்கள் நன்மாணுக்கரும் ஆகிய

கௌரவ பிரமஸ்ரீ, சீ. முருகேசையரவர்கள்

அபிப்பிராயம் இது:—

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக."

எனவுத்தர வேத முறைத்தாங்குக் கற்கவேண்டு நூல்களைக் கசடறக் கற்று அக்கற்றலுக் கேற்ப நிற்கவேண்டு நிலையில் நிற்கும் வித்துவ சூளாமணியாகிய சிவஞானச் செல்வர் ஸ்ரீமத் திரு. மா. சாம்பசிவ பிள்ளையவர்கள் "செந்தமிழ்ச் செல்வி" என்னும் மாசிக வாசிக பத்திரிகையிலே ஸ்ரீமத் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் வெளிப்படுத்திய "திருநான்மறை விளக்க" த்தில் உள்ளனவற்றை அநுவதித்துத் தக்க பிரமாணங்களால் மறுத்துத் "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" எனப் பெயரிட்டு அச்சிடுவித்த பெருநூலில் ஒரு பிரதி எமக்கனுப்பி எமதபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படி கேட்டிருக்கின்றார்கள். யாம் அந்நூலை முற்றநோக்கி யாவர்க்கும் பயன்றருவதொருநன்னூலெனக் கண்டு கருத்துளடங்கா மகிழ்பெருங் களிப்புக்கொண்டேம். எம்மைப்போலவே எமது சைவசமயிகள் யாவரும் இந்நூலை வாங்கிப் படித்துணர்ந்து களிப்புறல் வேண்டும் என்பது எமது கருத்து.

அரசாங்க புருடர்கள் எழுதிவிட்டால் பகுத்தறியும் அறி வாற்றலில்லாரெல்லாரும் அதனைச் சரியெனக்கருதி மயங்குவர். எழுதினவரின் கல்வி, சமயபத்தி, சமயநூல் வழியொழுகும் ஒழுக்கம், உண்மை, நீதி முதலியவற்றை நோக்கி மதிப்பாரை அரியராயினர். ஸ்ரீ கா. சு. முதலானவர்களைப் பின்பற்றி மற்றுமதிகார வர்க்கத்தினரும் பிறரும் மயக்கமுற்று ஆன்ம லாபத்தை இழவாவண்ணம் அதிகார புருடராகிய ஸ்ரீ சாம்பசிவ பிள்ளையவர்கள் இக்காலத்துத் "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" என்னுமிந்நூலியற்றியதுமிகவும் உசித

யாம். "விளக்க" முடையார் கொள்கைகளை "ஆராய்ச்சி" உடையார் மறுத்திருக்கும் திட்பமும் நுட்பமும் சிறப்பும் நல்லறிவாளர் எல்லோரும் வியக்கற் பாலனவேயாம்.

உலகத்திலேயுள்ள உண்மைச்சைவர் யாவரும் ஒற்றுமை யடைந்து நிற்கின்ற இடத்திலே ஸ்ரீ கா. சுப்பிரமணிய பிள்ளை யவர்களுக்கும், ஸ்ரீ. வேதாசலம் பிள்ளையவர்களுக்கும், அவ் விருவரும் சொல்லுவனவற்றையும் எழுதுவனவற்றையும் ஆராய்ச்சியின்றி நம்புவோர்களுக்கும் வேற்றுமை தோன்றின் விலக்குவார் யாரே!

உலகர் "கண்டது கலக்கும் பளிங்குபோலச்" சார்ந்ததன் வண்ணமாந் தன்மையராதலின், மேலே சுட்டப்பட்ட இருவ ரும் எழுதிய விடயங்களை நோக்கினபோது அவர் கொள்கைய ராயினர் சிலர், ஸ்ரீமத் சாம்பசிவ பிள்ளையவர்கள் எழுதிய "திருநான்மறைவிளக்க ஆராய்ச்சி"யை நோக்கும்போது "ஆராய்ச்சி" நூலுடையார் கொள்கையினராவார் என்ப தொருதலையென நாம் சொல்லவும் வேண்டுமா!

"ஆராய்ச்சி" நூலை அமைந்து நோக்கும்போது, அதனாக்கி யோராகிய சிவஞானச்செல்வராம் ஸ்ரீமத் சாம்பசிவ பிள்ளை யவர்களே, சைவசமயந்தழைத்தோங்குதற் பொருட்டுத் தமது உடல் பொருளாவி மூன்றையும் உதவிய பெரியார் என்பது பெரிதும் விளங்குகின்றது.

ஸ்ரீ கா. சு. முதலானவர்களுக்குப் பிரதிகளில் இல்லாத "பிரதிபேதம்," "இடைச்செருகல்," உண்மைக்கு மாறுபட்ட உரைகள், மெய்யறிவிற் பெரியார் வெஃகாத கொள்கைகள் என்றின்னன வேராளமாயுள்ளன. ஆற்றுதார் கூற்றுக்களவு மில்லை.

இவர்கள் கொள்கைக்கு மாறுக நாமும் சில எழுதுகின் றும். தமிழர் வேறு; ஆரியர் வேறு; என்று பகுத்தல் முடி யாது; என்னை! கடவுள் வழிபாடு, பாஷை, தேசாசாரங்கள் கலந்திருத்தலாலென்க.

ஆரியரையும் ஆரியநூல்களையும் நீக்கிவிட்டால், தமிழர் ஒன்றுமிலராய்க் குன்றுவரே! அந்தோ! தமக்கும் உரிமை பூண்ட ஆரியநூலை ஆரியர்க்கேயுரியதென அவர்மீது கொண்ட கோபத்தாற் கைவிட்டுத் தாம் வறியராக முயலுதலை நோக்கும் போது எமது தம்பியர்கள் இக்கதியடையலாமா என்னும் இரக்கம் எமக்குத் தவநனியுண்டு. அந்நிய தேயத்தார் ஆரிய நூல்களைக் கூட்டுண்டன்றோ அறிவுப் பெருஞ் செல்வராயினர். அவர்கள் ஆரியமே எல்லாவற்றிற்கும் மூலம் என்று பலப்பல

புத்தகங்களில் வெளிப்படுத்திப் புகழ்ந்து கொண்டாடு மேன்மையடையக் கண்டிருந்தும், நமது சகோதரர் தமது பொருளை அவர்க்குக் கொடுத்துத் தாம் அவற்றை அடை விரும்பாது வெறுத்தல் விதியார் செய்த சதியே! "விதிவ புந்தியு மேவுமேகொலாம்"

"யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும்—ஏனை
வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாங் கொண்ட
மனையாளை மாற்றார் கொள."

ஆகலான் நாமிரங்கியும் ஆவதொன்றில்லை. ஆயினுஞ் சகோ தரவாஞ்சை புத்திசொல்லுகவென்று பிடர்பிடித் துந் கின்றது. அதுபற்றி இத்துணை எழுதினேம். இனி அப்பா செல்வாம்.

இருபெரு மக்களே!

கடவுள் வழிபாட்டுநூல், சோதிடம், சிற்பம், வைத்திய முதலிய தமிழ் நூல்கள் ஆதியிலே யுண்டு; அப்போதே யழிந் விட்டனவென்றால், அன்று முதல் இன்று வரை ஆரியத் துள்ள அந்நூல்களும், ஆரியருமன்றித் தமிழ்ச் சகோதர களுக்கு அவற்றைத் தெரித்தார் பிறரில்லையே! ஆகலான், "எ நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை—செய்நன் கொன்ற மகற்கு" என்ற திருக்குறளைச் சிந்தித்து உங்க சகோதரர்களாகிய ஆரியரோடும், உங்கட்கும் பிதிரார்ச்சிதம யுள்ள ஆரியபாடை நூலோடும் நண்பாயிருந்து உண்மை கடைப்பிடியுங்கள்.

சற்காரியவாதங் கூறுஞ் சைவசித்தாந்தத்தின்படி "உ ளதுபோகாதில்லதுவாராது;" "முயற்கோடு" முதலிய போல. ஆகலான், வேதாகமங்கள் காரியப்படும்போது தூ மாயும், காரியப்படாதபோது காரணத்தில் சூக்குமமாயு என்றுமுள்ளன. அவை சிருட்டிதோறும் காரியப்படுவன சிலபோது ஆன்மாக்களது கன்மகாலங்கட் கேற்ப அவைகள் சிவாஞ்ஞையால் மறைக்கப்படும்போது உமாதேவியார், விண்டு பிரமா முதலியோர் வேண்ட உடனே வெளிப்படுத்தப்படும் அஃதன்றி மூன்று முகந்தோறும் மறைகளை நன்கு விளக் முறைச் செய்ய வியாசர் சிவாஞ்ஞையால் வருவர்; சிவபிரானு மறை ஞானத்தைப் போதிக்கத் தென்முகத் தெய்வமாய் வருவர். அவருடன் நான்கு மாணாக்கரும் வருவர். அது:—

"முறையின்வந் தெய்து மூன்று முகந்தொறு முடிவி லாத
மறவறு தவத்து வேத வியாதன்வந் துதிப்ப னன்னோன்
அறிவரு மறைக ளியாரு மறிந்திட வேண்டி யன்பால்
நெறியினிற் பகுத்து மன்னு முலகினி னிகழ்த்து வானே."

"உலகமுய்ந் திடுவான் ஞான மொழிவற வுணர்த்த வேண்டி
மலைவறு ‡தவத்தோ னாகி வருகுவன் யானு மென்பால்
அலைவறு மன்பி னோடு மடைகுவர் நால்வரன்னோர்
தலைமைசேர் ஞான மெய்திக் கைலையங் கிரியிற் சார்வார்"

என்னும் இலிங்க புராணத்தாலும்,

"கொடுத்தவா கமந்தா னுள்பல கழிய விறத்தலுங் கொங்கலர் கூந்தல்
மடத்தகை யுமையா ளிறைவனை நோக்கி மாய்ந்தவா கமமெலா மெடுத்து
நடத்திடல் வேண்டு மென்னலு மைத்த நள்ளிரு ணடுவெனின் றாடும்
விடைக்கொடி யுயர்த்தோ னாகம முழுது முன்புபோல் விளங்கிட
[விரித்தான்."

"விரியுமா கமத்தை யண்ண றன் னருளால் யானுமெய் தெரியகத் தியனும்
பொருவிலா ருருவுந் ததீசியு முலகி லுமைசெய்தேங் கலியுகம் பொருந்தி
மருவிடுந் தோறு மறுவறு *யோகா சாரியன் மாசறு வடிவாய்க்
கரியுரி போர்த்தோ னெய்திமற் றதனை யுய்ந்திடக் கழறுவ னன்றே"

"கழறிட வெய்து காலக டோறுங் காசின்மா ணாக்கர்க ளல்வர்
பழுதற வடைவா ருய்ந்திட வுணர்ந்தோர் மற்றவர் பங்கய மலர்த்தாள்
தொழுதன ரேத்தி விரித்தவா கமத்தைத் துகளற வுணர்ந்துநஞ் சிவன்றாள்
உழுவலன் போடு முளத்தினி லிருத்தி யோங்கிய முத்திசேர் குவரால்"

"என்றலு நாலா முகம்வருந் தோறு மெய்திடு குரவர்தம் பெயரும்
ஒன்றிய வறிவா லுயர்ந்தமா ணாக்கர் பெயருநீ யுரைத்தியா லென்ன
மன்றலந் துளவ மலர்புனை கண்ணன் வணங்கிமுன் னின்றன னுரைப்பத்
துன்றுவார் சடிலத் திறையவன் மலர்த்தா டொழுதுப மன்னியுப்
[பகர்ந்தான்"

என்னும் வாயுசங்கிதையாலு முணர்க.

நாலா முகந்தொறும் எய்திடும் குரவர் பெயரும் மாணாக்கர் நால்வர் பெயரும் விரிப்பின் மிகப்பெருகும்; ஆகலின். வாயுசங்கிதையிற் காண்க.

இப்பிரமாணங்களாலும் வேதாகமத்தோற்றம் சிவபிரானிடத்ததென்பது செவ்வனே உணர்க. வேறு கூறுவன விழல்,

"திருநான்மறை விளக்கம்" முழுதும் சைவசாத்திரங்களுக்கும், சைவப்பெரியோர் ஆட்சிக்கும் முற்றும் விரோதமே என்பதும், அதனைநம்பினோர் ஆன்மலாபத்தை இழந்து துன்

---

‡ தவத்தோன்-தக்கிணாமூர்த்தி

* யோகாசாரியன்—தக்கிணாமூர்த்தி.

புறவர் என்பதும், ஆதலால் அதனைச் சைவசமயிகள் இன்
தற்கும் அருகரல்லர் என்பதும், கட்டளைச்சட்டமின்றி அ
சன் செங்கோல் நடாத்தாதவாறுபோலக் கடவுள் வேதாக
மாகிய சட்டமின்றி உலகத்தைநடத்தார்; ஆகலான், வேதா
மங்கள் ஒருகாரணம்பற்றி மறைந்தாலும் பின்பு தோற்றுவித்து
விடுவார் என்பதும், அங்ஙனந் தோற்றுவியாதிருந்தால் அவ
கருணைக் கிழுக்கென்பதும், தக்கனுக்குத் ததீசிமுனிவர் சொ
ன உண்மைகளை அவன் நன்றாக அறிந்தமைவைத்தும் பின்னும்
இறைவனைமதியாமைக் கேது இருந்தமைபோல, ஸ்ரீ, கா. சு
பிரமணியபிள்ளை யவர்களுக்கு வேதாகமங்கள் இறைவன் வா
கென்பதும், நால்வர் சனகனாதியர் என்பதும், இவர்போல ஒ
வொருகலியுகத்தும் நால்வர் மாணாக்கர் வெவ்வேறு பெயருடன்
வந்தனர்; இன்னும் அப்படியே வருவாரென்பதும், நன்
தெரிந்திருந்தும் அவற்றை மதியாது முரண்படப் பேசுதற்கு
ஒரு பெரிய ஏது உண்டென்பதும், அவ்வேது நீங்கினு
மதித்துப் பொருத்தமுறப் பேசுவார் என்பதும், பிறவு
"திருநான்மறை விளக்க வாராய்ச்சி" என்னும் நூலையும்
வாயிலாகக்கொண்டு அறிந்துகொண்டேம்.

இத்துணை நன்மைக்கேதுவாகிய மேற்படி "விளக்
வாராய்ச்சி" நூல்செய்த ஆசிரியர் ஸ்ரீமாந் திரு மா சாம்பசி
பிள்ளையவர்கள்நிறைந்த ஆயுளும், நிறைந்தசெல்வமும், நிறைந்
ஆரோக்கியமும், நிறைந்தவன்மையும், இன்னனபிற நன்மை
களும்பெற்று நில்வுலகத்தின்னும் சைவவிரோதமாய்ப் ப
னின்மையோடமையாது கேடும்பயக்குநூல் எழுமாயின் அ
ணையும் நிராகரித்து யாவர்க்கும் பெருநன்மை செய்துகொண்
பேரானந்தப் பெருவாழ்வுறுமாறு எமது குலதெய்வமாகி
விநாயகக்கடவுள் பெருங்கருணை புரியும்வண்ணம் அப்பெரு
மான் திருவடிகளைச் சென்னியிற்கொண்டு தியானிக்கின்றாம்.

---

யாழ்ப்பாணத்து நல்லூரைச்சார்ந்த சிவிகையார்தெரு
சித்திவிநாயக ராலயத் தரும கர்த்தரும், பர்ப
வித்தியாசாலைகட்கு மானேஜரும், இங்கிலீஷ்படித்த வாலிபரு
பிறரும் சைவசமயத்தி னுண்மையுணர்ந்து சைவப்பிரசாரகரா
தற் பொருட்டுச் சரஸ்வதி பாஷாபிவிருத்திச் சங்கமென
பெயரியசபை ஒன்று தாபித்துச் சிறிதுந்தளரவிடாது செ
வனே நடத்திவருபவரும், பெரிய கோர்ட்டு நீதவானாயிருந்த
கவரண்மெண்டார் குடிகளென்னும் இருபாலார்க்கும் நடுநின்று
தமது உத்தியோகத்தைச் "சமன்செய்து சீர்தூக்குங் கோல்
போலமைந்தொருபாற்—கோடாது" நடத்தினமையால் இ

திறத்தார் மதிப்பையும் ஒருங்குபெற்றுத் தற்காலம் இளைப் பாறும் மகாப்பிரபுவாகிய ஸ்ரீமாந். கா சிப்பிள்ளையவர்கள் அருந் தவப் புதல்வருமாகிய அட்வக்கேற் ஸ்ரீமத். அருளம்பலம் என்னும் பொருளம்பலப் பேர்தரித்த மகாவித்துவரத்தினத்தின் அபிப்பிராயம் இது:—

திரிசிரபுரவாசரும், "மறைகணிந்தனை சைவ நிந்தனை பொருமன" முடையாரும், அறிஞர் வியக்கும் ஆராய்ச்சி மதுகைச்சீருறு சான்றோரும், சமயநூல் வரம்பிகவாதிமைய வரும் இறும்பூதெய்த அமைவுடன் ஆதரித்துப் பிரமாணசகிதம் பேசுபவருமாகிய, ஸ்ரீமத் சாம்பசிவ பிள்ளையவர்கள், ஸ்ரீமத் கா. சுப்பிரமணிய பிள்ளை அட்வக்கேட் அவர்கள் "செந்தமிழ்ச் செல்வி" வாயிலாக வெளிப்படுத்திய "திருநான்மறை விளக்க"த்தைக் கண்ணுற்று அதன் கணுள்ளன அப் பிரமாணமெனக் கண்டு, அதனை யாவருமறிந்து இலகுவில் உண்மைகடைப் பிடிக்குமாறு "திருநான்மறை விளக்கவாராய்ச்சி" என்னுஞ் சிறந்த நூலொன்றியற்றி அச்சிடுவித்து அதிற் கட்டாத பிரதி மூன்று எமக்கனுப்பி எமதபிப்பிராயத்தைத் தமக்குத் தெரி விக்குமாறு கேட்டுக்கொண்டனர்.

எமது இலௌகிக உத்தியோகமும் வைதிக வுத்தியோக மும் பிறிது கருமத்திற் பிரவேசிக்கக் காலந்தாராவாயினும், "திருநான்மறை விளக்கவாராய்ச்சி" என்னுமிந்நூலைப் படித் துண்மையுணர வேண்டுமென்னும் பேராசையால் விழுங்கப் பட்ட யாம் அதன் வயத்தராயினமையின் உத்தியோகத்துக் குரிய காலத்திற் சிறிது காலத்தை இந்நூல் படித்தலிற் போக் கிப் படித்து முடித்து அறியாதனவெல்லாம் அறிந்தும், தெளி யாதனவெல்லாந் தெளிந்தும், பூர்வபக்கத்தார் கூறுவனவெல் லாஞ் சைவசாத்திர முரணுன புதுக்கொள்கைகள் என்ப தோர்ந்தும், இத்தகைய மிகக நியாயமான கண்டனநூல் மாந் தர்க்கு "விளக்கத்"திஞல் நேர்ந்த மயக்கொழித் துண்மை தெரித்துறுதி பயத்தற்பொருட்டு அத்தியாவசியகம் வேண்டற் பால தொன்றே யென எமது மனநேர்ந்தும் பேரானந்தப் பெருங் கடலுட்டிளைத்தாம்.

யாமும், எம்மைப்போலவே இங்கிலீஷ்கற்று அட்வக்கேற் உத்தியோக முதலிய பெரிய உத்தியோகங்களில் அமர்ந்துள்ள வர்களும், உயிர்க்குறுதி பயக்குஞ் சைவசமயவிஷயத்திற் சுருதி யுத்தி அனுபவப் பிரமாணங்களைக்கொண்டு மேதாவியர் தாபித் திருக்கின்ற உண்மைகளை உணராது, மனத்திற் றோற்றிய திரி புணர்ச்சியால் அவைகளை மறுக்கப்புகுதல் "ஒப்பிலா மலடி பெற்றமகனொரு முயற்கொம் பேறித்—தப்பிலாகாயப் பூவைப்

பறித்த ''வாறுமன்றிச் சிறிதும் பயன்படா தென்பது இங்கிலீஷ்படித்த எமக்கு நன்குதெரியும். அது கா. சு. “அட்வகேட்” அவர்கள் வெளிப்படுத்திய “திருநான்மறை விளக்கத்” தாலும், சாம்பசிவபிள்ளையவர்கள் இயற்றிய அதனாராய்ச்சியாலும் யாவரும் எளிதில் உணர்ந்து கொள்ளலாம். ஆயினும், விளக்கத்திலிருந்து இரண்டு மூன்று முக்கியவிடயங்களை எடுத்துக்காட்டு முகத்தானே பயன்படாமையை வெள்ளிடைமலைபோற் றெள்ளிதிற் புலப்படுத்துகின்றாம்.

1. ஸ்ரீ, கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் தமிழ் முனிவர் நால்வர் தமிழில் நான்மறை செய்தனர்; தேவாரங்களில் இறைவன் கல்லாலடியில் நால்வர்க்கு நான்மறைகளை நான்மறைப் பொருள்களைப் பகர்ந்தனர் என்று பகுதிகளெல்லாம் தமது கொள்கையைக் குறிக்கின்றன என்கின்றார். இன்னும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த “காதுபொத்தரைக்கின்னரர்” என்பதை முதலாகவுடைய திருநின்றியூர்த் தேவாரம் தமது கோளை வலியுறுத்தற்கு முக்கிய ஆதாரம் என்று சொல்லுகின்றார். இன்னும் “நால்வர்க் கொளிநெறிகாட்டினை” என்னுந் திருஞானசம்பந்த சுவாமிகள் திருவெழுகூற்றிருக்கைத் துணுக்கையும் அதனை வலியுறுத்து மென்கின்றார்.

இவையெல்லாம் அவர் கொள்கையைச் சிறிதும் வலியுறுத் தாமையைச் சித்தாந்த பாநுவாகிய “திருநான்மறைவிளக்க வாராய்ச்சி” நூலாசிரியரவர்கள் பல்லாற்றானும் நன்றாக விளக்கிக்காட்டி அவர் கொள்கையைப் பூர்வபக்கமாக்கி உண்மைக் கொள்கையைச் சித்தாந்தஞ் செய்திருக்கும் அருமை அறிஞர் வியக்கத்தக்கது; ஆகலான் ஆண்டுக்கண்டுண்மை கடைப்பிடிக்க.

“காதுபொத்தரைக்கின்னரர்” என்பதில் கின்னரர் என்னுஞ்சொற்கு ஆந்தைஎன்று ஸ்ரீ அட்வகேற் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பொருள் கூறியிருக்கின்றார்கள். ஆந்தை என்று ஒரு தமிழ்முனிவருக்குப் பெயராயிருக்கலாம் என்கின்றார்கள், இவர்கள் தமிழ்முனிவர் சமஸ்கிருதமுனிவர் என்று நவீனக் கொள்கை ஒன்று மேற்கொண்டனர்கள். இன்னுஞ் சிலகாலத்துள் இங்கிலீஷ்முனிவர் இந்துஸ்தான்முனிவர் என்றொடுக்கத்த முனிவர்களைச் சிருட்டித்தும் விடுவார்கள், யாவரும் விழித்திருங்கள்; பார்க்கலாம்.

இதுபற்றித்தான் தமிழ்சமஸ்கிருத சித்தாந்தசாத்திரங்களை நல்லாசிரியரிடத்துப் பல்காற் பயின்று, பயின்றவண்ணம் ஒழுகலாற் சிறிது சிறிதாகத்திருவருட்கிலக்காய் வாராத இங்கிலீஷ் படித்த நம்மவர் பண்டைநல்லாசிரியர் நியாயவாயிலா னிறுவிய கொள்கையை மறுத்துத் தாம்புதுக்கொள்கை நாட்டமுய

லல் "ஒப்பிலாமலடி பெற்றமகளொரு முயற்கொம்பேறித்—தப்பிலா காயப்பூவைப் பறித்த" வாறுமன்றிச் சிறிதும் பயன்படாதென்று மேமேல கூறினும். இது "ஏதுவின்முடித்தல்" என்னு முத்தி.

கின்னரர் என்பதற்குப்பொருள் ஆந்தைஎன்றும், தமிழ் முனி ஒருவர்க்கு அதுபெயராயிருக்கலாம்என்றும் கூறியதை நோக்குந்தோறும் நகைச்சுவைக்குப் "பார்ப்பனத்தமிழ்" உதாரணமென்று நச்சினார்க்கினியர் தொல்காப்பிய வுரையுட் கூறியது அக்காலத்துக்குரித்து இக்காலத்துக்குச் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் கொள்கைகளையே யுரித்தெனக்கூறல் வேண்டும் என்றும் இனிப் பொருளதிகாரம் அச்சிடுவிப்போர் "பார்ப்பனத் தமிழ்" என்பதை நீக்கிச் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் கொள்கைகளை அச்சிடுவித்தல் வேண்டும் என்றும், அங்ஙனஞ் செய்தற்குப் பிரமாணம் என்னை? என்பார்க்கும் "பழையனகழிதலும் புதியன புகுதலும் வழுவலகால வகையினனே" என்றும் கூறுநிற்பேம்.

கின்னரர் என்பதன் பொருள் ஆந்தை என்று எக்கோசத்திற் கண்டார்! எவ்விலக்கியத்திற் கண்டார்! எவ்வான்றோர் ஆட்சியிற் கண்டார். இவர், ஒரு சொற்குப் பொருள் கோண் முறை இஃதென இலக்கணநூல் கூறுமாறும் அவ்வாறே இலக்கியங்களில் அப்பொருள் கோண்முறை அமைந்திருக்குமாறு கண்டு உரையாசிரியர்கள் உரை கண்டிருக்குமாறும், ஆன்றோரவற்றை உச்சிமேற் கொண்டொழுகுமாறும் ஒரு சிறிதுமறியாது உத்தியோக ஆற்றல் கொண்டு சமய நிலையையும் சாத்திர நிலையையும் ஆன்றோர் நிலையையும் இலக்கண நிலையையும் இலக்கிய நிலையையும் தருக்க நிலையையும், நியாய நிலையையும் மாற்றிப் புதிதாக ஒரு சைவசமயம் வகுத்துவிடலாம் என்று எண்ணங்கொண்டிருக்கின்றார்.

"ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கும்
எனையாளு மீசன் செயல்"

என்றவாறு முடியுமன்றி இவர் எண்ணம் ஒன்றும் பயன்றாது. பயன்றருங்கால் முன்னிலை மாத்திரையே. அந்த முன்னிலையும் வினை யொழிந்தாற் றனே ஒழியுமென்பதை மறுப்பார் யார்.

இவர் கின்னரர் என்பதனை உயர்திணைச் சொல்லென்று அறியாராய் ஆந்தையென அஃறிணைப் பொருள் கொண்டதை

நினைக்கும்போது "குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டியனி
ல்லைக் குறும்பியளவாக்காதைக் குடைந்து தோண்டி யெ
டினமட்டறுப்பதற்கோ வில்லி யில்லை" என்னுஞ் செய்யு
நினைவுக்கு வருகின்றது.

இங்ஙனம் ஒரு சிறிதும் ஒவ்வாத திரிபு பொருள் இ
கொண்டால் "நாரா யணனை நாரயணனென்றே கம்பன்-ஓரா
சொன்ன வுறுதியால் - நேராக - வாரென்றால் வர்ரென்பேன்
என்று காளமேகப்புலவர் அறைந்த வண்ணம் நாம் கின்ன
என்பதற்கு வீணை என்றும், கின்னரப்பட்சி யென்
பொருள் கொள்கின்றும். பொருள்கோண் முறைகளை விடுத்
மனம் போனவாறு பொருள் கொள்ள மற்றையோரும் ஆ
பித்துவிட்டால் இவர் கொள்கையை இவர் தாபித்தற் கெ
செய்வர்!

இவர் அனந்தன், பதஞ்சலிமுனிவர் என்றும், மத்தி
தன முனிவர், வியாக்கிரபாதர் என்றும் கூறப்படுவதா
ஆந்தை என்றும் ஒரு முனிவருக்குப் பெயரிருக்கலாம் என்
திரிபுணர்ச்சி கொண்டார். அவர்கள் அப்பெயரெய்திய க
ணங்களையும் அவர்கடெய்வத் தன்மைகளையும் அவர்கள் பூ
சரிதங்களையும் புடைபட ஒற்றியறியுமறிவின் மதுகையின்
சைவசமயக் கொள்கையும், சைவசாத்திர நுண்மையும், அத
யறிந்தனுட்டானத்திற் காட்டிவைத்த ஆன்றோரருள் வ
மையும் நல்வினையல்லதால் அறியாது நின்று ஏயாக்கும் இ
மேல் யாவரும் இரக்கங்கொண்டு "இடிப்பாரை யில்லா
வேமரா மன்னன்—கெடுப்பாரிலானுங் கெடும்" ஆகலா
இவர்க்கு இடித்துப் புத்தி சொல்லல் வேண்டும். அங்ஙன
சொல்லுபவர்களே "துணைவர் மேலையோர் ஒன்னலர் வி
தவாறுரைக்கின்றார்கள்" என்பேம். நல்வினையல்லது என்
தற்கு "இல்லறமல்லது" என்புழிப்போலப் பொருள்கொள்

இனி, கின்னரர் என்பது கின்னரம் என்னும் வாத்
யத்தை வாசிப்பவர், கிஞ்சித் நரத்தன்மை யுடையவர்க
என்று பொருடந்து பதினெண் கணத்துள் ஒரு வகுப்பா
உணர்த்தி நிற்றல் கோசத்திற்கும் இலக்கண விலக்கியங்கட்கு
ஒப்ப முடிந்த முடிபென்பதைக் கற்றாரை வழிபடுமுறை
வழிபட்டுக் கற்று உண்மை கடைப்பிடியாது இன்னும் இ
னும் விபரீதமே மேற் கொள்வாராயின், கின்னரம் என்பத
பொருள் ஆந்தையன்று ஆட்டுக்குட்டி யென்று நாமும் வ
பிகந்து சாதிப்பான் புகுதற்கு யாது தடையுளதென்றறிக.

இருந்தவாற்றால் அட்வக்கேற் அவர்கள் "கல்லாத மே
கொண்டொழுகல் கசடற—வல்லதூஉமையந்தரும்" என்
திருக்குறளையுங் கருதுவாராக.

இனி, காதுபொத்தரை, என்னுந்தேவாரத்தின் மூன்றும் அடிமுதலே வேதம்செய்தவர் என்றும் அட்வக்கேற் பிரித்து மனம்போனவாறு பொருள்கூறுகின்றார். அங்ஙனம் பிரித் தற்கு இலக்கணம் இடம்தராது. என்னை? மோனையில்லா மையால், மோனையில்லாச் செய்யுட்களும் இலக்கியங்களுட் பயின்றுவரக் காண்கின்றோமெனின், அது பற்றி எமக்கு ஆட் சேபமின்று, மோனையிருக்குஞ் செய்யுளை இல்லாதசெய்யு ளாக்க இலக்கணம் இடந்தாராதென ஆக்ஷேபிப்பேம். ஏதம் என்று பிரித்தால் எய்திய, இன்பம், யானும், இணையடி எனச் சீர்பலவற்றுள்ளும் பல மோனைசெறிந்து மூவகைமோனையுள் உத்தம மோனையாகநிற்கும் பெரியதோர் செய்யுட் சிறப்பை அழிக்க யாரான் முடியும்! ஆகலான் அப்படிப் பிரித்தல்பிழை யென்பதை எழுத்தறி புலவருள் மறுப்பார் யார்?

இனி, இலக்கண வரம்புட்படாது வேண்டியவாறுபிரித்து வேண்டாத பொருள்கூற ஒருவர் தலைப்படின், யாம்எதுகைசீர் முதலியவற்றையும் எம்மனம் போனவாறு திரித்து 'எமக்கு வேண்டியபடி பொருள்கொள்ளுவேம். அப்போது செய்யு ளுறுப்புகள் அழிந்து செய்யுளுமில்லையாகும்; அஃதில்லை யாகவே, பொருள்கோளும் இல்லையாகும், சொல்லுதலுமில் லையாகும்; எழுதுதலும் இல்லையாகும்; நூலும் இல்லையாகும், படிப்பும் இல்லையாகும், வாதமும் இல்லையாகும், ஆகலின், மோனை இயல்பாக இல்லாமலே செய்யுள் செய்யும் புலவன் செய்யுள்செய்துவிட்டால் அது குற்றமாகாது செய்யுளிலக் கணத்திற்கு ஒப்பமுடிந்ததென்றும், மோனை இருக்கும்படி செய்யுள் செய்துவிட்டால் அதினும் உத்தமமோனை இருக்கச் செய்துவிட்டால் மோனைவருமாறு பிரிக்காவிடின் அது குற்ற மாய்ச் செய்யுளிலக்கணத்திற்கு ஒப்பமுடியாதென்றும் நன் கனந்தேறுக.

இலக்கணத்திற்குமாறாக இலக்கியத்திற்குப் பொருள் கோடல் குற்றம்என்பதும் வீடு பேறும் இல்லையாகும்என்பதும் "எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்—மொழித்திறத் தின் முட்டறுப்பா னாகு—மொழித்திறத்தின்—முட்டறுத்த நல் லோன் முதனூற்பொருளுணர்ந்து—கட்டறுத்து வீடு பெறும்" என்னும் வெண்பாவாலறிக.

இனி, வேதம் என்று பிரித்தமைக்கு மோனை வேண்டு மானல் "எய்தியவின்பம்" என்பதில் "வின்பம்" மோனை யென்றார். "வின்பம்" என்று ஒரு சொல் எங்குள்ளது? எய்திய இன்பம் என்னும் பதங்கள் முறையே உயிரீறும் உயிர் முதலுமாய் நிற்றலின் உயிர்மேலுயிர் ஏறிப் புணராது;

சமயவிரோதிகளாய், சிவதூஷகராய், வேதாகமநிந்தகராய், சமயாசாரிய நிந்தகராய், சந்தானுசாரிய நிந்தகராய், சைவத்தை வளர்க்கும் தற்காலப்பெரியார் நிந்தகராய் வருவாருளரேல், அவர்கள் நவீனக்கொள்கைகளையும் கண்டித்துச் சைவசமயத் துண்மையை நிறுவி உலகத்துநன்மக்களைப் பலவிதத்தாலும் ஓம்பிப் பேரானந்தத்தோடு பிரகாசப் பெருவாழ்வுறுமாறு பேரருள்புரிந்தருளும் வண்ணம் எமதுகுலதெய்வமாகிய பெருங் கருணைப் பிழம்பாயுள்ள சித்திவிநாயகர் திருவடியிணையை எம் புந்தியிலிருத்தி அந்தியும்பகலும் மனமாரச் சிந்திதஞ்செய்து, வாயாரவாழ்த்தி, தலையாரக் கும்பிடுகின்றோம்.

---

யாழ்பாணத்துக் கந்தவனக் கோயிலர்ச்சகரும், சைவப் பிரசாரகரும், புராணிகரும், தமிழ் சமஸ்கிருத பாஷா வல்லுநரும், ஆன்மார்த்த பரார்த்தங்களை மந்திரங் கிரியா பாவனைகள் வழுவாது செய்தலில் அதிசமர்த்தரும் மகா வித்துவானுமாகிய

பிரமஸ்ரீ **கனகசபாபதி குருக்களவர்கள்**

அபிப்பிராயம் இது :—

கல்வி யறிவொழுக்கங்களா னுயர்ந்த நன்மக்களாயினோர் யாதானுமோர் விஷயத்தை யெடுத்துத் தாபிக்கப் புகுங்கால் அஃது பண்டைநூன் மரபிற்கும் வழக்கியன் மரபிற்கும் ஒத்ததா! அன்றா! எனப் பூர்வ பராமரிசஞ் செய்து தாபிக்கக் கூடும் பரிசதேல் அதிற்றலையிடுதல் நியாயமேயாம். அஃதற்றாக, ஸ்ரீமாந் வேதாசலமவர்கள் திருவாசகத்தில் "மூவாநான்மறை முதல்வாபோற்றி" என்னும் அடியிலுள்ள "மூவாநான்மறை" ச்சொற்றொடர் தொல்காப்பியம், இறையனாரகப் பொருள், திருக்குறள், தேவாரம், சிவஞானபோதம் என்னும் நூல்களைக் குறிக்கு மென்றும், வடமொழி நான்கு வேதங்களையும் குறியா தென்றும் தம் உளம் போனவாறு ஒரு நவீன கற்பனையை வெளியிட்டனர்.

அக்காலையில் அக்கற்பனைக்கோளை, ஆராய்ச்சிவல்ல ஆசிரியர் ஸ்ரீமத், சாம்பசிவபிள்ளையவர்கள் நியாய வாற்றலாற் கண்டித்துவிட்டனர், பிறருங் கண்டித்தனர்.

இக்காலையில் ஸ்ரீமாந். சுப்பிரமணியபிள்ளையவர்கள் "திருநான்மறைவிளக்கம்" என்னும் முகநாமத்துடன் "செந்தமிழ்ச் செல்வி" என்னும் பத்திரிகை வாயிலாகப் பகிரங்கப்படுத்திய விஷயத்தை நோக்கும்வழி முற்றும் அபூதகற்பனையாகவே யிருக்கின்றது. அவர் நான்மறையாவன வேறு தமிழ்நூல்கள்

என்றும், அவை முதற்சங்கத் திறுதியி லுண்டான கடல்கோ ளில் ஆண்டுள்ள ஏனைய நூல்களோடு இறந்துபோயின என்றும், நமது சைவாசாரியர்களது திருவுளக் கருத்தும் அதுவே என் றும் கட்டுரைத்தனர். "ஒப்பிலியநாதிமுத்த ஞேதியவேத" நிலைமையினை இங்ஙனம் முறைபிறழ்த்தத்துணிந்த துணிவே துணிவு.

இன்னும் கல்லாலடியில் நால்வர்க்கு இறைவன் வேத மாதியவற்றையும், அவற்றின்பொருளையும் உபதேசித்தருளி ஞன் என்னும்உண்மைநூற் றுணிபையும் மறுத்தனர்.

பின்னும் சாமவேதமென்று தமிழ்மறையில் வருமிடங் களிலெல்லாம் வடமொழிச் சாமவேதமென்று பொருள்கொள் ளாது இன்னிசைப்பாடலென்று பொருள் கொள்ளவேண்டு மென்றும் சிவபிரானுக்குத் தமிழிலேயே மிக்க விருப்ப மென்றும் உரைத்தனர்.

இன்னோ ரன்ன வினையிலாக் கற்பனை
பன்னினர்; பற்பல பண்டித ராஞேர்
பார்த்து நகைசெயும் பரிசவே; யவற்றை
ஈர்த்தொரோ வொன்று வினைந்தநூற் காட்டொடு
மளக்குங் கருவிகொண் டழகுற நுணித்து
விளக்கமா யாய்ந்து மெய்ம்மை தெரித்துக்
கண்டன மியற்றிக் கற்ரேர் மற்ரேர்
அண்டா மகிழ்கொள வவனியில் விடுத்த
அருஞ்செய லாளரா மான்றநூற் கேள்வியோர்
பெருங்கரு ணைநிதி பேணுசாம் பசிவ
பிள்ளையென் றியாவரும் பேசுநா மத்தினர்
பிள்ளையம் மதியினன் பேதமி லருளால்
நன்றே வாழுக, நன்றியிங் கிதனை
என்று மறவா திதயத் திருத்தி
நனிபா ராட்டி நான்மறை விளக்கம்
நுணிமதி யாய்விலர் நுவன்ற கற்பனையா
உரையவ் வியாத்தியோ டோரதி வியாத்தி
புரையசம் பவமிவை பொதிந்ததா தலினப்
பொய்ப் பொருள் கொளாமே பொருவக ரூன்மை
மெய்ப்பொருள் கொள்ளுதன் மேலவர் கடனே.

யாழ்ப்பாணத்துப் புலோலிநகர்ச் சாரதாபீட வித்தியாசாலைத் தாபகரும், தலைமைப் போதகாசிரியரும், தமிழ் சமஸ்கிருதம் என்னும் துவிபாஷா வல்லுநரும், சைவப்பிரசாரகரும் பௌராணிகரும், பசுபதீச்சுரன் கோயில் அருச்சகரும், கர்ஷுணாதிப் பிரதிஷ்டாந்தம் பிரதிஷ்டாதி உற்சவாந்தம் உற்சவாதிப் பிராயச் சித்தாந்தமுள்ள சைவாகமக்கிரியைகளில் வல்லுநரும், "சமன் செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற் கோடாமை"யைத் தமக்கணிகலமாக உடையவரும், அப்பர் ஆயுட் பருவமுற்றும் அடையுமாணவர்கட்குச் செப்பமாய்க் கல்வி கற்பிக்குந் தேற்ற நனியுடையரும், தம் நடையினுள் மாணுக்கரையும் நன்னடையினராகச் செய்பவரும் ஆகிய

பிரமஸ்ரீ ம. முத்துக்குமாரசுவாமிக் குருக்களவர்கள்
அபிப்பிராயம் இது:—

திரிசிரபுரத்து வித்துவ சிரேட்டரும், சுத்தாத்துவித சைவ சித்தாந்தப் பேரன்பரும், நந்திபெருமான் சிவபிரானிடத்து வேண்டிப் பெற்றுக்கொண்ட பெரும்பேறு பதினாறனுள் முதற்கண்வைத் தெண்ணப்பட்ட "மறைக ணிந்தனை சைவ நிந்தனை பொறுமன" முடையவரும், லௌகிக உத்தியோகத்திலே அமர்ந்தும் ஆங்கிலங் கற்ற வேனையோர் போல அதன் வயத்தினராகாது, சிவதூஷண சிவசாஸ்திர தூஷண சிவனடியார் தூஷண கண்டனமும் சிவபூசா நியமமுமாகிய வைதிகோத்தியோகத்திலே அமர்ந்திருக்கின்றவருமாகிய ஸ்ரீமத் சாம்பசிவ பிள்ளையவர்கள் ஸ்ரீமத் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களால் வெளியிடப்பட்ட "திருநான்மறை விளக்க"த்தைப் பார்வையிட்டு அது காண்டல் கருதல் உரை என்னும் மூன்று பிரமாணங்கட்கும் பொருத்தமில்லாதிருத்தலைக்கண்டு அதனை உலோகோபகாரமா வெளிப்படுத்தி யாவர்க்குந் தெரிக்கக் கருதித் "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" எனப் பெயரிய சிறந்த நூலொன்றியற்றி அச்சிடுவித்து அதில் ஒரு புத்தகம் எமது அபிப்பிராயம் எவ்வியல்பிற்றென்றறிதாற்பொருட்டு எமக்கனுப்பினுர்கள்.

நாம் அவ் "வாராய்ச்சி" நூலை மிக நன்ருக அமைந்து பார்வையிட்டேம். "ஆராய்ச்சி" உடையார், "விளக்கம்" உடையார்கொள்கைகள் நவீனக்கற்பனைகளென நன்கு விளக்கிச் சிறப்புடைப் பிரமாணங்கொண்டு மறுத்திருத்தல் மெய்யுணர்வுடையார் வியத்தற்குரிய மிக்க அழகு வாய்ந்திருத்தலை ஓர்ந்து கழிபெருங் காதலும் களிப்பும் விழிப்பும் உடையமாயினேம்.

கலியுக தருமத்திற்கேற்ப உண்மையுணரும் கல்வியறிவிலார் பரந்துவரும் இக்காலத்திலே உண்மையுணரவல்ல கல்வியறிவாளராம் ஸ்ரீமத், திரு. மா. சாம்பசிவபிள்ளையவர்கள் இருத்தலை "ஆராய்ச்சி" நூல்வாயிலாக அறிந்து அற்புதமிஃதற்புதமெனக் கருதிக் கூதூகலமடைகின்றேம்.

"வடமொழி வேதங்களையும் வடமொழி ஆகமங்களையும் பிரமாணமாகச் சைவர்கள் கருதுவாராயினர், அங்ஙனம் கருதினமையால் வந்த மயக்கிற்களவில்லை" என்றூர் 'விளக்க' மெழுதினேர்.

அவற்றைப் பிரமாணமாகக் கருதின சைவர் யாரெனில், சிவபிரான், உருத்திரர், நந்திபெருமான், சனற்குமாரர், சத்திய ஞானதரிசனிகள், பரஞ்சோதி முனிவர், விஷ்ணுமூர்த்தி, பிரமதேவர், இந்திரன், மற்றைத்தேவர்கள், மெய்கண்டதேவர், அருணந்திசிவாசாரியர், மறைஞானசம்பந்தர், உமாபதிசிவாசாரியர், திருவாவடுதுறை யாதீன சந்நிதானங்களும் அவர்கள் சீடர்களும், தருமபுரவாதீன சந்நிதானங்களும் அவர்கள் சீடர்களும், திருவண்ணுமலை யாதீன சந்நிதானங்களும் அவர்கள் சீடர்களும், சொர்க்கபுரவாதீன சந்நிதானங்களும் அவர்கள் சீடர்களும், அரதத்தாசாரியரும், அப்பைய தீக்ஷிதரும், நீலகண்டசிவாசாரியர் முதலினேருமேயாம். திருவருட்பேற்றிற்குச் சிறிது இலக்காது சாத்திரஞான மணந்தானும் வீசப்பெறுதார் மயக்கற்றவராம். சிவபிரான் முதல் திருவருட்பேற்றிற் கிலக்காய் மெய்யுணர்ந்தாரெல்லாம் மயக்கமுடையராம். "கண்டனமின்றியாங் கலியின்வண்ணமே" மயக்கமற்றவர்க் கெல்லாம் மயக்கங் கற்பித்தார்க்கும் அவரைச் சார்ந்தார்க்கும் ஆராய்ச்சி நூலால் மயக்கநீக்கிய பேரறிஞராகிய சாம்பசிவ பிள்ளையவர்கட்கு எல்லா நன்மைகளையும் ஈந்தருளும்வண்ணம் பசுபதீசுவரரைப் பிரார்த்திக்கின்றேன்.

---

யாழ்ப்பாணத்தைச் சார்ந்த பருத்தித்துறை வாசரும், கந்தபுராண விருத்தி யுரையாசிரியரும், வாக்கிய பஞ்சாங்க கணிதரும் தமிழ் சமஸ்கிருத பாஷாபிமானரும், வித்தியா விருத்திச் சங்கத் தருமகர்த்தரும் ஆகிய

**பிரமஸ்ரீ ச. சுப்பிரமணிய சாஸ்திரிகள்**

அபிப்பிராயம் இது:—

வடமொழி தென்மொழி யென்னும் இருமொழிகளும் எங்கட்கெல்லாம் இரண்டு கண்களெனத்தக்கனவாய் இன்றியமையாதிருப்பவும் அஃதறியாமையினுலோ! ஒரு மொழி

மேன்மட்டுங் கொண்ட அபிமானத்தாலோ! கலியின் முதிர்ச்சியினுலோ! சிலர் தென்மொழியாகிய தமிழைப் போ றுதற்காக வடமொழியையொதுக்கத் தலைப்பட்டுச் சிற்சில ஆண் டுகளாகப் பற்பல விபரீதங்களைச் செய்து வருகின்றார்கள்.

குறித்த இருமொழிகளினதும் தாரதம்மியங்களை ஆராய் துநிச்சயிப்பது அவ்விரண்டினும்நிரம்பிய புலமையுடையார்க்கே இயைவதொன்றாம். அத்தகைய புலமையுடையார் பலர் ப பல நூல்களையும் உரைகளையும் இயற்றியுள்ளார், அவையெ லாம் அனைவராலும் அன்றுமுதல் இன்றுவரை பொன்னே போற்போற்றப்பட்டு வருகின்றன. அவர்கள் தங்கள் நூ களிலாவது உரைகளிலாவது இங்ஙனம் தூரபிமானச் செய களைச் செய்யாது உள்ளதைஉள்ளவாறே கூறிப்போந்தனர்.

இக்காலத்திலே ஒரு தமிழ்நூலைத்தானும் நல்லாசிரி ரிடத்தே ஐயந் திரிபுஅறியாமை என்னும் முக்குற்றமும் நீங்க கல்லாது தாமாகவே மனம்போனவாறு பார்த்துவிட்டு, தாம யாத வடமொழியை இகழ்வாரும், அம்மொழியிலிருந்து தமி லெடுத்தாளப்படும் நூல்களைமறுத்துப் பிறிது கற்பனைசெய்வா ரும், தமிழில்வந்து வழங்கிய வடசொற்களைத் தமிழிற்கே இய கையாகவுடைய சொல்லென்பாருமாய் வழுஉப்படுவார்பலர்.

எங்கள் தமிழ்மொழி, வடதிசையினின்று வந்தவரும், வட மொழியை இனிது பயின்றவரும் ஆகிய அகத்தியமகாமுனி வரால் † ஆதியில் வளர்க்கப்பெற்றது. அம்முனிவர்க்குக் கண் ணுதற்பெருங்கடவுளால் உபதேசிக்கப்பட்டது. ஆதியில் தமி ழிலக்கணநூல் செய்தாரும் அம்முனிவரே! அவருக்குப் பிற் பட்ட தொல்காப்பியனாரும் தமிழ் மொழியோடு * ஆரிய மொழியும் கற்றே இலக்கணநூல் செய்தனர். பண்டைக்கா லத்தின் சங்கத்திருந்து தமிழாராய்ந்த புலவருள்ளும் பலர் இருமொழிகளினுந் தேர்ச்சியுடையரா யிருந்தனர். சங்கம் தவிர்ந்த பின்னிருந்த புலவருள்ளும் பலர் அவ்வாறேயிருந் தனர். அவர்களால் வடமொழியி லிருந்த நூல்கள் பற்பல தமிழில் மொழிபெயர்க்கப்பட்டன. எவராவது ஒருவர் ஒரு மொழியை முற்றக்கற்பினும் அம்மொழிக் கியைபுடைத்தான பிறிதொரு மொழியையுங் கற்பின் புலமைத்திறம் மிக நிரம்பப் பெறுவர். ஆதலின் தமிழைக் கற்போர் தமது புலமை மிகநிரம் புதற்பொருட்டு உடன் கற்கற்பாலது அதனோ டியைபுடைய

† அகத்தியன் பயந்த செஞ்சொலாரணங்கு என்னும் பாரதநூ லுடையார் கூற்றாலும் அது நன்கு விளங்கும்.

* ஐந்திரநிறைந்த தொல்காப்பியன் என்பதனானுமஃதறிக

வடமொழியே. வடமொழிகற்போர் தமதுபுலமைமிக நிரம்பு தற்பொருட்டு உடன்கற்கற் பாலது அதனோடியைபுடைய தமிழ்மொழியே.

தமிழிற்குச் சிறப்பெனக் கூறத் தக்கனவாய சொற்களின் றொகையினும்பார்க்க ஒருமடங்கதிகமான சொற்கள் வடமொழியிலிருந்து தமிழில் வந்து வழங்குகின்றன இங்ஙனமிருத்தலால் அச்சொற்களைச் சேர்த்து நூல்களையும் உரைகளையும் இயற்றிய தமிழ்ப் பெரும் புலவரது பாததூளியின் றுணையளவேனும் இருபாடையும் பெறுதார் அச்சொற்களை நீக்கவும் தமிழை வடமொழியுடன் றொடர்பற்ற பாஷையாக்கவும் துணிவது நகைக்கிடனுமன்றி முற்றுப்பெறத்தக்க கருமமன்று.

பண்டைக்காலத்தில் பற்பல வருணத்தாரும் வடதிசையினின்று தமிழ்த்தேசத்தில் வந்து காலந்தோறும் குடியேறினர். தமிழ்த்தேயத்தில் நான்கு வருணத்தார் முதலாயினோராயிருப்போரனைவரும் வடதிசையினின்று வந்து குடியேறினவர்களது பரம்பரையினரே யென்று நினைத்தற்குப் பல காரணங்களுண்டு. இக்காலத்தில் இத்தேசத்தில் இருப்பவர்கள் பூர்வீகமான தமிழரின் பரம்பரையினரென்றாவது வடதிசையினின்று வந்து குடியேறினவர்களின் பரம்பரையினரென்றாவது தங்களை நிச்சயித்துக்கொள்ள வியலாது. ஆதலின், இருமொழிகளுள் ஒன்றைத் தம்முடையதென்றும், மற்றொன்றை அங்ஙனமன்றென்றும் நினைப்பதும், துரபிமானங் கொண்டு ஒரு பாஷையை வெறுப்பதும் பேதமைப்பாலதாம். இருமொழிகளையுங் கற்றாலென்! ஒன்றைமாத்திரங் கற்றாலுமென்! அனைவரும் அவ்விரு மொழிகளையும் தாய்மொழி யென்று போற்றுதல் கடமை. இஃதிங்ஙனமிருக்க, ஸ்ரீமான் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் அட்வக்கேட் "திருநான்மறை விளக்கம்" என்னுந் தலைப்பெயர் புனைந்து எழுதிய வியாசத்தில் "நான்மறை" என்பது வடமொழியிலுள்ள நான்கு வேதங்களல்லவென்றும், "நான்மறை" யென்னு நாமத்துடன் றமிழிற்றானே ஒரு நூலிருந்திறந்ததென்றும் அங்ஙனமிறந்த நூலையே நான்மறை யென்பதுணர்த்துமென்றும் வெளிப்படுத்தினர்.

அவ்விஷயத்தில், "பொய்யாமை பொய்யாமை யாற்றினறம்பிற—செய்யாமை செய்யாமை நன்று" என்னுந் திருக்குறட் கிலக்கியமாகிய வித்துவ சூளாமணியாம் ஸ்ரீமான் திரு. மா. சாம்பசிவ பிள்ளையவர்கள் "திருநான்மறைவிளக்க ஆராய்ச்சி" என்னும் பெயருடன் தம்முடைய அபிப்பிராயத்தை ஒரு புத்தகமாக எழுதி அச்சிட்டிருக்கின்றார்கள்.

அவர்கள் தம்பாலார் துவாரமாக அதில் ஒரு புத்தகம் எமக்கு சேர்ப்பித்து எமது அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படியா கேட்கப்பட்டேம்.

## எமது அபிப்பிராயம் வருமாறு :—

தமிழில் நான்மறையென்னும் பெயருடன் ஒருநூல் இரு ததாக எவ்வாற்றானுந் தெரியப்படவில்லை. இருந்ததென் சொல்லுதற்கு யாதொரு ஆதாரமுமில்லை. மறை என்பது வேதத்தின் பரியாய நாமம். ஆதலால், நான்மறை என்றது வட மொழியிலுள்ள நான்கு வேதங்களையே யுணர்த்தும்.

"நாடா முதனான் மறைநான் முதனாவிற்—பாட விடைப்பா ரதம்பகர்ந்தேன்" என்னும் நாமகள் வாக்கும் வட மொழி வேதங்களையே வெளிப்படுத்துகின்றது; என்னை "இடைப் பாரதம் பகர்ந்தேன்" என்றதனாற்பாரதம் வட மொழியாதலின் இனம்பற்றி மறையும் வடமொழி யென்பது தேற்றமாகலின்.

இனி, தமிழிற் செய்யப்பட்டதோர் நூலையே கலைமகள் வாக்கு வெளிப்படுத்திற்றென்னின், அதுவே முதனூலுமா அன்று தொட்டின்றுவரை யாவராலு மாளப்பட்டு வரல்வேண் டும். கடல்கோள், ஆட்சியை அசைக்கவுமாட்டாது; ஆகல னும் மறைதமிழன்று.

வேதங்கள் இப்பரதகண்டத்திலே பற்பல மதத்தார்க்கு முதனூல்களாக விருக்கின்றன. அவர்கள் அவ்வேதத்தி கூறப்பெற்ற மந்திரங்களாற் சந்தியாவந்தன முதலிய கரும களை நாடோறுஞ் செய்து வருகின்றனர். பலர் அவ்வேதத் திலமைந்த மந்திரங்களைக் கொண்டே மதசம்பந்தமான கிரியை களைச்செய்து வருகின்றனர். அங்ஙனஞ் செய்வோர் ஒரு தேசத்தின்மாத்திர மிருப்பவர்களு மல்லர். பற்பல தேசங் களிற் பலகோடிக் கணக்கினராக விருக்கின்றார்கள். தமிழிற் செய்யப்பட்ட நான்மறை யென்னு நூலொன்றுளதாயின் அவ ரெல்லாம் அந்நூலிலுள்ள அம்மந்திரங்களையேகைக் கொண் டவர் என்று சொல்லல்வேண்டும். அதுமெய்யாயின் அந்நூ லிறப்பதற்குக் காரணமின்று.

ஒரு நூலிறப்பதாயின் அதனைக் கற்பாரும் கேட்பாரும் ஆதரிப்பாரும் இன்மையே காரணமாகும். அல்லது உலக அறிவே காரணமாக வேண்டும். பரதகண்டத்திலே ஒரு சிறு பாகமழிந்தபோதே அந்நூலும் அழிந்ததெனின், அந்நூல் அக் கண்டத்திலே யிருந்தவர்களாற் கைக்கொள்ளப்படாத நூலாய் முடியும். "மறைவழி மதங்கட் கெல்லா மறைபிர மாணம்"

"நான்மறைக் குலத் தந்தணர்" "மறையவர்" என்று வரும் பற்பல ஆன்ரோர் வாக்குக்களானே அந்நூல் பரந்து வழங்கிவரும் முதனூலென்பது தெளியக்கிடக்கின்றது. இத்தகைய பெருமைவாய்ந்த முதனூலை மாற்றுவிக்கக் கருதித் தமிழ் நூல் கடல்கோட்பட்டதென்றல் சுருதி யுத்தி அநுபவங்கட்குச் சிறிதும் பொருந்தாது.

தற்காலத்திலும் அத்தகைய வேதங்களை அனுசரிப்பவர்களாகக் கோடிக் கணக்கானோர் இப்பரதகண்டத்தில் வாழ்கின்றனர். அவரெல்லாம் தங்கள் முன்னோர் தமிழில் நான்மறை என்னும் ஒரு நூல் இருந்ததென்றும், அதன் வழியே நித்திய நைமித்திகங்களைச் செய்து வந்தார் என்றும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். குறித்த சுப்பிரமணிய பிள்ளையவர்களும் அவர் பாலார் சிலரும் அதற்கு என்ன செய்யக்கடவர்.

வேதங்கள் முன்னர்க் குறித்தவாறே பற்பல மதத்தினரால் முதனூலாகக் கொள்ளப்பட்டபோதும் வைதிகர் எனப்படுவோர் வேதத்தை மாத்திரமே முதனூலாகக் கொள்பவர்கள். வைதிக சைவர் எனப்படுவோர் வேதாகமம் என்னும் இரு நூல்களையும் முதனூல்களாகக் கொள்பவர்கள். ஆதலால் நான்மறை சிறந்ததெனக் கூறும் இவர் கொள்கை இவ்விரு பாலார்க்கும் மிக வெறுப்பைத் தரத்தக்கது. அதுவேயுமன்றி வேத நிந்தனையாகிய மிகு பெரும்பாவமுமாம். இவர் கொண்ட ஆகமக் கொள்கைக்குங் கதி யிதுவேயாம்.

இவ்விதமான விபரீதங்களில் அறிவிற் குறைந்தார் மாந்து பழி பாவங்களை அடையாதவண்ணம் குறித்த ஸ்ரீமாந் சாம்பசிவ பிள்ளை என்னும் நடுநிலையாளராகிய வித்துவ சிரேட்டரவர்கள் செய்து வரும் விடாமுயற்சியாகிய பெருஞ் சிவபுண்ணியம் மிகவும் வியக்கத்தக்கது. பொதுநலங்கருதி இப் பெருமைவாய்ந்த ஆராய்ச்சிநூலை வெளிப்படுத்திய ஆசிரியரவர்களுக்கும் அதற்கு எவ்வகைத் துணைபுரிந்தார்க்கும் பல்வகை நன்மைகளெல்லாவற்றையும் பாலித் தருள்புரியுமாறு பரமசிவன் பாதாரவிந்தங்களைப் பணிந்து பரசுதும்.

---

யாழ்ப்பாணத்து வட்டுக்கோட்டைவாசரும், பாரத இராமாயண காவியங்களின் ஒவ்வொரு பகுதிக்கு உரையாசிரியரும், திருத்தொண்டநாயனார் புராணத்தை எழுத்து வர்க்கத்தோடு அகவலாகச் செய்தவரும், சித்தாந்தத் தெளிவாகிய ஆறும் புத்தகம் இயற்றினவரும், விரதமான்மிய முதலிய நூல்களைச் செய்

தவரும், இலங்கைத்தேசாதிபதியவர்களால் இருநூற்றைம்ப (உருo) ரூபா உபகாரம் பெற்றவருமாகிய மகாவித்துவா

**ஸ்ரீமான் ஆறுமுகப் பிள்ளையவர்கள்**

அபிப்பிராயம் இது:—

ஸ்ரீமாந். அட்வக்கேட் கா. சுபபிரமணியபிள்ளை யவர்க சென்னைச் செந்தமிழ்ச்செல்வி வாயிலாக வெளிப்படுத்திய தி நான்மறை விளக்கம் சைவப்பெரியார் கொள்கைக்கு மாறுயிரு பக்கண்டு சைவத்திருவாளர் திரு. மா. சாம்பசிவபிள்ளையெ னும் மகா மேதாவியாரவர்களால் "திருநான்மறை விளக் வாராய்ச்சி" எனச்சிரத்தானப் பெயர்புனைந்து ஒரு பெருநூ எவராலும் எக்காலத்தும் மறுக்கப்படாத பலப்பல பிரமா குழூஉக்கள் துறுமி நின்றிலங்க இயற்றப்பட்டு அச்சுவாகன திவர்ந்து விளங்குதலையாம் கண்ணுற்றபோது அட்வக்கே அவர்கள் பயனற்ற வழியில் படும்பாட்டைப் பயனுற்ற வழியி பட்டால் அவர் தமக்கு மாத்திரமன்று பிறர் தமக்கும் பெரிது பயன்படுமே யென்று இரக்கமிகவுற்றேம்.

சைவ சமயாசாரியர்களாலும், சந்தானசாரியர்களாலு திருவருட் பொலிவெய்திய பிற பெரியோர்களாலும் சிவபெ மானே வேத, சிவாகமங்களை "அருளுருக்கொண்டு" ஆ மாக்கண்மீது முகிழ்த்த பெருங் கருணையால் அருளிச் செ தார் என்னும் உண்மை அவர்கள் நூல்களிற் கூறப்பட்டிரு தலை மறுக்க யாரால் முடியும்!

வடமொழியும் தென்மொழியும் சிவபிரானல் விரும்ப பட்ட சிறந்த சமத்துவ முடைய பாடைகள் என்பதூஉ இறைவர் இரண்டனையும் ஒப்பத் தழுவினர் என்பதூஉம் அ பெரியாரால் அவர்கள் நூல்களிலே இடந்தொறும் இட தொறும் நன்கு விளக்கமுறக் காட்டி நிறுவப்பட்டன. அவ நிறுப்பை மறுப்பவர் மறுப்பும் மறுப்பாமோ! மறுக்க நினை பினும் மீளா நரகிற்காளாகவேண்டும் என்று முழங்குஞ் சை சாத்திரங்களை ஒருகட் பார்வை செய்யாது இருகட் பார்வை செய்து சிந்திப்பின் எமது உறவினராகிய அட்வக்கேட் இன அவ்வாறு மறுப்பெழுதப் புகாரென்பது எமது கருத்து.

தமிழில் வேதமில்லை என்பதும், அது தமிழிற்கு ஒ குறையென்பதும் அட்வக்கேட் கொள்கை போலும்; அறிஞ அங்ஙனம் கொள்ளுதல் அழகன்று. அங்ஙனம் கொள்ளு அறிஞர்க்கு யாம் தமிழில் கடல்கோட்படாது இன்றும் மு னும் பின்னும் நிலவியிருக்கும் தமிழ் வேதத்தைத் தெரிக்கி றாம். அதுதான் தேவாரமுதலியன. அவைகள் வெள்ளிமலை

கண் சிவபிரானால் செய்தருளப்பட்டு விளங்குகின்றனவென்பது சிவரகசியத்தால் அறியலாம். அவற்றில் சில பாகந்தான் சைவ சமயகுரவரால் வெளிப்படுத்தப்பட்டன. அவை தோத்திர ரூபமேயாம். சாத்திர ரூபமன்று.

இங்ஙனமிருத்தலால் இவ்விரு மொழிகளுள் ஒன்றற் கொன்று உயர்வு தாழ்வுள்ளன வென்று கொள்ளுதல் இறை வன் றிருவுள்ளத்திற்கிசையாது.

ஆதலின், சைவசமயமாகிய ஆண்மகனுக்கு இரண்டு கண் களாக விளங்குகின்ற இவ்விருமொழிகளையும், ஆண்டுள்ள வேதங்களையும் ஒப்பநோக்கிப் பயன்பெறாது ஒன்றைச் சிறப் பித்து மற்றதை இகழ்தல் ஒருகண்மூடி ஒருகண் விழித்தல் போலாம்,

அறிஞர்களே! இவ்வுண்மையைச் சித்தசமாதானத்துடன் தேர்ந்து தெளிந்து இறைவன் றிருவுளத்திற் கேற்ப இரு பாடைகளிலுமுள்ள நூல்களைச் சிரத்தரனமாகச் சிரமேற் கொண்டு போற்றிப்புகழ்ந்து சகோதர பாவமுடையர்களாய் ஆனந்தவாழ் வடைவீர்களாக.

நம்முடைய சிற்றறிவும் இத்துணைப் பெரும்பேற்றை விளக் குதற்கேதுவாக ஸ்ரீமாந் சாம்பசிவபிள்ளையாகிய பேரறிஞரவர் கள் "திருநான்மறைவிளக்க வாராய்ச்சி" என்னும் அருமை யாய்ந்தநூலை வெளிப்படுத்தினமைக்கும் யாம் இப்பிறப்பின் மாத்திரமன்று எப்பிறப்பினும் செய்யுங் கைமாறு அவர்கள் செய்தநன்றியை மறவாதிருக்கு மத்துணையேயாம். எம்மைப் போலவே ": ஆராய்ச்சி" நூலால் பயனெய்தும் யாவரும் அப் பெரியார் கைமாறு கருதாது செய்த நன்றியைச் சிந்தித்து வாழ்க.

அப்பெரியாரைப் பூரணசீவந்தராய் வைத்து எம்ம னோர்க்கு இதுபோலும் பெருநன்மைசெய்யுமாறு பேரருள் புரிந் தருளும்வண்ணம் எல்லாம் வல்ல இறை சிவன் றிருவடிகளை வணங்கிவாழ்வாம்

பெங்களூர்ச்சமஸ்தான கலாசாலை உயிர்நூலாசிரியர்
ஸ்ரீமத் வித்துவ சிரோமணி செல்வச் சிரஞ்சீவி
ப. மு. சோமசுந்தரப் பிள்ளையவர்கள், M.A., ஆனர்ஸ், L.T.
இயற்றிய
சிறப்புப்பாயிரம்.

உலகெ லாமலர் சிலம்படி யொருபவ னுவப்பத்
திலக வாணுதற் சிவைவயிற் றிரோதையஞ் செல்வி
யிலக மற்றவள் பொருளவாக் கலைகளாந் திறையு
மலகி லக்கலை தத்துவ முதலைந்தின் வயங்கும்

பொன்னஞ் சாரசப் பொகுட்டுறை புங்கவன் போற்ற
வன்னந் தாவிய நிவிருத்தி கலையதன் மாட்டு
மன்னும் பூவிடை நாவலந் தீவிதின் வாய்ப்பச்
சொன்ன பாரத மாவரு டந்தனித் தோன்றும்

கற்றைச் செஞ்சடைக் கருணையங் கடலெனுங் கபாலி
யுற்றப் பேறிவ னுதவிடக் குமரியென் றோங்கு
மொற்றைக் கண்டத்தி னுயர்மறை யொழுக்கமு முய்வான்
பெற்ற சாதிகள் சீலமு முயர்வன பெரிதும்.

காசி காஞ்சியுங் கங்கையும் யமுனையுங் கவேரன்
மாசில் மங்கையு மனத்தக வாசற மாற்ற
வாசி வாவென வாகமாந் தப்பொருள் வழங்குந்
தேசு லாவிய பொழிலிது தெள்ளிதிற் சிறப்ப.

ஓத லின்றியு முய்பொரு ளாய்தலை யொழித்துந்
தாத லர்ந்தசெம் மலர்கொடு தாணுவைச் சகத்தோர்
காத லன்பொடு பழிச்சுத லின்றியுங் காட்சி
மேத கத்தரூஉந் திருத்தொண்டர் பதியிதன் விழுப்பம்.

வேறு.

பரசிவ லிங்கந் தன்னைப் பரசுவார்க் கின்ப நல்க
விரவுறு குமரித் தேஎத்து விளங்குவே தாக மங்கள்
வரவினை வழுத்த லாமே வாலறி வினன்மா சத்தி
நிரவுறு குடிலை நோக்க நிரைந்தன நாதம் விந்து.

விந்துவி னெழுத்துத் தோன்ற மேற்சதா சிவன்பால் வேத
தந்திர மனைத்து மாய தாமரைக் கண்ண னந்தி
வந்திவண் வழிப்ப டுப்ப வாய்ப்பன கலைகள் யாவு
மெந்திறற் கயிலை யாதி யியன்மர பிரண்டே யிப்பால்,

சுத்தமா மாயை வாயிற் சூக்குமை யாதி வாக்கு
மத்தமாம் பவஞ்ச வாழ்வு மணைதர வந்நால் வாக்கின்
முத்தமார் முதலி ரண்டு மொழிசிவ தத்து வத்து
முத்தம சத்தி யாகு முரிமைகொள் தத்து வத்தும். அ

அணிகிளர் மூன்றும் வாக்கிங் காகம மூல மாக
வினையிலாச் சதாசி வத்து மிணங்கமா கேசு ரத்துத்
தணிவருஞ் சூக்கு மஞ்சேர் தாழ்வில்லை கரிதான் மேவப்
பணியதன் பகுப்பா லிந்தப் பார்மொழி பிரிந்த வன்றே. கூ

நல்லற மாதி நாட்டும் நற்றமிழ் மொழியு மான்ற
வல்லியங் கமலப் புத்தே ளாரிய மொழியு மாகச்
சில்லரி யெழுத்தி ளைங்குந் திராவிடங் கௌட மெல்லா
மெல்லெனப் புவனி மீது விரிந்தன பற்ப லாற்றான். க0

வேறு

உத்தம மறையின் வழக்கொடு புணர்ந்த
வுயர்தவ நான்குசா தியரே
மெய்த்தவர் கலப்பான் விரவினர் பலரே
மேதகு மாகம வழியிற்
றுய்த்திடும் பரார்த்த பூசைசெய் குநரே
சூழ்சிவற் பணிபவர் பலரே
கைத்தலில் நிகம வொழுக்கினை விடுத்துக்
கதித்தவவ் விராத்தியர் பலரே. கக

அரசர்தங் குலத்தி னவனியிற் பிறந்து
மங்கிவேட் பொழியவை வேள்வி
விரசுற வுஞற்றும் வேளிர்தம் மரபின்
மேம்படு குலத்தினர் பலரே
கரிசிலாச் சைவ வைதிக நெறியைக்
கடைப்பிடித் தொழுகுநாற் குலத்து
விரிவுறு மவரே விரவினர் பலரே
வியன்றிணை மாந்தர்கள் பலரே. க௨

சாதிக ணெறியிற் றப்பிடா ராகித்
தனயரு மனைகளிற் றப்பா
தோதிய வெழுத்தா மைந்தினை யெண்ணி
யுறுபிணி வருவதற் கஞ்ச
நீதியின் மனுநூன் முறைமுறை யொழுகி
நிகழ்சிவ தருமமே நடத்திக்
காதிய வினைகள் கடந்தரு ணெறியிற்
கலந்திடப் பொருந்துநர் பலரே. க௩

வேதநூல் வழியுஞ் சைவநூன் முறையும்
விரிதரு வைதிக சைவ
மோதுநூற் படியு மிருதிநூற் புராண
மிளிரிதி காசநூல் விதியுஞ்
சாதக முரைக்கும் பாஞ்சராத் திரமுஞ்
சாற்றருந் தந்திரம் பிறவும்
வாதமார் சமயப் புறவுரை நூலும்
வழுத்துநர் செறிகுநர் பலரே.

தீத்தொழி லொருவிச் சிவபரற் போற்றத்
திகழுமிப் பரதகண் டத்தே
யாத்திரண் மலிய வந்தணர் பல்க
வலமந்து மறத்துறை நலியக்
காத்திளங் கன்றைக் கறவையா னென்னக்
கருதலர்ச் சவட்டிய மன்னர்
பார்த்தனி ஞெம்ப விளங்குறூஉ நான்கு
பழந்தமிழ் மண்டல மாதோ.

வேறு.

உலையாத வளஞ்செறியம் மண்ட லத்தே
யுயர்தில்லை யந்தணருங் கலயர் நந்தி
தலையாய வகத்தியரும் புரையும் பார்ப்பார்
தகுதியெவை வேதியர்யார் வேதம் யாவை
மலைவாய மயல்கடியும் இலேகை யாது
மன்னுதமிழ் மாமறையி னிலங்கக் கூறும்
நிலையாய விருக்காதி யார ணத்தை
நிறீஇயினன் * யாவனென நிச்சயித்து. கசு

மலர்தலைமா நிலஞ்சைவத் துறையி னிற்ப
வளர்புகலி யவதரித்த ஞான வள்ளல்
நிலவுதமிழ் முதலாய தமிழ்வே தத்தின்
நித்திலக்கோ வைகள்யாவும் நிறைத்துக் காட்டிக்
கலியிருளைத் துணித்திடுமுத் தமிழ்நான் மாடக்
கலையமர்முச் சங்கத்தார் கருத்துங் கூட்டி
யலர்கதிர்நேர் பெருநூலொன் றமைத்துத் தந்த
வாண்டகைத னற்சார்பை யறையக் கேண்மின். கஎ

* யாவன் = தக்கணாமூர்த்தி

சுறவுயர்த்த விடைக்கொடியான் பாண்டி நாட்டுத்
துரிசறுத்த வேளாளர் மரபிற் கோலஞ்
செறிகதிர்முத் தப்பொருநைக் கரையா ளப்பேர்
திகழ்குடியி னறம்வளர்த்த சிவயோ கத்தாள்
இறுமருங்குல் செய்தவத்தாற் பானு மாறு
திறைஞ்சுமா சிலாமணியார்க் குதித்த பாலன்
நறுநுதல்வெண் மதிநிகருங் காந்தி யம்மை
ஞானகலை தெருட்டவுணர் ஞேய நூலன். கஅ

பண்பழுத்த சொல்லாளன் செழியர் தேத்துப்
பழம்பழுத்த வில்லாளன் பரையி னேர்பா
னண்பழுத்த கல்லாளன் நவின்ற சைவ
ஞானநெறி வில்லாளன் மெய்கண் டார்க்கோர்
பண்பழுத்த பரம்பரையி னூர்ந்த மாறு
பாநல்லூர்ப் பரஞ்சோதி வள்ளல் பாங்க
ரெண்பழுத்த சிவதீக்கை யினையப் பெற்றிங்
கெழில்பழுத்த சிவபூசை யியற்று மேலன். கசு

ஒருமாது பாலூட்ட மாத ராரு
மொருமாது பால்சொரிய வுவந்து ஞானந்
தருகாழி வேந்தர்முதற் றலைவர் ஞான்றுந்
தமிழ்முறையைக் கோத்தநம்பி யாண்டார் ஞான்றும்
பொருமாழி மன்னவர்தாம் போற்று வந்த
புணர்வேத மொழியாவை புரிந்த வேள்வி
கருமாழி சூழ்புடவித் தருமம் யாவை
தாமென்னச் சரிதத்தா னுய்ந்த தூயன். உ0

கன்னவிழ்பூங் கொன்றையணி யானே றேறி
கனியுறழ்சொற் கனிதழீஇ மாக்கீழ் மன்னி
யள்ளிலைவேற் குமரனொடு மமைந்த காஞ்சி
யணிநாட்டுச் சேக்கிழார் மாற்றத் தோடும்
புள்ளுணங்கு கொடியுயர்த்துப் புனற்கட் டுஞ்சும்
பொருபடைய மான்முதலோர் போற்றுஞ் சீர்த்தி
யொள்ளொளிய சிவஞான போத நூலிற்
குரைவகுத்த முனிக்கரசு கூற்றத் தோடும். உக

## வேறு

ஒருசிறிது முரணுமே யுரைக்குமொழி கற்றுடையான்
ஒருதருமந் தவிராமே சங்கரன்பாற் பற்றுடையான்
திருமணிநற் பூதிதிகழ் செல்வமெலாம் பெற்றுடையான்
ஒருமணிவிற் கண்டத்தான் கழற்குழுவன் முற்றுடையான், உஉ

பூந்தளிரின் முப்பொழுதும் போற்றுவார்க் கருள்சுரப்ப
மாந்தளிரா மலர்ப்பதத்து மட்டுவார் குழலைமை
தேர்ந்திவலை யாக்கியலர் செஞ்சடைப் பிரான்பக்கற்
சேர்ந்தமருஞ் செம்பியர்தஞ் சிபுரத்துச் சேர்வுடையான்.

ஆங்கிலஞ்செந் தமிழ்பயின்ற வருங்கலையி னைதாவாற்
பாங்குபெறத் துறைக்கணத்துப் பற்றொழிவு முதற்றிமுறை
ஈங்கொறுக்கு நலத்தண்டத் திறலிகா யுறம்வகுத்து
வாங்குகட லுடுத்தபுவி வயங்குபுக ழடுத்துடையான்.

ஆறதிரு முறையாய்வி னதிகட்ட நூல்கண்டான்
ஓதிரு மார்வமுளா னேறைமொரு பாவிண்டான்
போதிரு மானையம் பெரிதுடையான் சிவமுண்டான்
சீர. திரு. மா. சாம்ப சிவநாமங் கொண்டானே.

---

சென்னை இராஜாங்க சட்ட நிர்மாண சபையில் அங்க
தினராயிருந்த ஸ்ரீகாழி ஸ்ரீமான் கி. சிதம்பரநாத முதலியா
அவர்கள் இளவலாரும், பண்டார சாத்திர முதலிய அரி
பெரிய நூல்களை அச்சிடுவித்துத் தமிழ்ச் சைவ மக்களுக்
உபகரித்துவரும் வித்துவ சிரேஷ்டருமாகிய

**திருவாளர் ச. சதாசிவ முதலியாரவர்கள்**

இயற்றியது.

சீர்சான்ற வேதசிவா கமங்களினுண் மைப்பொருள்சேர்
செவ்வி வாய்ப்ப
ஏர்சான்ற நான்மறைக ளிவையெனமேற் கோணிறுவி
யெவரு மெச்ச
நேர்சான்ற நான்மறையா ராய்ச்சியெனச் செப்புநூ
னெறியிற் றந்தான்
பேர்சான்ற திரிசிரமா புரத்தமருஞ் சாம்பசிவப்
பெரியோன் மாதோ

இப்பெரிய நூலதனை வாசிப்போர் தமிழ்மொழியி
னேற்றத் தோடே
ஒப்பரிய வடமொழியின் மாண்புமவ் வாகமத்தி
னுயர்வு மெண்ணிச்
செப்பரிய திராவிடவே தக்கலைமெய் கண்டசாத்தி
ரத்திற் கூறும்
மெய்ப்பொருளி னுண்மையுணர்ந் துயர்ஞானச்
செல்வராய் விளங்குவாரே

---

## வித்துவப் பெரியாரபிப்பிராயம்

திருச்சிராப்பள்ளிக்கு அடுத்த உறந்தை
யாரும் ஸ்ரீமீனாட்சிசுந்தர வித்தியாசாலைக்கு
துறைசை ஸ்ரீநமசிவாயமூர்த்திகள் நான்மணி
அரிய நூல்களியற்றியோரும் செந்தமிழ்ச் செல்
சஞ்சிகைக்கு அரிய பெரிய விஷயதானம் செய்
ஆகிய சித்தாந்த சைவப்பிரசாரக

**ஸ்ரீமத் தே. பெரியசாமி பிள்ளை அவர்க**

அபிப்பிராயம்.

ஸ்ரீமத் திரு. மா. சாம்பசிவம் பிள்ளை யவ
பெற்று அன்புரிமையின் அளிக்கப்பெற்ற "தி
விளக்க ஆராய்ச்சி" (Private Copy) என்னும்
நூலை நன்கு பார்வையிட்டுக் கழிபேரு வ
பெற்றும்.

"திருநான்மறை விளக்கம்" என்னும் நூ
வாதமாகத் தாபிக்கப் புக்க, முன்னோர் கருத்துக்
கொள்கைகளையெல்லாம், திருவருட் பெருஞ் செ
சைவசமய சந்தான குருமணிகள் திருவாய் ம
தெய்வச் செந்தமிழ் வேதசிவாகம சார சித்தா
நூற் பிரமாண வாயிலாகவும், முறையே மறுத்து
ராசாரம் வழுவா துண்மைநிலையிட்டும் ஒளிரும்
மறை விளக்க ஆராய்ச்சி' என்னும், பிள்ளையவர்
நூல் இப்புவியோருட்சிலர் தாமும் தெளிவிலாது
பொருட்டு வேண்டற்பால தொன்றேயா மென்
கருத்து.

தசரதன் மதலையாகிச் சானகியை மணந்தத
இராவண சமரீருகக் கூறும் இராமகாதை ஆரியர் க
றும், முருகன் எனும் அரசன் ஒருவன், அசுரன்
ஒருவனெதிர்த்துப் பொருதுவென்ற காதை
ணியர் பரமாக மாறிக் கந்தபுராணமென வழங்க
தென்றும், இன்னோரன்ன பல கூறித்தொன்னெறி
காண்பாருஞ் சிலருளராகலின், அமுதினுமினிய த
ட்டுத தமக்குள்ள ஆர்வமிகையானே 'திரு
விளக்கம்' வரைந்த ஆசிரியரைப்பற்றி விளம்புவதெ

பழுத்த சைவப்பற்றும், திண்ணிய அன்பின் அ
வ பூஜையும் செறிந்துள்ள நண்பரவர்கள் தாங்க
த்தை ஆன்றோர் முன்றந்து உண்மை தேரா வுள
திருநான்மறை விளக்கம்' வெளிவரக் கண்டார்
ண்ணுகின்றேம்.

ருவிடைமருதூர், 20—6—26.

பூந்தளிரின் முப்பொழுதும் போற்றுவார்க் கருள்சுரப்ப
மாந்தளிரா மலர்ப்பஃதத்து மட்டுவார் குழலம்மை
தேந்திவலை யாத்தியலர் செஞ்சடிலப் பிரான்பங்கற்
சேர்ந்தமருஞ் செம்பியர்தஞ் சிரபுரத்துச் சேர்வுடையான்.

ஆங்கிலஞ்செந் தமிழ்பயின்ற வருங்கலையி னுதாவாற்
பாங்குபெறத் துரைத்தனத்துப் பற்றொழிலு முஞற்றிமு
தீங்கொறுக்கு நலத்தண்டத் திறலதிகா ரமும்வகித்து
வாங்குகட லுடுத்தபுவி வயங்குபுக ழுடுத்துடையான்.

ஆரதிரு முறையாய்வி னதிருட்ப நூல்கண்டான்
ஓரதிரு மார்வமுளா ரோரொரு பால்விண்டான்
பேரதிரு மானேயம் பெரிதுடையான் சிவமுண்டான்
சீர.திரு. மா.சாம்ப சிவநாமங் கொண்டானே.

---

சென்னை இராஜாங்க சட்ட நிர்மாண சபையில் அங்
தினராயிருந்த ஸ்ரீகாழி ஸ்ரீமான் கி. சிதம்பரநாத முதலிய
அவர்கள் இளவலாரும், பண்டார சாத்திர முதலிய அ
பெரிய நூல்களை அச்சிடுவித்துத் தமிழ்ச் சைவ மக்களுக்
உபகரித்துவரும் வித்துவ சிரேஷ்டருமாகிய

திருவாளர் ச. சதாசிவ முதலியாரவர்கள்

இயற்றியது.

சீர்சான்ற வேதசிவா கமங்களினுண் மைப்பொருள்சேர்
செவ்வி வாய்ப்ப
ஏர்சான்ற நான்மறைக ளிவையெனமேற் கோள்ிறுவி
யெவரு மெச்ச
நேர்சான்ற நான்மறையா ராய்ச்சியெனச் செப்புநூ
னெறியிற் றந்தான்
பேர்சான்ற திரிசிரமா புரத்தமருஞ் சாம்பசிவப்
பெரியோன் மாதோ

இப்பெரிய நூலதனை வாசிப்போர் தமிழ்மொழியி
னேற்றத் தோடே
ஒப்பரிய வடமொழியின் மாண்பும்வே தாகமத்தி
னுயர்வு மெண்ணிச்
செப்பரிய திராவிடவே தக்கலைமெய் கண்டசாத்தி
ரத்திற் கூறும்
மெய்ப்பொருளி னுண்மையுணர்ந் துயர்ஞானச்
செல்வராய் விளங்கு வாரே

---

திருச்சிராப்பள்ளிக்கு அடுத்த உறந்தைமா நகரவாசியாரும் ஸ்ரீமீனாட்சிசுந்தர வித்தியாசாலைக்குத் தலைவரும், துறைசை ஸ்ரீநமசிவாயமூர்த்திகள் நான்மணி மாலை ஆதிய அரிய நூல்களியற்றியோரும் செந்தமிழ்ச் செல்வி யென்னும் சஞ்சிகைக்கு அரிய பெரிய விஷயதானம் செய்துவருபவரும் ஆகிய சித்தாந்த சைவப்பிரசாரகர்

## ஸ்ரீமத் தே. பெரியசாமி பிள்ளை அவர்கள்

### அபிப்பிராயம்.

ஸ்ரீமத் திரு. மா. சாம்பசிவம் பிள்ளை யவர்களாலாக்கப் பெற்று அன்புரிமையின் அளிக்கப்பெற்ற "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" (Private Copy) என்னும் பெரிய அரிய நூலை நன்கு பார்வையிட்டுக் கழிபேரு வகை கைவரப் பெற்றும்.

"திருநான்மறை விளக்கம்" என்னும் நூற்கண் உத்திவாதமாகத் தாபிக்கப் புக்க, முன்னோர் கருத்துக்கு முரணான கொள்கைகளையெல்லாம், திருவருட் பெருஞ் செல்வர்களான சைவசமய சந்தான குருமணிகள் திருவாய் மலர்ந்தருளிய தெய்வச் செந்தமிழ் வேதசிவாகம சார சித்தாந்த உண்மை நூற் பிரமாண வாயிலாகவும், முறையே மறுத்தும், ஆன்றோராசாரம் வழுவா தூண்மைநிலையிட்டும் ஒளிரும், 'திருநான்மறை விளக்க ஆராய்ச்சி' என்னும், பிள்ளையவர்கள் திப்பிய நூால் இப்புவியோருட்சிலர் தாமும் தெளிவிலாது மயங்காமைப் பொருட்டு வேண்டற்பால தொன்றேயா மென்ப தெமது கருத்து.

தசரதன் மதலையாகிச் சானகியை மணந்ததாதிய இராம இராவண சமரீருகக் கூறும் இராமகாதை ஆரியர் கற்பனையென்றும், முருகன் எனும் அரசன் ஒருவன், அசுரன் எனும் பிறிதொருவனோடெதிர்த்துப் பொருதுவென்ற காதையே, சுப்பிரமணியர் பரமாக மாறிக் கந்தபுராணமென வழங்கப்பெறுகின்றதென்றும், இன்னோரன்ன பல கூறித்தொன்னெறி பிழைபடக் காண்பாருஞ் சிலருளராகலின், அமுதினுமினிய தமிழ் மொழி நாட்டுத தமக்குள்ள ஆர்வமிகையானே 'திருநான்மறை விளக்கம்' வரைந்த ஆசிரியரைப்பற்றி விளம்புவதென்னை?

பழுத்த சைவப்பற்றும், திண்ணிய அன்பின் அழுத்தமான சிவ பூஜையும் செறிந்துள்ள நண்பரவர்கள் தாங்கண்ட விளக்கத்தை ஆன்றோர் முன்றந்து உண்மை தேரா வுளத்தினராய்த் 'திருநான்மறை விளக்கம்' வெளிவரக் கண்டார்போலுமென எண்ணுகின்றேம்.

திருவிடைமருதூர், 20—6—26.

மதுரைத் தமிழ்ச் சங்கத்து அங்கத்தவரும், பத்திரிகைகளுக்கு விஷயதானஞ் செய்பவரும், யாழ்ப்பாணத்துச் சுன்னைச் சமஸ்கிருத வித்தியாசாலையில் தமிழ்ப் போதகாசிரியராயிருப்பவரும், நன்மாணுக்கருக்கு வேதனமின்றிக் கற்பிப்பவரும், பௌராணிகரும், சைவப்பிரசாரகரும், இரகுவம்மிச உரையாசிரியரும், ஸ்ரீமத் வித்துவரத்தினம் ஸ்ரீமாந் அ. குமாரசுவாமிப் புலவரவர்கள் சரித்திர ஆக்கியோரும், "அடக்கமாருளுய்க்கு மடங்காமை-யாரிரு ளுய்த்து விடும்" என்னுங் குறண் முற்பகுதிக் கிலக்கியமானவரும், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள் மருகரும் மாணுக்கரும் வித்துவ சிரோமணியுமாகிய ஸ்ரீமத் ந. ச. பொன்னம்பல பிள்ளையவர்கள் மாணுக்கருமாகிய பிரமஸ்ரீ மகா வித்துவான்

## கணேச பண்டிதரவர்கள்

அபிப்பிராயமிது :-

சைவ சமயிகளாகிய எமக்கு 'முதனூல்களாகவுள்ள வேதம் ஆகமம் என்னுமிரண்டும் வடமொழியாகிய சமஸ்கிருத பாஷையிலேயே ஆதிதொட்டுள்ளன. தென் மொழியாகிய தமிழ்ப் பாஷையிலன்று. வடமொழியும் தென்மொழியுமாகிய இவ்விரண்டும் நமக்குரிய மொழிகளாகவே பண்டைக் காலந்தொட்டு ஆன்றோர்களாற் கொள்ளப்பட்டு வந்தன; வருகின்றன; வருவன. இற்றைக்கு ஏறக்குறைய ஐயாயிரம் வருஷங்களுக்கு முன்னிருந்தவராகிய திருமூல நாயனாரும்,

"மாரியுங் கோடையும் வார்பனி தூங்கநின்
றேரியு நின்றங் கிளைக்கின்ற காலத்து
வாரிய முந்தமிழு முடனே சொல்லிக்
காரிகை யார்க்குங் கருணை செய்தானே."

"அவிழ்க்கின்ற வாறுமது கிட்டுமாறுஞ்
சிமிட்டலைப் பட்டுயிர் போகின்றவாறும்
தமிழ்ச் சொல்வட சொல்லெனு மிவ்விரண்டு
முணர்த் துமவனை யுணரலு மாமே."

எனச் சிவபெருமானை யவ்விரு மொழிக்கும் முதல்வராகக் கூறி, யவ்விரு மொழியையு மொப்ப வங்கீகரித்துள்ளார்.

நஞ்சமயாசாரியர்களும், "வடமொழியுந் தென்மொழியு மறைகளு நான்குமானவன்" என்றும், "ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்" என்றும், "செந்தமிழோடாரியனைச் சீரியானை" என்றும், "ஆரியந் தமிழோடிசையானவன்" என்றும், சிவபிரானை யவ்விரு மொழி வடிவினராகக் கூறி யங்கீகரித்துள்ளார்கள்.

கடைச் சங்கத்துப் புலவர்களும்

"ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் திதனினிது
சீரியதென் றொன்றைச் செப்பரிதா—லாரியம்
வேதமுடைத் துத்தமிழ் திருவள் ளுவனு
ரோது குறட்பா வுடைத்து." என்றும்,

"வேதப் பொருளை விரகால் விரித்துலகோ
ரோதத் தமிழா லுரைசெய்தா—ராதலா
லுள்ளுன ருள்ளும் பொருளெல்லா முண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு." என்றும்,

இருமொழியையு மங்கீகரித்துள்ளார்கள்.

மாதவச் சிவஞான யோகிகளும்

"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற் [தும்
கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவார்."
என்றும்,

"இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
விருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பு
மிருமொழியு மான்றவரே தழீஇயினு ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ." என்றும்,

அவ்விரு மொழியையு மங்கீகரித்தனர்.

மெய்கண்ட தேவர் முதலிய சைவசித்தாந்தநூ லாசிரியர்களும், வடமொழி தென்மொழியாகிய விரண்டையு மங்கீகரித்து நூல் செய்துள்ளார்கள்.

சேக்கிழார் முதலிய புராணநூ லாசிரியர்களும், இருமொழியையு மங்கீகரித்துள்ளார்கள். சுருங்கச் சொல்லின் வடமொழியை நமக்குரிய மொழி யன்றென விலக்கினவர்கள் இற்றை வரையு மொருவருமிலர், அங்ஙனமாக இக்காலத்து இவ்வுண்மையறியாத சிலர் தஞ் சமயத்திற் சிறிது மபிமான மின்றி வடமொழி பார்ப்பனப் பாஷையென மேற்கொண்டு அவ் வடமொழியிலுள்ள வேதாகமங்களையும் அவ்வேதாகமங்களைக் கைக்கொள்ளும் பிராமணர்களையும் நிந்தனை செய்வான் புக்கு, வடமொழி தொன்மொழி யன்றெனவும், அம்மொழி நம்மொழி யன்றெனவும், அம்மொழியிலுள்ள வேதாகமங்கள் நமக்குரிய வல்லவெனவும், அவ் வேதாகமங்களுக்கு முன்னேயே தமிழில் வேதாகமங்கள் இருந்தனவெனவும், வடமொழி வேதங்களைக்

கைக்கொள்ளும் பிராமணர்கள் வேறு, நந்தமிழந்தணர் வேறு எனவும், தமக்கோராதாரமுமின்றி வாயில் வந்தவாறு கூறுவாராயினர். இவர்களுடைய போலிக் கொள்கைகளுக்கு தேவாரமாதிய சைவ நூல்களில் யாதொரு ஆதாரமும் கிடையாது.

அங்ஙனமாகவும் இவர்கள் தேவாராதி சைவநூல்களிற் றமக்குப் பிரமாணமுள்ளதுபோல், பிரமாணமல்லாத செய்யுட்களை யெடுத்துக்காட்டி அவற்றின்பொருள்களையுந் திரித்துக் காட்டி உண்மையறியா மாந்தர்களை மெய்யென்று நம்புமாறு மயக்கும் விந்தைஎவ்வளவு அதிசயிக்கத்தக்கது! அம்மம்ம இவர்கள் தங்கள்போலிக் கொள்கைக்கு மாறுகத் தேவாராதி சைவநூல்களிலுள்ள செய்யுட்களை யெடுத்துக் காட்டாது மறைத்துவிடுகின்றார்கள். இவர்களவ்வாறு செய்வது தம்போலிக் கொள்கைகளை ஒருவரும் நம்பமாட்டார்களென் றெண்ணியன்றோ? அவைகளையு மெடுத்துக்காட்டித் தக்க பிரமாணங்கொண்டு மறுத்துத் தங்கொள்கையை நாட்டினன்றோ எவர்களுமதனை நம்புவார்கள். அன்றியதனை யெவர்கள் நம்புவார்கள்! ஒருவரும் நம்பார்! நம்பார்!!

இன்னுமிவர்க ளனுட்டித்துவரும் அனுட்டானக் கிரியைகளோ, அந்தியேட்டிக் கிரியைகளோ, ஆலயக் கிரியைகளோ, எவைகளும் இன்றுவரையும் சமஸ்கிருத மந்திரங்களாலேயே செய்யப்பட்டுவருதல் கண்கூடு. அங்ஙனமாகத் தமிழில் மந்திரங்கள் இருந்தன வென்பது எவ்வாறு பொருந்தும்? இருந்தனவாயின், அம்மந்திரங்க ளெங்கே? அவற்றைக் கூறும் வேதாகமங்க ளெங்கே? கடல்கொண்ட தென்பாராயின், தமிழ்நாடு முழுவதையும் கடல்கொண்ட தாயினன்றோ அவ்வாறு கூறுவது பொருந்தும். ஒரு சிறுகூறுகடலாற் கொள்ளப்பட்டதாயினும் மற்றைக் கூறுகளிலவைகள் காணப்படலாமே, காணப்படாமையின் அவர்கள் கொள்கை போலியென்பது வெளிப்படை.

பிரணவமும் ஸ்ரீ பஞ்சாக்கரமுமே தமிழ்மந்திர மென்பாராயின் அங்ஙனம் தமிழ்நூல்கள் கூறுமையானும், ஆன்றோர்கள் ஆட்சியின்மையானும், அம்மந்திரங்களே வேதங்களானும் ஆகமங்களானும் வீட்டுநெறிக்குரிய மந்திரங்களென விசேடமாக எடுத்துக் கூறப்படும் மந்திரங்களாகக் காணப்படுதலானும் ஆன்றோர் ஆட்சியுண்மையானும் அவர் கூற்றுச்சிறிதும் பொருந்தாது. தமிழ் மந்திரங்களையே அவர்கள் கவர்ந்து தமந்திரங்களின் உண்மையை நோக்குவார்க்குப் புலனாகும். எங்

னமெனின், "ஓ" என்னும் எழுத்தேயன்றி, "ஓம்" என்றொரு எழுத்துத் தமிழினின்மையானும் வடமொழி மந்திரங்களினெவ்வொன்றின் முதலினும் அது கூறப்படலானும், "ஓம்" மென்ற எழுத்தை அகாரம், உகாரம், மகாரம், விந்துநாதம் எனப்பிரித்து வழங்குதல் வடமொழிக்கே யுரிமையானும், தமிழ்ச் சிவஞானபோதகாரரும் வடமொழி யென்பது தோன்ற "நாடிற்பிரணவமாம்" என்றும் "எண்ணில வோங்காரம்" என்றும் கூறுதலானும் "ஓமென்று மறையபில்வா" ரென ஆரியவேதத்தில் முதலிலே சொல்லப்படுமெனத் திருஞானசம்பந்த சுவாமிகள் தமிழ்வேதத்திற் கூறுதலானும், "வேதநான்கினு மெய்ப்பொருளாவது—"நாத நாம நமச்சிவாய வே" எனத் திருநாவுக்கரசு சுவாமிகள் கூறுதலானும் என்க. ஓம் என்றது தமிழ்மந்திரம் அன்றென்பது ஆராய்ச்சி நூலுள்ளும் தக்க பிரமாணங்களால் வலியுறுத்தப் பட்டது. ஆகலின், இவர் கொள்கையாவும் பிரமாணமற்றதென்பதே துணிபு.

இங்ஙனமே தங் கொள்கையாவும் போலியென்பதுணராத இவர்களுள் ஸ்ரீமாந். கா. சுப்பிரமணியபிள்ளை (எம்.ஏ. எம்.எல். அட்வக்கேற்) அவர்கள் தம்போலிக் கொள்கையைப் பரப்ப முயன்று "திருநான்மறை விளக்க"மென வோர்விஷயமெழுதிச் "செந்தமிழ்ச் செல்வி"யென்னும் பத்திரிகையில் வெளிப்படுத்தி வந்தனர்.

சிவபத்தி, சிவனடியார்பத்தி, சிவசின்னதாரர்பத்தி, சிவசாத்திரப்பத்தி, சிவசாத்திர போதகர்பத்தி, முதலியவற்றிற்கு ஒரு கொள்கலமாயும், "சமன்செய்து சீர்தூக்குங்கோல் போலமைந் தொருபாற்—கோடாமை சான்றோர்க்கணி" என்னும் தேவர் திருக்குறளுக்கு மேதகு மிலக்கியமாயும் இலங்குகின்றவரும், "பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற—செய்யாமை செய்யாமை நன்று" என்றவண்ணம் தாம் இயற்று நூல்களெல்லாவற்றினும் உண்மைப் பிரமாணங்களையே எடுத்துக்காட்டிப் பூர்வபக்கத்தார்க்கு நல்லறிவுச்சுடர் கொளுத்தி உய்விப்பவரும், சிவபூசா நியமதுரந்தருமாகிய ஸ்ரீமாந் சாம்பசிவபிள்ளை யவர்கள் உண்மைக்கு மாறுகிய அவர் கொள்கையை நோக்கிச், "சாதி, குலம், பிறப்பென்னு" மிவற்றூற்றடுமாறுது, உண்மையை நாட்ட முயன்று "திருநான்மறை விளக்க வாராய்ச்சி" யென வதற்கோர் மறுப்பெழுதி அதனை வெளிப்படுத்த முயன்று அச்சிட்டு, அச்சிட்ட பிரதியுளொன்றை யெமக்கனுப்பியதனைநோக்கி அபிப்பிராயமெழுதும் படி யெமக்குத் தெரித்தனர். அவர் தெரித்தவாறு, அப்பிரதியை நோக்கினேன். நோக்கியபொழுது சுப்பிரமணிய

பிள்ளை யவர்களெழுதிய போலிக் கொள்கைக ளியாவற்றையும் ஒவ்வொன்ருக வெடுத்து ஆராய்ந்து மறுத்த மறுப்புக ளியாவும், எமக்கு உண்மையாகவே காணப்பட்டன. "நாவன்ன சமநிலை" நின்று நோக்குவோர்க்கு அவைகளுண்மையாகவே காணப்படுமென்பதிற் சிறிதுஞ் சந்தேகமே யில்லை.

இக்கண்டனம் சாம்பசிவ பிள்ளை யவர்களின் உண்மை நிலையையும் ஆழ்ந்த கல்வியறிவின் பெருமையையும் எவர்களுக்கும் உணர்த்தாதே போகாது. சுப்பிரமணிய பிள்ளை முதலியோரெழுதிய வேதம் தமிழில் இருந்ததென்பது முதலிய பொய் வார்த்தைகளையெல்லாம் நோக்கியபொழுது அவைகள் இன்னவின்னவாறே கண்டிக்கப்படவேண்டுமென்று யாம் எண்ணியவாறே அக்கொள்கைகள் பிள்ளையவர்களால் தக்க பிரமாணங்களால் மறுக்கப்பட்டிருத்தலை நோக்கியபொழுது எமக்கு மிகவும் ஆனந்தமுண்டாயது. எமக்கு மாத்திரமன்று, சமயாபிமானத்தை விரும்பிய யாவர்க்கும் இது ஆனந்தமளிக்குமென்பதிற் சந்தேகமே யில்லை. அம்மறுப்புகளிற் சிலவற்றை இங்கே முகவுரையாக வெடுத்துக் காட்டி யெம் மபிப்பிராயத்தை முடிக்குதும். அவை வருமாறு:—

க. தமிழ் மக்கள் நால்வருக்குச் சிவபெருமான் கல்லாலடியில் அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கு பொருளையும் உபதேசிக்க அந்நால்வரும் அதுகொண்டு நான்கு வேதங்களையும் தமிழில் இயற்றினரென்பது கா. சு. அவர்கள் கூற்று.

அது, சிவபிரான் தாம் முன்னர் அருளிய வேதப் பொருளைப் பிரம புத்திரராகிய சனகாதியர்கட்கு உபதேசிக்க அவர்கள் நால்வருங் கேட்டுத் தெரிந்து நிட்டை கூடினாரன்றி யவர்கள் நால்வரும் நூல்கள் செய்தாரல்லரென "அணிபெறு வடமரநிழலினி லமர்வொடு மடியிணை யிருவர்கள், பணிதர வற நெறி மறையொடு மருளியபரன்" என்பது முதலாக கா. சு. அவர்கள் காட்டிய தேவாரப்பிரமாணங்கள் கொண்டும், வேறு பிரமாணங்கள் கொண்டும் மறுத்துரைக்கப்பட்டுள்ளது.

உ. "காது பொத்தரை" யென்பதை முதலாகவுடைய தேவாரத்திற் கூறிய பொருளுஞ் சிறப்புடைத்து. அதில் மூன்றாம் அடி முதலை ஏதம் செய்தவர் என்றுமோனை வரப்பிரித்துப் பொருள் கோடலே இலக்கண இலக்கியங்கட்கும் ஆக்கியோராகிய நாயனர் கருத்திற்கும் ஒத்ததென்பது அப்பதிகத்தை யுற்று நோக்கின் நன்கு விளங்கும்.

௩. தமிழிலுள்ள நான்மறை யென்னும் நூல் ஆதி முதல் தமிழ் நாட்டிலிருந்து பஃறுளியாறு முதலியவற்றைக் கடல்

கொண்டபோது அக்கடல் கோளில் மறைந்தவைகளுடன் மறைந்துபோயினவென்ற கா. சு. அவர்கள் கூற்று, தொல்காப்பிய மியற்றப்பட்ட காலம் முதற் சங்கமாதலின் அதற்குப் பின்னுண்டான கடல் கோளில் தமிழ் நான்மறை மறைந்தபோது தொல்காப்பியம் மறையாதிருந்து விளங்குவதென்னை? இது வியப்பே யெனத்தக்க வினா நிகழ்த்தி மறுக்கப்பட்டுளது. இன்னு மவ்வுரை தமிழ் நான்மறை, முதற் சங்க காலத்திருந்ததாயின் முதற் சங்கப் புலவராலியற்றப்பட்டு, புறநானூற்றின் ஆறாவதாயிருக்கின்ற செய்யுள் மறையாதிருக்கத் தமிழ் நான்மறை, மறைந்த தென்னோ? வென்னுமோர் வினா நிகழ்த்தி மறுக்கப்பட்டுளது.

ச. அச் செய்யுளில் வரும் நான்மறை யென்பது, தமிழ் வேதமெனக் கூறிய கா. சு. அவர்கள் கூற்று, "புரையி, னற்பனுவ னால்வேதத்,தருஞ் சீர்த்திப் பெருங் கண்ணுறை, நெய்மலியாவுதி பொங்கப் பன்மாண்,வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி, யூபம்நட்ட வியன்களம் பலகொல் யாபலகொல்லோ" என்னுஞ் செய்யுள் கொண்டு மறுக்கப்பட்டுளது.

ரு. திருமூலர் பிராமணர்களை யிகழ்ந்தாரென்ற அவர் கூற்று, வேதப் பொருள் சிவபெருமானென்பதை யுணராத பிராமணரையே யிகழ்ந்தாரன்றி, ஏனையோரை யிகழ்ந்தாரல்லரென அத்திருமூலர் கூறிய

"அந்தண ராவோ ரறுதொழிற் பூண்டுளோர்
செந்தழ லோம்பிமுப் போது நியமஞ்செய்
தந்தவநற் கருமத்து நின்றாங் கிட்டுச்
சந்தியு மோதிச் சடங்கறுப் பார்களே."

"பெருநெறி யான பிரணவ மோர்ந்து
குருநெறி யாலுரை கூடிநால் வேதத்
திருநெறி யான திருகை யிருத்திச்
சொரூப மதானோர் துகளில் பார்ப்பாரே." என்னுஞ்
செய்யுட் பிரமாணங்காட்டி மறுக்கப்பட்டுள்ளது.

சூ. வேதாரணியத்துக்குப் பக்கத்திலே கல்லாலிருந்தது என்னுமவர் கூற்று, தக்க பிரமாணங்கள்காட்டி மறுக்கப்பட்டுளது

எ. "சதாசிவதத்துவம் முத்தமிழ் வேதம்" என்பதற்கு சதாசிவ தத்துவத்திலிருந்து முத்தமிழும் வேதமும் தோன்றிய வெனப்பொருள் கொண்டதும், அப்பொருள்,

"ஆரியமுந் தமிழுமுடனே சொல்லி" என்பதனால் உறுத்தப் பட்டிருப்பதும் மிகவும் வியக்கத்தக்கன. இவ்வா கா. சுப்பிரமணியபிள்ளை யவர்களுடைய போலிக் கொள் களை எல்லாம் ஆங்காங்கே தக்க பிரமாணங்காட்டி மறு மறுப்புக்களியாவும் மிக வியக்கத்தக்கனவும் யாவரும் ம கொணாத உண்மைகளுமேயாம்.

ஆதலால் இவ்வுண்மைகளையெல்லாம் யாங்கடைப்பிடித் உய்யுமாறு பலநாண் முயன்று ஆராய்ந்து இவ்வாராய்ச்சி பெழுதி கா. சு அவர்களெழுதிய நவீனப் போலிக் கொள்க களால் கல்லாமாந்தர் மயங்காவண்ணம் உதவிய ஸ்ரீமாந். சா சிவ பிள்ளை யவர்களுக்குச் சைவசமயிகளாகிய நாமெல்லா மனமார்ந்த அன்போடு என்றும் ஸ்துதிகூறவேண்டிய வர்க கவே யிருக்கின்றோம். அதுவேயுமன்றி அவர்கள் பூரணயு டனிருந்து இதுபோலும் உத்தமோத்தம நன்மைகளைச் செய் கருணை பாலிக்கும்வண்ணம் சிவபிரான்றிருவடிக்கு விண் பஞ் செய்யும் விழுமிய கடப்பாடுமுடையேம்.

---

# ஸ்ரீலஸ்ரீ. சுவாமிநாதபண்டிதரவர்கள்
## அபிப்பிராயம் இது.

---

### தேவாரம்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

### திருவாசகம்.

தேவதேவன் மெய்ச்சேவகன் றென்பெருந்துறை நாயகன்
மூவராலு மறியொணாமுத லாயவானந் தமூர்த்தியான்
யாவராயினு மன்பரன்றி யறியொணாமலர்ச் சோதியான்
தூயமாமலர்ச் சேவடிக்கணஞ் சென்னிமன்னித் திகழுமே.

---

திருச்சிற்றம்பலத் தெஞ் சிவக்கொழுந்தே! நின்பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்.

அதுதான் முற்றறிவினாலே முதல்வ! நீ! முன்னர்த்தான் முற்று மறியாததன்று. யுகதர்மமாகத்தான், கன்மத்திற் கேற்பத்தான், அன்றேதான், அருளினாற்றான் அர! அமைக்கப் பட்டது நின்னாற்றான்; ஆயினும் அறிந்தருளுக.

திருநெல்வேலி என்னுந் திருப்பதியைச் சென்மஸ்தான மாகப் பெற்றவரும், ஸ்ரீமாந். வேதாசலப்பிள்ளையவர்கள் திருநெல்வேலியில் காந்திமதியம்மை கோயின் மண்டபத்திலே, பாண்டி நாட்டார் சைவரல்லர் சமணர்களே என்றும், சாதி இல்லை என்றும் பிரசங்கஞ் செய்த காலத்தில், எம்மைக்கொண்டு சாத்திர வாயிலாக அவர் பிரசங்கத்தை மறுத்துப் பிரசங்கஞ் செய்வித்து அப்பிரசாரகரால் ஏவப்பட்டு எமது பிரசங்கத்திற் குறிப்பெடுத்தற்காகச் சபையில் வந்திருந்த ம-ா-ா-ஸ்ரீ பண்டிதர் சிவராமப்பிள்ளையவர்களும், அவர் மாணாக்கர் நால்வரும் பிரசங்கத்திற் குறிப்பெடுத்தற் கிடம் பெறாமையால் நாண முற்றுப் பாதிப்பிரசங்கத்தில் சபையைவிட்டோடவும் அது கேட்டறிந்த பிரசாரகரும் நாணி மற்றைத்தினமே திருநெல்வேலியைவிட்டு அம்பாசமுத்திரம் ஓடவும் செய்த பெரியதோருண்மைச் சைவாபிமானத்தலைவரும், நன்மை தீமை நிகழ்ச்சிக்கண் மனந்திரியாது திருவருட்சம்மதமென்று கூறுந் திடபத்தியாளரும், அர்த்தயாமத்தில் காந்திமதியம்மை தரிசனஞ்செய்து போசனம் பண்ணுகின்ற நியம நிலையினரும், சுத்தாத்துவித சைவசித்தாந்த ஸ்தாபனத்தில் விசேட வேணவாவுடையவரும், வேதாகம தூடணந்தினைத்துணையுஞ் சகியாதவரும், பீ. ஏ. பிள்ளை என்னு நாமத்தைத் தமக்கிடுகுறியாகப் பெற்றவரும், திருமுறைப்பாராயண நியம துரந்தரரும், தமது வைதிக கருமத்திற்குக் காலம் போதாமையால் தமக்குக் கிடைத்த உத்தியோகத்தைத் தாமே பரித்தியாகம் பண்ணினவரும், எம்மீது வைத்த பேரன்பால் யாம் பரிசோதித் தச்சிடுவித்த சிவஞான பாதமாபாடியம் தேவாரம் என்பனவற்றில் நூறுநூறு புத்தகங்கள் விக்கிரயஞ்செய்து பொருளுபகரித்தவரும், எம்மிடத்துப் போலவே ஸ்ரீலஸ்ரீ. "திருஞானமறை விளக்க வாராய்ச்சி" நூலாசிரியரிடத்தும் பேரன்புடையவரும், எமதிரு கண்மணியும் சமதன்பர்சிகாமணியுமாகிய ஸ்ரீமத். பீ. ஏ. காந்திமதிநாத பிள்ளையவர்கள் சேட்ட புத்திரரும், கலெக்டர் உத்தியோகத்திற்குக் கற்றற்பொருட்டு இங்கிலாந்து போக முயன்றபோது அப்போக்குத் தமது சமயாசாரத்திற்கும் குலாசாரத்திற்கும் ஏற்கதன்றெனக் கருதிய அப்பிதாவின் ஆஞ்ஞையால் அம் முயற்சி என்று மினாருகச் சிவபூசையை மேற்கொண்டவரும் ஆகிய அட்வக்கேட் ஸ்ரீமாந். சுப்பிரமணியபிள்ளை யவர்கள்

சைவசாத்திர வரம்பையும், அச்சாத்திரவழி யொழுகி அ
பெற்ற ஆன்றோர் கொள்கையையும் இகந்து, "வீழ்நாள் பட
மை நன்றாற்றி னஃதொருவன்—வாழ்நாள் வழியடைக்
கல்" என்னுந் தேவர் திருக்குறளையுமோராது புதிய கோ
மேற்கொண்டு, கொண்டதற் கேற்பப் பிரமாணமின்மைய
பிரமாணமாக்குதற் பொருட்டு, அருட்பாடல்களைப் பிரதி
மாறாகத் *திரித்தும், திரிக்காத சிலவற்றிற்குப் பொருள்கோ
முறை, இலக்கணத்திற்கும், இலக்கியத்திற்கும், நிகண்டு முதல
கோசங்கட்கும், பண்டையுரைகட்கும், அகராதிகட்கும்,
திக்கும் முற்றும் $ பொருந்தாப்பொருள் கூறியும் தமதுநா
வீழ்நாளாக்கிப் பழி பாவங்கட்கும் அறிஞர்வாய் நகைக்கு
இன்னுமின்னும் ஆளாகாது சைவப்பயிர் தழைத்தினி மேதா
அவர்தாஞ் செவ்வனே முயலுமாறு திருவருள் புரிகவென்

முதற்கண் இவ்வாறு விண்ணப்பஞ் செய்து வேண்
கோடற்குக் காரணம் என்னையெனிற் கூறுதும்:—

---

* திரித்தவற்றுள் எமது பார்வைக் ககப்பட்ட சிலவற்றை இங்
தெரிக்கின்றாம்.

இந்நூல் 22-ம் பக்கம், தேவாரம். "உரைக்கடந்தோதும்" என்பன
"உரைகடந்தோதும்" என்றும், 26. "கோதின் மாதவர் குழுவுட
கேட்ப" என்பதைக் "கோதின் மாதவர் குழுவுடன் கூட" என்று
33, 34. பெரிய புராணம். "பொருவிறப்ப ஓதுஞர் புகலிவந்த புண்ணி
ஞர் எண்ணிறந்த புனித் வேதம்" என்பதைப் "புகலியர் கோன் செப்
ஞர் எண்ணிறந்த புனித வேதம்" என்றும், 38, 39. தேவார
"ஆலத்தார் நிழலில்லறம்" என்பதை "ஆலத்தார் நிழலின் அரன்
என்றும், 63. "தொகுத்தவ னருமறை அங்க மாகமம வகுத்தவன்
என்பதைத் "தொகுத்தவ னருமறை ஆறங்கம்" என்றும், 68. தொ
காப்பியம். "நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த மறைமொழி" எ
பதை "நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்தது மறைமொழி" என்று
109. 'சைவவேடந் தாளிணைத்து" அல்லது "சைவவேடந் தானினைந்த
என்பதைச் "சைவவேடந்தாளிணைத்து" என்றும், 132. பதிஞெராந்தி
முறை. "ஆரியப் புத்தகப்பேய்" என்பதை "ஆரியர் புத்தகப் பேய்
என்றும், 186. "ஓதிய வேத நாவர்" என்பதை "ஓதிய வேத நால்வ
என்றும்; இவை போல்வன பிறவும் திரிக்கப்பட்டிருத்தல் காண்க.

$ பொருந்தாப் பொருளை இந்நூலுள் பக்கம், 38, 39. "கோலம்
"சொல்" "வண்மொழி" பக்கம். 82. "அந்தணர் மறைத்தே" பக்
99. "முதுமுதல்வன் வாய்போகா தொன்று புரிந்த—வீரிரண்
றுணர்ந்த வொருமுதுநூல்" பக்கம். 77. "கலித்துறையது பய
காமர் காட்சி நல்லானை" என்றற் றொடக்கத்தன பலவற்றிற்கு எழுதி
பொருள்களா லுணர்க.

“ அருளறி வொழுக்க மான மாசாரம் பொறைசீ ரன்பு
தருமகன் னெறிநற் றூனஞ் சத்தியந் தவத்தோ டாண்மை
விரதநோன் பிரக்க மீசன் மெய்யருட் பத்தி யுள்ளோர்
ஒருவரை யுலகிற் காண்ப தரிதுகா ணுயர்த வத்தீர் ”

என்றிங்ஙனங் கலியுக தருமத்தை நன்கு விளக்கிக் கூறிப் போந்த தென்றமிழ்க் கவியு நன்று காண, அருளறி வாதிய உத்தமோத்தம குணங்களும், அத்தகைய ஒழுக்கமாதிய செயல்களும் ஒருங்கு குழுமிக் காசராணுதி யவயவங்களைப் பொருந்தி ஒருருவெடுத்தாற் போன்றவர், பன்னூலாராய்ச்சி வல்லுநர், “ஆராய்ச்சி”யா மாரமிர்தம் ஓயாது பொழியும் அறிவுமாமேகம், “தேருந் தோறு மினிதாந் தமிழ்” என்ற வண்ணம் பழகுந் தோறும் பத்தியு மறிவும் பரத்தில் ஓத்திடும் பண்பினர்க் கெத்திறத்தானு மினிதாந் தன்மையர், வித்துவ சூளாமணி, சைவசூளாமணியென் றின்னனவாகப் புனைந்துரைத்து மெய்யறிவாளர் போற்றும் ஸ்ரீலஸ்ரீ. திரு. மா. சாம்பசிவபிள்ளையவர்கள் என்னுஞ் சிவஞானச்செல்வப் பெரியார் “திருநான்மறைவிளக்க வராய்ச்சி” எனப் பெயரிய ஒப்பின் மாபெருமை வாய்ந்த திப்பிய நூலொன்றியற்றி அச்சிடுவித்து, அதில் ஒரு புத்தகம் வெளிப்பாட்டின் முன்னர் எமக்கீந்து நோக்குமாறு செய்தார்கள். யாமும் நோக்குமாறு நோக்கி அறியுமாறறிந்த வழி, அஃதெமதுயிர் நண்பர் ஸ்ரீமத். பீ. ஏ. காந்திமதிநாத பிள்ளையவர்கள் குமாரர் ஸ்ரீமாந். அட்வக்கேட் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பொறித்து வெளிப்படுத்திய “ திருநான்மறை விளக்க”த்தை ஆயுமாற்ரு லாய்ந்து மறுக்குமாற்ருன் மறுத்த தொரு சைவக்களஞ்சியநூலாக விருத்தலைக்கண்டு உள்ளத்துவகை வெள்ளத்து மூழ்கினேமாயினும், எமது ஆருயிர் நண்பர் புதல்வர் சைவசாத்திர முதலியவற்றிற்கும் ஆன்ருேர் கொள்கைக்கும் முற்றும் மாருக நவீனக்கொள்கைகளை மேற்கொண்டு ஆதாரம் அணுத்துணையுமின்றிப் புந்தி போனவாறே அந்தில் பொறித்திருக்கும் விந்தையை ஒருகால் இருகாலன்றி மூக்காலு நோக்கி எக்காலும் கழிபெருங் கவலைக் கடலுள் ஒருபாலழுந்தி அவர் அக்கையற வெய்தி மெய்ம்மை யோர்ந்து உய்திறனுகச் சைவசமயாபி விருத்தி தமிழ் சமஸ்கிருத பாஷாபி விருத்தி செம்மையே செய்து இம்மை மறுமை வீடு என்னும் மும்மைப் பயனும் தவநனி துய்க்க வேண்டுமென்னும் வேணவாவே அக்காரணமென்று கடைப்பிடிக்க. சமஸ்கிருதம் எமக்குமுரிய சிறந்த பாஷையென்பது முன்னர்த் தெரிக்குதுந் தேர்க.

இனி, “ தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொருள்—தந்தம் வினையான் வரும்” என்ப; ஆகலின், புதல்வராகிய

ஸ்ரீமான். சுப்பிரமணியபிள்ளையவர்கள் செய்யு நல்வி பயன்கள் தந்தையாராகிய ஸ்ரீமத். காந்திமதிநாதபிள்ளைய களைச் சென்றடைந்து அவர்கட்கு நன்மை பயக்குமாகவி அவர் புதல்வர் பழி பாவங்கட்குரிய செயலையொழித்துப் பு புண்ணியங்கட் கேதுவாகிய சற்கருமங்களைச் செய்து உ மாறு அருள்புரிவான் யாம் எம்மிறையை வேண்டுதல், அ சற்கருமபலன், எமது நண்பராகிய அவர் தந்தையார் ப சென்று சேர்ந்து அவர்க்கு நன்மை பயக்கவேண்டும் என்னு கருத்தால் நட்பின் மிகுதிப்பாடுபற்றிச் செய்யப்பட்டதெ மற்றொரு பிரகாரம் காரணங்கோடலும் ஒன்று. என்னை "நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி—ஒல்லும்வ யூன்று நிலை," "உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே இடுக்கண் களைவதா நட்பு" என்றாராகலின்.

இங்ஙனங் கொள்ளவே தந்தை மைந்தர் இருவரது நலமே பெரிது கருதிக் கண்ணுதல் பால் விண்ணப்பஞ் செய் வாறு பெறப்பட்டமை காண்க.

இங்கே இடுக்கண் என்னையெனின், "திருநான்மறை விளக்க"த்தில் சைவசாத்திரத்திற்குஞ் சான்றோர் கொள்கை கும் ஒத்ததாய் ஒரு கொள்கை தானுங் காணப்படாமையானு அத்துணையேயன்றி அடியார் அருளாற் கூறிய வாக்கியங்களை மருளாற் றிரித்தலானும், சில வாக்கியங்கட்கு உள்பொரு விடுத்து இல்பொருளைத் தாமாகவே படைத்திட்டுக் கூறுதல னும், பிறவாற்றானும் அவ் "விளக்கம்" சிவபிரான் றிருவுள்ள திற்கு முரண்பட்டதொன்றேயாமாகலின், அதுபற்றி அவரா நிகழும் துன்பமாம். அது நிகழாதவண்ணம் வேண்டிக்கோட அவர் மாட்டு நட்புடைய வெமக்கு மரபாம்; அதுபற்றி "வேண் டுவார் வேண்டுவதே" ஈயும் விமலன் அருளுமென்பது மைந்தர் தந்தை இருவர்க்கு முள்ள ஒற்றுமை நயம்பற் மைந்தர்க்கு வருவது தந்தையார்க்கும் வருவதுபோலக் கூற பட்டது. அதுநிற்க.

இனி, "திருநான்மறை விளக்கம்" என்னுஞ் சொ புணர்ப்பை நுணுகி யுற்று நோக்கி ஆராய்வார்க்கு, "தேவ குறளுந் திருநான்மறை முடிவும்" என்னும் ஒளவையார் அ ளிச்செய்த வெண்பாவுட் போந்த 'திருநான்மறை' என்பது எவ்வாற்றானும் இப்போதுள்ள வடமொழி வேதங்களையே உணர்த்தி நிற்கும் மதுகை மிகுதிப்பாட்டை நன்கினி துணர்ந் "விளக்க" முடையார், அதுதான் தமது கொள்கைக்கு நேரே மாறாயிருத்தலை யுணர்ந்து, அதனைச் சகிக்க லாற்றாவுளத்தராய்

அதற்குத் தமிழ் நான்மறை எனப் பொருள் விளக்கக் கருதி, அதன் பின்னர் "விளக்கம்" என்னும் ஒரு சொற்றலைப் பெய்து "திருநான்மறை விளக்கம்" என முகப்பெயரிட்டுக் கொண்டார் என்பது தெற்றென விளங்கும். அவர் அங்ஙனம் விளக்கினும் அது விளக்கும் விளக்காகாது; என்னை? ஔவை யார் தமது காலத்து வழங்கிய தேவர்குறள் முதலியவற்றோடு வழங்காத நான்மறையைச் சேர்த்து ஒன்றாகவைத்தெண்ணி "எல்லாம் ஒரு வாசகமென்றுணர்" என அருளிச் செய்யா ராதலி னென்பது.

"நான்மறை யறங்க ளோங்க" "நான்மறைச் சைவமோங்கிப் புல்லுக வுலக மெல்லாம்" "வேதவா கமமும் வாழ்க" என்றற்றொடக்கத்தனவுமது. "ஒன்றின முடித்த றன்னின முடித்தல்" என்னும் உத்தியினால் ஆறங்கங்கட்கு மிதுவே கதி யென்றுணர்க.

இன்னும் வேதம் முன்னர்த் தமிழில் இல்லை என்பதும், 'விளக்க' முடையார் கொள்கையை உடம்பட்டு நால்வர் தமிழ் முனிவர் தமிழ் வேதஞ் செய்தாரெனக் கொள்ளினும் அது முதனூலாகாதென்பதும் முன்னர்க் கூறுதும்.

"தனக்கு மூக்குப் போனாலும் எதிரிக்குச் சகுனப் பிழை யாயிருத்தல்வேண்டும்" என்று கருதித் தன் மூக்கை அரிந்து கொண்டவன் சீலம் போல, பார்ப்பனரிடத்துக்கொண்ட கோபத்தினால் நமது, சமயத்துக்குவரும் ஏதம் நோக்காது வட மொழி வேதாகமங்கள் சிவபிரானால் செய்தருளப்பட்டன வன்றென்று கூறுதல் எவ்வளவோரறியாமை! எந்த மதத்த ராயினும் தம்மவர்மீது கொண்ட கோபத்தால் தம்மதநூலைக் கடவுளருளிச்செய்ததன்று, தம்மவர் கட்டின கட்டென்று கூற யாம் இதுகாறுங் கேட்டறிந்திலேம். "விளக்க" முடையாரே அங்ஙனம் கூறக் கேட்டறிந்தேம்; அதுவேயுமன்றிப் பத்திரிகையில் எழுதப் பார்த்தும் அறிந்தேம்!! "கண்டன வன்றியாங் கலியின் வண்ணமே"

இனி ஔவையார் "திருநான்மறை" எனத் திருவை உடைபுணர்த்தோதியது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருடார்த்த நான்கினையும் அறிவிப்பன அவையெனத் தெரித்தற்கென்றுணர்க. என்னை? திரு என்பது பொருட் செல்வம் அருட்செல்வம் இரண்டையும் உணர்த்தும்; உணர்த் தேவ, "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்ப ஆகலின், இனம்பற்றி அறமும் இன்பமும் கொள்ளப்

படும்; படவே, "அறம்பொருளின்பம்வீ டடைதனூற் பயனே" என்ற வண்ணம் இந்நான்கையும் அவை உணர்த்துமென்றவ ருயிற்று. இக்கருத்துப்பற்றியன்றே திருமூலநாயனூர் திருமந்திரத்துள், "வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தி—லோதத் தகுமற மெல்லா முளதர்க்க—வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற—வேதத்தை யோதியே வீடுபெற் ருரே" என்றருளிச் செய்ததூஉமென்க.

நான் மறை என்பதற்கு "நான்கு கூறுமாய் மறைந்த பொருளுமுடை" யதெனத் தொல்காப்பியவுரையாசிரியர் கூறினர். நான்கு கூறு:—இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்பன இவை வியாசர் கலந்துகிடந்த வேதங்களைப் பகுத்தகாலத்துப் புனைந்த பெயர்கள். முற்பட்ட காலத்துப் பெயர் தைத்திரியமும் பௌடியமும் தலவகாரமும் சாமமுமாம்.

மறைந்த பொருளாவது:—ஆகமத்துள் வெளிப்படையாகக் கூறிய பதி, பசு, பாச, மென்னு முப்பொருளையும் "தத்துவமசி" என்னு மகா வாக்கியத்துட் புதைத்துக் கூறுதல் அஃதன்றி ஆகமத்துட் பதி சிவபெருமானே யென்று யாண்டும் கிளந்தெடுத்துக் கூறுதல் போலாது, வேதத்துள் அன்னமய கோசம் பிரமம் என்றும், பின் பிராணமயகோசம் பிரமம் என்றும், பின் மனோமயகோசம் பிரமம் என்றும், பின் விஞ்ஞானமயகோசம் பிரமம் என்றும், பின் ஆனந்தமயகோசம் பிரமம் என்றும், வருணன், அக்கினி, சந்திரன், சூரியன், இந்திரன், பிரமன், விண்டு முதலியோர் பிரமம் என்றும், ஐம்பெரும்பூத முதலியனவும் பிறவும் பிரமம் என்றும் முன்னர்க் கூறிப் பின்னர் இது பிரமமன்று இது பிரமமன்று என ஒவ்வொன்ருகப் பூர்வ பக்கத்தை மறுத்துச் சிவமே பிரமம் என நுண்ணிதாய்த் தெரித்தலினுல் மறுத்தலையுடையதெனவும் பொருள்படும் மறை யென்னுஞ் சொல். இக்கருத்துப் பற்றியே "அல்லையீதல்லையீதென மறைகளு மன்மைச்—சொல்லினுற் றுதித்திளைக்குமிச் சுந்தரன்" எனவும், "இதுவென லருமையி னெழுதரு மொழிகளும்—அதுவல வெனுமெனி லெவருனை யறிபவர்." எனவும் முறையே பரஞ்சோதி மாமுனிவரும், குமரகுருபர சுவாமிகளும் கூறியருளியதூஉமென்க.

பண்டை ஆசிரியர்கள் இம்மெய்ம்மை யுணர்ந்து கூறிய மெய்ப்பொருட்டுணிவுதேறும் அறிவின் மதுகையும் தவவாற் றலுமில்லாத அபக்குவ நவீனர் சில்லோர் தத்தமக்கு வேண்டியவாறே நவின்று பொருந்தாப் பொருள் கொண்டு கடைபோகா திடர்ப்படுவர். இது நோக்கியன்றே "உரைப்பாருரைப்பவைக்

தெல்லாம் யாமென் செய்வோம்" என்று கூறி அவர் நல்வினை யல்லது நோக்கித் தொல்லை நல்லாசிரியர் அவர் பொருட் டிரங்கியதூஉமென்க.

வேதோபநிடதங்களை உற்று நோக்கி உண்மை கடைப்பிடித்த பெரியார் அன்னவர் கூறும் பொருள் பொருளன்றெனத் தேர்ந்து புறக்கணித்தொதுக்குவரென்பதொருதலை.

இன்னும் வேதம் மறைந்த பொருளை யுடைத்தாயிருப்பினும் ஆகமக் கண்கொண்டு பார்ப்பார்க்கு உண்மைப் பொருள் நன்கு விளங்கும். அதுபோல, அதன் சாரமாகிய வேதாந்த சூத்திரப் பொருளும் மாசற்ற ஞானமுடையார்க்கே விளங்கும். ஏனையோர்க்கு எள்ளத்தனையும் விளங்காது. இக்கருத்துப் பற்றியன்றே "மாசறு காட்சியர்—பார்த்துணர் பான்மையிற் பலவ கைப்படச்—சூத்திர மானவுஞ் சொற்று வைகினன்" என்றார் காந்தபுராண நூலுடையாரும்.

இங்ஙன மிருத்தலால் மறை என்பதற்கு நச்சினார்க்கினியரும் பரஞ்சோதிமாமுனிவரும் குமரகுருபரசுவாமிகளும் கொண்ட பொருள்களே பொருள்களெனப்பட்டு ஏனையோர் பொருள் பொருளன்றெனப்பட்டவாறு காண்க.

இனி, நான்மறை என்பது வடமொழி வேதமோ! அன்றோ? என்னும் ஐயப்பாட்டின்கண் வடமொழி நான்மறையன்று; தமிழ்மொழி நான்மறையே என்னும் பூர்வபக்கத்தாரை நியாய வாயிலாக மறுக்கும் சித்தாந்தம் வருமாறு:—

தமிழ்மறை காணப்படாமையானும், முதற்சங்கத் திறுதியிற் கடல்கோட் பட்டதெனின், பண்டை நூலுரைகளுட் கடல்கோட்பட்டன இவையென நன்கறியுமாறு விளங்கக் கூறியிருத்தல்போலத் தமிழ்நான்மறையும் இருந்து கடல் கொள்ளபட்டதெனக் கூறப்படாமையானும், சங்கத்தார் ஆய்ந்த நூல்கள் இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ் நூல்களே யன்றிச் சமயநூலன்றென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்த கருத்தேயாமாகலானும், "உத்தரவேதம்" எனத்திருக்குறட்குப் பெயர் போந்தது வடமொழிப் பூர்வவேதநோக்கியே யாகலானும், வில்லிபுத்தூராழ்வார் "மறைநாலொ டைந்தென்று நிலைநிற்கவே மாபாரதஞ் சொன்னநாள்" எனக்கூறி, வடமொழிப் பாரதத்தை, வடமொழி நான்குவேதத்தோடு சேர்த்து ஐந்தாம் வேதமென நிலைநிற்க வியாசர் கூறினரென நன்கு விளக்குதலானும், இங்ஙனமே உமாபதிசிவாசாரிய சுவாமிகளும் "இருக்குமுதன் மறைநான்கி னின்றுமுத லாக

விதுவுமொரு தமிழ்வேத மைந்தாவ தென்று—கருத்திருத்தி எனப் பெரிய புராணத்தை இருக்கு முதலிய வடமொழி வே நான்கனேடு சேர்த்து (தேவார முதலியனவேயன்றி) இதுவு ஐந்தாவது தமிழ்வேதமெனச் சேக்கிழார்புராணத்துக் கூ யிருத்தலானும், நாமகளும், உக்கிரப்பெருவழுதி முதலிய ப பல மெய்ப்புலவர்களும் வடமொழி வேதத்தைக் குறித்துப் ப லாற்றானும் திருவள்ளுவமாலையாகிய சிறப்புப்பாயிரத்து விளக்கி அவ்வேத முண்டென நிறீஇப் பேசிப் போந்தமைய னும்,

புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
அறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்தும்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்

ஆன்மாக்கள் வினைக்கீடாகப் படிமுறையாற் கீழ்க்கீழ் சமயங்களின் நின்று மேன்மேற் சமயங்களில் வந்து, பின்னர் பிரமசரிய முதலிய நான்காச்சிரம கருமங்களை இயற்றிப் பின்னர்க் கலைகளை யறிந்து, பின்னர் புராணங்களைப் படித்துப் பின் வேதங்களை உணர்ந்து, பின் உபநிடதத்தை நன்றாக தெளிந்து, பிறவிதோறு மிவ்வாறு மேற்பட்டுவந்தால் இ பக்குவ முதிர்ச்சியால் சைவக்கூற்றின் முடிபாகிய சித்தாந் சைவத்தை யடைவர் எனச் சிவஞான சித்தியாருட் சோபா முறை கூறும்வழி அருங்கலை ஆரணம் புராணம் உபநிடத மெ லாம் அதற்கு இன்றியமையாதனவாகக் கூறப்படுதலால் அவை என்று மிருத்தல் வேண்டு மாகலானும், அதன்கண் தேய விசே டங் கூறுங்காலும் "நான்மறை பயிலா நாட்டில் விரவு லொழிந்து தோன்றன் மிக்கபுண்ணியந்தானுகும்" எனக் கூ லான், அவ்வேதம் என்றும் உள்ளதென்பது நன்று பெறப்பட லானும், சிவபாதவிருதயராகிய தந்தையார் வேள்வி நடாத்த தற்குப் பொருள் வேண்டும் என்று கேட்டபோது திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர் சிவபிரானிடத்துப் பொற்கிழிபெற்ற

"ஆதி மாமறை விதியினு லாறுசூழ் வேணி
நாத னுரைமுன் னுகவே புரியுநல் வேள்வி
தீது நீங்கநீர் செய்யவுந் திருக்கழு மலத்து
வேத வேதிய ரனைவருஞ் செய்யவு மிகுமால்."

எனத் திருவாய் மலர்ந்தருளிக் கொடுத்தமையானும், தம்மைத் தாமே தேவாரத்துள் பல இடங்களிலும் "முத்தமிழ் வல்லவன்" "நான்மறை வல்லவன்" என்பன வாதியாகத் தமிழையும் சமஸ்கிருத வேதத்தையும் வேறு பிரித்துச் சிறப்பித்துக் கூறியிருத்தலானும், சுந்தரமூர்த்திநாயனரும் "நாளு—ஞாலந்தான் பரவப்படுகின்ற நான்மறை யங்கமோதிய நாவன்" எனத் தம்மைத் தாமே சிறப்பித்துப் பாடியதனுலும், அதுவேயுமன்றி "அந்தணர் வேள்வியு மருமறைத் துழனியுஞ்—செந்தமிழ்க் கீதமுஞ் சீரினல் வளர்தர" எனவும், "அரவொலி யாகமங்க ளறிவாரறி தோத்திரங்கள்—விரவிய வேதவொலி விண்ணெலாம்வந் தெதிர்ந்தி சைப்ப," எனவும், "ஆகம சீலர்க்கருணல்கும் பெம்மானே தண்டமிழ் நூற்புல வாணர்க்கோரம்மானே" எனவும், சமஸ்கிருத வேதாகமங்களையும் தமிழையும் வேறு பிரித்து விளக்கிக் கூறினமையானும்,

அப்பரும் "நால்வேத மோர்ந்தோதிப் பயில்வார்வாழ்தருமோமாம் புலியூர்" என்றற் றொடக்கத்தனவாகக் கூறியருளினமையானும்,

"தென்னுட்டமணு சறுத்துத் திருநீறே—அந்நாடு போற்றுவித்தார் வந்தணையும் வார்த்தைகேட்—டெந்நாட் பணிவதெனவேற்றெழுந்த மாமறையோர்—முன்னுக வேத முழங்க வெதிர்கொண்டார்." எனப் பன்னிரண்டாந் திருமுறைக்கண் கூறப்பட்டலானும்,

""வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்துள் மூன்று என்றது அது என்றும் நீ என்றும் ஆனுய் என்றும் கூறும் மூன்று பதங்களையே யாகலின், அத் "தத்துவமசி" மகாவாக்கியம் வடமொழி வேதத்தின் கண்ணது ஆகலானும்,

"மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனி நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே"

"பெற்றநல் லாகமங் காரணங் காமிகம்
உற்றநல் வீர முயர்சிந்தம் வாதுளம்
மற்றவி யாமள மாகுங்கா லோத்தரம்
துற்றநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே"

"நந்தி யிணையடி நான்றலை மேற்கொண்டு
புந்தியி னுள்ளே புகப்பெய்து போற்றிசெய்
தந்தி மதிபுனை யரனடி நாடொறும்
சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே"

என்றிங்ஙனம் மந்திரத்துள் மாமூலர் கூறியருளினமை யான் அவர் அவற்றைத் தமிழிற் கூறியருள வந்தார் என்ப பெறப்படுதலானும், அவ்வண்ணமே பெரியபுராணம் சான் பகரலானும்,

"மாமலர்த் தெரியலான் மணிமிடற் றிடைக்கிடந்த—சா கீத மற்றுமொன்றா சாமி நன்கு பாடினான்" எனவும், "மன யார் வேள்வி மந்திரச் செந்தீ" எனவும், "நரம்புறா தெள்வி நவின்ற நான்மறை—வரம்பெறு நெறியவர்" எனவும், "வல் தெளி யென்னமறை வல்லவன்" எனவும், சீவகசிந்தாமணி கண்ணும்,

"கற்பங் கைசந் தங்கா லெண்கண்—தெற்றெ னிருத்த செவிசிக் கைமூக்—குற்ற வியாகர ணமுகம் பெற்றுச்—சார் ரேன்று வாரண வேதக்—காதியந்த மில்லை யதுவே நெ யெனும்—வேதிய னுரையின் விதியுங் கேட்டு" என மணிமேகலை யினும்,

"அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்—திறம்பு பசும்புற் பரப்பினர் கிடப்பி" எனப் புறநானூற்றினும்,

"அருமறை நாவி னந்தணர்க் காயினும்" எனச் சி பாணாற்றுப்படையினும்,

"வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்று—மறைகா பாளர்" எனப் பெரும்பாணாற்றுப்படையினும்,

"சிறந்த வேதம் விளங்கப் பாடி" * * * * உறையு மந் ணர்" என மதுரைக்காஞ்சியினும்,

"நான்மறை யோர்புகழ் பரப்பியும்" எனப் பட்டின பாலையினும்,

"மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட" எனச் சில பதிகார மங்கலவாழ்த்துப் பாடற்கண்ணும்,

"மாட மறுகு மறையோ ரிருக்கையும்" எனவும், "நான் மறை மரபிற் றீமுறை யொருபால்" எனவும் இந்திர விழ ரெடுத்த காதைக்கண்ணும்,

"முத்தீச் செல்வத்து நான்மறை முற்றி" எனக் கட்டுரை காதைக்கண்ணும்,

"மறையோராக்கிய வாவுதி நறும்புகை" எனவும், "அருமறை யந்தண ராங்குள ராவோர்" எனவும் கால்கோட்காதைக் கண்ணுங் கூறப்படுதலானும்,

உருத்திரபசுபதிநாயனார் செபித்த உருத்திரமும் வடமொழி வேதத்தின் கண்ணதாகலானும், பரமசிவனே பரம்பொருள் என்பது தேற்ற அரதத்தாசாரியர் கூறிய இருபத்திரண்டேதுக்களுள்ளும் முதற்கண்வைத் தெண்ணப்பட்ட "உயர்காயத்திரிக்குரிய பொருளாதலின்" என்னுங் காயத்திரி மந்திரமும் அதன் கண்ணதாகலானும், அவர் செய்த "சதுர்வேத தாற்பரிய சங்கிரகமும்" இப்போதுள்ள அவ்வேதங்களின் தாற்பரியமே யாகலானும், வேதாந்த சூத்திரமும் அவற்றின் சுருக்கமே யாகலானும், அச் சூத்திரத்திற்குப் பாடியஞ் செய்தாரெல்லாம் தத்தங் கோளை நிறுவ இப்போதுள்ள வேதங்களையும், உபநிடதங்களையும், புராணேதிகாச முதலியவற்றையுமே பிரமாணமாகக் கொண்டமையானும், அப்பதீக்ஷிதரும் சிவார்க்கமணி தீபிகைக்கு அவற்றையே பிரமாணமாகக் கோடலானும், அவர்க்குப் பிற்காலத் தான்றோரும் அவற்றை உடம்பட்டமையானும்,

சைமினிமுனிவர் தாஞ் சிவதூடண பரிகாரமாக இயற்றிய தோத்திரம் முதன் மூன்று பாதமும் அவர்வாக்காகவும் நான்காம் பாதம் இப்போதுள்ள வேதமாகவும் நிலவி "வேதபாதஸ்தவம்" என்னும் காரணப்பெயர் பெற்றிருத்தலானும்,

"பூமேவு செங்கமலப் புத்தேளுந் தேறரிய, பாமேவு தெய்வப் பழமறையுந்—தேமேவு, நாதமுநா தாந்த முடிவு நவைதீர்ந்த, போதமுங் காணாத போதமாய்," "சூழ்வோர்—வடிக்கும் பழமறைக ளாகமங்கள் யாவும், முடிக்குங் கமல முகமும்," "மறைமுடிவாஞ் சைவக் கொழுந்தே" எனக் கந்தர் கலிவெண்பாவினும்,

"பழமறைகண் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டல்," "செழுமறை தெளிய வடித்த தமிழ்ப் பதி கத்தோடே," "தொடுக்குங் கடவுட் பழம்பாடற் றொடையின்பயனே நறைபழுத்த துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ் சுவையே," "கலாபேதமென நின்னைக் கலைமறைகள் முறையிடுவ கண்டோ," "ஏடகத் தெழுதாத வேதச் சிரத்திருக்குமிவள்," "சகலமுந் நின்றிருச் சொரூபமென் றோலிடுஞ் சதுர்

N.

மறைப்பொருள் வெளியிட," "துறைத்தமிழொடுந் தெ
மறை தெளிக்குங் கலைக்கொடி," என மீனாக்ஷியம்மைபிள்ளை
தமிழினும்,

"மறைபண்ணினாள்," "வடகலை தென்கலை பயிலுமலை
என மீனாக்ஷியம்மைகுறத்தினும்,

"பொழிந்தொழுகு முதுமறையின் சுவைகண்டும் பு
தமுதம்—வழிந்தொழுகுந் தீந்தமிழின் மழலைசெவி ம
த்தனையே" "முதுபாட லெழுதா மறையோடு மிசைமுத் தமி
பாட," "வேத முடிவினின் முடிந்து நின்ற வழிக்கய லாகார்,
"வடகலை யலபல கலையொடு தமிழ்வள ருங்கூடல்," "வடக
தென்கலை பலகலை யும்பொலி மதுரை," "கட்புலங் கதுவா
செவிப்புலம் புக்கு—மனனிடைத் துஞ்சி வாயிடைப்போந்
—செந்நா முற்றத்து நன்னடம் புரியும்—பல்வேறு வன்ன
தொருபரி யுகைத்தோய்," என மதுரைக்கலம்பகத்தினும்,

"தொன்மறைக் குலங்கண் முன்னிய தியாதெனப்—பன்
முறை தெரிப்பினும் பயன்கொள வரிதாற்—றேவரி லொரு
னென் றியாவரு மருளுற—நீயே நின்னிலை நிகழாது மறை
துக்—கூறிய தாகு மாகலிற்—றேறினர் மறையெனச் செப்பின
நன்றே", "எழுதாக் கிளவிநின் மொழியெனப் படுதலின்—நின்
பெருந் தன்மை நீயே நவிற்றுதன்—மன்பெரும் புலமைத்
தன்றே யும்பரி—னின்னோ ரன்ன ரின்மையி னின்னிலை—கூறு
னர்த் தற்புகழ் கிளவியுந் தருமென் றம்ம—நிற்புகழ்ந் திசைத்
தனை நீயே யாக—இருடீர் காட்சிப் பொருடுணிந் துணர்த்தா—
தியங்கா மரபி னிதுவிது பொருளென—மயங்கக் கூறுதல்
மாண்புடைத் தன்றே—அளவில் காட்சியை யையமின் றுணர்
தலிற் றளரா நிலைமைத் தென்ப வென்றலிற்—றன்னுடை மய
கந் திசைமேல் வைத்துச்—சென்னெறி பிழைத்தோன் றிசை
மயங் கிற்றென—பொழிகுவ தேய்ப்ப முதுக்குறை வின்மையிற்
—பழமறை மயங்கிற் றென்ற முழுவதும்—எய்யா திசைக்கு
தும் போலும்" எனத் திருவாரூர்நான்மணிமாலையினும்,

"செழுமறைப் பொருளி னுரைவிரித் துமெனும் வேதா
முடித்தலை மோதுகைக் காய்ப்பொடு" "இறைவியென்
றுமறை கையெடுத் தார்ப்பவும்," "மறைமுடி வினின் றுநிறை
செல்வன்," "பயிற்ரு முதுமறை நாலைத் தெரிந்தவள்,"
"வேதபதி," "வேதபுரி," "இருக்கோ விடும்பரி புரக்கோ
லமும்," "நான்மறை முதலி," "மூல மெனக்குல நான்மறை
யோலிடு முழுமுதலே," "உயர்மறை நூற்கலை முடிவின் முடி

திடு மொழு கொளி மரகதமே," "கலைமறை யெனுமுரல் ஒளி மொய்த்த மலர்க்காவே," "பழமறை வடித்துத் தெளி வார்த்தை யொன்று மொழியும்," "கலைப்பா னிறைந்த மு குறைவிற் கல்விச் செல்வர் கேள்விநலங் கனியக் கனிய வ நூறுங் கடவுண் மறையு முதற்சங்கத்,—தலைப்பா வலர்தி சுவைக்கனியுந் தண்டே னறையும் வடித்தெடுத்த, சாரங்கன நூற்றிருந்த பசுந்தமிழு நாற," "அகில மறையு மரியு மய முற்றுநின்—முடியு மடியு முணர வரிய முதல்வ," "ஆயி மறைக்குமொரு பொருளா யிருப்பவன்," "செழுநான் மறை யின் செல்வச் செருக்கே," "பழமறை யார்ப்பென வாகு வேட்டெழு பண்ணவ ருண்மகிழ," "வடகலை தென்கலை யொ பயி லுங்கவி வாணர்க ளோடிவர," "பழமறை கட்கொ முதல்வன் முழக்குக," என முத்துக்குமாரசுவாமிபிள்ளை தமிழினும்,

"நால்வகைப் பொருளு நவைபறக் கிளந்த—வேத பு டனு மியாதுநின் நிலையெனத்—தேறலன் பலவாக் கூறி னென்ப— அதாஅன்று—முன்னைநான் மறையு முறைப்ப நிறீஇய மன்னிருஞ் சிறப்பின் வாதரா யணனுங் கையிழந் த னது பொய்மொழிந் தன்றே," "வனசப் புத்தேண் மணிநா பந்திக்—கவனவாம் புரவியிற் காட்டிக் கொடுத்துப்—பை தமிழ் நவின்ற செந்நாப் புலவன்," "அருமறை கிளந்துநி றிருவாக்கிற் பிறந்த—அறுபதிற் றுக்கிய வைம்பதிற்று முனி ருள்—ஒருவனென் றிசைத்த விருபிறப் பாள," "இருபிற பமைந்தவொருபிறப் பெய்து—நான்மறை முனிவர் மூவா யிர ரும்" எனச் சிதம்பரமும்மணிக்கோவையினும்,

"வேதந் துறைசெய்தான் மெய்துணியான் கைதுணி தான்," "கோமுனிவ ருக்குமரி தாய்முழுமறைப்பனுவ கூறியப ரப்பிரமமாம்—ஓமெனுமெ ழுத்தின்வடி வாய்நட விற்றுபுலி யூரன்," "மறைதங்கு திருமன்று" "இருக்கோ விட்டு மின்னுமுண ராது," "நான்மறைக்குந் துறைகண்டா தொளிழந்தார்," "பலகலையுங் குலமறையும் பயின்றுணர்ந்து பயன்கொள்ளாது" எனச் சிதம்பரச்செய்யுட்கோவையினும்,

"கூத்தரவர்—பாடுகின்ற வேதமே," "மறைகொண் வாழ்த்துவதும் வம்பே," "தொல்—மறைசெய்த வொண் கலை," எனச் சிவகாமியம்மையிரட்டைமணிமாலையினும்,

"நான்மறை நவின்ற நற்பொரு ளிவையென—மோனவா கத்தான் முப்பொருணவிற்றுபு—நன்னலம் புரியும்" "நல்லருட் —றத்தா னம்பி நீயே—பல்லுயிர்த் தொகுதியும் பயன்கொண்

டுப்பெனக்—குடிலை யென்னுந் தடவய றைப்பண்—அருள்
நிட்டுக் கருணைநீர் பாய்ச்சி— வேத மென்னும் பாதப
வளர்த்தனை—பாதப மதனிற் படுபயன் பலவே— அவற்றுள்
இலைகொண் டுவந்தனர் பலரே யிலையொரீஇத்—தளிர்கொ
ண்டுவந்தனர் பலரே தளிரொரீஇ—அரும்பொடு மலர்பி
சருக்கா யென்றிவை—விரும்பினர் கொண்டுகொண் டுவந்த
பலரே—யவ்வா றுறப்பு மிவ்வாறு பயப்ப—ஒருங்கே கா
யென் றச்சிற் பழுத்த—ஆரா வின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித் தாந்தத்—தேனமு தருந்தின
சிலரே." "நான்மறைக் கிழவ நற்றவ முதல்வ—நூன்முழு
பயின்ற நுண்மைசா லறிஞ—சொற்சுவை பழுத்த தொகை
தமிழ்க் கவிஞ" எனப்பண்டாரமும்மணிக்கோவையினும்,

"உரையாத பழமறையின் முதலெழுத்தி னொரு
பொருளை," "அருமறை தெரிய விரித்தனை * * * * தமி
தெளித்தனை," "அடுத்த நான்மறை முனிவரர் நால்வர்க்கு ம
மறைப் பொருள்கூற—வெடுத்த கோலமா யானந்த வனத்து
மெய்ம்மித யத்து மிருப்போனே," "சொல்லாவது மறையே,
"தொல்லை—இருக்கோல மிட்டுணராய்," "பண்ணோர் வேத
பாடிய காசிப் பதியாய்," "தீவளருங்—கஞ்சக் கரத்தார்
கலைமறைக்கு நாயகமாம்— அஞ்சக்கரம்," "மறைமுத
பொருளி னிறைசுவை பழுதினை," "ஆனந்தவனத் திருப்பா
பெங்கே காண்பார்—பண்ணிருக்கு மறைகளுமெண் கண்ண
கண் ணனுமமரர் பலருந் தாமே," "மறை விரிக்குஞ் சிலம்ப
பார்," "ஓதிபோதிய மிளைப்பர் வேதம துணர்ந்து தத்துவ
முணர்கிலா ருணரும்வண் ணமநு பவத்தில்வந்திடுமோ ருண்மை
வாசகமு ணர்த்துகேட்—எதிருலக மனைத்திலும்பசு வினை
படுத் தனல்வ ளர்த்திடும் யாகமேயதிக மென்ப தன்பர்
மிறைச்சி மிச்சிலதி லெச்சையா—ரதியாரறிவ ரதுகிடக்கமுது
தினவ ததமருந்த வவைபிலலையே" "நகர மாய்மறைச் சிகா
மானதால்—அகர மாயினோர் நிகரில் காசியே," "உரைத்த நான்
மறைச் சிரத்தும்," எனக் காசிக்கலம்பகத்திலும்,

"வடநூற் கடலுங்—தேக்குஞ் செந்தமிழ்ச் செல்வமுந்
தொண்டர்செந் நாவினின்று—காக்குங் கருணைக் கடலே"
எனச் சகலகலாவல்லிமாலையிலும், குமரகுருபரசுவாமிகள் கூறி
யருளலானும், "விளக்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்—
காரண னுரைபெறு மாரண மொழி" என நால்வர் நான்மணி
மாலையட் கூறப்படுதலானும்,

நான்மறை:—தொல்காப்பியம், இறையனாரகப்பொருள், திருக்குறள், தேவாரம், சிவஞானபோதம் என்பனவே; வடமொழி வேத மன்று; என்று கூறினர் ஒருவர். மற்றொருவர் இக்கொள்கையை உடன்படாமல் தமிழ்வேதம் ஆதியில் வேறிருந்தது; அது கடலாற் கொள்ளப்பட்டதென்றார். ஆதியில் தமிழ்வேதமிருந்தது மெய்யாஞல் இருவரும் ஒரு பெயரையே கூறல் வேண்டும். அங்ஙனமில்லாமையால் கத்தமனம் போனவாறு கூறத் தொடங்கினர். முன்னவர் திருக்குறள் திருமுறைகளைத் தமிழ் வேதம் என்றல் சரியே; "மூவா நான்மறை" என்புழி நான்மறை அவற்றைக் குறிக்கும் என்பது பிழை. "மூவாநான்மறை என்னுஞ் சொற்றொடர் ஆராய்ச்சி" என்னு நூலினால் அது நியாய வாயிலாக மறுக்கப்பட்டது. தொல்காப்பியம் இறையனாரகப்பொருள் சிவஞானபோதம் என்பன நான்மறை என்றல் அவர் கற்பனையே! என்னை? அங்ஙனம் தொல்லாசிரியர் கூறுமையானும், முறையே அவை வெவ்வேறு பெயர் பெற்று, பெற்றதற்கேற்ற பொருளை விளக்குதலானுமென்க. இவ்விருவரும் தம்முண் முரணிக் கூறினமையே ஆதியில் தமிழ் நான்மறை இல்லை யென்பதைக் கரதலாமலகம்போல விளங்க விளக்குதலானும்,

ஸ்ரீ. தயானந்தசரஸ்வதி என்னும் மகாபண்டிதரும் சைவாகம வுணர்ச்சி யின்மையால் சைவத்துக்கு மாறுபட்டுச் சிலகூறினும், தமது "சத்தியார்த்தப்பிரகாச"த்தில் "அறிவுக் களஞ்சியமாயும், தர்மஸ்தானமாயும் விளங்கும் நான்கு வேதங்களையும் தேவவாக்கெனக் கொள்ளுகின்றேன்; இவைகள் சம்ஹிதையும் மந்திர பாகமுமேயாகும்; பிழையின்றி அவைகள் தமக்குத் தாமே பிரமாணமாக இருக்கின்றன. எனவே, அவைகளை நிறுவ வேறொருநூல் வேண்டியதின்று; சூரியன் சுயம்பிரகாசத்தால் தன்குணங்களையும் பிரபஞ்சத்திலுள்ள சகல பொருள்களின் குணங்களையும் விளக்குதல் போலவே வேதங்களும். சிட்சை, வியாகரணம், சந்தோவிசிதம், நிருத்தம், சோதிடம், கற்பம் என வேதாங்கங்கள் ஆறு. ஆயுர்வேதம், அர்த்தவேதம், தநுர்வேதம், காந்தருவவேதம் என உபவேதங்கள் நான்கு. சாகைகள் ஆயிரத்து நூற்றிருபத்தேழு. இவைகளெல்லாவற்றையும் துணைப்பிரமாணங்களாகக் கருதுகின்றேன்." எனக் கிளர்ந்தெடுத்துக் கூறலானும்,

"இவையெல்லா மருமறை யாகமத்தே யடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும்" என்ப, ஆகலான், யாது யாது எங்கெங்கே ஒடுங்கிற்றோ அது அது அங்கங்கே யுற்பத்தியாம் மண்ணிற் கடம் போலும் என்னும் அவிநாபாவத்தால் அா

னிடத்தே ஒடுங்கிய வேதாகமங்கள் தோன்றுதலும் னிடத்தே யென்பார் "ஆரண மாக மங்க ளருளினு ஆ கொண்டு—காரண னருளா னாகிற் கதிப்பவ ரில்லை யாரு எனவும், "மறைகளீ சன்சொல்" எனவுங்கூறிப் போந் சகலாகமபண்டிதசிவாசாரியராகலானும்,

நால்வர் தமிழ் முனிவர் தமிழ் நான்மறை செய்தனரெ என்பது பசுமரத் தாணிபோற் பதித்து நாட்டப்பட்ட பிடுங்கவல்லம் என்பார் இழுத்துப்பிடுங்கிப் பார்க்கட் பார்ப்பேம்.

இங்கே கூறிய வாற்றால் தமிழ்மறை காணப்படாமைய காட்சி யளவையாலும், அவிநாபாவமாகிய ஏதுக்காணாமைய வழியளவையாலும், நூலுரைகளுட் கூறப்படாமையால் உ யளவையாலும் அறியப்படாமையால் ஸ்ரீமாந். சுப்பிரமண பிள்ளையவர்கள் அகவெளியிற்றோற்றுவித்த தமிழ் நான்மறை புறவெளித்தாமரையும் புன்முயற்கோடும் ஆமைமயிர்க் கம் மும்போல என்றுஞ் சூனியமேயாமென்பது வெளிப்படையா வாறு காண்க.

இவ்வுண்மையைப் பெரிதுமுணர்ந்த பெரியார், "அ யன்வா யுரைகள் வரைதரு முடங்க லதுவரக் காணின் றவனுள்—தரையின்வாழ் பவருண் நடுங்கியோர்ந் ததன்வாய் சாற்றிய முறைசெய்வா ரென்றால்—கரையில்பே ரின்பந் வெமக் கிறைசொல் கட்டுரை யெனின்வே றென்னை—உரையு வேதா கமமவ னெனக்கண் டுரைத்தவா புரிகுவ தல்லால் எனவும், "வேதாகமவழி **** சொலற்கியைந்தேன்" எனவு "மறைமுடிவின் றெருட்கு" எனவும், "வேதந் தனைத்த பூருவத் தொளித்தெமக் களித்தவள் ளூவரே" எனவு இங்ஙனங்கிளந்தோதி அவற்றின் றோற்றநிலைக்களனும் மாக ப்ம் உண்மையும் நன்கனந் தெரித்தார்.

இங்ஙன மிருந்தவாற்றான், வடமொழிக்க ணுள்ள வேதா மங்களே ஆன்மாக்கள் பொருட்டுச் சிருட்டியாரம்ப காலத்தி சிவபிரானால் திருவாய்மலர்ந் தருளப்பட்ட முதனூல்க ளெ பது சித்தித்தவாறு காண்க.

இனிப் பிறிதோராற்றா னதன்கட்படு மாராய்ச்சி வரு மாறு:—தொல்காப்பியப் பாயிரத்தில், "நான்மறை முற்றிய- அதங்கோட்டாசான்" என்புழி நான்மறை என்றது வட மொழி வேதமோ அன்றோ என்னும் ஐயப்பாட்டின்கண் "தமிழ் இயல் நூலாகிய தொல்காப்பியத்தை ஆய்ந்து அத

தக்கநூலென்று முடிவு கட்டுதற்கு நான்மறைப் பயிற்சி வேண்டியதாக யூகிக்கப்படுகின்றது. ஆதலால் அந் நான்மறை வடமொழி நூல்களென்று கருதப்படா. தமிழ் நூல்களாமென்பது தெளிவு" என்னும் பூர்வ பக்கத்தார் கொள்கையை நியாயவாயிலாக மறுக்கின்றாம்!

தமிழ் இயனூலாகிய தொல்காப்பியத்துள் வடமொழி நியாயங்களும் அம்மொழி வேத விஷயங்களும் விரவிக் கூறப்படுதலால் அவற்றைக் கற்றார்க்கன்றி மற்றார்க்கும் அத்தகைய நூலை இயற்றலும், அதனைக் கேட்டு இது தக்கதென முடிவு கொண்டலும் சாலாவாகலான், அதங்கோட்டாசானும் தொல்காப்பியரும் அவைகளைக் கற்றவர் என்பதை நன்கிதினுணர்த்துதற்கு "நான்மறை முற்றிய" என்றும் "ஐந்திர நிறைந்த" என்றும் விசேடித்தார் பனம்பாரனார். அத்துணையேயன்றி வேறன்று.

இக்கருத்தை ஐந்திரநிறைந்த தொல்காப்பியன் என்றமையே தெளிய உணர்த்தும்; என்னை? அவ்வியல்பினர் வடமொழிவழக்கும் அம்மொழி வேதவிடயங்களும் அதனுட் கூறுதொழியாராகலான். வடமொழி நியாயங்களும் அதனுட் போந்தமையானன்றே! இலக்கணக் கொத்தாசிரியரும் வடமொழி நியாயங்கள் "தொல்காப்பியந் திருவள்ளுவர் கோவையார்—மூன்றினு முழங்கு மாண்டினு மிலையேல்—வடமொழி வெளிபெற வழங்கும்" என்றார்.

அஃதற்றாயின் "நான்மறை முற்றிய வதங்கோட்டாசான்" என்றதனால் அவர் வியாகரணங் கற்றிலர் என்பதும், "ஐந்திர நிறைந்த தொல்காப்பியன்" என்றதனால் அவர் வேத முணர்ந்திலர் என்பதும் பெறப்படலான், இருவரும் முறையே தொல்காப்பியங் கேட்டலும் அதனை இயற்றலும் சாலாதாலெனின், அற்றன்று; "எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்—மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகும்—மொழித்திறத்தின்—முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து—கட்டறுத்து வீடு பெறும்" என்ப ஆகலின், முதனூற் பொருளுணர்தற்கு வியாகரணம் கருவி யெனப்படுதலான், 'நான மறை முற்றிய' எனவே, அவற்றை முற்றக் கற்றற்குக் கருவியாகிய இலக்கணமுங் கற்றவர் என்பதூஉம், 'ஐந்திர நிறைந்த' எனவே, அது நிறையக் கற்றல் முதனூல் நிறையக் கற்றற்கேயாகலான் நான்மறை கற்றவர் என்பதூஉம் போதாலான் சாலாமை யாண்டையதென் றொழிக. அற்றன்று; இலக்கணங் கற்றன் மாத்திரையி னமைந்து முதனூல் கல்லாதாரையுங்

காண்கின்ற காட்சிப் பிரமாண முண்மையால் தொல்காப்பியரும் 'ஐந்திர நிறைந்து' அவ்வளவி னமைந்தா ரென்றே யெனின், என்னும்; என்னை? தொல்காப்பியத்துப் பொருளதிகாரத்துள் வேத விஷயம் மிகவும் விரவிக் கூறப்பட்டுக் கிடத்தலா னென்க.

அல்லதூஉம் கன்னிகா கலியாணம்வரை ஆசிரியனிடத்திருந்து வேதமோதலும் விரதங் காத்தலும் அந்தணர் மரபிற் பிரமசரிய நிலையாகலான் அது தடையாகாமையுமறிக.

இனி, அகத்திய முணர்ந்து தமிழில் உலக வழக்குஞ் செய்யுள் வழக்கும் ஆய்ந்ததுபோல, ஐந்திர முணர்ந்தபடியாக சமஸ்கிருதத்தில் உலக மொழியும் வேதமொழியும் ஆய்ந்தமை தானே பெறப்படுதலுங் காண்க. வடமொழியில் செய்யுள் வழக்கு வேதம் என்பது மாபாடியம் வல்லார் வாய்க் கேட்டுணர்க.

இங்கே கூறிய நியாயங்களினால் "அதங்கோட்டாசான் முற்றிய நான்மறை"யும் வடமொழி நான்மறையே என்பது வாயுமுகத் தழியாத வச்சிரமலைபோல நிறுவப்பட்டமை காண்க.

இனி முதனூலாகிய வேதாகமங்கள் சிருட்டியாரம்பகாலத்தில் சிவபிரானால் திருவாய் மலர்ந்தருளப்படாவாயின், அவை முதனூல்களெனப்படா! என்னை? "வினையி னீங்கி விளங்கிய வறிவின்—முனைவன் கண்டது முதனூலாகும்" என்பவாதலான். அதுவேயுமன்றிக் கதியடைபவரு மின்றாய்ச் சிவபிரான் செய்த சிருட்டியும் பயப்பாடிலதாய் முடிந்து,

"உருவருள் குணங்க ளோடு முணர்வரு ளுருவிற் றோன்றுங்
கருமமு மருள ரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்க மெல்லாந் தானரு ளனக்கொன் றின்றி
அருளுரு வுயிருக் கென்றே யாக்கின னசிந்த னன்றே"

என்னுஞ் சுருதிக்கு மாறாய்க் கருணைமூர்த்தி யென்னும் பெயருமின்றாய் அதனால் இறைமைக் குணமிலனெனப்படுவன் சிவபெருமான்; ஆகலான், சிருட்டி ஆரம்பகாலத்து அவன் இறைமைக்குணம் வழுவாது உயிர்கள் கதியடையுமாறு வேதாகமங்களை அருள்செய்தனன் என்னுங் கருத்துப்பற்றிய "ஆரண மாக மங்க ளருளினா லுருவு கொண்டு—காரணனருளா லாகிற் கதிப்பவ ரில்லை யாகும்—நாரணன் முதலா வுள்ள சுரர்நரர் நாகர்க் கெல்லாஞ்—சீரணி குருசந் தானச்

செய்தியுஞ் சென்றிடாவே'' என்னுஞ் சுருதி யெழுந்ததூஉ மென்க. ''மாலயனிந் திரன்முதற் றேவர்க் கெல்லாங் குரவா வென்னும்'' என்ற திருவிசைப்பாவுமது.

இனி, ''முனைவனாற் செய்யப்படுவதோர் நூல் இல்லை யென்பார், அவன் வழித் தோன்றிய நல்லுணர் வுடையார் அவன் பாற் பொருள்கேட்டு முதனூல் செய்தாரெனவும், அம் முனைவன் முன்னர் ஆகமத்துப் பிறந்ததோர் மொழியைப்பற்றி அனைத்துப் பொருளுங்கண்டு பின்னர் அவற்றவற்றுக்கு நூல் செய்தார் அவரெனவும், அவ்வாகமத்தினையே பிற்காலத்தாரும் ஒழுக்கம் வேறுபடுந் தோறும் வேறுபடுத்து வழிநூலுஞ் சார்பு நூலுமெனப் பலவுஞ் செய்தாரெனவுங் கூறுப. அவை எவ் வாற்றானும் முற்ற உணர்ந்தோர் செய்த நூலன்மையின் அவை தேறப்படா. அல்லதூஉம் அவை தமிழ் நூலன்மையின் ஈண்டு ஆராய்ச்சியில வென்பது.''

முனைவனால் என்பது முதல் ஆராய்ச்சியிலவென்பது வரை 'வினையினீங்கி' என்னுஞ் சூத்திரவுரையின் ஓர்பகுதி. இதன் முதற்பகுதி கொண்டே ''நால்வர் தமிழ்மக்கள் தமிழில் வேதஞ் செய்தற்குமுன் வேதமில்லை'' என்று ஸ்ரீமாந். அட்வக் கேட் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் ''திருநான்மறை விளக்கத்'' துட் கூற நேர்ந்தது. அக்கூற்றைப் பிற்பாகம் முற்றும் மறுத் தொழித்தமையை உணரவில்லையோ! உணர்ந்து வைத்தும் பிறர் இதனை எவ்வாறு காண்பார்கள் என்னுங் கருத்தினாலோ மறுக் கப்பட்ட பூருவபக்கத்தைச் சித்தாந்தமாகக் கொண்டு கூறி ''அவ்வளவிலவன் மகிழுக'' என்னு நியாய நெறிபற்றி மகிழ்ந் தார். அதுவேயுமன்றிப் ''பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்—பேதை வினைமேற்கொளின்'' என்னும் பொய்யா மொழிக் கெய்து மிலக்கியமாய் அறிஞர் அறிவாம் புனைபூண்டு கொண்டமை உற்றுநோக்கு மொளியுடையார் தெற்றென வறிவர்.

மேற்கூறிப்போந்த பேராசிரியர் உரையின் ஈற்றில் 'அல்ல தூஉம் அவை தமிழ் நூலன்மையின் ஈண்டு ஆராய்ச்சியில வென்பது' என்று கூறியிருத்தலால் அம்முதனூல் வடமொழி யிலுள்ள தென்பதொரு தலையாதலின் தமிழில் முதனூல் செய் யப்பட்ட தென்னும் மதம் நிலையுதலின்றி அழிந்தொழிந்தது. இதனாலே ஆதியிலே முதனூலெனப்படுவனவெல்லாம் முதல் வனால் வடமொழிக்க ணியற்றப்பட்டன என்பதூஉம், ''களவியற்'' றமிழ்நூல் ஒன்றுமே முதல்வன் இடைக்காலத்தில் அரு ளிச்செய்த தமிழிலக்கண முதனூல் என்பதூஉம் பெற்றும்,

"ஒன்றின முடித்த றன்னின முடித்தல்" என்பதனால் வேதா
மங்கட்கு மிக்கொக்கும்; ஆயினும் பேராசிரியர்தாமே இவ்வாந்
காட்டியதும் விளங்கக் காட்டுது முன்னர்.

இன்னும், "தமிழ் நூலுள்ளும் தமது மதத்திற்கேற்பன
முதனூல் உளவென்று இக்காலத்துச் செய்துகாட்டினு
அவை முற்காலத் திலவென்பது முற்கூறிய வகையான் அறிய
படும்" என்ற பேராசிரியர் கூற்றினாலே நூல்செய்யாது கூறி
காட்டினும் அவை முற்காலத்திலவென்பது தானேபோதரும்

இன்னும், "தாமே தலைவராவாரும், அத்தலைவரை வழி
பட்டுத் தலைவராயினாரும் பலராகலின், தாமே தலைவராயினா
நூல் செய்யின் முதனூலாவதேனின், அற்றன்று; தாமே தலை
ராயினோர் முற்காலத்துத் தமிழ்நூல் செய்திலர்" என்றதனா
லும் வடமொழியிலேயே முதனூல் செய்தனர் என்பது இனிது
விளங்கும்.

இன்னும், "தொகுத்தல் விரித்தல்" என்னுஞ் சூத்திர
வுரைக்கண் "வேதப் பொருண்மையும் ஆகமப் பொருண்மை
யும் நியாயநூற் பொருண்மையும் பற்றித் தமிழ்ப்படுக்குங்கா
அவற்றிற்கு மிதுவே இலக்கண மென்றற்கு மொழி பெயர்
தலையும் இவற்றுக்கட் கூறினாரென்பது." என்றதனானே முத
வனாற் செய்யப்பட்ட வேதாகமங்கள் வடமொழிக் கண்ணாதன்
றித் தென்மொழிக் கண்ணாதன் றென்பது பசுமரத்தாணிபோ
பதித்து காட்டப்பட்டது. ஆகலானும் நால்வர் தமிழ்மக்கள்
தமிழில் வேதஞ் செய்தார் என்பதூஉம், அவர்கள் செய்தற்கு
முன் வேதம் இல்லையென்பதூஉம் கற்பனைக் கூற்றாய வாறு
காண்க.

இன்னும், தமிழியனூலுள் வடமொழி வேத
பொருண்மை பேசுதற் கோரியை பில்லையெனக் கூறிக் கல
லாரை மயக்கும் நல்லார்க்குப் பேராசிரியரும் பெருங்கூற்று
வாறு "கைக்கிளை முதலாப் பெருந்திணையிறுவாய்" என்னு
முதற் சூத்திரவுரைமுகத் துரைத்த வுரைபற்றி யறிந்து
கொள்க. அவ்வுரை வருமாறு:—

நிறுத்த முறையானே பொருளினது இலக்கணம் உணர்த்
தினமையால் இது பொருளதிகாரம் என்னும் பெயர்த்தாயிற்று.
*** பொருள்களாவன:—அறம் பொருளின்பமும், அவற்றது
நிலையின்மையும், அவற்றி னீங்கிய வீடுபேறுமாம்.

பொருளெனப் பொதுப்படக் கூறவே, இவற்றின் பகுதி
யாகிய முதல் கரு உரியும், காட்சிப்பொருளும, கருத்து

பொருளும், அவற்றின் பகுதியவாகிய இயங்குதிணையும் நிலைத் திணையும், பிறவும் பொருளாம்.

அகத்திணைக்கண் இன்பமும், புறத்திணைக்கண் ஒழிந்த மூன்று பொருளு முணர்த்துப.

[இந்நான்கும் வேதத்துட் கூறப்பட்டன.]

இது வழக்குநூலாதலின், பெரும்பான்மையும் நால்வகை வருணத்தார்க்கு முரிய இல்லறம் உணர்த்திப் பின் துறவறம் சிறுபான்மை கூறுப. அப்பொருள்கள் இவ்வதிகாரத்துட் காண்க.

பிரிதனிமித்தங் கூறவே, இன்பநிலை கூறி, "காமஞ்சான்ற" என்னுங் கற்பியற் சூத்திரத்தால் துறவறங் கூறினர். வெட்சி முதலாகவாகை யீறாக அறனும் பொருளும் பயக்கும் அரசியல் கூறி, அவற்றது நிலையின்மை காஞ்சியுட் கூறவே, அறனும் பொருளும் அவற்றது நிலையின்மையுங் கூறினர். "அறு வகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்னுஞ் சூத்திரத்தான் இல்லறமுந் துறவறமுங் கூறினர், இந்நிலையாமையானும் இவற் றானும் வீட்டிற்குக் காரணங் கூறினர்.

இங்ஙனங் கூறவே, இவ்வாசிரியர் பெரிதும் பயன்படுவ தோர் இலக்கணமே கூறினராயிற்று; இதனாற்செய்த புலனெறி வழக்கினை யுணர்ந்தோர் இம்மை மறுமை வழுவாமற் செம்மை நெறியாற் றுறைபோவராகலின்.

இங்ஙனமே நூனுதல் பொருளெல்லாம் நூன்முதற் சூத் திரவுரைக்கண் ஆசிரியர் தாம் முன்னர் விரித்தவாறு தொகுத் துரைத்திருக்கும் உரைபற்றியேனும் வேதப் பொருண்மை விர வப்பெற்ற திவ்வியநூலென்னும் பெற்றி தேறுதார் பிறவா றுரைப்பனவற்றிற்கு ஏ ஏ இவரறிவிருந்தவா றிஃதேயோ வென்றெள்ளி நகையாடா நிற்பர் நல்லாசிரியர் மாட்டுத் தொல் காப்பிய முதலிய நூல்களை வழிபடுமுறையில் வழிபட்டுக் கற் றுண்மை யுணர்ந்த ஒள்ளியா ரென்க.

"ஒரெழுத் தொருமொழி யுணரக்கூறிய—சீரெழுத் தாள ரைச் சிதையச் செப்பிடில்" எனவும், "எழுத்தறிவித்தவ னிறைவனாவான்" எனவும், "தந்தை யெனப்படுவான் றன்னு வாத்தியாகும்" எனவும் வருவனவற்றிற்கு மாறாக ஆசிரியனின் றித் "தாங்கற்ற நூலளவேயாகுமா நுண்ணறிவு." அந்தோ அவர் தாமென்செய்வார்!!!

இங்ஙனம் கூறிய நூலுரை யாசிரியர்கள் கருத்தை நோக் காத "திருநான்மறைவிளக்க"முடையார் "நூலே கரக முக்

கோன் மனையே" என்னும் இச்சூத்திரத்துட் போந்த 'நூ
என்னும் பதத்திற்கு ஏடு என்று தம்மனம் போனவ
பொருந்தாப் பொருள் கொண்டார். அதனை விளக்குதும்:

நான்கு வருணத்தில்லறத்தார்க்கும் இவை இவை உரிய
வென் றுணர்த்தப் போந்த ஆசிரியர், முதற்கண்வைத் தெ
ணப்படும் அந்தணர்க்குரியன இவை யென்று மேலைச் சூத்
ரத்தாற் கூறினார். நூல் என்பது "பூணூல்" என முன்பின் மு
ணுமற் பொருள் கொண்டார் அவ்வாசிரியர். அதற்கு அது
பொருளாமாறு ஏனை மூன்று வருணத்தார்க்கும் உரிய
இவையென்று கூறிய பிற்சூத்திரங்களானும் இனிது விளங்கு

'விளக்க' முடையார்க்குச் சில அந்தணர்மீது தோன்
சீற்றம் அவர் வருக்கமெல்லாந் தாவினமையின், அதுபற்றி
திறைவன் நமர்க்கு முரித்தெனத்தந்த வடமொழியினும்,
மொழி வேதாகமங்களினுந் தாவி அவற்றை வெறுக்கச்செ
தது. அதுமட்டோ! தாம் நமர்க்குரிய சிறந்த பாஷை யென
கொண்ட தமிழினுள்ள தேவார முதலிய சீரிய தெய்வ நூ
களையும் திரிக்கவும் அவற்றிற்குத்திரிவுப்பொருள் கொள்ளவு
செய்துவிட்டது! அதுமட்டோ! அவர் தம்மால் தமிழ்
வேதாகமங்களைச் சிருட்டிக்கவுஞ் செய்துவிட்டது! அது
மட்டோ! அவற்றைத் திதிக்க மதுகையிலராகவுஞ் செய்
விட்டது! அதுமட்டோ! சங்காரத்துட் படுத்தியும்விட்ட
நன்கு விளக்குதற் பொருட்டுச் சங்காரம் வெளிப்படைய
வும் கூறப்பட்டது.

"அரக்கரோ ரழிவு செய்து கழிவரே லதற்கு வேறோர்
குரக்கினத் தரசைக் கொல்ல மநுநெறி கூறிற் றுண்டோ"

என்ற வண்ணம் அந்தணர்மீது கோபம் உண்டானு
நமர்க்கு முரித்தாய வடமொழியினும் வடமொழி வேதாகம
களினும் வெறுப்படைதல் நீதியா? வேதத்தைச் சுரந்தே
டோதுதன் மாத்திரைக்கே நமக்கதிகாரமின்று. அதனு
நமக்குக் குறைவியாது மின்று. அதனைப் பார்க்கவும் பொரு
ளைக் கேட்கவும் அதனை உணரவும் அதிகாரமுண்டு. முதல
மூன்று வருணத்துட் பட்டாரும் ஒழுக்கந் தவறின் அவரு
வேதம் ஓதன் முதலியன செய்தற்கு அதிகாரிகளல்லர். அத
"மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்—பிறப்பொழு
கங் குன்றக்கெடும்" என்றதனானு நன்கறியலாம். அதுபோ
வேளாளருள்ளும் ஒழுக்க மில்லாதார் ஓத்தை நோக்கவு
பொருளைக் கேட்கவும், அதனை யுணரவும் அதிகாரிகளல்ல
என்றால் அதனால் நமக்கு ஓத்துரித்தன் றென்பது கருத்தன்று

முதல் வருணத்துப் பிறந்தாரும் உபவீதந் தரித்தபின்னன்றி வேதமோதுதற் கதிகாரிகளல்லர் என விதிக்கப்பட்டிருத்தல்போல, ஆகம மோதுதற்கண்ணும் சிவதீக்கையின்றி யாவர்க்கு மதிகாரமின்று என்ற விதியினால் அவர்க்குக் குறைநேராததுபோலச் சுரத்தோ டோதுதற்கு மாத்திரம் வேளாளர்க்கதிகார மின்றென்பதனால் குறைநேராது. வருணத்திற்கும், ஆச்சிரமத்திற்கும், ஒழுக்கத்திற்கும் தக்கவாறு சிவபெருமானால் வேதாகமங்களுள் விதிக்கப்பட்டனவும் விலக்கப்பட்டனவும் எவ்வாற்றானும் எவ்வருணத்தார்க்குங் குறைவாகாது; என்னை? இறைவன் ஆன்மாக்களுடைய கன்மத்திற்கும் பரிபாகத்திற்கும் ஏற்பக்கொண்ட திருவுளப் பாங்கவையாகலான்.

இனி, சிவதருமோத்தரத்திலே "சிவஞானதானவியலிலே,

"பருவ முற்றிய பாவக மோர்ந்துபின்
உருகி யோதுக வோதகு முண்மையை
மருவி வாய்வரு பாடையின் வல்லவர்க்
கரிய வாரியத் தானு மறைகவே"

எனக் கூறப்படுதலால் ஆரியமும் நமக்குரித் தென்பது கண்டு கொள்க. இன்னும், இலிங்கபட்டீய முதலிய வடநூல்கள் இயற்றினோர் சூத்திரரும், அகத்திய முதலிய தமிழ்நூல்கள் இயற்றினோர் அந்தணருமாய்; ஆகலானும் இருதிறத்தார்க்கு மிருபாடையு முரித்தாயவாறு கண்டு கொள்க.

தற்காலத்து, இந்தியாவிலும் இலங்கையிலும் இங்கிலீஷ் படித்திருப்பவர்கள் அப்பாடைக்கு உரிமையில்லாதவர்கள் என்று யார்தாங் கூறுவர்? இவ்விரு தேசங்களினும் வந்து தமிழ்கற்று விற்பன்னரான போப்பு, பேஷ்வல் முதலான பாதிரிமார்களைத் தமிழிற்கு உரிமையில்லாதவர்என யாவர்தாஞ் சொல்லுவர்!

தமிழிற் கெல்லை அது வழக்கமில் காலத்து மாறுபடுதல், "நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமும்—தமிழ் வரம்பறுத்த தண்புனனாடு" என்னுஞ் சிலப்பதிகார வேனிற் காதைச் செய்யுளுரையானும் பெறுதும்; அங்ஙனமே தமிழ்ப் பாடை கற்று அதன் வழக்கறியாரையும் தமிழ்க் குரியரல்லர் என்றும், சமஸ்கிருதங் கற்று அதன் வழக்கறியாரை அதற் குரியரல்லர் என்றும், அவற்றைக் கற்பாரை அவற்றிற்குரிய ரென்றும் கூறுதல் மரபேயாமென்க.

வடதேயத்தில் ஆரியரல்லாரும் வடமொழியாளராயு தென்றேயத்தில் ஆரியரும் தென்மொழியாளராயுமிருப்ப கண்கூடாகக் காண்கின்றேம். அங்ஙன மிருப்பார்க் கவை எ ஙனம் உரித்தன்றென மொழியவியலும்!

இங்கிலீஷ்காரர் தமிழ் நிலத்திலிருத்தல் பற்றித் தமி ரெனப்படவில்லை; தெலுங்கர், கன்னடர், துலுக்கர் முதலியப ரும் வசித்தலால் அவர் அப்பெயர் பெறவில்லை. அவ்வப் பாடை களைக்கற்று அவ்வவற்றிற் பேசிவருவோரை அவ்வப் பாடை யாளராக வழங்கவுங் காண்கின்றோம். ஆகலான், பாடைகள் தம்மைக் கற்றுப் பயின்று வரவல்லாரைப் பெறின், அவர்க்கு தம்பெயரை ஈயவல்லன; அத்துணையேயன்றிப் பிறிகின்று ஆகலான் ஆரியபாடை நமக்குரித்தன்றெனவும் ஆரியர்க்கே உரித்தெனவும் நாமே கருதிக்கொண்டு ஆரியபாடையை இகழ தலும், அப்பாடையிலுள்ள நமது சமய முதனூல்களாகி வேதாகமங்களை இகழுதலும் நமக்கே குறைவைத் தருமன்றி ஆரியர்க்கு ஒருபோதும் குறைவைத் தராது.

ஞான நூல்களாகிய வேத சிவாகமங்களைப் பதினெட்டு பாடையிலும் பிறவற்றிலும் வல்ல பக்குவர் பத்தி முதலியன அறிந்து அவ்வப் பாடையில் அவ்வவர்க்குப் போதிக்குமாறும் ஆரியத்தில் வல்லார்க்கு அதனைற் போதிக்குமாறும் கடமுனிவ ரற்குக் கந்தமுருகன் சுந்தரமாகத் திருவாய்மலர்ந்தருளிய பொருளையுடைய "சிவதருமோத்தரத்தையும்" விளக்கமுடை யார்நோக்கித் தாமும் வடமொழிக்கும் அம்மொழி நூற்கும் உரி யர் என்பது கடைப்பிடித்து எமதாண்டவன் உமாதேவியார்க்கு உபதேசித்த சமத்துவமுடைய இருபாடையுள் ஒன்றாகிய அவ் வடமொழியையும் அந்நூல்களையும் இகழ்ந்து சிவபிரான் செற் றத்திற் கிலக்காகாமல் இனியேனும் விலகி யுய்யுமாறு எமது நண்பர் சேட்ட புதல்வராகிய அவர்க்குத் தெரிக்கின்றாம்.

முதற்சூத்திர வுரைக்கண் "அரசர் வணிகர்க்கும் உரிய நூலினை ஈண்டு வரைந்தோதின தென்னையெனின், ஒருகோ லுடையான் நூல்களைவாளுகலின், அவனும் சிறுபான்மை அந்தணனெனப்படுமென்பது கோடற்கும், காகமும் மணையும் உடையனென்றற்கு மென்பது. நூலினை முற்கூறினன் பிறப்பு முறையானுஞ் சிறப்பு முறையானு மென்பது." என்று கூறி யிருத்தலானும் ஏடு எனப் பொருள் கோடல் முன்னொடு பின் முரணிப் பொருந்தாமை நன்னர்த் தெளிக.

"திருநான்மறை விளக்கம்" முற்றும் விபரீதப் பொருள் களையே தன்னுட் பொதிந்து காட்டும். "அறிஞர்க ளுடியே

யவற்றைக் காண்கவே" யாம் "தாலிபுலாக நியாய"மாகச்சில வற்றை எண்டெடுத்துக்காட்டுதல் "திருநான்மறைவிளக்க வாராய்ச்சி" யென்னு நூலை நோக்கப் புகுவார்க்கு அதன்கண் ஊக்க முண்டாக்குதற் பொருட்டேயாம். என்னைகொல் ஊக்கமாமாறெனின்; நூலியல் இத்தகைத்தென நூன்முகத்திற் றெரிக்கின் அத்தகை நூலினை முற்று நோக்கல் வேண்டுமென்னும் வேணவா வுண்டாகும்; அது உண்டாகவே உள்ளஞ் சோராது மேன்மேற் கிளருமென்க.

தமிழ்ச்சொற் பொருள் கோடற்குக் கருவி இவை! வட சொற் பொருள் கோடற்குக் கருவி இவை! யென அவ்வப் பாடைவல்ல ஆசிரியர் மாட்டு வழிபடுமுறையின் வைத்து வழிபட்டுக் கற்றாயினும் கேட்டாயினும் அறியாதார்கூறும் அவலப் பொருள், அங்ஙனங் கற்றுங் கேட்டும் வல்ல அறிஞர் அவைக்களத் தேறுதென்ப தொருதலையாகத் தேறுக.

"சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை"

இப்புலனெறிவழக்குட் போந்த பதங்கட்கு அவை நின்ற நெறியே நெறியாகப் பொருள் கொண்டால் அப் பொருள் பொருத்தமுறு பொருளாகுமா? இலக்கண நூலை முறைபிறழாது நல்லாசிரியர் மாட்டுக் கற்றுவல்லார் அங்ஙனம் பொருள் கொள்வாரா? கொள்ளார்! கொள்ளார்! இலக்கண மறியாதார் பொருள்கோண்முறை யறியா ராகலான், அவர் பொருந்தாப் பொருள் கொள்வர்; அது இலக்கணப்புலவர் முன் நிலையுதலின்றிக் கெட்டொழியு மென்னுங் கருத்துப்பற்றியே "எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்து—எழுத்தறிவார்க் காணின் இலையாம்" என்றார் அறிவானன்ற பெரியாரும்.

இங்ஙனம் வருவனவற்றிற்குப் பொருத்தப் பொருள் கோடற்கன்றே "ஏற்ற பொருளுக் கிசையு மொழிகளை—மாற்றியோ ரடியுள் வழங்கன் மொழிமாற்றே" எனவும், "அகன்று பொருள் கிடப்பினு மணுகிய நிலையினு—மியன்றுபொருண் முடியத் தந்தன ருணர்த்தன்—மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்" எனவும் இலக்கணச் சூத்திரங்க ளெழுந்தன வென்க.

மற்றொன்று:—அண்மை, தகுதி, அவாய்நிலை முதலியன பற்றியே ஒரு நூற்குப் பொருள் கோடல் வேண்டும். அங்ஙனங் கொள்ளாக்கால் முன்னொடு பின் மலைவாய்ப் பயப்பா

டின்றி அழிந்தொழிதலோடமையாது அக்கொள்ளார்
பெரும் பேதையார் என்னும் பெயருஞ் சூட்டி யெ
மென்க.

"நூலே கரக முக்கோல் மணையே
ஆயுங் காலை யந்தணர்க் குரிய"

என்புழி, நூல் என்னும் பதத்திற்கு "ஏடு" எ
பொருள் கொண்டது அண்மை பற்றியா? கருதிபற்றி
அவாய்நிலைபற்றியா? அதிகாரம்பற்றியா? சூத்திரம்பற்றி
யாதுமின்று, இவ்வாறு பொருள் கோண்முறை யறியாது
என்று பொருள் கொண்டது,

"கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தாற்
பெற்றதாம் பேதையோர் சூத்திரம்—மற்றதனை
நல்லா ரிடைப்புக்கு நாணாமே சொல்லித்தன்
புல்லறிவு காட்டி விடும்"

என்னும் வெண்பாவிற் கிலக்கியமாக்கிவிட்டது. அ
கிடக்க.

இனி, "அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்புழி அறுவகைப்பட்ட என்பதனைப் பக்கம் என்பதனோடு அன்வயித்துப் பொருள் கொள்ளாவிடின் நூலாசிரியர் கோத்து வைத்த பொருட்கோளை குலைந்து மலைந்து உலைந்து பயவாது வறிதாம். அதுபற்றியே அங்ஙனம் அன்னுவயித்துப் பொருள் கொண்டார் பேராசிரியர்; அது 'பக்கம' என்பதற்கு உரைத்துப் போகும் உரைப்போக்கினாலும் இனிது விளங்கும். அஃதுணரு மறிவாற்ற லின்றி 'அறுவகைப்பட்ட' என்பதனைப் பார்ப்பனர் என்பதனோடு அன்னுவயித்து அறுவகைச் சைவர் எனப் பொருள் கொண்டார் "விளக்க" முடையார். அறுவகைச்சைவர் யாண்டுக் கூறப்பட்டனரோ அறிகிலம்! சைவ சாத்திரங்களெல்லாம் எழுவகைச்சைவர் என்றே கூறும். இங்ஙனம் வாயில் வந்தன வந்தனகூற யாண்டு கற்றனரோ? அங்ஙனம் பொருள் கொண்டார் "ஐவகை மரபி னரசர் பக்கமும்" என்புழி 'ஐவகை' என்பதனை அரசரோடு அன்னுவயித்து ஐவகைச் சைவர் எனல் வேண்டும். அதுமட்டோ "இருமூன்று வகையி னேனோர் பக்கமும்" என்புழியும் 'இருமூன்று' என்பதனை ஏனோரோடு அன்னுவயித்து அவரையும் அறுவகைச் சைவர் எனல் வேண்டும். வேண்டவே, ஆதிக்கண் அறுவகைச் சைவர் என அவர் கொண்ட எண்ணுமை பிறழ்ந்து பதினெழுவகைச் சைவர் என்னு மெண்ணுமை,

தோன்றும்; தோன்றவே, சைவரெனப்படுவார் யாவரையு மொன்றாக வைத்துப் பதினெழுவகைப் பார்ப்பனர் என ஒத் துட் சூத்திரஞ் செய்யாது வேறு வேறு தொகையாகவைத்து அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கம், ஐவகைமரபி னரசர் பக்கம், இருமூன்றுமரபி னேனோர் பக்கம் எனத் தொல்காப்பி யர் சூத்திரஞ் செய்தமை பிழையெனப்படும். அதுமட்டோ! பார்ப்பனர் அரசர் ஏனோர் என்பனவற்றிற்குச் சைவர் எனப் பொருள் கோடற்கு நூற்பிரமாணம் வேண்டும். அதுமட்டோ! பக்கங்கள் எல்லாம் நின்று வற்றும். அதுமட்டோ! "மறுவில் செய்தி" என்பது முதலாகப் பின்னர்க் கூறப்பட்டவற்றோடு சைவர் என்னும் பொருள் சம்பந்த மின்மையால் வாகைத் திணைக்கிலக்கண மாகாது. ஆகலான், "விளக்க" முடையார் தாங்கொண்ட பொருட் கேற்பச் சூத்திரம் பிறிதொன்று செய்து கொண்டு அப்பொருள் கூறல் வேண்டும். இச் சூத்தி ரம் அவர் கூறும்பொருட்குச் சிறிதும் இடங்கொடாதென் றுணர்க.

இனி, "நால்வர்க் கொளிநெறி காட்டினை" என்னுந் திரு ஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவாய்மலர்ந்தருளிய திரு வெழுகூற்றிருக்கைத் துணுக்கை நால்வர் தமிழ்மக்கள் தமி ழில் வேதஞ்செய்தார் என்பதற்கு ஆதாரம் என்றார்.

அத்துணுக்கையில் "நால்வர் தமிழ்மக்கள் தமிழில்வேதஞ் செய்தார்" என்ற பதங்கள் காணப்படவில்லை என்பது யாவரும் எக்காலமும் பார்த்தறியலாம்.

சனகராதி முனிவர் நால்வரும் முன்னர் ஆலின்கீழ் ஒரு முறை வேதப்பொருளைக் கேட்டுப் பின்னர் ஒருமுறை ஆகமப் பொருளைக் கேட்டார்கள். அது,

"மற்றது போழ்து தன்னின் மறைப்பொருள்
வடத்தின் பாங்கர்ப்
பெற்றிடு சனக னாதி முனிவரர்
பின்னும் பன்னாள்
அற்றமி றவஞ்செய் தெந்தை யருளினாற்
கயிலை நண்ணி"

"இருட்பெருங் கடலுள் யாமத் தெறிமருத்
திடைப்பட் டாங்குப்
பொருட்பெருங் கடலாம் வேதம் புடைதொறு
மலைப்ப விந்நாள்

P.

அருட்பெருங் கடலே யெய்த்தே மமைந்தில
துணர்வு யாங்கள்
மருட்பெருங் கடலி னீங்கும் வண்ணமொன்
றருடி யென்றார்."

"நவையறு தவங்க ளாற்றி நல்லருள்
படைத்த நல்லோர்
இவைபுகன் றிடலு மன்பர்க் கெளிவருங்
கருணை வள்ளல்
அவர்முகந் தெரிந்து நுங்க ளறிவமைந்
தடங்கு மாறு
தவலருஞ் சிறப்பி னன்னூல் சாற்றுது
மிருத்தி ரென்றான்."

"நந்திமுற் கடையைப் போற்ற ஞானநா
யகனு மண்ணல்
முந்துறை சனக னாதி முனிவரர்
தொழுது கேட்ப
அந்தமி லாக மத்தி னரும்பத
மூன்றுங் கூறப்
புந்திய தொடங்கு ஞான போதகம்
போதி யென்றார்."

என்னுங் கந்தபுராணச் செய்யுட்களால் நன்கறியலா சைவசமய குரவர் நால்வரும் தேவார திருவாசகங்களுள் ச கராதிமுனிவரர் நால்வரும் ஒருமுறை ஆலின்கீழ் வேத பொருள் தெக்ஷிணாமூர்த்திபாற் கேட்டதனையும் மற்று முறை ஆகமப்பொருள் கேட்டதனையும் செய்யுளியைபுக்கு தக்கவாறு திருவருளுணர்த்திய வண்ணம் அமைத்துப் பா யருளினர். இவ்வுண்மை உணராதார் ஆலின்கீழ்ச் சனகராதி கேட்டது வேதப்பொருள் மாத்திரமே யென்று கொண் தேவார திருவாசகங்கட்கு உண்மைப்பொருள் காணமா டாது மலைவர்.

திருவெழுகூற்றிருக்கையுட் கூறியது ஆகமப்பொரு கேட்டதனையேயாம். "அந்தமி லாகமத்தி னரும்பத மூன்று கூறப்—புந்திய தொடங்கு ஞான போதகம் போதி யென்றார்' என்றதனாலும் அது நன்குவிளங்கும். இவ்வுண்மை உணரமாட டாது "நால்வர்க் கொளிநெறி காட்டினை" என்னும் அ தினுக்கை, நால்வர் தமிழ்மக்கள் தமிழில் வேதஞ் செய்தா என்பதற்கு ஆதாரம் என்றும், "இருட்பெருங் கடலுள்" என

னுங் கந்தபுராணச் செய்யுட்கு வேதம் என்னும் பொதுப் பொருளே கொள்ளவேண்டும் என்றும் கூறினமையால்,

"பாடமே யோதிப் பயன்றெரித றேற்றாத
மூடர் முனிதக்க சொல்லுங்கால்—கேடருஞ்சீர்ச்
சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே மற்றவரை
ஈன்றாட் கிறப்பப் பரிந்து"

என்னு நாலடிக் கிலக்காயினமை பற்றியாம் பரிவுறுகின்றாம். ஞானம் பெற்றுத் தமிழ்வேதஞ் செய்தார் என்றன் முதலியன எட்டுணையும் பொருந்தாமை மேலுரைத்தாம். கடைப்பிடிக்க.

'நால்வர்க்கு ஒளிநெறி காட்டினை' என்றதனானே "இறைவன் முனிவர்க்குத் தத்துவங்களைக் கூறி உரையிறந்தபொருளை உணர்த்துங் காலத்து மோன முத்திரை யத்தனைத் தானேயிருந்து காட்ட ஊமைத் தசும்புள் நீர் நிறைந்தாற்போல ஆனந்த மயமான ஒளி அம்முனிவராகிய மாணாக்கர்க்கு நிறைதலின், அதற்குரிய மோனமுத்திரை கூறி"யதாயிற்று. இக்கருத்துப்பற்றியே "தன்னையுன்னி யென்னை யாக்கியபோழ்தே யானவனாயினேன்" என்றார் பிறரும். இன்னும் இதனை,

"இருவரு முணரா வண்ண லேனவெள் ளெயிறி யாமை
சிரநிரை யனந்த் கோடி கிளைத்திடு முரத்திற் சீர்கொள்
கரதல மொன்று சேர்த்தி மோனமுத் திரையைக் காட்டி
ஒருகணஞ் செயலொன் றின்றி யோகுசெய் வாரி னுற்றான்"

"இனையதோர் தன்மை காட்டி யெம்பிரா னுணர்த்தக் கண்டு
சனகனே முதலா வுள்ளோர் தவலரு ஞான போதம்
பனுவலி னளவன் றென்னும் பான்மையைத் தெரிந்து முக்கட்
புனிதன தருளாற் றத்தம் புந்தியி னொடுக்கம் பெற்றார்."

"தத்தமுள் ளொடுங்கல் பெற்ற தாபத கணத்தர் யாரும்
முத்தொழில் புரியும் மூவா முதல்வனு முக்கண் மூர்த்தி
மெய்த்தவ வடிவ முன்னி மேவினர் சூழ்ச்சி மேலோன்
சித்திரம் புணர்த்த பாவை செயலற விருக்கு மாபோல்."

என்னுங் கந்தபுராணத் திருவிருக்கங்களாற் செவ்விதினுணர்க.

நக்கீரதேவர் திருமுரு காற்றுப்படையுள் "மார்பொடு விளங்க வொருகை" எனவும், குமரகுருபர சுவாமிகள் கந்தர் கலிவெண்பாவுள் "மார்பகத்தில் வைத்த கரதலமும்" எனவுங் கூறியருளினமையின், இலிங்கபுராணம் வாயுசங்கிதை முதலிய வற்றுட் கூறப்பட்ட வண்ணம் கலியுக முடிவுதோறும் நன்

ளன்கு இருடிகள் வெவ்வேறு பெயர்களோடு வருவர், அவர்களுக்குச் சிவபெருமான் வெவ்வேறுருக்கொண்டு அவற்றிற்கியைய வெவ்வேறு திருநாமந் தரித்துக் குருமூர்த்தியாக வெளிப்பட்டு வேதாகமங்களின் பொருள்களை உணர்த்துமாற்றுணர்த்துவர்என்பது சித்தித்தவாறு காண்க. என்னை? மோன முத்திரைக்கை முருகக்கடவுள் திருமார்பைவிட்டு நீங்காமையான் என்க.

மற்றுப் புறமதத்தர் சைவசாத்திர வுண்மையுணராமையால் புராணத்தைப் பொய்யென்று புகலல்போலச் சைவருள்ளும் அங்ஙனங் கூறுவாருளரேல் அவர்கட்குச் சித்தாந்தசாத்திரங்களும் திருமுறைகளும் பொய்யெனப்பட்டுச் சமயசாத்திரமு மின்றாய்ச் சைவசமயமு மின்றாய் முடியும், என்னை ?

"நாயகன் கண்ண யப்ப நாயகி புதைப்ப வெங்கும்
பாயிரு ளாகி மூடப் பரிந்துல கினுக்கு நெற்றித்
தூயநேத் திரத்தி னாலே சுடரொளி கொடுத்த பண்பிற்
றேயமா ரொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேச தென்னா."

"கண்ணுத வியோகி ருப்பக் காமனின் றிடவேட் கைக்கு
விண்ணுறு தேவ ராதி மெலிந்தமை யோரார் மாறுன்
எண்ணிவேண் மதனை யேவ வெரிவிழித் திமவான் பெற்ற
பெண்ணினைப் புணர்ந்து யிர்க்குப் பேரின்ப மளித்த தோரார்

"அரனடிக் கன்பர் செய்யும் பாவமு மறம தாகும்
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி
நரரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே."

"பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனையன் றேவிக் கராங்கொண்ட—பாலன்
மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங்
கரணம்போ லல்லாமை காண்."

"வரங்கடருஞ் செய்ய வயிரவர்க்குத் தங்கள்
கரங்களினா லன்றுகறி யாக்க—விரங்காதே
கொல்வினையே செய்யுங் கொடுவினையே யானவற்றை
வல்வினையே யென்றதுநா மற்று."

"பாதக மென்றும் பழியென்றும் பாராதே
தாதையை வேதியனைத் தாளிரண்டுஞ்—சேதிப்பக்
கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே
சண்டீசர் தன்செயலாற் றான்."

என்றற் றொடக்கத்தனவாகச் சிவஞானசித்தியார் திருக்களிற்றுப்படியார் முதலிய சைவசித்தாந்த சாத்திரங்களுட் புராண சரிதமே அநுபவப் பயனுக்கும் பிறவற்றிற்கும் பலப்பல இடங்களிலும் கூறப்படுதலானும், பன்னிரு திருமுறையுள் முழுதும் புராண சரிதங்களே கூறப்படுதலானும், "உயர்காயத்திரிக் குரியபொருளாதலின்" என்னுஞ் செய்யுளிற் போந்த இருபத்திரண்டேதுக்களுட் காயத்திரியை ஒழித்தொழிந்த இருபத்தோரேதுக்களும் புராண சரிதங்களே யாகலானும் சித்தாந்த சாத்திரங்களும் திருமுறைகளும் பொய்யெனப்பட்டுச் சமயசாத்திரமின்றாய் முடியும், முடியவே, அச்சாத்திரத்தால் உணர்த்தப்படும் சைவசமயமும் பொய்யாய் முடியு மாகலான் என்றுணர்க.

இனி, "காது பொத்தரைக்கின்னரர்" என்னுஞ் சுந்தரமூர்த்திநாயனார் தேவாரத்தில், "கோல வானிழற் கீழறம் பகர—வேதஞ் செய்தவ ரெய்திய வின்பம்" என்புழி ஏதம் செய்தவர் என்று பிரித்தலோ! வேதம் செய்தவர் என்று பிரித்தலோ! எது சரி? எது பிழை? என்னும் ஐயப்பாட்டின் கண், வேதஞ் செய்தவர் எனப் பிரித்தலே சரி யென்னும் பூர்வ பக்கத்தார் கொள்கையை நியாயவாயிலாக மறுக்கின்றாம்.

வேதம் செய்தவர் எனப்பிரித்தால் மோனையின்மைக் குற்றமும், பொருட்பொருத்த மின்மைக் குற்றமும் பற்றும்; ஆகலான், அங்ஙனம் பிரித்தல் பிழை. ஏதம் செய்தவர் எய்திய இன்பம் யானும் கேட்டு எனப் பிரித்தால் ஓரடியுட் பல மோனை வருதற் சிறப்பும், குற்றஞ் செய்தவர் பெற்ற இன்பத்தை யானும் கேட்டு எனப் பொருட் பொருத்தச் சிறப்பும் ஒருங்கு பற்றும்; ஆகலான், ஏதம் செய்தவர் எனப்பிரித்தலே சரி.

ஏதம் செய்தவர் யார்? ஏதம் என்னை? இன்பம் என்னை? அவற்றை அறியுங் கூதூகல முடையேம் என்பீராயின் கூறுதும்:—

சிவபிரான் கல்லானிழற்கீழ் யோகத் திருந்த காலத்துப் பிரமதேவர் மன்மதனை நோக்கி அப்பெருமான் யோகி னீங்கிப் போகியாகிப் புதல்வனைப் பெற்று எம்மைக் காத்தற் பொருட்டுப் புட்பபாணம் அவர்மீது போக்குதற்குக் கைலை செல்கவெனக் காரணங்கூறி அவனை ஏவியபோது அவன் ஏனைத் தேவரிடத்துப்போல என் பாணம் அவரிடத்துக் காமத்தைப் பயவாதெனக் காரணங் கூறி மறுத்து, "இங்கெனக் கடுத்ததொன் றியம்பு செய்வ லென்றனன்."

"அன்னதொரு காலை யறுமா முகக்கடவுள்
முன்னொருசார் வந்து முதுகளிற்றின் கோடொற
பின்னொருசார் வந்து பிடியின் மருப்பூன்ற
இந்நடுவே நின்றா னெறுழ்வயிரத் தூணேபோல்'

என்புழிப் பிரணவமந்திரத்தை உபதேசித்துப் பரிசதீ
பண்ணியதென்னுங் குறிப்பு மாத்திரையே கொள்ளற்பா
அறுமுகக்கடவுள் மூத்தபிள்ளையாரை நோக்கித் தே
வருவதால் "புந்தி மயல் தீர்ந்தேன் புனையிழையுஞ் சேர்ந்
ளால்" என்றதும் அக்கருத்துப்பற்றியே யென்றுண
மயல்—பிரணவத்தை யுபதேசிக்கவேண்டும் என்னுமா
சேர்தல்—பரிசதீக்கை.

'முன்னொருசார் வந்து முதுகளிற்றின் கோடொற
என்றதனால் பிரணவ மந்திரோபதேசமும், 'பின்னொருச
வந்து பிடியின் மருப்பூன்ற' என்றதனான் பரிசதீக்கை
பெறப்பட்டது. அங்ஙனம் பெறப்பட்டனவற்றையே முரு
கடவுள் பின்னர் எடுத்துக்கூறினது அநுவாதமென்றோர்
"கூறியதுகூறல்" என்னுங் குற்றமாகாது. இதுகொண்
ஏனையவும் உய்த்துணர்க. விரிப்பிற் பெருகும்.

இன்னும் இப்படலத்தினால் ஆலவாயவிர்சடைக்கடவுள்
அருளிச்செய்த இறையனாகப் பொருளெனுங் களவிய
பொருளை நமக்குக்காட்டு முகத்தால் அது வீட்டுக்கு நிமித்
மாமாறு உணர்த்தினமை தெற்றெனத்தெளிக.

அறுமுகக்கடவுள் களவுங் கற்பு நடாத்திக்காட்டினமை
உலகர் வீடுபேற்றினிமித்தமன்றித் தம்பொருட்டன்று என்
பதை நம்மனோர் தெளிந்துய்தற்கன்றே அவர் அந்தணர் முத
லிய உயர்ந்த வருணத்தார் உருக்கொண்டுவாராது புள்ளும்
மாவும் படுக்கும் வேட்டுவவடிவங்கொண்டு வந்ததூஉமென்க
என்னை? தாம் "பொறிவாயிலைந்தவித்தான்" ஆகலான், ஐம்
புலப்புட்படுத்தவர் அல்லது ஐம்புலக்களிறு படுத்தவர் என்ப
துணர்த்தித் தமக்கு ஐம்புலநுகர்ச்சியின்றென்பது தெரித்தற்
கவ்வுருக்கொண்டாராகலான். எனவே, அவர்களவுங் கற்பும்
நடாத்தினமை காமத்தின் பொருட்டன்று என்பது சித்தித்த
வாறு காண்க. கந்தபுராண நூலாசிரியரும் இக்கருத்துப்பற்
றியே, "கலைப்படு மதியப் புத்தேள் கலங்கலம் புனலிற் றோன்றி
—அலைப்படு நீர்மைத் தன்றோ வறுமுக னாட லெல்லாம்"
எனவும், "குமரற் கீறு திருவிளை யாடல் போலாம்" எனவும்
கூறி யொழிந்தார். இப்பொருளை,

வித்துவப் பெரியாரபிப்பிராயம்

"தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ" எனவு

"போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரிதலோ
எனவும்,

"இடப்பாக மாத ராளோ டிசைந்துயிர்க் கின்ப மென்
அடைப்பானு மதுவும்." எனவும்,

"சத்தியுஞ் சிவமு மாய தன்மையிவ் வுலக மெல்லாம்
ஒத்தொவ்வா வாணும் பெண்ணு முணர்குண குணியு ம
வைத்தன னவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கை யெல்லா
இத்தையு மறியார் பீட லிங்கத்தி னியல்பு மோரார்"

எனவும் போந்த திருவாசகமுஞ் சித்தியாரும் நன்கு வி
கும். இவற்றை யூகிக்குமாறு ஊகியா மாந்தர்க்கு உண்
விளங்காது.

வேட்டுவர் புட்படுத்தலை "தவமறைந் தல்லவை செய்
வேட்டுவன்—புதன்மறைந்து புட்சிமிழ்த் தற்று" என்பதனு
மறிக. அது நிற்க.

"கல்லாலந் தண்ணிழற்கீழ்க் கலித்துறை யதுபயந்த காமர்
நல்லானை நல்லா ளொருபாக மாகியஞானத் தானை [கா
எல்லாரு மேத்தத் தகுவானை யெஞ்ஞான்றும்
சொல்லாடா ருக்கெல்லாந் துயரல்ல தில்லை கண்டீர்."

என்னும் இப்பாட்டில் 'கலித்துறை' என்பது "ப
கையைக் குறிப்பதாகக் கொள்ளின், அப்பாவகையினால் ந
வர் செய்த நான்மறைகள் அமைந்திருத்தல் கூடுமென்று கரு
தற்கு இடமுண்டு" என்றார் "விளக்க" முடையார்.

கொள்ளின் என்றாரே அங்ஙனம் கொண்டவர் யா
கொள்ளச்சொன்னவர் யார்? என்னை? நல்லாசிரியரிடத்து
கற்றறி மாண்புலவர் "ஏற்புழிக்கோடல்" என்னும் உத்தியை
மேற்கொண்டு இடமறிந்து பொருள்கொள்வரன்றி அஃதெ
றிந்து பொருள் கொள்ளாராகலான்.

மாண்புலவர் கொள்ளார் எனவே, அங்ஙனங் கொள்பவ
"விளக்க" முடையார்தாமே யென்பது பெறப்பட்டது. அவ
கொள்கைபற்றி நமக்காவதியாதுமின்று; என்னை? அவர்தா
வதாகம வழக்கோடும் ஆன்றோர் வழக்கோடும் முற்றும் மா
ட்டோராகலான்,

இருந்தவாற்றால் வேள்வியிற் கொலை அவ்வுயிர்க்கு நன்மை பயத்தலால் கொலை யன்றென்பதூஉம், வேதம் ஏனையிடத்துச் செய்யும் கொலையை விலக்கும் என்பதூஉம் அதற்கு மாறாகக் கொலை முதலியன செய்வோர் செயலை வேதத்திலேற்றிக் குறை கூறல் அறிவின்மை என்பதூஉம் அறிந்துகொள்க.

இனி நமது நூல்கள் பெரும்பாலும் செம்பொருளும், ஓரிடத்துக் குறிப்புப் பொருளும் கூறுவனவாம். அது :—

"நூலெனப் படுவது நுதலிய பொருளை
ஆதிக் கண்ணே யறியச் சுட்டி
ஒத்துமுறை நிறுத்துச் சூத்திர நிரை இ
முதல்வழி சார்பென மூவகை மரபிற்
றொகைவகை விரியின் வகையறத் தெரிந்து
ஞாபகஞ் செம்பொரு ளாயிரு வகையிற்
பாவமைந் தொழுகும் பண்பிற் றாகிப்
புணர்ச்சியி னமைந்து பொருளகத் தடக்கித்
தனக்குவரம் பாகித் தான்முடி வதுவே."

என்னும் இலக்கணச் சூத்திரத்தா லறிக. ஆயினும் திருக்கோவையார் முழுதும் செம்பொருள் குறிப்புப் பொருள் இரண்டும் கூறு நூலாம் என்பது,:—

"திருவாத வூர்மகிழ் செழுமறை முனிவர்
ஐம்பொறி கையிகந் தறிவா யறியாச்
செம்புலச் செல்வ ராயின ராதலின்
அறிவனூற் பொருளு முலகநூல் வழக்குமென
இருபொரு ணுதலி யெடுத்துக் கொண்டனர்
ஆங்கவ் விரண்டனுள்
ஆகமநூல் வழியி னுதலிய ஞான
யோகநுண் பொருளை யுணர்த்து தற்கரி
துலகநூல் வழியி னுதலிய பொருளெனும்
அலகி றீம்பாற் பரவைக் கண்ணெம்
புலனெனுங் கொள்கலன் முகந்த வகைசிறி
துலையா மரபி னுரைக்கற் பாற்று."

என அதற் குரைசெய்வான் புக்க பேராசிரியர் உரைச் சூத்திரத்தானும்,

"ஆரணங் காணென்ப ரந்தணர் யோகிய ராகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலதென்பர்
ஏரணங் காணென்ப ரெண்ண ரெழுத்தென்ப ரின்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே."

என்னும் ஆன்றோர் கலித்துறை யானும், "திருக்கோவை யாருண்மை" என்னும் உரை நூலானும் நன்குணர்க.

வேதத்துட் கூறும் வேள்விக்கண் பசுப்படுத்தல் என்பதற்குக் குறிப்புப் பொருள் செம்பொருள் இரண்டுங் கொள்ளுமாறு சிறிது விளக்குதும்:—

பசு—ஆன்மபோதம். படுத்தல்—அப்போதம் முனைக்காமற் செய்தல். மீட்டு எழுப்புதல்—சிவபோதமாகச் சீவிக்கச் செய்தல், இதனை,:—

"உள்ளமெனுங் கூடத்தி லூக்கமெனுந் தறிநிறுவி
யுறுதி யாகத்
தள்ளரிய வன்பென்னுந் தொடர்பூட்டி யிடைபடுத்தித்
தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக் களித்துண்டு
கருணை யென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை நினைந்துவரு
வினைக டீர்ப்பாம்."

என்னுஞ் செய்யுளுமறிவுறுத்துமாறு உற்று நோக்கியுணர்க. இங்ஙனம் பாவிக்கும் அகத்து வேள்விக்கு நாபித்தானமே குண்டமும், ஆண்டுறும் அங்கியே யாகாக்கினியும், விந்துத் தானத்தமிழ்தே நெய்யும், இடை பிங்கலைகளே சுருக்குச்சுருவமுமாகக் கொள்ளப்படும் என்ப.

புறத்துச் செய்யப்படும் வேள்விக்குப் பசு—ஆட்டுக்கிடாய். ஏனைய வெளிப்படை. இப்புறத்து வேள்வி அகத்து வேள்விக்குக் காரணம். இக்காரணமின்றி அக்காரியம் சித்தியாது. ஆகலான் அது செய்தற்குரியார் தப்பாமற் செய்தல் வேண்டும்.

அகவேள்வி செய்யும் ஆற்றலுடையார் யோகியும் ஞானியும். அவரும் உலகர் பொருட்டுப் புறவேள்வி செய்யினுஞ் செய்வர். "உறங்கினேன்கை வெறும்பாக்கென" அவரறியாது அஃதவரை விட்டு நழுவினும் நழுவும். எங்ஙனமாயினு மவர்க்கது குற்றமன்று. எமக்கு யோக ஞானம் வந்துவிட்டதென முனைப்புக்கொண்டு தாமே விடுவாராயின் குற்றமாம்.

ஒருசாரார் யாகத்துக் கொலை கூறப்படுதலால் சீவகருணையற்ற செயலைக்கூறும் நூல் கடவுள் சொன்னதன் றென்பார் பிறரெனக்கருதிக் குறிப்புப் பொருள் ஒன்றே கொள்வர். அது கூடாதென்பது மேலே விளக்கினும்; கடைப்பிடிக்க.

கந்தபுராணத்திலே வள்ளியம்மை திருமணப்படலத்திலே,

"அன்னதொரு காலை யறுமா முகக்கடவுள்
முன்னொருசார் வந்து முதுகளிற்றின் கோடொற
பின்னொருசார் வந்து பிடியின் மருப்பூன்ற
இந்நடுவே நின்றா னெறும்வயிரத் தூணேபோல்'

என்புழிப் பிரணவமந்திரத்தை உபதேசித்துப் பரிசதீ
பண்ணியதென்னுங் குறிப்பு மாத்திரையே கொள்ளற்பா
அறுமுகக்கடவுள் மூத்தபிள்ளையாரை நோக்கித் தே
வருவதால் "புந்தி மயல் தீர்ந்தேன் புனையிழையுஞ் சேர்ந்
னால்" என்றதும் அக்கருத்துப்பற்றியே யென்றுண
மயல்—பிரணவத்தை யுபதேசிக்கவேண்டும் என்னுமா
சேர்தல்—பரிசதீக்ஷை.

'முன்னொருசார் வந்து முதுகளிற்றின் கோடொற்
என்றதனால் பிரணவ மந்திரோபதேசமும், 'பின்னொருச
வந்து பிடியின் மருப்பூன்ற' என்றதனான் பரிசதீக்ஷைய
பெறப்பட்டது. அங்ஙனம் பெறப்பட்டனவற்றையே முரு
கடவுள் பின்னர் எடுத்துக்கூறினது அநுவாதமென்றோர்
"கூறியதுகூறல்" என்னுங் குற்றமாகாது. இதுகொண்
ஏனையவும் உய்த்துணர்க. விரிப்பிற் பெருகும்.

இன்னும் இப்படலத்தினால் ஆலவாயவிர்சடைக்கடவுள்
அருளிச்செய்த இறையனாரகப் பொருளெனுங் களவிய
பொருளை நமக்குக்காட்டு முகத்தால் அது வீட்டுக்கு நிமித்
மாமாறு உணர்த்தினமை தேற்றெனத்தெளிக.

அறுமுகக்கடவுள் களவுங் கற்பு நடாத்திக்காட்டினமை
உலகர் வீடுபேற்றினிமித்தமன்றித் தம்பொருட்டன்று என்
பதை நம்மனோர் தெளிந்துய்தற்கன்றே அவர் அந்தணர் முத
லிய உயர்ந்த வருணத்தார் உருக்கொண்டுவாராது புள்ளு
மாவும் படுக்கும் வேட்டுவவடிவங்கொண்டு வந்ததூஉமெனக
என்னை? தாம் "பொறிவாயிலைந்தவித்தான்" ஆகலான், ஐம்
புலப்புட்படுத்தவர் அல்லது ஐம்புலக்களிறு படுத்தவர் என்ப
துணர்த்தித் தமக்கு ஐம்புலநுகர்ச்சியின்றென்பது தெரித்தற்
கவ்வுருக்கொண்டாராகலான். எனவே, அவர்களவுங் கற்பும்
நடாத்தினமை காமத்தின் பொருட்டன்று என்பது சித்தித்த
வாறு காண்க. கந்தபுராண நூலாசிரியரும் இக்கருத்துப்பற்
றியே, "கலைப்படு மதியப் புத்தேள் கலங்கலம் புனலிற் றோன்றி
—அலைப்படு நீர்மைத் தன்றோ வறுமுக னாட லெல்லாம்"
எனவும், "குமரற் கீறு திருவிளையாடல் போலாம்" எனவும்
கூறியொழிந்தார். இப்பொருளை,

## வித்துவப் பெரியாரபிப்பிராயம்

"தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ" எனவு

"போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரிதலோ
எனவும்,

"இடப்பாக மாத ராளோ டிசைந்துயிர்க் கின்ப மென்
அடைப்பானு மதுவும்." எனவும்,

"சத்தியுஞ் சிவமு மாய தன்மையிவ் வுலக மெல்லாம்
ஒத்தொவ்வா வாணும் பெண்ணு முணர்குண குணியு ம
வைத்தன னவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கை யெல்லா
இத்தையு மறியார் பீட லிங்கத்தி னியல்பு மோரார்"

எனவும் போந்த திருவாசகமுஞ் சித்தியாரும் நன்கு வி
கும். இவற்றை யூகிக்குமாறு ஊகியா மாந்தர்க்கு உண்
விளங்காது.

வேட்டுவர் புட்படுத்தலை "தவமறைந் தல்லவை செய்
வேட்டுவன்—புதன்மறைந்து புட்சிமிழ்த் தற்று" என்பதனு
மறிக. அது நிற்க.

"கல்லாலந் தண்ணிழற்கீழ்க் கலித்துறை யதுபயந்த காமர்
நல்லானை நல்லா ளொருபாக மாகியஞானத் தானை [கா
எல்லாரு மேத்தத் தகுவானை யெஞ்ஞான்றும்
சொல்லாடா ருக்கெல்லாந் துயரல்ல தில்லை கண்டீர்."

என்னும் இப்பாட்டில் 'கலித்துறை' என்பது "ப
கையைக் குறிப்பதாகக் கொள்ளின், அப்பாவகையினுல் ந
வர் செய்த நான்மறைகள் அமைந்திருத்தல் கூடுமென்று கரு
தற்கு இடமுண்டு" என்றார் "விளக்க" முடையார்.

கொள்ளின் என்றாரே அங்ஙனம் கொண்டவர் யா
கொள்ளச்சொன்னவர் யார்? என்னை? நல்லாசிரியரிடத்து
ற்றறி மாண்புலவர் "ஏற்புழிக்கோடல்" என்னும் உத்தியை
மற்கொண்டு இடமறிந்து பொருள்கொள்வரன்றி அஃதெ
ிந்து பொருள் கொள்ளாராகலான்.

மாண்புலவர் கொள்ளார் எனவே, அங்ஙனங் கொள்பவ
விளக்க" முடையார்தாமே யென்பது பெறப்பட்டது. அவ
காள்கைபற்றி நமக்காவதியாதுமின்று; என்னை? அவர்தா
வதாகம வழக்கோடும் ஆன்றோர் வழக்கோடும் முற்றும் மா
ட்டோராகலான்,

அங்ஙனம் கொள்ளினும் கலித்துறையது பயந்த ந
என நேரே முடிதலை அறியு மிலக்கண மறியாது நல்லா
நால்வரைத் தாம் வலிந்துகொணர்ந்து அவர்கள் பயந்
துறையென முடிவு காண்டல் விந்தையினும் விந்தையே.
பினும் முடியாதென்பது நன்னூல் கேட்டுச் சிந்
தெளிந்த நல்லோர் அறிவர். இவர் அறிந்தென்? அ
தொழிந்தென்?

மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் அச்சிட்ட தோல்கா
உரையுள் "கல்வித்துறை பயந்த" என்ற பாடங்காண
கின்றது. அதனைமேற்கொண்டு "ஆராய்ச்சி" ஆ
அதற்கு வேதம் என்று பொருள் கண்டார், அதுவேசரி.

கலித்துறை, கல்வித்துறை என்னு மிரண்டும் சொல்
வேறுபடினும் பொருளால் ஒன்றேயாம். அதுகாட்டுதும்

கலித்துறை என்பதில் கலி—ஒலி. துறை—நூல். என
ஒலித்தலையுடைய நூல் என்றபடி. ஒலி உதாத்த அநுதா
சுவரிதம். என்றதனால் வேதம் என்பது பெறப்பட்டவா
காண்க.

கல்வித்துறை என்பதில் கல்வி—அறிவு, துறை—நூ
எனவே, பதி பசு பாசங்களை அறிதற்குக் கருவியாகிய நூ
என்க—எனவே, வேதம் என்றபடி; என்னை? வேதம் என்
னும் பதத்திற்கும் பொருள் அதுவே யாகலான்.

இங்ஙனம் இடத்திற்கேற்ற உண்மைப் பொருள் நன்மை
பயந்திருப்ப, அது காணமாட்டாது தம்மனம் போனவாறே
திரிபு பொருள்கொண்ட இவர் தாம் பயனிழந்து பிறரையும்
இழப்பித்தலால் வரும்பயன் தென்றிசைக்கோன்றன்னகத்தீ
யன்றிப் பிறிதுயாதுமின்றே! "தூங்கானை மாடச்சுடர்
கொழுந்தே"!! இவர்க்கு நல்லறிவுச் சுடர்கொளுத்தி உய்விக்
மாறு இங்கும் வேண்டுகின்றேன்.

இக்கருத்துப் பற்றியே சிவதருமோத்தரத் துள்,

"ஒப்பிலி யநாதி முத்த ஞேதிய வேத மாதிக்
கொப்புயர் வுரைப்போர் நிந்தை யுரைப்பவ ருன்னு வாரும்
வெப்பெரி நிரயம் வீழ்ந்துவெந் துருகி வீயார்
எப்பொழு தேறு வாமென் றிளைத்திளைத் தேங்கு வாரே."

என்று ஆறுமுக நிருமலர் அகத்திய முனிவரர்க் கருளிச்
செய்த பொருளையுடைய இத்திருப்பாட்டெ[illegible]ாஉமென்க,

மாயூரத்திற் கூடிய "சைவசித்தாந்த மகாசமாசத்தில்" யாம் அக்கிராசனாதிபதியாக விருந்து பொருந்தா விஷயங்களைக் கண்டித்தபோது ஸ்ரீமான். செல்வச் சிரஞ்சீவி கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பன்னூற்றுக்கணக்கான அறிஞர் கேட்க எம்மைத் தாம் பிதாஸ்தானத்தில் வைத்திருப்பதாகவும், யாம் கண்டித்து உண்மையை நாட்டுதல் தமக்குச் சந்தோஷமே என்றும் சபையிற் கூறியது சத்தியமேயானால் இவ்விஷயத்திலும் உண்மை கடைப்பிடித்து மகிழ்மீக்கூர்ந்து தற்கால நிலைமைக்கேற்ப உண்டாகும் கோபத்தை அறவே நீக்கி உறவேகொண்டு வாழ்வாரென்பதொருதலை. ஒருகால் கோபமுண்டாயினும், "வாழ்வெனு மையல்விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பித்— தாழ்வெனுந் தன்மையோடுஞ் சைவமாஞ் சமயஞ் சாரும்—ஊழ் பெறலரிது" என்னுஞ் சித்தியாரைச் சிந்தித்துத் தெளியின் அது உடனே நீங்கும். நீங்கவே, மெய்ம்மையாளரெனப்பட்டு நன்மையாளராவார். அதுநிற்க.

இனி, மூவகைநூலே யன்றி ஒருசார் ஆசிரியர் எதிர்நூலென வொன்று சேர்த்து நூல் நால்வகைப்படும் என்பர்.

"எதிர்நூலாவது":—முதனூலின் முடிந்தபொருளை ஒருவன் யாதானு மொருகாரணத்தாற் பிறழவைத்தால் அதனை உலகம் மெய்யெனக்கொண்டு மயங்காமைப்பொருட்டுக் கருவியாற் றிரிவுகாட்டி அவன்கோள் மறுத்து, முதனூற்பொருளையே தன்கோளாக நிறுவி ஒருவாமை வைத்தற்கு ஒள்ளியானொருபுலவனால் உரைக்கப்படுவது." என்னை?

"தன்கோ ணிறீஇப் பிறன்கோண் மறுப்ப
தெதிர்நூ லென்ப வொருசா ரோரே."

என்பதோத்தாகலின்.

இவ்விதியை ஒருவாற்றா னொருவாது மேற்கொண்டு "திருநான்மறைவிளக்கவாராய்ச்சி" என்னுமிந்நூலை "எதிர்நூல்" என்று கூறுதலே பொருத்தமுடைத்தென்பது எமதபிப்பிராயம். என்னை? இதுவும், முதனூலையும் முன்னூலின் முடிந்த பொருளையும் அந்தணர்மீதுகொண்ட கோபத்தால் செல்வச் சிரஞ்சீவி ம-ா-ா-ஸ்ரீ கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள் பிறழவைத்தியற்றிய "திருநான்மறை விளக்கத்தை" உலகம் மெய்யெனக்கொண்டு மயங்காமைப்பொருட்டுக் கருவியாற் றிரிவுகாட்டி அவர்கோண் மறுத்து முன்னூற்பொருளையே தங்கோளாக நிறுவி ஒள்ளிய புலவர்திலகராகிய ஸ்ரீலஸ்ரீ. திரு. மா. சாம்பசிவபிள்ளையவர்களாற் செவ்விதிற் செய்யப்பட்டதாகலான்,

இஃதென் சொல்லியவாறோ வெனின், இவ்வாராய்ச்சி நூல் "எதிர்நூல்" இலக்கணம் பெற்றிருத்தலின் இதனை நூ வகை நூலுளொன்றாகிய அந்நூலென வழங்கன் மரபெ வாறும். அதுநிற்க.

இனி, "திருநான்மறைவிளக்கம்" என்பது முற்றும் பிரமாணவிடயமாகலான், அதன்கண் ஆராய்ச்சி அநாவசி மென்று காலத்தைப் பொருளாகக் கருதும் மேதக்கோர் சால் எண்ணவுங் கூடும். அஃதவரறிவிற்குக் கண்ணிய பாயினும், அவ் "விளக்கம்" அப்பிரமாணவிடய மென்பன அறிய மறிவு தலைப்படாதாரெல்லாம் அதனை மெய்யென கருதி வேதாகமங்களைப் புறக்கணித்து, இறைவனருள்பெறு வழியைத் தெரிக்குநூல் வேறின்மையால் அவ் வழியுணரமா டாது அறன்கடைவழியிற் சென்று புருடார்த்த நான்கையு அறவே இழந்து மக்கட்பிறப்பின் பயனெய்தா தழிதருவா லான், "அரவின்குட்டி சிறிதாயினும் பெருங்கோல் கொண் டித்தல்வேண்டும்" என்னும் பழமொழிப்படி, அப்பிரமா விடயமென் றதனைப் பராமுகப்படுத்தாது செப்பமாகி "எதிர்நூல்" ஒன்றியற்றி அம்மக்கட் புரத்தன் மாண்பார் றமேயாம்.

அதனைப் பண்டைத்தவத்தா னன்கிதி னுணர்ந்த பேர வாளராகலான் "ஆராய்ச்சி" ஆசிரியர் அவ்விளக்கத்தை அ கிங் கசைய வொட்டாது முழுதும் பிரமாணசகிதம் மறுப் தோர் "எதிர்நூல்" இயற்றிச் சைவமக்கட் கிந்துபகரித்தன "செய்யாமற் செய்த வுதவி"யும், "காலத்தினாற் செய் நன்றி"யும், "பயன்றூக்காது செய்த வுதவி"யு மாம் என் தொருதலை.

எல்லா நூல்களும் எல்லாருக்கும் பயன்படுவனவன்று பக்குவபேதம்பற்றி ஓரோவொன்றுஞ் சிலவும் ஒரொருவர்க்கு சிலர்க்கும் பயன்படுவனவாம். இக்கருத்துப்பற்றியே சிவஞா சித்தியுடையாரும் மக்களை; சாமுசித்தர், வைநைகர், பிராகி தர் என மூவகையினராகப் பிரித்துக்கொண்டு,

"பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்தி பண்ணும்
தொண்டரைத் தானே தூய கதியினிற் சேர்ப்பன் மார்க்க
கண்டநூ லோதி வீடு காதலிப் பவர்கட் கீசன்
புண்டரி கத்தாள் சேரும் பரிசினைப் புகல லுற்றாம்."

என்றருளிச்செய்தார்.

மூவகை மக்களுள் முதற்கண்வைத்தெண்ணப்படும் சாமுசித்தராவார்:—கழிந்த பிறப்புக்களில் சரியை கிரியை முதலிய சாதனங்கள் நன்கனம் முற்றுப்பெற்று, இப்பிறப்பில் பிரபஞ்சத்தை நோக்காது வீடுகாதலித்து அன்புமாத்திரையானே முதல்வனை வழிபடுவோர். அவர்க்கு நூல் கருவியாகச் செய்யப்படும் வழிபாடுகளெல்லாம் முன்னரே முற்றுப் பெற்றபடியால் இப்போது நூல் வேண்டாம். முதல்வன்றானே பரகதியிற் சேர்ப்பன். கண்ணப்பர் முதலாயினார் சாமுசித்தர்.

இறுதிக்கண்வைத் தெண்ணப்படும் பிராகிருதராவார்:—காணப்படும் பிரபஞ்சமே யன்றி வேறுபொருளுண்டெனலறியாது அப்பிரபஞ்சவின்பத்தில் அழுந்தி நிற்கும்பேதையர். அவர் நூலறிவைக் கொடுப்பினுங் கொள்ளமாட்டார்; ஆகலான் அவர்க்கும் நூல் வேண்டாம்.

இடைக்கண்வைத் தெண்ணப்படும் வைனைகராவார்:—நித்தியாநித்தியவஸ்துவிவேகம் பிறத்தலால், அநித்தியப்பொருளாகிய பிரபஞ்சத்தைவிடுத்து நித்தியப் பொருளாகிய சிவத்தைத் தேடும் சற்கருமர். அவர், நூல், வழிகாட்ட அதன் வழிநடந்து சிவத்தைப் பெற முயல்வோராகலின், அவர்க்கு அத்தகையநூல் வேண்டும். அருணந்திசிவாசாரியர் முதலியோர் வைனைகர்.

இங்ஙனம் சிவஞானசித்தியுட் கூறப்படுதலால் மாந்தர்க்குத் தீமைகுறித்த நூல்கள் எழுந்தோறும், பக்குவர்க்கு நன்மை குறித்த எதிர்நூலும் அவ்வப்போழ்தெழுதல் போறமாதல் தெற்றெனவுணர்க.

எவராயினும் வேதாகம மார்க்கத்தை மறுத்துத் தமது கொள்கையை நிறுத்த வந்தால் அவரவலக் கொள்கையை மறுத்து வேதாகம நெறியை நிறுத்த வல்லவர் அது செய்யாராயின், பெருங் குற்றம் என்பது,

"நிறுத்திடவ லானமல னானெறியை யென்றும்
மறுத்திடவ லானவல மார்க்கமய லுற்றே
நிறுத்திலன் மறுத்திலனெனிற்கரிச னேசம்
அறுத்தவனை மாகைகரி சல்லவற மாமே."

என்னுஞ் சிவதருமோத்தரச் செய்யுளா னறிக.

"நிகரறுநற் சிவதரும சிவஞா னத்தை
நிறுத்திடுவோ னிலுமுயர்ந்தோ னிலத்தி னில்லை
பகர்பரம சிவயோகி யவனே யாகும்
பரிவினிறுத் திடுமாற்றல் படைத்து முய்தி

அகலுமய லானிறுத்தா தொழிந்தோன் யோகி
யாயினுமீ சுரப்பிரிய னல்ல னன்றான்
புகருறுதீ நரகினிடை வீழ்ந்து புன்கண்
பொருந்திடுவ னெனமறைகள் புகலு மன்றே."

என்னும் அபியுக்தராகிய ஆன்றோர் செய்யுளும் ஈண்டு சிந்திக்கற்பாலது.

சிவதருமம்:— "மறைக ணிந்தனை சைவ நிந்தனை பொ மனமும்" என்று திருநந்திதேவர் வேண்டியவண்ணம் வேதாக தூடணங்கேட்டுச்சகியாது தூடணஞ் செய்தோரைக் கண்டி தல், ஞானதானம், திருக்கோயில் கட்டுதல், புதுக்கல் என்ற றெடக்கத்தன.

சிவஞானம்—சிவாகமம். அதனை நிறுத்தல்:— இருதிறப் படும். ஒன்று அதிற் கூறப்படும் பதிபசுபாசம் என்னு மு பொருளையுந் தாபித்தல். மற்றொன்று அவற்றை நிறுத்துதற் அவற்றைத் தெரிக்கு நூலில்வழி அது செய்யவியலாதாகலான் அவ்வாகமத்தைப் பல்லாற்றானும் பாதுகாத்தல். சிவஞான சிவாகமமென்பது:— "உயர்ஞான மிரண்டா மாறு மலமக வகலாத மன்னு போதத்—திருவருளொன் றென்றதனைத் தெளிய வோதுஞ் சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே" என்னுஞ்சிவப்பிரகாசத் திருவிருத்தத்தானறிக.

"அறமொழி விரும்பிக் கேளா தறமலா தறையுந் தீய— மறமொழி விரும்பிக் கேட்கும்" "இப்பெருங் கொடிய பாவ விருங்கலி"யில் தினைத்துணைச் சிவபுண்ணியம் பனைத்துணைப் பயன்தரு மென்பது,

"ஆன்றநற் சனக னாதி நால்வரு மரன்மு கத்தை
மூன்றரைக் கோடி கற்ப நோக்கிப்பின் முத்த ரானார்
தோன்றினின் றழியு மிந்தத் தொடுகடற் புவியி னுள்ளார்
ஊன்றியோர் கணம தேனு நோக்குறி னுறுவர் முத்தி."

என்னும் வள்ளலார் சாத்திரத்தானறியக் கிடத்தலின், திருநான்மறைவிளக்க வாராய்ச்சி" என்னும் எதிர்நூலியற்றுத லாகிய பனைத்துணைப்புண்ணியம் மலைத்துணைப் பயனை ஆக்கி யோருக்களிக்கு மென்க.

இத்துணை விசிட்ட எதிர்நூல் இதுகாறும் யாருஞ் செய் திலர். அதற்குக் காரணம் இத்துணை அப்பிரமாணநூல் இது காறும் எழாமையே. விளக்கத்திலுள்ள அப்பிரமாணமாகிய போலிக்கொள்கைகளை ஒவ்வொன்றாக அநுவதித்துக் காட்டி

அவ்வவற்றின் போலித்தன்மை இஃதிஃதென்று விளங்க விரித்துக்காட்டிக் காண்டல் கருதலுரை என்னு மூன்றுபிரமாணங்கட்கு மொவ்வாமையைத் தேற்றிப் பன்னூற் பிரமாணங்களால் "விளக்க"முடையாரதக் கோள்களை மறுத்துத் தமது கோளை நாட்டியிருக்கும் மதுகை எத்திறத்தறிஞரு மெச்சு மியல்பிற்று.

அவ்விளக்கத்தை ஒருகூறு இருகூறு முக்கூறு நாற்கூறு படுத்திவிடல் ஆசிரியர் தமக்கு இலகு. அங்ஙனமாகவும் விளக்கத்தை எடுத்துப் பார்ப்போர் புரட்டிப்பார்த்தெறிதற்கு மிக இலகுவினு மிலகுவாக அறுபத்தொரு கூறு செய்து, செய்தவற்றை நூன் முகப்பிற் றலங்கவைத்திருத்தல் நூலினுள் மிக விரித்திருக்கும் விஷயங்களை முன்னரே இலகுவாகத் தெரிக்கும் பாயிரம் வைத்திருத்தலைப் போன்றிருக்கும் அழகு பாராட்டற் பாலது.

"விளக்க" முடையார் எங்கெந்த நூலிலிருந்து தமது கொள்கைக்குப் பிரமாணங் காட்டினரோ! அந்தந்தப் பிரமாணம் அவர் கொள்கையைச்சாதிக்கு மாற்றலின்றித் தமது கொள்கையைச்சாதிக்கும் ஆற்றன் மிகுதிப்பாட்டை "ஆராய்ச்சி" நூலாசிரியர், அழகுபெற விளக்கிக் காட்டிய புத்தி நுட்பம் புலவர் போற்றற் பாலது.

"ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுண்டோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்."

என்று கூறுவார் கூறுக.

திருநான் மறைவிளக்க வாராய்ச்சி தேரின்
பெருநா னிலத்துப் பிறங்கு—மிருடீர்
பகலவன்போ லுள்ளிருளைப் பாற்றலாம் பாரோர்
சகலகலா வல்லுநராய்த் தாம்.

என்றிதனையேயாம் மிகுத்துக் கூறுநிற்பேம். என்னை? திருக்குறள் ஒருவர் வாக்காய் ஒருநூலாயிருத்தலானும், இது சங்கப்புலவர் அற்புதஞ் செய்து சைவசமயஸ்தாபனஞ் செய்த அருளாளர் வாக்காயவனேக நூல் குழுமப் பெற்றிருத்தலானும், அது, சென்னைச் "சைவநூற்பதிப்புக் கழகத்தா"ரால் "ஆப்பன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்" என்னும் பாட்டு "ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்" என்று வழுவுறத் திருத்தப்பட்டிருத்தலானும், இது அவ்வாறு தன்னகத்துச் செய்யுள் திருத்தப்படமாட்டா தாகலானும், அஃதறிந்தோர்

ஒருநூலறிந்தவராவா ராகலானும், இஃதறிந்தோர் பன்னூலறிந்தோராவராகலானும், அஃதறிந்தோர் பொதுவறிவுறுவராகலானும், இஃதறிந்தோர் சிறப்பறிவுறுவராகலானும், அஃதறிந்தோர் மும்மூர்த்திகளையறிவ ராகலானும் இஃதறிந்தோர் மும்மூர்த்திகளையும் "மூவர்கோனாய் நின்ற முதல்வனையுஞ் சேர்த்து நான்கு மூர்த்திகளை யறிவராகலானும், அஃது ஆசிரியர்மூல மரிதினுணரற் பால தாகலானும், இஃது ஆசிரியரின் எளிதினுணரற்பால தாகலானும், இன்னோரன்ன பிறவற்றாலு மென்க.

"அறிதொழிலோர்" என்பது எழுத்துப்பிழை யென்பாரேல் "திருநான்மறை விளக்கத்தைக்" கொண்டு அன்றென நன்று மறுப்பேம். பாடபேதம் என்பாராயின், அப்போது யாம் கூட்டும் வித்துவசபையில் அப்பாடத்தையுடைய பழைய ஏட்டுப் பிரதியைக் கொணர்ந்து காட்டி உண்மையை நாட்டல் வேண்டும். அதுமட்டோ; அக்குறளுக்கு முன்னும் பின்னுமுள்ள அதிகாரங்களோடும் செய்யுட்களோடும் முரணாது சிறப்புறு பொருள் செய்துங்காட்டல்வேண்டும். கரலிகிதமூஉப்பாடங் காணப்படின், அதன்பொருள் விளங்காதபோது பாடபேதமாகப் பதிப்பித்தன் மாத்திரையே சால்புடைத்து. அஃதன்றி அறிவானான்ற பெரியார் முன்பின் விரோதமறப் பொருடரும் பாடம் இஃதென் றறிந்து மேற்கொண்டு உரையும் பொருத்தமுறக்கண்ட அப்பாடத்தை நீக்கிப் பொருத்தமில் பாடத்தை மேற் கோடல்,

"குலந்தவங் கல்வி குடிமைமூப் பைந்தும்
விலங்காம லெய்தியக் கண்ணும்—நலஞ்சான்ற
மையறு தொல்சீ ருலக மறியாமை
நெய்யிலாப் பாற்சோற்றி னேர்."

என்னு நாலடிக் கிலக்காக்கிவிடும்.

உலகம்—உயர்ந்தோர். என்னை? "உலகமென்ப துயர்ந்தோர் மாட்டே" என்ப; ஆகலான். ஈண்டுக் கருத்தாவாகு பெயராய் அவர் ஒழுகலாற்றை உணர்த்தி நின்றது.

"அறிதொழிலோர்" என்னும் பாடத்திற்கு முன்னதிகாரம் பின்னதிகாரங்கட்கும் முற்செய்யுள் பிற் செய்யுள்கட்கு முரணாமல் பொருள் கூறற்கு ஒருமுகனாய்வந்து திருக்குறள் செய்தருளிப் பின்மறைந்து நான்முகனாய பிரமா மீட்டு ஐமுகனாய் வரினு முடியாது.

ஆகலாற் கழகத்தார் சைவசமயநூல்களை மனம் போன வாறு திருத்தி நூல்வரம் பழித்து அதன்சொருபத்தைக் கெடுத்து மெய்ப் பொருள் தோன்றாதவாறு செய்து சைவர் கட்கு ஏதஞ் செய்யாமல், பழையவித்துவான்கள் எல்லாவற்று ஆம் பொருத்தமுறு பொருளுடைய பாடத்தை அறிந்து கரலிகித வழூஉக் களைந்து நூல்களை அச்சிட்டதுபோல, அச்சிடல் வேண்டும் என்பதைச்சம்பந்த நேர்ந்தவழித் தெரித்தாம். அதனால் எமது கடப்பாட்டை யாம் குறிக்கொண்டு செய்தேமாயினேம்; எமக்கொரு குறையுமின்று. அவர் அதுசெய்யாராயின் குற்றத்துட்பட்டுத் துன்பமுறுவர். அதுநிற்க.

மற்றுத் திருக்குறள் அதிகாரங்கள் தனித்தனி படிக்கப் படும் போது அது அது சிறந்ததாகத் தோன்றுமாறுபோல, ஆராய்ச்சி எதிர்நூலின்கணுள்ள அறுபத்தொரு பகுதிகளும் தனித்தனி படிக்கும்போது அது அது சிறந்ததாகத் தொன்றும் மாட்சி அத்தியற்புதமாயிருக்கின்றது.

ஆயினும் ஐம்பத்தொன்பதாம் பகுதியில் "மறை, நான் மறை, அந்தணர், பார்ப்பார் என்னுஞ் சொற்களின் வழக்கைப் பின்னுமோர் முறையிற் சிறப்புவகையாய் ஆராய்ந்து சித்தாந் தஞ்செய்வாம்." என்றுகூறப்பட்டிருத்தலைக் கண்டு அதன்கண் வேணவாக்கொண்டு அதனை நாமுஞ் சிறப்புவகையா னோக்க வேண்டுமென்று கருதி அவ்வாறே நோக்கினேம். அவ்வழிச், "சிறப்புவகையாய் ஆராய்ந்து" என்பது மிக்கபிழையெனச் சித்தாந்தஞ் செய்தேம். என்னை? அவை சிறப்பினும் அதி சிறப்பாய் ஆராய்ந்திருத்தலா னென்க.

ஆதலால் அப்பகுதியைப் பன்முறை பார்வையிட்டு உன்னரு மகிழ்ச்சிமீக் கூர்ந்து ஆசிரியரது "நுண்மாணுழை புல" நோக்கி எண்மாண்ட விறும்பூதெய்தினேம்.

இந்தப் பகுதியை எம்மைப் போலவே யாவரும் பன் முறை பார்த்து உண்மையோர்ந்து ஆசிரியர் வன்மை தேர்ந்து, "யான்பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம்" என்று திருமூல நாயனார் திருவாய் மலர்ந்தருளியதுபோல யாம் பெற்ற வின்பம் பெறுமாறு விரும்புகின்றேம்.

முக்கியமாகிய அறுபத்தொரு பகுதிகளும் நியாய வாயிலாக மறுக்கப்படவே, அமுக்கியமென்று ஒதுக்கிவிடப்பட்டனவும் மறுக்கப்பட்டமை தானே போதருமென்றுணர்க.

சத்துக் கொளுஞ்சைவ சித்தாந்த சாத்திரச் சார்பிலதாய்ப்
பித்துக் கொளுத்திப் பிரியா நிரயப் பிணியுதவிச்
சித்துக் கெடுத்துத் திரிக்குந் திருநான் மறைவிளக்கஞ்
செத்துக் கிடக்குது சாம்ப சிவநேசன் றெம்முனைக்கே.

"தழங்குரன் முரசிற் சாற்றித் தத்துவந் தழுவல் வேண்டிச்
செழுங்களி யாளர் முன்ன ரிருளறச் செப்பி னாலும்
முழங்கழ னரகின் மூழ்கு முயற்சிய ராகி நின்ற
கொழுங்களி யுணர்வி னோரைக் குணவதங் கொளுத்த லாமோ."

சைவசித்தாந்தசாத்திர வுண்மைப் பொரு ளறியா
பேதை மக்கட்குப் பெருங்கேடு விளைக்குந் "திருநான்மறைவிள
கத்"தைப் பாற்றிச் சிறந்த நன்மை விளைக்குந் "திருநான்மறை
விளக்கவாராய்ச்சி" என்னும் சீரிய "எதிர் நூல்" இயற்றி உப
கரித்த வள்ளலாகிய சிவஞானச் செல்வர் ஸ்ரீலஸ்ரீ சாம்பசிவ
நேசரவர்கள் செய்த நன்றியை மறவாது "எழுமை எழுபிறப்
முள்ளுவர் தங்கண்—விழுமந் துடைத்தவர் நட்பு" என்
வண்ணம் அவர்கள் நட்பை என்றும் உள்ளி, அவர்கட்குப்
பூரணசுகவாழ்வும், பூரணவாயுளும் கொடுத்து மீட்டும் மீட்டும்
வீட்டிற் கேதுவாய நூல்களைச் செய்து வஞ்சக நூலாற் கெடு
வார் கெடாமல் அவர்க்குய்தி பயக்குமாறு அளவில் கிருபை
யுளமகிழ்ந் தருளும் வண்ணம் "தேவதேவன் மாதேவன் சிறப்
புடை யீசனெங்கோன்—மூவரின் முதல்வ னென்று" முத
மறை முழங்கும் ஒண்ணுதல் பாகக் கண்ணுதற் பரசிவன் கழ
லடியிணைமலர் நெஞ்சகப் போதினிறுவி வேண்டுதும். சுபம்.

இந்நூ லிருப திருப திருபத்தொன்
றென்னும் பகுதி யிவையுணர்ந்த—பின்னரெங்குங்
கல்லாத நூலில்லை கற்றவர்க்குஞ் சொல்வரெல்லாம்
பல்லாரு மேத்தப் பணிந்து.

இனி இத்தகைய பெருமை வாய்ந்த பன்னூற்களஞ்சிய
மாகிய "திருநான்மறைவிளக்கவாராய்ச்சி" என்னு மிவ் "வெதிர்
நூலை" வெளிப்படுத்தினவர் இயற்றிய ஆசிரியரவர்களோ!
அச்சிடுவித்து முடித்த S. I. Ry. ஜனரல் டிராபிக் மானேஜர்
ஆபிசு ஹெட் கிளர்க்கு ஸ்ரீமாந். A. குழந்தைவேலுப் பிள்ளை
யவர்களோ! என்னும் ஐயப்பாட்டின்கண் எமது அபிப்பிராயம்
இஃதெனத் தெரிக்கின்றாம்.

ஆசிரியரவர்கள், சிவபெருமானால் "நீரோ பெரிய சிறுத்
தொண்ட"ரெனத் திருவாய்மலர்ந்தருளப் பெற்ற சிறுத்
தொண்ட நாயனாரைப்போல யாவர்க்குந் தம்மைச் சிறியராகக்

காட்டி ஒழுகும் ஒழுகலாறுடையராயினும், ஆக்கையானும், ஆயுளானும், அறிவானும், அனேகநூ லாராய்ச்சியானும், அனேக "எதிர்நூல்கள்" ஆக்கலானும், இன்னோரன்னபிறவற்றானும் பெரியராய்க் கோலூன்று பருவக் காலத்தராயினமையின், தாமியற்றிய நூலை அச்சிடுவித்தற் பொருட்டு அச்சியந்திரசாலைக்குப் போக்கு வரவு செய்யத் தமக்கியலாத நிலைமையை யுற்றுநோக்கித், தமக்கதிப்பிரிய நண்பராகிய ஸ்ரீமாந். A. குழந்தைவேலுப்பிள்ளையவர்களிடம் அவ்வேலையை ஒப்பித்துவிட்டார்கள்.

அப்பிள்ளையவர்களும் சிவபத்தி, சிவனடியார்பத்தி, சிவாலயவழிபாடு, விபூதி உருத்திராக்க விசுவாசம், அறிஞர்மாட்டன்பு, பொதுநலப்பிரியம், உற்றவிடத்துதவல் முதலிய நலப்பாட்டிற் சிறந்தவர்களாகலான், இது தமக்கு வாய்ப்புடைத்தாயதோர் சிவபுண்ணிய கைங்கரியமெனக் கருதி அதற்குடன்பட்டுத் தமது இல்லத்து வேலைகளையும் பாராமுகப்படுத்தி ஒன்பது திங்கள் ஓயாது யந்திரசாலைக்கு போதல், வருதல் புரூப் (proof) பார்த்தல் முதலிய பல வேலைகளையுஞ் செய்து அச்சிடுவித்துப் பூர்த்தி பண்ணினார்கள்.

நிகழ்ந்தவண்ணம் இவ்வண்ண மாகலான், இதனை வெளிப்படுத்தினர் இவ்விருவருள் இன்னாரென்று துணிந்து யாம் எவ்வண்ண மியம்புவேம். என்னை?

இவர்கள் வெளிப்படுத்தா தொழிந்தால் ஆசிரியரவர்கள் அச்சிட்டு வெளிப்படுத்த லின்று. ஆசிரியரவர்கள் நூல் செய்யாவிடின் இவர்கள் அச்சிட்டுவெளிப்படுத்துதலுமின்றாகலான்.

"வெவ்விசை யப்படை வீட்டிடும் வாளிச்
செவ்விசை தேர்விசை நாடினர் செவ்வேள்
கைவிசை யோநெடுங் கால்விசை தானோ
எவ்விசை யோவிசை யென்றனர் வானோர்."

சுப்பிரமணியக்கடவுள் சூரபன்மனோடு செய்த யுத்தத்திலே அவனது படையை வீட்டச்செலுத்திய பாணவேகத்தையும், வாயுதேவன் செலுத்திய தேர்வேகத்தையும் தேவர்கள் பார்த்து அக்கடவுள் கரவேகமோ! வாயுவின்கைவேகமோ! மிக்கதென்று சொல்லமுடியாமல் நின்றாற் போலவும்,

"தார்கெழுவு வேற்படை தடக்கையுடை யோனும்
சூரனுமி வாறம ரியற்று தொழில்காணு
வீரமட மாதுளம் வியந்திவர் தமக்குள்
ஆரிடை நடத்துமென வையமொடு நின்றாள்."

வீரலக்குமி சுப்பிரமணியக்கடவுளும் சூரபன்மனு போர்த்தொழில் புரியும் விசேட சமத்துவ வேக மதனைப் பார்த்து இவ்விருவருள் யாரிடத்து யாம் செல்லுவே மென் ஐயமுற்று நின்றாற் போலவும், யாமும் இவ்விருவர் தம்மு இன்னார் வெளிப்படுத்தினரென்று சொல்ல முடியாமையா ஐயமுற்று,

"பரத்தினு மேதகு பண்ணவன் வார்விற்
கரத்தினை யும்விரை வாற்காந் தூண்டும்
சரத்தினை யுந்தடந் தேரினை யுங்கால்
உரத்தினை யும்புகழ் வார்புடை யுள்ளோர்."

சுப்பிரமணியக்கடவுள் மருங்கு நின்ற தேவர் முதலா னோர் அவர் கரவேகத்தையும், சரவேகத்தையும், வாயுதேவ தூண்டும் தேர்வேகத்தையும், மனோவேகத்தினும் விரைவா வத்தேரைத் தூண்டுர் அவன் கரவேகத்தையும் நோக்கி இன் தினும் இன்னது மிக்க வேகத்ததென அறியமாட்டாதவ களாய் அவற்றை ஒருங்கே புகழ்ந்தாற் போல,

கலிவலிமிக்க விக்காலத்திலே இவர்களைப்போல மற்றெவ களும் சைவசமயாபிமானத்தாலும், சிவபத்தியாலும், நிலையி பிரியாமையாலும், உண்மை நிலைமையாலும் மேம்பட்டு இன்ன ரன்ன பயன்படு நன்முயற்சிகளைச் செய்யமாட்டார்க ளென்ற இருவரையும் ஒருங்கே புகழ்கின்றாம்.

இத்தகைய சிவபுண்ணிய கைங்கரியத்தின் மேம்பட்ட உத்தம புருஷர்கள் இருவரும் "இருதலைப்புள்ளி னோருயி போல," அரோக திடகாத்திரர்களாய்ப் பூரணாயுளுடன் எ குறையுமின்றி இன்பப் பெருவாழ் வெய்தி இன்னு மின்னும் நன்னர் "எதிர்நூல்" பல ஒருவரியற்றிடவும், ஒருவர் அவற்றை அச்சுவாகனமேற்றவும், அதனால் யாவரும் ஆன்மலாபமடைய வும் பெருங் கருணை பாலிக்குமாறு அகண்டாகார நித்தவியா பக சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவ சங்கர நாமத் தனிமுதல் வன்றிருவடிக்கமல மெமதொரு முடிக்கமலமாகக் கொண்டு முப்போதும் முக்கரணங்களானும் மூவித வழிபாடுஞ் செய் கின்றாம்.

சீர்பூத்த கருவிநூ லுணர்ச்சி தேங்கச்
சிவம்பூத்த நிகமாக மங்க ளோங்கப்
பார்பூத்த புறச்சமய விருள்க ணீங்கப்
பரம்பூத்த சைவநிலை பாரோர் தாங்கப்
பேர்பூத்த சடைமவுலிப் பிரானூர் செய்ய
பிறங்கொளிசேர் நலங்குலவு கமலம் போலும்
வார்பூத்த கழலடியை மனத்து நிறீஇ
மறவாம லனுதினமு மதித்து வாழ்வாம்.

சமயகுரவர் சந்தானகுரவர் திருவடிகளே சரணம்.

இங்ஙனம்,

அக்ஷய வரு௵ ஆவணி௴ உ௰௨ } சுவாமிநாதபண்டிதர்.

---

**நூல் ஆக்கியோன் குறிப்பு:—** மேலே அச்சிடப்பட்டிருக்கின்ற அபிப்பிராயங்கள் எமக்குக் கிடைத்த காலக்கிரமத்தானே வைக்கப்பட்டு அச்சிடப்பட்டன.

எமது வேண்டுகோட்கிணங்கி அவரவர்கட்குரிய அரிய பெரிய இன்றியமையா வேலைகளுடன் சைவவுலகு உண்மையைக் கைக்கொள்ளு நிமித்தம் அபிப்பிராயம் எழுதி உபகரித்த வித்துவப் பெரியார்கட்குத் திரிகரணசுத்தியோடு வந்தனஞ் சமர்ப்பிக்கின்றோம்.

**விசேடக்குறிப்பு:—** மேற்காட்டிய பெருமக்கள் அபிப்பிராயங்களில் புழுத்த நாயினுங்கடையனாகிய அடியேனைப் பலவாறு பெருமைப்படுத்தி யெழுதியிருக்கின்றார்கள். அது வேண்டாவெனப் பன்முறைபிரார்த்தித்துக் கேட்டுக்கொள்ளவும் அவர்கள் உடன்படாததனால், அவர்கள் ஆணையை மறுக்க அஞ்சி அவர்கள் எழுதியவாறே அச்சிடப்பட்டன. பெரியோர்கள் பொறுத்தருளுவாராக,

திரு. மா. சா.

சிவமயம்.

# இவ்வாராய்ச்சி அச்சிடுதற்கு முத்திறக்கோடையுள் முதற்கோடையாகப் பொருள் உபகரித்த சைவாபிமானப் பெரியார்கள் பெயருந் தொகையும்.

முத்திறக்கோடை — (கந்த புராணம்)

"என்னுனு மோருதவி யாதொருவன் யார்க்கெனினுந்
தன்னான் முடிவதெனிற் றானே முடித்தறலை
சொன்னான் முடித்த லிடையாகுஞ் சொல்லுகினும்
பன்னான் மறுத்துப் புரிதல்கடைப் பான்மையதே"

---

| | | |
|---|---|---|
| 1 | அம்பாசமுத்திரம் திருவாளர். V. P. காந்திமதிநாதபிள்ளையவர்கள் B.A. | ரூ. 12—0—0 |
| 2 | திருச்சி, திருவாளர். M. A. சந்திரசேகர பிள்ளையவர்கள் | ரூ. 10—0—0 |
| 3 | யாழ்ப்பாணம், விக்டோரியாக்காலேஜ் பிரின்ஸ்பல் திருவாளர். சிவபாதசுந்தரப் பிள்ளையவர்கள் | ரூ. 15—0—0 |
| 4 | யாழ்ப்பாணம், அட்வோகேட்டு திருவாளர். அருளம்பலம் அவர்கள் | ரூ. 15—0—0 |
| 5 | ஸ்ரீலஸ்ரீ. சுவாமிநாதபண்டிதரவர்கள் | ரூ. 50—0—0 |
| 6 | யாழ்ப்பாணம், பிரமஸ்ரீ. சபாபதிக்குருக்களவர்கள் | ரூ. 15—0—0 |
| 7 | உடையூர், திருவாளர். ஸ்ரீநிவாசபிள்ளை அவர்கள் | ரூ. 10—0—0 |
| 8 | மயிலாப்பூர், திருவாளர். C. V. ஜெம்புலிங்கப் பிள்ளை அவர்கள் | ரூ. 5—0—0 |
| 9 | திருச்சி, திருவாளர். N. P. கல்யாணசுந்தர முதலியார் அவர்கள் B.A., B.L | ரூ. 5—0—0 |
| 10 | திருச்சி, திருவாளர். A. குழந்தைவேலுப் பிள்ளை அவர்கள் | ரூ. 5—0—0 |
| 11 | உத்தமபாளையம், சிவராமமங்கையர்க்கரசியம்மாள் | ரூ. 100—0—0 |

சிவமயம்.

# இவ்வாராய்ச்சி அச்சிடுதற்கு முத்திறக்கோடையுள் முதற்கோடையாகப் பொருள் உபகரித்த சைவாபிமானப் பெரியார்கள் பெயருந் தொகையும்.

முத்திறக்கோடை — (கந்த புராணம்)

"என்னானு மோருதவி யாதொருவன் யார்க்கெனினுந்
தன்னான் முடிவதெனிற் றானே முடித்தறலை
சொன்னான் முடித்த லிடையாகுஞ் சொல்லுகினும்
பன்னான் மறுத்துப் புரிதல்கடைப் பான்மையதே"

---

| | | |
|---|---|---|
| 1 | அம்பாசமுத்திரம் திருவாளர். V. P. காந்திமதிநாதபிள்ளையவர்கள் B.A. | ரூ. 12—0—0 |
| 2 | திருச்சி, திருவாளர். M. A. சந்திரசேகர பிள்ளையவர்கள் | ரூ. 10—0—0 |
| 3 | யாழ்ப்பாணம், விக்டோரியாக்காலேஜ் பிரின்ஸ்பல் திருவாளர். சிவபாதசுந்தரப் பிள்ளையவர்கள் | ரூ. 15—0—0 |
| 4 | யாழ்ப்பாணம், அட்வோகேட்டு திருவாளர். அருளம்பலம் அவர்கள் | ரூ. 15—0—0 |
| 5 | ஸ்ரீலஸ்ரீ. சுவாமிநாதபண்டிதரவர்கள் | ரூ. 50—0—0 |
| 6 | யாழ்ப்பாணம், பிரமஸ்ரீ. சபாபதிக்குருக்களவர்கள் | ரூ. 15—0—0 |
| 7 | உடையூர், திருவாளர். ஸ்ரீநிவாசபிள்ளை அவர்கள் | ரூ. 10—0—0 |
| 8 | மயிலாப்பூர், திருவாளர். C. V. ஜெம்புலிங்கப் பிள்ளை அவர்கள் | ரூ. 5—0—0 |
| 9 | திருச்சி, திருவாளர். N. P. கல்யாணசுந்தர முதலியார் அவர்கள் B.A., B.L | ரூ. 5—0—0 |
| 10 | திருச்சி, திருவாளர். A. குழந்தைவேலுப் பிள்ளை அவர்கள் | ரூ. 5—0—0 |
| 11 | உத்தமபாளையம், சிவராமமங்கையர்க்கரசியம்மாள் | ரூ. 100—0—0 |

சிவமயம்.

# பொருள் அட்டவணை.



[குறிப்பு:-கா. சு. எனவெழுதி யிருப்பதைத் திருவாளர், கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களென்று வாசிக்க வேண்டும்.]

உ

சிவமயம்.

# பொருள் அட்டவணை.



[குறிப்பு:-கா. சு. எனவெழுதி யிருப்பதைத் திருவாளர், கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களென்று வாசிக்க வேண்டும்.]

| பகுதி. | விஷயம். | பக்கம் |
|---|---|---|
| 37 | திருமூலர் பிராமணரைச் சத்தியமில்லாதவரென்றும் பரனுண்மை யில்லாதவரென்றும் கூறியிருப்பதாக. கா. சு. கூறுவதும் மறுப்பும் | 139 |
| 38 | திருவிசைப்பா ஆசிரியர் பிராமணரை 'அசிக்க ஆரியங்களோதுமாதர்' என்றார் என கா. சு. கூறுவதும், அதன் உண்மைப் பொருளும் | 139 |
| 39 | பிராமணர் கொள்கையையும் வேதத்தையும் பற்றிய உமாபதி சிவத்தின் கருத்தை மாறுபாடாகக் கொண்டு கா. சு. எழுதியிருப்பதுவும், உண்மை யின்னதென்பதும் | 141 |
| 40 | அப்பமூர்த்திகள் பிராமணர்களை யிகழ்ந்து கூறினதாக, கா. சு. கூறுதலும் மறுப்பும் | 146 |
| 41 | திருவாதவூரடிகள், ஆரியர்களது விரதாதிகள், அவர்களது மதம், அவர்களது வேதம், இவைகளைத் தாழ்த்தியும். தமிழ் நான்மறையை உயர்த்தியும், கூறியிருப்பதாக கா. சு. கூறுதலும் மறுப்பும் | 147 |
| 42 | ஆலநிழற்கீழ் அருள்பெற்ற (தமிழ்) முனிவர் நால்வரும் செய்த தமிழ் மறைகளையே தமக்கு முற்பட்டதாகத் தேவார கருத்தர்கள் தேவாரத்திற் குறித்துள்ளார்களென்பதும், தமிழ் மறைகளுண்டான இடம் திருமறைக் காடென்னும் தலமென்பதும், அவை கடலில் மறைந்தழிந்த பின்னர், அத்தலத்தின் கோயில்வாசற் கதவுகள் மூடப்பட்டனவென்பதுமாதிய கா. சு. கொள்கையும் மறுப்பும் | 152 |
| 43 | தென்னாட்டில் தமிழ் முனிவர் நால்வருக்கும் தமிழ் மறைகளை இறைவன் அருளினனென்பது கலித்தொகைச் செய்யுளாலும் மாணிக்கவாசகர் வாக்காலும் விளங்குகின்றதெனும் கா. சு. கொள்கையும் ஆராய்ச்சியும் மறுப்பும் | 159 |
| 44 | பிரணவம் தமிழ்மொழி யென்னும் கா. சு. கொள்கையும் மறுப்பும் | 164 |
| 45 | பிரணவம் 'ஓம்புதல்' என்ற தமிழ்ச்சொல்லினடியாகப் பிறந்ததென்னும் கா. சு. கூற்றும் ஆராய்ச்சியும் மறுப்பும் | 164 |
| 46 | 'ஓம்' என்றதற்கு முண்டகம் முதலிய உபநிடதங்கள் கூறும் வரிவடிவமும் தமிழிலேதான் காணப்படுகின்றதென கா. சு. கூறுவதும் ஆராய்ச்சியும் மறுப்பும் | 167 |
| 47 | பிரணவம் தமிழ்மொழி யென்பதற்கு, கா. சு. காட்டும் திருப்புகழ் மேற்கோள்களும், ஆராய்ச்சியும் மறுப்பும் | 171 |
| 48 | தமிழானது மறைகளும் மந்திரங்களும் கூறுதற்குரிய மொழியென்று சம்பந்தரது ஒரு தேவாரம் ஆதாரமாக. கா. சு. கூறுதலும் மறுப்பும் | 173 |
| 49 | பஞ்சாட்சரத்தின் பொருள் கா. சு. கொள்கைப்படி இன்னதென்பதும் அதன் ஆராய்ச்சியும் முடிபும் | 179 |
| 50 | வடமொழித் தந்திரங்கள் உஅ-ம், தமிழ்த் தந்திரங்களின் மொழிபெயர்ப்பென, கா. சு. கூறுவதும் மறுப்பும் | 180 |

முற்றிற்று.

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க.

உ

சிவமயம்.

# ஆராய்ச்சி இலக்கம் VII

அஃதாவது

## திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்

எழுதிய

# திருநான்மறை விளக்கம்

## என்னும் விடயத்தை

## ஆராயும் ஆராய்ச்சி

இதன்கண் எடுத்துக்கொள்ளப்பட்டது.

---

**நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்**
**கற்குஞ் சரக்கன்று காண்.**

திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் யம். ஏ. யம். யல்., அட்வோகேட்டு, திருநான்மறை விளக்கமென வொரு விடய மெழுதியுள்ளார். அது சென்னையிற் பிரசுர மாகிவருகின்ற "செந்தமிழ்ச் செல்வி" யென்னும் மாதாந்தப் பத்திரிகையின் முதலாவது சிலம்பின், ௨௦ முதல் ௨௫ம் பக்கம் வரையினும், ௫௨ முதல் ௫௬ வரையினும், ௮௩ முதல் ௮௭ வரையினும், ௧௧௧ முதல் ௧௧௬ வரையினும், ௧௫௬ முதல் ௧௫௯ வரையினும், ௧௮௧ முதல் ௧௮௭ வரையினும், ௨௧௫ முதல் ௨௨௫ வரையினும், ௨௫௩ முதல் ௨௫௭ வரையினும் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றது.

௨. பல்லாவரம் சுவாமி வேதாசலம் அவர்கள், திருவாசகத்தில் போற்றித் திருவகவலுக்கு எழுதிய விரிவுரையில் "மூவா நான்மறை முதல்வா போற்றி" யென்னும் ௯௪-ம் அடியிலுள்ள மூவா நான்மறை யென்ற சொற்றொடர், தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், திருக்குறள், தேவாரம், சிவஞானபோதம், என்னும் நூல்களைக் குறிக்குமென்றும், வடமொழி நான்கு வேதங்களைக் குறிக்காதென்றும் எழுதினார்கள். அவ்வாறுகொண்ட பொருள் பொருத்தமிலதெனத் தக்க பிரமாணங்களுடன், "திருவாசகம் போற்றித்திருவகவலிற் காணப்படும் மூவா நான்மறை யென்னுஞ் சொற்றொடரின் பொருளாராய்ச்சி" யென்னும் பெயரால் ஒரு விடய மெழுதிச்

உ

சிவமயம்.

# ஆராய்ச்சி இலக்கம் VII

அஃதாவது

திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்

எழுதிய

## திருநான்மறை விளக்கம்

என்னும் விடயத்தை

## ஆராயும் ஆராய்ச்சி

இதன்கண் எடுத்துக்கொள்ளப்பட்டது.

---

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் யம். ஏ. யம். யல்., அட்வோகேட்டு, திருநான்மறை விளக்கமெனவொரு விடய மெழுதியுள்ளார். அது சென்னையிற் பிரசுரமாகிவருகின்ற "செந்தமிழ்ச் செல்வி" யென்னும் மாதாந்தப் பத்திரிகையின் முதலாவது சிலம்பின், உ௦ முதல் உ௬ம் பக்கம் வரையினும், ௫உ முதல் ௫௬ வரையினும், அ௩ முதல் அஎ வரையினும், ககக முதல் கக௬ வரையினும், க௫௬ முதல் க௫௯ வரையினும், கஅக முதல் கஅஎ வரையினும், உக௫ முதல் உஉ௫ வரையினும், உ௫௩ முதல் உ௫எ வரையினும் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றது.

உ. பல்லாவரம் சுவாமி வேதாசலம் அவர்கள், திருவாசகத்தில் போற்றித் திருவகவலுக்கு எழுதிய விரிவுரையில் "மூவா நான்மறை முதல்வா போற்றி" யென்னும் ௬௪-ம் அடியிலுள்ள மூவா நான்மறை யென்ற சொற்றொடர், தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், திருக்குறள், தேவாரம், சிவஞானபோதம், என்னும் நூல்களைக் குறிக்குமென்றும், வடமொழி நான்கு வேதங்களைக் குறிக்காதென்றும் எழுதினார்கள். அவ்வாறுகொண்ட பொருள் பொருத்தமிலதெனத் தக்க பிரமாணங்களுடன், "திருவாசகம் போற்றித்திருவகவலிற் காணப்படும் மூவா நான்மறை யென்னுஞ் சொற்றொடரின் பொருளாராய்ச்சி" யென்னும் பெயரால் ஒரு விடய மெழுதிச்

சென்ற ருதிரோற்காரி ஆண்டில் அச்சிடுவித்து வெளி
டனம்.

௩. சுவாமி வேதாசலமவர்கள் கொள்கைக்குத் த
உடம்பாடில்லாதவராய், நான்மறை யென்பது வேறு தம
நூல்களென நம் நண்பராகிய கா. சு. ஒரு கட்டுரை க
யெழுதி அதற்குத் திருநான்மறை விளக்கமெனப் பெயரி
மேற்காட்டியபடி செந்தமிழ்ச் செல்வியில் பிரசுரித்திருக்கி
ருர். அதன் கருத்தாவது, நந் தமிழ் நாட்டில் தமிழ் மக்க
நால்வருக்குச் சிவபிரான் கல்லால மரத்தடியிலே, அ
பொருள் இன்பம் வீடு என்னும் புருடார்த்தம் நான்கனை
முணர்த்த, அத்தமிழ்ப் பெரியோர்கள் திருக்குறள் போன்
நான்மறையென்னும் பெயருடன் நூல்கள் தமிழிற் செய்த
தார்களென்பதும், அந்நூல்களுடன் ஆறங்கமுந் தமிழிலே
அவர்கள் இயற்றினார்களென்பதும், அந்நூல்கள் முதற் சங்
திறுதியில் உண்டான கடல்கோளில் அச்சங்கத்தின் ஏனை
தமிழ் நூல்களுடன் இறந்துபோயின வென்பதுவும் நமத
சைவ சமயாசாரியர்கள் திருவுள்ளக் கருத்தும் அதுவே யெ
பதுவுமாம். இக்கூற்று உண்மையா வென்பதை ஆராய்தலே
இவ்வுரை யெழுதுவதின் நோக்கம்.

௪. கா. சு. அவர்கள் தாம் எழுதப்புகுந்த நவீனக்
கொள்கைக்குத் தேவார திருவாசகமாதிய தமிழ் மறைகளிற்
ஆதாரங்களிருப்பதுபோல உலகினர்க்குக் காட்டவேண்டி, முத
லில் எழுதுவதாவது. அபர ஞானமாகிய உண்மை நூலறிவை
இறைவன் தவமிக்கார்க்கு உதவியருளி அன்னோர் வாயிலாக
உலகினர்க்கு அருணூல்களை நல்குமென்பது நமது திருநெறித்
தலைவர்களது திருவுள்ளக் கருத்து என்றதுவும், அறம் பொரு
ளின்பம் வீடடைதலாகிய இந்நான்கனையும் சிவபெருமான்
பண்டு அருந்தவர்க்கு உணர்வித்தருளினு னென்றதுவுமே.
இவற்றிற்குத் தமிழ் மறைகளில் மூன்று பிரமாணங்களிருப்
பதும்பால் மூன்று திருப்பாடல்களைக்காட்டி, இவ்வருளுரைக
ளால் இனிது விளங்குமென வெழுதியிருக்கின்றார். அப்
பாடல்களில் இவர் தங்கொள்கைக்குச் சாதகமானவை யென்று
கொண்ட பகுதிகளாவன.

க-வது அந்தணாளர்க் கறம்பொரு ளின்பம்வீடு மொழிந்த
வாயான் முக்கணாதி.—சம்பந்தர்.

உ-வது ஞானிழலொண் கழலிரண்டு முப்பொழு தேத்திய
நாலவர்க்கொளிநெறி காட்டினை.—சம்பந்தர்.

௩-வது அருந்தவருக் காலின்கீ ழறமுதலா நான்கனையு
மிருந்தவருக்கருளுமது வெனக்கறிய வியம்பேடீ.

— திருவாசகம்

மேற்காட்டிய மூன்று மேற்கோள்களினும் இறைவனிடம் அறமாதியவைகேட்ட அருந்தவர் நால்வர், உலகினர்க்கு அருணூல்களை நல்கினரென்ற பொருள் சற்றுங் காணப்படவில்லை யென்பது யாவரு மெளிதில் அறியக்கூடியதாயிருக்கின்றது. அந்தணாளர்களாகிய நால்வர்க்கும் அறமாதியவற்றைச் சிவபிரானருளினரென்பது, மேற்காட்டிய க, உ, பிரமாணங்களா லறியக்கிடக்கின்றது. இறைவன், அறமாதியவற்றைத் தானே மொழிந்தார், வேதம், அங்கம் ஆகியவைகளை மொழிந்தாரென இம்மேற்கோள்கள் கூறவில்லையேயெனின், "ஆலதன் கீழிருந்து நால்வர்க் கறம் பொருள் வீடின்ப மாறங்கம் வேதந் தெரித்தானை" யென்று தமிழ் மறை மற்றோரிடத்திற் கூறுநின்றதையும் சாமியப்படுத்தி அன்பர் காட்டிய மேற்கோள்களுக்குப் பொருள்கொள்ளவேண்டுவதே முறைமை. ஏனெனின், கல்லாலடியிலிருந்து இறைவன் நால்வர்க்கு உபதேசித்த ஒரு சரித்திரத்தையே தொகுத்தும் விரித்தும் செய்யுளமைதிக்குத் தக்கவாறு பெருமக்கள், அவர்களருளிய தமிழ் மறையில் ஆங்காங்குக் கூறியிருக்கின்றார்கள். "சொல்லாய் கல்லாலா" "கல்லாணிழல் மேயவனே" என்பனவாதிய தமிழ் மறைகளில் காணப்படுகின்ற இவ்வாக்கியங்களுக்குப் பொருள் விரித்துரைக்குங்கால் கல்லாலடியில் நால்வர்க்கு இறைவன் வேதமாதியவற்றையும் அவைகளின் பொருளையும் உணர்த்தின சரித்திரத்தை விரித்துரைக்கவேண்டுவதே முறைமையா யிருக்கின்றது. நண்பர் காட்டிய இரண்டாவது மேற்கோளில் இறைவன் ஒளி நெறி காட்டினரென அருளப்பட்டிருக்கின்றது. இவ்வாக்கியத்திற்கு நண்பர் பின்னுங் கண்ட விசேட உரையாவது; "உலகப் படைப்பிற்குப் பின் இறைவன் உலகர்க்கு அறிவுறுத்து மருணூ லருளின னென்றுரைக்கு மிடத்துள்ள நுண்மை நோக்கற்பாலது" என்பதே. நுண்மை யின்னதென விளக்கிக் காட்டினரில்லை. "ஒருருவாயினை மானாங்காரத் தீரியல்பா யொருவிண் முதல் பூதலம் ஒன்றிய விருசுடரும்பர்கள் பிறவும் படைத்தளித்தழிப்ப மும்மூர்த்திகளாயினை, யிருவரோடொருவனாகி நின்றனை, ஓரானீழலொண் கழலிரண்டும் முப்பொழுதேத்திய நால்வர்க் கொளிநெறி காட்டினை, நாட்டமூன்றாகக் கோட்டினை, யிருநதியரவமோ டொருமதி சூடினை," என்பனவாதிய அருண்மொழிகளின் உண்மைப்பொருள், சிவபெருமான் ஒருவரே முழுமுதற் கடவுளெனவும், அவரிடமிருந்தே சிருட்டித் திதி சங்கார காரண கர்த்தர்கள் தோன்றினர்களெனவும், அம் முழுமுதற் கடவுள் அடியார்கள் பொருட்டுச் செய்த பற்பல திருவிளையாட்டுகள் இது இதுவெனச்சுட்டிக் கூறியிருப்பதுமே யெனவும் மேலோர் கூறுவர்

உலகப்படைப்பிற்குப்பின் இறைவன் உலகர்க்கு அறிவுறுத்த
அருணூலருளினனெனும் பொருளைத் திருவெழுகூற்றிருக்கை
யில் எம்மொழியும் எச்சொற்றொடரும் காணவில்லை யென்பதுதெ
தேற்றம். "நால்வர்க்கொளிநெறி காட்டினை" யென்ற சொ
ற்றொடரினும் அப்பொருளையேற்ற எவ்வகையினும் முடியாது
இவ்வரிய சொற்றொடருக்கு உரிய பொருளாவது. நமது
சைவத் திருமுறைகளிற் பற்பல விடங்களிலும் கல்லாலடியில்
இறைவன் நால்வருக்கு அறமாகிய பொருள்களை, அல்லது
வேதத்தை, அல்லது அவ்விரண்டையும், அறங்கிரகித்தானென
அருளியபோதெல்லாம், அருளினன், சொன்னான், மொழி
தான் எனக்கூறப்பட்டிருக்க இந்த ஒரு செய்யுளில்மட்டும்
"ஒளிநெறி காட்டினை" யென அருளப்பட்டிருப்பதை நோக்கு
மிடத்து இத்தேவாரப்பகுதியின் பொருள் நம்மவர் கொண்ட
தல்லவென்பதே நிச்சயம். ஒளி என்ற சொல் சிவஞானத்தைக்
குறிக்கும். ஒளிநெறி என்றால் சன்மார்க்கம். அதாவது சிவ
ஞானத்தால் சிவத்தோடு அத்துவிதமாயிசையும் நெறியெனப்
பொருள்தரும். அது, "சன்மார்க்கஞ் சகலகலை புராணம்
வேதம்" என்னுஞ் சித்தியார் திருவிருத்தத்தானுமுணரக்
கிடக்கின்றது. 'தாயுமான சுவாமிகளும் இக்கருத்துடைய
ராயே "அன்று நால்வருக்கும் ஒளிநெறிகாட்டும் அன்புடைச்
சோதியே" என அப்பதங்களையே அப்படியே யெடுத்தாண்டி
ருத்தலும் காண்க. ஆதலால் ஒளிநெறிகாட்டினையென்றால்
வேதங்களையும் உபநிடதங்களையும் பன்னெடுங்காலம் ஓதியுங்
கேட்டும் மனம் ஒருமைப்பட்டுச் சிவஞானப்பேறு அடையாத
வராகிய நால்வரும், மற்றுமோர்முறை சிவபிரானை வணங்கிப்
பிரார்த்திக்க அப்பெருமான் கல்லாலமரத்தடியிலெழுந்தருளி
மௌனமுற்றுச் சின்முத்திரையைக் காட்டி அந்நால்வருக்கும்
சிவஞான முதிப்பித்ததையே விளக்குமென அறியவேண்டும்.
கந்தபுராணம் மேருப்படலம். கஉ-வது செய்யுள், "இருவரு
முணராவண்ணலேன வெள்ளியிறியாமை, ஒரிறையனந்
கோடி திளைத்திடு முரத்திற் சீர்கொள், கரதல மொன்று
சேர்த்தி மோனமுத்திரையைக் காட்டி, யொருகணஞ்செ
லொன்றின்றி யோகுசெய்வாரினுற்றான்" என்பதனானுமறிய
லாம். தாயுமானப் பெருந்தகையா ரெத்தன்மையரெனில்
சைவத்திருமுறைகளை யெழுத்தெழுத்தாய் ஆராய்ந்து கற்று
ஆலநிழலமர்ந்த அழகனை உபாசித்து அதன்பயனாக நிட்டை
கூடிச் சிவானந்தத்தை யுண்டுதெவிட்டி அதன்காரணமாய
நந்தேவராதிகட்குப் பாடியம் போன்ற திருப் பாடல்களை
அருளிய சைவசித்தாந்த மூர்த்தி. அதனாலன்றோ "மூவ
சொலுந் தமிழ்கேட்குந் திருச்செவிக்கு மூடனேன் புலம்பி

சொல் முற்றுமோதான்" என்றருளினார். இவ் ஒளிநெறி காட்டுதலை அப்பெருந்தகையார் பன்முறையும் விதந்தோதிய தன்மையைக் "கல்லாலின்நீழற்றனிலொரு நால்வர்க்குங் கடவுணீ யுணர்த்துவதுங் கைகாட்டென்றால்" என்பதும், "நால்வர்க் கன்றாலின் கீழிருந்து மோன ஞானமமைத்த சின் முத்திரைக் கடலே" என்பதுமாகிய அவர்கள் பாடல்களின் பகுதிகள் நன்குகாட்டும். இவ்வாராய்ச்சியால், அபரஞானமாகிய உண்மை நூலறிவை, இறைவன் தவமிக்கார்க்கு உதவியருளி அன்னோர் வாயிலாக உலகினர்க்கு அருணூல்களை நல்குமென் பது நமது திருநெறித்தலைவர்களது திருவுள்ளக் கருத்து எனவும், அறம்பொருளின்பம் வீடடைதலாகிய விந்நான்கனையும் சிவபெருமான் பண்டு அருந்தவர்க்குணர்வித் தருளினனெனவும் நம் நண்பர் கட்டிய கட்டு பட்டப்பகலை யிரவென்று கூறிடும் பாதகரே எனப் பட்டினத்தடிகள் தொகுத்த கட்டுரைக்கு இலக்கியமாகின்றது. நிற்க;

ரு. நம்மவர் எழுதியிருக்கிற திருநான்மறை விளக்கத்தின்கொள்கைக்குச் சிவபிரான் கல்லாலமரத்தடியில்நால்வர்க்கு அறமாதிய நான்கையும் வேதத்தையும் வேதப்பொருளையும் ஆறு அங்கங்களையும் அருளினனென்று, தமிழ்த் திருமுறையிற் காணப்படும் பகுதிகளிற் சிலவற்றைப் பிரமாணம்போல் ஆங்காங்குக் காட்டியிருக்கின்றார். அத்தகைய பகுதிகளெல்லாவற்றையும் புத்தகங்களிற் றேடிக் கண்டுபிடிக்குஞ் சிரமத்தை இவ்வாராய்ச்சி உரையை வாசிப்போர் அடையாதிருக்கும் பொருட்டுக் கூடியவரை அவைகளை ஒருங்கு திரட்டி இங்கு வரைகின்றேன்.

**சம்பந்தர்.**

க. அணிபெறு வடமர நிழலினி லமர் வொடு மடியிணை யிருவர்கள்.
பணிதர வறநெறி மறையொடு மருளிய பரனுறை விடம்......திரு .மிழலையே.

உ. ஆலின்கீழறமோர் நால்வர்க் கருளியனலது வாடுமெம் மடிகள்......
பாம்புர நன்னகராரே.

ங. சைவவேடந்தா னினைந்தைம்புலனும் அழிந்த சிந்தை யந்தணாளர்க்
கறம் பொருள் வீடின்ப மொழிந்தவாயான் முக்கணுடைமேயது
முதுகுன்றே.

ச. ஓரானீழலொண் கலிரண்டு முப்பொழு தேத்திய நால்வர்க் கொளி
நெறி காட்டினை.

ரு. அறங்கிளரு நால்வேத மாலின் கீழிருந்தருளி .....மூதுகுன்றமே.

சா. எரிசையும் வடவாலின் கீழிருந் தங் கீரிருவர்க் கிரங்கிநின்று நேரிய
னுன் மறைப்பொருளை யுரைத்தொளிசேர் நெறியளித்தோனின்ற
கோயில் மிழலையாமே.

எ. பண்டிருக் கொருநால்வர்க்கு நீருரை செய்ததே. (திருவான்மியூர்)

அ. பண்டாலி னிழலானைப் பரஞ்சோதியை. (கோழம்பம்)

கல்லாலினீழலிற் கலந்து தோன்றும் கவின்மறையோர்
நால்வர்க்கு நெறிகளன்று—சொல்லாகச் சொல்லியவா
தோன்றுந் தோன்றும் (பூவணம்)
வேதநான்குங் கல்லாலினீழற் கீழறங் கண்டானை (நள்ளாறு)
கல்லாலின் கீழானை (நாகைக்காரோணம்)
பொய்யுரையா மறைநால்வர் விண்ணோர்க் கென்றும்
வேதத்தை விரிப்பதற்கு முன்னோ பின்னோ (ஆரூர்)
ஆலின்கீழ் நால்வர்க் கறத்தான் கண்டாய் (ஷை)
அன்றாலின் கீழிருந் தங்கறஞ் சொன்னானை (மிழலை)
ஆலதன் கீழிருந்து நால்வர்க் கறம்பொருள் வீடின்ப
மாறங்கம் வேதந்தெரித்தானை (நாகேச்சரம்)
ஆலதன் கீழற நால்வர்க் கருள்செய்தானை (நாரையூர்)

## சுந்தரமூர்த்திநாயனார்.

மறைநான்குங் கல்லானிழற் கீழ்ப்பன்னிய வெங்கள்பிரான்
பழமண்ணிப் படிக்கரையே
ஆலக்கோயில் கல்லாலநிழற் கீழறங்களுரைத்த அம்மானே
(கச்சூர் ஆலக்கோயில்)
சொல்லாய் கல்லாலா (ஊர்த்தொகை)
காது பொத்துரைக் கின்னர ருழுவை
கடிக்கும் பன்னகம் பிடிப்ப குஞ்சியங்,
கோதின் மாதவர் குழுவுடன் கேட்பக்,
கோலவா னிழற் கீழறம் பகர,
ஏதஞ்செய்தவ ரெய்திய வின்பமியானுங் கேட்டு
நின் னிணையடி யடைந்தேன் (திருநின்றியூர்)
நால்வர்க்காலின் கீழுரைத்த அறவனை (நள்ளாறு
அருந்தவமா முனிவர்க்கருளாகியோ யாலதன் கீழ், இருந்தறமே
புரிதற்கியல்பாகிய தென்னவனெனலாம் (நாகேச்சரம்)

## மாணிக்கவாசகர்.

நன்றாக நால்வர்க்கு நான்மறையி னுட்பொருளை
யன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் காணேடீ.
அருந்தவருக் காலின்கீழ் அறமுதலா நான்கனையு
மிருந்தவருக் கருளுமது வெனக்கறிய வியம்பேடீ
அன்றால நிழற்கீ ழருமறைக டானருளி

## திருமாளிகைத் தேவர்.

அறம்பல திறங்கண் டருந்தவர்க் கரசாயாலின்கீழிருந்த வம்பலவா

## கருவூர்த்தேவர்.

முனிவர் தம்மொடு ஆனிழற்கீழ் முறைதெரிந்தோ ருடம்பினராம்

## நக்கீரர்.

ஆலநீழலன் றிருந்தறநெறி நால்வர் கேட்க நன்கினி துரைத்தனை
ஆலின் கீழிருந் தறநெறி யருளியும்
முத்தீ நான்மறை யைம்புல னடக்கிய
வறுதொழிலாளர்க் குறுதிபயந்தனை

௫௬. கொடுத்தமைத்த நான்மாலை கொண்டவனித்து
நால்வர்க்கன் றனிழற்கீழ் வாண்மாலையாரும்
வகையருளித், தோண்மாலை. விட்டிலங்கத் தெய்வகணமே
நோக்கி வியந்தருண, மெட்டிலங்க வைத்தவிறல் போற்றி.

---

இனித், தாயுமானப் பெருந்தகையார் தமிழ்மறைக்குப் பாடியம்போன்ற அருளிய திருப்பாடல்களிலும் கல்லாலடியில் இறைவன் நால்வர்க்கருளிச் செய்தமையைப் பன்னிப் பன்னிப் பற்பலவிடங்களில் அருளியிருப்பவைகளும் ஆராய்ச்சிக்குரியனவாயிருப்பதால் அப்பகுதிகளிற் சில அடியிற் காட்டப்படுகின்றன.

௫௭. திருமருவு கல்லாலடிக்கீழும் வளர்கின்ற சித்தாந்த முத்திமுதலே
௫௮. எந்தை வடவாற் பரமகுருவாழ்க
௫௯. சொரூப சாக்ஷாத்கார அனுபூதி அனுகூலமாம் கற்பனை
யறக்காண முக்கணுடன் வட நீழற் கண்ணூடிருந்த குருவே.
௬௦. நால்வருக் கறமாதி பொருளுரைப் பதின்
பாலின் மூகமாகி வடவாலிருக்கின்ற செல்வமே.
௬௧. சாதக மோனத்திலென்ன வடவானீழல் தண்ணருட்
சந்திரமௌலி தடக்கைக்கேற்க வேதக சின்மாத்திரமா
யெம்மனோர்க்கும் வெளியாக வந்த வொன்றே.
௬௨. ஆலடியிற் பரமகுரு வாழி வாழி
௬௩. ஆலடியிற் பரமமான, நாதனொருதா
மூலகம் பார்க்கவிச்சை நண்ணுதே
௬௪. அந்தணர் நாலவர்காண அருட்குருவாகி வந்த வெந்தையே
௬௫. நால்வர்க்கன் றாலின் கீழிருந்து மோனஞான
மமைத்த சின்முத்திரைக்கடலே
௬௬. படியிருளகலச் சின்மயம் பழுத்த பசுங்கொம்பை
யடக்கியோர் கல்லா லடியிலே யிருந்து வானந்த வடிவே.
௬௭. அன்று நால்வருக்கு மௌனி நெறிகாட்டு மன்புடைச் சோதியே
௬௮. கல்லாலின் கீழிருந்த செக்கர்மேனிக் கற்பகமே
௬௯. என்றுந் தண்ணருள்கூர் கோலம் படைத்துக்
கல்லாலடிக் கீழ்வளருங்கோ
௭௦. உள்ளபடி கல்லாலின்கீழிருந்து கற்பித்தா னொருவசன
மெல்லாரு மீடேறவே
௭௧. கல்லாலினீழறனிலொரு நால்வர்க்குங் கடவுணீ
யுணர்த்துவதுங் கைகாட்டென்றால்
௭௨. கற்றலுங் கேட்டலுந்தானே யேதுக்காகக் கடபடமென்
றுருட்டுதற்கோ கல்லாலெம்மான் குற்றமறக் கை காட்டுங்
கருத்தைக்கண்டு குணங்குறியற் றின்ப நிட்டை கூடவன்றோ
௭௩. ஆரணமாகம மூலமெல்லாமுணர்த்த அருண்மவுன
காரணமூலங் கல்லாலடிக்கே யுண்டு

எச. துங்கமிகு பக்குவச்சனகன்முதல் முனிவோர்கடொழு தருகில்
வீற்றிருப்பச் சொல்லரிய நெறியை யொரு சொல்லாலுணர்த்
திடிய சொரூபானுபூதி காட்டிச் செங்கமல பீடமேற்கல்லா
லடிக்குள் வளர் சித்தாந்தமுத்தி முதலே சிரகிரிவிளங்குவரு
தட்சிணாமூர்த்தியே

எரு. வடநீழலூடுவளர். சநகனாதி முனிவோர்கடம் சொன்
மயக்கமது தீர அங்கைகொடு மோன ஞானமதுணர்த்தியே,
தென்முகத்தின் முகமாயிருந்த கொலுவெம் முகத்திலும்
வணங்குவேன்

---

கூ. நம்சமயாசாரியர்களும் அருட்கவி பாடியோரும், சிவபிரான் கல்லாலடியில் நால்வருக்கு உபதேசித்த முறைமையை எவ்விதமாய்ப் போற்றித் துதித்து இருக்கின்றார்களென்னும் வாய்மை, மேலே திரட்டிக் காட்டியிருக்கின்ற அவர்கள் அருண்மொழியால் விளங்கும்—ஒரு சமயம் (கூ) கல்லாணிழல் மேயவனே யென்றும், மற்றோர் சமயம் (யஅ) அன்றாலின் கீழிருந்தங் கறம்புரிந்த வருளாளர், என்றும், மற்றோரிடத்தில் (உஅ) ஆலத்தார் நிழலில்லறம் நால்வர்க்குக் கோலத்தாலுரை செய்தவன் என்றும், பின்னுமோரிடத்தில் (ருக) ஆலநிழலமர்ந்த அழகனார் என்றும், பின்னுமோரிடத்தில் (சo) ஆலதன் கீழிருந்து நால்வர்க்கறம்பொருள் வீடின்ப மாறங்கம் வேதந் தெரித்தானை என்றும், மற்றும் (சச) சொல்லாய் கல்லாலாவென்றும், மற்றும் (ருரு) முக்கீநான்மறை ஐம்புலன் அடக்கிய அறுதொழிலாளர்க்குறுதி பயந்தனை யென்றும், (ருகூ) தொடுத்தமைத்த, நாண்மாலை கொண்டணிந்த நால்வர்க்கன்றானிழற்கீழ், வாண்மாலையாகும் வகையருளித், தோண்மாலை, விட்டிலங்கத்தெக்கணமே நோக்கி வியந்தருணை, மெட்டிலங்கவைத்த விறல்போற்றி என்றும், சுருக்கமாய்த் தொகுத்தும், விரிவாய் வகைப்படுத்தியும், அருளிச்செய்திருக்கின்றார்கள். தாயுமானப் பெருந்தகையாரோ அவ்வாறேவாடமையாமல் நால்வர் பெயர்களையுமறிவித்துங் கூறினார்கள். மேற்காட்டிய அருண்மொழிப் பகுதிகளிளெல்லாம் ஓர் சரித்திரத்தை யிவ்வித பாகுபாட்டுடன் கூறினார்களேயன்றி வெவ்வேறு சரித்திரங்களை யல்லவென்றும் மேற்காட்டிய க முதல் எரு வரையுள்ள அருண்மொழிப்பகுதிகளும் விளக்கும். சிவபிரானுக்கு ஒருநாம மோருருவமொன்றுமிலார், அவருக்கமைந்திய நாமங்களெல்லாம் அடியார்கட்கு அவர் சுகளீகரித்துத் தோன்றி அருளிய காரணம் பற்றியே. இக்காரணம்பற்றியே, சிவபிரானுக்கு ஆலமர் கடவுள் என்னும் ஒரு நாமம் திவாகரம் நிகண்டு ஆசிரியர் காரணப்பெயராகவே கூறியுள்ளார்கள். திவாகர நிகண்டு தோன்றுதற்கு

முன்னரே யிருந்த பல சொற்களைத் தொகுத்து இந்நூ களின் ஆசிரியர் அந்நூல்கள் செய்தார்களேயன்றி அவர்கள உற்பத்திசெய்த மொழி ஒன்றுமில்லை. கைலையினின்று மெழு தருளி நம் தமிழ் நாட்டில் ௩௲ ஆண்டு சிவயோகத்தில் வீ றிருந்த திருமூலரும் "விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்ப சூழ்ந்து—புரந்த கல்லாணிழற் புண்ணியன் சொன்ன—ப தன்னையோ ராப்பழி மொழியாளர்—உரந்தன்மைய வொருங்கி நின்றார்களே." எனவும் அருளியிருப்பதை, நோ குக. இத்திருமந்திரத்தில் மெய்ப்பதி சூழ்ந்து என்றதனா அழியாத பதியாகிய நொடித்தான் மலையில் கல்லாணிழலி சிவபிரான் நால்வருக்கும் அருளியதாகவே நன்கு விளங்குகி றது. சிவபிரான் சகள வடிவங்கொண்டு அடியார்கட்கருளி முகூர்த்தங்கள் இருபத்தைந்தும் பிறவுமாம். அவற்றினொன் தக்ஷிணாமூர்த்தி மூர்த்தம். இம்மூர்த்திதான் நால்வர்க்கருளி வரென மேற்காட்டிய (௬௯) நக்கீரதேவர் வாக்கால் நன் விளங்கும். சமயாசாரியர்கள் நால்வர் வாக்கிலும் பிறந்த மே காட்டிய பகுதிகளில் இம்மூர்த்திகள் பெயரை வெளிப்பட சொன்னார்களில்லையேனும் குறிப்பாய் சிற்சில பகுதிகளி காட்டியிருக்கின்றார்கள். ௨அ ஆலத்தார் நிழலில்லறம் நா வர்க்குக் கோலத்தாலுரை செய்தவன் என்றதிலுள்ள கோல என்ற பதமும் ௬௧ ஆலநீழலமர்ந்த அழகனார் என்றதிலுள்ள அழகனார் என்ற பதமும் தக்ஷிணாமூர்த்திக் கடவுளை குறிக்கும். தாயுமானப் பெருந்தகையாரும் ௬௬—என்றுந் தன் ணருள்கூர் கோலம் படைத்துக் கல்லாலடிக்கீழ் வளருங்கோ என்றார். சம்பந்தரும் (௯௭) ஆலநீழலிருந்து அறஞ்சொன்ன அழகனே, என்றும், (௬௧) அப்பரும் அவ்வாறே அழகனா என்றும் கூறியது, தட்சிணாமூர்த்தி வடிவம், முப்பத்திரண் இலக்கணங்களும் முற்றப்பொருந்தி அதி யௌவன பருவ முடையதாகித் தெரிசிப்போர்கள் வேறு செயலற்று அவரையே நோக்கிய வண்ணமாக இருக்கும் பொருட்டுக்கொண்ட கோல மென்பதை யுணர்த்தற்கேயாம்.

எ. திருவிளையாடற் புராணம், வேதத்துக்குப் பொரு ளருளிச்செய்த படலம், (௬௬-வது செய்யுள் "மானமுனிவோ ரதிசயிப்பவடநீழன்,மோனவடிவாகிய முதற்குரவனெண்ணான் கூனமிலிலக்கண வுறுப்பகவை நாலுன், கானமொருகா மறையோன் வடிவமாகி" என்ற செய்யுளால் அஃது அறி லாம். ஆனால் சமயாசாரியர்கள் ஏன் தட்சிணாமூர்த்தமெ வெளிப்படையாகக் கூறிற்றிலா எனின், அவ்வாறு கூறுவது அவர்கள் வழக்கன்று. தக்கனது வேள்வி தகர்த்த சரித்திர பன்முறை யெடுத்துக்கூறியுள்ளார்கள். தக்கனது யாகத்தை,

இறுத்தவர் வீரபத்திரக்கடவுள். அவர் பெயரை யாண்டுங் கூறிற்றிலர். பிரமன் சிரங்கொய்தது வடுகமூர்த்தியவதாரம். இம்மூர்த்தி பெயரும் கூறிற்றிலர். இவை போல்வன பல நந்திருமுறையிற் காணலாம். இவைபோலவே தட்சிணாமூர்த்திக் கடவுள் பெயரையும் வெளிப்படையாக மொழிந்திலர். ஏனெனில் இம்மூர்த்தங்களெல்லாம் சிவபேதமே ஆதலால். சமயாசாரியர் மூவரும் சிவாலயங்கடோறும் சென்று தெரிசித்துத் தேவாரப் பாக்களருளிய அவர்களது சரித்திரம் கூறும் பெரிய புராணத்தில் இவர்கள் சிவலிங்க மூர்த்தத்தைத் தவிர வேறு மூர்த்தங்களை வணங்கியதாக வெங்காவது கூறப்பட்டிருக்கின்றதா? இல்லை. ஏனென்றால் மேற்சொன்ன காரணம்பற்றியே. நமது சிவாலயங்களிளெல்லாம் தட்சிணாமூர்த்தத்தை, நால்வர்க்கு அருளின முறையோடு கல்லால விருட்சத்துடன் அமைத்தும், நால்வரையும் ஒருங்கே அம்மூர்த்தத்தின் கீழ் அமைத்தும் எழுந்தருளச்செய்து அபிஷேகாதி நிவேதனங்கள் நடத்தப்பட்டு வருகின்றன. உபநிஷத்துக்கள் ௧0அ-ல் தக்ஷிணாமூர்த்தி உபநிஷத்து எனத் தனியா யொரு உபநிஷத்து இம்மூர்த்திக்குரியதாகவிருக்கின்றது.

நால்வர்க்கு உபதேசித்த பரம்பரையான முறை இவ்வாறிருக்க, நம்பிள்ளையோ மேற்காட்டிய பிரமாணங்களில் சிலவற்றைப் பொறுக்கி யெடுத்து அவற்றிற்குத் தம் மனம் போல் விபரீதப்பொருள் கற்பித்து விவாதத் திருநான்மறை விளக்க மெழுதியிருக்கின்றார். அதுமட்டோ, தமிழ் வேதம் என்று மேன்மை பூண்ட நம்பெருமக்கள் திருவாக்காகிய மூலப் பாசுர மொழிகளையும் அவர் கற்பனைக்கு இணக்கமாகத் திருத்தியும் பொருள் கொண்டார். அவற்றைப் பின்னர் சமயம் வந்துழி ஆங்காங்குக் காட்டுவோம்—இனி, மேலாராய்வாம்.

அ. மேலும் இவர் சொல்வதாவது,

"இந்நால்வருக்கும் சிவபெருமான் அறம் பகர்ந்தனனென்பது."

"பண்டு நால்வருக் கறமுரைத்தருளிப் பல்லுலகினிலுயிர் வாழ்க்கை கண்ட நாதனார்."

"முறைத்திறமுறப் பொருடெரிந்து முனிவர்க்கருளி யால நிழல் வாய், மறைத்திற மறத்தொகுதி கண்டு சமயங்களை வகுத்தவனிடம்" என்னுந் தேவாரங்களால் அறியக் கிடக்கின்றது" என்று எழுதியிருக்கின்றார். அறமென்று சொன்னதனாலேயே புருடார்த்தம் நான்கு மடங்குமென்பதைப் பல பிரமாணங்களுடன் நம்மவர் விரித்துக் காட்டியிருக்கின்றார். அவ்வுரை எல்லாருக்கு முடன்பாடே. ஆனால், சிவபெருமான்,

நால்வருக்கும் அறம் பகர்ந்தனனென்று கூறி, அதற்கு வேத அங்கம், என்னும் மொழிகள் காணப்படாத மேற்காட்டிய பிரமாணங்களை இவர் உதகரித்திருப்பது, சிவபெருமான் நான் மறைகளையும் ஆறங்கத்தையும் சொன்மாலையாக மொழியவில்லை அறமாதிய இன்னவையென மொழிந்தார். அவற்றைக்கேட்ட நால்வரும் அந்நூல்களை இயற்றினார்கள் என்னும் தங்கொள் கைக்கு ஓர் ஆதாரமாக்குவதற்கே. "ஆலதன் கீழிருந்து நால் வர்க்கறம்பொருள் வீடின்பம் வேதந்தெரித்தானை" என்று "அணிபெறுவடமர நிழலினி லமர்வொடு மடியிணை யிருவர்கள் பணிதர வறநெறிமறையொடு மருளியபரன்," என்னுந் தமிழ் மறைப்பகுதிகளால், நாற்பொருள்களுடன் மறையையும் சிவ பிரானருளினாரென்பது நன்றாய் வெளியாவதால், விரித்துக் கூறும் இவ்வாக்கியங்களின் பொருள் பிறழாது, மேலே இவர் காட்டிய தொகுத்துக் கூறிய பிரமாண வாக்கியங்களுக்கும் பொருள் கொள்வதே முறை. "கல்லானிழல் மேயவனே," "ஆல நிழலுகந்த திருக்கையே" எனவும் நம்பெருமக்கள் மிக வுஞ் சுருக்கமாய் அருளியிருக்கின்றார்கள். இவ்வாக்கியங் களுக்கு விரித்துப் பொருள் கொள்ளுமிடத்து, நால்வருக்கும் கல்லாலடியில் வேதங்களையும், வேதப் பொருள்களையும், ஆறங் கத்தையும் அருளிச்செய்த அவதரத்தைக்கூற வெழுந்த வாக் கியங்கள் இவையென்றல்லவோ கூறவேண்டும். ஆதலால் அற மாதிய நாற்பொருளை மட்டும் நால்வருக்குச் சிவபெருமான் அருளினான் எனுங் கொள்கையைத் தாபித்தற்கு நந்தி முறைகள் இடங்கொடா. நிற்க;

௬. மேலும் நம்மவர் சொல்வதாவது, "இங்ஙனம் இவ "வர் மொழிந்த உறுதிப் பொருள் நான்கனையும் கூறு "நூல்கள் எழுந்தனவா? அவையாவை என்னும் வினாக்கட்கு "பின்வரும் திருமுறைப் பகுதிகளின் வைத்துணரப்படும்". "மறைநான்கும் கல்லானிழற் கீழ்ப்பன்னிய வெங்கள் பிரா "பழமண்ணிப் படிக்கரையே"
"அறங்கிளரும் நால்வேதமாலின் கீழிருந்தருளி"
"வேதம் நான்குங் கல்லானிழற் கீழறங்கண்டானை"
"நூலடைந்த கொள்கையாலே நின்னடி கூடுதற்கு
"மாலடைந்தநால்வர்கேட்க நல்கிய நல்லறத்தை
"ஆலடைந்த நிழன்மேவி யருமறை சொன்னதென்னே"
"என்றமையால் அந்நாற்பொருளும் கூறும் நூல் அருமறை "யென்பதும் அவை நான்கென்பதும் புலப்படும்" என்று ந மவர் எழுதியிருக்கின்றார். மேலே காட்டியபடி நூல்கள் எழு தனவா? என்று எழுதிக்கொண்டார். நூல்கள் தாமே எழு ந்தசு உறுப்புகள் எல்லாம் நன்கு அமையப்பெற்ற ஒரு

இயற்றினலன்றி ஏழா. இவர் எழுதியிருப்பது பட்டாசாரியன் மதக்கொள்கைபோலும். மேலே இவராற் காட்டப்பட்ட பிரமாண வாக்கியங்களெல்லாம் சிவபெருமான் கல்லாலடியிலிருந்து நான்கு வேதங்களையும் அவற்றின் பொருளாய அறமாதிய நான்கையும் நால்வருக்குந் தெரித்தானென்று விளக்குகின்றமையால் இவரது கொள்கைக்கு மேற்கோள்கள் ஒரு சாதகமுஞ் செய்தில. நிற்க, மேல் ஆராய்வாம்.

கo. இனி, இவர் கூறுவதாவது "அருமறை நான்காய
"தற்குக் காரணம் நால்வர்க்கும் அவரவர் பக்குவத்திற்கேற்
"பக் கடவுளுணர்த்த அவர்கள் செய்த நூல் நான்காயினமையே
"யாம். அது "நாலாய மறைக்கிறைவனுயினனை"
"விரித்தானை வெவ்வேறு வேதங்கள்"
"விரித்தவன் வேதங்கள் வேறு வேறு
"தெரித்தவன் உறைவிடம் திருவலமே"
"என்றமையால் விளங்கும்" என நம்மவர் எழுதிக் காட்டினர். மேற்காட்டிய பிரமாண வாக்கியங்களாற் சிவபெருமானே நான்குவேதங்களையும் இயற்றிய கருத்தாவென விளங்குகிறதேயல்லாமல் நால்வர்கள் செய்ததில்லை யெனத்தாபிதமாகிறது. நால்வர் என்றமொழியே மேற்காட்டிய பிரமாணங்களில் இல்லை. இன்னமும் அவரவர் பக்குவத்திற்கேற்பக் கடவுளுணர்த்தினதாக வெழுதியிருக்கின்றார். நால்வர்களும் ஒருவருக்கொருவர் தாரதம்மியமான பக்குவமுடையவர்களென்று இவருக்கு எவ்வாறு தெரிந்தது? இவருடைய தமிழ் முனிவர் நால்வரின் சரித்திரமுமில்லை, அவர்கள் செய்ததாகச் சொல்லும் நான்மறைகளும் முக்காலத்திலுங் காணப்படவில்லையே யென்று கூறுவார்க்கு இவர் விடுக்கும் கடல்கோளில் அழிந்தனவென்னும் விடைக்கு ஆதாரம் யாண்டுங் காணப்பட்டிலது. இவர் படைத்திட்டுக் கொண்ட வெற்றுரையை அறிஞர் ஒருபொருளாகக் கொள்ளார். மேற்காட்டிய பிரமாணங்களில் வேறு வேறு வேதங்கள் விரித்தவன் என்றதன் பொருள்; நான்கு கூறாய வேதங்களைச் சிவபிரான் அருளினரென்பதே; நிற்க, மேலாராய்வாம்.

கக. இனி, நம்மவர் சொல்வதாவது "நான்மறைக்கும் கருவி நூலாகிய ஆறும் அவற்றோடெழுந்தன வென்பது"

"ஆலதன் கீழிருந்து நால்வர்க்கு அறம்பொருளின்பம்
"வீடாறங்கம் தெரித்தானை" என்பதால் போதரும்" என்று எழுதியிருக்கின்றார். மேலேகாட்டியபடி, கருவி நூலாறும் அவற்றோடெழுந்தனவென்று சொன்னர். கருவிநூல் தானே எழவில்லை. மேற் பிரமாணத்தால் சிவபிரானே ஆறங்கங்களையும் அருளினன் என்பது விளங்குகின்றது. அன்றியும், நால்வருக்

கும் கல்லாலடியிற் சிவபிரான் அருளுதற்கு முன்னரே நான்கு வேதங்களும், ஆறங்கங்களும் சிவபிரானால் வெளியிடப்பட்டவையாகும்; அது "பங்கமில் பதினெட்டொடு நான்குணர்வுமாய் அங்கமாறுஞ் சொன்னவனுமையாறுடைய ... களே" என்ற தமிழ்மறையால் விளங்கும். நிற்க, மேலா... வாம்.

கல. இனி, திருநான்மறை விளக்க ஆசிரியர் இதுகாறும் பூடகமாய்க்கூறிவந்த அவர் கருத்தினைக் கொள்கையை இ... வெளிப்படையாய்க் காட்டுவாராயினர். அஃதாவது: இ...
"இம்மறைகளும் ஆறங்கங்களும் ஆலநிழலார் சொன்மாலையாக
"பொழிந்தருள அவற்றைக்கேட்ட நால்வரும் அச்சொல்...
"வாகவே உலகிற்கு ஈந்தனரா? அவ்வாறன்றி ஸ்ரீ ஆளுடையபி...
"ளையாரும், சொல்லின் மன்னரும் பிற்றைநாளில் பெரு...
"னிடம் நல்லுணர்வு பெற்றாங்கு ஆலின்கீழ் முனிவர் நால்வரு...
"இறைவன்வழித் தோன்றிய நல்லுணர்வினராய் அவன்பா...
"பொருள் கேட்டு நான்மறைகள் இயம்பினரா? அல்லது ஸ்ரீ
"சுந்தரமூர்த்திகட்கும் ஸ்ரீ சேக்கிழார் பெருமாற்கும் அ...
"யெடுத்துதவியாங்கு, முதல்வன், நால்வரும் உண்மை உண...
"மாறுணர்த்த ஒரோவொரு மொழியைப்பற்றிப் பொரு...
"ளனைத்தையுங்கண்டு பின்னர் நான்மறைகளையும் இயற்...
"அருளினரா? என்னும் ஐயப்பாடுகள் எழற்பாலன, ஆதலா...
"அவற்றிற்கு விடை ஈண்டு ஆயத்தக்கன." என்றெழுதி... கொண்டு அதற்குவிடை அவர்எழுதுவதாவது: முதற்கட்கூறிய கொள்கையையுடையார் "அங்கமும் வேதமுமோது நாவர்,"
"மறையோதி மங்கைபங்கா," "பன்னு நான்மறை பாட வல்லோனே," "பேசுவதுந் திருவாயான் மறை போலும்," "நான்மறையோடாறங்கஞ் சொன்னார் தாமே," "வேத மொழியர்"
"என்னும் அருள்மொழிகளைத் தமக்கு ஆதாரமாக உரைப்பர்,
"அவர் இவைகளில் ஓதுதல் பாடுதல் என்பதனால் பெறப்படுவது
"யாதெனஉய்த்துணரக்கடவர். இச்சொற்றொடர்கள் உருவகப்
"பொருள்கள் தருவனவே யன்றி நேர்பொருள் கொள்ளற்
"பாலனவல்ல" என்று எழுதியிருக்கின்றார். மேற்காட்டிய அவரது உரையின் பகுதியில் ஓதுதல், பாடுதல் என்னுஞ் சொற்களுக்கு மேற்கோள் காட்டுவார் போன்று அப்ப... மூர்த்திகளருளிய தனித் திருவிருக்கம், "பெருங்கடல்மூடி" என்னுந்தொடக்கத்ததாகிய திருப்பாட்டில் "எம்மிறை நல் வீணை வாசிக்குமே" என்பதற்குப் பொருள்கோடல் போலவே பொருள் கோடல் வேண்டும்" எனவும் எழுதியிருக்கின்றார். விளக்கம் எழுதவந்தவர் எம்மிறை நல் வீணை வாசிக்குமே என்ற சொற்றொடருக்குப் பொருள் இன்னதென விளக்கி

யெழுதிக்காட்டினாலல்லவோ இதற்குள்ள பொருள்போல மற்றதற்கும் பொருள் கொள்ளலாம். அதைப்போல இது, இதைப்போல அது என்றால், அது இது என்னுஞ் சொற்கள் இன்ன விஷயத்தில் ஒற்றுமையுடையதெனக் காண்டல் அரிதே. இவ்வாக்கியங்களுக்குத் தம்மனங்கொண்டவாறு வியாக்கியை எழுதிக்கொண்டு "இறைவன் சொன்மாலையாக "நூல் செய்யவேண்டிய அவசியமில்லை. அங்ஙனஞ் செய்ததா "கவுமில்லை" என்னும் முடிபுக்கு வந்தார்.

௧௩. இறைவன் வேதங்களையும் அங்கங்களையும் அருளினனென்பதை நம்மவர் எடுத்துக்காட்டிய மேற்கண்ட "அங்கமும் வேதமு மோது நாவர்", ஆதிய ௬ சொற்றொடர்களான்மட்டும் நம்பெருமக்கள் கூறினாரல்லர். நந்தமிழ்த் திருமுறைகளில் அவ்வாறு எண்ணிறந்த வாக்கியங்களுள. அவைகளை இயன்றவரை ஒருங்குசேர்த்து ஈங்கு எழுதிக்காட்டுவது இவ்வாராய்ச்சியை வாசிக்கும் பல நண்பர்களுக்கும் உண்மை உணர ஓர் ஏதுவாகும். ஆனதால் அவற்றைக் கீழே எழுதுவாம்.

## ஸ்ரீ ஞானசம்பந்தர்

௧. மறைகலந்த வொலி பாடலோ டாடலர் (பிரமபுரம்)
௨. பண்ணிலாவு மறைபாடலினான் (புகலூர்)
௩. மந்திரவேதங்களோது நாவர் (மருகல் செங்காட்டங்குடி)
௪. பாடல்மறை வல்லான் (வீரட்டானம்)
௫. பண்ணார் மறைபாட...... பரமன் ௸
௬. மறையுடையாய் (நெடுங்களம்)
௭. பண்ணினார் மறைபாடலனுடையவன் (கரவீரம்)
௮. பலவேதமங்கமாறு மறைநான்கவையுமானார் (சண்பை)
௯. வேதமோதி வெண்ணூல்பூண்டு வெள்ளையெருதேறிப்
பூதஞ்சூழப் பொலிய வருவார் (பழனம்)
௰. மறையின்னிசையார் (ஈங்கோய் மலை)
௧௧. பொய்யாமறை பாடல் புரிந்தான் (கோயில்)
௧௨. நால்வேதஞ்சொல்லார் கேண்மையார் (சீகாழி)
௧௩. பாடலனான்மறையன் (ஆரூர்)
௧௪. அங்கமூ நான்மறையு மருள்செய்தழகார்ந்த வஞ்சொன்,
மங்கையோர் கூறுடையான் (பாதாளேச்சுரம்)
௧௫. மறையுமோதுவர் (பராயத்துறை)
௧௬. வேதமெல்லா முறையால் விரித்தோத நின்ற ஒருவனார் ௸
௧௭. ஆறுநான்குஞ் சொன்னானுமையாறுடையையனே (ஐயாறு)
௧௮. பங்கமில் பதினெட்டொடு நான்குக் குணர்வுமா
யங்கமாறுஞ் சொன்னானுமையாறுடையையனே
௧௯. நான்மறையோடாறங்கம் வல்லானை (சீகாழி)
மறைகள்வேதம் விரித்தோதுவார் (ஏகம்பம்

௨௧. தூயவாய மறையோதிய வாயினை (ஏகம்ப

௨௨. முன்னொரு நான்மறையா றங்கம் பதியாமை
பண்ணிசையான பகர்வாரை (மணஞ்சே

௨௩. வேதமொடு வங்கமவையோதுங் கருத்தனை (கருப்பறியலூ

௨௪. ஓர் நால்வேதஞ் சொலச் சமைகாவல்லார் நீர் (தில்லைச்சிகா

௨௫. பண்ணமரு நான்மறையே பாடியாடல் பயில்கின்றீர் (நல்லூ

௨௬. சுருதிமறை நான்கான செம்மை தருவானை (சீகா

௨௭. வரிய மறையார் (கடவூர் மயான

௨௮. வினைமிகு வேதநான்கும் விரிவித்த நாவின் விடையான் (நனிபள்

௨௯. மதிநுதல் மங்கையோடு வடபாலிருந்து மறையோது
மெங்கள் பரமன் (கோளறுபதிகம்

௩௦. சாகையாயிர முடையார் சாமமு மோதுவதுடையார் (வாழ்கொளிபுத்தூ

௩௧. வேதந்தாம் பண்ணுதல் பொருள் பயந்தவர் (சிரபுர

௩௨. பண்ணுலாவிய மறையொலி நாவினர் (கீழ்வேளூ

௩௩. வேதநான்கும் பதினெட்டொடாறும் விரித்தார்க்கிடம் (கேதாரம்

௩௪. பாடினாய் மறையோடு பல்கீதமும் (கோயில்

௩௫. பாடினை யருமறை வரன்முறையால் (புகலி

௩௬. பன்னிய நான்மறை பாடியாடப் பலவூர்கள்போய் (புனல்வாயில்

௩௭. மறையோதியும் (கோட்டாறு

௩௮. தொகுத்தவனருமறை யங்கம் ஆகமம் வகுத்தவன் (விற்கோலம்

௩௯. அங்கமாறுஞ் சொன்ன அடிகள் (தேவன்குடி

௪௦. பாடினாருமறை (சக்கரப்பள்ளி)

௪௧. நான்மறைப் பாடலார் ஷை

௪௨. மறையணி நாவினான் மாமழபாடியே (மழபாடி)

௪௩. வேதம் விரித்தோதுவார் (பெரும்பாழி)

௪௪. அருமறையின் பொருள் பாடினார் (முதுகுன்றம்)

௪௫. விரித்தவன் றன்மறையை (பனந்தாள்)

௪௬. சொற் பிரிவிலாத மறைபாடி நடமாடுவார் (வேதிகுடி)

௪௭. ஓதி வாயதும் மறைகளே (வீழிமிழலை)

௪௮. மாமறைநாலுந் தம்பாட்டென்பர் (நல்லூர்ப்பெருமணம்)

௪௯. ஆனபாடலுகந்த திருக்கையே (திருவாலவாய்)

௫௦. பண்டிருக்கொருநால்வர்க்கு நீருரைசெய்ததே (திருவான்மியூர்)

௫௧. வேதநூல் பயில்கின்றது வாயிலே (ஆலவாய்)

௫௨. சாமநல்வேதனும் (திருப்புகலி)

௫௩. சாமவேதன் (பிரமபுரம்)

௫௪. தயங்குசோதி சாமவேதா (வலிவலம்)

௫௫. மெய்பயின்றவ ரிருக்கையே (வீழிமிழலை)

௫௬. சொல்லுள சொல்லு நால்வேதப் பாட்டினார்போலும் (பந்தணைநல்லூர்)

### அப்பமூர்த்திகள்

௫௭. மிகைவளர் வேதகீத முறையோடும் வல்ல
கறைகொண் மணிசெய்மிடறர் (சிவனெனுமோசை)

௫௮. விதிவிதி வேதகீத மொருபாடு மோதமொருபாடு
மெல்ல நகுமால் ஷை

ருகூ. நாலுகொலாமறை பாடினராமே—(விடந்தீர்த்தபதிகம்)
சுO. ஓதினார் வேதம் வாயால் (கோயில்)
சுக. பாடினார் சாமவேதம் பாடிய பாணியாலே ஆடினார் (திருவதிகை)
சுஉ. கூறினாரா றுநான்கும் ஷை
சுங. அங்கமும் வேதம் வைத்தார் (கழிப்பாலை)
சுச. தூய நான்மறைகளான்கும் பாடினாரொருவர் போலும் (திருப்பழனம்)

சுரு. ஆறுமோர் நான்குவேத மறமுரைத்தருளினானே (கோடிகா)
சுசா. மறையணி நாவினானை (பெருவேளூர்)
சுஎ. பாடினார் சாமவேதம் பைம்பொழிற் பழனமேயார் (ஆலங்காடு)
சுஅ. அரிய நான்மறை யோதிய நாவரோ (மறைக்காடு)
சுகூ. வேதமோதும் விரிசடை யண்ணலார் (இடைமருது)
எO. நல்லனைத்திகழ் நான்மறை யோதியை (வெண்ணி)
எக. அரிய நான்மறை யாறங்கமாயைந்து புரியன் (குடம்பந்துறை)
எஉ. பண்டு நான்மறையோதிய பாடலன் (புகலூர்)
எங. மன்னிநான்மறையோடு பலகீதமும்
பன்னினாவர்பாலைத் துறையரே (பாலைத்துறை)

எச. வேதநாயகன் வேதியர்நாயகன் (ஆதிபுராணம்)
எரு. மந்திரமு மறைப்பொருளு மானான்றன்னை (வீரட்டானம்)
எசா. சாமவேதக் கந்தருவம் விரும்புமே ஷை
எஎ. பாடுமே யொழியாமே நால்வேதமும் ஷை
எஅ. நான்மறையோ டாறங்கமானாய் போற்றி ஷை
எகூ. நான்மறையோ டாறங்கம் நவின்றநாவர் (பந்தணைநல்லூர்)
அO. நான்மறையி னொலிதானும் (பூவணம்)
அக. வேதத்தோ டாறங்கஞ் சொன்னார்போலும் (ஆக்கூர்)
அஉ. மறையோதிகாண் (ஆரூர்)
அங. நான்மறையோ டாறங்க மாயினான்காண் ஷை
அச. மன்னியசீர்மறை நான்குமானாய்போற்றி ஷை
அரு. நால்வேதங்க ளைகண்டானை (ஆவடுதுறை)
அசா. நான்மறைகளாயினான்காண் (வலிவலம்)
அஎ. பந்தத்தா நான்மறைகள் பாடினான்காண் (கோகரணம்)
அஅ. மன்னுருவாய் மாமறைகளோதினான்காண் ஷை
அகூ. சந்தோக சாமமோதும வாயானை (வீழிமிழலை)
கூO. மந்திரமு மறைப்பொருளு மாயினான்காண் ஷை
கூக. ஓதாதே வேதமுணர்ந்தாய் போற்றி (கைலை)
கூஉ. மறையுடைய வேதம் விரித்தாய் போற்றி
கூங. மறைகொணாவா (கன்றாப்பூர்)
கூச. மெய்ஞ்ஞானம் விரித்தவன்காண
விரித்த நால்வேதத்தான்காண் } (ஏகம்பம்)

கூரு. நாலுமறை அங்கமோதக் கண்டேன் (வாய்மூர்)
கூசா. விரித்தானை நான்மறையோடங்கமாறும் (மாற்பேறு)
கூஎ. அருமறையோ டாறங்கமாய்ந்துகொண்டு
பாடினார் நால்வேதம் (பாசூர்)

கூஅ. அங்கமாயாதியாய் வேதமாகி யருமறையோ
டைம்பூதந்தானேயாகி (நின்றதிருத்தாண்டகம்)

𑌅𑌸𑍍𑌯 𑌮𑌹𑌤𑍋 𑌭𑍂𑌤𑌸𑍍𑌯 𑌨𑌿𑌶𑍍𑌵𑌸𑌿𑌤𑌮𑍇𑌤𑌤𑍍 𑌋𑌗𑍍𑌵𑍇
𑌯𑌜𑍁𑌰𑍍𑌵𑍇𑌦𑌸𑍍𑌸𑌾𑌮𑌵𑍇𑌦𑍋𑌽𑌥𑌰𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑌿𑌰𑌸 𑌇𑌤𑌿𑌹𑌾𑌸𑌃 𑌪𑍁
𑌰𑌾𑌣𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌉𑌪𑌨𑌿𑌷𑌦𑌃 ॥

அஸ்யமஹதோ பூதஸ்யநி: ச்வஸிதமேதத்
ருக்வேதோ யஜுர்வேதஸ்ஸாமவேத:||

'இருக்குவேதம், யசுர்வேதம், சாமவேத முதலிய, இந்தப் ப
பொருளின் சுவாசம்' என்று பிருக்தாரணிய உபநி
கூறும்—இதுவும் உருவகப் பொருள்தானோ? தமிழ்க்க
வாணர்களே நடுவு நிலைமையாய்ச் சொல்லுங்கள். மற்
விடயம் ஆராய்ச்சிக்கு உரியது. உருவகம் என்றுலென்
அதன் இலக்கண மென்னை? செய்யுட்களின் பொருட்
அலங்கரிப்பாய்க்காட்ட இலக்கண நூலார் தொகுத்திருக்
௧00-அணிகளுள் அது ஒன்று. உருவகமாவது உபமேய
னிடத்து உபமானத்தின் தன்மையை யேற்றிக்கூறுவது என்
இலக்கண நூலோர் சொல்லுவார்கள். பகைவர்களா
யானைகளுக்கு இராமன் சிங்கம் என்பதுபோல்வது.
காட்டிய திருமுறைப்பிரமாண மேற்கோள்களில் உபமே
யாது? உபமானம் யாது? இவ்வகை ஒன்றுங் காணு
இதனல் இச்சொற்கள் உருவகப் பொருள் தருவனவென்
நண்பர்கூறுவது பொருந்தாது. இவ்விஷயத்தை இலக்க
நூல்வல்லோர் நன்கு அறிவர்.

௧௪. வேதசிவாகமங்களின் உற்பத்தியைப்பற்றித் திராவி
பாஷ்ய கர்த்தரான மாதவச்சிவஞான முனிவர், சிவஞானபா
யம் சிறப்புப்பாயிர உரையில் ௧0-வதுபக்கத்திற் கூறுவதாவ

"மகா சங்காரகால முடிவின்கண் உலகங்களை மீள
"படைத்தற்பொருட்டுப் பரமான்மாவாகிய பரமசிவத்
"னுடைய பராசத்திகுடிலையை நோக்கியவழி, வேதாகமங்கள்
"குடிலையினின்றும் நாதவடிவாயும், அதன்பின் விந்துவடி
"வாயும் முறையே தோன்றின. பின் அவற்றைச் சொற்றொடர்
"படுத்துச் செய்யுளாக்கிப் பிறர்க்கு அருளிச்செய்தற்
"பொருட்டுப் பரமசிவன் ஈசானம் முதலிய பஞ்சப் பிரமமனுக்
"களாகிய சத்திகளை திருவடி முதலிய அவயவங்களாகக்
"சகளநிட்களத்திருமேனிகொண்டருளிச் சதாசிவமூர்த்தியாய்
"நின்று தற்புருடம் முதலிய நான்கு முகங்களால் வேதங்
"களைத் தோற்றுவித்து மேற்கண்ணதாகிய ஈசான முதலாகிய
"ஐந்து திருமுகங்களானும் காமிகம் முதலிய இருபத்தெட்டு
"ஆகமங்களையுந் தோற்றுவித்து, வேதங்களை அநந்த தேவர்
"வழியானே பிரமனுக்கு அருளிச்செய்து சிவாகமங்களைப்
"பிரதி சங்கிதைமுறையானே பிரணவர் முதலிய பதின்மரும்

"மகாருத்திரர் முதலிய பதினெண்மருமாகிய
"மருத்துஞ் சிவபேதம் உருத்திரபேதமெனப்
"வொன்று ஒவ்வொருவருக்கு அருளிச்செய்
"கௌகமுறையானே அவ்விருபத்தெட்டினையும்
"எண்மரின் முதல்வராகிய அநந்த தேவருக்கு
"தான். அவற்றை அநந்ததேவர் நூற்றுப்பதினெ
"ரின் முதல்வராகிய சீகண்டருத்திரருக்கு அரு
"அவற்றை சீகண்டருத்திரர் கணங்கட்கும் தே
"வர்க்கும் அளித்தற்பொருட்டு முதற்கண் நந்தி
"அருளிச்செய்தார். இது சிவாகமம் வந்
"றுணர்க" என்பதே.

கரு. சிவஞான முனிவர் எத்தகையரெனி
இருமொழியினுமுண்டாயிருந்த ஆற்றல் தமிழ்
முற்றும் நன்குணர்ந்ததே. விவாத திருநான்ம
எழுதிய நம் நண்பர், திராவிட மாபாடியம் அச்
வந்திருக்கும் புத்தகத்திற் கொடுத்திருக்கும்
சிவஞான முனிவரைப்பற்றி யெழுதியிருப்பது
"ஞானபோதப் பொருளை விரிவாகவுந் தெளிவா
"முறைக்கேற்பவும் விளக்கும் உரை நடை நூலெ
"யமையாததாயிற்று. அப்பெற்றித்தாகிய பே
"நூலைத் தமிழ் மக்களுக்களித்தருளிய வள்ள
"குல முதல்வராய்த் தோன்றித் தமிழ் நூற்கட
"கடலும் நிலை கண்டுணர்ந்த சிவானுபூதிச் செல்
"சை மாதவச் சிவஞான யோகியோராவர். இந்
"வடமொழி வேதாகமப் பொருட்டிட்பமும்
"சைவ நூற்பொருளொருமையும் மற்றதற்குரி
"யும் ஒருங்கே கொண்டுள்ளது...... அளவை
"இதற்கு இணையாய்த் தமிழ் நூல் வேறியாது
"பொருளும் முன்னொடுபின் முரணுதலின்றி
"விளக்கப்பட்டுளது."

சிவஞான முனிவர் சிவாகமங்களின் கரு
வேத சிவாகமம் உற்பத்தியைக் கூறியிருப்பதில்
சதாசிவமூர்த்தியாய் நின்று அக்கரத்தைச் செ
படுத்துச் செய்யுளாக்கி வேதங்களையும் ஆகமங்க
முகத்தினின்றுந் தோற்றுவித்ததாகக் கூறி
இதற்கு முற்றிலும் முரணாக, இறைவன் சொன்ம
செய்யவேண்டிய தவசியமில்லை யென்று நம்மவர்
யிருக்கின்றார். சிவஞான முனிவரைப், பாடிய
மேற்கண்டவாறு புகழ்ந்து கூறினார். இதல

யாதெனின், இவர் பல நூல்களுக்கெழுதிவரும் முகவுரைகள் உண்மைப் பொருள் கொண்டிலவென்பதே. "ஆலலாலிருக்கை யில்லை அருந்தவ முனிவர்க்கன்று நூலலா னொடிவதில்லை" என அப்பமூர்த்திகளருளிய திராவிட சுருதியினால் நான்கு முனிவர்க்கும் அருளியவை நூல் என்றே வெளிப்படையாகவும் விளக்குகின்றது.

௬௬. வேதசிவாகமங்களை ஆக்கிய முதலாசிரியர் சிவபிரானென்பதனாலன்றோ, திவாகரத்திலும் பிங்கலந்தையிலும் சூடாமணி நிகண்டிலும் சிவனது பல நாமங்களைத் தொகுத்துக் கூறுமிடத்து வேத முதல்வன், மறைமுதல் என்னும் நாமங்களும் சிவபிரானுக்கே காணப்படுகின்றன. மற்றைய கடவுளர்க்கு இந்நாம முரித்தெனக் கூறியிருக்கவுமில்லை.

மற்றும் 'உரைகடந்தோதுநீர்மை,' 'சொற்பிரிவிலாத மறை,' 'பன்னான்மறை பாடுதிர்' என்ற தமிழ்மறைச் சொற்றொடர்ப் பகுதிகட்கு இவர் கொண்ட பொருளிலும் ஆட்சேபமுளது. முதல் வாக்கியத்தின் சுத்தபாடம் உரைக்கடந்தோது என்பதே. அதற்கிணக்கமாகவே மற்றைய மூன்றடிகளும் கரைக்கடந்து, அரைக்கிடந்து, இரைக்கிடந்து, எனப்பண் இசைக்குத் தகுதியாகக் ககர மெய்யை விரித்துப் பாடங் கொள்ளப்பட்டிருக்கின்றது. நம்மவர் யாது காரணம் பற்றியோ ககர மெய்யை நீக்கிக்கொண்டார். அஃது எங்ஙனமாயினுமாகுக. அதற்குப் பொருள், "ஓது நீர்மை உரைகடந்தது என்பது அறியக்கிடந்தது" என்றார். உரைகடந்தவென எச்சப்பொருளில் ஆசிரியர் கூறியிருப்பதைக் கடந்தது என முற்றுப் பொருளில் வைத்துக்கொண்டு எவ்வாறு பொருள்கொண்டார்? அதன் பொருள், உரையைக்கடந்து ஓதும் நீர்மையை உணர்ந்திலேனென்பதாகப் பெரியோர் கொள்வர். சொற்பதங் கடந்த தொல்லோன் என்பதாதிய போல—பன்னான் மறை பாடுதிர் என்றால் பலதிறப்பட்ட நான்மறைகளைப் பாடுகின்றீர் என்றே பொருள்படும். செம்பாகமான பொருளைத்தள்ளிவிட்டு வலிந்து பொருள்கொள்ளப் பாடுபடுவானேன்? சொற்பிரிவிலாத மறையென்றது பிரணவ மந்திரமென்றார். பிரணவமென்று சொல்லவேண்டியிருந்தால் திருமுறையில் மற்றும் இடங்களில் அம்மகா மந்திரத்தை வெளிப்படையாகக் கூறியதொப்ப இங்குங் கூறியேயிருப்பார்கள். இவ்விஷயம் விரிக்கிற் பெருகும். நிற்க. மேலாராய்வாம்.

இனி நம்மவர் கூறுவதாவது, "கடவுள் வாக்கென்று "கூறும் வடமொழி வேதம்போன்ற நூல்கள் தம்மையியற்றி "யோர், கடவுளல்லாத பிறர் என்று தாமே நன்கு விளக்கு

"கின்றன.........இன்றுள்ள வடமொழி நான்கு வேதங்களும் "சிவபெருமானுள்ளிட்ட தெய்வங்களை வழிபட்டுப் பயன் "பெற்றோர் கூறிய பதிகங்களையும் வேள்வி விதிகளையும் பற்பல "ஆன்றோர் செய்த தத்துவ ஆராய்ச்சி வரலாறுகளையும் "சேர்த்து வியாசர் தொகுத்த ஓர் தொகை நூல்களாக விளங்கு "கின்றன" என்றார். பின்னால் நம் நண்பர் வேதவழக்கை விரித்துக்கூறுமிடத்தில் இவ்விஷயம் விவரிக்கப்படும். நிற்க மேலாராய்வாம்.

கஎ. இனி நம்மவர் கூறுவதாவது:—"ஆலநிழற்கீழ் முனிவர் நால்வரும் தாங்கள் கூறப்புகும் மறைகட்கு மூலமாகிய பொருளை இறைவர்பாற் கேட்டுணர்ந்தனர் என்பது பின்வரும் திருவாக்குகளால் இனிது விளங்கும்."

க. "எரிசையும் வடவாலின் கீழிருந்தங் கீரிருவர்க்கிரங்கி நின்று—நேரியனுன் மறைப்பொருளை யுரைத்தொளி சேர் நெறியளித்தானின்ற கோயில்,"

உ. 'எண்ணியோர் வடத்தினீழனல்வர்க்கருளியன் றெண்ணிலி மறைப்பொருள் விரித்தவனிடஞ்சேர்"

ந. "திருந்து மறைப்பொருணல்வர்க்கருள் செய்தானை"

ச. ஓதியாரணமாய நுண்பொருளன்று நால்வர்முன் கேட்க நன்னெறி—நீதியாலுரைக்கின்ற நீர்மையதென்"

"என்ற திருவாக்குகளுக்கு வேறொரு முறையிற் "பொருள் கொள்வர். அவர் ஆதியில் நான்மறைகள் இருந்தன. "அவற்றின் பொருளைச் சிவபிரான் பாலுணர்ந்தனர் என்பர்" என்றெழுதிக்கொண்டு நால்வரும் பிரமதேவன் புதல்வரென்கின்றார்களே, அற்றேல் அவர்கள் தாதையாராகிய பிரமாவிடம் கேட்டிருக்கலாமே, அல்லது சிவபெருமானால் பிரமாவுக்குக் கொடுக்கப்பட்டன நால்வேதமானதால் சிவனிடம் சென்றாரென்றால், சிவன் நால்வேதங்களையும் அருந்தவத்தினர்க்கும் பொருள் தோன்றாவண்ணம் இயற்றியிருப்பது என்ன பிரயோசனம், அல்லது வியாசர்பால் நால்வரும் பொருள் கேட்டிருத்தல்கூடும் என்றும், ஆலநிழற்கீழ் நால்வரும் அறங்கேட்பதற்கு முன் கடவுள் கூறிய வேதம் நான்காவதற்குக் காரணம் விளங்கவில்லையென்றும், குமார்க்கமான வினாக்களை எழுப்பிக் கொண்டு, "ஆலின்கீழ் முனிவர் நால்வரும் அருள்பெறுவதற்கு முன் உலகத்தார்க்குப் பயன்றரவல்ல வேதநூல் ஒன்றுமில்லையென்பதே தெளிவு" என்று எழுதியிருக்கின்றார். இதனால், இவர் கருத்து யாதெனில் ஆலின்கீழ் நால்வர் இறைவன்பால் உண்மைப்பொருளை முன்னர் உணர்ந்து அப்பொருளை அடக்கி நான்மறை அம்முனிவரால் இயற்றப்பட்டதென்பது. நண்பரது வினாக்களுக்கு விடை வருமாறு. மேற்காட்டிய

நூலை உணர்த்த அம்மந்திரத்துக்குப் பரியாய நாமமாகிய ருக் என்ற வடசொற் பெயரெய்தியதென்று விளங்குகின்றது. குறள் வெண்பாக்களாலாகிய நூலைக்குறள் என்று கூறுதல் போல. அவ்வாறல்ல, தொல்காப்பியர் கூறிய "நிறைமொழிமாந்த ராணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திரம் என்ப" என்னுஞ் சூத்திரத்தில் கூறியபடி மந்திரமெனப் பொருள் கொள்வோமெனின் தொல்காப்பியர் வடமொழியாகிய மந்திர மென்ற பதத்திற்குப் பொருள்கூற இச்சூத்திரம் வகுத்தால் லர். தமிழ் வழக்கினுள்ள அறுவகைச் செய்யுள் அதாவது நூலினை, உரையினை, கொடியொடு புணர்ந்த பிசியினை, ஏது முதலிய முதுமொழியினை, மறைமொழி கிளந்த மந்திரத்தான, கூற்றிடை வைத்த குறிப்பினை, எனக்கூறி, மறைமொழி கிளந்த மந்திரத்தான செய்யுள் இன்னதென்பதை மேற்காட்டிய "நிறைமொழி மாந்தராணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திரமென்ப" வெனுஞ் சூத்திரத்தால் கூறினாரே யொழிய மந்திரம் என்னும் வடமொழிப் பதத்திற்குப் பொருள்கூற அச்சூத்திரம் கூறினாரல்லர். மந்திரமென்ற மொழியைத்தமிழ் இடுகுறிப் பெயராகவே கொண்டாரெனத் தெரிகின்றது. காரணப்பெயராகக் கொண்டாரென்றால் மந்திரமென்ற பதம் எவ்வாறு ஆயது? தமிழ்ச் சொல்லானால், அச்சொற்குப் பகுதி, விகுதி என்னை? இச்சூத்திரத்திற் கூறிய மறைமொழி என்ற சொற்றொடருக்குப், புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லுஞ் சொற்றொடரெல்லாம் மந்திரமெனப் படும் என்று உரையாசிரியர் பொருள் கண்டார். அவ்வகைச் சொற்றொடர்களுக்கு ஓர் உதாரணமுங் கூற இயலாதவராகி அவை வல்லார்வாய்க் கேட்டுணர்கவென்றார். இதனால், இச் சூத்திரத்திற் காணப்படும் மந்திரம் என்ற மொழிக்குள்ள பொருளை ருக் எனுஞ் சொல் உணர்த்தும் மந்திரமெனப் பொருள் கொள்வதற்கு இல்லை. மேலுந் தமிழ் மொழிக்கு இலக்கணமாகவேற்பட்ட இச்சூத்திரம் வடமொழியாகிய ருக் என்ற பதத்திற்குப் பொருள் கூறிற்றென்று சொல்வது பொருந்தாது. இவ்வாராய்ச்சியால் தெரிவதியாதெனின், ஒரு பாஷைக்குரிய ஒரு மொழிக்குப் பொருள் கொள்ள வேண்டுமானால் அந்தப் பாஷையில் அம்மொழிக்கு என்ன பொருள் காட்டப்பட்டிருக்கின்றதோ அப்பொருளையே கொள்ளவேண்டுமென்பதுவே.

தச்சோதகேஷு மந்த்ராக்யா உ, க, ௩௨.
தேஷாம் ருக் யத்ரார்த்தவசேந பாதவ்யவஸ்தா । உ, க, ௩௫.
கீதிஷு ஸாமாக்யா ॥ உ, க, ௩௬.

"தச்சோத கேஷுமந்த்ராக்யா"
"தேஷாம் ருக்யத்ர அர்த்தவஸேந பாதவ்யவஸ்தா"
"கீதிஷு ஸாமாக்யா"

என்ற பூர்வமீமாம்சை சூத்திரங்களால் வேதத்தில் தேவதைகளைப்பற்றிச் சொல்லும் பாகங்களுக்கு மந்திரமென்று பெயர்; அர்த்தத்திற்காக எங்கே அடியடியாக அதாவது செய்யுள் வடிவாக இருக்கிறதோ அதற்கு ருக் என்று பெயர். கீதங்களுக்கு ஸாம என்று பெயர். இன்னமும்:—

"அர்ச்சயந்தே தேவா: ஏடா: இதி ருக்" என்ற வாக்கியத்தாலும் தேவர்களை வணங்குவதற்குக் கூறப்பட்டது ருக் ஆகும் என்றார்கள். வடமொழி அமரக்காரரும்,
"ஶ்ருதி ஸ்ரீவேத ஆம்நாய:" "ஸ்திரியாம் ருக்கு ஸாமயஜுஷீ"

சுருதி, வேதம், ஆம்நாயம், இவை வேதத்திற்குப் பெயரென்றும் அவை ருக்கு, யஜுர், சாமம் என்னும் பெயர்களும் பெறும் என்றார். இதை அனுசரித்தே தமிழ் திவாகரம், நிகண்டு ஆக்கியோர்களும்.

"இருக்குச் சுருதி, மறை, எழுதாக்கிளவி, ஆதி நூல், சாகை, ஆரணம் வேதம்"

"பௌடிகம் இருக்கு முதல் வேதமாகும்"
"இரண்டாம் வேதம் யசு தைத்திரியம்"
"மூன்றது சாமவேதம் கீதநடை" என்று சூத்திரம் கூறினர்கள்.

இவ்வளவு பிரமாணங்களுக்கெல்லாம் முரணாக, "பண்டு இருக்கு ஒரு நால்வர்க்கு நீர் உரை செய்ததே" என நம் வேதபாரகராகிய ஸ்ரீஞானசம்பந்தப் பெருமான் கூறிய தமிழ் மறையில் காணப்படும் ருக்கு என்ற மொழி இருக்கு வேதத்தைச் சுட்டுவதன்று என நம் நண்பர் கூறும் கூற்று ஆன்றோர் சபையில் ஏறாது. இனி ருக்கு என்பதற்கு அப் பெயருடைய வடமொழி வேதம் எனப் பொருள் கொண்டால் ருக் வேதத்தின் பொருளை மாத்திரம் சிவபெருமானிடங் கேட்டதாகக் கதையுமில்லையென நம்மவர் சொல்வதை ஆராய்வாம். ருக் என முதல் வேதத்தின் பெயரைக் கூறவே இனம்பற்றி மற்றைய மூன்று வேதங்களும் சேரும் என்றே பொருள்படும். "பார்ப்பான் பிறப்பு ஒழுக்கங்குன்றக்கெடும்" என்ற குறட்பாவுக்கு உரையாசிரியர் பரிமேலழகர் சிறப்புடைய வருணத்தை யெடுத்து மொழிந்தமையின் ஏனைய வருணங்களுக்குங் கொள்ளப்பட்டது என்று பொருள் உரைத்ததுபோல், அல்

வதூஉம் ருக்கு என்னும் பதம், வேதம் என்னும் பொருளையே தரும். "இக்கிரமத்தென்னு மிருக்கு" என்ற சிவஞான போத உதாரண வெண்பாவின் பகுதியிற்கண்ட ருக்கு எனுஞ் சொற்கு, ருக்வேதமெனப் பொருள்கொள்ளாமல் "இந்த மறைமை போலவென்னும் வேதங்கள்" எனச் சிவஞான போத விருத்தியுரை ஆசிரியர் பாண்டிப்பெருமாள் உரை கண்டனர். மாதவச் சிவஞான முனிவரும் அவ்வாறே பொருள் கண்டார். பெரிய புராணம், தடுத்தாட்கொண்ட புராணம், கசச-ம் செய்யுளில் 'இருக் கோலமிடும் பெருமான்,' சம்பந்தர் புராணம் அ0-வது செய்யுளில், 'இருக்கு மொழிப்பிள்ளையார்,' கூச-வது செய்யுளில் "இருக்குமொழி அந்தணர்" என்னுஞ் சொற்றொடர்களில் காணப்படும் இருக்கு என்னுஞ் சொற்கு வேதம் என்றே உரை ஆசிரியர் பொருள் கண்டார். ஏன் என்றால், ருக்கு என்னும் பதமும் வேதம் என்னும் பதமும் ஒன்றற்கொன்று பரியாய நாமங்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றமையான். திவாகரத்தில் "வேதநூலின் பெயர், ஆதி நூலென்பது வேதநூற் பெயரே. இருக்கோத்தாரணம் வேதமென்ப. பிங்கலந்தையில் "வேதத்தின் பெயர், இருக்குச் சுருதி மறையெழுதாக்கிளவி, ஆதிநூல் சாகை ஆரணம் வேதம்" என்பவற்றானும் விளங்கும். ஆதலால் "பண்டிருக்கொரு நால்வர்க்கு நீருரைசெய்கதே" என்ற தமிழ் மறைப்பகுதியிற் காணப்படும் 'ருக்கு' என்ற சொல் நான்கு வேதங்களையுமே குறிக்கும். இன்னமொன்றுளது. மார்க்கண்டேயர் ஆரியவிருடியென்பதையும் அவர் சிவபெருமானைப் பூசித்துப் பேறுபெற்றவரென்பதையும் ஒருவரும் மறுக்கார். அவர் வழிபாடு செய்த சரித்திரங்கூறப் புகுந்த திருஞானசம்பந்தப் பெருமான் அருளிய தேவாரம்" "நன்றுநகு நாண்மலரா னல்லிருக்கு மந்திரங் "கொண், டொன்றிவழி பாடுசெய வுற்றவன்றன் னுயிர் "மேல், கன்றிவரு காலனுயிர் கண்டவனுக் கன்றளித்தான்- "கொன்றைமலர் பொன்றிகழுங் கோளிலியெம்பெருமானே" இத்தேவாரத்தில் வேதமந்திரங்களைக்கொண்டு அர்ச்சித்தார் எனும் பொருள்பட "நல்லிருக்கு மந்திரங்கொண்டு" என அருளிச் செய்திருப்பதனாலும் இருக்கு என்பது வேதம் எனப் பொருள்படு தலையுங்காணலாம். இச்சொற்றொடரில் இருக்கு, மந்திரம், என்ற இரண்டு மொழிகளுங் காணப்படுகின்றன. இருக்கு என்ற சொல்லே நம்மவர் கற்பனைப்படி மந்திரம் எனும் பொருள் பயக்குமானால் இருக்கு என்ற மொழியுடன் மந்திரம் என்ற மொழியையும் சேர்த்துக் கூறவேண்டுவதில்லை. இனி ருக்குவேதம் சிவபெருமானை யொழிந்த பற்பல தெய்வங்களைப்பற்றிய பாடல்களென்றும் சிலவற்றில் உருத்திரர் பெயர்

காணப்படுவதில் அவ்வுருத்திரரும் சிவனென்றழைக்கப்படவில்லையென்றும் நம்மவர் சொல்வது, அவரது ஆராய்ச்சிக் குறைவே யென்பதனைக் காட்டுதும். ருக்வேதம் ௧௦-௯௨-௯,

𑌸𑍍𑌤𑍋𑌮𑌂 𑌵𑍋 𑌅𑌦𑍍𑌯 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌯 𑌶𑌿𑌕𑍍𑌵𑌸𑍇 𑌕𑍍𑌷𑌯𑌦𑍍𑌵𑍀𑌰𑌾𑌯 𑌨𑌮𑌸𑌾 𑌦𑌿𑌦𑌿𑌷𑍍𑌟𑌨 । 𑌯𑍇𑌭𑌿𑌃 𑌶𑌿𑌵𑌃 𑌸𑍍𑌵𑌵𑌾𑌁 𑌏𑌵𑌯𑌾𑌵𑌭𑌿𑌰𑍍𑌦𑌿𑌵𑌃 𑌸𑌿𑌷𑌕𑍍𑌤𑌿 𑌸𑍍𑌵𑌯𑌶𑌾𑌃 𑌨𑌿𑌕𑌾𑌮𑌭𑌿𑌃 ॥

"ஸ்தோமம்வோ அத்யருத்ராய ஶிக்வஸெக்ஷயத்வீராய நமஸா திதிஷ்டந | யேபி:ஶிவ: ஸ்வவாம் ஏவயா வபிர்திவ:ஸிஷக்தி ஸ்வயசா: நிகாமபி:" ||

* இதன் பொருள் வருமாறு. தேவர்களே!

வ:—உங்களுடைய, ஸ்தோமம்—ஸ்தோத்திரத்தை, ஶிக்வஸே—நிக்கிரகானுக்ரக சக்தியுடையவரும், க்ஷயத்வீராய—வீரபத்திரர் முதலிய கணங்களாற் சூழப்பட்டவருமாகிய, ருத்ராய—உருத்திரருக்கு, நமஸா—நமஸ்காரத்தோடு கூட, திதிஷ்டந—காட்டுங்கள், ஏபி:—அந்த ஸ்துதி நமஸ்காரங்களால், தேவ:—தேவர்களாகிய நீங்கள், நிகாமபி:—எண்ணும் விருப்பங்களிலெல்லாம், யாவபி:—அடையக்கூடிய பலன்களை, ஸ்வா—எஜமானரும், ஸ்வயஸா:—பிறர்க்கில்லாத கீர்த்தியுடையவருமாகிய, ஶிவஏவ—சிவபெருமான் ஒருவரே, ஸிஷக்தி—சேர்த்திருக்கிறார்.

உங்களுடைய ஸ்தோத்திரமென்றது உங்களுக்குப் பிறர் செய்த ஸ்தோத்திரம் எனப் பொருள். இங்கே கூறப்பட்ட ருத்திரர் மஹா ருத்திரரே. குண ருத்திரரல்லர். அவ்து வீரபத்ரர் முதலிய கணங்களாற் சூழப்பட்டவரென்பதனாலேயே விளங்கும். இந்த ருக்குவேத மஹாமந்திரத்தால் மகாருத்திரராகிய சிவபெருமான் ஒருவரே எஜமானரும் பிறர்க்கில்லாத கீர்த்தியுடைவருமென்பது காட்டப்பட்டது.

மஹா பிரளய காலத்திலே சிவ பெருமான் ஒருவரே உளர் என்பதை ருக்குவேதம் ௧௦, ௧௨௯, ௧. 𑌨𑌾𑌸𑌦𑌾𑌸𑍀𑌨𑍍𑌨𑍋 𑌸𑌦𑌾𑌸𑍀𑌤𑍍 । நாஸதாஸீந்நோஸதாஸீத் ஷ்டி ம=௧௨௯=௨= 𑌤𑌦𑍇𑌕𑌂 (𑌆𑌸𑍀𑌤𑍍) ததேகம் ஆஸீத் ஷ்டி ம=௧௨௯=௪ 𑌕𑌾𑌮𑌸𑍍𑌤𑌦𑌗𑍍𑌰𑍇 𑌸𑌮𑌵𑌰𑍍𑌤𑌤𑌾𑌧𑌿 । காமஸ் ததக்ரே ஸமவர்த்தத

---

* இம் மந்திரத்திற்கு இப் பொருள் ஸ்ரீஅரதத்தாசாரியர் அருளிச்செய்த சுருதி சூக்தி மாலையில் 'தத்கந்நம:' என்று தொடங்கும் பதினெட்டாவது சுலோக வியாக்கியானத்திற் சிவலிங்க பூபதி கூறியவாறு பற்றி எழுதப்பட்டது.

இவற்றின் பொருள்: மகாபிரளயகாலத்திலே அசத்தும் இல்லை சத்தும் இல்லை, அந்த ஒன்றே இருந்தது. அதினின்று முதற் கண்ணே காமம் எனப்படும் பராசக்தி உளதாயிற்று. இந்தக் கருத்தை விளக்கியே,

𑌯𑌦𑌾 𑌤𑌮𑌸𑍍𑌤𑌨𑍍𑌨 𑌦𑌿𑌵𑌾 𑌨 𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌰𑍍𑌨 𑌸𑌨𑍍𑌨 𑌚𑌾𑌸𑌞𑍍𑌛𑌿𑌵 𑌏𑌵 𑌕𑍇𑌵𑌲𑌃
𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌂 𑌤𑌤𑍍𑌸𑌵𑌿𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍇𑌣𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌚 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌾
𑌪𑍁𑌰𑌾𑌣𑍀 ॥

யதாதமஸ் தந்நதிவான ராத்ரிர் நஸந்நசாஸஞ்சிவ ஏவகேவல: — ததக்ஷரந்தத்ஸவிதுர் வரேண்யம் ப்ராஞ்ஞாச தஸ்மாத் ப்ரஸ்ருதாபுராணீ.

எப்போது இருள் உளதாய்ப் பகலுமின்றி இரவுமின்றிச் சத்துமின்றி அசத்துமின்றி இருந்ததோ, அப்போது சிவன் ஒருவரே இருந்தார். அந்தச் சிவ சூரியனுடைய அந்த அழியாத முக்கியப் பொருளாகிய பிரஞ்ஞை எனப்படும் பழைய பராசக்தி உதித்தார் என்று சுவேதாஸ்வர உபநிஷத்துக் கூறும். சுருங்கச் சொல்லலும் ஆழமுடைய பொருளுடையதுமாகிய சூத்திர ரூபமாகிய வேத வாக்கியங்களின் ரகஸிய அர்த்தங்களையெல்லாம் உபநிஷத்து வாக்கியங்களாற்றான் அறியவேண்டும். வேதத்தின் அந்தம் வேதாந்தம் என்று உபநிஷத்துக்கள் பெயரெய்தின. அதனால் உபநிஷத்து வாக்கியமும் இங்குக் காட்டப்பட்டது. மகா பிரளயகாலத்தி லுள்ள முழுமுதற் கடவுள் சிவபிரானென்று ஏற்படுவதால் அவரே மகா உருத்திரரெனவும் பெயர் பெறுவர். ருக்கு வேதத்திற் கூறப்படும் உருத்திர சப்த முழுமையும் முன் பின் முரணில்லாதவனை மகா உருத்திரனைச் சார்ந்ததே. நமது சிவஞானபோதம் முதற் சூத்திரத்திற் கூறப்படும் "அந்தம் ஆதி யென்மனார் புலவர்" எனனுஞ் சொற்றொடரில் அந்தத்தைச் செய்யும் இறைவன் என்றதும் இம்மகா ருத்திரனையே. குணி ருத்திரனை அல்ல. ஏமனொன்றல தீதகம, என ருக்கு வேதம் சொல்லுகின்றது. ஸ்ரீமாணிக்கவாசகரும் இப்பொருளைச் சுட்டியே 'ஏகன்' எனவும் தமிழ் வேதத்தில் அருளிச் செய்தார். "நாற்காற் பசுக்களுக்குப் பதியாக அவர் (உருத்திரர்) ஆண்டு வழிபடப் படுகின்றார்" என நம்மவர் எழுதியிருக்கின்றார். இவர் காட்டிய ருக்கு வேத மேற்கோளிலேயே ஆடு மாடுகளோடுங் கூட நம்மைச் சேர்ந்தோர்க்கும், நம் பின்னோர்க்கும் நம் ஆடவர் பெண்டிர் இவர்களுக்குமெனச் சமஷ்டியாகக் கூறி, இவர்களுக்குப் பசுபதியான அவர் நல்வாழ்வினையுந் தந்தருளுவாராக வெனச் சொல்லப்பட்டிருக்கிறதை வெள்ளிடை மலைபோல

இவரே யெடுத்துக் காட்டியும் வேதத்தைக் குறை கூறவேண்டுமென்று எழுந்த வீராவேச அந்தகாரம் மறைத்துவிட்டது போலும். சிவபெருமான் பசுபதியெனத் தெளிவாய்க் கூறும் வாக்கியம் ருக்கு வேதம். ௧௦. ௧௨௧, ௩ல் உளது.

[illegible]

"யஃப்ராணதோ நிமிஷதோ மஹித்வைக இத்ராஜா ஜகதோ பபூவ | ய ஈஸே ஸ்யத்விபதச் சதுஷ்பத:||

எவர் சுவாஸம் விட்டதனாலேயும் கண் கொட்டினதனாலேயும் உலகமெல்லாம் சிருஷ்டிக்கப்பட்டதோ, எவர் ஒருவராகவே அரசனாக இருக்கின்றாரோ எவர் இரண்டு காற் பசுக்களுக்கும் நாற்காற் பசுக்களுக்கும் பதியாக இருக்கின்றாரோ அந்தப் பரமேஸ்வரனுக்கு ஹவிஸைக் கொடுப்போம். இதனால் சிவபெருமானை எல்லா ஜீவ ஜந்துக்களுக்கும் பதியென ருக்கு வேதம் பறையறைந்து கூறுவதை நம்மவர்களெல்லாரும் தெரிந்துகொள்ளுவார்களாக. பசுபதி யென்ற பெயர் சிவபெருமானை யொழிந்த வேறெந்தக் கடவுளர்க்கும் எந்த நூலிலும் கூறப்படவில்லையென்பது சைவ மக்கள் பலருக்கும் தெரிந்த விஷயமே.

யாகாதிபதி சிவபெருமான் என ருக்கு வேதம் கூறும்.

[illegible] । மேதபதிம்—இருக்கு ௧, ௪௩, ௪. [illegible] ஆவோராஜாந மத்வரஸ்யருத்ரம் இருக் ௪, ௩, ௧. [illegible] நிஹிதா। த்ரீஷ்ஸப்தயத்குஹ்யாநித்வே........நிஹிதா இருக் ௧, ௭௨, ௫.

* மேற்காட்டிய ருக்குகளால் உருத்திரமூர்த்தியாகிய (சிவபெருமான்) யாகங்களுக்குப்பதி-௨௧-யாகங்களுக்கும் தலைவர் என்று ஏற்படுகின்றது. தட்சப்பிரஜாபதி சிவபிரானை நீக்கி யாகஞ் செய்ததும் அதனால் அவன் யாகம் முற்றுப் பெறாமல் அவன் ஈறுபட்டதும் சைவ நூல்களெல்லாம் கூறும். தமிழ் மறைகளிலும் பற்பல இடங்களிலும் விதந்து கூறியிருக்கின்றது. தட்சன் அவனது கர்மவசத்தால் சிவபிரானை இகழ்ச்சிசெய்து

* மகா சிவபக்தர்களாயும் தெய்வத்தன்மை வாய்ந்தவர்களாயுமிருந்த தமிழ் நாட்டு மூவேந்தர்களும் இவ் ௨௧ யாகங்களையும் வேத முறைப்படி நடத்தினார்களெனத் தமிழ் நாட்டுச் சரித்திரத்துக்கு ஓர் அஞ்சலாணிபோன்ற சங்க நூல்களாகிய புறநானூறு ஆதியா சாற்றும். பு. நா. செ. ௧௫. ௨௬, ௧௨௨, ௧௬௬, ௨௨௪, ௪௦௦ பார்க்க.

இவற்றின் பொருள்: மகாபிரளயகாலத்திலே அசத்தும் இல்லை சத்தும் இல்லை, அந்த ஒன்று இருந்தது. அதினின்று முதற் கண்ணே காமம் எனப்படும் பராசக்தி உளதாயிற்று. இந்தக் கருத்தை விளக்கியே,

𑌯𑌦𑌾𑌤𑌮𑌸𑍍𑌤𑌨𑍍𑌨 𑌦𑌿𑌵𑌾 𑌨 𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌰𑍍𑌨 𑌸𑌨𑍍𑌨 𑌚𑌾𑌸𑌚𑍍𑌛𑌿𑌵 𑌏𑌵 𑌕𑍇𑌵𑌲𑌃
𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌂 𑌤𑌤𑍍𑌸𑌵𑌿𑌤𑍁𑌰𑍍𑌵𑌰𑍇𑌣𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌚 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌾
𑌪𑍁𑌰𑌾𑌣𑍀 ॥

யதாதமஸ் தந்ந திவான ராத்ரிர் நஸந்நசாஸஞ்சிவ ஏவகேவல:— ததக்ஷரந்தத்ஸவிதுர் வரேண்யம் ப்ரஞ்ஞாச தஸ்மாத் ப்ரஸ்ருதாபுராணீ.

எப்போது இருள் உளதாய்ப் பகலுமின்றி இரவுமின்றிச் சத்துமின்றி அசத்துமின்றி இருந்ததோ, அப்போது சிவன் ஒருவரே இருந்தார். அந்தச் சிவ சூரியனுடைய அந்த அழியாத முக்கியப் பொருளாகிய பிரஞ்ஞை எனப்படும் பழைய பராசக்தி உதித்தார் என்று சுவேதாஸ்வர உபநிஷத்துக் கூறும். சுருங்கச் சொல்லலும் ஆழமுடைய பொருளுடையதுமாகிய சூத்திர ரூபமாகிய வேத வாக்கியங்களின் ரகஸிய அர்த்தங்களையெல்லாம் உபநிஷத்து வாக்கியங்களாற்றான் அறியவேண்டும். வேதத்தின் அந்தம் வேதாந்தம் என்று உபநிஷத்துக்கள் பெயரெய்தின. அதனால் உபநிஷத்து வாக்கியமும் இங்குக் காட்டப்பட்டது. மகா பிரளயகாலத்திலுள்ள முழுமுதற் கடவுள் சிவபிரானென்று ஏற்படுவதால் அவரே மகா உருத்திரரெனவும் பெயர் பெறுவர். ருக்கு வேதத்திற் கூறப்படும் உருத்திர சப்த முழுமையும் முன் பின் முரணில்லாதவரை மகா உருத்திரரைச் சார்ந்ததே. நமது சிவஞானபோதம் முதற் சூத்திரத்தில் கூறப்படும் "அந்தம் ஆதி யென்மனார் புலவர்" என்னுஞ் சொற்றொடரில் அந்தத்தைச் செய்யும் இறைவன் என்றதும் இம்மகா ருத்திரரையே. குணி ருத்திரரை அல்ல. ஏனென்றால் தமேகம, என ருக்கு வேதம் சொல்லுகின்றது. ஸ்ரீமாணிக்கவாசகரும் இப்பொருளைச் சுட்டியே 'ஏகன' எனவும் தமிழ் வேதத்தில் அருளிச் செய்தார். "நாற்காற் பசுக்களுக்குப் பதியாக அவர் (உருத்திரர்) ஆண்டு வழிபடப் படுகின்றார்" என நம்மவர் எழுதியிருக்கின்றார். இவர் காட்டிய ருக்கு வேத மேற்கோளிலேய் ஆடு மாடுகளோடுங் கூட நம்மைச் சேர்ந்தோர்க்கும், நம் பின்னோர்க்கும் நம் ஆடவர் பெண்டிர் இவர்களுக்குமெனச் சமஷ்டியாகக் கூறி, இவர்களுக்குப் பசுபதியான அவர் நல்வாழ்வினையுந் தந்தருளுவாராக வெனச் சொல்லப்பட்டிருக்கிறதை வெள்ளிடை மலைபோல

இவரே யெடுத்துக் காட்டியும் வேதத்தைக் குறை கூறவேண்டு மென்று எழுந்த வீராவேச அந்தகாரம் மறைத்துவிட்டது போலும். சிவபெருமான் பசுபதியெனத் தெளிவாய்க் கூறும் வாக்கியம் ருக்கு வேதம். ௧0. ௧௨௧, ௩ல் உளது.

யஃப்ராணதொ நிமிஷதொ மஹித்வைக இந்த்ராஜா ஜகதொ
பபூவ। ய ஈஶெ அஸ்ய த்விபதஶ்சதுஷ்பத:॥

"ய:ப்ராணதோ நிமிஷதோ மஹித்வைக இந்த்ராஜா ஜகதோ பபூவ | ய ஈஸே ஸ்யத்விபதச் சதுஷ்பத:||

எவர் சுவாஸம் விட்டதனுலேயும் கண் கொட்டினதனுலேயும் உலகமெல்லாம் சிருஷ்டிக்கப்பட்டதோ, எவர் ஒருவராகவே அரசனாக இருக்கின்றாரோ எவர் இரண்டு காற் பசுக்களுக்கும் நாற்காற் பசுக்களுக்கும் பதியாக இருக்கின்றாரோ அந்தப் பரமேஸ்வரனுக்கு ஹவிஸைக் கொடுப்போம். இதனுல் சிவபெருமானை எல்லா ஜீவ ஜந்துக்களுக்கும் பதியென ருக்கு வேதம் பறையறைந்து கூறுவதை நம்மவர்களெல்லாரும் தெரிந்துகொள்ளுவார்களாக. பசுபதி யென்ற பெயர் சிவபெருமானை யொழிந்த வேறெந்தக் கடவுளர்க்கும் எந்த நூலிலுங் கூறப்படவில்லையென்பது சைவ மக்கள் பலருக்குந் தெரிந்த விஷயமே.

யாகாதிபதி சிவபெருமான் என ருக்கு வேதம் கூறும்.

ரெ்யவதிம் । மேதபதிம்—இருக்கு ௧, ௪௩, ௪. ஆவொராஜாந

த்வரஸ்ய ருத்ரம் ஆவோராஜாந மத்வரஸ்யருத்ரம் இருக் ௪, ௩, ௧. த்ரிஸப்தயஜ்ஞஹ்யாநிதெவ......நிஹிதா। த்ரிஸ் ஸப்தயத்குஹ்யாநிதவே........நிஹிதா இருக் ௧, ௭௨, ௬.

* மேற்காட்டிய ருக்குகளால் உருத்திரமூர்த்தியாகிய (சிவபெருமான்) யாகங்களுக்குப்பதி-உக-யாகங்களுக்கும் தலைவர் என்று ஏற்படுகின்றது. தட்சப்பிரஜாபதி சிவபிரானை நீக்கி யாகஞ் செய்ததும் அதனுல் அவன் யாகம் முற்றுப் பெறுமல் அவன் ஈறுபட்டதும் சைவ நூல்களெல்லாம் கூறும். தமிழ் மறைகளிலும் பற்பல இடங்களிலும் விதந்து கூறியிருக்கின்றது. தட்சன் அவனது கர்மவசத்தால் சிவபிரானை இகழ்ச்சிசெய்து

* மகா சிவபக்தர்களாயும் தெய்வத்தன்மை வாய்ந்தவர்களாயுமிருந்த தமிழ் நாட்டு மூவேந்தர்களும் இவ் உக யாகங்களையும் வேத முறைப்படி நடத்தினர்களெனத் தமிழ் நாட்டுச் சரித்திரத்துக்கு ஓர் அஞ்சலாணிபோன்ற சங்க நூல்களாகிய புறநானூறு ஆதிய சாற்றும். பு. நா. செ. ௧௫. ௨௬, ௧௨௨, ௧௬௬, ௨௨௪, ௪௱ பார்க்க.

வேதத்தில் மேற்காட்டிய "ஆவோராஜா நமத்வரஸ்ய ருத்ரம்" என்று தானே சொல்லப்பட்டிருக்கின்றது. ருத்திரர் அநேக இருக்கிறார்கள். ஏகாதச ருத்திரராதியோர், அவர்களில் ஒ வரை வைத்துக்கொண்டு யாகத்தை முடிப்பேனென ஆரம்பி தான். வேதத்திற் கூறப்பட்டிருக்கிற ருத்திரன் என்பவர் சி பிரானே. அவரே எந்த யாகங்களிலுந் தலைவராயிருந் முதல் அவிஸ்பெறச் சுதந்திரர். அவரையின்றி நீ யாக செய்யப்படாதென்று மகரிஷிகளெல்லோருஞ் சொல்லியு அவன் கேளாமல் தன் மனதின்படி சிவபிரானை வரிக்காம யாகத்துக்கு ஆரம்பித்ததில், வீரபத்திரக் கடவுளால் அந் யாகம் அழிபட்டதுமன்றி தட்சனும் கொல்லப்பட்டான் இதனால் ருக்கு வேதத்தில் கண்ட ருத்திரன், சிவபிராமே என்று ஏற்பட்டது. இதனால் வேதத்தில் ருத்ரமூர்த் யென்று கூறப்பட்டவர், குணி ருத்திரரல்லர். ஏகாதச ருத்ர களில் ஒருவருமல்லர். மகா ருத்திரமூர்த்தியின் சாரூப்பிய பதவி பெற்றவர்களிலும் ஒருவரல்லர். சுத்த மாயா புவனுந் த சங்கரிக்கும் மகா ருத்திரராய் ஏகமூர்த்தியாய்த் தம்மிடமெல்ல ஆன்மகோடிகளையுமடக்கித் தம் அருட்சத்தி மாத்திரையேயாய் நிற்கும் சிவமே யாவர் என்பது மறக்கக்கூடாத துணிபாம் ருத்ரன் என்ற பதத்துக்குப் பொருள் விசாரிக்குங்கால் ருத் (ஆன்மாக்களுக்குப் பிறப்பிறப்பாலாகிய) = துன்பத்தை திராவக := ஒழிப்பவன், எனப் பொருள் விளங்கும். இந்த வேத மொழியின் பொருளை வேதோப பிருங்கணமாகிய தட்ச காண்டத்திய அடியிற் காட்டப்படுஞ் செய்யுளுங் கூறும்.

"இன்னலங் கடலுட்பட்டோர் யாரையுமெடுக்கு நீரா, லுன் னரும் பரமமூர்த்தி யுருத்திரனெனும் பேர்பெற்றான், அன் னவன் தரவந்தோர்க்கு மடியடைந்தோர்க்கு மன்னன், தன்னுரு வெய்தினோர்க்குஞ் சார்ந்ததாலவன்றனிப்பேர்"

இதனாலுமறிக, ருக்வேத வாக்கியங்களில் ருத்திரன் என்று காணப்பட்ட பதங்களெல்லாம் சிவபெருமானையே குறிக்கு மென்பது தட்சன் யாக சரித்திரத்தாலும் நன்கு அறியலாம்.

ருக் வேதத்தில் சிவபூஜா கிரியைகள் கூறப்பட்டுளது.

ஈஜரிஹநி தம் ஜநெருர-ஊரம் வமரோமநீஷயாஜநிஜி ஜிஹ்வயா ஸஸம் ।

அந்தரிச்சந்திதம் ஐநேருத்ரம் பரோமநீஷயா க்ருப்ப ணந்தி ஜிஹ்வயாஸஸம் இருக். அ, சுக, ரு.

ஜனங்களிடத்து அந்தரியாமியாயிருக்கும் சிவபிரானை எவர் அருட்சத்தியோடு தியானிக்கின்றாரோ அவர் அன் னத்தை நாவினாற் கிரகிக்கின்றார்.

தவஸ்ரியெ ...
விதூம்।

"தவச்ரியே மருதோமர்ஜயந்த ருத்ராயத்தே ஜஹிம ...
சித்ரம்" இருக் ரு, ரு, ரு.

தேவர்கள் பொருளும் அருளுமாம் செல்வத்...
அடையுமாறு, சிவபிரானது விசித்ர ரூபமாகிய மகாலிங்க
மூர்த்தியை அபிஷேகாதி பூசை செய்தார்கள்.

மேல் ருக்கில் காணப்படும், ஜஹிமசாரு சித்ரம், என்...
பதம் சிவலிங்கத்தின் மேற்றும் என்பது.

...
... விதூம் ॥

'ரௌத்ரம் லிங்கம் மஹாவிஷ்ணுர் பக்தயா ...
சிலாமயம் சாருசித்ரம்.........என்னும் உபபிருங்கணத்தின...
றியலாம் என்று மேலோர் பணித்தனர்.

சிவபெருமானெண்ணிறந்த கண் முதலியன உடையவர்.

...
...
... ॥

"விஸ்வதஸ் சக்ஷுருத விஸ்வதோமுகோ விஸ்வதோ...
பாஹுருதவிஸ்வதஸ் பாத் | ஸம் பாஹுப்யாம் தமதி ஸம்...
த்ரைர்தயவா பூமீஜநயந்தேவஏக: || ருக்-௧0-அக-ரு.

எங்குங் கண்ணையும் எங்கும் முகத்தையும் எங்கு...
கையையும், எங்கும் அடியையும், உடையராய்த் தமது கர...
களினாலும் சிறகுகளினாலும் மண்ணையும் விண்ணையும் இசை...
துப் படைப்பவர் அந்தக் கடவுள் ஒருவரே. இந்த ருக்கின்
பொருளையே "எண்ணில் பல்கோடி சேவடி முடிகளெண்ணில்
பல்கோடி திண்டோள்க, ளெண்ணில் பல்கோடி திருவுரு
நாமமேர்கொண் முக்கண்முகமியல்பு, மெண்ணில பல்கோ...
யெல்லைக்கப்பாலாய் நின்றைஞ்ஞூற்றந்தணரேத்து, மெண்
ணில் பல்கோடி குணத்தரோர்வீழி யிவர் நம்மையாளுடை
யாரே" என்று திருவிசைப்பாவிலருளியிருப்பதுங் காண்க.

சிவபெருமானைப் பொன்வண்ணரென இருக்குவேதங்
கூறுகின்றது.

... ஹிரண்யாவ... ।

"யஸ் ஸூக்ர இவசூர்யோ ஹிரண்ய மிவரோசதே - இருக்கு-க-சஙு-ரு.

சூரிய ஒளியினராயும் பொற்பிரகாசத்தினராயுமுள்ளவர் உருத்திரர். இந்த இருக்கின் பொருளே, "பொன்னேர் தருமேனியனே" "பொன்னார் மேனியனே" "பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனிபொலிந்திலங்கும்" எனப் பலப்பலவாய் விதந்து நந்தமிழ்த் திருமுறைகளிலும் அருளப்பட்டிருக்கின்றன.

பின்னுஞ் சிவபிரானை உருத்திரப் பெயராற் கூறி அவரை நீண்டசடையுடையவர், நக்கினர், விஷபானஞ் செய்தவர், முக்கணர், என்பதை அடிபிற்காட்டியுள்ள ருக்குவேதப் பகுதிகள் கூறுவதையு மறியவேண்டும்.

இமா: ருத்ராய தவஸே கபர்தினே க்ஷயத்வீராய ப்ரபராமஹே மதீ: ।

திவோ வராஹ மருஷம் கபர்தினம் த்வேஷம் ரூபம் நமஸா நிஹ்வயாமஹே ।

வாயுரஸ்மா உபாமந்தத் பிநஷ்டிஸ்மா குநம்நமா । கேஶீ விஷஸ்ய பாத்ரேண யத் ருத்ரேணாபிபத் ஸஹ ॥

த்ர்யம்பகம் யஜாமஹே ஸுகந்திம் புஷ்டிவர்தநம் ।

"இமா: ருத்ராய தவஸே கபர்தினே க்ஷயத் வீராய ப்ரபராமஹே மதீ: ॥ இருக்கு க, ககச, க.

"திவோவராஹ மருஷம் கப்ரதிநம் த்வேஷம்ரூபம் நமஸா நிஹ்வயாமஹே | இரு க-ககச-ரு.

"வாயுரஸ்மா உபாமந்தத் பிநஷ்டிஸ்மா குநம் நமா | கேசீ விஷஸ்ய பாதரேணயத் ருத்ரேணா பிபத்ஸஹ || இருக்கு-கO சுஙகூ-எ.

"த்ரியம்பகம் யஜாமஹே சுகந்திம் புஷ்டிவர்த்தநம்" இரு-எ-ருகூ-உ.

இன்னமும் பதிபசுபாச முப்பொருளினிலக்கணங் கூறும் நஞ் சுத்தாத்துவித சைவ சிந்தாந்த முடிபையும் வெளிப்படையாகக்கொண்டு.

த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே । தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி ॥

"த்வாஸுபர்ணு ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே | தயோரன்ய: பிப்பலம் ஸ்வாத் வத்யநச்நந்நந்யொபிசாகஸீதி || இருக்கு-க-கசுசு-உo-மந்திரம் எழுந்துள்ளது.

இதன்பொருள்-பிரியா நண்பினையுடைய விருபட்சிகள் (சீவான்மாபரமான்மா ஆகிய ஆன்மாவும் சிவமும்) ஒருவிருக்ஷத்தில் (சரீரத்தில்) இயைந்துள்ளன. அவற்றுள் ஒன்று (சீவான்மா) இனியபழத்தைத் (சிவபோகத்தைத் துய்க்கின்றது; மற்றது (சிவம்) உண்ணுது பார்த்துக்கொண்டிருக்கின்றது. இக்கருத்தை யமைத்தே

"அன்னமிரண்டுள ஆற்றங்கரையினி றன்னியவிரண்டும் துணைப்பிரியா தன்னந் தன்னிலே யன்னந்தனியொன்ற தென் றக்கால் பின்னமடவன்னம் பேறணுகாதே".

என்னுந் திருமந்திரச் செய்யுளை நந்திருமூலநாயனுர் அருளியிருக்கின்றூர். பின்னும் இருக்குவேதம், கo-மண்டிலம் கஉசு-சு.

அவ-ாமெ3வா அஸ்ய விஸஜ-நெ நாயா கொவெஷய த வஹ-வ।

(அர்வாக்தேவா அஸ்ய விஸர்ஜநே நாதா கோவேதயத ஆப பூவ.)

இ-ள். தேவர்கள் உலக சிருட்டிக்குப் பின்னர்தான் உளரானூர்கள். அது எங்கிருந்து உளதாயிற்று என்று யாரறி வார் என வினவி

அவ்வேதமே அடுத்த மந்திரத்தில் (கo-கஉசு-எ)

யொ அஸ்யாஷ்யக்ஷ: வாமெவெ்யாமநாகம்ஜவெஷயதிவா நவெஷ

(யோ அஸ்யாத்யக்ஷ: பரமேவியோமந்சோ அங்கவேத யதிவாநவேத.)

இ-ள். பரமவியோமமாகிய (திருச்சிற்றம்பலத்தின் கண்ணே) எவர் பிரபஞ்சத்துக்கு அத்தியக்ஷராய் நின்றூரோ, அவரே அதனை யறிவார்; மற்றெவரும் அறியார் என, அவ்வினவுக்கு விடையும் கூறிற்று.

இதனுற் பெறப்படும் முடிவு யாதெனில், சிவஞானபோதம் முதற்சூத்திரம் சித்தாந்தப்படுத்தியவாறு சங்காரஞ் செய்யும் இறைவனிடம் சேதன அசேதனப் பிரபஞ்சமெல்லாமொடுங்க, அச்சங்காரகர்த்தா ஒருவரே உளராக, அவரிடம்

நின்றே மீண்டும் அப்பிரபஞ்சந் தோற்றியதென்பதையே ருக்கு வேதங் கூறியதாம்.

நமது பன்னிரெண்டாந் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணத்தில் தில்லைவாழந்தணர் புராணத்தில்

"கற்பனை கடந்த சோதிகருணையே யுருவமாகி யற்புதக் கோலநீடி அருமறைச் சிரத்தின்மேலாஞ் சிற்பரவியோமமாகுந் திருச்சிற்றம்பலத்துணின்று பொற்புடனடஞ் செய்கின்றபூங் கழல் போற்றி போற்றி."

என, ருக்குவேதத்திற்கண்ட பரமவியோமமாகிய திருச்சிற்றம்பலத்துணின்று பஞ்சகிர்த்திய தாண்டவஞ் செய்யும் பரமபதியை, நமது குலதெய்வமாகிய சேக்கிழார் நாயனர், துதித்திருக்கின்றமையையுங் காணலாம்.

நம்மவர் காட்டியபடி ஓரிடத்தில்மட்டும் நந்திருமுறையில் இருக்கு என்ற இருக்குவேதத்தைக் குறிக்கும் மொழி காணப்பட்டதன்று, அநேக இடங்களிற் காணப்படுகின்றது. சில வருமாறு.

க. ஆனபாடலுகந்தது இருக்கையே
உ. இருக்கு வாய்மொழியாற்றனை யேத்துவார்
ங. தொல் கழலீர் சொலீர், பண்டு இருக்கு ஒருநால்வர்க்கு நீருரைசெய்ததே.
ச. முந்தியதேவர் கூடி முறை முறை யிருக்குச்சொல்லி-எந்தை நீசரணமென்று.
ரு. இருக்கு ஓதிமறையவர்கள் வழிபட்டேத்து மிளங்கோயில்.
சு. இருக்கு வாயந்தணர்களெழுபிறப்புளெங்கும் வேள்வியிருந்து இருநிதியம் வழங்கு நகர்.
எ. மெய்ப்பயின்றவர் இருக்கைபே மிழலையூரும திருக்கையே.
அ. இருக்கு வாய்மொழியாற்றனை யேத்துவார் சுருக்குவார்துயர்.
கு. தென்கையான்றேர் கடாவிச்சென்றெடுத்தான் மலையை. முன்கையானரம்பு வெட்டி முன் இருக்கிசைகள் பாட.
க0. இருக்கோடு தோத்திரமியம்பினரொருபால்.
கக. இருக்கு ஒலமிடும் பெருமான்
கஉ. இருக்குமொழிப் பிள்ளையார்
கங. இருக்குமொழி அந்தணரும்
} பெரியபுராணம்.

என்பனவாதிய—இவ்வகளில்—உ-ரு-சு-அ-க0-கஉ-கங. இவ் எண் கொடுக்கப்பெற்ற தமிழ்முறைப் பகுதிகள், அப்பகுதிகள் அருளப்பட்டகாலத்தில் இருக்குவேதம் ஓதப்பட்டுக் கொண்டிருந்ததாக விளக்குகின்றது. இவ்வாக்கியங்கள் இயற்றிய பெருமக்கள் காலம், தற்காலச் சரித்திர ஆராய்ச்சியார் குறிப்பின்படி சுமார் ௲ரு௱ வருடங்கட்குள்ளேயே. நண்பர்

படைக்துரைப்படி இருக்கு என்றதைத் தமிழ் மந்திரமெ
கொண்டால் அம்மறை சுமார் பத்தாயிரம் ஆண்டுகட்கு மு
ன்ரேயே கடல்கோளில் அழிந்து போயிற்றே? நம்பெருமக்
காலத்து அம்மறை எவ்வாறு ஒகப்பட்டு வந்தது. இக
இருக்கு என்பது முக்காலத்தும் நிலைபெற்று நிற்கின்ற ஆர
வேதமேயாமென்க.

இன்னமொன்றுளது. கழிபெருஞ்சிறப்பிற்றாகி, யா
ராலுங் கைக்கொண்டுவருவதுமாகி, மிகச்சிறந்ததாக வைத்து
தினம் முக்காலமும் போற்றப்படுவதுமாகிய காயத்திரி மகாம
திரமெந்த நூலில் ஆகியாகத் தோன்றியது? இருக்குவேதம்
மூன்றாம் மண்டலத்தின் இறுகிப்பதிகத்தினல்லவோ. இக்கா
யத்திரி மந்திரத்திற் காணப்படும் பர்க்க வென்னும் பதம் சிவ
பெருமானைக்குறித்ததன்றோ? பர்க்கன் என்னும் பெயர் சிவ
பிரான் ஒருவர்க்கே உரித்தானதாக அமரநிகண்டினுட் கான
லாமல்லவா? மைத்தாரணிய உபநிடதமும் "பர்க இதிருக்
ரோ பிரம்மவாதிந:" என்று கூறி அச் சொல்லின் ஒவ்வோ
எழுத்துக்கும் பலமுறையான பொருள்கூறி அம்மொழியைச்
சிவபிரான் மேற்றாக நிலைநாட்டி அறுதி கட்டப்பட்டிருக்கி
றது. சித்தாந்த சைவாசாரியராகிய ஸ்ரீஹாதத்த சிவாசாரி
ரென்னும் அந்தணர் பெருமானும், 'காயத்திரி வல்லபத்த
வாத்' என்று சிவபெருமானைக் குறித்துக் காட்டினார்கள்.
அதை மொழிபெயர்த்த நஞ் சிவஞானமுனிவரும், உயர் காயத்
திரிக்குரிய பொருளாதலில் எனவுங் கூறினார்கள். இப்பிரப
பிரமாணங்களோடு முரண்பட்டுத் தத்தம் மனங்கொண்டபடி
பொருளுரைப்பார் உரை கொள்ளற்பாலதன்று.

தற்கால நவீனக்கொள்கையுடையராயினும், எம் நண்பர்
சுவாமி வேதாசலம் அவர்கள், அவர்களியற்றிய திருவாசக விரி
வுரையில், இருக்கு வேதத்திற் காணப்படும் உருத்திரன் என்
னும் பதம், முழுமுதற் கடவுட்குச் (சிவபெருமானுக்கு) சிறந்த
பேராகக் காணப்படுமென்று தக்க பல நியாயங்களுடன் எழு
தியிருக்கின்றார். திருவாசகம் விரிவுரைப் பக்கம்-கூ-௧0௧-ல்
காண்க.

வேதம் சிவபிரான் வாக்காயிருக்க, இருக்கு வேதத்தி
லுள்ள பற்பல சூக்தங்களும் பற்பல முனிவரால் அருளப்பட்
டதாகக் காணப்படுவதற்குக் காரணம் என்னையெனின், வேதம்
சிவபிரான் வாக்கு என்பதற்கு யாதொரு ஐயமுமில்லை. ஆனால்,
இருடிகள் ஒருவருக்கொருவர் பரம்பரையாக உபதேசித்து வந்
தமையான் அவர்கள் கூறினதாகவுஞ் சொல்லப்படுதல் உபசார

மென்றறியவேண்டும். ஆன்றோர் கொள்கையுமிதுவே. பல தெய்வங்கள் வழிபாடு இருக்கு வேதத்திற் காணப்படுவதற்குக் காரணம், அப்பல தெய்வங்களும் சிவபிரானது அஷ்டமூர்த்தங்களாதலின். அன்றியும் வேதம் உலகோர்க்கு இயற்றியதாதலின் உலகோர் மேன்மையும் கீழ்மையுமானப் பற்பல கன்மங்களைப் புரிவோராதலானும் அவரவர்கள் பக்குவத்துக்குத் தக்கபடி தெய்வவழிபாடு வேண்டப்படுமாதலானும், என உணரவேண்டும். தாயுமானப் பெருந்தகையாரும், வினையனந்தங் கருத்தோ வனந்தம் பெற்றபேர் சீரனந்தஞ் சொர்க்க நரகமு மனந்தம் நற்றெய்வமு மனந்த பேதம் திகழ்கின்ற சமயமும் அனந்தம்" என அருளினர். ஏனைத்தேவரைப் பரிவாரராகக் கூறலின், ஓர் அரசனுக்கு அமைச்சர் படைத் தலைவர்களாயுள்ளார் பலரையும் குடிகள் புகழ்ந்து கூறினும் அப் புகழ்ச்சிகளனைத்தும் அரையனைச் சேருமாறுபோல ஏனையோர்க்குக் கூறும் வணக்கமனைத்தும் சிவனையே சேருமென்று கூறுவர்.

"யாதொரு பொருளை யாவரிறைஞ்சினும் மதுபோய் முக்கணுதியை யடையும்" எனும் கந்தபுராணமும் ஈண்டுக் கவனித்தற்பாலது.

திருஞானசம்பந்தமூர்த்திகளது தேவாரப் பதிகங்களில் திருவிருக்குக்குறள் எனப்பேர்பூண்ட பல பதிகங்கள் காணப்படுகின்றன. இப்பெயரெய்தின காரணமென்னை? அதிற் பிரயோகப்படுத்தப்பட்டிருக்கும் இருக்கு என்ற மொழிக்குப் பொருளென்னை? இருக்கு வேதப்பொருளை யடக்கிக் கொண்டிருப்பதனானன்றோ? ஆனல் மற்றைய பதிகங்களில் இருக்கு வேதப்பொருள் இலவோவென்று வினவினால், எல்லாம் இருக்கு வேதப் பொருளென்பதே விடையாகும். ஆனல் திருவிருக்குக்குறள் என்னும் பதிகமானது இருக்கு வேதப் பொருளை அடக்கிக்கொண்டிருப்பதுடன், இருக்கு வேதத்தின் ஒவ்வொரு பாடலும் சூத்திரம போன்று அளவிற் சிறியவும் பொருளிற் பெரியவுமாயிருப்பதுபோல் இப்பதிகங்களினுள்ள ஒவ்வொரு பாடலும் அளவிற் குறுகியும் பொருளிற் பெருகியுமிருப்பதன் நிமித்தமே யென்று பெரியோர் கூறுவார்கள்.

இருக்கு வேதத்திற் சிவபிரானது அதி திவ்விய நாமம் அமைந்திருப்பதையும அவரைப் பசுபதி எனக் கூறியிருப்பதையும், அவரது திவ்விய மங்கள சொரூபத்தை வியந்து வியந்து பற்பல இடங்களிலும் புகழ்ந்திருப்பதையும், அவரே ஏகமான முழுமுதற் கடவுள் என்று நிலைநாட்டி யிருப்பதையும், அவ்

வேதத்தில் ருத்திரன் எனக்கூறிய மொழி மகா உருத்திராகி
சிவபிரானையே குறித்து நிற்கின்றதென்பதையும் பிரமாண
பூர்வமாகக் காட்டினோம். இவ்விசாரத்தால் "அவ்வுருத்தி
ரும் சிவனென்றழைக்கப்படவில்லை" என நம்மவர் எழுதியது
ஆதாரவற்றதே.

ருக்கு வேதத்தில் ஆங்காங்கும், அவ்வேதத்தின் ௧௦-ம்
மண்டலத்திற் பெரும்பான்மையும், சிவ பரஞ்சுடரின் சகள
நிட்கள சொரூப இலட்சணங்களைத் தமிழ்த் திருமுறைகளிலரு
ளப்பட்டிருப்பதுபோல், உருத்திரப் பெயராற் கூறியிருப்பதா
யும், அவைகளுக்குத் தாற்பரியம் எழுதிய பூர்வீகாள் ஏகான்ம
வாதக்கொள்கை பூண்டவர்களானதால் சில விஷயத்தில்பேத
மான வியாக்கியை எழுதியிருப்பதுபோலவும் சைவ சிகாமணி
கள் கூறுகின்றார்கள். அவைகளை முற்றிலும் இங்குக் காட்ட
வேண்டுமென்பதே எமது பேரவா. எமக்கு வடமொழிப் பயிற்
சியில்லாமையான் அவ்வாறு செய்வது மிக்க கஷ்ட சாத்தியமா
யினமையின் இம்மட்டோடே நிறுத்தினம். நிற்க மேலாராய்
வோம்:—

(ஓர் குறிப்பு—நம்மவர் இருக்குவேத விஷயத்தைக்கூறி
அதற்கடுத்து ஆறு அங்கமென்பதைச் சொல்லப்புகுந்து
பிறகு சாமவேத விஷயத்திற்குப் போனார். இருக்கு வேத
ஆராய்ச்சியை முடித்து சாமவேத விஷய ஆராய்ச்சியில் நாம
புகுவாம்.) இனி, நம்மவர் கூறுவதாவது:—

௨௩. "சாமவேதம் என்று வருமிடங்களிலும் அச்சொற்
"றொடரின் பொதுப்பொருளே கொள்ளற்பாற்று. கடவு
"ளைப்பற்றிய இன்னிசைப் பாடல்களை அச்சொல்லால் வழங்கு
"தல் நூல் மரபு. ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் சாமம் என்று
"கூறவேண்டியவிடத்துக் "குறிகொள் பாடலி னின்னிசை"
"யென்று திருவாய் மலர்ந்தருளினமையால் அச்சொல்லின்
"பொதுப்பொருள் விரித்தமை தெளியப்படும். இலங்கை
"மன்னன் வடமொழிச் சாமவேதம் பாடினானென்று கொள்வ
"தினும் இன்னிசை மிக்க பொருட்பனுவல் இசைத்தன
"னென்று கோடலே நமது அறிவிற்கு இசைந்துளது".

"கீதமுறைகளையும் விதிகளையும் வடமொழியாளர்
"உயர்ந்த தமிழ் இசைப்புலவர்களிடமிருந்து தெரிந்துகொண்
"டமை காலஞ்சென்ற கனம் ஆபிரகாம் பண்டிதர் முதலியோர்
"ஆராய்ச்சி நூலால் இனிது விளங்கும்............தமிழகச்சார்
"பாய இலங்கையை அரசாண்ட மன்னன் பண்மிக்க தமிழ்ப்
"பாடல்களையே பாடியிருத்தல் கூடுமென்பது நடுநிலையுடை

குறிப்பு:—56-ம் பக்கத்தில் ௫-வது வரி 'ஆதாரவற்றதே' என்பதற்குப் பின்னர் இப்பக்கத்தையும் அடுத்த 56 b, 56 c, 56 d, பக்கங்களையும் படித்து முடித்த பின்னர் 56-ம் பக்கம் விட்ட பாகத்திருந்து வாசிக்கவேண்டும்.

(௧) [illegible]

கௌரீர்மிமாய ஸலிலாநி தக்ஷத்யேகபதீ த்விபதீஸா சதுஷ்பதீ | அஷ்டாபதீ நவபதீ பபூவுஷீ ஸஹஸ்ராக்ஷரா பரமே வ்யோமந். ருக்-வே-௧-௧௬௪-௪௧.

(௨) [illegible]

கணாநாந்த்வா கணபதிம் ஹவாமஹே கவிம் கவீநாமுபமச்ரவஸ்தமம் | ஜ்யேஷ்டராஜம் ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்பத ஆந: ச்ருண்வந்நூதிபி: ஸீதஸாதநம். ருக்-வே-௨-௨௩-௧

(௩) [illegible]

யதக்ரந்த: பிரதமம் ஜாயமாந உத்யந்த்ஸமுத்ராதுதவா புரீஷாத் | ச்யேநஸ்யபக்ஷா ஹரிணஸ்யபாஹூ உபஸ்துத்யம் மஹிஜாதம்தெ அர்வந். ருக்-வே-௧-௧௬௩-௧.

மேற்காட்டிய இருக்குவேத மூன்று மந்திரங்களும் முறையே பார்வதி தேவியார் விநாயகர் முருகக் கடவுள் இவர்களைக் குறித்தவையெனச் சைவப் பெரியோர் கூறுகின்றார்கள். ஆனால், வேதபாடியஞ் செய்த சாயனர், முதற்காட்டிய மந்திரத்துக்கு, கௌரீ:=மேகத்தி லுண்டாகிற சப்தமெனக் கொண்டு அதற்கு மழை ஜலம் ஒருகால், இருகால், நாற்கால், எண்கால், ஒன்பது காலாகிப் பலவிடத்திற் பரவுகின்றதாயும் மேலான ஆகாயத்திலுண்டாகிறதென்றும்; இரண்டாவதாகக் காட்டிய மந்திரத்துக்கு, ப்ரஹ்மணஸ்பதே=ஓபிரமணஸ்பதயே என வொரு கடவுளரை விளித்து அவரைக் கணங்களுக்குப் பதியென்றும், கவிகளுக்கு முதல்வரென்றும், அன்னத்துடன்

கூடினவர்களுக்குள் மேலானவரென்றும், தோத்திரஞ் செய்தும் உமக்குக் கற்பித்த ஆசனத்தில் உட்காரும் என்றும்; மூன்றாவதாகக் காட்டிய மந்திரத்துக்கு, சுவ-ஹீ=ஒரு குதிரை, யென ஆரம்பித்து அக்குதிரை முன்னால் ஆகாயத்தில் உண்டாகிப் (பின்னர்) ஜலத்திலிருந்து கிளம்பிச் சத்தமிட்டுக், கழுகினது சிறகுகளையும், மானினது கைகளையுமுடையதென்றும், அதனுடைய உயர்ந்த பிறப்பு கொண்டாடத் தகுந்ததென்றும், பொருளை விளக்கியிருக்கின்றார். மேலும், வேதவேதியர்கள் நவக்கிரக அருச்சனை செய்யுங்கால் குரு அல்லது சந்திரன் அருச்சனை ஆரம்பிப்பதற்கு முன், முதற் குறிப்பிட்ட மந்திரத்தை ஓதியே அருச்சனை செய்வார்கள். மற்றும் வைதிக ஒழுக்கமுடைய வேதியர்கள், தாங்கள் செய்யும் ஜெபம், சூரிய நமஸ்காரம், ஹோமம், சுப கர்மாக்கள் யாவற்றுக்கும் முன்னர், விநாயகர் துதியாக இரண்டாவதாகக் காட்டிய மந்திரத்தைத் தொன்றுதொட்டே ஓதி வந்துகொண்டிருக்கிறார்கள். பாஷ்யகாரர் ரூடியாகப் பொருள் வரைந்திருப்பதாக வேதவித்துக்களின் கருத்து. அன்றியும், வடமொழியிலும், தமிழிலும், ஆங்கிலத்திலும், சரித்திர ஆராய்ச்சியிலும், வல்லுனராகிய M. A., L. T., பட்டம் பெற்ற ஒரு விப்பிரசிகாமணியின் கருத்து என்னவெனில், வேதத்திற்குப் பொருள் வரைந்த பாஷியகாரர்கள் கருமகாண்டத்தின் யக்ஞயமாதிகளையே வற்புறுத்திக் கூறியுள்ளார்களென்பதும் ஞானகாண்டப் பொருளாகிய சமயக் கொள்கைகளைக் கூறிற்றிலர் என்பதுவுமே. இஃதெவ்வாறாயினுமாகுக.

பதினெண் புராணங்களிலொன்றாகிய சிவ மஹாபுராணம், கைலாச சம்ஹிதை, பூஜாபலமுரைத்த அத்தியாயத்தில், (கரு-வது பக்கம் பார்க்க) சிவபிரான் தமது சத்தியாகிய மனோன்மனியைப் பார்த்துத் தேவி? உன்னை எமது வாமபாகத்திற் பிரணவ பூர்வமாய் 'கௌரீர்மிமாய' என்னும் மந்திரத்தினால் ஆவாகனஞ் செய்து ஏகாக்கிரச் சித்தனாய்த் தியானிக்கக்கடவன் எனக் கூறினாரெனச் சொல்லியிருக்கின்றது. தேவியினது அருச்சனை மந்திரங்களில் முதன் மந்திரம் 'கௌரியைநம' என்பதே. ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் அம்பிகையை ஸ்தோத்திரஞ் செய்திருப்பதில் 'ஈமௌவ்வாஷிமிஷவிதெ' எனவுங் கூறினார்கள். கௌரி என்றால் கிரிராஜனது புத்திரி யென்பது பொருள். ஆனதால் இம்மந்திரம் கௌரியம்மையார் மந்திரமே. இரண்டாவதாகக் காட்டிய மந்திர விஷயம், பதினெண் உப புராணங்களில் ஒன்றாகிய விநாயக புராணம், உபாசநாகாண்டம், கிருச்சமர் உபதேசம்

பெற்ற படலம் (உசுஉ-ம் பக்கம்), திரிபுரன் வரம்பெறு படலம் (உஎ0-ம் பக்கம்) விநாயக பூஜாவிதியைக் கூறுமிடத்து 'கண னுந்தவா' என்னும் மந்திரத்தை அனுட்டிப்போடு ஜெபித்து வருபவர்களுக்குக் கணேச மூர்த்தியின் திருவருளுண்டாமெனக் கூறியிருப்பதோடு, திரிசுமதரும், திரிபுரனும் அவ்வாறே அம்மந்திரத்தை ஜெபித்து விநாயகரைப் பூஜித்து மேலான பதவியை யடைந்தார்களென்றுங் கூறியிருக்கின்றது. விநாயக மூர்த்தியின் ஸகஸ்ரநாம மந்திரங்களில், கணபதயே நம, ஜ்யேஷ்டராஜாயநம, என்பனவாதிய மந்திரங்கள் காணப்படுகின்றன. ஆனதால் இம்மந்திரம் விநாயகரதே. மூன்றுவது மந்திரம் சுப்பிரமணிய மூர்த்திக்குரியதென்று பம்பாய் நிர்ணய சாகர அச்சியந்திரசாலையில் அச்சிடப்பட்ட இருக்குவேத மந்திர சம்ஹிதை பக்கம் ௫௧-ல், '[illegible]' என்று காணப்படுகின்றது. இம்மந்திர ஆதாரவைக்கொண்டே தைத்திரீய ஆரணியத்தும் பல உபநிஷத்துக்களினும் சுப்பிரமணியக் கடவுளின் பெருமை கூறப்பட்டிருக்கின்றது. இருமொழிகளையும் முற்றுமுணர்ந்த நமது மாதவச் சிவஞானயோகியரும், இவ்வாதாரங்கள் பற்றியே 'முக்கனல் சூழ்வேள்வியிற் சுப்பிரமணிய ஞேமெனவு முக்காற் கூறும்' என அருளினர். சாயனர் இம்மந்திரப் பொருளைக் கூறுங்கால் ஆகாயத்திலும் ஜலத்திலுமுண்டான குதிரை யென்றார். அதற்குக் கழுகின் சிறகும் மான் கைகளுமுளவெனக் கொண்டார். எல்லாம் உருவகமே. ஆகாயமென்றது ஆகாயத்துக்கு அதி தெய்வமாகிய சதாசிவ மூர்த்தத்தை. ஜலமென்றது சரவணப் பொய்கையை. குதிரையென்றது ஸ்கந்த மூர்த்தியின் அவதாரத்துக்கு மூலகாரணமாய்த் தோன்றிய தீப்பொறிகளை

[இருக்குவேதம் க-உஎ-க அஸ்வம் நத்வா வாரவந்தம் வநதத்யா அக்நிம் நமோபி: | ஷ ௩-உஎ-க வ்ருஷோ அக்நி: ஸமித்ய தெஸ்வோ நதேவ வாஹந: | என்னும் மந்திரங்களில் அசுவமென்றது அக்நியேயாமென்று குறிப்பிட்டிருக்கின்றது. ஆதலால் விவாத மந்திரத்தில் காண்கின்ற குதிரையென்றமொழியும் அக்நியைக்குறித்ததெனப்பெரியோர் கூறுநிற்பர். ஒருவராலுந் தாங்கப்படாத வெப்பத்தோடு சிவபிரானிடமிருந்து தோன்றிய அப்பொறிகளே கந்தமூர்த்தியாகப் பரிணமித்தனவெனப்புராணம் கூறுகின்றது.]

கழுகின் சிறகென்றது வேலாயுதத்தை. மான்கைகள் என்றது அவ்வேலாயுதத்தைப் பகைவர் மேற் பிரயோகிக்கும் அதிதீவர வேகத்தை. நிற்க, முதன்மந்திரத்தில், ஒருகால், என்றது சிவமுஞ்சத்தியுஞ் சிருட்டி காலத்துக்குமுன் (ஒருருவாயினை)

என்ற தமிழ்மறைப் பகுதியில் அருளியவாறு நின்ற அவதரத்தை, இருகால் என்றது சத்தியுஞ் சிவமும் பிரிந்து இரண்டாகி விளங்குதலை, நாற்கால் என்றது அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருளையுந் தருதற்குக் காரணமாயுள்ள சத்திபேதங்களை, எண்கால் என்றது அஷ்டமூர்த்தியாய் விளங்கும் அஷ்ட மூர்த்தங்களுக்கும் வேவ்வெறு சத்தியாய் நிற்றலை. ஒன்பதுகால் என்றது நவவடிவமாக விளங்கும் முழுமுதற் கடவுளுருவிற்குபாதானமாகவிருக்கும் சத்திபேதங்களை.

வேதத்தின் உண்மைப்பொருளை யறிவதற்கு நாற்பத்தெட்டாண்டு பிரமசரிய விரதங்காத்துத் தக்க ஆசிரியரிடம் வேதம் வேதாங்கங்களைக் கற்க வேண்டு மெனப்பெரியோர் கூறுவர். லண்டன்மா நகரத்தில் ஓர் ஆங்கிலப் பெருந்தகையார் ௪0-ஆண்டுகளாக ருக்கு வேதம் ஒன்றையே ஆராயப் புகுந்து ஆராய்ச்சி செய்து வருகின்றாராம். இன்னமும் அவ்வாராய்ச்சி முடியவில்லையாம். இக்காலம் நம்நாட்டில் உண்மைப் பொருள் தெரிந்து விளக்குபவர் அரிதாய் விட்டது.

தமிழ்ச் சைவமக்கள், தங்களுக்குப் பிரமாணமாகக் கொள்ளவேண்டிய நூல்கள் தேவாரம், திருவாசகம் பெரிய புராணமுமே. இவைகளில் எல்லாப் பொருளுமடங்கியிருக்கின்றன. ஸ்ரீஞானசம்பந்தப் பெருமான் அருளிய திருப்பாசுரத்தில், 'வேதம் முதல்வன்' என்னுந் திருப்பாட்டிலும், அப்பாட்டிற்கு உரை வகுத்துச் சேக்கிழார் கூறிய 'வேதம் முதல்வனென்னும்' எனும் பெரியபுராணச் செய்யுளிலும் பதினெண் புராணங்களையும் ஓதும்படியாகக் கட்டளை யிட்டருளியபடி, அவ்வாக்கியத்தையே உறுதியாகக் கொண்டு வேதோபபிருங்கணமாகிய மேற்காட்டிய புராணஙகளிற் கூறிய பொருளையே நாம் கொள்வோமாக. சாயனர் முதலிய பாஷியகாரர்களின் கருத்தைவிட வேதோப பிருங்கணங்களாகிய புராணங்களின் பிரமாணமே மேலாயது.

நமது சமயத்தின் உண்மையுமறியாது, இதிகாச புராணங்களின் சரித்திரங்களையும் நம்பாது, கல்வி கற்கத் தொடங்கிய நாண்முதல் மேனாட்டுப் பழக்கங்களையே கைக்கொண்டு பாடியத்தின் ரூடிப்பொருளையே ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்ட ஆங்கில பாஷையிலுள்ள ருக்கு வேதமாதியவைகளைப் படிப்போர் ருக்கு வேதத்தில் சிவம் என்ற பெயரே இல்லையெனக் கூறுவது ஓர் அதிசயமல்ல. இவ்வாராய்ச்சியினால் ருக்கு வேதத்தில் சிவபெருமான் பெயருடன், அவர் பத்தினியார், அவர் மூத்த பிள்ளையார், இளைய பிள்ளையார் இவர்கள் பெயர்களும் காணப்படுகின்றனவென்பது ஒருதலை.

"யார் யாவருடைய அறிவிற்கும் பொருத்தமாவதொன்றாம்.
"தமிழிசையில் இறைவன் மிக்க விருப்பினனென்பது தேவா
"ரத்திற் கூறப்பட்டுளது. "தமிழினீர்மை பேசித் தாளம்
"வீணை பண்ணி நல்ல, முழவமொந்தை மல்குபாடல் செய்கை
"யிடமோவார்," என்ற ஞானசம்பந்தமூர்த்தி திருவாக்கையும்
"உற்று நோக்குக"

* * * *

"ஆசிரியர் தொல்காப்பியனார் காலமாகிய வான்மீகியார் காலத்
"திலேயே இசைக் கருவிகளும் இசைநூலும் தமிழ் நாட்டில்
"நன்கு வழங்கினவென்பது தொல்காப்பியத்துட் குறிப்பினால்
"பலவிடத்தும் உணரக்கிடக்கின்றது.

"அளபிறந்துயிர்த்தலு மொற்றிசை நீடலு
"முளவென மொழிப விசையொடு சிவணிய
"நரம்பின் மறையவென்மனார் புலவர்"—என்ற
"தொல்காப்பியமுங் காண்க.

"இவ்வாறே பிற இடங்களிலும் பொதுப் பொருளில் வட
"சொற்கள் வழங்குவதை உற்றுணர்ந்து அவற்றைத் தழுவிக்
"கொள்ளுதலும் அவற்றின் சிறப்புப் பொருள்களைத் தவ
"றுகத் தழுவி உண்மையைத் திரிவுபடக் கொள்ளாமையும்
"ஒருதலையாய நம்மவர் கடமையாகும்"

என்று சாமவேத விஷயத்தில் தம் மனதிற்குத் தோன்றிய கற்பனைகளைக் கழறினர். இவர் கூற்றை ஆராய்வாம்.—

கடவுளைப்பற்றிய இன்னிசைப் பாடல்களை அச்சொல்லால் (சாமம் அல்லது சாமவேதம் என்ற சொல்லால்) வழங்குவது நூன் மரபு என்று முதற்கண் எழுதினர். தமிழில் இசை, பண் முதலிய சொற்களும், யாழ், குழல் முதலிய இசைக்கருவிப் பெயர்களுமிருக்க, இம்மொழிகளை வழங்காமல் வேறு பாஷையிலுள்ள சாமம் அல்லது சாமவேதம் என்ற பெயர்களால், தமிழ் இன்னிசைப் பாடல்களைக் குறித்து வழங்கப்படவேண்டுவது ஏனோ? இது பொருந்தவில்லை. இவர் கற்பனைக் கூற்றுக்கு யாதும் பிரமாணங்காட்டினாரில்லை. தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நூன்மரபியல் "அளபிறந்துயிர்த்தலும்" என்ற ௩௩-ம் சூத்திரத்தைமட்டும் எழுதிக் காட்டினரே யொழிய அச்சூத்திரம் எவ்வகையில் இவர்கொள்கையை வலியுறுத்துகின்றதென்பதைச் சற்றும் விளக்கினாரில்லை.

இச்சூத்திரம், தமிழ் இசையில் உயிர், மெய், எழுத்துகளுக்குள்ள மாத்திரை அளவின்மீறி ஒலித்தல்போலத் தமிழினது நால்வகைச் செய்யுட்கண்ணும் எழுத்துக்களின்

மாத்திரை அளபிறந்தும் நீண்டும் ஓசை கொடுக்கும் என்பதை யுணர்த்துகின்றது. ஆனால் தமிழகத்துத் தமிழில் இசையும், அதைச் செவிக்கு இன்புறவேண்டிக் காட்ட இசைகருவியுமுண் டென்பதை இச்சூத்திரத்தா லறியலாம். இஃது எல்லாரும் ஒத்துக்கொள்ளும் விடயமே. சாமம் அல்லது சாமவேதம் என் னுஞ்சொல்லால், கடவுளைப்பற்றிய இன்னிசைத் தமிழ்ப்பாடல் கள் வழங்குமென்று ஓர் இலக்கணம் இச்சூத்திரத்தில் கூறி யிருக்கவில்லை. ஆதலின் நான்மரபு என்று நம்மவர் கூறியது அவர் கற்பனைக்கு ஆதாரங் காணப்படாத போதெல்லாம் அவர் கைக்கொள்ளும் அவரது ஓர் வழக்கச்சொல்லாம்.

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் முதலாவது பிறப் பியலில்

"எல்லாவெழுத்தும் வெளிப்படக்கிளந்து
சொல்லிய பள்ளியெழுதரு வளியிற்
பிறப்பொடு விடுவழி யுணர்ச்சிவாரத்
தகத்தெழு வளியிசையரிறப நாடி
யளபிற் கோடலந்தணர் மறைத்தே
யஃதிவணுவலாதெழுந்து புறத்திசைக்கு
மெய்தெரிவளியிசையளவுநுவன்றிசினே."

என்னுஞ் சூத்திரங் காணப்படுகின்றது. உரையாசிரியர் இதற்கெழுதிய பொருளாவது. ஆசிரியன் எல்லாவெழுத்துக் களும் பிறக்குமாறு முந்துநூற் கண்ணே கூறி வெளிப்படுக்கையி னுலே, யானும் அவ்வாறே கூறிய எண்வகை நிலத்தும் பிறக் கின்ற பிறப்போடே அவ்வெழுத்துக்களைக் கூறுமிடத்து, யான் கூறியவாறு அன்றி, உந்தியில் தோன்றுங் காற்றினது திரி தருங் கூற்றின்கண்ணே மாத்திரை கூட்டிக் கோடலும் மூலா தாரத்திலெழுகின்ற காற்றிேைசையைக் குற்றமற நாடிக் கோடலும், பார்ப்பாரது வேதத்துளதே. அந்நிலைமை ஆண் டுணர்க. அங்ஙனங் கூறலை ஈண்டுக் கூறலாகாமையின் இந்நூற் கட் கூறுதே உந்தியிற் றோன்றி புறத்தே புலப்பட்டு ஒலிக்கும் பொருள் தெரியுங் காற்றினது துணிவிற்கே யான் மாத்திரை கூறினேன். அவற்றினது மாத்திரையை உணர்க என்பதே. இதனால் வடமொழி வேத எழுத்துக்கள் உந்தியினின்றும் மூலாதாரத்தினின்றும் பிறப்பன. அவைகளுக்கு மாத்திரை அளபு வேறு, தமிழ் எழுத்துக்கள் உந்தியினின்மற பிறப்பன. அவைகளுக்கு மாத்திரை அளபு வேறு என்று விளங்குகின் றதுமன்றி அவ்வேத எழுத்துக்களின் ஓசையானது மூலா தாரத்தினின்றும் எழுவதானதால் தொல்காப்பியத்துட் கூற லாகாமையின் கூறிற்றிலர் என்பதும் பெறப்பட்டது.

சிவதருமோத்தரம், சிவஞானதானவியலில் அபக்குவர் இன்னாரெனக் கூறுமிடத்துச் ''சந்தபேதமுந் தானறியார்'' என்னுஞ் சொற்றொடர்க்குப் பொருள் ''வடமொழி தென் மொழியாகிய இருவகைச் சந்தபேதத்தை யறியாதோரும்'' எனப்பொருள் கண்டமையின் இருமொழிக்குஞ் சந்தம், பேத முற்று விளங்குமெனப் போந்தமையினானும், இச்செய்யுளின் விசேட உரையிற்காட்டிய வீரசோழியமுடையார் இலக்கணத் தின் மேற்கோளில் வடமொழிச் சந்தம் இருபாறென்றெனக் கூறப் பட்டமையானும், ''இருவிதஞ் சந்தமிவற்றொன்றெழுத்தாலி லக்கு மற்றை, யொருவிக மாத்திரையாலே யொளிருமிது, பொருவரிதாகிய வாரியத்துண்டு பொதியமென்னு, மருவரை மாதவன் கூறுந்தமிழுக்கருகமன்றே'' எனவும் விளக்கினமையா னும், வடமொழிச் சந்தங்கள் தமிழ்மொழிச் சந்தம் போலல்ல மிகவும் பேதப்பட்டு விளங்குபவை யென்பது உறுதியாயிற்று. இவ்வாராய்ச்சியால், சாமவேத மென்னும் வடமொழி நூற் குள்ள சந்தபேதம் வேறு என்பது திண்ணமாய்ப் பெறப்பட் டது. இதனால், தமிழ் மொழியில், தமிழ் இலக்கண முறைப் படி செய்யுளை யியற்றி அதில் சாமம் அல்லது சாமவேதம் என் னும் வடமொழிப் பதத்தை, ''வடசொல் செய்யுளீட்டச் சொல்லே'' யென்ற இலக்கண விதிப்படி, காட்டியிருந்தால் அச்சொற்களுக்கு அவற்றின் பொருளைத் தழுவுதல் தவறு என்று முடிபுக்கு வந்த நண்பர் கூற்றே தவறுதலாம். தமிழ் மொழியில் பண்முதலாகிய சொற்கள் இன்னிசை யென்பதைக் குறிக்க நிலாவவும் அதைச் செய்யுட்களில் வழங்காமல் வட மொழிச் சொற்றொடராகிய சாமவேத மென்னுஞ் சொற்றொ டரை வழங்கினமையானது அச்சொற்றொடருக்கு வடமொழி யில் என்ன பொருளுண்டோ அதைக் குறிக்கவே யென்றுணர வேண்டும். நமது தமிழ் மறையில், சாமம் அல்லது சாமவேதம் என்னுஞ் சொற்றொடரை அதற்கிசைந்த அடைமொழிகளு டன் ஓரிடத்திலா! இரண்டிடத்திலா! பிரயோகப்படுத்தியிருக் கின்றது? இருக்கு என்ற மொழிப் பிரயோகம்போல அநேக இடங்களிற் காணலாம். சிலவருமாறு.

சம்பந்தர்.

க. தயங்கு சோதி சாமவேதா
உ. சாம வேதமோர் கீதமோதியத் தசமுகன்பரவு நாமதேயமதுடையார்
ங. சாகையாயிர முடையார் சாமமுமோதுவ துடையார்.
ச. சாமநல் வேதனும்
ரு. சாமவேதன்

அப்பர்.

சு. சாமுண்டி சாமவேதங் கூத்தொடும் பாடவைத்தார்
எ. பாடினார் சாமவேதம் பைம்பொழிற் பழனமேயார்

௮. சந்தோக சாமமோதும் வாயானை
௯. சாமவேதக் கந்தருவம் விரும்புமே
௧௦. சாமத்து வேதமாகி நின்றதோர் சயம்புதன்னை

சுந்தரர்.

௧௧. சாமவேதம் பெரிது முகப்பானை
௧௨. சாமவேதனைத் தன்னைப்பிலானை

திருமாளிகைத்தேவர்.

௧௩. சாமகண்டா அண்டவாணா என்பனவாகியாம்

மேற்காட்டிய தமிழ்மறை வாக்கியங்களுள் ஒன்றையாவது நம்மவர் எடுத்துக்காட்டி அவரது கொள்கையைத் தாபித்தாரிலர். பொதுவாக சாமவேதம் என்று வருமிடங்களினும் அச்சொற்றொடரின் பொதுப் பொருளே கொள்ளற்பாற்று என்று எழுதிக்கொண்டார். இலங்கை மன்னன் பாடியது பண்மிக்க தமிழ்ப் பாடல்களே என்று கூறினமையானும் தமிழ் இசையில் இறைவன மிக்க விருப்பினன் என்று கூறினமையானும் மேற்காட்டிய தேவாரப் பகுதிகளிற் கண்ட சாமவேதமென்பதற் கெல்லாம் தமிழ் இன்னிசையென்றே பொருள்கொள்ளவேண்டுமென்பது இவர் முடிபு போலும். அது பொருந்துமாவென்பதைப் பார்ப்பாம். இலக்கம் ௨-ல் காட்டிய தேவாரப் பகுதியில் சாமவேதம் என்று சொல்லும்படியான கீதத்தை இராவணன் பாடினான் என்ற பொருள் விளங்கும். மூன்றாவது காட்டிய பகுதியில் சாமவேதம் ஆயிரம் சாகைகளையுடையதென்பதை விளக்கும். எட்டாவதாகக் காட்டப்பட்டிருக்கிற தமிழ்மறைப் பகுதி சாமவேதம், ச்சாந்தோக்கிய உபநிடதத்தை யுடையதென்பதைக் காட்டிற்று. ஒன்பதில் சாமவேதமாகிய கானத்தைச் சிவனார் விரும்புவரென்பது பெறப்பட்டது. பத்தாவது சிவனார் சாமவேத ரூபமாகவே யிருப்பாரென்பதை விளக்குகின்றது. இவ்வாராய்ச்சியால் தேவாரப் பாக்களிலும் மற்றுஞ் செய்யுட்களிலும் காணப்படும் சாம வேதமென்னுஞ் சொற்றொடர் வடமொழிச் சாம வேதத்தையே குறிக்குமென்பது திண்ணம். வேறுவகைப் பொருள் கொள்வது கலிகாலப் பிறழ்ச்சிகளிலொன்றே, தொல்காப்பிய மென்னும் நமது ஆதி தமிழ் இலக்கண நூல் விதிகளுக்கும் மாறுபட்டதே.

இராவணன் பாடியது தமிழ்ப் பாடலென்பது நம்மவர் போன்ற தற்காலப் பிறழ்ச்சி ஆசிரியர்களின் பிறழ்ச்சிகளில் ஒன்று. மேற்காட்டிய இலக்கம், இரண்டிலுள்ள பகுதி, சாமவேதமென்னுங் கீதத்தை இராவணன் பாடினானென்று நன்கு தெரிவிக்கின்றது. இராவணனது சரித்திரங் கூறுந் தமிழ்

இராமாயணத்திலும் பதினெண் புராணங்களுளொன்றாகிய கூர்ம புராணத்திலும் அவ்வாறே கூறப்பட்டிருக்கின்றது. தமிழ் இராமாயணம் உத்தரகாண்டம் வரையெடுக்க படலம், ௧௪௦-வது செய்யுளில் "வான்றிகழ் வெள்ளி வெற்பின்கீழுற்று வருந்துகின்ற, ஊன்றிகழ் வேலினானை யமைச்சர்கா முற்று நோக்கித், தேன்றிக ழிதழியான்றன் றிருச் செவிசார நின்கை, கான்றிகழ் வீணையாகப் பாடுதி சாமமென்றார்" அடுத்த செய்யுளில் "பன்னருஞ் சாமகீதம் பரிவுடன் பாடலுற்றான்" என்று கூறப்பட்டிருக்கின்றது. கூர்ம புராணம் இராவணன் மாபுரைக்க அத்தியாயம் ௫௭-ம் செய்யுளில் "பரமனைப் பழிச்சி வெய்யோனை காணர் சாமகான மறிவொடும் பாடலுற்றான்" என்று கூறப்பட்டுள்ளது. இவ்விரு நூலுமியற்றியோர் தமிழ் மக்களே. இராவணன் இளமைப் பருவத்தில் கல்வி கற்றதைக்கூறிய வமையத்தில் "மனு நூலும் வேதமனை யோராயிரமும் விளங்குங்கலையுந் தசக்கிரீவன் ஓத" வென்றும் இராமாயணங் கூறுகின்றது.

இதனால் இளமைப் பருவமுதல் இராவணன் வேதங்களைக் கற்றறிந்தவனென்று துலங்குகின்றது. தமிழுக்கும் ஆரியத்துக்குஞ் சங்கபேத மிருப்பதோடு ஆரிய வேதத்தின் சங்கந் தமிழுக்குரியதன்று எனவும் தொல்காப்பியத்தால் தெரிகின்றது. ஆரிய பாஷை எல்லோருக்கும் பொதுவான பாஷை. தெய்வ வழிபாட்டுக்கு அப்பாஷை நூல்களே முற்காலத்தில் கையாண்டுவந்திருப்பதாகத் தெரிகின்றது. வான்மீக இராமாயணம் சுந்தரகாண்டத்தில் அனுமார் இலங்காபுரியில் கண்ணுற் கண்ட வளங்களைக் கூறும் அமையத்தில் அந்நகரத்தில் வேதகோஷமும் அக்கினி ஹோத்திரமும் விளங்குவதைக் கண்டதாகவும் அடியிற்கண்ட இராமாயண சுலோகத்தால் விளங்கும். சுந்தரகாண்டம் ௮-ம் சருக்கம்

ஷடங்கவேதவிதுஷாம் க்ரதுப்ரவரயாஜிநாம் |
ஸுஶ்ராவ ப்ரஹ்மகோஷாந் விராத்ரே ப்ரஹ்மரக்ஷஸாம் ||

ஷடங்கவேத விதுஷாம் க்ரதுப்ர வரயாஜிநாம் |
சுச்ராவப்ரம கோஷாந் ஸவிராத்ரே ப்ரம்மரக்ஷஸாம் ||

இராவணன் புலஸ்திய பிர்மாவின் கொள்பேரன். புலஸ்தியன் பிரமனது பேரன். தேவாரப் பாக்களில் மற்றுமிடங்களில் இராவணன் பாடியதைக் குறிப்பிட்டபோதும் "தீதிலா மலையெடுத்த அரக்கன் நீதியால் வேதகீதங்கள் பாடவென்றும்" "முன்கையால் நரம்புவெட்டி முன்னிருக்கிசைகள் பாட" என்றும், "சாமவேத மோர்கீத மோதியத் தசமுகன் பரவுநாம

தேய மதுடையார்” என்றும் சாமவேதத்தையே குறிப்பிட்
ஆரியபாஷை மொழிகளாற் சொல்லப்பட்டிருக்கின்றன
இலங்கை மன்னனைத் தமிழன், தமிழன், என்று தற்காலத்தி
தமிழ் மக்களிற் சிலர் கூறுகின்றார்களே. அதற்கென்ன ஆத
ரம். வடமொழி ஆதாவால் இயற்றப்படாத சங்க நூ
போன்ற தமிழ் நூல்கள் ஏதாவது இராவணன் சரித்திர
கூறும் நூலுண்டா? வடமொழி நூல்களிற்றானே இவன்
சரித்திரமுண்டு. இராவணன் தகப்பன், பாட்டன், அரசு
புரிந்தவர்களா? அல்லது இராவணன், பின் சந்ததியார் அவ
னுக்குப்பின் அரசுபுரிந்தனரா? இல்லையே. அவனது தகப்
பன் பாட்டன் பிரமனது வழித்தோன்றல்களெனச் சரித்திரங்
கூறும்போது என் அவன் ஆரியன் ஆகமாட்டான்? இப்பிர
மாணங்களால் இராவணன் பாடியது சாமவேதமே யெனத்
தாபிக்கப்படுகின்றது. நிற்க, இறைவன் தமிழ்மொழியில்
மிக்க விருப்பினனென்பதற்குத், ‘தமிழினீர்மை பேசி’ என்னுந்
தேவாரத்தைப் பிரமாணமாகக் காட்டினர். இதுசரியே. ஆனால்
இந்தத் தேவாரத்தில் தமிழைத் தவிர்ந்து வேறு பாஷையில்
அவருக்கு விருப்பமிலது எனக்கூறப்பட்டிருக்கவில்லை. அவ்
வாறு எதிர்மறை முகத்தால் கூறியிருந்தாலொழிய நம்மவர்
கூற்று பிரமாணமாகாது. “தென்சொல் விஞ்சமர் வடசொற்
றிசை மொழி யெழினரம்பெடுத்துத் துஞ்சு நெஞ்சிருளேங்கத்
தொழுதெழு தொல்புகலூர்” எனவுஞ் சம்பந்தப்பெருமானே
அருளிய தேவாரப் பாசுரத்தை நம் நண்பர் அறியார்போலும்,
மற்றும் “வேதியனை வேதத்தின் பொருள் கொள்வீணை கேட்
பானை” எனவும் “சாமவேதம் பெரிது முகப்பானை” என்றும்
தமிழ் மறை அருளுவதையும் நோக்கவேண்டும். பெரிய புரா
ணத்திற் கூறப்பட்ட தொகையடியார் ஒன்பதின்மரில், பரம
னையே பாடுவார்களைச் சொல்லுமிடத்துத், “தொகுத்த வட
மொழி தென்மொழி யாதொன்று தோன்றியதே, மிகுத்த விய
விசை வல்லவகையில் விண்டோயும் நெற்றி, வகுத்தமதிற்
றில்லையம்பலத்தான் மலர்ப்பாதங் கண்டமேல், உகுத்த மனத்
தொடும் பாடவல்லோரென்பருத்தமரே” என்னும் நம்பியாண்
டார் நம்பி அருளிய திருவந்தாதியாலும் நம்மிறைவனுக்கு வட
மொழி தென்மொழி யிரண்டிலும் பிரியமென்பது விளங்கும்.
அறுபான் மூவரில் ஒருவராகிய உருத்திர பசுபதி நாயனர்
வடமொழியஜுர் வேதத்திலுள்ள ஸ்ரீருத்திரத்தையே ஓதச்
சிவபிரான் அதைக்கேட்டு ஆனந்தமுற்று அவருக்கு முத்தி
யளிக்கவில்லையா? ஆதலால் தமிழில்தான் சிவபிரானுக்கு
விருப்பம் என நம் நண்பர் கூறுவது பொருத்தமிலதே. ஆப்ர
காம் பண்டிதர் கூற்றை நம் நண்பர் பொருண்மையாகக் கொள்

வாரெனின், யாம் ஒல்காப் புகழ்பூண்ட தொல்காப்பியர் கூற்றையும் ஸ்ரீஞான சம்பந்தராதிமியார்து அருள் வாக்கையும் தலைமேற்கொண்டு அவர்கள் ஆணையின்படி ஒழுகுவோம். தமிழ் மொழியிலேயே சிவபிரானுக்கு விருப்பமென்று கூறும் நம் நண்பர், அவர் ஆத்மார்த்தமாகச் செய்துவரும் சிவஞான பூசையில், அஷ்டோத்தர முதலிய வடமொழி மந்திரங்களை ஏன் சொல்லி இறைவனை அர்ச்சிக்கின்றார். நிற்க, மேலாராய்வாம். இனி, நமமவர் கூறுவதாவது.—

உச. "நான்மறை அவற்றின் கருவிநூல் ஆறு என்னு "மிவற்றினுட்பப் பொருளைத் தொகுத்துணர்த்தினமையால் ""தொகுத்தவனருமறை ஆறங்கம்" என்றருளியதென்க" என வெழுதியிருக்கின்றார். அத்தேவாரச் சுத்த பாடமாவது "தொகுததவனருமறை அங்கமாகமம் வகுத்தவன் வளர் பொழிற்கூக மேவினான்" என்பது, இதில் 'ஆறு' என்னும் எண்ணுப்பொருளைக் குறிக்கும் மொழி கூறப்பட்டிருக்க வில்லை. ஆயினும் அங்கம் ஆறு என்பது நமது மேன்மக்களது மற்றைய தேவாரப் பகுதிகளில் காணப்படுவதான், அவைகளை வைத்துக்கொண்டு நம்மவர் கூறும் விஷயத்தை ஆராய்வாம்.

"ஆறங்கம் என்றவிடத்து அவை வடமொழி வேதக் "கருவிநூல்களாகக் கொளளப்படா................வடமொழி "ஆறங்க நூலோ வெவ்வேறு ஆசிரியர்களால் வடமொழி "வேதம் நான்கும் வகுத்தபின்னர் இயற்றப்பட்ட நூலாகும்" என வெழுதியிருக்கின்றார்.

வேதம், அங்கம், ஆகமம், சிவபிரானால் அருளப் பட்டனவென இவர் காட்டிய மேற்கோளாகிய தேவாரமே கூறுகின்றது. அத்தேவாரத்தில், அங்கம் வடமொழி வேதக்கருவி நூல்களாகக் கொள்ளப்படாவென்று கூறுகின்றதா? அல்லது வடமொழி ஆறங்க நூலோ, வெவ்வேறு ஆசிரியர்களால் வடமொழி நான்கும வகுத்தபின்னர் இயற்றபபட்ட நூலாகும், என்றுவது கூறுகின்றதா? இல்லை. தேவாரப் பாக்களுக்கு இவர் விபரீதப் பொருள் கொண்டு மயக்கத்தைக் கொடுக்கும் ஒரு நவீனக் கொள்கையைத் தாபிக்கப் புகுந்தவரானதால் மேற்கண்டவாறு எழுதினார்.

ஆறு அங்கம் இல்லாவிடத்து வேதப்பொருள் காணுமாறில்லை. அதனாலன்றோ, சிவபிரான் வேதத்தை ஆதியில் அருளினார் என்று கூறும் தேவாரப் பகுதிகள், அங்கத்தையுங் கூடவே சேர்த்துச் சொல்லுகின்றன. "பதினெட்டொடு நான்குக் குணர்வுமாய் நால்வேத மாறங்கந் தெரித்தானை"

என்றதன் பொருளைக்கண்டு அறிக. சிவபிரானருளிய ஆ அங்கமே வெவ்வேறு ஆசிரியர்கள் மூலமாய் வெளிப்பட் தென்றுணரவேண்டும்.

"தமிழர் கருவிநூல் ஆறினுக்கும் நேராக ஆறு அங் "நூலை வடமொழியாளர் வகுத்துக்கொண்டனர் என்பது "யூகித்தற்குரியது" எனவும் நம்மவர் எழுதியிருக்கின்றார். தமிழர் கருவிநூல், ஆறு இருந்தனவென்பது நம்மவர் க பனையே தவிர அதற்கு ஆதரவு ஒன்றுமில்லை. இதுகாறு தோன்றிய பெருமக்களில் ஒருவரும இவ்வாறு கூறியதுமில்லை. முற்காலமிருந்ததும் இக்காலமிருப்பதும் வடமொழி ஆறங் கமே. சம்பந்தப்பெருமானும் அப்பமூர்த்தியும் பற்பல சிவ தலங்களுக்கு எழுந்தருளியபோது ஆங்காங்கு அந்தணர்கள் வேதமோடு ஆறங்கத்தையும் ஓதினதைக் கண்டும் கேட்டும், அவர்களருளிய தேவாரப்பாக்களில் நன்றாய்க் கூறியிருக்கி றார்கள்.

"அங்கமும் வேதமுமோது நாவர் அந்தணர் நாளுமடி பரவ" எனச் சம்பந்தரும்,

"அங்க மாறுமருமறை நான்கும் தங்கு வேள்வியர் தாம் பயிலும் நகர்"

என அப்பமூர்த்திகளும் திருவாய் மலர்ந்திருப்பதனுல் அறியலாம்.

"தொகுத்தவனருமறை, அங்கம் ஆகமம் வகுத்தவன்" என்ற தேவாரப் பகுதியில், மறையைத் தொகுத்தவன் அங்கம் ஆகமத்தை வகுத்தவன் எனக் கூறியிருபபதின் நுட்பம் ஆயத்தக்கது.

வேதத்தைச் சுருக்கமாகவும் ஆழ்ந்த கருத்துடனும் சூத்திரரூபமாகத் தொகுத்தும் அங்கத்தையும் ஆகமத்தையும், வேதத்திற்குப் பாஷ்யமாக விரித்தும் கூறினர் என்பது அதன் பொருளென உணரவேண்டும். நிற்க மேலாராய்வாம்.

உரு. இனி, நம்மவர் கூறுவதாவது.— "தமிழ் மறை என்ற சொல்லுக்குப் பொருளாய்தல்வேண்டும்" என முதலி லெழுதிக்கொண்டு பின்பு ஏதேதோ எழுதியிருக்கின்றார். சைவ சமய பரிபாலகரான அநபாய சோழமகாராஜன் நந் தமிழ்ச்சைவ நாட்டை ஆளுயபோது சற்று ஏறக்குறைய ஆயிரமாண்டுகட்கு முன்னர் நடராஜப்பிரபு, அடியெடுத்துக் கொடுத்தும் உள்ளத்தினின்றுணர்த்தவும், சேக்கிழார் பெரு

மான் அருளிய பெரிய புராணத்தில் சம்பந்தமூர்த்திகள் புராணம் ௩௧௧௬-வது செய்யுளிலும் ௬௨௨-வது செய்யுளினும் ௬௪௫-வது செய்யுளினும் முறையே, தமிழ் மறையாம் பதிகம் பாடி என்றும், அருந்தமிழ் மாமறைபாடி யென்றும், இன்றமிழ் மறை தந்தாரை என்றும், அருளப்பட்டுத் தமிழ்மறையென்பது ஸ்ரீஞானசம்பந்தமூர்த்திகளருளிய தேவாரப் பதிகங்களென்று வரையறுத்து இறுதிகட்டப்பட்டிருக்கின்றது. பின்னர்த் தோன்றிய சந்தான ஆசாரியர்முதல் சிவஞான முனிவர் ஈறுயுள்ள தெய்வத் தன்மைவாய்ந்த சைவப்பெருமக்களும் ஏனைய சைவப் புலவோர்களும் இதுகாறும் அவ்வாறே உறுதியாய்க் கொண்டிருந்தார்கள். இவற்றிற்கெல்லாம் முரண்பட நம்மவர் இப்போது தமிழ்மறை இன்னதென்பதை ஆராயப் புகுந்தனராம். இதுகாறும அமைதியோடு இருந்த சைவ உலகத்தை ஏதோ பேதப்படுத்துவதற்கு எத்தனம்போலும். அவர் கூற்று எவ்வகைத்தென்பதை ஆராய்வாம்.

அவர் எழுதுவதாவது.— "வேதம் என்ற சொல்லைத் "தத்தம் சமயநூல்களைக் குறிப்பதற்குப் பலசமயத்தாரும் "வழங்கிவந்தனர் என்பது, சிலப்பதிகாரம் நாடுகாண் காதை "யில் "ஓதிய வேதத்தொளியுறி னல்லது போதார் பிறவிப் "பொதியறையோரென" என்றவிடத்து 'வேதத்தொளி "யென்பதற்கு அருகன் ஆகமமாகிய விளக்கொளி என்று "பொருள்' கொளளப்படுதல் பற்றியும் அருகக் கடவுளை வேத "முதல்வன் என்றவிடத்து ஆகமமூன்றிற்கு முதலாயுள்ளவன் "என்று பொருள் கொள்ளுதல்பற்றியும் உணரப்படும். இன் "னும் அருகனை 'சிவகதி நாயகன்' என்றும், காமனை வென் "றோன், என்றுங் கூறினமை உற்று நோக்கத்தக்கது."

"தேவாரத்துள் சிவபெருமானை "புலன்களைந்தும் "வென்றான்." என்றுங் கூறியதையுங் கருதுக. தற்காலத் "தில் மஹமதியர்களும் கிரிஸ்தவர்களும் தத்தம் சமயநூலை "வேதம் என்ற சொலலால் வழங்குவதுங் காண்க. இவ்வாறே "ஆகமமென்ற சொல்லைப் பண்டை நாட்டொட்டுத் தத்தம் "சமயநூலைக் குறிப்பதற்கு ஒவ்வொரு சமயத்தாரும் வழங்கி "வந்திருத்தல் தெளிவு. புத்தர்களும் சமணர்களும் தமது "சமய நூலையே ஆகமமென்ற சொல்லாற் குறித்தமை வெளிப் "படை. ஆசிரியர் பரிமேலழகர், எல்லாச் சமயநூற்கும் "ஒப்பமுடிந்ததென்று கருதுமிடங்களிலெல்லாம், எல்லா "ஆகமங்கட்கும் ஒப்பமுடிந்ததென்று கூறுதல் இதற்கு ஒரு "சிறந்த சான்றும். ஸ்ரீநீலகண்டாசாரியார் தமது பாடியத்தில்

" "வேதோபி சிவாகம:" என்றவிடத்து வேதம் என்பதே சிவாக
" மமெனப்பட்டது. இன்னும், ஸ்ரீ ஞானசம்பந்தப்பெருமான்,
" "வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலை சிவமாகப் போதத்
" தால் வழிபட்டான்," என்றவிடத்தும் அப்பொருள் கொள்
" ளற்பாலது. என்னை ? சிவாகமமே இவ் வழிபாட்டிற்குரிய
" மந்திரம் கிரியை பாவனை என்பவற்றை விதித்தலானும்,
" அவற்றுட்போந்த மந்திரங்களே வேதத்துட் பயிலுதலானு
" மென்க."

" இதுகாறுங் கூறிப்போந்த வரற்ருன், வேதம் என்ற
" சொல்லும் பிறவும் பல சமயத்தாராலும் தத்தம் நூலுள
" வழங்கப்படுமிடத்து, இவைபுபற்றி அம்மொழிகட்குப்
" பொருள் கொள்ளவேண்டுமென்பது வற்புறுத்தப்பட்டது"
என்று எழுதியிருக்கின்ருர். இவற்றை ஆராய்வாம். 'தமிழ்
மறையென்ற சொல்லுக்குப் பொருள் ஆய்தல் வேண்டும்' என
ஆரம்பித்துக்கொண்டு, புறச்சமயத்தார்களும் அவரவர் மதக்
கொள்கை நூல்களை வேதம், ஆகமம், ஆகிய சொற்களால்
கூறுகின்ருர்களென்பனவற்றை மத்தியில் வித்தாரமாயெழுதி,
இவைபுபற்றி அம்மொழிகட்குப் பொருள் கொள்ளவேண்டு
மென்பது வலியுறுத்தப்பட்டதுஎன முடிவில் நம்மவர்
எழுதிய நோக்கம் யாதுபற்றியென யூகிக்குமிடத்துத், தேவார
மாதிய தமிழ்ச் சைவத் திருமுறைகளில் பலவிடங்களிலும் நம்
பெருமக்கள் எடுத்தாண்டுவந்திருக்கிற வேதம், நான்மறை
ஆகிய மொழிகட்கு இவைபுபற்றி இவர் நவீனமாகக் கண்ட
ஆதாரவற்ற தமிழ் முனிவர் நால்வர் செய்த தமிழ் நான்மறை
யெனப் பொருள் கொள்ளவேண்டுமென்று வற்புறுத்திக்
காட்டுவதற்கே யெனத் தெளிவாய் விளங்குகிறது. இவர், இவ
ரது கல்வித் திறத்தால் என்ன சொற்ருலும் பொய் பொய்யே
யாம். மெய் மெய்யேயாம். ஆனல் புறச்சமயத்தார் அவ்வாறு
கூறுவதற்குள்ள காரணங்கள் இன்னவையென விளக்கிக்
காட்டுவது இன்றியமையாததாயிருப்பதால் அவ்விஷயம்
சற்று விவகரிப்பாம்.

ஏற்கனவே காட்டப்பட்டிருக்கிற பற்பல பிரபலப்பிர
மாணங்களால், நமது வேதம், ஆகமம் உலக சிருஷ்டியின்
போதே, சிவபெருமானல் ஆக்கப்பட்டனவென்பது தெளியப்
படும். இந்நூல்களால் ஆதரிக்கப்பட்டு இராஜாங்கத்திலமர்ந்து
விளங்கும் நமது சமயக் கொள்கையே உலகத்தில் அனுசரிக்கப்
பட்டு வரும் மற்றைய சமயக் கொள்கைகட்கு முந்தியது. புத்த
மத நூலோ இன்றைக்கு உகூடுா ஆண்டுகட்கு முன்னரும,
கிறிஸ்து மத நூலோ ஆயிரத்துத் தொளாயிரம் வருடத்துக்கு

பின்னரும் உண்டா
முன்னரும், மஹமதிய மத நூல் அதற்குப்
பவை. ஆனல் ஆங்கிலக் கல்வி வாயிலாக மேல் நாட்டுச் சரித்
திரம் கற்றவர்கள் நம் வேதமாகிய உற்பத்திக்கும் ஓர் கால
அளவை, அதாவது: ஏழாயிரத்து இருநூறு வருடங்கட்கு
முன்னர் என்றும் கூறுவர். உலகமே உற்பத்தி ஆகி சுமார் வரு
டம்தான் ஆயிற்று என்பது மேல்நாட்டுச் சமயத்தோர் கூற்று.
அக்கால அளவுக்குட்படுத்திய நமது சமயக்கொள்கையின்
காரியங்களையெல்லாம் அவர் கூறுவர். பூத தத்துவ, வான
தத்துவ சாஸ்திரங்களிற் பேர்பெற்று ஆங்கிலமுங் கற்ற யம்.
பிலண்டிட்டு என்றவர் பாரிஸ் நகரத்தில் செய்த பிரசங்கத்தில்
சரியான பிராணிகள் ஜெநித்தற்கு ஐந்து கோடி வருடமா
யிருக்கவேண்டுமென்று அதற்குத் தக்க பிரமாணங்களுடன்
சொல்லியிருக்கின்றார். அதனை வலியுறுத்தி ஸ்ரீமத் பாம்பன்
சுவாமிகளும் எழுதியிருக்கின்றார்கள். மேல் நாட்டார் நமது
நூல்களைப் பயின்ற பின்னர், உலகம் சிருட்டிக்கப்பட்டு சுமார்
ஆண்டுதான் ஆயிற்று என்று கூறும் அவர்கள் சமயக்கூற்றை
நம்பாதவராகி அவர்களிற் பற்பலர்களும் பற்பல விதமாக
ஆராய்ச்சி செய்துவருகின்றார்கள். நமது சமயக்கொள்கை
நூல்களோ, உலகம் சிருஷ்டிக்கப்பட்டு, நூற்றுத் தொண்ணூற்
றைந்து கோடியே ஐம்பத்தெட்டு லெட்சத்து எண்பத்து
நாலாயிரத்துத் தொளாயிரத்தெண்பத்தொன்பது ஆண்டுகள்
ஆயிற்று என்று கூறும். இக்கணக்கைப் பின்பற்றும் நாம் மேல்
நாட்டுச் சரித்திர ஆராய்ச்சியை நம்புவமோ? கிறிஸ்து மதம்,
மஹமதியமதம் நம் தேயத்திலுண்டானவையல்ல. நமது பாஷை
யும் அச்சமயங்கள் பிறந்த நாட்டிற் கிடையா. அவர்களது
பாஷையிலெழுதப்பட்ட அவர்கள் சமய நூல்களில் வேதம்,
ஆகமம், எனும் மொழிகளே இல்லை. இருக்க நியாயமுமில்லை,
நம்தேயத்துக்கு அவர்கள் வந்தபிறகு நமக்குள்ள சமய நூல்கள்
வேதம், ஆகமம் என்னும் பெயரால் வழங்கப்படுவதைக் கண்டு,
அவர்கள் சமய நூல்களை நம்மொழியில் மொழி பெயர்த்த
போது, வேதம், ஆகமம், எனும் பெயர்களை அவர்களும்
இரவலாகப் பெற்றுக்கொண்டார்கள்.

உண்டாயது, அதை
புத்த சமயமோ நம் நாட்டில் நமது
உண்டாக்கியோரும் நம்மவரே, அவர்கள் பாஷையும்
பாஷையே, அப்பாஷையிலேயே அவர்களது சமய நூலும்
எழுதப்பட்டுளது. அவர்களது சமயம் உண்டானதற்கு
முந்திய அநாதியாயுள்ள நஞ்சமயக்கொள்கையை விரிக்கும்
நூல் வேதம் ஆகமம் என்பதையும் அம்மொழிகட்குள்ள
மேலான பொருளையும் உணர்ந்து அப்பெயர்களை அவர்கள்

தங்கள் சமய நூல்களுக்கும் கொண்டார்கள். அருகனைத்
கதி நாயகனென்றுங், காமனை வென்றோனென்றுங் கூறுவது
நம் வேதாகமங்களில் முழுமுதற்கடவுளைச் சிவமென்னும்
ளச்சொல்லால் கூறியிருப்பது பற்றியே. காமனை வென்றோ
ஆகிய மொழிகளும் நமது வேதாதிகளிலிருந்து இரவல் வ
கியவையே. சிவமென்ற மங்களச் சொல்லை விரும்பாத
முளரோ? கிருஸ்து நாதர் குழந்தைப் பருவமாயிருந்தபோ
அவரை ஈன்ற மரியம்மையார், எஞ்சிவமே யென்று அக்கு
ழந்தையை அருமையாக அழைத்ததாகத் 'தேம்பாவணி' என்னு
கிறிஸ்துமதத் தமிழ் நூலின் ஓர் செய்யுள் கூறும்.

நமது வேதாகமம் பதிநூலென்றும் மற்றைய ச
நூல்கள் பசுநூலென்றும் கூறும் சிவதரு மோத்தரச்செய்

"அற்பாயு ளார்க்கென்றே யமலன்வேத மாதிதனைத் தொ
கறைந்தாலுபோது மிவற்றை, நிற்பாருஞ் சிலர் நில்லாக்குரம்பைதன்
நிலையெனவே கருதியவப்பசு நூறன்னைக், கற்பாருஞ் சிலர
கழலும் வாக்கைக் கருதாதே யவனதடிக்கமலந்தன்னைப், பொற்பாரு
கருணையினுன் மற்றை நூலாற் பொருந்துதலுமரிது மலம் போ
ருறும்."

என்னுந் திருப்பாடலால் அறியலாம். இனி, அவர் எழுதியிரு
பதை ஆராய்வாம்.

உகூ. "இனி மறையென்பது மறைவாகிய நுண்ணி
"உண்மைப் பொருளை யுணர்த்துவதென்னும் பொரு
"ளுடைமையால் அத்தகைய வண்மொழியாகிய மந்திரங்க
"யும் ஞான நூல்களையும் அது குறித்து நின்றது. தமிழ்
"பண்டை நூல்கள், நூல், உரை, பாட்டு, பிசி அங்கதம், மு
"மொழி, மறை என எழுவகைப்படுமென்றும் "நிறைமொ
"மாந்தர் ஆணையிற் கிளந்தது மறைமொழி" யென்றும் ஆசி
"யர் தொல்காப்பியர் செய்யுளியலுட் கூறிப்போந்தமைய
"லும் 'மறைமொழிதானே மந்திரம்' என்றவிடத்து ஆசிரி
"நச்சினார்க்கினியர் "மறைமொழி யென்றது தமிழ் மந்திர
"களை, அவற்றை வல்லார் வாய்க்கேட்டுணர்க என்று கூறினமை
"யானும் தமிழில் அப்பெயர்த்தாகிய நூல்கள் பெரியோரால்
"இயற்றப்பெற்றுத் திகழ்ந்தனவென்பது தெளியப்படும்.
"மறைமொழிகள் அடங்கிய நூல் மறையெனப்படும். மறை
"மொழியையே மறையென்றலும் ஒன்று. அது "மறையிடை
"வைத்த வேதம்" என்ற தேவாரப்பகுதியான் உய்த்
"துணர்க" என எழுதியிருக்கின்றார்.

மறையென்பது மறைவாகிய நுண்ணிய உண்மைப் பொருளை யுணர்த்துவதென்னும் பொருளுடைமையால் அத்தகைய வன்மொழியாகிய மந்திரங்களையும் ஞானநூல்களையும் அது குறித்து நின்றது என முதற்கண்ணே மறையெனுஞ் சொற்கு ஒருவரையறை கற்பித்துக்கொண்டார். தமிழ்ப் பண்டைய சொற்களுக்குப் பொருள் கொள்வதில், சுருதி, யுக்தி, அநுபவம் மூன்றுக்கும் பொருந்துமாறு உரைவிரிப்பதுவே பொருத்தமாம். நம்மவர் கூறிய பொருள் ஒருவகையாலும் ஆதரிக்கப்படவில்லை. தமிழ் நிகண்டு ஆசிரியர்களில் முதல் ஆசிரியர் திவாகரர். இவர் காலம் சுமார் ஆறுநூறு ஆண்டுகட்கு முன்னர். கடைச்சங்க மிறுதியடைந்த காலத்துக்குச் சமீபமென்றுஞ் சொல்லலாம். வடமொழி தென்மொழியில் மிக்க வல்லுனர். இவரியற்றிய திவாகரமென்னும் நிகண்டில் "மறையே வேதமும் மறைத்து மொழிகிளவியும்" எனச் சூத்திரம் வகுத்தார். இவர்காலத்துக்கு முந்தியிருந்த நிகண்டையோ, அல்லது பண்டைய நூல்களின் ஆட்சியையோ, ஆதாரமாகக்கொண்டு இவர் இந்நூலியற்றினரே யொழிய, ஆதியாயுள்ள தமிழ் மொழிகட்குச் சுயமாக இவர் பொருள் வகுத்தவரல்லர். அன்றியும் வேதம் என்றசொற்குப் பரியாய நாமங்களைக் கூறுங்கால் "சுருதி, மறை, சாகை எழுதாக் கிளவி" எனவும் கூறப்பட்டுளது. 'மறையே வேதமும்' என்றதில் வேதமென்னுஞ் சொல் வடமொழி வேதமென்றே தெளிவாய்க்கிடக்கின்றது. இச்சூத்திரத்தைத் தொடர்ந்தே முதல் வேதத்தின் பெயர்; அதற்கடுத்தது உ-ம் வேதத்தின் பெயர், இவ்வாறு நான்கு வேதங்களையும் அவற்றிற்குள்ள பல பெயர்களோடு சூத்திரங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன. தமிழ்ப் பண்டைய நூல்களில் மறை யென்ற மொழி காணப்படுமிடங்களிலெல்லாம் முன்பின் அடைமொழியால் வேறு பொருளைச் சிறப்புத் தன்மையாற் குறியாதவரை, வேதம் என்றே பண்டைய உரையாசிரியர்கள் பொருள் கண்டார்கள். யுக்தியாய்ப் பார்க்குமிடத்தும் மறையென்ற சொல் வினைச்சொல் ஏவலில் வந்தால், ஒளித்திரு, ஒளித்துவை, என்பதுவே அச்சொல்லிற்கு உரித்தாகி உடனிகழும் முதற்பொருளாம். வினைமுதலாகப் பிறந்த மறையென்னும் மொழியைப் பெயர்ச் சொல்லாகக்கொண்டால் மறைவாயுள்ள எப்பொருளையுங் குறிக்கும். அதனாற்றான் மந்திரம் இரகசியம் என்ற பொருள் இச்சொற்கு ஏற்பட்டது. நம்மவர் ஞானநூல்களையும் அது குறிக்குமென்றார். இது பொதுத் தன்மையாய் நின்று எந்த ஞான நூலைக்குறித்தது எனுங்கடாவுக்குக் காரணமாய் நிற்பதாக ஆகின்றது. வேதம் என்றே

"காரியமா யுலகமெலா மிருத்தலாலே கடாதிகள்போற் காரிய கர்த்தா வொருவன் வேண்டும், ஆரியமா யறம்பொருளோடின்ப வீடெல்லா மறைந்துயிர்கட்கறிவு செயலளிப்பது நூலந்நூல், சூரியர்களாயுள்ளவர்களோத வோதிக் கொண்டவையலான் முன்னே குற்ற மின்றிச், சீரிய பேரறிவுடையோன் செப்பவேண்டுஞ் செயலினுக்குக் கரிவேண்டுஞ் சிவனுளனென் றறியே"

என்ற சிவஞான சித்தியார்ச் செய்யுளில் அருணந்தி சிவனார் காரண காரியங்களைக்கொண்டு சாதித்து அறமாதி நான்கையு மறைவது சிவபெருமானருளிய வேத சிவாகமங்களே யென்றும் அவை வடமொழிகளிலாயவை யென்றும் தெளிவாய் விளக்கியிருக்கின்றார். நந்தி யெம்பெருமான் திருவருள் பெற்ற நான்மறையோகியர் ஒருவர் அகத்தியனைக் காணும் பொருட்டுக் கைலையினின்றும் தென்னாட்டுக்கு எழுந்தருளியவர், திருவாவடுதுறைக்குச் சமீபத்தல பசுக்களை மேய்த்துக் கொண்டிருந்த மூலன் என்ற பெயருடைய ஓர் இடையன், காலகதியாய் மரணமடைய அதனாற் பசுக்கள் அடைந்த துயரத்தைக் கண்ணுற்று அத்துயரத்தை நீக்கும்பொருட்டுத் தமது யோக சக்தியால் அவனுடலிற் புகுந்து பசுக்களது துயரத்தை நீக்கியபின்னர் தாஞ் சேமித்துவைத்த தமது உடலைக்காணாது அதற்குக் காரணம் என்னவெனச் சிவயோகக் காட்சியினால் ஆய்ந்தபோது அவர் அறிவில் உணர்ந்ததைக் கூறும் அமையம் சேக்கிழார்மூர்த்திகளருளிய செய்யுளாவது.

"தண்ணிலவார் சடையார்தாந் தந்தஆகமப்பொருளை, மண்ணின்மிசைத் திருமூலர் வாக்கினாற் றமிழ் வகுப்பக், கண்ணியவத் திருவருளா லவ்வுடலைக் கரப்பிக்க, வெண்ணிறைந்த வுணர்வுடையாரீச ரருளென வுணர்ந்தார்."

இச்செய்யுளில் ஆகமம் என்ற சொல் வேதங்களையுங் குறிக்கும், ஏனெனில் நான்மறையோகியர் என அவரை முன்னமேயே பெரிய புராணம் குறிக்கின்றது. ஆகமங்களைத் தமிழில் இயற்ற இவரது உடலைச் சிவபிரான் கரப்பித்தார் என இச் செய்யுள் கூறுவதால், இவர் முந்தியே கற்ற ஆகமமும் நான்மறையும் தமிழல்ல, வடமொழி, என்பதைத் தெரிவிக்கின்றது. திருமந்திர மாலையில் திருமூலர் வரலாறு என்னும் இயலிற் காணப்படுஞ் செய்யுளாவது.

"பின்னை நின்றென்னே பிறவிபெறுவது
முன்னை நன்றாக முயல்தவஞ் செய்கிலர்
என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே"

இம்மந்திரச் செய்யுளையும் மேற்காட்டிய பெரிய புராணச் செய்யுளையும், பெரிய புராணத்தில் இப்பெரியோர் கைலை

பினின்றும் தென்திசை புகுமுன்னர் இவரை நான்மறை யோகிகளென்று சொல்லியிருப்பதையும், கூர்ந்து நோக்கில், திருமூலர்க்கு மாதா வயிற்றில் ஜனித்த பிறப்பு நான்மறைக் குரிய அந்தணர் குலமென்றும், குலம் தேகத்தொடக்குள்ள வரைமட்டுமேயாதலால், அத்தேகத்தோடே அக்குலம் விடு பட்டுப் போயிற்றென்றும் பின்னர் மூலனது குலமே இவர்க் கெய்தியதென்றும் அதனால் இம்முனிபுங்கவர் யோக உணர்ச்சி யால் தமக்கு மூலனது தேகத்தை இறைவன் கொடுத்ததைப் "பின்னை நின்றென்னை பிறவி பெறுவது" என வியந்தோதி இறைவனது வேதாகமப்பொருளைத் தமிழிற் செய்யும் பொருட்டென அறிந்துகொண்டாரென்பதும் நன்கு விளங் கும். சேக்கிழார் புராணம் ௪0-வது செய்யுளில் இந்நாய னாரைக் கோபாலர் மாடு எனக்கூறியிருப்பதன் கருத்தும் உற்றுநோக்கத்தக்கது. இவ்வாராற்றுவழி இச்சிவயோகியார் மூலன் என்னும் பெயருடைய இடையனது உடலிற்புகுந்த படியேயிருந்து திருமூலர் என்னும் பெயரை யெய்திக் திரு மந்திரமென்னும் அரிய தமிழ் நூலை அருளிச்செய்தார். அந் நூலில் வேதச்சிறப்பு என்னும் இயலில் அடியிற்காட்டி யிருக்குஞ் செய்யுள் காணப்படுகின்றது.

"வேதத்தை விட்ட அறமில்லை வேதத்தின்
ஓதத் தகுமறமெல்லா முளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடு பெற்றார்களே"

இச்செய்யுளால், வேதத்திலில்லாத பொருள் ஒன்றுமில்லை. இவ்வேதத்தை ஓதி அறிவுள்ளோர்கள் வீட்டு நெறியடைந் தார்கள், என விளங்குவதால், அத்தகைய மகிமைபொருந்திய நான்மறைகளையுங் கற்ற பெரியோன் அதங்கோட்டு ஆசான் என்பதைக் குறிப்பிக்கின்றதேயொழிய வேறுவகையிலல்லை. இருமொழியையும் முற்ற உணர்ந்த சிவஞான முனிவராகிய தமிழ் முனிவர் அவர் இயற்றிய தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தியில் "வடநூலுணர்ந்தார்க்கன்றித் தமிழியல்பு விளங்காதென்பது முணர்ந்தோர்கட்கன்றே பாயிரத்துள் "ஐந்திரநிறைந்த தொல்காப்பியன்" என்றதாஉமென்க" எனவெழுதியிருப்பதை நோக்கின், தமிழ்த் தொல்காப்பி யத்தை உள்ளவாறறிதற்கு, வடமொழிப்பயிற்சி இன்றி யமையாதென்பதும் விளங்கும். தமிழில் நான்மறை யென்னு மொரு நூல் ஆதிமுதல் தமிழ்நாட்டில் இருந்து பஃறுளியாறு முதலியவற்றைக் கடல்கொண்டபோது, முதற் சங்கநூல்கள் அக்கடல்கோளில் மறைந்தவைகளுடன், இத்தமிழ் நான்மறை யும் மறைந்துபோயினவென்று நம்மவர் கற்பிக்கின்றார். தொல்

காப்பியம் இயற்றப்பட்ட காலம் ஆதியூழியின் அந்தத்தெ
றும் அக்காலம் நிலந்தரு திருவிற் பாண்டியன் அரசாட்சிக்
மென்றுந் தெரிகின்றது. ஆதியூழியில் அரசாண்ட பாண்
கள் காய்சினவழுதி முதற் கடுங்கோனீருக வெண்பத்தொ
பதின்மர் எனப் பண்டைய நூல்கள் தெரிவிக்கின்றவாறு, ஆதி
யூழியின் கடைசியில் அரசாண்ட பாண்டியன் கடுங்கோன்
என்பனுவான். ஆதலால் நிலந்தருதிருவிற் பாண்டியன் வெ
போன் கடுங்கோனுக்கு முந்தி அரசாண்டவனுகுவான். இத
னுல் நிலந்தரு திருவிறபாண்டியன் காலமும், அதங்கோட்
டாசான் காலமும், தொல்காப்பியர் காலமும் ஒரே காலமெ
பது விளங்கும். அன்றியும் கடல்கோளுக்கு முன்னரே தொல்
காப்பியம் இயற்றப்பட்டு அரங்கேற்றப்பட்டதாயும் தெ
கிறது. இதற்குப் பின்னர் உண்டான கடல்கோளில், தமிழ்
நான்மறை மறைந்தபோது, தொல்காப்பியம் மறையாதிருந்
இந்நாள்வரையும் விளங்குமாறென்னை? இது வியப்பே
தொல்காப்பியத்தை அரங்கேற்றும்போது அதைக்கேட்
ஆசான் அதங்கோட்டாசான். இவர் கற்றிருந்தது நான்மறை.
அது தமிழாமானுல், இவர் காலத்திலிருந்து தொல்காப்பி
மென்னுந் தமிழ்ப் பெருநூலியற்றிய தொல்காப்பியனுருக்கு
அத்தமிழ் நான்மறை தெரிந்திருக்கவேண்டும். தொல்காப்பி
மென்னும் விரிவானதமிழ் நூலில் அத்தகைய நூலைக்குறிப்பி
வேண்டுவதும் மிக்க அவசியம். அவ்வாறு செய்யாது வட
மொழி வேதங்களையும் அவற்றை ஓதும் முறைமையை
யும் ஓதுவோர் இன்னுரென்பதையும் விரித்துச்சொல்
யிருப்பதைக் கருதுமிடத்தும், தமிழ் நான்மறை யென்
தொரு நூல் இருந்ததில்லையென்பது தெளிவாய்விளங்கும்.
கடல்கோளில் மறைந்த தமிழ் நூல்கள் இன்னவையென ந
நூல்கள் கூறுகின்றன. தமிழர்க்கு முக்கியமான நான்மறை
யொன்று தமிழில் இருந்து மறைந்துபோயிருந்தால் அந்நூ
பெயரும் மறைந்த நூல்களில் ஒன்ருகச் சொல்லப்பட்டிருக்க
வேண்டும். அதுவுமில்லை, தமிழ் மக்களுக்கென்று இறைவ
னுல் நான்மறை யென்னும் ஒரு தமிழ் நூல் கொடுபட்டிருந்
தால் அது அழியுமா? தேவார திருவாசகங்களில் நான்மறை
யென்பது, "மூவா நான்மறை" அதாவது அழியாத நான்
மறை யென்றும், "மறைமுதனான்கும் மூன்று காலமுந்தோன்ற
நின்றனை" அதாவது நான்கு மறைகளும், செல்காலம், நிகழ்
காலம், எதிர்காலமாகிய முக்காலமும் நிலைபெற்று நிற்கும்படி
அருளப்பட்டனவென்றும் கூறுகின்றதே. தமிழில் நான்
மறைகளிருந்தன. அவைகள் கடற்பெருக்கில் அழிந்து
போயினவென்று நம்மவர் கூறித்தேவாரப்பாக்களில் கூறும்

தமிழ் நான்மறைகளையே குறிக்குமென்றுஞ்
நான்மறை, சொல்லுகிற வாசகம் எவ்வாறு பொருந்தும். ஆனதால் நம்
நண்பர் சொல்வது பொருளல்லவென்று புறக்கணிக்கத்தகுதி
யன்றே. இன்னமும் நம்மவர் எழுதுவதாவது "ஆசிரியர்
" நச்சினார்க்கினியர் தொல்காப்பியநூல் ஆகியூழியின் அந்
" தத்தே இயற்றப்பட்டதென்றும் வியாசர் தொகுத்த இருக்
" கும், யசுரும் சாமமும் அதர்வணமும் தொல்காப்பிய
" னுக்குப் பிற்காலத்தினராகிய வியாசமுனிவரால் வகுக்கப்
" பெற்றனவாகலின் பாயிரத்துட்குறித்த நான்மறை அவை
" யல்லவென்றுங் கூறிப்போந்தார்" என்றுமெழுதி அதனாலும்
அந்நான்மறை, தமிழ் நான்மறையே யாமென்றும் நம்மவர்
சொல்லுகிறார். நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பாயிரச்
செய்யுளிற் காணப்படும், நான்மறை வியாசர் வகுத்த இருக்
காதி நான்மறை அல்லவென்று சொன்னாரேயொழிய அந்நான்
மறை தமிழ் நான்மறை யென்று சொல்லவில்லை. நம் நண்பர்
நச்சினார்க்கினியர் வாசகத்தை உள்ளபடியே யெழுதிக்காட்டி
னாரில்லை. தமிழ்மக்களை வஞ்சிக்கும் வகையானெழுதியிருக்
கின்றார். இவ்விஷயமடங்கிய தொல்காப்பிய மூலபாடமும்
அதற்கு உரையாசிரியர் உரையும் வருமாறு "அறங்கரை
நாவி னான்மறைமுற்றிய வதங்கோட்டாசாற்கரிறபத்தெரிந்து—
அறமே கூறும் நாவினையுடைய நான்கு வேதத்தினையும் முற்ற
அறிந்த அதங்கோடென்கிற ஊரின் ஆசிரியனுக்குக் குற்றமற
ஆராய்ந்து கூறி" என்பது. இது மூலமும் அதற்கு நச்சினார்க்
கினியர் கூறியபதவுரையுமாம். அவர் கூறும் விசேடவுரையா
வது "நான்கு கூறுமாய் மறைந்த பொருளுமுடைமையின்
"நான்மறை யென்றார்" அவை தைத்திரியமும் பௌடிகமும்
தலவகாரமுஞ் சாமவேதமுமாம். இனி இருக்கும் யசுர்வும் சாம
மும் அதர்வணமுமென்பாருமுளர். அது பொருந்தாது. இவர்
இந்நூல் செய்த பின்னர், வேதவியாதர் சின்னாட் பல்பிணிச்
சிற்றறிவினோருணர்தற்கு நான்கு கூறாக இவற்றைச் செய்தா
ராதலின். இவ்வாக்கியந்தான் நச்சினார்க்கினியர் எழுதியிருப்
பது. இதனால் விளங்குவதியாதெனின், வியாசர் காலத்துக்கு
முந்தியே தைத்திரியமாதி நான்கு வேதங்களிருந்தனவென்
பதும் அவற்றை இக்காலத்துக்குத் தகுதியாக வியாதர் சுருக்கி
இருக்காதி நான்மறைகளாக வகுத்தனர் என்பதுமாம்.
முந்தியே நான்மறை யிருந்ததானால் மீட்டும் வியாசர் நான்
மறை தொகுக்கவேண்டியதில்லையே எனவும் நம்மவர் தர்க்கிக்
கின்றார். அதற்குக் காரணம் நச்சினார்க்கினியரே மேற்
காட்டிய அவர் உரையிற் கூறியிருக்கின்றார். வியாதர் நான்
மறை வகுத்த வரலாறு,

"இறந்தன வரம்புல கெவரும் வேதநூன்
மறந்தனர் பவநெறிமல்கி நாடொறுஞ்
சிறந்தன வவையுயிர் செய்த தொல்வினை
யறிந்தருளைய நீயமைத்த வாயினும்."

"காதலி னருளுமுன் கலையின் பண்மையிற்
கோதறு மோர்கலை கொண்டு நேமிசூழ்
மேதினி யதனிடை வியாத னென்றிடு
போதக முனியெனப் போந்து வைகுதி."

"போந்தவ ணிருந்தபின் புகரிலா மறை
யாய்ந்திடின் வந்திடு மவற்றை நால்வகை
வாய்ந்திட நல்கியே மாபினோர்க் கெலா
மீந்தனை யவரகத் திருளை நீத்தியால்."

சிவபிரான் விண்டுவை நோக்கி உலகோர் வேதநூ
மறைந்தமையான் நீவிர் உம்முடைய ஒரு கலையான் வியா
னெனும் பெயருடன் உலகிற்றோன்றி அவ்வேதங்களை நான்
கூறாகச் செய்வீராக என அருளியதாகக் கூறும் இக்கந்
புராணச் செய்யுட்களாலும் அறியலாம்.

வியாதர் பழைய மறைகளைக் கொண்டே நான்
இருக்காதிய தொகுத்தனரென்றால், அந்தப் பழைய மறைக
எங்கேயென நம் நண்பர் வினவுகின்றார். பண்டைய மற
களைக்கொண்டே வியாதர் நான்கு இருக்காதிய தொகுத்த
ரென எந்நூலிற் கூறியிருக்கின்றது? மேற்காட்டிய கந்
புராணச் செய்யுளில் "எவரும் வேதநூன் மறந்தனர்" எனக்
கூறுவதை நோக்குக. பின்னும் பண்டைய நான்மறைகளுமே
வியாசர் வாக்கில் அவர் ஓதாமலே வந்தனவெனவு முண
வேண்டும். பின்னும் நம்மவர் எழுதுவதாவது. "வடமொழி
"வேதங்கள் இந்நாற் பொருளை (அறமாதிய நான்கினை
"விதந்துகூறும் நூலல்ல" என்று எழுதிக் "குறிப்பாக அ
"நாற் பொருள்களையும் கூறினவென்று கொள்ளின் அவ்வா
"கோடல் எந்நூற்குமொத்ததே" என்று மீண்டுமெழுகின்
ஆழமுடைய பொருளைச் சுருங்கச் சொல்லல் என்னும் விதிய
லாய சூத்திர ரூபமாயுள்ள பாடல்களினாலாயவை வேதங்கள்.
ஆதலாற்றான் வேதப்பொருள், அங்கங்கள், ஸ்மிருதிபுராண
இதிகாசங்களைக் கற்றறிந்தவர்கட்கே விளங்குமென்று பெரு
மக்கள் கூறினார்கள். வேதாகமமே ஆதிநூலென்பதும் மற்றெந்
நூல்களும் அவற்றினின்று தோன்றியவையே யென்பதும்
"வேதநூல் சைவநூலென்றிரண்டே நூல்கள்வேறுரைக்
கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள்" எனும் சிவஞான
சித்தியார் பாடலாலும் அறியக்கிடக்கின்றன.

உஅ. பின்னும் நம் நண்பர் எழுதுவதாவது. "தொல்காப்பிய உரையிற்போந்த ஒரு செய்யுளில் 'கல்லாலந் தண்ணிழற்கீழ்க் கலித்துறையது பயந்தகாமர்காட்சி' என்ற தொடரில் கலித்துறையென்பது பாவகையைக் குறிப்பதாகக் கொள்ளின் அப்பாவகையினாலே நால்வர் செய்த நான்மறை கள் அமைந்திருக்கல் கூடுமென்று கருதற்கு இடமுண்டு" என எழுதியிருக்கின்றார். மேற்காட்டிய பகுதி அடங்கிய செய்யுள் முழுதையும் படித்தாலொழிய அதன் பொருள் விளங்காதாதலால் அதை யெழுதுகிறேன்.

"கல்லாலந் தண்ணிழற் கீழ்க்கலித்துறை யதுபயந்தகாமர்காட்சி
நல்லானை நல்லாளொரு பாகமாகிய ஞானத்தானை
யெல்லாருமேத் தத்தகுவானை யெஞ்ஞான்றுஞ்
சொல்லாடாருக்கெல்லாந் துயரல்லதில்லை தொழுமின் கண்டீர்"

இச்செய்யுளில் நால்வர் என்ற பதமேயில்லை. "கலித்துறை யதுபயந்தகாமர்காட்சி நல்லானை நல்லாளொருபாகமாகிய ஞானத்தானை" என்றமையால் கலித்துறையைப் பயந்தவன் உமையைப்பாகத்துடைய சிவபெருமான் என வெளியாகின்றது. மதுரைச்சங்கத்தார் அச்சியற்றிய தொல்காப்பியச் செய்யுளியலில், கல்வித்துறை, யென்றிருக்கின்றது. கல்வித்துறை யென்ற சொற்றொடர்க்கு வேதமென்னும் பொருளே ஏற்பட்டு நிற்கின்றது. ஆகலான், கல்லாலடியிலிருந்து சிவபெருமான் வேதமருளியதையே இச்செய்யுள் கூறிற்றென்பது கருதலே. ஆதலால் நால்வர்செய்த, தமிழ் நான்மறைகள் என்பது, இச்செய்யுளில் அமைந்திருத்தல் கூடுமென்று கருதுவதற்கு இடமுண்டு என்ற நம் நண்பர் சொப்பனங் காணவேண்டுவதுதான். நிற்க, மேலாராய்வாம்.

உகூ. பின்னும் நம்மவர் கூறுவதாவது. "நால்வர் நால்வர் என்று பன்முறை தேவார முதல்வர்கள் ஆலின்கீழ் முனிவரைக் கூறினரேயன்றி அந்நால்வர் திருப்பெயரை யாண்டுங் கூறிற்றிலரென்பதுணர்க. அது தமிழ் வழக்குப் போலும்" என நம் நண்பர் எழுதியிருக்கின்றார். நால்வர் பெயரை வெளியிட்டுக் கூறியிருந்தால் நம் நண்பர் திருநான்மறை விளக்கமெனவொரு கட்டுரை கட்டுவதேது? இவ்வாறு முக்கியமான விஷயத்தின்பொருளை விரித்துச்சொல்லாது, அவரவர் தம்மனத்திற்கேற்றபொருளை அச்சொற்றொடரின் தலையிலேற்றி ஒவ்வொருவரும் ஓயாது வாதஞ்செய்துகொண்டிருக்க இடந்தருவதுதானா தமிழ் வழக்கு? ஐயோ! பாவம், தமிழ்மாது வீண்பழி சுமந்தாள். தமிழில்

றுணர்ந்து பின்னர்ச் சமயதீக்ஷை பெற்றுச் சைவநூல்களாகிய இதிகாச புராணங்களைக் கற்றுத் தேர்ச்சியடைந்து பின்னர்த் தமிழ்மறையாகிய தேவார திருவாசகத்தை ஓதப்புகுவோர்க்கு அதில் மறைவாயுள்ள பொருள்கள் நன்கு விளங்கும். மறைவான பொருள் கொண்டிருத்தலினாலேயே அதற்கு மறை என்ற பெயர் வந்தது. இவ்வாறு முறையாகக் கற்றவர்க்கு நால்வர் யாவர் இன்னார் என்பது நன்கு விளங்கும். "நால்வர்க்கு ஒளிநெறி காட்டினை" "ஆலத்தார் நிழலில்லறம் நால்வர்க்குக் கோலத்தாலுரை செய்தவன்" என்ற தமிழ் மறைப் பகுதிகட்கு முன்னர்ப் பொருள் காட்டியபடி சிவபெருமான் கல்லாலடியில் தட்சிணாமூர்த்தமாயெழுந்தருளி நால்வர்க்கும் உண்மைப்பொருளைச் சின்முத்திரையாற்காட்டி உணர்த்தினாரென்பது விளங்குவதாலும், அந்நால்வரும் பிரம்ம புத்திரர்களாகிய ஸநகாதிநால்வரென்ற பொருள் விளங்குமாறு அவர்களை, அந்தணர், வேதியர், மறையோர் என்ற அடைமொழிகளால் தமிழ்மறையுணர்த்துவதாலும், நக்கீர் தேவாருளிய திருவெழுகூற்றிருக்கையில், "முத்தீ நான்மறை ஐம்புலனடக்கிய அறுதொழிலாளர்க்குறுதியக்கனை" எனக்கூறி அவர்களுக்குரிய சிறப்புத் தொழிலைக்கூறுவதாலும், பின்னரும், நக்கீர தேவரியற்றிய போற்றிக்கலிவெண்பாவில் "தொகுத்தமைத்த நான்மறையை கொண்டணைந்த நால்வர்க்கன்றுனிழற்கீழ், வான்பொருளாகும் வகையருளித் தோண்மாலை விட்டிலங்கத் தெக்கணமே நோக்கி வியந்தருணை மெட்டிலங்க வைத்தவிறல் போற்றி" என்று அருளியிருப்பதில் நால்வருக்கும் இறைவன் தட்சிணாமூர்த்தமாயெழுந்தருளி, அருளினதெனக் கூறுவதனாலும், தாயுமானப்பெருந்தகையார், கல்லாலடியில் சிவபெருமானிடம் ஞானம் பெற்றவர்கள் நால்வர் நால்வர் எனவே அப்பூர்த்திகள் அருளிய பாடலிற்கூறி ஒவ்வோரிடங்களில் அவர்கள் பேர்களை விரித்துச்சொல்வதனாலும் நமது சிவாலயங்களிலெல்லாம் சிவபெருமானது அருட்டிருக்கோலங்கள் அமைத்து விளங்குவதில், அந்தணர் நால்வர்க்குபதேசித்த இருக்கத்துடன் நால்வர் திருவுருவத்துடன் தட்சிணாமூர்த்தம் பிரகாசித்துக் கொண்டிருப்பதாலும் அந்நால்வரும் சநகாதியரென்றே சிற்ப நூலாற் கூறப்பட்டு அந்நூற்படியே அவர்கள் திருவுரு ஆக்கப்பட்டிருத்தலாலும், இவர்களது சரித்திரம் சைவபுராணமாகிய காந்தமகா புராணத்தில் கூறப்படலாலும், தட்சிணாமூர்த்தி உபநிடதமென ஓர் நூல் இருப்பதாலும் தேவார முதலியவைகளால், நால்வர், நால்வர் என்று பல இடங்களில் தேவாரத்தில் கூறப்பட்டிருப்பவர்கள் சநகாதியர் நால்வரே என்பதும், அவர்கட்கு கல்லாலடி

யிலிருந்து அருளிச்செய்தவர் தட்சிணாமூர்த்திக்கடவு ளென்பதும் தெளிவாய் விளங்கும். பஞ்சபாண்டவர்கள் ஐவ ரென்றால் அவர்கள் பெயர்களை விரித்தும் கூறவேண்டுமோ? ஆலின்கீழிருந்தாடுவான் என்று தேவாரங்களில் பல இடங்களில் காணப்படுவதில் அதற்கு விரிவான பொருள் எவ்வாறு அறி கின்றோமோ அவ்வாறே கல்லாலடியில் இறைவன் வேதப் பொருளை நால்வர்க்கு அருளினனென்றால் அந்நால்வர் சநகாதி யரென்றேயறியவேண்டும். இவ்வாறன்றிப் பலரும் பலவித மாகப் பொருள்கொள்ளுமாறு தேவார ஆசிரியன்மார்கள் கூறியிருப்பார்களேயானால் "மயங்கவைத்தல்" என்னுங்குற் றம் அவர்கள்மேல் ஏற்படும். "ஒன்றொழி பொதுச்சொல்" என்னும் இலக்கண வரம்புக்குட்பட்டது இக்கூற்று என்றறிய வேண்டும்.

கல்லாலடியில் இறைவனிடம் உபதேசம்பெற்ற நால் வரும் தமிழ் முனிவரென நம் நண்பர் கற்பிக்கின்றாரே, அக் கற்பனைக்கு ஓர் இம்மி அளவாவது தேவாரப்பாக்களிலாவது, மற்றைய எந்நூல்களிலாவது ஆதரவு உண்டா? அந்நால்வர் பெயரென்ன? அந்நால்வரைப் பெற்றோர் யாவர்? இவர் கள் சரித்திரம் எந்நூலிலாவது காணப்படுகின்றதா? கர்ண பரம்பரையிலாவது வழங்கப்படுகின்றதா? முதற்சங்கம், இரண்டாவது சங்கம் இவைகள் நிலைபெற்றிருந்த நகரங் களும், அச்சங்கங்களினிலாவிய நூல்களும், அச்சங்க மேறிய தெய்வப்புலவர்களும், அக்காலம் அரசாட்சி செய்த பாண்டியர்களும், கடல் கோளிலோ அல்லது எவ் வகையாலோ மறைந்தபின்பும், அந்நகரங்களின் பேர்களும் மறைந்த அந்நூல்களின் பெயர்களும் அச்சங்கப் புலவர் பெயர்களும், அக்காலமரசாண்ட பாண்டிய அரசர்கள் பெயர் களும், இக்காலமும் தெரியுமாறு விளங்குகின்றனவே. தமிழ் முனிவர் நால்வரிருந்து சிவபிரானிடம் அவர்கள் உபதேசம் பெற்றுத் தமிழில் நான்மறை அவர்கள் செய்தார்களென்பது மட்டுந்தானா விளங்கற்கில்லாது போயிற்று. நிற்கப், "புராணங் களுள் அவர்கள் பேர் (சிவபிரானிடம் கல்லாலடியில் உப தேசம்பெற்ற நால்வர் பேர்) ஒருவாறு குறிக்கப்படுகின்றன. அவற்றை நாம் பாராட்டவேண்டுவதில்லை" என நம் நண்பர் எழுதியிருக்கின்றார். பாராட்டாது விடுவதற்குக் காரணம் யாதும் எழுதினாரில்லை. இவர் பாராட்டாது விட்டேனென் றால் கற்றறிந்த உலகு இவரைச் சும்மாவிடுமா? புராணங்கள் விஷயத்தில் இவர் கருத்து இன்னதெனை வியக்தமாய்த் துலங்க வில்லை, சரித்திர ஆராய்ச்சியார் எனப் பெயர்வகித்த இவர்

போன்ற சிலர், புராணங்களெல்லாம் பொய்யென்று கூறி
வருவதை, நம் நண்பர் கொஞ்சம் மரியாதைச் சொற்களாற்,
பாராட்டவேண்டியதில்லையெனக் கூறினார்போலும். "பங்க
நீல் பதினெட்டொடு நான்குக்குணர்வுமாய் அங்கமாறுஞ்
சொன்னானுமையாறுடைய வடிகளே" எனச் சம்பந்தப்பெரு
மான் அருளியதுமன்றித் திருப்பாசுரத்தின் அ-வது பாசுரம்
நான்காமடி "சூதன் ஞெலிமாலையென்றே கலிக்கோவை
சொல்லே" எனவும் திருவாய் மலர்ந்தருளினார். நமது சைவ
சமய குலபானுவாகிய ஸ்ரீசேக்கிழார் மூர்த்திகள் அப்பாசுரத்
துக்குப் பொருள் கூறியதாவது "வேதம் முதல்வனென்னும்
மெய்த்திருபாட்டினினே, ராதியுலகோரிடர் நீங்கிட வேத்தவா
டும், பாதம் முதலாம் பதினெண்புராணங்களென்றே, யோதென்
றுரை செய்தனர் யாவுமோதாதுணர்ந்தார்" என்பதே. வேதப்
பொருளையறிவதற்குப் பதினெண் புராணங்களும் இன்றியமை
யாதவையெனச் சம்பந்தப்பெருமான் கட்டளையிட்டிருப்பா
ரானால் அக்கட்டளையைப் புறக்கணித்துப் புராணங்களை
நாம் பாராட்டவேண்டுவதில்லையெனப் பரம்பரை உத்தமச்
சைவகுலத்தோன்றலாகிய நம் நண்பர் கூறுவது கலிபுருட
னது தூண்டுதலே யெனக்கொள்வாம். கல்விச் செருக்கினா
லாவது பிறர் மதிக்கவாவது தேவாரப்பாடல்களின் பொருளைக்
கூறத்துணிவது தகுதியல்லவென்பதைக் காட்டவே,
"வெறியார்பொழிற் சண்பையர் வேந்தர் மெய்ப்பாசுரத்தைக்,
குறியேறிய வெல்லையறிந்து கும்பிட்டேனல்லேன், சிறியே
னறிவுக் கவர்தந்திருப்பாதந்தந்த, நெறியே சிறிதியானறி
நீர்மைகும்பிட்டேனன்பால்." என்னும் அருமையான பாடலி
னால், பொருள் சொன்னதாகச் சொல்லாமல், கும்பிட்டே
னென்று சேக்கிழார் விதந்து கூறினாரென்பதையுமறியவேண்
டும். மேற்காட்டிய வேதம் முதல்வன் என்னும் பெரிய
புராணச் செய்யுட்கு உரையாசிரியர் எழுதிய விசேட உரை
யில் "நான்கு வேதங்களை யுணர்ந்தானேனும் புராணத்தை
நன்குணரானேல், அவ்வேதங்கள் எமது அர்த்தங்களைப்
பேதிப்பானென்று அவனுக்கு அஞ்சும்" எனக் குறிப்பிட்
டெழுதியிருப்பதை உய்த்துணரவேண்டும். அதுபோலவே,
தமிழ் மறைகளின் பாடல்களை யுணர்ந்தானேனும், புரா
ணத்தை நன்குணரானேல் அம்மறைகளின் அர்த்தத்தைப்
பேதிப்பானென்று தமிழ் மறைகளும் அவனுக்கு அஞ்சும்
என்பதும் விளங்கும்.

௩௦. நிற்க, பின்னும் நம் நண்பர் கூறுவதாவது "மேற்
"கூறிப் போந்த பொருளே (அதாவது தொல்காப்பியப்
"பாயிரத்துள் காணப்படும் நான்மறை, தமிழ் நான்மறை

"யென்னுங் கற்பனை) மறையென்ற சொல்லிற்கு "அளபி "கோடல் அந்தணர் மறைத்தே" என்றவிடத்துங் கொள்ள "பாலது எனவுமெழுதினர்." அதாவது அந்தணர் மறைத் என்ற பகுதிக்குத் தமிழ் முனிவர் நால்வர் செய்த தமிழ்ம யெனப் பொருள் கொள்ளவேண்டுமாம். கொள்ளற்பால என்றார். உண்மைப்பொருளை யாவருங் கொள்வரேயன் நாலும் மூன்றும் எட்டெனப் பொருள் கொள்ளற்பால என்றால் அப்பொருளை ஒருவருங் கொள்ளாது நகைப்பார்க அந்தணர் மறைத்தே என்ற தொல்காப்பியச் சூத்திரப் ப திக்கு முன்னமேயே ருஅ, ருகூ பக்கங்களில் விரிவாய்ப் பொரு காட்டியிருக்கிறோம். வாசிப்போர் சௌகரியத்தை உத்தேசித் இங்கும் எழுதுவாம். ஒரு நூலுக்கு உரை காணுமிடத் அந்த நூலாசிரியன் கருத்தையறிந்து உரைகாணுதல் வே டும். ஒரு நூற்பொருள் துணிதற்கு அந்நூலின்கண் வ சொற்களையும் சொற்றொடர்களையும் பலகால் ஆய்ந்து பார்ப் துடன், அதற்கு நம் முன்னோர்களாகிய மேதாவிகள் கண் பொருளமைதியையுங் கருதவேண்டும். தாம் ஒரு பொரு முன்னமமைத்துக்கொண்டு அப்பொருளை அந்நூலின்கண்ே புகுத்த முயல்வது நடுநிலைமையுடைய கற்றறிந்தோர் கொள்ள யன்று. அந்தணர் மறைத்தே என்னும் பகுதிகொண்ட தொ காப்பியச்சூத்திரம் வருமாறு. எழுத்ததிகாரம், பிறப்பிய உ0-ம் சூத்திரம்.

"எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி யெழுதரு வளியிற்
பிறப்பொடு விடுவழி யுறழ்ச்சி வாரத்
தகத்தெழு வளியிசை யரிறப நாடி
யளபிற் கோட லந்தணர் மறைத்தே
யஃதிவ ணுவலாது எழுந்து புறத்திசைக்கும்
மெய்தெரி வளியிசை யளவு நுவன்றிசினே"

என்பதாம். அந்தணர் மறைத்தே யென்னுஞ் சொற் றொடர்க்கு அடைமொழியாக "எழுதருவளியிற் பிறப்பொடு விடுவழி யுணர்ச்சிவாரத், தகத்தெழுவளியிசையரிறப நாடியள பிற்கோடல்" என்ற நீண்டதோர் சொற்றொடரிருக்கின்றதே அதன் பொருளைக் கொண்டல்லவா அந்தணர் மறைத்தே என்பதற்குப் பொருள் கொள்ளவேண்டும். அன்றியும் அந் தணர் மறைத்தே என்று கூறி அஃதிவணுவலாது என்று நூலாசிரியர் சொன்னாரே, அதன் பொருளென்ன? இச்சூத் திரத்தில் அகத்தெழுவளியிசை ஒன்று, புறத்திசை மெய்தெரி வளியிசை ஒன்று என உடம்பினின்று காற்று வெளிப்பட்டு வருவதை யிரண்டாக வகுத்தார். முன்னையது, எழுதருவளி

பின் உறழ்ச்சிவாரத்தின் அளபுகோடலும் அகத்தெழுவளி யிசை அரிறப நாடிக்கோடலும் ஆகியது. அஃதென்னெனின் உந்தியில் தோன்றுங் காற்றினது திரிதருங்கூற்றின் கண்ணே மாத்திரை கூட்டிக்கோடலும் மூலாதாரத்தினெழுகின்ற காற்றினோசையைக் குற்றமற நாடிக்கோடலுமாம். இவ் வோசையானது எந்நூலின்கண்ணே யுளதென்றால் அந்தணர் மறைத்தே என்றார் நூலாசிரியர். பின்னும் நூலாசிரியர் அஃதி வணுவலாது என்றார். அந்த நூலின் ஓசையின் கூறுபாட்டை இத்தொல்காப்பிய நூலில் நான் சொல்லாது, எழுந்து புறத் திசை மெய்தெரிவளியிசையளவு நுவலுகிறேனென்றார். இத னல் விளங்குவது, உடம்பினின்றும் எழும் இசை, உந்தியி னின்றும் மூலாதாரத்தினின்றும் எழுவது யாதோ அது அந் தணர் மறைத்தே என்றார்; என்பதே.

உதாத்த அனுதாத்த, சுவரிதம் என்னும் ஓசைகளோடு கூடியவை வடமொழி எழுத்துக்களே. அவ்வெழுத்தாலான சொற்களால் ஆக்கப்பட்டது அந்தணர் மறையே என்றார். ஆதலால் அந்தணர் மறையென்றது உரையாசிரியர் கூற்றுப்படி பார்ப்பாரது வேதமேயாம். அவ்வெழுத்துக்களுக்கு மாத் திரைவிதி, தான் கூறவில்லையென்று சொல்லி, உந்தியிற் றேன்றி புறத்தே புலப்பட்டு ஒலிக்கும் தமிழ் எழுத்துக் களுக்கே தான் மாத்திரையளவு தொல்காப்பியத்திற் கூறின தாகச் சொன்னார். விஷயம் இவ்வாறிருக்க, அந்தணர் மறைத்தே என்றது நான்கு தமிழ் முனிவர்கள் செய்த நான்கு தமிழ்மறை யென்ற பொருளைக் குறிப்பிட்டு மேற்கூறிப் போந்த பொருளே, அளவிற்கோடல் அந்தணர் மறைத்தே என்றவிடத்துங் கொள்ளற்பாலது என எந்நியாயம்பற்றி யெழுதினரோ தெரியவில்லை. இச்சூத்திரம் நண்பரது கொள்கைக்கு உடன்பாடல்லவென்பதைத் தமிழ்க் கல்வி வாணர்கள் நன்கு அறிவார்கள். நிற்கப், பின்னும் நண்பர் எழுதுவதாவது.—

௯௧. "மறையோர்தே எத்து மன்ற லெட்டனுள்" "என்றவிடத்து மேற்கூறிப் போந்த பொருள் பொருத்தமில "தாகத் தோன்றுதல் கூடும்" என்று நண்பர் எழுதி அதற்கு "ஒரு சமாதானம் அவர் சொல்லுகிறார். அதாவது மறை என்ற "சொல் ஆரியர் கலந்த பிற்காலத்தே வடமொழி வேதத்தை "யுங் குறிக்க நேர்ந்தது. இச்சூத்திரம் பிற்காலத்தே "யெழுந்ததாகல் வேண்டும்" என்று எழுதியிருக்கிறார். ஆரியர் தமிழரோடு கலவாத காலமொன்று முன்னர் இருந்ததாகவும் பின்னர் ஆரியர் தமிழரோடு கலந்த காலமுண்டாயதாகவும்,

மேனாட்டுச் சரித்திரமுறை ஆராய்ச்சியை இங்குக் கூறவந்தார். அது நமது நூல்களின் கருத்துக்கும் நம் நாட்டின்கண் அநாதியாய் நிகழ்ச்சி பெற்றுவரும் நடைக்கும் பொருந்தாது. எவ்வாறெனில் கூறுதும்.

"பாரதமு நவதீவ பாகமுறு மவற்றுள்ளுஞ்
சீரியது குமரியெனுந் தீவதனிற் சிறந்திருப்ப
ராரியராமந் தணருமல்லாரு மரு மறையின்
காரியமு முறு மதனிலின்னு முளகழறிடுவோம்"

"கங்கைமுதன நி பலவுங்காசி முதற்பதி பலவும்
பொங்கு மயேந்திரம் பொதிய முதன்மலையும் பொருந்தியிடு
மங்கதற்கு யோசனை யோராயிர முண்டெனவறிக
வெங்கொடிய மிலேச்சரிட மெட்டினு மெண் ணாயிரமே"

என்ற சிவதருமோத்தரச் செய்யுட்களால் நாம் வசித்துவரும் பூமியின் பாகத்துக்கு (அதாவது இந்தியாவெனும் நாடு) குமரிகண்டமெனும் பேரென்றும், அதில் ஆரியராமந்தணர்களும்* அவர்களல்லாத ஏனையோரும் வசித்துவருவார்களென்றும் அருமறையின் வழித்தாய காரியங்களும் அங்கு நிகழப்பெறுமென்றும் கங்கை முதலாய புண்ணிய நதிகளும் காசி முதலிய சிவதலங்களும் பொதியம் முதலிய மலைகளும் அதில் பொருந்தியிடுமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. பதினெண் புராணங்களிலொன்றாகிய கூர்ம புராணமென்னுஞ் சைவ புராணமும்,

"குடக்கினில் யவனர்வாழ்வர் குணக்கினிற் கிராதர்வாழ்வர்
அடுத்திடு நடுவெண்வேத மறையவாரசர் நாய்கர்
ஒடிப்பில் சீர்ச்சதுர்த்தர் யாருந்தத்தம வொழுக்கின்வாழ்வர்
தடுப்பருநதிகள் குன்றப் பெயரிவை சாற்றலுற்றும்"

"அற்புடை பரதகண்டத் தளப்பறு தேயமுண்டாற்
பற்பல பாடைமாக்கள் பயில்வர்மற்றிதற்கே நான்காய்ச்
சொற்படு யுகபேதங்கள் தொழில்பல வியற்றல்கூடு
மற்றைய வருடமெட்டு மின்னவை மருவிடாவால்"

---

* குறிப்பு:— இது விடயமாய் மதுரைத்தமிழ்ச் சங்கத்துச் செந்தமிழாசிரியர் பிரமஸ்ரீ திருநாராயணய்யங்காரவர்கள் எமக்கு எழுதியதைப் பல்லோருமறிய இங்குக்காட்டுவோம்.

வைதிக சம்பந்தத்தை விலக்க முயலும் பிறட்சி யுணர்ச்சிக்கு முதன்மையானகாரணம், தமிழப்பார்ப்பனரை ஆரியரென்று மயங்கிப் பிறநாட்டினர் எழுதிய சரித்திரவாராய்ச்சியின் மாறுபட்டத்தாலுண்டாகிய போராட்டமேயன்றி வேறில்லை.

* * * *

ஆரியர் என்ற சொல்லுக்கு, நிகண்டில் I 'மிலேச்சர்' என்றும், II 'நல்லோர்' என்றும், இரண்டு பொருளே சொல்லப்பட்டன. "பார்ப்பனர்"

என்ற செய்யுட்களும் அவ்வாறே கூறும். ஏனைய செய்யுட்
களில், கங்கை, நருமதை, காவிரி, வைகை, பொருநை, குமரி
ஆதிய நதிகளும் மலயம், சையம், விந்தம் முதலிய பர்வதங்
களும் இப்பாதகண்டத்திலிருப்பனவாகவுங் கூறப்பட்டிருக்
கின்றது. மற்றை எட்டுக் கண்டங்களிலும் மிலேச்சர் வசிப்பத
னும், கன்னித்தீபம் அல்லது பரதகண்டமெனும் பெயர்
பெறும் இந்நாட்டில், மறைவழக்கமிருப்பதனாலுமன்றோ நம்
அருணந்தி சிவனாரும் "நரர்பயில்தேயந்தன்னி னான்மறை
பயிலா நாட்டில், விரவுதலொழிந்து தோன்றல் மிக்க
புண்ணியந்தானாகும்" என்று அருளிச்செய்தனர். தொல்
காப்பியர் அவர் காலத்துக்கு முந்தியே, ஆதிமுதலே வட
மொழி, தமிழ் நாட்டிலும் பரவியிருந்ததனாலன்றோ அம்
மொழிகள் தமிழ் நூல்களில் வழங்கப் பெறுவதற்கு இலக்கண
முந் தொல்காப்பியத்தினுட் கூறினர். அன்றியும் தமிழ்
எழுத்துக்கள் பிறக்கும் இடங்கள் (அதாவது உடம்பின்
உறுப்புகள்) வடமொழி எழுத்துக்களைப் போலல்லவென்றுங்
கூறினர். ஐந்திரமென்கிற வடமொழி இலக்கணங் கற்ற
தொல்காப்பியனென்றும், தொல்காப்பியப்பாயிரச் செய்யுளுங்
கூறிற்று. அன்றியும் அத்தொல்காப்பியப் பாயிரம், நான்
மறை கற்ற அதங்கோட்டாசான் எனத் தொல்காப்பியம் அரங்
கேற்றியபோது அதைக்கேட்டு அங்கீகரித்த புலவரும்
நான்கு வேதங்களையும் கற்றவரெனப் புகழ்ந்து கூறுவ
தாயிற்று. இன்னமும் அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்க
மும் என்ற சூத்திரத்தாலும் மற்றுஞ் சூத்திரங்களாலும்
பார்ப்பார் முதலிய குலத்தவரது வருணாச்சிரம தருமங்களை
யும் அத்தொல்காப்பியம் எடுத்து விதிப்பதாயிற்று. இன்ன

---

என்ற பொருள்யாண்டும் கண்டதில்லை. மிலேச்சர் என்ற பொருளில்
வழங்கும் I 'ஆரியர்' என்னும் சொல் வடமொழியில் இல்லாமையால் அது
தமிழ்மொழியேயாம். மிலேச்சராவார், 'மிலேச்ச அவ்யக்தே சப்தே'
என்றதாது பாடத்தின்படி, பொருள் விளக்கமின்றிப் பேசுவர். அதாவது
பிறபாஷைக்குரியவராய்த் தமிழைப் பயிலாமற் பிறழப் பேசுமவர்
என்பதே. இதுவே தமிழ் மொழியிலுள்ள I 'ஆரியர்' என்பதன் பொரு
ளாம். இது பண்புபற்றிய பெயராதலால் அப்பண்புடையோர் யாராயிருப்
பினும் அவரையே உணர்த்துமல்லது, பார்ப்பனர் என்னும் ஒரு ஜாதி
யாரை யுணர்த்தமாட்டாது.

'நல்லோர்' என்னும் பொருளில் வழங்கும் II 'ஆரியர்' என்னும்
சொல் வடமொழியிலுள்ள 'ஆரியா:' என்பதோடு ஒருபடியாய், பூஜ்யரை
யுணர்த்துகிறது. இதுவும் பண்புபற்றிய பெயராயிருப்பதால் அப்பண்
புடையோர் யாராயினு மவரையுணர்த்துவதல்லது பார்ப்பனரென்னும்
ஜாதியாரை யுணர்த்தமாட்டாது.

மும், "உயர்ந்தோர்க்குரிய வோத்தினான," "வேண்டிய கல்வி யாண்டு மூன்றிறவாது," என்ற சூத்திரங்களானும், வேதத்தை யும் வேதத்திற் கூறும் தத்வமசி எனும் மகா வாக்கியத்தையும் வேதசிவாகமங்களைக் கற்கும் மரபையும் தொல்காப்பியம் குறிப்பிட்டுப் புகல்கின்றது. இவைகளையெல்லாங் கூர்ந்து நோக்கும்போது தொல்காப்பியர் காலத்துக்கு முந்தியே நந் தமிழ் நாட்டில், சிவதருமோத்தரம் கூர்மபுராணம் கூறியபடி வேத மறையோர் இருந்ததுமன்றி வேதங்களும், வேத ஒழுக்க மும், பரவியிருந்தனவென்றும், திட்டமாய் யாதொரு ஐய மின்றித் தெரிவதாகிறது. சிவதருமோத்தரம் சிவஞான தானவியல் ௬௰வது செய்யுள்.

"பருவமுற்றிய பாவகமோர்ந்துபின்
னுருகியோது க வோதருமுண்மையை
மருவிவாய்வரு பாடையின்வல்லவர்க்
கரியவாரியத்தானு மறைகவே"

எனவோர் செய்யுள் எழுந்துளது. இச்செய்யுளில் ஆசான் சீடனுக்கு இன்ன பாஷையில் உபதேசமொழியைக் கூற வேண்டுமென்னும் விதியை விதிக்கின்றது. இச்செய்யுளுக்கு உரையாசிரியர் கண்ட பொருளாவது; பதினெண் பூமியிலுள் ளோரும் (தமிழ்ப் பூமியிலுள்ளோரையும் கூட்டி) பயின்று வசனித்துவரும் பாஷா பேதங்களுள் யாதொரு பாஷை வல்லோருக்கு அந்தந்த பாஷையினாலும் வடமொழி வல் லோர்க்குப் பெறுதற்கரிய வடமொழியினாலும் (ஆசானானவன்) உபதேசிக்கக்கடவன் என்பதே. இவற்றால் ஆரிய பாஷை

---

இவ்விரு வேறுவழக்கினுள், (I) ஆரியபடன், ஆரியன் காவல் ஆரியப்போர், ஆரியப்படை, ஆரியக்கூத்து என்றற்றொடக்கத்துள்ளது. இது பிறபாஷைக்குரிய அயல் நாட்டவராய்த் தமிழ் பேசத்தெரியாது பிறழப்பேசுமியல் புடையாரை யுணர்த்துமாறு காணலாம். II. ஆர்யபுத்ர:, ஆர்யா விருத்தம், ஆரியபாஷை, ஆர்யா, (ஐயை) ஆர்ய: (ஐயன்) என்றற்றொடக்கத்தன பூஜ்யவாசகமாக வருதல் காணலாம்.

ஆனால், நச்சினார்க்கினியர் தொல்காப்பிய வுரையில் நகைச் சுவைக்கு, உதாரணமாக 'ஆரியர் கூறும் தமிழ்' என்று கூறியிருப்பதால், பார்ப்பனர் என்றே கொள்வோமெனில், நச்சினார்க்கினிய ரெழுதிய உரைகளும், தொல்காப்பிய முதலியனவும் ஆரியர் கூறிய தமிழாய் நகைச் சுவைக்கிலக்காக வேண்டுமாதலால் அவர்க்கது கருத்தன்று. இங்கு I ஆரியர் என்றது தமிழ்ச்சொல். இது பிறபாஷைக் குரியவராய்த் தமிழ் பேசத்தெரியாது பிறழப் பேசும் துருக்கர் முதலாயினோரை யுணர்த்துமென்பது வெளியாம். இன்னோர் பேசுந்தமிழே நகைச் சுவைக்கு இலக்காயிருப்பதை யாண்டும் காணலாம்.

பதினெட்டுத் தேயங்களினும் வழங்குமென்றும் அப்பாஷை பதினெட்டுத் தேயத்தாருக்கும் பொதுவானதென்றும் பதினெட்டு தேயத்தாரும் அப்பாஷையைப் பயின்றுவருபவர்களென்று மேற்படுகின்றது; இன்னமும், அநாதியாயுண்டாயிருக்கிற நமது தமிழ் நாட்டுச் சிவாலயங்களினும் விஷ்ணுவாலயங்களினும் மற்றைய நாடுகளிலுமுள்ள அவ்விருவகைவாலயங்களினும், வடமொழி வேதங்களினும் வடமொழிச் சைவ வைணவ ஆகமங்களினும் கண்டவாறே அம்மொழியாலாய வாக்கியங்கள், மந்திரங்களைக்கொண்டே, கர்ஷணாதி கும்பாபிஷேக பரியந்தமும் நித்திய நைமித்திக பூஜாகாரியங்களும்நடந்து வருவதாலும், தமிழரில் வேளாளர் என்ற உயர் வகுப்பார் எல்லோருக்கும் ஏனையோர்க்கும் சுபாசுபங்களில் ஓதப்படும் வாக்கியங்கள், மந்திரங்கள் தமிழிலில்லாது ஆரியமாயே யிருப்பதாலும் சைவர் என்று சொல்லப்படும் வேளாளராகிய தமிழருக்குச் செய்யப்படும் சமய, விசேட, நிர்வாண ஆசாரியாபிடேக தீட்சாவிதிக ளெல்லாம் தொன்று தொட்டே ஆரியத்திலமைந்து அவ்வாறே நடை பெற்று வருவதாலும், சைவவேளாளர்கள் பாரம் பரியமாய்க் கைக் கொண்டு வரும் சிவபூஜைக்கு இன்றியமையாதனவாகிய பஞ்சப்பிரம மந்திரம், ஷடங்கம், பதமந்திரம், சிவகாயத்திரி ஆதிய மந்திரங்களெல்லாம் ஆரியமாகவே நிலைபெற்றிருப்பதாலும், நிர்வாணதீக்கைக்கண் ஆரியத்தின் ருக அட்சரங்களே, கலாசோதனையில் நியோகிக்கப்பட்டுவருவதாலும், இவ் ருக அட்சரங்கள் இல்லாவிடின், நிர்வாணதீக்கையே நிகழப்பெறாதாதலாலும், ஆரியம் நம் நாட்டில், அது உற்பத்தியான காலம் முதல்

---

இனி, இந்நாட்டுப் பார்ப்பனரைத் தமிழரல்லர் என நாட்ட விரும்புமொரு சிலர் இந்நாட்டுப் பார்ப்பனரும் வடநாட்டுப் பார்ப்பனரும் ஒரு கோத்திரமுடையராயிருத்தலைக் காட்டக்கூடும். இதன் உண்மை பின்வருமாறறியத்தக்கது. பார்ப்பனருக்கு இரண்டு பிறப்பு உண்டென்பது எல்லோருமறிந்தது. அவற்றுள் முதற்பிறப்பிற் கோத்திர சூத்திரங்களொன்றுமில்லை.

இரண்டாம் பிறப்பில் (உபநயநத்தில்) பிரும்மோபதேசஞ் செய்யும் ஆசாரியனிடமிருந்து கோத்திர சூத்திரங்கள் ஏற்படுகின்றன. இக்காலத்தில், பெற்ற தமப்பனே ஆசாரிய ஸ்தானத்திலிருந்து உபதேசிப்பதால் கோத்திரம் பிதுர் பரம்பரைபற்றி வந்திருப்பதாக மயங்குகிறார்கள்.

முற்காலத்தில் பிர்ம்மோபதேச ஆசாரியன் பிதாவானாலும், அந்யனானாலும் யோக்யதையுடையவன் எவனோ அவனிடம் உபதேசம் பெற்றுவந்தமையால் ஆசாரியனைப் பற்றிவரும் கோத்திரம் இரண்டாம் பிறப்பாகிய விப்பிர ஜன்மத்தின் பரம்பரையைக் காட்டுமாகையால் சரீர ஜன்மத்தின் பிதிர் பரம்பரையைக்காட்டமாட்டாது.

நிகழ்ச்சிபெற்றே வருகின்றதென்பது தாபிக்கப்படும். இன்னும் வடக்கே இமையமலை முதல் தெற்கே கன்னியாகுமரியீறுயுள்ள இப்புண்ணிய பூமியின்கண் பதினெட்டுப்பாஷை வழங்கும் நாடுகளினும் அநேக சிவாலயங்கள், விண்டு ஆலயங்கள் தோன்றி நிலைபெற்று விளங்குகின்றன. அத்தலங்களில் எழுந்தருளியிருக்கும் சிவபிரானையும் திருமாலையும் எந்நாட்டாரும், எப்பாஷையாரும் பண்டுதொட்டே தெரிசித்து வருகின்றார்கள். இமாசலத்தின்மீது விளங்கும் திருக்கேதாரம், பத்ரிநாராயணம் என்னும் தலங்களில் அந்நாட்டாருக்கும் மற்றைய எந்நாட்டாருக்கும் அர்ச்சனை செய்விப்பது, ஆரியவேத புராணோக்த அஷ்டோத்தர சகஸ்ரநாமாதி மந்திரங்களைக் கொண்டே. இந்துஸ்தானி பாஷை வழங்கும், காசியினும் அவ்வாறே. பெங்காளபாஷை வழங்கும், கல்கத்தா காளிகட்டத்திலுமவ்வாறே. குஜாத்தி பாஷை வழங்கும், பாம்பே நகரத்தருகிருக்கும் சோமநாதபுரத்திலும் அவ்வாறே. துளுவ பாஷை வழங்கும், கோகரணத்திலும் அவ்வாறே. தெலுங்கு பாஷை வழங்கும், ஸ்ரீபருப்பதத்திலுமவ்வாறே. கன்னட பாஷை வழங்கும், மைசூர் நாடுகளிலுள்ள தலங்களிலுமவ்வாறே. நந்தமிழ் நாட்டில் காளத்திமுதல் இராமேச்சரம் இறுதியாயுள்ள தலங்களிலும் அவ்வாறே. மலையாளபாஷை வழங்கும், மலையாள நாட்டிலும் சிங்களபாஷை வழங்கும், ஈழ நாட்டிலும் அவ்வாறே. நந்தமிழ் நாட்டிலும், மற்றுமுள்ள நாடுகளினும் தொன்றுதொட்டு நிலைபெற்றிருக்கும் சைவ வைணவ மடாலயங்களினும் நித்திய நைமித்திக அநுஷ்டானங்களிலெல்லாம் தமிழத் தேசிகமூர்த்திகளும் ஏனையோரும் கைக்கொண்டு வழங்கிவருவதும் ஆரியபாஷையிலுள்ள ஸ்தோத்திரமாதி மந்திரங்களே. நந்தமிழ்நாட்டுச் சிவாலயங்களில் ஆரியத்திலுள்ள வேதமாதிகளை ஆசரிப்பது நியாயமல்லவென்று எழுதியவரும், ஆரிய வேதங்களைப்பழித்துக் கூறுபவருமான நம் நண்பரும ஆன்மார்த்தமாக நெறிவழாது செய்துவரும் சிவபூஜையில் நியமமாக நாடோறும் கைக்கொண்டு ஸ்தோத்தரித்து அருச்சனைசெய்தும் ஜெபித்துவரும் மந்திரங்கள் ஆதியவும் அவ்வாரியமே.

---

ஆதலால் கோத்திரகூடஸ்தர் எம்மொழியாளராயிருப்பினும் இழுக்கின்று. அவர் தமிழராயிருக்கக்கூடாதென்னும் நியதியுமில்லை. இவ்வாறுண்மையாற் பல மொழியாளர் ஒரு கோத்திரமுடையராயிருத்தல் பொருத்தமுடையதே.

தமிழ் நாட்டுள்ள ஸ்தலங்களைப்பற்றிய புராணங்களால் 'பிருகு' 'மார்க்கண்டர்' முதலிய கோத்ரகூடஸ்தர்களும் தமிழ் நாட்டிலிருந்தவரென்றறியலாம்.

இன்னமும், இதுகாறும் வெளிவந்திருக்கும் சங்கநூல்கள் பலவும் அறம் பொருள் இன்பத்தைக் கூறியவையேயன்றி வீட்டுநெறி மார்க்கம் போதிக்கும் விரிந்தநூலாயிலது. இக்கூற்றை "அறம்பொருளின்பமடுக்கி யவ்வகை திறம்படவருவது கீழ்க்கணக்காகும்" என்னும் பன்னிருபாட்டியற் சூத்திரமும் வலியுறுத்தும். ஆனால் திருமூலர் திருமந்திரம் எனும் ஒரு நூல்சமய உணர்ச்சிக்குரியதாய்த் தமிழிலுளது. இந்நூலிலும் "வேதமோடாகம மெய்யாம் இறைவனூல்" எனக்கூறியிருப்பதுமன்றி வேதச்சிறப்பு ஆகமச்சிறப்பு என இரண்டு இயல் கூறப்பட்டு வேதச் சிறப்பில் ருக் வேதத்தின் பெயரையும் ஆகமச் சிறப்பில் காமிகாதி ஆகமங்களின் பெயர்களையும் கூறியிருப்பதுமன்றி அந்நூலின் அநேக பாகம் ஆரிய மந்திரங்களடங்கிய திரிபுரை சக்கரமாதியன கூறுவதுளவேயாம். உதாரணமாக ஒரு செய்யுளைக் காட்டுவாம்.

"சௌமுதலவ்வொடு ஹௌவுட னுங்கிரீம்
கௌவுளு மையுளுங் கலந்திரீம் சிரீமென்
றெவ்விலெழுங் கிலீமந்திர பாத மாச்
செவ்வு ளெழுந்து சிவாய நமவெனே"

இச்செய்யுளிற் காணப்படும் மந்திரங்களை வடமொழிப் பயிற்சியின் உதவியின்றி ஒலிக்கவும் பொருள் கூறவும் முடியுமா. மற்றுமிவ்வாறே.

இவ்வரிய பிரபல உண்மையான பிரமாணங்களான், ஆரியர் ஆரியத்துடன் ஓர் காலத்தில் நம் நாட்டுக்குப் பாரசீக தேசத்திலிருந்து வந்தவர்கள் என மேனாட்டுச் சரித்திர ஆராய்ச்சியார் கூற்று நம் சமயக்கொள்கை நூல்கட்கும் தொன்றுதொட்டே நிகழ்ச்சி பெற்றுவரும் ஆசரிப்புக்கும்

---

தமிழ் வல்லாராக மார்க்கண்டர், வான்மீகி, கௌதமர் தேவருஷி, நாரதர் முதலிய ரிஷிகளும் உள்ளார்கள். இங்ஙனமிருந்ததுபற்றியே ஆரிஷம், ஆரிஷப்போலி என்னும் செய்யுளிலக்கணப் பகுப்புக்களும் தமிழில் அமைக்கப்பெற்றிருக்கின்றன. தென்னாட்டுப் பிராமணர்கள் 'திராவிடர்' என்றும் வடநாட்டுப் பிராமணர்கள் 'கௌடர்' என்றும், ஒருவர்க்கொருவர் வேறுபட்ட இருவகையாகப் பிரிக்கப்பட்டிருப்பதும் உலகறிந்த விஷயம். இந்த கௌட வகுப்புப் பிராமணர் இந்நாட்டில் 'ஆரியர்' என்ற பெயருடன் இராமேச்சுரத்தில் பூஜகராயிருக்கிறார்கள். அவர் தமிழப் பிராமணருடன் சம்பந்திப்பதில்லை. அவர்கள் வீட்டுப்பேச்சு வடநாட்டு மொழிப் பேச்சாயிருப்பதை யின்றுமறியலாம். அவ்வாறே தெலுங்கு, கன்னடம், மஹாராஷ்டரம் முதலிய நாட்டிலிருந்துவந்து தமிழ் நாட்டிலிருக்கும் பிராமணர் வீட்டில் அவரவர் நாட்டுமொழியே பேசப்படுகின்றன. அவ்வாறு தமிழப் பிராமணர் வீட்டில் தமிழ் மொழியன்றிப் பிறமொழியொன்றும் பேசப்படாமையால்

முரண்பட்டதாகும். நமது பாரத கண்டத்தின் பாஷைகளிலும் மேனாட்டுப் பாஷைகளிலும் வல்லவராகிச் சரித்திர ஆராய்ச்சியிலும் விற்பன்னராகித் தற்காலங் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்ற மண்ணுலகு முற்றும் அநேகமாய்ச் சஞ்சாரஞ் செய்து உலகமுற்றுமுள்ள பிரபல நாடுகளின் மக்களது நாகரீகங்களைக் கண்டறிந்து நமது நன்மார்க்க நெறியை யெங்கும் பல வியாசங்களாற் பரவச்செய்து மிக்க கீர்த்தியும் புகழும் பூண்ட சுவாமி விவேகானந்தர், ஆரியர்கள் அயனாட்டினின்றும் பாரதகண்டத்தினுட் புகுந்தவரென்று, சரித்திர ஆராய்ச்சியார் சொல்லும் விஷயத்தில் எழுதுவதாவது.

"And what your European Pandits say about the Aryans swooping down from some foreign land, snatching away the lands of the aborigines, and settling in India by exterminating them, are all pure nonsense, foolish talk! Strange, that our Indian scholars, too, say amen to them; and all these monstrous lies are being taught to our boys! This is very bad indeed."

* * * *

"In what Veda, in what Suktah do you find that the Aryans came to India from a foreign country? Where do you get the idea that they slaughtered the wild aborigines? What do you gain by talking such nonsense ?............

சுவாமி விவேகானந்தர் தமது அனுபவத்தையும், பண்டைய நமது நூல்களின் பிரமாணத்தையும் ஒட்டி யெழுதியிருப்பதானது முன்பக்கத்திற் காட்டிய சிவதருமோத்தரச் செய்யுளுக்கு ஒற்றுமையாயிருப்பதை நம்மவர்கள் கண்டு களிப்பார்களாக. ஆரியர்கள் புறநாட்டிலிருந்து வந்தார்களென்னும் பெரும் புளுகு வார்த்தையை நமது பிள்ளைகளுக்கு இளமையிற்றானே கற்றுக்கொடுத்து அதையே நம்மவர்

---

இவர் தமிழர் என்பதிற் சந்தேகமென்ன? வடமொழி வேதம் பயில்வது பற்றிப் பிறமொழியாளரெனக் கருதுவராயின் அவ்வடமொழியும் தமிழோடு உடன்பிறந்ததன்றோ? வடமொழி பிறமொழி நாட்டார்க்கும் உரியதாயினும் தமிழர்க்கே மிகுதியும் உரியதென்பதை, வடமொழிக்குரிய தனியெழுத்து வரிவடிவிற்பிறிதொன்றின்றித் தமிழ் நாட்டார் எழுதும் கிரந்தலிபியாயிருப்பதாலும், அதுவும் வரிவடிவில் தமிழ் எழுத்துக்களோடு ஒற்றுமையுற்றிருப்பதாலுமறியலாம். வடமொழி தமிழின சம்பந்தமேயில்லாத பிறநாட்டுமொழியுமாய்; தமிழப்பார்ப்பனர் பிறநாட்டவருமாயின் வடிவெழுத்தால் தமிழெழுத்தோடொற்றுமையுடைய கிரந்தவடிவெழுத்து எதற்காக ஏற்பட்டது? பிரணவாகார விமானங்கள் எவ்வெழுத்தின் வடிவால் நிருமிக்கப்பெற்றுள்ளன" என்பதே.

களிற் கற்ற மேதாவிகளிற் சிலரும், தொட்டிற் பழக்கம் சுடலை மட்டும், என்னும் பழமொழிக்கு இலக்கியமாகிக் குழறு படையாய் உளறுவதை முன்னிட்டு சுவாமி விவேகானந்தர் மிக்க வருத்தமுற்று மேற்கண்டவாறு எழுதியிருக்கிறார்க ளென்பது, தானே விளங்கும். பின்னும், வடமொழி தென் மொழிகளிலும் ஆங்கிலத்திலும், மஹா வித்துவசிரோமணியாய் விளங்கும் பிர்ம்மஸ்ரீ பி. தி. சீனிவாசய்யங்கார், M.A., L.T., அவர்கள் இயற்றிய ஆராய்ச்சிமலிந்த இந்திய சரித்திரம் முதலாவது சஞ்சிகை பக்கம் கூடு-ல் எழுதியிருப்பதாவது. "அன்றியும் 'ஆரியர்' என்னும் இனத்தார் இந்தியாமேல் படை யெடுத்துவந்து ஜயித்து இந்த பாஷையை (வேதமந்திர பாஷையை) இந்தியாவில் பரப்பினூர் என்ற ஒரு கற்பனையை ஐரோப்பியர்கள் உண்டாக்கியிருக்கின்றார்கள். இது நம்பத் தக்க கற்பனையல்ல. ஆரிய முறைகள் உண்டானது மத்திய தேசத்தில். (கங்கை, யமுனை நடுவிலிருக்கும் நாட்டில்) வேத மந்திரங்களில் ஆரியர் வெளிநாட்டிலிருந்து வந்தார்களென்று குறிப்பொன்றுமில்லை." மற்றும் இவ்விடயத்தை வலி யுறுத்தியே அவர்களெழுதிய சரித்திரத்தில் பிற இடங்களி லும் எழுதியிருக்கின்றார்கள். என்பதே. இவர்கள் ஆராய்ச்சி களும் நம் நூல்களின் பிரமாணத்தையே வலியுறுத்துகின்றன. ஆதலால், "மறை என்ற (தமிழ்ச்) சொல் ஆரியர் கலந்த பிற்காலத்தே வடமொழி வேதத்தையுங் குறிக்க வழங்கியது" என்னும் நம் நண்பர் கூற்றுப் பயனிலதாயிற்று. தமிழ் எக்காலமோ, ஆரியம் எக்காலமோ, வேதம் எக்காலமோ, அக்காலமே, மறையென்ற தமிழ்ச் சொல்லுமுண்டாகி வேதத்தைக்குறித்து நின்றுகொண்டிருக்கின்றது. "ஆரியமுந் தமிழும்முடனே சொல்லிக் காரிகையார்க்குங் கருணைசெய் தானே." என்னுந் திருமந்திரச்செய்யுளானும் இருமொழியும் ஒரேகாலத்திற் சிவபிரானிடந் தோன்றினவென்பதையுமறிக. "மறையே வேதமும் மறைத்து மொழிகிளவியும்" எனச்சூத்திர மேற்பட்டதும் மறையென்ற பதம் வேதமுண்டான காலமே உண்டாயிற்றென்பதைக்காட்டும். தமிழ்மாது ஆரியத்திலிருக் கும் வேதம் தனக்கு மறைவாயிருந்ததனால் மறையென்ற சொல்லால் அதைக் கூறினாள்போலும். ஆனால் நம் நண்பர் ஓர் தந்திரம் கற்றுக்கொண்டார். அஃதாவது அவர்கொள்கைக்கு உடன்பாடில்லாது முரணுகக்காணப்படும் பண்டைய நூல் களின் வாக்கியங்களையெல்லாம் புதுவதாகப் புகுத்தியவை யென்று சொல்வதே. ஆதிமுதல் இதுகாறுந்தோன்றிய தெய்வ வருள் பெற்ற பெரும்க்கள்களில் ஒருவருங் காணுததொன்றை இவர் தமது நவீனக்கற்பனைக்கு ஆதர

வாகக்கூறுவதானல் அதை ஆன்ருேர் கொள்ளார். இக் காரணங்களான் "மறையோர்தே எத்துமன்ற லெட்டனுள்" என்ற சூத்திரப்பகுதியில் மறையென்றது ஆரியவேதத்தையே குறித்து நின்றது. நம் சோமசுந்தரக்கடவுளும் "அந்தணரு மறைமன்ற லெட்டினுள்" என்று தாமியற்றிய அகப்பொருளி லும் கூறினர். பிற்காலத்திய அகப்பொருள் விளக்க ஆசிரிய ரும் "ஒருநான்கு வேதத்திருநான்குமன்றலுள்" எனவுங் கூறினர். மறையென்ற சொல்லின் ஆராய்ச்சியை இத்தோடு நிறுத்தி இனி, மேலாராய்வாம்.

கூஉ. இனி நண்பர் கூறுவதாவது. "தமிழ்மறை நான் "கும் தென்றமிழ் நாட்டைக்கடல்கொள்வதற்கு முற்காலத்தே "நிலவினவென்பது கடல்கோட்குப்பின் முதன்முதலுண்டாய "தொல்காப்பியநூலின் பாயிரத்தே அவை விதந்தோதப் "பட்டமை விளங்கும். கடல்கோட்குச்சற்று முன்னே "பின்னே ஆரியாது கலப்பு இந்நாட்டில் வந்துவிட்டது" என்று எழுதியிருக்கின்றார். கடல்கோட்கு முன்னர் தமிழ் நான்மறை நிலவியதென்றும் கடல்கோட்குப்பின்னர் முதல் முதலுண்டாயது தொல்காப்பிய நூலென்றும் நண்பர் சொன் னர். தொல்காப்பியத்துக்கு முந்தி நான்மறையென்று ஒரு தமிழ்நூல் இருந்திருக்குமாளுல் அதன் பெயர் விவரம் தொல் காப்பியத்துள் வாராதிருக்க நியாயமில்லையென்பதற்குள்ள பல காரணங்களைக்காட்டி இவ்வாராய்ச்சி எஉ முதல் எகூ பக் கங்கள் வரை விரிவாயெழுதினேம். தொல்காப்பியத்துள் அக் காலம் வணங்கப்பெற்ற கடவுளர் பெயர்கள் கொடிநிலை கந்தழி, வள்ளியென்ற பெயர்களால் அழைக்கப்பட்டிருக்கின்றன. சிவபிரான் கல்லால நீழலில் தமிழ் முனிவர் நால்வர்க்கருளிய தன் காரணமாக அறம்பொருள் இன்பம் வீடென்னும் நான்கு பகுதியைச் சுட்டித் தமிழரது ஒழுக்கத்துக்குத் தமிழில் நான் மறையென்ற ஒரு நூல் தோன்றியிருக்குமாளுல், அறம் பொருள் இன்பப் பகுதியை விரித்துக்கூறிய தொல்காப்பியனர் அவர் இயற்றிய விரிவான தமிழ்மக்களுக்குரிய நூலில் அத்தமிழ் நான்மறையென்ற பெயரும் சிவபிரானது பெயரும் இடம்பெரு மற்போகுமா? முதனூல் வழிநூல் இன்னதென்றும் பலவகைச் செய்யுளிலக்கணம் இன்னதென்றும் தொல்காப்பியம் கூறு கின்றதே. தமிழர்களது நான்மறைகளேயும் அவைகளில் விளங்கிய தமிழ்ச்செய்யுட்போக்கையும் தொல்காப்பியனர் கூருது விடுவரோ. தமிழ் நான்மறை கற்றவரென்று நண்பரால் சொல்லப்படும் அதங்கோட்டாசிரியர் தாம் கற்றிருந்த தமிழ் நான்மறை விவரங்கள், தான்கேட்டு அங்கிகாரஞ்செய்த

நூலிற் காணப்படாதிருக்கவும், அதை அங்கீகரிப்பரோ? ஆதலால் தமிழ் நான்மறை ஒன்றிருந்ததென்பது தன்கருத்து முற்றுவித்தற்பொருட்டுக் கல்லாமாந்தரை மயக்கித்தன்வசப்படுத்தற்குக் கூறியவெற்றுரை யென்பது ஒருதலை. கடல்கோட்குமுன் என்ற காலவெல்லையை நமது சரித்திரவாயிலாக ஆராய்வாம். தலை, இடை, கடையென முச்சங்கங்கள் நிலைபெற்று நின்றனவென்பதும் தலை, இடை இரண்டு சங்கங்களும் அவை நிலாவிய மதுரை, கபாடபுரம் என்னும் நகரங்களும் இருமுறையுண்டான கடல்கோள்களில் மறைந்து போயினவென்பதும் நமது பண்டைய நூல்களிற் கூறப்பட்டிருக்கின்றன. தற்காலச் சரித்திர ஆராய்ச்சி வல்லுநர் கடைச்சங்க மிறுதிக்காலத்தை ஒரே நிலையாகக் குறிப்பிட்டுக் கூறவில்லை. திருவள்ளுவர் குறள் அரங்கேற்றிய காலம் கடைச்சங்க மிறுதிக்காலமாயிருக்கலாமென்பது பல்லோர் கருத்து. அவ்வாறாயின் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் கடைச்சங்கங் குலைந்திருக்கவேண்டும். எம் நண்பர் திருவாளர் சீனிவாசப் பிள்ளையவர்கள் பல ஆராய்ச்சி கொண்டு கடைச்சங்கம் இறுதிபெற்றது, கி. பி. மூன்றாம் நூற்றாண்டென்கிறார்கள். இவ்வாராய்ச்சிக்கு அக்கணக்கு எல்லையையே வைத்துக்கொள்வோம். அப்போது கடைச்சங்கம் இறுதியடைந்து ௲௭௱ ஆண்டுகள் ஆகின்றன. கடைச்சங்கம் நிகழப்பெற்றகாலம் நமது நூல்களின் ஆதாரவுப்படி ௧௮௫0 வருடங்கள், இடைச்சங்கம் நடைபெற்றகாலம் ௩௭00 ஆண்டுகள். இவ்வகையில் ௧௬00 + ௧௮௫0 + ௩௭00 = ௭௧௫0 வருடங்கட்கு முன்னர் தலைச்சங்க மிருந்ததாகத் துலங்குகிறது. ஒவ்வொரு சங்கமும் மறைந்து அடுத்த சங்கந்தோன்றிய காலத்துக்கு இடையே எத்தனை ஆண்டுகள் நின்றனவோ அது விவரம் தெரியாது. தொல்காப்பியம் முதலிய நூல்களை ஆராய்ந்து முதல்தடவையாக அச்சிட்டு வெளிப்படுத்திய ஸ்ரீமான் தாமோதரம் பிள்ளையவர்கள் தொல்காப்பியம் இயற்றப்பட்டு ௧௨,000 ஆண்டுகள் ஆயின என்கிறார். அவ்வளவு தூரம் போகவேண்டாம். ஏற்பட்ட கணக்கின்படி ௭௧௫0 வருடங்களுக்கு முன்னர் தொல்காப்பியம் இயற்றப்பட்டிருப்பதாகத் தெரிகின்ற. ஆரியர்கள் மத்திய ஏஷியாவிலிருந்து முதல் முதல் பஞ்சா தேசத்திற் குடிபுகுந்தது இன்றைக்கு ௩௫00 ஆண்டுகட் முன்னர் என்று மேனாட்டுச்சரித்திர ஆராய்ச்சியார் கூறுகிறார்கள். பிறகுதான் நான்கு வேதங்களுமியற்றப் பெற்ற வாம். இவ்வாறாகில், நமது நூல்களின்படி ஏற்பட்ட குறை எண்ணிக்கைப்படி ௭௧௫0 ஆண்டுகட்குமுன் இயற்றப்பெ தொல்காப்பியத்தில், ஆரிய அந்தணர்களைப்பற்றியும் அவர்

ஒழுக்கங்களைப்பற்றியும், அவர்கள் வேதநூல், மதக்கொள்கைகள், ஆரிய எழுத்தின் பிறப்பு முதலிய, ஆரியமொழிகள் தமிழ்ச் செய்யுளில் வருவதற்கு இலக்கணம், இவைகளெல்லாம் தொல்காப்பிய நூலில் எவ்வாறு எழுதப்பட்டன. ஆனல் மேனாட்டுச் சரித்திர ஆராய்ச்சியைப் பின்பற்றிய நம்மவருட் சிலர் தொல்காப்பியந் தோன்றியே இரண்டாயிரம் ஆண்டுகள் ஆனதாகச் சொல்லுவார்கள். இவர்கள் கூற்றுக்குப் பிரமாணம் அவர்கள் வாய்மொழியே.

ஆதலால் சிவதருமோத்தரம், கூர்ம புராணங் கூறியவாறு, ஆரியர்களாகிய அந்தணர்களும் நம் நாட்டில் நம்முன்னோர்களுண்டாயபோதே உண்டானவர்களாவார்கள். நமது சிவபிரானே 'ஆரியன் கண்டாய், தமிழன் கண்டாய்' என இருவகையோர்க்கும் முதற்றந்தையாயிருக்கின்றார். ஆரியத்துக்கும் தமிழுக்கும் அவரே முதற் குருவாகி நிற்கின்றார். நிற்க மேலாராய்வாம்.—

௩௩. இனி நம் நண்பர் எழுதுவதாவது. "அந்தணர், "பார்ப்பார் என்ற சொற்கள் தமிழருட் சிறந்த சில வகை "யாரையே, ஆதியிற் குறித்தனவென்பதைப் பின்னர்க் காட்டு "தும்" எனப் பீடிகை எழுதிக்கொண்டு புறநானூற்றிற் சில பிரமாணங்கள் அதற்கு இருப்பனபோல அந்நூலிற் சில செய்யுட்களை யெழுதி விவகரிக்கின்றார். இச்சொற்கள் ஆதியில் தமிழரிற் சிலரைக் குறித்ததாயிருந்தால், வரன்முறையாகவே வந்து இக்காலமும் அவ்வாறே நிகழவேண்டியதல்லவா? அவ்வாறு இல்லை. எக்காலம் எக்காரணத்தால் அம்முறைதவறிற்று. இவைகளைப்பற்றி நம்நண்பர் யாதுஞ் சொல்லவில்லை. புறநானூற்றில் என்ன காட்டுகிறாரென்பதைப் பார்ப்பாம். முதலாவது "புறநானூற்றின் கூ-வது செய்யுளிற், "சிறந்த நான்மறை முதல்வர் ஏந்து கையெதிரே வாடுக" என்று காணப்படுவதில் நான்மறை யென்றது தமிழ்வேதங்களை யென்றார். அவ்வாறு அவர் பொருள் கொண்டதற்குக் காரணம் அப்பாட்டுடைத்தலைவனான பல்யாகசாலை முதுகுடுமி யென்னுமரசன், வியாசர் நான்கு வேதங்களை வகுத்தகாலத்திற்கு நெடுநாள் முன் வாழ்ந்தமையாலென்றார். வியாசர் காலமின்னதெனவும் முதுகுடுமி அரையன் காலமின்னதெனவும் எண் அளவால் இவர் காட்டினாரில்லை. முதுகுடுமி காலம் வியாசர்க்குமுன் என எவ்வாறு கண்டுபிடித்தார். நமது கணக்குப்படி வியாசர் காலம் ருகூ வருடங்கட்கு முன்னர். இதை இவர் ஒப்புகின்றாரா? இது எவ்வாறாயினுமாகுக. வியாசர் காலத்துக்கு முந்தியே நான்மறைகள் வட

மொழியிலிருந்தனவென்று நச்சினார்க்கினியர் உரையிவிடத்துக் கூறியிருப்பதை நம்மவர் காட்டாது எழுதியிருப்பதை விளக்கிக்காட்டி முன்னமேயே எ௬, எ௬௨-வது பக்கங்களில் எழுதியிருக்கின்றோம். நான்கு வேதங்கள் வியாசர் காலத்துக்கு முந்திய விரிவாயிருந்து மறைந்துபோனவைகளை வியாசர் சிவனருளால் நான்கு கூறாகத் தொகுத்தாரேயொழிய நான்கு வேதங்களை அவரியற்றவில்லை. இச்செய்யுளில், நான்மறை முதல்வர் என்று காணுஞ் சொற்றொடர்க்கு, நான்மறையைக் கற்ற முதல்வர், அல்லது நான்மறையையுடைய முதல்வர் எனப்பொருள்கோடலே அமையும். இந்த நான்மறை தமிழ் வேதமென்று நம்மவர் கூறுகின்றார். நம்மவர் கூற்றுப்படி தமிழ் நான்மறை தலைச்சங்க மிறுதிக்காலத்தே கடல்கோளில் மறைந்துவிட்டது. அற்றேல், இச்செய்யுள் பாடிய புலவரும், பாடப்பட்ட பாண்டியனும் முதலூழியின் கடல்கோளுக்கு முன்னரே இருந்திருக்கவேண்டும். கடல்கோளுக்கு முன்னர் பாடின இச்செய்யுள்மட்டும் தமிழ் வேதங்களுடன் கடல்கோளில் மறைந்துவிடாமல் இருந்து இடைச்சங்க காலம் ௩௭00 ஆண்டுகளும் நிலைபெற்று விளங்கி இரண்டா மூழியிலும் மறைந்துவிடாமல் உயிரோடிருந்து கடைச்சங்கப் புலவர்களால் புறநானூற்றில், சேர்க்கப்பட்டதென்பது பெரு விந்தையேயாம். அல்லது இப்புலவரும் இப்பாண்டியனும் கடைச்சங்க காலத்தவர்கள், இச்செய்யுளும் அக்காலத்ததே என்று சொல்வோமானால் தலைச்சங்கத்திறுதியில் அழிந்துபோன தமிழ் வேதங்களைக் கற்றவர் எவ்வாறு இப்பாண்டியன் காலத்திருந்து உபசரிக்கப்பட்டார்கள். இவையெல்லாம் பெருங்குழப்பமேயாம். மற்றும், புற. நா. ௧௫-வது செய்யுளில் இந்தப் பாண்டியனையே மற்றோர் புலவர் "புரையினற்பனுவ னால்வேதத் தருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை நெய்மலி யாவுதி பொங்கப் பன்மாண் வீயாச் சிறப்பின் வேள்வி முற்றியூப நட்டவியன்களம் பலகொல் யாபல கொல்லோ" வெனப் பாடியிருக்கின்றார். இதனால், யூபஸ்தம்பங்களை நட்டு நான்கு வேதமுறைப்படிப் பல யாகங்களைச் செய்து முடித்ததனால் பல யாகசாலைகளை உடையவன் எனப் புகழப்பட்டிருக்கிறான். யூபஸ்தம்பம் நட்டது ஏதுக்கு? யாகப்பசுக்களைக் கட்டுவதற்கன்றோ? இச்செய்யுளை ஏன் நம்மவர் எடுத்துக்காட்டாது விடுத்தனர்? இச்செய்யுளிற் கூறியிருக்கும் "நற்பனுவல் நால்வேதம்" என்றதும் அவரது தமிழ்மறைதானோ? இவரது தமிழ்மறையிலும் யூபஸ்தம்பங்கள் நட்டு யாகப்பசுக்களைக்கட்டி யாகஞ் செய்யவேண்டிய முறை கூறியிருந்ததென்று சொல்வது வடமொழி வேதங்

களிற் கூறப்பட்டிருக்கும் யாகங்களை நிந்திக்கும், நம்மவருக்கு உடன்பாடோ? இச்செய்யுள் இவர் கோளுக்குப்பொருந்தில அதனாற்றான் இச்செய்யுளைக் காட்டாதுவிடுத்தனர். இந்த பாண்டியனையே சூ-வது செய்யுட்கூறிய புலவர் அவனது பெருமையைச் சொல்லுமிடத்து "பெருமநின்சென்னி, சிறந் நான்மறை முதல்வர், ஏந்துகையெதிரேவாடுக" "பெருமநின முடி, மிக்க நான்கு வேதத்தினையுடைய அந்தணர் நின் நீடுவாழ்கவென்றெடுத்தகையின் முன்னே வணங்குக" என கூறினாரென்றால், இந்த வேதமட்டும் இறந்துபோன தமிழ்வேத மும், இந்த வேதத்தையுடையவர் தமிழ் அந்தணரும் ஆவரோ? "பார்ப்பார்க் கல்லது பணியறியலையே" எனப் பதிற்றுப பத்தும் கூறும். முதுகுடுமியென்ற பாண்டியன் பலயாகசாலை என்ற அடைமொழியுடன் பெயரெய்தி விளங்கினமையா னும், அவ்யாகஞ் செய்விப்போர் அந்தணரே யாவரான மையானும் அவ்வந்தணர்கள் கூறும் ஆசிச்சொற்களுடன் அவ கள் எடுத்தகைமுன் அவன் முடிவணங்கும் என சூ-வது செய்யுளியற்றிய புலவர் கூறினாரென்றறியவேண்டும். இவ் வரசன் முக்கட்செல்வர் வழிபாடுடையானென்று நம்மவர் சூசிப்பித்தார். முக்கட்செல்வர் வழிபாடு கொண்டவரானால் ஆரியவேத வாயிலாக இவன் யாகஞ்செய்ய இசையானென் பது இவர் கருத்துப்போலும். மேற்காட்டிய கரு-வது செய்யு ளில் இப்பாண்டியன் வேதமுறைப்படி யூபஸ்தம்பங்களை நட்டுப் பலயாகங்கள் செய்தவனென்று விளங்குவதை இவர் படிக்கவேண்டும். "மேதபதிம்"; "ஆமேவாராஜா நமத்வாஸ் யருத்ராம்..........அவமேஸக்ருணுத்வம்" என்னும் இருக்கு வேத வாக்கியங்களில், யாகத்துக்குத்தலைவர் சிவபெருமானே என்று கூறியிருப்பதையும் இவ்வாக்கியங்களுக்கு மாறாகச் சிவ பிரானை வரிக்காது யாகஞ்செய்யப்புகுந்த தக்கன் பட்டபாட் டையும் இவ்வரசன் நன்குணர்ந்து தான்கொண்ட சிவபக்திக் கிணங்க யாகங்கள் பலவற்றை மழைவளஞ் சுரந்து நாடு செழித்துக்குடிகள் இன்புறற்கும் தெய்வங்கட்குச் சிறப்பொடு பூசனை செவ்விற் செல்லுதற்பொருட்டும் இன்னோரன்ன பிற பயன்களைக்குறித்துஞ் செய்தவன் ஆவான். நந்தமிழ் நாட்டில் யாகஞ்செய்தோர், முதுகுடுமிக்கு முற்பட்ட பல அரையர் களுமுண்டு. திருவிளையாடற் புராணத்தில், உலகமாதாவைத் தனக்குப் புத்திரியாகப்பெற்ற மகாசிவபக்தனாகிய மலையத்து வஜ பாண்டியன். ௯௬ அசுவமேத யாகஞ்செய்தவனெனப் "புண்ணியம் நிரம்புபரிவேள்வி புரிகுற்றான." "அறின்மறை கூறுமுறை யெண்ணுமொரு தொண்ணூற்றுறுமொடு மூன்று மகமாற்ற" எனக்கூறியிருப்பதாலும் அறியலாம். பெரிய

புராணத்தில், மனுநீதிகண்ட சோழர் அசுவமேத முதலிய பற் பல யாகங்களைச் செய்தவர் என்றும் சேக்கிழார் மூர்த்திகள் கூறியுள்ளார். இக்காரணங்களால் புறநானூறு கூ-வது செய்ய ளிற்கண்ட நான்மறையைத் தமிழ் நான்மறையென்று நம்மவர் கொண்ட பொருள் உண்மைப்பொருளல்லவென்பது விளங்கும். இனி அவரது இரண்டாவது பிரமாணமாவது "புறநானூற் றுக் கடவுள் வாழ்த்துச்செய்யுளுட்போந்த மறையென்பது மந் திரமென்னும் பொருட்டு" என்று சுருக்கமாய்க்கூறினார். அவ் வாழ்த்துச் செய்யுளில் "மறைநவிலந்தணர் நுவலவும்படுமே" என்ற சொற்றொடர் காணப்படுகின்றது. இதில் மறை என்ற தற்கு, மந்திரம் எனவோர் பொதுவான பொருளை அமைப்ப தானால், சிவமந்திரம், தேவிமந்திரம், விண்டுமந்திரம், மற்றைய கடவுளர் மந்திரம் பலவுளவானதால், இவைகளில் எம்மந் திரத்தை மறையென்ற சொல் குறித்ததெனை அறியப்படாமை யின் இச்செய்யுட்கூறிய புலவர்மேல், மயங்கக்கூறல் என்னுங் குற்றமேற்படும். அன்றியும் இம்மந்திரங்களெல்லாம் ஆரியத்தி லேயே நின்று நிலாவுகின்றன. தமிழில் மந்திர நூலுங்கிடை யாது. தமிழ் எழுத்துக்கள் மந்திரங்களைச்சொல்லும் ஆரியவெழுத்துக்களது மாத்திரை பெற்றுமில. ஆனதால் அம்மந்திரங்களைப் பயின்ற அந்தணர் ஆரியரேயாவர். அற்றன்று, "நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த மறை மொழிதானே மந்திரமென்ப" என்ற தொல்காப்பியச்சூத்திரப் படிக்குள்ள மந்திர மென்பாரேல் அச்சூத்திரம் மறைத்த பொருளடங்கிய மந்திரச்செய்யுள் இன்னதெனக் கூறிற்றே யொழிய மந்திரம் இன்னதெனக் கூறிற்றில. அந்தத்தமிழ் மந்திரச் செய்யுட்களைக் கற்ற அந்தணர் எனப்பொருள் கொள் ளப்படாதோவெனின், கொள்ளப்படாது. ஏனெனில் கடைச் சங்கப் புலவருக்குத் தொல்காப்பியமே இலக்கணம். தொல் காப்பிய விதிக்குச் சற்றும் மாறுபடாதவர்கள். தொல்காப்பி யத்தில், நான்கு வருணமும் வகுத்துக் கூறி அவர்களது ஒழுக் கங்களையுங் கூறி அவர்களில் முதலாயவரை அந்தணர் என்ற மொழியாற் கூறி அவர்களுக்கே வேதம் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தலாதிய தொழில் உரிமை யென்றும், கூறுவதால் இக்கடவுள் வாழ்த்துச் செய்யுளிற் கூறப்பட்ட அந்தணர் அவரேயாவர். ஆனதால் மறைநவிலந்தணர் என் றது உரையாசிரியர் எழுதியபடி, வேதத்தைப் பயிலும் அந் தணர், என்றே பொருள்படும்.

புறநானூற்றின் இவரது மூன்றாவது பிரமாணமாவது அந்நூலின் உ-வது செய்யுளில் "நாஅல் வேதநெறி" "அந்திய ந்தணரருங் கடனிறுக்கும் முத்தீவிளக்கிற்றுஞ்சும் பொற்

மெய்போன்ற பொய்ம்மையை உளப்பட்டறிந்து அப் பொய்மையை மெய்யென்று கருதாமல் உண்மைப் பொருள்களை அவர்களுக்கு எற்பச்சொல்லி இருபத்தொரு வேள்வித் துறைகளையுங் குறை யின்றாகச் செய்து முடித்த புகழமைந்த தலைமையையுடைய அறிவுடையோர் மரபிலுள்ளானே என்பது.

நான்கு நூல்களின் முறை தெரிந்துணர்த்தும் ஒரு முது நூல் என்று வடமொழி இருக்குவேதம் குறிக்கப் படுவதை நோக்குமிடத்து என்றார்.

குறிப்பு ஒன்றிறு வுணர்த்த அதனை விளக்க எழுந்த என்னும் பொருளை மேற் செய்யுளின் எம் மொழிகள் பயக்கின்றன. குறிப் பொன்றிறு வுணர்த்தப்பட்டவர் யாவர்? அவரை இச்செய்யுள் கூற வில்லையே.

நான்கு நூல்கள் எவ்வாறு எழுந்தன? அவை சுயமாயெழுந்தனவா? அல்லது ஓர் கர்த்தாவினுலா? இவ்விபரங்களை யெவ்வாறு அறிவது? இச்செய்யுளுக்கு இவர் கூறிய உரையை ஆதரவு செய்ய இவ்விபரங்களை உணர்த்த, ஓர் சரித்திரம் தமிழ் நூலிலோமற்று எந்நூலில்தானும் உண்டோ? இவை முதலிய ஆசங்கைகளை யெவ்வாறு தீர்த்துக்கொள்வது? இதற்கு வழி ஒன்றுங்காணேும். ஆனதால் இவர் கூறிய உரை நன்றாகாது. இறைவனது வாக்கைவிட்டு நீங்காது என்னும் பொருளைக் கொடுக்கும் "முதுமுதல் வன்வாய் போகாது" என்னுஞ் சொற்றொடர் இச்செய்யுளிற் காணப்படுவதுபோல நமது பண்டைய நூல்களில் ஏராளமாய்க் காணலாம். "மாமுது முதல் வன்வாய்மையின் வழாஅ நான் மறைமரபின்" என்று சிலப்பதிகாரத்திற் காணலாம். அதற்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையாவது. பிரமனது வாயிற்றப்பாத நாலாகிய வேதங்கள் என்பதே. மறைகொணுவா, மறையணிநாவிஞன், ஒதிவாயதும் மறைகளே. சந்தோக சாம மோதும் வாயானை. வேசுவதுந்திருவாயான் மறைபோலும், வேதமொழியர், ஆரணம் பொழியும் பவளவாய்மணியே, என்பனவாதிய தமிழ்மறைப்பகுதிகளும், வேதம் சிவபிரான் வாயினிடமுள்ள தென்பதைக் காட்டும்.

நம் நண்பர் அவர் எழுதிய மேற்காட்டிய உரைப் பகுதியைத் தொடர்ந்து பின்னும் அவர் எழுதியிருப்பதாவது "இருக்குவேதம் குறிக்கப்படுவதை நோக்குமிடத்து வடநாட்"டினின்றும் புகுந்த ஆரிய பிராமணர்தமது வேள்வி நூலைச்"சிவ வாக்கென்று தமிழர்க்கு உரைத்துத் தமிழ் நாட்டிலே "மறைந்தொழிந்த நான்மறையின் முறையைத்தமது நூல் "விளக்குவதாயுங் காட்டியுரைத்தனர் என்பது யூகித்தற் "பாலது." மற்றும் ஓரிடத்தில் அவர் எழுதியிருப்பதாவது "“ஆரிய ஆசிரியராகிய பிராமணர் தென்னாட்டிற் புகுந்து தமிழ் "அரசர்களிடம் வேள்வி செய்வதனாற் பெரும்பயன் விளையு

"மென்றுவற்புறுத்தி அவரால் பலவேள்வியியற்றுவித்தாரென
"பது," பல்யாகசாலைமுதுகுடுமி" யென்னுஞ் சொற்றொடரின்
"பொருளால் யூகித்தற்குரியது" என்றுமெழுதியிருக்கின்றார்
நம் நண்பருக்குப் பிரமாணமாவதெல்லாம் அவரது யூகமே
யொழிய வேறு, காட்சி, அநுமானம், உரை ஆகிய பிரமாண
கள் கிடைக்கா. இவர் யூகத்தான் மேலேயெழுதியிருப்பவை
களைக்கூர்ந்து உய்த்து நோக்குங்கால் பற்பல யூகங்கள் மேலும்
மேலுந் தோன்றுகின்றன. நம் நாட்டை அரசாண்ட வெற்றி
யும் தெய்வத்தன்மையும் பொருந்திய பூர்வீக சேர சோழ
பாண்டிய மன்னர்களும் மிக்க நாகரீகமும் புகழும் ஒப்பற்ற
செந்தமிழ்க்கல்வியின் தேர்ச்சியும் படைத்த நம் முன்னோர்
களும் உண்மையறியாதவர்களாகி உண்மையல்லாத காரியங்
களைப் பற்றினார்களென்பதொன்று. அப்படிக்கல்லாவிடின்,
நம் நாட்டிற் புகுந்த ஆரியர்கள் சதுரங்க சேனையுடன் புகுந்து
நமது வீரபராக்கிரமம் பொருந்திய மன்னர்களையும் நம்
முடைய முன்னோர்களையும் தண்டபேதத்தால் வயப்படுத்
திக் கொண்டார்களென்பது ஒன்று. நம் நாட்டு பண்
டைக் கல்வியாளர் இக்காலத்தவர் போலிராது உண்மை
யறியாமல் மயக்கமுற்று வேள்வி யாகங்களைப் புகழ்ந்து செய்
யுட்கள் அமைத்தார்களென்பதொன்று. அவ்வாறு ஆக்கப்
பட்ட செய்யுட்களைப் பொய்யடிமையில்லாத புலவர்க்குமடி
யேன் என்று நமது சைவ சமயாசாரியரால் தோத்திரிக்கப்
பட்ட தெய்வீகம்பொருந்திய சங்கப்புலவர்களும் ஏற்றுத்
தொகுத்து வைத்துக்கொண்டமையான், அவர்களும் உண்மை
யறியாது போயினார்களென்பதொன்று. "பொய்யடிமையில்
லாத புலவர்க்குமடியேன்" எனச்சங்கப்புலவரைத் தோத்
திரித்து அவர்களுக்கு அடிமை பூண்ட ஸ்ரீமத் சுந்தரமூர்த்தி
சுவாமிகள் பேரிலும், "அற்றன்றி மதுரைத் தொகையாக்கினு
னும்" எனச்சங்கப்புலவரையும் அச்சங்கம் ஆக்கிய இறை
வனையும் புகழ்ந்துகூறிய மூத்தமிழ் விரகர்பேரிலும், "உயர்
மதிட்கூடலினாய்ந்த வொண்டீந்தமிழ்" என்று சங்கப்புலவர்
களது தமிழ் ஆராய்ச்சியைப் புகழ்ந்து கூறிய நம் மாணிக்க
வாசகப்பெருமான் பேரிலுங்குறை கூறியதாகும் :—இம்
மட்டோ,

> "பொன்னின் பீடிகை யென்னும் பொன்னாமேற்
> றுன்னு நாவலர் சூழ்மணியாகவே
> மன்னினார் நடுநாயக மாமணி
> என்ன வீற்றிருந்தார் மதுரேசரே"

என்னுந் திருவிளையாடற் புராணச் செய்யுட்படி, சங்கப்புலவர்
களுக்கு அத்தியட்சராய் எழுந்தருளி வீற்றிருந்து அச்சங்

கத்தை நடாத்திய ஸ்ரீமீனாட்சி சுந்தரேசரிடத்தும் அறியாமைக்குற்றம் ஏற்றப்புகுந்ததுவுமாம். ஐயோ! நங்கடவுள், நம் நண்பர் போன்ற ஒருவரை அக்காலந் தோற்றுவித்தாரில்லையே! அக்காலம் பாபகாலமும் இக்காலம் புண்ணிய காலமும் போலும். இவ்வாறு இன்னமும் பற்பல ஆசங்கைகள் தோன்றுமென்பதில் ஐயமுண்டோ? ஆனதால் இவைகளெல்லாம் குழறுபடையான மயக்கவுரைகளேயாம். சிவதருமோத்தரம், தமிழ் மறை ஆதிய நம் நூல்கள் கூறுகின்றபடி நாமும் ஆரியர்களே. ஆரிய நூல்களும் நம் நூல்களே. 'இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர்' என நம் பாடிய கர்த்தா மொழிந்த உறுதிவாக்கியங்கொண்டு அவ்விருமொழிக்கும் அவரே ஏன் முதற்பிதா ஆகமாட்டார் என்று யாங்கேட்போம். மற்றும், புறநானூறுஉகூ-ககஉ-செய்யுட்களை நம்மவர் எடுத்துக் கூறி ஏதேதோ அவர் கொள்கையைக்காட்டாநிற்பர். அவைகள் ஏற்கனவே நாம் எழுதியிருக்கும் ஆராய்ச்சியி லடங்குமானதால் மீட்டும் அவைகளை யெடுத்து ஆராயாது விடுத்தோம். நம்மவர் கூறும் மற்றைய வாக்கியங்கள் வருமாறு:—

"இக்காலத்திற்குப்பின்பு அதாவது புத்தசமயம் வழங்க ஆரம் "பித்தகாலத்திற்குப் பின்பு நான்மறையென்ற சொல் வட "மொழிகளைக் குறிப்பதற்குப் பெரிதும் வழங்கிவந்ததாகத் "தெரிகின்றது. தேவாரத்துள்ளும் சிற்சில விடங்களில் மறை "யென்றசொல் வடமொழி வேதங்களைக்குறிப்பதுண்டு. ஆயின் "பெரும்பான்மையும் ஆலநிழலின் கண் அருள் பெற்றமுனிவர் "நால்வர்கூறிய நான்மறைகளே விதந்தோதப்பெற்றுள. இவை "யே கடவுள்தந்த முதநூலென்பது தேவார ஆசிரியர் கருத்து. "அவ்வாசிரியர் தமது காலத்தே வடமொழிமறைகளே தமிழ் "நாட்டில் வழங்கினமையோடு அவற்றின் முடிந்த பொருள் "சைவமென்னுங்கருத்தும் நிலைபெற்றிருந்தமையால் அதனை "வற்புறுத்துவான் அவற்றையும் சிற்சில விடங்களிற் காட்டி "யருளுவாராயினர். ஆனால் அவற்றைக் கடவுள் தந்த முத "னூலென யாண்டுங் குறித்திலர். ஆல நிழற்கீழ் கூறிய "மறையென்ற விடத்தெல்லாம் தமிழ்மறை யென்றே கொள்ள "ற்பாலன" என்று எழுதியிருக்கின்றார். இவற்றிற்கு விடையாவது.

புத்த சமயம் உண்டாகியே உகூ௱ வருடம் தானாகிறது. அதற்கு முன்னர் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்றோன்றிய தொல்காப்பிய நூலிலேயே ஆரிய மொழியின்விவகாரம் பல இடங்களிலே சொல்லப்பட்டிருக்கிறது. அந்நூலின் பாயிரத்திலேயே நான்மறையென்ற பெயர் ஆரியவேதமென்கிற பொருளோடு அமைந்திருக்குமானால் நான்மறை தமிழில் இருந்தன

வென்னும் விவகாரம் எவ்வாறு நிலைபெறும். முன்பக்கங்களில் இவ்விஷயம் வித்தரித்து எழுதப்பட்டிருக்கின்றது. ஆண்டுக் காண்க.

௬௪. "தேவாரத்துள்ளும் சிற்சிலவிடங்களில் மறையென்ற சொல்வடமொழி வேதங்களைக்குறிப்பதுண்டு" என்றும் "ஆல நிழற்கீழ் கூறியமறை யென்ற விடத்தெல்லாம் தமிழ்மறை யென்றே கொள்ளற்பாலன" வென்றும் இவர் எழுதியிருக்கின்றார். ஆலநிழற்கீழ் இறைவன் கூறியது தமிழ்மறை யென்பதைத் தேவாரங்களின் ஒரு பதத்தாலு மிவர் காட்ட முடியாதவராகிக், கொள்ளற்பாலன வென்று கூறும் இவர் வெறுமொழியை எவ்வாறு பிரமாணமாகக் கொள்வோம். தேவாரத்துள் பெரும்பான்மையும் ஆல நிழலின்கண் அருள்பெற்ற முனிவர் நால்வர் கூறிய நான்மறைகளே விதந்தோதப் பெற்றுள்ளன. இவையே கடவுள் தந்த முதனூலென்பது தேவார ஆசிரியர் கருத்து என்கின்றார். ஆல நிழலின்கண் அருள்பெற்ற முனிவர் நால்வர் நான்மறைகள் கூறியதாகச் சொல்லும் இவர் கற்பனைக் கூற்று தேவாரத்துள் ஒரு இடத்துங் காணப்பெறாதிருக்கும்போது தேவாரம் அவைகளை விதந்து ஓதினவென்று இவர் கூறியது வெற்றுரையேயாம். இவையே கடவுள் தந்த முதனூல் என்பது தேவார ஆசிரியர் கருத்து என்று எந்தத் தேவாரத்தால் இவர் அறிந்தார். இவர் கருத்து அதுவாயிருக்கலாம். தேவார ஆசிரியர் கருத்துத் தாம் கூறியதே என்பதனை எவ்வுணர்ச்சி யுபகரித்தது. வடமொழி வேதங்களைக் கடவுள் தந்த முதனூலென யாண்டும் தேவார ஆசிரியர் குறித்திலர் என்றார். ஆனால் இவரது மறைந்துபோன தமிழ் நான்மறைகளைக் கடவுள் தந்த முதனூலெனத் தேவார ஆசிரியர் யாண்டாவது குறித்திருப்பதாக இவர் காட்டினாரா? இல்லை. அவ்வாறு தேவாரத்திலிருந்தாலல்லவோ அவ்வாக்கியத்தை யெடுத்துக் காட்டியிருப்பார். இவ்வாராய்ச்சியின் முதற்கண்ணே பக்கம் கரு முதல் கக வரை தொகுத்துக் காட்டப்பட்டிருக்கும், தேவாரமாதிய க௬௫பிரமாணங்களால் வடமொழி வேதங்களைக் கடவுள் தந்த முதனூலென அவற்றின் பெயர்களோடு தேவார ஆசிரியர் ஆதியோர் குறித்திருப்பதை ஒருங்கே திரட்டிக் காட்டியிருக்கின்றோம்.

"வேதியர் தொழுதெழு வெங்குரு மேவிய
ஆதிய அரு மறை யீரே
ஆதிய வரு மறை யீருமையலர்கொடு
ஓதி யருணர் வுடை யோரே."

என்னுந் தேவாரத்தில் அருமறை ஆதியில் உண்டாயதென சம்

பந்தப்பெருமான் அருளியிருப்பதை நோக்குக. பண்டாயநா மறையும் பாலனுகா வென்ற திருவாசக மொழியாலும் நா மறை பண்டே ஆயவென மணிவாசகப்பெருமான் கூறுவதா அறிக. உமாபதி சிவமும் 'செஞ்சொல்புனை ஆதிமறை' யெ றுங்கூறி யருளியது. முதல், ஆதி, பண்டு ஒரு பொருளை குறிக்கும். பின்னும் இவர் எழுதியிருப்பது அவ்வாசிரி (தேவார ஆசிரியர்) தமது காலத்தே வடமொழி மறைகளை தமி நாட்டின் வழங்கினமையோடு அவற்றின் முடிந்த பொரு சைவமென்ற கருத்து நிலைபெற்று மிருந்தமையால் அத வற்புறுத்துவான் அவற்றையும் சிற்சில விடங்களில் காட்டி ளுவராயினர்'' என்பது. தேவார ஆசிரியர்கள் காலத்துக் முன்னும் நீண்டகாலமாகவே வடமொழி மறைகளை தமி நாட்டில் வழங்கிவந்தனவென்பதற்கும், அவைகளின் பொரு சைவமேயென அக்காலமுங் கொண்டிருந்தார்களென்பத கும், நக்கீராதியோர் "அருமறைகளாவன வு, மஞ்செழுத்து கற்கவணித்தாகும்." "நான்கு நின்வாய்மொழி." "வே விச்சையை." "நிறைமறைப் பொருளினை." "வேதமு நீ வேள்வியு நீயே." "வேதியனை வேதப்பொருளானை வேதத்து காதியனை," எனச் சிவபிரானை துதித்திருக்கும் வாய்ம மொழிகளும், அவர்கள் வைதிக சைவசமயத்தையே உண்மை பொருளாகக் கொண்டிருந்தமையும், சேர சோழ பாண்டி மன்னர்கள் அவ்வேத முறைப்படி யாகாதிகள் செய்து அ வேதப்பொருளாகிய சைவத்தையே உண்மையாய்த் தழு நின்றமையும் "ஆரியம் வேதமுடைத்து" எனக் கடைச்சங்கத் தார் மொழிந்திருப்பதும், சிதம்பரமாதிய பூர்வீக சைவ தல களின் வரலாறும், சான்றுபகரும், விரிக்கிற் பெருகும். தேவா ஆசிரியர் காலத்துக்குப் பின்னரோ இதுகாறுந் தோன்றி செந்தமிழ்க்கல்விச் செல்வர்களும் சைவ சித்தாந்த நூல் ஆக்கி யோரும் சைவ சித்தாந்த அனுபூதிமான்களும் வடமொ வேத முடிந்தபொருள் சைவ சித்தாந்தமே யெனக்கொண் இருந்தார்களென்பதும்;

"ஆரியமாய் அறம் பொருள் இன்பம் வீடு அளிப்பது நூல்"
"நீண்மறையி னொழிபொருள் வேதாந்தத் தீதில் பொருள்
கொண்டுரைக்கு நூல் சைவம்"
"பழைய வைதிக சைவம் பரக்கவே"
"இராஜாங்கத்தில் அமர்ந்தது வைதிக சைவம்"
"வேதாந்த மென்றுச்சியிற் பழுத்த சைவ சித்தாந்தம்"

என்பனவாதிய அருண்மொழிகளால் விளங்கும். இ வாராய்ச்சியால் நம் நாட்டில் வேதமும் வேதப்பொருளாகி சைவ சமயமுமே எக்காலமும் நிலைபெற்றிருந்தனவென்பது

பெறப்படும். தேவார ஆசிரியர் காலத்தே வடமொழி மறைகளே தமிழ் நாட்டில் வழங்கினமையோடு அவற்றின் முடிந்த பொருள் சைவமென்னுங் கருத்தும் நிலைபெற்றிருந்தமையால் அதனை வற்புறுத்துவான் அவற்றையுஞ் சிற்சில இடங்களிற் காட்டியருளுவராயினர் என்று நம்மவர் எழுதியிருக்கின்றார். இக்காலம்வரை வேதத்தின் முடிந்த பொருள் சைவம் என்றே நம் மேன்மக்கள் கொண்டிருப்பதை மேலே பிரமாணமூலமாகக் காட்டினேம். "வேதப்பயனாஞ் சைவமும்போல் என்னும் சேக்கிழார் திருவாக்கும் நோக்கற்பாலது. "அதனை வற்புறுத்துவான் அவற்றையும் சிற்சில இடங்களில் காட்டி யருளுவாராயினர்" என்று நம்மவர் எழுதியிருப்பதை உய்த்துநோக்கும்போது பற்பல இடங்களில் அவற்றிற்கு அதாவது வடமொழி மறைகட்கு வேறான தமிழ் மறைகளை வற்புறுத்தாமலே காட்டியருளினர் என்பது போதரும். இதனால் நம் சமயாச்சாரியர்கள் உண்மைகூறாது காலத்துக்கு இயைந்தபடி அவரவர்க்கிணக்கமாகத் தேவாரப்பாக்களை அருளினாரென்று கருத இடமுண்டாகிறது. ஆக்கவும், அளிக்கவும், அழிக்கவும் ஆற்றல்வாய்ந்த நம் பெருமக்களும், நடுவுநிலைமை நாடாது காலகதிக்குட்பட்டு மெய் ஒன்றையே காட்டாது உலகம் மயக்கமடையுமாறு தேவாரப்பாக்கள் மொழிந்தாரெனல் எப்பெரும்பாதகமோ அறியேம். நிற்க, மேலாராய்வாம்.

௩௫. இனி, நம்மவர் மறைவரலாறு விளங்குவதற்கு வேள்வி, அந்தணர், பார்ப்பார் என்ற சொற்களின் பொருள் ஆராய்ச்சி இன்றியமையாதது என எழுதிக்கொண்டு வேள்வியென்பது விரும்பியதைக் கொடுத்தல் என்னும் பொருட்டாய் உபகாரத்தைக் குறிப்பதற்கு வழங்குந் தமிழ்மொழியென்றெழுதி அது ஈகைச் செய்கைகள் மிகுதிப்பட்ட யாகம் முதலிய அங்கிவழிபாட்டிற்கும் பெயராக வழங்கக் காண்கின்றோம் என்றுமெழுதிப், பின்னர் உயிர்க்கொலையில்லாத ஓமங்களும் வேள்வி யென்றழைக்கப்படுகின்றன வென்றுங் கூறிப்பின்னரும் அவ்வகையாகச் சிலவெழுதி "அது பிராமணர் யாகத்தையே சுட்டுவதென்று எவ்விடத்துங் கொள்ள இடமில்லை" யென முடித்தார்.

வேள்வியென்பது சிவாகமப்படிக்குள்ள சைவ வேள்வியெனவோர் வகையும், வேதவிதிப்படிக்குள்ள வைதிக வேள்வியென ஒருவகையும் ஆகி அவ்விருவகையும் நந்தமிழ்மறையிற் கூறப்பட்டேயிருக்கின்றன. வைதிக வேள்வியில் பசுபந்தன முமடங்கும். அவ்வேள்வி செய்பவர்கள், சொர்க்காதி [illegible] களை விரும்பிய அந்தணரிற் பலரும், அரசர்களும் [illegible]

ஆசாரத்தைப் பின்பற்றினவருமே. இவ்வகை வேள்விபுரிந்து வருவதையும் நந்தமிழ்த் திருமறையிடந்தோறுங் காணலாம்.

க. "பறப்பைப் படுத்தெங்கும் பசு வேட்டெரி யோம்புஞ்
சிறப்பர் வாழ்தில்லை"
சம்பந்தர்.

உ. "பறப்பையும் பசுவும் படுத்தும்பல—நிறத்தவு
முடையோர் நிகழும்பதி"
அப்பர்.

ங. "தூயநெய்யால், வட்டக்குண்டத் தெரிவளர்த்
தோம்பிமறை பயில்வார்—அட்டக்குண்டத்
துண்பதறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே"
சுந்தரர்.

ச. "ஒவா முத்தீயஞ்சு வேள்வியாறங்கம் நான்மறையோர்
ஆவே படுப்பா ரந்தணாளராகுதிவேட்டுயர்வார்
மூவாயிர வர்தங்களோடு முன்னரங்கேறி நின்றகோவே"
கண்டராதித்தர்.

ரு. "ஆத்தனைத்தான் படுக்கும் அந்தணர் தில்லையம்பலத்துள்"
திருவாலியமுதனர்

இத் தமிழ்மறைப் பிரமாணங்களாலும்,

"புன்மையாம் பசுத்தடிந்து புரையில் வேள்வியாற்றியே
தொன்மைபோ லெழுப்புமாறு சுருதிசொற்றவாறு போன்
மன்மதன் றனைப்படுத்து மாதைவேட்டு மற்றதன்
பின்முறைக்கணல்க வெம்பிரானி னைத்தனன் கொலாம்"

என்ற கந்தபுராணச் செய்யுளாலும்,

"வெய்யகனற் பதங்கொள்ள வெந்துளமே ரவெனு மன்பா
னையு மனத்தினிமையி னினையமிகு மென்றிடலாற்
செய்ய மறைவேள்வியோர் முன்பு தருந்திருந்தவியி
லெய்யும் வரிச்சிலையவன்றானிட்ட ஆனெனக்கினிய"

என்ற திருத்தொண்டர் புராணச் செய்யுளாலும், சிவபிரான் (வைதிக வகையில்) யாகத்திடமுண்டாகும் ஊன் அவியில் விருப்பமில்லாதவரல்லரென்றும் வேள்வியென்ற சொல் பிராமணர் செய்யும் யாகத்தினையுஞ் சுட்டுமென்றும் அறியலாகும்.

நிற்க; கலித்தொகையில் அந்தணர் என்ற மொழி காணப்படுஞ் சில செய்யுட்களை யெடுத்தெழுதி அவற்றிற்குத் தம் மனம்போலப் பொருள்கண்டு முடிவில் அவருக்குத் தோற்றிய சிலவற்றைக்கூறி அவரது கருத்தை "அந்தணர் என்பது தமிழ் முனிவர்க்கேயன்றி ஆரியப் பிராமணர்க்கும் பிற்காலத்தில் ஒரு பெயராக அமைந்துவிட்டது" என்று முடித்திருக்கிறார். அவர் எழுதிய முறைப்படி ஒவ்வொரு செய்யுள் விஷயத்திலும் அவர் கூறுவதைக் கண்டு அதை ஆராய்ந்து பார்த்து அவர் கொண்ட கருத்து சரியோ என்பதைப் பார்ப்போம்.

"அந்தணர் என்ற சொல் ஆதியில் துறவிகளுள் ஒரு வகையாரைக் குறித்து நின்றது. தொல்காப்பியத்தில் "நூலே கரகமுக்கோல் மணையே, ஆயுங்காலை அந்தணர்க்குரிய" வென்றவிடத்து ஏடும் கமண்டலமும் முக்கோலும் இருக்கையும் அந்தணர்க்கு அடையாளமாகக் கூறப்பட்டன. கலித்தொகை ௧௨௬-வது செய்யுளில் "முக்கோல் கொளந்தணர் முதுமொழி நினைவார்போல" என்றவிடத்து அந்தணர் என்பதற்குக் காஷாயம்பூண்ட குழாங்களென்றும், முதுமொழி யென்றதற்குப் பிரணவமென்றும் ஆசிரியர் நச்சினார்க்கினியார் பொருள் கொண்டார்" என வெழுதியிருக்கின்றார்.

தொல்காப்பியச் சூத்திரத்தில் நூல் கரகம் முக்கோல் மணை அந்தணர்க்குரித்தென்று தொல்காப்பியர் கூறினார். தொல்காப்பியர் சொல்லியது மனு ஸ்மிருதி ௪-ம் அத்தியாயம் கீழ்க்காட்டிய ௩௬-வது சுலோகப் பொருளுக்கொத்தது.

𑌵𑍈𑌣𑌵𑍀𑌂 𑌧𑌾𑌰𑌯𑍇𑌦𑍍𑌯𑌷𑍍𑌟𑌿𑌂 𑌸𑍋𑌦𑌕𑌂 𑌚 𑌕𑌮𑌣𑍍𑌡𑌲𑍁𑌮𑍍 ।
𑌯𑌜𑍍𑌞𑍋𑌪𑌵𑍀𑌤𑌂 𑌵𑍇𑌦𑌂 𑌚 𑌶𑍁𑌭𑍇 𑌰𑍌𑌕𑍍𑌮𑍇 𑌚 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑍇 ॥

(இ-பொ) மூங்கிற்றண்டம், தீர்த்த கமண்டலம், பூணூல், தருப்பாசனம் பவித்திரம், சுவர்ன குண்டலம் இவைகளை எப்போதும் (கிரகஸ்தனாகிய பிராமணன்) தரிக்கவேண்டியது. நூல் என்ற சொல்லுக்கு முந்நூல் என ஆசிரியர் நச்சினார்க்கினியர் பொருள் கண்டார். விசேட உரையில், நூலினை முற்கூறினான் பிறப்பு முறையானுஞ் சிறப்பு முறையானு மென்பது எனவும் கூறினார். நம்மவர் அச்சொற்கு ஏடு எனப் பொருள் சொன்னார். ஏடு என்றால் பனை ஓலையில் எழுதிய ஓர் சுவடி யென்பது பொருளாகலாம். மற்றோரிடத்தில் நம்மவர் எழுதியிருப்பது நூலை ஆராய்தல் அந்தணர் தொழில் என்பது. அதனாற்றான் நூல் என்றதற்கு ஏடு என இங்குப்பொருள் எழுதினார்போலும். நூலை ஆராய்தல் யாவர்க்கும் பொதுவான தர்மம். இங்கு அந்தணர் என்ற சொல் பிறப்பினாலேயே அந்தணர் எனப்பேர்கொண்ட முதல் வருணத்தாரையே குறித்து நின்றது. உரை ஆசிரியர் "இச்சூத்திரம், உயர்திணை நான்கு சாதியும்பற்றி மரபு உணர்த்துவான் முறையானே அந்தணர்க்குரிய மரபுபட்டுவருங் கலப்பை வேறுபாடுணர்த்துதனுதலிற்று", என இச்சூத்திரப்பொருளைக் கூறினார். தொல்காப்பியத்தில் இச்சூத்திரமும் அதற்கடுத்த சூத்திரங்களும் அமைத்திருக்கும் முறைமையினையும் அவற்றின் பொருளையும் நோக்குங்கால், அந்தணர், அரையர், வைசியர், வேளாளர் என்னும் நான்கு வருணத்தாரையும் ஒருவருக்குப் பின் ஒருவராக முறையே கூறி அவரவர்களுக்குரிய அடையாளம் தொழில்

என்பனவற்றையுங் கூறப்புகுந்து முதற் கண்ணே முதல் வரு ணத்தாராகிய அந்தணர்க்குரிய அடையாளத்தைக் கூறினர் தொல்காப்பியர் எனக்கோடலே பொருத்தம். உரையாசிரியர் அவர் எழுதிய உரையில் "தண்டொடு பிடித்ததாழ் கமண்ட லத்துப் படிவவுண்டிப்பார்ப்பன மகனே" என்ற மேற்கோளை யுங் காட்டினர். "நூலேகரகம்" என்ற சூத்திரத்திற்கண்ட அந்தணர் துறவிகளைக் குறிப்பதானல் இச் சூத்திரத்திற்கு அடுத்த சூத்திரங்களிற் சொல்லும் அரையர், வைசியர், வேளாளர் இவர்களுந் துறவிகளாகவேண்டும். அவ்வாறுனல் எச்சூத்திரம் கிரகத்தனைக் குறித்தது, சுஙO, சுஙக, சூத்திரங் களில் நான்கு சாதியாரும் பிறந்த ஊர், ஆதியனவும் அவர்கள் தலைமைக் குணம்படச் சொல்லுங் கூறப்பட்டிருக்கின்றன. "அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கம்" என்ற சூத்திரத்தில் 'நாலிருவழக்கிற்றுபதர் பக்கமும்" என்றதே துறவிகளைக் குறித்ததென்பதை யுணரவேண்டும். இப்பகுதியின் உரைக்கு உரை ஆசிரியர் காட்டியிருக்கிற உதாரண மேற்கோள்களையுங் கண்டுணர்க. ஆதலால் அந்தணர் என்ற சொல் ஆதியில் துறவிகளுள் ஒருவகையாரைக் குறித்து நின்றது எனவெழுதி அதற்குப் பிரமாணமாக "நூலேகரகம்" என்னுந் தொல்காப் பியச் சூத்திரத்தை நம் நண்பர் காட்டியது பிழையே. இனிமேற்காட்டிய கலித்தொகைச் செய்யுளில், தொல்காப் பியச் சூத்திரத்திற்கண்ட அடையாளப் பொருள்கள் நான்கில் ஒன்றுதான் அதாவது முக்கோல் என்பதுதான் காணப்படுவ தோடு கலித்தொகைச் செய்யுளிற்கண்ட அந்தணர் காஷாயம் பூண்ட குழாங்களெனப் பொருள் சொல்லப்பட்டிருக்கின்றது. காஷாயத்தை ஓரடையாளமாகத் தொல்காப்பியச் சூத்திரத்தில் அந்தணர்க்குச் சொல்லப்படவில்லை. சந்நியாசிகள் கமண்டலம், திரிதண்டம், தருப்பை, காஷாயம் இவைகளைத் தரித்துக் கொள்ள வேண்டுமென்று மனுஸ்மிருதி சு அத்தியாயம் சக, நிஉ, சுலோகங்கள் கூறும். பிராமண சந்நியாசிகள், சதா பரமாத்மாவையே சிந்தித்துக்கொண்டிருந்து மோட்ச சித்தியை நாடவேண்டுமென்றும் ஷை சு-அத்தியாயம் சஉ சுலோகம் கூறும். ஆதலாற்றன் இச்செய்யுளிற்கண்ட காஷாயம் பூண்ட அந்தணர் பிரணவத்தையே உச்சரிப்பராயினர். ஆதலாற் அவ் அந்தணர் என்ற மொழியும் முதல் வருணத்தாரையே குறிக் கும். நிற்க, நம்மவர் பின்னரெழுதுவதாவது:—

"கலித்தொகை கூ-வது செய்யுளில் உறித்தாழ்ந்த கரக
"மும், உரைசான்ற முக்கோலும் நெறிப்படச் சுவலசைஇ
"வேறோரா நெஞ்சத்துக் குறிப்பேவல் செயன்மாலைக் கொளை
"நடையந்தணீர், என்றதுங் காண்க" என்றெழுதினர். இச்

செய்யுளால் தங்கொள்கைக்குச் சாதகம் இன்னவாற்றால் என விரித்துக் காட்டிலர். இச் செய்யுளினும் அந்தணர் என்ற சொல் காணப்படுதலே தங்கொள்கைக்குச்சாதகமெனக் கொண்டார்போலும். இச்செய்யுளின் முதற் பகுதி "எறித்தரு கதிர் தாங்கியேந்திய குடை நீழல்" என்பதை நம்மவர் காட்டாது விடுத்தார். குடையும் கமண்டலமும் முக்கோலும் தாங்கிய அந்தணர் என்பது பொருள். முக்கோல் என்பது, அரியயன் அரன் என்னும் மூவரையும் ஒருவனாகவல்லது வேறாக நினையாத நெஞ்சையுடைய அந்தணர் என உரையாசிரியர் விசேடப் பொருள் கண்டார். ஆதலால் இம் முக்கோல் தாங்கல் வைதிக ஆசாரங்கொண்ட வைதிகப் பிராமணர்களைச் சுட்டுமே யல்லது சைவாசாரங்கொண்ட ஒருவரையுங் குறிக்காது. முக்கோல் கமண்டலமாதிய பிராமணர்களுக் குரித்தென்று மனுஸ்மிருதியுங்கூறுநின்றது. பிராமணர்கள் அடையாளங் கூறவந்த தொல்காப்பியச்சூத்திரமும் அவர்களுக்கு முக்கோல் கமண்டலமாதிய உடைப் பொருள்களாகவும் கூறியுமுள்ளது. ஆயுங்கால் என்றதனால் குடையும் அவர்க்குண்டு என ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரையில் எழுதியுள்ளார். இக்காரணங்களால் இக்கலிச் செய்யுளிற் காணப்படும் அந்தணர் என்ற சொல் தொல்காப்பியச் சூத்திரப்படி முதல் வருணத்தாரையே குறித்துநின்றது. நிற்க நம்மவர் பின்னுமெழுதுவதாவது:— "கலித்தொகை கூகூ-வது செய்யுள் "நறவினை வரைந்தார்க்கும் "வரையார்க்குமவை யெடுத்து அறவினை யின்புறூஉம் அந்தண "ரிருவரும் "என்றவிடத்துத் தேவகுருவும் அசுரகுருவும் அந்தணர் எனப்பட்டார்" என்பது. இதனால் இவர்கொள்கைக்கு என்ன சாதகமோ. தேவகுருவும் அசுரகுருவும் தமிழ் முனிவரென்பது இவர் கருத்தோ? தேவகுருவும் அசுரகுருவும் நவக்கிரகங்களில் இருவர். பூவுலகத்து நடவடிக்கை போல நவக்கிரகங்களுள்ளும் தேவர்கட்குள்ளும் நான்கு வருணமுண்டென நமது நூல்கள் பகரும். ஒன்பது கிரகங்களினும் இன்னார் பிராமண குலம், இன்னார் அரசகுலம், இன்னார் வைசிய குலம், இன்னார் சூத்திர குலம் என ஜோதிஷ நூலிற் கூறியிருக்கின்றது. இவ்விரு கிரகங்களும் குருத்தன்மைவகித்த பிராமண குலமென அந்நூல் கூறும். ஆனதால் பிராமணரைக் குறிக்கும் அந்தணர் என்ற தமிழ்ச் சொல்லால் இவர்களை இச்செய்யுளிற் கூறியுள்ளது. நிற்க, நம்மவர் பின்னரும் எழுதுவதாவது. "ஆலநிழல் முனிவர் நால்வர்க் "கும் அவர் வேடத்தாலும் அந்தணர் என்ற பெயர் கூறப் "பட்டுளது. "சைவ வேடந்தானினைத்து அழிந்தசிந்தையந்த "ணாளர்" என்ற தேவாரமும், 'ஆறறியந்தணர்க்கு அருமறை

"பலபகர்ந்து' என்ற கலித்தொகைக் கடவுள்வாழ்த்தும் அவர் "களை யங்ஙனம் கூறின" என்று எழுதினார். இதை விசாரிப்பாம். கல்லாலடியில் இறைவனிடம் வேதத்தையும் வேதப் பொருளையுங்கேட்ட அந்தணர் நால்வர்களின்வேடம் இன்னது எனத்தமிழ் மறையில் ஒரு செய்யுளிலுங் கூறியிருக்கவில்லை. மேற்காட்டிய தேவாரத்தில் அவர்கள் சைவவேடந் தாங்கியிருந்ததாகக் கூறியிருப்பதாக நம்மவர் எழுதியிருக்கிறார். அது பொருளல்ல. இத்திருப்பாட்டின் சுத்தபாடம், **தானிணைத்து** அழிந்த சிந்தை அந்தணாளர் என்பதுவே. இவரே செந்தமிழ்ச் செல்வி உ0-வது பக்கத்தில் அவ்வாறே, தாணிணைத்து. என்று எழுதியிருக்கின்றார். இங்குச் சமயத்துக்குத்தக்கவாறு தம்மனம்போல் பொருள்கொள்ளவேண்டித் தாணிணைத்து, எனத்திருத்தி யெழுதிக்கொண்டார்! இத்தேவாரம் வருமாறு

"சுழிந்தகங்கை தோய்ந்த திங்கட்டொல்லரா நல்லிதழி
சழிந்தசென்னிச் சைவவேடந் தானினைந்து
அழிந்தசிந்தை யந்தணாளர்"

இத்திருப்பாடலின் பொருளமைப்பை நோக்குங்கால், சைவவேடமென்பதனைச் சிவபெருமானுக்கு ஏற்றியிருப்பது நன்கு துலங்கும். அல்லாவிடின், கங்கை, திங்கள், அரவம் கொன்றைப்பூ, இவைகள் நிலவிய சென்னியெனச் சிவபெருமான் கோலத்தை மிக்க வியப்பாயும் அழகாயும் புனைந்த மொழிகள் வெறும் வார்த்தைகளாம். சைவ வேடந்தான் + நினைத்து = தானினைத்து என்றால் (கங்கை ஆதியவற்றைச் சிரசிற் சூடிய சிவபெருமானது) திருவேடத்தை மனதின்கண் தியானித்து என்று பொருள்படும். சிவ வேடந்தான் + இணைத்து = தாணிணைத்து என்றால் சிவ வேடத்தைத் தான் பூண்டு எனப் பொருள்படும். அப்போது கங்கை ஆதியவற்றைச் சிரசில் சூடிய என்றருளியதற்குப் பயன் இன்றாகும். இவ்வாறு தமக்குப் பொருந்தாத பண்டைய நூல்களிற் காணப்படும் மொழிகளைத் திருத்திக்கொள்வதே நம்மவருக்கு வழக்கமாய்விட்டது. இவ்வாறே பல்லோரும் அவரவர் நவீனக் கொள்கைக்குத் தக்கபடி மேன்மக்களது திருவாக்கிற்போந்த அரிய செய்யுட்களை அவரவரும் திருத்திவருவாரேயானால் முடிவில் ஆக்கியோர் செய்யுட்களே மாறுபட்டுப் பொருளும் கிரந்த கர்த்தாவின் கருத்துக்கு வேறுபடும் என்பதில் ஐயமில்லை. கல்லாலடியில் உபதேசம் பெற்றதாகக் கூறமெழுந்த, தேவாரப் பகுதிகளிற்கண்ட அந்தணாளரை நக்கீரர் அவர் இயற்றிய திருவெழு கூற்றிருக்கையில் "முத்தீ நான்மறை ஐம்புலனடக்கிய அறுதொழிலாளர்க் குறுதிபயந்தனை" எனக் குறிப்பிட்

டருளினர். முத்தீ நான்மறைக்குரியவர்களும் அறுதொழிலாளர்களும் யாவரென்று ஆராயுமிடத்து அவர்கள் முதல் வருணத்தாரே யாவரெனச் சிறப்புவகையானும் விளங்கும். "ஆறறியந்தணர்க்கு அருமறை பல பகர்ந்து" என்ற கலித்தொகைக் கடவுள் வாழ்த்தும் அவர்களை யங்ஙனம் கூறினவென்று நம்மவர் எழுதினர். எங்ஙனம் கூறிற்றென்று விரித்து எழுதினாரில்லை. இதில் காணப்படும் அந்தணர் என்ற பதம் தமிழ் முனிவரைக் குறித்ததென்பது அவர் கருத்தாகும். ஆறறியந்தணர்க் கருமறை பல பகர்ந்து என்ற செய்யுளில் அவ்வந்தணர்க்கு வேடமொன்றுங் குறிப்பிடவில்லை. ஆறறியந்தணரென்றதனால், ஆறு அங்கத்தையும் அறிந்தவர் என ஏற்பட்டது. ஏற்படவே அவற்றிற்கு இனமாகிய வேதத்தையும் மறிந்தோரேயாவர். ஆனதால் ஆறங்கத்தையும் வேதத்தையுமறிந்த அந்தணரென்றால், வேதம் ஓதல் முதலிய அறு தொழிலையுடையோர் யாவர். அவர் அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் என்ற தொல்காப்பியச் சூத்திரத்தானே, பார்ப்பன அந்தணரே யாவர். வேதத்தையும் ஆறு அங்கத்தையும் அந்தணர் நால்வரும் முன்னமேயே அறிந்திருந்தாரேயானல் சிவபெருமானிடம் அவைகளைக் கேட்கத் தவங்கிடக்கவேண்டியதில்லையே யென ஓர் வினா எழலாம். அவர்கள் தங்கள் குலாச்சாரப்படி அந்நூல்களைக் கற்றார்கள். அவைகளின் உண்மைப் பொருள் விளங்காமையினல் அந்நூல்களுக்கு முதலாசிரியராகிய சிவபெருமானிடங் கேட்கப் புகுந்து தவம் புரிந்தார்களென்பதே அதற்கு விடை.

ஆறறியந்தணர் என்ற கலித்தொகைச் செய்யுளிற்கண்ட அந்தணர், "அந்தத்தை அணவுவார் அந்தணர்; என்றது, வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பார் என்றவாறு" என உரையாசிரியரும் விரித்தார். இச்செய்யுளிற்கண்ட, "மறையாவன தைத்திரியமும் பௌடியமுந் தலவாகாரமுஞ் சாமவேதமுமாம்" என்றும் உரையாசிரியர் விரித்தார். ஆதலால் இச்செய்யுளும் நம் நண்பர் கொள்கையை ஆதரிக்காமல் கைவிட்டது. நிற்கப், பின்னரும் நம் நண்பர் எழுதியதாவது:—

"அந்தணர் என்ற சொல் செந்தீ வளர்த்தல் முதலிய கடவுள் வழிபாடு செய்பவர்க்கும் பெயராகப் பிற்காலத்துஅமைக்கப்பட்டதாகத் தெரிகின்றது" என வெழுதி அதற்கு ஆதாரம்போலக் "கேள்வியந்தணர் கடவும், வேள்வி யாவியினுயிர்க்கு மென்னெஞ்சே" "ஓத்துடை யந்தணனெரிவலஞ் செய்வான்போல்" என்ற இரண்டு கலித்தொகைச் செய்

யுட்களின் பகுதிகளைக் காட்டுகின்றார். முற்காலம் பிற்காலம் என்ற இவர் வழக்குக்கு ஆதாரம் இச்செய்யுட்களில் ஒன்று மில்லை. தொன்றுதொட்டே நாற்குலத்தவரும் நம் நாட்டினிலிருந்து வாழ்பவர்களேயென்று சிவதருமோத்தரமாதிய நூற்பிரமாணங்களால் வலியுறுத்திக்காட்டப்பட்டது. அல்லாமலும், கலித்தொகை ஆகிய நூலியற்றினோர் கடைச்சங்க காலத்தவர்களே. இச்சங்கம் தாபித்த புலவர்களில் முதன்மை பெற்றவரும் சங்கத்தில் முதல் முதல் ஏறியவரும் நக்கீரரே. இவர் பாடிய திருமுருகாற்றுப்படையில் "ஒரு முகம் மந்திர விதியின் மரபுளிவழாஅ, அந்தணர் வேள்வியோர்க்கும்மே" என்றும் "மூன்றுவகைக்குறித்த முத்தீச்செல்வத் திருபிறப்பாளர்" என்றும் அவர் இயற்றிய திருவெழுகூற்றிருக்கையில் "முத்தீ நான்மறையைம்புலனடக்கிய அறுதொழிலாளர்க் குறுதி பயந்தனை" என்றும், அவரியற்றிய பெருந்தேவபாணியில் சிவபெருமானை, "வேதமும் நீயே வேள்வியும் நீயே" என்றும், "வேதவேள்வியை" யென்றும்; ருக்வேதத்தின் மேற்காட்டிய (க-எஉ-சு) "த்ரிஸ்ஸப்தயத் குஹ்யா நித்வே......... நிஹிதா=இருபத்தொரு யக்ஞமும் உம்மிடத்திலே வைக்கப்பட்டுள்ளனவெனும் சுருதியின் பொருளினாலேயே துதித்திருக்கிறாரென்று திட்டமாய்த்தெரிகின்றது.

சிதம்பர க்ஷேத்திரத்தில் பேர்பெற்று விளங்கும் சிவாலயத்தில் சிவபெருமானைப் பூசிக்கும் செல்வமடைந்தவர்களைத் தில்லைவாழந்தணர் என இறைவன் கூறினானெனப் பெரிய புராணத்தாற் சைவர்களெல்லாரு மறிகின்றோம். இறைவன் பிரமனைத்தோற்றுவித்து அவர் மூலமாக ஆதியில் கச மநுக்களைத் தோற்றுவித்ததாயும் ஒவ்வொரு மநுவின் காலம் மநித அளவில், சஅ,உ0,000 ஆண்டுகள் என்றும் நமது நூல்களாற்றெரிகின்றோம். இப்போது நடப்பது எ-வது வைசுவத மநுவின் காலமென்பதை, வைசுவத மநுவந்தரே, கலியுகேபிரதமபாதே, என்று நம் இந்துதேயம் முற்றுமுள்ள எந்நாடுகளிலும் வழங்கும் சங்கற்பாதிகளால் அறியலாம். ஐந்தாவது மநுவின்காலத்தில், சிதம்பரத்தில், ஆதியில் இறைவன், பதஞ்சலி வியாக்கிரபாத மகரிஷிகளின்பொருட்டு நிருத்த தெரிசனத்தைக் காட்டியருளியபோது, (அத்தெரிசனத்தைத்) தெரிசிக்க வந்த மற்றைய தேவர்கள் இருடிகளுடன் இந்தத் தில்லைவாழ்ந்தணர்களும் தாருகாவனமிருந்து வந்தவர்களென உமாபதி சிவனார் அருளிய கோயிற் புராணத்தாலறியலாம். அவர்கள் வைதிக ஒழுக்கையும் சிவாகம ஒழுக்கையும் கைக்கொண்டவர்களாதலின் அவர்கள் "குண்டிகை கொண்டைத்தண்டொடு மண்டிக்குலைவேணி, முண்டகமிலங்கக் கொண்டயர்கின்றார்."

அதாவது அவர்கள் அத்தெரிசனத்தைக் கண்டு, கமண்டலங்கள், தண்டுகளோடு சடையும் விபூதி ருத்திராட்சமும் விளங்கக் கூத்தாடுகின்றார்களெனவும் கோயிற் புராணத்திற் கூறப்பட்டிருக்கின்றது. இவர்கள் பதஞ்சலி வியாக்கிரபாதர் காலத்திலேயே, பிரமதேவன், கங்கைக்கும் யமுனைக்கும் மத்தியிலுள்ள அந்தர்வேதி யென்னும் பிறதேசத்திலே வேதமுறைப்படி ஓர் யாகஞ்செய்ய ஆரம்பித்ததில் அந்த யாகத்துக்கு இவ்வந்தணர்கள் வராமையால் தேவர்கள் ஒருவரும் வராதிருப்பதை யோர்ந்த பிரமன்தானே நேரில் வந்து அநேகமாய்ப் பிரார்த்தித்து வியாக்கிரபாதர் உத்திரவின்பேரில் நந்த அந்தணர்களையும் அழைத்துப் போனதாகவும் கோயிற் புராணம் கூறும். பின்னர், அந்த ஐந்தாவது மநுவந்தரத்திலேயே, கௌடதேசாதிபதி சிங்கவர்மன் என்பவன் தில்லைக்குவந்து ஆண்டவனது நிருத்ததெரிசனத்தைக் காணப்பெற்று அவ்விறைவனுக்குப் பொற்சபை முதலிய ஆலயங்களை யெழுப்பித் திருவிழா முதலிய நடத்த ஆரம்பித்தபோது, அந்தர்வேதி நாட்டுக்கு யாகங்காணச்சென்ற அந்தணர்கள் மூவாயிரவர்களையும் மனைவி மக்களுடன் தருவித்து அவர்களுக்கு வசிக்கத் திருமாளிகை முதலியவும் நிபந்தம் முதலியவும் ஏற்படுத்திக் கொடுத்து அந்த அரையனே சோழனெனும் பெயருடன் இப்பூமியை ஆண்டான் என்றும் கோயிற் புராணம் கூறுகின்றது. "பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட்டெரி யோம்புஞ் சிறப்பர் வாழ்தில்லை" எனவும் "ஓவாமுத்தீ யஞ்சுவேள்வி யாறங்கம் நான்மறையோர் ஆவே படுப்பார் அந்தணாளர் ஆகுதி வேட்டுயர்வார் மூவாயிரவர் தங்களோடு முன்னரங்கேறி நின்ற கோவே" எனவும், இவர்களைத் தமிழ்முறையுஞ் சொல்லுகின்றன. ஆனதால் நான்மறைக்குரிய செந்தீ முதலிய வழிபாடுடைய அந்தணர்கள் நம் நாட்டில் பூர்வமாகவே இருந்துவருகிறார்களென்பது ஏற்படும். அந்தணர் என்ற சொல் செந்தீ வளர்த்தல் முதலிய கடவுள் வழிபாடு செய்பவர்க்கும் பெயராக பிற்காலத்து அமைந்ததாகத் தெரிகின்றது எனக்காலவெல்லையை முற்காலம் பிற்காலம் என வகுத்து முற்காலத்தில் அந்தணர் என்ற சொல் தமிழ் முனிவரைக்குறித்ததென நிலைநாட்ட நம் நண்பர் முயலுவது நூலாதரவு பெறாத காரியமேயாம். நிற்க, நம் நண்பர் திருக்குறளிற் காணப்படும் அந்தணர் என்ற சொல்லை எடுத்துக்காட்டித் தம் மனம்போல் அதற்குப் பொருள் வரைந்தார்.

அவர் எழுதுவதாவது:—"திருக்குறளில் அந்தணர் என்
"னும் மொழியின் பொருள் தெளிவாக நீத்தார் பெருமை
"யுட் கூறப்பட்டது. நீத்தார் பெருமை திருக்குறட்பாயிரத்

“ துளடங்குதலாலும் நீத்தாரே உள்ளதை உள்ளவாறுணர்ந்து
“ மாற்றலுடைய ராதலாலும் நூலாராய்ச்சி யென்பது அந்த
“ ணர்க்கு முதலிலக்கணமாகத் தொல்காப்பியத்துட் கூறப்
“ பட்டதாலும், “அந்தணர் நூற்கும்” என்ற திருக்குறட்
“ பகுதியுள் “அந்தணர் என்பதற்கு நூலாராய்ச்சியுடைய நீத்
“ தார் என்றே பொருள் கொள்ளல்வேண்டும்.” என்று எழுதியிருக்கின்றார். அந்தணர் என்னும் மொழி திருக்குறளில் நீத்தார் பெருமையுள் கூறப்பட்டிருப்பது உண்மையே. நீத்தார் பெருமை கூறவந்த அதிகாரத்திலன்றோ, முதற்கண்ணே கூறிய கடவுள் வாழ்த்தில் “அறவாழி யந்தணன்றாள் சேர்ந்தார்க்கல்லால் பிறவாழி நீந்தலரிது” என்னுங் குறளில் அந்தணன் என்ற சொல்லைக் கடவுளுக்குரியதாகச் சொல்லப்பட்டிருக்கின்றதே அதை யேனோ நம்மவர் படித்து அதன் பொருளை உணரவில்லை. கடவுளையும் நீத்தாருள் ஒருவராக எண்ணவேண்டுமோ, அவ்வாறாயின் ஒவ்வொரு நீத்தாரும் ஒவ்வொரு கடவுளாவர். “அந்தணரென்போர் அறவோர்” என்ற செய்யுளுக்குப் பரிமேலழகியார் செய்த உரையாவது “எல்லாவுயிர்கள் மேலுஞ் செவ்விய தண்ணளியைப் பூண்டொழுகலான் அந்தணர் என்று சொல்லப்படுவார் துறவறத்தினின்றா ரென்றவாறு. பூணுதல் விரதமாகக் கோடல் அந்தணரென்பது அழகிய தட்பத்தினையுடையாரென ஏதுப்பெயராகலின் அஃது அவ்வருளுடையோர் மேலன்றிச் செல்லாதென்பது கருத்து” என்பதுவே. கடவுள் வாழ்த்திற்கண்ட “அறவாழியந்தணன்” என்பதற்கு அறக்கடலாகிய அந்தணன் என்றே பரிமேலழகர் உரையெழுதியிருக்கின்றார். இவ்வுரையில் அந்தணன் என்னுஞ் சொல்லமைப்புக்குக் காரணங்காட்டவில்லை. ஆதலால் கடவுளுக்கு அந்தணன் என்ற பெயர் இயற்கையாகவே உண்டு என்பதைக்காட்டினார். நந்திபெருமானை அந்தணன் என்ற சொல்லாலே பலவிடத்தும் கூறப்பட்டிருப்பதைத் தமிழ் மறைகளிலும் ஏனைய நூல்களிலும் காணலாம். அரசனது செங்கோன்மையைக் குறிக்கும் அதிகாரத்தில் “அந்தணர் நூற்கும் அறத்திற்குமாதியாய் நின்றது மன்னவன்கோல்” என்ற குறளில் காணப்படும் அந்தணர் நூற்கும் என்னுஞ் சொற்றொடருக்கு “நூலாராய்ச்சியையுடைய நீத்தார்” என நம் நண்பர் பொருள்கண்டார். அந்தணர் நூற்கு ஆதியாய் நின்றது மன்னவன்கோல் என நாயனார் கூறினாரேயொழிய, நூலாராய்ச்சியுடைய அந்தணர்க்கு ஆதியாய் நின்றது மன்னவன்கோல் என்று கூறினாரில்லை. நூற்கு ஆதி யெனவேயொழிய, அந்தணர்க்கு ஆதி நூலெனக்கொள்ளப்படவில்லை. நூற்கு என்பதில், கு, வென்னும் நான்காம் வேற்றுமை யுருபு, தகுதிப்

பொருளைக்கொடுத்துக்கொண்டு அந்தணர்க்குரிய நூலெனப் பொருள் விளக்குகின்றது. நீத்தார் பெருமை என்னும் அதிகாரத்திற்கண்ட அந்தணர் எனுஞ் சொற்கு எதுப்பொருள் கொண்டு உரைகூறிய பரிமேலழகர் இங்கு அந்தணர்க்குரித்தாகிய வேதத்திற்கு எனவும், "அரசர் வாணிகரென்னும் ஏனையோர்க்கும் உரித்தாயினும் தலைமைபற்றி அந்தணர் நூல் என்றார்" எனவும் பொருள் கண்டார்.

ஆதலால், முக்கணன் என்னுஞ் சொல் காரணங் கருதிய வழி மூன்று கண்ணுடைய விநாயகர், வீரபத்திரர், முதலியோரையும், காரணங் கருதாத வழி இடுகுறியாய்ச் சிவபெருமான் ஒருவரையே உணர்த்துதல்போல, அந்தணன் என்னும் தமிழ்ச் சொல்லும் காரணங் கருதாத வழி, இறைவனையும் அந்தணர் என்ற பார்ப்பனக் குலத்தினரையும் உணர்த்தும். எதுப் பெயராகுங்கால் பரிமேலழகியர் கூறியவாறு அச்சொல்லினது பொருளைக்கொண்ட யாவருக்குமாகும்.

நூலாராய்ச்சி யென்பது அந்தணர்க்கு முதலிலக்கணமாகத் தொல்காப்பியத்துட் கூறப்பட்டதாலும், என்று எழுதினரே, அவ்வாறு எழுதப்பட்டுள்ள உரைப்பாகத்தை என் இவர் எடுத்துக்காட்டினாரில்லை. அந்தணரைக்குறித்த தொல்காப்பியச் சூத்திரம் "நூலேகரகம் முக்கோல மணையே ஆயுங் காலை அந்தணர்க்குரிய" என்பதுவே. இதில் நூல் என்பதற்கு, ஏடு எனப்பொருளாமென நம் நண்பர் முதலிற் பிழையான பொருளைத் தம் யுக்தி வயத்தாற் கற்பித்துக்கொண்டார். பின்னர் அவ் ஏடு என்றதற்கு நூலாராய்ச்சி யென இங்கு எழுதினார், தொல்காப்பியத்தில், தொல்காப்பியர் காலத்தில் இந்நாட்டிலிருந்த நால்வகை மக்களையும் அவர்களது வழக்கம் அடையாளம் முதலியவற்றையுங் கூறியுள்ளன. முதற்கண் அந்தணரையும் பிறகு அரையரையும் பிறகு வைசியரையும் பிறகு வேளாளரையும் வைத்து அந்தணர்க்குரிய ஒழுக்கம் முதலிய கூறினதில், நூல் முதலிய நான்கு பொருள்கள் அந்தணர் அடையாளமென்றார். நூல் என்பது முன்னூல் என்றும் அதுபிறப்பு வகையானும் சிறப்பு வகையானும் அந்தணர்க்குரித்தாதலானும் இச்சூத்திரத்தின் முதலில் அச்சொல் வைக்கப்பட்டதென்றும் உரையாசிரியர் பொருள் விளக்கியிருக்கின்றார். நூலாராச்சியுடையவர் எல்லோருமே. ஆதலால் அந்தணரென்போருக்குமட்டுந் தொல்காப்பியனார் அச்சொல்லைச் சேர்த்திருப்பதனால், ஏடு, நூலாராய்ச்சி, என்ற பொருள்களை அச்சொல் பயவாது. தெய்வத்தன்மை பொருந்திய உரையாசிரி

யர் கண்டதே அதன் பொருளாம். நஞ் சிவபெருமானை அந்தணனென்று குறித்தமையினனன்றோ, "விரிநூல் தி மார்பினர்" "புரிநூல் திகழ்மார்பினர்" "வேதமோதி வெ ணூல் பூண்டு" "பிணி மல்குநூல் மார்பினர்" "வேதியன்கா வெண்புரிநூல் மார்பினன்காண்" என நமது தமிழ்த்திரு றையிற் கூறப்பட்டுள்ளன. தொல்காப்பியச் சூத்திரத் அந்தணர்க்குரியது நூல் எனச் சொற்றமையினனன்றோ, ஞ காழிப் பிள்ளையாரும் அந்தணர் குலத்தோன்றலாரானதா "ஒல்லை முறையுபநயனப் பருவமெய்த வுலகிறந்த சிவஞா முணரப்பெற்றார். தொல்லை முறை விதிச் சடங்கு மறையோ செய்யத், தோலொடு நூறுங்கினார் சுரர்கள்போற்ற" என சேக்கிழார் பெருமானும் அருளிச்செய்தார். ஆதலால், நம்ம அவரது கற்பனைக் கொள்கைக்கு இணக்கமாகத் தொல்கா பியச் சூத்திரத்துக்கு இந்நாள்வரையுங் காணப்படாத பொரு எழுதியது ஒரு பிரமாணமாகாது. பின்னரும் நம்மவர் எழு வதாவது. "ஆபயன் குன்றும்," என்ற திருக்குறளில் அந்தண ஆறு தொழிலோர் எனப்பட்டார். அறுதொழிலோர் என்னு பாடஞ் சிறந்ததன்று. அக்குறளுள், ஆம்பயன் என்பது ஆபய என விகாரப்பட்டு நின்றது. அந்தணர் என்பது தமிழ் மு வர்க்கேயன்றி ஆரியப் பிராமணற்கும் பிற்காலத்தில் ஒரு பெ ராக அமைந்துவிட்டது." என வெழுதியிருக்கின்றார். ஆ பயன் என்பது ஆபயன் என விகாரப்பட்டு நின்றது என ந மவர் எழுதினார். அவ்வாறு விகாரப்படுதற்கு இலக்கண நூ களில் விதி காணோம். ஆம்பயன் என்பது ஆகும்பயன் என் பதன் விகாரமே. ஆம்பயன் என்பது ஆபயன் என விகாரப் பட்டதாகக் கூறுவது, இருவகை வழக்கினும் ஆகா வென இலக்கண நூல் விற்பனர் கூறுகின்றார். இலக்கணக்கொத்து ஒழிபியல் சு-வது சூத்திரத்தில் "தொக்குழியப் பொரு "டோன்றியும் வேறோர், பொருளே தோன்றியும் பல பொரு "டோன்றியும்; வரும் பின்னிரண்டு மயக்கங்கொடுக்குமத் "தொகை யிருவகை வழக்கினுமாகா." எனவும், உதாரணத் தில், ஆகும் வாகனம்; ஆகுவாகனம், ஆவாகனம் எனக் காட் டியிருப்பதையுங் கண்டு, நம்மவர் கூறியது பிழையேயென இலக்கண நூல் வல்லோர் மொழிவர். தொல்காப்பிய நூல் விட ஆதியாயுள்ள இலக்கணநூல் தமிழில் கிடையாது. அ நூலில தமிழர் ஆரியர் என ஏன்மக்களைப் பிரித்திருக்கவில்லை, தமிழர், தமிழர் எனப் போராடுவது வீணே. ஒருவருக்கொரு வர் தாழ்ந்தவராகக்கொண்டு, அந்தணர், அரையர், வைசியர், வேளாளர் என நான்கு கூறுகத் தமிழ்நாட்டு மக்களைப் பிரித் திருக்கிறது.

"மறைய வரர்ச்சனை வண்படி கந்தான்
இறைய வரர்ச்சனை யேய பொன்னாகும்
குறைவிலா வயிசியர்க்குக் கோமள மாந்
துறையுடை சூத்திரர் தொல்வாண லிங்கமே"

உலகப்பற்றை யெல்லாம்விட்டு மூவாயிரமாண்டு சிவயோகத் திருந்த சிவயோகியாரும் அகத்தியர் காலத்தவருமாகிய திருமூலரும் மேற்காட்டிய திருமந்திரச்செய்யுளில் நான்கு வருணமுண்டென்பதைக் காட்டி அவர்கள் மறையவர், அரை யர், வசியர், சூத்திரர் எனக் கூறியிருப்பாரேயானால், நம் நாட் டில் தொல்காப்பியச் சூத்திரங்களின்படி நான்கு வருணமுண் டென்பதற்கு வேறு சான்று வேண்டுமா? துறையுடை சூத் திரர் என்றது சற்சூத்திரர் அசற்சூத்திரர் என்னும் பிரி வுடைமையால். பன்னிருபாட்டியல் ஆசிரியரும், அவ்வாறே "பார்ப்பாரரசர் வணிகர் வேளாளரெனப் பாற்படு நாற்பெயர் குலப்பெயராகும்." எனக்குலம் நான்கெனக் கூறினார். முதற் குலத்தார் அந்தணராவார். அவருக்கு முன்னூல், கமண்டலம், முக்கோல், மணை ஆதிய உரிமைப் பொருளாகக் கூறப்பட்டன. மற்றவர்க்கு அவ்வாறு கூறவில்லை. உரை ஆசிரியர் மேற்கோளால் அவரைப் பார்ப்பாரெனவும் காட்டினர். அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமுமென்னுஞ் சூத்திரத்தின் பகுதியும் அந் தணரைக் குறித்ததே. அப்பகுதிக்கு ஓதல் ஓதுவித்தல் வேட் டல் வேட்பித்தல் ஈதல், ஏற்றல் ஆகிய அறுதொழிலவர்க் குரியனவென்னுமுறை காணப்படுகின்றது. இதனால் அந்தண என்ற மொழி தொல்காப்பியர் காலமுதற்கொண்டே பார்ப் பனரைக்குறித்த மொழியாய் நிற்கின்றது. "ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர் காவலன் காவானெனின்" என் பது குறள். இக்குறளால் கொடுங்கோலரசன் நாட்டில் நிக ழும் குற்றங்கூறப்பட்டது. செங்கோல் அரசன் ஆளும் நாட் டில் "அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது மன் னவன்கோல்" எனச்சொல்லி அந்த நாட்டின் சிறப்பைச் சொன்னதற்கு எதிராக "ஆபயன் குன்றும்" எனும் குறளை நாயனார் அருளியிருக்கின்றார். இக்குறளுக்குப் பரிமேலழகியா உரையாவது, "காத்தற்குரிய அரசன உயிர்களைக் காவா
"யின் அறனில்லாத அவன் நாட்டுப் பசுக்களும்பால் குன்று
"அந்தணரும் நூல்களை மறந்துவிடுவார் என்றவாறு. அ
"தொழிலாவன ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல்
"ஈதல், ஏற்றல் எனவிவை. பசுக்கள் பால் குன்றியவழி அ
"யின்மையானும், அது கொடுத்தற்குரியார் மந்திரங்கற்பமெ
"பன ஓதாமையானும், வேள்வி நடவாதாம். ஆகவே வா
"பெயலொல்லாதென்பதாயிற்று" என்பதே. (பெரிய பு

ணம் திருஞான சம்பந்தசுவாமிகள் புராணம் "தென்னவன் மாறன்" என்ற செய்யுட்படிக்கும் இருபா இருபஃது "மன்ற பாண்டியன் கேட்பக்கிளக்கு மெய்ஞ்ஞானத்தின்" என்றதிருப் பாட்டுப்படிக்கும்) வைகைமா நதிக்கரையே தீட்சாமண்டபமாக நெடுமாற நாயனார்க்குச் சிவஞானோபதேசஞ் செய்தருளிச்செய்ததும் அந்நதியின் வெள்ளப் பெருக்கில் எதிரேறச் செல்லவிட்ட ஏட்டில் தீட்டியதுமான திருப்பாசுரத்தின் முதற் பாசுரமாவது "வாழ்க அந்தணர் வானவர் ஆனினம், வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக" என்றதும் மேற்கண்ட குறட்பாவின் கருத்தே. இத்திருப்பாசுரத்துக்கு சேக்கிழார் பெருமான் விளக்கிக் காட்டிய அரிய பொருளடங்கிய செய்யுட்கள்.

"அந்தணர் தேவரா னினங்கள் வாழ்கவென்
றிந்தமெய்ம் மொழிப்பய னுலக மின்புறச்
சந்தவேள்வி கண்முதற் சங்க ரற்குமுன்
வந்த வர்ச்சனை வழிபாடு மன்னவாம்."

"வேள்வி நற்பயன் வீழ்புன லாவது
நாளு மர்ச்சனை நல்லுறுப் பாதலால்
ஆளு மன்னனை வாழ்த்திய தர்ச்சனை
மூளு மற்றிவை காக்கு முறைமையால்."

மேற் குறட்பாவுஞ் சம்பந்தப் பெருமான் திருவாக்கும் பொருளால் வேற்றுமை யில்லனவென்பதை நந்தமிழ்ச் சைவப் பெருமக்கள் பலருங் கண்டு களிப்பாராக. நந்திருமூல நாயனார் அருளிய

"ஆவையும் பாவையும் மற்றற வோரையுந்
தேவர்கள் போற்றுந் திருவேடத் தாரையும்
காவலன் காப்பவன் காவா தொழிவனேல்
மேவு மறுமைக்கு மீளா நரகமே."

என்றுந் திருமந்திரச் செய்யுளையும் நோக்குங்கள். பசுக்களினது அவயவங்களில் திரிமூர்த்திகள் ஆதியாக வெல்லாத் தேவர்களும் வசிப்பார்களென்று சிவதருமோத்தரமென்னுஞ் சிவாகமம் விரிவாய்க் கூறும்.

"ஆக்க டன்னை அருமறை நான்முறை
காக்க காக்க இலாரை யக்காசினி
காக்குங் காவலன் காய்ந்து காப்பித்திடி
னேக்கியே சிவலோகத் துறைவனே."

என்னு மிச்சிவதருமோத்தரச் செய்யுள் பசுவுக்குத் தீங்கு வராமற் காத்த அரசன் சிவலோகத் துறைவனெனக் கூறிற்று.

"காக்கிலாரையும் காக்குமவரையும்
நோக்குநாடொறு நோக்கிலனாகிலும்
காக்கிலாரைக் கடிகிலனாகிலும்
தீக்குக்காட்டமெனக் கனல்சேர்வரே."

என்னு மிச்சிவதருமோத்தரச் செய்யுள், பசுவுக்குத் தீங்கு வராது காவாத அரசன் அக்கினிக்கு விறகு எவ்வாறு இரையாமோ அவ்வாறு நரகத்துக்கு இரையாவானெனக் கூறிற்று.

நம் அப்பமூர்த்திகளும் ஆவினுக் கருங்கலமரனஞ்சாடுதல் என, ஆக்களைப் புகழ்ந்து ஓதினார்கள். பெரிய புராணத்தில் சண்டேச நாயனார் புராணத்தில் சேக்கிழார் மூர்த்திகள் பசுவைப்பற்றி அருளிய சிறப்புகளடங்கிய செய்யுட்களை இங்கு எழுதுவதானால் மிக விரியும். அச்செய்யுட்களையும் வாசிக்கும்படி நம்மவர்களை வேண்டுகிறோம். தமிழ்ச் சங்க நூல்களிலே, பார்ப்பார் அல்லது அந்தணரைக்கூற நேரிட்ட அமையங்களிலெல்லாம் பசுவையுஞ் சேர்த்தே கூறுவர்.

"ஆவும் ஆனியற் பார்ப்பனமாக்களும்" புறநானூறு
"எச்சிலார் தீண்டார் பசுப்பார்ப்பார்" ஆசாரக்கோவை
"ஐம்பூதம் பார்ப்பார் பசுத்திங்கள் நாயிறு" ௸
"பார்ப்பார் அறவோர் பசுப்பத்தினிப் பெண்டிர்" சிலப்பதிகாரம்

ஏன் பசுவையும் பார்ப்பாரையுஞ் சேர்த்துக் கூறவேண்டியிருந்ததென்றால் பார்ப்பார் செய்யும் நித்திய நைமித்திய ஆகுதியக்ஞங்களுக்குப் பசுவின் பால் நெய் இன்றியமையாதனவாதலால்.

சிவபெருமானுக்கு அபிடேகத்துக்கும் பால் தயிர் நெய் முதலிய பஞ்சகௌவியமும் கோரோசனையும் பசுவினின்றும் பெறப்படுவன. சைவத்துக்கே முதற் காரணமாயுள்ள விபூதி விளைதற்குமான மூலப்பொருளையும் பசுவினின்றும் பெறுகின்றோம்.

இவ்வித மேன்மைவாய்ந்த பசுக்களைப் புரப்பது அரசனது கடமையென்று திருமூலர், சிவதருமோத்தர ஆசிரியர், சேக்கிழார் பெருமான், சொன்னவாறு, பொய்யாமொழியாரும் அவரியற்றிய சைவத்தையே உள்ளீடாக அமைத்த திருக்குறளில் புகன்றார். இதனாலன்றோ நம் மூதன்னையாரும் தேவர் குறளும், மூவர் தமிழாகிய சைவ நூல்களெல்லாம் ஓரே வாசகமென் றறியென்று கட்டளையிட்டார்.

இனி அக்குறளில், அறுதொழில் என்ற பாடஞ் சிறந்ததல்லவென்று நண்பர் கூறினரே, அது எம்மட்டும் பொருந்துமென்பதைப் பார்ப்போம். புறநானூறு ருகூ௯-வது செய்யு

ளில் அறுதொழிலந்தணர் எனக் காண்கிறோம். பதிற்
பத்து மூன்றும்பத்தில் அவ்வறுதொழில் "ஓதல் வேட்
அவை பிறர்ச் செய்தல் ஈதல் ஏற்றல் என்றாறு புரிந்தொழு
அறம்புரியந்தணர்" என்றதனால் அவ்வறுதொழில் இன்ன
யென நன்கு விளங்கும். "அந்தணரென்போர் அறுதொ
பூண்டுளோர்" எனத் திருமூல நாயனாரும் அருளினர்.
நூல்களுக்கெல்லாம் இலக்கணம் தொல்காப்பியமே. மனு
மிருதி முதலத்தியாயம். அஅ-வது சுலோகம்.

ஆ஧்யாபநம் அ஧்யயநம் யஜநம் யாஜநம் ததா ।
தாநம் ப்ரதிக்ரஹம் சைவ ப்ராஹ்மணாநாமகல்பயத்॥

"அத்யாபநம் ச்சாத்யயநம் யஜநம் யாஜநந்ததா |
தாநம் பிரதிக்கிரஹம் சைவப்ராஹ்மணாநாமகல்பயத்||

(இ-ள்) பிராமணனுக்கு ஓதுவித்தல் ஓதல் எக்கியஞ்செய்
செய்வித்தல் தானங்கொடுத்தல் தானம் வாங்கல் ஆகிய அ
தொழிலையும் ஏற்படுத்தினர் என்பதே. இந்த நூல்களெ
லாம் அந்தணருக்கு அறுதொழில் உரியவையென ஒற்றுமை
படக்கூறுவதைச் செந்தமிழ்ச் சைவக் கல்விவாணர்கா
கூர்ந்து கவனியுங்கள். சம்பந்தப்பெருமானைத் திருமண
செய்துகொள்ளவேண்டுமென அந்தணர்கள் பிரார்த்
ததைச் சேக்கிழார் கூறுவதையுங் கவனியுங்கள்.

"அருமறையோரவர் பின்னுங் கைதொழுதங் கறிவிப்பா
ரிருநிலத்துல் மறைவழக்க மெடுத்தீர் நீராதலினால்
வருமுறையா லறுதொழிலின் வைதிகமா நெறியொழுகுந்
திருமணஞ்செய் தருளுதற்குத் திருவுள்ளஞ் செய்யுமெ

இச்செய்யுளில் வைதிகமாம் வேதமார்க்கம் அறுதொழி
உடையதென்பதைக் குறிப்பித்தார்.

இவ்வாறு, அந்தணர்க்குரித்தாகிய அறுதொழி
யுடைய அந்தணரை அறுதொழிலோரென்றும் அவர்கள
வேதமந்திரங்களை நூல் என்றுங் குறிப்பிட்டு அறுதொழிலே
நூன்மறப்பர் எனச் சைவப்பெரியாராகிய பொய்யா மொ
யார் கூறினரென்பது அதிதுல்யமாய் விளங்கும். நம்மவர் தி
நான்மறை விளக்கமெனும் வியாசத்தில் அறுதொழிலோ மெ
பது சிறந்த பாடமன்றென்றுமாத்திரங் கூறிப் பின்னரெழு
மற்றொரு வியாசத்தில் அறிதொழிலோரென்பதே சிறந்த பா
மெனக் குறித்தார். இக்கூற்றை வலியுறுத்த, கழகத்தின
றும் வெளியிட்ட திருக்குறள் மூலத்தில் அறிதொழிலோ
ரென்றே மாற்றப்பட்டிருக்கின்றது. இவ்வாறு மாற்றுவதற்

ஆதாரம் ஷை கழகத் தலைவர் கேட்டதில் ஏட்டுப் பிரதியில் அவ்வாறு இருப்பதென்று நம்மவர் கூறியதாகத் தெரிகின்றோம். இனியாவது அவ்வேட்டுப் பிரதியைக் கழகத்தவருக்கும் நமக்குங் காட்டி அவரது கூற்றை உறுதிப்படுத்திக் கொள்வாராக.

மூவகை நிகண்டாசிரியர்களும், அறு தொழிலாளர், அந்தணர், என்ற சொற்கள் பார்ப்பார் என்ற சொல்லுக்குப் பரியாய நாமங்களாகவும் கூறியுள்ளார்கள்.

இதுகாறுங் காட்டிய அதி பிரபல பிரமாணங்களால் அறுதொழிலென்பது இன்னவையென வரையறுத்துக் கூறப் பட்டும் அறு தொழிலோர் என்னும் பதம் அவ் அறுதொழிற் புரித்தோராகிய பார்ப்பன மக்களையே குறிக்குமென்றுங் காட்டப்பட்டது.

இனி நம் நண்பர், பார்ப்பார் என்றசொற்குப் பொருள் விளக்கப் புகுகின்றார். அது விஷயம் அவர் எழுதுவதாவது. "பார்ப்பார் என்ற சொல் ஆதியில் தமிழ் நாட்டில் கடவுட் "பூசைசெய்வோர்க்கும் நூலாராய்ச்சி செய்வோர்க்குஞ் சிறந்த "பெயராக அமைந்திருந்தது" என்றார். இவ்வுரைக்குப் பிரமாணம் ஒன்றுமிவர் காட்டிலர். ஆதலால் அது வெற்றுரையேயாம். "பார்ப்பார் அரசர் வணிகர் வேளாளரெனப் பாற்படு நாற்பெயர் குலப்பெயராகும்" என்ற பன்னிரு பாட்டியற் சூத்திரமொன்றுமே பார்ப்பார் என்ற சொல், முதற் குலத்தவர் பெயரென விளக்குகின்றது. பின்னுமவர் எழுதுவதாவது, "கள்ளும் ஊனுங்கைவிட்டுக் கடவுள் வழிபாடு செய்ப "வர்க்கே அது பெயராக விருந்ததாகத் தெரியவருகின்றது" என்றெழுதினர். இவருக்குத் தெரிவித்தவர் யாவரோ? அல்லது எந்த நூல் தெரிவித்ததோ? அதை விளக்கிக் காட்டினாரில்லை. எல்லாம் இவர் வாசா கைங்கரியமாகவே இருக்கின்றன. "பண்டைய நூல் சிலவற்றில் பார்ப்பாருடைய உணவு ஊன் கலப்பில்லாத உணவு எனக் கூறப்பட்டுளது" என்று எழுதினார். அஃதிருக்கலாம். சிவாலயங்களில் பரார்த்தபூசை புரிவோர் ஆதி சைவப் பிராமணர்களை அஃது குறிக்கலாம். பின்னும் நமமவர் எழுதுவதாவது "இப்பொழுது விளங்குகின்ற சைவர் என்ற சொல்லின் பொருளே பார்பபார் என்ற சொல் லிற்குப் பழய காலத்தில் வழங்கியதாகக் கருத இடமுண்டு" என எழுதியிருக்கின்றார். இபபொழுது விளங்குகின்ற சைவர் எனற சொல்லின பொருள் இன்னதென இவர் எழுதவில்லை. வழக்கத்தில் சைவர் என்ற சொல்லிற்குப் பற்பலர் பற்பலவிதமாக அவரவர்களிஷ்டம்போலப் பொருள் கொள்ளு

கிறார்கள். நம் நண்பருக்கு அவ்வாறு கருதக் கிடைத்த இடத்தை மற்றையோருக்குங் காட்டியிருந்தால் பேருபகாரமாயிருக்குமே. சிவ சம்பந்தப்படுவோர் சைவராவார். அவர் எக்குலத்தாராயினும் எந்நாட்டாராயினும் கவனிக்கத்தக்கதில்லை. பார்ப்பார் என்ற சொல் மேற்காட்டிய பன்னிரு பாட்டியற் சூத்திரப்படி முதற் குலத்தாரையே குறிக்கும். தொல்காப்பியனாரும், முதற் குலத்தாரைப், பார்ப்பார், அந்தணர், மறையோர் எனக் கூறினார். நமது நிகண்டுகளிலும் அவ்வாறே கூறியுள்ளது. மனம் போன போக்கிலே போகவேண்டாம் என்ற நமது நாட்டுப் பண்டைய நீதிமொழியை மறந்து நமது பூர்வீக நூல்களில் இல்லாத ஓர் நவீன மார்க்கத்தைக் கற்பிக்கப் புகுந்து அதற்குத் தக்கவாறு ஆதாரங்கள் தேடுமிவர் கூற்றை எவ்வாறு ஏற்கலாம். நிற்க, மற்றுமிவர் எழுதுவதாவது:—

"தமிழ் நாட்டுப் பார்ப்பார் ஊனுண்ணுமை, "கோட்கொண்டார் பார்ப்பாருந் தின்பருடம்பு" என்னும் பழமொழியாலும் யூகித்துணரப்படும்." என்று எழுதியிருக்கின்றார். இந்த மேற்கோளில் பார்ப்பார் என்று எழுதப்பட்டிருக்கிறதேயொழியத் தமிழ் நாட்டுப் பார்ப்பாரென வெழுதப்பட்டிருக்கவில்லை. ஆதலால், பார்ப்பார் எனுங் குலத்தார் எந்தெந்த நாடுகளில் உள்ளாரோ அவர்களையெல்லாஞ் சமஷ்டியாகக் குறிக்கும். தமிழ் நாட்டுப் பார்ப்பாரை மட்டுங் குறியாது. அவ்வாறல்ல, இஃதியற்றிய கவிவாணர் தமிழ் நாட்டார். இந்நூல் வேறுபாடைகளின் மொழிபெயர்ப்பல்ல. தமிழ்ச் சங்கமருவிய தமிழ்நூல். ஆதலான் இதில் பார்ப்பார் என்றது தமிழ் நாட்டுப் பார்ப்பாரையே குறிக்குமெனின், அற்றன்று, இந்நூலாசிரியர் இந்நூலில் தமிழ் நாட்டுக் கொள்கைகளைமட்டுங் கூறினாரில்லை. வடநாட்டுப் பஞ்சபாண்டவர்கள், இராமன் இவர்கள் சரித்திரமும் இந்நூலில் இடம்பெற்று நிற்கின்றன. இந்நூலிற் கூறப்படும் நீதி பொதுத் தன்மையால் எல்லோருக்கும் பயன்படும். த்விஜர் (இருபிறப்பர்), சிவத்விஜர் (ஆதிசைவராகிய இருபிறப்பர்) என்னும் பார்ப்பனர்களே இந்நூலாசிரியர் காலத்தும் அதற்கு முன்னரும் பின்னரும், எந்நாடுகளிலும் இருந்தமைபோல இந்நாட்டிலு மிருந்திருக்கிறார்கள். ஆனதால் வேறு அடைமொழியின்றி பார்யபார் என்றே நூலாசிரியர் கூறியிருப்பதால், அம்மொழி சமஷ்டியாகவே பொருள்படுமென்பதில் ஐயமில்லை. இஃது இவ்வாறாக நம் நண்பர் காட்டிய மேற்கோள் சுத்த பாடமா? அதன் கருத்து என்ன? என்பதைப் பல வித்துவ சிரோமணிகளைக் கேட்டுத் தெரிந்ததன் பயனுவது. பழமொழியென்ற நூல் நால்வரால்

அச்சிடப்பட்டு வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றது. முதலாவது அச்சிட்டவர் சோடசாவதானம் சுப்பராயச் செட்டியாரவர்கள். இரண்டாவது, தமிழ்ப் பண்டிதர் ஆறுமுக நயினாரவர்கள். மூன்றாவது, மதுரைச் சங்கம் பிரமஸ்ரீ இராகவய்யங்கார் அவர்கள். நான்காவது, சென்னை செல்வக்கேசவராய முதலியாரவர்கள் M.A. நான்கு பதிப்புகளிலும் 'தின்பர் உடம்பு' எனக் காணப்படுகின்றது. நண்பர் காட்டியபடி 'தின்பர் உடம்பு' எனக் காணப்படவில்லை. உடம்பு என்றது மனிதர் தேகத்தையே சுட்டும். நூல்களைத் திருத்துவது நண்பருக்கு வழக்கமாய்க் காணப்படுவதால் அவர் தாம், திருத்திக் கொண்டாரோ, அச்சுப்பிழையோ அறியக்கூடவில்லை. அஃது அறியாதவரை, அச்சுப்பிழை யென்றே வைத்துக்கொண்டு உடம்பு என்ற சொல்லையே பொருளாய்தலுக்குத் தகுதியான தென்று வைத்துக்கொண்டோம். மற்றைய பாகத்திலும் பாடபேதங்களுள்ளன. மூன்று, நான்காவது பதிப்புகளில் "நாய் கொண்டாற் பார்பாருந் தின்பர் உடம்பு" எனவும் மற்றைய இரண்டு பதிப்புகளில் "நோய்கொண்டாற் பார்ப்பாருந் தின்பர் உடம்பு" எனவும் காணப்படுகின்றது. இது விஷயம் ஆராய்ந்ததில், நாய்கொண்டாற் பார்ப்பாருந் தின்பர் உடம்பு என்றதே சுத்தபாடமெனத் தெரிந்தது. பிரமஸ்ரீ இராகவய்யங்கார் அவர்கள் வெளியிட்ட புத்தகத்தில் இதன் விஷயம் எழுதியிருப்பதாவது, "இதன் பழமொழி பண்டைய வூழி காலத்து ஒழுக்கம்பற்றிப் பிறந்தது. ஆதலால் அவ்வொழுக்கம் பழிக்கப்பட்ட பிற்காலத்து வழக்கிற் பொருளற்றமையால் இறந்ததாயிற்று" என்பதே.

சுஷ்ராஉஹஂ ஶவாஉஹஂ ஸநுூ்ஸஂ வஒெவெதூகஂ।
ெஷவிரணஸு ெதாதூஂ கஒெஊவஂவ விவஜ-ெயெக॥

"அஸ்வாலம்பம் கவாலம்பம் ஸந்யாஸம் பலபைத்ருகம்
தேவரேணஸுதோத்பத்திம் கலௌபஞ்ச விவர்ஜயேத்."

என்னும் ஸ்மிருதி ஆதிய பிரமாணங்களாலறிக. பின்னும் ஐயங்காரவர்கள் எழுதியிருப்பதாவது, "வேட்டையின் ஞமலி கறித்திடு செய்பமென்றசையும் ஒன்றிமிச்சிலென விகழ்ந்துரையாருணர்ந்துளோர்" என்பதுமொரு சான்று. இங்ஙனமன்றி "நோய்கொண்டாற் பார்ப்பாருந் தின்பர் உடம்பு" என்பது பிரதி பேதமாயிருப்பினும், அது இழிந்தோர் வாய்ப்பட்ட நல்லுரைத்து உவமமாகாமையானும் உடம்பே யிழிக்கப்பட்டதாக வேண்டுமாதலானும் பொருளொடு பொருந்தாமையானும், பிறிதொரு சிறப்புமில்லாமையானும் அது பாடமன்றெனவுணர்க" என்பதே "சுத்தம் ஆகேடகே ஶுநாம்" (வேட்டை

யில் நாய் முகர் சுத்தம்) என்ற வாக்கியமுமிருப்பதாக ஸ்ரீவஸ்ரீ சுவாமிநாத பண்டிதரவர்களும் எழுதியிருக்கின்றார்கள். இந்தப் பழமொழி வெண்பாவின் விஷயங்களின் உவமான உபமேயத்துக்கு இவர்கள் கருத்துத்தான் பொருத்தமாக விருக்கின்றது.

இக்காரணங்களால் மேற்காட்டிய பழமொழி வெண்பாவின் பகுதி தமிழ்நாட்டுப் பார்ப்பாரை மட்டும் சுட்டியதில்லையென்பதும் நாய் கொண்டால் என்பதே சுத்த பாடமென்பதும் பெறப்படும். நிற்கப், பின்னும் நம்மவர் எழுதுவதாவது, "ஆரியப்பிராமணர் ஊனுண்டல் மநு ஸ்மிருதியில் யாகத்தின் "மாத்திரமல்லாமல் சிரார்த்தங்களிலும் ஊன் நிவேதித்தல் "வேண்டுமென்ற விதியினை வகுத்துக் கூறயிடத்து" என்றெழுதிக்கொண்டு ஸ்மிருதியில் அவ்வூன்வகைக்குக்கூறும் மிருகம் பட்சிகளின் பெயர்களை யெல்லாம் படிப்போர் பிரமையடையுமாறு, எழுதிக் காட்டினர். தமிழ்க் கூர்மபுராணம் முதலியவற்றுள்ளும் அவ்வாறே கூறப்பட்டு மிருக்கின்றது. இவ்விதியெல்லாம் பண்டைய ஆழிக்காலத்து ஒழுக்கம்பற்றியெழுந்தவை. * இக்காலம் அவ்வித ஒழுக்க மிறந்ததாயிற்று. சிருட்டி காலத்தொடக்கத்தில் ஊனுண்டல் உலகமெல்லாம் நிரம்பியே யிருந்ததாகத் தெரிகின்றது. தற்காலத்திலும் காட்சிப்பிரமாணத்தில் பூமண்டலமுற்றுமே நம் இந்துதேசமுள்பட, சைவத்தைத் தழுவினவர்கள் எனப்போலிப் பெயருடையோருமுள்பட, (சிவாகம விதிப்படி பண்டையக் காலந்தொட்டே சைவ அனுஷ்டான முறையுடைய சிலர் ஒழிய) ஊனுண்டலை இன்னமுங்காணலாம். மனு ஸ்மிருதி பூர்வத்தில் உண்டானமையால் அதில் அவ்வாறு கூறியிருந்தாலும் அதே சாஸ்திரத்தில் "மிருகங்களின் தேகத்தைப் புசிக்க மனதிருந்தால் நெய்யினாலாவது மாவினாலாவது மிருக ரூபமாகச்செய்து புசிக்கலாமேதவிர வீணாகப்பசுவைக் கொல்லவேண்டுமென்று மனதினாலும் நினைக்கக்கூடாது."

"பசுவை வீணாகக்கொல்பவன் அந்தப் பசுவுக்கு எத்தனை மயிரிருக்கின்றனவோ அத்தனை ஜநநம் பசுவாகப்பிறந்து ஒருவரால் கொல்லப்படுவான்." "எவன் நூறு வருஷம் வரையில் வருடந்தோறும் அசுவமேத யாகஞ்செய்கிறானோ, எவன் மாம்ஸத்தைச் சாமளவும் நீக்குகிறானோ, இவ்விருவருக்கும் புண்ணியபலம் சரிதான்."

---

* மேற்காட்டிய, அஸ்வாலம்பம் எனும் வாக்கியத்தில் பலபைத்ரகம், எனும் விஷயம் கலியுகத்தில் விலக்கப்பட்டிருத்தலைக் கவனிக்க.

"மாம்ஸத்தை நீக்குகிறவன் எந்தப்பலனை அடை கிறானோ அதைப் பழம், கிழங்கு, சாலி அன்னம் இவைகளால் புசிக்கிற முனியுமடையமாட்டான்" என்றும் கூறப்பட்டிருக் கின்றன. குடங்குடமாகத் தினம் தினம் கள்ளருந்தும் ஒருவனை நல்வழிப்படுத்தற் பொருட்டு அவனிடம் அன்பு வைத்த பெரி யோர் அவனை நோக்கி, அப்பா நீ இப்படிச் செய்யாதே தினம் ஒரு குடமாக்குக் கள் அருந்திவாவென்றுகூறி, அவனை அவ்வழி யிற்றிருப்பிச் சிலநாட்கழித்து ஒரு வீசம் இரண்டு வீசம் சாப் பிட்டு வாவென்றுகூறி, அவன் அதனிற் பழகிவந்தபின்னர், இனி இப்படிச்செய்யாதே ஒரு வீசம் கள்ளில் ஒரு வீசம் சுத்த ஜலம் சேர்த்து அருந்திவாவென்றுகூறி முடிவாக்ச் சுத்த ஜலமே சாப்பிடும்படிகூறிச் சோபானமுறையாக அவனை நல் வழியில் நிலைநிறுத்தினவாறு போல, உயிர்வர்க்கங்கள் மீது கருணை பூண்ட ஸ்மிருதிகாரரும் சோபானக்கிரமமாகத் தர்மம் கூறியிருப்பதை உய்த்துணரவேண்டும். தர்ம சாஸ்திரத்தின் உட்கருத்து கொல்லாமையைக் கைக்கொள்ளவேண்டுமென் பதே. ஆனதால் பொதுவிதி சிறப்புவிதிகள் இன்னவென ஆராய்ந்து உண்மை கடைப்பிடிக்கவேண்டுமே தவிர நிகழ்ச்சி யில்லாது நிஷேதமென விலக்கப்பட்ட பண்டைய யுக தர் மங்களை யெடுத்துக்காட்டி அவற்றிற்கு ஒரு பழி கற்பிப்பது பொருத்தமிலது.

"கள்ளூனும் நீவிரும்பினல் மகங்கள்செய் காமத்தின்மனதானல்
கொள்ளும்பெண்டொடு கலவிசெய்யெனிலிவன் குறையெலாந்
தொடானென்றே
தள்ளும்வேதத்தின் சம்மதஞ்சகலமுந் தவிர்வதே கருத்தாகும்
விள்ளுமிவ்விதியென் னெனிற் பூருவநியமமாம் விதியன்றே"

என்னுஞ் செய்யுளில் மேலே காட்டிய ஸ்மிருதியின் கருத்தை அடக்கியே கைவல்ய நூலாசிரியரும் கூறுவாராயினர். இனி நம்மவர் எழுதுவதாவது. "சிவாகமங்களுள் அயன்முகத் துதித்த பிராமணர் வேறு. சிவன் முகத்துதித்த அந்தணர் வேறு. முன்னையோர் பரார்த்த பூசனைக்குரியரல்லர். பின்னையோர் அதற்குச் சிறந்தோர். முன்னையோர் அது புரி யின் நாட்டிற்குத் தீதுவரும் என்று கூறப்பட்டுளது. அக் கருத்தை விளக்கும் திருமூலமாமுனிவர்.

"பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றனையர்ச் சிக்கின்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டிற்குப் பஞ்சமுமா மென்றே
சீர்கொண்ட நந்தி தெரிந் துரைத்தானே"

"என்றவிடத்து ஆரியப் பிராமணனைப் பேர்கொண்ட பார்ப்

"பான் என்றனர்." என்று எழுதியிருக்கின்றார். இ
யாவர்க்கு முடன்பாடே.

இதற்குமேல் அவர் எழுதுவதாவது. "பேர்கொண்
"பார்ப்பானென்பதற்குப் பேர்மாத்திரத்தாலே பார்ப்பா
"ஒழுக்கத்தால் அப்படியல்லாதவன் என்று பொரு
"கொள்ளலாமோவெனில், அது பொருந்தாது. என்னை, ஒ
"ழுக்கமுடையனாய் மூவகைத் தீக்கையும் பெற்று ஆசா
"யாபிஷேகமுடைய மகா சைவனெனப்படும் ஸ்வார்த்
"பிராமணனுங்கூடப் பரார்த்த பூசைக்குரியவனல்லனென்
"ஆகமமுழங்குகலாலென்க. ஆகலான் பார்ப்பான் என்
"பெயர் முன்னில்லாமல் பின் தனக்கு ஒரு நாமமாக வைத்து
"கொண்ட பிராமணன் என்ற பொருள்தான் அத்தொடர்க்
"இயைபுடைத்து" என்றெழுதியிருக்கின்றார். மேலே
பெரு எழுத்தால் காட்டியிருக்கிற இவரது முடிபு மட்டு
பிழையுள்ளதே. ஏனெனில் தொல்காப்பியத்திலேயே, அ
தணர், பார்ப்பார் என்ற சொற்கள் ஒன்றுக்கொன்று பரியா
நாமமாகவே கூறப்பட்டுளது. அன்றியும் மேற்செய்யுள் கூற்
திருமூலரே, அந்தணர் ஒழுக்கங்கூறிய இயலில், அந்தணர்,
மறையோர், பார்ப்பார், பிராமணர் என்ற மொழிகளை ஒ
குலத்தவரைக் குறிக்கும் பரியாய நாமங்களாக எடுத்
ஆண்டிருக்கின்றனர். சிவன் முகத்திலுதித்த அந்தணரையும்
பிரமன் முகத்திலுதித்த அந்தணரையும், அந்தணர்,
பார்ப்பார், மறையோர், பிராமணர் என்ற பேர்கள் குறிப்பி
மானதால் பிரமன் முகத்துதித்த அந்தணர் என்பவரைப்
பிரித்து விலக்குவதற்காகவே "பேர்கொண்ட" வெனும்
அடைமொழி சேர்க்கப்பட்டிருக்கின்றது. இதற்குப் பொரு
ளென்னையெனின், பேர் என்ற சொல், புகழ்ச்சிகீர்த்தி என்
னும் பொருளையுந்தரும். "இருபிறப்பு இருபெயர் ஈரநெஞ்சத்
தொருபெயர் அந்தணர் அறன் அமர்ந்தோயே" என்னும்
பரிபாடலிற்போந்த, ஒருபெயர் என்பதற்கு ஒப்பில்லாத புகழ்
என்று பரிமேலழகியார் உரைகூறியுள்ளார். அந்த இடமும்
அந்தணரைக் குறித்ததே. இங்கும் அந்தணரைக் குறித்ததே.
இவ்வளவு ஆழ்ந்த ஆராய்ச்சி வேண்டாம். உலகவழக்கில்,
அவன் நிரம்பப் பேர்பெற்றவன் என்று சொன்னால் அவன்
கீர்த்தியுடையவன் என்பதைக் குறிப்பிடுவதாயிருக்கிறது.
ஆனால் பேர்கொண்ட பார்ப்பானென்றால் மிக்க புகழ் அ
வது வைதிக கருமங்களோடு சிவாகமப்படி தீட்சை மு
லானவை பெற்று மகா சைவனெனப் பேர்கொண்டிருந்தாலும்
அவன் பரார்த்த பூசைக்குருகனல்ல னென்பதை நம் திருமூல
மூர்த்திகள் குறிப்பிட்டுப் பேர்கொண்ட எனும் அடை

ழிமைக் கொடுத்துச் செய்யுளியற்றினரென்பது வெளிப்
—. இவ்வாறு பொருள் கொள்வதைவிடுத்து நம்மவர்
த்தோ எழுதியிருக்கிறார். இங்கு ஒன்று குறிப்பிடத்
த்து. நம்மவர் மேனாட்டுச் சரித்திர ஆராய்ச்சியை உண்மை
ரக்கருதி தற்காலம் நம் பரதகண்டத்திலுள்ள ஆரிய
தணர்களென்போர் மிலேச்ச நாடாகிய பெர்சியா தேயத்தி
ரும் ஆதியில் போந்தவர்களின் சந்ததியாரெனுங் கோட்
டையவரா யிருக்கச், சிவன் முகத்திலுதித்த அந்தணர்,
ன் முகத்திலுதித்த பிராமணர் என்னும் வேத சிவாகம
க்கை யெடுத்து விவகரிப்பதில் இவருக்கு என்ன உண்மை
ப்படும். ஒன்று நமது வேத சிவாகம வழியினிற்கவேண்
அல்லது அவற்றிகுப் புறம்பான மேனாட்டார் கொள்கை
றேக்கி விடவேண்டும். இருவகைகளையும் கைக்கொண்டவ
ஒழுகுதல் இருவகைக்கும் புறம்பாவரென்பதைக் காட்டும்.
ப் பின்னும் நம்மவர் எழுதுவதாவது.

"தொல்காப்பியத்தில் "அறுவகைப்பட்ட பார்ப்பனப்
க்கமும்" என்றவிடத்து பார்ப்பார் அறுவகைப்பட்ட
ர் என்பது அறியக்கிடக்கின்றது. அறுவகை என்பதற்கு
றுதொழில் என்று பொருள் கொள்ளுதல் தவறு. அறு
கைப் பார்ப்பார் என்பவரையே அறுவகைச் சைவர் என்று
வாகமங்களுட் கூறியதாகக் கருத இடமுண்டு. ஆனல் இப்
ாதுள்ள சிவாகமங்களுள் ஆரியரது வருணமுறையுங்
ந்துண்மையால் அறுவகைச் சைவர் என்றவிடத்துப்
ண்டை அறுவகைப்பார்ப்பாரது இலக்கணங் கூறப்படாமல்
நணம் பற்றிய வகுப்புச் சுட்டப்பட்டது" என்று, அதா
, அறுவகைச் சைவரைக் குறிக்குமென்பதுபோல், எழுதி
க்கின்றார். இதனல், "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்க
ம்" என்ற சொற்றொடர்க்கு, "ஆறு கூற்றினுட்பட்ட
ர்ப்பியற் கூறும், ஆறு பார்ப்பியலென்றது வகையென்ற
றன், அவை தலை, இடை, கடை, என ஒன்று மும்
ன்றாயப் பதினெட்டாமென்று கொள்க. அவை ஓதல், ஓது
த்தல், வேட்டல், வேட்பித்தல், கொடுத்தல், கோடல்
ன வாறும்" என ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதிய
ர தவறு என இவர் கூறினர் என்பது பெறும். இச்சூத்
ம் பார்ப்பார், அரசர், வைசியர், வேளாளர் என்னும நால்
களது தொழிலைக்கூற எழுந்ததேயொழிய ஒவ்வொரு
நணத்தாரும் இத்தனை வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறார்
ர் என்பதைக் கூறவெழுந்ததல்ல. இஃது ஐவகை மரபின்
ரசர் பக்கமும், இருமூன்று மரபினோர் பக்கமும் என்ற
சாற்றொடர்கள் மற்றைய அரசர், வணிகர், வேளாளர் இவர்

களது தொழில்களைக்காட்ட நூலாசிரியரால் அமைக்கப்பட்ட சொற்றொடர்களாய் விளங்கும் நிமித்தம் அவைகளுக்கும் அவ்வவர் தொழில்களைக் கூறியே உரை ஆசிரியர் பொருள் கண்டிருப்பதால் விளங்கும். சிவாகமங்களுள் சைவரை எழுவகையாக வருணம் பற்றியே பிரித்திருக்கின்றது, இப்போதுள்ள சிவாகமம் என்றார். இதனால் முந்தியிருந்த சிவாகமம் வேறு என்பது இவர் கருத்தாகும். அவ்வாறு சிவாகமம் தமிழிலிருந்ததாகவும் தமிழ் நான்மறையோடு அவைகளும் கடற்பெருக்கில் மறைந்துபோனது போலவும் இவர் மற்றோரிடத்தில் கூறியிருக்கின்றார். சிவாகமம் உ-அ-ம நான்கு வேதங்களும் சிவபிரான் வாக்கென்றும், அவைகள் ஆரியத்திலேயே, அழிவின்றி முக்காலமுமிருப்பவை யென்றும் தேவாரம், சைவ சித்தாந்த சாத்திரம் ஆகிய தமிழ் நூற் பிரமாணங்களாலே முன்னரே காட்டினோம். அறுவகைப் பார்ப்பார் என்பவரையே அறுவகைச் சைவர் என்று சிவாகமங்களுட் கூறியதாகக் கருத இடமுண்டு என எழுதினார். சைவரை எழுவகையாகப் பிரித்திருக்க அறுவகை யென்றார். அதற்குக் காரணம் இவர் கூறுவது, மகா சைவர் எனப்படும் ஆகம நெறிநடக்கும் பார்ப்பார், ஆரியர் இந்நாட்டுக்கு வந்தபிறகு உண்டாயவரென்றும், சிவாகமங்களில் ஆதியிற் காட்டியிருந்த அறுவகையோருடன் இவரையுஞ் சேர்த்துப் பிற்காலத்தி லெழுவகையாரென வெழுதிக்கொள்ளப்பட்டது போலும் என்பது இவர் கருத்து. இவர் எழுதியபடியே மகா சைவர் என்னும் ஒருவகையினரைச் சிவாகமத்திற் சொல்லும் சைவர் வகையில் நீக்கி பார்ப்பனர் வகை ஆறு என்று பொருள் கொண்டால், அந்த அறுவகை யார் யாவர் என விசாரிக்குங்கால் அநாதி சைவர், ஆதிசைவர், அநு சைவர், அவாந்தர சைவர், பிரவர சைவர், அந்திய சைவர் என்ற அறுவகையாராவர். இந்த ஆறு வகையில் முதற்கண் நிற்கும் அநாதி சைவர் என ஒருவகைப் பார்ப்பனர் உலகத்தில் உள்ளார்களா? அநாதி சைவர் எனப்படுவோர் சிவபிரானல்லவோ? இவரிடந் தோன்றிய ஆதி சைவர்கள் என்பவர் தானே உலகத்திலுள்ளார். அதனாற்றானே யவர்களுக்கு ஆதி சைவர் அதாவது சைவர் வகுப்பினரில் முதலாயவர் என்ப பெயருமெய்தியது. அநாதிசைவராகிய சிவன் முகத்திற்றோன்றிய ஆதி சைவரை யொழித்து அநாதிசைவப் பார்ப்பார் என ஒருவகையினர் உலகத்தில் இன்மையால், அவ்வாறு உலகத்திலில்லாத ஒருவகைப் பார்ப்பார்வகை ஒன்று உண்டென்று பொருள்படுமாறு அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் என்ற தொல்காப்பிய சூத்திரங் கூறிற்றென்பது நூற்பயிற்சி சற்றுமறியாதவர் கூற்றேயாம். இதை நம்மவர்

அறியாது சிவாகமத்திற் கண்ட சைவர் எழுவரில் மகா சைவரை யொழித்து எஞ்சிய அறுவகைச் சைவர்களையே அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமெனத் தொல்காப்பியச் சூத்திரங் கூறியதாகக் கருத இடமுண்டு என்று எழுதினார். ஆதலால் இவரது வியாக்கியை தவறு எனச் சான்றோர் கூறுவர்.

அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் என்ற சொற்றொடர்க்கு மற்றொருவகையில் இவர் பொருள் விளக்குவதாவது. அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமென்றதற்குத் தென்னாட்டில் பெருவழக்காயிருந்த அறுவகைக் கடவுளரைப் (அதாவது சிவன், அம்பாள், திருமால், பிள்ளையார், முருகர், ஞாயிறு) பூசிப்போர் அறுவகைப் பார்ப்பனர் எனப்பட்டார் என்று கருத இடமுண்டு என்று சொல்லுகிறார். இது ஆமானால், சிவன் பிள்ளையார் என்ற கடவுட் பெயர்களைத் தொல்காப்பியங் கூறாததென்னை? ஆரிய வேதத்திற் பலதெய்வ வழிபாடு கூறியிருப்பதாகச் சொல்லி அக்காரணத்தால் அவ்வேதத்தை நிந்தைபுரிந்த இவர் தென்னாட்டில் ஆறு தெய்வங்கள் வணங்கப்பட்டு வந்தனவென்று இங்குக்கூறுவது என்னை? ஆறு தெய்வமும் சிவபேதமென்பரேல், அவ்வாறு ஏன் வேதத்திற் கூறப்படுபவைகளுக்கும் பொருள் கொள்ளப்படாது? இவ்வாறு தென்னாட்டில் ஆறு கடவுளரை வணங்கினார்களென்பதற்கு என்ன பிரமாணம்? இக்காரணங்களால் அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் என்ற தொல்காப்பியச் சூத்திரப் பகுதிக்கு அந்தணர் அறுதொழில் என்று உரையாசிரியர் கொண்ட பொருளே உறுதியாம். மேலே காட்டிய பதிற்றுப்பத்தின் மூன்றும்பத்து உ௬-வது செய்யுளும் அந்தணரது அறுதொழிலையும், தொல்காப்பிய இலக்கணப்படி விரித்துக் கூறுநின்றது. நிற்கப், பின்னும் நம்மவர் எழுதுவதாவது, "நூல் "பயில்கின்றவன் என்ற பொருளில் மறப்பினும் ஓத்துக்கொள "லாகும் பார்ப்பான் என்றவிடத்து அது வழங்கினமை காண்க. "ஓத்து என்பது நூல். பார்ப்பான் என்பவன் நூல்களைப் " பார்க்கின்றவன். இங்ஙனம் ஆசிரியர் மணக்குடவர் பொருள் "கொண்டார். ஓத்து என்பதற்கு வேதம் என்றும் பார்ப்பான் "என்பதற்கு ஆரியப்பிராமணன் என்றும் ஒடுங்கியவகையாகப் "பொருள் கொள்ளுதல் திருவள்ளுவர் கருத்துக்கு மிகவும் "பொருத்தமில்லாதமென்றே" எனவுமெழுதியிருக்கின்றார்.

நூல்களை பார்ப்பவன் பார்ப்பானென்றால், எந்த நூல்களைப் பார்ப்பவன் எனுங்கடா நிகழும், நூல் என்பது பொதுச் சொல்லாதலின் ஒரு நூலின் பெயரைச் சொன்னால் இன்னொரு நூலைச் சொல்லிக் கேட்டால் அதுவுந்தான், மற்

றொன்றைச் சொல்லிக் கேட்டால் அதுவுந்தான் என இவ்வாறே ஈறின்றிப் பெருகியே முடிபு இல்லாததாகும். எல்லா நூல்களையும் பார்ப்பவன் என்றால் நூல்களுக்கு அளவின்மை கல்விகரையில, வென்று மேலோரும் பணித்தனர். "வேதத்தை விட்ட அறமில்லைவேதத்தி லோதத்தகும் பொருளெல்லாமுள தர்க்க வாதத்தைவிட்டு மதிஞர் வளமுற்ற வேதத்தை ஓதியே வீடுபெற்றார்களே" எனத் திருமூல யோகியார் அருளியபடி வேதத்தைப் பார்ப்பவன், வேதத்தினந்தத்தை பார்ப்பவன், என்றே பொருள்படும். "இருக்குஓத்து ஆரணம் வேதம்" என்னும் திவாகரச் சூத்திரமும் ஒத்து என்பது வேதத்தைப் குறித்து நின்றது. அன்றியும் நம்மவர் இக்குறட்பாவை அர் வயப்படுத்திப் பொருள் கொண்டதும் பொருத்தமின்று. இத் திருக்குறள் செய்யுள், ஒழுக்கமென்னும் அதிகாரத்துட்காணப் பட்டது. கல்வியைப்பற்றிய அதிகாரமல்ல. ஒழுக்கமென்னும் அதிகாரத்துட்போந்த ௧௦ செய்யுளும் ஒழுக்கத்தையே தன் மைப்பொருளாகக் கொண்டது. "மறப்பினும் ஓத்துக்கொள லாகும் பார்ப்பான்" என அந்வயப்படுத்தினர். அது பொருந் தாது. பார்ப்பான் பிறப்பு ஒழுக்கங் குன்றக்கெடும் என்று கொள்ளவேண்டும். பார்ப்பானுக்கு அவனது பிறப்பினாலாய மேலான ஜன்மம், அவன் ஒழுக்கந்தவறினால், கீழான ஜன்ம மாவான் என்பதே பொருள். அதனால் வேதத்தை மறந் தாலும் பின்னும் கற்றுக்கொள்ளலாமென்றார். ஒழுக்கத்தை ஒருபோதும் விடப்படாதென்றார். ஒழுக்கங்கூறவந்த அதி காரத்துட்போந்த இச்செய்யுளில், பார்ப்பான் பிறப்பு என்று நூலாசிரியர் சொன்னமையால், பிறப்பினாற் பார்ப்பானென்று பெயரெய்தியவனையே இக்குறள் குறித்தது என்பதுதானே விளங்கும். ஆதலால் நூலைப் பார்ப்போரெல்லாம் இக்குறளின் கருத்துப்படி பார்ப்பார் ஆகமாட்டாரென்பது ஏற்பட்டது. ஏற்படவே பார்ப்பாரென்பது சிறப்புப் பொருளில் குறிப்ப தாக ஆயிற்றேயொழிய பொதுப்பொருளில் இச்செய்யுள் குறித்ததில்லையென்பது விளங்கும். அது விளங்கவே பார்ப் பார் என்பது ஒரு குலத்தாரையே சுட்டும். நான்மணிக்கடிகை நூலாசிரியர் அந்தணரினல்ல பிறப்பில்லை யென்றார். உயர்ந்த குடியிற் பிறப்பதும் இழிந்த குடியிற் பிறப்பதும் பூர்வ ஜன்ம கர்மத்தினாலாவதே. பூமியிற் பிறந்தபின் செய்துகொள்ளக் கூடியதல்ல. சித்தாந்த சாத்திரங்களெல்லாம் அவ்வாறே கூறும். சிவப்பிரகாசத்தில் "கன்ம நெறிதிரிவிதம் நற்சாதி ஆயுட்போகக் கடனதெனவரும்" எனக் கூறியிருப்பதாலறிய லாம். ஆனதால் பார்ப்பானது பிறப்பு எய்துவதும் பூர்வஜன்ம கன்ம விசேடத்தாலேதான், அது எய்தினும் அப்பிறப்புக்

குரிய ஒழுக்கத்தை அவன் கைவிடாதிருக்கவேண்டும். ஒழுக்கந் தவறினால் தாழ்ந்த குலத்தவனாவான். "ஒழுக்கமுடைமை குடிமை இழுக்கம் இழிந்த பிறப்பாய்விடும்" என்று நாயனார் விவாதச் செய்யுளுக்கு முந்திய செய்யுளாக அருளினார். விவாதச் செய்யுளில் பார்ப்பான் ஓத்து மறப்பினுங் கொளலா கும் என்றார். அந்த பார்ப்பானும் பிறப்பினாற் பெயரெய்தின வனே என்பது, பார்ப்பான் என்ற பதத்தோடு பிறப்பு என்னும் பதத்தைச் சேர்த்திருப்பதால் நன்கு விளங்கும். அவனுக் குரிய ஓத்து எதுவென்று விசாரிக்குங்கால் அது வேதம் எனவேபடும். ஓத்து எனப்படும் வேதம் பார்ப்பாருக்குரிமை யாதலினன்றோ திருக்குறளைக் கேட்டு அதற்குச் சிறப்புப் பாயிரங்கள் கொடுத்த சங்கத்தாருள் ஒருவர் "செய்யா அதற் குரியர் அந்தணரே" என்றார். (செய்யா அது = வேதம்). 'இன்னா ஓத்திலாப் பார்ப்பானுரை' என்றும் "அந்தணர் ஓத் துடைமையாற்றமிக வினிதே" என்றும் சங்கமருவிய நூல் களுஞ் சொல்லும். சென்னை யரசாங்கத்துப் புத்தகசாலையி லுள்ள மணக்குடவர் உரையைப் பார்த்தெழுதி இப்போது அச்சிட்டு வெளிவந்த புத்தகத்தில் ஓத்து என்பதற்கு வேதம் என்றும் பார்ப்பான் என்பதற்குப் பிராமணன் என்றுமே உரைகள் கண்டிருக்கின்றன. முந்தியது தற்காலப் புறட்சி யுடையோர், புறட்சிக்குத் தக்கவாறு, கூட்டியுங் குறைத்தும், எழுதிய பிரதியின் பதிப்பு என்பது உலகவதந்தி, அதை யாங் கொள்ளோம். உரையாசிரியர் பரிமேலழகர் ஓத்து என்ற தற்கு வேதம் எனவும், பார்ப்பார் என்றதற்கு அந்தணர் என வும், சிறப்புடை அந்தணர் வருணத்தை யெடுத்து மொழிந் தமையின் இஃது ஏனை வருணங்களுக்குங் கொள்ளப்படுமென் றும் உரைத்தார். இக்காரணங்களால் "ஓத்து என்பதற்கு வேதமென்றும் பார்ப்பாரென்பதற்கு ஆரியப் பிராமணனென் றும் ஒடுங்கியவகையாகப் பொருள்கொள்ளுதல் திருவள்ளுவர் கருத்துக்கு மிகவும் பொருத்தமிலாததொன்றே" என நம் நண்பர் கூறியது, ஆரியப் பிராமணரிடத்தும் வேதத்தினிடத் தும் இவருக்குள்ள வெறுப்புக் காரணமாகவே எனக் கூறலாம். மேலாராய்ச்சியால், இத்திருக்குறளுக்கு நம் பூர்வீகாள் கண்ட வுரை, அச்செய்யுளுக்குப் பொருந்தியதே என விளங்குவ தோடு அவ்வுரை ஒடுங்கியவகையான பொருளல்லவென்பதும் வெளியாகும். நிற்க, இனி நம் நண்பர் எழுதுவதாவது.

௩௬. "ஞானசம்பந்தப் பெருமானுக்கு உபநயனஞ் "செய்தகாலை வேதத்திற்குப் பொருள்கேட்ட அந்தணர்க்கு "வேதத்தின் மெய்ப்பொருள் சிவபெருமானே என்றும் சிறந்த "மந்திரம் ஐந்தெழுத்துமே யென்றும் சுவாமிகள் வற்புறுத்தி

"யறிவுறுத்தியதாகப் பெரிய புராணங் கூறுகின்றது. "வேத "நான்கினு மெய்ப்பொருளாவது நாதநாம நமச்சிவாயவே" "என்றதுங் காண்க. பெரிய புராணத்துள் சைவ நெறியில் "ஒழுகும் அந்தணர் ஒரு புறமும் சித்தாந்தச் செல்வர்களாகிய "அடியார்கள் ஒரு புறமும் சம்பந்தப் பெருமானைச் சூழ்ந்து "சென்றதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஞானசம்பந்தப் பெரு "மான் இருமொழி மறையையும் இன்னின்னவாறு தமது "தேவாரத்துள் விளக்கிப்போந்தனரென்று மேலே காட்டினும், "சைவநெறி யொழுக்கந்தலை சிறந்த பிராமணருக்கு எடுத்துக் "காட்டு ஸ்ரீமத் அப்பூதியடிகளாவர்.

"இம்முறையாகச் சைவநெறி கைப்பற்றாத தமது "ஆரியவேத சமயமே சிறந்ததென்றுகூறி அதனைத் தமிழர் "கைப்பற்றற்குமுரியாரென்றுந் தாமே அவர்கட்கு ஆசிரியர் "களென்றுங்கூறித் தமது மதம் நாட்டிய பிராமணரை "நோக்கிப் பதினோராந் திருமுறையின் பகுதியாகிய கோபப் "பிரசாதமுடையார்

"ஆரியர் புத்தகப் பேய்கொண்டு புலம்புற்று
வட்டணை பேசுவர் மானுடம் போன்று" என்றும்
'ஆடு போலக்கூடி நின் றழைத்தும்
மரக்கள் போல வேட்கை யீடுண்டும்
இப்படி ஞான மப்படி யமைத்தும்
இன்ன தன்மைய னென்றிரு நிலத்து
முன்னே யறியா மூர்க்க மாக்களை" என்றும்

"கடிந்து மொழிந்தமை காண்க" என்று எழுதியிருக்கின்றார். இவர் கூற்றை ஒவ்வொன்றாய் ஆராய்வாம்.

ஞானசம்பந்தப் பெருமானுக்கு உபநயனஞ் செய்த காலை வேதத்திற்குப் பொருள்கேட்ட அந்தணர்க்கு வேதத்தின் மெய்ப்பொருள் சிவபெருமானே என்றும் சிறந்த மந்திரம் ஐந்தெழுத்துமே என்றும் சுவாமிகள் வற்புறுத்தி யறிவுறுத்திக் கூறியது உண்மையே. இதனை இன்னம் விளக்கிக்காட்டுவாம். சம்பந்தருக்கு உபநயனப்பருவம் எய்திற்று. வேதவிதிப்படி பூணூல் தரித்தார்கள். இவ்வாறு பூணூல் தரித்தலாலாகிய இருபிறப்பு சுவாமிகளுக்கு எய்தக் காட்டிய வேதப்பிராமணர்கள் சுவாமிகள் முன்னின்று எழுதுங்கிளவியாகாது எழுதாக்கிளவியாகிச் சீடப்பரம்பரையாய் ஓதி உணரவரும் நான்கு வேதங்களையும் உமக்குத் தந்தோமென்று சொன்னார்கள். அவ்வாறு சொல்லிய பிராமணர்களுக்கு உலகமாதா ஞானப்பால் ஊட்டிய அன்றே அதாவது மூவாட்டைப் பிராயத்தே உவமையில்லாத எல்லாக்கலை ஞானத்தையும் ஓதாதே உணர்ந்தோராதலின்,

சடை,பதம், கிரமத்தோடு, எண்ணிறந்த புனித வேதங்களையும் அப்பிராமணர்கள் கேட்க ஓதினார். இது கேட்ட பிராமணர்கள் திடுக்கும் வியப்புமுற்றுச் சுவாமிகளைப் பரப்பிரம சொரூபியே யென மதித்துச் சுவாமிகளிடந் தங்களுக்கு வேதத்திலுள்ள சந்தேகங்களை யெல்லாங்கேட்டுத் தெளிந்தார்கள். சுவாமிகள்வேத மந்திரங்களை யெல்லாஞ் சொல்லி அம்மந்திரங்களுக்கெல்லாந் தலையாயது சிவபிரானது அஞ்செழுத்து மந்திரமென்றுகூறி, அவ்வமையம் ஸ்ரீபஞ்சாட்சரப் பதிகத்தையும் அருளிச்செய்தார்கள். இவ்விஷயம் ௩௪, ௩௫, பக்கங்களில் பிரமாணத்துடனே காட்டியிருக்கின்றோம். வேதத்தின் மெய்ப்பொருள் சிவபெருமானே யென்பது சத்தியமே. ஆனால் இச்சமயம் சம்பந்தமூர்த்தி சுவாமிகள் வேதத்தின் மெய்ப்பொருள் சிவபெருமானே என்று அருளியதாகப் பெரிய புராணங்கூறுகின்றது என நம் நண்பர் சொல்லி யிருப்பது பெரிய புராணங்கூறாததே. இவ்வாறு சம்பந்தப்பெருமான் வேதங்களை விதந்து கூறியிருக்க நம் நண்பர் ஏனோ வேதங்களை யிழித்துக் கூறிவருகின்றார். பஞ்சாட்சரப்பதிகம் அந்தச்சமயம் அந்த வேதப்பிராமணர்கள் முன்னிலையிலே அருளப்பட்டது. அப்பதிகம் ௨-ம் திருப்பாட்டு. "மந்திர நான்மறையாகி வானவர், சிந்தையுணின்றவர் தம்மையாள்வன, செந்தழலோம்பிய செம்மை வேதியர்க், கந்தியுண்மந்திரமஞ் செழுத்துமே" யென்பது. இச்செய்யுளில் பஞ்சாட்சரமே நான்மறையானதாகவும் பிராமணர்கள் செந்தழலோம்புபவர் என்றும் அவர்களுக்கு மாலையில் ஜபிக்கு மந்திரம் பஞ்சாட்சரமென்றுந் தெரிவித்திருக்கத் தமிழில் நான்மறை யென ஒரு நூல் இருந்து மறைந்து போனதாகக் கூறியும், ஆரியர் பெர்சியா நாட்டினின்றும் வந்து நம் நாட்டை அபகரித்துப் பின்னர் நான்கு வேதங்களையுஞ் செய்தாரென்னும் மேனாட்டார்கூற்றையே வலியுறுத்திப் பேசியும், ஏன் நம் நண்பர் வீணுக்கு வாதஞ்செய்கின்றார். "வேத நான்கினு மெய்ப்பொருளாவது நாதனாம நமச்சிவாயவே" என்பதை யெடுத்துக்காட்டினாரே! அதனால் நான்கு வேதங்களினும் சிவபரஞ்சுடரின் நாமமிருப்பதாக ஏற்படுகிறது. அவ்வாறு இருப்பதையும் வேதமந்திரங்களின் பிரமாணத்தால் மேலே எடுத்துக் காட்டியுமிருக்கின்றோம். என் ருக்கு வேதத்தில் சிவன் பேரே இல்லையென்று வாதிக்கவருகிறார். வேதம் நான்கும் ஆரியமாய் அக்காலத்தில் இருந்தமையானன்றோ அவ்வேதங்களை முன்னர் சற்காமலே உபநயன காலத்தில் ஓதியருளிய சம்பந்தமூர்த்திகள் "வேத நான்கினு மெய்ப் பொருளாவது" என அருளிச் செய்தார்கள். பின்னும் "அந்தணர்க் கருங்கலம் அருமறை ஆறங்கம்" எனவும் அப்பமூர்த்திகளும் சொல்லி

"நங்களுக்கருங்கலம் நமச்சிவாயவே" யென அருளியிருப்ப தின் நுட்பத்தை அறியுங்கள். பெரிய புராணத்தில் சைவ நெறியில் ஒழுகும் அந்தணர் ஒரு புறமுஞ் சம்பந்தப்பெரு மானைச் சூழ்ந்து சென்றதாகக் கூறப்பட்டிருக்கிறது என்று எழுதியிருக்கிறாரே, ஒரு செய்யுளாவது அவ்வாறு கூறுவதை யெடுத்துக் காட்டுவாரா? ஞான சம்பந்தப் பெருமான் இரு மொழி மறையையும் இன்னின்னவாறு தமது தேவாரத்தின் விளக்கிப் போந்தனரென்று மேலே காட்டினும் என்று நம்மவர் இங்கு எழுதினரே, இருமொழி மறை என்றால் வடமொழி மறையென்பது ஒன்று. மற்றொன்று தமிழிலிருந்து கடல் கொண்டதாக நண்பர் சொல்லும் தமிழ் நான்மறை போலும். சம்பந்தப் பிரானருளிய எந்தத் தேவாரத்தைக் காட்டித் தமிழில் நான்மறை யிருந்ததாக இவர் விளக்கினர். ஆனல் சில இடங்களில் மூல பாடங்களைத் தன் மனம் போல் மாற்றியும் உரையாசிரியர் கருத்தைஒராதும் இப்படித்தான் கருதவேண்டும் அது சரியான பாடமல்ல என்பனபோன்றவை களை யெழுதிக்கொண்டு வந்து கடைசியில் இருமொழி மறையையும் ஞானசம்பந்தப்பெருமான் தமது தேவாரத்தில் விளக்கிப்போந்ததைத்தான் காட்டினதாக எழுதிக்கொண் டார். இவை பொருளில்லாத வார்த்தைகளே. சம்பந்தப்பெரு மான் தேவாரத்தில் காணப்படும் மறை வேத முதலிய சொற் கள் ஆரியவேதத்தையே குறிக்குமென்பதை மேலேகாட்டினும். சம்பந்தப்பெருமான் அருளிய தேவாரங்களே தமிழ்மறை யென்பதும் அந்தத் தேவாரங்கள் ஆரிய வேதத்தின் சாரமா மென்பதும் முன் பக்கங்களிற் காட்டியிருக்கின்றோம்.

"வேதியர் வேதமுழக்கொலி வேதத்தைத் தமிழால்
ஓதிய மூவர் திருப்பதிகத் தொலி"

"தேவருமெழுதவொணு மறையைத் தமிழ் செய்து திருப்பதி கம் பாடுமூவரும்" என்று உமாபதி சிவமருளிய சேக்கிழார் புராணப்பாட்டுக்களின் பகுதிகளாலும் மேலதன் உண்மையை நன்கு காணலாம். இங்கு ஒரு விடயங்குறிக்கின்றோம். எமக்கும் திருநான்மறை விளக்க ஆசிரியருக்கும், வேதம், தமிழ்மறை என்பவைகளின் விடயமாக அபிப்பிராய பேதம் நேரிட்டு ஹிந்து முதலிய ஆங்கிலப் பத்திரிகைகளில் ஒருவர் எழுதியதை ஒருவர் மறுத்து எழுதிவருங்காலை (1923-ம் வருடம்) மேற்காட்டிய சேக்கிழார் புராணச் செய்யுட்களை மேற்கோளாகக் காட்டித் தமிழ்மறை யென்னுந் தேவாரம் ஆரிய வேதத்தின் சாரமேயென்று Hindu பத்திரிகை 27—3—23-ல் எழுதினேம். அதற்கு மறுப்பாக நம்மவர்

Justice Paper 20-4-23-ல் எழுதியதாவது. "In the stanzas he refers to, The terms Vedam and Marai mean wisdom or books of wisdom and they are used there in a general, not a special sense. There is no mention of Arya Veda in those stanzas." இதன் கருத்து. இச்செய்யுட்களிற் கண்ட வேதம் மறையென்ற மொழிகள் அறிவு அல்லது அறிவுநூல் களைக் குறிக்கும். ஆரிய வேதமென்று அச்செய்யுட்களில் குறிப்பிடவில்லை என்பது. இவ்விஷயம் இங்கு ஆராயவேண்டும்.

"வேதியர் வேதமுழக்கொலி" என்றால் எந்த அறிவு நூல்களை வேதியர்கள் முழக்கமாக வொலிக்கின்றார்கள். வட மொழி வேதத்தைத் தவிர்த்து வேறு எப்பாஷையில் வேறு எந்நூல்களையாவது வேதியர்கள் முழக்கமாக ஒலிக்கின்றார்களா? திருவாதவூரடிகள், திருக்கோவையாரில், வேதியரை வினவல் என்னுந் துறைச் செய்யுளில் "வெதிரேய்கரத்து மென்றோலேய் சுவல் வெள்ளை நூலிற் கோண்மூ, வதிரேய் மறையினிவ்வாறு செல்வீர்" எனத் திருவாய்மலர்ந்தருளினார். அந்தணர்க்குரிய மூங்கிற்றண்டம், ஆசனம், பூணூல் ஆகிய அடையாளங்களைக் கூறி அவர்கள் ஓதும் மறையினொலி மேக முழக்கம்போலுமென அருளப்பட்டிருக்கின்றது. (பிறவு முள). ஆதலால் வேத முழக்கொலி என்றது ஆரிய வேத முழக்கொலியையே சாருமென்று யாம் திண்ணமாய்ச் சொல்லு கின்றோம். நம்மவர், அல்லவென்றும் அறிவு நூலொலியே யென்றும் மேற்கோளும் வழக்குங்காட்டி அவர் கோளை நிலை நிறுத்திக் கொள்ளவேண்டியது அவர் கடமையாம். மற்றொரு செய்யுளில் எழுதவொணா மறையென்று குறித்திருப்பதனாலும் எழுதாக்கிளவி யென்பது ஆரிய வேதத்தையும் எழுதும் மறை யென்பது தமிழ்வேதத்தையுங் குறிக்குமானதாலும், இச்செய் செய்யுளிற் கண்ட எழுதவொணா மறையென்றதும் ஆரிய வேதத்தையே குறித்தது என வரையிடுவதற்கு எட்டுணை ஐயமு மில்லை. நம்மவர் நியாயவாயிலாக, அல்லவெனக் காட்டட்டும். இன்னமும், "வேதத்தைத் தமிழாலோதிய மூவர் திருப்பதிகத் தொலி" என்றமையானும், "எழுதவொணா மறையைத் தமிழ் செய்து திருப்பதிகம் பாடு மூவரும" என்றமையானும், வேதம் அல்லது மறை சமயாசாரியர்கள் மூவரால் தமிழில் வெளிப் படுத்தப்படுவதற்கு முன்னர் அவ்வேதமும் அல்லது மறையும், ஆயபாஷை தமிழல்லவென்பது மலையிலக்காய் விளங்குகின்றது. அப்பாஷை எதுவெனத் தேருமிடத்து "ஆரியம் வேத முடைத்து," "ஆரியமாயறம் பொருளின்பம வீடெல்லா மறைந்துயிர்கட் கறிவு செயலளிப்பது நூல்" என்னும் மேன் மக்கள் திருவாக்குகளானும், நிகண்டாசிரியர்கள் வேதம், மறை

ஆகிய சொற்களுக்குப் பொருள் கூறியிருக்கும் முறைமையாலும், அது ஆரிய பாஷையென்பதே முடிபு. இவ்வாறே 'வேதம் தமிழ் செய்த மாறன்' என விண்டுவின் அடியார்களுமருளியிருக்கின்றார்கள். ஆதலால் நமது தமிழ்த் திருமறை ஆரியவேதத்தின் சாரமேயாம். இங்கு ஆரிய வேதமென்றதில் உபநிடதங்களுமடங்கும். தமிழின் தன்மையறிந்த தண்ணளிப் புலவீர்காள்? இங்குயாமெழுதியவற்றில் பிழை உளதேல் எடுத்துக் காட்டுவீர்களாக. சைவநெறி ஒழுக்கந்தலை சிறந்த பிராமணருக்கு எடுத்துக் காட்டு ஸ்ரீமத் அப்பூதியடிகளாவர் என்று எழுதினார். சைவர்களும மற்றையோரும் செய்யும் சிவ பூஜாபலத்தையும் ஆலயங்களில் செய்துவரும் சிவாலய தெரிசனபலத்தையுங் கொடுத்துவரும் சண்டேச்சுரநாயனார் ஏன் சைவநெறி ஒழுக்கஞ் சிறந்த பிராமணருக்கு எடுத்துக் காட்டு ஆகமாட்டார். ஏன் உருத்திர பசுபதி நாயனார் ஆக மாட்டார். சைவநெறி ஒழுக்கமில்லாதவர்களுக்குச் சிவபிரான் அருள் கிடைக்குமோ? ஆனதால் அறுபான் மூன்று நாயன்மார்களுள் விளங்கும் திருமறையோர் பதின்மூவருமே சைவநெறி ஒழுக்கஞ் சிறந்த பிராமணருக்கு எடுத்துக் காட்டு ஆவார்கள். பிறகு, நம்மவர் சொல்வதாவது பிராமணர் தங்களது ஆரியசமயமே சிறந்ததென்று கூறியும் தமிழர்கள் அதைக் கைப்பற்ற உரியாரென்று கூறியும் தங்கள் மதத்தை நாட்டினார்களாம். ஆனதால் நக்கீரதேவர் அவர் அருளிய கோபப்பிரசாதம் என்னும் நூலின் பகுதியில் பிராமணர்களைக் கடிந்து மொழிந்தாராம். ஒருவர் கூறுவதை மற்றொருவர் கேட்டு அக்கூற்றுப்படி நடப்பதானால் கூறுபவன் மேலானவனாயிருக்க வேண்டும். கேட்பவன் கீழானவனாயிருக்க வேண்டும். அல்லது கூறுபவன் உண்மை தெரிந்தவனாயிருக்கவேண்டும். கேட்பவன் உண்மை தெரியாதவனாயிருக்க வேண்டும். அல்லது கூறுபவன் அரசனிடம அதிகாரம பெற்றவனாயிருக்க வேண்டும் கேட்பவன் சாமானியனாயிருக்க வேண்டும. இம்மூவகையில் கேட்ட தமிழர் எந்த வகை? கூறிய பிராமணர் எந்த வகை? பெரியோர்களே? ஆராய்ந்து முடிவு கட்டுங்கள். பிராமணர் சமயமும் தமிழர் சமயமும வேறல்ல. ஒன்றே. அதையே வேதம் முடிவில் கூறும. வேதத்திற் கூறிய ஒரே சமயமே யிருவகையினராலு மனுட்டிக்கப்பட்டு வந்துகொண்டிருக்கின்றது. அதனாலன்றோ வேதத்திற்கும் சிவாகமத்துக்கும பேதம் காணேமெனப பாஷ்யகாரர நீலகண்டரும கூறினார். கோபப்பிரசாதம் என்னும நூலில் பிராமணரைக்கடிந்து மொழிந்திருப்பதாக நம்மவர் கூறுவதும வெற்றுமொழியே. வேதத்தையும பிராமணரையும் புகழ்ந்தே அந்நூலிற் கூறியிருக்கின்றது. நம்மவர் காட்டிய

மேற்கோளில் முன் பின் பாகத்தைக் காட்டாது விடுத்தனர்.
அவ்வாறு செய்ததிலும் இவரது வழக்கமான செய்கையைக்
கைக்கொண்டே தமது கொள்கைக்கு இணங்க மூலபாடத்தைப்
பிழைப்பட எழுதியுள்ளார். அப்பகுதியின் உண்மைப்
பொருளை அறியாதவராயினர். இக்[illegible] பிரசாத[illegible]
னும் நாலுக்குங் கல்வி ஒழுக்கங்களிற் சிறப்புற்று விளங்கிய
சூரியனார் கோயில் ஆதீனம் [illegible] சிதம்பரத் தம்பிரான்
சுவாமிகள் உரையெழுதியுள்ளார். அதையாவது பார்த்தவ
ராயுங் காணப்படவில்லை. வேதத்தினிடத்தும் அதற்குரிய
பிராமணரிடத்தும் கொண்ட அபிமானம் மேலிட்டதனாலன்றோ
இவரது குலதர்மமாகிய நடுவுநிலைமை கீழ்ப்பட்டு விட்டது.
இவர் எழுதிக்காட்டுவது "ஆரியர் புத்தகப்பேய் கொண்டு
புலம்புற்று வட்டனை பேசுவர் மானுடம் போன்று" என்பது.
இதற்குப் பொருள் ஆரியரென்போர் அவர்களது புத்தகமென்
னும் வேதப்பேயினால் பிடிபட்டுப் புலம்புதலைச் செய்து வக்
கணையான மொழிகளைச் சொல்வாரெனக் கொள்ளவேண்டி
வரும். ஆனால் இவர் கொண்ட பொருள் என்னவோ அதை
யிவரெழுதாமையால் அறியக்கூடவில்லை. முன் பின் எழுதி
யிருக்கிற வாசகத்தால் மேற்காட்டிய பொருளை இவர் கொண்ட
தாக நினைக்கக்கூடியதாயிருக்கின்றது. சுத்தபாடம் "ஆரியப்
புத்தகப்பேய் கொண்டு" என்பது. இவர் எழுதிக் காட்டி
யிருப்பதில் 'ஆரியர்' என்ற சொல் எழுவாயாக நிற்கின்றது.
இவர் எழுதாது விடுத்த முந்திய வாக்கியங்களில் எழுவாய் நிற்
கின்றது. உண்மைப் பொருள்கோடலுக்கு இப்பகுதியை
முற்றிலும் எழுதுவாம்.

"பூக்கமழ் சடையனைப் புண்ணிய நாதனை
யினைய தன்மைய னென்றறி வரியவன்
தனைமுன் விட்டுத் தாமற்று நினைப்போர் *
மாமுயல் விட்டுக் காக்கைப்பின்போங் கலவர்போலவும்
விளக்கங்கிருப்ப மின் மினி கவரு
மளப்பருஞ் சிறப்பிலாதர் போலவும்
கச்சங்கொண்டு கடுந்தொழில் முடியாக்
கொச்சைத் தேவரைத் தேவரென் றெண்ணிப்
பிச்சைப் போல வோர்
ஆரியப்புத்தகப் பேய் கொண்டு புலம்புற்று
வட்டனை பேசுவர் மானுடம் போன்று
பெட்டினை யுரைப்போர் பேதையர்" †

இதன் கருத்தாவது, இன்ன தன்மையனென்றறியக்கூடாத
பரமசிவனை நினையாமல் விடுத்து வேறு தேவரை நினைப்போர்

* எழுவாய்   † பயனிலை

முயலை விட்டுக் காக்கைப்பின் போவார் போலவும் வெள்ள துக்கு விளக்கிருக்க மின் மினி தேடுவார் போலவும் ஒரு கா முமுடிக்கத் திறமையற்ற சிறு தேவர்களை மாதேவன் என றெண்ணி ஒப்பற்ற மேன்மை பொருந்திய வேதத்தின் உண் பறியாது பித்தரைப் போலவும் பேயைப்போலவும் பிதற் திரிவார் பேதையரே; என்பது. இதனால் வேதத்தை தாழ்த்திக் கூறவில்லை யென்பதும் பிராமணர்களை சமய பாகக்கொண்டு கடிந்து கூறவில்லையென்பதும் விளங் வேதத்தின் உண்மைப் பொருளை யறிந்து சிவபிரானை வண காதவர்களையே பேதையர் என்று கூறிற்று. இரண்டாவதாக காட்டப்பட்ட "ஆடுபோலக் கூடி நின்றழைத்தும்" என் தொடக்கத்து மேற்கோளின் கருத்தும் மேற்காட்டிய பொரு ளையே ஒட்டியது. அதாவது வேதத்திலுள்ள திருவுருத்திர தின் பொருளை யறிந்து அப்பொருளாய சிவபரஞ் சுட வணங்காது வீணாக ஆடுகள் கூடி மே மே என்று கத்துவது போல அவ்வுருத்திரத்தை வாயினால்மட்டுஞ் சொல்லி உள் ளத்திலிடம் பொய்த் தேவர்களைத் தியானிப்பவர்களை மூட ரென்று இந்த மேற்கோள் குறிப்பிட்டது. இதனாலும் வேதத்தைக் குறைகூறவில்லை. பிராமணர்களையும் கடிந்து மொழிந்ததாகவுமில்லை. வேதத்தின் உண்மைக் கருத்து அறிந்து அவ்வழி ஒழுகாதவர்களையே கடிந்து கூறிற்று.

"ஒருமுகம் மந்திரவிதியின் மரபுளிவழாஅ
அந்தணர் வேள்வியோர்க்கும்மே" என்றும்,

"இருமூன்றெய்திய இயல்பினின்வழாஅ
திருவர்ச்சுட்டிய பல்வேறு தொல்குடி
யறுநான்கிரட்டி யிளமை நல்லியாண்
டாறினிற் கழிப்பியவறனவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச்செல்வத்
திருபிறப்பாளர் பொழுதறிந்து நுவல
வொன்பதுகொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலரவுடீஇ
யுச்சிக்கூப்பிய கையினர் தற்புகழ்ந்
தாறெழுத்தடக்கிய வருமறைக் கேள்வி
நாவியன் மருங்கினவிலப் பாடி" என்றும்

இன்னமும் அவர் இயற்றிய நூல்களிற் பலவிடங்களிலும் வேத மார்க்கத்தையும் அதைக் கைக் கொண்டொழுகும் வேதியரையும் பலவாறு புகழ்ந்துகூறிய வைதிக சைவ பூஷண மாகிய நக்கீரதேவரும் பிராமணர்களைக் கடிந்தும் பேசவார் ஒருக்காலும் கடிந்துபேசார். ஒழுக்கந்தவறினவரைக் குறை கூறுதல் உலக வழக்கேயாம். இரண்டாவதாக நண்பர் காட் டிய பகுதியின், முடிவை அவர் காட்டிலர். அதனை யெழுத

இச்செய்யுளில் அவர்களை நாய்கள் என்றும் குறிப்பிட்டிருக்கின்றது. அன்றியும் ஆரியங்கள் என்று பன்மைச்சொல்லாலுங் கூறப்பட்டிருக்கின்றது. தமிழ்கள், தெலுங்குகள் எனச் சொல்வதும் வழக்கில் இல்லாதது.

"ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்"
"செந் தமிழோ டாரியனைச் சீரியானை"
"ஆரியந் தமிழோ டிசை யானவன்"
"வடமொழியுந் தென்றமிழும் மறைகளான்குமானவன்"

என்னுந் தமிழ்மறை வாக்கியங்கள் வடமொழியாகிய ஆரியத்தையும் அம்மொழியிலுள்ள வேதத்தையும் சிவபிரான் தழுவிக்கொண்டனர் என்று கூறுகின்றன. இருமொழிக்குங் கண்ணுதலார் முதற் குரவர் எனவும் திராவிட பாஷ்யகாரரும் கூறினர். மேற் பக்கங்களில் எடுத்துக் காட்டியிருக்கிறபடி வேதங்களும் சிவாகமங்களும் ஆரியத்திலேயே யிருப்பதாகச் சிவதருமோத்தரம், சித்தாந்த சாத்திரம் ஆகிய நூல்களும் கூறுகின்றன. இச்செய்யுள் திருமாளிகைத் தேவர் இயற்றிய திருவிசைப்பாப் பதிகங்கள் நான்கனுள் நாலாவதாயதன் ௩-வது செய்யுள். அப்பதிகங்களில், சாமகண்டா, அருமையின் மறை நான் கோலமிட்டாரற்றும்மப்பனே, பெருவளர் முத்தீ நான்மறைத் தொழில் சாலெழின் மிகுபெரும் பற்றப் புலியூர், என்று சாம வேதத்தையும், நான்கு வேதங்களையும் அவ்வேதங்களிற் கூறியபடி முத்தீ வளர்த்தலையும் இச்செய்யுள் இயற்றிய ஆசிரியரே சிறப்பித்துக் கூறியிருக்கின்றார். இக்காரணங்களால் இச்செய்யுளில் காணப்படும் ஆரியங்கள் என்னுஞ் சொற்கு வடமொழியெனப் பொருள் கொள்வது தகைமையுடைத்ததாயில்லை. இச்செய்யுளடங்கிய பதிகத்தின் ௧0 செய்யுட்களிலும் காணப்படுகின்ற சொற்றொடர்களாவன, கோறைவாய்ப்பீறற் பிண்டப்பிணாங்களை, பிட்டரை, கழுக்களாய பிரட்டரை, சீத்தை யூத்தைப் பிணுக்கரை, ஆதரைப் பேதவாதப் பிசுக்கரை, அவியாப்பாவப் பெருக்கரை, குண்டமிண்ட வெத்தரை, பசுநூல் கற்கும்பிச்சரை, திட்டைமுட்டைப்பெண்ணரை, என்பன. இச்சொற்றொடர்கள் போன்றன வெல்லாஞ்சமண் சாக்கிய புத்தராதிகளைக்குறிப்பிட்டு நந்தமிழ் மறைகள்கூறு நின்றன. அவைகளிற்சில காட்டுதும், பாசிப்பல் மாசுமெய்யர், கசிவொன்றில்லாப் பிட்டர், அமண் கழுக்கள், பிரட்டே திரிவார், ஊத்தைவாய்ச் சமண் சாக்கியர், சமணாதர், குண்டர், பண்ணிய சாத்திரப் பேய்கள், முட்டைக்கட்டுரை, என்பனவாதிய, இப்பதிகத்தின் ஒவ்வொரு செய்யுளும் "கண்காணு வாய்பேசாதப் பேய்களோடே" என்ற மகுடத்தால் முடிகிறது. இந்நியாயங்களால் இப்பதிகம் இச்செய்யு

ுள்பட சமண் சாக்கியனை இழித்துக்கூற எழுந்ததாக
னைக்கது இருக்கிறது. விவாதச்செய்யுளிலும் ஆதர் என்
ும் சொல்லும், பேதவாதப் பிதற்றர் என்னுஞ் சொற்
ுடருங் காணப்படுகின்றன. ஆரியம் என்ற பதத்திற்குச்
செல்வம் என்னும் பொருளுண்டென்று தெரிகிறது. அப்
பொருளையே ஆரியங்கள் என்ற மொழிக்குங் கொள்ளல்
டுமன்றோ? திருவிசைப்பா உரைஆசிரியர் கண்ட பொரு
ும் இது போன்றதே. அதாவது வெண்ணீறு பூசுஞ் சிவ
டியார்களை நணுகாது, நாய்கள் = நாய்கள் போன்றவராய்,
ஆசிக்க = அருவருக்கத்தக்க, ஆரியங்கள் ஓதும் = பெருமைகள்
பேசுகின்ற, ஆதரை = அறிவிலிகளைக், கண்களுங்காணு அவர்க
ளோடு வாயும்பேசாது. இச்செய்யுட்குப் பொருத்தமான
பொருள் இதுவே. இவ்வாறு பொருள் அறியாது அப்பகுதி
ஆரியப் பிராமணர்களையே குறிக்குமென்றல் அளவற்ற ஆட்சே
பணைகளுக்கு இடமுண்டாம். நிற்க, இவ்வாறன்றி, இவ்வாக்
கியத்திற்காணப்படும் ஆரியங்கள் என்ற மொழிக்கு ஆரியவேதங்
களென்றே பொருள்கொள்ள வேண்டுமென்பார்களேயானல்,
ஆரியவேதங்களின் உண்மை சைவ சித்தாந்தமென்பதை அவ்
வேதங்களைப்படித்தும் தெரிந்துகொள்ளாமல், முத்தியினு
மூன்று பொருளுண்டென்னும் சைவ சித்தாந்திகளை மூடர்
என்றழைத்துத் தமிழில் அநேக நூல்களைப் பேதவாதமாகவும்
மாயாவாதக்கொள்கையைத் தழுவியும் இயற்றியிருக்கும் அந்
தணர்களைக்குறித்தும் நின்றதெனவே உணரவுங் கூடும்.

நக. இன்னும் நம்மவர் எழுதுவதாவது. "உமாபதி
"சிவமும் "ஆதிமறையோதியதன் பயனென்றுமறியா வேதியர்
"சொல் மெய்யென்றுமேவாதே" என்றதன் மேலும் பண்
"டைத் தமிழ்மறையின் பொருளை விளக்கும் மூவர் தேவாரம்
"சிவபெருமானாகிய ஓரே கடவுளைப்பற்றிக்கூறுவது என்னும்
"பொருளில் "அருமறையைச் சிச்சிலி பண்டருந்தத்தேடுமது
"போலன்றிது வென்றுமுளதாம் உண்மைப்பரபதமுந் தற்
"பாமும் பரனேயன்றிப் பலரில்லையென்றெழுதும் பனுவல்"
"என்றருளிச் செய்தமையும் காண்க" என்றெழுதி விடுத்து
மேலெழுதப் புகுந்தாரேயொழியத் தாமெடுத்துக்காட்டிய
இம்மேற்கோளினால் அவர்க்குச் சாதகமின்னதென விவரித்துக்
காட்டினாரில்லை. உமாபதிசிவம் அருளிய நெஞ்சுவிடு தூதின்
பகுதியாகிய மேற்குறித்த எடுத்துக்காட்டில் ஆதியென்னும்
"செஞ்சொல்பு ... ற சொற்
அடைமொழிக்கு முன்னர் ... குக்காட்
காணப்படுவதை ... த்த
றாடர் மூலபாடத்தில் ... டை
வேதங்களைட்
டாது ஏனோ மறைத்தார். பெருமை
வேதங்களுக்குப்

மொழியை வேறுவென்றுதான் காட்டாது விட்டனரோ, அல்லது யாதொரு காரணம் பற்றியோ சொல்லக்கூடவில்லை. அது எவ்வாறாயினுமாகுக. செந்தொல்புனை ஆதிமறையென்றதனால் செம்மையான சொற்களால் ஆக்கப்பட்டு ஆதியாகிய இறைவனருளிய அல்லது தொடக்க காலத்தில் உண்டாகிய நூல் என்று பொருள்படும். ஆதிநூல் அல்லது முதனூல் என வேதம் பெயர் பெற்றதேல், அதற்கு முந்தி வேறுநூல் கிடையாதென்பதே பொருள்படும். அவ்வாறு ஏற்பட அதற்கு முந்தித் தமிழில் நான்மறை உண்டாயிருந்ததென்றும் அம்மறையின் பொருளைத் தமிழ்மறை விளக்குகின்றதென்றும் எவ்வாறு நம்மவர் கூறுகின்றார். செந்தொல்புனை ஆதிமறையென்று உமாபதிசிவம் கூறினார். சொல்வழுவாம் அம்மையென்றும் அம்மையை விட்டகலாத அப்பன் அச்சொல்லின் பொருள் என்றும் பெரியோர் கூறுவர். அதனால் செந்தொல்புனை ஆதிமறையென்றால் சிவபெருமானே புனைந்த சொற்களால் நிறைந்த முதனூல் வேதம் எனப் பொருளாகின்றது. இவ்வளவு சிறப்புப்பொருந்திய நான்மறைகளை என் நம் நண்பரும் மற்றும் சிலரும் குறைகூறவேண்டும். உமாபதிசிவமே, தாமியற்றிய சேக்கிழார் புராணத்தில் "தேவரும் எழுதவொண்மறையைத் தமிழ்செய்து திருப்பதிகம்பாடிமூவரும்" எனவும் அருளியிருக்கின்றார். அதனால் எழுதாமறையாகிய வேதப்பொருளை எழுதாத் தமிழ்மறையாகிய தேவாரமென்பது பெறப்படுகின்றதன்றோ? திருஞான சம்பந்தமூர்த்திகளும் சுந்தரமூர்த்திகளும் தாங்கள் அருளிய தமிழ்மறைத் தேவாரப்பதிகங்களில் தங்கள் பெயர்களைக் கூறியவிடத்துத் தாங்கள்கற்றநூல் மறையென்றும் நான்மறையெனவும் தாங்கள் கூறிய தமிழ்த் தேவாரப்பதிகங்கள் அம்மறைகளின் பொருளென்றுங்கூறிய தேவாரப்பதிகளை யிங்குத்தொகுத்துக்காட்டுகின்றோம்.

க. நல்லுயர் நான்மறை நாவினற்றமிழ் ஞானசம்பந்தன்
உ. மறையிலங்கு தமிழ்
ங. நான்மறை நாவனற்றமிழ்க் கின்றுணை ஞானசம்பந்தன்
ச. மறைசேர் வருக்கலை ஞானசம்பந்தன் தமிழின் ஒளிசெழுமாலை
ரு. எழின்மறை தன்னியல்வை தமிழ் விரகன்
சா. செழுமறைகள் பயிலுநாவன் வளர் ஞானசம்பந்தன்
எ. நற்றமிழ் ஞானசம்பந்தன் மறைவளருந் தமிழ்மாலை
அ. நாவினலம் புகழ்சீர் நான்மறையான் ஞானசம்பந்தன்
கூ. செழுமறை நின்றநாவன் அரவெனும் பணிவல்லவன் ஞானசம்பந்தனன்புறுமாலை
கo. நான்மறைவல்ல ஞானசம்பந்தன் உளறுமின்றமிழால்
கக. நற்றமிழ் ஞானசம்பந்தன் நான்மறை கற்றவன்

உமாபதிசிவமும் அவர் அருளிய கோயிற்புராணத்தின் வாழ்த்திற் கூறியது. "வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க" எனவுஞ் "சைவமுதல் வைதிகமுந் தழைத்தோங்க" எனவும் சேக்கிழாரும் அருளினர். "வேதாந்தத் தீதில் பொருள் கொண்டுரைக்கும் நூல் சைவம்" என்றும் சிவஞான சித்தியாருங் கூறுகின்றது.

"பண்டைத் தமிழ்மறையின் பொருளை விளக்கும்
"மூவர் தேவாரம் சிவபெருமானையே முதற் கடவுளைப்பற்றிக்
"கூறுவது என்னும் பொருளில் "அருமறையைச் சிச்சிலி
"பண்டருக்கத் தேடுமே போலன்று இது என்றமுளதாம்
"உண்மைப் பாடமுந் தப்பாடமும் பாவையன்றிப் பலரில்லை
"யென்றெழுதும் பதுமவல்" என்றருளிச் செய்ததையுங்
"காண்க" என்றெழுதினரே உமாபதிசிவனார் மறையென்று

கூறாது 'அருமறை' என்று கூறினரே அதன் கருத்தை இவர் உணர்ந்தாரா? "செஞ்சொற்புனை ஆதிமறை" யென்று அம்மூர்த்திகளருளியிருப்பதை இவர் படித்தும், அம்மறையை ஓதியுமதன் உண்மையறியாத வேதியர்போல, நம்மவரும் ஆயினரே. இது பரிதாபம். "அருமறையைச் சிச்சிலி பண்டருந்தத் தேடும்" என அருளிய உமாபதிசிவனாரே "அரியமுறை தேட வெங்குமிலாமையாலே, கையுமனத்தினனாகி யிருக்குங்காலை" எனத் தேவாரத்திருமுறைகளும் மறைந்திருந்து தேடப்பட்டதாயும் "ஏராருந் திருமுறைகள் கண்டதிறற் பார்த்திபனுமோராருமிறைவன்" என அத்தேவாரத் திருமுறைகளைத் தேடிக் (சிவனருளால்) கண்டவன் அபயகுல சேகரசோழன், எனவும் அருளியிருக்கின்றனரே, அதன் உள்ளுறையையும் நம்மவர் கருதிற்றிலர். இதன் விரிவைத் திருமுறைகண்ட புராணத்திற் காணலாம். மறையான அது, அருமையான பொருளையடக்கிக் கொண்டிருப்பதனாலன்றோ அருமறையெனச் சிறப்பித்துக் கூறினார்.

"வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள்
வேறுரைக்கும் நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூ லநாதியமலன் றருநூலிரண்டும்
ஆரணநூல் பொதுசைவமருஞ் சிறப்புநூலாம்
நீதியினா லுலகர்க்குஞ் சத்திநிபாதர்க்கும்
நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வேதாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல் சைவம்பிறநூல்
திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்தமாகும்"

என்னுஞ் சித்தியாரின் செய்யுட் கருத்தையே உமாபதிசிவம் அவரியற்றிய அருமறை யென்ற செய்யுளில் அருமறையாகிய

மேற் காட்டிய பெரிய புராணச்செய்யுட் பகுதிகளான், தமிழ் மறை, தமிழ் வேதம், எழுதும் மறையெனும் பெயர்கள் சம் பந்தப் பெருமான் அருளிய தேவாரங்களுக்கே பெயராயிற்று எனவிளங்கும். தேவாரத்துக்கு முன் ஒரு நூல் தமிழ்மறை யெனும் பெயருடன் இருந்திருந்து அத்தமிழ் மறை யின் பொருளையே சம்பந்தப் பெருமான் அருளிய தேவாரத் துள் கூறி யிருந்தால் முந்திய தமிழ் மறையின் சிறப்பைச் சேக்கிழார் பெருமான் கூறாது விடுவாரோ? இதனால் தேவாரப்பதிகங்களுக்கு முன் தமிழில் நான்மறையென ஒரு நூல் இருந்ததில்லை யென்பதே நிச்சயம். தமிழில் நான்மறை இருந்தது என்பதையும் மற்றும் அது விஷயங்களைப்பற்றியும் சித்தாந்தப்படுத்தும்போது, காட்சி, அனுமானம், உரை ஆகிய மூவகை அளவைகளில் ஒன்றுனுங் காட்ட முடியாதவராகி, நோக்கற்பாலது, ஊகித்தற்பாலது, மேற்கோளின் வைத் துணர்க, வைத்துணரப்படும், நேர்பொருள் கொள்ளற்பாலன வன்று. பொருள் கோளல் வேண்டும், அறியக்கிடந்தது, கோடற்பாற்று. கருத்தாகக் கொள்க. உற்று நோக்கத்தக்கது, உய்த்துணர்க, என்று கருதுதலே நமக்கு அறிவிற்கு மிகவும் பொருத்தமானது, யூகித்தற்குரியது, நாட்டியதாகக்கருதல் வேண்டும், யூகிக்கற்பாலது, யூகித்தற்கிடனுண்டு, இருத்தலுங் கூடும், எனுந்தமது சொந்தமான சொற்றொடர்ப்பிரமாணங் களை நமது நண்பர் எடுத்து ஆள்வாராயினர். நாம் எடுத்துக் காட்டிய இவ்விஷயங்களை நம்மவர் எழுதிய திருநான்மறை விளக்கத்தை நடுவு நிலைமையாய் வாசிக்கும் எவருங் காணலாம்.

ஸ்ரீ ஞானசம்பந்தப்பெருமான், யக்ஞோபவீதம் புனைந்த காலத்தில் அங்கிருந்த அந்தணர்களுக்கு அறிவித்தவாறு, வேதங்களின் உண்மைப் பொருளை யறியாது, ததீசிஆதி யோராது சாபம் பெற்று, வேதநெறிக்குப் புறம்பான நெறி வகுத்து, அதையும் வேதநெறிதான் என்று காட்டிவரும் வேதி யர்சொல்லை மெய்யென்றுமேவாதேயென உமாபதிசிவம் மேற் காட்டிய நெஞ்சுவிடுதூது என்னும் நூலுட் கூறியருளின ரென்றறிக. சமஷ்டியாகப் பிராமணர்கள் சொல்லைக் கேட்க வேண்டாமென்று சொன்னாரில்லை. “பராசர மாமுனி மரபு பயில” என்று, அதாவது சாமவேதமானது உலகத்தில் மென் மேலுந் தழைத்தோங்குக, பராசர இருடியின் கோத்திரமும் அவ்வாறே வாழையடி வாழையாக உலகத்தில் விளங்குக என்று சிவப்பிரகாசப் பாயிரத்திலருளிய உமாபதிசிவனாரும், வேதம் ஓதும் வேதியரையும் வேதத்தையுங் குறைகூறுவரா? சைவம் வேதத்தினுட் போந்ததனாலல்லவோ “தரையெலாம் பழைய வைதிக சைவம் பரக்கவே” என அப்பெரியோராகிய

உமாபதிசிவமும் அவரருளிய கோயிற்புராணத்தின் வாழ்த்திற்
கூறியது. "வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை
விளங்க" எனவுஞ் "சைவமுதல் வைதிகமுந் தழைத்தோங்க"
எனவும் சேக்கிழாரும் அருளினார். "வேதாந்தத் தீதில்
பொருள் கொண்டுரைக்கும் நூல் சைவம்" என்றும் சிவஞான
சித்தியாருங் கூறுகின்றது.

"பண்டைத் தமிழ்மறையின் பொருளை விளக்கும்
"மூவர் தேவாரம் சிவபெருமானாகிய ஓரே கடவுளைப்பற்றிக்
"கூறுவது என்னும் பொருளில் "அருமறையைச் சிச்சிலி
"பண்டருந்தத் தேடுமதுபோலன்று இது என்றுமுளதாம்
"உண்மைப் பரபதமுந் தற்பரமும் பரனேயன்றிப் பலரில்லை
"யென்றெழுதும் பனுவல்" என்றருளிச் செய்ததையுங்
"காண்க" என்றெழுதினாரே உமாபதிசிவனார் மறையென்று
கூறாது 'அருமறை' என்று கூறினாரே அதன் கருத்தை இவர்
உணர்ந்தாரா? "செஞ்சொல்புனை ஆதிமறை" யென்று அம்
மூர்த்திகளருளியிருப்பதை இவர்படித்தும், அம்மறையை
ஓதியுமதன் உண்மையறியாத வேதியர்போல, நம்மவரும் ஆயி
னாரே. இது பரிதாபம். "அருமறையைச் சிச்சிலி பண்டருந்தத்
தேடும்" என அருளிய உமாபதிசிவனாரே "அரியமுறை தேட
வெங்குமிலாமையாலே, நையுமனத்தினனாகி யிருக்குங்காலை"
எனத் தேவாரத்திருமுறைகளும் மறைந்திருந்து தேடப்பட்ட
தாயும் "சீராருந் திருமுறைகள் கண்டதிறற் பார்த்திபனு
மேராருமிறைவன்" என அத்தேவாரத் திருமுறைகளைத் தேடிக்
(சிவனருளால) கண்டவன் அபயகுல சேகரசோழன், என
வும் அருளியிருக்கின்றாரே, அதன் உள்ளுறையையும் நம்மவர்
கருதிற்றிலர். இதன் விரிவைத் திருமுறைகண்ட புராணத்திற்
காணலாம். மறையானது, அருமையான பொருளையடக்கிக்
கொண்டிருப்பதனாலன்றோ அருமறையெனச் சிறப்பித்துக்
கூறினார்.

"வேதநூல் சைவநூலிரண்டே நூல்கள்
வேறுரைக்கும் நூலிவற்றின் விரிந்தநூல்கள்
ஆதிநூல நாதியமலன்றரு நூலிரண்டும்
ஆரணநூல் பொதுசைவமருஞ் சிறப்புநூலாம்
நீதியினாலுலகர்க்குஞ் சத்திநி பாதர்க்கும்
நிகழ்த்தியது நீண்மறையினொழி பொருள்வேதாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்குநூல் சைவம்பிறநூல்
திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்தமாகும்"

என்னுஞ்சித்தியாரின் செய்யுட் கருத்தையே உமாபதிசிவம்
அவரியற்றிய அருமறை யென்ற செய்யுளில் அருமறையாகிய

வேதத்திற்கும் தமிழ்மறையாகிய தேவாரத்துக்கும் தாரதம்மியம் கூறினரேயொழிய வேதத்தை யெவ்வகையினும் தாழ்த்துதற்கல்லவென அறியவேண்டும். மேற்கண்ட செய்யுளில் வேதம் உலகினர்க்கும் சிவாகமம் சத்திநிபாதமுடையார்க்கும் அருளப்பட்டது எனக்கூறியிருக்கின்றது. வேதத்தின் ஞான காண்டமாகிய உபநிஷத்துக்களிலும், சிவபெருமானே முழுமுதற் கடவுளெனக் கூறப்பட்டிருப்பதாகப் பெரியோர் சொல்லுகிறார்கள்.

"பெரிது மானத்தா லுயர்ந்தவன் பிறைப் பேசிடாவான் சிவன் முதலா
மரிய நின்றுமைக்குருமனைக் கோளையானுடன் முழுதலங்கரித்தான்,
கரியவற்கரியாய் நின்னொடொப்பவரே கருதிலுமிலையெனத் துணிந்தன்
றிருவடிதனக்கே தன்கருத்தெல்லா மமைத்தான் சிருபிடதமாமிவனே"

என்ற சிவதத்துவ விவேக மொழிபெயர்ப்புச் செய்யுளாலுமறியக்கிடக்கின்றது.

இருக்கு வேதத்தில் சிவபரத்துவத்தை எல்லாத் தேவர்களுக்கும் மேலான கடவுள் என்று கூறும் பாகங்கள் பக்கம் ௪௯ முதல் ௫௨ வரை காட்டப்பட்டிருக்கின்றன. யஜுர் வேதம் முற்றிலும் அநேகமாய்ச் சிவபிரான் விஷயமே. இதன் மத்தியில் நடுநாயகமாய் விளங்குவது சிவபிரானையே புகழ்ந்து கூறும் ஸ்ரீருத்திரம் எனும் பகுதியே. அதை ஓதியே அறுபத்துமூவரில் ஒருவராகிய உருத்திரபசுபதி நாயனார் என்னும் அந்தணர் பெருமான், சிறப்புற்ற சிவானந்தப்பதிக்குள்ள சிவ பதவியை எய்தினரென நமது பெரிய புராணம் கூறுமேயானால், நம்மவர் வேத நிந்தையில் இறங்கியது அவரது ஊழ்வினையேயாம். உபநிஷத்துக்களும் சிவபரத்துவத்தையே துரியமூர்த்தியெனவும் பிரம விஷ்ணு ருத்திராதிகட்கு அப்பாற்பட்டவரெனவும் கூறுவதாகவும் பெருமக்கள் கூறுகின்றார்கள். விரிவஞ்சி அவ் வாக்கியங்களை யெழுதாது விடுத்தாம். மேற்காட்டிய சிவஞான சித்தியார்ச் செய்யுளில், வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள் எனத் தேற்றேகாரங் கொடுத்து, அருணந்தி சிவனார் வரையறுத்துக் கூறியிருக்கவும், தமிழ் நான்மறை யென்பது ஒன்றிருந்ததாயும் அது கடல்கோளில் மறைந்து விட்டதாயும் நம்மவர் கூறும் வெற்றுரை நிலைபெறுமா? சைவ நூற்பயிற்சியுள்ளோர் நகையாடுவர். மேற்காட்டிய பிரமாணங்களால் உமாபதி சிவனார் வாக்கு, வேதங்களையும் வேதியரையுங் கண்டிக்க வெழுந்ததல்லவென்பதே போதரும். நிற்க, மேலாராய்வாம்.

௪௦. இனி நம் நண்பர் சொல்வதாவது, அப்பமூர்த்திகள் அருளிய,

“கங்கையாடிலென் காவிரியாடிலென்”
“சாத்திரம் பல பேசுஞ் சழக்கர்காள்,
கோத்திரமுங் குலமுங் கொண்டென் செய்வீர்”
“கோலும் புல்லும் ஒருகையிற் கூர்ச்சமும்”

...ன்னுந் தொடக்கங்களையுடைய செய்யுட்களை யெடுத்துக் ...காட்டி அப்பர் சுவாமிகளும் இரங்கிக் கூறினமை காண்க ...வென்றெழுதியிருக்கின்றார். கடவுள் இல்லையென்றுங்கள் ...மே எல்லாப்பலன்களையும் கொடுக்குமென்றும் சித்தாந்த ...மடையோராகிய பூர்வமீமாஞ்சகர்கள் மதம் பற்றி ...யெழுந்த செய்யுட்களிவையெனப் பெரியோர் கூறுவர். சிவ ...பெருமான் ஒருவரே முழுமுதற் கடவுளென்றும் கன்மபலன் ...களைக் கொடுப்பவர் அவரே யென்றும் உணராது புரியுங் ...ன்மங்களெல்லாம் பயன்றாவென்பதே இத்தேவாரப்பாக்க ...ளின் கருத்தாம். நதி ஆகிய தீர்த்தங்களில் ஆடுபவர்களையும் ...சாத்திரம் படிப்பவர்களையும் கோத்திரங் குலமுண்டென் ...பவர்களையும் கோலும் புல்லுங் கூர்ச்சமுமெடுக்க வேண்டு ...மென்போர்களையும் இழித்துக் கூறவெழுந்த செய்யுட்களல்ல ...இவை என உணரவேண்டும். அப்பமூர்த்திகள் கருத்துமவை ...அல்லவென்பது :—

“தாவி முதற்காவிரி நல்யமுனை கங்கைசரச்சுதி
பொற்றாமரை புட்கரணி தெண்ணீர்க்—கோவியொடுகுமரி
வருதீர்த்தஞ் சூழ்ந்த குடந்தைக்கீழ்க்கோட்டம்” என்றும்

...அளித்து வந்தடிகை தொழுமவர் மேல்வினை கெடுமென்றி ...வையகங், களித்து வந்துடனே கலந்தாடக் காதலராய்க், ...குளித்து மூழ்கியுந் தூவியுங் குடைந்தாடு கோதையர் குஞ்சி ...ளித்து வளர்புகழ், தெளிக்குந் தீர்த்தமாக் திருவாரூரம்மானே,” என் ...றும், “குலம் பொல்லேன்” என்றும் “ஒன்றிய சீரிரு பிறப்பர் ...முத்தீயோம்பும் உயர்புகழ் நான்மறைறேயோர் ஓமாம்புலியூர்” ...என்றும், அம்மூர்த்திகளே அருளிய தேவாரப் பாக்களால் ...விளங்கும். எவ்வாறெனில் நதி ஆகிய தீர்த்தங்களையும் அவை ...ளில் முழுகுவோர் சிறப்பையும், குலத்தையும், முத்தீயோம் ...பும் பிராமணர்களையும் புகழ்ந்து கூறினமை அவர்களருளிய ...மேற்காட்டிய பாசுரங்களால் விளங்குகின்றமையால். இவ் ...ஆராய்ச்சியால் அப்பமூர்த்திகள் இரங்கிக் கூறினமை பிராம ...ணரைச் சமஷ்டியாக நோக்கி அல்லவென்பது பெறப்படும். ...ற்க :— இனி நம்மவர் எழுதுவதாவது.

சுக. “ஸ்ரீமத் மாணிக்கவாசக சுவாமிகள் வேதக்கிரி ...யாகாண்டத்தை மாத்திரம் சிறப்பாகக் கொள்வோரை மறுக் ...கும் முகத்தான்” விரதமே பரமாக வேதியருஞ் சரதமாகவே

“சாத்திரங் காட்டினர்” என்றும், ஆரியரது ஏகான்ம வாதக்
“கொள்கையை மறுக்கும் முகத்தான், “மிண்டிய மாயாவாத
“மென்னுஞ் சண்டமாருதஞ் சுழித்தடித்தார்த்து” என்றும்,
“கடவுள் திருமறையைக் குறிக்குமிடத்து “மிக்க வேதமெய்ந்
“நூல் சொன்னவனே” என்றும், ஆரிய வேதங்களைக் குறிக்கு
“மிடத்து “வேதங்களையாவென வோங்கி யாழ்ந்தகன்ற நுண்
“ணியனே” என்றும், ஆகமங்களைச் சிறப்பிக்கும் முறைமை
“யால்” ஆகமமாகி நின்றண்ணிப்பான் றாள்வாழ்க” என்றும்
“அருளிச்செய்தமை உற்று நோக்கத்தக்கது.” எனவெழுதி
யிருக்கின்றார். இவ் விடயங்களை ஒன்றின் பின் ஒன்றாக ஆராய்வாம். மாணிக்கவாசகப் பெருமான் ‘விரதமே பரமாக வேதியருஞ் சரதமாகவே சாத்திரங் காட்டினர்’ என்றோ யொழியச் சரதமாகவே சுருதி அல்லது வேதங் காட்டினர் என்று அருளியிருக்கவில்லை. ஆதலால் இங்குச் சாத்திரமென்றது பூர்வமீமாஞ்சகர் நூலை. மீமாஞ்சக நூலாரின் கொள்கை, கடவுள் இல்லையென்பதும் விரதமாதிய செய்யப்படுங் கருமங்களே இச்சித்த பயனைப் பயக்குமென்பதும். ஆதலான் மேற்காட்டிய எடுத்துக்காட்டுகளில் முதலாயுள்ள மாணிக்கவாசகர் உரை அன்னோரையே குறிக்கும். ஏகான்ம வாதம் ஆரியரது கொள்கையென வெந்நூலினுங் கொள்ளப்படவில்லை. ஆனாலோ வேத வியாசர் காலத்துக்கு முந்திய காலத்தே ஆங்காங்குச் சிதறுண்டும் விரிந்தும் மறைந்தும் பரவிக்கிடந்த நான்கு வேதங்களைத் தொகுத்து உலகர்க்கு அளிக்கவேண்டியே சிவபிரானது ஆக்ஞையான், விண்டுவின்கலையொன்று வியாசராகத் தோன்றி அவ் வேதங்களை யோதாதுணர்ந்து நான்கு கூறாகத் தொகுத்தும், அவைகளின் சாரத்தைப் பிரம சூத்திரமெனப் பெயரிய ஒரு சுருக்க நூலையுமியற்றினரெனக் கந்தபுராணங் கூறும். இப்பிரம சூத்திரத்துக்கு நீலகண்டர், சங்கரர், இராமனுஜர் மத்துவாசாரியார் முதலியோர் ஒன்றையொன்று தழுவாத பாஷ்யங்கள் முதலியவற்றைத் தனித்தனியாய் இயற்றினர். இவருள் மூவர் ஆரியரே. இவற்றில் முதற்கண் இயற்றப்பட்ட நீலகண்ட பாஷியமே சைவர் கொண்டது. நீலகண்டரும் சிவத்வஜராகிய பிராமண குலத்தவரே. இந்நூல்களுள் சங்கரபாஷியம் ஒன்றுமே மாயா வாதக் கொள்கையுடையதென மேன்மக்கள் சொல்லுவார்கள். ஆதலான் ஏகான்ம வாதம் ஆரியரது கொள்கையெனச் சமஷ்டியாக நம்மவர் சொன்னது பொருத்தமிலதாம்.

“𑌆𑌰𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌶𑌿𑌵𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌾𑌂 𑌭𑌾𑌷𑍍𑌯𑌮𑍇𑌤𑌨𑍍𑌮𑌹𑌾𑌨𑌿𑌧𑌿𑌃॥”

“ஆர்யாணாம் சிவநிஷ்டாநாம் பாஷ்யமேதந் மஹாநிதிஃ”

ஸ்ரீகண்டர், பாடியமுகத்துரைத்தார். வேதங்களும் உப நிடதங்களும் பதி பசு பாச முப்பொருளையே நிலை நாட்டுவனவென்பதே அறிவுடைய பெருமக்கள் கொள்கை, மேலே யாம் காட்டிய இருக்கு வேத மந்திரங்களின் ஒன்று, ஒரு மரத்தில் இரு பட்சிகள் உள, ஒன்று அம்மரத்தின் பழத்தைப் புசிக்கின்றது மற்றொன்று பார்த்துக்கொண்டு விளங்குகின்றது எனக்கூறுகின்றதே. அது சைவ சித்தாந்த முப்பொருள் இலட்சணமல்லவா? "பலகலை ஆகமம் வேதம் யாவையினுங் கருத்துப் பதி பசு பாசந்தெரித்தல்," எனுஞ் சிவப்பிரகாச நூலின் பகுதியையும், "வேதாந்தத்தீதில் பொருள் கொண்டுரைக்குநூல் சைவம்" எனும் சிவஞானசித்தியாரின் பகுதியையும் மற்றுஞ் சைவ நூல்களையும் மேற்கோளாகக் காட்டி முதனூலாகிய வேதத்தில் பூர்வபக்கமாகிய பிறநூற்பொருளைத் தவிர்த்து மற்றைப் பொருள் முழுதுமே ஆகமமாக அருளிச்செய்யப்பட்டிருக்கின்றனவெனப் பெரியோர்கள் சொல்லுகின்றார்கள். இவ்வாராய்ச்சியால், ஏகான்ம வாதம் ஆரியரது கொள்கை யெனவும், மாணிக்கவாசகர் அதை மறுத்தாரென்றும் நம்மவர் கூறியது பொருத்த மற்றதே. நிற்கக் "கடவுள் திருமறையைக் குறிக்குமிடத்து 'மிக்க வேதமெய்ந்நூல் சொன்னவனே' என்றும் ஆரிய வேதங்களைக் குறிக்குமிடத்து "வேதங்களையாவென வோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே" என்றும்" மாணிக்கவாசகர் அருளிச்செய்தார், என்றார். கடவுள் திருமறையைக் குறிக்குமிடத்து என்றும் ஆரிய வேதங்களைக் குறிக்குமிடத்து என்றும் மாணிக்கவாசகர் இருவகையாற் பிரித்துக்காட்டினாரல்லர். 'கடவுள் திருமறை' யென்றாரே, யதன் பொருளென்னை? இச்சொற்றொடரை இதுகாறுந்தோன்றியநம் பெருமக்களில் யாவராவது அவர்களியற்றிய வெத்தகையத் தமிழ்ச்சைவநூல்களில் பிரயோகப்படுத்தி யிருக்கின்றார்களா? இச்சொற்றொடரைப் பிரித்து என்ன பொருள்படுகின்றதெனப்பார்ப்போம். கடவுளது திருமறை, கடவுள் இயற்றிய திருமறை, கடவுளைக்குறித்துப் பன்னுந்திருமறை, கடவுள் அருஅடியை அடையும்வழியைக் காட்டுந்திருமறை, கடவுள் அருளால் உண்டாய திருமறை, என்பனவாதிய பல பொருட்களைக் கொடா நிற்கும். மறையென்பதற்குப் பொருள் "மறையே வேதமுமறைத்து மொழிகிளவியும்" எனத் திவாகரனார் சூத்திரம் வகுத்தார். வேதம் என்றால் என்னவென விசாரிக்குங்கால், "வேதநூலின் பெயர் ஆதிநூலென்பது வேதநூற்பெயரே. இருக்கு ஓத்து ஆரணம் வேதமென்ப" என அவரே சூத்திரம் வகுத்தார். இதற்கு முரணாகப் பொருள்கூறுதல் ஏலாது. கடவுள் திருமறையெனும் பெயர்தாங்கிய ஒருநூல்

தமிழிலிருப்பதாகவும் தெரியவில்லை. ஆனால் பின் வாக்கியத்தில் ஆரியவேதங்களைக் குறிக்குமிடத்து, என இவர் எழுதியிருப்பதனாலே, கடவுள் திருமறையென்று இவர் முன் வாக்கியத்திற் சொல்லியது, ஓர் கற்பனைக்கட்டுப் பெயரால் தமிழ் நான்மறை யெனக்கூறியும் அந்நூல் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே கடற்பெருக்கில் இறந்து பட்டொழிந்ததெனச் சொல்லியுமுள்ள தமிழ் நான்மறைக்குப் பிரதிபதமாகக் கடவுள் திருமறையென இங்குச் சொன்னாரெனவே தெரிகின்றது. அவ்வாறானல், நம்மவர் தமிழ்நான்மறை, மாணிக்கவாசகர் காலத்தில் இல்லை. இருந்ததாக அம்மூர்த்திகளும் சொல்லியிருக்கவில்லை. ஆதலால் அந்நான்மறையைக் குறிப்பிட்டு மிக்க வேதமெய்ந்நூல் சொன்னவனேயென்று மாணிக்கவாசகர் அருளினாரென்பது சிறிதும் அடாதது. வேதமென்னும் மெய்ந்நூல் சொன்னவனே என்றதனால் வேதமாகிய சத்திய நூலை அருளினவர் சிவபிரானே எனக்குறிப்பிட்டும் நின்றது. நம்மவர்கூறும் கற்பனைத் தமிழ்நான்மறை சொன்னவர் தமிழ் முனிவர் நால்வரென்பது நம்மவர் கொள்கை. ஆதலால் இவர் கூற்றுப்படிக்கும் பொருந்தவில்லை. இவரது தமிழ்நான்மறை சிவபிரானருளிய மெய்ந்நூலாகிய வேதமாகுமானல் சிவபிரான் முக்காலத்தும் நிலைபெற்று அழியாதிருப்பதுபோல், அவர் ஆன்மாக்களிடத்துக் கருணை கொண்டு அருளிய அத்தமிழ் நான்மறையும், அழியாது எக்காலமுமிருந் திருக்க வேண்டும். இன்னமொன்று :—நம்மவரது இறந்துபட்ட தமிழ் நான்மறையையும், என்றும் உயிரோடிருக்கும் ஆரிய வேதத்தையும் மாணிக்கவாசகர் குறித்து, முறையே, மிக்க வேத மெய்ந்நூல் சொன்னவனே என்றும், வேதங்களையாவென வோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே என்றும் அவர் அருண் மொழிகளில் அமைத்தாரெனின், எதுக்காக இறந்துபட்ட தமிழ்நான்மறையை அவர் குறிப்பிட வேண்டும். வேதங்களை யாவெனக்கூப்பிட்டும் அவ்வேதத்திற்கு அப்பாற்பட்டுப் போயினர் கடவுள், ஆதலால் ஆரியவேதம் சிறப்புற்றதன்று என மாணிக்கவாசகரே கூறியுள்ளாரெனச்சைவத் தமிழ் மக்கட்குக்காட்ட, நம்மவர் கட்டிய கட்டுக்களில், இதுவுமொன்று என்பதற்குத் தடையே யில்லை. வேதங்களை யாவென வோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே என்றது போல "நான்மறை கடா மறியா வெம்பெருமான் ஈசாவென்றேத்தின காண் சாழலோ" என்றும் "பண்டாய நான்மறையும் பாலணுகா" வென்றும் மாணிக்கவாசகப் பெருந்தகையாரே மற்றும் அருளியிருக்கின்றார்கள். மற்றும் நமது சைவநூல்களெல்லாம் அவ்வாறு கூறியுமிருக்கின்றன. இவற்றின் உண்மைப்பொருளை

நோக்குமிடத்து, நந்தாயுமானப் பெருந்தகையார் கூறியபடி, தெய்வமுமனந்தபேதம். ஆதலின் வேதம், அவ்வவர் வினைக்குப் பொருந்தப்பல தெய்வங்களைக் கடவுளர்களாகக் கூறிவந்து அவர்களில் ஒருவரும் முழுமுதற் கடவுளல்லரென வொதுக்கித்தள்ளி முழுமுதற் கடவுள் அவர்களுக்கெல்லாம் மேலாய சிவபிரானென்று தெரித்து, அவர்தான் ஏகம் என்பவர், சிவனென்பவர், உமாபதி யென்பவர், பசுபதி யென்பவர், என்பனவாதிய சிறப்புப்பெயர்களால் கூறப்பட்டவர், என்று கூறி, அவரது சொருப இலட்சணங்களை, மிகுதியாய் விரித்துக் கூறாது விட்டதனால், நம் பெருமக்கள் எல்லோரும் "வேதங்களை யாவென வோங்கியாழ்ந்தகன்ற நுண்ணியனே" "அருமையின் மறைநான் கோல்மிட்டரற்றுமப்பனே" "அல்லை யீதல்லை யீதென மறைகளுமன்மைச் சொல்லினாற்றுதித்திளைக்கும்,, என்பனவாதிய சொற்றொடர்களால் சிவபரஞ்சுடரைத் துதித்தார்கள் என்பதே திண்ணம். ஏனென்றால் வேதம் சூத்திரரூபமாதலானும் வேதப்பொருளை நன்கு விளக்கச் சிவாகமங்கள், அருளப்பட்டிருப்பதானும் என்ப. "திருவாசகம் முற்றுமே வேத உபநிஷத்துக்களின் சாரமென்பது கொண்டு" சுருதி செந்தமிழாக்கிய மொழியார்" என மாணிக்கவாசகரை, அவரது சரித்திரம் கூறும் திருவாதவூரர் புராணமுமொழியும். இக்காரணங்களால் மாணிக்கவாசகர் நம்மவரது இறந்துபோன தமிழ் நான்மறையைக் குறித்து அவர் இயற்றிய திருவாசகத்தில் சொல்லியிருப்பதாகக் கூறியிருப்பது அசப்பியமேயாம். ஆகமத்தை விசேடித்துக் கூறவேண்டுவது விகிதமே. ஏனெனில் அவை வேதப்பொருளை விரித்துக்கூறும் பாடியமாகலின்; "தொகுத்தவனருமறை, அங்கம், ஆகமம் வகுத்தவன்" எனவும் ஞானசம்பந்தப்பெருமானும் அருளினார்; பின்னும் நம்மவர் எழுதுவதாவது.

"இனைத்தனை வேதங்குன்றாத் தில்லைச்சிற்றம்பலத்தே," என வாதவூரடிகள் அருளியதில் வேதம் என்ற சொல்லுக்கு ஞானநூல் என்பது பொருளாம் என்று நண்பர் எழுதினார். ஞானநூலென்றால் பாசஞானம், பசுஞானம், பதிஞானம், இவற்றை உணர்த்தும் எல்லா நூல்கட்கும் பொதுப்பெயராகும். ஞானநூல் எனப்பெயர் கொண்ட ஒரு நூல் இருமொழியிலுமில. வேதம் என்ற சொல் வடமொழி வேதங்களையே குறிக்கும். சிதம்பரத்தலத்தின்கணுள்ள மூலட்டானேஸ்வரர் நடராஜப்பிரபு ஆதிய மூகூர்த்தங்களையும் மற்றும் அத்திருப்பதியின் கண்ணுள்ள சிவாலயங்களையும் பூசித்துவருபவர் வேத வேதியர்களாகிய தில்லைவாழந்தணர்களே. மற்றைய வெல்லாத் தலங்களிலும் பூசிக்கும், சிவாகம வேதியர்க்கும் இவர்களுக்கும்

எவ்வகையினுஞ் சம்பந்தமில்லை. ஆதலால் இங்குத், தினைத்தனை வேதங்குன்று எனுஞ் சொற்றொடரிலுள்ள வேதம் என்றசொல் வடமொழி வேதத்தையே குறிப்பிட்டு நிற்கின்றது. உயர் வொப்பில்லாத வித்தலத்தை இக்காலத்திலுங் காலந்தோறுந் தெரிசிப்பவர்கள் 'தினைத்தனை வேதங்குன்றுத்தில்லைச் சிற்றம் பலம்' என்ற அருண்மொழிகளிலுள்ள 'வேதம், என்பது இன்ன நூலெனக்காட்சிப் பிரமாணத்தாலுமறிவார்கள். நிற்க, மேலாராய்வாம்.

சஉ. இனி நம்மவர் எழுதுவதாவது. "வடமொழி "வேதவரலாறும், தேவாரத்துட் கூறும் தமிழ் நான்மறை "வரலாறும் தம்முள் வேற்றுமையுடையன." என்றெழுதிக் "கொண்டு இந்நிலவுலகத்திலே ஆலநிழற் கீழ் அருள்பெற்ற "முனிவர் நால்வரும் செய்த மறைகளே தமக்குமுற்பட்ட மறை "களாகத் தேவாரகருத்தாக்கள் குறித்துள்ளார்கள்" என முடிபு செய்தார். தேவாரப்பாசுரங்களுள் ஒரு செய்யுள் அல்லது ஒரு செய்யுளின் ஓரடி அல்லது ஓரடியின் ஒரு சொல் தமிழ் நான்மறை யென்ற ஒரு நூலைக்குறித்திருக்கு மேயானல் அதை யெடுத்துக்காட்டி அவர் கொள்கையைத் தாபிதஞ் செய்யாமல் விருதாவாகப் பேசுவதனாலும் எழுது வதனாலும் பிரயோசனமில்லை. தேவாரப்பாக்களிலும், மற் றும் இவர்காட்டும் மேற்கோள்களிலும் அவைகளில் உள்ள உண்மைப் பொருள்களைக்காட்டாது மூலபாடங்களிலுள்ள மொழிகளைத் தம்கொள்கைக்கு இணங்கத்திருத்தியும் தெய்வத் தன்மைபொருந்திய உரை ஆசிரியர்கள் உரையைப்புறக் கணித்துத்தள்ளிவிட்டும் பொருந்தாத நவீன உரை கற்பித் தும் மூவகை அளவைகளுள் ஒரு அளவையாலும் தாபிக்கப் படுவதற்கு இயலாதபடி இவர் எழுதிவந்திருக்கும் கொள் கையை ஒவ்வொன்றாய் மேலே யெடுத்துக்காட்டி; அவை களெல்லாம் உண்மைப் பொருளுக்குப் பொருத்தமற்றவை யெனப் பிரபலபிரமாணங்களுடன் வரிசையாக எழுதிக்காட்டி வந்திருக்கிறோம். "காது பொத்தரைக்கின்னரர்" என்ற சுந் தரப்பெருமான் தேவாரத்தில் வேதஞ் செய்தவர் தமிழ் முனிவர் நால்வரெனப் பொருள் இருப்பதாகவெழுதியிருக்கின் றாரே ஒழிய அப்பாசுரத்தின் பொருளைக்கூறித் தம்கொள் கையைத் தாபிக்கப்புகுந்திலர். அத்தேவாரத்தின் பொருளே இவருக்கு விளங்கவில்லையென மேலே உசு-ம் பக்கம் முதல் ௩உ-ம் பக்கம் வரை விவரித்துக்காட்டி யிருக்கின்றோம். பிர பல பண்டிதர்களில் ஒருவரும் இவரது கொள்கைக்கு உடன் பட்டிலர்.

திருமறைக்காட்டுத் தலத்திற்கருகே, கல்லாலமரமிருப்பதாகவும் எழுதியிருக்கின்றார். அப்படி அங்குக் கல்லாலமரம் இல்லையென்பது தெளிவு. அத்தல விருட்சமோ வன்னிமரம். ஆலய ஆவரணத்துள் அது நிலைபெற்று மிக்க அழகாய்ப் பல கிளைகளுடன் ஓங்கி வளர்ந்து விளங்கித்தான் பூர்வீகமாயுள்ளதென்பதைக் காட்டிக்கொண்டு நிற்கின்றது. ஆனால் வெள்ளால் என்கிற ஒரு புண்ணிய விருட்சம் திருமறைக்காட்டுத் தலத்திற்குச் சுமார் ஏழு மைலுக்குத் தெற்கில் கோடிக்குழகர் கோயிலுக்குச் சமீபம் இருப்பதாகத் திருமறைக்காட்டுத் தலப் புராணம் கூறுகின்றது. தமிழ்நான்மறை யுணர்ந்தோர் பூசித்த தலம் திருமறைக்காடு என்று நம்மவர் எழுதியிருக்கின்றார். அம்மறைகள் மறைந்தபின்பு அவற்றை யுணர்ந்தோரால் அக்கோயிற் கதவுகள் மூடப்பட்டனவென்றும் பின்பு தேவார மருளிய பெரியோரால் திறக்கப்பட்டனவென்றும் எழுதியிருக்கின்றார். அம்மறைகள் மறைந்தபின்பு அவற்றை யுணர்ந்தோர் திருமறைக்காட்டில் இருந்திருந்தால், அவர் வழியாய் அவை வந்துகொண்டேயிருந்து இக்காலமும் அத்தமிழ் நான்மறைகள் நிலவுதல்கூடுமே. தென்மதுரையைக் கடல்கொண்டபோது தமிழ் நான்மறையும், தமிழ் ஆறங்கமும், தமிழ் இருபத்தெட்டு ஆகமங்களும், அழிந்துபோயினவென்பது இவர் படைத்துரை; தென்மதுரையென்னும் பண்டையகாலத்து நகரம், இப்போது நிலைபெற்றுவிளங்கும் கன்னியாகுமரிக்குத் தெற்கே அநேகமைல்களுக்குத் தென்பாலிருந்த நகரமெனக்கூறுவார்கள். திருமறைக்காட்டுத் தலத்துக்கும் கன்னியாகுமரிக்குமே இப்போதுள்ள தூரம் நாற்பது காதமாகும். கன்னியாகுமரிக்குத் தெற்கு எவ்வளவு தூரமோ பழயமதுரை, அது தெரியாது. திருமறைக்காட்டில் தமிழ்நான்மறை உண்டாகி அத்தலத்து இறைவனை அந்த நான்மறை செய்தோர் பூசித்திருந்தால், இவ்வகண்டதமிழ் நாட்டுப்பூதலத்துள், அத்தமிழ் நான்மறைகளும் அவற்றோடு சேர்த்து எண்ணப்படும் மற்றைத்தமிழ் ஆறங்கமும் தமிழ் ஆகமம் இருபத்தெட்டும் நிலைபெற்றிருக்க, ஓரிடமாவது இப்பக்கம் பெறாது, உற்பத்தியான தாய்த்தமிழ்நாட்டை அறவே விடுத்தொழித்துவிட்டுப், பன்னூறுகாத தூரமுள்ள தென்மதுரையிற்போய்க் குடிபுகுந்து அவைகள் முற்றும் கடலரையனாற்கவர்ந்து கொள்ளப்பட்டனவென நம்மவர் கூறுவது எவ்வகையிற் பொருந்துமோ? தமிழ்க் கல்வியாளர்களே கூர்ந்து நோக்கி முடிபுகட்டுங்கள். தமிழ்நாடு வடக்கின்கண் திருப்பதிவரை எல்லைபெற்று விளங்கிக்கொண்டிருக்கின்றது. அவ்வெல்லைக்குட்பட்ட தொண்டைநாடு சான்றோருடைத்து எனப் புகழப்பட்ட நாடாகும். இங்கெல்லாம் தமிழ்நற்ற

தமிழர்களும் சைவசமயக் கொள்கையுடைய தமிழ் மேன்மக்களும், அந்நூல்களை ஆதரித்துப் பாதுகாவாது போனார்களோ? இமயமலைவரை தமிழ் அரையர் தங்களது அரசாட்சி பரவச் செய்துகொண்டிருந்ததாகவுஞ் சொல்லப்படுகின்றதே? இவ்வகண்ட பூமிப்பரப்புள் வசிப்பவர்களில் யாரும் அந்நூல்களில் சிற்சில பாகத்தையாவது போற்றி வைத்திலரோ? அந்நூலின் பெயராவது கர்னபரம்பரையாய் வந்து நிலவுதல் வேண்டாமோ? தேவார கருத்தர்கள் அவர்கள் அருளிய தமிழ் மறையில் அவர்களுக்கு முன்னிருந்த தமிழ் நான்மறையைக் குறிப்பிட்டிருப்பதாக நம்மவர் சொல்லுகின்றாரே, அவ்வாறு தமிழ்நான்மறையென்றும் ஒரு நூல் இருந்திருந்தால், அதை ஓர் நொடியில் தருவித்துத் தமிழ் உலகினர்க்குக் கொடுத்துப் பேருபகாரஞ்செய்திருப்பார்களன்றோ?. கர்ன பரம்பரையாக வழங்கும் ஒரு சரிதையாவது :—ஸ்ரீசம்பந்தப் பெருமான் திருவாவாடுதுறையில் இறைவனை வணங்கித் துதித்துப் பலிபீடத் தருகேவருகையில், இங்குத்தமிழ் மணம் வீசுகின்றதென்றாராம். பலிபீடத்தைச் சோதித்துப்பார்த்ததில் அதனடியில் திருமந்திரம் என்னும் தமிழ் ஆகமம் சேமிக்கப்பட்டு வைத்திருந்து அகப்பட்டதாம் என்பது. இவ்வாறு தமிழ் நான்மறையையும் வெளிப்படுத்தியிருப்பார்களே. சில ஆண்டுகட்கு முன் இறந்துபோய் மயானத்தில் தகனஞ் செய்யப்பட்ட ஓர் அருமைக் கன்னிகையை அவளது சென்ற வயதுடன் ஒரு நிமிடத்தில் வரும்படி அநுக்கிரகித்து அந்தப் பெண்ணை அவளது தாய் தந்தையாரிடம் சம்பந்தப்பெருமான் அளித்தாரல்லவா? அதுபோல் தம்பிரான் றோழரும் ஒரு முதலையால் விழுங்கப்பட்டு அதற்கு இரையாகி ஜீரணித்துப்போன ஓர் பார்ப்பனச் சிறுவனைச் சில ஆண்டுகளுக்குப் பின்னர்த் தண்ணீரில்லாது வறண்டுபோய் வெறுந்தரையாயிருந்த அக்குளத்தில் நீர்பெருகச்செய்து அங்கு அம்முதலையை வரச்செய்து அதன்வாயினின்றும் அச்சிறுவனை உமிழச்செய்து அச்சிறுவனைப்பெற்றோர்க் களிக்கவில்லையா? ஒரு கற்பத்தில் வேதங்களையெல்லாந் திரட்டித் திருடிக்கொண்டு சமுத்திரத்தில் ஒளித்துப்போன அசுரனிடமிருந்து, சிவாக்ஞைப்படி, திருமாலானவர் மச்சாவதாரமெடுத்து அவ்வேதங்களைக் கொணர்ந்து உலகினர்க்குக் கொடுத்து உபகரிக்கவில்லையா? ஓர் காலத்தில் சுப்பிரமணியக் கடவுளால் கடலில் எரியப்பட்டுப்போன வேதாகமங்களை நந்தியெம்பெருமானை மகர மச்சமாகச் செய்து அந்நூல்களைத் தாங்கச்செய்து இறைவன்தாமே அவைகளைக் கொணர்வித்து அந்நூல்களை மகேந்திர மலையினின்று தாமே உலகினர்க்கு அளிக்கவில்லையா? நம்மவர் சொல்லுந் தமிழ் நான்மறை தமி

ழர்களுக்கென்று இறைவனது கருணையினால் கொடுக்கப்பட்டிருந்தால் சமுத்திரத்தில் மறைந்துபோன அம்மறையை மீண்டும் வரும்படிச்செய்து தமிழர்க்குக் கொடுத்துபகரிப்பது வித்தின்றி நாறுசெய்யும் இறைவனுக்கு ஓர் அரிய காரியமா? கருங்கற்றூணோடு சேர்த்துப் பிணிக்கப் பட்டுக்கடல் நடுவில் தள்ளப்பட்ட எந்தைபிரானாகிய அப்பமூர்த்திகளைக் கடலரையன் தன்றலைமேற்றாங்கி வந்து கரையில் ஏற்றிவிட அக்காரணத்தால் அவ்விடத்துக்குக்கரை யேறவிட்டகுப்பம் என இன்னமும் பெயர் வழங்கிவரவில்லையோ? தமிழ் மறையென ஒரு நூல் இருந்திருந்து சமுத்திரத்தில் அது மறைந்து போய்விட்டது மெய்யாமாகில், "மறைமுதனான்கும் மூன்று காலமுந் தோன்ற நின்றனை" எனவும் "மூவா நான்மறை" எனவும் "முடிவிலா ஓத்து" எனவும் நமது சமயாசாரிய மூர்த்திகள் அருளியிருக்கும் அருண் மொழிகள் வெற்றுரையாகுமே? இன்னோ ரன்ன காரணங்களால் தேவார திருவாசகங்களிற் காணப்படும் மறை, அல்லது நான்மறை யென்பது முக்காலமும் நிலைபெற்று விளங்குவதாகிய நான்கு வேதங்களேயாம் என்பதும் தமிழ் நான்மறையென ஓர் நூல் இருந்ததில்லையென்பதும் தமிழ் நான்மறை யென்பது தேவார திருவாசகமேயாமென்பதும், திண்ணம்.

தமிழ் நான்மறை உண்டாயது திருமறைக் காட்டுத் தலத்திலென்றும் அவைகளை ஆக்கிய தமிழ் முனிவர் நால்வர் பூசித்த தலமே அதுவென்றும், அவைகள் மறைந்தபின் அவற்றை யுணர்ந்தோர் அத்தலத்தின் வாயில்களை அடைத்து விட்டனர் என்றும் நம்மவர் கூறினாரே, அம்மறைகள் கடல்கோளில் எவ்வளவோ காததூரத்துக்கு அப்பால் மறைந்து போனால், ஏன் இத்தலத்தின் வாயில்களை மற்றவர் அடைத்து வேறு வாயில் காணவேண்டும். உலகெலாம் பெற்றெடுத்த நமது அன்னைக்கும் அப்பனுக்கும் தமிழ்மறைகள் இறந்தநாள், தனிஷ்டா பஞ்சமிபோலும். அவ்வாறு கொண்டாலும் தனிஷ்டா பஞ்சமியின் நீடித்த காலம் ஒரு ஆண்டுக்கு மேலில்லை. இக்கதவம் அடைக்கப்பட்ட காலத்துக்கும் திறக்கப்பட்ட காலத்துக்கும் இடையிலுள்ள கால அளவு அநேக காலமாகத் தெரிகின்றது. இக்கதவைத் திறக்கும்படிக்கும் அடைக்கும்படிக்கும், நம்பெருமக்கள் தேவாரம் பாடினார்களே, அத்தேவாரப் பாக்களிலாவது தமிழ் மறை நான்கினால் அடைக்கப்பட்ட கதவு என்பதைக் காட்டியிருக்கின்றார்களா? அல்லது அத் தமிழ்மறை செய்தோர் தமிழ் முனிவர் நால்வரால் பூசிக்கப்பட்ட தலமென்பதனையாவது குறிப்பாலாயினும் காட்டி

ணர்களா? இல்லையே. ஆனலோ திருஞான சம்பந்தப்பெரு மான் அத்தலத்துக்கு அருளிய தேவாரப் பாக்களில்

"பலகாலங்கள் வேதங்கள் பாதங்கள் போற்றி
மலரால் வழிபாடுசெய் மாமறைக் காடா"
"வேதம் பலவோமம் வியந்தடி போற்ற
ஓதம்முலவும் மறைக் காட்டி லுறைவாய்" என

அருளியிருப்பதைக் கூர்ந்து நோக்குமிடத்து வேத புருஷன் பல ஹோமங்களை வியக்கும்படிசெய்து புஷ்பங்களால் சிவ பெருமானை அருச்சித்த திருமறைக்காடு என்பது விளங்குகின் றது. ஹோமம் என்னும் வடமொழியே ஓமமெனத் திரிந்தது. ஹோமம் என்பது, சாத்திர விதிப்படி அமைக்கப்பட்ட அக்கினி மூலமாய்த் தேவர்களுக்கு உணவு அளிக்கும் அக்கினி காரியமென்பதாகும். இவ்வகையான கர்மா, வட மொழி நூலால் வகுக்கப்பட்டதே. ஆகலால் வேத புருஷன் அக்கருமாக்களையுஞ் செய்தானெனச் சம்பந்தப் பெருமான் கூறியருளினர். வேத புருஷன் பூசித்த காலத்தில், நான்கு வேதங்களும் ஒவ்வொன்றும் வெவ்வேறு நிறமுடைய நான்கு வர்ணமான அலரிப்புஷ்பம் பூக்கும் அலரிச் செடிகளை அத் தலத்துக்குப் பக்கத்தில் ஏராளமான காடுபோல உண்டாக்கி அப்புஷ்பங்களை யெடுத்துப் பூசித்தானென்றும் இந்நாள் காறும் அச்செடிகள் விளங்கிக் கொண்டிருப்பதாகவும் அத் தலத்தார் சொல்லி அப் புஷ்பச் செடிகளையுங் காட்டுவர். சிவ பெருமானை வழிபாடு செய்வது, அபிஷேகம், நிவேதனம், தோத்திர மாதிகளிருக்க, மலரால் வழிபாடு செய்ததாக மலரையே குறித்து அருளியிருப்பதுவும் அவ்வுண்மை தோன் றற்பொருட்டே; சம்பந்தரும், அப்பரும் இத்தலத்துத் திருக் கோயிலருகே வந்து ஆலயத்தினுள் நேராய்ப்புகும் வாயிலின்து திருக்கதவம் திருக்காப்பிட்டிருப்பதைக் கண்டார்கள் எனக் கூறும் அமையத்தில் சேக்கிழார் பெருமான் அருளியிருப்ப தாவது.

"முன்னுட்படியின் மறையருச்சித்துக் காப்புச்செய்த பைம்பொன்மணித்
திருவாயிற் பாங்குவந்தார்"
"அருமறைகள் திருக்காப்புச் செய்துவைத்த அக்கதவம்"

என்பன. இச்செய்யுட் பகுதிகள் வேதங்களே அக்கதவங் களைத் திருக்காப்பிட்டு வைத்தனவென்று தெரிக்கின்றன. தமிழ் நான்மறை, அஃதியற்றிய தமிழ் முனிவர் நால்வர் என் னும் வாசனைகூடச் சேக்கிழார் வாக்கிலுங் காணப்படவில்லை. நம்மவரோ தமிழ் நான்மறைகள் கடலில் மறைந்தபின்பு அவற்றை யுணர்ந்தோரால் அக்கோயிற் கதவுகள் மூடப்பட்

உலககுருவாய் விளங்கிப் பின்னர் நம்மெய்கண்ட தேவருக்குச் சீடராகி அருணந்தி சிவமெனத்தீட்சா நாமம் பெற்றுச் சிவஞான சித்தியார் என்னுஞ் சைவசித்தாந்த சாத்திரமியற்றிய குருமூர்த்திகள், அந்நூலில் "ஆரியமா யறம் பொருளோடின்பம் வீடெல்லா மறைந்துயிர்கட்கறிவு செயலளிப்பது நாலந்நூல், கூரியராயுள்ளவர்களோத வோதிக் கொண்டு வரலான் முன்னே குற்றமின்றிச், சீரியபேரறிவுடையோன் செப்பவேண்டுஞ் செயலினுக்குங்கரி வேண்டுஞ் சிவனுளனென்றறியே" எனக்காரிய காரணசம்பந்தத்தைக் காட்டிச் சிவபிரானே ஆரியத்தில் வேதங்களைத்தந்தருளினர் என்று திருவாய்மலர்ந்தருளினுர். அப்பமூர்த்திகள் அருளிய இத்தலத்துத் தேவாரப்பதிகத்தில் "ஆரியன்கண்டாய் தமிழன் கண்டாய்" எனவும் "முத்தமிழும் நான்மறையுமாயினான் காண்" எனவும் அருளிச்செய்திருப்பதுவும் இக்காரணம் பற்றியேபோலும். மற்றைய தலங்களின் தேவாரங்களிலும் இவ்வாறே அந்தந்தத் தலத்தின் சரித்திரங்களையெடுத்துக் குறிப்பாய்க் காட்டியிருப்பதை அத்தேவாரப் பொருளைக் கூர்மையாய் அறிவோர்கள் அறிவார்கள். அன்றியும் திருமறைக்காட்டில் வேதங்கள் பூசித்திருத்தல் போலவே நந்தமிழ் நாட்டிலுள்ள சிவாலயங்களில், வைத்தீஸ்வரன் கோயிலென்ற திருப்புள்ளிருக்குவேளூரிலும், திருக்கழுக்குன்றம் என்னும் வேதகிரியென்னுந் தலத்தும், திருவேதிகுடியென்னுந் தலத்தும், திருமைலையென்னும் வேதபுரியென்னுந் தலத்தும், திருவாலவாயென்னும் கடம்பவனத்தும், ஒவ்வோர்காரணம்பற்றிச் சிவபிரானை வேதங்கள் பூசித்தனவென அத்தலமான்மியங்கள் விளக்குகின்றன. திருப்புள்ளிருக்குவேளூர் என்ற அத்தலத்துப் பெயரில் இருக்கு என்னும் வடமொழி வேதப் பெயர் காணப்படுவதே அதற்கு அத்தாட்சியாம். தேவாரங்களிலும் அத்தலத்தின் பெயரைத் திருப்புள்ளிருக்குவேளூர் என்றே கூறப்பட்டிருக்கின்றது. இதனால் இருக்கு என்ற வேதம் நந்தமிழ் நாட்டில் இவ்வாலயமுண்டான போதே நிலவியதென்பதையுமறியலாம்.

இக்காரணங்களால் தமிழ்நான்மறையென்பது உண்டாயது திருமறைக்காட்டில் என்றும், அவைகளை ஆக்கிய தமிழ் முனிவர் நால்வர் பூசித்த தலமே அதுவென்றும், அந்நான் மறைகள் கடல்கோளில் மறைந்துபோன பின்னர், அவற்றையுணர்ந்தோர் அத்தலத்திலுள்ள சிவபெருமானது ஆலயக் கதவுகளை மூடிவிட்டார்களென்றும், நம்மவர் கூறுங்கூற்றுச் சற்றும் ஆதாரவற்றதென நன்கு விளங்கும். நிற்க, மேலாராய்வாம்,

சஙு. இனி நம்மவர் கூறுவதாவது. "பழந்தமிழ் நூல்
ள் யாவற்றுள்ளும் 'ஆலமர் கடவுள்' 'ஆலமர் செல்வன்'
னச்சிவபிரானை விதந்தோதுவதும், தமிழந்தணர்க்குக்கூறிய
மண்டல முதலிய அடையாளங்களையே, அவர்க்குக் கூறு
வதும் அவர் "தமிழ்மறை முதல்வ" ரென்பதற்குத்தக்க
சான்றாகும்"

"சீர்மிகு சிறப்பினோன் மாமுதற் கைசேர்த்த
நீர்மலிகரகம் போற் பழந்தூங்கு முடத்தாழை"

என்ற கலித்தொகை (செய்யுள் கஙுஙு) யடியுங்காண்க."
னவெழுதியதுமன்றி மற்றோர் * இடத்தில் "பண்டைத்தமிழ்
நூலோர் 'சீர்மிகு சிறப்பினோன்' 'ஆலமர் செல்வன்' என்ற
பெயர்களால் குறித்தனரேயன்றித் தென்முகக்கடவுளென்று
விதந்து ஓதிற்றிலர். ஆனால் வடமொழி நூலோர் அக்கட
வுளைத் தட்சிணாமூர்த்தியென்று கூறுகின்றார்கள். தட்சிணா
மூர்த்தி யென்ற சொற்குந் தெற்குக்கடவுள் என்பதே நேர்
பொருளாகத் தெரிகிறது. ஸ்ரீமன் மாணிக்கவாசக சுவாமி
களும் "தென்னாடுடைய சிவனே போற்றி" "எந்நாட்டவர்க்
கும் இறைவா போற்றி" யென்றமையானும் தென்னாட்டில்
கடவுள் நால்வருக்கும் மறை அருளிச்செய்தாரென்பது
யூகிக்கற்பாலது. தென்னாட்டில் எழுந்தமறை தமிழ்மறை
ஆதல் தெளிவு" எனவும் எழுதியிருக்கின்றார்.

இப்போது நம்மவர் அவரது கொள்கைக்கு ஆதரவாக
மேலே யெடுத்துக்காட்டிய மேற்கோள்களை ஆராய்ந்து அவற்
றின் பொருள் அவர் கொள்கைக்கு ஆதரவாய் நிற்கின்றதா
வென்பதைப் பரிசோதிப்பாம். சீர்மிகு சிறப்பினோன் என்ற
சொற்றொடரைக் கலித்தொகையில் இருப்பதைக் காட்டியது
போல மற்றை ஆலமர் செல்வன், ஆலமர் கடவுள், என்ற
வாக்கியங்கள்வரையப்பட்டுள்ள பழந்தமிழ்நூல்களை இவர் எடுத்துக்காட்டிலர். முன் பின் தொடர்ந்த பதங்களின்றிச் செய்
யுட்களிற் காணப்படும் பதங்களுக்கு ஓர் பொருள் கொள்வது
உண்மை விளங்காது. இவ்விரண்டு பதங்களும் சிவபிரானுக்குக்
காரணங்குறித்து எய்திய பெயர்களே. சிவபிரான் கல்லாலடி
யில் எழுந்தருளியது நால்வருக்கு உபதேசித்த ஒரு காரணத்
தான் மட்டுமல்ல. நந்தி யெம்பெருமானுக்கு உபதேசஞ்
செய்ததும் கல்லாலடியிலிருந்தே. இதனைக் 'கல்லானிழல் மலை
வில்லாரருளிய" என்னும் மெய்கண்ட சிவஞாநபோத பாயிரத்தையும்
அதற்குச் சிவஞான முனிவர் இயற்றிய உரையையும் நோக்
குக. ஆதலால் அவ்விரண்டு சொற்றொடர்கள் நம் அன்பர்

* செந்தமிழ்ச் செல்வி சிலம்பு க, உஉஉ-ம் பக்கம்

கொள்கைக்கு யாது பயனும் கொடா. சீர்மிகு சிறப்பினேன் என்ற கலித்தொகைச் செய்யுளில் காணப்படுகின்ற சீர்மிகு சிறப்பினோன் கைசேர்த்த நீர்மலிகரகம் போலபழந்தூங்கு முடத்தாழை யென்றதில்:—சீர்மிகு சிறப்பினோனது கையிலிருக்கும் நீர்மிகுந்தகரகம் ஒருகையிலுள்ள பொருள் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இவருக்கு எத்தனை கைகளுள, ஒருகையில் கரகமிருந்தால் மற்றையக் கைகளில் என்ன விருக்கின்றனவென்பதை இவர் அறிந்துகொள்ள வகைதேடினால்லர். கடவுளர்கட்கெல்லாம் நான்கு கைகளுண்டு என்பதே நமது நூல்களின் துணிபு. அது எவ்வகையானும் ஆகுக. அதையிங்கு ஆராயவேண்டாம். சீர்மிகுசிறப்பினேன் ஒற்றைக் கையனல்லன், இருகையுடையோனென்று கொள்வதே யாவருக்கும் இயைந்ததாகும். இவரது மற்றொருகை யென்ன கொண்டதென்றால் சின்முத்திரையாகிய ஞானமுத்திரையையே. ஆதலால் சீர்மிகு சிறப்பினேன் என்றபதம் தட்சிணமூர்த்திக்கடவுளையே குறித்து நின்றது. எமது கூற்றை மேற்காட்டிய கலித்தொகைச்செய்யுட் பகுதிக்குப் 'புகழ் மிகுகின்ற தலைமையினையுடைய தக்கணாமூர்த்தித்தேவர் தாமிருந்த ஆலமரத்தே' என உரைஆசிரியர் பொருள்கொண்டிருத்தலே வலியுறுத்தும். ஆகவே நம்மவர் முடிபின்படி (அவர் கலித்தொகையில் குறிப்பிட்ட தக்கணாமூர்த்தித் தேவர்) தமிழ்மறைமுதல்வர் என்பதற்குத்தக்க சான்று ஆகமாட்டார் என்பதே உறுதி. ஏனெனில் தட்சிணாமூர்த்தியாயெழுந்தருளிய சிவபிரான் சனகாதி முனிவர் நால்வராகிய பிரமபுத்திரர்கட்கே வேதமாதிய மொழிந்தாரென்று நமது இதிகாச புராணங்களெல்லாம் ஒரேமொழியாகக் கூறுவதாலும் அவைகளே இந்நாள்காறும் நிலை பெற்றிருப்பதாலும் நம்மவர் கூறுங் கற்பனைத்தமிழ் மறை இறந்து போயினவென்று அவரே கூறுதலானும் அறியக்கிடக்கின்றது. இதனாற் பெறப்படுவதும் தமிழ்நான் மறையென ஒருநூல் இருந்ததில்லை என்பதே. மற்றும் பழந்தமிழ்நூல்கள் யாவற்றுள்ளும் ஆலமர்கடவுள், ஆலமர்செல்வன், என்பவருக்குத் தமிழந்தணர்க்குரிய கமண்டலம் ஆதிய அடையாளங்களையே கூறுகின்றனவென்கின்றார். பழந்தமிழ் நூல்களுள் ஒன்றிலாவது தமிழ் அந்தணர் என்ற பதங்காண்பதில்லை. இவராவது அத்தகைய நூலையெடுத்துக் காட்டினவருமல்லர். தமிழ்நூல்களுக்கெல்லாம் ஆதிநூலாகிய தொல்காப்பியத்திலேயே அந்தணர், அரையர், வைசியர், வேளாளர் என மக்களை நான்குவகுப்பாய் வகுத்துக்காட்டி அந்தணர்க்குரிய அடையாளம் 'நூலே கரகம் முக்கோல் மணையே' என்றும் மற்றைமூவருக்கும் இவ்வடையாளங்களைக் கூறுதொழித்த

இந்த ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி உபநிடத மந்திரப் பொருள்களையே மேற்காட்டிய திருவிளையாடற் புராணச் செய்யுளுங் கொண்டிருப்பதையுமோர்க. ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத பண்டிதரவர்கள் அச்சிட்டு வெளியாக்கிய சிவஞான போத பாடியப் புத்தகத்தின் முன் பக்கத்தில் பண்டிதரவர்கள் இதற்கு எழுதிய உரை வருமாறு.

மெய்ஞ்ஞான போதமுத்திரை—தத்துவஞானத்தைப் போதிக்கும் முத்திரை—எனவே சின்முத்திரை யென்றதாம். தத்துவ ஞானத்தை முத்திரை போதித்தலாவது, இறைவன் முனிவர்க்குத் தத்துவங்களை யுரைத்து உரையிறந்த பொருளை யுணர்த்துழிச் சின் முத்திரைக் கையனாய்த்தானே யிருந்து காட்ட ஊமைத்தசும்புள் நீர்நிறைந்தாற்போல மாணாக்கர்க்கு ஆனந்தமயமான உள்ளொளி நிறைதலாம் என்பது; இறைவன் தமது கரங்களிற் கொண்ட சின் முத்திரையும், அமுத கும்பமும், ஒன்றுக்கொன்று சாதகமாயுள்ள பொருளைப் பயந்துகொண்டிருப்பதாகவும் திண்ணமாய்த் தெரிக்கின்றதே யொழிய, தக்ஷிணாமூர்த்தித் தேவர் அந்தணர்க்குள்ள அடையாளமாகிய கரகத்தைக் கைக்கொண்டிலர் என்பதே தேற்றம். பண்டைத் தமிழ் நூலோர், ஆலமர் கடவுளைத் தென்முகக் கடவுள் என்றும் விதந்து ஓதிற்றிலர், என்று நம்மவர் எழுதியிருக்கின்றார். பண்டைத் தமிழ் நூலோர்களில் முதன்மைபெற்ற சங்கப் புலவரும், "பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்" எனச் சுந்தரமூர்த்திகளால் துதிக்கப்பட்டவர்களில் ஒருவரும் தேவார காலத்திற்கு முற்பட்டவருமாகிய தெய்வத் தன்மை பொருந்திய நக்கீரதேவ நாயனார், அவர் அருளிய போற்றிக் கலிவெண்பாவில் "தொடுத்தமைத்த, நாண்மாலை கொண்டணிந்த நால்வர்க் கன்றானிழற் கீழ், வாண்மாலையாகும் வகையருளித், தோண்மாலை, விட்டிலங்கத் தெக்கணமே நோக்கி வியந்தருண, மெட்டிலங்க வைத்த விறல் போற்றி" என அருளியிருப்பதில் இறைவன் ஆல நிழலில் நால்வர்க்கு உபதேசித்த முறைமை தெற்கு நோக்கியிருந்தே உபதேசித்ததாகக் கூறுவதை அறிய வேண்டும். தாயுமான சுவாமிகளும் "வடநீழலூடுவளர் சனகனாதி முனிவோர்கடம், சொன்மயக்க மதுதீர வங்கைகொடு மோனஞானமதுணர்த்தியே......... தென்முகத்தின் முகமாயிருந்த கோலு மெம்முகத்திலும் வணங்குவேன்" என அருளியிருக்கும் அருண்மொழிகளாலும் உணரற்பாற்று. தேவாரத்தலைவர்கள் ஏன் அவ்வாறு கூறிற்றிலரோ வெனில் அவ்வாறு கூறுதல் அவர்கள் கொள்கையன்று. தக்கன்யாக மிறுத்தவர் வீரபத்திரக் கடவுள். திரிபுரமெரித்தவர் திரிபுரசம்மாரி, காலனை உதைத்தவர் காலசம்மார மூர்த்தி,

தட்சிணுமூர்த்தி, அச்சரித்திரங்களைத்
மதனை யெறித்தவர் தட்சிணுமூர்த்தி, அச்சரித்திரங்களைத்
வாரங்களிற் கூறுமிடங்களிலெல்லாம் சிவபிரான் மேற்றே
ர்ைகள். அதுபோலவே இஃதுவுமென வறிக.
ணுமூர்த்தி யென்பதற்குத் தெற்குக் கடவுளென்பதே
ர் பொருளாகத் தெரிகின்றது. மாணிக்கவாசகரும் தென்
டைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா
போற்றி யென்றுர். இவ்வாறு கூறினமையான் தென்னுட்
கடவுள் நால்வர்க்கும் மறை அருளிச் செய்தாரென்பது
க்கற்பாலது " என நம்மவர் எழுதியிருக்கின்றுர். தென்
டைய சிவனே போற்றி யென்றதனுல் மற்றைய மூன்று
ளினுமுள்ள நாடு அவரது அல்லவென்பது போதருமோ?
டைய மன்னே போற்றி யென்றுரே. மலையில்லாத
உலகத்திற் கிடையாதே. இதற்கென்ன சொல்வர். தென்
டைய சிவனே போற்றி யென்றது சிவபிரான் வடக்கின்
ள்ள கைலையினின்றும் எழுந்தருளிச் சோமசுந்திர பாண்டி
வீற்றிருந்து தென்னவனது நாட்டை அரசாண்டமையா
றியவேண்டும். இறைவனது ஐம்முகங்களின் ஒன்றுகிய
ரம் எனப்படும் தெற்கு நோக்கியமுகம் ஆன்மாக்களுக்கு
செய்து ஞானம் உணர்த்துவது. அதனு
க்கிரகத்தைச் செய்து ஞானம் உணர்த்துவது. அதனு
நம் சிவாலய முற்றிலும் சிவலிங்கப் பெருமான் எழுந்
ருளியிருக்கும் கர்ப்பக்கிரகமென்னும் ஆவாணத்திலேயே
தற்குமுகமாகத் தட்சிணுமூர்த்திக் கடவுளின் திருமேனி
மைக்கப்பட்டுளது. மாணிக்கவாசகருக்கும் மானுடச் சட்டை
த்தி எழுந்தருளிவந்த இறைவனும் தென்முகம் நோக்கி
ருந்தே ஞானுபதேசஞ் செய்ததைச் "செப்பிளமுலையாள்
ன் தென்திசை நோக்கி" எனவுந் திருவாதவூரர் புராணங்
றுகின்றது. அவ்வாறு ஞானுபதேசஞ் செய்த தலமாகிய
திருப்பெருந்துறை யென்னுந் தலத்தில்மற்றெந்தத் தலத்திலுங்
காணுதல் இல்லாதபடி இறைவனது மஹா சந்நிதானமும்
தெற்கு நோக்கியபடி அமைந்திருப்பதையும், இறைவன் தெற்கு
நோக்கியிருந்தே மாணிக்கவாசகருக்கு உபதேசித்த திருவுருவத்
தையும் இந்நாளும் யாவருங் காணலாம். இறைவன், பதஞ்சலி
வியாக்ரபாதருக்கும், தாருகாவன இருடிகட்கும், தென்முகம்
நோக்கியே நிருத்த தரிசனம் காட்டியருளியதும் நோக்குக. இக்
காரணங்களால் தட்சிணுமூர்த்தம் என்பது தென்முகம்
நோக்கிய கடவுளென்றே பொருள்படும்.

"சேமுஷீதக்ஷிணைப்ரோக்தாஸாயஸ்யா பீக்ஷணேமுகம்
தக்ஷிணைபிமுகஹப்ரோக்தஸ்ஸிவோ ஸவுபிரமவாதிபி:"

இதன் பொருள் தக்ஷிணை என்பது ஞானமென்று சொல்லப்படும். அது யாருடைய பார்வையில் முகமாயிருக்கின்றது, அதனால் இந்தச் சிவபிரான் பிரமவாதிகளால் தக்ஷிணாமுகமென்று சொல்லப்பட்டார். இதனைலும் தெற்குக் கடவுள் எனப் பொருள் கொள்வது பிழையேயாம்.

தமிழ் நாட்டில் தோன்றிய சைவ சித்தாந்த நூலாசிரியரும் ஏனைத் தமிழ்ப் புலவோர்களாகிய சைவமக்களும், மறை ஆரியத்திலே உண்டாயிருப்பதாகக் கூறிய செய்யுட்களாகிய பண்டைய தஸ்தாவேஜ் சாட்சியத்தின் முன்னர் நம்மவரது ஏகதேசமாகிய யூகிக்கற்பாலது என்னும் சாட்சியம் ஆன்றோர் அவையிற் செல்லவுமாட்டாது. நிலைபெறவுமாட்டாது.

சச. நிற்க, இனி நம்மவர் எழுதுவதாது. "அருணூல்"கள் யாவும் பிரணவ மந்திரத்தினின்று வெளிப்பட்டனவென்"பதைக் கருதுமிடத்துப் பிரணவ மந்திரம் ஆதியில் தமிழி"லிருந்ததாகத் தெரிவதால், அருள் நூல்களுந் தமிழிலேயே "யிருந்தனவென்று கருத இடமுண்டு." "அருணூல்கள் யாவும் "பிரணவ மந்திரத்தினின்று வெளிப்பட்டன வென்பதைக் "கருதுமிடத்துப் பிரணவ மந்திரம் ஆதியில் தமிழிலிருந்த"தாகத் தெரிவதால்" என்று எழுதினரே, எந்த அருணூல்களில் பிரணவ மந்திரம் ஆதியில் தமிழிலிருந்ததாகச் சொல்லுகின்றது; அதை யெடுத்துக் காட்டாத வீண்பேச்சு என்ன பிரயோஜனம். இவர் தேவாரப் பாக்களின் மூலபாடத்தைத் தங் கொள்கைக்கு இணங்கத் திருத்தியுந் திரிபான பொருள் கொண்டும் அவற்றிற்குப் பிரணவமெனப் பொருள் கொண்டு கூறியிருப்பவைகளெல்லாம் பொருத்தமற்றவை யெனப் பக்கம் ௩அ—௪0 வரை காட்டப்பட்டிருக்கின்றன. அருணூல்கள் என மேலே இவர் எழுதியிருப்பது கடலில் மறைபட்டுப்போன இவரது தமிழ் நான்மறைகளைக் குறிப்பவை யெனத் தெரிகின்றது. அந்தத் தமிழ் நான்மறைகள் பிரணவத்திலிருந்து வெளிப்பட்டன வென்பது எவ்வாறு இவர் கண்டு பிடித்தார். அந்தத் தமிழ் நான்மறைகளை ஒரு காலமுமிருந்ததில்லை யென ஏற்படும்போது அவைகளை ஈன்ற அன்னை ஒருத்தித் தமிழ் மகளாக இருந்தாளென்பதும் "ஒப்பிலா மலடி பெற்ற வொரு மகன் முயற்கொம்பேறித், தப்பிலா காயப்பூவைப் பறித்தமை சாற்றினரே" என்றதற்கினமாயதோர் வெற்றுரையே.

சரு. ஓம் என்ற பதத்தின் தாதுக்களைப் பற்றியும் அதன் பொருளைக்குறித்தும் நம்மவர் கூறுவதாவது. "ஓம் என்ற

சால்லிற்குப் பாதுகாத்தல் என்ற பகுதிப்பொருள் தமிழி
வுள்ளதென்பது அதனடியாகப் பிறந்த ஓம்பு என்பதன்
பொருள் அஃதாதலின் வைத்துணரப்படும். பிரணவத்
த்த அப்பொருளுண்மை வடமொழி கூர்மபுராணத்துட்
றப்பட்டுள்ளது. வடமொழியிலே ஓம் என்ற சொல் 'அவ'
ன்பதன் மரூஉ என்று கூறப்படுகின்றது. அது மொழி
ல் முறைக்கு முற்றும் முரணுகின்றது. ஓம் என்ற பகுதி
டியாகப் பிறந்த சொற்கள் யாவும், வடமொழியிலிருப்
வாகத் தெரியவில்லை. ஓம் என்பதற்கு முண்டகம் முத
ப உபநிடதங்கள் கூறும் வரிவடிவமும் தமிழிலேதான்
ணப்படுகின்றது. தமிழ் ஓங்காரமும் ஓங்கார தெய்வமு
கிய பிள்ளையாரது திருமுக அமைப்பும் ஒத்திருத்தல்
ண்க. உகரமும் அகரமும் முறையே வந்தவிடத்து
காரம் எழுதல் ஒலிநூல் விதிக்கு ஒத்தது. அஃதே தமிழி
ம் விதியாக உள்ளது. அகர உகரம் ஔகாரமாகும்.
து வடமொழியில் விதித்ததுபோல ஓகாரமாகுமென்ற
அது வடமொழியில் விதித்ததுபோல ஓகாரமாகுமென்ற
காள்ளுதல் ஒலிநூற்கு இயைந்ததில்லை. ஆதலாற் பிரண
த்தின் ஒலியமைப்பும் சத்தியெழுத்தை முதற் கண் வைக்
தும் தமிழர் வழக்குக்கு ஒத்ததாயில்லை'' என்றெழுதியிருக்
ன்றார். இவ்வாக்கியங்களின் பொருளை ஆராய்வாம். ஓம்
ன்ற தமிழ்ப்பதம் ஓம் என்ற சொல்லின் அடியாகப் பிறந்த
தம் என எங்குச்சொல்லியிருக்கின்றது. தமிழ் இலக்கண
லக்கிய நூல்களிலாவது, வழக்கிலாவது, அவ்வாறு கூறி
ருப்பதை இவர் காட்ட வேண்டும். அவ்வாறில்லை யென்
த திண்ணம். ஓமல் என்ற வொரு தமிழ் மொழியுண்டே,
து எதனடியாகப் பிறந்தது? வடமொழி கூர்மபுராணம்,
டமொழிக்குப் பொருள் கூறுமேயல்லது, தமிழ் மொழிக்குப்
பொருள் கூறிற்று எனக்கொள்வது பிறழ்வுற்ற உணர்ச்சி.
இவர் காட்டாது விடுத்த வடமொழிக் கூர்மபுராண சுலோக

மாவது,

ஹாஸ்வ-ஸ்ய ஹாணாதிஹா-ஹாஷ-ஹவ்யக்த।
மவாநுவ-விஜ்ஞாநாவநாதோமிவஸ்ய-தஃ॥

"ஹரஸ் ஸர்வஸ்ய ஹரணத் விபுத்வாத் விஷ்ணுருச்யதே।
பகவாந் ஸர்வவிஜ்ஞாநாதவநாதோ மிதீஸ்மருத:॥"

இதன் பொருள், அனைத்தையுஞ் சங்கரிப்பவராதலின் ஹரன்
என்றும், வியாபகராதலின் விஷ்ணு என்றும், சர்வஞ்ஞராதலின்
பகவானென்றும், காப்பவராதலின் ஓம் என்றும், இங்ஙனம்
சிவபெருமானுக்குப் பேர்தனை என்பது. இவ்வகையால் ஓம்
எனும் பதம் எடுத்துக்கொள்ளுதல் எனும் பொருள்......

ஹரீருஞ், என்னுந்தாதுவினிடமிருந்தும், விஷ்ணு என்னும் பதம் உலகெலாம் வியாபகமாயுள்ள என்னும் பொருளைத்தரும், விஸ்வம் வியாப்நோதி, என்ற பதத்திலிருந்தும், ஓம் என்றபதம் காப்பாற்றுகிறது என்னும் பொருளைத்தரும் அவ என்ற தாதுவினிடமிருந்தும், பிறந்ததாக வடமொழி வியாகரணநூல் கூறுவதாகத் தெரிகிறது. ஓம்பு என்ற தமிழ்ப்பதத்திற்கு ஓம்பு எனுந்தமிழ்ச் சொல்லே ஆதியாய் நின்று, ஓம்புகிறேன் ஓம்பினேன், ஓம்புவேன், ஓம்பல், ஓம்புதல் என வரும் தமிழ் மொழிகளுக்கெல்லாம் பகுதியாய் நிற்பதால் ஓம் என்ற மொழிக்கும் ஓம்பு என்ற மொழிக்குஞ் சம்பந்தமில்லை யென்பது தெளிவு. "வடமொழியிலே ஓம் என்ற சொல் 'அவ' என்றதன்மரூஉ "என்று கூறப்படுகின்றது. அது மொழி நூன்முறைக்கு "முற்றும் முரணுகின்றது. ஓம் என்ற பகுதியினடியாகப் 'பிறந்த யாவும் வடமொழியிலிருப்பனவாகத் தெரியவில்லை" என நம்மவர் எழுதினரே, அது எம்மட்டும் பொருந்துமென்பதை ஆராய்வாம். ஓம் என்ற சொல் 'அவ' என்பதன் மரூஉ அல்ல. ஓம் என்ற சொல், இரட்சணார்த்தத்திலுள்ள 'அவ'* என்ற தாதுவடியாகப் பிறந்தது. மரூஉ என்ற மொழியும், தாது என்ற பதமும் ஒரேபொருளைத்தருவனவல்ல. மரூஉ என்பது ஒருசொல் மற்றொரு சொல்லாக இடையில் எழுத்துக்கள் மாறி வழங்குவது. அது தமிழ் இலக்கண வழக்கியல் முறை. அருமருந்தன்ன, மரவடி என்ற மொழிகள் முறையே அருமாந்த, மராடி என மருவினவைபோல, தாது என்பது வடமொழி இலக்கண முறைப்படி ஒரு பதத்துக்குப் பொருள் இன்னதெனச் சொல்வதற்கு ஆதிகாரணமாய் நிற்பது. இரண்டற்குமுள்ள பேதத்தை யறியாது 'ஓம் என்ற சொல் வடமொழியிலே 'அவ' என்றதன் மரூஉ எனக் கூறப்படுகின்றது' என நம்மவர் எழுதியது உண்மைபயப்பனவல்ல. நிற்க, மொழி நூல் முறைக்கு முரணுகின்றது என்றார். மொழிநூல் என்பதியாது? எப்போழ்தி யாரால் உண்டாக்கப்பட்டது? அந்த நூலை எதற்காக அந்நூலாசிரியர் எழுதினர்? என்பனவற்றை விசாரிக்குமிடத்துச் சில வருடங்கட்கு முன்னர் சைதாப்பேட்டையிலிருந்த திருவாளர் மாகறல் கார்த்திகேய முதலியாரென்பவர் தமிழ் மொழியே ஆதியாயுள்ளது. அதனிடமிருந்து வடமொழிஉண்டாயது எனும் ஒரு நவீனக்கொள்கையைத்தாபிக்க எழுதியநூல் அஃது எனத்தெரியவருகின்றது. "ஆரியமுந்தமிழும் உடனே சொல்லி;" "இரு மொழிக்குங் கண்ணுதலார் முதற் குரவர்" என்னும் நமது ஆப்த் வாக்கியங்களுக்கு அம்

---

* அவ் என்பது தாது வாகவுஞ் சொல்லப்படுகின்றது.

மொழி நூல் முற்றும் முரணாதலால் அதை நம் சைவமக்கள்
லரும் அங்கீகாரஞ் செய்யார். ஓம் என்றது பகுதியாயிருந்
ாலல்லவா அதனிடமாக மற்றும் வடமொழியிற் சொற்கள்
றக்கும். ஓம் என்பதே முற்றுச்சொல், அதற்குத் தாது அவ
ன்பது. அந்த அவ என்ற தாதுவிலிருந்து மற்றுஞ் சொற்
ள் வடமொழியிலுள. 'அவநாத்' என்று மேற் சுலோகத்
திலே உள்ள மொழியினாலேயே அறியலாம். தமிழ்ப்பதமாகிய
ஓம்பு என்றதற்கு ஓம்பு என்பதே பகுதியாதலால் அதனடியாக
மேலே காட்டியபடி தமிழ்ச் சொற்கள் பிறந்திருக்கின்றன.
இனி அவ என்பது ஓம் என ஆயதற்கு வடமொழி வியாகர
ணம் வருமாறு.

“அவதேஷ்டி லோபஸ்ச” இரக்ஷணார்த்தத்திலுள்ள
“என்னும் உணாதி சூத்திரத்தாலே மந் பிரத்தியயஞ்செய்து அந்தப்
“அவ என்னுந் தாதுவுக்கு உலோபஞ் செய்தலால்,
“பிரத்தியயத்து அந் என்னும் டிக்கு ஜ்வரத்வரஸ் ரிவ்யவிமவா முபதா
“அது அவ+ம் என நிற்க, “ஜ்வரத்வரஸ் ரிவ்யவிமவா முபதா” என்னுஞ் சூத்திரத்தினாலே, “அவ”
“யாஸ்ச (பா. வி ௬, ௪, ௨0) என்னுஞ் சூத்திரத்தினாலே, வகாரத்திற்கும் தனித்
“என்னும் தாதுவிலுள்ள அகாரத்திற்கும் (ஊ+ஊ+ம்) என நிற்குங்கால்
“தனி ஊகாரம் செய்ய, அது (பா, வி, ௬, ௧, ௧0௧) என்னும்
“அகஸ்ஸவர்ணே தீர்க்க:” ஊம் என நின்று” ஸார்வதாது கார்த்த
“சூத்திரத்தால் அது (பா, வி ௭, ௩, ௮௬) என்னும் சூத்திரத்தினால்
தாதுகயோ: என முடிந்தது” என, அவ எனும் தாது, ஓம்
குணமாகி ஓம் சிவபெருமானால் வடமொழிக்கு
என்ற சொல்லாயதற்குச் பெற்ற பாணினி மஹா இருடியின்
இலக்கணமுபதேசிக்கப் விதிகளைக்காட்டி நீலகண்ட
வடமொழி இலக்கணச் சூத்திர எழுதப்பட்டிருக்கின்றது.
பாஷியத்திலே காரணம்

௪௬. தவிர “ஓம் என்பதற்கு முண்டக முதலிய உப
நிடதங்கள் கூறும் வரிவடிவமும் தமிழிலேதான் காணப்படுகின்
றது” என வெழுதினார். முண்டகோபநிடத்தில் நம்மவர்
தமக்கு ஆதாரமாகக் கருதிய மந்திரமாவது

“ப்ரணவோ தநு: ஶரோ ஹ்யாத்மா ப்ரஹ்ம தல்லக்ஷ்யமுச்யதே ।
அப்ரமத்தேந வேத்தவ்யம் ஶரவத் தந்மயோ பவேத் ॥” என்னும் மந்திரமேயாம்.

“ப்ரணவோ தநுஸ்ஸரோ ஹ்யாத்மா ப்ரம தல்லக்ஷ்யமுச்சதே |
அப்ரமத்தேநவேத்தவ்யம் ||”

இது, முண்டகோபநிடத்தில் இரண்டாவது முண்டகம்.
இரண்டாவது கண்டம், ௪-வது மந்திரமாகவுள்ளது. இதில்

'ப்ராணவோதநு' என்று வருவதால் நம்மவர் பிரணவத்தின் வரிவடிவம் குறிப்பிட்டதாகக் கருதினர். அவ்வாறாயின் 'சரோஷ்யாத்மா' என்று வருவதில் உயிர் அம்பு என்று கூறப் பட்டிருப்பதால் நம்மவர் உயிருக்கும் வடிவம் உண்டென்று கூறுவார்போலும். அன்றியும் இம்மந்திரத்திற்கு முன் மந்திரத்தில் 'யநமஹ்-ஷலிகலாவலிஷஷ' என்று வருவதால் உபநிஷதத்திற்கு வரிவடிவங் கூறப்பட்டதென்று கூற முற்படுவார்போலும்.

முற்கூறப்பட்ட 'பிரணவோதநு' என்று தொடங்கும் மந்திரத்தின் பொருளாவது :-பிரணவம் தனுசு, ஆத்மாபாணம், பிரமம் லக்ஷ்யம், பிரமாதமில்லாதவனால் அக்குறி அடிக்கப் படட்டும்' என்பது, . இதனாற் பெறப்பட்டது. பிரணவ சாதனத்தால் ஆன்மா பிரமமாகிய சிவபிரானை அடையவேண்டுமென்பதே. இதன் பொருள் நம் நண்பர் இம்மந்திரத்தின் பொருளை நன்கு நோக்கி யெழுதாது ஏதேதோ கூறினர். அது பொருந்தாதென்பதனை வேத பண்டிதர்கள் நன்குணர்வர். இம்மந்திரம் சிவபிரானையடைய பிரணவத்தை யுச்சரிக்க வேண்டுமென்று கூற எழுந்ததேயொழிய யாதாமொரு பாஷை யெழுத்தின் வரிவடிவத்தைக் கூற எழுந்ததன்று.

பின்னும் " தமிழ் ஓங்காரமும் ஓங்கார தெய்வமாகிய பிள்ளையாரது திருமுக அமைப்பும் ஒத்திருத்தல் காண்க" என்றும் எழுதினர். தமிழ் ஓங்காரதெய்வம் பிள்ளையார் என்றதற்குப் பிரமாணங் காட்டிலர். தமிழ் ஓங்காரமெனவே வடமொழி ஓங்காரம் வேறு என்றும், தமிழ் ஓங்கார தெய்வமாகிய பிள்ளையாரெனவே வடமொழி ஓங்கார தெய்வமாகிய பிள்ளையார் வேறு என்றும் பெறப்படும். இவரது கொள்கை நகைப் புக்கிடமாயதே. தமிழ் ஓங்கார தெய்வமாகிய பிள்ளையாரது தோற்றமாகிய எத்தமிழ் நூலிற் கூறியிருக்கின்றது? ஏன் அதை யெடுத்துக்காட்டாது விடுத்தார்? ஓங்காரத்தின் கடவுள் சிவபெருமானே என்பதற்கு மேற்காட்டிய கூர்மபுராண சுலோகமே சான்று. வேதம், உபநிடதங்கள், வேத்தாப பிருங்கணங்கள், அவற்றின் வழியாய தமிழ்நூல்கள், எல்லாமும் அவ்வாறே கூறுகின்றன. இவ்வாராய்ச்சி இனியும் மிகவிரியுமாதலால் அதற்குச்சான்றாகிய பலமேற்கோள்கள் இங்குக்காட்டப்பட வில்லை. விநாயகக்கடவுள் சிவபிரானது மூத்த பிள்ளையாராக தவிழுற்றமது தந்தையார் பிரணவசொருப், எனக்காட்டிக் கொண்டு, அவரும் எழுந்தருளினர். விநாயக மூர்த்தியின் தோற்றச்சரிதமாவது :— கைலையங்கிரியின் ஓர் பக்கத்தில் ஒரு மண்டபத்தின் சுவரில் பிரணவத்தைப் பொறித்திருந்த

தாயும், ஒரு காலத்தில் [illegible] ஆர்மையும் அங்குச்,
சென்று ஆப்பிரமா[illegible] எழுத்துக்களை[illegible]போது அது
சிவபிரான் ஆணையால் [illegible] பரிணமித்து
பாணினி முதற்கட்டவுளைத் [illegible] வடமொழி கந்தபுராணமும்
அதன் தமிழ்மொழி பெயர்ப்பும் கூறும். இச்சரித்திரத்தை
வற்புறுத்தியே.

“பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே.”

என நமது தமிழ்மறையுங் கூறும்;

இவ்வாராய்ச்சியால், ஓ வென்ற தமிழ் எழுத்தின்வரி வடிவம் வடமொழி பாடத்திற் கூறப் பட்டிருப்பதாயும், தமிழ் ஓங்காரத் தெய்வம் பிள்ளையார்களையுங் கூறும் இவர்கூற்றும் சற்றும் ஆதாரமற்றதெனத் தெள்ளிதாய் விளங்கும். பிரணவ விடயமாய் நம்மவர் எழுதியிருப்பதை மேலே காட்டி யிருக்கின்றோம். அதிற்கண்ட மற்றொரு பகுதியாவது. “உகர “மும் அகரமும் முறையே வந்தணைந்து ஓகாரம் எழுதல் ஒலி “நூல் விதிக்கு ஒத்தது. அஃதே தமிழிலும் விதியாகவுள் “ளது. அகர உகர ஒளகாரமாகும். அது வடமொழியில் “விதித்ததுபோல ஓகாரமாகுமென்று கொள்ளுதல் ஒலிநூற்கு “இயைந்ததில்லை. ஆதலாற் பிரணவத்தின் ஒலியமைப்பும் “சத்தியெழுத்தை முதலில் வைக்கும் தமிழர் வழக்குக்கு “ஒத்ததாயில்லை” என்பது; இவற்றை ஆராய்வாம்.

ஒலிநூலுடையார்க்கு எழுத்துக்கள் சுத்த மாயாகாரிய மென்பது உடன்பாடன்மையின் சுத்த மாயையினின்றும் விருத்தியாகி அகார உகார மகார விந்துநாத ரூபமாகிய சூக்கும பஞ்சாக்கரங்களின் சமட்டி ரூபமாகிய பிரணவத் தோற்றத்துக்கு ஒலிநூலைப் பிரமாணமாகக் கோடல் சைவ சித்திகளாயினோர்க்கு அடாத செய்கையாம். உகரமும் அகரமுஞ் சேர்ந்து ஓகாரமாகுமெனத் தொல்காப்பிய முதலிய இலக்கண நூல்கள் கூறுகின்றனவா? அல்லது சைவ சித்தாந்த நூல்கள் கூறுகின்றனவா? அகார உகார மகார விந்துநாதங்களே பிரணவமென்றும் அவற்றிற்குப் பிரமன் முதலியோர் அதி தெய்வங்களென்றும் சித்தாந்த சைவத் தமிழ்ப் பெருங் குரவராகிய மெய்கண்ட தேவர் அகாரத்தையே முதலில் வைத்தாரே!! அகர உகரங்கள் மாத்திரையே ஒளகாரமாகுமென்றும் அது போலி எழுத்தென்றும், அது கொள்ளற்கவென்றுங் கூறிய நச்சினார்க்கினியருரையையும் இலக்கண விளக்க வுரை

'ப்ரணவோதநு' என்று வருவதால் நம்மவர் பிரணவத்தின் வரிவடிவம் குறிப்பிட்டதாகக் கருதினர். அவ்வாறயின் 'சரோஹ்யாத்மா' என்று வருவதில் உயிர் அம்பு என்று கூறப் பட்டிருப்பதால் நம்மவர் உயிருக்கும் வடிவம் உண்டென்று கூறுவார்போலும். அன்றியும் இம்மந்திரத்திற்கு முன் மந் திரத்தில் 'யநாலுஜ்லிஹீக்ஷளவநிஷஉு' என்று வருவதால் உபநிஷதத்திற்கு வரிவடிவங் கூறப்பட்டதென்று கூற முற்படு வார்போலும்.

முற்கூறப்பட்ட 'பிரணவோதநு' என்று தொடங்கும் மந்திரத்தின் பொருளாவது:-பிரணவம் தனுசு, ஆத்மாபாணம், பிரம்மம் லக்ஷ்யம், பிரமாதமில்லாதவனால் அக்குறி அடிக்கப் படட்டும்' என்பது, இதனாற் பெறப்பட்டது. பிரணவ சாத னத்தால் ஆன்மா பிரமமாகிய சிவபிரானை அடையவேண்டு மென்பதே. இதன் பொருள் நம் நண்பர் இம்மந்திரத்தின் பொருளை நன்கு நோக்கி யெழுதாது ஏதேதோ கூறினர். அது பொருந்தாதென்பதனை வேத பண்டிதர்கள் நன்குணர்வர். இம்மந்திரம் சிவபிரானையடைய பிரணவத்தை யுச்சரிக்க வேண்டுமென்று கூற எழுந்ததேயொழிய யாதாமொரு பாஷை யெழுத்தின் வரிவடிவத்தைக் கூற எழுந்ததன்று.

பின்னும் "தமிழ் ஓங்காரமும் ஓங்கார தெய்வமாகிய பிள்ளையாரது திருமுக அமைப்பும் ஒத்திருத்தல் காண்க" என்றும் எழுதினர். தமிழ் ஓங்காரதெய்வம் பிள்ளையார் என்றதற்குப் பிரமாணங் காட்டிலர். தமிழ்ஓங்காரமெனவே வட மொழி ஓங்காரம் வேறு என்றும், தமிழ் ஓங்கார தெய்வமாகிய பிள்ளையாரெனவே வடமொழி ஓங்கார தெய்வமாகிய பிள்ளை யார் வேறு என்றும் பெறப்படும். இவரது கொள்கை நகைப் புக்கிடமாயதே. தமிழ் ஓங்கார தெய்வமாகிய பிள்ளையாரது தோற்றமாதிய எத்தமிழ் நூலிற் கூறியிருக்கின்றது? ஏன் அதை யெடுத்துக்காட்டாது விடுத்தார்? ஓங்காரத்தின் கடவுள் சிவபெருமானே என்பதற்கு மேற்காட்டிய கூர்மபுராண சுலோ கமே சான்று. வேதம், உபநிடதங்கள், வேதோப பிருங்கணங் கள், அவற்றின்வழியாய தமிழ்நூல்கள், எல்லாமும் அவ்வாறே கூறுகின்றன. இவ்வாராய்ச்சி இனியும் மிகவிரியுமாதலால் அதற்குச்சான்றாகிய பலமேற்கோள்கள் இங்குக்காட்டப்பட வில்லை. விநாயகக்கடவுள் சிவபிரானது மூத்த பிள்ளையாரா தலினாற்றமது தந்தையார் பிரணவசொருபி, எனக்காட்டிக் கொண்டு, அவரும் எழுந்தருளினர். விநாயக மூர்த்தியின் தோற்றச்சரிதமாவது:— கைலையங்கிரியின் ஓர் பக்கத்தில் ஒரு மண்டபத்தின் சுவரில் பிரணவத்தைப் பொறித்திருந்த

...யும், ஒரு காலத்தில் நம் அப்பனும் அம்மையும் அங்குச் சென்று அப்பிரணவ எழுத்தைக்கண்ணுற்றபோது அது ...பிரான் ஆணையால் இரண்டு யானைகளாகப்பரிணமித்து ...ணமுகக்கடவுளைத்தந்ததாகவும் வடமொழி கந்தபுராணமும் அதன் தமிழ்மொழி பெயர்ப்பும் கூறும். இச்சரித்திரத்தை ...ப்புறுத்தியே.

"பிடியதனுருவுமை கொளமிகு கரியது
வடிகொடுதன தடிவழிபடுமவரிடர்
கடிகணபதி வரவருளினன் மிகு கொடை
வடிவினர் பயில் வலிவல முறையிறையே. "

என நமது தமிழ்மறையும் கூறும்:—

இவ்வாராய்ச்சியால், ஓ வென்ற தமிழ் எழுத்தின் வரி வடிவம் வடமொழி உபநிடதத்திற் கூறப் பட்டிருப்பதாயும், தமிழ் ஓங்காரதெய்வம் பிள்ளையாரெனவும் கூறும் இவர்கூற்றும் சற்றும் ஆதாரவற்றதே யெனத் தெள்ளிதாய் விளங்கும். பிரணவ விடயமாய் நம்மவர் எழுதியிருப்பதை மேலே காட்டி யிருக்கின்றோம். அதிற்கண்ட மற்றொரு பகுதியாவது. "உகர "மும் அகரமும் முறையே வந்தவிடத்து ஓகாரம் எழுதல் ஒலி "நூல் விதிக்கு ஒத்தது. அஃதே தமிழினும் விதியாகவுள் "ளது. அகர உகர ஔகாரமாகும். அது வடமொழியில் "விதித்ததுபோல ஓகாரமாகுமென்று கொள்ளுதல் ஒலிநூற்கு "இயைந்ததில்லை. ஆதலாற் பிரணவத்தின் ஒலியமைப்பும் "சத்தியெழுத்தை முதலில் வைக்கும் தமிழர் வழக்குக்கு "ஒத்ததாயில்லை" என்பது; இவற்றை ஆராய்வாம்.

ஒலிநூலுடையார்க்கு எழுத்துக்கள் சுத்த மாயாகாரிய மென்பது உடன்பாடன்மையின் சுத்த மாயையினின்றும் விருத்தியாகி அகார உகார மகார விந்துநாத ரூபமாகிய சூக் கும பஞ்சாக்கரங்களின் சமட்டி ரூபமாகிய பிரணவத் தோற் றத்துக்கு ஒலிநூலைப் பிரமாணமாகக் கோடல் சைவ சித்தாந் தியினருக்கு அடாத செய்கையாம். உகரமும் அகரமுஞ் சேர்ந்து ஓகாரமாகுமெனத் தொல்காப்பிய முதலிய இலக்கண நூல்கள் கூறுகின்றனவா? அல்லது சைவ சித்தாந்த நூல்கள் கூறுகின்றனவா? அகார உகார மகார விந்துநாதங்களை பிரணவமென்றும் அவற்றிற்குப் பிரமன் முதலியோர் அதி தெய்வங்களென்றும் சித்தாந்த சைவத் தமிழ்ப் பெருங் குரவ ராகிய மெய்கண்ட தேவர் அகாரத்தையே முதலில் வைத் தாரே!! அகர உகரங்கள் மாத்திரையே ஔகாரமாகுமென்றும் அது போலி எழுத்தென்றும், அது கொள்ளற்கவென்றுங் கூறிய நச்சினார்க்கினியருரையையும் இலக்கண விளக்க வுரை

யையும் நன்னூல் விருத்தியிலும் தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தியினும் தக்க நியாயவாயிலாகக் கண்டித்தொழித்திருப் பதையும் நோக்காது அகர உகரம் ஔகாரமாகுமென்று பிணங்குவதென்னையோ? உகர அகரங்கள் ஓகாரமாகுமென்று எந்தத்தமிழ் நூல் கூறிற்று? ஓகாரமே ஓகாரமாய்ப் பிரணவ மாயிற்றென்று எந்தச்சமய நூல் கூறுகின்றது? அத்தமிழ் ஓகரப் பிரணவத்தின் சமஷ்டி வியஷ்டி எழுத்துக்களும் அவை யிற்றின் அதி தெய்வங்களும் முறையும் எந்தச் சமய நூல் விளந்து உரைக்கின்றதோ? ஒரு நூலேயேனு மெடுத்துக் காட்டாது விடுத்ததென்னையோ? இன்னமும், 'தத்துவப்பிரகாசம்' என்னுஞ் சைவசித்தாந்த நூல், உ௯-வது செய்யுளின் பகுதியில், "வன்னமுதலா, நந்துபரா சத்தியானுத விந்துத் தோன்றி நாதத்தே மூன்று சுடர் நடந்ததான்" எனக் கூறியிருக்கின்றபடி, யெல்லா வெழுத்துக்களும் பராசத்தியின் சூக்கும ரூபம் தூலரூபமெனப்படும். அகாரம் நாதமாத்திரை யானுகி வாயங் காத்தல் மாத்திரத்தானே இயல்பிற் பிறத்த லால் அகரம் இருமொழிகளினும் எழுத்துக்கள் எல்லாவற்றிற் கும் முதலாக விளங்கி நிற்கின்றது. ஆதலாலும் அ, உ என்று சொல்வதே முறை. அ, உ என்ற எழுத்துக்கள் இருமொழி கட்கும் பொதுவாயிருப்பதில் எம் மொழியைக் கொள்ள வேண்டுமென்றாராயுமிடத்து, மேற்காட்டிய செய்யுளில் பரா சத்தியினிடமாகப் பிரணவந் தோன்றி அதனின்றும் உயி ரெழுத்துப் பதினாறும் மெய்யெழுத்து முப்பத்தைந்தும் தோன்றினவென்று சொல்வதனால், இவ்வெழுத்துக்கள் ஐம்பத் தொன்றும் வடமொழி யெழுத்துக்களென்பதே தெளிவு. இவ் வடமொழி யெழுத்துக்கள் ஐம்பத்தொன்றுமே நஞ்சமயக் கொள்கைக்கு ஆன்மார்த்தத்திலும் பரார்த்தத்திலு மெடுத் தாளப்பட்டிருக்கின்றன. தமிழெழுத்துக்களுக்கு இவ்வாறு காரணகாரியங் கற்பிக்கப்பட்டிருக்கவில்லை. இது விஷயம் விரிக் கிற் பெருகும். சத்தி யெழுத்தை முதலில் வைப்பது தமிழர் வழக்கு என்றார். எழுத்துக்கள் எல்லாமே பராசத்தியின் ரூப மென மேற்காட்டிய தமிழர் இயற்றிய நூல் நன்கு தெரிக்கின் றது. பஞ்சாட்சரத்தின் முதலெழுத்து சத்தி யெழுத்தா? சத்தி யெழுத்தைப் பின்னாலல்லவா அமைத்திருக்கின்றது. நம் பொய்யா மொழியாரும் அகர முதல வெழுத்தெல்லாம் என்றாரே யல்லது உகர முதல வெழுத்தெல்லாமெனக் கூறினு ரல்லர். ஆதலால் அ, உ என்ற வடமொழி யெழுத்துக்களே பிரணவத்தின் முதலெழுத்தாகிய ஓ என ஆயிற்றென்பதே ஒரு தலை. இவ்வாராய்ச்சியாலும் பிரணவம் எப்பாஷை மொழி யென்பதை அறிஞர் அறிந்துகொள்வர்.

௪௭. நிற்க:— பின்னும் நம் நண்பர் எழுதுவதாவது, "...ற்பிரமாணங் கருதுவார் "கொன்றைச் சடையார்க்கு ...றைத் தெரியக் கொஞ்சித் தமிழாற் பகர்வோனே" என்ற ...நப்புகழை நோக்குக. "ஆரிய தமிழ்தானளித்த மயில்வீர" ...ன்று தனக்கு உபதேசஞ் செய்த மந்திரத்தைத் தமிழென ...ருணகிரி நாதர் கூறியதுங் காண்க" என்று எழுதியிருக் ...ன்றார்.

திருப்புகழினின்றும் மேற்காட்டிய இரண்டு வாக்கியங் ...ளைக் காட்டி, நோக்குக, காண்க, வெனவெழுதினாரேயொழிய ...வ்வாக்கியங்களாற் றமக்கு இன்னபடி சாதகமென வெழுதிக் ...ட்டினாரில்லை. முதன் மேற்கோளில் "ஒன்றைக் கொஞ்சித் ...மிழாற் பகர்வோனே" என்றருளியிருப்பதில், ஒன்று, என்றது ...ரணவத்தை. திருக்கைலையில் வழங்கும் இரு மொழிகளுள் ...மிழ் மொழியாற் பிரணவத்தின் பொருளைச் சிவபெருமா ...க்கு முருகக் கடவுள் கூறினாரென்பதே அதன் பொருள். ...ரணவம் தமிழ் என்று இம்மேற்கோளிற் கூறியிருக்கவில்லை. ...ரணவத்தின் பொருளைத் தமிழாற் கூறினாரெனவே பிரணவம் ...மிழல்ல வென்பதுதானே பெறப்படும். மற்றொரு வகையில்; ...கொஞ்சித் தமிழாற் பகர்வோனே யென்றால் தமிழ் என்றது ...மென்மையை; அது தமிழ் தழீஇய சாயல ளென்பதானு ...முணர்க. ஈண்டு மென்மை யென்றது பிறர் செவிக்குக் கேட்க ...உரத்துச் சொல்லாது சிவபெருமான் திருச்செவிக்கு மாத்திரங் கேட்ப மந்தணமாகச் சொல்லுதலென்னும் பொருண்மேற்று. பிரணவம் வடமொழியே என்பதனைத் திருப்புகழினின்றே வெள்ளிடைமலைபோற்காட்டுதும். "திருக்கஞ்சத்தனைக் கண்டித் துறக்கங் குட்டிவிட்டுஞ் சற்சிவற்கன்று, அப்பொருட் கொஞ் சிப் பகர்வோனே." என்னுந் திருப்புகழ்ச் செய்யுளின் பகுதி யால், பிரமன் பிரணவப் பொருளைச் சொல்லமாட்டாமையால், அவனைச் சிரசில் குட்டிச் சிறையில் விடுத்துச் சிவபெருமா னுக்கு அப்பொருளைப் பகர்ந்தவர் சுப்பிரமணியர், என்பது பொருள்படுகின்றது. இச்சரித்திரம் எங்கு விளங்குகின்றது என்றால் கந்தபுராணத்துட் காணப்படுகின்றது. அச்சரித்திரம் கூறும் செய்யுட்களாவன. கந்தமூர்த்தி பாலப்பருவத்தராகிக், கைலையங்கிரியின் ஓர் பக்கம் வீற்றிருந்த நாட்களில் ஒரு நாள்

"அங்கண் வைகுமுருக னம்பனடி வணங்கிவந்திடும்
புங்கவர்க் குளாதியாய போதனை நோக்குறா
விங்குநம்முன் வருதியாலெனா விளிப்ப வேகியே
பங்கயாசனத்திறைவன் பணிந்திடாது தொழுதலும்"

"ஆதிதேவனருளு மைந்தனவ னுளத்தை நோக்கியே
போதனே யிருக்கெனப் புகன்றிருத்தி வைகலு

மேதுநீ புரிந்திடு மியற்கையென்ன நான்முக
னுதனுனை யாலனைத்து நான்படைப்ப னென்றனன்"

"முருகவேளது கேட்டலு முறுவல் செய்தருளித்
தரணிவானுயிர் முழுவதுந் தருதியே யென்னிற்
சுருதியாவையும் போகுமோ மொழிகெனத் தொல்சீர்ப்
பிரம னென்பவ னித்திறம் பேசுதலுற்றான்"

"ஐய கேளினை யாதிகாலந் தனிலளித்த
மையுலா வருகளத்தின னளப்பிலா மறைகள்
செய்யவாகமம் பற்பல புரிந்ததிற் சிலயா
னுய்யுமா றருள்செய் தனனவை யுணர்ந்துடையேன்"

"என்றுநான்முக னிசைத்தலு மவற்றினு ளிருக்கா
மொன்று நீவிளம்புதியென முருக வேளுரைப்ப
நன்றெனுமறை யெவற்றிற்கு மாதியின வில்வா
னின்றதோர் தனிமொழியை முன்னோதின னெறியால்"

"தாமரைத் தலையிருந்தவன் குடிலைமுன் சாற்றி
மாமறைத் தலையெடுத்தனன் பகர்தலும் வரம்பில்
காமர் பெற்றுடைக்கு மரவேணிற்றி முன்கழறு
மோமெனப்படு மொழிப்பொரு ளியம்பு கென்றுரைத்தான்."

"முகத்தி லொன்றதா வவ்வெழுத்துடைய தோர்முருக
னகைத்துமுன் னெழுத்தினுக்குரை பொருளென நவில
மிகைத்தகண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித்
திகைத் திருந்தனன் கண்டிலனப் பொருட்டிறனே"

"தூமறைக்கெலா மாதியு மந்தமுஞ் சொல்லு
மோமெனப்படு மோரெழுத் துண்மையை யுணரான்
மாமலர்ப் பெருங்கடவுளு மயங்கினு னென்று
மாமினிச்சில வறிந்தன மென்பது நகையே"

"எட்டொணுதவக் குடிலையிற் பயனினைத் தென்றே
கட்டுரைத்திலன் மயங்கலு மிதன்பொருள் கருதாய்
சிட்டிசெய்வதித் தன்மையதோ வெனுச் செவ்வேள்
குட்டினனய னன்கு மாமுடிகளுங் குலுங்க"

"மறைபுரிந்திடுஞ் சிவனருண் மதலைமா மலர்மே
லுறைபுரிந்தவன் வீழ்தரப் பதத்தினு லுதைத்து
நிறைபுரிந்திடு பரிசனரைக் கொடே நிகளச்
சிறைபுரிந் திடுவித்தனன் கந்தமாஞ் சிலம்பில்"

பிரமதேவனை உனக்கு வேதம் வருமோவென்று முருகப்பிரான் கேட்க, சில தெரியுமென்று பிரமன் சொல்ல, ஒரு ருக்கு சொல் என்று முருகவேள் கட்டளையிட வேதஞ் சொல்வதற்கு முன்னர் பிரணவத்தைச் சொல்லவேண்டு மெனும் விதிப்படி, முதலில் பிரணவத்தைப் பிரமன் ஓதியதும், அதற்குப் பொருள் முருகப்பிரான் கேட்டருளப், பிரமன் அஃதறிந்திலனுதலால்

சொல்ல இயலாதவனானான். முருகப்பிரான் கோபங்கொண்டு
வன் சிரங்களிற் குட்டியும் அவனைச் சிறையிலுமிடுவித்தார்
ன்பதே மேற்செய்யுட்களின் கருத்து. பிறகு சிவபெருமான்
ழுந்தருளிவந்து பிரமனைச் சிறையினின்று விடுவித்து அன்
ன் மிகுதியால் குமரக்கடவுளிடம் பிரணவத்தின் பொருளைக்
கேட்டு ஆனந்தித்தார் என்பது பின் சரிதை. இதனால் விளங்கு
து 'ருக்கு' எனமேற் செய்யுளிற் கூறியிருப்பதால் அது
ஆரியவேதமேயாம். அதைச் சொல்ல ஆரம்பிக்கும்போதும்
சொல்லி முடிக்கும்போதும் பிரணவத்தைச் சொல்ல வேண்டி
தும் நியதி. அஃதும் ஆரியமேயென்பதும் முடிபு. ஆதலால்
மது நண்பர் உரை, பயனிலதாய் முடிந்தது. அருணகிரி
ாதாது மற்றொரு திருவாக்கில் காணப்படும் "அரிய தமிழ்
ானளித்த மயில்வீர" என்றதைக் காட்டித் "தனக்கு உப
தேசஞ் செய்த மந்திரத்தைத் தமிழென அருணகிரிநாதர் கூறி
து காண்க" என எழுதியிருக்கிறார். மேற்காட்டிய வாக்கியத்
தில் யாதாயினுமோர் மந்திரத்தை அருணகிரிநாதர், தனக்கு,
முருகக் கடவுள் உபதேசித்ததாகச் சொல்லவில்லை. தனக்குத்
தமிழை யளித்தாரென்கிறார். அதாவது தமிழ்பாடும் உணர்
வளித்தாரென்பதே பொருள். அருணகிரிநாதர் பாடிய திருப்
புகழ்மிக்க அற்புதமானதும் சிவஞானப் பொருளமைந்ததும்
கேட்போர் மனங்கசிந்துருகும் வண்ணம் சந்தவிசை பொருந்
தியது மென்பது யாவருமறிந்ததே. அதனால் வாக்கிற் கருணை
கிரி யெனவும் ஆன்றோர் புகழ்ந்ததும் காண்க. மூலபாடங்
களில் சற்றுமில்லாத பொருளை நம் நண்பர் கற்பித்துக்கொண்டு
அக்கற்பனையையே பின்னர் ஓர் சித்தாந்தமாக வைத்துக்
கொண்டு அதன்பேரில் மேலும் மேலும் கற்பனைகளைக் கட்டிக்
கொண்டே வந்து அவரெழுதிய இவ்வாராய்ச்சிக்குரிய திரு
நான்மறை விளக்கமென்னும் உரையெழுதி முடித்திருக்கிறார்
என்பது தேற்றம். நிற்க.

சஅ. தமிழானது மறைகளும் மந்திரங்களுங் கூறுதற்
குரிய மொழியாதலால் தேவாரத்துள்ளும் 'ஓமென்று மறை
பயில்வார்' என்று ஞானசம்பந்தப் பெருமான் அருளிச் செய்
தனர் என எழுதி யிருக்கின்றார். இவ்வாக்கியம் மறை
யென்றதே யொழியத் தமிழ்மறை யெனச் சொன்னதில்லை.
தமிழானது மறைகளும் மந்திரங்களுமுள்ள மொழியாயின்
இருந்துகொண்டே யிருக்கின்றதே. இதில் இவர்க்கு [illegible]
டான ஆசங்கையென்ன? தேவாரம் திருவாசகம் [illegible]
மறையென்று தமிழ்ச்சைவ உலகு பூர்வங்கொட்டு [illegible]
டிருக்கின்றது. சைவர்கள் என்னப்படும் [illegible]
நியமமாகச் செய்துவரும் அனுஷ்டானம் [illegible]

மற்றும் சுபாசுபங்களிலும் மந்திரங்களைச் சொல்லியே வருகின்றார்கள். ஆனால் அம்மந்திரங்கள் தமிழ்மொழியல்ல, ஆரியமேயென்பது பிரத்தியட்சம். சம்பந்தப்பெருமான் ஓமென்று மறைபயில்வார் என்ற சொற்றொடரிற் கண்ட மறை யென்பது ஆரியவேதத்தைக் குறித்ததே. பயில்வாரென்றது அவ்வேதம் ஓதும் பிராமணர்களைக் குறித்ததே. இப்பகுதி பிரமபுரமென்னும் சீகாழித்தலத்துத் தேவாரத்திற் கண்டது. இத்தலத்துக்கருளிய அநேக தேவாரப்பதிகங்களிலும் அந்நகரத்தில் அக்காலம் வசித்திருந்த பிராமணர்கள் வேதமோதுதலையும் வேள்வி செய்தலையும் முத்தீவளர்த்தலையும் சிறப்பித்துச் சம்பந்தப்பெருமான் குறிப்பாயும் வெளிப்படையாயும் அருளிச்செய்திருக்கின்றார். சில வருமாறு:—

"ஒருங்கிய மனத்தோ டிருபிறப்போர்ந்து முப்பொழுது குறைமுடித்து நான்மறையோதி யைவகை வேள்வி யமைத்தாறங்கமுதலெழுத்தோதி வரன்முறை பயின்றெழுவான் றனைவளர்க்கும், பிரமபுரம் பேணினே" என்றும்

"மணவிடை வைகியோங்கு வானிரு ளறத்துரப்ப வெண்டிசையும், புரைமலி வேதம்போற்று பூசுரர்கள் புரிந்தவர் நலங்கொளாகுதியினி னிறைந்த, விரைமலி தூபம் விசும்பினை மறைக்கும் வெங்குரு."

"தூயமறையாளர் முறையோதி நின்ற தோணிபுரம்"

இப்பகுதிகளில் அருளியிருப்பது பிராமண குலத்தவரையும், அவர்கள் ஓதும் பிரணவ முட்பட்ட வேதங்களையும் அவர்கள் வேத முறைப்படி செய்யும் வேள்வி யாதிகளையுமே குறிக்குமென்பது வெளிப்படை. அதுபோலவே, ஓமென்று மறைபயில்வார் பிரமபுரம் என்பதும் பொருள்படும். ஓமென்னும் பிரணவத்தை ஓதியே வேதத்தைப்படிக்க ஆரம்பிக்கவேண்டுமென்பதும் படித்து முடித்த பின்னரும் பிரணவத்தைச் சொல்லவேண்டுமென்பதும், ஆரியவேதமோதுதலுக்கே நியமமானது. மேற்காட்டிய கந்தபுராணச் செய்யுட்களில் "தூமறைக்கெல்லாம்" என்னுஞ் செய்யுளிலும் அவ்வாறே கூறப்பட்டுளது. மநுஸ்மிருதி உ-ம் அத்தியாயம் எச ஸ்லோகமும் அதாவது

𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 𑌪𑍍𑌰𑌣𑌵𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌦𑌾𑌦𑌾𑌵𑌨𑍍𑌤𑍇 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 ।
𑌸𑍍𑌰𑌵𑌤𑍍𑌯𑌨𑍋𑌂𑌕𑍃𑌤𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌚𑍍𑌚 𑌵𑌿𑌶𑍀𑌰𑍍𑌯𑌤𑍇 ॥

"பிரமண: பர்ணவம் குர்யாதாதா வந்தேசசர்வதா |
ப்ரவத்யநோம் க்ருதம் பூர்வம் பரந்தாச்சவி சீர்யதே||

என்பதே. இ-ள் பிராமணன் வேதமோதத் துவக்கும்போதும், முடிக்கும்போதும், பிரணவத்தைச் சொல்லவேண்டியது. அப்

டி முன்னர் சொல்லாததனால், ஓதின வேதங் கொஞ்சமாய் றந்துவிடும். பின்னர்ச் சொல்லாவிட்டால் ஞாபகத்தில் தரித் ராது. நிகழ்காலத்திலும் இந்நியமம் வழங்கப்பெற்று வரு தையும் அறிகிறோம். நமது தமிழ் மறையாகிய தேவாரப் திகங்களையோத ஆரம்பிக்கும்போதும் ஓதி முடித்தபிறகும், திருச்சிற்றம்பலமென்று நாம் சொல்லிவருகிறோம். பழய ட்டுப் புத்தகங்களிலும் அச்சுப்பிரதிகளிலும் அவ்வாறே ஒவ் வொரு பதிகத்தின் முதலிலும் ஈற்றிலும், திருச்சிற்றம்பலமென வரைந்திருப்பதையுங் காணலாம். வருணசிந்தாமணி யென் னும் நூலாசிரியர் இம்மரபுக்கு ஓர் ஆதாரமுங் கண்டுபிடித் தெழுதியிருப்பதாவது. திருவிசைப்பாவில் காணப்படும் “அம்பலவரென்னுஞ் சுருதி” தேவார திருவாசகம் படிக்க ஆரம்பிக்கும்போது திருச்சிற்றம்பலம் என்று சொல்லியே ஆரம்பிக்க வேண்டுமென்று சுட்டுவதாக எழுதியிருக்கின்றார். “திருமூலமா முனிவர் சதா சிவந் தத்துவம் முத்தமிழ் வேதம் “என்று கூறியவிடத்து முத்தமிழ் வேதம் என்று சுட்டப் “பட்டது, அருள்நூல் மூலமாகிய சுத்த வித்தையை. அங்கே “முத்தமிழ் என்றது பிரணவத்தை. முத்தமிழ் என்று பிரண “வத்தைக் கூறுவது தமிழறிவர் (சித்தர்) நூல்வழக்கு.” என் றெழுதி மற்றுமேதேதோ நம்மவர் எழுதியிருக்கின்றார். முத் தமிழ் வேதம் என்றதற்குச் சுத்த வித்தையென்று கூறிய தற்குப் போதியப் பிரமாணமென்னை? சித்தர் நூல் வழக்கு என்றார். எந்தச் சித்தர் எந்த நூலிலே முன்னுக்குப் பின் விரோதமன்றி இப்பொருளில் இச்சொற்களை வழங்கியிருக்கின் றார்? முத்தமிழ் வேதம் சுத்த வித்தை யென்றவர், பின்னர் முத்தமிழ் வேதம் பிரணவமென்றார். இவற்றில் எது சரி. இரண்டுஞ் சரியெனில் வேறு வேறு கூறவேண்டாவே. முத் தமிழ் வேதமென்று சேர்த்துக் கூறி யொருங்கே சுத்த வித்தை யென்று பொருள்கொண்டு பின்பு முத்தமிழ் என்று கூறிய பதம் எங்கிருந்து கிடைத்தது.

இனி முத்தமிழ் என்பதற்குப் பிரணவமெனப் பொருள் யாண்டு கூறப்பட்டது. இத்தொடருக்கு நேர்பொருளாவது. சதா சிவ தத்துவத்தில் முத்தமிழும் வேதமும் தோன்றுமென் றும், சதாசிவம் தமிழ் சமஸ்கிருத சொரூபரென்றும் பொருள் கொள்ளப்படும். “ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்,” என்னும் திராவிட சுருதியும்” “ஆரியமும் தமிழுமுடனே சொல்லி” என்னுந் திருமந்திரப் பகுதியும் நமது கோளை வலி யுறுத்தும். “வேதத்தை விட்ட வறமில்லை வேதத்திலோதத் தகு மறமெல்லாமுள” என்னும்

"ஐம்ப தெழுத்தே அனைத்து வேதங்களும் *
ஐம்ப தெழுத்தே அனைத்தாக மங்களும்
ஐம்ப தெழுத்தி னடைவை யறிந்தபின்
ஐம்ப தெழுத்தே யஞ் செழுத்தாமே" என்றும்

"அகார முதலாக வைம்பத் தொன்றாகி §
உகார முதலாக ஓங்கி யுதித்து
மகார விறுதியாய் மாய்ந்து மாய்ந்தேறி
நகார முதலாகு நந்திதன் னாமமே" எனவும்

நந்திருமூல நாயனார் அருளியிருப்பவைகளினால் வடமொழி எழுத்துக்களாகிய ஐம்பத்தொரு அட்சரங்களினின்று பஞ்சாக்கரமும் பிரணவமும் வேதாகமங்களும் தோன்றிய தாக வெள்ளிடைமலைபோல விளங்கும். அதனால், ஓங்காரம் தமிழ்மொழி யென்று நம் நண்பர் கூறும் கூற்று வெற்றுரை யேயாம். இன்னமும், "என்னை நன்றாக இறைவன் படைத் தனன் றன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே" எனத்திரு மூலர் கூறியிருக்கின்றார். இம்முனிவர் ஆதியில் திருக்கைலா யத்தின் பக்கமிருந்தபோதே நந்தியெம்பெருமான் அருள் பெற்று நான்மறையாதியகற்று அஷ்டமாசித்திகளும் கைவரப் பெற்று நான்மறை யோகியர் எனப்பெயர் வழங்கப் பெற்ற வரெனப் பெரியபுராணங் கூறுகின்றது. தமிழ் நாட்டுக்கு வந்த பின்னர் அம்முனிவரது ஜெனனதேகம் ஒரு வகையான் மறை படத் தமிழனாகிய மூலனென்பவனது உடல் இவருக்குக் கிடைத்தது. அதனாற்றான் "என்னை நன்றாக இறைவன் படைத்தனன், றன்னை நன்றாகத் தமிழ்ச்செய்யுமாறே" எனத் தமது வரலாற்றில் திருமூலர் கூறினார். இதனால் இவர் கற்றிருந்த ஆரிய வேதாகமங்களின் பொருளையே தமிழிற் கூறினா ரென்பது நன்கு விளங்கும். "உள்ளுணர்வான் ஞானமுதனூல வொரு நான்குண்மை, தெள்ளுதீந் தமிழாற் கூறுந்திருமூலர்" என்னுஞ் சேக்கிழார் மூர்த்திகளது அருண்மொழியானும் இஃது நிலைபெறும்.

---

* "ஐம்பத்தோரக்கரங்களின் ளகரம் லகரத்துளடங்கு மென்பது பற்றி வன்றேத்துவா ஐம்பதென்றும் சிலவாகமங்களிற் கூறப்படும்" எனச் சிவஞான பாடியத்திற் கூறப்பட்டுளது. பக்கம் உகஎ.

§ ஐம்பத்தோரட்சரத்துக்கு விவரமாவது. தத்துவப் பிரகாசம் உசகூ செய்யுளின் பிற்பாதி.

............"வன்ன முதலா, நந்து பராசத்தியானுத! விந்துத்தோன்றி நாதத்தே மூன்று சாநடந்ததானீண்டு, சிந்துமகாரம், மற்றைப் பத்து மாஞ்சத்தி திருமேனியின் முப்பத்தைந்தும் சேர்ந்திடுமே." இதன் பொருள்; அட்சரந் தோன்றுமிடத்துப் பராசத்தியாலே பிரணவமாகிய மாயையிலே அகார இகார உகாரமாகிய மூன்று விந்து பிறக்கும்;

கெழுத்துகளிலுள்ள கஉ-எழுத்துக்களும் தமிழ் மொழியில் இல்லை: இவ்வெழுத்துக்களாற் பெரும்பாலும் மந்திரங்கள் ஆக்கப்பட்டிருக்கின்றன. இதனாலன்றோ தொல்காப்பியர் முதல் முதல் எழுத்து அதிகாரஞ் சொல்ல வந்தபோதே, பிறன் கோட் கூறல் என்னு முத்தியைக் கொண்டு, எழுத்துக்களில், தமிழ் எழுத்துக்கள் வடமொழி எழுத்துக்கள் இவைகளின் பிறப்பின் பேதத்தைக்காட்டி வடமொழி யெழுத்துக்களின் பிறப்பைத் தாம் இந்நூலிற் காட்டவில்லை யென்றும் அவைகளை அந்தணர் வேதங்களிற் கண்டுகொள்க வென்றுங் கூறினர். "எல்லாவெழுத்தும் வெளிப்பட" என்னும், இப்பொருளடங்கிய சூத்திரத்தையும் அதன் உரையையும் இவ்வாராய்ச்சியின் ருஅ, அஉ. பக்கங்களில் காட்டியிருக்கின்றதைப் பார்த்தால் தெளிவாகும்.

மந்திரம் என்ற மொழியே மந்=நினைப்பவன், திர=காப்பது, அதாவது நினைப்பவனைக் காப்பது எனும் பொருளைப் பயந்து கொண்டு நிற்கும் வடமொழித்தாதுக்களானுய மொழியாகுமானல், வீண்கலாம்விளைப்பது யாது பயன் படும். மந்திரம் என்ற சொற்குப் பகுதி விகுதிப்பொருள் தமிழ் மொழிக்கு இணங்க ஒருவரும் கூறிற்றிலர். "செம்பு பொன்னுகும் ஸ்ரீயுங் கிரீயுமென" எனவும் "ஆனந்தம் அம், ஹ்ரீம், அம், க்ஷம், ஆம், ஆகுமே" என்றும் "ஒளியது ஹௌமுன் கிரீமது வீரும்" என்னும் திருமந்திரச் செய்யுட்களின் பகுதிகளில் பீஜாட்சரங்களைத் தமிழ் எழுத்துக்களால் எழுத முடியாது வடமொழி எழுத்துக்களாலேயே குறித்திருப்பதையுங் காண்க. சிவதருமோத்தரம், "சந்தபேதமுந் தானறியாரென" வென்னுஞ் செய்யுளுரையிற் காட்டப்பட்டிருக்கும் வீர சோழிய இலக்கணச் செய்யுளால் வடமொழிச் சந்தபேதம் உசு-வகையென்றும் "இருவிதஞ் சந்தமிவற்றென்று எழுத்தாலிலங்கு "மற்றை, யொருவித மாத்திரையாலே யொளிரு மொளிருமிது, "பொருவரிதாகிய வாரியத்துண்டு பொதியமென்னு, மருவரை "மாதவன் கூறுந்தமிழுக்கருகமன்றே" என்ற செய்யுளாலும், ஆரியத்திலேயே சந்தபேதங்களும் மாத்திரை பேதங்களுமுள்ள மந்திரம் முதலிய வுண்டென்பதையுங் காண்க. வடமொழி அமரம் பிரமவர்க்கத்தில், சஉகூ-சுலோகத்தில் 'காயத்திரிப்ர முகம்ச்சந்தோ' எனக் கூறப்பட்டிருப்பதையும் அதற்கு உரை "ச்சந்த:, இது காயத்திரிமுதலான உசு ச்சந்தஸ்களுக்குப் பேர்" என்றெழுதியிருப்பதையும் மேற்காட்டிய சிவதருமோத்தரச் செய்யுளையும் அதன் உரையையும் ஒப்பிட்டு நோக்குக. இவ்வரிய பிரமாணங்களால் மந்திரங்கள் ஆதியில் தமிழிலிருந்

தனவென்று நம் நண்பர் கூறுஞ் சொல் பொருத்தமற்றதென வே விளங்கும். ஆதியிலிருந்திருந்தால் இப்போதில்லாது போவானேன்?

சசு. பின்னும் நம்மவர் எழுதுவதாவது. "ஐந்தெழுத் "திற்கும் வெவ்வேறு பொருள் கொள்ளல் வேண்டும். அது "தான் அம்மந்திரங்களின் சிறப்புப் பொருள். அச்சிறப்புப் "பொருளில் ஆகமத்திலும் திருமூலர் முதலிய அறிவர் நூலி "னுந்தான் அது வழங்குகின்றது, வைதிகர் அதற்கு வள "மில்லாத பொதுப் பொருள் கொள்வர். ஆதலால் அவர்க்கது "மந்திரமாகாது. அம்மந்திரத்தின் சிறப்புப் பொருளே தேவா "ரத்துள்ளும் கொள்ளற்பாற்று. பொதுப்பொருள் கொள் "வது பொருத்தமிலையென்பது "நாதனும நமச்சிவாயவே" "என்பதற்குப் பொருள் விரிப்பின் விளங்கும். நாதனுடைய "நாமம் 'நமஸ்காரம் சிவனுக்கு' என்று பொருள் கொள்வது "எவ்வளவு பொருத்தமிலாத தென்பதை உற்று நோக்குக. "சிறப்புப் பொருளில் ஐந்தெழுத்தும் தமிழ் மந்திரமே," என வெழுதியிருக்கின்றார். வேதம் சூத்திரரூபமாயுள்ளது. சிவாகமம் வேதத்திற்குப் பாடியமாயுள்ளது என நம் மேலோர் பணித்திருப்பதை நம்மவர் ஞாபகத்தில் வைத்து அதன்வழி நடப்போரானால் இவ்வாறு எழுதத் துணியார். ஐந்தெழுத்து ந, ம, ஶி, வ, ய என்பது. மேற்காட்டிய தேவாரச் செய்யுளில், நமச்சிவாய, வென்று, ஶி, சிகரமாகியும் சகரவொற்று ஒன்று தோன்றியும் வகர எழுத்து வாகாரமாக நீண்டுமிருப்பது என். நமச்சிவாய வாஅழ்க என மாணிக்கவாசக சுவாமிகள் கூறினரே, நம் நண்பர் பொருளின்படி நமஸ்காரம் சிவனுக்கு வாழ்க வென்பதுதான் அதன் பொருளோ? பஞ்சாட்சரத்துக்கு இருவகைப் பொருளுண்டெனப் பெரியோர்கள் மொழிவார்கள். ஒன்று சிவபெருமானை நமஸ்கரிக்கிறேன் என்பது. மற்றொன்று ஈசன் சத்தி ஆன்மா, மலமாதிய; சிவபெருமானை நமஸ்கரிக்கிறேன் என்று பொருள் கோடலிலும், ஈசன் சத்தி ஆன்மா முதலிய பொருள் குறிப்பாய் அடங்கியுள்ளன. எவ்வாறெனில் நமஸ்கரிக்கிறேன் என்றவன் ஆன்மா, எதுக்கு நமஸ்கரிக்கவேண்டும்? மலநீக்கத்தின் பொருட்டு. ஆதலால் "நாடிரண்டந்தம் பேதம தென்பர் பெரியோர்க்க பேதமே" எனத் திருமூல நாயனர் அருளியபடி வைதிகர் கூற்றும் சைவர் கூற்றும் முடிவில் ஒரே பொருளைப் பயந்துகொண்டே நிற்கின்றன. ந, ம, ஶி, வ, ய வென்பது வடமொழி எழுத்துக்கள். தமிழிற் செய்யுளிற் கூறவந்தபோது தமிழ் இலக்கண முறைப்படி நமச்சிவாயவெனத் திரிபு பெற்றது. எவ்வாறெனில் நமஶ்ஶிவாய என்பதில் நம: என்பதிலுள்ள, விஸர்க்கம், ஸகாரத்

தின் றிரிபு. அது வருமொழி முதலிலுள்ள மகாரமாகித் திரிந்ததனால் (ம ம) இரண்டு மகாரங்களாயின. அவை "முப்பது சயவும்" என்ற நன்னூற்கிசைய இரண்டு சகாரங்களாய் நமச்சிவாய என்றாயது. திருமூலர் முதலிய மகான்களெல்லாம், அம்மந்திரம் வடமொழி யெழுத்துக்களாலாயதெனவே கூறியிருப்பதை மேலே காட்டினோம். "அருமறையின் அகத்தானே" எனத் திருநாவுக்கரசு மூர்த்திகள் அருளியிருக்கின்றதே. அஃது எவ்வாறு? மூன்று வேதங்களினும் நடு வேதம் எது? அது யசுர் வேதம். அதன் ஏழுகாண்டங்களினும் முதன் மூன்று பின் மூன்று தள்ளி நடுவிலுள்ள ச-வது காண்டம். அந்நான்காவது காண்டத்தில் நடுவே நிற்கும் ஸ்ரீ உருத்திரத்தின் நடுவுள் "நமச்சிவாயச் சிவதராயச" என ஐந்தெழுத்தையும் ஈரெழுத்தையும் கூறியவாற்றானன்றோ; (திருமூலர் அருளிய திருமந்திரம், வேத சிவாகமப் பொருளே. தேவாரமும் வேதசாரமே.) பஞ்சாக்கரம் அருமறையினகத்து விளங்குவதை "மும்மறையுள் நடுமறையின் "முனிவிலெழு காண்டத்திற், செம்மைதரு நடுக்காண்டஞ் "சேர்ந்த வெழு சங்கிதையி, லம்ம நடுச்சங்கிதையினதி "யீரெழுத்து நடுப், பொம்மலுற வமர் மனுவின் பொரு "ளாவானெவன் மைந்த," என்ற செய்யுளாலும் பெரியோரும் பணித்தனர்.

நுo. நிற்க, நம்மவர் இன்னமொன்று கூறுகின்றார். "அதாவது "தந்திர வழக்கங்களையும் முறைகளையும் தமிழ்ச் "சித்தர் நூல்களொடு ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து இரண்டும் "ஒரு தன்மையனவா யிருத்தலானும், தந்திரம் யாவற்றுள் "ளும் சிவ வழிபாடு கூறுதலானும் அவை யெல்லாவற்றுள் "ளுஞ் சிறந்த உஅ சைவநூல்களையும் தென்றமிழ் நாட்டு "மகேந்திர மலையில் சிவபெருமான் அருளியதாகத் தெரிதலா "னும், தந்திரத்திற் கூறப்படும் வித்தெழுத்துக்கள் யாவும் "தமிழ்ச் சித்தர் நூல்களுள் மிக்குப் பயிலுதலாலும், வட "மொழியில் தந்திரம் ஏற்படுதற்கு நெடுநாட்கு முன்னரேயே "ஆகமமெனப்படும், அருள் நூல்கள் தென்றமிழ் நாட்டில் "எழுந்தமையானும், வடமொழித் தந்திரங்கள் தமிழ் அருள் "நூல்களின் மொழி பெயர்ப்பென்பதும் தந்திர நாகரிகம் "தமிழர் நாகரிகமென்பதும் உய்த்துணரப்படும்." என்றெழுதியிருக்கின்றார். முறையே இவற்றை ஆராய்வாம்.

தந்திர வழக்கங்கள் இன்னவை, சித்தர் நூல்கள் இன்னவை, அவற்றின் வழக்கங்கள் இன்னவை, இரண்டு வழக்கங்களும் இன்ன தன்மையில் ஒத்து இருக்கின்றனவென்பவை

களில் ஒரு வழக்கத்தையாவது இவரெடுத்துத் தமிழுலகினர்க்குக் காட்டினாரில்லை. தமிழ்ச் சைவ மக்களுக்குப் பன்னிரண்டு திருமுறைகள் நூல்களென நமதாலகை அரசாட்சிபுரிந்த சைவப் பெருந்தகையார் காலத்தில் வகுக்கப்பெற்று அவை இன்று காறும் விளங்கி வருகின்றன. அவைகளில் சித்தர் நூல் என ஒரு நூலையும் எடுத்து ஆளவில்லை. தந்திரம் யாவற்றுள்ளும் சிவ வழிபாடு கூறுகின்றதென்றார். பாஞ்சராத்திரம், வைகானசம், எனும் இரண்டு வடமொழித் தந்திரங்கள் திருமால் வழிபாடு கூறுகின்றனவல்லவா? வடமொழியிலிருக்கு மிவ்வாகமங்களுந் தமிழின் மொழிபெயர்ப்போ? இத்தமிழாகமங்களையுங் கடல் கொண்டதோ? ஆதிகால முதலே சிவாலயங்கள் பலவிடங்களில் இருத்தல்போல பலவிடங்களிலும் திருமால் ஆலயங்களும் இருக்கின்றனவன்றோ? இருபத்தெட்டு சைவ நூல்களையும் தென்றமிழ் நாட்டு மகேந்திர மலையில் சிவபெருமான் அருளியதாகத் தெரிதலானும் என்றெழுதினாரே, இவர் எவ்வாறு இது விஷயம் தெரிந்தார், யாராவது இவருக்குச் சொன்னார்களா? அல்லது சைவ நூல்களில் எங்காவது சொல்லியிருப்பதைப் படித்துத் தெரிந்தாரா? அக்குறிப்பை யாதுங் காட்டியிருக்கவில்லை. திருவாசகங் கீர்த்தித் திருவகவலில், "மன்னுமாமலை மகேந்திரமதனிற் சொன்ன ஆகமந் தோற்றுவித்தருளியும்" எனவும் "கேவேடராகிக் கெளிறதுபடுத்து மாவேட்டாகிய ஆகமம்வாங்கியும், மற்றவைதம்மை மகேந்திரத்திருந், துற்ற வைம்முகங்களாற் பணித்தருளியும்" எனவும் காணப்படும் பாவின் பகுதிகளே சிவபிரான் ஆகமங்களை மகேந்திர மலையில் அருளினாரென்பதற்குத் தெரிந்தவரை, சைவத் தமிழ் நூற் பிரமாணமாகக் காணப்படுவன. மேலே காட்டிய அருண்மொழிப் பகுதிகளில் தென்றமிழ்நாட்டு மகேந்திர மலையென்று கூறப்பட்டிருக்கவில்லை. சுவாமி வேதாசலம் அவர்கள் எழுதிய திருவாசக விரிவுரையின் ௯௧-ம் பக்கத்தில் சொல்லியிருக்கிறபடி. தெலுங்கு நாடாகிய கஞ்சம் ஜில்லாவில் பண்டைய சிவாலயங்களுடன் விளங்கும் மகேந்திரமெனப் பெயரிய ஒரு மலை யிருப்பதாகத் தெரிகின்றது. சிறப்புப் பெயர் அகராதியிற் காட்டியபடி வடநாட்டில் உற்கவ நாடுமுதல், காண்டவ நாடு வரை வியாபித்துள்ளது மற்றொரு மகேந்திரமலை. இவ்வாறு பற்பல மலைகள் வேறு பாஷைகட்குரிய பற்பல நாடுகளில் மகேந்திரமெனப் பெயர்கொண்டு விளங்கலான், தென்றமிழ்நாட்டு மகேந்திர மலையிற்றான், சிவபிரான் ஆகமங்களை அருளினாரென்று சொல்வதற்கு, நம்மவர் உரையைத் தவிர வேறு ஆதரவில்லை. அன்றியும் மேற்காட்டிய இரண்டு திராவிடசுருதி வாக்கியங்களுள், முதல் வாக்கியம், மகேந்திர

மதனிற் சொன்ன வாகமந் தோற்றுவித்தருளியும் எனப் பிறவினை கொண்டு முடிவதானும், மகேந்திரமதனிற் சொன்ன வாகமம், எனக் காணப்படுவதானும் சொன்னவிடம் வேறு தோற்று வித்த இடம் வேறு எனப் புலப்படுவதானும், ஆகமத்தை அரு ளிய காலம், இடம், வேறு; அவைகளைப் பிறனைக்கொண்டு தோற்றுவித்த காலம், இடம், வேறு எனப் பொருள்படுகின் றமையால் நம்மவர் கூற்றுக்கு இவ்வாக்கியம் பிரமாணமாகாது. இரண்டாவது வாக்கியமோவெனில், திருவிளையாடற் புராணத் தின் வலைவீசு திருவிளையாடற் சரித்திரத்தின் ஒரு பகுதியைக் குறிப்பிடுவது. அஃதாவது, குமாரவேள் கடலியெறிந்த சிவாக மங்களைச், சிவபிரானாணையால் நந்தியெம்பெருமான் மகரமாகித் தலையிற் றாங்கிக்கொண்டு கடலிற் படிந்திருந்தகாலை வலைஞர் கோன் வேடம்பூண்டு வந்த சிவபிரான் அம்மீனைப்படுத்து அவ்வாகமங்களை வாங்கி மகேந்திரத்தெழுந்தருளி அருளிய தாகவுங், கூறும் சரித்திரம். அறுபத்துநான்கு திருவிளை யாடல்களில், ருஎ-வது வலைவீசிய திருவிளையாட்டின் சரித் திரம் அது. அது நிகழ்ந்தது அரிமர்த்தன பாண்டியன் காலத்தில், இப்பாண்டியனுக்கு முன்னர் அநேகம் பாண்டியர் கள், அரசாண்டார்கள். நண்பர் கூற்றுப்படி பொருள் கொண்டால் அரிமர்த்தன பாண்டியன் காலத்திற்றான் சிவ பிரான் ஆகமங்களை அருளினாரெனக் கொள்ளவேண்டும். அன்றியும் முன்னரே யிருந்த ஆகமங்களையே மகேந்திரத்திற் றோற்றுவித் தருளினதாகவும் திருவாசகப் பாவாற் றெரிகின் றது. ஆதலால் நம்மவர் கூற்றுக்கு எட்டுணையும் ஆதாரமில்லை. நம்மவர் தென்றமிழ்நாட்டு மகேந்திரமலை, என்றார். 'மகேந் திரம்' என்ற பதமே வடமொழியாம். தமிழ் நாட்டிலுள்ள பர்வதத்துக்கு வடமொழிப் பெயர் எவ்வாறெய்தியது? இவர் கூற்றெல்லாங் கலவரமே. இன்னமொன்றுளது. திரு விசைப்பா, திருமாளிகைத் தேவர், ந-சிதம்பரத் தலத்துக் கருளிய 'உறவாகிய யோகம்' என்ற பதிகத்தில் பாசுரந் தோறும் மகேந்திரமலை குறிப்பிடப்பட்டிருக்கின்றது. "மகேந் திரப் பொன்மலையின் மலைமகளுக்கருளுங் குரு நீ," என்னுஞ் சொற்றொடர் அப்பதிகத்தின் கo-வது பாசுரத்திற் காணலாம். இதன் பொருளையும் பெரியபுராணம் திருக்குறிப்புத் தொண் டர் நாயனார் புராணம் 'வெள்ளிமால் வரைக் கையிலையில் வீற் 'றிருந்தருளித் துள்ளுவார் புனல்வேணியார் அருள்செயத் 'தொழுது தெள்ளு வாய்மையி னாகமந்திறனெலாந் தெரிய 'உள்ளவாறு கேட்டருளி னானுலகை யாளுடையாள்' என்ற ருo-வது செய்யுட் பொருளையும் ஒப்பிட்டு நோக்குங்கால் மகேந்திரம் என்னும் பெயர் கைலையங்கிரிக்கும் போந்த ஒரு

பெயராகுமென்பது தெளிவு. மஹா=மகத்தான, இந்திர=மேன்மை தங்கியவென்பது பொருள். இவ்வாராய்ச்சியாலும் மகேந்திரமென்னும் மலை தமிழ் நாட்டிலுள்ளதென்னும் நண்பர் கூற்று நிலைபெறுதென்பதே தேற்றம். தந்திரத்திற் கூறப்படும் வித்துவெழுத்துக்கள் யாவும் தமிழ்ச் சித்தர் நூல்களுள் மிக்குப் பயிலுதலானும் என்றார். சித்தர் நூல் இன்னதெனக் குறிப்பிட்டாரல்லர், தந்திரமெனப்படும் வடமொழிச் சிவாகமங்களில் மந்திரங்களெல்லாம் கூறுவது உண்மையே, அதை யாவரும் அப்பியசிப்பது முண்மையே. இதனால் நண்பர் கொள்கைக்குஒரு சாதகமுமில்லை. ஆனால் வேதங்களில் வித்து எழுத்தில்லை யென்று சொல்ல வரலாம். நான்காவது வேதமாகிய அதர்வணம் முற்றும் மந்திரமே, அல்லாமலும் வேதமும் ஆகமமும் ஒன்றுக்கொன்று உதவி நூல்களே. "வடமொழியில் தந்திரம் ஏற்படுதற்கு நெடுநாட்கு 'முன்னரேயே ஆகமமெனப்படும் அருள் நூல்கள் தென் 'தமிழ் நாட்டின் எழுந்தமையானும்,'' என்றெழுதியிருக்கின்றார். வடமொழியில் தந்திரமென்று இங்கு இவர் கூறுவது வடமொழிச்சிவாகமங்கள் இருபத்தெட்டையுமே. "வேதமோடாகமம் மெய்யாமிறைவனூல்" என்று திருமூலதேவரும் "தொகுத்தவனருமறை அங்கம், ஆகமம், வகுத்தவன் வளர்பொழிற்கூக மேவினன்" என்று திருஞானசம்பந்தப் பெருமானும், அருளியிருக்கின்றார்கள். அந்நூல்கள் ஆரியத்தே உளவென்று அருணந்தி சிவாசாரியாரும்* கூறியிருக்கின்றனர். இவற்றானும், சிவாகம வரலாறு உமாபதி சிவாசாரியார் பவுஷ்கரவுரையுள் விரித்துக் கூறுதலானும், வேதவாக்கியங்களை ஆண்டாண்டு எடுத்தாளுதலானும, சந்தானசாரியர்கள் திருவுளத்திற்கு மாறுபட்டுக் கூறுதல் சைவசித்தாந்திகட்கடாது. ஏனையோருங் கூறியிருப்பதற்கு முரணாக இப்போதுள்ள வடமொழி ஆகமங்களுக்கு நெடுநாளைக்கு முன்னரேயே ஆகமமெனப்படும் அருள்நூல்கள் தென்தமிழ்நாட்டில் எழுந்தனவென்று நம்மவர் கூறுவது மிக்க வியப்பாக விருக்கின்றது. அன்றியும் அவ்வாறாயின் அந்தத்தமிழ் ஆகமங்களை யியற்றினோர் யாவர், அவ்வகைச் சரித்திரம் எந்நூலிற் கூறப்பட்டுளது. ஆன்றோர்களில் யாராவது இவ்வகைக்கூற்று கூறினதுண்டா? இருபத்தெட்டு ஆகமங்களுமா கடல்கோளிற் போய் விட்டன. தமிழ்நாடு தெற்கே கன்னியாகுமரி முதல் வடக்கே திருப்பதி வரை யுண்டே? இவ்வகண்ட பூப்பரப்பினுள் சைவசமயம்

* சிவஞானசித்தியார் பரபக்கம், சௌத்திராந்திகன் மதமறுதலை [illegible]-வது செய்யுள், காரியமாயுலகமெலாம், எனுஞ்செய்யுள்

கைக்கொண்டவர் அக்காலம் ஒருவருமில்லையா? எண்ணிறந்த சிவாலயங்கள் சோழநாட்டிற்றானே யுண்டு. இந்நாட்டில் அவ்வாகமங்களில் ஏதேனு மிருந்திருக்கப்படாதா? ஆதலால் இருபத்தெட்டு ஆகமங்கள் தமிழிலிருந்தனவென்பதும் வடமொழித் தந்திரங்கள் தமிழ் அருணூலின் மொழிபெயர்ப்பு என்பதும் மூன்று அளவைகளுள் ஒன்றானும் ஆதரிக்கப்படாததென்பதும், நம் நண்பர் அவரது கற்பனைக் கொள்கையைத் தாபித்துக்கொள்ள அவரது யுக்திவாயிலானே எழுதப்பட்டதென்பதும் நன்கு விளங்கும். "வேதஸார மிதம்தந்த்ரம் வித்தாந்தம் பரமம் சுபம்" என்னும் மகுடாகம வாக்கியத்தானும் தந்திரமென்பது வேதசாரமென்றறிய வேண்டும். தமிழ் அருள்நூலின் மொழிபெயர்ப்பு என்றார். அவ்வாறாயினால் மொழிபெயர்த்த காலத்தில், அந்தத்தமிழ் அருள்நூல்கள் இருந்திருக்க வேண்டும். ஆரியர், பெர்சியா நாட்டினின்று முதல் முதல் பஞ்சாபுக்கு வந்ததே இற்றைக்கு ௫௦00-ஆண்டுகட்குமுன்னர் என இவரது சரித்திர ஆராய்ச்சி கூறும். இவர் சொற்படிக்கே உ௮-ஆகமங்கள் கடல்கோளில் மறைபட்டகாலம் ஆதியூழியின் அந்தத்தே. அதாவது இற்றைக்குச் சுமார் குறைந்தபட்சம் ௭௲-ஆண்டுகட்கு முன்னர், இவ்வாறு பார்த்தாலும் பொருத்தமில்லை. நிற்க மேலாராய்வாம்.

௫க. இனி, வடமொழிவேத வரலாற்றைக்கூறும் வாக்கியங்களை ஆராய்வோம், என நம் நண்பர் எழுதிக்கொண்டு, வேதமானது பிரமாவினுடைய நான்கு முகத்தினின்றும் நான்கு வேதங்கள் தோன்றினவென்பது பிராமணருடைய கொள்கை. சைவருள் ஒரு சாரார், சிவபெருமானுடைய நான்கு முகத்தினின்றும் நான்கு வேதங்களும் தோன்றினவென்பர் என ஒரு முகவுரை யெழுதிக்கொண்டார். இவ்வுரைக்குப் பிரமாணங் காட்டிலர். பின்னர் தம்மனம் போனபடி ஆட்சேப சமாதானங்களைப் புகுத்திக்காட்டி, யெவ்வாறாயினும் இப்போதுள்ள நான்கு வேதங்கள் அயன்வாக்கல்லவென்பது அவற்றை நேரில் படித்த யாவரும் மறுக்க வொண்ணாத ஒருண்மை என முடிபு கூறினார். நேரே வேதகாரணர் சிவபெருமான், பாம்பரைக்காரணர் பிரமன், அவருடைய நான்கு முகங்களினின்றும் வேதங்கள் தோன்றினவென்பது கற்பனை. வேதம் ஆதியில் சிவனால் அளிக்கப்பட்டுப் பின்னர் வரன்முறையால் பிரமனால் இருடிகட்கு அளிக்கப்பட்டதென்பதே சுருதி ஆதாரத்தோடு மேலோர் கூறுங் கொள்கை. வைதிகரில் மீமாஞ்சகமதம் பற்றியோர், வேதம் சுயம்புவென்றே கூறுவர், மனுதர்மசாஸ்திரம் கஉ-ம் அத்தியாயம் கூச-வது

சுலோகத்தில் வேதம் சுயம்புவேயல்லது ஒருவராற் செய்யத் தக்கதன்று எனக் கூறியிருப்பதுங் காண்க. பிராமணருள்ளும் ஆங்கிலக் கல்வியிற் றேர்ச்சியடைந்து அவ்வகைச் சரித்திர ஆராய்ச்சியைக் கைக்கொண்டோருட் சிலர் வேதம் ஓர் காலத்தில் ஒன்றின்பின் ஒன்றாய் ஆக்கப்பட்டதென்று கூறுவர். அவ்வாறு எழுதப்பட்டவோர் வியாசத்தைக் கண்டனஞ் செய்து அவ்வாறு எழுதியவரையும் ஏளனஞ் செய்து, சங்கரர், இராமாநுஜர், மாத்துவர் பாஷ்யங்களினிருந்தும், மனு சாஸ்திரத்தினின்றும், மற்றும் வடமொழி நூல்களினின்றும், பல பிரமாணங்களை மேற்கோளாகக் காட்டி, வேதம் சுயம்பு என்பதாகத் தாபித்து, ஆரிய தர்மம் எனுமோர் பத்திரிகையில் எழுதப்பட்டிருக்கின்றது. (சென்ற சித்தார்த்த வருஷம், ஐப்பசி, கார்த்திகை மாதங்களின் பத்திரிகைகளைப் பார்க்க) சிவஞானபாடியம் சுக சுஉ-பக்கங்களில் வேதம் நித்தனாகிய பரமசிவனாற் செய்யப்பட்டமையானும, இறுதிக்காலத்துப் பரமசிவனிடத் தொடுங்கிய வேதம் படைப்புக்காலத்து, முன்புபோலவே தோன்றுதலானும், நித்தமென்று உபசரித்துக் கூறப்படும் என்று எழுதப்பட்டிருக்கின்றது. வேதமாதிய பரமசிவனாற் செய்யப்பட்டதென்பதற்கு "அஸ்யமஹதோ பூதஸ்ய" என்னும் உபநிஷத்து வசனத்தையும், "யோப்ரமஹாணம்" என்னும் உபநிஷத்து வாக்கியத்தையும் "அஷ்டாதசாநாம்" "அங்காணி" என்ற புராண வாக்கியங்களையும் மேற்கோளாகக் காட்டப்பட்டிருக்கின்றன. மாதவச் சிவஞான முனிவர் வேதப்பொருளை அறியாதவராகித் திராவிட மகா பாஷ்யஞ் செய்தனர் போலும்.

சைவருள் ஒரு சாரார், வேதம் சிவபிரானது நான்கு முகங்களினின்றுந் தோன்றினவென்பர் என நம்மவர் எழுதினார். மற்றொரு சாரார் யாவரோ, அவர் கூறுவது யா[illegible] அறிகிலம். சைவருள் எத்தனை சார்பினர் உளரோ, அ[illegible] தெரிந்திலம். சைவர் கொள்கையினையும் சைவசிகாமணி[illegible] மாதவச் சிவஞான முனிவர் கண்ட பிரமாணியத்தையும் மறுக்கப் புகுந்தனர். இனி இவர் சைவருள் எவ்வகைச்[illegible] பினரோ தெரியவேண்டும். நிற்க,

ருஉ. பின்னும் நம் நண்பர் எழுதுவதாவது:—

"ஆயின் பிரம வாக்கு சிவவாக்கு வேதம் [illegible]
"சொல்வதற்குக் காரணம் யாதென்று ஆராய்தல்வே[illegible]
"ஒவ்வொரு அண்டத்திலும் அதனைப் படைக்கும் ஒரு
"வம் பிரமாவெனப்படும் என்றும், அப்பிரமாவும் கடவு
"வென்றும் ஞான நூலோர் கூறுகின்றார்கள், படைப்

"கடவுளல்லவனாகவே அவன் கடவுளிடத்தினின்று படைப்
"பின் முறையைக் கற்பவனாகல்வேண்டும். அங்ஙனம் அவன்
"கற்றதைத் தன் ஏவலாளர்க்கு அறிவித்தலும் இயல்பே.
"அதனை, "ஆதியிற் பிரமனார்தாம் அர்ச்சித்தார்" என்றும்,
"ஓதிய வேத நால்வர் உணருமாறுணரலுற்றார்." என்றுமுள்ள
"தேவாரப் பகுதிகளால் உய்த்துணர்ந்துகொள்க." என்று எழுதியிருக்கின்றார். இவர் காட்டியிருக்கின்ற மேற்கோள்கட்கும் அவர் எழுதியிருக்கிற வாக்கியங்கட்கும் ஒற்றுமை இன்னதென அறியக்கூடவில்லை. பிரமன் கடவுளினிடம் படைப்புத் தொழிலைக் கற்றவனென்றார். கற்றதை ஏவலாளர்க்கு அறிவித்தல் இயல்பு என்றார். அதனை மேற்காட்டிய தேவாரப் பகுதிகளால் உணர்க வென்றார். இதனால், முதற் காட்டிய மேற்கோள், பிரமன் கடவுளிடம் கற்றதை உணர்த்தியது என்றும், இரண்டாம் மேற்கோள், பிரமன் அவனது ஏவலாளர்க்கு அறிவித்ததை உணர்த்தியதென்றும் அறியற்பாலதாயிருக்கின்றது.—வேறு வகையாய்ப் பொருள்கொள்ள இவர் எழுதியிருக்கும் விடயங்கள் இடங்கொடா. இத்தேவாரப் பகுதிகட்கு இதுதான் பொருளோ வென்பதை ஆராய்தல் வேண்டும். அத்தேவாரப் பகுதிகள் இரண்டும் ஓர் தேவாரச் செய்யுளிலுள்ளவையே. அத்தேவாரம், அப்பமூர்த்திகள் அருளியது. அது வருமாறு:— "ஆதியிற் பிரமனார்தாம் அர்ச்சித்தார் அடியிணைக்கீழ், ஓதிய வேதநாவர் உணருமாறுணரலுற்றார், சோதியிற் சுடராய்த் தோன்றிச் சொல்லினையிறந்தார் பல்பூக், கோதிவண் டறையுஞ் சோலைக், குறுக்கைவீரட்டனாரே" என்பதே. இதன் இரண்டாமடியில் ஓதிய வேத நாவர் என்று எழுதப்பட்டிருப்பதே சுத்த பாடம். தனித்தனி நால்வரால் அச்சிடப்பட்டிருக்கின்ற சுத்த பாடமாகிய தேவாரப் புத்தகங்களினும், பழய ஏட்டுப் பிரதிகளிலும் இவ்வாறே காணப்படுகின்றது. ஓதிய வேத நால்வர் என நம்மவர் திரித்து எழுதிக்காட்டியுள்ளார். இவ்வாறு திருத்தி எழுதியது இவரது தமிழ் நான்மறை செய்த நால்வர் என்பதை இவ்வாக்கியத்தாற் ருபிக்கவோயாதோ அறியக்கூடாததாக விருக்கின்றது. ஆதியிற் குறுக்கைவீரட்டனார் பாதங்களில் பிரமன் அருச்சித்தாரென முதலடியின் பொருளாகின்றது மேற் காட்டிய தேவாரத்திற் காணப்படும் 'அடியிணைக்கீழ்' என்னும் பகுதியை நம்மவர் காட்டியிருக்கவில்லை. இத்திருப்பாடல் காணப்படும், தேவாரப்பதிகத்திலுள்ள, ௧௦ செய்யுட்களில் ஒவ்வொன்றும், ஒவ்வொரு காலத்தில், ஒவ்வொருவர், சிவபிரானைப் பூசித்துப் பேறுபெற்ற சரித்திரங்களையே கூறுவதையும் காண்க. வேதத்தை அருளிய நாவையுடையவர் குறுக்கை

பிரமனும்

வீரட்டனார் என்றும் மற்றையோரும் அவ்வேதத்தை உணருமாறு அவர் உணர்ந்தார் என்றும் இரண்டாம் அடியின் பொருளாகும். குறுக்கை என்னும் தலம் பிரமனும் மற்றைத் தேவராலும் பூசிக்கப்பட்டதலம்.

"ஆத்தமாயயனுமாலுமன்றி மற்றொழிந்த தேவர் சோ
"த்தமெம் பெருமானென்று தொழுது தோத்திரங்கள் சொல்
"லத் தீர்த்தமாமட்டமிமுன் சீருடையேழு நாளுங் கூத்தராய்
"வீதிபோந்தார் குறுக்கை வீரட்டனாரே." என அப்பமூர்த்திகளருளிய மற்றொரு பதிகப் பாசுரத்தாலுமறியலாம். நம்மவர் இவ்வாறே பெருமக்கள் வாக்கை அலட்சியஞ்செய்து தமது கொள்கைக்கு இணக்கமாகத் திருத்திக்கொள்வது அவருக்கு வழக்கமாயிருக்கிறதென்பதை இதுகாறும் மேலே அங்கங்கே எடுத்துக்காட்டியவற்றால், தமிழ்ச் சைவ மக்கள் பலரும் அறிந்து கொள்ளலாம். ஆதலால் இவர் முடிபுரைக்குப் பிரமாணமேயில்லை யென்பதே தெளிவு; நிற்க.

௫௩. பின்னும் நம்மவர் எழுதுவதாவது:—

"சரித்திர ஆராய்ச்சியால் விளங்கும் உண்மையைக்
"கருதின் இப்போதுள்ள வடமொழி வேதங்களுள் பழமை
"யான இருக்கு வேத மந்திரப்பாடல்கள் அவை யென்பதும்,
"ஆரியர் பஞ்சாப் தேசத்தில் சிந்து நதிக்கரையில் வாழ்ந்த
"போது அக்கினி முதலிய பல தெய்வங்களை உபாசிப்போரால்
"அவை பாடப்பெற்றன வென்பதும், அக்காலத்தே அவர்
"கள் வடகிழக்கு இந்தியாவிலுள்ள ஜனங்களோடு சண்டை
"செய்தார்களென்பதும், அவர்களை வென்றும் அவர்களோடு
"கலந்தும் கங்கை நதிதீரம் வரை பரவியபோது வடமொழி
"வேதங்கள் மூன்றாயினவென்பதும், தந்திர நெறியினரோடு
"பழகியபின் வேத வியாசர் காலத்திலே வேதங்கள் நான்காயின
"வென்பதும், அங்ஙனம் ஆயகாலத்தே தந்திரப்பகுதி பலவும்
"வேதத்திற் கலந்தன வென்பதும் அறிகின்றோம். வியாசர்
"காலத்திற்குப் பின்னே சிவாகமத்தின் உண்மை உணர்ந்த
"பெரியோர்கள் வேதத்தின் முடிந்த பொருள் சைவமென்று
"கோடற்குரிய வழி வகுத்தனர். அக்காலந் தொடங்கிச்
"சைவர்கள் யாவரும் வேதத்தின் பொருளும் ஆகமத்தின்
"பொருளும் முடிவில் ஒன்றேயென்ற கொள்கையைக் கடைப்
"பிடிப்பாராயினர். சமயாசாரியர்கள் தோன்றிய காலத்தே
"இக்கொள்கை நிலைபெற்றுப் பிராமணருட்பலரும் சிவபெரு
"மானையே கடவுளென்றுகொண்டு தமது வேதத்தின் உயர்ந்த
"கருத்தும் அஃதே யென்ற கொள்கை யுடையவராய்த்
"தாம் செய்யும் அங்கி (அக்கி) வழிபாடு சிவ வழிபாடே

"யென்று கருதினமையால் ஸ்ரீமத் ஞானசம்பந்த மூர்த்தியும்
"ஸ்ரீமத் அப்ப மூர்த்தியும் பிறரும் வடமொழி வேதப்பொருள்
"சைவமென்பதைத் தழுவி உரைப்பாராயினர். அங்ஙனங்
"கொள்ளாதாரை நோக்கி "எரிபெருக்குவரவ்வெரியீசன,
"துருவருக்கமாவ துணர்கிலார்" "இருக்கு நான்மறை யீச
"னையே தொழுங்கருத்தினை நினையார் கன்மனவரே" என்றும்
"அருளிச்செய்தமை காண்க.

"ஓமத்துளங்கி" என்னுந் திருமந்திரச் செய்யுளைப்
"பின்னர் எழுதி "என்ற திருமந்திரமுங் காண்க" எனவு
மெழுதிப் பின்னும்,

"இதனால் தெரிவது யாதெனின் வடமொழி வேதத்
"துட் போந்த சைவப் பகுதியையே சமயாசாரியர் உண்மை
"யென்று போதித்தார் என்பதே. அங்கி வழிபாடுஞ் சைவ
"வழிபாடாயிற்று. இங்ஙனமே வடமொழி இருக்கு வேதத்
"துட் போந்த சில பகுதிகளுக்கு ஆசிரியர் மெய்கண்டார்
"சைவப்பொருள் கொண்டனர். பிறவு மன்ன" என்று நீண்ட
தோர் பகுதி யெழுதியிருக்கின்றார். இதை, முறையே ஆராய்
வாம். 'சரித்திர ஆராய்ச்சியால் விளங்கும் உண்மையைக் கரு
தின் என, முதலிற் பீடிகை இவர் கட்டிக்கொண்டிருப்பதை
நோக்குமிடத்துச் சரித்திர ஆராய்ச்சியான் விளங்குவது
மட்டுமே உண்மை மற்றையவெல்லாம் பொய்ம்மை யென்பது
இவரது சித்தாந்தமென்பது நன்கு புலப்படுகின்றது. சரித்திர
ஆராய்ச்சி வகையால் நமது சமயக்கொள்கையை அளந்து
காணுதலால் உண்மை வெளிப்படாதென்பதை முன்னரே
அ௯-௯௦ பக்கம் வரை, விரித்துக்காட்டி யெழுதியுள்ளோம். உல
கமே சிருட்டிக்கப்பட்டு ஆறாயிரம் வருடங்கள்தான் ஆயிற்று
என்னுங் கொள்கையுடைய மேல் நாட்டாரது தோற்றம் அபி
விருத்தி, சமய வளர்ச்சி முதலிய கூறுவதற்கு அவர்கள் அநு
சரித்துவருவது சரித்திர ஆராய்ச்சியென்பது. அவர்களது
தோற்றம், அபிவிருத்தி, சமயவளர்ச்சி ஆதியவெல்லா விஷயங்
களையும் ஆறாயிரம் ஆண்டுக்குட்படுத்தியே கூறுவர். அவர்கள்
கொள்கைதான் உண்மையென்று கொண்டு, நமது நாட்டு மனி
தர்களின் தோற்றம், அபிவிருத்தி, சமயப்பகுதி எல்லாம் அந்த
ஆறாயிரம் வருடத்துக்கு உட்படுத்தியே கூறவேண்டுமென்பது
அவர்கள் நோக்கம். ஆங்கிலக்கல்வி கற்ற நம்மவர்களுள் சில
ரும் அக்கொள்கையைக் கைப்பிடித்தார்கள். நமது சமயா
சாரியர்கள் செய்த அற்புதங்களைச், சம்பந்தப்பெருமான்
மூவாண்டில்உலகன்னையாரின் திருமுலைப்பாலூட்டப்பட்டதை,
அந்நிமிடமே சகல வேத சிவாகமங்களை ஓதாதுணர்ந்ததை,

அந்நியிடமே வேதாகமப் பொருளடங்கிய தேவாரம் அருளி யிருப்பதை, கற்றூணைற் பிணிக்கப்பட்டுக் கடல் நடுவுள் தள்ளப் பட்ட அப்பமூர்த்திகள் அக்கல்லேயே தெப்பமாகக்கொண்டு கடற்கரை சேர்ந்ததை, வெள்ளை யானையினை ஆரோகணித்து ஆகாயமார்க்கமாய்த் திருக்கயிலை சேர்ந்த சுந்தரமூர்த்திகளது சரிதத்தை, மெய்கண்டதேவர் மூவாண்டில் பரஞ்சோதியாரால் உபதேசிக்கப்பட்டுப் பின்னர் பொல்லாப் பிள்ளையாரால் அநுக் கிரகிக்கப்பட்டு வடமொழிச் சிவஞானபோதத்தைத் தமிழால் மொழிபெயர்த்தாரென்னும் சரித்திரத்தை, உமாபதிசிவம் ஓர் பஞ்சமனுக்குத் தீட்சையினால் அவனது தேகம் தகிக்கப்பட, அவனுக்கு முத்திகொடுத்தாரெனும் சரித்திரத்தை, சரித்திர ஆராய்ச்சியார் நம்புவாரா? ஒரு மனுவின் காலம் ௪௮,௨0,000 மனு வருடங்கொண்டதென்றும், இப்போது, நிகழ்வது ஏழாம் மனுவின் காலமென்றும் ஐந்தாம் மனுவின் காலத்தில் தில்லைவா ழந்தணர்கள் எனப்படுவோர் அந்தர்வேதி யென்னும் நாட்டி னின்றும் சிதம்பரத் தலத்துக்கு இரண்யவருமனென்னும் அரையனால் அழைத்துவரப்பட்டு வந்தவர்கள் என்னும் சரித் திரத்தைச் சரித்திர ஆராய்ச்சியார் நம்புவாரா? தேவார திரு வாசகங்களிற் பன்முறை ஓதப்படும் அமுதங் கடைந்தது முதலிய புராணச் சரித்திரங்களை ஒப்புவாரா? நம் நண் பரே புராணம், கற்பபேதம், ஆகிய ஒப்புக்கொள்ளத்தக்கதில்லை என வெழுதியிருக்கின்றார். வடமொழிச் சிவஞானபோதம் மெய்கண்டாருக்கு நல்கப்பட்டதெனக் கூறப்படும் நமது பண்டைய சித்தாந்தத்தை நம் நண்பரே மறுக்கின்றார். வட மொழி பாஷ்யம் தென்மொழி பாஷ்யம் செய்த சிவாக்கிர யோகிகள், சிவஞான முனிவர், இவர்களைவிடத் தங்களுக்கு மேலான அறிவு விளங்குவதாகச் சரித்திர ஆராய்ச்சியார் காட்டுகின்றார்கள்.

ஆங்கிலமுந் தமிழுங் கற்ற சரித்திர ஆராய்ச்சியார்களுள் ஒரு சிவ மதத்தினர் அப்பமூர்த்திகள் சரித்திரத்தைப் பெரிய புராணம் பாடியோர் சரியா யெழுதவில்லையென வெழுதி அம் மூர்த்திகள் 'கூற்றாயினவாறு' என்னுந் தேவாரப் பதிகத்தை முதல் முதல் அருளியதாகச் சொல்லியிருப்பது, அம்மூர்த்தி களைக் கடலிற் கல்லோடு பிணித்துத் தள்ளியதாகக் கூறப்படுவது ஆகிய, அவர்கள் பாடிய தேவாரப்பாக்களுக்கு ஒத்திருக்க வில்லை யென்று எழுதிப் பெரிய புராணத்திற் கூறப்படுஞ் சரித்திரத்துக்கு நேர்விரோதமான ஓர் விநோதக் கதை யொன் றெழுதினார். மற்றோர் பெரியோர் திருவிளையாடற் புராணத் திற் காணப்படும் வன்னியுமிலிங்கமு மழைத்த சரித்திரம் பரஞ்சோதியாரே கட்டிவிட்ட தென்றெழுதினார். மற்றொருவர்,

பாண்டியனது ஓர் அரச குமாரத்தியை அர்ச்சுநன் விவாகஞ் செய்தான், அக்கதையைத்தான், மீனுட்சி தேவியார்திக்கு விஜயம் செய்தாரென்றும் கைலைக்கிறைவனை மணம் புரிந்தாரென்றும் வழங்கப்படுகிறதென்று கூசாமல் எழுதியிருப்பதுமன்றி அர்ச்சுநன் பஞ்சபாண்டவர்களில் ஒருவனுனதால் பாண்டிய வம்ச அரையர்களுக்குப் பஞ்சவன் எனும் பேரெய்தியதாகவுமெழுகினுர். சரித்திர ஆராய்ச்சியிற் பெரியோராகிய, மற்றொருவர் மாணிக்கவாசகர் பிரமசாரியானதால் அவரை மாணியெனக் கூப்பிட்டு வந்தார்களாம். அதனுற் பிற்காலத்தார் அவருக்கு மாணிக்கவாசக ரெனப் பெயர் கொடுத்தனரென்றும், நரி பரியாக்கினது பரி நரியானது இச்சரித்திரம் கட்டுக்கதைகளென்றும், மாணிக்கவாசகர் அரேபியாதேசமிருந்தும் குதிரைகளைத் தருவித்தாரென்றுமெழுதினுர். இவர்களெல்லாரும் நம் நாட்டவர்களே. நஞ் சமயக்கொள்கை பூண்டவர்களின் சந்ததியாரே.

இஃதிவ்வாறிருக்கப் பேர்போன ஆங்கில சரித்திர ஆசிரியரான ஜே. எ. பிரௌட் அவர்கள், சமய சரித்திரங்களை மற்ற ஜீவிய சரித்திரங்களின் உண்மைகளை அளந்தறிவதுபோல், அறியக்கூடாதென்றும், சமய சரித்திரங்களில் என்றுமழியாத உண்மைகள் புலப்படுமேல் அவைகளே போதுமென்றுங் கூறியிருப்பதாக ஆங்கிலமுந் தமிழும் நன்கு கற்ற ஓர் பெரியோர் எழுதியிருக்கின்றுர்.

இவ்வாறு, சரித்திர ஆராய்ச்சியார்களது சித்தாந்தங்களை முற்றிலு மெழுதுவதானுல் காலம் போதாது. ஆனுல், நந்தமிழ் நாட்டுள் உத்தம சைவ வேளாள குலத்துதித்தவர் யாரும், நம் நண்பர்போலச் சரித்திர ஆராய்ச்சியைக்கொண்டு நமது சமய நுட்பங்களை ஆராய்ந்தவர் ஒருவரையுங் காணேம். நமது சமயமோ; மறையினுல், அயனுல், மாலால், மனத்தினுல், வாக்கால், அளவைகளால் அறியப்படாதது. அதை நமது சிற்றறிவைக்கொண்டு ஆராயப்புகுந்தால் விபரீதப் பொருள் தான் பயக்கும். நம்மவர் மேலே எழுதியிருக்கும் வாசகங்களால் வேதங்கள், ஆதியில் உண்டாயபோது அவைகளில் சைவ சம்பந்தமே இல்லாதிருந்து பிற்காலத்தில் கலந்ததுபோலும் என விளக்கமாகிறது. இவ்வாறு சொல்பவர்களுக்குச் சமாதானங்கூறமுடியாது. அவ்வாறு சொல்வதற்கு ஒரு பண்டைய நூலின் பிரமாணங் காட்டவேண்டும். அவ்வாறு காட்டமுடியாதவராகித் தங்கள் சொற்களையே பிரமாணமாகக் காட்டுவார்.—வேதங்களிலாவது மற்ற எந்நூல்களிலாவது. ஆரியர் பாரசீக நாட்டினின்றும் பஞ்சாப் என்னும் நம் தேயத்

துக்கு வந்தவர்களெனக் கூறப்பட்டிருக்கின்றதா? பாரசிக நாட்டின் ஆதிக்குடிகளாக ஆரியரிருந்தால், அந்நாட்டிலிருக்கும் போதே ஏன் வேதங்களை இவர்கள் செய்யவில்லை. வேதவியாசருக்கு முன் எத்தனையோ தலைமுறைகளுக்கு முந்தி வசிஷ்டர் இருந்தாரே. அக்காலம் வேதங்கள் இல்லையோ? இராமர் காலத்தில் இராவணன் சாமவேதம் ஓதினனென்று சொல்லப்படுகின்றதே. ருக்குவேதத்தின் சில பாகங்களை மேலே காட்டி அவைகளெல்லாம் சிவபிரானையே குறிக்கின்றன வென்பதை மேலே காட்டினோம். சிவதருமோத்தரம் என்னும் உபாகமத்தாலும ஆரியர் நம் நாட்டில் என்றுமுள்ளவரென்பதை விளக்கினோம்.

தொல்காப்பியத்தினுள், அந்தணர் வேதமும் ஆரிய பாடையின் விஷயமு மெடுத்துக் கூறப்பட்டிருக்கின்றன. தொல்காப்பியப்பாயிரத்துள், காணப்படும் நான்மறை யென்பது வியாசர் காலத்திற்கு முந்தியேயிருந்த நான்மறைகள் என ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறினார். கந்த புராணமும் பண்டைய நான்மறைகள் சிதறுண்டு விரிவாய்க் கிடந்ததையே, வியாசர் சிவாக்ஞைப்படிச் சுருக்கித் திரட்டி நான்மறைகளாகச் செய்தனர் என்று கூறும்—சரித்திர ஆராய்ச்சியார், ஆரியர் நம் தேயத்துக்கு வந்து ௩,௫00 ஆண்டுகள் ஆயினவென்பர். வேதங்களும் அதற்குப் பின்னுலுண்டாயினவென்பர். தொல்காப்பியமுண்டாய்க் குறைந்தபட்சம் ஏழாயிரமாண்டுகளாயின. அதில் ஆரியவேதங்களின் ச்சந்தஸ்கள் ஆதிய கூறப்பட்டு அந்தணர் ஆதிய நான்கு வருணத்தவர் விஷயமுங் கூறப்பட்டுள்ளன. நான்மறையோகியர் ஒருவர் (திருமூலர்) திருக்கைலையினின்றும் அகத்தியரிடங்கொண்ட நட்பினுல் அவரைப்பார்க்கத் தென்னுட்டுக்கு எழுந்தருளியதாகப் பெரிய புராணங் கூறும். அக் அகஸ்தியர் காலமோ முதற்சங்க காலத்திற்கு முன்னர். அக்காலங் குறைந்தது இன்றைக்குப் பத்தாயிரம் ஆண்டுகட்கு முன்னர், அத் திருமூல தேவர் இயற்றிய திருமந்திர மென்னும் நூலில். வேதச் சிறப்பும், ஆகமச் சிறப்பும, அவ்வேதாகமங்களின் பெயர்களுடன் கூறபபட்டிருக்கின்றன. ஆரிய வெழுத்துக்கள் ஐம்பத்தொன்று என்றும் வேதாகமங்கள் அவ்வெழுத்துக்களாலாயவையென்றும் கூறப்பட்டிருக்கின்றன. இவைகளின் விரிவை ௬௬௩-ம் பக்கத்தில் காட்டியிருக்கின்றோம். ஆரியர் பிற நாட்டினின்றும் நம் நாட்டிற் குடியேறினவர் என்னுங் கொள்கையைச் சுவாமி விவேகாநந்தரும் மற்றுமோர் ஆராச்சி வல்லுனரும் மறுத்து எழுதியிருப்பதை இவ்வாராய்ச்சியின் ௩0, ௩௩-வது பக்கங்களிற் காட்டியிருக்கின்றோம்.

ஆதலால், சரித்திர ஆராய்ச்சிப்படி விளங்கும் உண்மையெனக் கூறிக்கொண்டு அதனடியில் எழுதியிருக்கும் நம் நண்பர் உரை, அவர் ஒருவரால் கட்டப்பட்டதேயொழிய நமது பண்டை நூல்களால் ஆதரிக்கப்படாததொன்றாம்.

வேதங்கள் ஒன்றின் பின் ஒன்றாக உற்பத்தியானதென்பதும் பிற்காலத்தில் தந்திரப்பகுதி அவைகளிற் கலந்ததென்பதும் சரித்திர ஆராய்ச்சி முறைப்படி உண்மையெனவெழுதி "சமயாசாரியர்கள் தோன்றியகாலத்தே இக்கொள்கை நிலை "பெற்றும் பிராமணருட் பலரும் சிவபெருமானையே கடவு "ளெனக்கொண்டு தமது வேதத்தின் உயர்ந்த கருத்தும் "அஃதேயென்ற கொள்கையுடைத்தோராய்த் தாம் செய்யும் "அங்கி (அக்நி) வழிபாடு சிவ வழிபாடே யென்று கருதின "மையால் ஸ்ரீமத் ஞானசம்பந்த மூர்த்தியும், ஸ்ரீமத் அப்ப "மூர்த்தியும் பிறரும் வடமொழி வேதப்பொருள் சைவமென் "பதைத்தழுவி உரைப்பாராயினர். அங்ஙனங்கொள்ளாதாரை "நோக்கி "எரிபெருக்குவ ரவ்வெரி யீசன துருவருக்கமாவ "துணர்கிலர்." "இருக்கு நான்மறை யீசனையே தொழுங் கருத் "தினை நினையார் கன்மனவரே" என்று அருளிச்செய்தமை "காண்க" எனவெழுதி யிருக்கின்றார். (மேலே இக்கொள்கை என்றது வியாசர் காலத்தே தந்திரப்பகுதி வேதங்களிற் கலந்ததென நம்மவர் கூறுங்கூற்றைச் சுட்டுகின்றது) தந்திரப்பகுதி வேதத்திற் பிற்காலத்திற் கலந்ததென்பதற்கு நண்பர் உரையைத்தவிர வேறு நூற்பிரமாணமொன்றுமில்லை. தொல்காப்பியர், அகத்தியர் காலத்தவரான திருமூலர், ஆதியான பண்டையோர் அவர்களியற்றிய நூல்களில் வேதத்தைப் பற்றித் தெளிவாய் எழுதியிருக்கின்றார்கள். நஞ்சமயாசாரியர் காலத்தே பல பிராமணர்கள் கொண்ட வேதக்கொள்கை, அவர்கள் செய்த அங்கிவழிபாடு, இவைகள் சிவவழிபாடு என்று அவர்கள் கருதியிருந்ததனால் அக்கருத்தை யுணர்ந்த நஞ்சைவ சமயாசாரியர்களும் அக்கொள்கையை யநுசரித்து மேற்காட்டிய தேவாரப் பாக்கள் அருளினார்களென்பது நண்பர் கொள்கைபோலும். பிராமணர்கள் அவ்வாறான கொள்கையராய் அக்காலமிருந்திராவிட்டால் இச்செய்யுட்களைச் சமயாசாரியர்கள் அருளிச்செய்திரார் என்பதும் இதனால் போதரும். அன்றியும் பிராமணர்கள் அங்ஙனங் கொள்ளாவிட்டால் "அவ்வெரி" ஈசனதுருவருக்கமாகாமல் ஈசனுக்குரிய அட்டமூர்த்தம் சப்தமூர்த்தமாகியும் குறைவுறுமென்று எள்ளலாய் முடியும். ஆரியம்வேத முண்டாயபோது அதில் சைவப்பகுதிகளில்லாதிருந்தன வென்பதை நம் நண்பர் இக்காலங்கண்

டறிந்தபடி அக்காலம் சமயாசாரியர்கள் அறிந்திலர் என்பதும் சமயாசாரியர்கட்கு அங்கிவழிபாடு உண்மையில் உடன்பாடன்றென்பதுவும் போதரும்.

"பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங்
காலனை யன்றே விகராக்கொண்டு—பாலன்
மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங்
கரணம் போலல்லாமை காண்"

"துரியங்கடந்த சுடர்த் தோகையுட னென்றும்
பிரியாதே நிற்கின்ற பெம்மான்—றுரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித்தான் செய்யுந் தன்மைகளு
மாக்கியிடு மன்பர்க்கவன்" [திருக்களிற்றுப்படியார்]

என்றபடி சமயாசாரியர்கள் பசுகரணம் நீங்கிப் பதிகரணமுடையோரென்றும் பஞ்சகிர்த்தியங்கள் செய்யும் ஆற்றலுடையோரென்றும் பெருமக்கள் கூறியிருக்கும் அருண்மொழிகளெல்லாம் இவர்க்குமருண் மொழிகளாயிற்றே. அந்தோ பாவம்!! பாவம்!! சிவசிவ!! சிவசிவ.!! திருஞானசம்பந்தப் பெருமானே தமது திருவாக்குகளில் தம்மைக்கூறியிருப்பதாவது. "எமதுரைதமதுரையாக"—"வாய்மையினுைமருகேள்வி ஞானசம்பந்தன்"—"பதியான ஞான முனிவன்" "சுற்றுமுற்றுமாயினுன்". என்பவைகளும் நம்பியாண்டார் நம்பிகள் சம்பந்தரைக்குறித்துக் கூறியிருப்பவைகளான "ஆனசீர்த்தத்துவனை நித்தனைச்சைவத்தவாரசை"-"மாணமறையவற்றின் வான்பொருளை" என்பவைகளும் சம்பந்தப்பெருமான் ஏழாமாண்டில் உபநயனச்சடங்கு கொண்டருளிய காலத்தே பிராமணர்கள் அதிசயிக்குமாறு சடை, பதம், கிரமம் பொருந்த எண்ணிறந்த வேதங்களையும் அவற்றின் பொருளையும் அருளினுரென்று சேக்கிழார் கூறியருளியதும் பொய்வார்த்தைகளாம். சேக்கிழார் வார்த்தை பொய்யாகுமேல், "உலகெலாம்" என நடேசப்பெருமான் முதலெடுத்துக் கொடுத்ததாகக்கூறும் மொழியும் பொய்யாய் முடியுமே. இக்காலத்திய கல்வியாளர் களிற் சிலர், "பாடங்கொள்பனுவற்றிறங் கற்றுப்போய், நாடங்குள்ளன தட்டிய நாணிலீர்" என்னும் அப்பமூர்த்திகள் திருவாக்குக்கு இலக்கியமாய், வயிறுவளர்க்கவேண்டி நடுவுநிலைமையினில்லாது அவைக்களத்துள்ளோர் நோக்கம் போல் சொற்பொழிவு செய்தல் போல நம் பெருமக்களும் உலகினர் கருத்துக்குத்தக்கவாறு பாடினுர்களே யொழிய உண்மையைக்காட்டி உபகரித்திலர் என்பது பெறப்படுமே!!! இக்காரணங்களால் நம்மவர் கொள்கை பூஷிக்கப்படுவதன்றென்பது ஒருதலை. அங்கிவழிபாடு சிவாகமங்களுட் கூறப்பட்டு சிவாலயங்களுள் அவ்வழிபாட்டுக்கென்றே யாகசாலை மண்டபம் எனத் தனி

பாகச் சிற்ப சாஸ்திர முறைப்படி ஆலயம் கட்டப்படும்போதே சமைக்கப்பட்டு நித்திய நைமித்தியங்களிலும் உற்சவாதிகளிலும் பிரதிஷ்டை கும்பாபிஷேக காலங்களிலும் பலவித குண்ட மண்டலங்களோடு நிகழ்ச்சிபெற்று வந்துகொண்டே யிருக்கின்றது. சைவர்கள் எனப்படும் வேளாளர்களும் சிவபூஜா காலங்களிலும் மற்றைய சுபா சுப காலங்களிலும், அங்கிவழிபாடு தொன்றுதொட்டே பாரம்பரியமாய் கைக்கொண்டு வருகிறார்கள். வடமொழிச் சிவாகமப்படி தமிழில் ஏற்பட்ட சிவபூஜா பத்ததிநூல்களிலும் அங்கிவழிபாடு இன்றியமையாத தொன்றெனக் கூறப்பட்டுமிருக்கின்றது. "வடமொழி இருக்கு "வேதத்துட்போந்த சில பகுதிகட்கு மெய்கண்டார் சைவப் "பொருள் கொண்டனர்" எனவும் நம்மவர் எழுதியிருக்கின்றார். மெய்கண்டார், வேதத்துள் சைவப் பகுதி யிருந்தமையினல் வேதத்திற்குப் பிற்காலம் தாமருளிய தமிழ்ச் சைவநூலில் அவ்வேதப் பகுதியை ஒரு பிரமாணமாகக் காட்டினரேயல்லாது பிறிதொன்றுமல்ல. 'இக்கிரமத்தென்னுமிருக்கு' என்னும், மெய்கண்டாரது திருவாக்கின் பொருளுட்பமறிந்தவர்கள் இதன் உண்மை யறிவார்கள். "தேவர் குறளுந் திருநான்மறைமுடிபும்" என்ற செய்யுளில் நான்குவேதங்களும், தேவார திருவாசகங்கள், பிரமசூத்திரம், திருமந்திரம் ஆதிய நூல்களும் ஒரே வாச்சியப் பொருளைக் கொண்டதெனச் சர்ஸவதியின் அவதாரமாகிய ஔவைப் பிராட்டியாரும் அருளிச் செய்திருப்பதாலும், நான்கு வேதங்களும் தேவாரமாதிய தமிழ்நூல்களும் ஒரே பொருளைக் குறித்தனவென்பதையு மறியலாம். சமயாசாரியர்களும், சந்தான குரவர்களும் வேதத்தில் சைவ மார்க்கமிருக்கின்றதென அவர்கள் கண்டு போதித்த மார்க்கத்தைக் கைவிடாது அவ்வழி யொழுகுவதுதான் அவர்கள் சந்தான பரம்பரையிற் றேன்றிய மாணக்கர்கட்கு அழகு. ஆசாரியர் காட்டிய வழி நடவாதவர் ஆசாரியர் அநுக்கிரகத்தைப் பெறுவரோ? யாது பிரயோஜனங் கருதி நஞ் சமயாசாரியர் கொள்கைக்கு முரணுக இவர் எழுதுவதோ அறியக்கூடவில்லை. ஆராய்ச்சியினும் கல்வித்திறமையினும் அநுபவத்தினும் மிக்குயர்ந்த சுவாமி வேதாசல மென்பார், நவீனக் கொள்கை பெரிது முடையராயிருந்தும், அவரெழுதிய "தமிழ் நான்மறையின் தெய்விக உண்மை" யென்ற வோருரையில், தமிழ் நான்மறை யென்பது தேவார திருவாசகமென்றும், அவற்றிற்கும் வடமொழி நான்மறைக்கு முள்ள பேதம், இருபாஷைகளும் தங்கண் உள்ள சாத்திர உண்மைப் பொருளை அறிவுறுத்துச் சிவானந்தப் பேற்றை யெய்துவிக்குஞ் சிறப்புடையனவாயினும் முன்னையது திராட்சபாக அமைதியும்

பின்னையது நாரிகேளபாக அமைதியும் பெற்றுப் பிரகாசிக்கின்
றனவெனப் பொருள் கொண்டு எழுதியிருக்கின்றார். நம்
மவரைப்போலத் தேவார திருவாசகத்தை யொழித்துத் தமிழ்
நான்மறை வேறு இருந்து கடல்கோளில் அழிந்துபோனதாக
அவர் கூற முன்வந்திலர்.

நிற்க, இனி நம்மவர் திருவிளையாடற் புராணத்தி
ருக்கு. வேதத்திற்குப் பொரு ளருளிச்செய்த படலத்திற்
றுள்ள வேதத்திற்குப் பொரு ளருளிச்செய்த படலத்திற்
கூறும் சரித்திரத்தை விளக்கப் புகுந்தார். அவர் எழுதுவதா
வது. "வேதத்திற்குப் பொருளருளிச்செய்த படலத்தில் காசியி
"லிருந்த முனிவர்கள் திருவாலவாய் வந்து தென்முகக் கடவு
"ளிடம் வேதப் பொருள் கேட்டனர் என்று சொல்லப்பட்
"டிருக்கின்றது. வடமொழியிலுள்ள வேதத்தையே அங்குப்
"புராண ஆசிரியர் குறித்திருக்கின்றார். வேதம் வடமொழி
"யிலே யிருப்பவும், அதற்குப் பொருள் தென்றமிழ்
"நாட்டிலே வந்து கடவுளிடத்துக் கேட்டனர் என்று சொல்லு
"தல் பொருத்தமில்லாததாகவே தோன்றுகின்றது. அக்கதை
"யின் கருத்தை யாதென யூகிக்குமிடத்து வடமொழி வேதத்
"திற் கூறிய சமயம் வேறாகவும் அவற்றிற்குப் புறமாய்க் கூற
"வரும் சைவக் கொள்கைகள் மிகச் சிறந்தனவாகவும்
"கண்டோருட் சில ஆரியர் தமது வேதத்தையும் கடவுள்
"வாக்கென்ற கொள்கை யுடையராதலின் வேதத்தை விடு
"வதோ சைவத்தைப் பற்றுவதோ என்ற ஐயமுடையவர்
"களாய்த் தென்னாட்டிலே சென்று சிவோபாசனை செய்யில்
"கடவுள் அதனை விளக்குவாரென்று கேள்விப்பட்டுத் திரு
"வாலவாய்க்கு வந்து கடவுள் அருளால் உண்மை தெரிந்தனர்
"என்பதே கொள்ளற்பாலது. அஃதன்றெனின் அக்கதை
"யைப் பொய்யென்று கொள்ளவேண்டும்" என்று எழுதி
முடித்தார்.

இப்பகுதிதான்; நம்மவரெழுதியது இவ்வாராய்ச்சிக்
குரியதுமான திருநான்மறை விளக்க முடிபுக்குச் சற்று
முந்திய பகுதி. வேதப்பொருள் கேட்கவந்த முனிவர்
காசியினின்றும் வந்ததாகத் திருவிளையாடற் புராணத்தில்
கூறுவதாக இவர் சொல்வது பொய். தென்னாட்டிலே சிவோ
பாசனை செய்யில் கடவுள் அதனை விளக்குவாரென்று கேள்விப்
பட்டு திருவால வாய்க்கு வந்தாரென இவர் எழுதியிருக்கின்
றாரே. வடநாட்டிலே யிருந்து சிவோபாசனை செய்யின் கட
வுள் அதை விளக்கமாட்டாரா? தென்னாட்டுக் கடவுள் வேறு
வடநாட்டுக் கடவுள் வேறா? அகத்திய மாமுனிவருக்குக் குமர
வேள் காசியின் சிறப்பை "இலகுகடர் விச்சவாதர் ... வாக

கடவுளிலிங்கமு நீர், சுலவு மணிகர் ணிகைக்கிணை யார்ந்துகடீர் தெய்வத் தீர்த்தமும்வான், கலவமஞ்ஞை நடம்பயிலுங் காசிக் கிணையா நன்னகரு, முலகமொரு மூன்றினுமிலை யீதுண்மை யுண்மை யுண்மையால்" என்று முக்காலும் கூறினர். இவ் வரிய பெரிய சிறப்புவாய்ந்த அக்காசிப் பதியினுறைவோர் அஃதைவிட்டுப் பன்னூறுகாத தூரமுள்ள மதுரைக்கு ஏன் வரவேண்டும். வேதம் வடமொழியிலிருப்பவும் அதற்குப் பொருள் தென்றமிழ் நாட்டிலே வந்து கடவுளிடத்துக் கேட்டனர் என்று சொல்வது பொருத்தமில்லாததாகவே தோன்றுகிறது எனவெழுதினரே? இவருக்குப் பொருத்த மில்லாததாகத் தோன்றுதற்குள்ள நியாயம் இன்னதென வெழுதினரில்லை. இவருக்குத் தோன்றுவது சித்தாந்தமோ? வடமொழி தென்னாட்டிலில்லையென்பது இவர் கருத்தோ? அல் லது வடமொழி வேதப்பொருள் வடநாட்டுக் கடவுளுக்குத் தெரியாதென்பதும், தென்னாட்டுக் கடவுளுக்குத்தான் வேதத் தின் உண்மைப் பொருள் தெரியுமென்பதும் இவர் கருத்தோ? தெரியக்கூடவில்லை. தமிழ்நாடு திருப்பதிவரை அதாவது மது ரைக்கு வடக்கு சுமார் ஐம்பது காதம்வரை பரவியிருக்கவும் அவ்விஸ்தாரமான தமிழ்ப்பூமியில் எண்ணிறந்த சிவாலயங்கள் தோன்று தொட்டு விளங்கவும் அவைகளை எல்லாங்கடந்து மதுரைக்கு அவர்கள் ஏன் வரவேண்டும். நம் நண்பர் சித் தாந்தத்தில், இவ்வகை ஆசங்கைகள் பலவெழுமாதலால், திரு விளையாடற் புராண ஆசிரியர் கூற்றுப்படி மதுரைமாநகரம் விராட்புருடனது சென்னிப்பன்னிருவிரன் மேலுள்ள துவாத சாந்த க்ஷேத்திரமானதால் அம்முனிவர்கள் திருவாலவாய்க்கு வந்தனரென்று கூறுவதே சங்கையற்றதென்பதை யுணரவேண் டும். வடமொழிக்கும் தென்மொழிக்கும் தந்தையாயினோர் சிவபிரானே என்றும், ஆதலால் ஆரியமுஞ் செந்தமிழும் ஒன்றையொன்று விரோதியாமல் நாடெங்கும் பரவி யிருக் கின்றனவென்றும் சிவபிரான் ஒருவரே முழுதற் கடவுளாகி அண்டபிண்டசராசரங்கட்கெல்லாம் இறைவனாய் விளங்குகின் றாரெனவும் வேதசிவாகமங்கள் அவராலே அருளப்பட்ட முத னூல்களெனவும் நமது சைவநூல்கள் கூறுவதை உணர்ந்தோர், நண்பர் கருத்தோடு ஒன்றுபடார். தென்றமிழ்வேதம் வேறு, வடமொழிவேதம் வேறு, தென்திசைக் கடவுள் வேறு வட திசைக் கடவுள் வேறு, என்னும் விசித்திரக்கொள்கை பூண்ட வர்கள் தான் இவ்வாறு சொல்லுவது தகுதி. நிற்க, வட மொழி வேதத்துட் கூறிய சமயம் வேறு என நம்மவர் எழுதி னர். பிரமசூத்திரத்திற்குப் பாஷியம் ஆதியிற் செய்த ஸ்ரீநீல கண்டர் வேதசிவாகமங்கட்குப் பேதங்கண்டிலேம் எனவெழுதி

னர். திருமூலதேவரும் இரண்டு அந்தமும் பெரியோர்க்கு அபேதம் என அருளினர். மற்றும் நஞ்சைவ சமயாசாரியர்களும், சந்தானசாரியர்களும் சைவசித்தாந்த ஆனுபூதிமான்களும் வேதாந்தத்திறம் சைவமென்றும், வேதாந்தத் தெளிவிற் பழுத்தது சைவசித்தாந்தமென்றும், பன்முறை கூவிக்கூவி அறைந்துள்ளார்கள். இவ்வரிய பிரபல பிரமாணங்கட்கெல்லாம், மாறுபட்டு நம் நண்பர் வடமொழி வேதத்துட் கூறிய சமயம் வேறு என்று தங்கோளைநிறுவற் பொருட்டு மாற்சரியத்தினால் கூறினரென்பதை வெள்ளிடைமலைபோலத் தெள்ளிதிற் புலப்படக்காட்டுதும். இவர் வேதத்துட் கூறிய சமயம் வேறு என்றது ஆரியசமயம் ஒன்றைக்கருதியே. வேதத்தில் உலகத்தினுள்ள பல மதங்களும் தூலசூக்குமமாகக் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வுண்மை 'வேதமென்னும் பாதவம்வளர்த்தனை பாதவமதனிற்படு பயன்பலவே' எனும் குமரகுருபர சுவாமிகள் திருவாக்காலுணர்க. ஆகமத்தும் அவ்வாறே பல சமயங்கள் கூறப்பட்டுள்ளனவென்பது "வேதநூல் சைவநூலென்றிரண்டே நூல்கள், வேறுரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள்" என்னும் சித்தியார் திருவிருத்தத்தால் உணரலாம். ஆனல் வேதத்தின் உண்மையறியாத சில பார்ப்பனர் சிவபிரானை முழுமுதற் கடவுளாகக் கருதாது பலவகையான ஆபாசங்களை மொழிவர். அது தக்கன் யாகத்துச் சிவபிரானை நிந்தனை செய்ததனால் ததீசி ஆதிய மகா சைவவிருடிகளால் இடப்பட்ட சாபத்தின் பயனென்றுணரவேண்டும். அவ்விஷயத்தில் யாஞ்செய்யத்தக்க தொன்றுமில்லை

"பேசரியமறைகளெலாம் பராபரனீ யெனவணங்கிப் பெரிதுபோற்று
மீசனையுமன்பரையு நீற்றோடு கண்டி கையினையு மிகழ்ந்துநீவிர்
காசினியின் மறையவரா யெந்நாளும்பிறந்திறந்து கதியுறாது
பாசமதனிடைப்பட்டு மறையுரையா நெறியதனிற் படுதிரென்றான்"

"முறைபடு சுருதியெல்லா மொழியினு மதுவேசார்வா
வுறுகிலராகிப் பொல்லா வொழுக்கமே கொண்டுமுக்க
ணிறைவனை யிகழ்ந்து முத்தியெய்திடாதுழல முன்னாண்
மறையவர் பெற்றசாப மின்னையு மயக்குறாதோ"

"தாதையாய்த் தம்மைநல்கித்தந் தொழிற் குரியனாகி
யாதியாய்த் தங்கட்கின்றி யமைவுறாச் சிவனைநீங்கி
யேதிலார் பக்கமாகி யில்லொழுக்கிறந்தார் போலும்
வேதியர் முறையேசெய்தாய் வெறுப்ப தெனின்னையானே"

எனும் கந்தபுராணச் செய்யுட்களாலும்

"பலவகைப்பவந்தோ றெய்திடுந்தவத்தோர் படர்ந்தெழுமகத்திருள் [கடிந்தோர்
நலமுறுமியமநியம நற்செய்கைநயந்து ளோருனைப்பெற முயல்வார்

*கலியுறுநவை சேருளத்தவர சுரக்கடுமையர்த ரீசியாதிகளா*
*லலமரச் சபிக்கப்பட்டுளோ ரெவ்வாறறிவரோ வையநின்றனேயே"*

எனும் பிராமண குலோத்தமராகிய அப்பயதீட்சித முனிவர் இயற்றிய சிவ தத்துவ விவேகச் சுலோகத்தின் சிவஞான முனிவரது மொழி பெயர்ப்புச் செய்யுளாலும் அறிந்துகொள்க.

மேற்காட்டிய, ஸ்ரீநீலகண்டர், சித்தாந்த நூலாசிரியோராதியோர்கள், கருத்தைத் தழுவியே, சிவஞான போதபாஷிய கர்த்தர் பாடியம் கஙு-ம் பக்கத்தில் கூறுவதாவது. "இனிவேத "முஞ் சிவாகமு மொன்றேயாயினும் இருபகுதிப்பட்டது. "வேதம் மூன்று வருணத்தாருக்கும் சிவாகமம் நான்கு வருணத் "தாருக்கும் பொதுவாதல் பற்றியாதலால் சிவாகமங்கள் பிர "மாணம் என்பது தெற்றென உணர்க. இங்ஙனம் சைவாக "மங்களுக்குப் பிராமாணியம் பவுட்கர உரையின் உமாபதி "சிவாசாரியர் காட்டியவாறே காண்க." நீலகண்ட பாடியத்திற் பதியதிகரணத்திற்காட்டுமாறு:-"சிவாகமங்களில் ஒருசாரன "பரப்பிரமங் கேவலம் நிமித்த காரணம் எனக் கூறும்; அதனை "மறுத்தற்கு எழுந்தது இவ் வதிகரணமென்று உரைப்பாரு "முளர்; அது பொருந்தாது; யாம் வேதத்திற்குஞ் சிவாகமத் "திற்கும் வேற்றுமை கண்டிலம்; சிவனாற் செய்யப்படுதலின் "வேதமுஞ் சிவாகமமெனப்படும்; ஆதலாற் சிவாகமம் மூன்று "வருணத்துக்கே உரித்தாயதும் நான்கு வருணத்துக்கே உரித் "தாயதும் என இருவகைப் படும். அவற்றுள் முன்னையது "வேதம் எனவும் பின்னையது சிவாகமம் எனவும் வழங்கப்பட் "டன; இவ்விரண்டுஞ் செய்த கருத்தன் சிவன் ஒருவனேயாம்; "இவ்வாறு சுருதியினும் புராணங்களினுஞ் சிவாகமங்களினுங் "கூறப்பட்டது; பஞ்சப் பிரமம் பிரணவம் பஞ்சாக்கரம் பிரா "சாத முதலிய மந்திரங்களும், பதி, பசு, பாச முதலிய பொருள் "வழக்கமும், திருநீற்றின் உத்தூளனம் திரிபுண்டரம் உருத்தி "ராக்கம் தரித்தல் சிவலிங்க பூஜை முதலிய தருமங்களும் பிற "வும் வேதஞ் சிவாகமம் இரண்டினும் ஒப்பக் காண்டலான், "அவ்விரண்டும் பிரமாணமே ஆகலானும், கருத்தா ஒருவனே "ஆகலான் அவ்விரண்டிற்கும் பொருள் ஒன்றேயாகலின் அவற் "றுள்ளும் மாறுபாடின்மையானும், இவ்வதிகரணங் கேவலம் "நிமித்த மாத்திரமே இறைவன் எனக் கூறும் இரணிய கருப்ப "நூலாகிய யோக சாத்திரத்தை மறுத்தற்கு எழுந்ததெனவே "யாங் கூறுதும்" என்று இவ்வாறு நீலகண்ட சிவாசாரியராற் காட்டப்பட்டது."

பின்னும் "புறச்சமயத்தவர்க்கிருளாய்" என்னுஞ் "சிவப்பிரகாசப்பாயிரம், எ-வது செய்யுளிற் காணப்படும்

*கலியுறுநவை சேருளத்தவர சுரக்கமெமையர்த தீசியாதிகளா
லலமரச் சபிக்கப்பட்டுளோ ரெவ்வாறறிவரோ வையநின்றனையே"*

எனும் பிராமண குலோத்தமராகிய அப்பயதீட்சித முனிவர் இயற்றிய சிவ தத்துவ விவேகச் சுலோகத்தின் சிவஞான முனிவரது மொழி பெயர்ப்புச் செய்யுளாலும் அறிந்துகொள்க.

மேற்காட்டிய, ஸ்ரீநீலகண்டர், சித்தாந்த நூலாசிரியோ ராதியோர்கள், கருத்தைத் தழுவியே, சிவஞான போதபாஷிய கர்த்தர் பாடியம் கசு-ம் பக்கத்தில் கூறுவதாவது. "இனிவேத "முஞ் சிவாகமு மொன்றேயாயினும் இருபகுதிப்பட்டது. "வேதம் மூன்று வருணத்தாருக்கும் சிவாகமம் நான்கு வருணத் "தாருக்கும் பொதுவாதல் பற்றி யாதலால் சிவாகமங்கள் பிர "மாணம் என்பது தெற்றெனெ உணர்க. இங்ஙனம் சைவாக "மங்களுக்குப் பிராமாணியம் பவுட்கர உரையின் உமாபதி "சிவாசாரியர் காட்டியவாறே காண்க." நீலகண்ட பாடியத்திற் பதியதிகரணத்திற்காட்டுமாறு:-"சிவாகமங்களில் ஒருசாரன "பரப்பிரமங் கேவலம் நிமித்த காரணம் எனக் கூறும்; அதனை "மறுத்தற்கு எழுந்தது இவ் வதிகரணமென்று உரைப்பாரு "முளர்; அது பொருந்தாது; யாம் வேதத்திற்குஞ் சிவாகமத் "திற்கும் வேற்றுமை கண்டிலம்; சிவனுற் செய்யப்படுதலின் "வேதமுஞ் சிவாகமமெனப்படும்; ஆதலாற் சிவாகமம் மூன்று "வருணத்துக்கே உரித்தாயதும் நான்கு வருணத்துக்கே உரித் "தாயதும் என இருவகைப் படும். அவற்றுள் முன்னையது "வேதம் எனவும் பின்னையது சிவாகமம் எனவும் வழங்கப்பட் "டன; இவ்விரண்டுஞ்செய்த கருத்தன் சிவன் ஒருவனேயாம்; "இவ்வாறு சுருதியினும் புராணங்களினுஞ் சிவாகமங்களினுங் "கூறப்பட்டது; பஞ்சப் பிரமம் பிரணவம் பஞ்சாக்கரம் பிரா "சாத முதலிய மந்திரங்களும், பதி, பசு, பாச முதலிய பொருள் "வழக்கமும், திருநீற்றின் உத்தூளனம் திரிபுண்டரம் உருத்தி "ராக்கம் தரித்தல் சிவலிங்க பூஜை முதலிய தருமங்களும் பிற "வும் வேதஞ் சிவாகமம் இரண்டினும் ஒப்பக் காண்டலான், "அவ்விரண்டும் பிரமாணமே ஆகலானும், கருத்தா ஒருவனே "ஆகலான் அவ்விரண்டிற்கும் பொருள் ஒன்றேயாகலின் அவற் "றுள்ளும் மாறுபாடின்மையானும், இவ்வதிகரணங் கேவலம் "நிமித்த மாத்திரமே இறைவன் எனக் கூறும் இரணிய கருப்ப "நூலாகிய யோக சாத்திரத்தை மறுத்தற்கு எழுந்ததெனவே "யாங் கூறுதும்" என்று இவ்வாறு நீலகண்ட சிவாசாரியாரற் காட்டப்பட்டது."

பின்னும் "புறச்சமயத்தவர்க்கிருளாய்" என்னுஞ் "சிவப்பிரகாசப்பாயிரம், எ-வது செய்யுளிற் காணப்படும்

“வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத்திறன்” என்ற
“பகுதிக்குச் சிவஞானமுனிவர் கூறும் விருத்தியாவது (பாடி
“யம் சுOசூம் பக்கம்) வேதாந்தமுஞ் சித்தாந்தமும் வேறு
“என்பாரை மறுத்துப் பல பொருள்படுஞ் சூத்திரத்தை அங்
“ஙனம் படாமைத் தெளித்துரைக்கும் பாடியம்போல வேதாந்
“தத்தைத் தெளித்துரைப்பதே சைவ சித்தாந்தமென்பார்,
“மகுடாகமம் முதலியவற்றுள் * ஓதியவாறே “வேதாந்தத்
“தெளிவாஞ் சைவ சித்தாந்தத்திறன்”, என்றார் என்பது—
மேலே காட்டிய படிக்குள்ள நம் ஆன்றோரது பிரமா
ணங்களுக்கும் முரணாயது, “வேதத்திற்கூறிய சமயம் வேறு”
என நம் நண்பர் அவரது யுக்தி யொன்றானே எழுதியது எனச்
சைவ மக்கள் பல்லோருங் கொள்வார்—இன்னமும் அம்முனி
வர்கள் திருவாலவாய்க்கு வந்து கடவுள் அருளால் உண்மை
தெரிந்தனர் என்பதே கொள்ளற்பாலது எனவெழுதினாரே.
கடவுள் அருளை அவர்கள் தென்றமிழ் நாட்டில் எவ்வாறு
பெற்றனர் என்பதை நம்மவர் விரித்திலர். இவரது இறந்து
போன தமிழ் நான்மறையையாவது அதன் பொருளையாவது
அவர்கள் கண்டுபிடித்துக் கடவுள் அருளைப் பெற்றிலர், மற்
றெவ்வாறெனில் “§ வடநிழலமர்ந்த மறைமுதன்மேதாமனு
¶ வெழுத்திருபது மிரண்டுந்—திடமுறவா பத்தன்றனுற்
றெளிந்து” எனக் கடவுள் அருளைப்பெற்றதற்குக் காரணம்
அப்புராணத்திற் கூறியுள்ளது. இன்னமும், திருவாலவாய்க்கு
வந்து கடவுள் அருளால் உண்மை தெரிந்தனர் என்று நம்மவர்
சொன்னாரேயொழிய அவ்வுண்மை யின்னதெனக்கூறினாரில்லை.
அவ்வுண்மை என்னவெனத் திருவிளையாடற் புராணத்தைப்
பார்க்குமிடத்துத் தட்சிணாமூர்த்திக் கடவுள் அம்முனிவர்
களுக்கு நேரில் பிரசன்னராகி அநுக்கிரகித்ததாவது. “சிவா
கம நூலீச்சுரவரனடு முகத்துதித்த” என முதலில் அனுக்கிர
கித்தார். சிவபெருமானே வடமொழிச்சிவாகம உற்பத்தி தம்
மிடமிருந்து ஆயினவென அருளியிருக்க நம்மவர் ஏன் அதற்கு
முரணாகத் தமில் உஅ-ஆகமங்களிருந்தன போலவும் அவை
களின் மொழிபெயர்ப்பு வடமொழி ஆகமம் என்றும் தமிழி

* வேதஸாரம் தந்தந்திரம் ஸித்தாந்தம் பரமம் சுபம்.

§ திருவிளையாடற் புராணம் வேதத்துக்குப் பொருளருளிச் செய்த
படலம். கரு-வது செய்யுள்.

¶ மேதாமனு என்றது தக்ஷிணாமூர்த்தி பேதங்களுள் ஒன்றாய் விளங்
கும் மேதா தக்ஷிணாமூர்த்திக்குரிய இருபத்திரண்டு அக்கரங்களாலாய
மூலமந்திரத்தை. இது வடமொழி மந்திர சாஸ்திரங்களிலேயே கூறப்பட்
டுளது.

ருந்த ஆகமம் கடற்பெருக்கிற் போயது எனவும் கற்பிக்க ஆரம்

பித்தார். இச்செய்யுளில் வடமொழி ஆகமம் எனக்கூறவில்லை யெனில் தென்மொழி ஆகமமென்றுங் கூறவில்லை. மற்றுவட மொழியென எவ்வாறு பொருள்கொள்வதென்றாலோ, அடுத்த செய்யுட்களில் இருக்கு முதலிய நான்கு வேதங்களும் சிவபிரா ஞல் அருளப்பட்டதெனக் கூறியிருப்பதனுலும், நமது நண்பர் நான்கு மறைகளைத் தமிழ்முனிவர் நால்வர் கூறிஞரென்று சொல்வதாலும் அவைகள் வடமொழியே யென்பது திண்ணம். முக்காலமுமுணர்ந்த திருமூலர் ஆதியோர் வேதசிவாகமங்கள் வடமொழியின் எழுத்துக்களால் ஆயவென அருளியிருப்பதா னும் அவ்வடமொழி சிவாகமங்களேநந் தமிழ் நாட்டிலும் மற்று எந்நாட்டிலுமுள்ள சிவாலயங்கட்டோறும் பண்டைக்காலம் முதல் வழங்கப்பட்டு நிலைபெற்றிருக்கின்றமையானும் அருணந்திசிவ மும் அவ்வாறே அருளியிருப்பதானும் (காரியமாய் என்னுஞ் சிவஞானசித்தியார் செய்யுளைப்பார்க்க.) இச்செய்யுளில் கூறப்பட்டுள்ள ஆகமம் வடமொழியென்றே கொள்ளவேண்டு மென்பதுறுதி. பின்னர்க் கடவுள் என்ன அநுக்கிரகித்தா ரெனில்,

"கீட்டிசை முகத்தொன்றடுத்த நாலைந்திற்கிளைத்ததா லிருக்கது தென்பா
லீட்டியவிரண்டாம் வேதநூறுருவோ டெழுந்தது குடதிசை முகத்தி
னீட்டிய சாமமாயிர முகத்தானிமிர்ந்தது வடதிசைமுகத்தி
ஞட்டிய வொன்பதுருவொடு கிளைத்து நடந்தது நான்கதாமறையே"

என்றும்

"மறைவழி மதங்கட்கெல்லா மறைபிரமாணம் பின்சென்
றறைதரு மிருதியெல்லா மவைக்கனு குணமாமின்ன
முறையினுன் *மார்த்தமென்று மொழிவதும் மார்த்தஞ்சேர்ந்த
துறைகள் வைதிகமா மேலாச்சொல்வதிச் சுத்தமார்க்கம்" என்றும்

"நிறைபராபரம் விஞ்ஞான நிராமயமென்று நூல்க
ளறைபரம் பிரமமாகு மதனுருவாகு மேக
மறையிதன் பொருளே யிந்தசசுந்தர வடிவாயிங்கு
னுறைசிவலிங்க மொன்றேயென்பர் நூலுணர்ந்த நல்லோர்"

என்றும்

"கிரியையான் ஞானந்தன்றற் கிளர்சிவ பத்திபூசை
தரிசனஞ் சைவலிங்க தாபனஞ் செய்தலீசற்
குரிய மெய்யன்பர்பூசை யுருத்திர சின்னந்தாங்க
லரிய தேசிகன்பாற் பத்தியனைத்தையுந் தெரியலாகும்" என்றும்

---

* மார்த்தம் என்றது ஸ்மார்த்தம் எனும் வடமொழியின் திரிபு. சாங் கிய முதலியவற்றை நோக்க ஸ்மார்த்தம் மேலென்பது இதன் கருத்து. இம்முனிவர்கள் வேதப்பொருளை விரும்பினமையால் இறைவன் வைதிக மார்க்கத்தை உபதேசித்தார். வைதிக சைவம் வேறு என்பதைக் காட்டு தும். திருவிளையாடலில், சிவாகமநூ லீச்சுரன்னமுகத்துதித்த என்று

அருளிச்செய்திருப்பதில், இருக்காதிவேதங்கள் சிவபிரானிட
மிருந்தே தோன்றினவென்றும் அதற்கு அநுகுணமாய்
ஸ்மிருதி ஆதிய தோன்றினவென்றும், வேதத்திற் கூறுவது
ஓரே கடவுளைப்பற்றியென்றும், அக்கடவுள் சிவபிரானே என்
றும், அவரைச் சிவலிங்கத்தினிடமாய்ப் பூசையாதிய செய்
தலே கிரியாமார்க்கமென்றும், அதுதான் வைதிக சுத்த
ஸ்மார்த்த மார்க்கமென்றும், தமிழ்நாட்டுத் தட்சிணாமூர்த்திக்
கடவுளே உபதேசித்ததாகத் தெளியதாய் விளங்குகின்றது.
நம்மவரே எடுத்துக்காட்டிய திருவிளையாடற் புராணத்தில்
உண்மை இஃதெனக் கடவுளே கூறியிருக்க நம்மவர் § "வட
"மொழி இருக்குவேதத்துட் போந்த ஆயிரத்திருபத்தெட்டுச்
"சூக்தங்களுள் இருநூற்றின் மேற்பட்டவை இந்திரனைப்
"பற்றிக் கூறப்படுவன. அவன்பாற் செய்யப்படும் கொலை,
"குடி முதலிய பயிலும் வேள்விகள் பலப்பல இந்திரவணக்
"கமேயன்றி எண்ணிறந்த தெய்வங்களின் வழிபாடும் சிறப்
"பாகக் கூறப்படுகின்றன.......................இன்னும் மணமிலா
"இளைஞனும் கைம்பெண்ணுங் கலந்ததின் பயனைக் கருவி
"யாகக் கொண்டு செய்யும் பௌண்டரிகயாக முதலிய மிக
"வெறுக்கத்தக்க வேள்விகளும் வேதத்துட் காணப்படுவதாகத்
"தெரிகின்றது. இங்ஙனங் கொலை முதலியன விதிக்கும்
"நூல்களைச் சிவவாக்காகவும் கூறுதல் அபிமானம் பற்றியோ,
"அறியாமை பற்றியோ அறிகிலம். இருக்கு வேதம் போன்ற
"ஒரு நூல் தமிழில் வேண்டுமானால் காடன், மாடன், காட்டேரி
"வீரப்பன் முதலிய சிறுதெய்வங்களுக்கு இழிகுலத்தார்
"பாடும் பாட்டுக்களையும் அவர்கள் வணங்கும் வழக்கங்களை
"யுந் தொகுத்துள்ள கதைகளையும் கோவைசெய்து ஒரு
"நூலாக்கி அத்தொகை நூலை மறையல்லது வேதமென்ற பெய

கூறி அது பற்றி விரிக்காது நால்வேறு வகையாய் அருமறையின் விரித்
செய்திகளைக்கூறி, நித்திய முதலியவற்றுக்குச சிவகோசங்காரணமெனக்
கூறி முடித்துப்பின் மறைவழி மதங்கட்கெல்லா மென்றெடுத்துக்
கொண்டு மிருதி அவற்றிற் கனுகுணமெனக்கூறி அதனைச் சுத்தமார்க்க
மென்று முடித்தலின் மறைவழிப்பட்ட கருமகாண்டத்துக்கு மிருதி
அனுகுணமென்பதும் வைதிகத்தின் வழிவந்த ஏனைய மதப்பிரிவுகளெல்
லாம் ஸ்மார்த்தமென்னும் பொதுப்பெயரால் வழங்கப்படு மென்பதும்
விளங்குகின்றன. அங்ஙனமாயினும் ஸ்மார்த்தமுஞ் சித்தாந்த சைவமு
மொன்றாகா. "உலகியல் வேத நூலொழுக்க மென்பதும், இலகு பேயந்
நெறி சிவ நெறியதென்பதும்" எனவும், "மிருதிவழியுழன்றும்" என
வும் முறையே பெரிய புராணத்துஞ் சித்தியாரினும் வரை செய்திருத்த
லோடு பொருந்துமாறே கூறவேண்டும்.

§ செந்தமிழ்ச்செல்வி ருத்திரோத்காரி ஐப்பசி பக்கம் [illegible]

பார்க்க.

"ருடன் அமைக்கவேண்டும்" எனவெழுதியிருப்பதையென்ன வென்று சொல்லலாம். சிவபிரான் வேதத்துக்குப் பொருளறியச்செய்த காலையில் நம்மவர் இல்லாது போயினர். இருந்திருந்தால் இவர்க்குண்டாகிய மேற்காட்டிய இவரது ஆசங்கைகளைச் சிவபிரானிடத்தே வினவி அவரையறியாமை ஆக்கி விடுவார். மற்றையோர் கூறுங்கூற்று இவர்க்குப் பயன்படா. மேற்காட்டிய திருவிளையாடற் சரித்திரத்தை ஏதுக்கு எடுத்துக் காட்டினரோ தெரியவில்லை. அவர் கொண்ட கொள்கை தப்பு என்பதையே இச்சரித்திரம் நிலை நாட்டுகின்றது. இங்கு வேறு ஒன்று விரிக்க வேண்டியதாயிருக்கின்றது. திருவிளையாடற் புராணமும் பெரிய புராணமுந் தமிழ்ச்சைவப் பெருமக்கட்கு இரு கண்கள் போன்றன. சிவபூஜை செய்ய இயலாத்தமிழ்ச் சைவப்பெரியோர், திருவிளையாடற் புராணத்தைக் குருமுகமாகப் பெற்றுச் சிவபூஜை செய்து வருவது போலவே நாடோறும் நியமமாக நேசித்துப் பூசித்து வாசித்து இச்சித்த சித்தியையும் பெற்று வருபவர்களாயிருக்கின்றார்கள். அத்தகைய தெய்வத்தன்மை பொருந்திய ஒரு நூலிற் கூறப்பட்ட வொரு சரித்திரத்தைத் தமது மனம் போலப் (பிழைபட்ட பொருள்) பொருள் கொள்ளாவிடின் அக்கதை பொய் யென்று கொள்ள வேண்டும் என எழுதினரே. இவரது மனோ தர்மம் எத்தகையதோ. கல்விச் செருக்கினல் நக்கீரனுஞ் சிவபிரான் வாக்கை அவமதித்து அதற்குத்தக்க பலனைப் பெற்றதாக நமது நூல்கள் கூறுகின்றன. அத்தகைய நூல்களைக் கற்றறிந்த சைவ மக்கள் கல்வியினாற் செருக்குற்றுத் தம்மை மறவார்கள். இன்னொரு விடய மிங்குக் குறிக்கற்பாலது. குலபூடணனெனும் ஓர் பாண்டியன், சுந்தரேஸ்வரரிடம் மிக்க அன்பு பூண்டவனாகிச் சிவபுண்ணியமெல்லாங் கைக்கொண்டு குறைவுபடாது செய்து அரசாட்சியும் முறைப்படி நடாத்தி வரும் நாள், தான் மிக்க சிவபுண்ணியஞ் செய்து வருபவன் என்னுங் களிப்பையுடையவனாய்த் தனது நாட்டிலுள்ள வேத அந்தணர்களை யிகழ்ந்தும் அவர்களைப் பாதுகாவாதவனுமாயினன். அவர்கள் புறநாடணைந்தார்கள். யாகாதி கிர்த்தியங்கள் நடவா தொழிந்தன, மழை மறுத்தது, பஞ்சம் பரவியது, குடிகளெல்லாம் வருந்தி ஒழிந்தார்கள், அரசன் வருவாய் குன்றியது, அவன் மிக்க கவலை பூண்டு தனது குடிக்கோர் குலதெய்வமாகிய சொக்கக் கடவுளைப் பணிந்து விண்ணப்பஞ் செய்துகொண்டான். இறைவன் அவனது தவறுதலைக் கருதி, நேரில் அருளாராகிச் சொப்பனவத்தையிற் றோன்றி, நீ நம்மிடம் அன்பிற் குறைந்தவனலன், அரசு புரிவதிற் கொடுங்கோனல்லன், ஆனல் வேத அந்தணர்

களை யிகழ்ந்து கைவிட்டாய், வேதமே எனது சொருபம், ஆத
விஞலித்தீங்குநிகழ்ந்தது என அருளப் பாண்டியன் தெளிந்து,
உடனே வேதியர்களைத் தருவித்துத் தக்கபடி ஆதரித்து வந்
தான். வேள்வி ஆகிய கிர்த்தியங்கள் நன்ருய் நடையுற்று
நாடுஞ் செழிப்புற்றதென வோர் சரித்திரம் * இருவிதத் திரு
விளையாடற் புராணங்களிலும் காணப்படுகின்றது. சரித்திர
ஆராய்ச்சியார் இதை நம்பமாட்டார்கள். ஐரோப்பா அமே
ரிக்கா கண்டங்களில் மழை பெய்யவில்லையா? பார்ப்பார்கள்
தங்கள் பிழைப்புக்கு வகைதேடிய சரித்திரம் இதுவென்பார்
கள். ஆனல் இச்சரித்திரம் நமது சமய நூலிற் கூறியுள்
ளதே. ஆதலாற்ருன் சமய நூல்களைச் சரித்திர ஆராய்ச்சி
யால் அளவிட்டுக் காணுதல் அரிதெனக் கூறினேம். சமுத்
திரத்தின் ஆவி வெப்பத்தாற் கிளம்பி ஆகாயமார்க்கத்தி
னிறைந்து காற்றினற் சிதறுண்டு மழையாய் வீழ்கின்றது.
இதற்குக் கடவுள் தயை யென்னவெனக் கூறவேண்டிவரும்.
வெப்பம் சூரியனுல் உண்டாவது. சூரியனைத் தோற்றுவித்தவ
ரார்? சூரியனுக்கு வெப்பத்தையும், சந்திரனுக்குக் குளிர்ச்சி
யையுங் கொடுத்தவரார்? ஆகாயத்தில் மேகங் கிளம்பியும்
மழை பெய்யாது போகின்றதே. அச்சமயம் காற்று உண்டாய்
மேகங்களை மழை பெய்யவிடாது சமுத்திரத்திற்கே தள்ளிக்
கொண்டுபோய்விடுகின்றதே. ஓர் சமயம் ஆண்டுக் கணக்காய்
மழையில்லாது போகின்றதே. ஓர் சமயம் மழையே நன்மை
யுங் கொடுக்கின்றது தீமையும் பயக்கின்றது. இவைகளுக்
கெல்லாங் காரண கருத்தா ஒருவன் வேண்டுமென்பதையும்
அவர்கள் நினையாராகி முடிவில் நாஸ்திகராவர். நிற்கப்
பின்னும் நம்மவர் எழுதுவதாவது:—

ருரு. "திருவிளையாடற் புராணத்து இப்படலத்திலும்,
"கந்த புராணத்திலும், பண்டைக்காலத்தில் பிரளயம் வந்து
"வேதங்கள் அழிந்துபோயினவென்று சொல்வதன் பொருள்
யாதெனில்," என வெழுதிக்கொண்டு தனது கற்பனைத் தமிழ்
நான்மறை, கடலின் பெருக்கில்மறைந்ததாகத்தான் கூறுவதை
அந்நூல்கள் கூறியனபோலப் பொருள்படுமாறு எழுதப்பட்
டிருக்கின்றது. கடல்கோள் என நம் நண்பர் கூறுவது, தென்
மதுரையும் அதன் பக்கமுள்ள நாடுகளும் கடலுள் மறைந்தவற்
றையே. அக்காலம் தென் மதுரைக்கு வடபாகமுள்ள பூமண்
டலப் பரப்பு முற்றும் நிலைபெற்றேயிருந்தது. அதனேடு பாண்
பக்கத்து சமுத்திரக் கரை நகராகிய கபாடபுரத்தைப் பாண்

* இருவிதத் திருவிளையாடற் புராணங்கள், ஒன்று பெரும்பற்றப்
புலியூர் நம்பியார் இயற்றியது. மற்றொன்று பரஞ்சோதியார் இயற்றியது.

டியர்கள் தலைநகராக உடனே கொண்டனர். திருவிளையாடற் புராணத்து வேதத்திற்குப் பொருளருளிச்செய்த படலத்துக் கூறும் பிரளயம் காரண கர்த்தர்களாகிய மும்மூர்த்திகளும், ஈரேழு (பதினான்கு) உலகமும், அண்ட பிண்ட சராசரங்களெல்லாமும், புராணங்கள், ஸ்மிருதிகள் இதிகாசங்கள் வேத வேதாங்கங்கள் எல்லாமும், சிவஞானபோதம் முதற் சூத்திரத்தில் "தோற்றிய திதியே ஒடுங்கி" யெனக்கூறியவாறு சிவத்தினிடம் ஒடுங்கியதாகக்கூறும் மகா பிரளயத்தையென அறிய வேண்டுவது. மீண்டும் சிவத்தினிடமிருந்து, ஒடுங்கின வகை போல மேலே விவரித்துக்காட்டிய எல்லாமும் தோன்றியதாகவும் அப்படலங் கூறும்—இஃதை,

"ஐம்பெரும் பூதமிலை திரிந்தீரே ழடுக்கிய வுலகொடு மயன்மா, லும்
பர்வான் பதமுமுதித்த வாறொடுங்க வுருத்த தோரூழி வந்தெய்தச்
செம்பொருள் மறையு மொடுங்கிய வழிநாட் செஞ்சுடர்க் கடவுண்
[முன் மலரும்
வம்பவிழ் கமலமென வரன்றிருமுன் மலர்ந்ததா லகிலமும் மாதோ."

என்னும் செய்யுளாலும் "பிரணவமுதித்தவதனிடை வேதம் பிறந்தன" வென்னுஞ் செய்யுளாலும் மற்றும் அப்படலத்திலுள்ள செய்யுட்களானும் பிரளயம் வந்து அழிந்துபோன விவரங்களை நன்றாய்ப் புலப்படுத்திக் கூறியிருக்க, அதற்குப் பொருள் நம்மவர் விகற்பமாய்க் கூறுவது என்ன ஆதரவு பற்றியோ? மற்றும் ஒடுங்கினவழியே, சிவத்தினிடமிருந்து வேதம் முதலிய யாவும் தோற்றியதாகவும்மேற்காட்டிய செயயுட்களாலறியக் கிடக்கின்றதே, அவ்வாறு இவரது! தமிழ்நான்மறை ஆதியவுந்தோன்றி யிருக்கவேண்டுமே. அவ்வாறுமில்லையே. ஈதென்ன இவர்கூற்று இந்திரஜால மகேந்திரஜாலக் கற்பனையாயிருக்கின்றது. ஒரு ஆதாரவுமிலாது அவரது சொந்தயுக்திக் கற்பனவுரையை யாவர் கொள்வர். பிரளயம் வந்து அதனால் வேதம் அழிந்துபோனதாகக் கந்தபுராணத்தில் எங்குக்கூறியுள்ளதோ அறிகிலம். கந்தபுராணப் பாயிரச் செய்யுட்களில் வேதம் தலைதடுமாறி முன்பின்னாகவும் பின்முன்னாகவுங்கலந்து போயினமையால் ஒரு நெறிப்படுத்து உண்மை உணர முடியாதாயிற்று. பலசமயங்கள் வேதக்கொள்கைக்கு மாறுதலாயுந் தோன்றின. அதனால், சிவபிரான் ஆணைப்படி விண்டுவின் ஓர் கலைவியாசராகத்தோன்றி, அவர் நினைத்த மாத்திரத்தானே வேதங்களை யோதாதுணர்ந்து உலகினர்க்குக் கொடுத்து உபகரித்தனர் எனக் கூறப்பட்டிருக்கின்றது. பிரளயம் என்னும் பெயரே அங்குக்காணேம். சைவசித்தாந்தப் பெருந்தகையோர்களே! மேற்காட்டியவாறு நமது சமயவுண்மை நூல்களில் இல்லாத பொருளை நமது நண்பர் அவரது யுக்தியொன்றாலேயே

அவரது கல்விக்கிறமையால் எழுதிக்காட்டித் * திருநான்மறை
விளக்கமெனப் பெயரிட்டு வெளியிட்டிருக்கின்றா ரென்பதை
அறிந்துகொள்ளுங்கள். நிற்க,

௩௬. நம் நண்பர் எழுதிய திருநான்மறை விளக்கத்தின்
முடிபில் அவர் கூறியவைகளில் குறிப்பிடத்தக்க ஒரு விடய
மாவது (௧) "பண்டைத் தமிழ்த் திருநான்மறையும், ஆகம
"மெனப்படும் பண்டை அருணூலும் மறைந்த பிற்காலத்தே
"சைவப்பொருள் கொள்ளப்பட்ட வடமொழி வேதம் நான்
"கும், தமிழ் அருணூல்களைத் தழுவி யியற்றப்பட்ட ஆகமங்
"களுமே நிலவினவாதலால், அவற்றையும் பிரமாண நூல்க
"ளாகச் சைவர்கள் கருதுவாராயினர். அங்ஙனங் கருதினமை
"யால் வந்த மயக்கிற்களவில்லை" (௨) தற்காலத்திலே தந்திரக்
"கிரியை விளக்கும் சித்தர் நூல்களும், தேவார திருவாசக
"முதலிய பன்னிரு திருமுறைகளும் சிவஞான போதம்முத
"லிய சித்தாந்த நூல்களும் திருவள்ளுவரது பொதுமறை
"யாகிய திருக்குறளும் தமிழர்க்குத் தமிழிலே சிறந்த நூல்க
"ளாகக் கொள்ளற்பாலன. சிவாகமக்கிரி யாகாண்டமும்
"ஏற்ற பெற்றி அவ்வாறே" என்றெழுதியிருக்கின்றார்.
மேலே காட்டப்பட்டிருக்கின்ற இவரது கொள்கையின் கருத்
துக்கு ஒற்றுமையாக இவர் முன்னர் எழுதியிருக்கின்ற மற்
றொரு பகுதியையும் இங்கு எழுதிக்காட்டுவது அவசிமாகக்
காணப்படுவதால் அப்பகுதிக்கு, ௩, என இலக்கங்கொடுத்து
இங்கு எழுதுகின்றோம். (௩) "வடமொழி வேதத்துட்போந்த
"சைவப் பகுதியையே, சமயாச்சாரியர் உண்மை யென்று

---

* நம்மவர் எழுதிய வியாசத்திற்கு நம்மவர் புனைந்த பெயரில் திரு
வென்னும் அடைமொழி சேர்க்கப்பட்டுளதே அது பொருந்துமாவென்
பதை ஆராய்கையில், திருக்கோவையாரிற் காணப்படும் "திருவளர்
தாமரை" யென்னுஞ் சொற்றொடருக்கு உரைகண்ட பேராசிரியர்
"யாவன் ஒருவன் யாதொரு பொருளைக் கண்டானோ அக்கண்டவற்கு
"அப்பொருண்மேற் சென்ற விருப்பத்தோடு கூடிய அழகு. அதன்
"மேலவற்கு விருப்பஞ் சேறல் அதனிற் சிறந்த உருவும் நலனும் ஒளியு
"மெவ்வகையானும் பிறிதொன் றற்கில்லாமையால்" எனக் கூறினர்.
அன்றியும் முக்காலத்து முள்ளவரும் அழிவில்லாதவரும் நித்தியருமாகிய
சிவபிரானைத் 'திருவே யென் செல்வமே' என மேலோரும் பணித்தனர்.
இக்காரணங்களான், அழிந்துபோனதாகச் சொல்லும் ஒரு நூலைக்
குறித்த வியாசத்துக்கிட்ட பெயருடன், திருவென்னும் அடைமொழி
சேர்த்ததும், பொருந்தாததொன்றே. நிலைபெற்று விளங்காநின்ற திரு
நெறிய தமிழ், திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருப்
பல்லாண்டு, திருவாய்மொழி, திருக்குறள் ஆதிய நூல்களுக்கும், திருக்
கோயில், திருச்சிற்றம்பலம், திருவரங்கம் ஆதிய புனிதத்தலங்களுக்குமே
திருவென்னும் மங்கலச்சொல் உரித்தாம்.

"போதித்தார்" என்பதும். "இங்ஙனமே வடமொழி யிருக்குவேதத்துட்போந்த சைவப் பகுதிகட்கு ஆசிரியர் மெய்கண்டார் சைவப் பொருள்கொண்டார்" என்பதுவுமே. மேற்காட்டிய முதலாவது பகுதியின் ஈற்றில் சைவர்களுக்கு அளவில்லாத மயக்க முண்டாயிற்று எனப் பொருள்படுமாறு எழுதப்பட்டிருக்கின்றது. ஏன் அம்மயக்கம் உண்டாயிற்றென்றால், சைவப்பொருள் கொள்ளப்பட்ட வடமொழி வேதநான்கையும் தமிழிலிருந்த உஅ-ஆகமங்களையுந் தழுவி யியற்றப்பட்ட வடமொழி உஅ-ஆகமங்களையும் பிரமாணமாகச் சைவர்கள் கருதுவாராயினரானமையால் என்பது நம்மவர் கருத்தின்படி அதற்கு விடையாகும். எக்காலமுதல் சைவர்கள் அவ்வாறு கருதுவாராயினர் என்றால் ஆரியர்கள் நம் நாட்டுக்கு வந்து ஆரியவேதஞ் செய்தபின்னரும் தமிழிலிருந்த ஆகமங்களை வடமொழியில் மொழிபெயர்த்த பின்னரும் என்பதும் நம்மவர் கருத்தின்படி அதற்கு விடையாம். ஆரியர்கள் நம் நாட்டிற்கு ஆதியில் வந்தது இற்றைக்கு மூவாயிரத்து ஐஞ்ஞாற்று ஆண்டுகளுக்கு முன்னர் எனச் சரித்திர ஆராய்ச்சியோர் கூறுவர். இதனால் நம் நாட்டில் அதற்கு முன் ஆரிய பாடையே இருந்ததில்லை யென்பது பெறப்படும். தமிழ் நான்மறையும் தமிழ் ஆகமங்களுங் கடல்கோளில் மறைந்து போனதாக நம்மவர் கூறுங் காலம், முதற் சங்கத்திறுதிக் காலத்தே. அதாவது இற்றைக்குக் குறைந்தபட்சம் ஏழாயிரம் ஆண்டுகட்கு முன்னர். இவ்வாறு ஏழாயிரம் ஆண்டுகட்கு முன்னரே மறைபட்டு ஒழிந்துபோன தமிழ் நான்மறையிலுள்ள சைவப்பகுதியை அவைகள் மறைந்தொழிந்த மூவாயிரத்தைஞ்ஞூறு ஆண்டுகட்குப் பின்னர் உண்டாயின ஆரிய வேதத்தில் எவ்வாறு சேர்க்கக்கூடும்? எவ்வாறு அவ்வாகமங்களை வடமொழியில் மொழி பெயர்க்கக்கூடும்? ஆதலால் நம்மவர் கொள்கை நிலைபெற்றிலது. மற்றொரு வகையான் ஆராயலாம். வடமொழி வேதத்துட் போந்த சைவப்பகுதியையே சமயாசாரியர் உண்மை யென்று போதித்தார் என்றார். அவர்கள் போதித்தது தேவாரப் பாசுரங்களின் மூலமாகவே. ஆதலால் சமயாசாரியர்களே சைவர்கள் கொள்ளும் மயக்கத்திற்குக் காரணர்களாகின்றார் என்பதும் பெறப்படுகின்றது. அத்தகைய தேவாரங்களைப் படிக்கும்படி சைவர்களுக்கு நம்மவர் ஏன் கற்பனை செய்கிறார். வேதங்களிற் சைவப் பகுதியைப் புகுத்திய காலமுதலும் சமயாசாரியர்களும் சந்தானசாரியர்களும் வேதத்திலுள்ள சைவப்பகுதிகளைக் கைக்கொண்டு அவர்கள் நூல்களை அருளிய காலமுதலும் இதுகாறும் சைவர்கள் அளவற்ற மயக்கங் கொண்டிருந்ததாக நம்

மவர் எழுத்தால் தெரியக்கிடக்கின்றது. இந்நீடித்த காலத்திற்றோன்றிய சைவப் பெருமக்கள் ஒருவரும் இம்மயக்கத்தைத் கொண்டவராயும் அதைத்தீர்க்க வழிதேடினவராயுமில்லை. மயக்கமிருந்தாலல்லவோ அதைத்தீர்த்துக்கொள்ள வழியுங் கண்டு பிடித்திருப்பார்கள். நோயுண்டானாலல்லவா அதற்கு மருந்து தேடப்படும். நமது நண்பர் சைவர்களுக்கு மயக்கமிருப்பதாக அவரே சுதாவில், ஒருவருடைய வேண்டுகோளின்றிக் கண்டு அதற்கு மருந்து திருநான்மறை விளக்கமென ஓர் உரை யெழுதினார். இத்திருநான்மறை விளக்கத்தில் ஆதிதொட்டு அந்தம் வரை இவர் காட்டியிருக்கும் மேற்கோள்களும் அவைகட்கு இவர் கொண்ட கருத்தும் இவ்வாராய்ச்சியில் விட்டுவிடப்படாது கூடியவரை யெழுதப்பட்டு அவைகள் ஆராய்ந்து பார்க்கப்பட்டிருக்கின்றன வென்பதை இவ்வாராய்ச்சியை வாசிக்கும் நண்பர்கள் பலரும் அறியலாம். வடமொழி மேலும், அவ்வடமொழி வேதங்கள் நான்கின் மேலும் கொண்ட வெறுப்பினால், அவைகட்கு முந்தியே, தமிழில் நான்மறை, ஆறு அங்கம், இருபத்தெட்டு ஆகமங்கள், இருந்தனவென்று தாபிக்க வேண்டுமென்று ஒரு யுக்தி கண்டு அதற்குப் பிரமாணங்கள் தமிழ் மறையாகிய தேவார திருவாசகங்களிலிருப்பவை போலச் சைவ மக்களுக்குக் காட்டக் கருதி அந்நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டப் புகுந்தார். உண்மையில் அவ்வாறு இல்லாமையான், தேவாரப்பாசுரங்களிலும் மற்றுமுள்ள தொல்காப்பியம், திருக்குறளாதிய ஆரிய பெரிய தமிழ் நூல்களிலும் இவர் கருத்துக்கிணங்க இடங்கொடாத மூல பாடங்களெல்லாம் இவரால் திருத்தப்பட்டன. தெய்வத் தன்மை பொருந்தியவையும் இதுகாறுந் தமிழ் நாட்டு மேன்மக்களால் சிறப்பாய்ப் புகழப்பட்டு வந்ததுமாகிய பண்டைய மெய்யாசிரியர்களின் உரையையும் புறக்கணித்துத் தாமே தங்கொள்கைக்கு இணங்க உரை கற்பித்தார். மூல பாடங்களுக்குப் பொருந்தாத உரை புகுத்தினார். திருவிளையாடற் புராணத்திற் காணப்படும் வேதத்திற்குப் பொருளருளிச்செய்த சரித்திரத்திற்கு இவர் காட்டியபடி பொருள் கொள்ளாவிடின் அச்சரித்திரம் பொய்யென்று கொள்ளவேண்டுமெனவுங் கூசாது கூறினார். இவ்வாறு விபரீதமான உண்மை பயவாத மொழிகளையே ஒன்றின்மே லொன்றாக அடுக்கிவந்து முடிவாக மேற்காட்டப்பட்டிருக்கின்றபடி சைவர்கள் அளவில்லாத மயக்கமெய்தியுள்ளாரெனப் பொருள்பட எழுதி முடித்தார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய "காது பொத்தரை" யென்ற தேவாரத்தின் ஒரு பகுதியே தமிழர் நால்வர் தமிழ் வேதஞ் செய்தனர் என்ற இவரது கொள்கைக்கு அஸ்திவாரக் கல்

போன்ற முதல் ஆதாரம். இத்தேவாரத்திற்கு இவர் கொண்ட பொருள் பிழைபட்டதென இவ்வாராய்ச்சியிற் காட்டப்பட்டிருக்கின்றது. இனியாவது அத்தேவாரச் செய்யுளுக்கு இலக்கண இலக்கிய முறைக்குப் பொருந்துமாறும் இரு மொழியுங் கற்ற சைவ மக்கள் நால்வர் அங்கீகரிக்குமாறும் நம்மவர் பதவுரை எழுதிக்காட்டி அத்தேவாரத்தால் தமிழ் மக்கள் நால்வர் தமிழில் நான்மறை செய்தனரென்பதைத் தாபித்துக்கொள்ளட்டும் பார்ப்போம். 'சைவ வேடந்தா னினைத்து' என்ற சுத்த பாடத் தேவாரப்பகுதியைச் சைவ வேடந்தா னிணைத்து எனத் திருத்திக்கொண்டு அவர் கொள்கையைத் தாபிக்கப் புகுந்தாரே!! அது பிழைபட்டதென இவ்வாராய்ச்சியில் எழுதப்பட்டுளது. அவ்வாறு யாம் எழுதியது பிழை, தாம்கொண்டதே சரியென்றால், பழைய ஏட்டுப் பிரதிகளில் தமது பாடத்தைக் காட்டி முன்பின் விரோதப்படாமல் பொருளுங்கூறித் தங் கொள்கையைத் தாபித்துக் கொள்ளட்டும் பார்ப்போம். "தொகுத்தவ னருமறை அங்கம் ஆகமம் வகுத்தவன்" என்னுந் தேவாரப் பகுதியில் காணப்படாத 'ஆறு' என்னும் மொழியை அத்தேவாரத்துட்கூட்டி அதற்கு வியாக்கியை தம் மனம்போல வெழுதினாரே அது பிழை யென்றோம். பிழை அல்லவெனத் தாபித்துக்கொள்ளட்டும் பார்ப்போம். தமிழ் முனிவர் நால்வருக்கு அருளிச்செய்த கடவுள் சிவபிரான் என்றும் அவர் தட்சிணாமூர்த்தத்திருமேனி தாங்கிவந்து அருளவில்லை யென்பதும் நம்மவர் கொள்கை. அக்கொள்கையைத் தாபித்துக்கொள்ள 'சீர்மிகு சிறப்பினோன்' என்ற கலித்தொகைச் செய்யுளை ஆதாரமாகக் காட்டினர். நமது இவ்வாராய்ச்சியில் அச்செய்யுள் சனகாதி நால்வர்க்கருளிய தட்சிணாமூர்த்திக் கடவுளையே குறித்திருக்கின்றதென வெழுதியுள்ளோம். தக்கபிரமாணங்களால் அதை மறுத்து எழுதவேண்டுவதும் அவர் கடமையாம்.

இருக்கு வேதத்துட்போந்த பலமந்திரங்களை யெடுத்துக்காட்டி, அவ்வேதம சிவபிரானையே முழுமுதற் கடவுளெனப் பலவகையானும் ஓலமிட்டுக்கூறியும் அவரே பசுபதியெனவுங் கூறுகின்றதெனவும், உக-யாகங்களுக்கும் அவரே தலைவராயிருந்து முதற்கண் அவிசு பெறுபவர் என்றும், தட்சப்பிரஜாபதி அதற்கு மாறுபட்டு யாகஞ்செய்ய ஆரம்பித்ததில் அவன் யாகமு முற்றுப்பெறாது அழிபட்டும், தலையும் இழந்தானென்றும், இவ்வாராய்ச்சியில் எழுதியுள்ளோம். காடன் மாடன் பாட்டுகளின் தொகுதிபோன்றது ருக்கு வேதமென்று சொல்லி அவ்வேதத்தை யிழித்துக்கூறும் நம்மவர், தக்க பிர

மாணங்களால், பலரும் ஒப்புமாறு எமது சித்தாந்தத்தை மறுத்துக் காட்டவேண்டியதும் அவரது கடமையாம். ஏனையவு மன்ன.

இன்னமொன்று வினவுகிறோம். எம் நண்பர் அம்பா சமுத்திரம் திருவாளர் V. P. காந்திமதிநாத பிள்ளை யவர்கள், நம்மவர் எழுதியுள்ள திருநான்மறை விளக்கத்திலுள்ளப் பல ஆசங்கைகளைக்கண்டு ௬௩எ-வினாக்கள் எழுப்பி அவற்றிற்கு விடை பகருமாறுகேட்டு ஓராண்டாகியும் இன்னமும் நம்மவர் விடை பகராதிருப்பானேன். விடைபகர வியலாவிட்டாலும் அவ்வாசங்கைகளைப் பலருமறியும் வண்ணம் செந்தமிழ்ச் செல்விப் பத்திரிகையிலாவது பிரசுரித்திருக்கலாமே. அவ்வாறு மில்லையே. இது தோல் வித்தானத்தைப் பயக்குமென்பதை நம்மவர் அறியார்போலும்.

தேவார திருவாசக மாதியவெல்லாம் வேத சிவாகமங்களின் சாரமே யென்பது பல மேற்கோள்களால் இவ்வாராய்ச்சியில் ஏற்கனவே விரித்துக் காட்டப்பட்டிருக்கின்றது. நிற்க, மேற்காட்டிய நம்மவர் கற்பனைகளில் இரண்டாவதில், தமிழர்க்குத் தமிழிலே சிறந்த நூல்கள் இன்னின்னவென நம்மவர் காட்டிய நூல்களில் "தந்திரக்கிரியை விளக்கும் சித்தர் நூல்களும்" ஒன்று எனக்கூறித் தேவா ரதிருவாசக மாதிய சைவ அருள் நூல்களுக்கெல்லாம் மேலானது போல அப்பெயரைத் தலைப்பிற் காட்டியும் நம்மவர் எழுதியிருக்கின்றார். அவர் எழுதிய விவாதத் திருநான்மறை விளக்கத்திலும் ஆங்காங்கே சித்தர் நூற்படி கொள்ளற் பாலனவென்று மெழுதியிருக்கின்றார். மற்றைய நூல்களின் பெயரைக் குறிப்பிட்டுச் சொன்னவர் அந்நூல்களின் பெயர்களையாவது அந்நூல்களை ஆக்கியோர் பெயரைக் குறிப்பிட்டாவது எழுதிக்காட்டாமல் சித்தர் நூல்களென்று பொதுவாக வெழுதியிருக்கின்றார். ஆதலால் நம்மவர் கருத்தை யறியக்கூடவில்லை. பதினெண் சித்தர், நவ சித்தர் என்போர் அஷ்டமா சித்திகளுங் கைவரப்பெற்றுக் காய சித்தியுமெய்தி உலகமுற்றுஞ் சஞ்சாரஞ் செய்யும் சித்தமூர்த்திகள். அவர்கள் இன்று மிருப்பதாகவே பெரியோர் கொள்வர். தமிழ்த் திருமுறைகள் அருளிச்செய்தவர்களில் திருமூலர், திருமாளிகைத் தேவர், கருவூர்த் தேவர் சித்தர்களே. தற்காலம் புத்தகக்கடைகளிற் காணப்படும் சித்தர் நூலென்பவைகளை யியற்றினோர் பதினெண் சித்தர், நவசித்தர், இவர்களில் ஒருவருமல்லரென்பது தமிழ்மொழி ஆராய்ந்த பல்லோர் கருத்து. கடைவீதிச் சித்தர் நூலிற் காணப்படுஞ் சில செய்யுட்களாவன:—

"வாயிலெச்சில் போகவே நீர்குடித்துத் துப்புவீர்
வாயிருக்க எச்சில் போன வாறதென்ன தெவ்விடம்
வாயிலெச்சிலல்லவோ நீருரைத்த மந்திரம்
நாதனை யறிந்தபோது நாடும்மெச்சிலேது சொல்"

"ஓது நாலுவேதமு முரைத்த சாஸ்திரங்களும்
பூதலத்து அங்கமும் பொருந்து மாகமங்களும்
சாதிபேத வண்மையுந் தயங்குகின்ற நூல்களும்
பேதபேதமாகியே பிறந்துழன்றிருந்ததே"

"அங்கலிங்கம் பூண்டு நீரகண்ட பூசைசெய்கிறீர்
அங்கலிங்கம் பூண்டு நீயமர் நதிருந்தமார்பனே
எங்குமோடி யெங்குமெங்கு மீடழிந்துமாய்கிறீர்
செங்கல் செம்புகல்லெலாஞ் சிறந்துபார்க்குமூடரே"

"நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே
சுற்றிவந்து மொணமொணென்று சொல்லு மந்தரமேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள்ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவங் கறிச்சுவை யறியுமோ"

இவ்வகைப் பாடல்கள் பல அந்நூல்களில் ஆங்காங்குக் காணலாம். இந்நூல் கற்றவர்களைக் கேட்டால் அவை யெல்லாம் ஞானமார்க்கமென்பார்.

சைவச்சரியை கிரியை மார்க்கங்களைக் குறைகூறுவது நம்மனோர்க்கு ஞான நூலாகுமா.?

"கண்ணினலவர் நல்விழாப் பொலிவுகண்டார்தல், உண்மையாமெனின் உலகர் முன்வருகென வுரைப்பார்" என்றும், "ஆக்கையாற் பயனென் அரன்கோயில் வலம்வந்து, பூக்கையாலட்டிப் போற்றியென்னுத விவ்வாக்கையாற் பயனென்" என்றும் "நிலைபெறமாறெண்ணுதியேனெஞ்சே நீவா, நித்தலு மெம்பிரானுடைய கோயில்புக்குப்-புலர்வதன் முன்னலகிட்டு மெழுக்குமிட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித், தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச் சங்கராசயபோற்றி போற்றியென்றும், அலைபுனல்சேர் செஞ்சடை யெம்மாதி யென்று மாரூராவென்றென்றெ வலறு நில்லே"

என்றும், இன்னம் பலவாறாகவும், தாதமார்க்கம் புத்திரமார்க்கமாதிய சிவத்தொண்டை உலகினர்க்குப் போதித்தும் தாங்களும் அவ்வழியொழுகியும் அதிமதுர அற்புதத் திருப்பாடல்களை அருளியும் அப்பாடல்களின் பயனைப் பலப்பல அற்புதங்களைச் செய்துகாட்டியும் சைவ சமயத்தைத் தாபித்துபகரித்த சைவ சமய குரவர்கள் கற்பித்த வழியைக் கைப்பிடித்தொழுகுஞ் சைவமக்களுஞ் சித்தர் நூலை நோக்கவுமிசைவரோ? ஒருகாலுமிசையார். சாயுச்சிய பதவியை விரும்பிச் சிவஞானமார்க்கவழி யொழுகுபவர்க்குச் சிவஞான மெய்ந்நூலருளிய சந்தான குரவர்கள் கற்பித்திருப்பதாவது,

"செம்மலர் நோன்றாள் சேர லொட்டா, அம்மலங்கழீஇ அன்ப ரொடுமரீஇ, மாலறநேய மலிந்தவர் வேடமும், ஆலயந்தானும் அரனெனத்தொழுமே" என்றும், "கண்டதொரு மந்திரத் தாற் காட்டத்திலங்கிவே—முண்டல் போனின்றங்குளதாமாற் கண்டவுருத்—தானதுவாயன்றானுன் றானதுவாய்த் தோன் றுேனு-தானதுவாய்க் காணுந்தவர்க்கு" என்றும் "திருக் கோயிலுள்ளிருக்குந் திருமேனி தன்னைச் சிவனெனவே கண்ட வர்க்குச் சிவனுறைவனங்கே" எனவும் காணப்படும் சைவ மணங்கமழும் அருண்மொழிகளுக்கும் மேற்காட்டிய சித்தர் நூற் செய்யுட்கட்குமுள்ள ஏற்றத் தாழ்வுகளை நம்மனோர் கண்டு அந்நூல்களைக் கையாளுந் தீண்டாரென்க. சித்தர் நூலெனப் பெரியார் பெயர்களை வைத்துச் சிவபிரான் பெயரை யும் பராசத்திப் பெயரையும் பஞ்சாட்சரப் பெயரையும் ஊடே காட்டிப்புறச் சமயக்கொள்கைகளையே சித்தாந்தமாக வைத்து இலக்கண இலக்கிய விதிகளுக்குப் பொருந்தாத பாடல்களை யெவரெவரோ பாடி வெளியிடப்பட்டிருக்கும் நூல்களே சித் தர் நூலென உலாவுகின்றனவெனச் சைவ மக்கள் கொள்வர். சில மாதங்கட்கு முன் வெளிப்பட்டு வந்திருக்கும், தமிழக வொழுகு, என்ற மக்கட் சட்டம் என்னும் நூலே இதற்கோர் சான்றாம். இந்நூல் இயற்றியோர் இன்னாரென்றாவது, இன்ன காலத்தினரென்றாவது, அவரது சரித்திரம் இன்னதென்றாவது இலக்கண முறைப்படி அந்நூலிற் கூறாது அவ்விஷயங்களில் மயங்கவிட்டு அந்நூலின் கடைசி அடியிலே "சிவாரூட சித்தன் செய்ததிது" எனக் குறிப்பிட்டிருக்கின்றது. இச்சித்த மூர்த்தி கள் யாவரோ? இவரும் பண்டையநாட் சித்தர்களில் ஒரு வரோ? கலிகாலக்கொடுமையை விளக்க அவதரித்த சித்தர் களில் ஒருவரோ, அறியக்கூடவில்லை. இது போலவே சித்தர் நூல்களென வழங்கும் நூல்களும் காலக்கிரமத்தே யெழுந்தன வாதல் வேண்டும்.

நாம் வசிக்கும் இக்கன்னித் தீபமெனப்படும் வடக்கே இமயமலையும் தெற்கே குமரியும் மற்றிருபக்கமுங் கடலும் சூழ்ந்த இப்பூமியே ஓங்கார வடிவாயுள்ளது. நமக்குள்ள வட மொழி வேத சிவாகமங்களும் அவைபற்றித் தோன்றிய திரு நெறித்தமிழ் முறைகளும் பிரணவத்தினின்று உதித்தவைகள். வடமொழி வேதமோதுபவர்கள் "ஓமென்று மறைபயில்வா" ரெனுந் திருவாக்குப்படி வேத அத்தியயனத்துக்கு முந்திப் பிரணவத்தைச் சொல்லியும் அது முடிந்த போதும் அவ்வாறே சொல்வதையும் கண் கூடாகப் பார்த்து வருகின்றோம். மனுஸ்மிருதி உ-ம் அத்தியாயம் எச-வது ஸ்லோகமும் அவ் வாறே கட்டளையிடுகின்றது. திருநெறித் தமிழ்ச் சைவமுறை

களில் முதலாவது முறையின் முதற்றிருப்பாசுரம் ஸ்ரீ ஞா
சம்பந்த மூர்த்திகள் 'தோடு' என்ற மொழியால் ஆரம்பித்தா
இதில் தகரமெய்யோடு ஒகாரவெழுத்தமைந்திருத்தலைக் கா
கின்றோம். பனிரெண்டாவது, அதாவது இறுதியாகிய பெரி
புராணத் திருமுறையின் ஈற்றுச் செய்யுளின் ஈறு, மகரஒற்
யிறுதியில் கொண்ட உலகெலாம் என்னும் மொழியால் முடி
பெறுவதையும் காண்கின்றோம். இதனால் விளங்குவது பிரண
வப்பொருளாகிய சிவத்தைக் குறித்த தமிழ் நூல்கள் இத்திரு
முறைகளே என்பது பெறப்படுகின்றது. தமிழ் நாட்டு வேத
வியாசர் என்றெண்ணப்பட்ட நம்பியாண்டார் நம்பி யென்ற
அந்தணர் குலோத்தமரும், நம் தமிழ் நாட்டை அரசுபுரிந்த
சைவப் பெருந்தகையாருஞ் சிவபிரானது திருவருளைப் பெற்ற
வருமாகிய அநபாயச்சோழ மகாராஜாவும், நடேசப்பிரான் சந்
நிதியில் சைவர்களுக்குரிய செந்தமிழ்த் தெய்வ அருள் நூல்
களைப் பன்னிரெண்டு திருமுறையாக வகுத்து அம்முறைகளில்
எந்தெந்த நூல்களைச் சேர்த்திருக்கின்றனரோ அந்நூல்கள்தான்
சைவர்களுக்குரியவை. சித்தர் நூல்களென்பன அவைகளிற்
சேர்க்கப்பட்டிருக்கவில்லை. திருமுறைகள் வகுக்கப்பட்ட காலத்
தில் அந்நூல்கள் இருந்து அவைகளிற் சேர்க்கப்பட்டிருக்க
வில்லை யென்று கொள்வோமானால் அவைகளைச் சைவநூல்க
ளெனக் கொள்ளப்படவில்லை யென்பது போதரும். அக்
காலம் அவைகள் இருந்ததில்லை யென்போமானால் மேற்காட்
டிய தமிழக ஒழுகு தோன்றியதுபோலவே அவைகளும் ஆம்.

றன, பின்னும் நம்மவர் எழுதுவதாது," "சாந்தோக்கிய
"உபநிடதத்தில் பரம்பரையாய் அங்கி வழிபாடியற்றிய பிராம
"ணர் நால்வர், ஓர் அரசனிடஞ்சென்று ஞானம் பெற முயன்ற
"காலத்து அவ்வரசன் அவர்களைப் பார்த்து இதுவரை இந்த
"ஞானத்தைப் பிராமணர்கள் நாடியதில்லையே யென்று கூறிய
"தாகத் தெரிகின்றோம். அவ்வரசன் ஆரிய மன்னனாகவிருப்
"பின் ஆரிய சமுதாயக் குருக்களாகிய பிராமணர்களுக்கு அவ்
"வாறு கூறக் காரணமில்லை. ஆதலால் அவனை வேற்று மன்ன
"னாகக் கருதுமிடத்துப் பல காரணங்களால் அவன் தமிழ்
"அரசனென்றே யூகிக்கற்பாலது. ஆதலால் அக்கதையும்
"தமிழரது பண்டைத் தத்துவஞான வுணர்ச்சியைக் குறிப்
"பதற்குச் சான்றாகும்." என்பதே.

இவர் கூறும் இச்சரித்திரம், சாந்தோக்கியத்தில் ஐந்
தாம் பிரபாடகம் மூன்றாம் கண்டத்தின் ஏழு மந்திரங்களில்
கூறியது. அஃதாவது "பிரவாஹண சைவலி யென்னும் பாஞ்
சாலதேயத்தரசனிடம் ஆருணேயன் சென்றகாலத்துச் சைவலி
அவனை நோக்கி, "நின் பிதா உனக்கு எல்லாம் கற்பித்தனரா"

என்று கேட்க அவன் "ஆம்" என்றனன். சைவலி "பூமியினின்றும் மனிதர் எங்கே ஏகுகின்றனர்? என்பது முதலிய ஐந்து வினாக்களை அவனிடம் கேட்டான். அவன் விடை யறியாது தன் பிதாவுடன் சைவலி பால் வரப் பிதா சைவலியிடம் வினாக்களுக்கு விடை வேண்டினன். சைவலி மனம் வருந்தி ஆருணேயனது பிதாவை நோக்கி "என்னோடு சிலகால மிங்கே யிரும். ஒரு பிராமணனும் இதனை இன்றுகாறும் அறிந்திலராகலானும் நீர் அறிய விரும்புகின்றமையானும், க்ஷத்திரியர்க்கே இதனை எல்லாருக்கும் அறிவுறுக்கும் உரிமை உண்டாயிருக்கின்றது என்று கூறினன்" என்பதே. இச்சரித்திரத்தில் நம்மவர் கூறுமாறு 'பரம்பரையாய் அங்கிவழி பாடியற்றிய பிராமணர் நால்வர்' என்று கூறியிருக்கவில்லை. மேலும் அவ்வரசனைப் பாஞ்சாலதேயத் தரசனென்று கூறியிருக்கின்றது. திராவிட அரசனெனக் கூறவில்லை. பிராமணர், க்ஷத்திரியர் என்னும் பெயர்களால் அவர்கள் குறிப்பிடப்பட்டிருப்பதால், அவர்கள் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரரெனும் நாற்பால் வகையினருளாவர். பிராமணருக்கும் க்ஷத்திரியருக்கும் மிக்க நெருக்கமுண்டு. விசுவாமித்திரராதியோர் சரிதைகளே அதற்குச் சான்று. க்ஷத்திரியர்கள் கன்னிகைகளை பிராமணர்கள் மணந்து வாழ்ந்த கதைகள் அநேகம் கேட்டுளோம். இந்த க்ஷத்திரிய வம்சத்துக்கும் ஆருணேயனெனும் பிராமண குலத்துக்கும் சம்பந்தமிருந்திருக்கலாம். அதனாலன்றோ, இப்பிராமணச் சிறுவனை இவ்வரசன் ஏ 'குமாரனு' என விளித்ததாக வடமொழி மந்திரங் கூறிற்று. இன்னமுங் காசி, கேகய நாடுகளின் அரசர்களிடமும் சில விப்பிரர் ஞானோபதேசங் கேட்டதாக மற்றும் உபநிடதங்களும் சாந்தோக்கிய உபநிதடமும் கூறும். வடவேங்கடம் என்பதே தமிழ் நாட்டு வடவெல்லையெனச் சுமார் ௰௲-ஆண்டுகட்கு முன்னரே உண்டாகிய தொல்காப்பியச் சிறப்புப்பாயிரங்கூறும். பாஞ்சாலம், கேகயம், காசி முதலியன ஆரியாவர்த்தமெனும் நாட்டைச் சார்ந்தவை. இந்நாடுகளில் தமிழ் அரசர்கள் பிராமண குலத்தாருக்கு ஞானோபதேசஞ் செய்யும் நிலைமையில் வீற்றிருந்து அரசாட்சி செய்து வந்தார்களென்பதற்குப் போதுமான சான்று காட்டாது அவர் யூகத்தைக்கொண்டே கூறிய கூற்றுச் சான்றோர் அவை ஏறாது. தமிழ் நாட்டுப் பண்டைய மன்னர் சரித்திரங்கூறும் புறநானூறு முதலிய சங்ககாலத்துத் தமிழ் நூல்களி லெதிலாவது தமிழரசர்கள் அந்தணர்க்காயினும் ஏனையோருக்காயினும் குரவர்களாயிருந்து உபாசனைக் கிரமங்களைப் போதித்ததாகக் கூறியிருக்கவில்லை. ஆனால், கூறப்பட்டிருப்பதென்னெனின் தமிழ் மன்னர்கள் அந்தணர்களைக் குரவர்களாகக்

கொண்டு யாகாதி கிருத்தியங்களை நடத்தி அவர்களை வணங் அவர்களிடம் ஆசி பெற்றுக்கொண்டார்களென்பதே. "அ றிடினே யந்தணருள் ஞானி அடுத்த வன்பாற் பெற்றிடு அந்தணன் மெய்ப்பேறு" என்னுஞ் சைவ சமயநெறித் திருக் குறளில் விதித்த விதிப்படி இப்பிராமணர்கள் க்ஷத்திரிய களிடம் ஞானோபதேசம் பெற்றார்களென உணரவேண்டும் அன்றியும் உபாசனா மார்க்கம் சோபான முறையாகப் பூர்வ வினையை யொட்டிப் பலவிதங்களாயிருக்கும். பிராமணர்கள் எல்லோரும் சமஷ்டியாக முற்றிலுந் தெரிந்திருப்பார்களென்று நினைப்பது பொருந்தாததொன்றே "அறுநான்கிரட்டி யிளமை நல்லியாண்டாறினிற் கழிப்பிய வறனவில் கொள்கை, மூன்று வகைக் குறித்த முத்தீச் செல்வத் திருபிறப்பாளர்" என நக் கீரதேவ நாயனார் மொழிந்தார். இதனால் வேதப் பயிற்சியும் வேதஒழுக்கமும் எளிதில் கிடைப்பனவன்றென்பது பெறப்பட் டது. மேலும் உபநிடதங்களிற் காணப்படும் இவ்வகைச் சரித் திரங்களெல்லாம், அவற்றை வாசிப்போர் உள்ளத்தில் நன்றாய்ப் பதியும்பொருட்டு ஓர் அரசனிடம் ஒருவன் சென்றதுபோல வும் அவன் விடை பகர்ந்ததுபோலவும் பலவிதமாக சரித்திர ரூபமாகப் புனைந்து அறிவுறுத்தப்பட்டிருக்கின்றனவென்பதே பெரியோர்கள் கொள்கை. சாந்தோக்கிய உபநிடத்திலேயே ஐந்தாவது பிரபாடகம் முதலாவது கண்டத்திலே பதினைந்து மந்திரமுடைய ஓர் சரித்திரமுண்டு. அஃதாவது வாக்கு, நேத் திரம், செவி, மனது இவைகளில் ஒவ்வொன்றும் நான் பெரி யன் நான் பெரியன் என்று பூசலிட்டுப் பிரமனிடம் போய்க் கேட்டுத் தெரிந்தும், இவைகள் தாமே அனுபவித்துத் தெளிந் தும் பின்னர் தங்களுக்குமேல் ஆன்மாவே பெரிதென்று தெரிந்துகொண்டனவாம். கண் செவி ஆகிய எவ்வாறு பேசும்? எவ்வாறு பிரமனிடம் போகும்? ஆதலால், கேட்போருங் கற் போரும் அவர்கள் உள்ளத்திற் பசுமரத்தாணிபோல் நிறுவற் பொருட்டு ஞானவித்தை அலங்காரப்படுத்திக் காட்டப்பட் டிருப்பதாகவே கொள்ளல் வேண்டும். இவ்வுண்மை, பிரம சூத்திரம் மூன்றும் அத்தியாயம் நான்காம் பாதம் நான்காவது அதிகரணமாகிய பாரிப் பிலவாதிகரணம் (௨௩, ௨௪) "உப "நிடதங்களில் நேருங் கதைகள் உபாசனா விதிகளோடிசைந்து "அவைகளைத் துதிக்கும்பொருட்டே யுள்ளன என்கின்றது" என நீலகண்ட பாஷ்யத்தில் கூறியிருப்பதனானிலைபெறும். ஆனதால் நம்மவர் கூற்று விகற்பக் கூற்றே.

நவீனமார்க்கங் கற்பிக்கும் யாரேனுமொருவர் அதற்கு ஆதரவு பூர்வீக கிரந்தங்களில் காட்டவேண்டுமானால், உள் ளதை உள்ளபடியே காட்டி மேல் ஆட்சேபனை சமாதானஞ்

சொல்லித் தம் உரையைத் தாபிக்கப் புகின் அவ்வுரையை மேலோர் ஒருவாறு மதிப்பர். அவ்வாறன்றிப் பூர்வீக கிரந்தங்களின் வாக்கியங்களையும் அர்த்தங்களையும் பேதப்படுத்தியெழுதித் தம் நவீனக் கொள்கையைத் தாபிக்கப் புகுவாராயின், அக்கொள்கையைச் சற்றும் மதியாது இயற்றினோரையும் எள்ளி ஏளனஞ் செய்வார்கள். இது உலக வழக்கு.

௬அ. நிற்க, ஏற்கனவே நமது சைவ மரபுக்குரிய வேளாண் மாந்தரிற் பலர் சைவ வொழுக்கங்களைக் கைவிட்டுக் கடவுள் எங்குமில்லையா? கோயிலுக்குப் போவானேன். கடவுள் சுத்தமாய்க் கொடுத்த முகத்திற் சாம்பலைத் தேய்ப்பானேன். மஞ்சளைப் பூசுவானேன் என்று சொல்லிக்கொண்டு மாட்டுக்கொழுப்புச் சேர்ந்த சோப்புக்கட்டியைத் தேய்த்துக் கொள்வார்கள். அநுட்டான மந்திரங்களில் சிகாயை நமவெனச் சிகைக்கு மந்திரமேற்பட்டிருக்கத் தலையை மொட்டையடித்துக் கொள்வார்கள், கரிச் சட்டியைத் தலையிற் கவிழ்த்ததுபோலத் தலை முழுமையிலும் உரோமங்களைக் கத்திரித்துக்கொள்வார்கள். எச்சிலேது தீட்டு ஏது என்று சொல்லித் தர்க்கம்பேசி நீரருந்தும் பாத்திரங்களை வாய்க்குள் உண்ணாக்குமட்டும் புகச்செய்து நீரருந்துவார்கள். தீட்சையென்பதென்ன பணஞ் சம்பாதிக்கப் பண்டாரங்கள் கற்பித்த வழி. கைகால்களை அசைத்துக்கொண்டு மூக்கைப் பிடித்துக் கொண்டிருப்பதுதானா கடவுளை வழிபடும் வழி மனதில் நினைத்தலே தக்க வழிபாடென்பார்கள். 'பச்சிலையுங் கிள்ளப்படுமோ பராபரமே' எனத் தாயுமானவரே சொல்லியிருக்க, வீணாகப் பச்சிலை புட்பங்களைக் குடலை குடலையாகப் பறித்துக் கிள்ளிக் கிள்ளி யெறிவதுதான் பூசையாவென்று நகையாடுவர். பெண்டுகள் மாதவிடாய் ஆனால் ஏன் அவர்களை ஒதுக்கமாய்த் தனியே வைக்கவேண்டும், ஸ்நானஞ் செய்துவிட்டால் தேக அழுக்கு போய்விடுமே என்று சொல்லி அந்தப்படி நடக்க முயலுகிறார்கள். தாய்தந்தையருக்குத் திதி கொடுப்பானேன், இறந்துபோனவர்கள் நம்மிடம் வந்து வாங்கிப் புசிக்கின்றார்களா? இவையெல்லாம் பிழைப்பு நிமித்தங் கட்டிய கட்டுப்பாடு என்று சொல்லித் தாய்தகப்பன திவசத்தையும் அறவே ஒழித்தும் விட்டார்கள். ஆங்கிலங் கற்றும் லௌகிக உத்தியோக முறையிற் சிறப்புற்று விளங்கும் பரம்பரை வேளாளச் சைவ உத்தம குலத்திற் றோன்றிய சிலர், அவர்கள் மூதாதையோர் வழக்கிற்கும், சைவ சமய சந்தானாசாரியர்கள கட்டளைக்கும் முற்றிலும் முரணாக, உயர்குலம், தாழ்குலமென்பது வீண் கட்டுப்பாடெனக்கூறி, மக்களானவர் யாவராயினும், அவருடன் ஒருங்கிருந்து உணவுகொள்ளவும்

பழகிக் கொண்டார்கள். பொது நன்மையையும் நம் நாட்டின்
முன்னேற்றத்தையும் நாடுபவர்கள் பூர்வஜன்ம தவப்பயனுக
அவர்களுக்குக் கிடைத்த அரிதான உரிமைப் பொருளாகிய
சிறப்பின் தன்மையை யிழந்துவிடாமலே தொழில் நடத்த
லாமே.

'அடுக்கியகோடி பெறினுங்குடிப்பிறந்தார் குன்றுவ செய்தலிலர்."
"குற்றமிலனாய்க் குடிசெய்துவாழ்வானைச் சுற்றமாச்சுற்று முலகு."
"ஒழுக்கமும் வாய்மையும்நாணுமிம்மூன்று மிழுக்கார்குடிப்பிறந்தார்."

என்னும் நம் நீதிநூலின் வாக்கியங்களின் உண்மையை உணராது
மேனாட்டுக் கல்விப் பயிற்சியின் பெருக்கத்தால் வந்த கெடுதிகள்
இவைபோல்வன பல நம் நாட்டில் பயிராகி வருகின்ற இக்
கொடுங் கலிகாலத்தே, மேலே உ௧௦-ம் பக்கத்தில் காட்டிய செய்
யுட்களடங்கிய, சித்தர் நூல்களெனப்படும் போலி நூல்களையும்
படிப்பார்களேயானால் காற்றோடு சேர்ந்த தீப்போலாமென்
பதில் ஐயுறவு கொஞ்சமுமில்லை. ஆதலால் நமக்குத் தரப்பட்ட
சைவ நூல்களாகிய பன்னிரு திருமுறைகளையும் ஓதியுணர்ந்து
அவைகளில் விதித்த வழியே யொழுகு வதுஞ் சித்தாந்தசாத்
திரங்களின்படி சிவோபாசனை செய்வதுமே சைவப் பெருமக்
கள் கடமையாம். இது சத்தியம். சத்தியம். முக்காலுஞ்
சத்தியம்.

இன்னமொரு பிரார்த்தனை :—

பண்டையத்தமிழ்ச் சைவசமயக்குடியிற் பிறந்த பரம்
பரைச் சைவப்பெருமக்களுக்கு இன்றியமையாத விஷயமொன்
றுளது. உலகத்திலுள்ள ஆஸ்திக சமயக்கொள்கைகளில் சைவ
சமயமே சிறந்தது. மற்றவை சைவ சமயத்தின் அங்கங்களே.
இராஜாங்கத்திலமர்ந்தது வைதிகசைவ' மென நந்தாயுமானப்
பெருந்தகையார் அருளியிருப்பதே எம்மொழிக்குச் சான்று.
அப்பமூர்த்திகளும் 'பொதுநீக்கித்தனை நினையவல்லோர்க்கென்
றும் பெருந்துணையை' எனவும், மாணிக்கவாசகரும் 'பொது
வினிற்றீர்த் தென்னையாண்டோ' னெனவும் அருளி யிருக்கின்
றார்கள். கடவுள் ஆதிய பொதுமொழிகள் எல்லா மதத்தோர்
களாலுங் கொள்ளற்பாலவை. இக்கூற்று நான்முகக்கடவுள்,
காவற் கடவுள், ஆலமர் கடவுள், முருகக் கடவுள், விநாயகக்
கடவுள் அருகக் கடவுள் ஆதிய மொழிகளால் உறுதிப்படும்.
'சிவம்' ஆதிய சிறப்புப் பெயர்களே சைவமதத்தினர் கொள்
ளத்தக்கவை. இக்காலம் மேனாட்டு ஆசாரணையைக் கைக்
கொண்டு நமது சைவசமய உண்மை யறியாது அவர்கள் சமயங்
களுடன் நமது சைவ சமயத்தையும் ஒப்பக்காட்ட விச்சை

கொண்டு நம்மவர்களிற் சிலர், அவர்களெழுதி வரும் வியாசங்களில் கடவுண்மறை, கடவுண்முறை, கடவுள், உயிர், உலகம், என்பனவாதிய பொதுச் சொற்களை உபயோகித்து வருவதில் மிக்க விருப்பமுடையவர்களா யிருக்கின்றார்கள். பண்டைக் காலந்தொட்டு நம் முன்னோர்கள் ஒருவருக்கொருவர் எழுதிக் கொள்ளும் நிருபங்களின் தொடக்கத்திலும் நூல்களின் ஆரம்பத்திலும் இறுதியிலும், சிவமயம், கணபதி துணை, முருகன் துணையென எழுதுவதே நஞ்சமயக் கொள்கையின் சாம்பிரதாய வழக்கம். சைவ சமயத்தின் உண்மைப் பேற்றைப் பயப்பதற்கு சாதனமாகிய அவ்வழக்கத்தை அறவே விட்டுவிட்டு 'ஓம் தத்சத்' 'கடவுள் துணை' என்பனவாதிய பொதுமொழிப் பிரயோகங்களைக் கைக்கொண்டு வருகின்றார்கள்: ஒன்றுமெழுதாது, இக்காலம் நம்மவரிற் சிலர் தலையை முண்டிதஞ் செய்து கொள்வது போலப் பிள்ளையார் சுழிகூட வெழுதாது மொட்டையாய் விட்டு மேனாட்டார் கொள்கையைக் கைப்பற்றியும் வருகின்றார்கள். எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும் சிவநாமத்தை மொழிவதே நஞ்சமயக்கொள்கையின் மேலானதாய (ஞானம்) பலனைப்பயக்கும். சிவம் என்ற மொழியே எல்லா மொழிகட்கும் மேலாய ஓரே மொழி. 'வேதநான்கினு மெய்ப்பொருளாவது நாதனாம நமச்சிவாயவே' என்றும் 'சிவனெனு நாமந்தனக்கே யுடைய செம்மேனி யெம்மான்' என்றும், 'நானேயோ தவஞ் செய்தேன் சிவாயநம வெனப்பெற்றேன்' என்றும், "சிவ சிவ வென்கிலர் தீவினையாளர் சிவசிவ வென்றிடத் தீவினை மாளுஞ் சிவசிவ வென்றிடத் தேவருமாவர், சிவசிவ வென்னச் சிவகதி தானே' என்றும் 'சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க் கபாய மொருநாளுமில்லை' என்றும், இன்னமும் நம் பெருமக்களெல்லோரும ஓரே மொழியாய் 'சிவ' என்னும் மந்திரத்தின் அளவற்ற ஆற்றலை யெடுத்தெடுத்துப் புகன்றிருக்கின்றார்கள். சைவ குலத்திற் பிறந்த நமக்கு இயற்கையிலேயே கிடைத்து நமது உள்ளங் கையில் வற்றாது முற்றுதுபெருகி யிருக்கும், பிறப்பிறப்பாகிய பெருநோயைத் தீர்க்கவல்ல, சிவாணந்தத் தேனைக் கைவிட்டு உடம்பின் பிணிதீர்க்கும் வேப்பெண்ணெய்யைத் தேடுவார்போன்று ஒழுகுவது கூடாவொழுக்கமே யாம். இதுபற்றியன்றோ அருணந்தி சிவாச்சாரியர் "சைவமாஞ் சமயஞ் சாருமூழ் பெறலரிது' எனவருளினார். மெய்கண்டசிவனாரும் 'சிவமென்னு மந்ததர' வெனத் தமது சைவமாணக்கனைக் கூவி யழைத்தார். நமது சமயத்தின் பெயர் சைவ சமயம், கடவுட் சமயமல்ல; நாம் வணங்கத் தோன்றியிருக்கும் ஆலயங்களின் பெயர் சிவன் கோயில், கடவுள் கோயிலல்ல;

நமக்கு நியமமாக ஜெபித்தற்குரிய மந்திரம் சிவாய நம, க
வுளாய நம அல்ல; நமது காயத்திரி மந்திரம் சிவகாயத்தி
கடவுள் காயத்திரி அல்ல; நாம் நியமமாகச் செய்யும் பூஜை
சிவபூஜை, கடவுட் பூஜையல்ல; நாம் கற்கும் சமயநூல்களி
பெயர்கள் சிவஞானபோதம், சிவஞானசித்தியார், சிவப்பி
காசம், சிவதருமோத்தரம் ஆதிய நூல்களே, கடவுள் ஞான
போதம், கடவுள் ஞான சித்தியார் கடவுட் பிரகாசம் என்
நூல்களல்ல, நாம் அடையவேண்டி முயலும் ஞானம் சி
ஞானமேயாம், கடவுள் ஞானமல்ல; "சிவமாக்கி யெனையாண்ட
அத்தன்" என மாணிக்கவாசக ரருளினரே யொழிய கட
ளாக்கி யென வருளினரல்லர். * ஆனதால் நஞ் சைவகுலத்
தோன்றல்களாகிய மக்களும் மாணவர்களும், சைவநெறியில்
விருப்புற்று அவ்வழி நடக்கும் ஏனையோர்களும் இவ்வாசகங்
களைக் கூர்ந்து நோக்கிச் சிவமென்ற பெயரையே சிறப்புப்
பெயராகக்கொண்டு "இருக்கினு நிற்கும்போது மிரவு கண்
டுயிலும்போதும், பொருக்கென நடக்கும்போதும் பொருந்
தியூண் டுய்க்கும்போதும், முருக்கிதழ்க் கனிவாயாரை முயங்கி
நெஞ் சழியும்போதுந், திருக்களாவுடைய நம்பா சிந்தையுன்
பாலதாமே." என்னும் அதிமதுர அற்புதத் திருவாக்கின்
ஆணைப்படி ஒழுகி வரவேண்டுமெனப் பன்முறையும் வற்புறுத்
திப் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்கின்றோம்.

௱௲. இவ்வாராய்ச்சியை இத்துடன் நிறுத்தி, மறை,
நான்மறை, அந்தணர், பார்ப்பார் என்னுஞ் சொற்களின் வழக்
கைப்பின்னுமோர் முறையிற் சிறப்பு வகையாய் ஆராய்ந்து,
சித்தாந்தப் படுத்துவாம்.

தமிழ்மக்களுக்குத் தொல்காப்பியம் என்னும் நூலே
தமிழ் நூல்களுக் கெல்லாம் முந்தியதாய் நின்றுலாவுகின்ற
தென்பது எவராலும் மறுக்கப்படாத தொன்றே. இது, நம்
நூல்களின் கணக்குப்படி குறைந்தது ஏழாயிரமாண்டுகட்கு
முன்தோன்றியுள்ளது. இந்நூலின் சிறப்புப்பாயிரத்தில் நான்
மறை யென்ற சொற்றொடர் காண்கின்றோம். அதற்குப் பொருள்
"நான்கு கூறுமாய் மறைந்த பொருளு முடைமையான் "நான்
"மறை" யென்றார் அவை தைத்திரியமும் பௌடிகமும்

*ஆனால், சிவம் கடவுள் அல்லரோவெனக் குதர்க்கவாதிகள் வினவலாம்.
'சிவசிவ வென்கிலர், தீவினையாளர்' எனத் திருமூலமா யோகிகள்
குறிப்பிட்டவர்களில் முதற் றும்பூலம் பெறுபவர்கள் இவர்களே யாவர்.
சிவவென்ற மந்திரத்தின் முதலெழுத்தே கடவுள் என்ற பொதுச் சொல்
லின் பொருளைக்கொண்டிருப்பதன் மேலும் சைவருக்கு முத்திசாதன
மாகிய சூட்சம ரகசியப் பொருளும் அம்மந்திரத்திலுளது.

"தலவாகாரமுஞ் சாமவேதமுமாம், இனிஇருக்கும் யசுவும் "சாமமும் அதர்வணமுமென்பாருமுளர். அது பொருந்தாது. "இவர் இந்நூல் செய்தபின்னர் வேதவியாதர் சின்னாட்பல் "பிணிச்சிற்றறிவினோர்க்கு நான்கு கூறாக இவற்றைச் "செய்தாராதலின்" எனஉரை ஆசிரியர் உரைகண்டார். இப் பாயிரச் சூத்திரத்துக்கு விருத்தி உரைசெய்த சிவஞான முனிவோராதியதமிழ்ப் பெருமக்கள் யாவரும் இவ்வுரையை மறுத்திலர். ஆதலால்இப்போது வழங்கும் வடமொழி நான் மறைகள் தோன்றுவதன் முன்னரே வடமொழியில் நான்மறை கள் நின்று நிலாவின வென்பது வெளிப்படை. இனித் தொல் காப்பியத்தில், தொல்காப்பியர் முதன்முதல் இயற்றிய எழுத்தின் பிறப்பியல் உ0-வது சூத்திரத்தில் கூறுவதாவது:— தமிழ் எழுத்துக்கள் உந்தியினின் றெழும் காற்றாற் பிறப்பன, வடமொழி யெழுத்துக்கள் உந்தியினின்றும் மூலாதாரத்தி னின்றும் எழும் ஓசையாற்பிறப்பன, அவற்றின ஓசையையும் மாத்திரைகளையும் அந்தணர்களது மறையிற் காணலாம், அதை யிந்நூலில் சொல்ல இயலாது, உந்தியினின்று பிறக்கும்எழுத்து களின் மாத்திரைகளையே கூறினேனென்றார். எச்ச வியலில் "இயற்சொ றிரிசொல், திசைச்சொல், வடசொல் என் றனைத்தே செய்யுளீட்டச் சொல்லே" என்றும் "அந்நாற் சொல்லுந் தொடுக்குங்காலை * * நாட்டல் வலிய என்மனார் புலவர்" என்றும் தொல்காப்பியர் கூறினார். இதனையுணரப் படுவது யாதெனின், தமிழ்ச் செய்யுளிடத்து வடமொழியும் விரவப்பெறுமென்றும், அவ்வகைக்கும் தொல்காப்பியர் இலக் கணங்கூறினாரென்றும் அவ்வாறு தொல்காப்பியர் கூறியது, அவர் ஆசிரியர் அகத்தியனார் கூறிய இலக்கணவழியே என்ப தும் பெற்றாம். இதனால் அகத்தியர் கூறிய அகத்தியத்தி னும் வடமொழி வழக்கு இருந்ததென்பதே நிலைபெறும்.

அகத்தியனாரும் தாமே இலக்கணம் வகுத்தவரல்லர். அவருக்கு முன்னரே தமிழ் நாட்டில் தமிழ் வழக்கு இருந்த தென்றே தமிழ் நூல்கள் கூறுகின்றமையைக்கொண்டு அதற்கு முந்தியிருந்த இலக்கண நூல்களை ஆதாரவாகக்கொண்டே அகத் தியரும் இலக்கணம் வகுத்தாரென்பது தமிழ் ஆசிரியர்கள் கருத்து. ஆதலால் வடமொழியும் வடமொழி வேதமும் ஆதி தொட்டே நந்தமிழ் நாட்டிற் பரந்து நிலாவியதென்பதே உறுதி. தொல்காப்பியத்தில் சமயக்கொள்கைகளையும் அச்சமயக் கட வுளர்களை வழிபடும் முறைமையையும் விவரித்துக்கூறவேயில்லை. சிவம் என்ற பெயரே அந்நூலில் காணவில்லை. ஆனால் தொல் காப்பிய நூல் எழுவதற்கு முன்னரே அகத்தியர் தென்னாட் டுக்கு எழுந்தருளியபோதே தமிழ் நாட்டில் சிவாலயம் விண்டு

ஆலயம் தோன்றியிருந்தனவாகவே தெரிகின்றது. திருக்குற்றாலம் என்னுந் தலம் விஷ்ணு ஆலயமாயிருந்ததாயும் அதைச் சிவ தலமாக அகத்தியனார் ஆக்கியதாயுங் கந்த புராணம் கூறும். வான்மீகர் இயற்றிய வடமொழி இராமாயணத்துள் சுவேதாரணிய சைவதலங் கூறப்பட்டுள்ளது. மதுரையிற் சோமசுந்தரக் கடவுளை அகத்தியனார் வணங்கியதாகவுஞ் சைவ நூல்கள் கூறும். தொல்காப்பியம் தமிழ் மொழிக்கு இலக்கணமாதலின் சமயக் கொள்கை ஒன்றும் அதில் விவரித்துக் காட்டவில்லையென்பதே உறுதி. கடைச்சங்க நூல்கள் இயற்றினோர்க்குத் தொல்காப்பியமே இலக்கணமாம். ஆதலால் சங்க நூல்களிற் காணப்படும், மறை, நான்மறை என்ற சொற்களுக்குத் தொல்காப்பியர் கூறிய இலக்கண முறைப்படியே பொருள் கொள்ளவேண்டுவது நம்மனோர் கடமை. நமது யுக்திப்படி பொருள் கற்பிப்பதானால் இலக்கணமெனும் ஒரு நூல் எதுக்குத் தோன்றியது. ஒவ்வொருவரும் அவரவர் மனம்போலப் பொருள் கூறினால் தமிழ்மொழி இலக்கண வரம்புக்குட்படாத சாமானிய பாஷையாம். புறநானூற்றில் மறை, நான்மறையென்று காணப்படுஞ் சொற்களுக்குப் பொருள் வடமொழி வேதம் என்றே இவ்வாராய்ச்சியில் மேலே காட்டப்பட்டுளது. பின்னும் சில மேற்கோள்கள் அஃவகைக்கு சங்கநூல்களிலிருந்து கீழே குறிக்கப்படுகின்றன.

(க) "அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர், திறம்புரி பசும்புறபரப்பினர்" புறநானூறு.

(உ) "அருமறை நாவினந் தணர்க்காயினும்" சிறுபாணாற்றுப்படை.

(ங) "வளைவாய்க்கிள்ளை மறைவிளிபயிற்று மறைகாப்பாளருறைபதி" பெரும்பாணாற்றுப்படை.

(ச) நான்மறையோர் புகழ் பரப்பியும்" பட்டினப்பாலை.

(ரு) "மறையறிப அந்தணர் புலவர்" நான்மணிக்கடிகை.

(சு) "வரன் முறையான் வந்த நான்மறையாளர், மேன்முறைப்பாற்றங் குரவரைப்போ லொழுகல். நான்முறையாளர் துணிபு" ஆசாரக்கோவை.

மற்றும் உள. இவைகளால், அந்தந்த நூலாக்கியோர் காலத்து நிகழ்ந்தவற்றைக்கண்டு மறை, நான்மறை யென்ற சொல் வடமொழி வேதங்களைக்குறித்தே ஆளப்பட்டிருக்கின்றனவென்று வெளியாகின்றது. உரையாசிரியர்களும் அவ்வாறே உரை கண்டார்கள். இனி அந்தணர், பார்ப்பார், எனுஞ் சொற்கள் எப்பொருளைக்கொண்டு சங்க நூல்களிற் பிரயோகப்படுத்தப் பட்டிருக்கின்றன வென்பதைப் பார்ப்போம்.

(க) ஆவுமானியற் பார்ப்பன மாக்களும் * * *
எம்மம்பு கடிது விடுதும் நும்மரண் சேர்மின்—பு. நா.

(உ) ஆன்முலையறுத்த வறனிலோர்க்கும் மாணிழை மகளிர்
கருச்சிதைத்தோர்க்கும் பார்ப்பார்த்தப்பிய
கொடுமையோர்க்கும்— பு. நா.

(ங) நன் பலகேள்வி முற்றிய வேள்வியந்தணர்க்—கருங்கல
நீரொடு சிதறிப் பெருந்தகை— பு. நா.

௪. எற்றபார்ப்பார்க் கீர்ங்கைநிறையப்-பூவும்பொன்னும்
புனல்படச்சொரிந்து பு. நா

ரு. செறுவிற்பூத்த சேயிதழ்த்தாமரை யறுதொழிலந்தணரறம்புரிந்
தெடுத்த—தீயொடு விளங்குநாடன் பு. நா

சு. ஓதல்வேட்டல் அவைபிறர்ச்செய்தல், ஈதலேற்றல் என்றாறு
புரிந்தொழுகு மறம்புரியந்தணர் பதிற்றுப்பத்து

எ. அறங்கரைந்து வயங்கியநாவிற் பிறங்கியவுரைசால் வேள்வி
முடித்த கேள்விஅந்தணர் பதிற்றுப்பத்து

அ. அருமறை நாவினந்தணர்க் காயினும் சி. பாணாற்றுப்படை

கூ. கேள்வி அந்தணர் அருங்கடனிறுத்த வேள்வித்தூணதசைஇ''
[பெ. பாணாற்றுப்படை]

க0. சிறந்தவேதம் விளங்கப்பாடி ... .. குன்றுகுயின் றன்ன அந்த
ணர்பள்ளியும் மதுரைக்காஞ்சி

கக. அந்தணரினல்ல பிறப்பில்லை நான்மணிக்கடிகை

கஉ. பார்ப்பார் பசித்தவர் தவசிகள்......தூப்பால், நீண்டாரால்எண்
ணாதுநீத்தவர் மண்ணுண்டுபெண்டாரம் பற்றவாழ்வர்—ஏலாதி

கங. பார்ப்பார் அறவோர் பசுப்பத்தினிப்பெண்டிர் மூத்தோர்
குழவியெனுமிவரைக் கைவிட்டுத் தீத்திறத்தார் பக்கமே
சேர் கென்று சிலப்பதிகாரம்

இன்னம் பலவுள, விரிவஞ்சி விடுத்தனம். இம்மேற்கோள்களால், அந்தணர் பார்ப்பார் என்போர், அவர்கள் பிறப்பினாலேயே, மேன்பட்டவரெனவும், தொல்காப்பியர் சொன்னபடி அவர்கள் வேதம் ஓதல் வேள்விவேட்டல் ஆதிய ஆறுதொழிற் பூண்டுளோரெனவும் ஆதலால் அவர்களை காரணம் பயன் கருதாது பண்டையோர் உபசரித்துப் பாதுகாத்து வந்தனரெனவும் விளக்கமாவதைக் காணலாம். இன்னமும் அகத்தியனார் மாணாக்கர் பன்னிருவரியற்றிய பன்னிருபடலமென்னும் முதனூலுக்குப் புறப்பொருள் வெண்பாமாலையென்னும் வழிநூலியற்றிய சேரர்பரம்பரை ஐயனாரிதனார் என்னும் மூதறிவாளர், அவ்வழி நூலில், வேதம், நான்மறை, பார்ப்பார், அந்தணர், மறையோர், வேள்வி ஆதிய இம்மொழிகளை யெடுத்தாண்டிருக்கிற செய்யுட்கள் வருமாறு,

### வாகைப்படலம், பார்ப்பனவாகை.

"ஓதங் கரைதவழ் நீர் வேலியுலகினுள்
"வேதங் கரை கண்டான் வீற்றிருக்கு—மேதகு
"சுடுசுடர் தானாகிச் சொல்லவே வீழ்ந்த
"விடுசுடர் வேள்வி யகத்து"

### பார்ப்பன முல்லை.

"ஒல்லெனீர் ஞாலத் துணர்வோ விழுமிதே
"நல்லிசை முச்செந்தீ நான்மறையோன்—செல்லவும்
"வென்றன்றி மீளா விறல்வேந்தர் வெம்பகை
"யென்றன்றி மீண்டதிலர்"

### பாடாண் படலம்.

கபிலைகண்ணிய புண்ணியநிலை

அண்ணலுண்மறையந்தணாளர்க்குக்-கண்ணியகபிலை நிலையுரைத்தது.

"பருக்காழுஞ் செம்பொன்னும் பார்ப்பார் முகப்பக்
"குருக்கட் கபிலை கொடுத்தான்—செருக்கோ
"டிடிமுர சத்தானை யிகலிரிய வெங்கோன்
"கடிமுர சங்காலைச் செய்"

### வேள்வி நிலை.

'கேள்வி மறையோர் கிளைமகிழ்க வென்வியப்பாம்
"வேள்விவிறல் வேந்தன்றான் வேட்ப—நீள்விசும்பி
"னீர்ந்தாரிமை யோருமெய்தி யழல்வாயா
"லார்ந்தார் முறையாலவி"

இச்செய்யுட்களால் தொல்காப்பியத்தில் 'அறுவகைப்பட்ட' என்னுஞ் சூத்திரத்தின் "அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்" என்ற பகுதியை அமைத்த அந்நூலாசிரியரின் கருத்து, நம்மவர் கொள்கைப்படி, பார்ப்பாரென்றால் நூலைப் பார்ப்பவரல்லரென்பதும், அந்தணரென்றால் முனிவரல்லரென்பதும், நான்மறையென்றால் கடலில் மறைந்துபோனதாகச் சொல்லப்படும் தமிழ் நான்மறையல்லவென்பதும், வேள்வியென்றால் சைவநூலிற் கூறப்படும் ஐவகையாக மல்லவென்பதும் வெள்ளிடைமலை போல் விளங்கும். புறப்பொருள் வெண்பாமாலை யென்னும் நூல் புறப்பொருளின் இலக்கண இலக்கியத்தைச் செந்தமிழ்க் கவிவாணர் பல்லோருக்குங் காட்ட எழுந்ததென்பதைத் தமிழுலகு அறிந்ததே.

மற்றொரு வகையாகவும் ஆராய்வாம். மேற்காட்டிய நூல்களெல்லாம் அறம் பொருள் இன்பத்தையே விசேடமாய்க் கூறியவை. வீட்டுநெறியை விரித்துக் கூறுவனவல்ல. வேதம், மறை, நான்மறை, வேள்வி, அந்தணர், பார்ப்பார், ஆகிய பாகுபாடுகளும் அவற்றின் பொருள்களும் இன்னவை இன்

னவை எனத் தேவார திருவாசகமாதிய தமிழ் முறைகளின் ஆதாரவைக்கொண்டு அச்சொற்களின் பொருளை அறிவதே நடுவுநிலைமை காண்பாருக்கு உறுதியாம். ஆதலால் நந்தமிழ்த் திருமுறைகளில் அம்மொழிகளை எவ்வகைப் பொருளில் நம் சமயாசாரியர்கள் பிரயோகித்திருக்கின்றார்களென்பதை அவர்களது அருள் வாக்கைக் கொண்டே சுண்டிக் காட்டுவாம். வாசிப்போர் சலிப்படையாது, உண்மை காணும்பொருட்டுக் கவனித்துப் பார்க்க வேண்டப்படுகின்றார்கள்.

## சம்பந்தர்

௧. பொய்ம்மொழியா மறையோர்களேத்த ப்புகலி நிலாவிய
புண்ணியனே

௨. மெய்ம்மொழி நான்மறையோர் மிழலைவிண்ணிழி கோயில்
விரும்பியதே

௩. நாமருகேள்வியர் வேள்வியோவா நான்மறையோர் வழிபாடு
செய்ய மாமருவுமணிக்கோயில் மெய்மருகல்

௪. அங்கமும் வேதமுமோதுநாவர் அந்தணர்நாளும் அடிபரவ
மங்குல் மதிதவழு மாடவீதிமருகல்

௫. கீதத்திசையோடுங் கேள்விக்கிடையோடும் வேதத்தொலி
யோவா வீழிம்மிழலையே

௬. வேதமோர் கீதமுணர்வாணர் தொழுதேத்த மிகுவாசப்
போதனைப்போன் மறையோர் பயிலும் புகலி

௭. ஒருங்கிய மனத்தோ—டிருபிறப்போர்ந்து முப்பொழுது குறை
முடித்து நான்மறையோதி யைவகைவேள்வி யமைத்தாறங்
கம் முதலெழுத்தோதி வரன்முறை பயின்றெழு வான்
றனைவளர்க்கும் பிரமபுரம்.

௮. புந்தியி னான்மறை வழியே புற்பரப்பி நெய்சமிதை
கையிற்கொண்டு வெந்தழலின் வேட்டுலகின்மிக
அளிப்போர் சேருமூர் மிழலையாமே.

௯. மந்திரந் தருமாமறையோர்க டவத்தவர்
செந்திலங்கு மொழியவர் சேர்தெளிச் சேரியீர்

௰. வேதியர்கள் வேள்வியொழியாது மறைநாளு
மோதியானும முறைத்திடு நள்ளாறே.

௧௧. சதுரம் மறைதான் றுதிசெய்து வணங்கும் மதுரம்
பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா

௧௨. பலகாலங்கள் வேதங்கள் பாதங்கள் போற்றி
மலரால் வழிபாடு செய்மா மறைக்காடா

௧௩. வேதம் பலவோமம் வியந்தடிபோற்ற—வோதமுலவு
மறைக்காட்டி லுறைவாய்.

௧௪. ஓமென்று மறை பயில்வார் பிரமபுரம்

௧௫. கேள்வியார் நாடோறு மோதுநல்வேதத்தர்
கேடிலா வேள்வி செயந்தணர் வேதியர் வீழிமிழலையார்

கசு. அந்தணர் வேள்வியு மரு மறைத்துழனியும் செந்தமிழ்க்
கீதமுஞ் சீரிளுல் வளர்தர — — மழபாடி

கஎ. செந்தமிழர் தெய்வ மறைநாவர் செழுநற்கலைதெரிந்த
வவரோ டந்தமில் குணத்தவர்க ளர்ச்சனைகள் செய்ய
அமர்கின்ற அரஞூர் — — மிழலை

கஅ. வாய்த்தமுத் தீதமொழின் நான்மறையோர் வலம்புரம்

கக. ஆங்கெரிமூன் று மமர்ந்துடனிருந்த அங்கையாலாகுதி
வேட்டு—மோங்கிய மறையோ ரோமமாம் புலியூர்

உ0. கற்றநால்வேத மங்கமோ ராறுங் கருத்தினு ரருத்தியாற்
றெரியு முற்றபல் புகழாரோமமாம் புலியூர்.

உக. மணந்திகழ் திசைகளெட்டு மேழிசையு மலியுமாறங்கமை
வேள்வி—யிணைந்தநால்வேத மூன்றெரியிரண்டு பிறப்பென
வொருமையா லுணருங், குணங்களு மவற்றின் கொள்
பொருள் குற்றமற்றவை·யுற்றதுமெல்லா, முணர்ந்தவர்
வாழு மோமமாம் புலியூர்.

அப்பர்.

உஉ. அந்தணர்க் கருங்கல மருமறையாறங்கம்—நங்களுக்
கருங்கல நமச்சிவாயவே.

உங. செந்தீயார் வேள்வியோவாத் தில்லைச் சிற்றம்பலம்

உச. தினைத்தனை வேதங்குன்றுத் தில்லைச்சிற்றம்பலம்

உரு. அங்கமாறு மருமறை நான்குடன் தங்குவேள்வியர்
தாம் பயிலுந் நகர். திருவாஞ்சியம்.

உசு. குசையு மங்கையிற் கோசகமுங் கொண்ட வசையின்
மங்கல வாசகர் வாழ்த்தவே.

உஎ. இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்து மிளங்கோயில்

உஅ. ஓதிமிக அந்தணர்கள் எரிமூன்றோம்பு மூயர்புகழார்தரு
மோமாம் புலியூர்.

உகூ. ஒன்றியசீரிரு பிறப்பர்முத்தீ யோம்பு முயர்புகழ்
நான்மறை யோமாம் புலியூர்.

ங0. தகை நால்வேத—மோர்ந்தோதிப் பயில்வார்
வாழ்தரு மோமாம் புலியூர்.

ஙக. பார்கெழுவு புகழ்மறையோர் பயிலுமாடப்
பைம்பொழில் சேர்தரு மோமாம் புலியூர்.

சுந்தரர்.

ஙஉ. கலையடைந்த கலிகடியந்தண ரோமப் புகையாற்
கணமுகில் போன்றணி கிளருங் கலயநல்லூர்.

ஙங. சொற்பால பொருட்பால சுருதியொரு நான்குந்
தோத்திரமும் பலசொல்லித் துதித்திறை தன்றிறத்தே
கற்பாரும் கேட்பாரு மாயெங்கு நன்கார் கலைபயிலந்தணர்
வாழுங்கலைய நல்லூர்காணே.

௩௪. பொய்யாத வாய்மையாற் பொடிப்பூசிப் போற்றிசைத்துப் பூசைசெய்து, கையினா லெரியோம்பி மறைவளர்க்கு மந்தணர்தங் கருப் பறியலூர்.

௩௫. மன்னிய சீர்மறை நாவனின்ற வூர்ப்பூசல்

௩௬ இருக்குவா யந்தணர்க ளெழுபிறப்பு ளெங்கும் வேள்வியிருந் திருநிதியம் வழங்குநகர்—காறைட்டூமுள்ளூர்

௩௭. நம்பினார்க் கருள்செய்யு மந்தணர் நான்மறைக்கிடமாய் வேள்வியுட், செம்பொனேர் மடவாரணிபெற்ற திருமிழலை.

௩௮. பார்நிலவு மறையோரும் பத்தர்களும் பணிசெய்ய
[வெண்பாக்கம்]

௩௯. அங்கமோராறவையும் மருமாமறை வேள்விகளும் எங்குமிருந்தந் தணரெரிமூன் றவையோம்புமிடம் ......... நனிபள்ளியதே.

நம் பெருமக்கள் தெரிசிக்கச்சென்ற சிவதலங்களில் அக்காலம் நிகழ்ந்த சிறப்புகளை அவர்கள் கண்கூடாகக் கண்டபடி, அவர்களது பாடல்களில் மேற்காட்டியவாறு இன்னும் பல அருளியிருக்கின்றார்கள். தேவாரம் பெற்ற சிவதலங்கள் ௨௭௪. அத்தலங்களின் தேவாரங்களிலெல்லாம் இவ்வாறு கூறப்பட்டிருக்கவில்லை. எங்கெந்தத் தலங்களில் அந்தணர், நான்மறை. வேதவேள்வி செந்தமிழோர் பெருக்கமாயிருக்கக் கண்டார்களோ அத்தலத் தேவாரங்களிலேயே அவ்வாறு அருளியிருக்கின்றார்கள். அவற்றினும், ஓமாம்புலியூர், மிழலை, இத்தலங்களின் தேவாரப் பதிகங்களில் மூவர்களும் ஒரே தன்மையாய்ச் சிறப்பித்திருக்கின்றார்கள். தொல்காப்பியர், அந்தணர் பார்ப்பனர் எனக் கூறியும் அவர்களது அறுதொழிலைக் கூறியுமுள்ளபடியே மேற்காட்டிய தேவார அருண்மொழிகளில் சமயாசாரியர் மூவரும் அருளிச் செய்திருப்பதும் நன்கு புலப்படும். ஆதலால் தொல்காப்பியத்து வரும் இவ்வகைச் சூத்திரங்கட்கு மனம்போல வெவ்வேறு பொருள்கொள்ளப் புகுவதும் பொருத்தமிலதாம். மேலே கண்டிருக்கிற தேவாரப் பகுதிகளில் ௨௨-வது எண்ணில் காட்டியவாறு அப்பமூர்த்திகள், அந்தணர்க் கருங்கலம் அருமறை ஆறங்கம் என்றும் நங்களுக் கருங்கலம் நமச்சிவாயவே என்றும் இருவகையாய்ப் பிரித்துக் காட்டியிருப்பதை நோக்குங்கால் நமது பாஷ்யகர்த்தர் அருளியபடி அருமறை ஆறங்கம் முதல் மூன்று வருணத்தாருக்கே உரியதென்பதும் சிவாகமம் நான்கு வருணத்தாருக்கும் உரியதென்பதும் விளக்கமாகின்றன. ௧௯-கள பகுதிகளில் அந்தணர் வேள்விகளையும் அவர்களோதும் வேத ஒலியையும் தமிழர்களுடைய செந்தமிழ் கீதத்தையும் வேறாகப் பிரித்துக் காட்டியிருப்பதனாலும் இருவகை மக்களையுஞ் சொல்லி ஒருவர் செங்

தமிழர் என்றும் மற்றொருவர் தெய்வமறை நாவர் என்று விசேஷித்துக்காட்டி யிருப்பதானும் அந்தணர் ஆவார் வே குலத்தார் அவர்கள் ஓதும் மறை செந்தமிழல்லாத வே பாஷை என்பதும் தெள்ளிதாய் விளங்கும்.  ௲அ-வது பகு யில் பார்நிலவு மறையோரும் பத்தர்களும் பணிசெய்ய என சுந்தரமூர்த்திகள் அருளியிருப்பதினும் சிவத்தொண்டர்கள் யிருவகையாகப் பிரித்திருப்பதனால், மறையோர் என்ற மொழி முதல் வருணத்தினரையும் பத்தர் என்ற மொழி மற்றையோ ரையுங் குறித்துக்கொண்டு நிற்பதையுங் காணலாம். ஸ்ரீஞான சம்பந்தப்பெருமான், அந்தணர் மறையோர் இவர்களைச் சிற பித்துக் கூறியதுபோல வேளாளர்களையுஞ் சிறப்பித்தே கூற யிருக்கின்றனர். ஆனால் அந்தணர்களுக்கு வேதம் ஓதல் வேள்வி வேட்டல் முத்தீயோமபுதல் ஆதிய தொழில்களைக் குறிப்பிட்டதுபோல் வேளாளர்களுக்குக் குறிப்பிடவில்லை மற்றெவ்வாறெனில் வள்ளற் றன்மையில் அதாவது ஈதலிற் பெருங்கீர்த்தியுடையவரெனக் கூறப்பட்டிருப்பதோடு இருவ ரும் வெவ்வேறு குலத்தினரெனவுங் கூறப்பட்டிருக்கின்றது.

க. வேளாளரென்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்குந்
தாளாளராக் கூறிற்றுன் றேன்றிமாடமே என்பதனாலும்,

உ. கொடையுடைவண் கையாளர், மறையோர்கள்
என்றும் வளர்கின்ற கொச்சைவயமே என்பதனாலும்

ந. கொடையிலோவார்குலமும், முயர்ந்தம் மறையோர்கடாம்
புடைகொள் வேள்விப் புகை யும்பருலாவும் புகலியே.

என்பதனாலும் அறியலாம்.

மாணிக்கவாசகரை இறைவன் அந்தணர் கோலங் கொண்டு தேசிக மூர்த்தியாகி ஆட்கொண்டனர் என்பதை ஒரு வரும் மறுக்கார். தமது ஆசிரியரை, அம்மூர்த்திகள்

க. "மறையயிலந்தணனு யாண்டுகொண்ட திருவான தேவன்"

உ. "அந்தண னுயறை கூவி வீடருளும் அங்கருணை வார்கழலே பாடுதுங்காணம்மானாய்"

ந. "வெள்ளத்தழுந்தி வினைகடிந்த வேதியன்"

ச. "மறையான் பெருந்துறையான் கொண்டபுரிநூலான்"

ரு. "முன்னே யெனையாண்ட பார்ப்பானே"

சா. "பத்தர்சூழப் பராபரன் பாரில் வந்து பார்ப்பானெனை"

எ. "மறையோர் கோலங்காட்டியருளலும்"

என்பனவாதிய அருண் மொழிகளாற் றுதித்தார். இவற்று லும், அந்தணர், பார்ப்பார், ஆதிய சொற்கள் காரண விடுகுறிப் பெயராய் நின்று தொல்காப்பியச் சூத்திரப்படி முதற் குலத்தவ

ரையே குறித்தனவென்பதை அறியவேண்டும். மேலும் சிவ பெருமான் அந்தணர் கோலங்கொண்டு நற்கிளைய முப்புரி நூல் தரித்துவந்தனர் என மாணிக்கவாசகர் அருளியிருப்ப தால் தொல்காப்பியத்தில் அந்தணர்க்குரிய அடையாளங்களில் ஒன்று நூல் என்று கூறியமொழிக்கு ஏடு, என நம்மவர் விகற்ப உரைகண்டது உண்மையலவென்பதும் விளங்கும்.

பின்னும் மற்றொரு வகையானும் ஆராய்வாம். சைவத் தமிழ் மக்களுக்குப் பெரிய புராணமென்னும் நூலே கண் போன்றது. இந்நூல் தோன்றியிராவிடின் தேவாரமென்னுந் தமிழ் மறையின் வரலாறும் அதன் பொருளும் காண்பது மிக அரிது. நடராஜப் பெருமான் முதலெடுத்துக் கொடுக்கச் சேக்கிழார் நாயனாரால் அஃது பாடப்பட்டு நிலவுகின்றது. சேக்கிழார் தொண்டைநாட்டு வேளாள குலாதிபதி. தில்லை வாழந்தணர்களில் ஒருவரும் சந்தான குரவர்களில் ஒருவரு மாகிய உபாபதி சிவத்தாலுந் துதிக்கப் பெற்றவர். அநபாய சோழனென்னும் சோழ அரையனுக்கு முதல் மந்திரியாயிருந்து லௌகிகத் தன்மையிலும் முற்றுந் தேர்ந்தவர். இப்பெரிய புராணம் அறுபான் மூன்று நாயன்மார்கள் சரிதத்தை விரித் துக் கூறுகின்றது. அது விரிநூலாதலான் அவர்கள் குலம், தொழில், சிவத்தொண்டு ஆதியவற்றை விரித்துக் கூறும். அறுபத்து மூவர்களும் தொகையடியார்களும் பிறப் பினல் பல பேதப்பட்ட குலத்தவராவர். அறுபத்துமூவர் களில் பதின்மூவர் பிராமண குலத்தவரென்று சொல்லப்படு கின்றார்கள். அவர்களாவார் (க) தில்லைவாழந்தணர்கள் (உ) கலயர் (ங) முருகர் (ச) பசுபதியார் (ரு) சிறப்புலியார் (சு) கணநாதர் (எ) பூசலார் (அ) சண்டேசர் (கூ) சோமாசிமாறர் (க0) நமிநந்தி (கக) சம்பந்தர் (கஉ) அப்பூதி (கங) நீலநக்கர், எனச் சேக்கிழார் புராணம் ௩௩-வது செய்யுள் கூறும். இந் நாயன்மார்களைக் குறிப்பிடும்போது மட்டுமே, அந்தணர், மறையோர், வேதியர், மறை, நான்மறை, வேதம், வேள்வி என்பன வாதிய மொழிகளை யெடுத்துப் பெரிய புராணத்தில் ஆளப் பட்டிருக்கின்றன.

### தில்லைவாழந்தணர்களை

(க) "வருமுறை யெரிமூன்றோம்பி மன்னுயிர ருளான்மல்கத்
தருமமே பொருளாக்கொண்டு தத்துவநெறியிற் செல்லு
மருமறை நான்கினோடா றங்கமும்பயின்று வல்லார்"

(உ) "செம்மையாற் றணிந்த சிந்தைத்தெய்வ வேதியர்கள்"

### குங்கிலியக்கலயநாயனாரை

(க) "அருமறை முந்நூல் மார்பினந்தணர் கலயரென்பார்"

முருக நாயனாரை

(க) "மானமறையோர் குலமரபின் வந்தார் மூன்றுமறை மூதல்வர்......முருகனார்"

பசுபதியாரை

(க) "அருமறைவாய்மைத் தூங்கவேதியர் குலத்தினிற் றோன்றிய தூயோர்"

(உ) "அருமறைப் பயனாகிய உருத்திரமதனை, வருமுறைப் பெரும் பகலுமெல்லியும் வழுவாமே, திருமலர்ப்பொகுட்டிருந்த வனையவர் சிலநாள்-ஒருமையுய்த்திட"

சிறப்புலியாரை

(க) "நான்மறைக் குலத்தினுள்ளார்"

கணநாதரை

(க) "காழிமாநகர்த் திருமறையவர் குலக்காவலர்"

பூசலாரை

(க) "அருமறை மரபுவாழ அப்பதிவந்து ... ... வாய்மைப் பொருள்பெறு வேதநீதிக் கலையுணர் பொலிவின்மிக்கார்"

சண்டேச நாயனாரை

(க) "நன்மைமறையின் றுறைவிளங்க, என்று மறையோர் குலம்பெருக .....உதயஞ்செய்தார் விசாரசருமனார்"

சோமாசிமாறரை

(க) "தூயவாய்மை, வேதம்பயிலு மறையாளர் குலத்தின்மேலோர்"

நமிநந்தி நாயனாரை

(க) "பேணுநீற்றுச் சைவநெறி-யொருமைவழி வாழந்தணர் தமோங்கு குலத்தினுள் வந்தார்"

(உ) "வாய்மைமறைநூற் சீலத்தால் வளர்க்குஞ் செந்தீயெனத் தகுவார்"

சம்பந்தரை

(க) "அப்பதியி லந்தணர்தங்குடி முதல்வரா சின்மறை கைப்படுத்த சீலத்துக் கௌணியர்கோத்திரம் விளங்க செப்புநெறி வழிவந்தார் சிவபாத இருதயர்"

(உ) "மற்றவர் தந்திருமனையார் வாய்ந்தமறை மரபின்வரு பெற்றியினார்"

(இவர்களைத் தந்தை தாயராகக்கொண்டு)

(ங) "தாவில் சராசரங்களெலாஞ் சிவம் பெருக்கும் பிள்ளையார் திருவவதாரஞ் செய்தார்"

அப்பூதி நாயனாரை

(க) "திங்களூர் மறைத்தலைவர்" "மறையோர்" "ஆதிநான்மறை நூல்வாய்மை அப்பூதியார்"

நீலநக்க நாயனார்

(௬) "சீலமுய்த்தவத் திருமறையோர் செழு மூதூர்
ஞாலமிக்கநான் மறைக்குலம் விளங்கிய நலத்தார்
ஆலம்வைத்த கண்டத்தவர் தொண்டரா மன்பர்
நீலநக்கரென் பவர் நிகழ்ந்துளாரானார்"

என்பனவாகிய பெரிய புராணச் செய்யுட் பகுதிகளில் மேற்காட்டிய பதின்மூன்று பிராமணகுலப் பெருமக்களை வேதமாதியவைகட்குரிய மறையவர், அந்தணர், வேதியர் என்போரது குலத்திற்றோன்றினவர்களென்று சேக்கிழார் அருளியிருக்கின்றனர். மற்றைய நாயன்மார்கள், அரையர், வைசியர், வேளாளர் ஆகிய பற்பல குலத்தவராவார். இவர்களில் ஒருவரையாவது குறிப்பிடும்போது மேற்கண்ட மொழிகள் பிரயோகப் படுத்தப்பட்டிருக்கவில்லை. திருநாவுக்கரசு நாயனார் பரம்பரைச் சைவ உத்தம வேளாள குலத்தலைவர். சைவசமயாசாரியர்களில் ஒருவர். அந்தணராதியோராலும் போற்றப்படும் பெரியார். சம்பந்தப்பெருமானே அம்மூர்த்திகளை வணங்கியிருப்பாரேயானால் அம்மூர்த்திகளின் பெருமை எத்தகையதென்று சொல்லலாம். அப் பெருந்தகையாரைக் குறிப்பிட்ட இடங்களிற் கூட அந்தணர், வேதியர், மறையோராகிய பெயர்களாற் சேக்கிழார் மூர்த்திகள் குறிப்பிடவில்லை. இவற்றால், அந்தணர், மறையோர், வேதியர், பார்ப்பார் என்போர் தொல்காப்பியச் சூத்திரப்படி முதற் குலத்தவரையே சுட்டுமென்பதற் கையமுமுண்டோ. மறை, வேதம் என்பன அவர்கள் ஓதும் வடமொழி வேதங்களேயாகும், 'அருமறை முந்நூல் மார்பினந்தணர்' என்றுஞ் சொன்னமையால், நூலே கரகம் முக்கோல் மணையே ஆயுங்காலை அந்தணர்க்குரியவென்னுஞ் சூத்திரத்தில் நூல் என்பதற்கு முந்நூல் என உரை ஆசிரியர் கண்ட பொருளே பொருளென்பதும் விளங்கும்.

சேக்கிழார் மூர்த்திகளேயன்றி மற்றைச் சிவானுபூதிச் செல்வர்கள் பலர். அவர்களுள் கண்ணுடைய வள்ளலார், அருணகிரிநாதர், சிதம்பர சுவாமிகள், குமரகுருபர சுவாமிகள், அதிவீர ராமபாண்டியன் ஆதியோர்களாலும் அருளப்பட்ட சைவ நூல்களாகிய ஒழிவில் ஒடுக்கம், திருப்புகழ் திருப்போரூர்ச் சந்நிதிமுறை ஆகிய பிரபந்தங்களில், மறைப் புதல்வன், இருக்கு ஐயம்போக உரைத்தோன், மூவாமறையே மறையின் பொருளே, பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலே, எஞ்ஞான்று மீறிலா மறைமுடி யிருப்பான், எனக் காணப்படும் அருண்மொழிப்

ங்களில் மறையென்ற சொல்லுக்கு அப்பொறிவாளர்கள்
ன பொருள்கொண்டு பிரயோகித்திருக்கின்றார்க ளென்
தயும் உய்த்துணரவேண்டும்.

நமது தமிழ் நாட்டில் மெய்கண்ட சந்தான பரம்பரை
த் தோன்றி நிலைபெற்று விளங்கும் திருவாவடுதுறை, தரும
, ஆகிய தமிழ்ச் சைவாதீனங்களிலும், ஸ்ரீ ஞானசம்பந்தப்
நமான் காலம் முதல் தோன்றி விளங்கிவருவதாகச்
ல்லப்படும் மதுரைத் திருஞான சம்பந்த மூர்த்திகள் ஆதீ
திலும், அந்தந்த ஆதீனங்கள் தோன்றிய காலம் முதல் இரு
றிகளிலும் மிக்க வல்லவர்களாகிய மகா மேதாவிகளும்,
ழ்ப் பற்றுள்ளவர்களுமாகிய, சிறந்த மெய்யடியார்கள் குழு
ன் பல அற்புதங்களைச் செய்த தேசிக மூர்த்திகள், விளங்கித்
றை வளர்த்து வந்திருக்கின்றார்கள். இவர்களில் யாரும்,
து நண்பர், இக்காலம் கண்டுபிடித்த கற்பனை உரைகளை
து பண்டைய தமிழ் நூல்களிற் புகுத்தினாரில்லை.

இறுதியாய், மற்றொரு வகையான் நமது நண்பர் கற்
க்கு ஆதாரமுண்டோவெனப் பார்த்து இவ்வாராய்ச்சியை
வாறு முடிக்கின்றோம், நமது கன்னித் தீபமுற்றும் அத
ர்களும் சிறந்த நந்தமிழ் நாட்டகத்தும், சிவாலயங்களும்,
மால் ஆலயங்களும் பண்டுதொட்டே நிலைபெற்று விளங்கு
றன. அகத்தியர் பெருமான் நந்தமிழ் நாட்டுக்கு எழுந்
ளும் முன்னரே விண்டுவின் ஆலயம் தென் நாட்டில்
ான்றி விளங்கிவருவதாகத் தெரியவருமேயானால் அது விஷ
தில் சங்கை தோன்ற நியாயமில்லை. வடநாட்டுத் திருமால்
று தென்னாட்டுத் திருமால் வேறு எனப் பொருள் கொள்
படியாய் நம்மவரிற் சிலர் வீறுகப் பிதற்றுவார்கள்.
தெல்லாம் மயக்கவுரையே. "தென்னாடும் வடநாடுந் தொழு
ற திருவரங்கன்" எனத் திருமால் அடியார் கூறுவாராயி
. வழிபாட்டு விஷயங்களிற் சில வேற்றுமை காணலாம்.
து நமக்கு உடன்பாடல்ல. திருமாலானவர் சிவபெருமானது
ஷ சக்தியாவர். சிவாலயம் உள்ள தலங்களில் பெரும்பா
ம் திருமால் ஆலயமும் நிலைபெற்று வருவதைக் காணலாம்.
சிவாலயங்களில், அவ்வாலய ஆவரணத்துக்குள்ளேயே
ஷ்ணுமூர்த்தி எழுந்தருளியிருப்பதையுங் காணலாம். திரு
ல்வேலியில் சிவாலயத்திற்குள் நெல்லையப்பர் எழுந்தருளி
நக்குங் கற்பக் கிரகத்தையடுத்துச் சிவலிங்கப் பெருமா
க்குப் பக்கத்தே விஷ்ணுமூர்த்தியு மெழுந்தருளியிருக்கின்
ர். "அரியலாற்றேவியில்லை ஐயனையாறனார்க்கே" என்றும்
டல்வண்ணனாகி நின்ற தேவியைப் பாகம் வைத்தார்." என்

பகுதிகளில் மறையென்ற சொல்லுக்கு அப்பேரறிவாளர்கள் என்ன பொருள்கொண்டு பிரயோகித்திருக்கின்றார்களென்பதையும் உய்த்துணரவேண்டும்.

நமது தமிழ் நாட்டில் மெய்கண்ட சந்தான பரம்பரையாகத் தோன்றி நிலைபெற்று விளங்கும் திருவாவடுதுறை, தருமபுரம், ஆதிய தமிழ்ச் சைவாதீனங்களிலும், ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருமான் காலம் முதல் தோன்றி விளங்கிவருவதாகச் சொல்லப்படும் மதுரைத் திருஞான சம்பந்த மூர்த்திகள் ஆதீனத்திலும், அந்தந்த ஆதீனங்கள் தோன்றிய காலம் முதல் இருமொழிகளிலும் மிக்க வல்லவர்களாகிய மகா மேதாவிகளும், தமிழ்ப் பற்றுள்ளவர்களுமாகிய, சிறந்த மெய்யடியார்கள் குழுவுடன் பல அற்புதங்களைச் செய்த தேசிக மூர்த்திகள், விளங்கித் தமிழை வளர்த்து வந்திருக்கின்றார்கள். இவர்களில் யாரும், நமது நண்பர், இக்காலம் கண்டுபிடித்த கற்பனை உரைகளை நமது பண்டைய தமிழ் நூல்களிற் புகுத்தினாரில்லை.

இறுதியாய், மற்றொரு வகையான் நமது நண்பர் கற்பனைக்கு ஆதரவுண்டோவெனப் பார்த்து இவ்வாராய்ச்சியை ஒருவாறு முடிக்கின்றோம், நமது கன்னித் தீபமுற்றும் அதனுள்ளும் சிறந்த நந்தமிழ் நாட்டகத்தும், சிவாலயங்களும், திருமால் ஆலயங்களும் பண்டுதொட்டே நிலைபெற்று விளங்குகின்றன. அகத்தியர் பெருமான் நந்தமிழ் நாட்டுக்கு எழுந்தருளும் முன்னரே விண்டுவின் ஆலயம் தென் நாட்டில் தோன்றி விளங்கிவருவதாகத் தெரியவருமேயானால் அது விஷயத்தில் சங்கை தோன்ற நியாயமில்லை. வடநாட்டுத் திருமால் வேறு தென்னாட்டுத் திருமால் வேறு எனப் பொருள் கொள்ளும்படியாய் நம்மவரிற் சிலர் வீணாகப் பிதற்றுவார்கள். அதெல்லாம் மயக்கவுரையே. "தென்னாடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கன்" எனத் திருமால் அடியார் கூறுவாராயினர். வழிபாட்டு விஷயங்களிற் சில வேற்றுமை காணலாம். அது நமக்கு உடன்பாடல்ல. திருமாலானவர் சிவபெருமானது புருஷ சக்தியாவர். சிவாலயம் உள்ள தலங்களில் பெரும்பாலும் திருமால் ஆலயமும் நிலவைப்பெற்று வருவதைக் காணலாம். சில சிவாலயங்களில், அவ்வாலய ஆவரணத்துக்குள்ளேயே விஷ்ணுமூர்த்தி எழுந்தருளியிருப்பதையுங் காணலாம். திருநெல்வேலியில் சிவாலயத்திற்குள் நெல்லையப்பார் எழுந்தருளியிருக்குங் கெற்பக் கிரகத்தையடுத்துச் சிவலிங்கப் பெருமானுக்குப் பக்கத்தே விஷ்ணுமூர்த்தியு மெழுந்தருளியிருக்கின்றார். "அரியலாற்றேவியில்லை ஐய னையாறனார்க்கே" என்றும் "கடல்வண்ணனாகி நின்ற தேவியைப் பாகம் வைத்தார்." என்

றும் சைவத் திருமுறைகளும் கூறுகின்றன. சிவபெருமான் துதியாகத் தமிழ்மறை யென்னுந் தேவாரந் தோன்றியது போலவே திருமால் துதியாகத் திராவிட வேதமென்னும் நாலாயிரப் பிரபந்தந் தோன்றியுள்ளது. இந்தத் திராவிட வேதத்தினுள் மறை, நான்மறை, அந்தணர், மறையோர் என்பனாதிய சொற்களையும் திருமால் அடியார்கள் பிரயோகப்படுத்தியிருக்கின்றார்கள். அவைகளிற் சில பகுதிகளை அடியிற் காட்டுவாம்.

### பெரியாழ்வார்.

க. "நம்முடைய நாயகனே நான்மறையின் பொருளே"

உ. "செஞ்சொல் மறையவர் சேர்புதுவைப் பட்டன்"

ங. "இருக்கொடு நீர்சங்கிற் கொண்டிட்டு எழின்மறையோர் வந்துநின்றார்"

ச. "நால்வேதக் கடலமுதை மேலிருங் கற்பகத்தை வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை"

ரு. "மறைப்பெருந்தீ வளர்த்திருப்பார் வருவிருந்தை யளித்திருப்பார் சிறப்புடைய மறையவர் வாழ்திருவரங்கம்"

சு. "தென்னாடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கம்"

### சூடிக்கொடுத்த நாச்சியார்.

எ. "பழகு நான்மறையின் பொருளாய் மத, மொழுகுவாரணை முய்ய வளித்த வெம்மழகன்"

### குலசேகரப் பெருமாள்

அ. "அந்தமிழின் இன்பப்பா வினையவ் வடமொழியைப் பற்றற்றார் பயிலரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும் கோவினை."

### திருமழிசைப்பிரான்.

கூ. "அங்கமாறும் வேதம் நான்குமாகி நின்றவற்றுளே தங்குகின்ற தன்மையாய்"

க0. "இருக்கலந்த வேதநீதி யாகிநின்ற நின்மலா"

### மதுரகவியாழ்வார்.

கக. "அவ்வருமறையின் பொருள் அருள்கொண்டாயிர மின்றமிழ்ப் பாடினான்.

### திருமங்கை ஆழ்வார்.

கஉ. வாயோது வேத மலிகின்ற தொல்சீர் மறையாளர் நாளுமுறையால் வளர்த்த தீயோங்க வோங்கப் புகழோங்கு தில்லைத் திருச்சித்திரகூடம்"

கங. "இலங்கிய நான்மறை யனைத்துமங்கமாறுமேழிசையும் கேள்விகளு மெண்டிக் கெங்கும்—சிலம்பிய நற்பெருஞ் செல்வந் திகழு நாங்கூர்"

௧௪. "ஊழிதோறூ ழூழிதோறு முயர்ந்த செல்வத்தோங்கிய
நான்மறை யனைத்துந் தாங்கு நாவர்"

௧௫. "பண்டை நான்மறையும் வேள்வியும் கேள்விப்
பதங்களின் பொருளும் . . . ஆறும்
நின்ற வெம்பெருமான் அரங்கமா நகரமர்ந்தானே"

௧௬. "ச்சந்தோகா, பௌழியா, தைத்திரியா, சாமவேதியனே
நெடுமாலே"

௧௭. "செந்தமிழும் வடகலையுந் திகழ்ந்த நாவர்
திசைமுகனே யனையவர்கள் செம்மைமிக்க அந்தணர்
தமாருதியின் புகையார் செல்வத் தனியமுந்தார்
நின்றாகந்த அமரர் கோவே"

௧௮. "செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி"

நம்மாழ்வார்.

௧௯. மேவித் தொழுதுய் மீனீர்கள் வேதப்புனித இருக்கை
நாவிற்கொண் டச்சுதன் றன்னை"

இவைபோன்றன பலவுள. விரிவஞ்சி விடுத்தாம். இப்பகுதி களிலும், தேவாரத் திருமுறைகளிற் காணப்படுவதுபோலவே, மறை, நான்மறை, வேள்வி, அந்தணர் இருக்கு முதலாகிய நான்மறைகளின் பெயர்களையும், தென்மொழி வடமொழி இவைகளைப்பாகுபடுத்திக் கூறியிருப்பதையும் நந் சைவச் செந்தமிழ்க் கல்வியாளர்கள் நன்கு நோக்குவார்களாக. இந்த இருக்காதிய நான்மறைகளை யெந்தத் தமிழ் முனிவர் நால்வர், எக்காலம், யாரிடம் கேட்டு இயற்றினர்களோ? நம் நண்பர் தான் கூறவேண்டும்.

இதுகாறுங்காட்டிய பலவகை நியாயங்களாலும் அதி பிரபல பிரமாணங்களாலும், அந்தணர், மறையோர் வேதியர், பார்ப்பார் என்ற சொற்கள் காரண இடுகுறிப் பெயர்களாக நின்று, பண்டைய காலத்தொட்டே தொல்காப்பிய இலக்கண முறைப்படி, முதல் வருணத்தாரையே குறிப்பிட்டு வருகின்றன வென்பதும், மறை வேதம் என்பன அவர்களது வடமொழி வேதமே யென்பதும் வேதம் ஓதல், வேள்வி புரிதல் ஆகிய அறு தொழில் பூண்டோர் அவர்களே யென்பதும் தெளிவாய் விளங்குகின்றன. இவைகளைப்பற்றியும் வேத சிவாகமங்களில் விளங்கும் முழுமுதற் கடவுளாகிய சிவபிரானது திவ்ய மங்கள குணலங்கிர்தங்களைப்பற்றியும் அவைகளின் சாரமாகிய திராவிட வேத அருண்மொழிகளைப்பற்றியும் நாயினுங் கடையே னாகிய அடியேன் எடுத்துரைக்கவும், அவைகளின் பொருள்கள் இவைதான், இவையல்லவென்று வற்புறுத்திக் கூறவும் எம் மாத்திரம். மேருமலைக்கும் பரமாணுவுக்கும் எவ்வளவு தார தம்மிய முண்டோ அதுவுமில்லை. எதோ நம் பெருமக்களது உண்மைநெறியைப் பல்லோரும் அறியச் செய்யவேண்டுமென

கச. "ஊழிதோறு மூழிதோறு முயர்ந்த செல்வத்தோங்கிய
நான்மறை யனைத்துந் தாங்கு நாவர்"
கரு. "பண்டை நான்மறையும் வேள்வியும் கேள்விப்
பதங்களின் பொருளும் . . . தாறாய்
நின்ற வெம்பெருமான் அரங்கமா நகரமர்ந்தானே"
கசு. "சந்தோகா, பௌழியா, தைத்திரியா, சாமவேதியனே
நெடுமாலே"
கஎ. "செந்தமிழும் வடகலையுந் திகழ்ந்த நாவர்
திசைமுகனே யனையவர்கள் செம்மைமிக்க அந்தணர்
தமாருதியின் புகையார் செல்வத் தனியழுந்தூர்
நின்றுகந்த அமரர் கோவே"
கஅ. "செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி"

நம்மாழ்வார்.

க௯. மேவித் தொழுதுய்ம் மினீர்கள் வேதப்புனித இருக்கை
நாவிற்கொண் டச்சுதன் றன்னை"

இவைபோன்றன பலவுள. விரிவஞ்சி விடுத்தாம். இப்பகுதிகளிலும், தேவாரத் திருமுறைகளிற் காணப்படுவதுபோலவே, மறை, நான்மறை, வேள்வி, அந்தணர் இருக்கு முதலாகிய நான்மறைகளின் பெயர்களையும், தென்மொழி வடமொழி இவைகளைப்பாகுபடுத்திக் கூறியிருப்பதையும் நந் சைவச் செந்தமிழ்க் கல்வியாளர்கள் நன்கு நோக்குவார்களாக. இந்த இருக்காதிய நான்மறைகளை யெந்தத் தமிழ் முனிவர் நால்வர், எக்காலம், யாரிடம்கேட்டு இயற்றினார்களோ? நம் நண்பர்தான் கூறவேண்டும்.

இதுகாறுங்காட்டிய பலவகை நியாயங்களாலும் அதிபிரபல பிரமாணங்களாலும், அந்தணர், மறையோர் வேதியர், பார்ப்பார் என்ற சொற்கள் காரண இடுகுறிப் பெயர்களாக நின்று, பண்டைய காலந்தொட்டே தொல்காப்பிய இலக்கண முறைப்படி, முதல் வருணத்தாரையே குறிப்பிட்டு வருகின்றன வென்பதும், மறை வேதம் என்பன அவர்களது வடமொழி வேதமே யென்பதும் வேதம் ஓதல், வேள்வி புரிதல் ஆகிய அறுதொழில் பூண்டோர் அவர்களே யென்பதும் தெளிவாய் விளங்குகின்றன. இவைகளைப்பற்றியும் வேத சிவாகமங்களில் விளங்கும் முழுமுதற் கடவுளாகிய சிவபிரானது திவ்ய மங்கள குணாலங்கிர்தங்களைப்பற்றியும் அவைகளின் சாரமாகிய திராவிட வேத அருண்மொழிகளைப்பற்றியும் நாயினுங் கடையேனாகிய அடியேன் எடுத்துரைக்கவும், அவைகளின் பொருள்கள் இவைதான், இவையல்லவென்று வற்புறுத்திக் கூறவும் எம் மாத்திரம். மேரு மலைக்கும் பரமாணுவுக்கும் எவ்வளவு தாரதம்மிய முண்டோ அதுவுமில்லை. ஏதோ நம் பெருமக்களது உண்மைநெறியைப் பல்லோரும் அறியச் செய்யவேண்டுமென

௬௦. நம்மவர் எழுதிய திருநான்மறை விளக்கம். ௨௩வது பக்கத்தில் "சுத்த வித்தையில் எழும் அருள்நாத ஒலியாகிய "ஓங்காரத்தின் வாயிலாக உவமையிலாக் கலைஞானத்தை உதவ "அங்ஙனம் உதவப்பெற்றார் இயற்றிய நூலே ஆகமமாமெனச் "சுவாயம்புவத்திற் கூறியவாறே நால்வர்க்கருளிய விடத்தும் "மறைகள் எழுவதாயினவெனக் கோடலே மூவகை அளவைக் "கும் ஒத்ததாமெனவெழுதி, ௨௪அ-வது பக்கத்திலும் அவர் கருத்தை வலியுறுத்திக் கூறியிருக்கின்றார். சுவாயம்புவத்தின் வாக்கியங்களைக் காட்டாது இவர் எழுதி யிருப்பதைக் கொண்டே ஒருவித முடிபுக்கு வருவது உண்மைபயவாது. "மூவகை அளவைக்கும் ஒத்ததாம்" என்றாரே, அதைப் பரியாலோசிப்பாம். மூவகை அளவையாவன காண்டல், கருதல், உரை யென்பன. கடல்கோளில் அழிந்துபோனதாக நம்மவர் சொல்லுந் தமிழ்நான்மறை இவராலும் மற்றெவராலுங் காணப் படாததொன்றாம். ஆதலால் காண்டல் அளவையால் இவர் கோள் சாதிக்க முடியாது. மலையில் காணும் புகையைக்கண்டு அங்கு அதன் காரணமாகிய நெருப்புண்டென்று சித்தாந்தப் படுத்துவதுபோலக் காணப்படும் ஒன்றைக் கண்டுதான் அதற்குக் காரணமான மற்றொன்று உண்டெனத் தாபிக்கப்படவேண்டும். தமிழில் நான்மறையிருந்ததெனத் தமிழுலகு தோன்றியது முதல் இதுகாறுந்தோன்றிய செந்தமிழ்க் கல்வியாளர்களில் ஒருவரும் இவ்விதக் கருத்துக் கொண்டிலராதலானும் அந்நான் மறையின் மணங்கூட முகருதற்கிலாமையானும், கருதலளவை யானுந் தாபிக்கவியலாது. நமது வடமொழிக்கும், வேதசிவாகமங்கட்கும், வேதக்கொள்கைக்கும் விரோதியாயெழுந்த ஒருவர் தக்க பிரமாணங்காட்டாது அவரொருவர் கருதியதே பிரமாணமாகாது. தமிழ்நான்மறையென வொன்றிருந்ததென்பது வைதிக, சைவ, வைணவ தமிழ் நூல்கள் ஒன்றிலாவது, சங்க நூல்கள் ஒன்றிலாவது சொல்லப்படாதிருப்பதனால் நம்மவர் கூற்று உரையளவை யானுந் தாபிக்கப்படவில்லை யெனத் திண்ணமா யுரைக்கலாம். இவ்வகையில், நம்மவர் கோள் மூவகையளவையின் ஒன்றானும் சாதிக்கப்படவில்லையென்பதே முடிபாம்.

௬௧. இதுகாறுங் கண்ட ஆராய்ச்சியால் வேத சிவாகமங்கள்சிவபெருமான் வாக்கே யென்பதும், அவைகளே ஆதியிலுண்டான முதனூல்களென்பதும், அந்நூல்களினின்றே உலகத்திற் காணப்படும் எவ்வகை நூல்களும் பல ஆசாரக் கொள்கைகளும் ஆன்மாக்களின் கன்மத்துக்கும் காலதேய வர்த்தமானத்துக்கு மிணங்கத் தோன்றின வென்பதும் ருக்கு வேதஞ் சிவபிரானையே முழுமுதற் கடவுளெனக் கூறுமென்ப

தும், தமிழ்த் திருமுறைகள் வேத சிவாகமப் பொருளே யென்
பதும் ஆரியருக்குந் தமிழருக்குந் தந்தையார் சிவபிரானே
யென்பதும், அதுபோலவே, அவரே இருமொழிக்குங் குரவ
ரென்பதும், நான்மறை ஆறங்கம் இருபத்தெட்டு ஆகமங்கள்
தமிழில் இருந்தனவென்பது கற்பனையே யென்பதும், தமிழில்
நான்மறை யிருந்ததாகத் தேவார திருவாசகங்களிற் கூறியிருப்
பதாகச் சொல்வது முயலுக்குக் கொம்பு மூன்றுமுள மென்
பது போலவே யென்பதும், தொல்காப்பியர், சங்கப்புலவர்கள்,
சைவசமயாசாரியர்கள் ஆதியாகச் சந்தானசாரியர்களீறாகவும்,
அக்காலமுதற் சிவஞான முனிவரீறாகவும், இவர்களுள்ளிட்ட
எவரும், தமிழ் ஆராய்ச்சியிற் புகுந்திருந்த புறமதக் கல்வி
வாணர்களும் இதுகாறுந் தமிழில் நான்மறை ஆதிய மூவகை
நூல்கள் இருந்தனவென்று கூறவில்லை யென்பதும், பிறவும்,
பசுமரத்தாணிபோற் பதித்து நாட்டப்பட்டன.

தமிழ்ச்சைவ உலகு இதுகாறும் எவ்வகைக் குழப்பத்
திற்கும் உட்படாமல் மிக்க சாந்த குணமுடையதாகிச் சிவ
பெருமானை வழிபட்டுத் தேவார திருவாசக முதலிய தோத்திர
ரூபமான அருட்பாக்களையும் சாத்திர ரூபமான சிவஞான
போதம் முதலிய நூல்களையும் ஓதியுணர்ந்து சிவனருள் பெற்று
வந்திருக்க, அவ்வுலகத்தார்களுட் பிரிவு உண்டாமாறும் தம்
முட் சமமாய்க் கூடி வாழ்ந்த தமிழும் வடமொழியும் போராட்
டஞ் செய்யுமாறும் இக்காலத்துப் படித்த சிலர் நவீனக் கற்
பனை செய்து வருகின்றார்கள். என்ன கற்பனை கற்பித்தும்
ஆரிய வேதங்களும் தமிழ்மறைகளும் ஒன்றுக்கொன்று அனு
சரணையாயிருந்து பொருளில் வேற்றுமைப்படாது சைவசமயப்
பகுதிகளை விளக்கிக் கொண்டிருப்பதைக் காட்சிப் பிரமாணத்
தாற் காண்கின்றபடியால் அவைகளை அறவே மறைக்க முடியா
மையினாலே, முன்னமே யிருந்த தென்னாட்டுச் சைவப் பகுதி
களை ஆரியர்கள் அவர்கள் வேதங்களுட் புகுத்திக் கொண்டார்
களென்றும் சைவ சமயாசாரியர்களும் வேதத்துட் போந்த
சைவப் பகுதிகளைப் போதித்தார்களென்றுந் தந்திரமாக
வெழுதித் திருநான்மறை விளக்கமென்னுமொரு வியாசமெழு
தப்பட்டிருக்கின்ற தென்பதும் இவ்வாராய்ச்சியால் நன்கு
விளக்கி யிருத்தலைச் சைவசமயிகள் உய்த்து நோக்கி உண்மை
கடைப்பிடிக்கக் கடவர்கள்.

"சுருதிவானவனுந் திருநெடுமாலுஞ் சுந்தரவிசும்பி னிந்திரனும்
பரிதிவானவனும் படர்சடைமுக்கட் பகவனும கவுயிர்க்கமுதாம்
எருதுவாகனனும் எயில்கண்மூன்றெரித்த வேறுசேவகனுமாம் பின்னும்
கருதுவார்கருது முருவமாங் கங்கைகொண்ட சோளேச்சரத்தானே"

என்னுந் திருவிசைப்பா அருண்மொழிப் பொருளையும், "யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வமாகி யாங்கே மாதொருபாகனார் தாம்வருவர்" என்னுஞ் சிவஞான சித்தியாரின் செய்யுட் பொருளையும், "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடுவாழ்வா" ரென்னும் உத்தரவேதப் பொருளையுமுணர்ந்த நம்மனோர் சைவசமய முறைப்படி சிவபிரானையும் அவரது திருவேடமாகிய திருநீறு, திருக்கண்மணியையும், அவரது மெய்யடியார்களையும் எந்நாளும் மறவாமற் பேணி, வாழையடி வாழையாகச் சைவவுலகிற் பல்கிப்பரவியோங்கி நம், தவப்பயனாக அவதரித்த நந்திராவிட பாடியகர்த்தர், நமது மூதாதையர்கள், இவர்கள் வகுத்த வழியேயொழுகி வருமாறு அநுக்கிரகிக்கும்படி சிவபிரானைக் காயத்தாலும் வாக்காலும் மனத்தாலும் வணங்கி வாழ்த்தித் தியானித்து இதனை முடிக்கின்றோம்.

திருச்சிற்றம்பலம்.

சுபம். சுபம். சுபம்.

---

மழை வழங்குக மன்னவ னோங்குக
பிழையில் பல்வள னெல்லாம் பிறங்குக
தழைக அஞ்செழுத் தோசை தரையெலாம்
பழைய வைதிக சைவம் பரக்கவே.

---

பரசிவன் றனதுயர்ச்சியே தெரிப்பதிற் பகரொருப் பாட்டிற்று
யரியகால் கதிர் வியாதனாதியர் மொழியால் விளங்கிடு நீர்த்தாய்த்
திரிவுகாட்சிய ருளத்தூறு தறிகிகர் செம்பொருட்கோ வைத்தாய்
விரியுநீ ருலகினுக் கிதந் தருமுதல் வித்தையோங்குக மாதோ.

திருநான்மறை விளக்க ஆராய்ச்சி
முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ மெய்கண்டதேசிகன் திருவடி வாழ்க.

---

உ

சிவமயம்.

# பிழையும் திருத்தமும்.

---

## வித்துவப் பெரியாரபிப்பிராயத்தில்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 14 | 30 | சூளாமணியாகிய | சூளாமணியுமாகிய |
| 15 | 31 | மொழிபெயர்புகளிலும் | மொழிபெயர்ப்புகளிலும் |
| 20 | 12 | நடைபெருங்காலத்தில் | நடைபெறுங்காலத்தில் |
| 35 | 4 | C. K. | ஸ்ரீமத் C. K. |
| 48 | 22 | நூலாசிரியரவர்கள் | நூலாசிரியரவர்கள் |
| 56 | 11 | யாழ்பாணத்து | யாழ்ப்பாணத்து |
| 81 | 18 | வாராய்ச்சி | வாராய்ச்சி |
| 86 | 22 | பின்னர் புராணங் | பின்னர்ப்புராணங் |
| 93 | 15 | தொல்லாரிசியர் | தொல்லாசிரியர் |
| 96 | 30 | கருணை மூர்த்தி | கருணை மூர்த்தி |
| 99 | 26 | திவ்விய நூலென் | திவ்விய நூலென் |
| 104 | 30 | யாண்டு கற்றனனோ | யாண்டுக்கற்றனனோ |
| 110 | 7 | ளழுங்கி | ளழுங்கி |
| 117 | 30 | வேளாளை | வேளாளரை |
| 119 | 24 | சுருதி | சுருதி |
| 120 | 32 | திரு:தி | திருந்தி |
| 120 | 36 | இப்பொருட்டு | இப்பொருட்கு |
| 134 | 8 | வருவகால் | வருதலால் |
| 135 | 29 | என்னோ ? | என்னே ? |
| 136 | 28 | வேணடுகின்றேன் | வேண்டுகின்றேம் |
| 138 | 35 | புகல் லுற்றும் | புகலலுற்றும் |
| 143 | 8 | கடபாட்டை | கடப்பாட்டை |
| | 15 | தொன்றும் | தோன்றும் |
| 145 | 24 | வெளிப்படுத்த | வெளிப்படுத்த |

# நூலில்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 29 | பானுரை | பானுறை |
| 5 | 36 | கலிரண்டு | கழலிரண்டு |
| 11 | 12 | சிவாலயங்களிளெல்லாம் | சிவாலயங்களிலெல்லாம் |
| 21 | 3,4 | பின்பும் கௌகமுறையானே | பின்புமகௌக முறையானே |
| 37 | 3 | இயைன்ற | இயன்ற |
| 66 | 9 | வரற்ருன் | வாற்ருன் |
| 66 | 23 | மொழிநட்கு | மொழிகட்கு |
| 67 | 12 | கக்க | தக்க |
| [illegible] | 11 | மொழிகானே | மொழிதானே |
| [illegible] | 29 | கூனுர் | கூறினுர் |
| 72 | 3 | நூலந்தூல் | நூலந்நூல் |
| 72 | 8 | காரியங்கனே | காரியங்களை |
| 72 | 24 | மிசைத்திருமூவர் | மிசைத்திருமூலர் |
| 72 | 32 | தமிழலல | தமிழல்ல |
| 72 | 37 | என்ளை | என்னை |
| 74 | 29 | அந்தூற் | அந்நூற் |
| 75 | 33 | நாள்கு | நான்கு |
| 76 | 14 | மறைந்தமையான் | மறந்தமையான் |
| 78 | 27,28 | மலர்ந்தருனியவை | மலர்ந்தருளியவை |
| 79 | 16 | நக்கீர் | நக்கீர |
| 80 | 4 | ஆவினாந்தாடுவான் | ஆவினைந்தாடுவான் |
| 86 | 11 | தரனவியல் | தானவியல் |
| 112 | 35,36 | தில்லைவாழந்தணர்களும் தாருகாவனமிருந்து வந்தவர்களென | தில்லைவாழந்தணர்களும் வந்தவர்களென |
| 120 | 22 | இருநிலத்துல் மறைவழக்க | இருநிலத்து மறைவழக்க |
| 127 | 40 | சொற்றேருடர் | சொற்றொருடர் |
| 132 | 20 | மரக்கள் | மாக்கள் |
| 151 | 12 | நான்கோல் மிட்டாற்று | நான்கோலமிட்டாற்று |
| 166 | 33, 34 | சைதாப்பேட்டையிவிருந்த | சைதாப்பேட்டையிலிருந்த |
| 167 | 30 36 | முண்டகோபநிடத்தில் | முண்டகோபநிடதத்தில் |
| 168 | 13 14 | வேண்டுமென்பதே. இதன் பொருள் | வேண்டுமென்பதே, இதன் பொருள். |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 185 | 10 | சயம்யு | சயம்பு |
| 186 | 5,22 | உணறுமாறு | உணருமாறு |
| 187 | 1 | மற்றையோரும் | பிரமனும் |
| | 8 | விதிபோந்தார் | வீதிபோந்தார் |
| 191 | 35 | ௨௦௫ | ௨௭௬ |
| 195 | 6 | ௫௨ | ௫௪ |
| 199 | 31 | தமில் | தமிழில் |
| 204 | 12 | நீரேமுடுக்கிய | நீரேழுடுக்கிய |
| 204 | 25 | ஈதென்ள | ஈதென்ன |
| 207 | 33 | யொய்யென்று | பொய்யென்று |
| 211 | 22 | அவ்விஷ்யங்களில் | அவ்விஷயங்களில் |
| 220 | 24 | நாலினந்தணர்க்காயினும் | நாவினந்தணர்க்காயிஉ |
| 227 | 15 | உபாபதி | உமாபதி |
| 325 | 36 | விசும்பிலிந்திரனும் | விசும்பினிந்திரனும் |

---

## வடமொழி மேற்கோள்களில்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 20 | 1 | நிஹ்வஸித | நிஶ்வஸித |
| 51 | 32 | வஸிஷ்டஹிஜாதே | வஸிஷ்டஹ்ஜாதே |
| | 33 | ஹ்வவாகஸ்தி | ஹிவாகஸ்தி |
| 123 | 27 | ஸ்ரோதாத்ரிம் | ஸ்ரோதாத்ரிம் |
| 163 | 39 | உக்ஷிணாஹீஸ்வ: | உக்ஷிணாஹிஸ்வ: |

---

குறிப்பு:—பிழைகளைப் பூர்த்தியாய்ச் சோதிக்க காலம் பெறவில்லை. நண்பர்கள் பலரும் இவ்வாராய்ச்சி நூல் விரைவில் வெளிவர விரும்பினார்கள். எழுத்துக்களின் தேய்வாலுளவாகிய பிழைகள் திருத்தப்பட்டில. மற்றும் பிழைகளைத் திருத்திக் கொண்டு வாசிக்கவேண்டும்.